மெய்கண்டார் கழக வெளியீடு ௫.



உ
சிவமயம்
திருவேகம்பர் துணை.

திருவாவடுதுறை ஆதீனம்
## சிவஞான சுவாமிகள்
அருளிச்செய்த

# காஞ்சிப் புராணம்

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழக ஆசிரியர்
வித்வான், புலிசை
**திரு. சி. அருணை வடிவேலு முதலியார்**
அவர்கள் இயற்றிய குறிப்புரை உரைநடைகளுடன்

---

காஞ்சிபுரம்
**மெய்கண்டார் கழகத்தினரால்**

காஞ்சிபுரம்
தவசி. குப்புசாமி முதலியார் அவர்களது
குமரன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது.


மெய்கண்டான் யாண்டு ௭௱௰௪.

ஈசுர ஐப்பசி
1937

விலை ரூபாய் ௨.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்
அருளிச் செய்த

# தேவாரம்

---

## திருக் கச்சியேகம்பம். பண்-கொல்லி

### திருவிருக்குக்குறள்

திருச்சிற்றம்பலம்

கருவார் கச்சித்
திருவே கம்பத்
தொருவா என்ன
மருவா வினையே. க

மதியார் கச்சி
நதியே கம்பம்
விதியா லேத்தப்
பதியா வாரே. உ

கலியார் கச்சி
மலியே கம்பம்
பலியாற் போற்ற
நலியா வினையே. ௩

வரமார் கச்சிப்
புரமே கம்பம்
பரவா வேத்த
விரவா வினையே. ச

படமார் கச்சி
இடமே கம்பத்
துடையா யென்ன
அடையா வினையே. ரு

நலமார் கச்சி
நிலவே கம்பம்
குலவா வேத்தக்
கலவா வினையே. சா

கரியின் உரியன்
திருவே கம்பன்
பெரிய புரமூன்
றெரிசெய் தானே. எ

இலங்கை யரசைத்
துலங்க வூன்றும்
நலங்கொள் கம்பன்
இலங்கு சரணே. அ

மறையோன் அரியும்
அறியா அனலன்
நெறியே கம்பம்
குறியால் தொழுமே. கூ

பறியாத் தேரர்
நெறியில் கச்சிச்
செறிகொள் கம்பம்
குறுகு வோமே. க0

கொச்சை வேந்தன்
கச்சிக் கம்பம்
மெச்சுஞ் சொல்லை
நச்சும் புகழே. கக

திருச்சிற்றம்பலம்.

உ

# உள்ளுறை

உ

# பதிப்புரை

---



உலகத்திற் சிறந்த பரதகண்டத்தில் பண்டைக் காலந் தொட்டே பல இடங்கள் தனிச்சிறப்புடையனவாகக் கொள்ளப்பட்டு வருகின்றன. அவ்வெல்லாவற்றுள்ளும் காஞ்சியே முதன்மை யுடையதாகும். உலகியலிலும் கடவுள் நெறியிலும் கற்று வல்ல சான்றோர்கள் பலர் இவண் வதிந்திருந்தமை சங்க இலக்கியங்களினும் பெறப்படுகின்றது. வடமொழியில் இப்பதி, புராணங்களின் மாத்திரமன்றி உபநிடதங்களினும் பேசப்படுகிறதெனத் தெரிகின்றது. திருமுறைகளினும் இதன் தனிச்சிறப்பு ஆங்காங்கு மிளிர்கின்றது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இக்காஞ்சியம் பதிக்குத் தல புராணங்கள் பல உள்ளன. அவை: கச்சிக் கச்சாலை தேசிகர் இயற்றிய காஞ்சிப் புராணம், காமாட்சி கலியாணம் எனப்படும் கலித்துறைக் காஞ்சிப் புராணம், சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த காஞ்சிப் புராணம், கச்சியப்ப முனிவர் அருளிய காஞ்சிப் புராணம் என்பன. இறைவியின் பெருமையை நன்கு விளக்கும் காமக் கோட்டப் புராணம் எனவும் ஒன்று இருப்பதாகத் தெரிகின்றது.

சிவஞான சுவாமிகளாலும் கச்சியப்ப முனிவராலும் அருளப் பெற்றவை, வெவ்வேறு முதல் நூல்களையுடையனவாய்ப் பெரும் பான்மையும் ஒருபொருளையே சிறிது வேறுபடுத்துக் கூறும் தனி நூல்களாயிருப்பினும், சிவஞான சுவாமிகள் பதிகத்தின் இறுதியில், "மற்றுமோராற்றால்......இயம்பிடப்படுமால்" எனத் திருக் கண்புதைத்த வரலாறு முதலியவற்றைக் குறித்தலாலும், கச்சியப்ப முனிவர் தொடக்கத்தில், "வியன்சனற்குமார சங்கிதை தெரித்தமேன்மை ஈண்டறைந்தனம்" எனக் கூறுதலாலும் காஞ்சிப்புராண முதற்காண்டம் இரண்டாங் காண்டமென வழங்கப் படும்.

இவ்வெல்லாவற்றுள்ளும் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த காஞ்சிப்புராணமே எல்லாத் தலங்களின் வரலாறுகளையும் முறைப்பட விரித்து உரைத்து, இலக்கியச் சுவை மெய்ந்நூற் கருத்துக்கள் நிரம்பப்பெற்று இன்றியமையாத முழுநூலாக விளங்குதலின், யாவராலும் சிறந்தெடுத்துப் போற்றப்படுகின்றது.

இது புக்கத்துறை திரு. கந்தசுவாமி முதலியார் அவர்களால் வெகுதானிய ஆண்டு புரட்டாசித் திங்களிலும், வண்ணக்களஞ்சியம், காஞ்சி திரு. நாகலிங்க முனிவரால் சாதாரண ஆண்டு வைகாசித்திங்களிலும் மூலமாத்திரமாகப் பதிப்பிக்கப்பட்டது. காஞ்சிபுரம் சித்தாந்தபோத ரத்நாகரம் திரு. ஆலாலசுந்தரம் பிள்ளையவர்கள், சோடசாவதானம் தி. க. சுப்பராயச் செட்டியார் அவர்கள் வீராட்டகாசப் படலத்தில் ௩0ஆம் செய்யுள் வரையில் எழுதிய உரையோடு எஞ்சிய பகுதிக்குத் தாம் எழுதிமுடித்த உரையுடன் விகாரி ஆண்டு தைத்திங்களில் ஒருபகுதியும், விசய ஆண்டு வைகாசித் திங்களில் ஒருபகுதியுமாகப் பதிப்பித்துள்ளார்கள். இதற்குக் காஞ்சிபுரம் பிரீசர்ச்சு மிஷன் உயர்நிலைப் பள்ளிக்கூடத் தமிழாசிரியர் பு. கனகசபை நாயகர் இயற்றிய உரைநடையும் 1887ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. மூலப்பதிப்பு வேறொன்றும் இருந்ததாகத் தெரிகின்றது. அவைகளுள் ஒன்றேனும் இப்பொழுது கிடைத்தல் அரிதாயிருத்தலால் நமது கழகம், இரண்டாம் முறையாக இப்பொழுது நிகழ்ந்துவரும் காஞ்சித்தல வழிபாட்டில் கலந்துகொள்ளும் அன்பர்களுக்கும், மற்றும் பலருக்கும் பயன்படுமாறு இதனைக் குறிப்புரை, உரைநடைகளோடு வெளியிட வேண்டுமெனக் கருதுவதாயிற்று.

அதனைச் சிறப்புறச் செய்துமுடித்தற்கு இலக்கண இலக்கிய ஆராய்ச்சியும், சைவசித்தாந்த சாத்திரப் பயிற்சியும், பொது அறிவும் உடையவரும் இக்கழக ஆசிரியரும் ஆகிய வித்வான் திருவாளர். புலிசை. சி. அருணை வடிவேலு முதலியார் அவர்களை வேண்டிக் கொள்ள, அவர்களும் அதற்கு இசைந்து, எளிதில் முடித்தல் கூடாத அப்பெருஞ்செயலை விரைவில் திருத்தமாக முடித்துக்கொடுத்ததோடு ஓர் அரிய ஆராய்ச்சி நிறைந்த முன்னுரையும், ஆசிரியர் சிவஞான சுவாமிகள் வரலாறும் எழுதி உதவினார்கள். குறிப்புரையில் புராணத்துட் போந்த பொருள்களை ஆராய்ச்சியாளர்கள் கூறும்

உண்மைகளைத் தழுவி விளக்கியிருத்தல் கற்றூர் யாவர்க்கும் பெரு மகிழ்வைத் தருவதொன்று. இவற்றை இங்ஙனம் செம்மைபெற எழுதி உதவியும், அச்சுப் பிழைகளைத் திருத்தியும் முடிப்பித்த அவர்களுக்கு இக்கழகத்தின் நன்றி உரியது.

இதன்கண் உள்ள பாட்டு முதற்குறிப்பு அட்டவணையைச் சேர்த்துத்தந்த காஞ்சிபுரம் சைவபுராணிகர் திருவாளர் அ. க. பொன்னுசாமி முதலியார் அவர்கள் புதல்வரும், காஞ்சித் திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை ஆசிரியருமாகிய திருவாளர். பொன். சண்முகனுர் அவர்களுக்கு இக்கழகம் நன்றி செலுத்துகின்றது.

இப்பதிப்பிற்கு வேண்டும் பொருளுதவியைச்செய்ய, கழகத்தின் பொருட்காப்பாளராக இருந்து, கழகத்தில் இலவச பாடங்களும் மற்றும் பல செயல்களும் நடத்தற்கு வேண்டிய உதவியும் ஊக்கமும் அளித்துவரும் காஞ்சிபுரம் பட்டு ஜவுளி வியாபாரம் திருவாளர் அ. நடேச முதலியார் அவர்களும், கழகத்தின் செயற்குழு உறுப்பினராக இருந்து பலவகையில் உதவி புரிந்துவரும் காஞ்சிபுரம் கறுர் ஜவுளி மே. வெ. முனிசாமி முதலியார் புதல்வர் திருவாளர் M. V. M. துரைசாமி முதலியார் அவர்களும், கழக உறுப்பினர் காஞ்சிபுரம் குமரன் அச்சக உரிமையாளர் திருவாளர் தவசி. குப்புசாமி முதலியார் அவர்களும், கழகத்தின் கூட்டுச் செயலாளராக என்னுடனிருந்து தொண்டாற்றுவதோடு பொருள் முதலியவற்றல் பலவகையில் கழகத்திற்கு உதவிகளும் புரிந்துவரும், ஜாகீர் அசநெல்லிக்குப்பம் மணியம் முருகேச ரெட்டியார் அவர்கள் புதல்வர் திருவாளர். அண்ணாமலை ரெட்டியார் அவர்களும் முன்வந்து இவ்வரும்பெரும் பணியை இனிது முற்றுப் பெறுவித்தார்கள். இப்பதிப்பு அறுநூறு பக்கங்களுக்குள் ஆகுமென்று எதிர்பார்த்தது தொள்ளாயிரம் பக்கங்களுக்குமேல் ஆகவும் மனத்தளர்ச்சியின்றிச் சிறப்புற முடிப்பித்தமை, அவர்களுக்குத் தமிழ்மொழி ஆக்கத்தினும் சிவநெறி வளர்ச்சியினும் உள்ள அழுத்தமான பற்றையும், மிகுந்த ஆர்வத்தையும் விளக்குகின்றது. அவர்களுக்கு இக்கழகத்தின் நன்றி என்றும் உரியது.

பதிப்பை அழகுபெறச் செம்மையாகச் செய்யும் பொறுப்பைத் தாமே ஏற்று நன்கு செய்துதந்து, இதன் முகப்பிற் காணப்படும் தழுவக்குழைந்த திருவுருவப்பட அச்சினை உதவிய ஷை.

குமரன் அச்சக உரிமையாளர் திருவாளர் தவசி. குப்புசாமி முதலியார் அவர்களுக்கு இக்கழகத்தார்களின் நன்றி தனிமையில் உரியதாகும்.

இதிற் காணப்படும் ஆசிரியர் சிவஞான சுவாமிகள் திருவுருவப் படத்தின் அச்சை அன்புகூர்ந்து உதவிய தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்கு இக்கழகத்தின் நன்றி உரியதாகின்றது. தமிழையும் சிவநெறியையும் ஓம்பும் அவர்களிடத்து இத்தகைய செய்யாமற் செய்யும் உதவிகள் காணப் படுதல் இயல்பே.

இப்பதிப்பு முன்னைய பதிப்புக்களினும் சிறந்து பலர்க்கும் பலவகையினும் பயன்படுமென நம்புகிறேன்.

இப்பெரும் பணியைக் கழகத்தின் சார்பில் பல்லார் வாயிலாக்க் கூட்டி முற்றுவித்த எல்லாம் வல்ல இறைவன் திருவருளை வழுத்துகின்றேன்.

மெய்கண்டநாதன் விரைகழல் வெல்க.

இங்ஙனம்,

காஞ்சிபுரம்,
மெய்கண்டான் யாண்டு ௬௱௰௪,
(சுசர) ஐப்பசி.

க. வச்சிரவேலு,
செயலாளன்,
மெய்கண்டார் கழகம்.

உ

சிவமயம்

# முன்னுரை

உற்ற வர்க்குத வும்பெரு மானை
    ஊர்வ தொன்றுடை யான்உம்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
    பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை
அற்ற மில்புக ழாள்உமை நங்கை
    ஆத ரித்து வழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பன்எம் மானைக்
    காணக் கண்அடி யேன்பெற்ற வாறே.

ஒரு நாட்டின் நாகரிகத்தின் நிலையை அறிவிப்பன அந்நாட்டின் தாய்மொழிச் செப்பமும், அதிலுள்ள திருந்திய இலக்கியப் பரப்புமேயாம். எனவே, ஒரு மொழியானது செப்பத்திலும், சிறந்த இலக்கியப் பரப்பிலும் எவ்வளவுக்கெவ்வளவு பழமையுற்றுத் திகழ்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்நாடு நாகரிகத்தில் பழமையுற்றது என்றறியலாமென்பது. அங்ஙனம் நோக்குமிடத்து உலகிலுள்ள எண்ணிறந்த மொழிகளில் தமிழ்மொழியே அவ்விரு வகையிலும் பழமையுற்றுத் திகழ்வதென்பது ஆராய்ச்சிவல்ல அறிஞர் எவர்க்கும் ஒப்ப முடிந்ததாகும். அதனால், நாகரிகத்தில் எந்நாட்டிலும் முற்பட்டு விளங்குவது தமிழ்நாடொன்றே என்பதும் சொல்லாமே அமையும். தமிழ்மொழியானது தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கத்தினரால் வளர்க்கப்பட்டது. அச் சங்கங்களுக்கு இடைப்பட்ட காலங்களும் பல. அம்மூன்றனுள் இறுதிக்கண்ணதாகிய கடைச்சங்க காலமே இற்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னதாகும். ஆதலின், இடைச்சங்க காலமும், அதனின் முற்பட்ட தலைச்சங்க காலமும் வரையறுத்தற்கரியவாம். தலைச்சங்க காலத்திலேயே அரிய இலக்கண இலக்கியங்கள் தமிழில் இருந்தன என்பதற்குத் தக்க சான்றுகள் உள்ளன. தலைச்சங்க இடைச்சங்க நூல்களில்

தொல்காப்பியமும் திருக்குறளும் தவிர ஏனைய இலக்கண இலக்கிய நூல்களும், கடைச்சங்க நூல்களிற் பெரும்பாலனவும் குமரி கடல் கொள்ளப்பட்ட காலத்து அழிவுற்றன. எஞ்சியுள்ளவை தொல் காப்பியமும், திருக்குறளும், கடைச்சங்க நூல்களிற் சிலவுமேயா கும். எனினும், இவையே ஒரு மொழிக்கு வேண்டும் இலக்கண இலக்கியங்களிற் குறைவின்றியுள்ளன. இனி, சங்க காலத்திற்குப் பிற்பட்ட இலக்கண இலக்கியங்களும் உரை நூல்களும் பல. இவை யெல்லாவற்றிலும் தமிழர்கள் வாழ்க்கை தொன்றுதொட்டே நாக ரிக முடைத்தாய்க் காணப்படுகின்றது. அதனால், தமிழ்நாடொன்றே எந்நாட்டிலும் நாகரிகத்தில் முற்பட்டதென்பதிலும், அதற்கேற்ப மொழிச்செம்மையிலும் இலக்கிய வளர்ச்சியிலும் குறைவற்றதென் பதிலும் ஐயமின்று.

இனி, தமிழ்மொழியில் இலக்கியங்களேயன்றி மெய்யறிவு நூல் களும், வான நூல்களும், மருத்துவ நூல்களும், இசை நூல்களும், மந்திர நூல்களும் இருந்தனவென்று அறியக் கிடக்கின்றது. இவைகளெல்லாம தமிழரது கூரிய அறிவையும், ஊக்கத்தையும் காட்டுவன. இவ்வெல்லாவற்றிற்கும் காரணம் பண்டைத் தமிழர் கள் தம் தாய்மொழியையும், அதனை வளர்த்தற்குரிய புலவர் பெருமக் களையும் போற்றி வந்தமையேயாம். இதனால், ஒரு நாடு முன்னேற்ற மடைவதற்கு அம்மொழியிலுள்ள நூல்களைப் போற்றுதல் இன்றி யமையாததென்பது புலனாகும்.

நூல்கள், முன் முன் இருந்து சென்றோர்களது அறிவுத் திரள்களேயாதலின், அவை தம்மைப்பற்றினோரை அறிவுத்துறையில் முன்னிருந்தோர் அடைந்த ஓர் உயர்நிலையை எளிதில் அடையச் செய்து, அந்நிலையினின்றும் மேல்உயரச் செய்கின்றன. அதனால், அத்தகைய நூலைப்பற்றாதவர் தாம் உயர்தற்குரிய அடிப்படையை இழந்தவராவர். ஆகவே, யாவரொருவர் அல்லது யாதொரு நாட்டினர் தமது மொழி யிலுள்ள நூல்களைப் போற்றுதொழிகின்றனரோ, அன்னார் முன் னேற்றமடைதலென்பது கூடாததொன்றும்.

பலதுறைப்பட்ட நூல்களினும் இலக்கியமே சிறந்ததாகும். என்னையெனின், அவ்வெல்லாவகை நூல்களின் பொருள்களையும் ஆங் காங்கு மனத்திற்கு இன்பம் பயக்கக்கூறும் இயல்புடையது அதுவே

யாகலின். அன்றியும், மக்களின் நாகரிக வாழ்க்கையைச் செப்பம் பெற உலகவழக்கில் வைத்துக்காட்டி, உள்ளத்தின்கண் இன்பமும் ஊக்கமும் பயந்து, மனச்செம்மை உண்டாக்கும் இயல்புடைமையானும் மாந்தர்க்கு இலக்கியமே பெரிதும் வேண்டற்பாலது. சுருங்கச்சொல்லின், மக்கள் விலங்குத் தன்மையினின்று நீங்கி மக்கட்குணம் வாய்ந்திருப்பது இலக்கியத்தின் பயனேயாம். ஆகலால், எந்நாட்டினரும் தமது இலக்கியங்களைக் கண்ணும் கருத்துமாக ஓம்புதல் வேண்டும்.

இலக்கியம் முதலிய நூல்களைத் தம்நாட்டு ஒழுக்கம் முதலியன பற்றித் தம் தாய்மொழியில் இயற்றுதலும், அவற்றைப் பிற மொழியில் இயற்றிப் பிறநாட்டினருக்குக் கொடுத்தலும், பிற மொழியில் ஆக்கப்பட்டுள்ள நூல்களைத் தமது தாய்மொழியில் மொழிபெயர்த்தலும் மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகும். அவைகளுள், மொழிபெயர்த்தல் இரண்டுவகைப்படும். ஒன்று பிற நாட்டினர் அவர் ஒழுக்கம் முதலியனபற்றி அவர் மொழியில் ஆக்கியவற்றை மொழிபெயர்த்தல்; மற்றொன்று யாதானும் ஒரு காரணம் பற்றித் தம்நாட்டினர் தமது ஒழுக்கம் முதலியனபற்றிப் பிறமொழியில் ஆக்கியவற்றை மொழிபெயர்த்தல். இவ்விரண்டுவகையினும் தமிழ்ப்பெரியார்கள் முற்போக்குடையராய் இருந்தனர். பெரும்பான்மையான தலபுராணங்கள் தமிழ்நாட்டு இடங்களையும் தமிழ்நாட்டு ஒழுக்கங்களையுமே பெரிதும் சிறப்பித்துக் கூறுதலால், அவைகள் இரண்டாவதாகக் கூறிய மொழிபெயர்ப்புவகையைச் சார்ந்தனவே என ஊகித்தற்கு இடமுண்டு. ஆயினும், அவைகளில் வேற்றுநாட்டு ஒழுக்கம் முதலியனவும் கலவாமற்போகவில்லை. அதற்குக் காரணம் மொழிச்சார்பேபோலும்!

இனி, இலக்கியங்களை உலகியல் இலக்கியம், சமய இலக்கியம் என இரண்டுவகையாகக் கொள்ளலாம். அவற்றுள், உலகியல் இலக்கியம் நாடகவழக்கில் வைத்து, உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தலும், இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தலும் என நால்வகையாகக் கூறப்படும். சமய இலக்கியத்தையும், சமயத்தின்பயனறியாதாரை அறிவித்து

அந்நெறியில் வருவித்தற்பொருட்டும், அறிந்தொழுகுவாரை உறுதிப்படுத்தி அந்நெறி நிறுத்துதற்பொருட்டும், அங்ஙனம் ஒழுகிப் பயன்பெற்றோரது வரலாற்றைக் கூறும் வரலாறுரைத்தலும், நுண்பொருளாகிய சமய உண்மைகளை அறியும் அறிவு மதுகை இல்லாதார்க்கு உளங்கொளுத்தற்பொருட்டு அவற்றை உருவகமாக்கி நடத்தும் உருவகப்படுத்தலும், மக்கள் தாம் கருதிய பயனுக்கேற்பக் கடவுளை யெண்ணி வழிபட்டு அதனை எளிதிற் பெறுதற்பொருட்டுப் பலபடக் கற்பித்துக் கூறும் பயன்பெற வைத்தலும் என ஒருவாறு மூன்றாகக் கொள்ளலாம்.

இவை தனித்தனி வேறுநிற்றலேயன்றி விரவிவருதலும் உண்டு. அவற்றுள் சமய இலக்கியத்தில் பெரிய புராணம் முற்றிலும் வரலாறுரைத்தலாகும். பிரபுலிங்கலீலை உருவகப்படுத்தலாம். புராணங்களிற் பலபகுதிகள் பயன்பெறவைத்தலாகும். தேவாரம், திருவாசகம், சிவஞானபோதம் முதலியன திருவருள்வழிநின்று அருளிச்செய்யப்பெற்றவையாகலின், அவை இலக்கியங்களுள் வைத்தெண்ணப்படா. பெரியபுராணம் வரலாறு கூறுதல் பற்றி ஈண்டெடுத்துக் காட்டப்பட்டதாயினும், அதனை இலக்கியத்துள் வையாது திருமுறைகளுள் வைத்தெண்ணுதலே ஆன்றோர் வழக்கு.

எழுவகையாக ஈண்டுப் பகுத்துக்கூறப்பட்ட இயல்புடைய இலக்கியங்களுள் உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், வரலாறுரைத்தலும் ஒழித்து ஒழிந்த இலக்கியங்கள் ஒருபுடை இல்லனவும் முற்றும் இல்லனவுமாதலால், அவைகள் ஆராய்ச்சிக்குரிய சான்றுகளாகாவெனினும், உலகியல் நிறுத்தற்பயத்தவும், சமயநெறி நிறுத்தற் பயத்தவுமாகலான் பொய்யென்றிகழப்படா. அவற்றுள்ளும் உருவகப்படுத்தல் நுண்பொருளைப் பருப்பொருளாகக் கூறுவதன்றி இல்லது கூறாமையானும், பயன்பெறவைத்தல் இல்லது கூறிற்றாயினும் உள்ளதுபோன்றே பயன்தருதலானும் அவை பொய்யென்றற்கேலா. அன்றியும் மக்களது உள்ளம், உள்ளதாயினும் இல்லதாயினும் தொடர்ச்சியாக அமைந்து ஒன்றைக்கேட்பின் அதன்வண்ணமாக ஆகும் இயல்புடையதாகலின், அவ்வாற்றால் உலகியலினும் சமய நெறியினும் மக்களது உள்ளத்தைப் பண்படுத்திப் பயனடையச்செய்யும் இலக்கியங்கள் எவையும் பொய்யென ஆன்றோர்களாற் பழிக்கப்படா. அவை ஆராய்ச்சிக்குரிய

சான்றுகளாக எடுத்துக் காட்டுதற்குரியவல்ல என்பதொன்று மாத்திரமே மனத்தின்கட் பதிக்கற்பாற்று.

இந்நுட்பமுணர மாட்டாதார் புராணம்முதலிய இலக்கியங்களை அறவே பொய்யென்று அவற்றைக் கண்ணினாலும் நோக்காது அவற்றால்வரும் பயனை இழப்பாரும், இலக்கியமென்பனவெல்லாம் வரலாறுரைப்பனவே எனப் பிடித்துக்கொண்டு, அவற்றிற் காணப்படும் முரண்பாடுகளை எண்ணவும் அஞ்சித் தம் அறிவையும் ஆராய்ச்சியிற் புகவொட்டாது பிணித்து, ஆராய்ந்து உண்மைகூறும் அறிஞர்களையும் இகழ்ந்து உண்மை காணாருமாய்த் தம்மின் முரணியொழிவர். அவ்விருதிறத்தினருள், பொய்யென்றிகழ்வோர், சிறுபிள்ளைகளுக்கும் இல்லனவெனத் தோன்றக்கூடிய இதனைப் பேரறிவாளர் கூறிய தெற்றுக்கு? அன்னோர் பிறரை நல்வழிப்படுத்துங் கருத்தினரன்றிப் பொய்புரை புகன்று ஏமாற்றும் கருத்தினராதல் கூடாதன்றோ? ஆதலின், இதன்கண் ஓர் உண்மையிருத்தல் வேண்டுமெனவும், யாவும் வரலாறுரைத்தலே என்போர், யாமே முரணென்றறிந்து அஞ்சுதற்குரிய இவற்றை நம்மிற் பன்மடங்கு பெரியாராகிய ஆசிரியர்கள் அறியார்களோ? அறிந்தும் ஏன் கூறுதல்வேண்டும்? அதனால் இவற்றிற்கு வேறு கருத்தே உளதாதல் வேண்டுமெனவும் அமைதியோடு ஆராய்வாராயின் உண்மை விளங்கும். அவ்வாறு செய்தலின்மையால், பொய்யென்றிகழ்வார் தமிழிலுள்ள பல இலக்கியங்களுக்குக் கேடு சூழ்கின்றவராகவும், யாவும் வரலாறே எனப் பிடிவாதஞ் செய்வார் அதற்கு ஏதுவாகவும் ஆகின்றனர். அதனால் தமிழிலக்கியங்கள் நிலைபெறுதற்கும் வளர்தற்கும் இல்லாத நிலையை அடைந்திருக்கின்றன.

அங்ஙனமாயின், இலக்கியமென்பன யாவும் கொள்ளுதற்குரிய வல்லது தள்ளுதற்குரியன எவையுமில்லையோவெனின், உண்டு; அவை சமய உண்மைகளோடு மாறுகொளவும், ஆன்றோர் வழக்கோடு மாறுகொளவும் வரலாறுகளைக் கூறும் இயல்புடையனவாம். எனவே, உலகியலினும் சமய நெறியினும் ஆன்றோர் சென்ற நெறிக்கு மாறானவையுளவாயின், அவை தள்ளுதற்குரியனவல்லது கொள்ளுதற்குரியனவாகா என்பதாம்.

இங்ஙனம் கூறியதனாற் போந்தது, எம்மொழியினும் ஆன்றோர்களாற் செய்து வைக்கப்பட்ட இலக்கியங்களைப் பொன்னே

போற் போற்றுவது அவ்வந்நாட்டினர்க்கு முதற்கடமையாகும் என்பது. அந்நிலையில் தமிழிற்கு ஆக்கமளிக்கும் பல இலக்கியங்களுள், ஆசிரியர் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த காஞ்சிப் புராணம் ஒன்றாகும்.

இப்புராணம் வடமொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்டதென்பது இந்நூலின் சிறப்புப்பாயிரச் செய்யுளாலும், புராண வரலாற்றுப் படலத்து இருபத்தாறாஞ் செய்யுளாலும், திருநகரப் படலத்து இறுதிச் செய்யுளாலும் விளங்கும். ஆசிரியர் இப்புராணத்தை ஆக்கிய முறை மிகவும் போற்றற்பாலது. முதற்கண் நாட்டுப்படலம் நகரப் படலங்களை மிக அழகுபடச்செய்து, பின்பு, தலவரலாறுகளை, கிழக்குத் திசையில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பாடல் பெற்ற திருத்தலமாகிய திருநெறிக்காரைக் காட்டிலிருந்து தொடங்கி முறைப்பட வலமாகக்கூறிச் சென்று முடிவில் திருவேகம்ப வரலாற்றையும், அம்மையார் வழிபட்டு வெள்ளங்கண்டு வெருவி இறைவனைத் தழுவிக்கொள்ள, இறைவன் திருமேனி குழைந்து காட்டிய வரலாற்றையும் கூறி, பின்னர்த் திருமணம் மொழிந்து, அதன்பிறகு காஞ்சிபம்பதிக்கண் இன்றியமையாது கூறவேண்டிய சிறப்பாகிய அற்புதங்களையும், அதன் பிறகு புராணம் கேட்டற்குப் பயன் ஒழுக்கநெறியில் நிற்றலேயாதலால் அவ்வொழுக்கத்தையும் விளக்கி, அவ்வொழுக்கத்திற்குப் பயனும் இறைவன் திருவடிப்பேற்றிற்கு முடிந்த சாதனமும் சிவபுண்ணியமேயாதலால் அதனை இறுதியிற் கூறி இனிது முடித்துள்ளார்.

ஒவ்வொரு தலங்கட்கும் ஒவ்வொரு படலம் அமைத்து, மிகச்சுருங்கிய வரலாறுடைய தலங்களை அவற்றிற்கு அணிமையிலுள்ள விரிந்த வரலாறுடைய தலப்படலத்தில் இரண்டொரு செய்யுட்களால் கூறிச்செல்கின்றனர். திருவேகம்பத்தில் கச்சிமயானம் நீங்கலாக உள்ள தலங்களில் வாலீச்சரம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், நல்ல கம்பங்களைத் திருவேகம்பப் படலத்திலும், ஏனையவற்றைத் தழுவக்குழைந்த படலத்திலும் கூறியிருக்கின்றனர். கங்கவரேசம் கடகேசம், புகேசம் என்பவைகள் மாத்திரமே வரலாற்றினைப் பற்றி முறையே தழுவக்குழைந்த படலத்திலும், சிவபுண்ணியப் படலத்திலும் வைக்கப்பட்டன. ஏனையவெல்லாம்

அவ்வத் தலங்கள் அமைந்துள்ள இடமுறைபற்றியே கூறப்பட்டுள்ளன. இடமுறைபற்றிச் செல்கின்றமையால் வரலாறுகள் முன்பின்னுகவும், முன்னர்க்கூறியவரலாற்றை ஒருவாறு அனுவதித்தும் கூறப்படுகின்றன. உதாரணமாக விடுவச்சேனேசப் படலம் தக்கேசப்படலங்களையும், ஆதிபிதேசப் படலத்தையும் நோக்குக.

ஆசிரியர் இப்புராணத்தை யாண்டும் வெற்றிடமின்றி ஆங்காங்குப் பல அரிய கருத்துக்களைப் பொதிந்து வைத்துள்ளார். ஒரு படலம் சிறிதாகக் காணப்படினும், அதனுள் மிகமுக்கியமான பொருளொன்று வைக்கப்பட்டிருக்கும். உதாரணமாக, பதின்மூன்று செய்யுட்களாலாகிய சத்ததானப் படலத்தில் பசுதருமம் சிவதருமங்களின் இயல்பையும், ஏழு செய்யுட்களாலாகிய பஞ்சரேசப் படலத்தில் பெரியார் சார்பே வேண்டற்பாலதென்பதையும், பதினொரு செய்யுட்களாலாகிய முப்புராரி கோட்டப் படலத்தில் உபாயச் சரியை உண்மைச்சரியை முதலியவற்றின் இயல்புகளையும் விளக்கியுள்ளார்.

ஆசிரியர் சிவஞான சுவாமிகள் தாம் வடமொழியில் உபநிடதங்களிலும் புராணங்களிலும் கண்ட அரிய கருத்துக்களையும், சிவாகமப் பொருள்களையும், சைவ முறைகளையும் இப்புராணத்துள் நிறைத்து வைத்திருக்கின்றனர். பல உபநிடத வாக்கியங்களையும், புராண வசனங்களையும் உண்மைப்பொருள் விளங்க மொழிபெயர்த்தும், பல வடசொற்களுக்குச் சொல்மூலங்களும், அவற்றிற்குப் பொருள்களும் இதன்கண் கூறியுள்ளார். சில மந்திரங்களுக்கும் பொருள் உரைத்திருக்கின்றனர். சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தெளிவாக விளக்குதற்பொருட்டுச் சாதாரணப் பொருள்கள் கூறிச் செல்லுமிடத்து ஓர் சாமானிய உவமையில் அரும்பெரும் பொருளை ஆசிரியர் வைத்து விளக்குவது மிகவும் பாராட்டற்பாலது. "மாயை காரிய உருக்களும்", "போதம் மேலாகப் பண்டே" என்பன முதலிய செய்யுட்களைக் காண்க. வடநூல் வழக்குப்பற்றிப் பல வடசொற்களுக்கு வியாகரணப்படி பலவகைப் பொருள் கூறுகின்றார். பாஞ்சராத்திரிகள் முதலியோர் சிவபரத்துவத்தை மறைத்தற்கு வடமொழி வாக்கியங்களுக்குக் கூறும் பொருள்களை மறுத்து உண்மைப் பொருள் கூறிச் சைவத்தை நிலைநாட்டுதல் வேண்டுமென்பது

ஆசிரியர் இப்புராணத்தை இயற்றிய நோக்கங்களில் முக்கியமான தொன்றாகும் என்பது அதனைக் கற்பார்க்கு எளிதில் விளங்கும். சுருங்கச் சொல்லின், திருமுறைகளின் பொருளையறிதற்குப் பெரிய புராணம் இன்றியமையாதவாறுபோல, மெய்கண்ட நூல்களின் பொருளை யாவரும் எளிதில் விளங்க அறிதற்கும், உபநிடதம் முதலிய வடநூல்களுக்கு உண்மைப்பொருள் காண்டற்கும் இக் காஞ்சிப் புராணம் இன்றியமையாததாகும்.

ஆசிரியர், இப்புராணம் கற்றவர்க்கு எந்நூலிலும் கூறப்படு கின்ற வரலாறுகளும் ஒழுக்கவகைகளும் தெரிந்துவிடுதல் வேண்டு மெனக் கருதினமையால், பலவகைவரலாறுகளையும் மிருதியொழுக் கங்களையும் அவ்வவ்வாறே கூறுகின்றார். ஆசிரியர்க்கு இக்கருத் துளதென்பதை, ஒழுக்கப் படலத்தில், "நான்மறைப் பொருளாய்க் கதைக்கெலாம் இடனாய்....... நூன்முறை வருண நிலைகளி னொழுக்கம் நுண்ணிதில் தெரிப்பதும் இதுவாம் — பான்மையால் காஞ்சிப் புராணமே நாளும் பயில்வுறக் கேட்பது மாபால்" எனக் கூறுத லால் விளங்கும்.

இனி, இலக்கியச் சுவைக்கும் இப்புராணம் ஓர் கருவூலமாயுள் ளது. நாட்டுப்படலம் நகரப்படலங்களிலும் மற்றைய இடங்களி லும், புனைந்துரைகளும் உவமை முதலிய அணிகளும் மிக அழகாக மலிந்துள்ளன. வீரம், இன்பம் முதலிய சுவைகளும் கேட்டாரை அதுவதுவாக்கும் தகையவாய் அமைந்துள்ளன. சொல்லணி களும் ஆங்காங்கு உள்ளன. ஆசிரியரது சித்திரக் கவியின் வன்மையைச் சுரகரேசப் படலத்திற் காணலாம்.

இங்ஙனம் பலவகையிலும் சிறந்து விளங்குவதாகிய இக் காஞ்சிப் புராணம், இன்றியமையாது கற்கப்படும் இலக்கியங்களுள் ஒன்றென்பது தமிழுலகம் அறிந்ததாகலின், அதனை ஈண்டு எடுத் துக் கூறுதல் மிகையாகும்.

இப்புராணத்தை, காஞ்சித்தலங்களை ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழ மையிலும் முறையாகச் சென்று வணங்கி, அத்தலத்தின் வரலாற்றை மக்களுக்கு எடுத்துரைத்தல் வாயிலாகச் சித்தாந்த உண்மைகளை மக்க ளுக்கு அறிவுறுத்திச் சைவத்தைப் பரவச் செய்தலையே முக்கிய தொண்டாகக்கொண்டு செய்துவரும் காஞ்சிபுரம் மெய்கண்டார்

கழகத்தினர், இரண்டாம் முறையாகச் செய்துவரும் இவ்யாத்திரை முடிவிற்குள் அன்பர்களுக்குக் கிடைத்துப்பயன்படுமாறு வெளியிடக் கருதி, என்னை அக்கழகத்தில் ஆசிரியனாய்இருக்கும் இயைபுநோக்கி, அதற்குக் குறிப்புரையும் உரைநடையும் எழுதுமாறு பணித்தனர். வடமொழி தென்மொழிக் கடலை நிலைகண்டு, அவற்றின்கண் அஃகி அகன்ற பேரறிவுவாய்ந்த ஆசிரியர் சிவஞான சுவாமிகள், அரும் பொருள் பலவும் பொதியத் திருவாய்மலர்ந்தருளிய செய்யுட் களுக்கு உரைகாண்டற்கு ஒன்றுக்கும் பற்றாத சிறியேன் எட் டுணையும் உரிமையுடையேன் அல்லனாயினும், காமாட்சியம்மை யாருடன் காஞ்சியம்பதியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பப் பெரு மான் திருவருளும், மெய்கண்டார் கழகத்தினர் அன்பும் துணை செய்யுமென்னும் துணிவுகொண்டு ஒருவாறு எழுதத் துணிந்தேன்.

இதற்கு முன்னர் வெளிவந்துள்ள சில பதிப்புக்களைக்கொண்டு செய்யுட்களை ஒப்பு நோக்குங்கால், சில பாடபேதங்களும், பல எழுத்துப் பிழைகளும் காணப்பட்டன. இலக்கண வழுக்களும் சில தோன்றின. பாடபேதங்களை நட்சத்திரக்குறி முதலிய குறிகள் இட்டுக் குறித்தும், எழுத்துப் பிழைகளைத் திருத்தியும், இலக்கண வழுக்களில் திருத்தமான பதிப்பின்படி திருத்தியவை தவிர, எல் லாப்பதிப்பிலும் ஒரேவகையாக இருந்தவைகளில் வல்லினம் மிகு தல் இயல்பாதல் வகையைமட்டுத் திருத்தி ஏனையவற்றிற்கு ஒருவாறு அமைவு கூறியும் உள்ளேன். விகுதிபெற்ற ஏவற்சொற் கள் இடைநிலைபெறுதல் இல்லையாயினும், பலவிடங்களில் இடை நிலைபெற்றே வருகின்றன. அவைகள் மிகுதியாக இருப்பதால் திருத்தப்படவில்லை. எழுத்துப் பிழைகளில் பொருள் வேறுபட வந்தவற்றில் பல, எல்லாராலும் அவ்வாறே கொள்ளப்பட்டனவே னும், அவைகள் எழுத்துப் பிழையேயன்றி மூலபாடமாகா, மூல பாடம் வேறுவகையாக இருந்திருத்தல்வேண்டுமென்று தோன் றியவற்றை, செய்யுளில் முன்னிருந்தபடியே பதித்து, உரையில், இவ்வாறு பாடம் இருந்திருத்தல் வேண்டுமெனவும், இவ்வாறு பாடங்கொள்ளுதல் சிறக்குமெனவும் கூறியிருக்கின்றேன். இப் பதிப்பில் செய்யப்பட்டுள்ள முக்கிய திருத்தம், மணிகண்டீசம் சுரகரீசம் என்றாற்போல ஈகாரமாகவே எல்லாராலும் கொள்ளப் பட்டவற்றை, அவ்வாறு வருவதற்கு யாண்டும் விதியிருப்பதாகத்

தெரியாமையாலும், பிற இடங்களில் அவ்வாறு கூறப்படாமை யாலும் மணிகண்டேசம், சுரகரேசம் என்றாற்போல ஏகாரமா கக் கொள்ளப்பட்டதாகும். சருவதீர்த்தமென்பதை, ஆசிரியர் ஓரிடத்து எதுகைநயம்பற்றிச் சறுவதீர்த்தமென வரைத்தமை பற்றி யாண்டும் சறுவதீர்த்தமெனவும், சாற்வதீர்த்தமெனவுங் கொள்ளப்பட்டிருந்தவைகளைச்சருவதீர்த்தம், சார்வதீர்த்தம் என்றே திருத்திக்கொண்டேன். இப்புராணத்துள் இன்னும் இவைபோன்ற சில திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. திருத்துதற்குத்துணியாது விடப்பட்ட இடங்களும் பல.

செய்யுட்களை யாவரும் எளிதில் பொருள் விளங்கப் படிக்கு மாறு சீரும் சில சந்திகளும் பிரித்தும், முக்கிய செய்யுட்களையும் செய்யுட் பாகங்களையும் தடித்த எழுத்திலும் பதிக்கப்பட்டது, இப்பதிப்பில் காணப்படும் புதிய முறையாகும். செய்யுட்கள் சந்தி பிரிக்குங்கால் இருபொருள்படுதற்குரிய இடங்களிலும், எதுகை ஓசை முதலிய கெடுமிடங்களிலும் வாளா விடப்பட்டன.

குறிப்புரையில் பெரும்பாலும் எல்லாச்சொற்களுக்கும் பொரு ளுரைக்கப்பட்டிருத்தலின், பதவுரைபோலப் பலர்க்கும் பயன்படு தற்குரியதாகும். ஒருசொல்லுக்குப் பலவிடங்களில் பொருளுரைக் கப்படின், அதன்பின்னர் அதற்குப் பொருளெழுதாமையால், பிற் பகுதியில் பொருள் கூறப்படாத சொற்களுக்குப் பெரும்பான்மை முற்பகுதியிற் பொருள் காணலாம். ஆயினும், அருஞ்சொற்களுக்கு யாண்டும் பொருள் கூறியுள்ளேன். உரையில்விளங்காத சில வற்றை உரைநடையிற் காணலாம். சில சொற்களுக்கு, முன்னர்ச் சொல்லின்படி பொருளும், பின்னர் அவை அக்காரணத்தால் உணர்த் தும் பொருளும் குறிக்கப்பட்டுள்ளன. சைவசித்தாந்தக் கருத்துக் கள் முதலிய அரிய பொருள்கள் வருமிடங்களிலெல்லாம் ஒருவாறு விரித்து விளக்கப்பட்டிருத்தலால், படிப்போர் பெருநூற் கல்வியிற் புகுத உரியராவர். ஆசிரியர் விதந்தோதியுள்ள உபநிடதப் பகுதி முதலிய வடநூற்பகுதிகளும், காயத்திரி முதலிய மந்திரங்களும் யாவரும் எளிதில் அறியுமாறு ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பட் டுள்ளன. அணிவகைகளில் பலர்க்குப் பலவகையான கருத்துக்க ளிருத்தலால் பெரும்பான்மையாகக் கருத்து வேறுபாடில்லாத தற் குறிப்பேற்றம், வேற்றுப்பொருள் வைப்பு முதலிய சில அணிகளை

மாத்திரமே குறித்திருக்கின்றேன். சாகரேசப் படலத்தில் உள்ள சித்திரக் கவிகளுக்கு மாத்திரம் மிகப் பழமையான உரை காணப் பட்டமையாலும், அதனையே பின்வந்தோர் எவரும் தழுவிச் சென் றிருத்தலாலும், அதன்கண்ணும் சில திருத்தங்கள் செய்யிற் சிறக் குமாயினும் பெரும்பொருள் ஒன்றும் பெறப்படாததலாலும் அதிற்குறிக்கப்பட்டிருந்த இலக்கணக் குறிப்புக்களிற் பொருந்தாத சிலவற்றைத் திருத்தியும் நீக்கியும் ஏனையவற்றை அங்ஙனமே கொண் டேன். சித்திரக் கவிகளைச் சித்திரங்களில் அமைத்துக்காட்டிய படங்களை நூலின் இறுதியில் சேர்த்துள்ளேன். இச் சித்திரக்கவி களில் முரசபந்தமும் கோமூத்திரியும், தண்டியலங்காரத்திற் காணப் படுவனவற்றிற்குச் சிறிது வேறுபட்டுள்ளன.

சமயப் பொருள்பற்றிய எத்தகைய வரலாற்றிலும் ஒவ்வொரு சமய உண்மைகள் காண்டல் கூடுமாகலின், அத்தகைய உண்மைகள் விளங்குதற்குத் திருநெறிக்காரைக்காட்டுப் படலம் முதல் விம்மிதப் படலம் வரையில் ஒவ்வொரு படலத்தின் இறுதியிலும் அதனுட் கூறப்படும் வரலாற்றிற்பெறப்படும் உண்மைகளை யுரைத்துப் படல உண்மை என அமைத்துள்ளேன்.

மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ள நூல்களின் முத லும் இடமுங்குறித்து அவைகளை மேற்கோட் குறிப்பு அட்டவணை யில் விளக்கியிருக்கின்றேன். உரையில் விளக்கப்பட்டுள்ள அரிய பொருள்களையும், செய்யுட்களில் உள்ள அரியபொருள்களிற் சில வற்றையும் அரும்பொருள் அட்டவணையிற் குறித்துள்ளேன்.

உரைநடை எல்லார்க்கும் பயன்படும்படி எளிய நடையில், சுருக்கியும் வரலாறுகளை விடாமலும் எழுதப்பட்டுள்ளன. இன் னோரன்ன பலவற்றால் இப்பதிப்பானது கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெரிதும் பயன்படுமென்று நம்புகிறேன்.

இப்புராணத்திற்குக் குறிப்புரை எழுதுதல்வேண்டுமென்னும் எண்ணம் எனக்கே சில நாட்களாக இருந்துவந்ததெனினும், கழகத் தினர் அதை எனக்குப் பணித்தது ஓர் எதிர்பாராத தோற்ற மாகவே இருந்தது. காரணம், அவர்கள் இம்முறை செய்துவரும் காஞ்சித்தல யாத்திரைக்குள் முடித்து வெளியிடவேண்டுமென் னும் நோக்கங்கொண்டு செய்ய முற்பட்டதேயாம். எழுதத்

தொடக்குவது குறிப்புரையே யாதலாலும், இதற்குமுன் இப்புரா ணத்திற்கு ஓர் உரையும் உரை நடையும் இருத்தலாலும் ஒருவாறு விரைவில் முடித்துவிடுதல் கூடும் என்றெண்ணியே யானும் அதற் கிசைந்தேன். இசைந்து அதனுட் புகுந்து பார்க்குங்கால், பாடங் களை ஆராய்ந்து நிச்சயிக்கவும், பல இடங்களில் புத்துரை காணவும், சில பொருள்களைப் பெரிதும் ஆராயவும், சிலவற்றை வடமொழி வல்லார்வாய்க் கேட்டுணரவும் வேண்டியிருந்தமை எனக்குப் பெரிதும் கால நீட்டிப்பையும், அலைவையும் தந்தன. எனினும், எனது ஆருயிர் நண்பரும் ஷை கழகத்தின் செயலாளரு மாகிய திருமிகு. க. வச்சிரவேலு முதலியார் B. A. L. T. அவர்கள் தமக்கு உள்ள இடையீடில்லாத வேலைகளுக் கிடையில் கிடைக்கும் சில சில ஓய்வு நேரங்களில், இரவிலும் பகலிலும், தமது பெருங்கல்வியாலும், பேரறிவாலும், அரியபல நூல்களாலும் எனக்குச் செய்துவந்த உதவியும், இறைவன் திருவருளும் எனது மனவெழுச்சி குன்றுவண்ணம் செய்து இத்தொண்டை முடிப் பித்தன. இதன்கண் விளக்கப்பட்டிருக்கும் அரிய கருத்துக்களிற் பெரும்பாலன விளங்குதற்கு அவர்கள் அரிய உதவியே காரணம். யாங்கள் இருவரும் கலந்து சிலநாட்கள் ஆராய்ந்தும், இன்னும் நீண்டநாட்கள் ஆராயவேண்டியும், அநுபவமுடைய பெரியோர் களைக் கேட்கவேண்டியும் இருந்த சில பொருள்களை அப்பொழுது எழுதிப் பதிப்பித்தற்கின்மையால், அவற்றைப் பிற்சேர்க்கையாக (அநுபந்தமாக) எழுதிச்சேர்க்கலாமென நிறுத்திவைக்க நேர்ந்தது. போதிய காலமின்மையால் அவை அவ்வாறே விடுக்கப்பட்டன. அங்ஙனம் விடப்பட்டபொருள்கள் மிகச்சிலவே. அவைகளும் அவற்றை விளக்கவேண்டிய இடங்களில் ஒருவாறு விளக்கப்பட்டே யிருக்கின்றன.

பொருள்களை இவ்வகைகளால் ஆராய்ந்து எழுதுதலும், அச்சி டுங்கால் பிழை திருத்துதலும் செய்யவேண்டியிருந்தமையின் நேர்ந்த சில அச்சுப் பிழைகளைத் திருத்திப் பிழைதிருத்தமாகப் பின்னே சேர்க்கப்பட்டிருக்கின்றது. அச்சுப்பிழை நோக்குங்கால் எழுத்துப் பிழைகளையேயன்றிக் கருத்தையும் நோக்கவேண்டியிருந்த மையின், இரண்டோரிடங்களில் பொருளும் மாறுபட்டன.

அவற்றையும் பிழை திருத்தத்தில் திருத்தியமைத்துள்ளேன். அடுத்த பதிப்பு வெளிவருமாயின், அதன்கண் இச்சில எழுத்துப் பிழைகளைத் திருத்தியும், பிற்சேர்க்கையாகச் சேர்க்க நினைத்த பொருள்களையும் மற்றும் சிலவற்றையும் இன்னும் நன்கு விளக்கியும், இவைகளுக்குமேல் இன்னும் சில விசேடக் குறிப்புகள் செய்தும், சேர்க்கலாமெனக் கருதியுள்ளேன். திருவருள் கூட்டுவிக்குமேல் முற்றுப்பெறும்.

இக்குறிப்புரை யெழுதுங்கால், வடமொழிப் பகுதிகளில் பலவற்றை யறிதற்கும், ஆசிரியர் சிவஞான சுவாமிகள் வரலாற்றை எழுதுதற்கும் பெரிதும் துணைசெய்தது, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்ட சிவஞானபாடியம் ஆதலின் அவர்கட்கும், திருமுறைகளிற் பலபொருள்களை எளிதில் அறிதற்கும், திருப்பாடல்களை எளிமைப்படக் குறித்தற்கும் பெரிதும் உதவிய தேவாரத் திருமுறைகளை வெளியிட்ட சைவ சித்தாந்த மகா சமாசத்தினர்க்கும், இப்புராணத்தில் பல இடங்களில் உரைகாண்டற்கும், வடமொழிக் காஞ்சிப் புராணக் கருத்துக்களை யறிதற்கும் மிகவும் துணைசெய்த காஞ்சிப்புராண உரையை வெளியிட்ட, காஞ்சிபுரம் சித்தாந்தபோத ரத்நாகரம் திரு. ஆலாலசுந்தரம் பிள்ளையவர்கட்கும் எனது நன்றி உரியதாகும்.

இப்பெரும்பணியை என்பால் அன்புகூர்ந்து எனக்குப் பணித்து உதவிய காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தினர்க்கு யான் என்றும் மறவா நன்றிபறியும் கடப்பாடுடையேன். இதனை இனிது முற்றுவித்த எல்லாம்வல்ல இறைவன் திருவருளை யான் மனமார எண்ணி இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

காஞ்சிபுரம்
மெய்கண்டான் யாண்டு,
எா௰௪, (௭௬௪) ஐப்பசி.

சி. அருணை வடிவேல்,
ஆசிரியன்,
மெய்கண்டார் கழகம்.

# சிவஞான சுவாமிகள் வரலாறு

தமிழ் நாட்டில் தோன்றிய பல பெரியார்களில் ஆசிரியர் சிவஞான சுவாமிகள் ஒருவராவர். அவரது பெருமைக்கேற்ப அவருக்குச் சிவஞான முனிவர், வடமொழி தென்மொழிக் கடலை நிலைகண்டுணர்ந்த ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் முதலிய பெயர்களும் உள்ளன. அவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்தவர். பல ஆதீனங்களிலும் திருவாவடுதுறை ஆதீனம் சிறந்ததெனப் படுதற்குச் சிவஞான சுவாமிகள் ஒருபெருங் காரணராவார். அவர்தம் பெருமை அளத்தற்கரிது. சுவாமிகளவர்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் உள்ள கலைக்கடலைக் கரைகண்ட ஒரு பெரும்புலவர். சிறந்த கவிஞர் பெருமான். சைவசித்தாந்தச் செஞ்ஞாயிறு. கடுந்துறவி. அரிய சிவானுபூதிமான். இத்தகையரே யன்றி, ஆராய்ச்சியிலும் மிக வல்லுநர். தமிழில் அறிவுக்கலையில் இவர் ஆராய்ந்து எடுத்துக்காட்டி நிறுவியுள்ள பொருளியல்புகள், மேல்நாட்டவர் பல கருவிகளைக்கொண்டு துணியப்படும் பொருளியல்புகளுக்கு ஒத்திருக்கின்றன.

ஆசிரியர் அருளிச்செய்துள்ள செய்யுட்கள் ஒழுகிய ஓசையும் செவிக்கின்பமும் பயந்து, பொருளை இனிது புலப்படுத்துவனவாய், தெள்ளிய நடையில் அமைந்துள்ளன. உரைகள் தமிழ்ச்சுவை ததும்ப, மாணுக்கர்களை ஆராய்ச்சிமுறையில் முற்போக்கடையச் செய்து, நுண்ணுணர்வைப் பெருக்கி, உள்ளத்தின்கண் உவகையும் வியப்பும் மீதூரச்செய்து, ஆழ்ந்து நுண்ணிதாய் அகன்ற விழுமிய சூத்திரப்பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தெள்ளத் தெளிய விளக்குகின்றன. அங்ஙனம் விளக்குமிடத்து யாண்டும் சொற்பல்குதல் இல்லை. ஆசிரியர் கண்டனநூல் எழுதுதலிலும் மிக வல்லுநர். ஆசிரியர் மொழிபெயர்ப்பு நூல்களும் பல இயற்றியுள்ளார். மொழிபெயர்ப்பு வன்மையில் சிவஞான சுவாமிகளுக்கு இணையானவர் ஒருவரும் இலர். சுவாமிகளது நூல் முழுவதையும் கற்ற ஒருவர் இலக்கண நுட்பமும், ஆராய்ச்சி அறிவும், சமய உண்

மைக்கொள்கையும் முற்ற அடைவர். தமிழில் இனிய செய்புளும் அரிய உரைநடையும் இயற்ற வல்லுநராவர்.

ஆசிரியர் சிவஞான சுவாமிகள், நூல்களை, ஆராயாது ஒப்பென்றோ தப்பென்றோ துணியும் சிலர்போலாது, "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் — அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியமாய் இலக்கணநூல், தருக்கநூல், சமயநூல் என்பவற்றில் எதையும் பொதுஅறிவோடு நன்கு ஆராய்ந்து ஐயந்திரிபறத் திட்டமாகத் தெளிதலுடன், அவற்றில் தள்ளுவ தள்ளிக் கொள்ளுவ கொள்ளும் இயல்புடையார். ஆயினும், பொருந்தாதன சிலவாதல்பற்றி அரும்பொருள் பல உரைத்த ஆசிரியர்களைச் சிறிதும் இகழ்தல்செய்யார். உச்சிமேற்கொண்டும் போற்றுவர். தமிழ்நாட்டிற் பெரும்பாலோர் ஆசிரியரை இம்முறையில் பின்பற்றாது போயினமை வருந்தத்தக்கது. இவ்வாற்றல் இலக்கண முறையிலும் சமயத்துறையிலும் ஆசிரியர்களைத்தெறிந்த வழுக்கள் பல. காட்டிய உண்மைகள் பல. ஐயத்திற்கிடனுய்க் கிடந்த குழப்பங்களை நீக்கித் தெளிவித்த உண்மைகள் பல.

சுவாமிகள் இயற்றியுள்ள நூல்களில் இலக்கணத்திற்குத் தொல்காப்பியச் சூத்திர விருத்தியும், இலக்கியத்திற்குக் காஞ்சிப் புராணமும், சமயத்திற்குச் சிவஞானபோதப் பேருரையாகிய திராவிட மாபாடியமும் சிறந்தனவாகும். இப்பாடியம் சிவஞான மாபாடியம் எனப்படும். இம்மாபாடியம் ஒன்றையே ஆசிரியர் தம் வாழ்க்கையின் பயனாகத் தமிழுலகத்திற்கு அளித்துள்ளார். அதனை ஆசிரியர் மிகவும் கண்ணும் கருத்துமாக இருந்து இயற்றியுள்ளார். அஃதொன்றே வடமொழி தென்மொழிகளிலுள்ள எல்லா அறிவுக்கலை (எண்) நூல்களிலும் தலைசிறந்ததாகும். இப்பாடியம் இன்றி அறிவுக்கலைகளின் உண்மைப்பொருள் காண்டல் இயலாது. வடமொழியில் நீலகண்டர், சங்கரர், மாத்துவர், இராமாநுசர் ஆகிய நான்குபேர்கள் இயற்றியுள்ள பிரம சூத்திரப் பாடியங்களிலும் இது மிகச்சிறந்ததாகும். இதனானே ஆசிரியர் 'மாபாடியகாரர்' எனப்பெயர் பெற்றனர். இதற்குக் கருவியாகவே தொல்காப்பியச் சூத்திரவிருத்தியையும், தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீய மொழிபெயர்ப்பையும்

செய்துள்ளார். தருக்கநூலை முதலில் தமிழில் கொண்டுவந்தவர் ஆசிரியர் சிவஞான சுவாமிகளேயாவர். மாபாடியத்திற்கு அடுத்த படியில் உள்ளது காஞ்சிப்புராணமே. அதனுள் ஆசிரியர் தாம் வடமொழியில் உபநிடதங்களிலும் புராணங்களிலும் கண்ட உண்மைகளையும், பலவகையான வரலாறுகள், மிருதி வழக்குகள் முதலிய எல்லாவற்றையும் உரைத்துச் சைவசித்தாந்த உண்மைகளையும் ஆங்காங்குச் செறித்துவைத்திருக்கின்றனர். இதில் ஆசிரியரது மொழிபெயர்ப்புத் திறனை மிகுதியாகக் காணலாம். மற்றும் வடமொழியில் சர்வாத்ம சம்பு சிவாசாரியர் இயற்றிய சித்தாந்தப் பிரகாசிகையும், அரதத்த சிவாசாரியர் இயற்றிய சுலோக பஞ்சகத்தையும் மொழிபெயர்த்தருளினர். சைவசித்தாந்தத்தை நிறுவுதற்கு அவற்றொடு முரணிய நூல்களுக்குப் பல கண்டன நூல்கள் இயற்றினர். தோத்திரங்களாக அருளிய பிரபந்தங்கள் பல. இலக்கணம், சமய உண்மை முதலியவற்றைத் தமது ஆதீனத்தைச் சேர்ந்த திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர் முதலாகிய மாணாக்கர்களுக்கு அறிவுறுத்தி உலகத்திற் பரவச்செய்தனர்.

சுவாமிகளவர்கள் நூலாசிரியராயும், உரையாசிரியராயும், மறுத்துரை ஆசிரியராயும், போதகாசிரியராயும் இருந்து செய்த உதவி போலும் உதவியை அவருக்குப்பின் தமிழுலகம் இற்றைவரையிலும் அடைந்திலது. இத்தகைய பேருதவியைச்செய்த ஆசிரியர் சிவஞான சுவாமிகளைத் தமிழுலகம் என்றும் மறவா நன்றியுடன் போற்றுங் கடப்பாடுடையதாகும். ஆகவே, அவரது 'வரலாற்றை அறியவேண்டுதலும் ஒருதலையாகலின், அதனை ஒருவாறு ஈண்டு உரைக்குதும்.

## ஆசிரியர் காலம்

நமது நாட்டில் பெரியாரது வரலாறுகளைச் சரியான காலம் முதலியவற்றோடு திட்டமாக எழுதிவைத்தல் என்பது முற்காலத்தில் இல்லை. அதனால் பிற்காலத்தவர் கூட்டியும் குறைத்தும் புனைந்தும் வியந்தும் உரைத்தலின், ஒருவரது வரலாறே பலவாறு வழங்குவதாய், ஆராய்ச்சியாளர் உண்மை காணுதற்கு அரிதாகின்றது. ஆயினும், சிவஞான சுவாமிகளது வரலாற்றில் அத்தகைய குழப்பங்கள் பெரும்பாலும் இன்றி ஒருவாறு எல்லாம் ஒத்தேயிருக்கின்றன. ஆசிரியரது காலமும் இற்றைக்கு நூற்றைம்

பத்திரண்டு ஆண்டுகட்கு முற்பட்டதெனத் திட்டமாகத் தெரி கின்றது. எங்ஙனமெனில் அவர் முத்தியடைந்தநாள் கி. பி. 1785-க் குச் சரியான சாலிவாகன சகாத்தம் 1708, விசுவாவசு ஆண்டு சித் திரைத் திங்கள் எட்டாம்நாள் ஞாயிற்றுக்கிழமை ஆயிலியநாள் என்பது,

"மன்னு விசுவா வசுவருட மேடமதி
உன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்கு தினம்"

என்னும் வெண்பாவால் விளங்குகின்றது. இவ்விசுவாவசு ஆண்டு மேற்குறித்த சகாத்தத்திற்குச் சரியானதே என்பதை, ஆசிரியர் தாம் பல நூல்களையெல்லாம் இயற்றிய பன்னாட்களுக்குப் பின் இயற்றிய 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்' என்னும் நூலின்,

"இலகுசகன் ஈரேட்டு நூற்றுநாற் பத்தேழி
லிற்காரங் கும்பமிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதியை
யேர்க்கவுல வஞ்சுப்பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற்
கலைசைப் பதிக்குள்வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க்
கவிபாடி வாகெருண
அலைமலி கடற்கடைக் தமுதூட்டு மாலென்ன
அவனியிற் புலவர்செவியால்
ஆர்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிகன்
அரங்கேற்றி னன்ஆதலால்
நலசுகுண மணிகுவளை யணிபுயன் வீரப்பன்
நல்குமக ராசயோகன்
நங்கள்கே சவபூபன் அநுசர்சேய் சுற்றமும்
நன்மைதரு வாழ்வுறுகவே"

என்னும் சிறப்புப்பாயிரச் செய்யுள் விளக்கும். எங்ஙனமெனில், இதனுள் காரம் கும்பம் இருபத்தேழென்பதனால், அப்பிள்ளைத் தமிழ் அரங்கேற்றியது கார ஆண்டு மாசித் திங்கள் இருபத்தேழாம் நாளென்று விளங்கும். அதற்குப்பின்னர்ப் பதினைந்காவது ஆண்டா கிய விசுவாவசுவே ஆசிரியர் முத்தியடைந்த ஆண்டென்பது தெளி

வாகும். அதன்பின் இரண்டு விசுவாவசு ஆண்டுகள் செல்ல, இனி வரப்போவது மூன்றாவது விசுவாவசுவாகும். ஆகவே இவ்வாண்டின் (ஈசுர. 1937) சித்திரைவரையில் ஆசிரியர் முத்தியடைந்தபின் 152 ஆண்டுகள் முடிந்தமை இனிது பெறப்படும். அதற்குப் பதினான்கு ஆண்டுகள் முற்பட்டது அப்பிள்ளைத்தமிழ் ஆதலால், பிள்ளைத்தமிழ் அரங்கேறியது இற்றைக்குமுன் 166ஆம் ஆண்டில் என்பதாயிற்று. இற்றை ஆண்டுக்குரிய சகாத்தம் 1860 ஆகலின், பிள்ளைத்தமிழ் அரங்கேறிய சகாத்தம் 1694 என்பது தெளிவாகும். இதனையே அப்பாயிரச்செய்யுள், இலகுசகன் ஈரேட்டு நூற்றுநாற்பத்தேழ்' எனக்குறித்தது. இரண்டு எண்ணூற்று நாற்பத்தேழு, அதாவது 847ஐ இரண்டால் பெருக்க வருவது 1694 ஆதல் காண்க. பிறவாறு கூறுவதற்கு அச்செய்யுள் இடந்தராதென்க. பிள்ளைத்தமிழின் சகாத்தமாகிய 1694 உடன் 14 கூட்ட 1708 ஆகும். இற்றைச் சகாத்தம் 1866க்குக் கி. பி. 1937 ஆகலின் சகாத்தம் 1708க்குக் கி. பி. 1785 என்பதில் ஐயமின்று. அதனால் ஆசிரியர் முத்தியடைந்த நாள் மேற்கூறியபடி கி. பி. 1785-க்குச் சரியான சாலிவாகன சகாத்தம் 1708 என்பது தெளிவாகலின், ஆசிரியர் காலம் இற்றைக்கு நூற்றைம்பத்திரண்டு ஆண்டுகட்கு முற்பட்டதென்பது இனிது விளங்கும். எனவே, ஆசிரியர் முத்தியடைந்து இற்றைக்கு 152 ஆண்டுகள் முடிய, 153ஆம் ஆண்டு நிகழ்கின்றதென்பது தெள்ளிதிற் புலனும். திருவாவடுதுறை ஆதீனத்துப் பண்டார சந்நிதிகள் முதலியோரது காலங்களை அவ்வாதீனத்துச் சான்றுகளைக்கொண்டு ஆராயின், ஆசிரியரது வயதுமுதலிய யாவும் திட்டமாக அறிதல் கூடும்.

## ஆசிரியர் பிறப்பு முதலியன

ஆசிரியர் சிவஞான சுவாமிகள், தென்பாண்டி நாட்டில் பொதிய மலைச் சாரலை அடுத்துள்ள பாவநாசம் என்னும் திருப்பதிக்கு அருகிலுள்ள விக்கிரம சிங்கபுரம் என்னும் சிற்றூரிலே, சைவ வேளாளர் குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்த ஆனந்தக் கூத்தர் என்பவருக்கும், கற்பிற்சிறந்த அவரது மனைவியார் மயிலம்மையாருக்கும் புத்திரராகத் தோன்றினர். ஆசிரியர் தோன்றிய அக்குடியானது ஏழுதலைமுறைகாறும் அருட்புலமை நிரம்புமாறு அகத்தியனார்பால் வரம்பெற்ற குடியென்றும், அதில் ஆசிரி

யர் ஏழாவது தலைமுறையாகத் தோன்றினரென்றும் கூறுப. தமிழ்நாடு செய்த தவப்பயனாகிய அப்புத்திரரைக் கண்டு தந்தையாரும் தாயாரும் பெருமகிழ்வுற்று, பிறப்புக்குறிப்பு எழுதுதல் முதலிய சடங்குகளைச் செய்து, முக்களாலிங்கர் எனப் பெயரிட்டுப் போற்றி வளர்த்து வந்தனர்.

முக்களாலிங்கர் இளம்பிறைபோல வளர்ந்து ஐந்தாண்டு நிரம்ப, அவரது தந்தையார் அவரைப் பள்ளிக்கு வைத்தனர். முக்களாலிங்கர் நாள்தோறும் பள்ளிக்குச் சென்று இனிது கல்வி பயின்று வந்தார். ஒருநாள் பள்ளியிலிருந்து வீட்டிற்கு வருங்கால், வழியில் திருவாவடுதுறை ஆதீனத்து முனிவர்கள் சிலர் வரக் கண்டனர். காவியுடையும் கண்டிகையும் வெண்ணீறும் கவின அணிந்த அவர்களைக் கண்டதும், முக்களாலிங்கர் அன்பு மீதூர்ந்த மனத்தராய் அவர்கள்பாற் சென்று வணங்கி, 'முனிவர்காள், அடியேங்கள் மனைக்கண் எழுந்தருளித் திருவமுதுசெய்து செல்லல் வேண்டும்' என்று தம் இனியசொற்களால் அவர்களை இரந்து வேண்டினர். முனிவர்கள், இளமைப் பருவத்தினராகிய அவரையும், அவரது பெருந்தகைச் செயலையும் நோக்கி, வியப்பும் மகிழ்வும் உடையவர்களாய், அவர் வேண்டுகோளுக்கிசைந்து, அவருடன் அவரது இல்லத்தை அடைந்தனர்.

அவ்வமையம் தந்தையார் வெளியே சென்றிருந்தமையின், முக்களாலிங்கர் தம் அருமைத் தாயாரிடம் முனிவர்களுக்குத் திருவமுது அளிக்கவேண்டுமென்று கூறினர். அவ்வம்மையார் தம் புதல்வர் செய்கையை வியந்து, முனிவர்களை உபசரித்து, அவர்களுக்கு அறுசுவையோடுகூடிய இன்னடிசில் அளித்தனர். அதனை முனிவர்கள் உண்டு மனமுவந்தனர். அதுகண்டு முக்களாலிங்கர் மகிழ்ச்சியடைந்து, தமது அன்னையாரைப் பாராட்டி,

"அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றும்
திருந்த அமுதளிக்கும் செல்வி - பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
மானந் தவாத மயில்"

என்னும் வெண்பாவைப் பாடினர்.

பின்பு, முனிவர்கள் மயிலம்மையாரையும், முக்களாலிங்கரையும் வாழ்த்தி விடைபெற்றுக்கொண்டு, அவ்வூரிலுள்ள திருமடமொன்றில் சென்று தங்கியிருந்தார்கள்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு வெளியே சென்றிருந்த ஆனந்தக் கூத்தர் திரும்பிவந்து, தமது புதல்வர்செயலைத் தம் மனைவியார் சொல்லக்கேட்டு மகிழ்ச்சியடைந்து, முக்களாலிங்கரை மார்போடணைத்து முத்தமிட்டு இன்புற்றனர்.

ஆசிரியர் துறவுநிலை எய்தல்

பின்பு, ஆனந்தக் கூத்தர் தம் புதல்வரோடு மடத்திற்குச் சென்று முனிவர்களை வணங்கினர். அப்பொழுது முக்களாலிங்கர் தாம் அவர்களுடன் திருவாவடுதுறைத் திருமடத்திற்குச் சென்று அங்கு மெய்ந்நூல்களை ஓதித் துறவுநிலையை அடையவேண்டுமென்னும் தமது கருத்தைத் தந்தையாருக்குத் தெரிவித்தார். தந்தையார் புதல்வரது பிரிவாற்றாமையால் வருந்தினரேனும் அவரது நற்செயலுக்குத் தடையாதல் கூடாதென்று ஒருவாறு தேறுதலடைந்து, புதல்வரை முனிவர்களிடம் ஒப்புவித்துத் தமது இல்லத்தை அடைந்தனர். தாயாரும் அதனையறிந்து தமக்கு உண்டாகிய வருத்தத்தை ஒருவாறு நீக்கித் தமது கணவனர் கருத்துக்கு இசைந்திருந்தனர்.

முனிவர்கள் முக்களாலிங்கரை அழைத்துக்கொண்டு, அக்காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சின்னப் பட்டத்துத் தம்பிரானாகிய வேலப்ப தேசிகர் எழுந்தருளியிருந்த, சேரநாட்டெல்லையிலுள்ள சுசீந்திரத்திலிருக்கும் ஈசான மடத்தையடைந்து, அங்குத் திருக்கோயில் கொண்டு விளங்கும் நமச்சிவாய மூர்த்திகளின் திருவுருவத்தை வணங்கியபின்னர் வேலப்பதேசிகரைச் சென்று வணங்கினார்கள். அவர் முக்களாலிங்கரை யாரென்றுவினவ, முனிவர்கள் நிகழ்ந்த வரலாற்றைத் தெரிவித்தார்கள்.

வேலப்ப தேசிகர் முக்களாலிங்கருடைய அறிவையும் பண்பையும் அறிந்து பாராட்டி, அவருக்குச் சமயதீக்கை விசேடதீக்கைகளைச் செய்து, காவியுடைதந்து துறவுநிலை யடைவித்தனர்.

முக்களாலிங்கர் சிலநாட்கள் வடமொழியிலும் தமிழிலும் உள்ள இலக்கிய இலக்கண நூல்களை ஓதி, அறிவும் ஒழுக்கமும்

உடையராய் இருந்தார். அதுகண்டு ஆசிரியர் வேலப்ப தேசிகர் முக்களாலிங்கருக்கு நிருவாண தீக்கைசெய்து, 'சிவஞானம்' எனத் தீக்கைத் திருப்பெயரிட்டு மெய்கண்ட நல்களையும் பண்டார சாத்திரங்களையும் உரைத்தருளினர். இவரே சிவஞான சுவாமி களுக்கு ஞானசிரியர் என்பது, இந்நூலில் கடவுள் வாழ்த்தில் "எவ்வெவர்கோட் படுபொருளும்" என்னும் திருப்பாசுரத்தால் விளங்கும்.

சிவஞான சுவாமிகள் இருமொழியினும் வல்லுநராயும், மெய் யுணர்வுடையராயும் விளங்கினர்.

சின்னாட்களுக்குப் பிறகு வேலப்ப தேசிகர் தமது ஞான சிரியரைக் காணவேண்டி, சிவஞான சுவாமிகள் முதலியோரையும் உடன் அழைத்துக்கொண்டு சுசீந்திரத்தைவிட்டுப் புறப்பட்டுப் பாண்டி நாட்டிலுள்ள சிவதலங்களை வணங்கிக்கொண்டு செப்ப றையை அடைந்து கூத்தப்பிரானை வணங்கி, அடுத்துள்ள இராச வல்லிபுரத்தை யடைந்தனர். அடைந்து அவண் வீற்றிருக்கும் அகிலாண்டேசுவரியின்மீது ஒருபதிகம் பாடும்படி கட்டளையிட சிவஞான சுவாமிகள் சைவசித்தாந்தக் கருத்துக்களை அமைத்துப் பாடிய அப்பதிகத்தை ஆசிரியர் முன்பே அரங்கேற்றியருளினர்.

பிறகு, வேலப்ப தேசிகர் அங்குநின்றும் கொங்கு நாட்டிலுள்ள பலதலங்களுக்கும் சென்று வணங்கித் திருப்பேரூரை யடைந்து கூத்தப்பிரானை வணங்கிக்கொண்டு சிலநாட்கள் தங்கியிருந்து, அத் திருப்பதியிலேயே இறைவன் திருவடி நீழலை எய்தினர்.

சிவஞான சுவாமிகள் தம் ஞானசிரியருக்குச் செய்யவேண்டிய வற்றைச் செய்துமுடித்து, அவருக்கு வழிபாடு செய்வதற்கு ஒரு தம்பிரானை அவ்விடத்தில் வைத்துவிட்டு ஏனையோர்களுடன், தாம் திருவாவடுதுறை மடத்தை அடைந்து, நமச்சிவாய மூர்த்திகளின் திருவுருவத்தை வணங்கி, அக்காலத்தில் ஒன்பதாவது ஆசிரியராக இருந்த வேலப்ப தேசிகரைக் கண்டு வணங்கி அவரருள்பெற்று நிகழ்ச்சிகள் யாவும் தெரிவித்தனர்.

அதுகேட்டு அவ்வாசிரியர், தமது தம்பிரான்களுட் சிறந்த வேலப்ப தேசிகருக்குச் சின்னப் பட்டத்தையளித்தருளிச் சிலகா லம் சென்ற பின்பு, அவரையும் சிவஞான சுவாமிகள் முதலானவர்

களையும் அழைத்துக்கொண்டு சுசீந்திரத்தை அடைந்து, அங்குச் சின்னப்பட்டத்து ஆசிரியரை வைத்துவிட்டு, ஏனைய தம்பிரான்களுடன் திருக்குற்றாலத்தை வணங்கிச் சங்கரநயினார் கோவிலை யடைந்து சிலகாலம் தங்கியிருக்கும்பொழுது சிவபெருமான் திருவடிநீழலை யடைந்தனர். இச்செய்தியைச் சிவஞான சுவாமிகள் வேலப்ப தேசிகருக்குத்தெரிவிக்க, அவர் சுசீந்திரத்திலிருந்து வந்து, ஆசிரியருக்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து, சிவஞான முனிவர் முதலியோருடன் திருவாவடுதுறை சேர்ந்து திருச்சிற்றம்பலத் தம்பிரான் என்பவரைச் சின்னப் பட்டத்திற்குரியவராக்கித் தாம் பண்டார சந்நிதியாக வீற்றிருந்தார்.

சிவஞான சுவாமிகள் திருவாவடுதுறையில் இருந்து வருங்கால் பஞ்சாக்கர தேசிகர் மாலை, சங்கர நமச்சிவாயப் புலவர் எழுதிய நன்னூல் விருத்தியுரைத் திருத்தம், திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கத்திற்கு மறுப்பாகிய இலக்கண விளக்கச் சூறவளி, தமது ஆதீனத்தில் எழுதப்பட்ட மரபட்டவணையை மறுத்துத் தருமபுர ஆதீனத்தவர் எழுதிய சித்தாந்த மரபு கண்டனத்திற்கு மறுப்பாகிய சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம் என்னும் நூல்களைச் செய்தருளினர்.

பின்னர்ச் சிவஞான சுவாமிகள் வேலப்ப தேசிகரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, தமது மாணாக்கர்களுடன் சென்று திருத்துருத்தி, மாயூரம், திருத்தில்லையை வணங்கிக் கொற்றவன் குடியை அடைந்து உமாபதி சிவாசாரியரையும், அருள்நமச்சிவாய தேசிகரையும் வணங்கிக்கொண்டு, திருக்களாஞ்சேரி சென்று மறைஞான சம்பந்தரை வணங்கி, மீண்டுந் தில்லையை அடைந்து வணங்கிக் கொண்டு, திருப்பாதிரிப்புலியூர்ச் சென்று அங்குச் சிலநாள் தங்கியிருந்தனர்.

அப்பொழுது ஒருநாள் அங்குக் கோயிலின்முன் கூடிய புலவர் கூட்டத்தில் செல்வந்தரொருவர் நூறுபொன் கட்டிய முடிப்பை வைத்து, "கரையேறவிட்ட முதல்வா உன்னையன்றியுமோர் கதியுண்டாமோ" என்ற அடியை ஈற்றடியாகக் கொண்டு ஒருசெய்யுளியற்றித் தருபவருக்கு அப்பொன்முடிப்பைக் கொடுப்பதாகக் கூறினர். அவ்வவையினருள் ஒருபுலவரும் அன்று மாலைவரையும்

அச்செய்யுளை இயற்றினாரில்லை. அதையறிந்த ஓர் அந்தணன் சிவஞான சுவாமிகள்பால் வந்து கூறி, அச்செய்யுளை இயற்றித்தந்து தனக்கு உதவிசெய்யும்படி வேண்டினன். சுவாமிகள் அதனை,

''வரையேற விட்டமுதஞ் சேர்தனிட
 வுண்டனைவல் வினமென் றுலு
முரையேற விட்டமுத லாகுமோ
 வெனைச்சித்தென் றுரைக்கி லென்னும்
நரையேற விட்டமுத னூவனுக்
 கொண்டுநறும் புலிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாவுன்னை
 யன்றியுமோர் கதியுண் டாமோ''

என்று முடித்து ஓர் ஏட்டில் எழுதிக்கர, அவ்வந்தணன் பெற்றுக்கொண்டுபோய் அவையாரிடம் காட்டி, முடிப்பைப் பெற்றுத் தனது வறுமை தீர்ந்தான்.

பின்பு, சுவாமிகள் தோன்றாத்துணை ஈசரை வழிபட்டுக் கொண்டு சிலநாட்கள் அங்கேயே தங்கியிருந்து, பின்னர்க் காஞ்சிபுரத்தையடைந்து, திருவேகம்பரையும் காமாட்சியம்மையாரையும் வழிபட்டுச் சிலகாலம் வசித்திருந்தனர். அப்பொழுது சின்ன காஞ்சிபுரத்திலுள்ள வைணவர்களிற் சிலர் சுவாமிகளிடம் வந்து, 'எங்கள் கம்பராமாயணம் ஒன்றே தமிழிற் சிறந்த நூலாகும்' அதற்கிணையான நூல் வேறெதுவும் இல்லை' என்று இறுமாப்புடன் கூறினர். சுவாமிகள் அவர்களது தவறான எண்ணத்தையும், அவர்கள்கொண்ட இறுமாப்பையும் அகற்றக்கருதி, அந்நூலின் முதற்செய்யுளாகிய ''நாடிய பொருள்கை கூடும்'' என்னும் செய்யுட்கண் பல சங்கைகளை எழுப்பி, அச்செய்யுள் முழுவதுங் குற்றமென்னும்படி செய்தனர். அவ்வைணவர்கள் அவற்றுள் ஒன்றற்கேனும் விடைகூற இயலாதவர்களாய், சுவாமிகளிடம் வந்து வணங்கி, 'யாங்கள் அறியாது செய்த குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்' என்று வேண்டினர். சுவாமிகள் அதனைக்கேட்டு மனமிரங்கி அச் சங்கைகட்கெல்லாம் தாமே விடைகூறினர். அச் சங்கை உத்தரங்களைச் சைவர்களிற் சிலர் எழுதித்தரும்படி கேட்க, 'கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி' எனப் பெயரிட்டு ஒரு நூலாக எழுதித் தந்தனர்.

இன்னும் அப்பொழுதே, திருவண்ணாமலை ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தியாருக்குச் சிவசமவாதக் கொள்கையைத் தழுவி எழுதியுள்ள உரையே சிறந்ததென நாட்டுதற்கு, அம்முனிவர் ஆதீனத்துப் பண்டார சந்நிதியொருவர் காஞ்சிபுரத்துக்கு வந்து தமது மாணவர் ஒருவரை விடுத்து, சிவஞான சித்தியார் சுபக்கத்தில், "என்னை இப்பவத்திற் சேராவகை எடுத்து" என்னும் முதனூற் சிறப்புச் செய்யுளில் உள்ள 'எடுத்து' என்னும் சொல்லுக்குப் பொருள் என்னை? என்று சுவாமிகளை வினவுமாறு செய்ய, சுவாமிகள் அவரது கருத்தையறிந்து, 'எடுத்து' என்னும் சொல்லுக்குச் சிவசமவாதவுரை மறுப்பு என்னும் நூலையும், அந்நூலுக்கு அப்பண்டார சந்நிதியார் இயற்றிய மறுப்பை மறுத்து, 'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயம் என்னும் நூலையும், அதற்குமேல் ஞானப்பிரகாசர் உரை முழுவதுமே போலி என்பதை விளக்கி, சிவசமவாதவுரை மறுப்பு என்னும் நூலையும் இயற்றினர்.

சர்வாத்ம சம்புசிவாசாரியர் இயற்றிய 'சித்தாந்தப் பிரகாசிகை', கஞ்சனூர் அமுதத்தசிவாசாரியர் இயற்றிய 'சுலோக பஞ்சகம்', அப்பையதீட்சிதர் இயற்றிய 'சிவதத்துவ விவேகம்' என்னும் வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்ததும், தொல்காப்பியத்தில் நுண்பொருள் காட்டுதற்பொருட்டுத் தொல்காப்பியச் சூத்திர விருத்தி இயற்றியதும் காஞ்சியில் இருந்த அப்பொழுதேயாம்.

பின்பு, சுவாமிகள் காஞ்சிபுரத்தினின்றும் புறப்பட்டுத் திருவொற்றியூருக்குப் போய் இறைவனை வணங்கினர். அங்குள்ள பெருஞ்செல்வராகிய மணலி சின்னையா முதலியார் என்பவர் சுவாமிகளைச் சிலகாலம் அவ்விடத்திலேயே தங்கியிருக்கும்படி வேண்ட, சுவாமிகளும் அதற்கிசைந்து இருந்தனர். அப்பொழுது சுவாமிகள் தாம் அதுவரையிற் காணுதற்கில்லாதிருந்த சில சிவாகமங்களை ஓதவேண்டும் எனவும், ஆகமங்களில் சில ஐயங்களை அகற்றிக்கொள்ள வேண்டுமெனவும் விரும்பிய தமது கருத்தைச் சின்னையா முதலியாருக்குத் தெரிவிக்க, அவர் சிலவிடங்களிலிருந்து சிவாகமங்களைப்பயின்ற சைவ அந்தணர்களை வருவித்துச் சுவாமிகள் கருத்தை முற்றுவிக்கச் செய்தனர். சுவாமிகள் சிவாகமங்களை நன்குணர்ந்து, சின்னாள் அவண் இருந்து, முதலியாரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மீண்டும் காஞ்சியை அடைந்தனர்.

அங்கு ஏகாம்பரநாதரையும் காமாட்சியம்மையாரையும் வணங்கிக்கொண்டு பன்னாட்கள் வதிவாராயினர். அந்நாட்களில், திருமுறைகளையும் ஏனைய நூல்களையும் துருவி ஆராய்ந்து, தாம் பன்னாட்களாக எழுதக் கருதியிருந்த சிவஞானபோதப் பேருரையாகிய சிவஞான மாபாடியத்தை எழுதி முடித்தனர். பின்பு அந்நூலை எடுத்துக்கொண்டு திருவாவடுதுறைக்குச் சென்று, பண்டார சந்நிதி வேலப்ப தேசிகரும், சின்னப்பட்டத்துத் திருச்சிற்றம்பல தேசிகரும், அவர்கள் ஆணைப்படி கூடிய சைவ சமயப் புலவர்களும், அடியார்களும் கேட்க, அம் மாபாடியத்தைத் தொடக்கத்திலிருந்து முழுவதையும் விளக்கிக் காட்டினர். அனைவரும் பெருமகிழ்வெய்தினர்.

சிலநாட்களுக்குப் பிறகு ஆசிரியர் சிவஞான சுவாமிகள் மீண்டுங் காஞ்சியை யடைந்து மாணக்கர்களுடன் வசித்து வருங்கால், பின் வேலப்ப தேசிகர் தென்னாட்டுத் தலங்கட்குச் செல்ல விரும்பித் திருப்பெருந்துறையில் சென்று அங்கிருந்தபொழுது இறைவன் திருவடி நீழலை எய்தினர். அவருக்குச் செய்யவேண்டியவற்றைத் திருச்சிற்றம்பல தேசிகர் செய்து முடித்துத் தாம் பண்டார சந்நிதியாய் அமர்ந்து, அம்பலவாண தேசிகருக்குச் சின்னப் பட்டத்தையளித்தனர். அவ்விழாவிற்குச் சிவஞான சுவாமிகளும் சென்றிருந்து மீளவுங் காஞ்சியம்பதியை யடைந்தனர்.

அடைந்து வசித்துவரும்நாளில் மார்கழித்திங்களில் திருவாதிரைத் திருவிழாத் தொடங்கிற்று. அப் பத்துநாட்களில் திருவெம்பாவை தவிர ஏனைய திருமுறைகள் ஓதுதற்கில்லாமையால் திருத்தொண்டர் பெயர்களை நாள்தோறும் மந்திரமாக ஓதுவார் தடையுற்றிருத்தலைக் கண்டு, அவர்கள் பெயர்களை ஓதுதற்பொருட்டு, 'திருத்தோண்டர் திருநாமக் கோவை' என்ற நூலை இயற்றியருளினர்.

பின்னர்த் திருமுல்லைவாயிலை அடைந்து, வணங்கி, 'வடதிருமுல்லைவாயில் அந்தாதியையும்', அதற்கு அருகிலுள்ள குளத்தூருக்குச் சென்று அங்கு எழுந்தருளியுள்ள சோமேசர் மீது, 'குளத்தூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி', 'சோமேசர் முதுமோழி வெண்பா' என்னும் நூல்களோடு, அங்குள்ள அம்மையார்மீது அமுதாம்பிகை பிள்ளைத் தமிழையும், இளங்காடு என்னும் திருப்பதிக்குச் சென்று, 'இளசைப்

பதிற்றுப்பத் தந்தாதியையும் பாடி, மீண்டு காஞ்சிக்கு வந்து சேர்ந்தனர்.

காஞ்சியில் தமது மாணாக்கர்களுடன் வாழுங்கால் கம்பர் அந்தாதி, திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு என்னும் நூல்களை இயற்றினர். காஞ்சியிலுள்ள பெரியார்கள் வேண்டுகோளுக்கு இசைந்து வடமொழியிலுள்ள காஞ்சிப் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்தருளினர்.

சுவாமிகள் தாம் மொழிபெயர்த்தருளிய காஞ்சிப்புராணத்தைக் காஞ்சியில் பல புலவர்கள் குழுமியுள்ள பேரவையில் தமது மாணவர்களுடன் இருந்து அரங்கேற்றுங்கால், அப்புலவர்களுட் பலர், இப்புராணத்துள் கடவுள்வாழ்த்தில் முதற்கண் திருவேகம்பமுடையார் வணக்கத்தைக்கூறாது திருச்சிற்றம்பலமுடையார் வணக்கத்தைக் கூறியது பொருந்தாது' என மறுத்தனர். ஆசிரியர் அவர்கட்கு அறிவுறுத்தவேண்டி, அத்தல ஓதுவாரைக் காஞ்சித் தேவாரத்தைப் பாடும்படி சொல்லினர். அவர் முதலில் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்லித் தேவாரம்பாடத் தொடங்கினர். அருகிலிருந்த சுவாமிகளது முதல் மாணவராகிய கச்சியப்ப முனிவர் ஓதுவாரைத் தடுத்துப் புலவர்களை நோக்கி, 'இவர் இத்தலத்திற்கேற்பப் 'பிருதிவியம்பலம்' என்று சொல்லித் தொடங்காமல் 'திருச்சிற்றம்பலம்' என்று தொடங்குகின்றார். இது பொருந்துமோ?' என்று கேட்டனர். புலவர்கள் நாணமுற்றுத் தாம் எண்ணியது தவறென்று உணர்ந்தனர். பின்பு, புராணத்தை இனிது அரங்கேற்றினர் என்ப.

சுவாமிகள் காஞ்சிபுரத்தில் தங்கியிருந்த காலத்தில், சுவாமிகளையும் கச்சியப்ப முனிவர் முதலியமாணாக்கர்களையும் வேண்டுவனவற்றைச்செய்து, பொருளாலும் பணியாலும் பெரிதும் உபகரித்து இனிதிருக்கச் செய்தவர் பிள்ளையார் பாளையம் மணியப்ப முதலியாராவர். காஞ்சிப்புராணம் இயற்றியதும் அவர்வேண்டுகோளின்படியேயென அப்புராணத்துள், 'பொருவில் கச்சியம்புராணம்' என்னும் செய்யுளில் சுவாமிகள் அருளிச்செய்தனரெனவும், அவர் அடியேன் பெயர் அதன்கண் வேண்டுவதில்லை எனக் கூறியதால், அதனை வேறுவகையாக அமைத்தனரெனவும் கூறுவர். இன்னும் சுவாமிகள் காஞ்சியில் இருந்தபோது நிகழ்ந்த வேறுசில வரலாறுகளும் கர்ண பரம்பரையாகக் காஞ்சிபுரத்தில் வழங்குகின்றன.

சுவாமிகள் புராணத்தை அரங்கேற்றிக் காஞ்சியில் வாழுங்கால் தொட்டிக்கலைப் பெருஞ்செல்வமுடையாராகிய 'கேசவ முதலியார்' என்பவர் காஞ்சிபுரத்துக்கு வந்து, சுவாமிகளை வணங்கித் 'தம தூருக்கு வந்து சிலகாலம் இருத்தல் வேண்டும்' என்று வேண்டினர். சுவாமிகள் அவ்வேண்டுகோளுக்கிணங்கி மாணாக்கர்களுடன் தொட்டிக் கலைக்குச் சென்று சின்னாள் வசித்திருந்தனர். அப்பொழுது கேசவ முதலியார் விருப்பத்தின்படி அங்கு எழுந்தருளியிருக்கும் சிதம்பரேசுரர் மீது 'கலைசைப் பதிற்றுப்பத் தந்தாதி'யும், அவ்வூர்ப் பிள்ளையார் மீது 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமி'ழும் பாடி அரங்கேற்றினர்.

சின்னாட்களுக்குப் பிறகு திருவாவடுதுறைக்குச் சென்று ஞானாசிரியரை வணங்கிக்கொண்டு, அடியார்களோடு அளவளாவி மகிழ்ந்திருந்து, கி. பி 1785க்குச் சரியான மெய்கண்டான் யாண்டு 562, சாலிவாகன சகாத்தம் 1708 விசுவாவசு ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் வைகல் ஞாயிற்றுக்கிழமை ஆயிலியநாள் கூடிய தினத்தில் பகற்பொழுதில் இறைவன் திருவடி நீழலை எய்தினர்.

---

## ஆசிரியர் இயற்றியுள்ள நூல்கள்

### இலக்கணம்

க. தொல்காப்பியச் சூத்திர விருத்தி

உ. சங்கர நமச்சிவாயப் புலவர் எழுதிய நன்னூல் விருத்தியுரைத் திருத்தம்.

### இலக்கியம்

க. அகிலாண்டேசுவரி பதிகம்

உ. இளசைப் பதிற்றுப்பத் தந்தாதி

ங. கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம்

ச. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்

ரு. கலைசைப் பதிற்றுப்பத் தந்தாதி

சு. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

எ. குளத்தூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி

அ. சோமேசர் முதுமொழி வெண்பா

கூ. திருத்தொண்டர் திருநாமக் கோவை

கo. திருமுல்லைவாயில் அந்தாதி

௧௧. திருவேகம்பர் அந்தாதி
௧௨. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு
௧௩. பஞ்சாக்கர தேசிகர் மாலை

மொழிபெயர்ப்பு

௧. காஞ்சிப் புராணம்
௨. சித்தாந்தப் பிரகாசிகை
௩. சிவதத்துவ விவேகம்
௪. சுலோக பஞ்சகம்
௫. தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீயம்

சமயம்

௧. சிவஞானசித்தியார் பொழிப்புரை (சுபக்கம்)
௨. சிவஞானபோதச் சிற்றுரை
௩. சிவஞான மாபாடியம்

கண்டனம்

௧. இலக்கண விளக்கச் சூறாவளி
௨. 'எடுத்து' என்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம்
௩. 'என்னையிப்பவத்தில்' என்னும் செய்யுட் சிவசமவாத உரை மறுப்பு
௪. கம்பராமாயண முதற்செய்யுள் சங்கோத்தர விருத்தி
௫. சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம்
௬. சிவசமவாத உரை மறுப்பு
௭. தனிச்செய்யுளுரை

ஆசிரியரது மாணவர்கள்

௧. திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர்
௨. தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர்
௩. காஞ்சிச் சிதம்பர முனிவர்
௪. இலக்கணம் சிதம்பரநாத முனிவர்
௫. காஞ்சி முத்துக்குமார தேசிகர்
௬. காஞ்சிச் சரவணபத்தர்
௭. இராமநாதபுரம் சோமசுந்தரப் பிள்ளை
௮. திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார்
௯. காவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார்
௧0. கடம்பர் கோவில் கலியாணசுந்தர உபாத்தியாயர்

மற்றும் இருவர் சிறந்தவராவர். மற்றும் பலமாணவர்கள் இருந்தார்கள்.

சிவஞான சுவாமிகள் சேவடி வாழ்க.

---

# படல அட்டவணை

# மேற்கோட் குறிப்பு அட்டவணை

---

அகம் - அகநானூறு.
அருணைக்கல - அருணைக் கலம்பகம்.
ஆசார - ஆசாரக் கோவை.
கந்த - கந்த புராணம்.
அவைபுகு - அவை புகுபடலம்.
தட்ச கா - தட்ச காண்டம்.
மகே. கா - மகேந்திர காண்டம்.
கந்தர் அனு - கந்தர் அனுபூதி.
கலி - கலித்தொகை.
குறள் - திருக்குறள்.
சித்தி - சிவஞான சித்தியார்.
சூ - சூத்திரம்.
செ, செய் - செய்யுள்.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிவஞா - சிவஞான போதம்.
அதி - அதிகரணம்.
சூ - சூத்திரம்.
சிவப் - சிவப்பிரகாசம்.
திருக்கோ - திருக்கோவையார்.
திரு. ப - திருவருட்பயன்.
திருப்பு - திருப்புகழ்.
திருமந் - திருமந்திரம்.
திருமு - திருமுறை.
பதி - பதிகம்.
திருமுரு - திருமுருகாற்றுப்படை.
திருவா - திருவாசகம்.
அண் - திருவண்டப் பகுதி.
அச் - அச்சப் பத்து.
அம் - திருவம்மானை.
அருட் - அருட் பத்து.
அற் - அற்புதப் பத்து.
குழை - குழைத்த பத்து.
சிவபு - சிவபுராணம்.
திருச்சா - திருச்சாழல்.
திருவெம் - திருவெம்பாவை.
நீத் - நீத்தல் விண்ணப்பம்.
திருவிளை-திருவிளையாடற் புராணம்.
வாத - வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்.
வெள்ளை - வெள்ளையானை சாபந்தீர்த்த படலம்.
தொல் - தொல்காப்பியம்.
எழுத்து - எழுத்ததிகாரம்.
சொல் - சொல்லதிகாரம்.
பொருள் - பொருளதிகாரம்.
நல் - நல்வழி.
நாலடி - நாலடியார்.
பு-வெ - புறப்பொருள் வெண்பா மாலை.
புறம் - புறநானூறு.
பெரிய - பெரிய புராணம்.
எறி - எறிபத்த நாயனார் புராணம்.
கண் - கண்ணப்ப நாயனார் புராணம்.
ஞா - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம்.
திருக் - திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம்.
நாவு - திருநாவுக்கரசு நாயனார் புராணம்.
மனுநீ - மனுநீதி கண்ட புராணம்.
மெய்ப் - மெய்ப்பொருள் நாயனார் புராணம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை ஆதீனம்

**சிவஞான சுவாமிகள்**

அருளிச்செய்த

# காஞ்சிப் புராணம்

## பாயிரம்

### காப்பு

*கலிநிலைத் துறை*

இருகவுள் துளை* வாக்குகார்க் கடங்கள் இங் குலிகக்
குருநி றத்திழி தோற்றம்முன் குலாய்த்தவழ்ந் தேறிப்
பரிதி மார்பினில் சமனொடு காளிந்தி பயிலுந்
திருநி கர்த்தசீர் ஐங்கரக் களிற்றினைச் சேர்வாம். க

### தல விநாயகர்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

விகட சக்கர ஆரணந் தொடர்வரும் வித்தக முகில்வீற
விகட சக்கர விந்தமன் னவன்றனக் கருளுமெய்த் தலைவாகு
விகட சக்கர வாகமென் முலையுமை கான்முளை என்னுச்சே
விகட சக்கர ரெந்திர மெனச்சுழல் வெம்பவக் கடல்நெஞ்சே. உ

---

க. கவுள் - கன்னம், காது. வாக்கு - ஊற்றுகின்ற. கடம் - மதநீர். இங்குலிகம் - சாதிலிங்கம்; சிவப்புமாம். குரு - நிறம். நிறம் - மார்பு. இழி - ஒழுகுகின்ற. குலாய் - மகிழ்ந்து. சமனொடு காளிந்தி - இயமனும் காளிந்தி என்பவளும். இவ்விருவரும் சூரியனுடைய மக்கள் என்ப. * 'கவுள் தொளை' எனவும் பாடம்.

உ. முகில் வீறு அவி கட - மேகத்தின் பெருமையைப் போக்கிய மதநீரை உடையவனே. சக்கு அரவிந்தம் அன்னவன் - கண்கள் தாமரை மலர் போன்றவன், திருமால். குவி கட சக்கரவாக - குவிந்த, குடமும் சக்கரவாகப் புள்ளும் போன்ற. கான்முளை - புதல்வன். சேவி - வணங்கு. கட - தாண்டு.

# கடவுள் வாழ்த்து

சபா நாயகர்

ஷை வேறு

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும் மறைக்கோவுந் தழல்கால் சூலம், அங்கேந்தும் அம்மானுந் தத்தமது தொழில்தலைநின் றாற்றச் செய்தோர், பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப இருமுனிவர் பணிந்து போற்றக், கொங்கேந்து மணிமன்றுள் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம். க

திருவேகம்ப நாதர்

தணந்தபெருந் துயர்க்கடல்மீக் கூர்தலினுன் மலைபயந்த தரள மூரற், கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந் தரியாமல் இடையே கம்பை, அணங்கினைத்தா தெனவிடுத்து வலிந்திறுகத் தழீஇக் கொள்ள அமையாக் காதல், மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற் பெருமானை வணக்கஞ் செய்வாம். உ

காமாட்சி யம்மையார்

ஊன்பிலிற்று மழுவாளி கலவிதனில் ஒண்ணுதென் றோர்ந்து நஞ்சந், தான்பிலிற்றும் பாப்பணியை நீப்பவுங்கார் வண்டினங்கள்

---

சக்கரர் எந்திரம் - குயவரது சக்கரம். சுழல் கடல் - சுழலுதற்கு இடமாகிய கடல். நெஞ்சே 'விகட சக்கர, வித்தக, கட, தலைவா, கான்முளை' என்றுச் சேவி; அதன் பயனாகப் பவக்கடல் கட என்க.

க. கால் - கக்குகின்ற. சூலம் ஏந்தும் அம்மான் - உருத்திரமூர்த்தி. கொங்கு - நறுமணம். மணி - அழகு. குனித்தல் - நடித்தல். இதனுள் 'சிவபெருமான் மும்மூர்த்திகட்கு அப்பாற்பட்ட முழுமுதற் கடவுள்' என்னும் சைவசித்தாந்த உண்மை கூறப்பட்டிருத்தல் காண்க.

உ. தணந்த - பிரிந்த. மீக்கூர்தல் - மேன்மேல் மிகுதல். தரளமூரல் - முத்துப் போன்ற பல். கணங்குழை - பலவாய்த் திரண்ட காதணி. தரியாமல் - பொறாமல். அமையாக் காதல் - அடங்காத காதலால். குறி - (வளை, தனங்களின்) தழும்பு. இவ்வரலாற்றை, இப்புராணம் தழுவக் குழைந்த படலத்திற் காண்க.

ந. பிலிற்றுதல் - சிந்துதல். பாம்பு + அணி = பாப்பணி. ததைந்து மூச - நெருங்கி மொய்க்க. கடுக்கைத் தெரியல் - கொன்றை மாலை. கான் - வாசனை.

தனைந்து மூசத், தேன்பிலிற்று நறுங்கடுக்கைத் தெரியலைப்பாம் பெனமருண்டத் தெரியல் நாறுங், கான்பிலிற்றத் தெருண்டலை யுங் காமக்கோட் டத்துமையைக் கருத்துள் வைப்பாம். ௩

கருக்காமக் கோட்டிமிர வினையனைத்தும் ஒருங்கெய்திக் கலகஞ் செய்யுந், தருக்காமக் கோட்டியெலாம் அறஎறிந்தாம் இனிஎன்றும் தகைசால் அன்பு, சுருக்காமக் கோட்டினைச்சே யரைகரங்கொண் டார்க்குழலைச் சுவடு நல்குந், திருக்காமக் கோட்டியம்மை சேவடிப் போ தெப்போதுஞ் சிந்திப் பாமால். ௪

விகடசக்கர விநாயகக் கடவுள்

விழிமலர்ப்பூ சனையுஞற்றித் திருநெடுமால் பெறுமாழி மீள வாங்கி, வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி முடைநாற்றம் மாறு மாற்றால், பொழிமதநீர் விரையேற்றி விகடநடப் பூசை கொண்டு புதிதா நல்கிப், பழிதபுதன் தாதையினும் புகழ்படைத்த மதமாவைப் பணிதல் செய்வாம். ௫

குமாரக் கடவுள்

முருகோட்டந் தாப்பாயும் மும்மதமும் ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும், ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு முதுகளிறு உல

---

௪. கரு காம கோள் திமிர வினை - பிறவியைத் தருகின்ற அவாவாகிய தீமையை உண்டாக்குகின்ற இருள்மலங் காரணமாக வரும் இருவினைகள். "இருள்சேர் இருவினை" (குறள் - ௫.) என்றதுங் காண்க. தருக்கு ஆம் - செருக்குடையனவாகும் (ஆதலால்.) அக்கோட்டி - அந்தக் கூட்டங்கள். சுருக்காம் - சுருக்கமாட்டோம்; பெருக்குவோம் என்றபடி. அக்கு சேயரை - அக்குமணியைச் சிவந்த இடையிலும், ஒட்டினை கரம் கொண்டார் - தலை ஓட்டினைக் கையிலும் கொண்ட சிவபெருமான். அக்கு என்பதனைச் சங்கு மணி என்பர். "அக்கரை யார்ப்பர் போலும் ஆவடு துறையனாரே" என்று திருமுறையுங் கூறுகின்றது. (திருமு. ௪. பதி. ௫௯-௯.) நல்கும் - கொடுத்த. காமக்கோட்டி - காமகோடி பீடம். இச்செய்யுளைப் பலவாறு கண்ணழித்தும், கொண்டு கூட்டியும் பொருள் கூறுவர்.

௫. உஞற்றி - செய்து. ஆழி - சக்கரம். மெய் - உடல். குருதி - இரத்தம். முடை - புலால். விரை - நறுமணம். தபு - நீக்குகின்ற. திருமால் சக்கரம் பெற்ற வரலாற்றைத் திருமாற் பேற்றுப் படலத்திலும், பிள்ளையார் அதனைப் புதிதாக நல்கிய வரலாற்றை விடுவச்சேனைப் படலத்திலும் இப்புராணத்திற் காண்க. இது கடவுள் வாழ்த்து முறையிற் கூறிய விநாயக வணக்கம்.

வக் காட்டிப், பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத் தினைப் புனத்துப் பாண்மேற் கொண்டு, குருகோட்டும் பெடைமணந்த குமரகோட் டத்தடிகள் குலத்தாள் போற்றி. ௬

### வயிரவக் கடவுள்

ஷை வேறு

"எளியரை வலியர் வாட்டின் வலியரை இருநீர் வைப்பின்
அளியறத் தெய்வம் வாட்டும்" எனுமுரைக் கமைய வன்றே
தெளியுமா வலியைச் செற்றோற் செருத்துரிக் கவயம் போர்த்த
வளியுளர் கச்சி காவல் * வயிரவர்க் கன்பு செய்வாம். ௭

### திருநந்தி தேவர்

அங்கணன் கயிலை காக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு
நங்குரு மரபிற் கெல்லாம் முதற்குரு நாத னாகிப்
பங்கயத் துளவம் நாறும் வேத்திரப் படைபொ றுத்த
செங்கைஎம் பெருமான் நந்தி சீரடிக் கமலம் போற்றி. ௮

---

௬. முருகு - நறுமணம். ஒட்டந்தர-விச. மூரிவில் கோட்டும் - ஒடிதலினின்றும் மாறுபடுத்தப்பட்ட, ஒடிக்காத. இதற்கு, 'பெரிய வில்லை வளைக்கும்' என்றும், 'சிவபெருமானது பெரிய வில்லாகிய மேரு மலையில் பாரதத்தை எழுதிய' என்றும் பொருள் கூறுப. அவர், மூரி என்பது குறுகியதாகக் கொள்வர். ஒட்டநறை - இதழூறலாகிய தேன். வேட்டு - விரும்பி. பைங்கோடு - பசிய மலைப்பக்கம்; ஆகுபெயர். குருகு-பறவை. பெடை - பறவைப் பெண்; வள்ளியம்மையாருக்கு உவமையாதற்குரிய மயில், அன்னம் முதலியவற்றுள் ஏற்பனகொள்க. குலம்-மேன்மை 'மும்மதமும் ஊற்றெடுப்ப'என்றது, பிள்ளையார்க்கு மும்மதம் உபசாரமாதல் குறித்து நின்றது. புராண வழக்குக்கு ஒவ்வாமையின் அதனை வெளிப்படையாகக் கூறாதொழிந்தார். எனவே, உபசாரமாகிய மும்மதமும், ஒரு கோடும் இளமையும் உடைய களிற்றை, ஊற்றெடுத்துப் பாயும் மும்மதமும், இருகோடும், முதுமையும் உடைய களிறாகக் காட்டினார் என்னும் நயந்தோன்றக் கூறியவாறும். குருகோட்டும் பெடையை, ஒட்ட நறை வேட்டு, ஒரு கோட்டு மழகளிற்றை, மும்மதமும் ஊற்றெடுப்ப, இருகோட்டு முதுகளிறாக் காட்டி மணந்த அடிகள் எனக் கொண்டு கூட்டுக.

௭. உரை - பழமொழி. கவயம் (கவசம்) - போர்வை. வளி - காற்று. உளர் - சஞ்சரிக்கின்ற. * 'கச்சிக் காவல்' எனவும் பாடம்.

௮. அகம்பு அடித்தொழின்மை - உள் வேலை செய்யும் அடிமைத் தொழிற்றன்மை. வேத்திரம்-பிரம்பு. பொறுத்த-தாங்கிய. 'பங்கயம் துளவம்

அகத்திய முனிவர்

காசியி னின்றும் போந்து கம்பர்தாம் அருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமேல்
ஆசிலாத் தமிழ்ப ரப்பி அருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினன் மலய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி. கூ

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர்

ஷை வேறு

பரசமய கோளரியைப் பாலறு வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த, சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேய மெல்லாங், குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங் குலதீபத்தை, விரவியெமை ஆளுடைய வென்றிமழ விளங்களிற்றை விரும்பி வாழ்வாம். க0

திருநாவுக்கரசு நாயனர்

இடையறுப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவா ரத்திண், படையறுத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும், நடையறுப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடல், தோடையறுச் சேவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம். கக

---

நாறும்' என்றது பிரம விட்டுணுக்களை அடிப்பதைக் காட்டும் குறிப்பு மொழி.

கூ. குரவு - ஆசிரியத் தன்மை. தேசு - ஒளி, ஞானம். இவ்வரலாற்றை இப்புராணம் தழுவக் குழைந்த படலத்தில் கஅ௫ முதல் உசஎ வரையிலு முள்ள செய்யுட்களால் அறிக.

க0. பரசமயம் - வேற்றுச் சமயம். கோளரி - சிங்கம். சிங்கம், தன்னை வெல்லக் கருதிய வேற்று விலங்குகளைத் தனது பெருவலியால் வென்று தனது ஆண்மையை நிறுத்தி விலங்கரசாய் நிற்றல்போல, ஆளுடைய பிள்ளையார், சிவநெறியை அழிக்கக் கருதிய வேற்றுச் சமயிகளைத் திருவருளால் வென்று, சிவநெறியை நிலைநாட்டிய பரமாசாரியராகலின், பரசமய கோளரியை எனவும், அம்மையார் அளித்த சிவஞானப் பாலானது எக்காலும் அருட்செம் பாடலாகத் தமது திருவாயினின்றும் நீங்காதிருந்தமையால், பாலறு வாயனை எனவும் கூறினர். பழனம்-வயல்கள் சிரபுரம் - சீகாழி. குரவையிட - பேரொலி செய்யும்படி. (பாடி) ஆனந்தக் கூத்தாட எனவுமாம். தமிழ் வேதம்-தமிழாலாகிய வேதம், தேவாரம்,

சுந்தர மூர்த்தி நாயனார்

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட உவனைக் கொண்டே, இருமணத்தைக் கொண்டருளிப்பணிகொண்ட வல்லாளன் எல்லாம் உய்யப், பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகை விரித்த பேரருளின் பெருமாள் என்றுந், திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள் எமதுகுல தெய்வ மாமால். கஉ

மாணிக்க வாசக சுவாமிகள்

பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும் பெருங்கருணைப் பெற்றி நோக்கிக், கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத் துரியநிலை கடந்து போந்து, திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந், திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடிகளடியிணைகள் போற்றி. கங

அறுபத்து மூவர்

கலி விருத்தம்

தத்து மூதெயில் மூன்றுந் தழலெழ
முத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேர் அறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம். கச

சேக்கிழார் நாயனார்

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழாரடி சென்னி யிருத்துவாம் கரு

கக. இதற்கு 'மார்பாரப் பொழி கண்ணீர்" (பெரிய. நாவு, உஉரு) என்னும் அருள்மொழி மேற்கோள். 'இருவிழியும்' எனவும் பாடம்.

கஉ. உவன் - சிவ பெருமான்; சுட்டுப் பெயர். வல் வழக்கு - வலியாவிடும் வழக்கு. மறைப் பெருமாள் - மறைகளின் பொருளாகிய அறம் முதலிய நான்கனையும் விளக்கிய அருட்பேராசிரியர்.

கங. போந்து - அதீத நிலையை அடைந்து. தேறல்-தேன். தேக்கி - நிறைந்து. செம்மாந்து - இறுமாந்து. இறுமாந்தது திருவருள் கைகூடப் பெற்ற மகிழ்ச்சியாலென்க.

கச. நிராமயன்-(மல) நோயில்லாதவன். மூரல் முகிழ்த்த - பற்களைச் சிறிது தோன்றச் செய்த, புன்னகை புரிந்த.

கரு. தூக்குசீர் - உயர்த்திக் கூறப்படும் புகழ். பாக்கியம் - புண்ணியம்,

திருக்கூட்டத்தார்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும் பிழையே யன்றி, வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த வழிதேறி அதீதவாழ்வில், போயண்மி அஞ்செழுத்தும், திருநீறும் கண்டிகையும் பொருளாக் கொண்ட, நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெரும்பேறு நான்பெற் றேனால். கசு

பஞ்சாக்கர தேசிகர்

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய், பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானு வாகிக், குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ் குரு நமச்சி வாய தேவன், சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி தழைக மாதோ. கஎ

பின்வேலப்ப தேசிகர்

எவ்வெவர்*கோட் படுபொருளும் அஞ்செழுத்தின் அடக்கிஅவற் றியல்பு காட்டி, மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்குமுறை ஓது முறை விளங்கத் தேற்றி, அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச், சிவ போகத் தழுத்தி நாயேன், செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசி கன்தாள் சென்னி சேர்ப்பாம். கஅ

---

கசு. பேய், ஆவேசங் கொண்டு பிதற்றலுக்கு உவமை. பிணக்கு - மாறுபாடு. வாய் - உண்மை. அண்மி - அடைந்து. இது திருத்தொண்டத் தொகையுட் பொதுப்படக் கூறப்பட்ட தொகையடியார்களுள் அடங்குதற்குரிய திருக்கூட்டத்தினரை வழுத்தியது.

கஎ. கயிலாய பரம்பரையில் (வந்த) மெய்கண்டான் என்க. பானு-சூரியன். சயிலாதி - கைலாயம், சிலாதரர் புத்திரர் என்பதன் தத்திதாந்தமெனக்கொண்டு நந்தி தேவர் என்பாரும் உளர். சந்ததிக்குப் பானுவென்றதை விளக்குதற்குச் 'சயிலாதி மரபுடையோன்' என்றார்.

கஅ. எவ்வெவர் கோட்படு பொருளும் - எல்லாச் சமயத்தாராலுங் கொள்ளப்படும் பொருள்களும், காட்டி என்பது அடக்கி என்பதனோடும் இயையும். திருவைந்தெழுத்தின் பொருள் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களே யாதலாலும், எல்லாச் சமய நூல்களிலும் அவைகளே கூறப்படுதலாலும், எவ்வெவர் கோட்படு பொருளும் அஞ்செழுத்தினுட் பொருளாயடங்குமென்க. இதனை, ''பலகலையா கமம்வேதம் யாவையினுங் கருத்துப்

['* எவ்வெவ கோட்படு பொருளும்' எனவும் பாடம்.]

மற்றைய சிவநேசர்கள்

மறைநான்கும் பயின்றொழுகி இட்டிகளும் பலஇயற்றி மல்லல்
ஞாலத், திறவாத புகழ்படைத்தும் ஈசனிடத் தன்பிலரை எண்ணா துள்

---

பதிபசுபா சந்தெரித்தல்'' (சிவப். ௧௫.) எனவும், ''அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின் - பொருள் நூல் தெரியப்புகின்'' (திரு. ப. ௮௧) எனவும் வரும் அருள்நூலுரையா லுணர்க. அவற்றியல்பு-அஞ்செழுத்துக்களின் பொருளாகிய முப்பொருள்களின் இயல்புகள். அஞ்சவத்தை-சாக்கிரம் முதலியன. கேவல சகல சுத்தம் என்னும் முத்திறத்து அஞ்சவத்தையுள் இவை சுத்தத்தில் நிகழ்வன என்பதறிவித்தற்கு மெய்வகை என விசேடிக்கப்பட்டது. அவத்தையினும் என்புழி, உம்மை முற்றோடு இறந்தது தழுவிய எச்சப்பொருட்டு. நிற்குமுறையாவது, ஆன்மாத் தன் பக்குவத்திற்கேற்பப் பாசத்தை முன்னிட்டும், பாசத்தோடு கூடிய வழியுந் திருவருளை முன்னிட்டும், பாசத்தினீங்கித் திருவருளே பற்றாகக் கொண்டும் இவை முதலாகச் சிவத்தோடு கூடி நிற்கும்முறைகள். ஓதுமுறையாவது, அவற்றிற்குச் சாதனமாகிய திருவைந்தெழுத்தைத் தூலம் சூக்குமம் முதலிய பேதங்களில் அவ்வந் நிலைக்கேற்ற வாற்றால் உச்சரிக்கும் முறைகள். இதனால், ஆன்மாவின் பக்குவத்திற்கேற்ப நிற்குமுறையும் ஓதுமுறையும் பலவகைப்படுமென்றுணர்க. அவைகளை யெல்லாம் உண்மை விளக்கம், சிவப்பிரகாசம் திருவருட்பயன் முதலிய மெய்கண்ட நூல்களிற் கண்டுணர்ந்து, குருமுகமாகத் தெளிந்துகொள்க. அப்பலவகைப்பட்ட பேதங்களுள், ஈண்டுச் சுத்தாவத்தையில் நிகழும் அஞ்சவத்தைகட்குரிய நிற்குமுறை ஓதுமுறைகளை எடுத்துக்கூறி, ஏனையவற்றை உம்மையால் தழுவிக்கொண்டார். விளங்கத் தேற்றி என்றது, நிற்குமுறையும் ஓதுமுறையுந் தம்முள் வேறாதல் வேண்டுமோ ஒன்றாதல் வேண்டுமோ என்னும் ஐயத்தை நீக்கி ஒன்றாதலே வேண்டுமெனவும், அவ்வந்நிலைக் கேற்ற ஓதுமுறைகள் இவையெனவும் நன்கு தெளிவித்து என்றவாறு. நிற்குமுறையும் ஓதுமுறையும் தம்முள் வேறாதல் கூடாதென்பதை, ஆசிரியர், திராவிடமாபாடியத்துள், 'இங்ஙனம் ஆசிரியர் மாட்டெறிந்ததூஉ முணராதார் சாதித்து நிற்குமுறை வேறே ஓதுமுறை வேறே யெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர். நிற்குமுறையும் ஓதுமுறையும் தம்முள் இயைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறு யாண்டையதென் றொழிக' எனக் கூறியதனா லுணர்க. (சிவஞா. சூ. ௯. அதி. ௧.) உள்ளீடு-உட்கிடை, பொருள். செய்வினை - ஆகாமியம்.

௧௯. இட்டி - வேள்வி. மல்லல் - வளம். புறம் ஓதல் - புறங்கூறுதல். (காணாவிடத்து இகழ்ந்துரைத்தல்) அறவாணன் - தருமவடிவினனாகிய

ளம், புறம்ஓதிக் கோலைபயின்று மதுமாந்துங் கோடும்பாவப் புலைய ரேனும், அறவாணன் திருவடிக்கீழ் அன்பினரேல் அவர்எம்மை அடிமை கோள்வார். ௧௬

நூல் செய்தற்குக் காரணம்

கலிநிலைத் துறை.

பொருவில் கச்சியம் புராணம்வண் டமிழினிற் புகலென்
றிருநி லம்புகழ் மணிமதிற் கச்சிஏ கம்பர்
திருவ ருட்குறி யான்றவர் கூறிய சிறப்பால்
உரிமை யுற்றெழும் ஆசையான் *உரைத்திட லுற்றேன். ௧

அவை யடக்கம்

மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆய வேல்அவை அருள்மய மாகும் மற் றதுபோல்
பேய னேன்பிதற் றுரையுமே கம்பர்தம் பெருமை
தூய காதையுள் ளுறுதலால் துகளறத் தோன்றும். ௧

இழித்த சொற்புணர்த் தெளியனேன் இயம்பிய கவியுங்
கழித்த ஐவகை இலக்கண வழுவுக்குக் காட்டாப்
பழித்தி டாதெடுத் தாளுவர் பல்வகைச் சுவையுங்
கொழித்த நாவின ராகிய வழுத்தபு குணத்தோர். ௨

எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோல்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட்போ லியையும்

---

இறைவன். இச் செய்யுள் "சங்கநிதி...கடவுளாரே" (திருமு. ௬. ௯௫. ௧௦.) என்னும் அருளாசிரியர் திருமொழியை மேற்கொண்டு கூறியது.

௧. அம் - சாரியை. உரிய என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. உரிமையுறுதற்கு ஆன்றவர் கூறிய சிறப்பும், உரைத்தற்கு எழும் ஆசையும் காரணமென்க. * 'ஆசையின்' எனவும், 'ஆசை கொண்டு' எனவும் பாடம்.

௧. மாயை காரிய உருக்கள் - கல், செம்பு, பொன் முதலியன. எம்பிரான் வடிவம் ஆயவேல் - எமது தலைவனாகிய சிவபெருமானது திருமேனிகளாக அமைந்தனவாயின். இதற்குப் பிறவாறு கூறுதல் பொருந்தாது. துகள் - குற்றம்,

௨. புணர்த்து - சேர்த்து. கழித்த வழு என்க. காட்டு - உதாரணம். கொழித்த - ஆராய்ந்த .

௩. எழுத்துப் போலி - போலி எழுத்துக்கள். அவை: மொழிக்கு முதற் காரண மாதலாகிய எழுத்திலக்கணம் திரம்பாது, அங்ஙனம் முதற் காரண

பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பது பற்றி
விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற் கிசைந்தேன். ௩
நெறிவ ழாஉடைமை பூசனை போல்நெறி பிறழ்ந்தோன்
எறித ருங்கலுங் கைக்கொளுங் கச்சியெம் பெருமாற்
கறிவின் மேலவர் காப்பியப் பனுவல்போல் அறிவின்
குறிபி லேன்கவிப் புன்சொலுங் கொள்வது வழக்கால். ௪

சிறப்புப் பாயிரம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

அருட்பணிக் குரிய மகேச்சுரர் முதலா நால்வருந் தருகவென் றறைய, மருட்பகை துமிக்குங் காஞ்சிமான் மியத்தை வழங்குதென் மொழியினு லுரைத்தான், கருப்பகை யிரிக்கும் ஞானமும் எனைக் கலைகளுங் கரிசறப் பயின்ற, மருப்பொழி லுடுத்த ஆவடு துறையில் வாழ் சிவஞானமா தவனே. ௧

ஆகத்திருவிருத்தம் - ௨௭.

---

மாதற்குரிய எழுத்துப்போன்று நிற்பன. அவற்றை மான், கலன் முதலிய சொற்களிற் காண்க. இச்சொற்களில் னகரம் போலியெழுத்து. செய்யுட் போலி-போலிச் செய்யுள். அவை: செய்யுளியலிற் கூறப்படும் செய்யுளிலக்கணம் நிரம்பாது, அங்ஙனம் நிரம்பிய செய்யுள் போன்று நிற்பன. அவை புன்கவிஞர்மாட்டு நிகழும். ஆசிரியர், வடமொழி தென்மொழிக் கடலை நிலை கண்டுணர்ந்த தமது நுண்மாண் நுழை புலத்தின் பயனும், எத்தகைய இலக்கண இலக்கிய சாத்திரப் பொருள்கட்கும் உறைவிடமாயும் திகழ்ந்து, கற்றோருளத்திற்குக் கழிபேரின்பம் நல்குவனவாகிய தம் சீரிய செய்யுட்களை அங்ஙனம் கூறியது, "பணியுமா மென்றும் பெருமை" (குறள். ௯௭௮.) என்றதைக் காட்டும். விழுத்த நாணினேன் - போக்கிய நாணத்தையுடையவனாய், நாணமில்லாதவனாய். 'மிகுந்த நாணத்தை யுடையவனாய்' என்று உரைப்பாரும் உளர்.

௪. நெறி-இரண்டிடத்தும் விதி மார்க்கம். வழா உடைமை-கடவாத உடைமை. வழாப் பூசனை எனவுரைக்கின், மேல் வருவனவற்றோடு இயையாமை யறிக. பிறழ்ந்தோன்-கடந்த சாக்கிய நாயனார். கடத்தற்குக் காரணம் பேரன்பு. எறிதருங்கல், புன்சொல்லுங் கொள்ளுதல் வழக்காதல் மாத்திரைக்கு எடுத்துக் காட்டப்பட்டது. வழக்கு-முறைமை. குறி-அடையாளம். குறியும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

௧. மகேச்சுரர் முதலா நால்வர் - தில்லையில், மகேச்சுரர் காப்பத் தெண்ணையிரவர், எழுநூறு திருமடத்து முதலிகள், தில்லைவாழந்தணர்

# திருநாட்டுப் படலம்

---

கலிநிலைத் துறை.

பணங்கொள் பாம்பணி கம்பனார் பனிவரை பயந்த
அணங்கி னோடென்றும் அமர்ந்தினி தாசுவீற் றிருக்கும்
உணங்க ரும்புகழ்க் காஞ்சியை அகந்தழீஇ உம்பர்
வணங்க மேவரும் பாலிநாட் டணிநலம் வகுப்பாம். ௧

மழைச் சிறப்பு

கடல்க டைந்திடச் செல்லு றாஉம் வெள்ளைமால் கடுப்பப்
படலை வெண்முகில் பரவைநீ ருழக்கிவாய் மடுத்து
விடமெ ழுந்தென மீண்டஉம் மாயனை விழைய
உடல்க றுத்துவின் நெறிப்படர்ந் தொய்யென மீண்டு. ௨

அற்றை ஞான்றுமால் கயிலையைச் சரணடைந் தாங்குப்
பொற்ற நந்தியஞ் சாரல்சூழ் பொருப்பினைக் குறுகிக்
கற்றை வார்சடைச் சுந்தரன் கடவவான் மதுரை
முற்று நான்முகி லெனவரை முழுவதும் பொதிந்து. ௩

---

மூவாயிரவர், திருத்தொண்டு செய்யும் திருப்பேர் ஏழாயிரத்துத் தொள்ளாயிரவர் என நான்கு வகையினர் உளர் என்ப. அதுபோல் மற்றைச் சிவதலங்களிலும் மகேச்சுரர், திருமடத்து முதலிகள், அந்தணர், திருத்தொண்டு செய்வார் என நான்கு வகையினர் கொள்ளப்படுதல் சம்பிரதாயம்போலும். மகேச்சுரர் என்பார் அடியவர்களும், திருத்தொண்டு செய்வார் என்பார், திருக்கோயிலில் திருத்தொண்டு செய்வாருமாதல்வேண்டும். துமிக்கும் - அழிக்கின்ற. இரிக்கும் - ஓட்டுகின்ற. கரிசு-குற்றம். கலை என்பதை ஞானமென்பதனோடுங் கூட்டுக. சிறப்புப் பாயிரத்தா லுணரப்படும் பதினொன்றும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பெறப்படுதல் காண்க.

௧. பணம்-படம். உணங்கரும் புகழ் - கெடுதலில்லாத கீர்த்தி. பாலிநாடு-தொண்டை நாடு.

௨. கடுப்ப, விழைய என்பன உவம உருபுகள். படலை - பரந்தவடிவு. பரவை-கடல். உழக்கி - அலைத்து. எழுந்தென - எழுந்ததனால்; வினையெச்சம். இது முதல் ௪0 ஆம் செய்யுள் வரையிலும் குளகம்.

௩. பொற்ற - அழகிய; பொன் என்பத னடியாகப் பிறந்த இறந்த காலப் பெயரெச்சம். சாரல்சூழ் பொற்ற நந்தியம் பொருப்பெனக் கூட்டுக. அம்சாரியை. கடவ - செலுத்த. முற்றும் - மூடிய. பொதிந்து-மறைத்து.

முரிந்த வெண்டிரைக் கருங்கடல் முகட்டினைக் குழித்து
விரிந்த வெள்ளநீர் மடுப்புழிக் கரந்துடன் மேவிக்
கரிந்தி டத்தனைச் செய்ததி வடவையின் களனைத்
தெரிந்து வில்லுமிழ் தடித்தெனத் திசைதொறுஞ் சிதறி. ௪

கான்ற அக்கனல் மீட்டடை யாவகை கருதி
வான்ற னிற்குனி சிலையெனத் தடையினை வயக்கி
என்ற நீஇனி எதிர்த்தனை யாயிடின் இன்னே
ஊன்ற னோடுயிர் குடிப்பலென் றுருமொலி எழுப்பி. ௫

அடுத்த டுத்தலை மோதுதெண் டிரைப்புனல் அளக்கர்
உடுத்த பாரில்உன் கிளையெலாம் முதலற ஒருங்கே
படுத்து நின்வலி பாற்றுவன் யானெனப் பகைமை
தொடுத்த வஞ்சினங்* கொண்டழல் மேல்அமர் தொடங்கி. ௬

விச்சை மந்திர வலியினால் வீங்குநீர் மழையை
வச்சி ரக்கணை யாக்கிமெய் வளமெனக் கருளும்
பொச்ச மில்மறை வேள்வியும் புனிதன்வந் தழலும்
எச்ச மாகமற் றெவையுமீண் டிறுகென† இயம்பி. ௭

காட்ட கங்களுங் கழைநரல் கதிர்மணிச் சிமயக்
கோட்ட கங்களுங் குளிர்புனற் கழனிசூழ் குலவு

---

திருமால் கடல் கடைந்த வரலாற்றை இப்புராணம் மணிகண்டேசப் படலத்திலும், நான்முகில் மதுரையை முற்றிய வரலாற்றைத் திருவிளையாடற் புராணம் நான்மாடக் கூடலான படலத்திலுங் காண்க.

௪. முரிந்த - வளைந்த. தன், சாதி யொருமை; மேல்வருவனவும் அவை. வில் - ஒளி. தடித்து - மின்னல்.

௫. கான்ற - கக்கிய. சிலை - வில். வயக்கி - விளங்கச்செய்து. இன்னே - இப்பொழுதே. வான்றனில், ஊன்றனோடு என்புழி வந்த தன் சாரியைகள். உரும்-இடி

௬. அளக்கர் - கடல். கிளை - சுற்றம். முதல் - வேர். படுத்து - அழித்து. பாற்றுவன் - கெடுப்பேன். வஞ்சினம் - சபதம். * 'வெஞ்சினம்' எனவும் பாடம்.

௭. விச்சை - வித்தை. மந்திர விச்சை எனமாறுக. வீங்கு - மிகுந்த. பொச்சம் - பொய். எச்சமாக - மிகுதியாக. இறுக என்பதன் ஈற்று அகரம் தொக்கது †இறுக்கெனவும், அறுக்கெனவும் பாடம்.

நாட்ட கங்களும் பரல்முரம் படுத்தெரி கடஞ்செய்
மோட்ட கங்களும் முழுவதுங் குளிர்கொளச் சொரிந்து. அ

இற்றொ ழிந்தன ஒழியமற் றெஞ்சிய எரிபோய்க்
கற்ற வேதியர் வேள்வியஞ் சாலையுட் கரப்ப
உற்ற வாகண்டு தன்சினக் கனலையும் ஒருவி
வெற்றி மாமுர செனமறைப் பேரொலி விளக்கி. கூ

தனது கீர்த்தியுந் திறற்பிர தாபமுந் தரைமேல்
அனல்செய் கோபமும் முல்லைபு மெனஎங்கும் அமைத்துப்
புனித மாம்அவை தன்னையும் பொதிந்துகொண் டென்னப்
பனிவி சும்பினிற் சிவந்துவெண் ணிறம்படைத் தன்றே. க0

அறுசீரடி யாசிரிய விருத்தம்
உடுவணி குடுமிக் கோடு பிளவுபட் டுடையப் பெய்யுங்
கொடுமழைக் காற்று தங்கட் குளிர்பெயல் மாற எண்ணி
நெடுமலை எடுத்துக் காட்டு நெட்டிதழ்க் காந்தட் கொள்ளி
விடுசுடர்க் கனலி அந்தப் புனலொடும் வீந்த தன்றே. கக

---

அ. நரல் - ஒலிக்கின்ற. சிமயம் - கொடுமுடி. முரம்பு - மேடு. அகம் நான்கும் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை நிலங்களைக் குறிக்கும்.

கூ. எஞ்சிய - மிகுதியாய் நின்ற. கரப்ப - ஒளித்துக்கொள்ள. ஒருவி - நீங்கி. ஒருவுதலென்னும் பொதுவினை, ஈண்டுப் பிறவினைக்கண் வந்தது, "ஒன்றீத்தும் - ஒருவுக ஒப்பிலார் நட்பு" (குறள். அ00.) என்புழிப் போல. மறை - வேதமுழக்கம்.

க0. கீர்த்தி - கொடுத்தலால்வரும் புகழ். பிரதாபம் - பகையை வென்றமையால்வரும் புகழ். இவையிரண்டையும் வெண்மையும் செம்மையும் உடையனவாகக் கூறுதல் நூல் வழக்கு. கோபம் - இந்திரகோபம் என்னும் ஒருவகைப் பூச்சி. இது தம்பலப்பூச்சி எனவும் பெயர் பெறும். சிவந்த நிறமுடையது. இது மழை பெய்துவிட்ட பிறகு பசும்புல் தரைகளில் காணப்படும். கோபமும் முல்லையும்,' 'சிவந்து வெண்ணிறம் படைத்தன்று' என்னுந் தொடர்களை எதிர் நிரனிறையாகக் கொள்க. பொதிந்துகொண் டென்ன - மறைத்துக் கொண்டாற்போல.

கக. உடு - விண்மீன். குடுமிக்கோடு - உச்சி மலை, கொடுமுடி. விடாமழை பெய்தால் அது நிற்பதற்குக் கொள்ளியெடுத்துக் காட்டுதல் உலக வழக்கு. கனலி - நெருப்பு. வீந்தது - அழிந்தது.

போதம்மே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல் மழைப்பெயல் மாறித் தீர்ந்துங்
காதல்செய் துறையும் புள்ளும் மாக்களுங் கவன்று நெஞ்சம்
நோதக மரங்க ளெல்லாம் நுண்துளி துவற்றும் மாதோ. கஉ

கனைபெயல் எழிலிக் கூட்டங் கலிவிசும் பகடு போழ்ந்த
நனைமுடி கந்திக் குன்றம் நளிபடப் பொழியுந் தெண்ணீர்
புனைமறை வசிட்ட மேலோன் செருத்தல்ஆன் பொழிந்த தீம்பால்
வனைபுகழ் வெள்ள மென்னத் திசைதொறும் வழிந்த மன்னோ. கங

பாலியாற்று வளம்

கண்ணகன் குடுமிக் குன்றிற் கல்லெனக் கறங்கி ஆர்த்து
விண்ணிவர் ஏணி யென்ன வியன்முடி தொடுத்து வீழுந்
தண்ணறு அருவி யெல்லாந் தலைத்தலை விரிந்து சென்று*
புண்ணியப் பாலி யாற்றிற் சேர்ந்துடன் போய மாதோ. கச

பாரிடங் குழித்து வீழும் பல்வயின் அருவி யெல்லாம்
ஓரிரும் பாலி யாற்றின் ஒருங்குசென் றணையுந் தோற்றம்
சீரிய புவனந் தோறுஞ்சிதறிய வினைக ளெல்லாம்
ஓரிடத் தொருவன் றன்பால் உடங்குசேன் றுறுதல் போலும். கரு

---

கஉ. போதம் - மெய்யுணர்வு. பண்டே - அநாதியே. புல்லிய - பற்றிய. வாதனை - வாசனை. மெய்யுணர்வு தலைப்பட்ட பின்னும் மலவாசனை தாக்கு மென்பதை, 'இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின்' (சிவஞா. சூ. சூ. அதி. ங.) என்பதனாலறிக. கவன்று - கவலையுற்று. நோதக - வருந்த. துவற்றும் - துவலை விடும், சிந்தும்.

கங. கனை - செருங்கிய. கலி - வலி. விசும்பு - ஆகாயம். அகடு - வயிறு. நனை - தேன், பூவரும்பு என்பாரும் உளர். நளிபட - குளிர்ச்சி யடைய. செருத்தல் - முலைமடி. ஆன் - காமதேனு.

கச. கண் அகல் - இடம் பரந்த. லகரம் னகரமாதல் "இனந்தவல்ல செய்யுளுட் டிரிநவும்" (தொல் - எழுத்து. சஅங) என்னும் அதிகாரப் புறனடையாற் கொள்க. னகரவீறாகக் கொள்வர் பிற்காலத்தார். 'வியல்' என்பதும் இவ்வாறே கொள்ளப்படும். தொடுத்து-முதலாக (அடிவரையிலும்). இவர் - ஏறுகின்ற. தண் அறு - குளிர்ச்சி நீங்காத. உடன் சேர்ந்து எனமாறுக ஒருங்குகூடி என்பது பொருள். *'தோன்றும்' எனவும் பாடம்.

கரு. உடங்கு - ஒருங்கு.

விலகிவீழ் அருவித் தாரை வேறுவே றாக ஓடிக்
குலநதிப் பாலி வைப்பின் ஏகமாய்க் கூடுந் தோற்றம்
அலகில்பல் வழியும் மூதூர் அணிமையின் ஒன்று மாறும்
பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும். கசு

மலைநகைத் தனைய காட்சி வயின்வயின் அருவித் தாரை
சிலையினின் றிழிந்து மண்மேல் திரண்டுசென் றணையுந் தோற்றம்
உலவையோ டிகலிச் சேடன் உயர்வரைக் குடுமி யெல்லாம்
பலதலை விரித்துப் பொத்திக் கிடந்தஅப் பான்மை போலும். கஎ

குரைபுனல் தொண்டை நாட்டைக் குறும்பெறிந் தடிப்ப டுத்துப்
புரைதப நடாத்து கென்னுப் புதுமுகி லரசன் நந்தி
வரைமிசை யிருந்து வேந்தா மணிமுடி சூட்டி உய்ப்பத்
திரைபடு பாலி வல்லே சிலையினின் றிழிந்து போந்து. கஅ

அரசுகள் சூழ்ந்து செல்ல அருங்கணி மலர்வாய் விள்ளச்
சரிகுழற் குறமின் னார்கள் பற்பல தானை வெள்ளம்
விரவிடப் பரிய காலாள் மேதகு மாக்கள் அத்தி
இருபுடை தழுவிப் போத இகல்கொடு வையம் ஊர்ந்து. கக

கசு. விலகி - தத்தி. அலகில் - அளவில்லாத.

கஎ. வயின் - இடம். சிலை - மலை. உலவை - காற்று, வாயுதேவன். இகலி - மாறுபட்டு, பகைத்து. பொத்தி - மூடி.

கஅ. குரைபுனல் - ஒலிக்கும் நீர். குறும்பு - குறுநில மன்னர்; சாதியொருமை; (கோடையாகிய) தீமை என்பது உட்கிடை. அடிப்படுத்து - ஆணைவழித்தாக்கி. புரைதப - குற்றம் நீங்க. நடாத்துக - ஆளுக; அகரத்தொகுத்தல். எடுத்துக்கொண்ட பொருட் கேற்பப் புதுமையை அரசற்கு அடையாக்குக. பாலி - பாலியாகிய இளவரசன். ஏகதேச உருவகம். வல்லே - விரைவில். முகிலரசன், 'நாட்டை எறிந்து, அடிப்படுத்து நடாத்துக' என்று, வேந்தா முடிசூட்டி உய்ப்ப என்க. மேல், கானிலத்து ஐந்திணை வளங்கூறுமுகத்தான் அகப்பொருள் கூறும் ஆசிரியர், ஈண்டு ஆற்றுவளங் கூறுமுகத்தானே புறப்பொருள் கூறப் புகுந்து, அதற் கேற்பப் பாலியாற்றை அரசனாக உருவகஞ்செய்து கொண்டு, இதுமுதல் பதின்மூன்று செய்யுட்கள் குளகமாகக் கூறி அதனை முடிக்கின்றார்.

கக. இச்செய்யுளில் சொல்லொப்புமையால் (சிலேடைவகையால்) பாலியாற்றைப் போர்க்குச் செல்லும் அரசனியல்புதோன்றக் கூறுகின்றார். அரசற்கு ஆக்குங்கால், அரசுகள் - அரசர்கள், கணி(சாதியொருமை)மலர்வாய்

அணிவகுத் தெழுந்த குன்றர் அரும்பெறற் குறிச்சி புக்கு
மணிவகை ஆரம் பூண்டு மதுக்குட விருந்து மாந்தித்
தணிவற வெளிக்கொண் டேகித் தலைத்தலை வேட்டம் போகித்
துணிபட மாக்க ளெல்லாந் தொலைத்துடன் ஈர்த்துச் சென்று. உ௦

கலி விருத்தம்

மண்டமர் மேல்கொடு வந்தனம் இன்னே
தண்டக நாட்டுறை தாபதர் நோயோர்
பெண்டிரும் நம்அரண் எகுதிர் பெட்டுடன்
றெண்டிசை யார்ப்ப இசைப்பறை சாற்றி. உக

---

வின்ன - சோதிடன் மலர்போலும் வாயைத் திறந்து கல்லோரை கூற. குற மின்னார் கள் - குறப்பெண்கள் தந்த கள்ளானது. தானைவெள்ளம் விரவிட - (வீரர்க்கு வார்த்தற்பொருட்டுச்) சேனை வெள்ளத்திற் பொருந்தியிருக்க. போர்க்குச் செல்லும் வீரர்கள் கள்ளுண்டல் உண்டு. "அறுஅ நிலைச்சாடி ஆடுறு தேறல் - மறுஅல் மழைத்தடங் கண்ணி" (பு - வெ. உ.) என்றதுங்காண்க. இவ்வாறுரையாதார்க்கு இருபொருள் தாராமையும், அரசற்கியையாமையுங் காண்க. பரிய - பருத்த. காலாள்-பதாதி. மாக்கள் - குதிரைகள். அத்தி - யானை. இகல் - பகை. வையம் ஊர்ந்து - தேர் ஏறி என்க. ஆற்றிற்கு ஆக்குங்கால், அரசுகள் - அரசமரங்கள். கணி - வேங்கை மரங்கள். மலர் வாய்வின்ன - மலர்கள் மலர. குறமின்னார்கள் - குறப் பெண்களுடைய. தானை - ஆடைகள். வெள்ளம் விரவ - வெள்ளத்திலே சேர. பரியகால் - பருத்த தூற்றையுடைய. ஆண் - ஆண் மரங்கள். மாக்கள் - மாமரங்கள். அத்தி - அத்திமரங்கள். இகல் - வலிமை. வையம் ஊர்ந்து - பூமியில் பெருக்கெடுத்து ஓடி என்க.

உ௦. அணிவகுத்து என்றதனை, மேற்கூறிய படைகளை வியூகமாகச் செய்து என அரசற்கும், தான் கொண்டு செல்லும் பொருள்களை வரிசையாகக் கூறுபடுத்தி என ஆற்றிற்கும் ஏற்க இருபொருள் கொள்க. ஒரு பொருளே கொள்ளின் ஆற்றினை அரசனாகக் கூறிச்செல்லும் இத் தொடர் இடையறவுபடும் என்க. ஏனையவை எல்லாம் தொழிற் பொதுமையிற் பொருந்தும். குறிச்சி - குறிஞ்சி நிலத்து ஊர். மாக்கள் - விலங்குகள்.

உக. மண்டு அமர் - நெருங்கிய போர். தண்டகநாடு - தொண்டைநாடு. தாபதர் - தவத்தோர். அரண் - காவலுள்ள இடம். பெட்டு - விரும்பி. இசை - (தனது) ஒலி. இதற்கு "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும் - பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித் - தென்புல வாணர்க் கருங்கட னிறுக்கும் - பொன் போற்புதல்வர்ப் பெறாஅ திரும் - எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென

இறாற்றிகி ரிப்படை தாங்கி இபக்கோ
டறாத்திறல் வெஞ்சிலை காந்தள் அரும்பு
நறாப்பயில் கோலென ஏந்திநல் வீர
மறாப்பகை மாய்த்துற வெட்சி மலைந்து. உஉ

முல்லையின் வேந்து முடித்த கரந்தை
ஒல்லை அலைத்துயர் ஆனிரை பற்றி
மெல்லிதழ் தின்று சிவந்தெழு வேய்ந்தோள்
நல்லவர் கற்பை யழித்து நடந்து. உ௩

அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" (புறம். கூ) என்னும் சான்றோர் உரை மேற்கோள். இதனுள், இசைப்பறை என்றது உருவகத்தானும், ஏகுதிர் என்று சாற்றி என்றது தற்குறிப்பேற்றத்தானும் பொருந்தும். தாபதர் முதலிய படர்க்கைப் பெயர்கள் 'நும்மரண் ஏகுதிர்' என முன்னிலை வினையான் முடிதல் "செய்யுள் மருங்கினும்" (தொல்-சொல். சுகூ௬.) என்னும் புறனடைச் சூத்திரத்தால் அமையும்.

உஉ. இறால் - தேனடை. திகிரி - சக்கரம். இபம் - யானை. நறா-மணம். அம்பிற்கு நெய் முதலியவற்றால் செயற்கை மணங் கொள்க. கோல் - அம்பு. வீரம் மறா - வீரத்தைத் தடுத்தலில்லாத (பொருந்திய) மாய்த்துற - மாய்க்க. மலைந்து - சூடி. இதனுள், இறாற்றிகிரி என்றது உருவகத்தானும், வெட்சி மலைந்து என்றது தொழிலொப்புமையானும், ஏனைய வடி வொப்புமை யானும் பொருந்தும். உவமை குறிக்கும் ஆகவென்னும் பொருளில் வந்த எனவென்னும் இடைச் சொல்லைச் சிலையென்பதனோடுங் கூட்டுக. கோடு, அரும்பு என்புழித் தொக்கு நின்ற இரண்டனுருபும், எனவென்னும் இடைச் சொற்களும் ஏந்தி என்னும் வினைகொண்டு முடிந்தன. இறால் என்புழி, இரண்டனுருபு விரித்தல் பொருந்தா தென்பதற்கு லகரங் கெடாமையும், தாங்கி என வேறு பயனிலை வந்தமையுமே சான்றாம். திகிரி தனித்ததொரு படையும், சிலையும் அம்பும் தம்முட் கூடுதலுடைய படையுமாகலின், உருவக மும் உவமையு மாக்கியும், தாங்கி ஏந்தி என வெவ்வேறு பயனிலை கொடுத்தும் பிரித்தோதினர். பகைவர் பசுக் கூட்டங்களைக் கவரச் செல் வோர் வெட்சி மாலை சூடுதல் மரபு. பூச்சூடுதலும் உரித்தென்பர்.

உ௩. முல்லை வேந்து, உருவகம். இன் அல்வழிக்கண் வந்த சாரியை. மேல், மருதத்திறை என்புழிவரும் அத்தும் அது. ஒல்லை - விரைவில். ஆன் நிரை - பசுக்கூட்டம். இதழ் - உதடும், பூவிதழும். தின்று - அதுக்குதலால், அழித்தமையால். சிவந்து - இதழ்சிவந்து, தான் சிவந்து. நல்லவர் கற்பு - நல்ல மகளிர்களுடைய கற்பும், அவர்கள் வளர்த்த முல்லையும். பகைவர்

வஞ்சி மலைந்தழல் பாலையை வாட்டி
அஞ்சி யிடாதுதன் ஆணை யிருத்தி
எஞ்ச லுறுமரு தத்திறை யோடும்
வெஞ்சம ரேற்றுழி ஞைத்துணர் வேய்ந்து. உச

தடுத்தெதிர் நின்ற தடங்கரை யெல்லாம்
படுத்து மதன்பயில் பாசறை வீட்டி
மடுக்குளம் ஏரியின் வாட்ட மனைத்துங்
கெடுத்தன மென்று தழீஇக்கிளர் வுற்று. உரு

---

கொண்ட ஆனிரையை மீட்கச் செல்வோர் கரந்தைமாலை சூடுதல் மரபு. கரந்தைத்திணை நொச்சித்திணைகட்குத் தொல்காப்பியத்துள் எடுத்துக் கூறிய விதியின்றாயினும், "வெட்சியுங் கரந்தையுந் தம்முண்மாறே" எனவும், "உழிஞையு நொச்சியுந் தம்முண்மாறே" எனவும் பன்னிரு படலத்துக் கூறப்பட்டனவாகலின், தொல்காப்பியனார் கரந்தையை வெட்சியிலும், நொச்சியை உழிஞையிலும் அடக்கிக் கூறினாரெனத் தொல்காப்பியமும் பன்னிரு படலமும் தம்முள் முரணாதவாறு கோடலே ஆசிரியர் கருத்தென்பது, 'இஃதறியாதார் தொல்காப்பியமும் பன்னிருபடலமும் தம்முள் முரணுவனவாகக் கருதி, அவற்றுள் ஒரு நூலையே பற்றி மற்றொன்றனை இகழ்வர்' எனத் தமது திராவிடமாபாடியத்துக் கூறினமைபால் விளங்குதலின், அங்ஙனங்கொண்டு அக்கரந்தை நொச்சிகளையுங் கூறினார் என்க. இதனுள், 'மெல்லிதழ் தின்று சிவந்து' என்பதும், 'நல்லவர் கற்பு' என்பதும் சொல்லொப்புமையானும், ஏனைய தொழிலொப்புமையானும் பொருந்தும். ஆனிரை பற்றி, அலைத்து...அழித்து என்பனவற்றால் வெட்சித்திணையுள் ஆகோள், ஊர்கொலைத் துறைகள் கூறினார். கற்பை யழித்தல் வெட்சிக்குச் சிறப்பின்றாகலின் பின்னர்க் கூறினார்.

உச. அழல் பாலை, வினைத் தொகை. எஞ்சலுறு - வளங் குறைபாத வென மருதத்திற்கும், தோல்வியுறாத என இறைக்கும் அடையாக்குக. துணர் - கொத்து. பாலையை வாட்டி தன் ஆணை இருத்தி என்றதற்குப் பாலை நிலத்தின் வெப்பத்தைக் கெடுத்து தண்ணீரைத் தேங்கச் செய்து என்பது கருத்து. இச்செய்யுள் தொழிலொப்புமையாற் பொருந்தும். வேற்றரசர் புலங் கோடற்குச் செல்வோர் வஞ்சிமாலை சூடுதல் மரபு. இதனுள் மலைந்து, வாட்டி, இருத்தி என்பனவற்றால் வஞ்சித்திணையுள் இயங்குபடை யரவம், அடுத்தூர்ந்தட்ட கொற்றம், வென்றோர் விளக்கமென்னுந் துறைகள் கூறினார்.

உரு. தடங்கரை - பெரிய அணைகள். மன்மதன் பாசறை - பூஞ்சோலை.

வீறி யடாவகை வெஞ்சிறை கோலித்
தூறிடு மள்ளர் தொலைந்தழி வெய்தச்
சீறி யடர்ந்து தெழித்துமுள் வேலி
கீறி வளைந்து கிடங்கினை நீங்கி. உகு

நொச்சியை முற்றிஅந் நொச்சியி னுள்ளார்
பச்சிள நொச்சி பறித்தணி யாமே
நச்சிய தும்பை நறுந்துணர் சூடி
அச்செழு மாமதில் முற்றும் அகழ்ந்து உஎ

வேறு

இடித்துவெளி செய்துநக ரெங்கணும் நுழைந்தாங்
கடுத்தமட வார்வயி றலைத்தனர் இரங்கக்
கொடுத்திடு வளங்கள்பல கொள்ளைகொடு மண்ணின்
எடுத்துவரு வெள்வரகு கொள்ளுடன் இறைத்து. உஅ

---

வீட்டி - அழித்து. கிளர்வுற்று - பொங்கி. இது தொழிலொப்புமையாற் பொருந்தும்.

உகு. சிறை - அரண், கரை. தூறிடு மள்ளர் - பழித்துப் பேசும் வீரர், மேடு இட்டுத் தடுக்கும் மள்ளர்கள். தெழித்து - அதட்டி, பேரொலி செய்து. கிடங்கு - அகழி. இது சொல்லொப்புமையுடன் தொழிலொப்புமையானும் பொருந்தும்.

உஎ. நொச்சி - மதில். பச்சிள நொச்சி, வெளிப்படை. பகைவர் முற்றிய மதிலை அழியாமற் காப்பவர் நொச்சிமாலை சூடுதல் மரபு. நச்சிய-விரும்பிய. அதிரப் பொருவார்-தும்பைமாலை சூடுதல் மரபு. நொச்சியணியாமே என்றது, வெள்ளம் நொச்சிச் செடியை அழித்துவிட்டமையால் என்க. இது தொழிலொப்புமையாற் பொருந்தும்.

உஅ. வயிறு அலைத்தனர் - வயிற்றை வருத்தியவர்களாய், வயிற்றில் அறைந்துகொண்டு. வெள்வரகு கவடியெனவும், கொள் குடைவேல் எனவும் வெண்பா மாலை உரையாசிரியர் கூறுவர். (கவடி-பலகறை,) உசஆம் செய்யுளில் "உழிஞைத்துணர் வேய்ந்து" என்பது முதல் இச்செய்யுள் காறும் புறத்துழிஞைத் திணையே கூறினர். அவற்றுள் வேய்ந்து, வீட்டி, கிளர்வுற்று, அடர்ந்து, தெழித்து, கீறி, வளைந்து, நீங்கி, என்பனவற்றால் முற்றிய முதிர்வுத்துறைப் பகுதிகளும், நொச்சியை முற்றி என்றதனால் அத்துறையும், அந்நொச்சியினுள்ளார் பச்சிள நொச்சி பறித்தணியாமே என்றதனால் அகத்தோன் வீழ்ந்த நொச்சித் துறையும், மாமதில் முற்றும் அகழ்ந்து,

வெற்றிபுனை மாலிகை மிலைச்சிஇரு பாலுஞ்
சுற்றிவரு புட்குல நிரைத்தொழுதி தன்னால்
கொற்றமிகும் ஆர்கலியை நோக்கிஅறை கூவி
எற்றுகழி நெய்தல்வழி எய்துறுத லோடும். ௨௯

பௌவம துணர்ந்துபவ ளந்தரள மாதி
வௌவுதிரை ஏந்தியெதிர் கொண்டடி வணங்கச்
செவ்விதின் உவந்துபயம் ஈந்துசின மாறிக்
கௌவியமெய் யன்பொடு கலந்துளதை யன்றே. ௩0

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தன்னடிப் படுத்து* மேலைத் தண்டக நாடு முற்றும்
முன்னுறக் கவர்ந்து கொண்ட வளத்தினும் மூவி ரட்டி

---

இடித்து, வெளி செய்து, நகர் எங்கணும் நுழைந்து என்பனவற்றால் அகமி சைக்கிவர்தற்றுறையும், கொள்ளைகொடு, வெள்வரகு கொள்ளுடன் இறைத்து என்பனவற்றால் தொகை நிலைத்துறைப் பகுதியுங் கூறினர். வெண்பா மாலை மேற்கோளாக "வெள் வரகு கொள்ளுடன் இறைத்து" என்பதனை உழுது வித்திடுதல் எனவும், மேலனவற்றுள் சில வேறுபடவும் துறை கூறுப. தும்பை நறுந்துணர் சூடி என்பது உழிஞைப் புறத்துத் தும்பை.

௨௯. வெற்றிபுனை மாலிகை - வெற்றியைப் பூண்டமைக்கு அறிகுறி யாகிய மாலை, வாகை மாலை. மிலைச்சி - சூடி. தொழுதி - பறவைக் கூட்டத்து ஒலி. கொற்றம் - வெற்றி. ஆர்கலி - கடல். அறைகூவுதல் - வலிதில் போர்க்கு அழைத்தல். இதனுள், வெற்றிபுனை மாலிகை மிலைச்சி என்றதனால் உழிஞை யிடமாக நிகழ்ந்த வாகைத்திணை கூறினர். அறைகூவி என்றது வஞ்சித்திணை யுள் இயங்குபடை யரவத்தின்பாற்படும். மிலைச்சி என்பது தொழிலொப்புமை யானும், அறைகூவி என்றது தற்குறிப்பேற்றத்தானும் பொருந்தும்.

௩0. பௌவம் - கடல். தரளம் - முத்து. வௌவு -(கரையைக்) கவர்கின்ற, திரை - அலைகளால். பயம் - பயன், நீர் என இருபொருள் கொள்க. திறை யிட்ட அரசர்க்குப் பயனளித்தல் முறை. கௌவிய - தன்னை அகப்படுத்திய, மேலிட்ட. இச்செய்யுள், வஞ்சித்திணையுள் வென்றோர் விளக்கமென்னுந் துறை

௩௧. தன் அடிப்படுத்து - தனக்குக் கீழ்ப்படுத்தி. மேலை-மேற் (௧௮ ஆம் செ.) கூறிய. முற்றும் அடிப்படுத்து எனக் கூட்டுக. முன்னுற பின் னுற என்பன ஒருசொல் நீர்மைய. புலவர்-தேவர். மூவிரட்டி என்பது மிகுதி குறித்து நின்றது. பெட்கும் ஆற்றால்-விரும்பும் வகையால் அரசு செய்து என்க. இது வாகைத்திணையுள் அரசர் பக்கம். ௨௨ ஆம் செய்யுள்

பின்னுற அளித்து வானிற் புலவரும் பெட்கு மாற்றால்
அந்நிலை உயிர்கள் ஓம்பி அரசுசெய் துறையும் பாலி. கக

"காரணப் பொருளின் தன்மை காரியத் துளதாம்" என்ன
ஆரணப் பனுவல் கூறும் அரும்பொருள் தெளியத் தேற்றும்
பேரிசைப் புவிமேல் யார்க்கும் பெட்டன பெட்ட வாறே
சீரிதிற் கொடுக்குந் தேனுத் தாவருஞ் செழுநீர்ப் பாலி. கஉ

வறுமைஉற் றுழியும் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள்
இறும்உடல் வருத்தி யேனும் ஈவதற் கொல்கார் அற்றே
தெறுகதிர் கனற்றும் வேனிற் பருவத்தும் சீர்மை குன்றா
துறுமணல் அகடு கீண்டும் ஒண்புனல் உதவும் பாலி. கக

முதல் இச்செய்யுள்காறும் கூறியவற்றால் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்னும் திணைகளும், வெட்சியின் பகுதியாகிய கரந்தை உழிஞையின் பகுதியாகிய நொச்சி யென்னும் திணைகளும் பெறப்பட்டவாறு காண்க. ஏனைய காஞ்சி, பாடாண் திணைகளும் அகத்துழிஞை, மைந்து பொருளாய தும்பை, ஏனைய வாகைகள் என்னும் இத்திணைகளும், கூறப்பட்ட திணைகளுள்ளும் பலதிறப்பட்ட துறைகளும் ஈண்டுக் கூறாதற்கோர் இயைபு விசேடமின்மையும், மற்றொன்று விரித்தலாய் முடிதற்குரிய அவற்றின் விரிவும் உணர்க. இதனுடன் புறப்பொருள் கூறிமுடித்தார். * 'தன்னடி படுத்து' எனவும் பாடம்.

கஉ. ஆரணப் பனுவல் - வேதத்திற்கு அங்க (உபாங்க)மாகிய நூல், தருக்கம். இசை - புகழ். கொடுக்கும் என்னும் அடையடுத்த அடை, தேனு பாலி இரண்டனையும் விசேடித்து நின்றது. தேனு - காமதேனு. முன்னொரு கால் காமதேனு இறைவனது வெள்விடையைக் கண்டு காமுற்றுக் கருக் கொண்டமையால், நந்திமலையில் தவஞ்செய்துகொண்டிருந்த வசிட்டர், தமது நித்திய வேள்விக்குப் பஞ்சகௌவியம் பெறாராகி, ஒரு தருப்பையை எடுத்துக் கன்றாக்கியனுப்ப, அதைக்கண்டு காமதேனு மடிசுரந்து அம்மலையிற் பொழிந்த பால் பெருக்கெடுத்து வந்த ஆறு பாலியாறு என்பது புராண வரலாறாதலால், தேனுத் தாவரும் பாலி என்றார்.

கக. ஒல்கார்-சோரார். அற்றே-அத்தன்மைத்தே. சீர்மை-புகழைத் தருந்தன்மை, கொடைக்குணம். பாலி என்புழி, இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளும் அவ்வா-றாற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு-நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும் - இல்லையென மாட்டார் இசைந்து" (நல் கூ) என்றதனை ஒப்புநோக்குக.

சொற்றஇத் தீர்த்த மேன்மை சுவைபடும் பாலோ டொக்கும்
மற்றைய தீர்த்த மெல்லாம் வார்தரு புனலோ டொக்கும்
பெற்றிமை உணர்ந்து தொல்லோர் பெயரிடப் பட்ட சீர்த்தி
பற்றிய தெனலாம் பாலிப் பெருமையார் பகருநீரார். ௩௪

## நாட்டு வளம்

### கலிநிலைத் துறை

விளம்பும் இத்தகை மணிகொழி விரிதிரைத் தரங்க
வளம்பு னற்றடம் பாலியான் வண்மைபெற் றோங்கி
உளம்ப யின்றுநாற் பொருள்களும் உஞற்றுநர்க் கிடமாய்த்
துளும்பு மேன்மையிற் பொலிந்தது தொண்டைநன் னாடு. ௩௫

செக்கர் வார்சடைச் சிவபிரான் திருவருள் செய்யத்
தக்க வாய்மையின் உயிர்க்கெலாந் தன்னிடத் திருந்து
மைக்கண் எம்பெரு மாட்டிஎண் ணான்கறம் வளர்க்குந்
தொக்க மாப்புகழ் படைத்தது தொண்டைநன் னாடு. ௩௬

பவம்வி ளைத்திடாப் பெரும்பதி யெனத்திசை போய
சிவம்வி ளைத்திடு நகரங்கள் ஏழனுஞ் சிறந்த
தவம்வி ளைத்திடு காஞ்சியைத் தன்னிடத் திருத்தி
நவம்வி ளைத்திடும் பெருமைபூண் டதுதொண்டை நாடு. ௩௭

---

௩௪. ஒக்கும் ஒக்கும் என அடுக்கிய பெயரெச்சங்கள் இரண்டும் பெற்றிமை என்னும் ஒருபெயர் கொண்டன. நீரார் - தன்மையுடையவர். உணர்ந்து பெயரிடப் பட்டது எனலாம் என்பது தற்குறிப்பேற்றம். வார்தரு - ஒழுகுகின்ற.

௩௫. இத்தகைப் பாலி என இயையும். திரைத் தரங்கம் ஒருபொருட் பன்மொழி, திரைதலுடைய தரங்கம் எனலுமாம். பொருள் அலை. நாற்பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பன. துளும்பு-மிகுந்த.

௩௬. செக்கர்-செம்மை. வார்-நீண்ட. இறைவி முப்பத்திரண்டறம் வளர்த்தமையும், அவை இன்ன என்பதும் இப்புராணம் தழுவக் குழைந்த படலம் ௧௩௮ முதல் ௧௪௧ வரையிலுள்ள செய்யுட்களாலுணர்க. தொக்க-கூடிய.

௩௭. பவம்-பிறப்பு. திசை போதற்கு வினை முதலாகிய பெயர் என்பது எஞ்சிநின்றது. சிவம் - முத்தி. முத்தி நகர் ஏழாவன:-அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பன. நவம்-புதுமை.

நானிலத்து ஐந்திணை வளம்

தரைவி ளங்கிய தண்டக நாட்டினில் தகைசால்
வரையுங் கானமும் புறம்பணைப் பழனமும் மணிநீர்த்
திரையும் வேலையு மென்னுநா னிலத்தினுள் சிறந்த
புரையில் ஐந்திணை வளஞ்சிறி தறிந்தவா புகல்வாம். ௩௮

க. குறிஞ்சி

முருக வேட்கிடு தூமம்லும் புறமுளி அகில்சந்
தூருவ ஆரமுற் பெய்துபுன் பயிர்விளைத் துவப்பார்

---

௩௮. 'தரை விளங்கிய' எழுவாய்த்தொடர். விளங்கிய என்னும் பெயரெச்சம் நாடென்னும் கருவிப் பெயர் கொண்டது. நிலவுலகம் விளங்குதற்கு ஏதுவாகிய தண்டக நாடு என்பது பொருள். வரை - மலை. கானம்-காடு. புறம்பு அணை - புறத்தே நீர்க்கரையை உடைய. பழனம் - வயல். திரையும் வேலை-அலைவீசும் கடல். மலை, காடு, வயல், கடல் என்னும் நான்கும் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களாம். புரை-குற்றம். குறிஞ்சி முதலிய நான்கனோடு பாலை என்பதனைக் கூட்டத் திணை ஐந்தாகும். பாலைக்குத் தனித்ததொரு நிலம் இல்லாமையால் 'நானிலத்து ஐந்திணை' என்றார். ''முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை என்பதோர் படிவங் கொள்ளும்'' (சிலப். காடு. ௬௪-௬௬) என்றவாறு, பாலைக்குரிய நிலம் மேற்கூறிய நானிலங்களுமாகாது, அவற்றின் வேறுமாகாது முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் மாறுபட்டுத் தம்மியல்பு கெட்டு நடுநிகர்த்ததாய் நிற்குமென்பதனை, ஆசிரியர் தொல்காப்பிய முதற் சூத்திரவிருத்தியுள் விரித்து விளக்கினமை காண்க. ஒத்த அன்புடைய தலைமக்களது இன்ப வொழுக்கங் கூறுமிடத்தன்றி, நாட்டுவளங் கூறும் இவ்விடத்துக் குறிஞ்சி முதலிய ஐந்திணை கூறற்கியைபென்னையோவெனின், திணையெனப்படுவது நிலம் பொழுது என்னும் இருவகை முதற்பொருள்களும், தெய்வம் உணா முதலிய கருப்பொருள்களும், புணர்தல் முதலிய உரிப்பொருள்களும் ஆகிய மூன்றுமே யாகலான், அவற்றுள் உரிப்பொருளாகிய புணர்தல் முதலிய இன்ப வொழுக்கங் கூறுவார்க்கும், முதற் பொருளாகிய நிலவளங் கூறுவார்க்கும் அவை காரணமாக விளையவும் உடன் கூறுதல் இன்றியமையாதவாறு காண்க. இதனால், இன்பவொழுக்கங் கூறுதல் பொருளாக வரும் ஐந்திணை அகப்பாடல்களுக்கு உரிப்பொருள் சிறந்தும், நாட்டுவளங்கூறுதல் பொருளாகவரும் ஐந்திணைப் பாடல்களுக்கு முதற்பொருள் கருப்பொருள்கள்

பெருவ ளந்துறந் தூர்தொறும் இடுபலி பேணும்
பொருவில் வாழ்க்கையர் தஞ்செயல் போன்மெனப் பொருப்பர்.

ஏறு தன்னுடல் வருத்திய பகைமைஎண் ணாது
தூறு பன்மணி மாமுதல் பொறையெலாந் தொலைத்த
வேறு நன்றியே கடைப்பிடித் திதைவியன் பொருப்பர்க்
கூறு நல்வளம் விளைத்திடும் உயர்ந்தவர் செயல்போல். ௪௰

வேட்டை மேற்புகு வார்க்குநல் வினையுந்த மடவார்
கூட்டம் வாய்க்கும்அச் சாரலில் தினைக்குரற் கொய்துஞ்

---

சிறந்தும் நிற்குமென்பது பெறப்படுதலால், ஈண்டும் அவ்வாறே கூறப்படு மென்க.

௩௯. தூமம் - (கறும்) புகை. ஓம்புற - வளர்க்க. முளி - உலர்ந்த. சந்து - சந்தனமரம். உருவம் - நிறம். ஆரழல் - தணித்தற்கரிய நெருப்பு. புன்பயிர் - புன்செய்ப் பயிர். பலி - பிச்சை. பொருவில் - நிகரில்லாத. பொருவில் வாழ்க்கையர் என்றது துறவிகளை. போலும் என்பது போன்ம் எனவந்தது. பொருப்பர் - மலையில் வாழுங் குறவர்கள். துறத்தல் அழற்பெய்தலுக்கும், பலிபேணல் புன்பயிர் விளைத்தலுக்கும் உவமை. மேல் ஆற்றுவளங் கூறு முகத்தானே புறப்பொருள் கூறிய ஆசிரியர், ஈண்டு நானிலத்து ஐந்திணை வளங்கூறு முகத்தானே அகப்பொருள் கூறத்தொடங்கி, மலை காடு வயல் கடலெனத் தாம் நிறுத்த முறையானே முதற்கண் மலையும் மலை சார்ந்ததுமான நிலத்ததாகிய குறிஞ்சித்திணை இது முதற் பதின்மூன்று செய்யுட்களாற் கூறுகின்றார். இதனுள், பொருப்பர் என்புழிப் பொருப்பென்னும் முதற் பொருளும், முருகவேள் என்னும் தெய்வமும், அகில் சந்து என்னும் மரங்களும் ஆகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௪௰. ஏறு - உயர்ந்த. தூறு - புதர். தூறும் மாமும் சொல்லுவானது குறிப்பால் குறிஞ்சிக்குரியவற்றைக் குறிக்கும். பொறை - பாரம். வேறு - பகைமைக்கு வேறாகிய. கடைப்பிடித்து - உறுதியாகப்பற்றி. இதை - புதுக் கொல்லை; திருத்தப்பட்டமையாற் புதிதாயிற்று. வியல் என்பது 'பொருப்புக்கு அடை. ஊறு - சுரக்கின்ற. உயர்ந்தவர் செயல், எழுவாய்த் தொடர். அவர் செய்யுமாறாவது, நன்மையுந் தீமையும் ஒருவராற் செய்யப்பட்டவழி, நன்றல்லதை அன்றே மறந்து நன்றியை மறவாது உற்றுழி உதவுதல். "நன்றிமறப்பது நன்றன்று நன்றல்லது அன்றே மறப்பது நன்று" (குறள்-௧௰௮) என்பது மறைமொழி. இதனுள், இதை பொருப்பு என்னும் நிலமுதற் பொருளும், மாமும் புனந்திருத்தித் தினைமுதலிய விதைத்தலும், அவற்றை அறுத்தலுமென்னும் செய்தியுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க,

சேட்டி ளங்கிளிக் குலங்கள் அந் தெரிவைமார் ஒப்பும்
பாட்டி சைத்திறம் ஒளிபிருந் தனுதினம் பயிலும். ௪௧

நங்கு லத்தரு வாழ்க்கையைக் கெடுத்துநம் இருக்கை
தங்க ளாக்கெனக் கொண்டஇவ் வேனல்கள் தம்மை
இங்கண் வாட்டுதும் என்பதோர் சூழ்ச்சிஎண் ணியபோல்
அங்கண் எஞ்சிய வேங்கைகள் போதுசெய் தலரும். ௪௨

---

௪௧. உந்த - கூட்டுவிக்க. கூட்டம் - புணர்ச்சி. குரல் - கதிர். சேடு - அழகு. தெரிவைமார் - பெண்கள். ஒப்பும் - ஓட்டுகின்ற. திறம் - கூறுபாடு. ஒளிபிருந்து - மறைந்திருந்து. வேட்டைமேற் சென்றவழித் தன் பாங்கராயினர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வினைமேற்கொண்டு பிரிந்தாராகத் தனித்துநின்ற தலைமகனும், ஆயத்தவர் ஒவ்வொருவரும் பூக்கொய்வலெனவும், புனலாடுவலெனவும்பலவாறு தனித்தனி பிரியத் தான்தனிமையாய் நின்ற தலைமகளும் நல்வினை வயத்தால் ஒரு பொழிலினிடத்தே எதிர்ப்பட்டுப் புணர்தல் குறிஞ்சி நிலத்திற்கு உரியதாகலின், வேட்டைமேற் புகுவார்க்கு நல்வினையுந்து மடவார் கூட்டம் வாய்க்கும் அச்சாரல்' என்றார் அற்றேல், "ஒன்றியுயர்ந்த பாலதாணையின் - ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப" (தொல். பொருள். ௯௨.) என நல்வினையாகிய பாலதாணை எதிர்ப்பாட்டிற் கேதுவதன்றிக் கூட்டத்திற்கு ஏதாமையானும், எதிர்ப்பட்ட கிழவனுங் கிழத்தியும் ஒத்த அன்புந்தக் கூடுங்கூட்டமே இயற்கைப் புணர்ச்சி எனப்படுமாகலானும்"நல்வினை யுந்த...கூட்டம் வாய்க்கும்," என்றது வழுவாம் போலுமெனின், அறியாது கூறினாய்; என்னை? ஒத்த கிழவற்கும் கிழத்திக்கும் கூட்டம் நிகழ்தற்குத் தடையாயுள்ளது எதிர்ப்பாடின்மையே யாகலானும், அது பாலதாணையின் உளதாயிற்றென்பதே, நிகழுமென்னாது வாய்க்குமென்ற சொற்குப் பொருளாதலானுமென்க. எனவே, வேட்டைமேற் புகுவார் நல்வினையுந்த மடவாரை எதிர்ப்பட்டு அன்புந்தக் கூடும் சாரல் என்பதே கருத்தாதலறிக. இதனுள், சாரலென்னும் முதற்பொருளும், தினையாகிய உணவும், கிளியாகிய பறவையும், கிளிகடிதலாகிய செய்தியுமென்னுங் கருப்பொருள்களும் புணர்தலென்னும் உரிப்பொருளும், வந்தமை காண்க.

௪௨. ஏனல் - தினைப்பயிர், எஞ்சிய - வெட்டாது நின்ற, போது செய்து - பேரரும்பாகி. வேங்கை பூத்தால் தினையை அறுப்பதென்பது வழக்கு. இது காலத்தைக் குறிக்கும். "வேங்கையு மொள்ளிணர் விரிந்தன - நெடுவெண் டிங்களு மூர்கொண் டன்றே" (அகம் - ௨) என்னும் சான்றோரிலக்கியமும், "வேங்கை தினைப்புனங் கொய்க வென்று - தாதிடங் கொண்டு

என்னை யூர்ந்தருள் சுடர்வடி யிலைவேற் பெருமான்
தன்னை நன்மரு கெனப்படைத் தவன்றன தூர்தி
அன்ன தாமெனுங் கேண்மையா னளிமுகிற் குலத்தைக்
கன்னி மாமயில் காண்டொறுங் களிசிறந் தகவும். சங

நெருங்கு பைந்தழை வருக்கைமேல் நெடுவளி யலைப்ப
அருங்கண் மாமயில் வீற்றிருந் தசைதருங் காட்சி
கருங்க ணாயிரச் செம்மல்தன் மருகனைக் காண
மருங்கு வந்துதன் னூர்தியை நிறுவுதல் மானும். சச

சந்தும் ஆரமுந் தாங்கிவம் பலர்ந்ததண் குவட்டான்
மைந்தர் கண்ணையும் மனத்தையுங் கவர்ந்திடும் வனப்பின்

---

பொன் வீசித்தன் கள்வாய் சொரியநின்று" (திருக்கோ. கங அ.) என்னும் அருட்டிருமொழியுங் காண்க. இதனுள், ஏனலென்னும் உணவும், வேங்கையென்னும் மரமும், மரந்தடிந்து தினைவிதைத்தலும் தினையறுத்தலுமென்னும் செய்தியுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

சங, அரசன் என்பது அரசெனப்படுதல் போல, மருகன் என்பது மருகெனப் பட்டது. மருகெனப் படைத்தவன் - தேவேந்திரன். ஊர்தி-வாகனம். கேண்மை-உறவு. கூதிர்க்காலத்து மேகமென்பார் அளிமுகிற்குலம் என்றார். அளி - குளிர்ச்சி. கன்னி-இளமை. அகவும் என்பதற்கு ஆடும், கூவும் என்னும் இருபொருளுங் கொள்க. மயில் கூவுமென்பதை அகவும் என்றல் மரபாயினும், அழைக்குமென்னும் நயமுந்தோன்ற வைத்தமை காண்க. மயில், முகிற்குலத்தைக் காண்டொறும் அன்னது படைத்தவன்றனது ஊர்தியாமெனுங் கேண்மையால் களி சிறந்து அகவும் எனக் கூட்டி முடிக்க. கேண்மையான் அகவும் என்றது தற்குறிப் பேற்றம். இதனுள், கூதிர்ப் பருவமென்னும் பொழுது முதற்பொருளும், மயிலென்னும் பறவைக் கருப்பொருளும் வந்தமை காண்க.

சச. வருக்கை - பலாமரம். வளி-காற்று. கண் - தோகையில் பொருந்தியுள்ள புள்ளி. ஆயிரங் கருங்கட் செம்மல் என மாறுக. கருமை-அழகு. அவன் ஊர்தி மேகம். மானும் - ஒக்கும். வளியலைப்ப என்றது மேகத்தின் புடைபெயர்ச்சிக்கு ஒப்பிடுதற்கு. நெருங்கு பைந்தழை என்றதற் கேற்பக் கரிய ஊர்தி எனவுரைத்துக்கொள்க. வீற்றிருத்தல் ஏறியிருத்தலையும், அசைதல் நிறுவுதலையும் ஒக்குமென்றவாறு. ஏனைய வெளி. மருகனைக்காண வந்து என்றது முருகன் அந்நிலத்தெய்வமாதல் பற்றி என்க. இதனுள், முருகனென்னுந் தெய்வமும், வருக்கையென்னும் மரமும், மயிலென்னும் பறவையுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

முத்தும் ஒங்கலுங் கொடிச்சியர் குழக்களும் முகில்தோய்
கந்த மார்குழை முகந்தலர் இலவங்கங் காட்டும். ௪௫

கொங்கை யேந்திய ஆண்களும் அவணகொம் புடைய
துங்க வேங்கையின் குலமெலாம் அவணபால் சுரந்து
பொங்கு நீடுசே வினங்களும் அவணவான் புனலை
அங்கண் வேட்டுணும் ஒற்றைத்தாள் எகினமும் அவண. ௪௬

ஆணெ லாம்ஒரு கன்னியை மணப்பவா னணையுங்
கோணை வேங்கைகள் யாட்டினோ டுறவுகொண் டோங்கும்
பேணு சேவினஞ் சிங்கமேல் ஏறிடும் பிழையா
தேணி னொற்பொலி எகினங்கள் இடபத்தை விழுங்கும். ௪௭

---

௪௫. இச்செய்யுள் மலைக்கும், குறிஞ்சிநிலப் பெண்களுக்கும் சிலேடை. சந்து-சந்தனமரமும், சந்தனமும். ஆரம்-முத்தும், முத்து வடமும். வம்பு - வாசனையும், கச்சும். இவையெல்லாம் குவட்டிற்காக்குக. குவடு - கொடுமுடியும், நகிலும். வனப்பு-அழகு. ஒங்கல் - மலை. கொடிச்சியர் - குறிஞ்சிநிலப் பெண்கள். முகில்-மேகமும், கூந்தலும். கந்தம்-வாசனை கம்தம் ஆர் எனப் பிரித்துக் கம்மியாது தொழில் தம்மிடத்துப் பொருந்தப் பெற்ற குழை என இருபொருள் கொள்வாரும் உளர். குழை-தளிரும், காதணியும். முகம் - முன்னிடமும், முகமும். முகத்து இலவங்கம் என்க. இலவங்கம்-இலவங்கமரமும், (இலவு அங்கம்) இலவினது நிறமும் (வாய்). இதனுள், ஒங்கலென்னும் நிலமுதற்பொருளும், சந்து இலவங்கமென்னும் மரமும் கொடிச்சியரென்னும் மக்களுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௪௬. கொங்கை - வாசனையை. ஆண்-ஒருவகைமரம். அழிஞ்சில் எனவும் கூறுப. அகவயிரமுள்ள மரம் எனினுமாம். அவண - அவ்விடத்திலுள்ளன. வேங்கை - வேங்கைமரம். சே - செம்மரம். எகினம் - புளியமரம். நகிலைத் தாங்கிய ஆண்கள், கொம்புடையபுலி, பால்சுரந்து பொங்கும் எருதுகள். வான்புனலை உண்ணும் ஒருகாலை உடைய அன்னங்கள் எனப் பிறிதொரு பொருள்பட்டு வியப்புத் தோன்ற வைத்தமையறிக. இதனுள், வேங்கை முதலிய மாக்கருப் பொருள்கள் வந்தமை காண்க.

௪௭. ஆண்முதலிய நான்கும் மேலைச் செய்யுளிற் கூறிய பொருளே குறிக்கும். கன்னி, யாடு, சிங்கம், இடபம் என்பன வானத்திலுள்ள இராசிகள். யாடு - மேடம். கோணை-அழிவின்மை. எண்-வலி. இதுவும் மேலைச்

வில்ல லர்ந்தபல் உடுக்களும் விண்செறிப் படருஞ்
செல்லும் வெண்கதிர்க் கடவுளும் பானுவுந் திறல்சால்
மல்லல் வானவக் குழுவும்எய்ப் பாறவந் திருக்கும்
இல்லம் எங்கணும் வான்தொட இழைத்திடுங் குன்றம். சஅ

போது மூன்றினும் போதுசெய் காவிசூழ் பொருப்பும்
மேத குந்தமிழ்க் கெல்லையாம் வேங்கட வரையுங்
காதல் பூப்பஅத் தாணிகொண் டறுமுகக் கடவுள்
கோது நீத்தர சாட்சிசெய் குறிஞ்சிஅக் குறிஞ்சி. சகூ

---

செய்யுள் போன்றே வியப்புப்பொரு ளுடையதாதல் வெளி. இதனுள்ளும், மேற்கூறிய கருப்பொருள்களே வந்தன.

சஅ. வில்-ஒளி. உடுக்கள் - விண்மீன்கள். செல்-மேகம். வெண் கதிர்க் கடவுள்-சந்திரன். பானு-சூரியன். மல்லல்-வளம். எய்ப்பு-இளைப்பு. இல்லம் இழைத்திடும் - (சிலேடை)மாளிகை இயற்றும், தேற்றாமரத்தை வளர்க்கும். குன்றம் இல்லத்தை எங்கணும் இழைத்திடும் என்க. இதனுள் குன்றமென்னும் நிலமுதற் பொருளும், இல்லமென்னும் மரக்கருப்பொரு ளும் வந்தமை காண்க.

சகூ. போது மூன்றினும்...பொருப்பு - காலை, நடுப்பகல், மாலை என் னும் மூன்று வேளைகளிலும் மூன்று மலர்கள் மலரும், குவளை பொருந்திய தணிகைமலை, தேவேந்திரன், சூரபதுமனால் இழந்த தனது செல்வத்தை யடைதற்குத் தணிகை மலையை யடைந்து முருகக்கடவுளை வழிபடுங்கால், அக்கடவுளுக்காகத் தனது சுவர்க்கத்தினின்றும் அரியதொரு நீலோற்பலக் கொடியைத் தணிகைமலைச் சுனையில் வைத்து, அது எந்நாளிலும் மூன்று வேளைகளிலும் மூன்று மலர் பூக்கும் வரத்தைப் பெற்றனன் என்பதை,

"துறக்கம்வாழ் குவளை வாங்கிச் சுனையிடைக் கால மூன்று
முறுக்கவிழ் மலர்கள் மூன்று முகிழ்க்குமா நிருமித் திட்டேன்
நறைக்கடம் பணிந்தோய் நாளு நயந்தணிந் துலக மெல்லாம்
இறக்குமந் நாளுமன்னி யிருக்கவக் கழுநீர் மாதோ"

என்னுந் தணிகைப் புராணத்தானும், (இந்திரனருள்பெறு படலம் உரு.) அது அங்ஙனம் பூத்து நிற்றலை,

"வாசவன் வைகலுஞ் சாத்துதற் பொருட்டான்
மூன்று காவியிச் சுனைதனி லெமக்குமுன் வைத்தான்" எனவும்,

"காலைப் போதினி லொருமலர் கதிர்முதி ருச்சி
வேலைப் போதினி லொருமலர் விண்ணெலா மிருள்சூழ்

அன்பெ லாம்ஒரு பிழம்பெனத் திரண்டகண் ணப்பன்
எம்பி ராற்கொரு விழியிடந் தப்புகா ளத்திப்
பொன்பி றங்கிய முகலிசூழ் கயிலையம் பொருப்புந்
தன்பு லத்திடை யுடையது தடவரைக் குறிஞ்சி. ௫0

மாலைப் போதினி லொருமல ராகவிவ் வரைமேல்
நீலப் போதுமூன் றொழிவின்றி நித்தலு மலரும்'' எனவும்

வருங் கந்தபுராணத்தானும் உணர்க. அத்தாணி-அரசிருக்கை. அக்குறிஞ்சி - தொண்டை நாட்டுக் குறிஞ்சி. இது சிறந்ததென்னும் பொருள்தருதலை, எடுத்தலோசையாற் கூறிக் காண்க. மூன்று வேளையினும் மூன்று மலர் மலருந் தெய்வத் தன்மையும், தமிழ் நாட்டிற்கு எல்லை கூறுதற்குரிய தகுதியுமுடைய பெருமை வாய்ந்த மலைகளைத் தமிழ்த் தெய்வமாகிய அறுமுகக் கடவுள் அரசிருக்கையாகக் கொண்டு அரசாளும் சிறப்புடையது என்றவாறு. அறுமுகக் கடவுள் தமிழ்த் தெய்வமென்பதும், அக்கடவுள் வீற்றிருக்கும் இயைபு பற்றியே வேங்கடவரை தமிழ் நாட்டிற்கு எல்லையாகக் கூறப்பட்டதென்பதும் ஆசிரியர் கருத்தாதலை, 'தமிழ் நாட்டிற்கு வடக்கட் பிற வெல்லையுமுளவாக வேங்கடத்தை எல்லையாகக் கூறினர், அகத்தியனார்க்குத் தமிழைச் செவியறிவுறுத்த செந்தமிழ்ப் பரமாசாரியனாகிய அறுமுகக் கடவுள் வரைப்பென்னு மியைபுபற்றி யென்பது' எனத் தொல்காப்பியப் பாயிர விருத்தியுள் உரைத்தமையால் அறிக. இச்செய்யுளில் எல்லையாம் என்பது எதிர்காலப் பெயரெச்சமாகலின், பாயிர விருத்தியோடு முரணாமை யறிக. குன்றை நகர்க் குலக்கவியாகிய சேக்கிழார் பெருமான் நானிலத்து ஐந்திணை வளங்களைத் தெய்வத் தலங்களான் முடித்துக்காட்டிய அருமையை அறிந்து கூறிய ஆசிரியராகலின், தாமும் அவ்வழியே முடிப்பாராய், ஈண்டு அறுமுகக் கடவுள் தலங்கள் கூறினர். மேல் இரண்டு செய்யுட்களால் சிவ தலங்கள் கூறி முடிப்ப. ஈண்டு முருகக் கடவுளைக் கூறியது, குறிஞ்சிக்குத் தெய்வமென்பது மாத்திரையன்றித் தமிழ்த் தெய்வமென்னும் சிறப்பும் பற்றியென வுணர்க.

௫0. பிழம்பு-வடிவம். பிறங்கிய - விளங்குகின்ற. முகலி - முகலியாறு. பிறங்கிய பொன்முகலி என்க. வாயுதேவன் ஆதிசேடனோடு பகைகொண்ட காலத்துப் பெயர்த்தெறிந்த திருக்கைலையின் மூன்று கொடுமுடிகளில் ஒன்று என்பது புராண வரலாறுதல் பற்றிக் காளத்திமலை தென்கைலை எனப்படுதலால் காளத்தி...கயிலையம் பொருப்பென்றார். புலம்-இடம். இச்செய்யுளினும் வருஞ் செய்யுளினும் குறிஞ்சி யென்புழி, மேலைச் செய்யுளிலிருந்து சுட்டு வருவித்துரைக்க. அன்பெலாமொரு பிழம்பெனத் திரண்ட கண்ணப்

நாவல் மன்னவர்க் கிரந்துசோ றளித்திடு நம்மான்
தேவி யோடமர் திருக்கச்சூர் திருவிடைச் சுரமும்
பாவ காரியர் எய்தொணுக் கழுகுசூழ் பறம்பும்
மேவ ரத்திகழ் குறிஞ்சியின் பெருமையார் விரிப்பார். ௫௧

உ. பாலை.

குராவ ளித்திடு பாவையைக் கோங்குபொன் கொடுத்துப்
பாரைப் பாடலம் பூந்தழற் பாங்கரின் மணப்ப
மராம ரத்துளர் வண்டுபண் பாடவன் முருங்கை
விராவி வெண்பொரி இறைத்திடும் விபப்பின தொருபால். ௫௨

---

பன் என்பதற்கு, "அன்பு பிழம்பாய்த் திரிவார்", "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பு" (பெரிய - கண். கருச. கருஎ.) என்னும் திருமுறைத் திருமொழி மேற்கோள்.

௫௧. நாவல் மன்னவர் - சுந்தரமூர்த்தி நாயனார். அளித்திடு, அமர் என்னுங் காலங்கரந்த பெயரெச்சங்கள் திருக்கச்சூர் என்னும் இடப்பெயர் கொண்டன. நம்மானென்பது தாப்பிசையாய் முன்னுஞ் சென்றியையும். கழுகுசூழ் பறம்பு - திருக்கழுக்குன்றம். மேவர - பொருந்த.

௫௨. ஆசிரியர், ஐந்திணைகளை, வரையும் கானமும் பழனமும் வேலையுமென்னும் நிலமுறை பற்றிக் குறிஞ்சி முதலாகவைத்துக் கூறுகின்றாராகலின், குறிஞ்சி முல்லை நிலங்கள் இயல்பு வேறுபட்டு நடுநிகர்த்தாய் நிற்கும் நிலத்ததாகிய பாலையை அத்திணைகளின் இடையில் வைத்தாரென்க. என்னை? "நடுவணது" எனவும், 'நடுவு நிலத்திணை " (தொல். பொருள். உ சு.) எனவும் தொல்லாசிரியர் குறியிட்டதும் இக்காரணம் பற்றியென்றே தொல்காப்பியச் சூத்திர விருத்தியுள் கூறினாராகலி னென்பது. இன்னும் இது நிலமுறை பற்றியதென்பது, முதலில் நிற்கும் குறிஞ்சி நிலத்தையும், தனிநிலமல்லாத பாலை நிலத்தையும் வாளா கூறி, ஏனைய மூன்று நிலங்களையும் முன்முன் உள்ளவற்றை அடுத்துள்ளன வெனக் கூறுதலாலும் உணர்க. இவ்வாறன்றி, உரிப்பொருள் முதலிய முறைபற்றியதெனல் பொருந்தாமை ஈண்டு விரிப்பிற் பெருகும். சேக்கிழார் பெருமான் கூறிய முறையும் இதுவேயாமென்க. இதுமுதல் நான்கு செய்யுட்கள் பாலை. பாடலம் - பாதிரி. மணப்ப - மணஞ்செய்ய. மரா - அரசையும், ஆச்சாவையுங் குறிக்கும். மராம் எனக்கொண்டால் வெண்கடம்பாம். உளர்-திரிகின்ற. குராவின்காய் பாவைபோலவும், கோங்கமலர் பொன்னிறமாகவும், பாதிரிப்பூ செந்நிறமாகவும், முருங்கைப்பூ வெண்ணிறமாகவும் இருத்தல்பற்றி, இவ்வாறு அழகுபடக் கூறினர். இதனுள், குராமுதலிய மரக்கருப்பொருள்கள் வந்தமை காண்க.

எயிற்றி மார்எழில் நலத்தினுக் கிரியல்போ யுடைந்தாங்
கயற்பொ தும்பர்புக் கலர்குராப் பாவைகண் டவர்தந்
துயிற்று சேயெனக் கவன்றுபோய்த் தூதுணம் புறுக்கள்
வெயிற்றலைக்கணின் றுயங்குவ நிலைமைவிண் டவர்போல். ௫௩

தூது ணம்புற வினமெலாந் துணையுடன் கெழுமிப்
போத வூடியும் உணர்த்தியுந் தலைத்தலைப் புணர்ந்து
காதல் அந்நலார் மொழியையுங் கடந்துசே ணிடைச்செல்
ஏதில் ஆடவர் தமைச்செல வழுங்குவித் திடுமால். ௫௪

வெங்க திர்ப்பிரான் நண்பகற் போதினில் வேனில்
மங்கை கொங்கைநோய்ந் தளித்திடும் பாலையாம் மைந்தன்

---

௫௩. எயிற்றிமார்-பாலை நிலப் பெண்கள். எழில் நலம், இரியல்போய் உடைந்து என்பன ஒருபொருட் பன்மொழிகள். மிக்க அழகு என்றும், பெரிதும் தோற்றோடி என்றும் பொருள் தரும். ஆங்கு-உவம உருபு. பொதும்பர்-மரச்செறிவு. துயிற்று-தூங்குவித்த. சேய்-குழந்தை. கவன்று-கவலையுற்று. உயங்குவ-வருந்தும். நிலைமை விண்டவர் - நிலைகெட்டவர்கள். துறவிகள் என்பாரும் உளர், அவர் உயங்குதலின்மையின் அஃதுரையன்றென்க. தூது உண் அம்புறா எனப் பிரித்துக் கல்லை உண்ணும் அழகிய புறா என்பர். நிலைமை கெட்டுத் தம் இடம்விட்டுச் சென்றார்க்குப் புகுந்த இடத்திலும் இடர் வருதலும், அச்சமுற்றவர் கண்டபொருளை ஆழ்ந்தறியாது வெருண்டோடுதலுமாகிய உலகியற்கையைப் புலப்படுத்தியவாறு. இதனுள், வெயிற்றலைக்கணின்று உயங்குவ என்றமையால் வேனிற்காலத்து நண்பகலாகிய முதற்பொருளும், குராவென்னும் மரமும் தூதுணம்புறாவென்னும் பறவையுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௫௪. கெழுமி-கூடி. போத - மிகவும். ஊடி - ஊடல் கொண்டு. உணர்த்தி - ஊடலை நீக்கி. தலைத்தலை-ஆங்காங்கு. அம்-அழகிய. நலார்-நல்லவர்களாகிய தலைவியர். சேண்-தூரம். தாமே நிற்றலன்றி மொழியையுங் கடந்து சென்றமையால் அத்தலைவரை ஏதிலாடவர் என்றார். ஏதிலார் - அன்பில்லாதவர். அழுங்குவிக்கும்-தடுக்கும். தூதுணம் புறுக்கள் துணையொடு புணர்தலைக் கண்ட தலைவர், காமக் குறிப்பு மிக்கு அழுங்குவரென்பது கருத்து. இதனுள், தூதுணமென்னும் பறவைக்கருப்பொருளும் பிரிதலென்னும் உரிப்பொருளும் வந்தமை காண்க.

௫௫. பிரான் - தலைவன். நானிலவரசர் பால் இரந்து என்றது பாலைக்குரிய நிலம் நானிலத்தின் வேறாகாமையையும், வன்முரம் பென்றது அதற்கு

அங்கண் நானில அரசர்பால் இரந்துவன் முரம்பு
தங்கு சூழலில் சிற்றர சாள்வதும் உளதால். ௫௫

௩. முல்லை.

நவிலும் இந்நிலப் புறம்பயில் புறவநன் மடந்தை
குவிவ ருந்தழல் வெம்மைகூர் கொடும்பசி தணியச்
செவிலி யாய்முகில் தீம்பயம் ஊட்டிட வளர்ந்தாங்
கவிழு நீள்வர காதியாம் மகப்பயந் தளிக்கும். ௫௬

கொல்லை யெங்கணுங் கொழுமலர் ததைபுன முருக்கின்
முல்லை மென்கொடி படர்ந்தலர் நிரைநிரை முகிழ்ப்ப
அல்லை வென்றகந் தரப்பிரான் அரக்கெறி மார்பில்
தொல்லை வெண்டலை மாலிகை துயல்வரல் மானும். ௫௭

நீலம் பூத்தலர் பூவையைக் கோட்டுநீள் கரத்தால்
கோலம் பூத்தபொற் கொன்றைகள் தழீஇக்கிடந் தசைவ

---

நிலமுண்மையையும், சிற்றரசென்றது வளப்ப மிக்க தொண்டை நாட்டின்கண் அது மிகுதியும் இல்லாமையையும் உட்கொண்டென்க. இதனால் சிவதலங்கூற லாகாமையுணர்க. சேக்கிழார் பெருமானும் பாலைக்குச் சிவதலங் கூறாது ஒரே திருப்பாசுரத்தால் முடித்தமை காண்க. இதனுள் வேனில் நண்பகலென்னும் முதற் பொருள் வந்தமையும் நிலம் குறிக்கப் பட்டமையுங் காண்க. இஃது உருவகம்.

௫௬. பயில் - பொருந்திய, வசிக்கின்ற. புறவம் - முல்லை நிலம். குவிவரும் - சுருங்குதலில்லாத, பரந்த. தழலாகிய பசி என்க. தீம்பயம் - இனிய பால், இனியநீர். அவிழும் - விரிந்த. மக-குழந்தை. பயந்து - பெற்று. அளிக்கும் - காக்கும், வளர்க்கும். இதுவும் உருவகம். இதனுள், புறவமென்னும் நிலமுதற் பொருளும், வரகு முதலிய உணக் கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௫௭. ததை - நெருங்கிய. நிரை நிரை - வரிசை வரிசையாக. முகிழ்த்தல் - அரும்புதல். அல் - இருள். கந்தரம் - கழுத்து. அரக்கெறி - செவ்வொளி வீசும். சாதிலிங்கத்தை வென்ற என்றும் கூறுப. துயல்வரல் - அசைதல். இதனுள், கொல்லை என்னும் நிலமுதற் பொருளும், புனமுருக்கென்னும் மரமும், முல்லை என்னும் பூவுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௫௮. நீலம் - நீலநிறப் பூக்கள். அலர் - விரிந்த. பூவை - காயாமரம். கோலம் - அழகு. திளைப்பது - அனுபவிப்பது, இறந்த காலம் எதிர்காலமாயிற்று. தெளிக்கும் - விளக்கும். திருமால் மோகினியானமையும், இறை

ஆலம் பூத்தருள் மிடற்றினோன் அன்றுமோ கினியாஞ்
சீலம் பூந்தமால் இளமுலை திளைப்பது தெளிக்கும். ௫அ

பெண்ண லங்கனி இடைக்குலப் பிடிநடை மடவார்
விண்ண லங்கனி மாதரை எழிலினால் வென்று
பண்ண லங்கனி மிடற்றவர் பணைத்தமூக் கரிந்து
மண்ணில் எங்கணுந் தூக்கிவைத் தெனக்குமிழ் மலரும். ௫௯

மௌவ லங்குழ லார்விழிக் குடைந்துவான் குதிக்கும்
நவ்வி மீண்டக லாவகை மகளிர்ஆ னனத்துக்
கொவ்வு றாதவர் ஆணையில் திரியும்ஒண் மதிகண்
டவ்வு ழித்தன திருக்கையிற் சிறைப்படுத் தலைக்கும். ௬0

கற்றை வார்குழல் ஆய்ச்சியர் கயல்விழி முகத்தின்
பெற்றி யொப்புறப் பெருங்குருந் துச்சிமேல் தாவி

வன் அவளைக் கூடினமையும் இப்புராணம் மாசாத்தன்றளிப் படலத்திற் காண்க. இதனுள், காயா கொன்றை யென்னும் மரக் கருப்பொருள்கள் வந்தமை காண்க.

௫௯. இது தற்குறிப்பேற்றம். நலம் மூன்றில் நடுவிலுள்ளது அழகு, மற்றையவை நல்ல இயல்பு. கனிமூன்றும் - மிகுந்த. பிடி - பெண்யானை. விண்மாதர் என்க. மிடறு - கண்டம். அவர் - அப்பெண்களுடைய. பணைத்த - பருத்த. தூக்கி - தொங்கவிட்டு. தோற்கச் செய்தவரை மூக்கறுத்தாரென்பது வழக்கு. குமிழம்பூ பெண்களது மூக்கிற்கு உவமை கூறப்படும். இதனுள், குமிழ் என்னும் பூவும், இடைக்குல மடவாரென்னும் மக்களுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

௬0. மௌவல் - முல்லை மலர். மௌவலங் குழலார் என்பது சொல்லுவானது குறிப்பால் முல்லைநிலப் பெண்களை யுணர்த்தும். ஆனனம் - முகம். ஆணையின் - கட்டளைப்படி. உழி-இடம். அலைக்கும் - வருத்தும். இது சந்திரனிடத்துள்ள களங்கத்தை மானென்னும் வழக்கைக்கொண்டு கூறியது. உடைந்து வான் குதிக்குமென்றதும், ஆணையில் திரிதருமென்றதும், ஒவ்வுறாது திரியும் மதி அலைக்கும் என்றதும் தற்குறிப்பேற்றம். இதனுள், முல்லை என்னும் பூவும், மானென்னும் விலங்கும் மௌவலங் குழலாரென்னும் மக்களுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

௬௧. இதுவும் தற்குறிப்பேற்றம். பெற்றி-தன்மை. ஒப்புற-ஒப்பாவதற்கு. ஒப்புறப் பற்றுவான் எனவியையும். குருந்தென்பது, காட்டுகாரத்தைக்கும், காட்டெலுமிச்சைக்கும் பெயராய் வழங்கும். அதன் - அக்

ஒற்றை மானுடைக் கலைமதி அதன்நிழல் உறங்கும்
மற்றை மானையும் பற்றுவான் கதிர்க்கையால் வருடும். ௬௧

நலம்ப யின்றிள வேனிலின் நவிலுமாங் குயில்கள்
அலம்பு கார்வரும் போதுவா யடைப்பது முன்னாள்
புலம்பு கொண்டவர் காரொடுந் தலைவர்தேர் புகுத
வலம்பு னைந்துரை வளமொழிக் கிடைதலா னன்றே. ௬௨

தொண்டை மான்கடக் களிற்றினை முல்லைபால் தொடக்கி
அண்டர் தம்பிரான் வெளிப்படக் காட்சிதந் தருள்சீர்
கொண்ட வான்பதி முதல்பல தன்னிடைக் குலவக்
கண்ட முல்லையின் பெருமையார் கட்டுரைத் திடுவார். ௬௩

---

குருந்தினுடைய, கதிர்-கிரணம். வருடும் - தடவும். ஆய்ச்சியரது இரண்டு கண்களோடு கூடிய முகத்திற்கு ஒத்தல் வேண்டி விழிக்கு ஒன்றாக இரண்டு மான் பெறக்கருதிய சந்திரன் தன்னிடத்துள்ளது ஒருமானேயாக, மற்றொரு மானைப் பிடித்தற்கு, அஃது உறங்கும்போது மேலிருந்தபடியே பற்றுவான் என்றவாறு. இக்கருத்தறியாதார் பதவுரை கூறியொழிப. இதனுள், மானென்னும் விலங்கும், குருந்தென்னும் மரமும், ஆய்ச்சியரென்னும் மக்களுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

௬௨. நலம் பயின்று - இன்பம் நுகர்ந்து. மாங்குயில் - மாமரத்திலுள்ள குயில். அலம்பு-ஒலிக்கின்ற. கார் இரண்டும் கார்ப்பருவம். மேகம் இடித்து மழை பெய்யும் ஒலியும், ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலின், மாவும் புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடும் ஒலியும், வினைமுடித்து மீளும் தலைவரது தேரும் புரவியும் ஒலிக்கும் ஒலியும், அதுகாறும் ஆற்றியிருந்த தலைவியர், காதலர் வரவுணர்ந்து வாழ்த்திசைக்கும் ஒலியும் மிகுதலின் அலம்பு கார் என்றார். வாயடைப்பது - கூவாதிருப்பது. முன்னாள் - வேனிற் பருவம். புலம்புகொண்டவர் - தனிமைகொண்ட தலைவியர். வலம் - வெற்றி. இடைதல் - தோற்றல். அன்றே, பலரறி தேற்றம். இதனுள் காரென்னும் பொழுது முதற்பொருளும், மா குயிலென்னும் மாப்புட் கருப்பொருளும், புலம்பு கொண்டவர் என்னும் இருத்தல் உரிப்பொருளும் வந்தமை காண்க.

௬௩. கடம்-மதம். களிறு - யானை. தொடக்கி - பிணித்து. பதி - வடதிருமுல்லைவாயில். கட்டுரைத்தல் - உறுதிப்படச் சொல்லுதல், ஈண்டு வரையறுத்துக் கூறுதலின்மேற்று. இது சிவதலங்கூறி முடித்தவாறு. தொண்டை நாட்டையாண்ட தொண்டைமானென்னும் அரசன், போர் செய்ய ஏறிச் செல்லும் யானையின் காலைப் பிணித்த முல்லைக் கொடியை வாளால் வெட்ட,

௪. மருதம்

பொலஞ்சி றைச்சுரும் புளர்தரு குறுஞ்சுனைப் புறவ
நிலந்த னைப்புடை யுடுத்தது கெட்டிள வாளை
இலஞ்சி நின்றுமீப் பாய்ந்துவெண் மதிகிழித் தேகித்
தலங்கொள் வானியாற் றுலவுபூந் தடம்பணை மருதம். ௬௪

ஆற்றுக்காற் சிறப்பு

ஒருவ னாகிய சிவபிரான் உலகுயி ரளிப்பக்
கருணை கூர்ந்துமுன்* நவந்தரு பேதமுங் காட்டுந்
திருநி கர்ப்பவொர் பாலியே வயல்வளஞ் செழிப்பப்
பெருகு தண்புனல் பற்பல கால்களாய்ப் பிரியும். ௬௫

---

அவ்வெட்டு அங்கு மறைந்திருந்த சிவலிங்கத்தின்மேற் பட அவ்வரசன் வருந்தும்போது, சிவபெருமான் அவனுக்குக் காட்சி தந்தருளிய தலம் வடதிருமுல்லைவாயிலென்பது புராண வரலாறு. இதனை, "சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்சூழ்கொடி முல்லையாற் கட்டிட்-டெல்லையிலின்பமவன்பெற வெளிப்பட்டருளிய விறைவனே யென்று—நல்லவர் பரவுந் திருமுல்லைவாயி லாதனே" (திருமு. ௭ பதி. ௬௯.) என அருளாசிரியரும் உரைத்தமை காண்க. முல்லைக்கொடியுள்ள தலமாகலின் இது முல்லைநிலமாயிற்று.

௬௪. பொலம் - பொன். புறவநிலம் - முல்லை நிலம். இலஞ்சி - ஏரி குளம் மடுக்களாகிய நீர் நிலைகள். மீ-மேல். பூந்தடம்பணை - பூக்களையுடைய அகன்ற வயல். நானிலங்களுட் சிறந்ததும் நாட்டிற்கு இன்றியமையாததும் மருத நிலமாதலால், அதனை ஐம்பத்தைந்து செய்யுட்களால் விரித்தோதப்புகுந்த ஆசிரியர், முதற்கண் அஃது இன்னவிடத்ததெனவும், நீர்வளம் மிகுந்த வயல்களுடையதெனவும் பொதுவகையால் இச்செய்யுளாற் கூறினர்.

௬௫. பொருட்கணுள்ள தேற்றேகாரம் உவமைக்கண்ணும், உவமையடைக்கேற்ற அடை பொருட்கண்ணும் இயைத்து, சிவபிரானே எனவும், ஒன்றாகிய பாலியே எனவும் உரைக்கப்படும். அளிப்ப-உய்விக்க. முன் - பழமையான. நவந்தருபேதம் - ஒன்பதுவகைப்பட்ட சிவபேதங்கள். அவை சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்பன. இந்நவந்தருபேதமும் ஒன்றினொன்று தோன்றுமென்னும் உண்மையை, வருஞ் செய்யுளிற்கூறும் உவமையில் உய்த்துணரவைத்தல்காண்க. நவந்தரு பேதங்கள் இவை என்பதும், அவை ஒன்றினொன்று தோன்றுமென்பதும், அவ்வொன்பது வகையும் சுத்தசிவனாகிய இறைவனொருவனே கொண்டருளுவன் என்பதும்,

[* 'தன்' எனவும் பாடம்.]

பாரரை மூலமேற் பணைகிளை வளாநிரனைப் பலவும்
விராவி ஒன்றிலொன் றனந்தமாய்க் கவடுவிட் டென்னந்
தராத லம்புகும் பாலியிற் பிரிந்துதண் கரைக்கண்
அராவு கால்களும் அவைதரு கால்களும் அனந்தம். ௬௬

"சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழு மீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலயன் ஒன்றி னொன்றாய்ப்
பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்" (சித்தி. சூ. உ. எச.)
என்னும் அருள்நூலுரையா லுணர்க. இவ்வொன்பது வகையும் பொதுப் பட இறைவன் திருமேனிகளாயினும் சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவநிலை நான்கும், சதாசிவன் என்னும் அருவுருவ நிலை ஒன்றும், மகேசுரன் என்னும் உருவநிலை ஒன்றும் இறைவன்தானே மேற்கொண்டு நிற்றலின் சுதந்தரத் திருமேனிகளென்றும், ஏனைய உருவநிலை மூன்றும் தன் அருள்வழி நின்றாரை அதிட்டித்து நிற்றலின் உபசாரத் திருமேனிகள் என்றும் சொல்லப்படும். இதனையே அணுபட்சம் சம்புபட்சம் எனவுங் கூறுவர். இக்கருத்தே ஆசிரியர்க்குச் சிறந்ததென்பதை இங்குக் காட்டிய செய்யுளுரையினும், "வித்தையோ டீசர்" (சித்தி. சூ. க. செய். ௬௬) என்னும் செய்யு ளுரையினும், சிவஞான போதம் இரண்டாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்துரையில் சுத்ததத்துவங் கூறுமிடத்திலும் ஆசிரியர் கூறியவாறுபற்றி உய்த்துணர்க. திரு - மகத்துவம். நானிலத்துள் மருதநிலஞ் சிறந்து நிற்றல்; மேகத்தால் தரப்பட்ட நீர் ஆறே வழியாகக் கடலில் வீழ்ந்தொழியாது உலகிற்குப் பயன்படுமாறு கால்வழியாக வருவிக்கப் பெறுவதாய், அதனுல் தனது இயற்கை வளஞ் சிறந்து, உணவிற் சிறந்த செந்நெல் முதலியன விளையும் இயல்புடைமையே யாகலானும், அவ்வியல்பு உழவுத் தொழில் கூறவே அடங்குமாகலானும், அதனை இதுமுதல் நாற்பத்தாறு செய்யுட்களால்விரித்துக் கூறுவான் தொடங்கி, முதற்கண் அதற்குத் துணையாகிய ஆற்றுக்காற் சிறப்பு ஆறு செய்யுட்களாற் கூறுகின்றார். இச்செய்யுள் முப்பத்துநான்காஞ் செய்யுளுடன் இயைபுடையதென்க. இதனுனே, நிலத்தியல்பு நோக்குமிடத்து மருதத்திணை ஆற்றுச்சிறப்பை யடுத்துக் கூறற்பாலதென்பதும், அங்ஙனமாயினும், நில முறைபற்றி இத்திணையும் போக்கிக் கூறினரென்பதும், இங்ஙனம் கூறப்புகுந்தமை பற்றியே இடையில் நாட்டுச்சிறப்பை ஒருவாறு எடுத்துக்கூறி முடித்தாரென்பதும் உய்த்துணர்ந்துகொள்க.

௬௬. பாரரை மூலமேல் - பருத்த அடிமரமாகிய ஒரு முதலின் மேல். பணை - பெருங்கிளை, பணைத்த கிளை என்றுமாம். எனை, எத்தனை என்பதன்

நான்மு கப்பிரான் வேள்வியைத் தபவரு நதியை
மான்ம றுத்திடைக் குலையெனக் கிடந்தமை மான
மீன்மு கப்பெருங் காற்புனல் தட்பவீழ்ந் துழக்கும்
பான்மு லைக்கரு மேதியாற் பருமடை யுடையும். ௯௭

பழங்கண் வேனிலைப் புயல்கொடு பாற்றுதன் இறைக்குத்
தழங்கும் ஓதையின் மருதம்வாழ்த் தெடுப்பது தகைய
வழங்கு தண்ணுமை ஓதையும் மள்ளர்ஆர்ப் பொலியும்
முழங்கு தீம்புனற் சும்மையும் முடுகிவிண் புகுமால். ௯௮

பொறிகள் ஐந்தையும் புறஞ்செலா தடக்கிஓர் நெறிக்கே
குறிகோ ளும்படி செலுத்துபே ராளார்தங் கோள்போல்

---

மருஉ. வினை என்பதன் குறுக்க மெனினுமமையும். கவடுவிடுதல் - கிளையாய்ப் பிரிதல். தராதலம் - கீழுலகம் ஏழனுள் ஒன்று. புகுமென்றதனால் பூமி யென்றல் பொருந்தாது. அராவு-கல்லப்பட்ட. ஆற்றங் கரையிற் கண்களமைத்துப் பிரிக்கப்பட்ட தலைக் கால்வாய்களென்பார் கரைக்கண் அராவுகால்களென்றார். கரைகளென்றானும் கரையையென்றானும் ஓதாது கரைக்கண் என ஓதியதூஉம் நோக்காது, கரை என்றதனைக் கால்வாயின் கரைபோலுமென மயங்கிக் கண்ணென்பதனை உருபு மயக்கமாக்கியும், பிறவாறும் இடர்ப்படுப.

௯௭. தப - அழிக்க. நதி - வேகவதி. மான - ஒப்ப. குலை - செய்கரை. தட்ப - தடைப்பட. உழக்கும்-கலக்கும். மேதி - எருமை. 'கருமேதி முலைபாலால் மடையுடையும்' என மாற்றி உரைப்பாரும் உளர். பிரமன் வேள்வியை சரஸ்வதி நதியுருவங் கொண்டு அழிக்க வந்தமையும், அதைத் திருமால் தடுத்தமையும் இப்புராணம் சிவாத்தான படலத்திற் காண்க. இதனுள், மேதி யென்னும் விலங்கு கருப்பொருள் வந்தமை காண்க.

௯௮. பழங்கண் - துன்பம். புயல்கொடு - மேகத்தைக்கொண்டு. பாற்று - கெடுத்த. தன் இறை - மருதத்துக்குத் தெய்வமாகிய இந்திரன். தழங்கும், முழங்கும் (மிக ஒலிக்கும்) என்பனவும் ஓதை, சும்மை (பேரோசை) என்பனவும் ஒரு பொருட் சொற்கள். தகைய - ஒப்ப. தண்ணுமை - மருத நிலப் பறை. மள்ளர் - உழவர். தீம்புனல் - இனியநீர். முடுகி - விரைந்து. இதனுள், இந்திரனென்னுந் தெய்வமும், தண்ணுமை யென்னும் பறையும், மள்ளர் என்னும் மக்களுமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

௯௯. பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐந்து வாயில்கள். ஈண்டுப் பொறிகளென்றது அவற்றின் வழியாகச் செல்லும் உயிரறிவை. ஓர் நெறிக்கே செலுத்துதற்குரியது அதுவே யாகலின், உயிரறிவு

பிறிவு றும்பல மடைகளிற் பிழைத்திடா தொதுக்கிச்
செறிக ரும்புனல் முழுவதும் அகன்பணை செறிப்பார். ௬௯

பழியில் நீங்கிநன் கீட்டிய பசும்பொருள் சிறிதுங்
கழிப டாதுநல் வழிப்பயன் படுவது கடுப்பக்
கொழுதி ரைச்சுவைப் பாலியின் குளிர்புனல் முழுதும்
வழுவு றாதுகால் வழிச்சென்று வளவயல் நிறைக்கும். ௭௦

---

புறத்தே செல்லுதற்கு வாயில் பொறிகளே எனவும், அதனை யடக்கும் வழி அவைகளும் அடங்குதலுடைய வெனவுங் கூறுவார், சொற்பல்காமைப் பொருட்டும், 'ஐயுணர் வெய்தியக்கண்ணும்" (குறள். ௩௫௪.) என்புழிப்போல ஒரோவிடத்தன்றி யாண்டும் ஒற்றுமை நயம்பற்றி இவ்வாறோதலே பெரும் பான்மைத் தென்றற்கும் பொறிகளைந்தையும் புறஞ்செலா தடக்கி என ஆகு பெயராற் கூறினர். எனவே, ஐம்பொறிகள் வாயிலாக ஐம்புலன்கள் மேற் செல்லும் அறிவை, அங்ஙனம் செல்லவொட்டாது அப்பொறிகளும் அடங்கு மாறு அடக்கி ஓர் நெறிக்கே செலுத்துபவர் என்பது பொருளாயவாறு காண்க. புறம் - அவ்வைம் பொறிகட்குமுரிய ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசையென்னும் ஐம்புலன்கள்; இதுவும் ஆகு பெயர். நெறிக்கே என்பது உருபு மயக்கம். ஓர் நெறிக்கே - முதற் பொருளைச் சிவ ஞானக் கண்ணைக் காணும் ஒரு நெறியிலேயே. குறி - குறிப்பு, குறித்த பொருள் (முதற் பொருள்). கொள்ளும்படி - பெறும்படி. பேராளர் - பெருமையாளர், சிவ ஞானிகள். சிவஞானத்தை நோக்க ஏனைப் பெருமைகள் சிறுமையா யொழிதலின் அஃதுடையாரைப் பேராளரென்றார். ஆசிரியரும் அப்பேராள ரென்பது ஈண்டு நினைக்கற்பாற்று. கோள் - கொள்கை, செயல். பிழைத்தி டாது - உடைத்து ஓடாது. அகன்பணை - அகன்ற வயல். செறிப்பார் - கட்டு வார். செய்யுளாகலின் மாற்றியும் தொகுத்தும் உரைத்தாரேனும், பேராளர் பொறிகளைந்தையும் புறஞ்செலாதடக்கி ஓர் நெறிக்கே செலுத்திக் குறி கொளுங் கோள் போல், உழவர் புனல் முழுவதும் பலமடைகளிற் பிழைத்தி டாது ஒதுக்கி அகன்பணை செறிப்பார் எனவே கொள்க. குறிகொளும் படி என்றதற்குத் தப்பாதவாறெனப் பொருளுரைத்தல், அடக்கி என்பதனு ளடங்குதலானும், ககரம் மிகாமையானும், செய்தெனெச்சமாக ஓதாமையா னும் சிறப்பின்றென்க. இதனுள், பணை என்பது நிலமுதற் பொருளும் தொக்கு நின்ற உழவரென்பது மக்கட் கருப்பொருளுமெனக் கொள்க.

௭௦. பழி - பாவம்; பழிக்கப் படுவதனைப் பழியென்றார். நன்கு - நன் கால், அறநெறியால். பசும் பொருள் - ஈரம் (அருள், அன்பு) உடைய பொருள். கழிபடாது - பெற்றான் இரங்குமாறு அழியாமல். இவ்வுவமச் சொற்றொட

உழுதற் சிறப்பு

கண்ணகன்புவி முழுதுமாங் கடுங்கொலை அவுணன்
அண்ணல் மார்பகம் பிளப்பவர் போல்அவிர் மணியின்
வண்ண வன்கடா நிரைநிரை யாத்துவன் படையாற்
பண்ணை தோறுநின் றுழுநர்கம் பலைகளை வெங்கும். ௭௧

மருவு சால்தொறும் வெருவிமுன் குதித்தெழு வாளை
இரும ருப்பிடை உதைந்துழும் எருமையைத் தடுக்கும்
பருவ ரால்குலம் ஓய்யெனப் பாய்ந்தெழுந் தலைக்கும்
உருவ வாற்புறத் துதைந்துவல் விரைந்தெழ உந்தும். ௭௨

பூண்ட வன்கொடுந் தானவன் ஆக்கைபோழ்ந் திடலுங்
காண்ட கும்புவி தன்நிறங் காட்டிய தென்னக்

---

ரால், நன்கின் நீங்கிப் பழியால் ஈட்டிய கரும்பொருள் முழுதும் அழியுமென்ப தூஉம் பெறப்படுதல் காண்க. இவற்றிற்கு, "அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து - தீதின்றி வந்த பொருள்", "அழக்கொண்ட வெல்லாம் அழப் போம்", "சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட் - கலத்துள்நீர் பெய் திரீ இயற்று," அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல்" என்னும் மறைமொழிகள் மேற்கோள். (குறள். ௭௫௪, ௬௫௯, ௬௬௦, ௭௫௫.) இதனுள், வயலென்னும் நிலமுதற் பொருள் வந்தமை காண்க.

௭௧. கண் அகல் - இடம் பரந்த. புவி - பூமி. ஆம் - பொருந்திய, பொத்திக் கிடந்த. பூமி முழுவதும் கிடந்த கிடையால், ஓர் அசுரன் அழிக்கக் கருதியதாகக் கற்பித்துக் கூறியவாறு. அன்றி அங்ஙனம் ஓர் வரலாறு உளதாகல் வேண்டும். உருவகமாக்கி யுரைத்தல் ௭௨ ஆம் செய்யுளோடு முரணுதலுடன் மரபன்றென்க. அண்ணல் - பெருமை. அவிர் - ஒளி வீசு கின்ற. மணி - நீலமணி. வண்ணம் - நிறம். கடா - எருமைக் கடாக்கள். யாத்து - பிணித்து. படை - உழுபடை, கலப்பை. பண்ணை - வயல். கம்பலை - பேரொலி. உள்ளன என்னும் பயனிலை தொக்கது. இதனுள், பண்ணை யென்னும் நிலமுதற் பொருளும், கடாவென்னும் விலங்கும், உழுநர் என்னும் மக்களுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க,

௭௨. சால் - படைச்சால், உழுபடைபிளந்து செல்லும் கீற்று. மருப்பு - கொம்பு. ஓய்யென - விரைந்து. உதைந்து - தாக்கி. அலைக்கும் - அசைக்கின்ற அலைக்கும் வால் என்க. உருவம் - அழகு. வல்விரைந்து - மிக விரைந்து உந்தும் - செலுத்தும். இதனுள், எருமை யென்னும் விலங்கு கருப்பொருள் வந்தமைகாண்க, வாளை, வராலென்பன மருதநில மீன்கள்.

கீண்ட சால்தொறுங் கேழ்கிளர் தமனியங் கிடந்து
மாண்ட பேரொளி வயங்கிநீள் கனையிருள் மேயும். ௭௩

நாற்றுவிடுதற் சிறப்பு

வேறு செய்துபின் பொருத்துறும் வினைவல அமைச்சிற்
கூறு செய்ததன் சேறெலாங் குழப்பி ஒன்றாக்கிச்
சாறு செய்துவா சவற்றொழு துறும்இடர் தவிர்த்து
நாறு செய்கென வெண்முளை வித்துவர் நாளால். ௭௪

முளைநீர் வடித்தற் சிறப்பு

அருள்வி ளங்கவும் உடல்பொரு ளாதிய பந்தந்
தரும்அ வன்புடை யெய்துறக் கொடுத்திடுந் தகைபோல்
பெருக யாத்தநீர்க் கலங்கல்போய்த் தெளிந்தபின் முழுதும்
மருவு கால்வழி வடிந்துறக் கவிழ்ப்பர்கள் மள்ளர். ௭௫

---

௭௩. பூண்ட - பொத்திக் கிடந்த. தானவன் - அசுரன். ஆக்கை - உடல். போழ்ந்திடலும் - பிளந்ததும். கீண்ட - கிழித்த. கேழ்கிளர் - ஒளிமிகுந்த. தமனியம் - பொன். மாண்ட - மாட்சிமைப்பட்ட. வயங்கி - விளங்கி. கனை - நெருங்கிய - மேயும் - உண்ணும்.

௭௪. வேறு செய்து - பிரித்து. வல்ல என்பது குறைந்து நின்றது. அமைச்சின் - மந்திரியைப்போல. செய்து என எச்சமாக்கியும் பின் எனவும் கூறினமையால், "பிரித்தலும் பேணிக்கொளலும் பிரிந்தார்ப் - பொருத்தலும் வல்ல தமைச்சு" (குறள். ௬௩௩.) என்புழிப் பிரித்தலொழிந்த இரண்டையுந் தம்பாலார்க்கும், பிரித்தலைப் பகைவர்பாலார்க்குமாகப் பரிமேலழகர் கூறினரெனினும், பிரித்தலையும் தம்பாலார்க்கே யாக்கி, ஐயத்திற்கிடனாயினர் முதலோரைத் தம்மிற் பிரிக்க வேண்டிற் பிரித்தலும் எனவுரைத்தலே இவரது கருத்துப்போலும்! அன்றி, அதனைப் பற்றாதே கூறினரென்று கொள்ளுதலுமாம். கூறுசெய்த - படைச்சாலாற் பிரிவு படுத்திய. சாறு - விழா. வாசவன் - இந்திரன். தொழுது - தொழுதலால். இடர் - இடையூறு. தொழுது தவிர்த்து என்க. நாறுசெய்க என - நாற்றாகுக என்று. நாளால் - நல்ல நாளில்; உருபுமயக்கம். இதனுள், வாசவனென்னும் தெய்வக்கருப் பொருள் வந்தமை காண்க. மக்கட்கருப்பொருள் இச்செய்யுளினும் மற்றும் ஏற்ற விடத்துங் கொள்க.

௭௫. அருள் - இறைவன் திருவருள், சிவஞானம். ஆதிய - ஆதி புவன போகங்கள். தரும்அவன் - தந்த இறைவன். எய்துற - அடைய. தகை - தன்மை. யாத்த - கட்டிய. கலங்கல் - குழம்புத்தன்மை. தெளிந்தபின் -

முளைநீர் பாய்ச்சுதற் சிறப்பு

கலி விருத்தம்

இளமகப் பசிதனக் கேந்து கொங்கைப்பால்
அளவறிந் தூட்டுதாய் மான ஆறறி
களமர்கள் முளைப்புனல் செவ்வி கண்டுநீள்
வளவயல் பாய்த்தித்தம் மகவின் ஓம்புவார். ௭௬

நாற்று நடுதற் சிறப்பு

ஓரிடத் துயிர்த்ததன் பறழை ஓம்புவான்
பாரிடைப் பல்வயின் உய்க்கும் பூஞைபோல்
காருடற் களமர்கைந் நாறு வாரிப்போய்ச்
சீருடைப் பணைதொறும் நடுதல் செய்வரால். ௭௭

பயிர் பசத்தற் சிறப்பு

மரகதந் தளிர்த்தென வளர்பைங் கூழ்செறி
தரநிறை கழனியுள் சங்கம் ஊர்வன
பரவைநீர் மேய்ந்தெழும் படலைக் கொண்டலுள்
சரமதி நுழைந்துசெல் காட்சி சாலுமால். ௭௮

---

நாற்றிற்கு உணவாதற்குரிய குழம்பியிருந்த பொருள்கள் பூமியிற் படிந்து விட்டமையால் தெளிந்த பிறகு. இது முளையை வயலில் விட்ட மறுநாள் அதிலுள்ள நீரை அறவே வடிவித்தலைக்கூறிற்று. உடல்பொருளாதியவற்றைக் கொடுத்தலை, "அன்றே யென்ற னாவியும் உடலும் உடைமை யெல்லாமுங் குன்றே யனையாய் என்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ" (திருவா. குழை. ௭.) என்னும் அருளாசிரியர் திருமொழியாலுணர்க.

௭௬. இளமக - இளங் குழந்தை. அளவு - காலம், அளவு இருபொருளுங் கொண்டு, பொருட்கண்ணும் அளவாகப் பாய்த்தி என்க. ஆறு-(பயிர் செய்யும்) முறை. களமர்-மருதநிலமாக்கள். செவ்வி-உரியகாலம். பாய்த்தி-பாய்ச்சி. ஓம்புவார்-பாதுகாப்பார்.

௭௭. உயிர்த்த - பெற்ற. பறழ் - குட்டி. வயின் - இடம். உய்க்கும் - சேர்க்கின்ற. பூஞை - பூனை. பூனை தன் குட்டிகளைப் பாதுகாத்தற்குப் பல விடத்துக் கொண்டுபோய் வைத்தல் இயல்பு. காருடல்-கரிய உடல். கைநாறு - சிறிய நாற்றுக்கள்.

௭௮. மரகதந் தளிர்த்தென என்பது இல்பொருளுவமை. பைங் கூழ் - பயிர். செறிதர-நெருங்க. பரவை-கடல். படலை - பரந்த வடிவு. சரமதி-மழைக்காலத்துச் சந்திரன். சாலும்-அமையும்.

களைபறித்தற் சிறப்பு

களமர்கள் களைகளை பருவங் காட்டலும்
இளமயில் வயல்வளங் காண எய்தியாங்
குளமகிழ் கூர்தர உழத்தி மாரெலாம்
வளமலி பணைதொறும் வந்து முற்றுவார். எகூ

அம்புயம் உற்பலம் ஆம்ப லாதியாம்
பைம்புதற் களையறப் பறித்த தம்முருக்
கொன்புனல் தோன்றலுங் கொய்த புன்களை
பின்பினும் முளைப்பதென் பெயர்த்தென் பார்சிலர். அ0

பங்கயம் ஆம்பல்உற் பலத்தில் தேன்உண்டு
தங்கிய வண்டினந் தமது வாள்முகஞ்
செங்கனி வாய்விழி சேர்ந்து மூசுற
அங்கவை கட்டெறிந் தகற்று வார்சிலர். அக

பாயிதழ்த் தாமரை பறித்தங் கொப்புமை
ஆயுந ரெனமுகஞ் சேர்த்தி ஐதுதேன்
வாய்மடுத் திணையில தென்று மாற்றல்போல்
மீயுயர் கரைப்புறம் வீசு வார்சிலர். அஉ

---

எகூ. களைகளை - களையைக்களைகின்ற. கூர்தர - மிக. உழத்திமார் - உழவர்மகளிர். மலி - நிறைந்த. முற்றுவார் - சூழ்வார்கள். இதனுள், உழத்திமாரென்னும் மக்கட்கருப்பொருள் வந்தமை காண்க.

அ0. அம்புயம் - தாமரை. உற்பலம் - குவளை. ஆம்பல் - அல்லி. பைம்புதல் - பச்சென்ற புதர். கொன் - பெருமை. தமது முகம், கண், வாய் என்பனவற்றைத் தாமரை, குவளை, ஆம்பல்களென மயங்கினர் என்க. இதனுள், தாமரை முதலிய பூக்கருப்பொருள் வந்தமை காண்க. பின்பினும் என்றது இடையறாதென்னும் பொருளும், பெயர்த்தென்பது மீளவென்னும் பொருளும் குறித்து நின்றன. இச்செய்யுள் இனவெதுகை.

அக. பங்கயம் - தாமரை. வாள் - ஒளி. மூசுற - மொய்க்க. கட்டு - களைந்து. வண்டுகள் தங்கும் தாமரை முதலியவற்றைப் போக்கினமையால் அவைகள் நீங்கின என்பதுகருத்து. இதனுள்ளும், மேலைக்கருப்பொருள் வந்தமை காண்க.

அஉ. பா - பரவிய. வரையறையின்மையால் யகர உடம்படுமெய் பெற்றது, மாயிருஞாலம் என்பதுபோல. ஆயுநர்என - ஆராய்வார் போல, ஐது - சிறிது. வாய்மடுத்து-குடித்து. மீ உயர்-மேலே உயர்ந்த, ஆயுநரென

இணைவிழிக் கிணையிலை யென்ப தண்மையின்
அணுகிநீ காணென அழைத்துக் காட்டல்போல்
பிணையுநா சியினை நிர் பிடித்து மோந்துதேன்
தணிவில்உற் பலம்முடி சார்த்து வார்சிலர். ௮௩

சைவலங் களைகுவான் குனியத் தாழ்குழல்
எய்திளம் இனத்தினை ஒரேல்மின் என்பபோல்
கைமிசை விழுந்துசிக் குண்ணக் கால்நிமிர்த்
தையபூங் குழல்முடித் தணைகின் றார்சிலர். ௮௪

நறுமலர்ப் பங்கயக் களைய நாரியர்
கறுவொடு முள்ளரைக் காம்பு பற்றலுந்
தெறுகரங் கிழியப்புண் செய்பு மேதமக்
கிறுதிசெய் வார்க்கேவர் இடர்இ ழைத்திடார். ௮௫

அலமரு விழிஇன மாமென ஞமுக
மலர்மிசைப் பாய்தரு கயலும் மாண்டதன்
குலமெனப் புறவடி கூடுங் கூர்மமும்
இலவிதழ்க் கடைசியர் எளிதில் கைக்கொள்வார். ௮௬

---

என்றதும், மாற்றல்போல் என்றதும் தற்குறிப்பேற்றம். இதனுள்ளும் மேலைக் கருப்பொருள் வந்தமை காண்க.

௮௩. அண்மையில் - அருகில். அணுகி - நெருங்கி. பிணையும் - இணைந்த. தணிவில் - நீங்குதலில்லாத. முடி - கூந்தலின் முடிப்பு. சார்த்துவர் - சேர்ப்பார், சூடுவார். இதனுள்ளும் மேலைக்கருப்பொருள் வந்தமை காண்க.

௮௪. சைவலம் - பாசி. இது கறுத்து நீண்டிருத்தலால் மகளிர் கூந்தலுக்கு உவமை கூறப்படும். ஒரேல்மின்-அழிக்காதீர்கள். நிமிர்த்து - வாங்கி. ஐய - அழகிய.

௮௫. நாரியர் - பெண்கள். கறுவு - வயிரம்; தணியாச்சினம். அரை - அடி. தெறு - அழிக்கின்ற. கரம் - கை. செய்புமே என்புழி ஏகாரம் தேற்றம். இறுதி - அழிவு தமக்கு இறுதிசெய்வார்க்கிடர் எவர் இழைத்திடார் என்பது வேற்றுப் பொருள் வைப்பு. எவர் என்றது, துறவிகளல்லாதாரை நோக்கி யென்க. இன்றேல் "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி-தின்னுயிர் நீக்கும்வினை" (குறள். ௩௨௭) என்னும் மறைமொழியோடு முரணு மென்க.

௮௬. அலமரு - சுழல்கின்ற. என - என்று நினைத்து. கூர்மம் - ஆமை. கயல் மீனும், ஆமையும் மருதநிலப் பொருள்கள்.

பறிதரக் களைந்தெறி பாவை மாரைஅம்
மறிபுனற் குவளைகால் வளைத்துப் பாம்பெனப்
பொறிவெரு வுறச்செயும் புடைப்பின் மொய்ம்பிலாச்
சிறியருந் தம்மின்ஆந் தீங்கி ழைப்பரே. அஎ

களிபடு சுரும்புளர் கமலக் கஞ்சமும்
நளிபடு குவளையும் நனைகொள் ஆம்பலுந்
தளிரியற் கடைசியர் முழுதுஞ் சாடுவார்
அளிமரு வலர்க்கெவர் அன்பு செய்குவார். அஅ

புரைதபு பசும்பயிர்ப் பொலிவுங் கங்கெலாம்
நிரைநிரை கிடந்தபல் நிறத்த பூக்களும்
வரைதவழ் முகில்களும் வான விற்களுந்
தரையிடைப் பயன்பெறச் சார்ந்த தொக்குமால். அகூ

இருள்முகி லுறழ்பயி ரிடையெ லாந்தடித்
துருகெழ வயங்கியாங் குலவும் அந்நலார்
திருமலர்ப் பதமெல்லப் பெயர்த்துத் தேங்குழற்
கருஞிமி றார்த்தெழக் கரையில் ஏறுவார். கூ0

---

அஎ. அக் குவளை என இயையும். மறி - மடக்கிய. அலைமறிகின்ற. எனவுமாம். பொறி - ஐம்பொறிகள். வெருவுற-கலங்க. புடைப்பின் - மிகவும் அடித்தால். மொய்ம்பு - வலி. தம்மின்ஆம் - தம்மால் ஆகக்கூடிய. இழைப்பர் - செய்வார். புடைப்பின் இழைப்பர் என்றது வேற்றுப் பொருள் வைப்பு.

அஅ. களிபடு - மயக்கங்கொண்ட. கமலக்கஞ்சம், ஒருபொருட்பன்மொழி. நளிபடு - குளிர்ந்த. நனை - தேன். தளிர்இயல் - தளிர்போன்ற இயல்பு. அளிமருவலர்-(இருபொருட் சொற்றொடர்) அன்பு பொருந்தாத பகைவர், வண்டுகள் பொருந்திய மலர்கள். சிலேடைவகையால் வந்த வேற்றுப் பொருள் வைப்பு. இவ்வாறு வருவதனை வேற்றுப்பொருள் வைப்பணியின்கண் சிலேடையின் முடித்தலென்பர் தண்டியாசிரியர். தாமரை, குவளை, ஆம்பலென்பன தமது முகம், கண், வாய்களுக்குப் பகையெனக் கருதினரெனக் கற்பித்தவாறு.

அகூ. புரை - குற்றம். கங்கு - வரம்பு. களைந்த களையை வரம்பின் மேற் போடுதல் இயல்பு. வரை தவழ் - மலைகளில் தவழ்கின்ற.

கூ0. இருள் - இருண்ட. உறழ்-ஒத்த. பயிரிடை - பயிரின் நடுவில். தடித்து - மின்னல் உருகெழ - அச்சந்தோன்ற. வயங்கியாங்கு - விளங்கினாற்போல. திருமலர் - திருமகள் இருக்கும் மலர், செந்தாமரை;

தெறுங்களை கட்டநீர்ச் செறுவிற் பண்டுபோல்
நறுங்கள்அம் போருகச் சேக்கை நாடிவந்
துறுங்களி ஓதிமம் உயங்கி வாடுவ
வறுங்களம் நாடியுள் மறுகு மாந்தர்போல். சுக

கொள்ளைபோய் நனிவறங் கூர்ந்த காலையும்
வள்ளியோர் விருந்தினர் வாடக் காண்பரோ
கள்ளறு மலர்வள மிழந்துங் கார்வயல்
வெள்ளனம் மகிழமீன் விருந்து நல்குமால். சுஉ

பயிர் வளர்தற் சிறப்பு

மண்ணக மகளிர்கை வண்மை கண்டயாம்
விண்ணக மகளிர்கை மேன்மை காண்டுமென்
றெண்ணிமேற் சேறலுற் றென்ன வான்பயிர்
கண்ணிறை கவின்செழித் தோங்குங் காட்சித்தே. சுங

---

புகழுவமை. தேங்குழல் - தேன்பொருந்திய கூந்தல். ஞிமிறு - வண்டு. மிஞிறு என்பதன்மாற்றம். மெலப் பெயர்த்து எனப் பாடங்கொள்ளுதல் சிறக்கும்.

சுக. தெறும் - (பயிரை) அழிக்கின்ற. செறும் - வயல். நறு - மணம். கள் - தேன். அம்போருகம் - தாமரை. சேக்கை - படுக்கை. களி - மகிழ்ச்சி. ஓதிமம் - அன்னம். உயங்கி - வருந்தி. வாடுவ - சோர்வடையும். மறுகும் - துன்பமுறுகின்ற. வறுங்களம் நாடிமறுகல், களவுப் புணர்ச்சியுள் தோழியிற் கூட்டத்திடத்து, தலைவி இற்செறிப்புண்டமையால் அவளில்லாது வறிதாகிய குறி இடத்தைத் தலைவன் கண்டு வருந்துதல். இது "பரிவுற்று மெலியினும்" (தொல். பொருள். கoங.)என்பதனாற் கொள்ளப்படும்.

சுஉ. கொள்ளை போதல் - ஈண்டு இரவலர் தடையின்றி வாரிக் கொள்ளப் படுதல். நனி - மிகவும். வறம் கூர்தல் - வறுமை மிகுத்த. வள்ளியோர் - வள்ளற்றன்மை யுடையோர். மலர் வளம் - மலராகிய வளம். கார்-நீர். அன்னம் அனமெனக் குறைந்து நின்றது. நல்கும் - கொடுக்கும். வேற்றுப் பொருள் வைப்பு. இதனுள், அன்னமென்னும் பறவைக் கருப் பொருள் வந்தமை காண்க.

சுங. காண்டும் - பார்ப்போம். சேறலுற்றென்ன - செல்லத்தொடங்கினாற்போல. வான் - ஆகாயத்தை நோக்கி (ஓங்கும்) என்க. பயிர், சாதி யொருமை. கண் நிறை கவின் - கண்ணுக்கு நிறைந்த அழகோடு, ஓங்

### கதிர்விடுதற் சிறப்பு

தரவு கொச்சகக் கலிப்பா

ஈன்றெடுத்தோர் குணம்மகவுக் கியைபுமுறைப் படிவித்தின்
தோன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினால்
ஆன்றசெழுங் கதிர்களும்முன் றூவெள்ளை யாயெழுந்து
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால். கூச

### கதிர்முற்றுதற் சிறப்பு

அரமகளிர் அங்கைவளம் அரிபாக்கு மேற்போந்து
திரையெறிநீர்க் கடல்வரைப்பின் தெரிவையர்கைக் கிணையொவ்வா
மரபுணர்ந்து மீண்டென்ன வான்நோக்கிக் கதிர்த்தெழுந்த
பரவுபுனல் தடஞ்சாலி பார்நோக்கி இறைஞ்சுமால். கூரு

பேதைமையில் ஆடவர்முன் வளைவின்றிப் பெதும்பைமையின்
மேதகச்சற் றெனவணங்கி மங்கைமையின் மிகநாணும்
மாதரைப்போற் பைங்கூழின் மன்னனெதிர் கதிர்த்தெழுந்த
ஏதமிலாக் கதிர்முதிர்ந்து வரவரக்கீழ் இறைஞ்சுமால். கூசா

---

கும் - வளர்கின்ற. காட்சித்து - தோற்றத்தை யுடையது. சேறலுற் றென்ன என்றது தற்குறிப்பேற்றம்.

கூச. விளர்த்து - வெளுத்து. பசந்த - பச்சென்றாகிய. தொடர்பு - சம்பந்தம். ஆன்ற - மிகுந்த. தூ - தூய்மை. மான்று - பெருமையுற்று; மாண் என்பதனடியாக மாண்டு என வருதல் போல, மால் என்பதனடியாக மான்று என வந்தது. இது மயங்கி என்னும் பொருளில் இவ்வாறு வருதல் பெருவரவிற்று. மடல் - முளை இலை.

கூரு. அரமகளிர் - தேவமாதர். அரிபாக்கு - அரிய. இணை ஒவ்வா- ஒரு சொல் நீர்மைத்து. மரபு - முறைமை. கதிர்த்து - கதிர்விட்டு. தடஞ் சாலி - பரவிய நெற்பயிர்கள். இறைஞ்சும் - தலைகுனியும். மீண்டென்ன என்றது தற்குறிப்பேற்றம்.

கூசா. பேதை, பெதும்பை, மங்கை என்னபன பெண்பாலார் பருவங் கள். அவை முறையே ஏழு, பதினொன்று, பதின்மூன்று வயதை எல்லை யாக உடையன. அவைகளின் இறுதியில் நின்ற மைவிகுதிகள் அவற்றின் தன்மையை யுணர்த்தின. மேதக - மேன்மை பொருந்த. சற்றென - தண்ணென, பொன்னென என்றாற்போல்வதொரு குறிப்பிசை உரிச்சொல். இது சிறுமைப் பண்புணர்த்தும். சற்று என இடைச்சொற் பெறுதும் வரும். பைங்கூழ் - பயிர். இன் மன்னன் - இனிய வேந்தன், இந்திரன்.

உருத்திட்ப முருக்காலைத் தலைநிமிர்இ உற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
"பெருக்கத்து வேண்டுமால் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்" வெனுமொழியின் சுவைதேற்றும். கூஎ

விளைச்சற் சிறப்பு

தூமதிவாக் கியகிரணந் துளித்தென்னக் கதிர்ச்சாலி
காமர்மணித் தாளங்கள் கான்றுசெறுத் திடராக்கிப்
பூமலராக் கால்யாத்த புனல்முழுதும் புறக்கவிழ்த்து
மாமைநீர் புலர்த்தவரும் மள்ளருளம் மகிழ்விக்கும். கூஅ

வணங்குகுலைக் கதிர்ச்சாலி சிலையாக வளர்பதடி
உணங்குகதிர் கணையாக ஒளிர்முளரிக் கரம்பற்றி

"வேந்தன் மேய தீம்புனலுலகம்" (தொல். பொருள்-ரு.) என்பவாகலின், இந்திரனை மன்னனென்றார். ஏதம் - குற்றம். இதனுள், மன்னனென்னும் தெய்வக்கருப்பொருள் வந்தமை காண்க.

கூஎ. உரு - உருவம். திட்பம் - திண்மை, வலிமை. நிமிர்இ - நிறுத்தி நிமிர்த்து. தருக்கு -செருக்கு. "பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய - சுருக்கத்து வேண்டு முயர்வு" (குறள்-கூசுங.) என்னும் மறைமொழியின் பொருள், 'செல்வம் வந்த காலத்தில் எல்லாரிடத்தும் வணங்குதல் வேண்டும்; வறுமை வந்தகாலத்தில் ஒருவரையும் வணங்காமை வேண்டும்' என்பது. தேற்றும் - தெளிவிக்கும்.

கூஅ. தூமதி - வெள்ளிய சந்திரன். வாக்கிய - தமக்கு வார்த்த. கிரணம் - கதிர்களை. துளித்தென்ன - துளித்துளியாகச் சிந்தினாற்போல. கிரணத்தைப் பொழிதலென்னும் வழக்குப்பற்றி வாக்கிய என்றார். பயிர்கள் வளர்தற்குச் சந்திரனது கிரணங்கள் துணையாகும். காமர்-அழகிய. தாள மணிகளென மாறுக. தாளம் - முத்து. முத்துப் பிறக்கும் இடங்களுள் நெற்பயிர் ஒன்று. கான்று - கக்கி. செறு - வயல். திடர் - மேடு. கால்யாத்த - காலாற்பாய்ச்சிய. கால், இடைச்சொல் எனினுமாம். நீர் பாய்ச்சுதலை நீர்கால்யாத்தலென்பது நூல்வழக்கு. மாமை - அழகு. புலர்த்த - வடிக்க. மகிழ்வித்தல் - நல்லவிளைவாலும், மள்ளர்க்கு வேலையின்றித்தாமே முத்துக்களால் திடர்செய்து நீரைப் போக்கினமையாலுமென்க. பயிர்கள் தீமுற்றிய பின்னர் வயலிலுள்ள நீரை வடித்து விடுதல் இயல்பு.

கூகூ. கதிர் - நெற்கதிர். சிலை - வில். பதடி - பதர். பதடிக்கதிர் என்க. நெற்கதிர் வளைந்திருத்தலும், உலர்ந்த பதர்க்கதிர் நிமிர்ந்திருத்தலும்

இணங்குபசுங் குரல்கவர வரும்புட்கள் இரிந்தோட
அணங்குபுரிந் தெதிர்கண்டோர் அதிசயிப்பச் செயும்பணைகள். கூகூ

பாலொளிநீத் தெழும்விடத்தான் முகில்வண்ணம் படைத்திருந்த
மாலவனர் கலிக்கச்சி வந்தெய்தித் தவம்உஞற்றி
மேலேஉருச் சிவந்தென்ன வெள்ளொளிபோய்ப் பசந்தெழுந்த
சாலியெலாஞ் செங்கனக நிறம்வாய்ந்து தழைக்குமால். க00

நெல்லரிதற் சிறப்பு

அறுசீரடி யாசிரிய விருத்தம்

நாவலோர் புனைந்துரைக்கும் நலமுழுதும் அமைந்துவட நாகஞ் சூழ்பொன், நாவலோ எனவியப்ப வளர்செந்நெல் அரிபருவம் நாடித் தெண்ணீர், நாவலோன் உளங்களிப்பப் படியெடுக்குங் குண்டைநகர் உழவர் போல்வார், நாவலோ எனவிளிப்பத் தொழுவரெலாம் நயந்தெய்தி வினையின் மூள்வார். க0க

---

உண்மையால் அவற்றை வில்லாகவும் அம்பாகவும் கூறினர். முளரி - தாமரைமலர். இணங்கு - பொருந்திய. குரல் - கதிர். இரிந்து - விலகி, அணங்கு-துன்பம்.

க00. கலி - பெருமை, பொலிவு, எழுச்சி, வலி, ஓசை என்னும் பொருள் களைக் குறிக்கும். உஞற்றி - செய்து. கனகம் - பொன். திருமால் விடத் தால் வெண்ணிறம் நீங்கிக் கருநிறமுற்ற வரலாற்றை, மணிகண்டேசப் பட லத்திலும், பின் செந்நிறம் பெற்ற வரலாற்றை வீராட்டகாசப் படலத்திலும் இப்புராணத்திற் காண்க.

க0க. இது சொற்பின் வருநிலை. நாவலோர் - சொல்வன்மை யுடைய வர், புலவர். புனைந்து - அழகுபடுத்தி, புனைந்துரைக்கும் நலம் என்க. வட நாகம் - மேருமலை. பொன் நாவல் என்றது மேருமலையின் தெற்குப் பக் கத்திலுள்ள கந்தமாதன மென்னும் மலையில் ஆயிரம் யோசனை உயரமுடைய தாய் நிற்கும் நாவல் மரத்தை. இதன் பழச்சாறு ஆறாய்ப் பெருகி மேரு மலையைச் சூழ்ந்து, அந்நிலத்தையும் பொன்னாக்கி, மேருமலையின் அடியைச் சேரும். அச்சாற்றை உண்ட பறவை விலங்கு முதலியனவும் பொன்னிறம் பெறும். நாவலோன் - திருநாவலூரில் அவதரித்துத் திருநாவலூரர் என்னும் திருப்பெயர் பூண்ட சுந்தரமூர்த்தி நாயனர். தெண்ணீர் என்பது நகரப் பெயராகிய நாவல் என்பதை விசேடித்து நின்றது. குண்டையூர்க் கிழா ராகிய அன்பரொருவர் சுந்தரமூர்த்தி நாயனருக்கு வேண்டிய நெல்முதலிய படிகளைப் பரவையார் திருமனைக்கு அனுப்பி வந்தமையும், அப்பணியை மழை

கலி விருத்தம்.

ஒருவ ருக்கொரு செல்லல்உற் றுல்அஃ
தருகு ளார்க்கும் அடுப்பது திண்ணமே
கருவி மள்ளர் கதிர்க்குலை தன்னொடும்
பருமென் பூக்களும் பற்றி அரிகுவார். ௧௦௨

அரிவர் சேர்ப்பர் அடுக்குவர் சிக்கென
வரிவர் சென்னியில் வைப்பர் களஞ்செலப்
புரிவர் பொன்னங் கிரியெனப் போர்செய்வர்
பிரிவர் மீள்வர்இப் பெற்றியர் எங்கணும். ௧௦௩

நெற் கதிர்ப்போர்ச் சிறப்பு

சிறைசெய் தீம்புனல் நாட்டிறை செற்றுமுன்
சிறைய ரிந்த வரைகளைச் சீற்றத்தால்
சிறைசெ யக்கரு தித்தன் நிலத்தொரு
சிறைவைத் தாலெனப் போர்கள் சிறக்குமால். ௧௦௪

கடாவிடுதற் சிறப்பு

வெற்பெ லாமண்ணின் வீழ்த்து வலாரிதன்
ஒப்பில் ஊர்தியை ஏவிஒ றுத்தல்போல்

---

வற்றிய காலத்து இறைவனருளால் முட்டின்றிச் செய்தமையும், பெரிய புராணம் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்திற்காண்க. 'நாவலோ' என்பது உழவர்கள் நெல்லரிதற்கு அது செய்வாரை அழைக்கும் குறியீடு. தொழுவர் - உழவர். நயந்து - விரும்பி. மூள்வார் - முயல்வார்.

௧௦௨. செல்லல் - துன்பம். கருவி - கருவியால். வேற்றுப் பொருள் வைப்பு.

௧௦௩. சிக்கென - விரைந்து. வரிவர் - கட்டுவர். புரிவர் - செய்வார். பெற்றியரென்புழி வாளாவிருப்பவரினின்றும் பிரிக்கும் பிரிநிலை ஏகாரமும், எங்கணும் என்புழி உள்ளாரென்னும் பயனிலையுக் தொக்கன. பிரிவர் - களத்தினின்றும் வேறோரிடத்திற்குப் பிரிந்து போவார்கள். மீள்வர் - மறித்தும் களத்திற்குத் திரும்பி வருவார்கள்.

௧௦௪. இது சொற்பின் வருநிலை. சிறை நான்கற்கும் - தடை, சிறகு, சிறை, பக்கம் என்னும் பொருள்கொள்க. நாடு - மருதநிலம். செற்று - சினந்து. சீற்றம் - கோபம். மலைகள் சிறகுடையவாய் இருந்தன என்பதும், அவற்றை இந்திரன் அரிந்தான் என்பதும் புராண வரலாறு. இதனுள், நில முதற் பொருளும், தெய்வக்கருப் பொருளும் வந்தவாறு காண்க.

பற்பல் போர்கள் சரித்துப் பகட்டினம்
முற்பி ணைத்து நடத்துவர் மொய்ம்பினோர். க௦ரு

நெற்ப லாலத்தின் நீங்கிய தோளனப்
பற்பல் கால்முகங் கோட்டின பார்ப்பபோல்
பொற்ப வாயினிற் பூங்கதிர் கவ்வுபு
சொற்ப கட்டினஞ் சுற்றி உழக்குமால். க௦சு

உடலின் ஆவி பிரிந்தென ஊழ்வினைத்
தொடர்பு நீங்குவ தொப்பத் தொகுத்தநெற்
படலை வையினில் நீங்கப் பகட்டினம்
அடைய வுந்தொடர் நீங்கி அகலுமால். க௦எ

தூற்றுதற் சிறப்பு

வைய கற்றி வளியெதிர் தூற்றலும்
பொய்ய கன்றவர் ஐம்பொறி போதல்போல்
கைய கன்று கழிவைப் பொடியொடும்
ஒய்யெ னப்பதர் அப்புறத் தோடுமால். க௦அ

பயன் கொள்ளுதற் சிறப்பு

அறத்து நூல்வழி ஆற்றுவ ஆற்றிஅத்
திறத்தின் எஞ்சிய செந்நெற் குவையெலாம்

---

க௦ரு. வெற்பு - மலை. வலாரி - இந்திரன். தன் ஊர்தி - மேகம். பகடு - எருமைக்கடா; எருதையுங் குறிக்கும். இதனுள், வலாரி என்னும் தெய்வமும், பகடு என்னும் விலங்குமாகிய கருப்பொருள்கள் வந்தமை காண்க.

க௦சு. பலாலம் - வைக்கோல். கோட்டின - வளைத்து. பொற்ப - அழகுண்டாக. பூ - அழகு. கவ்வுபு - வாயிற் கௌவி. சொல் - நெல். உழக்கும் - மிதிக்கும். பார்ப்பபோல் என்றது தற்குறிப்பேற்றம்.

க௦எ. பிரிந்தென - நீங்கினமையால்; வினையெச்சம். ஊழ்வினை - பிராரத்துவ கன்மம். வை - வைக்கோல்.

க௦அ. வளி - காற்று. பொய் அகன்றவர் - அழியுந்தன்மையுடைய பொருள்களின்மேற் செய்யும் பற்றுக்களின் நீங்கி மெய்ப்பொருளைக் கண்டவர். ஐம்பொறி - அவற்றின் செயல். கை, இடைச்சொல். வைப்பொடி - வைக்கோற்பொடி. இதனைக் கூளமென்ப. ஒய்யென - விரைந்து.

க௦கூ. ஆற்றுவ ஆற்றி - கொடுக்க வேண்டுவனவற்றைக் கொடுத்து,

குறித்தெ டுத்துநெற் கூடுய்த் தறச்செயல்
மறப்பி லாத வளக்குடி எங்கணும். ௧௦௯

குறைய வித்தின கொண்டு குடியெலாம்
நிறையச் சாலி நிரப்புவ பூம்பணை
இறைய ளித்த இருநாழி நெற்கொண்டே
அறமெ லாம்நிறை விக்கும் அமலைபோல். ௧௧௦

கொடுப்ப கொண்டு பெருக்கிக் கொடுத்தலால்
அடுத்த வாணிகர் போலும் அகன்பணை
உடுத்த சோலைகள் உம்பர் கடவுள்நீர்
மடுப்ப தென்ன வளர்ந்தெழுந் தோங்குமால். ௧௧௧

கலிநிலைத் துறை

கொண்டல் உகுக்கும் ஆலி நிகர்ப்பக் குளிர்பாளை
விண்டு முகைக்கும் பைங்கமு கெங்கும் விளையாட்டு
வண்டலர் கொங்கைக் கிடையிள நீர்மற் றவர்காணு
தண்ட மிசைக்கொண் டெய்தி அளிக்கும் வளர்தெங்கு. ௧௧௨

செற்றெயில் வென்றார் தேர்மிசை மேற்போக் கெனமென்பூத்
துற்ற பொதும்பர்த் துறையின் இனத்தாற் செருவேற்றுப்

---

திறம் - கூறு. எஞ்சிய - மிகுந்த. குறித்து - அளவு செய்து. கூடு - சேர், உய்த்து - சேர்த்து.

௧௧௦. சாலி - நெல் இறை - இறைவன். அமலை - காமாட்சியம்மை.

௧௧௧. போலும், எச்சம். உடுத்த - சூழ்ந்த. உம்பர் - வானம். கடவுள் நீர் - தெய்வ கங்கை. மடுப்பது - உண்பது.

௧௧௨. உகுக்கும் - சொரிகின்ற. ஆலி - மழைத்துளி. விண்டு - விரிந்து, முகைக்கும் - காயைத் தோற்றுவிக்கும். கமுகு - பாக்கு மரம். வண்டல் விளையாட்டவர் என மாற்றி யுரைக்க. வண்டல் - மகளிர் விளையாட்டு. இடை - தோற்ற. மற்று அசைநிலை. அண்டம் - ஆகாயம். அளிக்கும் - காப்பாற்றும். தெங்கு - தென்னை மரம். கமுகு முகைக்கும் எனவும், தெங்கு அளிக்கும் எனவும் வேறு வேறு வினை முடிபு செய்க. எங்குமென்பது இரண்டிடத்தும் இயையும். காணாது அளிக்கும் என்றது தற்குறிப் பேற்றம். இதனுள், கமுகு தெங்கு என்னும் மரக்கருப்பொருள் வந்தமை காண்க.

௧௧௩. செற்று - அழித்து. எயில் - பகைவருடைய மதில். மேற்போக்கு - மேல் விதானம். துற்ற - நெருங்கிய. பொதும்பர் - சோலை.

பற்றிய வாவி நீங்குபு பைந்தே னடைகிறி
உற்றெழு வாளே பொருதுயிர் விண்டார் கதிகாட்டும். ௧௧௩

போதுகள் மேய நெடுங்கய மேவு புனிற்றுக்கார்
மேதியை ஆயிடை வாளே வெகுண்டு விசும்பேறிப்
பாதி வெரிந்புறம் உட்குழி யக்குதி பாய்ந்தாடி
மீதுயர் திண்கரை யேற உகைக்கும் வியப்பிற்றால். ௧௧௪

சுவைஒளி ஊறோலி நாற்றமேன் ஐந்தின் தொடர்பற்றிக்
கவர்படு நெஞ்சில் திரைதிரை தோறுங் கடைநீர்நாய்
துவள எழும்பா முறைமுறை கீழ்நீர்ச் சுழல்காட்சி
எவரும் இறும்பூ தறவுள வேரித் தடமெங்கும். ௧௧௫

கரைத்துறு தண்பூங் காஞ்சிகள் சாகைக் கரம்ஓச்சி
விரைத்த கரும்பைத் தைவரு தோற்றம் விரிதார்வண்

---

துறை - நீர்த்துறை. சோலைகள் நிரம்பப் பூத்திருப்பது, பகைவர் மதிலை வென்றவர்கள் தமது தேர்மேல் விரித்த முத்து முதலியவற்றாலாகிய விதானம்போன் றுள்ளது என்பது கருத்து. இனத்தால் - இனத்தோடு. செரு - போர். கதி - வீர சுவர்க்கம் புகுதல். தன் இனத்துடன் போர் செய்து கைப்பற்றிய தடாகத்தினின்றும் துள்ளி வானத்தெழுந்த வாளை, போர் செய்து வீர சுவர்க்கம் புகும் வீரர் போன்ற தென்பதாம்

௧௧௪. போதுகள் - பூக்கள். மேய - மேய்வதற்கு. புனிறு - இளமை. கார் மேதி - கரிய எருமை. ஆயிடை - அவ்விடத்திலுள்ள. வெகுண்டு - கோபித்து. விசும்பு - ஆகாயம். வெரிந்புறம் - முதுகு, ஒரு பொருட் பன்மொழி. உகைக்கும் - செலுத்துகின்ற. இதனுள், மேதி யென்னும் விலங்கு கருப்பொருள் வந்தமை காண்க.

௧௧௫. தொடர் - பிணிப்பு. கவர்படு - பிரிவுபடுகின்ற. நெஞ்சில் - மனத்தைப்போல. திரை-அலை. கடை - (அத்திரைகளால்) கடையப் (சுழற்றப்) படுகிற. துவள - துவண்டு. எழும்பா - எழும்பி. நீர்க்கீழென மாறுக. இறும்பூது - வியப்பு. எரித்தடம், இருபெயரொட்டு. வேரித்தடமெனவுங் கொள்வர். எங்கும் உளவென முடிக்க. இதனுள், நீர் நாய் என்னும் விலங்கு கருப்பொருள் வந்தமை காண்க. எரியும் நீர்க்கருப் பொருளாதல் "பிறவும்" (தொல். பொருள். ௧௮) என்பதனால் அமையும்.

௧௧௬. துறு - நெருங்கிய. காஞ்சி - ஓர் மரம். சாகை - கிளை. ஓச்சி - வீசி. விரைத்த - மணம் பொருந்திய. தைவரு - தடவுகின்ற. கேள்வர் - (பரத்தையிற் பிரிந்து வந்த) தலைவர். ஊடும் - ஊடல் கொண்

டிரைத்தெழு திண்டோள் கேள்வரொ டூடும் இளையார்மேல்
நிரைத்தமர் செய்வான் வேள்சிலை பற்றும் நிகழ்விற்றால். ௧௧௬

மேதகு செவ்வணி தாங்கினர் செல்லுமின் அன்னாருந்
தீதற வெள்ளணி பூண்டுசெல் சேடிய ரானோரும்
போதலும் மீள்தலு மாய்ப்பொலி வீதிகள் எங்கெங்குங்
காதல்செய் சேரி மடந்தையர் உள்ளங் கவல்விக்கும். ௧௧௭

தசும்புறழ் கொங்கையொ டெம்பெரு மான்மகிழ் தண்பாசூர்
விசும்பை உரிஞ்சு மதிற்றிரு வல்லம் விரைச்செந்தேன்
அசும்பு தடம்பொழில் ஏனைய வைப்பும் அனந்தஞ்சூழ்
பசும்பணை மாமரு தத்தெழில் யார்பகர் கிற்பாரே. ௧௧௮

நெய்தல்

கலி விருத்தம்.

அம்மருத வைப்பினை அடுத்தகழி நெய்தல்
மம்மர்விட வாலம்அர னுக்குதவு மாற்றால்

---

டிருக்கின்ற. இளையார் - இளமைபொருந்திய தலைவியர். நிரைத்து - (அம்புகளை) வரிசைப்படுத்தி. அமர்செய்வான் - போர்செய்ய. வேள் - மன்மதன். சிலை - வில். நிகழ்விற்று - நிகழ்ச்சித் தன்மையை யுடையது. இதனுள், காஞ்சியென்னும் மரமும் கரும்பென்னும் உணவுமாகிய கருப்பொருள்களும், ஊடலென்னும் உரிப்பொருளும் வந்தமை காண்க.

௧௧௭. மின் அன்னார் - மின்னலை யொத்த சேடியர். பொலி - விளங்குகின்ற. சேரி - பரத்தையர் சேரி. கவல்விக்கும் - கவலையுறச் செய்யும். தலைவன் பரத்தையரிடத்திருக்குங்கால் சேடியர், தலைவி பூப்படைந்தமை யுணர்த்தச் செவ்வணியணிந்தும், தலைவி புதல்வனைப் பெற்று நெய்யாடினமை யுணர்த்த வெள்ளணியணிந்தும் பரத்தையர் வீதியிற் செல்லுதல் இயல்பு. அவற்றை யறிந்து தலைவன் வந்தகாலத்து ஊடல் நிகழு மாதலின், இது ஊடல் நிமித்தமாம். இதனுள், ஊடல் நிமித்த மென்னும் உரிப்பொருள் வந்தமை காண்க.

௧௧௮. தசும்பு - குடம். உறழ் - ஒத்த. கொங்கை - தனத்தையுடைய இறைவி. உரிஞ்சும் - உராய்கின்ற. அசும்பு - கசிகின்ற. வைப்பு - தலங்கள். பகர்கிற்பார் - சொல்லவல்லார். திருப்பாசூர், திருவல்லம் வயல்கள் சூழ்ந்துள்ளமையால் மருதநிலமாயின. இது சிவதலங்கூறி முடித்த வாறு.

௧௧௯. வைப்பு - நிலம். கழி - உப்பங்கழி. நெய்தல் - நெய்தல்நிலம். மம்மர் - மயக்கத்தைத் தருகின்ற. விடவாலம் - ஒரு பொருட் பன்மொழி.

நம்மின மெனப்பொய்ம்மொழி நாடியுரை கைதை
கம்மைய அளக்கரொடு சூழ்ந்துறவு கொள்ளும். கக௯

கண்டல்மட லேறஅலர் தூற்றுகமழ் புன்னை
உண்டுநறை காலும்அளி ஒத்துடன் இசைக்கும்
வண்டுளர் அரும்புவிரி நெய்தல்மண மிசையுங்
குண்டுகழி மெய்பறவை நோக்கிமகிழ் கூரும். க௨0

---

கைதை - தாழை. கம்மைய - முழக்கத்தையுடைய. அளக்கர் - கடல். சூழ்ந்து - ஆராய்ந்து, நெருங்கியென இருபொருள் கொள்க. உறவு கொள்ளும் - நட்புக்கொள்ளும். இனமல்லார் கேண்மை கூடாதாகலான் ஆராய்ந்து, சிவபெருமானோடு பகையுடைமையால் தம் இனமென்றறிந்து நட்புக் கொள்ளும் என்றவாறு. திருமாலும் பிரமனும் தம்மில் மாறு கொண்டு இறைவன் அடிமுடி தேடிய காலத்தில், முடிகண்டேனெனப் பொய்கூறிய பிரமனுக்காகப் பொய்ச்சான்று கூறினமையால், இறைவன் தாழம்பூவைச் சூடாமல் வெறுத்தனனென்பது புராண வரலாறு. இதனுள், அளக்கர், கழி செய்தல் என்னும் நிலமுதற் பொருளும், கைதை என்னும் பூக்கருப் பொருளும் வந்தமை காண்க.

க௨0. கண்டல் - தாழை. மடல் ஏற - இதழிற் பொருந்த. அலர் - மலர். தூற்றுவ என்பதன் இடைநிலையும் இறுதி நிலையும் விகாரத்தால் தொக்கன. சொரியும் என்பது பொருள். நறை - தேன். காலும் - உமிழ்கின்ற. நறை உண்டு காலும் எனக் கூட்டுக. புன்னைகாலும் நறை உண்டு எனவும் கூட்டுவர். அளி - வண்டுகள். ஒத்து உடன் இசைக்கும் - தம்மில் ஒத்து ஒருங்கு இசையைச் செய்யும். மணம் இசையும் - நறுமணத்தைப் பொருந்தும். மடல் ஏற என்பது மடல்மா ஊரவெனவும், அலர் தூற்றுவ என்பது பழிதூற்றும் எனவும், ஒத்து உடனிசைக்கும் என்பது தலைவனுக்கு ஒத்துத் தலைவியை உடன் போக்கும் எனவும், மணம் இசையும் என்பது மணஞ்செய்து கொடுக்க உடன்படுமெனவும் சிலேடைப் பொருள் பயப்ப வைத்தவாறு காண்க. பின்னர் அலர்தூற்றுவ, உடனிசைக்கும் என ஐந்திணைக்குரிய களவொழுக்கமே கூறினமையால் அதற்கேற்ப, மடல் ஏற என்பதற்கு 'மடல்மா ஏறுவலென்று கூற' என்றுரைக்க. தோழி, 'இவ்விடத்துக் காவலர் கடியர்' எனச் சேட்படுத்தவழித் தலைவன் ஆற்றானாய் மடல்மா கூறுமென்றுணர்க. அதனால் தோழி குறை நேர்ந்து கூட்டுவித்த பின்னர் அலரெழுதலும், அதன் பின்னர் உடன்போக்கு நிகழ்தலும் இயல்பு. தெய்வப்புலமைத் திருவள்ளுவரும், களவியலின்கண் நாணுத்துறவுரைத்தலுக்குப் பின்னர் அலரறிவுறுத்தல் வைத்தமை காண்க. எறிய மடற்றிறம்

கண்டுமொழி யார்அவய வத்தெழில் கவர்ந்து
தெண்டிரை அளக்கரின் ஒளித்தது தெளிந்து
கொண்டதுறை யோர்கடல் குளிப்பர்துகிர் சங்கம்
வண்டரளம் வாரிமட வாரெதிர் குவிப்பார். ௧௨௧

எம்முடை உறுப்பெழிலை வவ்வினிர்க ளென்னுக்
கொம்மைமுலை வம்பணி பரத்தியர் வெகுண்டு
விம்முவளை சேல்பவளம் வெண்டரளம் மற்றும்
அம்மபிறர் கொள்ளவிலை யாற்றிமகிழ் கூர்வார். ௧௨௨

கண்ணெழில் கவர்ந்தகடல் மீன்களை உணக்கும்
உண்ணமிழ்த மன்னமட வார்பறவை ஒப்பும்

---

பெருந்திணைக்குரியது. தாழையைத் தலைவனாகவும், புன்னையை ஊரவராகவும், வண்டினைத் தோழியாகவும், நெய்தலைக் கொடைக்குரிமரபினராகவும், பறவைகளைச் சுற்றத்தவராகவும் வைத்துக் கூறியவாறு. உடன்போக்குக் கூறினமையாலும், இசையும் என்றமையாலும் கொண்டு தலைக்கழிந்த தலைமகன் ஆண்டுவரையாது, மீண்டுவந்து தலைமகள் இல்லத்துவரையும் வரைவென்க. குண்டு - ஆழம். பறவை - நீர்ப்பறவைகள். இதனுள், கழி என்னும் நிலமுதற் பொருளும், புன்னையென்னும் மரமும், சுட்டாது கூறிய பறவையும், நெய்தல் கண்டலென்னும் பூவுமாகிய கருப்பொருள்களும் வந்தமை காண்க.

௧௨௧. கண்டு - கற்கண்டு. அளக்கர் - கடல். துறையோர் - நெய்தல் நிலத்தலைவர். துகிர் - பவளம். தரளம் - முத்து. ஒளித்தது என்றதும், தெளிந்து குளிப்பர் என்றதும், தற்குறிப்பேற்றம். இதனுள், கடலென்னும் நிலமுதற் பொருளும், குளித்தலாகிய செய்திக் கருப்பொருளும், துறையோர் என்னும் மக்கட் கருப்பொருளும் வந்தமை காண்க.

௧௨௨. வவ்வினிர்கள் - கவர்ந்துகொண்டீர்கள். வம்பு - கச்சு. பரத்தியர் - நெய்தல்நிலப் பெண்கள். விம்மு - ஒலிக்கின்ற. வளை - சங்கு. சங்கு, சேல்மீன், பவளம், முத்து என்பன கழுத்து, கண், இதழ், பற்களுக்கு ஒப்பாவன. அம்ம, வியப்பிடைச்சொல். என்று விலையாற்றுவரென்பது தற்குறிப்பேற்றம். இதனுள், பரத்தியர் என்னும் மக்கட் கருப்பொருளும், விலையாற்றுதலென்னும் செய்திக் கருப்பொருளும் வந்தமை காண்க.

௧௨௩. உணக்கும் - உலர்த்துகின்ற. உணக்கும் மடவாரென இயையும். ஒப்பும் - ஓட்டுகின்ற. விழை - விரும்புகின்ற. பவ்வம் - கடல். அருக்கன் - சூரியன். கடல் பகலில் மெல்லென ஒலித்தல் இயல்பு. மடுப்ப

பண்ணிசை மடுப்பவிழை பவ்வமும் அருக்கன்
விண்ணெழு பகற்பொழுதின் மெல்லென ஒலிக்கும். ௧௨௩

தணந்தவர்கள் ஆருயிர் வருத்தவிறல் சாற்றி
மணந்தழுவு தும்பைமலர் சூடிஅடல் மாரன்
அணங்கமர்செய் காலமென ஓர்ந்துமுர சாழி
இணங்குற இராப்பொழுதின் மிக்கொலி எழுப்பும். ௧௨௪

வீழ்ந்தவர் தணத்தலின் விழிப்புனல் உகுத்துத்
தாழ்ந்தழு திரங்குமட மாதர்தமை நோக்கி
ஆழ்ந்தகழி மாதும்உடன் நின்றழுவ தென்னச்
சூழ்ந்துபுள் அரற்றமலர் தேத்துளி துளிக்கும். ௧௨௫

நலம்பயில் பொருட்குமலி வங்கமிசை நண்ணும்
புலம்பர்வரு கின்றவழி நோக்கினர் புலம்பி

மெல்லென ஒலிக்குமென்றது தற் குறிப்பேற்றம். இதனுள் பவ்வமென்னும் நிலமுதற் பொருளும், மடவாரென்னும் மக்களும், உணக்குமென்னும் செய்தியுமாகிய கருப் பொருள்களும் வந்தமை காண்க.

௧௨௪. தணந்தவர் - தம்மிற் பிரிந்த தலைவன் தலைவியர். விறல் - வலிமை. சாற்றி - சொல்லி. அடல் - வெற்றி. மாரன் - மன்மதன். அணங்கு - வருத்துகின்ற. அமர் - போர். ஓர்ந்து - தெரிந்து. ஆழி - கடல். கடல் மன்மதனுக்கு முரசமாகும். கடல் இரவில் மிகவும் ஒலித்தல் இயல்பு. ஓர்ந்து ஒலியெழுப்பும் என்றது தற்குறிப்பேற்றம். இதனுள், ஆழியென்னும் நிலமுதற் பொருள் வந்தமை காண்க.

௧௨௫. வீழ்ந்தவர் - விரும்பியவர், விரும்பப்பட்டவர் இருபொருளுங் கொள்க; தலைவர் என்றபடி. உகுத்து - சொரிந்து. தாழ்ந்து - அழகு குறைந்து. இரங்கும் - வருந்துகின்ற. கழிமாது - கழியாகிய பெண், உருவகம். புள் - பறவைகள். அரற்ற - ஒலிக்க. தேத்துளி - தேன்துளி. அழுவதென்ன அரற்றத் துளிக்குமென்றது தற்குறிப்பேற்றம். இதனுள், கழியென்னும் நிலமுதற் பொருளும், சுட்டாது கூறிய புள்ளும் மலருமாகிய கருப்பொருள்களும், இரங்குதலென்னும் உரிப்பொருளும் வந்தமை காண்க.

௧௨௬. வங்கம் - மரக்கலம். புலம்பர் - நெய்தல் நிலத்தலைவர். இலம்படு - (உயிர்வாழுந் தன்மை) இல்லாத. இன்னுயிர் - இன்பம் நுகர்தற்குரிய உயிர். தளிர்ப்ப - சோராது தழைக்க. அலம்பு - ஒலிக்கின்ற. இது அலைக்கு அடை. திவலை - துளி. அலை - அலையால். வாரி - கடல். பிரிவாற்றாமையால் உயிர் சோரும் தலைவியரைத் தேற்றுதற் பொருட்டுப்

இலம்படு மடந்தையர்கள் இன்னுயிர் தளிர்ப்ப
அலம்புகுளிர் பூந்திவலை வீசும்அலை வாரி கஉசு

புன்புற மதத்தரும் வியந்துபுகழ் செய்ய
என்பைஒரு பெண்ணென இயற்றுநகர் ஒற்றி
நன்பதி முதற்பல உடுத்தநளி நெய்தல்
தன்பெருமை யாவர்அள விட்டறி தரத்தோர். கஉஎ

### திணை மயக்கம். *

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத் திணைவளமுந் தெரித்துக் காட்ட, மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்

---

பனிநீர் முதலியவற்றைத் தெளித்தல் இயல்பு. இதனுள், வாரியென்னும் நிலமுதற் பொருளும், புலம்பர் மடந்தையரென்னும் மக்கட் கருப்பொருளும், புலம்பியென்னும் இரங்கலுரிப் பொருளும் வந்தமை காண்க.

கஉஎ. புறமதத்தர் - சமணர் முதலியோர். புகழ் செய்ய - புகழ. இயற்றும் - இயற்றுதற்கிடமாகிய; தானே இயற்றியதென்னும் நயந்தோன்ற வைத்தவாறு. நகர் - திருமயிலை. ஒற்றி - திருவொற்றியூர். நளி - குளிர்ச்சி. திருஞானசம்பந்தப் பெருமான் திருமயிலையில் எலும்பைப் பெண்ணாக்கின வரலாறு பெரிய புராணம் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணத்துட் காண்க. இத்தலங்கள் கடற்கரையை அடுத்துள்ளமையால் நெய்தல் நிலமாயின. இது சிவதலங் கூறி முடித்தவாறு.

* மலை, காடு, நாடு, கடலென்பனவும், காடும் மலையும் அவை சார்ந்த இடமும் தம்மியல்பழிந்து நடுநிகர்த்ததுமாகிய நிலங்கள் இவையெனப் பிரித்தறியுமாறு வேறு வேறு நிற்றலன்றி, அவை தம்முள் ஒன்றும் பலவுங் கலந்து நிற்றலும், அதனால் அவற்றிற்குரிய உணா, விலங்கு, மரம் முதலிய கருப்பொருள்கள் கலந்து தோன்றலும், புணர்தல் முதலிய உரிப்பொருள்களாகிய ஒழுக்கம் கலந்து நிகழ்தலும் நாட்டிற்கு இயல்பாதலின், அதனைக் குறிஞ்சி முதலிய திணைகளுள் ஒன்றாகக் கூறுதல் பொருந்தாமையின், 'திணை மயக்கம்' என்பர். திணை யென்பது நிலம் முதலிய மூன்று மென்பது மேலும் உரைத்தாம். மயக்கம் - கலப்பு. உரிப்பொருள் இவ்விடத்திற்குச் சிறந்ததன்றாகலானும், நிலமயக்கம் தானே பெறப்படுதலானும் ஆசிரியர் கருப்பொருள் மயக்கம் ஒன்றே கூறுப.

கஉஅ. மரு - வாசனை. இது வாய்க்கு அடை. தொண்டைஎன்பதற்கும் அடையாக்குவர். தொண்டை - கொவ்வைக்கனி. வாய் இதழ். குன்றைநகர் - குன்றத்தூர். இது தொண்டை நாட்டிலுள்ளது. குலக்கவி - சிறந்தபாவலர்,

குலக்கவியே வல்லான் அல்லால், கருக்கொண்டர் எம்போல்வார் எவ்வாறு தெரிந்துரைப்பார் கலந்தார்க் கின்பம், அருக்கொண்ட ரணியில்அவை ஒன்றோடொன் றியைந்தனவும் ஆங்காங் குண்டால்.

வரைப்பிண்டி மலர்தூவி வனப்பலா செதிர்சொரிந்த மலருள் மூழ்கி, நிரைக்கும்பூங் கணைதூவி மதன்எம்மான் விழிநெருப்புள் நிற்றல் காட்டும், வரைத்துன்று கறிக்கொடிபோய்க் கடுக்கைமிசை மரகதத்தோ ரணம்போல் தாவி, நிரைக்கிள்ளை வாரணமும் எதிர் நடப்பப் பொருநர்நெடுங் கயிறு காட்டும். கஉகூ

சுற்றெல்லா மலர்முல்லை ததைந்துபெருந் தூறுசெய அதன்கீழ் எண்கு, பற்றிநுழைந் துறங்கநடு வளர்கொன்றை மிசைக்கறிதாய்ப்

சேக்கிழார். வல்லான் என்றது, தொண்டை நாட்டு நானிலத்து ஐந்திணை வளத்தைப் பெரிய புராணத்துள் திருக்குறிப்புத்தொண்ட நாயனர் புராணத்தில், குறிஞ்சி முல்லை மருதம் நெய்த லென்னும் முறையால் ஓரடிக்கு ஒன்றாக நான்கையும் ஐந்து திருப்பாசுரங்களால் தொகுத்தும், பின்னர் அம் முறைப்படி தனித்தனி சில திருப்பாசுரங்களால் வகுத்தும், இடையில் குறிஞ்சிக்குப்பின் பாலையை ஒரு திருப்பாசுரத்தால் சுருக்கியும், கருப் பொருள் மயக்கங் கூறி இவை இவை இன்ன நிலமும் இன்ன நிலமும் மயங்கின என விதந்தும், அரிய சொல் நயமும் பொருள் நயமும் கற்பார் உளத்தைக் கவருமாறு கூறிய அருமையேயன்றி, ஒவ்வொரு திணையின் இறுதியிலும் அவற்றிற்கு இயைபுடைய சிவதலங்களை எடுத்துக் காட்டி முடித்த சிறப்பும் பிறர்க்கு எய்தாத வகையில் முற்பட்டு நிற்றல் பற்றியென்க. இன்னும் இதனை விரிப்பிற்பெருகும். கருத்தொண்டர் - பிறவிக்கு அடிமையாயுள்ளவர். இது தெரிந்துரையாமைக்குக் காரணம் கூறியவாறு. அருத்து ஒன்றாணி - ஊட்டுகின்ற புகழ் வாய்ந்தபூமி. இது காரணப் பெயராய்த் தொண்டைநாட்டை யுணர்த்திற்று.

கஉகூ. வரை - மலை. பிண்டி - அசோகு. பலாசு - முருக்கு. நிரைக்கும் - வரிசைப்பட்ட. பூங்கணை - மலர் அம்பு. முருக்கமலர் சிவப்புடையது. பிண்டி, தூவி மூழ்கி காட்டும் என்க. கறிக்கொடி - மிளகுக்கொடி. கடுக்கை- கொன்றை மரம். கிள்ளை - கிளி. வாரணம் - கானங்கோழி. பொருநர் - கழைக்கூத்தாடிகள். அசோகு, மிளகு, கிளி குறிஞ்சிக்குரியன; முருக்கு, கொன்றை, கானங்கோழி முல்லைக் குரியன. இது குறிஞ்சி முல்லைகளின் மயக்கம்.

கஙo. ததைந்து - நெருங்கி. தூறுசெய - புதராக வளர. எண்கு - கரடி. கறி - மிளகுக்கொடி. தாய் - தாவி. வெரீஇ - அஞ்சி. அங்கண் -

படருந் தோற்றம், உற்றரக்கன் வெள்ளிமலை எடுத்தநாள் வெரீஇத் தழுவும் உமைபா ளோடும், கற்றைவார் சடைப்பெருமான் நின்ற நிலை காட்டுவதும் உண்டால் அங்கண். கஙo

தாம்பயிலும் வரைக்கிளைத்த செயலைமலர் கவர்மாரன் தன் மேல் சீறி, ஆம்பலினங் கழனியிற்போய் அவன்சேமச் சிலைக் கரும்பை அழித்துண் டார்க்கும், பூம்படுகர்ப் பகட்டினங்கள் வெகுண்டெழுந்து மலைச்சாரற் புனிற்று வாழை, தேம்பயில்செந் தினையனைத்தும் அழித்துழக்கி மேய்ந்தவக்குஞ் செவ்வித் தோர் பால். கஙக

வரைக்குறக்கன் னியர்புனத்துக் குருகோட்டும் கவண்மணிக்கல் மருதத் தெண்ணீர்த், திரைக்கயத்துத் திடர்செய்ய அந்நிலத்துச் சிறுமகார் சினமீக் கொண்டு, விரைத்தகுழற் பேதையர்கள் வண்ட லாட் டயர்துறையின் மேவிப் பந்தும், நிரைக்கழங்கும் அவரலறப் பறித்தெறிந்து நீர்ச்சுனையைத் தூர்ப்பார் அங்கண். கஙஉ

தாமும்ஒரு பயப்படார் பயப்படுவார் தம்மையுந்தம் போற்செய் வார்போல், காமர்அளி நுகராமல் கழிப்பூமேல் அடுக்கலுறுங் கனி

---

அவ்விடத்தில். மலர்முல்லைத்தூறு, காடி, கொன்றை மரம், மினுக்கொடி இவைகள் நிறத்தால் வெள்ளிமலை, இராவணன், இறைவன், இறைவி இவர் களை ஒத்திருக்கின்றன என்றபடி. இவற்றுள் முல்லையும் கொன்றையும் முல் லைக் குரியன; ஒழிந்தன குறிஞ்சிக் குரியன. இதுவும் அம்மயக்கம்.

**கஙக.** செயலை - அசோகு. மாரன் - மன்மதன். ஆம்பல் இனம் - யானையின் கூட்டங்கள். சேமச்சிலை - இருப்பாக வைத்துள்ள வில். ஆர்க்கும் - ஆரவாரிக்கும். படுகர் - வயல். பகட்டினம் - எருமைக்கடா வின் கூட்டம். புனிறு - இளமை. தேம் - இனிமை- உழக்கி - கலக்கி செவ்வி - பதம். சீறி, அழித்து உண்டு ஆர்க்கும் என்றது தற்குறிப்பேற்றம் பகடும் கரும்பும் மருதத்துக்குரியன; ஏனைய குறிஞ்சிக் குரியன. இது குறிஞ்சி மருதங்களின் மயக்கம்.

**கஙஉ.** மகார் - பிள்ளைகள். விரைத்த - வாசனை பொருந்திய. குழல் - கூந்தல். பேதையர்கள் - (குறப்) பெண்கள். வண்டலாட்டு - விளையாட்டு. அயர் - செய்கின்ற. துறை - இடம். கழங்கு - கழற்காய் கயம் மருதத்துக்குரியது; சுனை குறிஞ்சிக்குரியது. இதுவும் அம் மயக்கம்.

**கஙங.** பயப்படுதல் - பயன் படுதல். காமர் - அழகு. நுகராமல் - உண்ணுதபடி. கழி - கடலைச் சார்ந்த நீர்க்கழி. அடுக்கல் - மலை, கனி -

தேன் ஊற்றும், ஆமிதனை அறிந்துவெகுண் டெழுந்தென்ன அணி வேங்கைக் குடுமி தன்னை, காமநீள் கடல்பவளக் கரநீட்டிப் பற்றி யிடு நலமும் ஓர்பால். கஙௌ

அலைக்காகம் மலைச்சாரற் பலாச்சுளையைக் கவ்வியெழுந் தாக்கர் கோமான், சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்ற லெனவங்கஞ் சேரும் அந்நாள், நிலைப்பான மதில்இலங்கை மிசைத்தாவும் அனு மனைப்போல் நீள்வால் மந்தி, மலைப்பால்நின் றலைத்தோணி பாய்ந் துழக்கி மீண்டெய்தும் வாழ்வும் அங்கண். கஙச

இடைச்சியர்பால் நடைகற்பச் செல்வதென வயல்மேவும்* எகின மெல்லாம், படைத்தவளம் பாடியிற்போய் ஆன்பாலை வாய் மடுத்துப் பையுள் நீங்கும், மடைத்தலைசூழ் வயல்மகளிர் மொழி பயிலப் போவதென வனத்துள் வாழும், பெடைக்குயில்போய்ப் பணைக்கமுகின் கனிதொண்டைக் கனியென்னப் பேணும் ஓர்பால்.

கொடும்பரவர் கழியுழக்கக் குதித்தெழுமீன் ஆய்ச்சியர்பாற் குடத்துள் வீழ்ந்தங், கடும்பயத்தோ டலமருமற் றவர்கடையுந் தயிரோதைக் கலமந் தோடி, ஒடுங்குமுயல் கைதையினுள் அடங்கி யங்கட் கடலொலிகேட் டுள்ளம் மாழ்குங், கடுங்கருமத் தொடர் அந்தோ யாங்குறினும் விடாதென்னக் காட்டும் ஓர்பால். கஙசு

---

வேங்கை மரம். வேங்கைப் பூவிலுள்ள தேனை வண்டுகள் உண்பதில்லை. கனி குறிஞ்சிக்குரியது; ஏனைய நெய்தற்குரியன. இது குறிஞ்சி நெய்தல் களின் மயக்கம்.

கஙச. தாசரதி - தசரதன் புதல்வன், இராமன். வங்கம் - மரக்கலம். நிலைப்பு - நிலைபேறு, அழிவின்மை. மந்தி - குரங்கு. பலாவும், குரங்கும் குறிஞ்சிக் குரியன; ஏனைய நெய்தற்குரியன. இதுவும் அம்மயக்கம்.

கஙரு. எகினம் - அன்னம். பாடி - முல்லை நிலத்து ஊர். ஆன் பால் - பசுவின் பால். வாய்மடுத்து - உண்டு. பையுள் - வருத்தம். தொண்டைக் கனி - கொவ்வைக் கனி. பேணும் - விரும்பும். எகினமும் கமுகும் மருதத்திற்குரியன; ஏனைய முல்லைக் குரியன. இது முல்லை மருதங்களின் மயக்கம். * "மேயும்" எனவும் பாடம்.

கஙசு. பரவர் - நெய்தல் நில மாக்கள். அடும் - காய்ச்சுகின்ற. பயம் - பால். அலமரும் - சுழலும். ஓதை - ஓசை. அலமந்து - மனஞ்சுழன்று. மாழ்கும் - வருந்தும். கருமத்தொடர் - வினைக் கட்டு. ஆய்ச்சியர் பாலும்,

இடுகும்இடைக் கடைசியர்கள் களைந்தெறிந்த நறுங்கமலம் இரைக்கும் முந்நீர்ப், படுதிரைமேல் வயங்குதலுங் கடல்முளரி பூத்ததெவன் பாரீர் என்பார், உடைதிரைநீர்க் கடல்கிளைத்த துகிர்க் கொடிபோய்ப் பழனமிசை ஒளிரக் கண்டோர், கடிவயலுந் துகிர் ஈன்றதென்னென்பார் இப்பரிசு கவினும் ஓர்பால். ௧௩௭

வரைப்புறத்துப் பசுங்கிளியுங் கான்குயிலும் உடன்ஆன்பால் மடுத்துப் புட்கள், இரைத்தெழுபூம் பணைமருதச் சேக்கைமிசை எதிரெதிருற் றிசைகள் பாடும், நிரைக்குடுமி வரைப்பகடும் வயற் பகடுங் கரும்பொடித்து நெரித்து மாந்திக், திரைத்தடநீர்க் கான் யாற்றுத் திளைத்தாடி உடனுறங்குஞ் செவ்வித் தோர்பால். ௧௩௮

புறவகத்த குமிழ்ம்போதுங் கழிக்கானல் கைதைதரும் பொலங்கேழ்ப் பூவுந், தறைபொறுத்த வரைதோன்றித் தண்மலர் மேல் இருபுடையுந் தாங்கி நின்றே, இறைவனுக்காம் மலர்மோந்தாள் மூக்கரிந்து சுரிகையுடன் ஏந்தி அந்நாள், முறைநிறுத்த செருத்துணை யார் நின்றநிலை காட்டிவளம் முகிழ்க்கும் ஓர்பால். ௧௩௯

---

முயலும் முல்லைக்குரியன; ஏனைய நெய்தலுக்குரியன. இது முல்லை நெய்தல்களின் மயக்கம்.

**௧௩௭.** இடுகும் - சுருங்கிய. இரைக்கும் - ஒலிக்கின்ற. முந்நீர் - கடல். வயங்குதல் - விளங்குதல். முளரி - தாமரை. துகிர் - பவளம். பழனம் - வயல். கடி - விளக்கம். கவினும் - அழகு செய்யும். கடலும், துகிரும் நெய்தற்குரியன; ஏனைய மருதத்திற்குரியன. இது மருத நெய்தல்களின் மயக்கம்.

**௧௩௮.** கான் - காடு. புட்கள் - பறவைகள். மருதச் சேக்கை - மருத மரமாகிய தங்குமிடம். குடுமி - கொடுமுடி. வரைப்பகடு - யானை. வயற் பகடு - எருமைக்கடா. மாந்தி - உண்டு. திளைத்து - இன்பமுற்று. கிளியும், யானையும் குறிஞ்சிக்குரியன; மருதமும், கடாவும், கரும்பும் மருதத்திற்குரியன; ஏனைய முல்லைக்குரியன. இது குறிஞ்சி முல்லை மருதங்களின் மயக்கம்.

**௧௩௯.** கானல் - கடற்கரைச் சோலை. பொலங்கேழ் - பொன்னிறம். சுரிகை - உடைவாள். தோன்றி - செங்காந்தள். வரை தாங்கி நின்று என்க. இறைவனுக்கு ஆதற்குரிய மலரை மோந்த பல்லவர்கோன் மனைவியைச் செருத்துணை நாயனார் மூக்கரிந்த வரலாற்றைப் பெரிய புராணம் செருத்துணை நாயனார் புராணத்துட் காண்க. செங்காந்தள் கையும், தாழம்பூ உடைவாளும், குமிழம்பூ மூக்குமாகத் தோன்றுமென்பதாம்.

விண்முட்டுங் குடுமிவரைத் திகிரிபடும் வெண்முத்தும் வேலைச் சூழல், மண்முட்ட நறும்புன்னை உகும்அரும்புந் தலைமயங்கி அவற்றுட் சேர்ந்த, தண்முட்டை இதுவென்னப் பகுத்தறிய வல்லாது தளர்வு கொண்டு, கண்முட்ட வளம்படைத்த வயல் அன்னந் துயர்கூருங் காட்சித் தோர்பால். கச0

குறுஞ்சுனையிற் களிவண்டு சுழன்றுடுங் கான்குயில்கள் குரை நீர்ப் புன்னை, தொறும்பொதுளுங் கருங்கொடிதன் குடம்பையிற் போய்க் கருவுயிர்த்துச் சுலவி மீண்டு, நறும்பிரச மலர்க்காஞ்சிச் சினையேறி ஒளியிருந்து நாடிக் காலம், உறுந்துணையும் இனிதுறையும் உலவாத வளங்காட்டி ஒங்கும் ஓர்பால். கசக

கறிக்கொடியுந் துகிர்க்கொடியும் நெடுவயலைப் பசுங்கொடியுங் கமழ்தேன் மௌவல், வெறிக்கொடியும் நாற்றிசையுந் தாய்ப்படர

---

குமிழ் - முல்லைக்குரியது; தாழை நெய்தலுக்குரியது. இது குறிஞ்சி முல்லை நெய்தல்களின் மயக்கம்.

கச0. திகிரி - மூங்கில். படும் - உண்டாகின்ற. சூழல் - இடம், இது கரையிடத்தைக் குறிக்கும். முட்ட - முழுதும். உகும் - சொரிந்த. தலை மயங்கி, ஒருசொல் நீர்மைத்து, தலைப்பிரிதல் என்பது போல; ஒன்றுபட்டு என்பது பொருள். வல்லாது - இயலாமல். கண்முட்ட - கண்கள் பூத்துப்போம்படி, (பார்ப்பதற்குக்)கண்கள் போதாமற் போம்படி எனலுமாம். மூங்கில் குறிஞ்சிக்குரியது; புன்னை நெய்தலுக்குரியது; அன்னம் மருதத்திற்குரியது. இது குறிஞ்சி மருத நெய்தல்களின் மயக்கம்.

கசக. களி - மயக்கம். பொதுளும் - நெருங்கிய. கொடி - காக்கை. குடம்பை - கூடு. கருவுயிர்த்து - முட்டையிட்டு. சுலவி - சுழன்று. பிரசம் - தேன். காஞ்சி - ஒருமரம். சினை - கிளை. உலவாத - கெடாத. காலமுறுந் துணையும் இனிதுறைதல், "காலங் கருதி யிருப்பர் கலங்காது— ஞாலங்கருதுபவர்" (குறள். ௪அரு.) எனக் கூறப்பட்டமை காண்க. குயில் காக்கையின் கூட்டில் முட்டையிடுதலும், அதனைக் காக்கை குஞ்சு பொரித்து வளர்த்துத் தன் குஞ்சல்லாமை தெரிந்து ஓட்டிவிடுதலும், தாய்க்குயில் அதுகாறும் காலம் பார்த்திருத்தலும் இயல்பு. குறுஞ்சுனையும், குயிலும் முல்லைக்குரியன. காஞ்சி மருதத்திற்குரியது. ஏனைய நெய்தலுக்குரியன. இது குறிஞ்சி மருத நெய்தல்களின் மயக்கம்.

கசஉ. கறிக்கொடி - மிளகுக்கொடி. துகிர்க்கொடி - பவளக்கொடி. வயலைக்கொடி - வசளைக்கொடி. மௌவல்கொடி - முல்லைக்கொடி. இவை

நடுவளர்ந்த விரைக்குராமேல், கிறிக்கொடிய பெருங்காற்றாற் பல்காலும் அசைபாவைக் கிளர்ச்சி வாள்கண், மறிக்கொடியுங் கூத்தியர்செய் கயிறுவிசி கழைக்கூத்தின் வயங்கும் ஓர்பால். ௧௪௨

இனையநா னிலம்அடுத்த வளாகமெலாம் பெருங்குடிகள் இயல்பின் ஓங்கித், தினையளவும் முறைபிறழாத் தொண்டைநாட் டணிமுழுதுந் தெரித்துக் கூறக், கனைதிரைநீர்க் கடலாடை நிலவரைப்பின் யாருளரோ கற்ப நாட்டுந், தனைநிகர்பா தலதலத்தும் அன்னதேயெனிற்பிறிது சாற்று மாறென். ௧௪௩

எந்நாட்டுப் பெருவளமும் எவ்வெவர்கோட் பாடுகளும் இயம்பவல்ல, பொன்னாட்டுப் பொன்செருக்கும் பல்நாக்குப் பணிச்செருக்கும் போக்கும் இந்த, நன்னாட்டைப் புலவரெலாந் தொண்டைநா

---

முறையே குறிஞ்சி நெய்தல் மருதம் முல்லைகளுக்குரியன. வெறி - வாசனை. தாய் - தாவி. குராமரம் பாலைக்குரியது. கிறி - வழி, வழிக்கொண்டு வீசும் காற்றால் என்க. ஓசைக்குறிப்பெனக் கூறுவாரும் உளர். கண்மறிக்கு வாள் ஒடியும் எனக்கூட்டுக. மறி - மான். ஒடியும் - தோற்கின்ற. கூத்தியர் - கழைக்கூத்தாடும் மகளிர். விசி - கட்டிய. இது ஐந்திணைகளும் மயங்கிய மயக்கம். இதனுடன் திணைமயக்கத்தையும் நானிலத்து ஐந்திணை வளத்தையும் முடித்தார். இவ்வைந்திணை வளத்துள் அகப்பொருள் ஏற்றபெற்றி கூறியவாறு கண்டு கொள்க.

௧௪௩. அடுத்த - பொருந்திய. நானில மென்புழி - ஆக்கச்சொல் வருவித்து நானிலமாகப் பொருந்திய எனவுரைக்க. வளாகம் - சூழ்ந்த இடம். தெரித்து - வகுத்து. கனை - ஒலிக்கின்ற. வரைப்பு - இடம். கற்பநாடு - கற்பகநாடு, விண்ணுலகம்.

௧௪௪. பொன் - வியாழன், தேவகுரு. பணி - ஆதிசேடன். தொண்டை என்பது கொவ்வை எனவும் பொருள் தருமாகலானும், பெண்களுடைய வாயைக் கொவ்வைக்கனி போல்வதெனக் கூறுதல் வழக்காதலானும், நிலவுலகமாகிய பெண்ணின் முகத்திற் பொருந்திய வாயாகும் நாடென்பார் தொண்டை நாடென உரைப்பார் போலும் என்றவாறு. இது தற்குறிப்பேற்றத்தின்பாற்படும். கரிகாற் சோழன் நாக கன்னிகையைக் கண்டு காமுற்றபோது, அவள் என்னிடத்திற் பிறக்கும் பிள்ளைக்கு அரசு கொடுப்பதாயின் இணங்குவேனென்று கூற, அரசன் உனது புதல்வனை ஆதொண்டைக் கொடியைச் சூடி அனுப்பினால் யான் அறிந்து அரசு தருவேனென்று சொல்லி இன்பம் நுகர்ந்து சென்றனன். பின்னர் நாக கன்னிகை, தன் புதல்வனை

டெனவுரைப்பர் ஞால மங்கை, தன்னாட்டோ தனையமுகக்கனிவா
யாங் காரணத்தின் சார்பாற் போலும். கசச

சலதியுடைச் சேயிழைக்குந் தமிழ்நாடே மதிமுகமாத் தமிழ்நாட்
டுள்ளு, மலர்புகழ்த்தண் டகநாடே கனிவாயா அதனுள்ளுஞ் சாதி
பேதங், குலவும்ஆ ருயிர்க்கெல்லாந் தத்தமது மரபொழுக்கங்
குடங்கை சேர்ஆ, மலகமெனத் தேற்றுதலின் நாவெனலாங் காஞ்சி
நகர் வண்மை சொல்வாம். கசரு

ஆகத் திருவிருத்தம் - கஎஉ.

---

அவ்வாறே ஆதொண்டைக் கொடி சூடிக் கடலில் புணையில் அனுப்ப, அலை யாற் கரையேறித் தனது தந்தையால் தரப்பட்ட காஞ்சி மண்டலத்தை ஆண்டனன். ஆதொண்டைக் கொடி சூடப் பெற்றமையால் அவனுக்கு ஆதொண்டைச் சக்கரவர்த்தி, தொண்டைமா னென்னும் பெயர்களும், அவன் ஆண்ட நாட்டிற்குத் தொண்டைநா டென்னும் பெயரும் உண்டாயின. இதுவே தொண்டைநா டென்னும் பெயருக்குக்காரணம். தண்டகன் ஆண்டமையால் தண்டக நாடெனவும், துண்டீரன் ஆண்டமையால் துண்டீர நாடெனவும் பெயர் பெற்றது. அவர் வரலாறுகள் விரிப்பிற் பெருகும். நாள்போது - அன்றலர்ந்த மலர்.

கசரு. சலதி உடை சேயிழை - கடலாகிய ஆடையை உடுத்த நிலமகள். மதிமுகம் - மதிக்கப்படுகின்ற முகம். குடங்கை - உள்ளங்கை. ஆமலகம் - நெல்லிக்கனி. வண்மை - வளம். கச்சியப்பசிவாசாரியர் முதலிய பல சான்றோர்களே யன்றி, அருள்மொழித் தேவராகிய சேக்கிழார் பெருமான் தமது மெய்ம்மை கூறுந் திருமொழியால் நன்கு புகழ்ந்து கூறிய நாடும் நகரமும் இவையாகலின், தொண்டை நாட்டையும் காஞ்சியம்பதியையும் இவ்வாறு கூறினர். மக்கட் பிறப்பெய்தினோர், இம்மையே பயப்பதாகிய இன்பத்தையும், அதனோடு மறுமையும் வீடும் பயப்பதாகிய அறத்தையும் எய்துதற்குத் துணையாகிய பொருட்கு முதலாயும், அதனால் இன்பத்தை நுகர்தற்கும் அறத்தைச் செய்தற்கும் இடமாயும் நிற்பன: பொதுவகையில், வளம்பட்ட நாடும், சிறப்பு வகையில், அந்நாட்டின்கணுள்ள நகரமுமே யாதலால், மக்கள்; அவற்றின் இயல்புணர்ச்சியும், அவற்றின்கண் பற்றும், அவற்றை வளம்படுத்துதற்கண் மனவெழுச்சியும் உடையராய், அவ்வாற்றான் முயன்று பயன் பெறுதற் பொருட்டுப் புலவர் பெருமக்கள், காப்பியங்களுள் முதற்கண் நாட்டுச் சிறப்பும் நகரச் சிறப்பும் கூறுங் கடப்பாடுடையராவர். அவ்வாற்றானே இதுகாறும் நாட்டுச் சிறப்புக் கூறிய ஆசிரியர், இனி நகரச் சிறப்புக் கூறுதற்கு இச்செய்யுளால் தோற்றுவாய் செய்து கொண்டார்.

## உரை நடை

### தோற்றுவாய்

திருவேகம்பர் காமாட்சியம்மையாருடன் என்றும் எழுந்தருளியிருக்கும் காஞ்சிப்பதியைத் தன்னகத்துக்கொண்டு, அதனால் தேவரும் வணங்க இருக்கின்ற தொண்டை நாட்டின் வளத்தை, யாம் இனிச் சொல்லுவோம்.

### மழைச் சிறப்பு

வெண்ணிறமுள்ள மேகங்கள் சென்று, கடல் நீரை அலைத்துக்குடித்துக் கருமையடைந்தனவாய், மீண்டு நந்தி மலையை அடைந்தன. அது, முன்னொருகால் வெண்ணிறமுள்ள திருமால் திருப்பாற்கடலை அடைந்து, அதனைக்கடைந்து, அதில் தோன்றிய ஆலகால விடத்தின் வெம்மையால் கருநிறமுற்றவராய் திருக்கைலாய மலையை அடைக்கலம் புகுந்தது போன்றிருந்தது.

நந்திமலையை அடைந்த மேகம், அதனை முழுவதும் மூடிக்கொண்டமை, முன்னொருகால் வருணன் மதுரையை அழிக்கும்படி விட்ட எழு மேகங்களும் பெய்யும் மழையைத் தடுத்தற்குச் சோமசுந்தரக் கடவுள் தமது சடையிலிருந்த நான்கு மேகங்களை அனுப்ப, அவைகள் போய் நான்கு மாடங்களாய் மதுரையைக் கவிந்துகொண்டமையை ஒத்திருந்தது. பின்னர் அம்மேகங்கள் தாம் கடல் நீரைப் பருகும்போது அக்கடலில் இருந்த வடவைத் தீயானது மறைந்து அந்நீருடனே தம் வயிற்றிற் புகுந்து தம் உடலைக் கருக்கிவிட, அதனையறிந்து அத்தீயைக் கக்கினாற்போல மின்னியும், மீண்டும் அத்தீ தம்மை அணுகாதபடி வேலியிட்டாற்போல வானவில்லை விளங்கச் செய்தும், அத்தீயை நோக்கி இனி நீ எம்மை எதிர்த்தால், உன் உயிரை உடம்போடு உண்டுவிடுவோம் என்று சினந்து கூறுவதுபோல இடிமுழக்கத்தைக் காட்டியும், பின்னும், 'இந்நிலவுலகத்திலுள்ள உன் சுற்றங்களையெல்லாம் வேரோடு அழித்து உனது வலியைக் கெடுப்போ'மென்று சபதஞ் செய்து, 'எமக்கு உதவி செய்யும் வேள்வித் தீயும் இறைவன் ஏந்தியுள்ள நெருப்பும் நிற்க, ஏனைய தீக்களெல்லாம் அழிவனவாக' என்று சொல்லிப் பொழிந்தாற்போல, காடு மலை நாடு பாலையென்னும் இடங்கள் முழுவதும் குளிர்ச்சி அடையும்படி மழையைப் பொழிந்து, அழிந்தவை போக மிகுந்த தீக்கள் அந்தணர் வேள்விச்சாலையுட் சென்று ஒளித்துக் கொண்டன என்று சொல்லும்படி, வேள்விச்சாலை தவிர மற்றெவ்விடங்களிலும் வெப்பமில்லாமற்போக, அது கண்டு தமது கோபத் தீயையும் நீக்கி, தமது கீர்த்தியையும் பிரதாபத்தையும் நிலவுலகெங்கும் பரவச்செய்தாற்போல, இந்திர கோபமென்னும் பூச்சியும் முல்லை மலரும் எங்கும் தோன்றும்படி செய்து, அக்கீர்த்திப் பிரதாபங்கள் தம்மையும் வந்து மறைத்

துக்கொண்டாற்போல வெண்ணிறமும் செந்நிறமும் ஒருங்கே படைத்து வானத்தில் விளங்கின.

நந்தி மலையானது தனது கொடுமுடி உடையும்படி பெய்கின்ற பெரு மழை நிற்பதற்கு எடுத்துக் காட்டிய கொள்ளிபோன்ற செங்காந்தட் பூவும் அம்மழை நீருடனே நீங்கியது. உயிர்களுக்குச் சிவ ஞானம் மேலிட்டு மல நோய் நீங்கியும் அவ்வாசனை தாக்குதல் போல, மழை நின்றபின்பும் பறவை களும் விலங்குகளும் வருந்துமாறு மரங்கள் சிறு துளிகளைச் சிந்தும். அம் மழைநீரானது, முற்காலத்தில் அம்மலையில் காமதேனு பெய்த பால் வழிக் தோடினாற்போல வழிந்தது.

பாலியாற்று வளம்

வானத்தில் ஏறுவதற்கு இட்ட பல ஏணிகள்போல வழிந்த அருவிகள் யாவும் பாலியாற்றிற் கலந்து பெருகி ஓடின. வெவ்வேறு இடங்களிற் செய்த வினைகள் ஓர் இடத்தில் செய்தோன் ஒருவனையே அடைதல்போல, வெவ்வேறு இடங்களில் தோன்றிய அருவிகள் பாலியாறாகிய ஓர் இடத்தில் அடைந்தன. பல்வேறு மதங்களும் முடிவில் ஒருவழிப்படுதல் போலவும், ஓர் ஊர்க்குச் செல்லும் பலவழிகளும் அவ்வூர்க்கு அருகில் ஒன்றுதல் போலவும், பலமுகமாக ஓடிய பல அருவிகளும் ஒன்றாய் ஒரு முகமாக ஓடின. அம்மலையின் பலவிடத்திலும் அருவிகள் பொருந்தி யிருப்பது, முன்னொரு கால் ஆதிசேடன் வாயுதேவனோடு பகைகொண்டு தனது ஆயிரம் படங் களால் கைலை மலையை மூடிக்கொண்டதுபோன் றிருந்தது.

மேகமாகிய புதிய அரசன் பாலி நதியாகிய புதல்வனை நந்தி மலையில் இளவரசனாக முடி சூட்டிக் 'குறுநில மன்னரை வென்று குற்றமற அரசாளுக' என்று விடுப்ப, அந்நதியானது விரைவில் அம்மலையை விட்டிறங்கிச் சொல்லொப்புமையால் போர்க்குச் செல்லும் அரசர்க்குரிய இயல்பு தோன்றச் சென்று, மலைநிலமாகிய குறிஞ்சி நிலத்தில் குறவர்கள் வாழும் சிற்றூர்களிற் புகுந்து, அங்குள்ள இரத்தினங்களை அணிந்து, மதுக்குடமாகிய விருந்தினை உண்டு, ஆங்காங்கு வேட்டையாடுதல் போல விலங்குகளைக் கொன்று இழுத் துக் கொண்டு, 'மிகுந்த போரினை மேற்கொண்டு வந்திருக்கின்றோம், தொண்டை நாட்டில் உள்ள தவத்தினரும், பிணியாளரும், பெண்களும் உமக்குக் காவலாகிய இடத்திற்குச் செல்வீர்களாக' என்று பறை சாற்றுதல் போல ஆரவாரித்து, சக்கரம் வில் அம்பு இவைகளைத் தாங்கிச் செல்லுதல் போல, தேனடை யானைத்தந்தம் காந்தள் அரும்பு இவைகளை உடன் கொண்டு, வெட்சி மாலை சூடி ஆயர்கள் வசிக்கும் முல்லை நிலத்திற் புகுந்து அங்குள்ள பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொண்டு, வஞ்சி மாலையைச் சூடிப்

பாலை நிலத்தை அழித்துத் தனது ஆணையை நிறுத்துதல் போல அவ்விடத்தி லும் நீரைத்தேக்கி, மருதநிலமாகிய அரசனுடன் போரேற்றுச் செல்வது போல உழிஞை மாலையைச்சூடி, தன்னைத் தடை செய்துநின்ற பெரிய கரை களை உடைத்து, பூஞ்சோலைகளை அழித்து, மடு குளம் ஏரி இவைகளுடைய வருத்தத்தைப் போக்கினேனென்று அவைகளைத் தழுவிக்கொண்டு மகிழ்தல் போல, எங்கும் ஒன்றாய்ப் பரவிப் பொங்கியெழுந்து, அணைகோலித் தடை செய்யும் மள்ளர்களை அழிதது, முள் வேலியை ஒடித்து, அகழியைத்தாண்டி, மதில்களைக் கல்லி இடித்து வெளியாக்கி நகரமுற்றும் நுழைந்து, அங்குள்ள பெண்கள் வயிற்றில் அறைந்து கொண்டு அழும்படி அவர்கள் செல்வ முழு தும் வாரிக்கொண்டு, தான் கொண்டு வந்த வெள்வரகும் கொள்ளும் இறைத்துவிட்டு, வெற்றி பூண்டாற்போல் வாகை மாலை சூடி, கடலைப் போர்க்கு அழைப்பது போல நீர்ப்பறவைகள் ஒலிக்கச் சென்று, அக்கடலா னது பவளம் முத்து முதலிய இரத்தினங்களைத் திறைபாகக் கொடுத்துப் பணிந்தமையால் அன்பு கொண்டு கலந்ததென்று சொல்லும்படி அக்கடலு டன் கலந்தது.

இவ்வாறு தொண்டை நாடு முழுமையும் தனது ஆணைக்குட்படுத்திய பாலியாறானது, முன்பு தான் கவர்ந்து கொண்ட வளங்களைக் காட்டிலும் மிகுதியான வளங்களை உண்டாக்கித் தேவர்களும் விரும்புமாறு உயிர்களைப் பாதுகாத்துத் தொண்டை நாட்டை அரசுசெய்துறைவதாயிற்று.

வேண்டுவார்க்கு வேண்டியவற்றைக் கொடுக்கும் காமதேனுவால் தரப் பெற்ற பாலியாறானது உலகிலுள்ளவர்க்கும் தானும் அவ்வாறே கொடுப்பது, 'காரணப் பொருளின்கண் உள்ள இயல்பு அதன் காரியப் பொருளினும் உளதாகும்' என்று தருக்க நூல் கூறும் உண்மையைத் தெளிவிக்கும். தொண்டை நாட்டில் உள்ளவர்கள் தாம் வறுமை யடைந்த காலத்திலும் இறந்து போதற்குரிய உடம்பை வருத்தியாவது கொடுத்தலில் பின்னிடை யார்கள்; பாலியாறும் அத்தன்மையதாகவே பெருக்கில்லாத கோடைக் காலத்திலும் தனது வயிற்றைக் கிழித்தாயினும் நீர் கொடுக்கும். மற்றைய ஆற்றுநீரெல்லாம் நீரோடு ஒப்பதாக, இவ்வாற்றின் நீர் சுவை பொருந்திய பாலோடு ஒத்திருக்குந் தன்மை தெரிந்தே முன்னோர்கள் 'பாலியாறு' எனப் பெயரிட்டனர் என்று சொல்லுதற்குரிய இப்பாலி யாற்றின் பெருமையை முற்றவும் யாவர் கூற வல்லவர்கள்!

### நாட்டு வளம்

இப்படிப்பட்ட பாலியாறு பாய்ந்து வளம்படுத்தப்பட்டு, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கையும் செய்பவர்களுக்கு

இடமாய், மிக்க மேன்மையுடையதாகும் தொண்டைநன்னடு. அத்தொண்டை நாடானது, இறைவன் திருவருள் செய்ய இறைவி எக்காளிலும் முப்பத்திரண்டு தருமங்களையும் தன்னிடத்திலிருந்து செய்யும் பெரும் புகழைப் படைத்ததும், முத்தி நகர் ஏழனுள்ளும் சிறந்து தவத்தை இடையூறின்றி ஆக்குவதாகிய காஞ்சியம்பதியைத் தன்னிடத்துக்கொண்டு, அதனால் என்றும் புதிதாகிய பெருமை யுடையதுமாகும்.

### நானிலத்து ஐந்திணை வளம்

நிலவுலகத்தை விளங்கச் செய்யும் அத்தொண்டை நாட்டில் மலை, காடு, வயல், கடலென்னும் நால்வகை நிலத்தின்கண் சிறந்த குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தலென்னும் ஐந்திணை வளங்களைச் சிறிது கூறுவாம்.

### க. குறிஞ்சி

பெரிய செல்வங்களை யெல்லாம் துறந்து, ஊரார் இடுகின்ற பிச்சையை நச்சும் துறவிகள்போல, மலையில் வாழும் குறவர்கள், முருகக் கடவுளுக்கு இடப்படும் நறும்புகைக்காக அகில் மரங்களையும் சந்தன மரங்களையும் நெருப்பிலிட்டுப் போக்கி, அவ்விடங்களில் புன்செய்ப் பயிர்களை இட்டு மகிழ்வார். பெரியோர்கள், தீமையை மறந்து நன்றியை மறவாமல் அவர்க்குக் கைம்மாறு செய்தல் போல, தினைப்புனங்கள், குறவர்கள் தம் உடம்பை வருத்திய பகையை நினையாமல், புதர் மரம் முதலிய சுமைகளைப் போக்கிய நன்றியையே கடைப்பிடித்து, அவர்களுக்கு நல்ல விளைவைக் கொடுக்கும். வேட்டைமேற் சென்ற தலைவர்களுக்கு நல்லூழ் கூட்டத் தலைவியரை எதிர்ப்பட்டுக் கூடுதல் வாய்க்கும் அச்சாரல்களில் விளைந்துள்ள தினைக்கதிர்களைக் கவர்தற்கு வரும் கிளிக்கூட்டங்கள், தம்மை ஓட்டுதற்கு அக்குறப் பெண்கள் பாடும் பாட்டின் இசைக்கூறுபாடுகளை நாள்தோறும் ஒளித்திருந்து கற்கும். தினைப்புனங்களில் வெட்டாது நின்ற வேங்கை மரங்கள், நமது குலமாகிய மரங்களின் வாழ்க்கையை அழித்து நம் இடத்தைத் தம் இடமாக்கிக் கொண்ட இத்தினைகளை இப்பொழுதே அழித்து விடுவோமென்று அதற்குரிய சூழ்ச்சியைச் செய்தாற்போலப் பேரரும்புகள் கொண்டு மலரும். (வேங்கை பூத்தால் தினையை அறுப்பது வழக்கம்.) அவ்விடத்திலுள்ள மயில்கள் மேகத்தைக் கண்டு தோகையை விரித்து ஆடுவதும் அகவுவதும், எம்மை வாகனமாகக் கொண்ட முருகக் கடவுளுக்கு மாமனாகிய இந்திரனது வாகனம் இதுவென்னும் உறவினால் மகிழ்ச்சியோடு அழைப்பது போலும். காற்றினால் அசையும் பச்சைத் தழைகள் பொருந்திய பலாமரத்தின் மேல் பல கண்கள் வாய்ந்த மயில் தங்கி யிருந்து அசைதல், இந்திரன் தனது

மருகராகிய முருகப் பெருமானைப் பார்ப்பதற்கு அவ்விடத்தில் வந்து தனது மேக வாகனத்தை நிறுத்துதலை ஒக்கும். அந்நிலத்திலுள்ள மலைகளும், பெண்கள் கூட்டங்களும் சந்தும், (சந்தன மரமும், சந்தனமும்) ஆரமும், (முத்தும், முத்து வடமும்) தாங்கி, வம்பு (வாசனை, கச்சு) பொருந்திய குளிர்ந்த குவடு (கொடுமுடி, நகில்) களால், ஆடவர்களுடைய கண்களையும் மனத்தையும் கவர்வனவாய், மூகில் தோய் (மேகங்கள் தவழும், மேகம் போலக் கறுத்த கூந்தலைப் பொருந்திய) வாசனையுள்ள குழை (தளிர்கள், காதணி) வாய்ந்த முகத்து (முன்னிடத்தில், முகத்தில்) அலர் (பரந்த, விரிந்த) இலவங்கம் (இலவங்கமரம், இலவினது நிறம்) காட்டும். அவ்விடத்தில், கொங்கை (வாசனையைத்) தாங்கிய ஆண்களும், (ஆண் மரங்களும்) கொம்புடைய வேங்கை (மரங்)களும், பால் பொழிகின்ற சே (செம்மர) இனங்களும், வானநீரை உண்கின்ற ஒரு காலை (தூற்றை) உடைய எகினங் (புளிய மரங்)களும் உள்ளன. ஆண்களெல்லாம் ஒரு கன்னியை (கன்னிராசியை) மணப்பன (பொருந்துவன). வேங்கை (மரங்)கள் யாட்டோடு (மேட ராசியோடு) உறவு கொள்ளும். சேவினங்கள் (செம்மரக் கூட்டங்கள்) சிங்க (ராசி) மேல் ஏறும். எகினங்கள் (புளிய மரங்கள்) இடபத்தை (இடபராசியை) விழுங்கும் (மறைக்கும்). அங்குள்ள மலைகள், விண்மீன்களும் மேகங்களும் சந்திர சூரியர்களும் தேவர்களும் இளைப்பாறுதற்கு வந்திருக்கின்ற இல்லங்களை (தேற்றா மரங்களை) வானத்தை அளாவ எவ்விடத்தும் உண்டாக்கும்.

காலை, நடுப்பகல், மாலையென்னும் மூன்று வேளைகளிலும் மூன்று மலர் எக்காளிலும் மாறாது மலர்வதாகிய குவளை பொருந்திய திருத்தணிகை மலையையும், மேன்மை பொருந்திய தமிழ் நாட்டிற்கு எல்லையாதற்குரிய திருவேங்கட மலையையும் முருகக் கடவுள் விரும்பி அரசிருக்கையாகக் கொண்டு அரசு செய்வதாகும் தொண்டை நாட்டுக் குறிஞ்சி. அன்பே வடிவமாகிய கண்ணப்ப நாயனர் ஒரு கண்ணைப் பேர்த்து இறைவனுக்குச் சாத்தியதும், தென்கைலை எனப்படுவதுமாகிய காளத்தி மலையும், இறைவன் சுந்தரமூர்த்தி நாயனர்க்கு வீடுதோறும் இரந்து சோறிட்ட திருக்கச்சூரும், திருவிடைச்சுரமும், திருக்கழுக்குன்றமும் விளங்குகின்ற அக்குறிஞ்சி நிலத்தின் பெருமையை யாவர் விரித்துக்கூற வல்லவர்!

௨. பாலை

குராமரம் ஈன்ற பாவையை, (பாவை போலுங் காயை,) கோங்க மரமானது பொன் (பொன்போலும் பூ) கொடுத்து, பாதிரியினுடைய பூந்தீயின் (பூவாகிய தீயின்) முன்னாக மணஞ் செய்வதற்கு, மாமரத்திலுள்ள வண்டுகள் இசை பாட, முருங்கை மரம் (பூவாகிய) வெண்மையான பொரிகளை

நிறைக்கும் வியப்புடையது பாலை நிலத்தின் ஒருபக்கம். அந்நிலத்திலுள்ள தூதுணம் புறாக்கள், எயிற்றிமார்களுடைய அழகுக்குத் தோற்று ஓடினாற் போல, பக்கத்திலுள்ள மரச்செறிவிற் புகுந்து, அங்குள்ள குராமரத்தின் காயைக் கண்டு, அவர்களுடைய தூங்குவிக்கப் பெற்ற குழந்தையென்று கொண்டு வருந்திப் புறம்பே சென்று வெய்யிலில் நின்று நிலைமை கெட்டவர் கள்போல் வாடும். காதலும் அழகும் உள்ள தலைவியர் சொல்லையும் கடந்து தூரத்தில் பிரிந்து சென்ற தலைவர்களை, தூதுணம் புறாக்கள் ஆங்காங்கு தம் துணையுடன் கலந்து, பெடைகள் ஊடல் கொள்ளுதலும், சேவல்கள் அவ்வூடலைத் தீர்த்தலும் செய்து புணர்தலால் செல்லுதலை ஒழியச் செய்யும். இவ்வாறு, சூரியனாகிய தலைவன், வேனிற்காலமாகிய தலைவியைக் கூடிப் பெற்ற பாலையாகிய புதல்வன், நானிலங்களாகிய அரசர்களிடத்து இரந்து பெற்ற பரற்கற்கள் பொருந்திய வலிய மேட்டு நிலங்களைச் சிற்றரசாள் வதும் அத்தொண்டை நாட்டின்கண் உளது.

## ௩. முல்லை

சொல்லப்பட்ட இப்பாலை நிலத்தை அடுத்துள்ள முல்லை நிலமாகிய பெண், கோடையாகிய பசிதணியும்படி மேகமாகிய செவிலித்தாய் நீராகிய இனிய பாலை ஊட்ட, அதனால் வளர்ந்தாற்போல, வரகு முதலிய பயிர்களா கிய குழந்தைகளைப் பெற்று வளர்க்கும். அந்நிலத்தில், கொல்லைகளின் எவ் விடத்திலும் சிவந்த பூக்கள் நெருங்கிய முருக்க மரத்தில் முல்லைக் கொடி படர்ந்து வரிசை வரிசையாக வெண்ணிறமுள்ள பூக்களை அரும்புதல், இறைவனது சிவந்த மார்பில், வெண்டலை மாலை அசைவது போலும். நீல நிறமாகப் பூத்த காயா மரங்களைப் பொன்னிறமாகப் பூத்த கொன்றை மரங் கள் கிளையாகிய கைகளால் தழுவிக்கொண்டு அசைதல், முன்னொருகால் திருமால் மோகினி வடிவங்கொண்டபோது, இறைவன் அவளைக் கூடியதைக் காட்டும். எவ்விடத்திலும் குமிழம்பூ மலர்ந்திருத்தல், அந்நிலத்திலுள்ள இடைப் பெண்கள் அழகினால் தேவ மாதர்களை வென்று அவர்கள் மூக்கு களை அறுத்து பூமியில் எவ்விடத்திலும் தொங்கவிட்டிருப்பது போலும். சந்திரனிடத்தில் மான் இருக்கிறதென்று சொல்வது, அப்பெண்களுடைய கண்ணுக்கு நிகராகாமையால் வானத்தில் தாவிய மானை, அவர்களுடைய முகத்திற்குத் தோற்று அவர்கள் கட்டளைப்படி வானத்தில் திரிகின்ற சந்தி ரன், மீண்டு பூமியிற் செல்லாதபடி தன்னிடத்திற் சிறைப்படுத்தி அலைப்பத னாற்போலும்! சந்திரன் ஆய்ச்சியர்களது இரண்டுகண் பொருந்திய முகத் திற்கு ஒப்பாக வேண்டித் தன்னிடத்திலுள்ள ஒரு மானுடன் மற்றொரு மானைப் பிடிப்பதற்குக் குருந்தமரத்தின்மேல் தாவி, அதன் நிழலில் உறங்கு கின்ற மானைத் தனது கிரணமாகிய கையால் தடவுவான். குயில்கள் இள

வேனிற் காலத்தில் கூவுவது, தலைவியர் தலைவரைப் பிரிந்து வருந்தியிருத்தலாலும், கார்காலத்தில் கூவாதிருப்பது, பிரிந்து சென்ற தலைவர் வர, அவரது வெற்றியைப் புகழ்கின்ற அவர்களது இனிய மொழிக்குத் தோல்வியடைதலாலுமேயாகும். தொண்டைமானுடைய யானையை முல்லைக் கொடியாற் பிணித்து, அவன் அக்கொடியை வெட்ட அவ்விடத்தினின்றும் இறைவன் வெளிப்பட்டு அவனுக்குக் காட்சி தந்தருளிய வடதிருமுல்லைவாயில் முதலிய தலங்களைத் தன்னிடத்துக் கொண்டுள்ள அம்முல்லை நிலத்தின் பெருமையை யாவர் அளந்து சொல்ல வல்லவர்!

ச. மருதம்

பொன்போலும் சிறகுகள் வாய்ந்த வண்டுகள் உலாவும் பூக்கள் பொருந்திய குறுஞ் சுனைகளையுடைய அம்முல்லை நிலத்தாற் சூழப்பட்டது, நீர் நிலைகளிலுள்ள வாளைமீன் துள்ளி யெழுந்து, வானத்தில் பாய்ந்து வெண்மை நிறமுள்ள சந்திரனைப் பிளந்து ஆகாய கங்கையில் உலவுகின்ற மருதநிலம்.

ஆற்றுக்காற் சிறப்பு

இறைவன் ஒருவனே உயிர்களை உய்வித்தற் பொருட்டுச் சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்னும் ஒன்பது வகைப்பட்ட பேதமாய் நிற்றல் போல, பாலியாறு ஒன்றே வயல்கள் செழித்தற் பொருட்டுப் பற்பல கால்களாகப் பிரிந்து செல்லும். பருத்த ஒரு அடிமரத்தின்மேல் பெரிய கிளைகளும், சிறிய கிளைகளும் வளார்களும் முதலிய பலவும் ஒன்றில் ஒன்று கிளைப்பதுபோல, பாலியாறு ஒன்றிலிருந்து கண்கள் வழியாகப் பிரிந்த பெருங்கால்வாய்களும் அவற்றிலிருந்து ஒன்றில் ஒன்றாகப் பிரிந்த சிறிய கால்வாய்களும் எண்ணிறந்தன வாகும். முன்னொருகால் பிரமதேவன் காஞ்சியில் செய்த வேள்வியை அழித்தற்குச் சரஸ்வதி நதியுருவங் கொண்டு வர, அந்நதியைத் தடுத்தற்குத் திருமால் அணையை நிகர்ப்பக் குறுக்கே படுத்திருந்தது போல, கால்வாயில் வரும் நீர் தடைப்படும்படி எருமைகள் குறுக்கே படுப்பதனால் பருத்த மடைகள் உடையும். மருதநில மாக்கள் ஆரவாரமும், முதண்ணுமை என்னும் பறையின் முழக்கமும், மருதநிலம் தனக்குத் தெய்வமாகிய இந்திரனை வாழ்த்துவது போல விண்ணுலகை அடையும். சிவஞானிகள் ஐம்பொறிகளின் வழியாகச் செல்லுகின்ற அறிவை அடக்கிச் சிவத்தைக் காணும் ஒரே நெறியில் செலுத்துதல் போல, உழவர்கள் தண்ணீரைப் பல மடைகளிற் போகாதபடி ஒதுக்கி வயல்களில் பாய்ச்சுவார்கள். அறத்தின் வழியாகத் தேடிய பொருள் சிறிதும் கெடாது நல்ல வழியிற் பயன்படுதல் போல, பாலியாற்றின் நீர் முழுவதும் வளம் பொருந்திய வயல்களை நிரப்பும்.

பயிர் செய்தற் சிறப்பு

நீர், வயல்களில் நிறைந்த பின்பு, உழவர்கள், கடாக்களை வரிசை வரிசையாகப் பூட்டிக் கலப்பையால் நிலத்திலுள்ள பொன் தோன்றும்படி உழுது, முன்னர்ப் பிரித்துப் பின்னர்க் கூட்டும் வினைவல்ல அமைச்சர் போல, கூறுபடுத்திய சேற்றைக் குழப்பி, இந்திரனுக்கு விழாச் செய்து நல்ல நாளில் நாற்றிற்கு முளையை வயலில் விட்டு, திருவருள் விளங்கப் பெற்ற பின்னர் உடல் பொருள் முதலியவற்றை, கொடுத்த இறைவனிடத்திலேயே ஒப்பித்து விடுதல் போல, கலங்கல் நீங்கித் தெளிந்த பின்னர் அந்நீரை முன் வந்த கால்வாயின் வழியாகவே வடித்து, இளங் குழந்தைக்குப் பாலைக் காலமும் அளவும் தெரிந்து தாய்மார் ஊட்டுதல் போல, பதம் பார்த்து முளை நீரை அளவாகப் பாய்ச்சி நாற்றைப் பாதுகாத்து வளர்ப்பார்கள். வளர்ந்த நாற்றுகளைப் பதத்தில் பறித்து, பூனை தன் குட்டியைப் பல இடங்களிலும் கொண்டு போதல் போலப் பல வயல்களிலும் கொண்டுபோய் நடுவார்கள். நடப்பட்ட நாற்றுகள், மரகதம் தளிர்ப்பது போலப் பசுமை அடைந்து, களை பறிக்கும் பருவத்தை அடைந்தவுடன், இளமை பொருந்திய மயில்கள் வயல் வளத்தைப் பார்க்கவந்தது போல, உழவர் மகளிர் வயல்களில் வந்து சூழ்ந்து, தாமரை, அல்லி, குவளை முதலிய களைகளைக் களைந்து, அவற்றிலுள்ள தேனை உண்டும், அவைகளைக் கூந்தலில் சூடியும், தமது முகம் வாய் கண்களுக்குப் பகையென்று நினைத்து அழித்தாற் போலப் பறித்து வீசியும் செல்வார்கள். களை பறிக்கப்பட்ட பயிர்கள், மண்ணுலகத்துப் பெண்கள் கை வளத்தைக் கண்ட நாம் விண்ணுலகத்துப் பெண்கள் கை வளத்தையும் பார்ப்போமென்று எண்ணிச் செல்வது போல வானத்தை நோக்கி வளர்ந்து, அவர்கள் கைவளம் இதற்கு ஒப்பாகாதது கண்டு மீண்டாற் போலக் கதிர்விட்டுத் தலை குனியும். பெற்றவர்கள் குணம் மக்கட்குண்டாதல் போல, முளையானது முன்னே வெளுத்துப் பின் பசுமை யடைந்தமையால் அது ஈன்ற கதிரும் முன்னே வெளுத்துப் பின்னர் பசுமை நிறத்தை யடையும், பெண்கள் இளமையில் ஆடவர்களைக் கண்டால் தலைகுனியாமல், வயது செல்லச் செல்லச் சிறிது சிறிது தலைகுனிந்து, மங்கைப் பருவம் வந்தபோது மிகவும் நாணமுற்றுக் குனிதல் போல, பயிர்கள், கதிர்கள் முற்ற முற்றச் சிறிது சிறிது தலை குனிந்து, பழுத்த பிறகு முழுவதும் வணங்கும். மேரு மலையை அடுத்துள்ள பொன் மயமாக்கும் நாவல் மரமோ என்று வியக்கும்படி வளர்ந்த நெற்பயிர்களை அரிதற்கு, சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு மழை வற்றிய காலத்திலும் இறைவனருளால் நெற்படியெடுத்த குண்டையூர்க் கிழார்போன்ற உழவர்கள் தம்மவர்களை, 'நாவலோ' என்னும் ஓசையால் அழைத்து நெல்லரிதலைச் செய்வார்கள். ஒருவருக்கு ஒரு துன்பம் வந்தால் அது அவர்களை

அடுத்துள்ளவர்களுக்கும் வருதல் போல, உழவர்கள் நெற்பயிருடன் தாமரை முதலிய பூக்களையும் அரிவார்கள். இவ்வாறு உழவர்கள் நெற் கதிர்களை அரிந்து வாரி அடுக்கிக் கட்டிக் களத்தில் கொண்டுபோய்ப் போராகக் குவிப்பார்கள். அப்போர்கள் மலைபோலக் குவிந்து கிடப்பது, இந்திரன் தான் சிறகை அரிந்த மலைகளைத் தனது நிலத்தில் சிறை வைத்திருப்பது போலும். பின்னர், அவ்விந்திரன் அம்மலைகளைத் தனது வாகனமாகிய மேகத்தை விட்டு மிதிக்கச் செய்வது போலக் கரிய எருமைக் கடாக்களைப் பிணை செய்து போர்களைச் சரித்து மிதிக்கச் செய்வார்கள். அக்கடாக்கள் கதிர்களைக் குனிந்து வாயாற் கௌவுதல், நெல் வைக்கோலை விட்டு நீங்கியதோ இல்லையோ என்று பார்ப்பது போலும். உடலை விட்டு உயிர் நீங்கியபோது ஊழ்வினையாகிய பிராரத்துவ கன்மமும் நீங்குவது போல, வைக்கோலை விட்டு நெல் நீங்கியதும் கடாக்கள் பிணையற் கயிற்றை விட்டு நீங்கும். பிறகு, வைக்கோலைப் பிரித்து நெல்லைக் காற்றின் எதிரே தூற்றியபோது, பற்றற்ற பெரியோர்களை விட்டு ஐம்பொறிகளின் சேட்டை நீங்குவதுபோல, நெல்லை விட்டுப் பதர்கள் ஓடும். தூற்றியெடுத்த நெல்லை, அறநூல் வழிப்படி கொடுக்கவேண்டியவர்களுக்குக் கூறுசெய்து கொடுத்து, மிகுந்த நெல்லை அளவுசெய்து கொண்டுபோய் சேர்களிற் சேர்த்து அறஞ் செய்தலை மறவாது வளம்பட்ட குடிமையாளர்களே அம்மருதநிலமெங்கும் உள்ளார்கள். இறைவன் அளித்த இருநாழி நெல்லைக்கொண்டே முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கும் காமாட்சியம்மையாரைப்போல, வயல்கள் சிறிதாக விதைத்த விதையைக் கொண்டு பெரிய விளைவைக் கொடுக்கும். கொடுத்த விதையை மிகுதியாக்கிக் கொடுத்தலால் அவ்வயல்கள் சிறிய முதற்பொருளை வாணிகத்தால் (வியாபாரத்தால்) மிகுதியாகச் செய்யும் வாணிகரையும் ஒக்கும்.

### சோலைச் சிறப்பு

அவ்வயல்களை அடுத்து வானத்தை அளாவிய சோலைகள் உள்ளன. அச்சோலைகளில் கமுக மரங்கள் குளிர்ந்த பாளைகள்விரித்து மழைத்துளிபோன்ற பிஞ்சுகளை விடும். வானத்தை யளாவிய தென்னை மரங்கள் குரும்பை விட்டு முற்றுதல், தம் குரும்பைகள் அந்நிலப் பெண்கள் நகில்களுக்குத் தோற்றமையால் அவர்கள் காணாதபடி வானத்தில் வைத்து வளர்ப்பதுபோலும். தடாகங்களிலுள்ள பூக்களை மேய்வதற்கு வரும் எருமைகளை, வாளைமீன்கள் துள்ளி வானத்தில் எழுந்து அவைகளின் முதுகு பாதியளவு உள்ளே பள்ளமாகும்படி குதித்துக் கரையில் ஏறச் செய்யும். ஏரிகளில் அலையில் அகப்பட்டுச் சுழலும் நீர்நாய்கள், ஐம்புலன்களில் அகப்பட்டுச் சுழலும் மனம்போலும். காஞ்சிமரங்கள் கிளைகளால் பக்கத்திலுள்ள கரும்பைப் பற்றுதல் அந்நிலத்தில் ஊடல்கொண்டிருக்கும் பெண்கள்மேல் அம்பு

தொடுத்தற்கு மன்மதன் தன் வில்லைப் பற்றுவதுபோலும், தலைவியர் பூப்புற்றதை அறிவித்தற்கும், புதல்வனைப் பெற்று நெய்யாடினமையை அறிவித்தற்கும் தோழியர்கள், முறையே செவ்வணியும் வெள்ளணியும் அணிந்து செல்லும் வீதிகள் பரத்தையர் மனத்தை வருந்தச் செய்யும். இறைவன் இறைவியோடு எழுந்தருளியிருக்கும் திருப்பாசூர், திருவல்லம் முதலிய தலங்களைத் தன்னிடத்துக்கொண்ட அம்மருத நிலத்தின் பெருமையை யாவர் கூறவல்லார்!

ரு. நெய்தல்

அம்மருத நிலத்தை அடுத்துள்ள நெய்தல் நிலத்தில் உள்ளதாய், பொய் கூறினமையால் இறைவனுக்கு ஆகாததாகிய தாழம்பூ, அவ்விறைவனுக்கு விடத்தைக் கொடுத்தமையால் இது நமது இனமாகுமென்று சூழ்ந்து, (ஆராய்ந்து, நெருங்கி) முழங்குகின்ற கடலுடன் நட்புக்கொள்ளும். புன்னை மரங்கள் தாழை மடலில் மலரைச் சொரியும். அதன்கணுள்ள வண்டுகள் இசைபாடும். நெய்தல் மலர்கள் அரும்பு விரிந்து நறுமணங் கமழும். அவற்றைக்கழிகளில் மேயும் நீர்ப் பறவைகள் கண்டு மகிழ்ச்சியடையும். நெய்தல்நிலத் தலைவர்கள் தமது மகளிர்கள் உறுப்பழகைக் கவர்ந்து கொண்டன வென்று செய்வார் போல, பவளம் சங்கு முத்துக்களைக் கடலில் முழுகி வாரிக் குவிப்பார்கள். அம்மகளிரும் அக்கருத்துடையார் போல அவற்றை விற்று மகிழ்வார்கள். கடல் பகலில் மெல்லன ஒலிப்பது, அந்நிலப் பெண்கள் தம் கண்ணழகைக் கவர்ந்து கொண்ட மீன்களை உலர்த்திப் பறவைகளை ஓட்டும் இசையைக் கேட்பது போலும். மன்மதனுக்கு முரசமாகிய கடல் இரவில் மிகவும் ஒலிப்பது, அவன் போர் செய்யுங் காலமாதல் கருதியது போலும். தலைவரைப் பிரிந்து அழுகின்ற தலைவிபருடன் கழியாகிய பெண்ணும் கூட அழுவதுபோல நீர்ப்பறவைகள் ஒலிக்க, பூக்கள் தேன் துளிகளைச் சிந்தும். பொருள் தேடுதற்காக மரக்கலத்திற் சென்ற தலைவர் வரும் வழியை நோக்கி அழுது வாடுகின்ற மகளிர் சோர்வடையாதபடி கடல் அலைகளால் சிறு துளிகளை வீசும். புறச்சமயிகளும் புகழும்படி திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எலும்பைப் பெண்ணுக்கிய திருமயிலை திருவொற்றியூர் முதலிய தலங்களைத் தன்னிடத்துக்கொண்ட அந்நெய்தல் நிலத்தின் பெருமையை அளவிட்டறிகின்றவர் யாவர்!

திணை மயக்கம்

திருத்தொண்டை நன்னாட்டிலுள்ள நானிலத்து ஐந்திணை வளங்களைக் குன்றை நகர்க் குலக் கவியாகிய சேக்கிழார் பெருமான் கூற வல்லரோ யல்லது மற்று யார் வல்லவர்கள்? ஒருவருமில்லை. அது நிற்க, அவ்

ஐந்து திணைகளும் தம்முட் கலந்துள்ள இடங்களும் அந்நாட்டில் ஆங்காங்கு உள்ளன அவற்றைச் சிறிது கூறுவோம்.

மலைகளிலுள்ள அசோக மரங்கள், காடுகளிலுள்ள முருக்க மரங்களின் மேல் தமது மலர்களைச் சொரிந்து, அதற்கு எதிராக அம்முருக்க மரங்கள் தம்மேல் சொரிந்த சிவந்த மலர்களுள் மூழ்கிக் கிடத்தல், மன்மதன் சிவபெருமான் மீது மலரம்புகளைத் தொடுத்து அவரது நெற்றிக் கண்ணால் உண்டாகிய தீயில் மூழ்கியதை ஒத்திருக்கும். மலையிலுள்ள மின்னுக் கொடி கொன்றை மரத்தின்மேல் மரகதத்தோரணம் போலத் தாவிப் படர்ந்து தன்மேல் கிளிகளும் கானங்கோழியும் வரிசையாக நடப்பதனால் கழைக் கூத்தாடுவோர் கயிற்றின் தன்மையைக் காட்டும். சுற்றிலும் மலர்களோடு கூடிய முல்லைக்கொடி புதராக வளர்ந்திருக்க, அதன் கீழ் கரடி நுழைந்து உறங்க, நடுவில் வளர்ந்துள்ள கொன்றைமரத்தில் மின்னுக்கொடி படர்ந்திருப்பது, திருக்கைலை மலையை இராவணன் எடுத்த காலத்தில் உமாதேவியார் பயந்து சிவபெருமானைத் தழுவிக் கொண்டதுபோன் றிருக்கும். யானைகள், தாங்கள் வாழும் மலையிலுள்ள அசோக மலரைப் பறித்த மன்மதனது வில்லாகிய கரும்பை வயல்களில் போய் அழித்து உண்டு ஆரவாரிக்கும். மலையில் வாழும் குறப்பெண்கள் கவணில் வைத்து எறிந்த இரத்தினங்கள் மருதநிலத்திலுள்ள தடாகங்களில் விழுந்து மேடாக்க, அந்நிலத்திலுள்ள சிறு பிள்ளைகள் கோபம் மிகுந்து, அக்குறப் பெண்கள் விளையாடுமிடத்திற் புகுந்து, அவர்களுடைய கழங்குகளையும், பந்துகளையும் அவர்கள் அழும்படி பறித்துக் கொள்வார்கள். தாங்களும் ஒருவருக்குக் கொடாமல் கொடுப்பவர்களையும் தடுப்பவர்போல, வேங்கை மரங்கள் வண்டுகளுக்கு உதவாத தமது தேனைக் கழியிலுள்ள பூக்களின்மேல் அவற்றின் தேனையும் வண்டுகள் உண்ணாதபடி ஊற்றும். இதைப்பார்த்துக் கோபித்து அவ்வேங்கை மரங்களின் குடுமியைப் பிடித்துக் கொண்டாற் போலக் கடலானது பவளக் கொடியாகிய கையால் அவற்றின் கிளைகளைப் பற்றும். கடற்காக்கையானது மலைச்சாரலிலுள்ள பலாப் பழத்தின் சுளையைக் கௌவிக்கொண்டு மரக்கலத்தைச் சேர்வது, இராவணன் சீதையைக் கவர்ந்து கொண்டு இலங்கையை அடைந்தது போலும். அக்காலத்தில் அனுமான் கடலைத் தாண்டி இலங்கையை அடைந்தது போல, குரங்குகள் தாவி அம்மரக்கலத்தை அடைந்து அதனை அலைத்துத் திரும்பும். வயலிலுள்ள அன்னங்கள் இடைப் பெண்களிடத்தில் நடை கற்கப்போவது போல ஆயர்பாடியிற் போய்ப் பசுவின் பாலை உண்டு வருத்தம் நீங்கும். காட்டில் வாழும் குயில்கள் உழவர் மகளிரிடத்தில் பேசக் கற்றுக் கொள்ளப் போவது போலப் போய், வயலிலுள்ள கமுக மரத்திற் பொருந்திய பழத்தைக்

கொவ்வைப் பழமென்று விரும்பும். நெய்தல்நில மாக்கள் கழியைக் கலக்க, அதிலிருந்து குதித்தெழுந்தமீன் இடைப்பெண்கள் காய்ச்சுகின்ற பாற் குடத்துள் வீழ்ந்து சுழலும். இடைப் பெண்கள் தயிர் கடையும் ஓசைக்குப் பயந்து ஓடித் தாழம் புதரில் ஒடுங்கிய முயல் கடலொலி கேட்டுப் பயப்படுதல், வினைப்பயன் எங்கு சென்றாலும் விடாதென்பதைக் காட்டும். கடைசியர் களைந்தெறிந்த தாமரைகள் கடலில் பொருந்தக் கண்டு, கடலும் தாமரை பூத்தது என்ன வியப்பென்பார்கள். கடலில் தோன்றிய பவளக்கொடி வயல்களிற் படரக் கண்டு வயலும் பவளம் ஈன்றது என்னென்று வியப்பார். மலை நிலத்திலுள்ள கிளியும் காட்டிலுள்ள குயிலும் ஆயர்களிடத்துள்ள பசுவின் பாலை உண்டு, வயல்களை அடுத்துள்ள மருத மரத்தில் எதிர் எதிராக இருந்து இசையைப்பாடும். மலைகளிலுள்ள யானைகளும் வயல்களிலுள்ள எருமைக் கடாக்களும் வயல்களிலுள்ள கரும்பை ஒடித்து உண்டு, கான்யாற்றில் மூழ்கி விளையாடி ஒன்று சேர்ந்து உறங்கும். காட்டிலுள்ள குமிழ மலரையும் கடற்கரையிலுள்ள தாழம்பூவையும் மலைகள் செங்காந்தட் பூவின் மேல் தாங்கி நிற்றல், இறைவனுக்குச் சாத்துதற்கு வைத்திருந்த பூவை மோந்த பல்லவ அரசன் (கழற் சிங்க நாயனார்) மனைவியை உடைவாளால் மூக்கரிந்த செருத்துணை நாயனார் கோலத்தைக்காட்டும். வானத்தை அளாவிய மலைகளிலுள்ள மூங்கில்கள் சொரிந்த முத்துக்களும், கடற்கரை நிறைய உதிர்ந்து கிடக்கும் புன்னையரும்புகளும் ஒன்று சேர்ந்து கிடத்தலால், அவற்றுள் சேர்ந்த தமது முட்டையைப் பகுத்தறிய முடியாமல், வயலிலுள்ள அன்னங்கள் வருத்தமடையும். காட்டிலுள்ள குயில்கள், கடற்கரையில் புன்னை மரங்களிலுள்ள காக்கையின் கூடுகளில் முட்டையிட்டு, அம் முட்டையைக் காக்கை குஞ்சு பொரித்து வளர்க்குமளவும் காஞ்சிமரத்தில் ஒளித்திருந்து பார்ப்பது, அரசர் தமக்குரிய காலத்தை நோக்கி அடங்கியிருப்பது போலும். மிளகுக் கொடியும், பவளக்கொடியும், வசலைக் கொடியும், முல்லைக் கொடியும் நான்கு திக்கிலும் படர்ந்திருக்க, நடுவில் வளர்ந்துள்ள குராமரத்தில் உள்ள பாவைபோன்ற காய்கள் காற்றினால் அடிக்கடி அசைவது, நான்குபுறத்திலும் கயிறுகள் வலித்துக் கட்டப்பட்ட மூங்கிலின் மேல் கூத்தப்பெண்கள் கழைக்கூத்தாடுவதை ஒக்கும். இவ்வாறு ஐந்திணைகள் தம்முள் ஒன்றும் பலவுங் கலந்துள்ள இடங்களும் ஆங்காங்கு இருக்கின்றன.

இப்படிப்பட்ட நானிலங்கள் பொருந்தப் பெற்று, அந்நிலங்களில் பெருங்குடிகள் தழைத்தோங்குகின்ற தொண்டை நாட்டின் அழகு முழுவதும் வகுத்துக் கூறவல்லவர் இந்நில வுலகத்தில் யாரிருக்கின்றார்கள்? மேலுலகத்திலும் கீழுலகத்திலும் இல்லையென்றால் வேறென்ன சொல்வது!

எந்த நாட்டின் வளத்தையும், எவ்வெவர்களுடைய கோட்பாடுகளையும் கூறுதற்கு வல்ல தேவகுருவினது செருக்கையும், பல நாவைப்படைத்த ஆதிசேடனது செருக்கையும் போக்குகின்ற இந்த நாட்டைப் புலவர்கள் தொண்டைநாடென்று கூறுவது, நிலமகளது தொண்டைக்கனி யொத்த வாய் போன்றுள்ளது என்னுங் கருத்தினுற் போலும்!

நிலமகளுக்குத் தமிழ்நாடே முகமாகவும், தொண்டை நாடே வாயாகவும் இருக்க, அதனுள் மக்களுக்கு ஒழுக்க நெறியைக் கூறுதலால் நாவென்று சொல்லத்தக்க காஞ்சிமா நகரத்தின் வளப்பத்தை இனிக் கூறுவோம்.

---

# திருநகரப் படலம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சிமா நகர்ஓர் தட்டுங் கடவுளர் உலகோர் தட்டும்
வைச்சுமுன் அயனுர் தூக்க மற்றது மீது செல்ல
நிச்சயம் முறுகித் தாழ்ந்து நிலமிசை வீழும்இவ் வூரை
இச்சகத் தூர்களோடும் எண்ணுதல் மடமைப் பாற்றே. க

கவினெலாந் திரட்டிக் காஞ்சிக் கடிநக ராக்கிக் கஞ்சத்
தவிசினோன் அதன்பால் நுட்பத் தொழில்செயச் சார்ந்த காலைப்
புவியிடைக் கழிந்த சேடம் பொற்பவே றெடுத்து விண்ணு
டவிர்தரச் செய்தான் போலும் அன்றிவே றுரைப்ப தென்னே. உ

---

க. கடவுளர் - தேவர். வைச்சு - வைத்து, போலி. அயனுர் - பிரமதேவர். மற்று, அசை நிலை. அதுவென்றது தேவருலகை. மீது - மேல். சகம் - உலகம். மடமைப் பாற்று - அறியாமையின் பாலது. காஞ்சியம்பதியும் தேவருலகும் கீழும் மேலுமாக நிற்கும் இயற்கைக்குப் பிறிதொரு காரணம் கற்பித்தவாறு. இவ்வண்ணமே ஆசிரியர் மேலும் திறம்படக் கூறுதலை ஆங்காங்குக் காண்க.

உ. கவின் - அழகு. கடி - காவல். தவிசு - ஆசனம். சேடம் - மிகுதி. அவிர்தர - ஒளிர. பொற்கொல்லர் பொன்னல் ஓர் அணிகலன் செய்து, அதன்கண் நுட்ப வேலை செய்தற்கு அராவுதலும் தேய்த்தலும் செய்யுங்கால், பொன் உதிர்தலும் அதனையெடுத்துப் பிறிதோரணிகலன் செய்தலும்போல, பிரமன் அழகினுல் காஞ்சித் திருநகரைச் செய்து, அதன்கண் நுட்பத் தொழில் செய்யும்போது உதிர்ந்த அழகை எடுத்துத் தேவருலகத்தைச் செய்தான் போலும் என்றவாறு.

ஆதிநாள் முக்கண் எம்மான் அயன்றனைப் படைத்து வேதம்
ஓதுவித் தருளின் நோக்கி உலகெலாம் படையென் றேவும்
போதிது பார்த்திவ் வாறு படையெனப் புகன்று வைத்தான்
ஈதென லாகுங் காஞ்சி என்னுரை யளவைத் தாமே. ௩

இந்நகர் நோக்குந் தோறும் இமையவர் தமது நாடு
நன்னரென் றிருந்த தன்மைத் தாங்களே நாணி வைவர்
முன்னொரு சமயந் தன்னைப் பொருளென முற்றி நின்றோர்
பின்னர்வான் சைவம் எய்தப் பெறின்அவர் பேசு மாபோல். ௪

நீடும்இந் நகரம் மன்னி நெடுந்தவம் முயல்வோர் வான
நாடர்தம் பதமுங் கஞ்சன் நாரணன் வலாரி வைப்பும்
பாடிரி கான்ற சோறுக் காண்பதிப் பதியின் வண்மை
கோடியில் ஒருகூ றெவ்வா அவையெனக் குறித்தே யன்றே. ௫

### புறநகர். சோலை

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சுரும்புகால் உழக்க முகைபுடைந் தலர்ந்து துளித்ததீஞ் சுவை மதுப் பிலிற்றும், அரும்பெறற் சோலை மீமிசைக் கருவி முகிற்குழாம் அடர்வபாட் டளிக்கு, விரும்புதேன் அளியாக் கற்பக நாட்டை வெல்லுவான் வருவதோர்ந் தஞ்சித், தரும்புகழ் வலாரி ஊர்தியைச் செலுத்தித் தடுத்திடை மடக்குதல் மானும். ௬

---

௩. ஆதிநாள் - சிருட்டி காலம். இதனால் காஞ்சி பிரமன் படைப்பில் அடங்காமை கூறினர்.

௪. நன்னர் - நன்மை, நன்மையுடையது. உண்மை நோக்குவார்க்குச் சைவம் முழு உண்மையோடு கூடியிருத்தலும், ஏனைய சமயங்கள் அதன் கூறாயடங்குதலும் தோன்றுமாதலால், முன்னர் அதனையறியாது பிற சமயங்களையே சிறந்தனவென்று கொண்டிருந்தவர்கள், அதனையறிந்து சைவத்தை அடைந்த பின்னர் தம்மைத் தாங்களே இகழ்வர் என்பது கருத்து.

௫. கஞ்சன் - தாமரைமலரிலிருக்கும் பிரமதேவன். வலாரி - இந்திரன். வைப்பு - உலகம். பாடுஇரி - மேன்மை நீங்கிய. கான்ற - கக்கிய. சோறு - சோறுபோல.

௬. சுரும்பு - வண்டுகள். கால் - காலால். உழக்க - மிதிக்க. முகை - அரும்பு. தீஞ்சுவை - இனியசுவை. பிலிற்றும் - ஒழுகவிடுகின்ற. அரும்

நறவம்ஊற் றெடுப்பச் சிறகர்வண் டிமிரும் நளிபொழில் இடும் பைகூர்ந் தழுது, குறைபடப் பொதிந்த குயின்களை வல்லே குதித் தெழுந் துதைத்துதைத் தகற்றி, நிறைபுனல் தடத்துப் பிறழ்தருங் கிழமை கெட்டிள வாளைமீன் றனக்குத், துறைதொறுங் கைம்மா றெனக்கனி செழுந்தேன் சொரிவன நெடுமரப் பொதும்பர். எ

வண்டலாட் டயரும் வாள்மருள் நெடுங்கண் மங்கையர் நெரி சுரி கூந்தற், கொண்டலைக் காணுந் தொறுந்தொறும் அவர்தங் கோம ளச் சாயலுக் குடைந்து, தொண்டுபூண் டெதிர்நின் றுடுவ தேய்ப் பத் தோகைமா மயில்நடங் குயிற்றுந், தண்டளிர் துவன்றிப் புது நறுந் துளிக்குந் ததைமலர்ச் சாகையம் பொதும்பர். அ

வாம்பெருந் திரைய தடம்புடை யுடுத்த வளம்பொழிற் சாகை கள் தோறுந், தீம்புனல் குடையும் மாதரார் முன்னாள் செறித்தபட் டாடைபொன் அணிகள், பூம்புன லகத்தில் தோன்றலும் இளை யோர் புனல்அர மகளிரென் றஞ்சிக், கூம்பிய கரத்தர் அங்கலார் நகைப்பக் குலைமிசை நோக்கிவெள் குவரால். கூ

கொங்கவிழ் பொதும்பர்க் கொழுமுகை யுடைந்து குளிர்மதுச் சொரி தலின் ஆழ்ந்த, பங்கயச் சேக்கை மீமிசை எகினம், பைப்பய மேல்

---

பெறல் - பெறுதற்கரிய. கருவி - தொகுதி. குழாம் - கூட்டம். அடர்வ - நெருங்குவன. பாட்டு அளி - இசை பாடுதலையுடைய வண்டுகள்.

எ. இமிரும் - ஒலிக்கின்ற. மொய்க்கின்ற எனினுமாம். இடும்பை - துன்பம். கூர்ந்து - மிகுந்து. பொதிந்த - மூடிய. குயின் - மேகம். வல்லே - விரைவில். கிழமை - உரிமை. கைம்மாறு - பிரதி உபகாரம்.

அ. கோமளம் - மென்மை. உடைந்து - தோற்று. குயிற்றும் - செய் யும். துவன்றி - நெருங்கிய. ததை - நெருங்கிய. சாகை - கிளை. பொதும் பர் - சோலை.

கூ. வாம் - தாவுகின்ற. திரைய - அலைகளையுடைய. குடையும் - முழுகின்ற. இளையோர் - ஆடவர்கள். புனலர மகளிர் - நீரிலுள்ள தெய்வ கன்னியர். குலை - கரை.

க0. கொங்கு - வாசனையோடு. அவிழ் - மலர்கின்ற. சேக்கை - படுக் கை. பைப்பய - மெல்லமெல்ல. நிவந்து - உயர்ந்து. கருமை, உடையுடுத் தாமையையும்; வெயில் முதலியவற்றால் உடலை வருந்துவதையும் குறிக்கும்.

நிலந் தெழுவ, பொங்குவெம் பாவக் கருமுருட் டமணால் புணரியுள் சிலையுடன் அமிழ்ந்தும், எங்கள்வா கீசர் அஞ்செழுத் தருளால் எழுந்துமேல் வயங்குதல் மானும். கO

யானைக் கூடம்

கலி விருத்தம்

முறைமுறை பனைக்கைநீர் முகந்து வாய்மடுஉ
நிறைதடங் குறைதட மாக்கு நீண்டவெண்
பிறைமருப் பொருத்தல்மா மதப்பெ ருக்கினால்
குறைதடம் நிறைதட மாக்குங் கொள்கைத்தே. கக

தாம்உறை இடந்தரி யலர்கட் கிந்தவர்
தாம்உறை இடங்களில் தங்கி ளைக்குலந்
தாம்உறப் பரிவருத் தனைசெய் வேழங்கள்
தாம்முறை முறைதிரி தண்டம் எண்ணில. கஉ

மழைப்புனல் தங்கள்மேல் ஊற்று மாமுகில்
உழைச்செல வெகுண்டெதிர் இறைப்ப தொப்பநீள்
புழைக்கையில் நிறையநீர் முகந்து போர்மதத்
தழைச்செவிக் கரிகள்விண் தலத்து வீசுவ. கங

கறையடிச் சுவடெனுங் கனக வட்டில்கள்
நிறையவாக் கியமத நீரைச் செல்வர்போல்

---

முருடு - வன்மை. இது முரடு எனவும் வழங்கும். அமணால் - சமணரால். வாகீசர் - திருநாவுக்கரசு சுவாமிகள்.

கக. பனைக்கை - பனைபோன்ற துதிக்கை. மடுஉ - மடுத்து, உண்டு. மருப்பு - கொம்பு. ஒருத்தல்மா - யானை, இருபெயரொட்டு.

கஉ. இது சொற்பொருட்பின் வருநிலை. உறை - தங்குகின்ற. தரியலர் - பகைவர். கிளை - சுற்றம். பரிவருத்தனை - மாற்றிக்கொள்ளுதல். தமக்குத் தலைவராகிய அரசர்க்குப் பகையாய் உயிர் விடுதற்கஞ்சிய அரசர்களைப் போரில் தோற்றோடித் தமது இடமாகிய காட்டையடையும்படி செய்து, அவர்கள் வாழ்ந்த இடத்தில் தாங்கள் கட்டப்பெறும் யானைகள் என்றபடி. முறை முறை - மாறி மாறி. தண்டம் - யானைசெல்லும் வழி.

கச. கறை - உரல். கனகம் - பொன். வட்டில்கள் - கிண்ணங்கள். வாக்கிய - சொரிந்த. அறை - ஒலிக்கின்ற. ஆம்பல் - யானை.

சிறையளிக் குலமெலாந் தெவிட்ட உண்டுவாழ்ந்
தறைபெரு வளத்தன ஆம்பல் வீதியே. கச

கொடையினிற் கீழ்ப்படுங் கொண்டல் யாவையுந்
தடைபடச் சிறையிலிட் டாங்குச் சார்கடு
நடைஇரு முறச்செவி நான்ற வாய்க்களி
றடையவும் பிணித்தன அளவில் கூடமே. கரு

குதிரைப் பந்தி

கரிஉமிழ் விலாழியுங் காய்சி னக்கடும்
பரிஉமிழ் விலாழியும் பாய்ந்து சேறுசெய்
தெருவெலாம் அங்கலார் சீற டிச்சுவ
டுருகெழு தாமரைத் தோற்றம் ஒக்குமே. கசு

சுலவுகொய் யுளையடிச் சுவடு தோறும்மேல்
கலனையின் உக்கசெம் மணிக திர்ப்பன
பலசுடர்த் தகழிகள் பரப்பி வைத்தெனக்
குலவுநல் வளத்தன குந்த வீதியே. கஎ

மல்லரை மயில்களை வான ரங்களைப்
புல்லிய முயல்களைப் பொருச ரங்களை
வல்லவா புறக்கொடை கண்ட வான்கதிப்
பல்லியல் புரவியின் பந்தி ஆயிரம். கஅ

---

கரு. கொண்டல் - மேகம். கடுநடை - விரைந்த நடை. நான்ற தொங்கிய. கூடம் - யானைக் கூடம்.

கசு. விலாழி - வாய்நுரை. சீறடி - சிறியகால். உருகெழு - நிறம் அமைந்த.

கஎ. சுலவு - சுழல்கின்ற, திரிகின்ற. கொய் உளை - கத்தரிக்கப்பட்ட புறமயிர். கலனை - கல்லணை, குதிரையின் முதுகிலிடும் தவிசு. உக்க - உதிர்ந்த. கதிர்த்தல் - ஒளி விடுதல். தகழி - விளக்கு அகல். குந்தம் - குதிரை.

கஅ. புல்லிய - பொருந்திய; சிறிய எனலுமாம். வான் - பெருமை. கதி - குதிரையின் நடை. குதிரைகளின் நடை இங்குக் கூறியவாறு மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி என ஐந்து வகைப்படுமென்க. வல்ல வாறு என்பது வல்லவா என நின்றது. வல்லவாற்றால் என்க. புறக்கொடை - தோற்று ஓடுதலால் காணப்படும், முதுகு இயல் - இலக்கணம்.

தேர்நிலை

மதக்கரி தனைமுயல் வயங்கொள் காதையைப்
புதுக்கவீங் கிருளொளிப் பொலிவைப் பற்றியீர்த்
ததிர்ப்பதென் றுளங்கொளக் கரிய வாங்குர
கதத்தொகை பற்றுபொன் தேர்கணக்கில. ௧௯

எரிமணிச் சோதியுள் மூழ்கி ஈர்த்துச்செல்
பரிகளைக் காண்கிலர் பார்த்துச் சூரன்ஊர்
திருவுடை இந்திர ஞாலத் தேர்கொல்என்
றுருகெழச் செல்லுதேர் உலப்பில் வீதியே. ௨௦

வீரர் இருக்கை

நால்வகை நிலையினல் பயிலும் நாமவில்
வேல்வளை பலகைவாள் கற்கும் விஞ்சையர்
கோலவான் விஞ்சையர் குழாங்கள் நோக்குபு
சால்பினை வியத்தகு தலைமைப் பாலரே. ௨௧

---

௧௯. கரி - யானை. வயம் - வெற்றி. காதை - கதை. யானையை முயல் வெல்லும் இடம் காஞ்சியிலுள்ள அற்புதங்களில் ஒன்று. இதனை, இப்புராணம் விம்மிதப் படலத்துட் காண்க. வீங்கு - மிகுந்த. இருள் பற்றி ஈர்த்தென்க. பொன் மயமான தேர்களைக் கருமையான குதிரைகள் இழுப்பது, இருள் ஒளியைப் பற்றி இழுப்பது போலும் என்றவாறு. குரகதம் - குதிரை.

௨௦. எரிமணி - தீப்போலும் மாணிக்கம். சோதி - ஒளி. பரி - குதிரை. சூரன் - சூரபதுமன். ஊர் - ஏறிச்செல்லும். உருகெழ - அச்சமுற. உலப்பு இல் - நீங்குதல் இல. வீதி உலப்பில் என முடிக்க. சூரபதுமன் தேர் 'இந்திர ஞாலம்' என்னும் பெயருடைமையும், அது, குதிரை முதலியவையின்றித் தானே ஓடவல்லதென்பதும் கந்தபுராணத்துட் காண்க. இங்குக் கூறிய குதிரைகள் செந்நிறமுடையன வென்க. அவை மாணிக்க ஒளியோடு ஒன்றாய்ப் போனமையால் தோன்றாவாயின.

௨௧. நாம் என்பது திரிந்து நின்றது; அச்சமென்பது பொருள். வில் வீரர் நிற்கும் நிலை பைசாசம், ஆலீடம், மண்டலம், பிரத்தியாலீடம் என நான்கு வகைப்படும். அவை முறையே ஒருகாலை ஊன்றி ஒருகாலை முடக்கி நிற்றலும், வலக்காலை மண்டலித்து இடக்காலை முன் வைத்து நிற்றலும், இருகாலையும் மண்டலித்து நிற்றலும், வலக்காலை முன்வைத்து இடக்காலை மண்டலித்து நிற்றலுமாம். வளை - சக்கரம். பலகை - கேடகம்; இது வட்ட வடிவமாய், வாள் முதலியவற்றைத் தடுக்குங் கருவி. விஞ்சையர் இரண்டில்

தொழில் செய்வோர் இருக்கை

கிம்புரி புரசைகள் கிடுகு கூவிரம்
அம்பொனிற் கலினகுப் பாய மாதிய
வெம்படை எனவும் வேறு வேறுசெய்
பம்பிய வினைஞர்வாழ் இடம்பல் லாயிரம். உஉ

நடைநகம் முதலிய உலவும் நாமநீர்ப்
புடைநகர் வளம்இது புகன்றுந் திங்கள்ஏர்
உடைநக மழைநிகர் ஓதி யார்பயில்
இடைநகர் வளம்இனி இயம்பலுற்றதே. உங

இடைநகர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

குடமுலைக் கெதிரென் றேதுங் குரும்பையை வெகுண்டு மின்னார்
பொடிஇடி உலக்கை மீப்போய்ப் புடைத்தன மீளா முன்னம்
முடிமிசை அதிரத் தாக்கிச் சிந்துமுப் புடைக்காய்த் தெங்கின்
கிடர்இடர்க் கெதிர்செய் வோரின் வியத்தக எங்கும் ஒங்கும். உச

---

முன்னது கல்வியுடையவர், பின்னது வித்தியாதரர். கோலம்-அழகு. நோக்குபு-நோக்கி. சால்பு - அமைதி. வியத்தகு - அதிசயிக்கத் தக்க. தலைமை - முதன்மை. கற்கும் விஞ்சையர் தலைமைப்பாலர் என்க.

உஉ. கிம்புரி - யானைக் கொம்பிலிடும் பூண். புரசை - யானைக் கழுத்திலிடு கயிறு. கிடுகு - தேரின் மரச்சுற்று. கூவிரம் - தேரின் கொடிஞ்சி; இது தாமரைப் பூப்போலச் செய்து தேர்த்தட்டின்முன் நடப்படுவது. கலினை - கல்லணை, குதிரைமேல் இடும் தவிசு. குப்பாயம் - சட்டை, கவசம். பம்பிய - நெருங்கிய. வினைஞர் - கைத்தொழில் செய்வோர்.

உங. நடைநகம் - நடத்தலுடைய மலை, யானை; வெளிப்படை. புகன்றும் - சொன்னோம். திங்கள் - சந்திரன். ஏர் - அழகு. உடை - அழிக்கின்ற; உடைய என்பதன் விகாரமெனினுமாம். நகம் - உகிர். மழை - மேகம். ஓதி - கூந்தல். இயம்பலுற்றது இடை நகர் வளம் என்க.

உச. பொடி - வாசனைப்பொடி. முப்புடைக்காய் - மூன்று பக்கங்களுள்ள காய், தேங்காய். தெங்கு - தென்னைமரம்.

கோல்வளை கறங்கக் கொங்கை அசைதரக் குலேயக் கூந்தல்
மேல்அணி கலக லென்ன வியர்வெழ உயிர்ப்பு நீள
வால்வரிப் புனைபந் தாடு மாதரார் செயல்காண் தோறுங்
கால்வரி கழலி னார்க்குக் காமம்மீக் கூரும் மாதோ. உரு

தமதுரு நிறத்தை வவ்வுந் தருக்கறிந் தொறுப்பார் போலத்
தமனியந் தகர்த்த சுண்ணம் ஒருவர்மேல் ஒருவர் வீசத்
தமனியச் சுண்ணம் எங்கும் பரந்தன தவழ்த லாலே
தமனிய உலகந் தன்னை அசிப்பன தடந்தேர் வீதி. உசு

எரிமணி சோதி கால இருள்வர வறியா மாடத்
தரிவையர் கூந்தல் ஊட்டும் அகிற்புகை நாகத் தெய்திப்
பெரிதிருள் விளைப்ப நோக்கும் பெற்றியோர் தட்டுமாறு
மரீஇயின உலகம் என்னே யெனமனம் மருள்வர் அம்மா. உஎ

அகழி.

மாற்றவள் பூசை ஆற்றி வரம்பெறு முறைமை கேளா
ஏற்றமார் கங்கையாளுங் கம்பர்பால் வரத்திற் கெய்திச்
சாற்றருங் கச்சிமூதூர் வலங்கொளுந் தகைமைத் தாய
ஆற்றல்சால் அகழி ஆழம் அகலம்ஆர் அளக்க வல்லார். உஅ

---

உரு. கோல் - திரட்சி. வளை - வளையல். கறங்க - ஒலிக்க. உயிர்ப்பு - மூச்சு. வால் - வெண்மை. வரிப்புனை பந்து - வரிந்து புனைந்த பந்து, கட்டி அழகுசெய்த பந்து. கால் - காலில். வரி - கட்டிய. கழல் - ஆடவர் காலணி. மீக்கூரும் - மேன்மேல் மிகும்.

உசு. வவ்வும் - கவர்ந்த. தருக்கு - செருக்கு. ஒறுப்பார்போல - தண்டிப்பவர்போல. தமனியம் - பொன். அழகுசெய்தற் பொருட்டு நறுமணப் பொடியுடன் பொன் கூட்டுவர். தகர்த்த - இடித்த. சுண்ணம் - பொடி. அசிப்பன - நகைப்பன.

உஎ. கால - கக்க. அரிவையர் - பெண்கள். நாகம் - வானுலகம். தட்டுமாறு - நிலைமாறி. நிலவுலகம் மேலும், வானுலகம் கீழுமாக மாறி என்பதாம்.

உஅ. சாற்றரும் - சொல்லுதற்கரிய. தகைமைத்து - தன்மையை உடையது; இது உவமை குறித்து நின்றது. சால் - அமைந்த.

நெடிபடு பொதும்பர் சூழ நிரைநிரைக் கரத்தாற் செம்பொன்
தடமதில் பொதியப் புல்லுந் தண்கிடங் கிறைவர் ஏவக்
கடல்களை வளைய நோக்கிக் கம்பரை இறுகப் புல்லுஞ்
சுடர்மணிக் கங்கை மானுந் துளித்தநீர் தழும்பு மானும். ௨௯

திரைஎறி தாளம் பாங்கர்த் திரண்டுவால் ஒளிகள் வீசிக்
குரைபுனல் குளிக்கும் வேழக் குழாத்தைவெண் கயமாச் செய்யக்
கரைமிசைக் காண்போர் என்னே இம்மையே கடவுள் தன்மை
புரைதபத் தரும்இத் தீர்த்தம் எனஇறும் பூது கொள்வார். ௩௦

கடம்படு களிநல் யானை குண்டகழ் கலக்கிக் கொட்பத்
தடங்கரை யேறற் கார்த்துத் தாள்தொடர் பிணித்துப் பாகர்
இடம்பட இருபால் ஈர்ப்ப இருங்கடல் அமுதம் உண்ணத்
தொடங்குநாள் சிலம்பு நட்டுச் சுராசுரர் கடைதல் மான. ௩௧

நவமணி கொழித்துப் பொங்கு நளிதிரை அகழி நாப்பண்
கவளமாக் கடத்த யானைக் கணஞ்சுலாய் உழக்குங் காட்சி
உவர்படாப் பௌவம் ஈதென் றுவந்துவந் தெழிலி தெண்ணீர்
சுவறவாய் மடுப்பக் கொட்குந் தோற்றமே யனைய தம்மா. ௩௨

---

௨௯. நெடி - சிள்வீடு (ஒருவகை வண்டு). படு - ஒலிக்கின்ற. "நெடி படு கானத்து நீள்வேன் மறவர்" (பு - வெ. ௩.) என்புழிக் காண்க. துளித்த நீர் - மதில்மேல் தெறித்த நீர்.

௩௦. தாளம் - முத்து. வாலொளி - வெள்ளொளி. குரைபுனல் - ஒலிக்கின்ற நீர். வேழக் குழாம் - யானைக் கூட்டம். கயம் - யானை. புரை தப - குற்றந்தீர. இறும்பூது - வியப்பு.

௩௧. கடம்படு - மதநீர் பெருகுகின்ற. களி - செருக்குக் கொண்ட. குண்டு - ஆழம். கொட்ப - சுழல. ஆர்த்து - ஆரவாரித்து. தாள்தொடர் - காற்சங்கிலி. இடம்பட - விசாலமாக. ஈர்ப்ப - இழுப்பார். சிலம்பு - (மந்தர) மலை. சுராசுரர் - தேவர்களும் அசுரர்களும். மான -ஒப்ப. கடைதல் மான ஈர்ப்ப என்க.

௩௨. நளி - செறிந்த. நாப்பண் - நடுவில். கவளம் - யானை உணவு. கடத்த - மதநீரையுடைய. கணம் - கூட்டம். சுலாய் - சுழன்று. உழக்கும் - கலக்கும். பௌவம் - கடல். உவந்து - மகிழ்ந்து. எழிலி - மேகம். சுவற - வற்ற. கொட்கும் - சுழல்கின்ற. அம்மா, வியப்பிடைச்சொல்,

இத்தகை அகழி யென்னும் இதுவும் ஓர்கடலே யாக
அத்தின லிரட்டி யென்ன தேழெனை அறைவர் மேலோர்
தத்தலைக் கடைக்கால் வட்டச் சலதியும் இஃதும் மன்றச்
சுத்தநீர்க் கடலென் றெண்ணி ஒருமையின் தொகுத்தார் போலும்.

புடைபயில் பொதும்பர்த் தேனும் புனல்மலர்த் தேனும் பாய்ந்து
விடையவர்க் குமையாள் ஆட்ட வரும்மது வேலை யொக்கும்
குடநிகர் செருத்தல் மேதி கொட்புறச் சொரிந்த பாலால்
உடைதிரை அகழி தீம்பால் அளக்கரும் உற்று லொக்கும். ௩௪

பழமுதல் பொருள்கள் விற்கும் பாவையர் நாளும் அந்திப்
பொழுதின்அக் கலன்க ழீஇய வண்டலால் புனற்கி டங்கு
வழிபடும் உமையாள் எந்தைக் காட்டுமா லியங்கள் ஒன்றுங்
கழிவுறு சூழத் தேங்கிக் கிடந்ததே கடுக்கும் மன்னே. ௩௫

பாசடைக் கவயம் போர்த்துப் பகைஞரோ டிகலித் தானும்
பூசலை விளைப்ப அன்னோர் கணைபொரு புழைகள் தோறுந்
தேசுற எழுந்த சோரி யாமெனச் செய்ய கஞ்சம்
மூசுவண் டீயின் ஆர்ப்ப மொய்த்துள தகழித் தெண்ணீர். ௩௬

---

௩௩. அத்தின் - அதனால். நாலிரட்டி - எட்டு. தத்து - தாவுகின்ற. கடைக்கால் - கடைசி இடம். சலதி - கடல். மன்ற - நிச்சயமாக. எண்ணி - ஒன்றாக வைத்தெண்ணி. ஒருமை - சாதியொருமை. ஒரு தன்மைப்பட்ட பலபொருள்களை இனம்பற்றி ஒன்றாக வைத்துக் கூறுதல் உண்டு.

௩௪. புடைபயில் - பக்கத்தில் பொருந்திய. பொதும்பர் - சோலை. மதுவேலை - தேன் கடல். செருத்தல் - மடி. மேதி - எருமை. அளக்கர் - கடல்.

௩௫. கலன் - பாத்திரம். கிடங்கு - அகழி. மாலியம் - நிர்மாலியம் கடுக்கும் - ஒக்கும்.

௩௬. பாசடைக் கவயம் - பச்சிலைகளாகிய கவசம். இகலி - மாறு கொண்டு. பூசல் - போர். பொரு - தைத்த. புழை - துளை. தேசு உற - ஒளி பொருந்த. சோரி - உதிரம். செய்யகஞ்சம் - செந்தாமரை. மூசு - மொய்த்த. ஈயின் - ஈயைப்போல. தெண்ணீர் கஞ்சம் மொய்த்துளது என முடிக்க.

அணிமலர் அழகை நோக்கி அகழியுள் இழிகின் றோருந்
திணியும்உட் கொடுமை நோக்கிச் சேயிடை விலகு வோருங்
கணிகையர் கோலம் நோக்கிக் காதலித் தகப்பட் டோரும்
பிணியும்உட் கருத்து நோக்கி வெரீஇப்பெயர்ந் தகல்கின் றோரும்.

மதில்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கம்பை யைத்த டுத்த பின்பு கம்ப னாரை யைத்தலும்
பம்பி ஆர்த்தொ ருங்கு பௌவம் ஏழு முற்று மாறுணர்ந்
தம்பை அண்ட பித்தி காறும் ஆக்கு மாத்த டைபொர
வம்ப லர்க்கி டங்கு சூழ்ந்த மல்லல் நொச்சி ஓங்குமே. ௧அ

திருக்கி ளர்ச்சி யிற்செ ருக்கு தேவ நாடு பாதலத்
தருக்கு நோக்கி வெஞ்சி னந்த லைக்கொள் காஞ்சி யவ்வலி

௧எ. இழிகின்றோர் - இறங்குபவர். திணியும் - நெருங்கிய. முன் கொடுமை என்க. உட் கொடுமை என அகழிக்கேற்றுவாரும் உளர். சேயிடை - தூரம். பிணியும் - தம்வயப்பட்ட, ஒருவர் மாட்டும் பற்றுதல் இல்லாத. வெரீஇ - அஞ்சி. பெயர்ந்து அகலல் - விட்டு நீங்குதல். ஆவர் என்னும் பயனிலை தொக்கது. இழிகின்றோரும் விலகுவோரும், முறையே அகப்பட்டோரும், அகல்கின்றோருமாவர் (ஒப்பர்) என்பதாம்.

௧அ. கம்பை - கம்பாநதி. பம்பி - நெருங்கி. முற்றுதல் - வளைத்துக் கொள்ளுதல். அம்பை - இறைவி. பித்தி - சுவர். பொர - ஒப்ப. வம்பு அலர் - மணம் பொருந்திய மலர்கள். மல்லல் - வலிமை. நொச்சி-மதில். இறைவி காஞ்சியில் இறைவனை வழிபடுங்கால் இடையே இறைவன் ஏவலால் பெருக்கெடுத்து வந்த கம்பையாற்றை, இறைவி காளியைக்கொண்டு தடுத்தமையை ஆசிரியர் கச்சியப்ப முனிவர் கூறுதல் காண்க. பௌவம் முற்றுமாறு என்றது கற்பனை. இவ்வினத்துச் செய்யுட்களை நான்கு சீராக்கிக் கலி விருத்தமெனச் சிலர் கூறுவர்; அது சீர்நிலை யாகாமை யுணர்க. கலிநிலைத் துறையென்பார் கூற்று ஆராயற்பாற் றன்று. இதனுள், 'தடைபொர' என்புழி ஐகாரம் நெட்டெழுத்தலகு பெறும். மேலும் சில விடத்து ஐகாரம் இவ்வாறு நிற்றலும், சில அடிகள் சீர்நிலை வேறுபட வந்து விரவுதலுங் காண்க

௧௯. திரு - செல்வம். கிளர்ச்சி - மிகுதி. செருக்கு - அகங்கரிக்கின்ற. தேவநாடு பாதலம் உம்மைத்தொகை. தலைக்கொள்ளல், ஒரு சொல் நீர்மைத்து. அவ்வலி - அவற்றின் வலிமை. முருக்க - அழிக்க. ஏவி - ஏவினமையால்.

முருக்க எண்ணி முன்பு போய்வ ளைப்ப ஏவி மூண்டென
மருக்கி டங்கும் இஞ்சி யும்வி யத்த கும்வ ளத்தவே. ௩௯

கிடங்கின் எல்லை காண்ப தன்று கீழும் மேலு மாகநீள்
விடங்கர் தாள ணிந்த விண்டு நோக்க மேவி யன்மதில்
தடங்கொள் எல்லை காண்ப துந்த லைவர் தஞ்ச டைத்தலை
இடங்கொள் வெண்ட லைய லாமல் எவர் காண வல்லரே. ௪0

கச்சி வாணர் சென்னி தாள்கள் காண முன்ப றந்தகழ்ந்
தச்ச ழிந்த மால்வி ரிஞ்சர் அன்று சென்ற எல்லைகள்
நிச்ச யிப்ப அவ்வ ளவும் ஏக வைத்த நீள்குறி
நொச்சி யுங்கி டங்கு மென்ன நோக்கு வார்க்கி லங்குமே. ௪௧

இடித்த கழ்ந்து தம்இ ருக்கை எற்றி நீர்க்கி டங்கினில்
வெடித்தெ ழுந்து தாவு வாளை மீனை மீண்டு ழுவகை
அடுத்து விக்க உண்டு தேக்கி அம்ப ரத்து மீனையுந்
தடுத்து வென்றி கொள்ள உள்ள சார்ம திற்பொ றிக்குலம். ௪௨

---

மரு - வாசனை. இஞ்சி - மதில். அகழி பாதலத்தையும், மதில் தேவருலகையு மடைந்தன என்பது கருத்து.

௪0. விடங்கர் - அழகர், இறைவர். விண்டு - திருமால். நோக்கம் - கண். திருமால் இறைவனுக்குச் சாத்தும் ஆயிரம் தாமரை மலர்களில் ஒன்றை இறைவன் மறையும்படி செய்ய, அதற்குப் பதிலாகத் தமது ஒரு கண்ணைப் பறித்து இறைவன் திருவடியில் சாத்தினமையை, இப்புராணம் திருமாற் பேற்றுப் படலத்திலும், தாருக வனத்து முனிவர்கள் அனுப்பிய வெண்டலையை இறைவன் திருமுடியில் அணிந்து கொண்டமையைக் கந்த புராணம் ததீசி யுத்தரப் படலத்திலுங் காண்க.

௪௧. கச்சிவாணர் - திருவேகம்பர். சென்னி - திருமுடி. தாள்கள் - திருவடிகள். அகழ்ந்து - கல்லி. அச்சு அழிந்த - (தமது தேவ) உருவம் நீங்கிய. விரிஞ்சன் - பிரமன்.

௪௨. வெடித்து - துள்ளி. விக்க - (தொண்டை) விக்கும்படி. தேக்கி - நிறைந்து. அம்பரம் - வானம். பொறிக்குலம் - யந்திரக் கூட்டங்கள். பகைவர் அழித்தற்கு இயலாதவாறு தாமே போர் செய்யும் யந்திரங்களை மதிலில் அமைப்பது இயல்பு. அவற்றின் இயல்புகளைச் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய நூல்களிற் பரக்கக் காண்க.

உடல்ப டைத்தி யக்க ஓர்நி மித்தன் உண்டெ னக்கொளத்
திடம்வ லித்த சான்ற தாய வனர் தாள்செ யப்படுந்
தொடர்பு டைப்பொ றிக்கு லஞ்சு ழன்றெ ழும்வி ழும்பகை
மிடல்கெ டத்தெ ழிக்கும் ஓடும் மீளும் இன்ன நீரவே. ௪௩

இம்ம திற்பொ றிக்கு லம்ம திர்த்து ளோர்த மைச்செருத்
திம்மெ னும்முன் வென்றி கொள்ளும் ஈது ணர்ந்து தெவ்விர்காள்
அம்ம ஈண்டு றேல்மின் என்று கைஎ டுத்த சைப்பபோல்
அம்ம தில்த லைத்து கிற்கொ டிந டங்கு மாலரோ. ௪௪

கலி விருத்தம்.

வளமகன் திருநகர்க் கிழத்தி மாமைசால்
இளமுலை திளைப்பக்கார் எழினி சேர்த்துபு
தளர்வற நாட்டிய தம்ப மேயெனக்
கிளர்மதி விடர்தொறுஞ் செறியுங் கேதனம். ௪௫

நேமிமால் வரைமிசைக் கிளைத்து நீண்டவே
யாமெனக் கொடிமிடை அம்பொன் மாமதில்
மீமிசைக் கோபுர மேலுஞ் சேறலால்
யாமினிப் புகல்வதற் குவமை இல்லையே. ௪௬

---

௪௩. இயக்க - நடத்த. நிமித்தன் - கருத்தா. திடம் வலித்த சான்று - உறுதிமிக்க சாட்சி. யவனர் - சிற்பிகள். தாள் - முயற்சியால். தெழிக்கும் - அதட்டும். நீர - தன்மையுடையன. பொறிகளிடத்து இயக்கம் காணப்படினும், அவை தாமே அங்ஙனம் ஆயினவல்ல, சிற்பிகளால் ஆக்கப்பட்டனவென்பது கண்கூடாகக் கண்டு தெளியப்படுதலால், அறிவில்லாத பொருள்கள் தாமே காரியப்படுவனவல்ல, செய்வோன் ஒருவனால் காரியப்படுமென்றுணர்ந்து, அவ்வுணர்வு கொண்டு, உடம்பினிடத்து இயக்கம் காணப்படினும், அஃது அறிவில் பொருளாதலால் அதனையும் ஆக்கி இயக்குவானொருவன் உளனாதல் திண்ணம் என்பது தெளியப்படுமென்பதாம்.

௪௪. செருத்து - கொன்று. தெவ்விர்காள் - பகைவர்களே. அம்ம என்பது கேட்பித்தற் பொருட்டு. நுடங்கும் - அசையும்.

௪௫. வளமகன் - வளப்பமாகிய தலைவன். கிழத்தி - தலைவி. திளைப்ப - அனுபவிக்க. கார் எழினி - அழகிய திரை. சேர்த்துபு - சேர்த்து. கேதனம் - துகிற் கொடி.

௪௬. நேமிவரை - சக்கரவாளகிரி. வேய் - மூங்கில். மிடை - நெருங்கிய

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மகதநா டென்னக் காஞ்சி வைப்பினுங் கடைஞர் * எய்தி
இகலற வளர்க்கும் எண்ணான் கறத்தினுக் கிடர்செய் யாமைத்
தகைஅணங் குமையாள் வைத்த தடைநிகர் மதில்சீர் முற்றும்
புகர்அற இயம்பப் புக்கால் புலவர்க்கும் உலப்பு றாதே சஎ

மிடைபுறத் தூர்க ளெல்லாம் விண்ணவர் நகரா அங்கண்
புடைநகர் அயன்ஊ ராகப் பூமகள் கொழுநன் றன்னூர்
இடைநக ராக மற்றை ஈசனூர் உலக மேயா
நடைபிற ழாத கீர்த்தி படைத்தஉள் நகரஞ் சொல்வாம். சஅ

அகநகர். பரத்தையர்வீதி

அளிமதன் நூலி னாற்றல் ஆடவர் தம்மோ டாடிக்
களிமனைக் குள்ளால் தாங்கள் விளைத்திடுங் கலவி யெல்லாந்
தெளிதர மாடந் தோறுஞ் சித்திரந் தன்னிற் காட்டி
இளையரை மயக்கிக் காமம் ஏற்றுவோர் சேரி மல்கும். சகூ

வரிஅளி முரலா வாடா மாலைய இமையா நோக்க
தரைமிசைத் தோயாத் தாள சித்திரந் தயங்கு காட்சி

---

மதிலும் கோபுரமுமே வானத்தையளாவியிருக்க, அவற்றின்மேல் பொருந்தி நீண்ட கொடிகளின் அளவை எவ்வாறு கூறுவதென்பது கருத்து.

சஎ. கடைஞர் - கீழ்மக்கள். தகையணங்கு - அழகினையுடைய இறைவி. புகர் - குற்றம். புலவர் - தேவர். உலப்புறாது - முடிவு பெறாது. மகதநாட்டில் இறைவி அறம் வளர்த்தபோது அந்நாட்டரசன் அதற்கு இடையூறாக அறச்சாலையைக் கவர்ந்துகொள்ள நினைத்தமையைக் கச்சியப்ப முனிவர் காஞ்சிப் புராணத்துட் காண்க. * 'கடையர்' எனவும் பாடம்.

சஅ. மிடை - நெருங்கிய. புடைநகர் - புறநகர். நடை - ஒழுக்கம். உள்நகரம் - அகநகர். புறநகர், இடைநகர், அகநகர் என்பன பின் முன்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை. நகர்ப்புறம், நகர் இடை, நகர் அகமெனப் பொருள்தரும்.

சகூ. அளி - அன்பு. களி - மகிழ்ச்சியைத் தருகின்ற. ஏற்றுவோர் என்றது பரத்தையரை. பரத்தையர் - பொதுமகளிர்.

ரு0. வரி - கீற்று. அளி - வண்டு; முரலா - மோந்தறியாத. முரலாமாலை, வாடாமாலை என்க. மாலைய - மாலைகளையுடைய. நோக்க - கண்களையுடைய. தாள - கால்களையுடைய. இக்குறிப்புப் பெயரெச்சங்கள் அடுக்கிச் சித்திர

வரைவிலா மகளிர் இன்னோர் மாண்நலம் வேட்டு வானில்
சுரர்களும் எய்திச் செவ்வி பார்த்துறை தோற்றம் ஒக்கும் ருo

பூத்தபின் இராறு நாளுங் கிழத்தியர்ப் புணர்ந்து தம்மை
நீத்தன ரெனுஞ்சீற் றத்தால் நின்றசு ரொன்பான் நாளும்
ஏத்தும்ஆ டவரைத் தங்கள் இளமுலைத் துருக்கம் ஏற்றிப்
பாத்திரு நிதிய மெல்லாம் பறித்தனர் கொள்ளை கொள்வார் ருக

கோலத்தின் இசையின் யாணர்க் கூத்தினின் அவிநயத்திற்
சீலத்தின் கலவிச் செய்கைத் திறத்தினின் பிறவாற் றானும்
ஞாலத்து மைந்தர் தம்மை மருட்டிநற் பொருள்கள் வவ்விக்
காலுற்ற சாற்று வேழக் கோதுபோல் கழிய நீப்பார். ருஉ

அலகில்நல் லறஞ்சூழ் காஞ்சி அமர்பெருஞ் செல்வராயுங்
குலமுறைச் சார்பால் வெந்நோய்க் கோட்பட்டார் இழிஞ ரேனுஞ்

மென்னும் ஒருபெயர் கொண்டன. தயங்கு - விளங்குகின்ற, வரைவின் மகளிர் என்பதற்குப் பரிமேலழகர், 'தந்நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரைவிலாத மகளிர்' என வுரைத்தார். ஒரு தலைவனை வரைந்து கொள்ளாதவரெனினும், ஓர் ஆடவனையும் மனத்தாற் கொள்ளாதவரெனினும் பொருந்தும். மகளிராகிய இன்னோர் எனக்கொள்க. மாண்நலம் - மாட்சிமைப்பட்ட இன்பம். வேட்டு - விரும்பி.

ருக. கிழத்தியர் - தலைவியர். நீத்தனர் - நீக்கினர்கள். சீற்றம் - கோபம். ஏத்தும் - தம்மைப் புகழ்கின்ற. துருக்கம் - மலைமேற் கோட்டை. இருநிதி - பெரும்பொருள் - பாத்து - பகுத்து. தலைவி பூப்புற்ற நாள் தொட்டுப் பன்னிரண்டு நாட்கள் கருத்தரிக்குங் காலமாதலால் அக்காலத்தில் தலைவர் தலைவியரைப்பிரியாரென்பதை, "பூப்பின் புறப்பா டீராறு நாளும் - நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர் - பரத்தையிற் பிரிந்த காலையான" (தொல் - பொருள். கூஅஎ.) என்பதனானுணர்க.

ருஉ. கோலம் - அழகு. யாணர் - அழகு. அவிநயம் - கை கண் முதலிய உறுப்புக்களைக் கருதிய பொருளை அறிவித்தற்கு ஏற்பக் காட்டுதல். சீலம் - (தங்கள்) ஒழுக்கம். திறம் - வன்மை. காலுற்ற - சக்கப்பட்ட. வேழம் - கரும்பு. நீப்பார் - விட்டுவிடுவார்கள்.

ருங. அலகில் - அளவில்லாத. அமர்பெருஞ் செல்வர் - இருத்தலாகிய பெருஞ்செல்வத்தை யுடையவர். அமர்ந்த பெருஞ்செல்வ ரெனினுமாம்.

சிலகொடுப் பனவுங் கொண்டு சேர்ந்துபோய் வஞ்ச மெல்லாம்
நிலைபெற அடைத்து வைத்த நெஞ்சின ராகி வாழ்வார். ௫௩

அலைவிழிக் கணிகை நல்லார் ஆடவர் தமக்கு நல்கும்
இலைநிக ரெனுமின் பத்திற் கின்பமும் சமமாக் கொண்டு
விலையென நிதியுங் கோடல் வியப்பிற்றே ஏற்ற மாக
மலைநிகர் தனங்கள் ஈந்தோர் மலைநிகர் தனமுங் கொள்வார். ௫௪

தவமறைக் கிழவன் மாயன் தாணுவென் றிவரும் இவ்வூர்க்
கவர்மனப் பரத்தை மாதர் கண்வலைப் பட்டே இன்றும்
இவறிய அலரோன் மாலோன் பித்தனென் றிப்பேர் பெற்றார்
சிவசிவ யாவ ரேயோ அவர்திறத் தகப்ப டாதார். ௫௫

விற்றிடும் அல்குல் தன்னை மீளவுந் தமதே யாக்கி
மற்றைய நாளும் விற்கும் வரைவிலார் வீதி இச்சீர்
கற்றிலா வணிக மாக்கள் ஆவணக் கவினை நோக்கிப்
பற்றுவெண் டாளக் கோவைப் பத்தியால் சிரிக்கும் மன்னோ. ௫௬

---

காஞ்சியாகிய தலச்சார்பால் நோய் அணுகாதாயினும் குலச்சார்பால் அணுகிய தென்பார், 'காஞ்சி அமர்பெருஞ் செல்வராயும் - குலமுறைச் சார்பால் வெந் நோய்க் கோட்பட்டார்' என்றார். எனுமென்பதைக் கோட்பட்டாரென்பத னோடுங் கூட்டுக.

௫௪. அலைவிழி - அலைக்கும் (ஆடவர்களை வருத்துகின்ற) கண்கள். பிறழ்கின்ற கண்கள் எனினுமாம். நிகர் இலை எனக் கூட்டியுரைக்க. ஏற்றமாக என்றது, இரண்டு மலை கொடுத்து ஒரு மலை வாங்குதல்பற்றி யென்க. தனம் இரண்டில் முன்னையது நகில், பின்னையது பொருள்.

௫௫. தவமறைக் கிழவன் - தவநிலையை யுடையவனும், வேதங்களுக்கு உரியவனுமாகிய பிரமன். தாணு - இறைவன். கவர் - பிளவுபட்ட, ஒன்று படாத. இவறிய - இறுகப்பற்றிய; இது அலரோன் முதலிய மூன்று பெயர் களின் முதனிலையோடு முடிந்தது. மலரில் வசிப்பவன், மாயையால் உயிர் களை மயக்குபவன், பேரன்புடையவன் என்னுங் காரணத்தால் வந்த அல ரோன், மால், பித்தன் என்னும் பெயர்களை, இப்பரத்தையர் மோகத்தால், பழிச்சொல் லுடையவன், மயக்கமுள்ளவன், பித்துக்கொண்டவன் என்னுங் காரணத்தால் வந்தனவாகக் கூறினர். சிவ சிவ என்பது இரக்கக் குறிப்பு. திறத்து - கூறுபாட்டில்.

௫௬. சீர் - செயல். வணிக மாக்கள் - வாணிகம் செய்வோர், ஆவ

இருமைவா ணிபத்தில் கூர்த்த மதியரும் இறும்பூ தெய்த
அருவமாம் இன்பந் தன்னை இம்மியின் அளவும் ஏறு
துருவமாம் பொருளுக் கேற்ப நிறுத்துவிற் றெழுக வல்ல
இருமனப் பெண்டீர் தம்முள் தருக்கிவாழ் இருக்கை ஈதால். ருஎ

கடை வீதி

இன்னஈங் குளவோ என்னக் கடாதலும் இயம்பி யோர்கட்
கன்னஇங் குள்ள இல்லென் றிறுத்தலும் அறியா தியாரும்
என்னவுந் தருதி றென்ன விலைகொடுத் தேற்ப ஈய
மன்னிஎப் பொருளும் என்றும் நிறையும்ஆ வணம்அ னந்தம். ருஅ

செய்வினை அனைத்தும் தன்பால் சேர்த்துவைத் துயிர்க்குப் பின்னர்
அவ்விறை ஆணை யாற்றல் அளித்திடு மாயை யேபோல்

---

ணம் - கடைவீதி. கவின் - அழகு. தாளக்கோவை - முத்துமாலை. பத்தி - வரிசை. வீதி சிரிக்கும் என்க.

ருஎ. இருமை - கொள்ளலும், கொடுத்தலுமாகிய இரண்டு செயல்கள். கூர்த்த - கூர்மை யடைந்த. மதியர் - அறிவுடையவர். இறும்பூது - வியப்பு. அருவம் - கண்ணுக்குப் புலப்படாதது. இருமனம் - 'ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தேயுடைய மனம்' என்றார் பரிமேலழகர். (குறள். கூ௨0. உரை.) தருக்கி - செருக்குக்கொண்டு.

ருஅ. கடாதல் - வினவுதல். இறுத்தல் - விடை கூறல். மன்னி - நிலைபெற்று. மன்னி நிறையுமென்பதை நிறைந்து மன்னுமென மாற்றியுரைக்க. ஆவணம் - கடைவீதி. அனந்தம் - அளவிறந்தன. எக்காளிலும் எப்பொருளும் நிறைந்து நிலைபெற்றிருத்தலால் இன்ன பொருள்கள் இருக்கின்றனவோவெனக் கேட்டல் இல்லையாயிற்று. அஃது இல்லையாகவே, உள்ளன என்றுதல் இல்லை என்றுதல் விடை கூறுதலும் இல்லையாயிற்று. எல்லாப் பொருளும் என்றும் உண்மையைத் திறம்படக் கூறியவாறு.

ருகூ. செய்வினை - (உயிர்கள்) செய்த இருவினை. அகரம் பண்டறி சுட்டு. ஆணையாற்றல் - சிற்சத்தி கூட்டுவிக்கின்ற முறையில். அளித்திடும் - கொடுக்கின்ற. உயிர்கள் மன மொழி மெய்களால் ஈட்டிய இருவினைகள் புத்தி தத்துவத்தினிடமாக மாயையிற் கிடக்குமென்பதும், சங்கார காலத்தில் புத்திதத்துவம் மாயையின் ஒடுங்கிய வழி அம்மாயை பற்றுக் கோடாக நின்று, புனருற்பவத்தில் உயிர்களுக்குத் தநுகரண முதலியவற்றிற்கு ஏதுவாமென்பதும், மாயையில் நுட்பநிலை எய்திச் சஞ்சிதமெனப்பட்டுக் கிடக்கும் வினைகள் இறைவனது ஆணையென்னும் பரியாயப் பெயருடைய சிற்சத்தி

கொய்வளம் வருவ முற்றுங் கொண்டுபின் நாய்கர் மாறப்
பௌவநீர் உலகுக் கெல்லாம் உதவுவ பைம்பொன் மாடம். ருகூ

அணங்கனுர் பரப்பி விற்கும் அணிகிளர் கோங்கந் தாரிற்
சுணங்கினைக் கணியென் றஞ்சிச் சுரும்பினம் உறுமை நோக்கிப்
பணங்கிளர் பாந்தள் அல்குற் பாவைமீர் என்னே பொற்பூ
மணங்கமழ் கின்ற தென்பார் ஆடவர் மருட்சி எய்தி. கூ0

வீழ்பொருள் எடுக்க லாற்று உறுசனம் மிடைந்த வீதிக்
தாழ்குழல் மடவார் மைந்தர் தங்களுள் முட்டுங் காலைக்
காழ்மணி முலையுந் தோளுங் கலந்துற உவகை பொங்கி
வாழ்நருஞ் சிலரே பல்லோர் வாடிநைந் தழுங்கு வார்கள். கூக

கலிநிலைத் துறை

நெருங்கு பல்சனம் முழக்கறுக் கூலம்நீல் விடத்தைக்
கரந்த கம்பர்மேல் தெழித்துறுங் கடல்பெருந் தெருவால்
சுரந்து வந்துநாற் புறத்தினுஞ் சனமிகத் தொகுவ
பரந்த வீரையுள் புகுந்திடும் பற்பல நதியே. கூஉ

மற்றைய வீதி

அறத்தின் நீள்நகர் புவனை*சக் கரமென ஆன்ற
திறத்த பொன்மதில் ஏழுடைச் சின்மயக் கோயில்

யால் உயிர்களுக்கு வருமென்பதும், ஆசிரியர் திராவிட மாபாடியத்தில் இருவினை யதிகரணத்துள் விளக்கியதனுலுணர்க. நாய்கர் - வணிகர். கொய் - திரட்டிய. மாடம் - சரக்கு வைக்கும் வீடுகள்.

கூ0. அணங்கு அன்னர் - தெய்வப் பெண்களை ஒத்தவர்கள். அணி கிளர் - அழகுமிக்க. தார்-மாலையிடைலையில் தோன்றுகின்ற. சுணங்கு - மார்பிலுள்ள தேமல். கணி - வேங்கைப் பூ. பணம் - படம். பாந்தள் - பாம்பு. பாந்தள் கிளர் பணம் எனக் கூட்டுக.

கூக. ஆற்று - இயலாத. உறு - மிகுந்த. சனம் - மக்கட் கூட்டம். மிடைந்த - நெருங்கிய. ஆற்று வீதி, மிடைந்த வீதியெனத் தனித்தனி முடிக்க. காழ்மணி - வடமாகிய இரத்தினம். வாடிநைந்து அழுங்குவார்கள் - முகம் சோர்ந்து மனம் உளைந்து வருந்துவார்கள்.

கூஉ. கூலம் - கடைத் தெரு. தெழித்து - ஆரவாரித்து. கடல், நதி என்புழி ஒக்கும் என்பன தொக்கு நின்றன. தெருவால் - தெருவழியாக.

[*புவனை சக்கரம்' எனவும் பாடம்.]

புறத்த வான்மிசைப் புலவர்கண் ணூறுபட் டிடாமை
மறைத்தெ னக்குயின் உரிஞ்சுபூம் பந்தர்சால் மறுகு. கூஙு

மகரப் பொற்குழைப் பிரான்தளி சூழ்மதில் குறடும்
நகரச் சிரெயில் சுற்றும்மா ளிகைநிரை யாருந்
திகழச் சூழ்தெரு ஆரிடை வெளியுமாய்ச் சிவன்தேர்ச்
சகடத் தேருடைச் சகடமற் றொன்றெனத் தயங்கும். கூச

சரிக்குங் குஞ்சர மதப்பெருங் கலுழியுந் தளவைச்
சிரிக்கும் மூரலார் களைந்ததார் நறவமுஞ் சேறாய்
விரிக்கும் வீதியில் அடிவழுக் காவகை வெயிலைப்
புரிக்குஞ் செம்மணி பதித்துமேல் நடப்பராற் புரியோர். கூரு

ஞெள்ளற் பாங்கரின் நறியநீர் வண்டலாட் டயரும்
அள்ளற் சேறுகள் புலர்த்துவான் இடையிடை அகழ்ந்து
பள்ளத் தாற்சிறு கால்பல வகுத்தெனப் பிறங்கும்
வள்ளற் காவலர் செலுத்துதேர்ச் சகடுபோம் வழியே. கூசு

---

சுரந்து - மிகுந்து. வீரை - கடல்.

கூங. நகர் - நகரில். புவன சக்கரம் - நிலவட்டம். திருக்கோயில் ஏழு மதில்களை உடைமையால், ஏழு கடலாற் சூழப்பட்டு ஏழு வகைத் தீவுகளையுடைய நிலவட்டம் போலுமென்பதாம். சின்மயம் - ஞானமயம். புறத்த-புறத்தே உள்ளன. குயின் - மேகம். உரிஞ்சு - தவழ்கின்ற. மறுகு - வீதி. வீதி புறத்த என முடிக்க. மறைத்தெனப் பந்தர்சால் என்க.

கூச. தளி - கோயில். குறடு - சக்கரத்தின் ஆர்க்கால்கள் கோக்கப்பட்டு நடுவிலிருப்பது. இதனை இக்காலத்தவர் குடமென்பர். நகர எயில் - நகரத்தைச் சூழ்ந்துள்ள மதில். சுற்று - சக்கரத்தின் சுற்று வட்டம். இதனை வட்டை என்பர். மாளிகை நிரை - மாளிகைகளின் வரிசை. ஆர் - ஆர்க்கால். இதனை இலை என்பர். சகடம் - சக்கரம். சிவன் தேர்ச் சகடம் - சூரியன். தேருடைச் சகடம் மற்றொன்றென - அவனது தேரினுடைய மற்றொரு சக்கரம் போல. சூரியன் தேருக்குச் சக்கரம் ஒன்றேயுள்ளமையால் இது மற்றொரு சக்கரம் போலும் என்றார்.

கூரு. சரிக்கும் - சஞ்சரிக்கின்ற. குஞ்சரம் யானை. கலுழி - ஓடை. தளவு - முல்லை மலர். சிரிக்கும் - அவமதிக்கின்ற. நறவம் - தேன். புரிக்கும் - புரியும், உண்டாக்குகின்ற. புரியோர் - நகரமாந்தர்.

கூசு. ஞெள்ளல் - வீதி. நறிய - வாசனையுள்ள. வண்டலாட்டய

செய்ய திண்புயத் தெழிலினைக் கவர்ந்தமை தெரிந்து
வெய்ய மாந்தர்கள் வெதும்புறப் பன்முறை தாக்க
ஐய வோஎன அலறுவ போல்அணி முழவம்
மைய வேலையுஞ் சமழ்ப்புற வயின்தொறுங் கறங்கும். கூஎ

விலாழி நீரும்ஒண் சந்தன விரைச்செழுஞ் சேறுங்
குலாய வீதிகால் வழுக்குமென் றஞ்சுபு கோணல்
நிலாமு டித்தவர் திருவிழாத் தொழவந்து நெருங்கும்
வலாரி யாதியோர் அடிபடி உறுவகை நடப்பார். கூஅ

புரசைத் திண்களி றுலாத்தரும் பொலஞ்சுடர் மறுகிற்
பரசப் போதரும் மன்னவர் பணிமுடி நெருக்கின்
அரசப் பன்மணி தெறித்துவீழ்ந் திமைப்பன அவியா
முரசப் பேரொலி அதிர்ப்பினில் உக்கமூ துடுப்போல். கூகூ

அங்கண் வீதியின் அணிநலங் காணும்ஆ தரத்தின்
எங்கள் நாதனுந் திருவிழா என்பதோர் பெயரான்
மங்கை யாளொடும் மகாரொடும் வானவர் பழிச்சத்
திங்கள் தோறெழுந் தருளுமேல் அதன்வளஞ் சிறிதோ. எ0

---

ரும் - மகளிர் விளையாடுகின்ற. அள்ளல் - குழம்பு. புலர்த்துவான் - உலர்த்துதற்காக. பிறங்கும் - விளங்கும். வகுத்தென - செய்தாற் போல. வள்ளல் - வரையாது கொடுப்போர். காவலர் - அரசர். சகடு - சக்கரம்.

கூஎ. வெய்ய - விரும்பப்படுகிற. முழவம் - மத்தளம். மைய - மை போன்ற, கரிய. சமழ்ப்புற - நாண, வயின் - இடம். கறங்கும் - ஒலிக்கும்.

கூஅ. விலாழி - குதிரைவாய் உமிழ்நீரும், யானைத் துதிக்கை உமிழ் நீரும். விரை - நறுமணம். குலாய - விளங்கிய. அஞ்சுபு - அஞ்சி. கோணல் - வளைவு. வலாரி ஆதியோர் - இந்திரன் முதலிய தேவர்கள். அடி (தமது) கால்கள். படி - நிலம். தேவர்கள் கால் நிலத்திற் பதியாமைக்குப் பிறிதொரு காரணம் கற்பித்தவாறு.

கூகூ. புரசை - யானைக் கழுத்திடு கயிறு. உலாத்தரும் - உலாவுகின்ற. பொலஞ்சுடர் மறுகு - பொன்னொளி வீசும் தெரு. பரச - வணங்க. பணிமுடி - தொழில் அமைந்த மகுடம். அரச மணி - நாயக மணி. இமைப்பன - மின்னும். அவியா - ஒலி அடங்காத. உக்க - உதிர்ந்த. மூதுடு - பெரிய விண் மீன்கள்.

எ0. அங்கண் - அந்நகரத்தி லுள்ள. அணி நலம் - மிக்க அழகு. ஒரு

மாளிகை

பாலி யேமுதல் பலநதித் திவலைபாய்ந் தழகின்
பால வாயமா ளிகைஅடித் தலத்தினைப் பாராப்
பால வெண்சுதை மாடமேற் சிகரமும் பனிவிண்
பாலி யாற்றுநீர்த் திவலைகள் போர்ப்பவான் படரும். எக

பன்னி றப்பரி கருங்கரி தொழில்மை பஃறேர்
இன்ன கீழ்நிலை வாயிலின் இயங்குதல் நோக்கி
மன்னு மேல்நிலை வாயில்வெண் கரிபசு மான்தேர்
அன்ன எனவுந் தன்னிடத் தியங்கவான் அணவும். எஉ

அலங்கு கீழ்நிலை மாடம்அங் கடுப்பினின் மாட்டும்
இலங்க கிற்புகை யான்விரை யேற்றுவர் மடவார்
புலங்கொள் மேல்நிலை மாடமும் புரிகுழற் கூட்டுந்
துலங்க கிற்புகை யான்மணங் கஞலுறத் தொகுப்பார். எங

இருசு டர்ப்பெருஞ் சிலைகளின் இயன்றமா ளிகைகள்
உருகு வெங்கதிர் தடவரச் சுடுகனல் உமிழும்

பொருட் பன்மொழி. ஆதரம் - விருப்பம். மகார் - புதல்வர்கள். பழிச்ச - துதிக்க. ஆதரத்தின் எழுந்தருளுமென்றது தற்குறிப்பேற்றம்.

எக. திவலை - துளி. அடித்தலம் - அடி இடம். பால வெண்சுதை - பால் போன்ற வெண்மையான சுண்ணம்பு.

எஉ. பல்+தேர் = பஃறேர். மேல் வருவதனோடு இயையுமாறு இன்ன என்பதற்கு இவை போல்வன பிறவும் எனவுரைக்க. வெண்கரி - வெள்ளை யானை, ஐராவதம்; இது இந்திரனுடையது. பசுமான் தேர் - பச்சைக் குதிரை கட்டிய தேர்; இது சூரியனுடையது. அன்ன எனவும் - அவை போல்வன பிறவும், மற்றைய தேவ வகுப்பினர் ஊர்திகள். அணவும் - பொருந்தும்.

எங. அலங்கு - ஒளிவிடுகின்ற. விரை - நறுமணம். கஞலுற - செறிய, பொருந்த. தொகுப்பார் - சேர்ப்பார்கள்.

எச. இருசுடர் சிலை - சூரிய காந்தக்கல்லும் சந்திரகாந்தக் கல்லும். உருகு - உருகுதற்கு ஏதுவாகிய; இது இரு கதிரையும் அடுக்கும். வெங்கதிர் - (சூரியனது) வெப்பமுள்ள கிரணம். தண்கதிர் - (சந்திரனது) குளிர்ச்சியுள்ள கிரணம். தடவர-தடவ. உமிழும்-கக்கும். மருவினோர்-கூடப்பட்டவர்.

அருகு தண்கதிர் தடவரக் குளிர்புனல் அளிக்கும்
மருவி னோர்குணம் பிடிபடல் வையகத் தியல்பே. எச

நெறித்த கூந்தலார் மேல்நிலைச் சாளரக் கதவு
திறத்த லுந்தடை படும்அகிற் புகையெலாந் திரண்டு
புறத்தின் ஏகுவ வழுதிதன் சிறைப்படும் புயல்கள்
மறித்து விட்டநாள் விரைந்துவிண் சேறலை மானும். எரு

தெரித்த பன்மணி மாடமேல் திகழ்ந்தபொற் குடத்து
விரித்த தண்கதிர்க் கடவுள்நின் றசைதல்வேட் கோவர்
திரித்து விட்டசக் கரமென லாகும்அத் திகிரி
பரித்த பச்சைமண் ணென்னலாம் அதற்பயில் களங்கம். எசு

நிரவு நித்திலத் தோரணச் செழுங்கதிர் நிரைகள்
விரவி விண்ணெலாம் வெள்ளொளி விரித்தலான் அன்றே
பரவை மேலெழும் போதும்வீழ் பருவத்தும் அல்லால்
இரவி மண்டிலச் சேயொளி விளங்கிடா இயல்பே. எஎ

---

"மாந்தர்க் - கினத்தியல்பதாகு மறிவு" (குறள், சருஉ.) என்பது மறை மொழி· வேற்றுப் பொருள் வைப்பு.

எரு. சாளரம் - பலகணி, சன்னல். வழுதி - பாண்டியன். புயல் - மேகம். உக்கிரகுமார பாண்டியர் தமது பொதிய மலையில் மேய்த்து கொண்டிருந்த நான்கு மேகங்களைக் கொண்டு வந்து சிறையிலிட்டமையும், பின்னர் இந்திரன் பாண்டி நாட்டில் மழை பெய்விப்பேனென்று ஓலை விடுத்தபோது ஒரு வேளாளன் பிணையின் மேல் அவற்றைச்சிறை விட்டமையும், திருவிளையாடற் புராணம் இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலத்திற் காண்க.

எசு. முழுமதி யென்பார் விரிந்த தண்கதிர்க் கடவுள் என்றார். வேட்கோவர் - குயவர். திரித்து - சுழற்றி. திகிரி - சக்கரம். பரித்த - தாங்கிய. அதன் - அம்மதியினிடத்தில். பயில் - பொருந்திய. குடம், சக்கரத்தைத் தாங்குதற்குக் குவியப் பிடித்து வைத்துள்ள மண்போலுமென்க. அதிற் பயில் எனப் பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

எஎ. நிரவு - நிரம்பிய. நித்திலம் - முத்து. செழுங்கதிர் - செழித்த ஒளி. பரவை - கடல். இரவி மண்டலம் - சூரிய விம்பம். சேயொளி - சிவந்த ஒளி.

திங்கள் செங்கதி ராளனென் றுரைப்பதே தேற்றம்
அங்கண் நித்திலத் தோரணத் தொளியினில் அரிபோல்
தங்கி வெண்கதி ராயினன் அதற்குறுஞ் சான்று
துங்க மாலையுங் காலையுஞ் சிவந்துதோன் றுவதே. ௭௮

அணங்க னார்நகைத் திடுந்தொறும் ஆங்கவர் வளர்த்த
கணங்கொள் முல்லைகள் முகைப்பன அவர்நகைக் கவினை
இணங்கி நாம்நவர்ந் தொளித்தமை அறிந்தனர் என்றே
வணங்கி நாணினால் உடன்சிரித் திடுவது மானும். ௭௯

ஆட கத்தியல் மேல்நிலை மிசைஅணங் கனையார்
மாட கத்தனி யாழிசைக் குவந்துறும் வான
நாட கத்துவெண் களிற்றினை நளினமென் மலர்ப்பூம்
பாட கத்தடி நடையினாற் பருவர லுறுப்பார். ௮0

பளிக்கு மேல்நிலத் தந்நலார் பணைமுலை ஞெமுங்கக்
களிக்கும் ஆடவர் தமைத்தழீஇக் காமப்போர்க் கலவி

---

௭௮. திங்கள் - சந்திரன். தேற்றம் - தெளிவு. அரி - சூரியன். உறுஞ்சான்று பொருந்திய சாட்சி. துங்கம் - தூய்மை. சந்திரனும் சூரியனைப் போலச் சிவந்த ஒளியை யுடையவனே; ஆயினும், அவனைப் போலத் தானும் இம்முத்துத் தோரணத்தின்மேல் தங்கி வெள்ளொளி யுடையவனாயினன் என்பதாம்.

௭௯. கணம் - கூட்டம். முகைத்தல் - அரும்புதல். நகை - பல். கவின் - அழகு.

௮0. ஆடகம் - பொன். மாடகம் - யாழிலுள்ள முறுக்காணி. இசைக்கு - இசையைக் கேட்பதற்கு. உவந்து - மனம் மகிழ்ந்து. உறும் - அங்கு வந்துசேர்கின்ற. வான நாடகத்து - விண்ணுலகத்திலுள்ள. வெண் களிறு - வெள்ளையானை, ஐராவதம் ; இது இந்திரனுடையது. யானைகள் இசையை விரும்பும் இயல்புடைமையை, உதயணன் ஓர் மகத்துவம் பொருந்திய யாழினால் யானைகளை வசப்படுத்தியதாகக் கூறும் பெருங்கதையாலும், மற்றும் பண்டை இலக்கியங்களாலும் உணர்க. நளினம் - தாமரை. பாடகம் - ஒரு வகைக் காலணி. பருவரல் - துன்பம். உறுப்பார் - அடையச் செய்வார். மகளிர் நடை யானை நடையினும் அழகு மிக்கிருந்த தென்றபடி.

௮௧. பளிங்கு பளிக்கு என்றாயிற்று; படிகம் என்பது பொருள். ஞெமுங்க - அழுந்த. போர்க் கலவி - போராகிய கலவி. கலவி - கலத்தல்,

விளக்கும் ஆற்றலைக் குரவன்இல் விழைந்தவன் ஒருசார்
ஒளித்தி ருந்துகாண் போனெனச் சுருங்கையுள் நுழையும். அக

மேனி லத்தர மியத்திடைத் துயிலுமெல் லியலார்
ஆன னத்தெழில் கவர்ந்துசெல் மதியினை அவர்தங்
கான லர்க்குழற் காரளி பின்தொடர்ந் துதைப்ப
ஈன முற்றஅத் தழும்புவான் கறையென இலங்கும். அஉ

உங்கண் மாதரார் முகத்தெழில் நோக்கிஓர் வடிவம்
கங்கள் நான்குளான் படைத்ததில் அவயவங் காண்பான்
அங்கண் முன்னுற வகுப்புழி அஞ்சனங் குலையப்
பங்க முற்றதென் றெழித்ததை மதியெனப் பகர்வார். அந

---

புணர்ச்சி. ஆற்றல் - வன்மை. குரவன் - குரு. இல் - மனைவி. விழைந்தவன் - விரும்பியவன், சந்திரன். ஒருசார் - ஒருபக்கம். சுருங்கை - கள்ள வழி என்றது பலகணி முதலியவற்றை. மேல்மாடத்தில் பலகணி முதலியவற்றைத் திறந்துவைத்து நிலவில் இன்பத்தோடிருப்பர் என்பது பொருள். ஆடவரும் மகளிரும் தனியிடத்திருந்து இன்பம் நுகர்தலைக் கண்ணிற்காணும் தீச்செயல் இயற்றுதற்குரியவனென்பார், சந்திரனைக் 'குரவன் இல் விழைந்தவன்' என்றார். சந்திரன், தனது குருவாகிய வியாழன் மனைவி தாரை என்பவளைக்கூடி, அவனால் கயநோய் உண்டாகுமாறு சபிக்கப்பட்டனனென்பது புராண வரலாறு.

அஉ. அரமியம் - நிலாமுற்றம்; இது நிலவில் மகிழ்ச்சியோடு இருப்பதற்காக மேல்மாடத்தில் அமைக்கப்படும் முற்றம். ஆனனம் - முகம். கான் - வாசனை. காரளி - கரியவண்டு. ஈனம் - குறை, வடு. வான் - பெரிய. கறை - களங்கம். வண்டுகள் தமக்குக் கூந்தலிற் சூடும் பூவினால் தேனைத்தரும் பெண்கள் முகத்தழகைக் கவர்ந்து கொண்டமையால் சந்திரனை உதைப்பனவாயின.

அந. உங்கண் - அங்ககரம்; உகரச் சுட்டடுத்துவந்த இடப் பெயர். கம் - தலை. காண்பான் - உண்டாக்குதற்கு. வகுப்புழி - செய்யும்போது. அஞ்சனம் - எழுதும் மை. கண்ணில் தீட்டிய மை என்பாரும் உளர். குலைய - சிதைய. இது பிரமன் படைத்தலை எழுதுவது என்னும் வழக்கைக் கொண்டு கூறியது. பங்கம் - தாழ்வு. அப்பெண்களின் முகத்தழகைக் கண்ட பிரமன் அவைபோல அழகுடைய ஒருருவத்தைப் பிண்டமாக முன்னே படைத்து, பின்னர் அதில் அவயவங்களை எழுதப் புகுந்தபோது எழுதிய மை சிதைந்துபோனமையால் இஃது இனி அதற்கு ஆகாதென்று நீக்கி

இவ்வ ரைப்பினில் இரவியும் மதியமும் வழியே
செவ்வன் ஏகுறா தொதுங்குவ இவர்முகச் சீர்க்கும்
பவ்வ நேரகல் அல்குற்கும் வடிவொடு பணைத்தேர்
ஒவ்வு றாமைகண் டுட்கொளும் உட்கினல் அன்றே. அச

தங்கள் வாள்முகம் மதியெனச் சார்தரும் பணிக்குத்
துங்க மாடமேல் மின்னனார் வேற்றுமை தோற்றந்
திங்கள் மாட்டறி குறியொன்று செய்துவைத் தனரால்
அங்கண் மாநிலங் களங்கமென் றிடப்படும் அதுவே. அரு

மறைந்தி டாமறுப் பயில்மதி முகத்தெழில் பெறாது
குறைந்து பார்க்கும்அங் கரிவைமார் கோண்நுதல் கடுப்ப

---

விட்ட ஒன்றையே உலகத்திலுள்ளார் சந்திரனென்று கூறுவார் என அந் நகரத்து மகளிர் முகத்தழகைப் புனைந்து கூறியவாறு.

அச. வரைப்பு - இடம், காஞ்சியம்பதி. இரவி - சூரியன். மதி - சந்திரன். ஏகுறாது - செல்லாமல். சீர் - அழகு. பவ்வம் - கடல். பணை - பருத்த. உட்கு - நாணம். 'சீர்க்கும்...அல்குற்கும்', வடிவொடு பணைத்தேர் என்னும் தொடர்களை எதிர்நிரனிறையாகக் கொள்க. இரவி அல்குற்குத் தன்தேர் ஒவ்வாமையும், மதிமுகச் சீர்க்குத் தன் வடிவம் ஒவ்வாமையுங் கண்டு நாணி யொதுங்குவ ரென்பதாம். இது தற்குறிப்பேற்றம். காஞ்சியிற் காமக் கோட்டத்திற்கு நேராக மேலே போதல் கூடாதெனச் சூரிய சந்திரர் ஒதுங்கிச் செல்வர் என்பதைப் பெரிய புராணத்தில் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்தில் (எச) காண்க.

அரு. பணி - பாம்பு, இராகு. தோற்ற - தெரிய.

அசா. மறைந்திடா மறு - நீங்காத களங்கம். இது உடலில் தோன்றுகின்ற மறு சில நாட்களுக்குப் பின் மறைந்து விடுதல்போல மறையாமலும், அங்ஙனம் மறையாவிடினும் பிறர்க்குத் தோன்றாத இடங்களில் மறைந்திருக்கும் மறுப்போலவாயினும் மறையாமலும், என்றும் நீங்காது முன்னே காணப்படுகிற மறுவெனவும் பொருள்படுதல் காண்க. பயில் - பொருந்திய. மதி - சந்திரன். அரிவைமாரெனப் பின் வருகின்றமையால் முகமென வாளாகூறி யொழிந்தார். பெறாது-பெறாமையால், அரிவைமார் - பெண்கள். கோண்நுதல் - வளைந்த நெற்றி. கடுப்ப, நிகர்ப்ப இரண்டும் ஒப்பாவதற்குளன்னும் பொருள் தரும். அறைந்த - சொல்லப்பட்ட. அலமரும் - சுழலும். ஆற்றின் அக்கரையில் உள்ள பசு இக்கரையில் புல் மிகுந்துள்ள தென்று ஓடிவருதலும், இக்கரையில் வந்து பிறகு அக்கரையிலேயே மிகுதி

நிறைந்து பார்க்கும்மீண் டவர்முக நிகர்ப்பமற் றிவ்வா
றறைந்த திங்கள்தோ றலமரும் அக்கரைப் பசுப்போல். ௮௬

கதிர்செய் மாடமேல் புலவிதீர் கலவியின் முடிவின்
வெதிர்செய் தோளியர் கொண்கர்தம் மருமமேல் வதனம்
பதிய வைத்தனர் துயிலுவர் அற்றம்பார்த் திருந்து
புதுமு கத்தெழில் உடுபதி வௌவுறுப் பொருட்டே. ௮௭

தேக்கும் ஊடலின் மாதரார் பறித்தெறி செங்கேழ்
ஒக்கு பன்மணி அவரடி வருந்திடைந் துளைய
ஆங்கு நாள்தொறும் பைதுறுத் தவிர்வன கொடிதாத்
தாங்கள் செய்வினை தங்களுக் கேபகை யாமே. ௮௮

விருந்து நாள்தொறும் இடையறு தெதிருமே தகவால்
அருந்தி றற்சிறு புதல்வர்சூழ்ந் தணுகிடுந் திறத்தான்

---

யாக இருக்கிறதென்று திரும்பிப் போதலுமாக உழல்வது என்னும் பொருள்பட 'அக்கரைக்கு இக்கரை பச்சை, இக்கரைக்கு அக்கரை பச்சை' என்று கூறும் பழமொழியை எடுத்துக் கூறினர். சந்திரன் தான் நிறைந்திருக்கின்ற நாளில் அப்பெண்களது முகத்துக்கு ஒப்பாகாமை கண்டு குறைந்தால் அவர்கள் நெற்றிக்காவது ஒப்பாகலாம் எனக் குறைந்து பார்ப்பான் எனவும், அவ்வாறு குறைந்த நாளிலும் அவர்கள் நுதலுக்கு ஒப்பாகாமை கண்டு மீண்டு நிறைந்தாயினும் முகத்திற்கு ஒப்பாவோம் என்று நிறைந்து பார்க்குமெனவும், இவ்வாறு ஒருமுறையன்று பலமுறை செய்தும் வெறுத்தல் இன்றிச் செய்யும் எனவும், இதுவே சந்திரன் தேய்தற்கும் வளர்தற்கும் காரணம் எனவுங் கூறியவாறும்.

௮௭. கதிர்செய் - ஒளி வீசுகின்ற. புலவி - ஊடல். தீர்கலவி - தீர்ந்த பின்னர் உளதாகும் கலவி. கலவி - புணர்ச்சி. வெதிர் - மூங்கில். கொண்கர் - தலைவர். மருமம் - மார்பு. வதனம் - முகம். வைத்தனர் முற்றெச்சம். அற்றம் - சோர்வு. உடுபதி - விண்மீன்களுக்குத் தலைவன், சந்திரன். வௌவுதல் - கவர்தல். ஏகாரம் தேற்றம்.

௮௮. தேக்கு - நிறைந்த. கேழ் - நிறம். உளைய - நோவ. பைதுறுத்து - துன்புறுத்தி. அவிர்வன - ஒளி வீசும். வேற்றுப் பொருள் வைப்பு

௮௯. விருந்து - விருந்தினர். எதிர்தல் - எதிர் கொள்ளுதல். மேதகவு - மேன்மை. முருந்து - மயில் இறகின் அடி. மூரல் - பல். ஆயிடை - அவ்விடத்தில், காஞ்சியில். கொழுநர் - தலைவர். மருந்து - தீர்க்கும் வாயில்,

முருந்து மூரலார்க் காயிடைக் கொழுநர்பால் மூண்ட
மருந்தில் ஊடலுஞ் சிறுவரை யன்றிமே வாதால். அகூ

மேல்நி லத்துவந் துலாவிடுங் கடவுள்மெல் லியலார்
தாழ்நி லத்துறுங் கூவல்கள் நோக்கிநந் தமைப்போல்
கீழ்நி லத்தவர் தாமும்இங் கெய்தினர் கெழீஇப்போம்
ஊழ்நி லைத்தபல் பிலங்கொலாம் உவையென வியப்பார். கூo

கலி விருத்தம்

கால மன்றிக் கனிவுற மாதளைக்
கேல வான்புகை ஏற்றுதல் போல்மினர்
சால வெம்முலைச் சாந்தம் புலர்த்திடு
நீல தூமம் நிமிர்ந் தெழும் எங்கணும். கூக

கொன்னும் வார்குழற் கூட்டுக் குருஉப்புகை
அந்த லாரைப் பொதிவ தவர்தமைத்

---

சிறு வரை - சிறிது பொழுது. தலைவன், தன் புறத்தொழுக்கங் காரணமாகத் தலைவி ஊடல் கொண்ட வழி, அதனைத் தணிக்குங்கால் தணிதலே யன்றித் தணியாமையாகிய உணர்ப்புவயின் வாரா ஊடலும் உளதாகலின், அதனை 'மருந்தில் ஊடல்' எனவும், அது தானும் விருந்தொடு வந்தவழியும், புதல்வனொடு புகுந்த வழியும் நில்லாது நீங்குதல் இயல்பாகலானும், அந்நகரத்துள்ளார்க்கு இயல்பானே அவ்விரண்டும் இடையறாது நிகழ்தலானும் சிறிது பொழுதில் நீங்குமென்பார், 'விருந்து இடையறாது எதிரும் மேதகவால், சிறு புதல்வர் அணுகிடுந் திறத்தால் சிறுவரை யன்றி மேவாது' எனவுங் கூறினர். இதனால் அந்நகரத்துள்ளார் இடையறாது விருந்தோம்புதலும், புதல்வர்ப்பேறும் உடைய ரெனக் கூறியவாறு.

கூo. கடவுள் மெல்லியலார் - தேவமாதர். கூவல்கள் - கிணறு. கீழ்நிலத்தவர் - பாதல உலகத்தவர். கெழீஇ - பொருந்தி. ஊழ் - முறையாக. உவை - அவை, அக்கிணறுகள்; சுட்டுப் பெயர். கிணற்றில் தோன்றும் தமது நிழலைக்கண்டு அங்ஙனம் மயங்கினர் என்க.

கூக. மாதளைப் பழத்திற்கு விரைவிற் பழுப்பதற்குப் புகை ஊட்டுவர் போலும்! வெம்முலை - விருப்பந்தரும் நகில். புலர்த்திடும் - உலர்த்துகின்ற. தூமம் - புகை. நிமிர்ந்து - மிகுந்து.

கூஉ. கொன்னும் - பெருமை பொருந்திய. குரு - நிறம். பொதிவது - மறைப்பது.

தன்னின் நீங்கின மின்னனெனத் தண்முகில்
உன்னி வந்து வளைந்திடல் ஒக்குமே. ௩௨

வார்கொள் கொங்கை மலர்க்கணை எறிடும்
ஏர்கொள் தொய்யிற் கருப்புவில் ஏந்துவார்
தார்ம லர்க்குழல் நாரியர் தாங்கள்தாம்
வீர வேள்படை என்றறி விப்பபோல். ௩௩

நாறு தோட்டு நளினம் இரண்டினில்
மாறி மாறிவீழ் வண்டின மாமெனக்
கூறு மாதர் குழீஇயிருந் தாடுசீர்
ஏறும் அம்மனைப் பாட்டிசை எங்கணும். ௩௪

தங்கள் பண்மொழிக் கொக்குந் தகைமையை
அங்கண் ஆய்பவர் எய்ப்ப அணிமலர்ச்
செங்கை மெல்விரல் சேர்த்தித் திவவியாழ்
எங்கும் மங்கையர் பாடுவர் எண்ணிலார். ௩௫

ஷை வேறு

கொங்கையின் எதிருறக் கூசி ஞெலெனப்
பொங்கொளித் தாளம்பின் ஞெலிப்பப் பூவைமார்
மங்கலச் சதிநெறி வழாமல் ஆடரங்
கெங்கணும் நூபுரத் திசையின் ஈட்டமே. ௩௬

---

௩௩. எறிடும் - தொடுத்த. ஏர் - அழகு. தொய்யில் - நகிலின் கண் எழுதும் கோலம். கரும்புவில் - கருப்புவில். தார் - மாலை. நாரியர் - பெண்கள். வேள் - மன்மதன். பெண்கள் மலரம்பு தொடுத்த கரும்புவில் போலத் தமது நகிலின்கண் எழுதிய கோலத்தைத் தாங்குவது தாங்கள் தாம் மன்மதனது படையென்று காட்டுவது போலும் என்பதாம்.

௩௪. தோடு - இதழ். நளினம் - தாமரை. குழீஇ - கூடி. அம்மனை, பெண்கள் இரண்டு கைகளிலும் மாறி மாறி வீழ்தல் வண்டுகள் தாமரையில் மாறி வீழ்தல் போலும் என்றபடி.

௩௫. பண்மொழி - இசைபோன்ற சொல். ஆய்பவர் - ஆராய்பவர். எய்ப்ப - ஒப்ப. திவவு - யாழிலுள்ள வார்க்கட்டு.

௩௬. சதி - தாளவொற்று. அரங்கு - நாடகசாலை. நூபுரம் - சிலம்பு. ஈட்டம் - கூட்டம். 'கூசிஞெலெனப் பின்ஞெலிப்ப' என்றது தற்குறிப்பேற்றம்.

மைந்தர்பந் தெறிதலும் மாடப் பித்திகை
சிந்துவ பன்மணி செழியன் செண்டெடுத்
துந்தியன் றோச்சலும் உலப்பி லாநிதி
தந்திடும் வடதிசைச் சாரற் குன்றுபோல். ௯௭

மணிப்பொலம் பூண்சிறார் விடுக்கும் வான்படந்
தணிக்தொறும் விடுந்தொறுந் தணிந்து நீள்வன
கணிப்பரு நந்திநெட் டுயிர்ப்பின் காற்றிடைப்
பணிப்பகை முன்னுழல் பரிசு காட்டுமே. ௯௮

மாடமேல் சிறுமகார் விடுக்கும் வண்படம்
பாடல்சால் இருசுடர் தம்மைப் பற்றுவான்
நாடின திரிதரு நாக மென்னவும்
ஆடுவ விசும்பிடை அமரர் நோக்கவே. ௯௯

அட்டிலில் குய்ப்புகை அணங்க னார்குழற்
கிட்டிடும் அகிற்புகை மகத்தெ ழும்புகை
முட்டிமேல் பரந்தெங்கும் மொய்த்த தோர்கிலார்
வட்டவான் செழும்புகை வண்ண மென்பரே. ௧௦௦

---

௯௭. பித்திகை - சுவர். செழியன் - உக்கிரகுமார பாண்டியர். செண்டு - ஓர் ஆயுதம். உந்தி ஓச்சலும் - வீசிபடிக்க. உலப்பிலா - கெடாத. உக்கிரகுமார பாண்டியர் மேருமலையைச் செண்டாலடித்து அதிலிருந்த பொருளை எடுத்துக்கொண்டு வந்த வரலாற்றைத் திருவிளையாடற் புராணம் மேருவைச் செண்டாலடித்த படலத்திற் காண்க.

௯௮. மணி - இரத்தினம். பொலம் - பொன். பூண் - அணிகலன். சிறார் - சிறுவர். படம் - காற்றாடி. தணித்தல் - இழுத்தல். கணிப்பரும் - அளவிட முடியாத நெட்டுயிர்ப்பெனக. நந்தி - இடபம். நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. பணிப்பகை - பாம்புக்குப் பகைவன், கருடன். கருடன் கைலையில் சிவபெருமான் சந்நிதியிலிருக்கும் இடப தேவரது பெருமூச்சில் அகப்பட்டு வருந்திய வரலாற்றை, இப்புராணம் தழுவக் குழைந்த படலத்தில் ௮௭ முதல் ௯௬ வரையிலுமுள்ள செய்யுட்களால் உணர்க.

௯௯. மகார் - பிள்ளைகள். பாடல்சால் - புகழ் அமைந்த இருசுடர் - சந்திர சூரியர். நாடின - தேடி; முற்றெச்சம். நாகம் - பாம்பு; இராகு கேதுக்கள். விசும்பு - வானம். அமரர் - தேவர்.

௧௦௦. அட்டில் - உணவு ஆக்கும் அறை. குய்ப்புகை - தாளிதப்புகை.

வேள்விச் சாலை

இந்திரன் ஊர்திஇங் கெய்தித் தன்முடிச்
சுந்தரஞ் சிதைதரத் துதையச் சிறிக்கன்
மந்திரப் புகையினால் வலாரி ஊரெழில்
சிந்திடச் செய்வசீர் வேள்விச் சாலையே. ௧௦௧

எழுசீரடி யாசிரிய விருத்தம்

ஆகுதித் தழலின் அறுதொழி லாளர் அருமறை மனுஎடுத்தோதி, ஒகையிற் சொரிநெய் தெறித்தெழும் பிதிர்வும் ஒலிபடு புலிங்கமுங் கொண்டு, மேகமாய்ப் படர்ந்த தூமமே இடித்து மின்னி நீர் பொழிவன போலும், ஈகைசால் வேள்வி மறுத்துழி மாரிஇன்மையே இதற்குறு சான்றால். ௧௦௨

அந்தணர் இருக்கை

பூசுரப் பெயரின் இருமொழிப் பொருட்கும் உரிமைபூண் டுறு நிலைக்கேற்பக், காசினி வரைப்பின் நாள்தொறும் வழாது கமழ் சுவை அடிசிலான் அதிதி, பூசையும் வேள்வி அவியினாற் கடவுள்

---

மகம் - வேள்வி. இந்நகரத்திலெழும் அட்டிற்புகை வேள்விப் புகைகள் படிந்தே வானம் புகை நிறமாயிற்று எனக் கூறினர்.

௧௦௧. இந்திரன் ஊர்தி - மேகம். சுந்தரம் - அழகு. துதைய - பொருந்த. வலாரி - இந்திரன்.

௧௦௨. ஆகுதி - வேள்வித்தீயில் இடும் அவிசு. அறுதொழிலாளர் - அந்தணர். அறுதொழிலவான; ஒதல், ஒதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், எற்றல் என்பன. மனு - மந்திரம். ஒகை - மகிழ்ச்சி. பிதிர்வு - சிறுதுளி. புலிங்கம் - தீப்பொறி. படர்ந்த - பரவிய. தூமம் - புகை. மறுத்துழி - செய்யா தொழிந்தவிடத்து. மாரி - மழை. உறுசான்று - பொருந்திய சாட்சி.

௧௦௩. பூசுரர் என்பது பூ, சுரர் என்னும் இரண்டு மொழிகளால் ஆகியதாதலின் இருமொழி என்றார். அவைகளின் பொருள் முறையே பூமி, தேவர் என்பன. பூமியென்னும் பொருட்கு உரிமை பூண்டதற்கு எற்பப் பூமியிலுள்ள அதிதி பூசையும், தேவர் என்னும் பொருட்கு உரிமை பூண்டதற்கு எற்பத் தேவ பூசையும் ஒருங்கு செய்வார் என்றபடி. காசினி - பூமி. வழாது - தவறாது. கமழ் - நறுமணம் வீசும். அடிசில் - உணவு. அதிதி - விருந்தினன். கடப்பாடு - கடமை. ஆசு - குற்றம். ஆற்றும் - செய்கின்ற. பார்ப்பனவாகை-அந்தணர் தம் அறவொழுக்கத்தை மிகுதிப்படுத்தல். இதனை,

பூசையும் ஒருங்குசெய் கடப்பா, டாசற ஆற்றம் பார்ப்பன வாகை அறிஞர்வாழ் இடம்பல அவண. கoரு

அரசர் இருக்கை

தகைபெறு வலியால் தெம்முனை முருக்கிக் காவற்சா காடுகைத் தெங்கும், திகிரிஒன் றுருட்டி முறையுளி செங்கோல் செலுத்துநர் கள்வர்மற் றுயிர்கள், பகைவர்தாம் தமர்என் றிவ்வயின் எய்தும் பயந் தடுத் துலகெலாம் புரக்கும், மிகுபுகழ் படைத்த அரசியல் வாழ்க்கை வீரர்வாழ் இடம்பல அவண. கoச

வணிகர் இருக்கை

மேதகு விரிஞ்சன் அரும்பெறல் குறங்கை விழைதகை யாய் எனப் படைத்தோர், ஏதிலர் பொருளுந் தம்மபோல் பேணி வாணிபம் ஈட்டுநர் வடாது, மாதிரத் தலைவன் புறங்கொடுத் திரியும் வளத்தி

---

"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தொல். பொருள். எரு) என் புழிக் காண்க.

கoச. தகை - தகுதி. தெம்முனை - பகைவர் போர் முனை. முருக்கி - அழித்து. காவற் சாகாடு - அரசியலாகிய சகடம்; உருவகம். உகைத்து - செலுத்தி. திகிரி - ஆஞ்ஞா சக்கரம். உளி என்பது மூன்றும் வேற்றுமைப் பொருள் தருவதோர் இடைச்சொல். அரசன் குடிகளைத் தன்னாலும், தனது பரிசனங்களாலும், பகைவராலும், கள்வர்களாலும், ஏனைய உயிர்களாலும் வரும் ஐவகைப் பயங்களை நீக்கிக் காத்தல் வேண்டுமென்பதை, "மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலை—தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்—ஊனமிகு பகைவரால் கள்வரால் உயிர்தம்மால் - ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ" என்னும் பெரிய புராணச் செய்யுளா லுணர்க. (மனுநீ. கூரு.)

கoரு. மேதகு - மேன்மை பொருந்திய. விரிஞ்சன் - பிரமன். குறங்கு - தொடை. விழைதகை - விரும்புந்தகுதியுடைய. யாய் - தாய், இது வணி கர் பிரமன் தொடையிற் பிறந்தவரென்னும் மிருதி வழக்குப் பற்றிக் கூறியது. வருஞ் செய்யுளிற் கூறுவதும் அதுபற்றி. ஏதிலர் - அயலார். பேணி - பாது காத்து. வாணிபம் ஈட்டுநர் - வாணிகத்தால் பொருள் தேடுவோர். மாதி ரம் - திசை. வடதிசைக்குத் தலைவன் குபேரன். புறங்கொடுத்து - முதுகு காட்டி. இரியும் - ஓடுகின்ற. ஆதரித்து - விரும்பி. விழுக்குடி - மேலான குடி. அமர்ந்து - மனம் மகிழ்ந்து. வாணிகம் செய்வார் பிறர் பொருளையுந் தம்முடைய பொருள் போலப் பாதுகாத்து, கொள்வது மிகையுங் கொடுப்பது

னர் மறைநெறி ஒழுக்கம், ஆதரித் துயர்ந்த விழுக்குடி வணிகர் அமர்ந்துவாழ் இடம்பல அவண. ௧0௫

வேளாளர் இருக்கை

முருகுயிர்த் தலர்ந்த மலரவன் றனது முகமுதல் உறுப் பெலாந், தாங்கிச், சரணமென் றுரைக்கும் உறுப்பினில் தோன் றிச் சாற்றும்அம் முகமுதல் உறுப்பின், வரும்ஒரு மூவர் தங்களை உழவின் வண்மையான் நிலைபெறத் தாங்கும், உரியவே ளாண்மை பூண்டபேர் தமக்கே உடையவர் இடம்பல அவண. ௧0௬

மற்றையோர் இருக்கை

நால்வகை வருணத் துயர்குடிப் பிறந்த நல்லவர் இருக்கையைச் சூழ்வ, சால்புறும் அவரில் உயர்ந்தவர் இழிந்தோர் தங்களுள் குழீஇ மணந் தளித்த, பால்படும் வனைச் சாதியே தத்தோர் பலர்களுந் தத்தம நெறியின், சிலராய்த் துவன்றி மரபுளி ஒழுகுந் திருமலி பல்வகைக் குடியே. ௧0எ

---

குறையுமாகாமற் செய்தல் வேண்டுமென்பதை, "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப் - பிறவுந் தமபோற் செயின்" (குறள். ௧௨0.) என்னும் பொய்யா மொழியா லுணர்க.

௧0௬. முருகு உயிர்த்து - நறுமணத்தைத் தோற்றுவித்து. மலரவன் - பிரமன். சரணம் - கால். இதனைப் புகலிட மென்னும் பொருளுந் தொனிக்க வைத்தமை யறிக. மூவர் - அந்தணர், அரசர், வணிகர் என்பார். உழவு தொழிலுடையார் ஏனையவரை நிலைபெறத் தாங்குவோராவர் என்பது, "உழு வார் உலகத்திற்காணி அஃதாற்று-தெழுவாரை யெல்லாம் பொறுத்து" (குறள். ௧0௩௨.) என நாயனர் அருளிச் செய்தமையால் விளங்கும். வேளாண்மை - உபகாரம். வேள் - விருப்பம்: ஆண்மை - ஆளுந்தன்மை; பிறருடைய விருப் பத்தை ஆளுந்தன்மை என்பது சொல்லின்படி பொருள் என்பர். தமக்கே உடையவர் என்றது அப்பெயர் காரணங் கருதியவழிப் பொதுப்பட உப காரஞ்செய்வார் பலர்க்கும் உரியதாயினும் அதனை இடுகுறியாசச்சிறப்புப்படத் தமக்கே உரியதாகக் கொண்டவர் என்றவாறு. எனவே, காரண இடுகுறிப் பெயராதல் காண்க.

௧0எ. சால்பு - அமைதி. தங்களுள் மணந்து - உயர்ந்த குலத்தவரும் தாழ்ந்த குலத்தவரும் தம்முள் மணம் புணர்ந்து. தந்தை உயர்குலமாகப் பிறந்தவரை அனுலோமர் எனவும், தாய் உயர்குலமாகப் பிறந்தவரைப்

கழகம்

வளர்இலேத் தருப்பை நுனியேனக் கூர்த்த மதியினர் தொன்று தொட் டுடைய, பளகறு கேள்விப் பயிற்சியர் மேற்கோள் முதற்பகர் மூன்றினும் தெருட்டி, இளேயருக் குணர்த்தும் இலக்கண நெறியோர் ஈரிரு புலமையர் தம்முள், களவிகல் இகந்து குழாங்குழா மாகிக் கலே தெரி கழகமும் பலவால். கOஅ

---

பிரதிலோமமெனவும் கூறுவர். பால் - பகுதி. தம் + தம = தத்தம. துவன்றி - நெருங்கி. திரு - செல்வம்.

கOஅ. வளர் - வளர்ந்த. தருப்பை இலே நுனி எனக் கூட்டுக. கூர்த்த மதியினர் - கூர்மையடைந்த அறிவுடையவர். பளகு - குற்றம். மேற்கோள் முதலிய மூன்ருவன: மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு என்பன. மேற் கோள் பிரதிஞ்ஞை எனவும், எடுத்துக்காட்டு உதாரணமெனவும் பெயர் பெறும். இவை காண்டல், கருதல், உரை என்னும் அளவை மூன்றனுள் கருதலளவையால் தான் அறிந்ததனைப் பிறர்க்கு உடம்பாட்டானும் எதிர் மறையானுங் கூறுஞ் சொற்களுக்கு உறுப்பாவன. கருதலளவை - அனுமா னப் பிரமாணம். அளவை யெனினும் பிரமாணம் எனினும் ஒக்கும். தான் அனுமித்து அறிந்ததனைப் பிறர்க்குக் கூறுதல் பிறர்பொருட்டனுமானமாம். காண்டல் முதலிய மூன்றன் இயல்புகளேயும், அவற்றுள் கருதலளவைக் கட்படுவனவாய் இங்குக் கூறப்பட்ட மேற்கோள் முதலிய மூன்றன் இயல்பு களேயும் சிவஞான சித்தியார் அளவை இயலில் விளங்க உணர்க. ஈண்டு விரிப்பிற் பெருகும். மேற்கோள் முதலிய மூன்று உறுப்புக்களுடன் உப நயம், நிகமனம் என்னும் இரண்டுங்கூட்டி ஐந்துறுப்புங்கொள்வர். அவற் றைத் தருக்கநூலுட் காண்க. தெருட்டி - (பொருளேத்) தெளிவித்து, இளே யார் என்றதற்கு, 'கோடலும் உள்ளமைத்தலும் வல்லார், குழவிப்பருவத்தர் அல்லர்' என ஆசிரியர் தருக்க சங்கிரக உரையுட் கூறினமை காண்க. இலக்கணமென்றது ஈண்டு அளவையை. நால்வகைப் புலவராவார்: கவி, கமகன், வாதி, வாக்கி என்பார். கவிகளாவார் ஆசு, மதுரம், சித்திரம், வித் தாரமென்னும் நால்வகைக் கவிகளேப் பாடுவோரும், கமகராவார் அரும் பொருள் நடையைச் செம்பொருள் நடையாகப் பாடுவோரும், வாதிகளாவார், ஏது முதலியவற்ருல் பிறர் கொள்கைகளே மறுத்துத் தம் கொள்கையை நிறுவுவோரும், வாக்கிகளாவார், அறம் முதலிய உறுதிப்பொருள் நான்கையும் கேட்பவும் வேட்பவும் இனிமையாக விரித்துக் கூறுவோரு மாவர். களவு - ஈண்டு வஞ்சனே. இகல் - பகை. கலே - நூல். தெரி - ஆராய்கின்ற. கழகம் - கூட்டம்.

சைவ மடம்

காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடை
மேற் புனைந்தி, யாமெலாம் வழுத்தும் துறவியென் றிருந்தும் ஒருத்தி
தன் இளமுலைச் சுவடு, தோமுறக் கொண்டார் எனச்சிறை யிடல்
போல் சுடர்மனக் குகையுள் ஏகம்பத்(து,) "ஓம்" மொழிப் பொருளை
அடக்கிஆ னந்தம் உறுநர்வாழ் இடம்பல உளவால். ௧௦௬

---

௧௦௬. காமனை முனிந்து - மன்மதனை எரித்து. இது காம இன்பத்தை வெறுத்து என்றபடி. கவின்ற - அழகிய. கவின் என்பதனடியாகப் பிறந்த இறந்த காலப் பெயரெச்சம். கல் ஆடை - காவிக்கல் தோய்த்த காவி உடை. வழுத்தும் - துதிக்கின்ற. ஒருத்தி - காமாட்சியம்மையார். இது ஒப்பற்ற உலக மாதா என்பதனை உட்கொண்டது. சுவடு - தழும்பு. தோம் - குற்றம். சுடர் - ஒளி. மனக் குகை - மனமாகிய குகை, உருவகம். ஓம் மொழிப் பொருள் - ஓம் என்னும் சொல்லின் பொருளாகிய இறைவன். ஆனந்தம் - சிவானந்தம்.

சைவ மாதவர்கள், திருவேகம்பப் பெருமானை, 'இவர் யாவர்க்குங் காமத்தை விளைக்குங் காமக் கடவுளையே அழித்தும், நீண்ட சடைமுடியைத் தரித்துக்கொண்டும், அழகிய காவி உடையைப் புனைந்துகொண்டும் இருக்கின்றமைபற்றித் துறவிகளாகிய நாமெல்லாம் போற்றுதற்குரிய தலைமை வாய்ந்த ஒப்பாரும் மிக்காரும் இல்லாத சிறந்த துறவியாவார் என்றுகொண்டு, அங்ஙனமே யாம் போற்றிவர, அவரும் அதனை ஏற்று அந்நிலையிலே இருந்தும், துறவு நிலைக்குப் பெருங்குற்றந்தரும் கூடா ஒழுக்கமாகிய இணைவிழைச்சை உடையவராய், ஒருத்தி தமது மார்பில் அழுந்தப் புல்லியதனால் உண்டாகிய தனத் தழும்பையும் பூண்டவராயினர், இது நமது துறவு நிலைக்கே பெரிதும் குறை விளைப்பதோடு நமக்கெல்லாம் பெரியதோர் இழுக்கைத் தருவதாகும், ஆதலால் இத்தகைய குற்றம் செய்தவரை யாது செய்யலாம்! சிறையிடுவதே தகும்' என்று கொண்டு சிறையிடுகின்றவர்போலத் தங்கள் மனமாகிய குகையிலே இருத்தித் தியானித்து அத்தியான மேலீட்டினால் சிவானந்தத்தில் திளைப்பார்கள் என்றவாறும்.

காமனை முனிந்தவராயின் முலைச்சுவடு கொள்ளுதலும், முலைச்சுவடு கொண்டவராயின் காமனை முனிதலுங் கூடாதிருக்க, அவ்விரண்டையும் ஒருங்கு வைத்து, 'காமனை முனிந்து......துறவி யென்றிருந்தும்......ஒருத்தி தன் இளமுலைச் சுவடு கொண்டார்' எனக் கூறியதனால்,'' ஒன்றொடொன் றொவ்வா வேடம் ஒருவனே தரித்துக் கொண்டு'' (சித்தி. சூ ௧. செ. ௫௧.) நிற்றல் பெறப்பட்டது. படவே, இறைவன் உயிர்களுக்குப் போகத்தை அளித்தற் பொருட்டே போக வடிவத்தையும், முத்தியை அளித்தற்

திருக் கோயில்

இருள்மலந் துமிக்குஞ் சிவாகம முறையின் ஈரிரு பாதமும் அனுட்டித், தருள்பெறும் ஆதி சைவர்க ளாதி அவாந்தர சைவர்களு ளேனோர், மருவிவாழ் மாட மாளிகைப் பத்தி மருங்குடுத் துபர்வனப் பினதால், தெருள்தரும் அனாதி சைவர்விற் றிருக்குந் திவளொளிப் புரிசைவ கம்பம். ௧௧௦

---

௧௧௦. இருள்மலம் - ஆணவமலம். துமிக்கும் - போக்குகின்ற. ஈரிரு பாதம் - சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்கள். பத்தி - வரிசை. உடுத்து - சுற்றிலும் கொண்டு. வனப்பு - அழகு. தெருள் - தெளிவு, சிவஞானம். திவள் ஒளி - விட்டு விளங்கும் ஒளி. புரிசை - மதில். அனாதிசைவர் - சிவபெருமான். ஆதிசைவர் - இறைவனை முப்போதுந் திருமேனி தீண்டி வழிபடும் அந்தணர். மகா சைவர் - சிவதீக்கை பெற்ற வேதியர். அநுசைவர் - சிவதீக்கைபெற்ற அரசரும் வணிகரும். அவாந்தரசைவர் - சிவதீக்கைபெற்ற சூத்திரர். பிரவரசைவர் - சிவதீக்கை பெற்ற அநுலோமர். அந்திய சைவர் இவரொழிந்தோரிற் சிவதீக்கை பெற்றோர்.

---

பொருட்டே யோக வடிவத்தையும் கொண்டுள்ளான் என்பது தெற்றென விளங்கும். இதனை, "போகியாய் இருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்—யோகியாய் யோக முத்தி உதவுத லதுவும் ஓரார்" (சித்தி. சு. க. செ. ருo.) என்னும் அருள்நூ லுரையா லுணர்க. உயிர்கட்குப் போகமும், இறைவன் போகியாய் இருப்பினல்லது அமையாதென்க. அதற்குச் சான்று இறைவன் அம்மையைப் பிரிந்து கல்லால் நிழலில் நான்கு முனிவர்களுக்கு மெய்புணர்த்துதற் பொருட்டு யோகநிலையில் இருந்த காலத்து,மன்மதன் இருக்கவும் எல்லா உயிர்களும் போகம் இன்றி வருந்தினமையேயாகும். இதனை, "கண்ணுதல் யோகி ருப்பக் காமன் நின்றிட வேட்கைத்து—விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை ஓரார்" (சித்தி. சு. க. செ. ருக.) என்னும் மெய்கண்டநூ லுரையாலும், "வில்லாடன் மாரன் இருக்கவும் யோகம் விளைத்த வந்நாள்—புல்லா திருந்தன எல்லா உயிருந்தம் போகந்தையே" (அருணைக் கல. ௩.) என்னும் சான்றோருரையாலும் அறிக. இங்ஙனம் உயிர்கட்குப் போகம் அமைதற் பொருட்டே இறைவன் இறைவியை ஒரு பாகத்தில் கொண்டுளான் என்பதும், அங்ஙனம் கொள்ளா தொழியில் போகம் நுகர்தற்குரிய உயிர்கள் யோகத்திற் பட்டழியும் என்பதும், "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன் - பெண்பா லுகந்த பெரும்பித்தன் காணேடி - பெண்பாலுகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர் - விண்பாலியோகெய்தி வீடுவர்

### திருமதில்

கலி விருத்தம்

விண்ணுழி வுறநிமிர் வீற டக்குவான்
அண்ணல்ஆ ணையின்இமில் ஊர்தி யாண்டுறீஇ
எண்ணில உருவுகொண் டிருத்து நீரதே
பண்ணமை மதில்மிசை இடபப் பந்தியே. ககக

---

ககக. நிமிர் - உயர்கின்ற. வீறு - செருக்கு. அண்ணல் - இறைவன். ஆணையின் - கட்டளையால். இமில் - திமில்; இது இடபத்தின் முதுகிலிருப்பது. ஊர்தி - இடபம். ஆண்டு - அவ்விடத்தில், மதிலின்மேல். உறீஇ - அடைந்து. இருத்தும் நீரது - அழுத்துகிற தன்மையை உடையது. பண் அமை - தொழில் முற்றிய. பந்தி - வரிசை.

---

காண் சாழலோ" (திருவா. திருச்சா. கூ.) என்னும் அருளாசிரியர் திருமொழியால் தெளிக.

யோகியர்கள் தமது உள்ளத்தில் இறைவனைச் சிறந்த மந்திர மாகிய ஓங்கார வடிவமாகத் தியானிப்பா ரென்பார் 'ஓம் மொழிப் பொருளை' என உடம்பொடு புணர்த்துக் கூறினர்.

இறைவனை ஓங்கார வடிவாக வழிபடுதலே சிறந்த வழிபாடாகும். இலிங்க வடிவமும், பீடம் விந்துவும் இலிங்கம் நாதமுமாக ஓங்கார வடிவே யாகும். இதனை, "விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம் - விந்துவதே பீடம் - நாதம் இலிங்கமாம் அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய் - வந்த கருவைந்தும் செய்யும் அவைஐந்தே" (திருமந்.கஎடுஎ) என்னும் அருள்மொழியானுணர்க. விந்துவடிவின் பக்கத்தில் நாதவடிவை இட்டு எழுதுதலே பிள்ளையார் சுழி எனப்படும்.

ஓம் என்பது அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என்னும் ஐந்தும் கூடி நிற்றலின், சூக்கும பஞ்சாக்கரமெனப்பட்டு, அவ்வைந்தினையும் அதிட்டிக்கும் ஐந்து அதிதெய்வங்களால் கருவிகளைச் செலுத்தி நிற்ப, இறைவன் அதுவே வடிவாக உள்ளத்தில் நிற்பன். அதனால் உயிர்கள் கட்டு நீங்கி வீடு பெறும். இதனை, "உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற - மெய்யா" (திருவா - சிவபு.) என எழுந்த அருட்டிரு மொழியானுணர்க. ஓம் என்னும் ஒலி அங்காத்தலும், (வாய் திறத்தலும்) இதழ்குவிதலும், இரண்டிதழ்களும் தம்மிற் பொருந்துதலுமாகிய மூன்று ஒலி முயற்சிகளும் முறையே இயைந்து நிற்கத் தோன்றுதலின், அம்முயற்சி கட்குரிய அகர உகர மகரங்கள் உள்ளன வென்பதும், ஒலி தோன்றவே அவற்றிற்குத் தூலமாயும் சூக்குமமாயும் காரணமாகும் விந்து நாதங்கள் உள்ளன என்பதும் தெற்றென உணர்க. அங்காத்தல்

திருக்கோபுரம்

ஒன்பது கோள்களும் உலாவி வைகுவான்
ஒன்பது மாடம்அங் கூழிற் செய்தென
ஒன்பது மணிகளின் இயன்ற ஒண்மைசால்
ஒன்பது நிலைதழீஇ ஓங்குங் கோபுரம். கக௨

கக௨, கோள்கள் - கிரகங்கள். வைகுதல் - தங்குதல். ஊழ் - முறைமை அடுக்கு.

முதலிய முயற்சிகளால் அகரம் முதலியன பிறக்குமென்பதைத் தொல்காப்பியம் பிறப்பியலுட் காண்க. இவ்வாறு பிரிவுபடும் ஐந்தும் வியட்டிப் பிரணவமெனவும், பிரிவுபடாது நிற்கும் ஓம் என்பது சமட்டிப் பிரணவமெனவும் கூறப்படும். இவ்வோங்காரம், பிரணவம் மறைமுதல் முதலிய பெயர்களால் வழங்கப்படும்.

இஃது எழுத்தோசைக்கெல்லாம் மூல காரணமாகிய நாதத்தில் தோன்றிய விந்துவின் இடையீடில்லாக் காரியமாய் முன்னின்று எல்லா எழுத்துக்களையும் நூல்களையும் தோற்றுவித்தலால் சொற்பிரபஞ்சம் அனைத்திற்கும் இதுவே காரணமெனவும், மறைமுதலென்றதும் அதுபற்றியே எனவும் உணர்க. அகரமும் உகரமும் தம்மிற் புணருங்கால் வடமொழி விதிப்படி அவ்விரண்டுங்கெட அவ்விடத்து ஓர் ஓகாரம் தோன்றி மகரத்துடன் கூடி ஓம் என நின்றது என்பாரும் உளர்.

திருமுறைகள், முதலில் 'தோடு' எனத் தொடங்குதலால் பிரணவம் தகர மெய்யோடு கூடி நிற்பத் தொடங்கிற்றென்று அருண்மொழியுரை கூறிற்று; (பெரிய. ஞா.எரு.) இறுதியில் 'உலகெலாம்' எனமகரத்தால் முடிக்தமையால், தமிழ் மறைகளாகிய பன்னிரு திருமுறைகளும், ஓங்காரத்தெழுந்து அதன் உண்மை விளக்கும் மந்திரங்களாதல் இனிது பெறப்படும். ஆரியத்தில், முதல் வேதமாகிய இருக்குவேதம், 'அக்னி மீளே' என்று அகரத்தால் தொடங்குதலாலும், நடு வேதமாகிய யசுர் வேதத்தில் 'யோநிஸ் சமுத்ரோ பந்து:' என்புழி இடையில், உகரம் இருத்தலாலும், இறுதி வேதமாகிய சாமம், "சமாநம் வாம்" என மகரத்தால் முடிதலாலும் அவ்வாறாகும் எனக் காட்டுவர்.

ஓங்காரம் மேற்கூறிய அகரம் முதலிய ஐந்தனையும் உடைத்தென்பதும், அவை அகங்காரம் முதலிய கருவிகளைச் செலுத்தி நிற்குமென்பதும்," "அகார உகாரம் அகங்காரம் புத்தி - மகாரம் மனம்சித்தம் விந்து - பகாதிவற்றை - நாத முதலாக நாடிப் பிரணவமாம் - போதங் கடற்றிரையே போன்று" (சிவஞா - சூ. சா. அதி - க) எனவும், அவற்றுள் அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்னும் ஐந்தற்கும் முறையே பிரமன், விண்டு,

கார்முகில் உடுக்கையாக் கதிரின் வானவன்
மார்பணி மணியதா வட்ட மாமதி
சீர்நுதற் பூதியாச் செல்வக் கோபுரம்
பார்புகழ் புருடனில் ஒங்கும் பான்மைத்தே. ககரு

நச்சியே கம்பரைத் தொழுது நாள்தொறுங்
கச்சியில் வாழ்பவர் இறுதிக் காலையில்
அச்சிவ லோகத்தை அணுக வைத்ததோர்
பொச்சமில் ஏணியும் போலுங் கோபுரம். ககசு

ககரு. உடுக்கை - ஆடை. கதிரின் வானவன் - சூரியன். பூதி - திரு வெண்ணீறு. புருடன் - ஆடவன். விராட்புருடன் என்பாரும் உளர்.

ககசு. நச்சி - விரும்பி. இறுதிக்காலை - உயிர் விடுங்காலம். அகரம் பண்டறி சுட்டு. பொச்சம் - பொய், அழிவு.

உருத்திரன், மகேசுரன் சதாசிவன் என்போர் அதிதெய்வங்களென்பதை, "எண்ணில ஓங்காரத் தீசர் சதாசிவமாம் - நண்ணிய விந்துவோடு நாதத்துக் - கண்ணிற் - பகர்அயன்மா லோடு பரமன்அதி தெய்வம் - அகா உக ரம்மகாரத் தாம்" (சிவஞா. சூ. சு. அதி. க.) எனவும், வரும் மெய்கண்ட மொழியா லுணர்க. ஓம் என்பதன் பொருள் அவனே யாதலால் இறைவனை 'ஓம் மொழிப்பொருள்' என்று அருளிச் செய்தார். இறைவன் 'காப்பவனாதலின் ஓம் எனப்படுவன்' என்பது கூர்ம புராணம். காத்தல் - உய்வித்தல்; அஃதாவது: உயிர்களைத் தனது ஐந்தொழிலினால் மலத்தின் நீங்கிச் சிவத்துவத்தை அடையச் செய்தல். இவ்வொலி தோன்றுதற்கு மேற்கூறியவாறு அமைந்த அங்காத்தல் முதலிய மூன்று ஒலி முயற்சிகளும் முறையே தோற்றம், நிலை, இறுதி என்னும் மூன்றையுங் குறிக்கும். ஐந்தொழில்களை முத்தொழிலில் அடக்கிக் கூறுதல் தொல்லாசிரியர் வழக்கு. இஃது ஓம்பு என்பதன் சொல்மூலம் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. வடமொழியில் 'அவ' என்னும் தாதுவுக்குக் காத்தலென்னும் பொருள் உண்மையின் அதுவே, 'மந்' என்னும் பிரத்தியயத்துடன்கூடி அவ+மந் என நிற்குங்கால் பிரத்தியயத்திலுள்ள 'அந்' கெட்டு அவ+ம் என நின்று, அகரமும் வகரமும் தனித்தனி ஊகாரம் செய்யப்பட்டு ஊ+ஊ+ம் என நின்று, பின்னர் ஓர் ஊகாரமாய் 'ஊம்' என்றாகி, பின்னர் ஊகாரம் ஓகாரமாய் ஓம் என முடிந்ததென்று பாணினி வியாகரண விதியுடன் காட்டுவாருமுளர்.

இன்னும் இவ்வோங்காரத்தின் உண்மைகளை மெய்கண்ட நூல்களிலும் கந்தபுராணம் முதலிய சான்றோர் மொழியிலும் கண்டுணர்க. ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலின் அமைக.

பரிதியின் நிழல்செயக் கதிர்க்கும் பன்மணித்
திருவியல் கோபுரச் செல்வ வாய்தலின்
முரசுகா லந்தொறும் முழங்குஞ் செவ்வியென்
றருகுற அமரரை அழைத்தல் மானவே. ககரு

கொடி

மடுத்தஐம் பாசம்ஆ வரணம் ஐந்தனுல்
தடுத்தருள் கோயிலில் தம்பி ரான்எதிர்
எடுத்தபூங் கொடிமிசை இடபம் வான்மிசை
அடுத்ததோர் இடபத்தோ டளவ ளாவுமே. ககசு

தூபி

தங்குலத் திறைவிசெய் பூசைச் சால்பினை
அங்கண்நன் மகிழ்வொடுங் காணும் ஆசையின்
எங்குள வரைகளும் ஈண்டி ஞலெனப்
பொங்கெழில் சிகரங்கள் பொலிந்து தோன்றுமால் ககஎ

---

ககரு. நிழல் பரிதியில் செய - தனது ஒளி சூரியன்மேல் படும்படி. கதிர்க்கும் - ஒளியைச் செய்கின்ற. திரு இயல் - அழகோடு அமைந்த. பன் மணியால் திருவோடு இயன்ற என்க. காலம் - வைகறை முதலியன. செவ்வி - பெருமானை வணங்குதற்கு உரியகாலம். அமரர் - தேவர். முரசு செவ்வியென்று அழைத்தல்மான காலந்தோறும் முழங்கும் என்க.

ககசு. மடுத்த - (உயிரை) உட்படுத்திய. ஐம்பாசமாவன: ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதானம் என்பன. ஆவரணம் - மதில். திரு மதில்கள் பாசமும், அவற்றின் உள்ளே இருக்கும் இடபம் பசுவும், அதற்கும் உள்ளிருக்கும் இலிங்கமூர்த்தி பதியுமாம் எனத் திருக்கோயிலின் உண்மை கூறுவார் 'மடுத்த ஐம்பாசம் ஆவரணம் ஐந்தனுல்-தடுத்தருள் கோயிலில் தம் பிரான் எதிர்...கொடிமிசை இடபம்' என்றூர். வான்மிசை இடபம் - இடப ராசி. அளவளாவும் - கலக்கும்.

ககஎ. அங்கண் - அவ்விடத்தில். ஈண்டிஞலென - வந்து நெருங்கி ஞற்போல. சிகரங்கள் - கோயிலின்மேல் தூபிகள். மலைகள் தமது குலத் தரசன் புதல்வியாகிய இறைவி செய்யும் பூசையைக் காணவந்தன போலும் மேற்புறங்களில் பருத்துக் குவிந்து சிகரங்களோடு கூடிய தூபிகள் என்ப தாம். ஒருவர் இறைவனுக்குத் திருமுழுக்கு முதலியன செய்யுங்கால் தம் சுற்றத்தவரை உடன் அழைத்தல் இயல்பு.

மண்டபம்

கன்மநோய் * குடைபவர் கடப்பச் செய்திடும்
பன்மலர் துவன்றிய தீர்த்தப் பாங்கரில்
பொன்மலர் மண்டபம் பொலிந்து தோன்றுவ
தென்மணிப் பேழையைத் திறந்த மூடிபோல் ககஅ

வேள்விச் சாலை

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சேந்தபொற் குண்டத் தோங்குஞ் சிகைத்தழல் மிசைஆ கம்ப
வேந்தைஆ வாகித் தேத்தும் புகைபொதி வேள்விச் சாலை
ஏய்ந்தசீர்த் தகரவித்தை முறைப்படி இதயக் கஞ்சப் *
பூந்தழற் சிகைமேல் ஈசற் போற்றுமா யவனை ஒக்கும். ககக

ககஅ. கன்மநோய் - இருவினையாகிய நோய். குடைபவர் - முழுகுபவர். துவன்றிய - நெருங்கிய. குடைபவரைக் கன்மநோய் கடப்பச்செய்திடும் எனக்கூட்டுக. மலர் - விரிந்த. பொலிந்து - விளங்கி. தென் - அழகு. மணிப்பேழை - நவரத்தினங்கள் வைத்தபெட்டி. பக்கத்தில் உள்ள மண்டபங்கள் மேல்மூடிபோலவும், தடாகம் பெட்டி போலவும், தடாகத்திலுள்ள மலர்கள் பல நவரத்தினங்கள் போலவும் உள்ளன என்றபடி. *"கன்மநோய்க் குடைபவர்" எனவும் பாடம்.

ககக. சேந்த - சிவந்த. பொன் - அழகு. சிகை - கொழுந்து. தழல் - தீ. தழற்சிகை மிசை எனமாறுக. ஆவாகித்து - ஆவாகனம் செய்து (விளங்கி நின்று அருள் புரியும்படி செய்து) ஏத்தும் - துதிக்கின்ற. பொதி - நிறைந்த சீர்ஏய்ந்தஎன்க. புகழ் பொருந்திய என்பது பொருள். இதய கஞ்சம் - உள்ளக் கமலம். *'இதய கஞ்சப்' எனவும் பாடம்.

தகர வித்தையாவது: இறைவனை, உள்ளக் கமலத்தின் கண்ணதாகிய - சிற்றம்பலத்தில் (சிறுவெளியில்) உள்ள சுடர் முனையின் நடுவில் வைத்துத் தியானித்தல். இதனையே "மலர்மிசை யேகினான்" (குறள். ௩.)என்னும் மறைமொழியும், "கருதுவார் இதயத்துக் கமலத்தூறும் — தேனவன் காண்" (திருமு. ௬. அஎ - க) முதலிய ஆசிரியத் திருமொழிகளுங் கூறுமென்க. சிறுமை + அம்பலம் = சிற்றம்பலம் என்க. சிற்றம்பலமென்பதே வடமொழியில் தகராகாசமெனப்படும். தகரம்-சிறுமை. ஆகாசம் - அம்பலம். பிண்டத்திலுள்ளவாறே அண்டத்திலுமாதலால் இதயத்தானமாகிய தில்லை, சிற்றம்பலம் எனப்படும். தில்லைச் சிற்றம்பலத்திலுள்ள கூத்தப்பிரான் வடிவம் ஓங்காரமும் பஞ்சாக்கரமுமாகிய மந்திரமேயாதலால், உள்ளக் கமலத்தினும் அவ்வாறே இறைவன் மந்திர வடிவமாகத் தியானிக்கப்படுவன் என்பது பெறப்

நீருவேகம்பர்

கோழரை காம்பாச் சாகை வட்டம்மேல் குடையாப் பொற்பின்
வாழிய ஒருமா மீது வளநிழல் கவிப்ப ஆங்கண்
ஊழ்முறை உயிர்கட்கெல்லாம் ஐந்தொழில் ஓம்பி எம்மான்
ஆழ்புனல் உலகம் ஏத்த அரசுவீற் றிருக்கும் மன்னே. க௨0

க௨0. கோழரை - செழித்த அடிமரம். சாகை - கிளை. பொற்பு - அழகு. வாழிய, அசை. ஆங்கண் - அவ்விடத்தில். ஊழ் முறை - படி முறையாக. பக்குவத்திற்கேற்ப என்றவாறு. ஐந்தொழில்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. ஓம்பி - நிலைபெறச் செய்து.

படும். அம்பலக்கூத்தர் அருட்டிருமேனி மந்திரவடிவமென்பதை "ஆடும்படி கேள்நல் அம்பலத்தான் ஐயனே—நாடுந் திருவடியி லேநகாம் - கூடும் - மகாம் உதாம் வளர்தோள் சிகாம் - பகநுமுகம் வாமுடியப் பார்" எனவும், 'சேர்க்கும் துடிசிகாம் சிக்கனவா வீசுகாம்—ஆர்க்கும் யகாம் அபயகாம் —பார்க்கிலிறைக்—கங்கி நகாம் அடிக்கீழ் முயலகனார்—தங்கும் மகாமது தான்" எனவும், "ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில் நீங்கா எழுத்தே நிறைசுடாம் —ஆங்காம்—அற்றார் அறிவர்அணி அம்பலத்தான் ஆடலிது—பெற்றார் பிறப்பற்றார் பின்" (உண்மை வி. ங௨, ங௩, ங௪.) எனவும் வரும் மெய்கண்ட நூலுரையாலுணர்க.

இதனால், இறைவன் அகத்தும் புறத்தும் திருச்சிற்றம்பலத்து வழிபடற்பாலன் என்க. இதுவே தகரவித்தை என வடமொழியில் சாக்தோக்கிய, பிருகதாரண்ய, கைவல்ய, மகாநாராயணோப நிடதங்களில் கூறப்படுகின்றது. அவற்றுள், மகாநாராயணோப நிடதத்தில் நாராயணன் இறைவனை இம்முறையால் வழிபடுகின்றானெனக் கூறப்படுதலால், அதனையே ஈண்டு ஆசிரியர் எடுத்துக் கூறினாரெனவுணர்க. அவ்வுபநிடத வாக்கியம் வருமாறு: "பத்மகோச ப்ரதீகாசம், தஸ்ய மத்யே வஹ்நிசிகா, தஸ்யாச் சிகாயா மத்யே பரமாத்மா வியவஸ்தித:" இதன் பொருள்: (நாராயணர்) இருதயம் தாமரை யரும்பு போன்றது; அதன் நடுவில் தீக்கொழுந்து உளது; அந்தக் கொழுந்தின் நடுவில் பரமாத்மா (சிவபெருமான்) உளர் என்பதாகும். "பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்" (திருமு. ௪. பதி.௪. க0) எனத் திருமுறை கூறுதலுங் காண்க. திருமால் இவ்வாறே யோகத்தால் இருதய தாமரையிலுள்ள தீச்சிகையின் நடுவில் இறைவனைக் கண்டு ஆனந்த முற்றமையை ஆசிரியர், தழுவக் குழைந்த படலத்தில் க௫௨ முதல் க௫௪ வரையிலுள்ள செய்யுட்களால் விளங்கக் கூறியிருத்தல் காண்க,

பற்பல தேய மெல்லாம் பாங்குடைத் தொண்டை நாடு
பற்பல சங்க நாப்பண் படர்வலம் புரியாம் அங்கண்
பற்பல நகர மெல்லாம் வட்டமாப் படைத்த காஞ்சி
பற்பல வலம்பு ரிக்குள் சலஞ்சலப் பணில மாமால். கஉக

அத்திருக் காஞ்சி வைப்பின் அலகிலாத் தலங்கள் தம்முள்
பத்திசேர் மாடக் கம்பம் பாஞ்சசன் னியமாம் அந்த
உத்தமச் சுரிமு கத்துள் விலைவரம் புணராச் சாதி
முத்தமே ஒருமா மூலத் திருந்தருள் முக்கண் மூர்த்தி. கஉஉ

பன்மணி வெயில்கள் கான்று படர்இருள் சீப்ப வட்டப்
பொன்மதில் சூழ்ந்து நாப்பண் சதாசிவப் புத்தேள் வைகும்
தன்மையால் கச்சி மூதூர் தரைமிசை உயிர்கள் செய்த
கன்மம்ஓர்ந் தளிப்பான் வந்த கதிர்செய்மண் டிலமே யாமால். கஉ௩

கஉக. நாப்பண் - நடு. வலம்புரி - வலம்புரிச் சங்கு. பணிலம் - சங்கு. பத்தி - வரிசை.

கஉஉ. பாஞ்சசன்னியம் - ஒருவகைச் சங்கு. சுரிமுகம் - சங்கு. வரம்பு - எல்லை. சாதி முத்தம் - உயர்ந்த முத்து. மாமூலம் - மாவடி. இடம்புரி, வலம் புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என்னும் சங்குகள் ஒன்றில் ஒன்றுயர்ந்தன. அவை தமக்குக் கீழ்ப்பட்ட சங்குகள் ஆயிரம் சூழ நடுவிற் செல்லும். சங்கில் முத்துப் பிறக்கும். அம்முத்துச் சங்கின் உயர்ச்சிக்கேற்ப உயர்ந்திருக்கும்.

கஉ௩. ஓர்ந்து - அறிந்து. அளிப்பான் - கொடுத்தற்கு. கதிர் செய் மண்டிலம் - சூரிய மண்டலம். சூரிய மண்டலத்தின் நடுவில் சதாசிவமூர்த்தி எழுந்தருளியிருந்து உயிர்கள் செய்யும் செயலின் பயனை அளிக்கின்றார் என் பது சைவநூற் றுணிபு. அனுட்டானச் செயல்களையும் அவர் சாட்சியாகச் செய்தலே சைவ மரபாகும். வைதிகர் தங்கள் நித்திய கன்மங்களைச் சூரியன் சாட்சியாகவே செய்வர்.

புகை பொதிந்த வேள்விச்சாலை கரிய திருமால் போலவும், அதனுள் இருக்கும் வேள்விக் குண்டம் அவரது இருதய தாமரை போலவும், அக்குண் டத்திலுள்ள தீக்கொழுந்து அத்தாமரையிலுள்ள தீக்கொழுந்து போலவும், அக்கொழுந்தில் ஏகம்ப வேந்தை ஆவாகித்து ஏத்துதல் நாராயணர் அத்தீக்கொழுந்தில் இறைவனை வைத்து வழிபடுதல் போலவும் இருக்கின்றன வென்பது கருத்து.

இது திருக்கோயிலில் உள்ள வேள்விச்சாலையும் முன்னர்க் கூறியது அந் தணர் இல்லத்திலுள்ள வேள்விச்சாலையும் என்றுணர்க.

விலக்கிலா அறநூல் சொன்ன முனிவரும் விதிவி லக்காம்
இலக்கியம் இதன்பால் கண்டே இலக்கணம் விதித்தார் போலும்
அலக்கண்நீத் தறம்எண் ணான்கும் அம்பையே வளர்க்கு நீரால்
கலக்கமில் அறங்கட் கெல்லாம் ஆகரங் காஞ்சி யன்றோ. கஉச

உவரிசூழ் உலகவைப்பின் உரையமை கேள்வி சான்ற
கவிகளேன் றுரைப்போர் தம்முள் காஞ்சியைப் புகழார் இல்லை
அவரெலாம் புகழ்ந்தும் இன்னும் உலப்புறா அதன்சீர் முற்றுஞ்
சிவநிறை கல்வி சாலாச் சிறியனோ கிளக்க வல்லேன். கஉரு

இத்திருக் காஞ்சி வைப்பில் பலதளி யிடத்தும் மேவி
அத்தகு கம்ப வாணர் அவரவர்க் கருளிச் செய்த
உத்தமக் காதை யெல்லாஞ் சூதன்அன் றுரைத்த வாறே
முத்தமிழ் அறிஞர் தேற மொழிபெயர்த் துரைப்பேன் உய்ந்தேன்.

ஆகத் திருவிருத்தம் - உகூஅ.

---

கஉச. விலக்கு இலா - நீக்கப்படுதல் இல்லாத; இது நூலை அடுக்கும். அலக்கண் - துன்பம். நீத்து - நீக்கி. அம்பை - இறைவி. நீரால் - தன்மையால். ஆகரம் - உறைவிடம். முக்குண வயத்தாராய முனிவர் இயற்றிய நூலைக்கண்டு, சிற்குண வடிவமாகிய அம்மையார் அறம் இயற்றினாரென்றல் பொருந்தாமையின், இறைவியால் வளர்க்கப்பட்ட அறங்களை இந்நகரத்திற் கண்டே முனிவர்கள் அறநூல் இயற்றினார் போலும் என்றவாறு.

கஉரு. உவரி - கடல். உரை - பொருள், ஆகுபெயர். சான்ற - நிறைந்த. கற்றலுங் கேட்டலுள் அடங்குமாதலின் 'கேள்வி சான்ற' என்றார். உலப்புறா - முடியாத. சீர் - சிறப்பு. சிவம் - நன்மை. சாலா - அமையாத. கிளக்க - எடுத்துக்கூற.

கஉசூ. தளி - கோவில். கம்பவாணர் - திருவேகம்பப் பெருமான். 'உரைப்பேன் உய்ந்தேன்' என்றது, "ஒருமணத் திறத்தி னங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்" (பெரிய. தடுத். உஎ,) என்னும் அருள் மொழியைப் பின்பற்றியதென்க. தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று.

## உரை நடை

---

பிரமதேவன் ஆதிகாலத்தில் காஞ்சியம்பதியை ஒரு தட்டிலும் தேவ உலகத்தை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்தபோது அது மேலே நிற்கத் தான் கனமடைந்து கீழே விழுந்ததாகிய இந்நகரத்தை இவ்வுலகிலுள்ள ஏனைய நகரங்களுடன் ஒன்றாக வைத்து எண்ணுவது அறியாமையின் பாலதாகும். அழகை எல்லாம் திரட்டிக் காஞ்சி நகரமாகச் செய்த பிரமன் அதில் நுட்ப வேலை செய்யும்போது உதிர்ந்த அழகை எடுத்து வானுலகத்தைச் செய்தான் போலும். இறைவன் பிரமதேவனைப் படைத்துச் சிருட்டிக்க விடுத்த காலத்தில், 'இதைப் பார்த்து இவ்வாறு சிருட்டி செய்' என்று காட்டி வைத்தான் என்னலாம் போலும் அக்காஞ்சிமா நகரம். சைவசமயத்தை அறியாது பிற சமயங்களையே நல்லன என்று கொண்டிருந்தவர்கள் சைவசமயத்தை அடைவாராயின், அங்ஙனங் கொண்டிருந்தமைபற்றிப் பின்னர்த் தங்களை தாங்களே இகழ்தல் போல, தேவருலகமே சிறந்ததென்று கொண்டிருந்தவர்கள் காஞ்சியைக்கண்ட பிறகு நாணமுற்றுத் தங்களைத் தாங்களே இகழ்ந்து கொள்வார்கள். இக்காஞ்சியம்பதியில் தவம் செய்வோர் அரிபிரமேந்திராதி தேவர்கள் பதவிகளை, கக்கிய சோறாக வெறுப்பது, இதன் வளத்திற்கு அவைகள் கோடியில் ஒருபங்கும் நிகராமை பற்றியேயாகும்.

### புறநகர்

### சோலை

அந்நகரத்தைச் சூழ்ந்த பூஞ்சோலைகளின்மேல் மேகக் கூட்டங்கள் நெருங்கி இருப்பது, அச்சோலைகள் தனது கற்பக நாட்டை வெல்லவருகின்றதென்று அஞ்சி, இந்திரன் தனது வாகனமாகிய மேகங்களை விட்டுத்தடுத்து நடுவிலே மடக்குவது போலும். மேகங்கள் சோலைகளின் அழகு குறைவுபடும்படி மறைத்தன வென்று, அவைகளை அங்குள்ள தடாகத்திலிருத்தலால் அச்சோலைக்கு நட்புரிமையுடைய வாளைமீன் உதைத்து உதைத்து ஓட்ட, அதற்குக் கைம்மாறாகச் சோலைகள் கனிகளையுந் தேனையும் அவ்வாளை மீனுக்குச் சொரியும். இன்னும் அச்சோலையில் மயில்கள், பெண்களது சாயலுக்குத் தோற்றமையால் தொண்டு பூண்டு அவர்கள் எதிரில் ஆடுவதுபோல, அவர்கள் கூந்தலாகிய மேகத்தைக் கண்டு தோகையை விரித்து ஆடும். தடாகத்தைச் சூழ்ந்துள்ள மரக்கிளைகளில் பெண்கள் வைத்திருக்கின்ற பட்டாடைகளும் ஆபரணங்களும் நீரில் தோன்றக்கண்டு, அவற்றை, ஆடவர்கள் நீரமகளிரென்று நினைத்துக் கைகூப்பி, அப்பெண்கள் கண்டு நகைக்க நாணமடைவார்கள். அன்னங்கள் தாமரை மலரின்மேல் மெல்ல மெல்ல

மேலெழுதல் எமது திருநாவுக்கரசு நாயனர் சமணர்களாற் கட்டிக் கடலி லிடப்பட்ட கல்லின்மேல் திருவைந்தெழுத்தை ஓதி மிதந்தது போலும்.

யானைக் கூடம்

யானைகள் தடாகங்களில் தமது துதிக்கையால் நீரை முகந்து குடித்து வறிதாக்கி, தமது மதப் பெருக்கினல் நிறையச் செய்யும். தாங்கள் வாழும் இடமாகிய காட்டைத் தம் அரசர்க்குப் பகையாயினர்க்குக் கொடுத்து, அவர்களிடத்தைத் தாம் கொள்ளுகின்ற யானைகள் செல்லும் வழிகள் அந் நகரத்தில் அளவிறந்துள்ளன. யானைகள் மழை நீரைத் தம்மேல் சொரிகின்ற மேகத்தின்மேல் படும்படி எதிராக இறைப்பதுபோல, நீரைத் தும்பிக்கை யால் முகந்து வானத்தில் வீசும். யானை செல்லும் வீதிகள், யானைகளின் காலடியாகிய பொற்கிண்ணங்கள் நிறைய அவைகள் ஊற்றிய மதநீரை, வண்டுகள் நிறைய உண்டுவாழும் வளமுடையன. கொடையிலே குறைவு பட்ட மேகங்களைச் சிறையிட்டதுபோல் யானைகளை எல்லாம் கட்டிய கூடங்கள் அளவில்லாதன.

குதிரைப் பந்தி

யானைகள் உமிழ்ந்த வாய்நீரும், குதிரைகள் உமிழ்ந்த வாய்நீரும், பாய்ந்து சேருகிய தெருக்களில் பெண்களுடைய காற்சுவடு தாமரை மலர் போலும். குதிரை வீதிகளில் அவற்றின் காலடிகள் தோறும் அவைகளின் முதுகிலுள்ள கல்லணையிலிருந்து மாணிக்கங்கள் உதிர்ந்து ஒளி வீசுதல், பல விளக்குகளைப் பரப்பி வைத்தாற்போல விளங்கும். மல்லகதி, மயூரகதி, சசகதி, சரகதி, வானரகதி யென்னும் ஐந்து கதிகள் வாய்ந்த பல இலக்கணங் களை யுடைய குதிரைப் பந்திகள் பல உள்ளன.

தேர்நிலை

காஞ்சிமா நகரத்தில் யானையை முயல் வெற்றிகொண்ட கதையைப் புதுக்க இருள் ஒளியை இழுத்துக்கொண்டு செல்கின்றதென்று கருதும்படி கரிய குதிரைகள் இழுத்துச் செல்லும் பொன் மயமான தேர்கள் எண்ணிறந் தன. நெருப்புப்போன்ற மாணிக்கமணியின் ஒளியில் மறைந்த சிவந்த குதிரை களை மனிதர் காணுதவர்களாய்த் தானேஓடும் இயல்புள்ள சூரபதுமனுடைய இந்திரஞாலத் தேரோவென்று அஞ்சத்தகுந்த தேர்களை வீதிகள் நீங்காது கொண்டுள்ளன.

வீரர் இருக்கை

பைசாசம், ஆலீடம், மண்டலம், பிரத்தியாலீடம் என்னும் நான்கு வகை நிலையினல் நின்று கற்றற்கரிய வில்லும், வேல், சக்கரம், கேடகம், வாளுமாகிய படைக்கல வித்தைகளைக் கற்கும் கல்வியாளர்கள், வானத்திலுள்ள வித்தியா தரர்களும் கண்டு அதிசயிக்கத்தக்க தலைமை வாய்ந்தவர்களாய் இருப்பார்கள்.

### தொழில் செய்வோர் இருக்கை.

யானைத் தந்தத்திற்குக் கட்டும் பூணும், யானைக்கழுத்திடு கயிறும், தேரின் மரச்சுற்றும், தேரிற் கொடிஞ்சியும், குதிரைக்கல்லணையும், கவசமும் முதலியவற்றைச் செய்யும் கைத்தொழிலாளர் வாழுமிடமும் பல்லாயிரமாக அந்நகரத்தில் இருக்கின்றன.

### இடை நகர்

பெண்களுடைய தனத்துக்குப் பகை என்று சொல்லப்படுகிற தென்னங் குரும்பைக் கோபித்து, அவர்கள் வாசனைப் பொடி இடிக்கும் உலக்கைகள் மேற்சென்று தாக்கி மீளுதற்கு முன்பே அவர்கள் தலையின்மேல் தேங்காயை உதிர்த்துத் தாக்கும் தென்னை மரங்கள், தமக்குத் துன்பம் செய்தவர்களுக்குத் தாமும் எதிராகத் துன்பம் செய்கின்றவர்கள்போல எவ்விடத்திலும் வளரும். பெண்கள் தமது வளையல்கள் ஒலிக்கவும், தனங்கள் அசையவும், ஆபரணங்கள் கலகலென்னவும் வியர்வை உண்டாகவும், பெருமூச்சு மிகுதியாகவும் பந்தாடுதலைக் காணுந்தோறும் ஆடவர்களுக்குக் காமம் மிகவும் உண்டாகும். பெண்கள், பொன்னை, தங்கள் வடிவத்தின் நிறத்தைக் கவர்ந்துகொண்டதென்று தண்டிப்பவர்போலச் சேர்த்து இடித்த வாசனைப் பொடிகளை ஒருவர்மேல் ஒருவர் வீச அதனால், எங்கும் பரந்த பொற்பொடிகளால் தெருக்கள் பொன்னுலகை அவமதித்துச் சிரிக்கும். அந்நகரத்திலுள்ள மாளிகைளில் மாணிக்கங்கள் ஒளி வீசுதலால் இருள் வாராமையாலும், பெண்கள் கூந்தலுக்கு ஊட்டுகின்ற அகிற்புகை வானுலகத்தில் சென்று பெரிய இருளைச் செய்தலாலும், பார்ப்பவர்கள் மண்ணுலகும் விண்ணுலகும் நிலைமாறியது என்னென்று மனம் மருள்வார்கள்.

### அகழி

அகலமும் ஆழமும் அளக்க முடியாத அகழி மதிலைச் சூழ்ந்திருப்பது, கங்காதேவி தன் மாற்றவளாகிய உமையம்மை திருவேகம்பப் பெருமானை வழிபட்டு வரம் பெற்றதைக் கேட்டுத் தானும் அவர்பால் வரம் பெறுதற்கு வந்து காஞ்சியை வலஞ்செய்வது போலும். அகழி தன்னைச் சோலைகள் சூழ்ந்திருக்க அலைகளாகியகையால் மதிலைத் தழுவியிருப்பது, திருவேகம்பர் கங்கை செய்யும் வழிபாட்டிற்கு இடையில் கடல்களையே வரும்படி செய்ய, அது கண்டு அவள் அவரைத்தழுவிக்கொண்டாற் போலும்; தெளித்தநீர் தழுவியதனலுண்டாகிய தழும்பு போலும். அகழியில் முழுகும் கரிய யானைகளை, கரையில் ஒதுக்கப்பட்ட முத்துக்களின் ஒளி வெள்ளை யானையாகச் செய்துவிட, அதனைப் பார்க்கின்றவர்கள், இத்தீர்த்தம் இப்பிறப்பிலேயே தெய்வத் தன்மையை அளிப்பது என்னே! என்று அதிசயிப்பார்கள். அகழியில் கிடக்கும் யானைகளைக் கரையில் ஏற்றுதற்குப் பாகர் அவைகளின் கால்களில் சங்

கிலியைக்கட்டி இரண்டு பக்கத்திலும் இழுத்தல், தேவர்களும் அசுரர்களும் மந்தரமலையைத் திருப்பாற்கடலில் இட்டுக் கடைதல் போலும், யானைகள் அகழியைக் கலக்கிச் சுழலுதல், மேகங்கள் இது உப்புத்தன்மை இல்லாத கடலென்று விரும்பி வந்து குடிப்பதற்குச் சுற்றுதல்போலும். இப்படிப்பட்ட அகழியாகிய இதுவும் ஒரு கடலாகவே இருக்க, அதனால் கடல் எட்டென்ஞது எழென்று கூறுவர் முன்னோர், அதற்குக் காரணம், முடிவிலுள்ள கடலும் இதுவும் நன்னீராதல் பற்றி ஒன்ருகக் கூறினர் போலும். அகழியைச் சூழ்ந்திருக்கும் சோலைகளிலுள்ள பூக்களின் தேனும் கழியிலுள்ள பூக்களின் தேனும் ஒன்றுகூடி, இறைவி இறைவனுக்கு அபிடேகித்தற் பொருட்டு வருவித்த தேன்கடல் போலும். பழம் முதலிய பொருள்களை விற்கும் பெண்கள் அப்பாத்திரங்களைக் கழுவிய வண்டல்கள் அகழியிற் கிடத்தல், அம்மையார் இறைவனுக்கு ஆட்டிய நிர்மாலியங்கள் நீங்காது தேங்கிக் கிடத்தல் போலும். அகழியில் செந்தாமரை மலர்கள் பூத்திருத்தலும், அவைகளில் வண்டுகள் மொய்ப்பதும், அகழியானது பச்சிலைகளாகிய கவசத்தை அணிந்து பகைவர்களோடு போர்செய்ய, அவர்கள் விட்ட அம்புகள் தைத்த துளைகள்தோறும் உதிரம்எழுதல் போலவும், அவைகளில் ஈ மொய்த்தல் போலவும் இருக்கின்றன. பரத்தையர்களுடைய அழகையே நோக்கி அவர்கள் மயலில் அகப்படுகின்றவர் போல, சிலர் மலர்களின் அழகையே நோக்கி அகழியில் இறங்குவார்கள். அப்பரத்தையர்களது உள்ள நிலைமையைக் கருதி விலகுகின்றவர்கள் போல, சிலர் அகழியின் ஆழம் முதலிய கொடுமைகளை நோக்கி இறங்காமல் விலகிப் போவார்கள்.

### மதில்

இறைவன், இறைவி செய்யும் வழிபாட்டிற்கு இடையூறாகக் கம்பாநதியை அழைக்க, அதனை இறைவி தடுத்த பின்பு, எழு கடல்களையும் இறைவன் அழைக்க, அவைகள் வந்து சூழ்ந்து கொண்டமையை அறிந்து இறைவி, அண்டப் பித்திகை வரையிலும் ஆக்கிய தடையைப்போல, அகழியால் சூழப்பட்ட மதில் உயர்ந்து நிற்கும். செல்வ மிகுதியால் செருக்குக் கொள்கின்ற தேவருலகத்தையும் பாதல உலகத்தையும் கண்டு காஞ்சியம்பதி கோபித்து அவைகளின் வலிமையையழிக்க ஏவினமையால் அவற்றை வெல்ல அடைந்தாற்போல, அகழி பாதலத்தையும் மதில் தேவருலகத்தையும் சேர்ந்தன. அகழியின் ஆழ்ந்த எல்லையையும், மதிலின் உயர்ந்த எல்லையையும் கீழும் மேலும் ஒரே வடிவமாக நீண்டு நின்ற இறைவனர் திருவடியிலுள்ள திருமால் கண்ணும், அவரது சடையிலுள்ள வெண்டலையுமே காணவேண்டு மல்லது வேறு யாவர் காணவல்லவர்! முன்னொரு காலத்தில் இறைவனது முடியையும் அடியையும் காண வேண்டி, பிரம விட்டுணுக்கள் அன்னமும் பன்றி

யுமாகி மேலே பறந்தும் கீழே கல்லியும் சென்ற எல்லைகளை நிச்சயிப்பதற்காக வைத்த குறிபோலுமென்ன மதிலும் அகழியும் விளங்கும். மதிலிலுள்ள யந்திரக் கூட்டங்கள், அகழியிலிருந்து துள்ளி தாம் வாழும் மதிலை மோதுகின்ற வாளைமீனை மீண்டு செல்லாதபடி நிறைய உண்டு, விண்மீனையும் வெற்றி கொள்வனவாய் அமைந்திருக்கும். சிற்பிகளால் செய்யப்பட்டுத் தாமே இயங்கும் யந்திரக் கூட்டங்கள், பல உயிர்களின், உடம்புகளையும் படைத்து நடத்த நிமித்த காரணன் ஒருவன் இருக்கின்றான் என்று அறிதற்குச் சிறந்த சாட்சியாகும். அவ்யந்திரங்கள் தாமே சுழலும், எழுந்திருக்கும், விழும், அதட்டும், ஓடும், திரும்பும் இப்படிப்பட்ட தன்மையை உடையனவாகும். அம்மதிலின் மேல் கொடிகள் அசைவது, பகைவரை நோக்கிப் பகைவர்களே, இம்மதிலிலுள்ள யந்திரக் கூட்டங்கள், எதிர்த்து வந்தவர்களை இம்மென்னும் நேரத்திற்குள் கொன்று வெற்றிகொள்ளும், ஆகையால் இவ்விடத்தில் வாராதீர்கள் என்று கையை அசைப்பது போலும். இன்னும் அம்மதிலில் நெருங்கியுள்ள துகிற்கொடிகள், வளப்பமென்னுந் தலைவன் நகரமென்னும் தலைவியைக் கூடுதற்குத் திரைச்சீலை சேர்த்து கட்டிய தம்பங்கள் போலும். சக்கரவாளகிரியின் மேல் வளர்ந்துள்ள மூங்கில்களாகு மென்று சொல்லத் தக்க துகிற்கொடிகள், உயர்ந்த மதிலின்மேலும் கோபுரத்தின் மேலும் நீண்டு செல்லுதலால் அதன் உயரத்திற்கு யாம் உவமை கூறும் பொருள் இல்லை. இறைவி, மகதநாட்டில் தான் செய்யும் அறத்திற்கு அங்குள்ள கீழ்மக்கள் இடையூறு செய்தாற் போல இவ்விடத்திலும் செய்யாதபடி இட்டு வைத்த தடை போன்ற மதிலின் பெருமை முழுதும் சொல்லப் புகுந்தால் தேவர்களுக்கும் முடிவுபெறாது.

அகங்கர்

பரத்தையர் வீதி

தங்கள் வீட்டிற்குள் தாம் ஆடவர்களுடன் காமநூல் முறைப்படி செய்யும் கலவிச் செயல்களையெல்லாம் விளக்கமாகத் தங்கள் மாளிகைகளில் சித்திரங்களில் எழுதிக்காட்டி இளைஞர்களை மயக்கும் பரத்தையர் வீதிகள் நிரம்ப உள்ளன. அவர்களது மாளிகையில் சித்திரங்கள், வண்டுகள் மொய்க்காதனவும் வாடாதனவுமாகிய மாலைகளையும், இமைக்காத கண்களையும், நிலத்திற் படியாத கால்களையும் உடையனவாய் விளங்குவது, அவர்களது இன்பத்தை விரும்பித் தேவர்கள் வந்து காலம் பார்த்திருப்பது போலும். பரத்தையர்கள் ஆடவர்களை, தங்கள் தலைவியர் பூப்படைந்த பின் பன்னிரண்டு நாட்களிலும் தம்மை நீக்கிவிட்டார்கள் என்னும் கோபத்தினால் ஏனைய பதினெட்டு நாட்களிலும் தங்கள் தனங்களாகிய மலைக்கோட்டைமேல் ஏற்றிப் பொருள்களையெல்லாம் பறிப்பார்கள். தமது அழகினாலும், நடையினாலும், அபி

நயத்தினாலும், கலவித்தொழில் வன்மையாலும், பிறவாற்றாலும் இளைஞர்களை மயக்கிப் பொருளைப் பறித்துக்கொண்டு, சாற்றைக் கக்கிய கரும்பின் கோது போலக் கழித்துவிடுவார்கள். அளவிறந்த தருமங்கள் நிறைந்த காஞ்சித் தலத்தில் வாழ்கின்றவர்களாயினும் பிறந்த வம்சத்தின் தொடர்பால் கொடிய நோய்கொண்டவர்களேயானாலும் கீழ்மக்களேயானாலும் சிறிது பொருள் கொடுப்பதையும் பெற்றுப் புணர்ந்து, பொய் வஞ்சனைகளெல்லாம் நிலையாக அடைத்து வைத்திருக்கின்ற மனமுடையவர்களாய் வாழ்வார்கள். பரத்தையர்கள் தாம் ஆடவர்களுக்குக் கொடுக்கும் நிகரில்லாத இன்பத்திற்குச் சமமான இன்பம் அவர்களிடத்தில் தாம் பெற்றும், தம் இன்பத்திற்கு விலையாகப் பொருளையும் வாங்குதல் அதிசயமுடையதே! அவர்கள், ஆடவர்களுக்குத் தமது மலைபோன்ற தனங்களைக் கொடுத்து அவர்களது மலை போன்ற பொருளைக் கொள்வார்கள். பிரமன், விண்டு, சிவன் என்பவர்களும் அப்பரத்தையர் மயலிற்பட்டே அலரோன், மாலோன், பித்தன் என்னும் பெயர்களைப் பெற்றார்களென்றால், சிவ! சிவ!! யாவர்தாம் அவர்களிடத்தில் அகப்படாதவர்கள்? ஒருவரும் இல்லை. தாம் ஒருநாள் பிறக்கு விற்று விட்ட அல்குலை மறுபடியும் தம்முடையதாகக் கொண்டு, மற்றை நாளிலும் விற்கின்ற பொதுமகளிர் வீதிகள், இச்செயலைக் கற்றுக்கொள்ளாமல், விற்றதை விற்றதாகவே விட்டுவிடுகின்ற வாணிகர்களது கடைவீதிகளை நோக்கித் தம்மிடத்துள்ள முத்துவடங்களின் வரிசையாகிய பற்களால் சிரிக்கும். கொடுத்தலும் கொள்ளுதலும் வாய்ந்த வாணிகத் தொழிலில் கூர்மை வாய்ந்த அறிவினரும் கண்டு அதிசயிக்கும்படி, உருவமில்லாத தங்கள் இன்பத்தை உருவமுடைய பொருளளவிற்கு ஏற்ப இம்மியளவும் மிகாதபடி நிறுத்து விற்கவல்ல இரண்டுபட்ட மனத்தையுடைய பரத்தையர் வீதிகள் இப்படிப்பட்டனவாகும்.

## கடை வீதி

எவ்வகைப்பட்ட பொருள்களும் எந்நாளிலும் நீங்காதிருத்தலால், வாங்க வருபவர்கள் இன்ன பொருள்கள் இங்கு இருக்கின்றனவா? என்று கேட்பதும், அதற்கு இருக்கின்றன, அல்லது இல்லை என்று விடைகூறுவதும் இல்லாமல் யாவரும் எப்பொருளையும் விலை கொடுத்து வாங்கவும் கொடுக்கவும் அமைந்துள்ள கடை வீதிகள் எண்ணிறந்தன இருக்கின்றன. மாயை, உயிர்கள் செய்கின்ற இருவினைகள் அனைத்தையும் தன்னிடத்தில் சேர்த்து வைத்திருந்து, பின் இறைவன் ஆணைப்படி உயிர்களுக்குக் கொடுப்பதுபோல, சரக்குவைக்கின்ற வீடுகள் பல பொருள்களையும் தான் சேர்த்து வைத்துக் கொண்டிருந்து, பின்னர் வணிகர் கொடுக்கின்றதற்கு உதவும். தெய்வப் பெண்கள் போன்ற பெண்கள் கோங்கமாலையைக் கையில் பரப்பித் தூக்கி

விற்க, அவற்றிற்கு இடையில் அவர்களது மார்பிலுள்ள தேமல் தோன்று வதை வண்டுகள் வேங்கைப் பூ வென்று நினைத்து அம்மாலைகளில் மொய்க்கா தொழிய, அதனை ஆடவர்கள் கண்டு மயங்கி, 'பாவைமீர், இஃதென்ன பொன் பூவானது மணம் வீசுகின்றதே' என்பார்கள். விழுந்த பொருளை யும் எடுக்க இயலாதபடி சனங்கள் நெருங்கியுள்ள கடை வீதியில் ஆண்களும் பெண்களும் முட்டிக் கொள்ளும்போது, பெண்களுடைய தனங்களும் ஆடவர்களுடைய தோள்களும் கலக்க, அதனால் மகிழ்கின்றவர்கள் சிலரே, பலர் மனம் வருந்துவார்கள். சனங்கள் நெருங்கியுள்ள கடைவீதி, தன்னிடத் தில் தோன்றிய விடத்தை உண்ட திருவேகம்பர்மேல் ஆரவாரித்து வந்த கடலாகும்; நான்கு புறத்திலுமுள்ள தெருக்களால் வந்து கூடுகின்ற சனங்கள் அக்கடலில் விழுகின்ற பற்பல நதிகளாகும்.

மற்றைய வீதி

ஏழு மதில்கள் சூழ்ந்து ஏழு கடல் சூழ்ந்த நிலவட்டம் போல விளங்கும் திருவேகம்பர் திருக்கோயிலுக்குத் தேவர்களுடைய கண்ணூறு படாத வாறு மறைத்தாற்போல, மேகங்கள் தவழ்கின்ற பூப்பந்தல்கள் நிறைந்த வீதிகள் சூழ்ந்திருக்கும். திருவேகம்பர் திருக்கோயிலின் திருமதில் குறடாக வும், நகரத்தைச் சூழ்ந்த மதில் சுற்று வட்டமாகவும், மாளிகை வரிசைகள் அவ்விரண்டிலும் பொருந்தக் கோத்த ஆர்க்கால்களாகவும், வீதிகள் ஆர்க்கா லின் இடைவெளிகளாகவும் இருக்க, காஞ்சியானது ஒரு சக்கரம் பூண்ட சூரியனுடைய தேரின் மற்றொரு சக்கரம் போல விளங்கும். யானைகளின் மதப்பெருக்கும் பெண்கள் கழித்தெறிந்த மாலையின் தேனும் பாய்ந்து சேறாயினமையால், நகரத்தவர்கள் கால் வழுக்காதபடி மாணிக்கக் கற்களைப் பதித்து அவற்றின்மேல் நடப்பார்கள். தெருக்களில் பெண்கள் விளையாடு கின்ற பனிநீரால் உண்டாகிய சேற்றை உலர்த்துதற்காக வெட்டிய கால் வாய்கள்போல, அரசர்கள் ஏறிச்செல்லும் தேர்ச் சக்கரங்கள் போன வழிகள் தோன்றும். அந்நகரத்தில் மத்தளங்களை, ஆடவர்கள் தமது தோள்களின் அழகைக் கவர்ந்து கொண்டதை அறிந்து தாக்குவார் போல் அடிக்க, அவை கள் ஐயோ என அலறுதல் போல ஆங்காங்கு முழங்கும். திருவேகம்பநாதர் திருவிழாவைக் காணவந்த இந்திரன் முதலிய தேவர்கள் கால்பூமியிற் படாத படி நடத்தல், அவ்வீதிகளில் யானை குதிரைகள் உமிழ்ந்த வாய் நீரினாலும் சந்தனத்தாலும் உண்டாகிய சேற்றால் கால் வழுக்குமென்று அஞ்சியேயாகும். தெருக்களில் இறைவன் திருவிழாவைக் காணவந்த அரசர்களது முடிகளி லுள்ள நாயகமணிகள் நெருக்கத்தினால் தாக்கி, முரசத்தின் பேரொலி அதிர்ச்சியினால் உதிர்ந்த விண்மீன்கள்போல உதிர்ந்து மின்னும். எங்கள் ஏகாம்பரநாதரும் அந்த வீதிகளின் அழகைப் பார்ப்பதற்காகவே திருவிழா

வென்கின்ற பெயரினுல் மனைவி மக்களுடன் மாதந்தோறும் வருவாராயின், அவைகளின் அழகு சிறிதாகுமோ? ஆகாது.

மாளிகை

மாளிகைகளின் அடி இடங்கள் பாலி முதலிய நதிகளின் துளிகள் சேர்ந்து அழகு பெற்றிருப்பதை, அவற்றின் சிகரங்கள் பார்த்துத் தாமும் ஆகாய கங்கை படியும்படி வானத்தை அளாவும். பலவகைப்பட்ட நிறங்களை யுடைய குதிரைகளும், கரிய யானைகளும், தேர்களும் கீழ்நிலை வாயிலில் செல்லுதலை மேல்நிலை வாயில்கள் பார்த்து, இந்திரனது வெள்ளை யானை யும், சூரியனது பச்சைக் குதிரை கட்டிய தேரும் தம்மிடத்தில் செல்லும் படி வானத்தைப் பொருந்தும். பெண்கள் கீழ்நிலை மாடத்தை அடுப்பில் மூட்டும் அகிற் கட்டையாலும், மேல்நிலை மாடத்தைக் கூந்தலுக்கு ஊட்டும் அகிற் கட்டையாலும் வாசனை ஏற்றுவார்கள். நம்மால் சேரப்பட்டவர்கள் குணம் சேர்ந்தவர்களுக்கும் உண்டாவதுபோல, சூரிய காந்தக் கற்கள் போலவே அவற்றால் ஆகிய மாடங்கள் சூரியகிரணம் பட நெருப்பைக் கக் கும்; சந்திர காந்தக் கற்கள் போலவே அவற்றல் ஆகிய மாடங்கள் சந்திர கிரணம் படத் தண்ணீரைக் கொடுக்கும். பெண்கள் மேல் மாடத்திலுள்ள சாளரத்தின் கதவுகளைத் திறந்த உடனே தடைபட்டிருந்த அகிற்புகைகள் வானத்தில் செல்லுதல் உக்கிர குமார பாண்டியர் சிறைபிட்டு வைத்திருந்த மேகங்களை இந்திரன் வேண்டுகோளால் விடுத்தபோது அவைகள் வானத்தை நோக்கிச் சென்றது போலும். மாளிகைகளின் சிகரங்களிலுள்ள பொற் குடத்தின்மேல் பூரணச் சந்திரன் தங்கி அசைதல், குயவர்கள் சுழற்றிய சக்கரம் சுழல்வது போலும். அச்சந்திரனிடத்துள்ள களங்கம் அச்சக்கரத் தில் வைக்கப்பட்ட பச்சை மண் போலும். சூரியன், தோன்றும் பொழுதும் மறையும் பொழுதும் தவிர மற்றைய நேரத்தில் சிவந்த ஒளிவீசாததற்குக் காரணம், அந்நகரத்தில் கட்டப்பட்ட முத்துத் தோரணங்களின் வெள்ளொளி வானம் முழுதும் பரவுவதே யாகும், சந்திரனும் சூரியன் போலச் சிவந்த ஒளி உடையவனே, ஆயினும், அவனும் சூரியன் போலவே அந்நகரத்து முத்துத் தோரணங்களின்மேல் தங்கி வெள்ளொளியுடையவனுயினன். அதற்குத் தக்க சாட்சி, அவன் மாலையினுங் காலையிலும் சிவந்து தோன்றுவதே யாகும். அந் நகரத்தில் பெண்கள் நகைக்குந்தோறும் அவர் வளர்த்த முல்லைகள் அரும்பைச் செய்வது, அவரது பற்களின் அழகைத்தாம் கவர்ந்து கொண்டதை அவர்கள் அறிந்து கொண்டார்கள் என்று நாணி அவர்களோடு தாமும் சிரிப்பதை ஒக்கும். பெண்கள் மேல்மாடத்தில் வாசிக்கின்ற யாழிசையைக் கேட்ப தற்கு விரும்பி வருகின்ற இந்திரனது வெள்ளை யானையைத் தமது கடையி னுல் துன்பம் அடையச்செய்வார்கள், மேல்மாடத்தில் ஆடவரும் பெண்களும்

கூடுதலை ஒளித்திருந்து பார்ப்பவன் போல, குருபத்தினியை விரும்பிய சந்திரன் பலகணி முதலிய கள்ள வழியால் நுழைவான். மேல் மாடத்தில் நிலா முற்றத்தில் உறங்குகின்ற பெண்கள் முகத்தழகைக் கவர்ந்து கொண்டு சென்ற சந்திரனை, அவர்கள் கூந்தலிலுள்ள கறுத்த வண்டுகள் பின் தொடர்ந்து சென்று உதைக்க, அதனால் ஏற்பட்ட வடுவே களங்கமாக விளங்கும். அவ்விடத்திலுள்ள பெண்களின் முகத்தழகைக் கண்டு, பிரமன் அவை போல ஒரு வடிவத்தை உண்டாக்கி, அதிலே அவயவங்களை எழுதும் போது, எழுதியமை சிதைந்துபோனபடியால் ஆகாதென்று நீக்கிவிட்டதையே சந்திரன் என்று சொல்வார்கள். இக்காஞ்சியம்பதியில் சூரிய சந்திரர்கள் நேரா கப்போகாமல் ஒதுங்கிச் செல்வது அவர்களுடைய முகத்தழகிற்குச் சந்திரன் வடிவம் நிகராமையாலும், அல்குற்குச் சூரியன் தேர் நிகராகாமையாலும் கொண்டகாரணத்தினாலேயாம். அங்குள்ள பெண்கள், தமது முகத்தைச் சந்திரனென்று விழுங்க வருகின்ற ராகுவென்னும் பாம்புக்கு வேற்றுமை தெரிதற்காகச் சந்திரனிடத்தில் ஓர் அடையாளம் செய்து வைத்தார்கள், அதுவே உலகத்தாரால் களங்கம் என்று சொல்லப்படும். சந்திரன் தான் களங்கமுடைமையால் அந்நகரத்துப் பெண்களுடைய முகத்திற்கு ஒவ்வாமை கண்டு நுதலுக்கு ஒப்பாதற் பொருட்டுக் குறைந்து பார்ப்பான். பிறகு, அதற்கு ஒவ்வாமை கண்டு முகத்திற்கு ஒப்பாதற் பொருட்டு நிறைந்து பார்ப்பான். இவ்வாறு அக்கரைப் பசுவானது இரு கரையிலும் மாறிமாறி உழலுதல் போல மாதந்தோறும் உழலுவான். பெண்கள் தமது முகத்தழகைச் சந்திரன் சோர்வு பார்த்துக்கவர்ந்து கொண்டுபோகாதபடி கலவியின் முடிவில் முகத்தைக் கணவர்களுடைய மார்பின்மேல் வைத்து உறங்குவார்கள். தாங்கள் செய்தவினை தங்களையே வருத்துதல் போல பெண்கள், தாம் ஊடற் காலத்தில் பறித்தெறிந்த அணிகளிலிருந்து உதிர்ந்த மாணிக்கங்கள் அவர்கள் கால்களிலே உறுத்தும். அந்நகரத்தில் மயில் இறகின் அடிபோன்ற பற்களையுடைய பெண்கள் தம் கணவரிடத்தில் கொண்ட தீராத ஊடலும், விருந்தினரை எப்போதும் எதிர்கொள்ளுதலாலும், புதல்வர் சூழ்ந்து நெருங்குதலாலும் நீண்ட நேரம் தங்காது. மேல் மாடத்தில் வந்து உலாவுகின்ற தேவமாதர்கள், கீழே இருக்கும் கிணற்றைப் பார்த்து அதில் தங்கள் நிழல் தெரியக் கண்டு, நம்மைப் போல் கீழுலகத்திலுள்ளவர்களும் இங்கு வந்திருக்கின்றனர், இவைகள் பிலத்துவாரங்கள் போலும் என்று அதிசயிப்பார்கள். மாதளைப் பழத்தை விரைவிற் பழுக்க வைத்தற்குப் புகை யேற்றுவதுபோலப் பெண்கள் தமது தனங்களிற் பூசிய சந்தனத்தை உலர்த்துதற் பொருட்டு இடும் புகைகள் எவ்விடத்தும் பரந்து செல்லும். அவர்கள் தமது கூந்தலுக்கு ஊட்டுகின்ற புகை அவர்களைச் சூழ்ந்து கொள்ளுதல், மேகங்கள் அவர்களைத் தம்

மிடத்திலிருந்து நீங்கிய மின்னல்களென்று கருதி வந்து சூழ்வது போலும். பெண்கள் தமது தனங்களில் எழுதிய கரும்புவில் போன்ற கோலத்தைத் தாங்குவது, தாங்கள்தாம் மன்மதனது சேனைகள் என்று அறிவிப்பது போலும். இரண்டு தாமரை மலர்களில் மாறிமாறி விழுகின்ற வண்டுக்கூட்டங்கள் போல இரண்டு கையிலும் மாறிமாறிப் புகுகின்ற அம்மனையை ஆடுகின்ற பாட்டிசை எங்கும் உள்ளது. பெண்கள் யாழ் வாசிப்பது, அது தங்கள் சொல்லுக்கு ஒத்திருக்கும் தன்மையைச் சோதிப்பது போலும். அந்நகரத்தில் எங்கும் பெண்கள் காற் சிலம்பு ஒலிக்க ஆடுவார்கள். அவர்கள் ஆடும்போது தாளம் பின்னின்று ஒலித்தல், அவர்களுடைய தனத்திற்கு முன்னே வரக் கூசுகின்றது போலும். பிள்ளைகள் தமது பந்துகளை மாளிகைகளின் சுவரில் எறிந்த உடனே பல ரத்தினங்களைச் சிந்துவது, உக்கிரகுமார பாண்டியர் செண்டாலடித்த காலத்தில் மேருமலை அளவிறந்த பொருளைக் கொடுத்தது போலும். பிள்ளைகள் காற்றாடியை இழுக்குந்தோறும் கீழிறங்கி, விடுக்குந்தோறும் மேலே செல்லுதல், கருடன் இடபதேவர் மூச்சை உள்ளே இழுக்குந் தோறும் வெளியே விடுந்தோறும் அதில் அகப்பட்டுக் கீழும் மேலுமாக உழன்றது போலும். இன்னும் அக்காற்றாடிகள், சூரிய சந்திரர்களைப் பற்றுதற்குத் தேடித்திரிகின்ற ராகு கேதுக்கள் என்னும் பாம்புகள் போலத் தேவர்கள் காணும்படி வானத்தில் ஆடும். அந்நகரத்தினின்றெழும் தாளிதப்புகை, கூந்தற்கு ஊட்டும் அகிற்புகை, ஓமப்புகை சேர்ந்திருக்கிறதென்று அறியாதவர்களாய் மக்கள் ஆகாயத்தைப் புகைநிறமென்று கூறுகின்றார்கள். வேள்விச்சாலைகள், இந்திரனுடைய வாகனமாகிய மேகங்கள் இங்கு வந்து தமது முடியின் அழகைச் சிதைத்து விட்டமையால், தமது மந்திரப்புகையினால் அவன் ஊரழகை அழிக்கும். அந்நகரத்தில் அந்தணர்கள் வேள்வித்தீயில் சொரிந்த நெய்யிற் சிதறி எழுந்த துளிகளையும் தீப்பொறிகளையும் கொண்டு, மேகமாகப் பரவிய வேள்விப்புகையே இடித்து மின்னி நீர் பொழிவனபோலும்! இதற்கு வேள்விசெய்யாதொழிந்தால் மழை பெய்யாதொழிதலே சாட்சியாகும்.

## அந்தணர் இருக்கை

'பூசுரர்' என்னும் பெயரிலுள்ள 'பூ, சுரர்' என்னும் இரண்டு சொற்களின் பொருளாகிய பூமி, தேவர் என்னும் பொருள்களுக்கு உரிமை பூண்டதற்கு ஏற்க, பூமியிலுள்ள அதிதிகளை உணவினால் பூசித்தலும், தேவர்களை வேள்வி அவிசினாற் பூசித்தலும் ஒருங்கு செய்யும் கடப்பாட்டினைக் குற்றமறச் செய்யும் அந்தணர்கள் வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

## அரசர் இருக்கை

தமது வலிமையால் பகைவர்களை வென்று, ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி, தாம், தமது பரிசனங்கள், பகைவர்கள், கள்வர்கள், பிற உயிர்கள்

என்னும் ஐந்து வகையால் வருகின்ற பயத்தையும் நீக்கி உயிர்களைக் காத்து உலகமுழுதும் செங்கோல் நடாத்தும் அரசர் வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

### வணிகர் இருக்கை

பிரமன் தொடையிற் பிறந்தவர்களாய், அயலார் பொருளையும் தம்பொருள் போலப் பாதுகாத்து, கொள்வது மிகையும் கொடுப்பது குறையுமாகாமல் வாணிபம் செய்து, குபேரனும் தோற்றோடத் தகுந்த செல்வத்தையுடையவர்களாய், வேத ஒழுக்கத்தையும் கைப்பற்றி வாழும் சிறந்த வணிகர் வாழும் இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

### வேளாளர் இருக்கை

பிரமதேவனது முகம் முதலிய உறுப்புக்களைத் தாங்கிச் சரணமென்று சொல்லப்படும் காலிற் பிறந்து, அவனது முகம் தோள் தொடைகளிற் பிறந்த அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூவர்களையும் உழவின் வளப்பத்தினல் நிலைபெறத் தாங்குகின்றவர்களாய், வேளாளர் என்னும் பெயரைத் தமக்கே உரியதாகப் பூண்டவர்கள் வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

### மற்றையோர் இருக்கை

நான்கு வகைப்பட்ட சாதியாருடைய வீதிகளைச் சூழ்ந்து, அவர்களுள் உயர்ந்தோரும் இழிந்தோரும் தம்மிற் கூடிப் பெற்ற அநுலோமர் பிரதிலோமர்களும், மற்றைச் சாதியார்களும் வாழ்கின்ற இடங்கள் உள்ளன.

### கழகம்

செழித்து வளர்ந்த தருப்பை இலையின் நுனியைப் போலக் கூர்மை வாய்ந்த அறிவும் குற்ற மற்ற கேள்வியும் உடையவர்களாய், மேற் கோள், ஏது, எடுத்துக்காட்டு என்னும் மூன்றனும் நன்மாணக்கர்க்குப் பொருளைத் தெளிவிக்கவல்ல அளவை இயல்புணர்ந்தவர்களும், கவி, கமகன், வாதி, வாக்கியென்னும் நான்குவகைப் பட்ட புலவர்களும் குழாம் குழாமாகக் கூடி நூல்களை ஆராய்கின்ற கழகங்களும் பல அவ்விடத்திலுள்ளன.

### சைவ மடம்

திருவேகம்பத்தில் எழுந்தருளி யிருக்கும் "ஓம்" என்னும் சொல்லின் பொருளாகிய இறைவனை, 'இவர், காமத்தை விளைக்கும் மன்மதனை அழித்து, நீண்ட சடையைத் தரித்து, அழகிய காவி உடையை அணிந்து, நாமெல்லாம் துதிக்கின்ற துறவியென்று இருந்தும், ஒருத்தியினுடைய தனத் தழும்பை உடையவராயினர்' என்று சிறையிடுதல் போலத் தமது மனமாகிய குகையில் இருத்தித் தியானித்து, அதனல் சிவானந்தத்தை அடையும் சைவ மாதவர்கள் வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

## திருக்கோயில்

அநாதி சைவராகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில், சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாதங்களையும் அனுட்டித்துத் திருவருள் பெற்ற ஆதிசைவர் முதல் அவாந்தர சைவர் இறுதியாக உள்ள சைவர்கள் வாழ்கின்ற மாளிகைகளின் வரிசைகளைச் சுற்றிலும்கொண்டு அழகுபெற விளங்கும்.

## திருமதில்

திருக்கோயிலின் திருமதிலின் மேல் இடபங்கள் வரிசையாக அமர்ந்திருப்பது, சிவபெருமான் ஆணையால் அவரது வாகனமாகிய இடபம், பல உருவு கொண்டு, விண்ணுலகம் அழியும்படி வளர்கின்ற மதிலின் செருக்கை அடக்க அதன்மேலிருந்து அழுத்துவது போலும்.

## திருக்கோபுரம்

திருக்கோயிற் கோபுரம், வானத்திலுள்ள ஒன்பது கோள்களும் தங்குதற் பொருட்டு ஒன்பது மாடங்கள் அடுக்காகச் செய்தாற்போல, ஒன்பது நிலையைக் கொண்டு உயர்ந்து விளங்கும். அன்றியும், அக்கோபுரம் மேகங்கள் ஆடையாகவும், சூரியன் மார்பிலணியும் மதாணியாகவும், சந்திரன் நெற்றியிலணியும் திருநீருகவும் இருக்க ஒரு புருடன் போலவும், காஞ்சியிலுள்ளவர்கள் திருவேகம்பரை நாள்தோறும் விரும்பி வழிபட்டு, சிவலோகத்தை அடைதற்கு வைத்த ஏணிபோலவும் விளங்கும். அக்கோபுர வாயிலில் உள்ள முரசம் வைகறை முதலிய ஆறு காலங்களிலும் முழங்குதல், இறைபெருமானை வணங்குதற்குரிய காலமாகும் என்று தேவர்களை அழைப்பது போலும்.

## கொடி

உயிர்களைப் பந்தித்துக் கொண்டிருக்கின்ற ஐவகைப் பாசங்கள்போல ஐந்து ஆவரணங்களால் (மதில்களால்) சூழப்பட்ட திருக்கோயிலில் இறைவன் திருமுன்பில் உள்ள கொடிக்கம்பத்தின்மேல் இருக்கும் இடபமானது; வானத்திலுள்ள ஓர் இராசியாகிய இடபத்துடன் கலக்கும்.

## தூபி

பலவிடத்திலும் இருக்கின்ற பல மலைகளும், தங்கள் குலத்தரசன் புதல்வியாராகிய உமாதேவியார் செய்யும் பூசையைப் பார்ப்பதற்கு வந்து நெருங்கினாற்போல, சிகரங்களோடு கூடிய தூபிகள் விளங்கும்.

## மண்டபம்

தன்னிடத்து முழுகுகின்றவரை இருவினையாகிய நோயினின்று நீங்கச் செய்யும் பல பூக்கள் நிறைந்த தீர்த்தத்தை அடுத்துள்ள பொன் மயமான மண்டபங்கள், இரத்தினங்கள் வைத்திருக்கும் பெட்டியைத் திறந்த மூடிபோல விளங்கும்.

### வேள்விச் சாலை

சிவந்த அழகிய குண்டத்தில் வளர்க்கெழுகின்ற தீயின் முனையில் திருவேகம்பப் பெருமானை ஆவாகனம் செய்து துதிக்கப்படுகின்ற வேள்விச் சாலையானது, தகரவித்தை முறைப்படி தமது இருதய தாமரையிலுள்ள தீக்கொழுந்தில் இறைவனை வைத்துத் தியானிக்கின்ற விட்டுணு மூர்த்தியை ஒக்கும்.

### திருவேகம்பர்

செழித்த அடிமரம் காம்பாகவும் விரிந்த கிளைகள் மேல் குடையாகவும் கொண்டு ஒரு மாமரம் வளப்பமான நிழலைச் செய்ய, அந்நிழலில் எமது திரு வேகம்பநாதர், உயிர்கட்கெல்லாம் முறைபாக ஐந்தொழிலைச் செய்து அரசு வீற்றிருந்தருளுவார். இவ்வுலகத்திலுள்ள பற்பல தேசங்களும் இடம்புரிச் சங்குகளாக, அவைகளால் சூழப்பட்ட தொண்டை நாடு, அந்த இடம்புரிச் சங்குகளின் நடுவிற் செல்லும் வலம்புரிச் சங்காகும். அந்நாட்டிலுள்ள பற்பல நகரங்களும் வலம்புரிச் சங்குகளாக, அவைகளாற் சூழப்பட்ட காஞ்சித் திரு நகரம் அவற்றின் நடுவிற் செல்லும் சலஞ்சல மென்னும் சங்காகும். அக் காஞ்சியில் ஏனைய தலங்களாற் சூழப்பட்ட திருவேகம்பம் பாஞ்சசன்னியம் என்னும் சங்காகும். அத்திருவேகம்பத்தில் ஒரு மாவடியில் வீற்றிருக்கும் இறைவன் அப் பாஞ்சசன்னிய மென்னும் சங்கத்தில் இருக்கும் விலையில்லாத முத்தாகும்.

காஞ்சிமா நகரத்தில் இறைவியே முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப் பதனால் எல்லா அறங்கட்கும் அதுவே உறைவிடமாகும். ஆதலால் அறநூல் சொன்ன முனிவர்களும் அறமாகிய இலக்கியத்தை இவ்விடத்தில் பார்த்தே விதிவிலக்காகிய இலக்கணத்தைச் சொன்னார்கள் போலும்! கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தில் பொருளமைந்த கேள்வி நிறைந்த பாவலரென்று சொல் லப்படுவோருள் காஞ்சியைப் புகழாதவர்கள் ஒருவரும் இல்லை, அங்ஙனம் அவர்களெல்லாம் புகழ்ந்தும் முடிவுபெறாத அதன் சிறப்பு முழுவதும் கல்வி நிரம்பாத சிறியேனோ எடுத்துச் சொல்ல வல்லேன்!

திருவேகம்பப் பெருமான் இத்தகைய காஞ்சியம்பதியில் உள்ள பல திருக்கோயில்களில் எழுந்தருளியிருந்து அவரவர்களுக்கு அருள் புரிந்த வரலாறுகளையெல்லாம் சூதமுனிவர் முன் காலத்தில் சொல்லியபடியே தமி ழறிஞர்கள் அறியும்படி மொழி பெயர்த்துக் கூறுவேன்; அதனால் கடைத் தேறினவனானேன்.

---

# பதிகம்*

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சிவபரஞ் சுடரைக் காண்டரும் ஏதுச் செய்தவர் வினவிய வாறும், தவலருஞ் சிறப்பின் நந்திஎம் பெருமான் சனற்குமா ரனுக் குவெஞ் சாப, நவையறுத் தருளிச் செவியறி வுறுத்த நலமெலாஞ் சூதமா முனிவன், அவர்தமக் கியம்பிப் பிஞ்ஞகன் உமையாட் கருளிய உண்மைசெப் பியதும். க

கன்னியாழ்க் கிழவன் வரம்பெறு காரைக் காட்டினிற் பூசனை உஞற்றி, மின்னவிர் மணிப்பூண் சிவியெனும் மகவான் வீடுபே றெய்திய வாறும், பொன்னுடைப் புத்தேள் புண்ணிய கோடிப் புனிதனை அருச்சனை யாற்றி, அன்னவ றுகைக்கும் அண்ணலோ டுலகை உண்டுமீட் டுதவிய வாறும். உ

அத்தகு மாயோன் வலம்புரிக் களிற்றை அடியிணை வணங்குபு தனது, கைத்தலத் திழந்த தெம்மருள் சிலைப்பிற் கதிர்வளை தனைப் பெறு மாறும், மெய்த்தபோ ரன்பின் மலர்மிசைக் கடவுள் வேள்வி செய் துயர்சிவாத் தானத், துத்தமன் அருளான் மாயனோ டுலகை உண்டுமீட் டுதவிய வாறும். ங

---

*பதிகம்- பலவகைப் பொருள்களையும்தொகுத்துச்சொல்லுதல். இந்நூலுட் கூறப்படுவன யாவையெனப் பொதுவகையால் தொகுத்தறிய அவாவுதலும், பொதுவகையான் அறிந்ததனையே சிறப்பு வகையால் அறிய மன வெழுச்சி செல்லுதலும் இயற்கையாதலால், அதுபற்றி இதனுட்கூறப்படும் வரலாறு களை எல்லாம் தொகுத்துக் கூறுகின்றார். 'பதிகப்படலம்' எனவும் ஒரு பதிப் பில் உள்ளது.

க. காண்தரும் - காணுதற்கரிய. ஏது - உபாயம். தவலரும் சிறப்பு - கெடுதலில்லாத மேன்மை. நவை - குற்றம். செவியறிவுறுத்த - உபதேசித்த. இயம்பி - சொல்லி. பிஞ்ஞகன் - தலைக்கோலத்தை உடையவன், சிவபெரு மான். தலைக்கோலமென்பது சடையைக் குறிக்கும் போலும்.

உ. கன்னி - அழிவில்லாமை. யாழ்க்கிழவன் - நாரத முனிவர். உஞற்றி - செய்து. மின்அவிர் - மின்னல்போல ஒளி வீசுகின்ற. மகவான் - இந்திரன். பொன்னுடைப் புத்தேள் - திருமகளையுடைய கடவுள், திருமால். உகைக்கும்- செலுத்துகின்ற.

ங. களிறு - யானைமுகத்தையுடைய விநாயகர். தெம்மருள் - பகை வர்கள் மயங்குதற்குரிய. சிலைப்பு - ஒலி. கதிர்வளை - ஒளிபொருந்திய சங்கு.

கருகிருள் விடத்தை இறைவன் பருகக் காட்டிய அறக்கடை தணப்ப, இருமறை விதியாற் கடவுளர் மணிகண் டேசனை எத்திய வாறும், மருளுறு செருக்கிற் பொய்யுரை கிளந்த வல்வினை கழிதர வியாதன், பொருவருஞ் சார்ந்தா சயப்பெரு வரைப்பிற் பூசனை இயற்றிய வாறும். ௪

வீட்டினை விழைந்தேழ் முனிவரும் பூசை வேறுவே றியற்றிய வாறும், கோட்டமில் கொள்கைப் பராசர முனிவன் தொழுதுதன் தாதையைக் கொன்று, மாட்டிய அரக்கன் குலத்தொடு மடியச் செற்றதும் விளக்கொளி மாயோன், நாட்டமூன் றுடைய நாதனைப் பரவி நதிதடுத் தோம்பிய வாறும். ௫

ஈண்டிய புகழ்முத் தீச்சரம் பரசி ஈன்றவள் சிறையினை விடுவித், தாண்டகைக் கலுழன் நஞ்சுபில் கெயிற்றுப் பணிகளை அலைத்தெழு மாறும், நீண்டவன் உணராத் திருவடி போற்றி நெளிபுடற் பணிகளும் எம்மான், பூண்டுகொண் டருளப் பெற்றமே தகவாற் புள்ளினை விளைவிய வாறும். ௬

இறுதிநா ளிருவர் காயம்மேல் தாங்கி வியாழமும் இயமனும் வழுத்த, மறுவறு காயா ரோகண வரைப்பின் எம்பிரான் மன்னிய வாறும், அறுகணி வேணி மஞ்சள்நீர்க் கூத்தர் அடியிணை அருச்சனை செய்து, தெறுபுலன் அவித்த சித்தர்எண் ணரிய சித்திபெற் றுய்ந்திடு மாறும். ௭

மாதவன் பரசிப் பிருகுவன் சாப வன்பயந் தபப்பெறு மாறும், மேதகும் ஒருசார் முனிவரர் மதங்கன் வெண்கரி போற்றிய வாறும்,

---

௪. அறக்கடை - பாவம். தணப்ப - நீங்க. இருமறை - பெரியவேதம். கடவுளர் - தேவர். கிளந்த - சொல்லிய.

௫. கோட்டம் - மாறுபாடு. கொன்று மாட்டிய, ஒருபொருட் பன்மொழி. நாட்டம் - கண்.

௬. ஈண்டிய - மிகுந்த. பரசி - வணங்கி. ஆண்தகை - ஆண்தன்மை. கலுழன் - கருடன். பில்கு - கொப்புளிக்கின்ற. எயிறு - பல். பணிகள் - பாம்புகள். நீண்டவன் - திருமால். மேதகவு - மேன்மை. புள் - கருடன்.

௭. இறுதிநாள் - ஊழிக்காலம். இருவர் - பிரம விட்டுணுக்கள். காயம்- உடல். தெறு - (அறிவைக்) கெடுக்கின்ற. அவித்த - அடக்கிய.

ஏதமில் வெள்ளி மொழிப்படித் ததீசி இட்டசித் தீசனைத் தொழுது, கோதறு வயிர யாக்கைபெற் றேங்கிக் குபன்றனைப் புறங்கண்ட வாறும். அ

அந்தணன் கச்ச பாலபத் * திறைஞ்சிப் படைத்திடும் ஆற்றல் பெற் றதுவும், பைந்துழாய்க் கூர்மம் ஆயிடைப் பரசிப் பாதகந் தவிர்ந்துய்ந்த வாறும், மைந்துறு மாண்டு கன்னிமா முனிவன் வழுத் திவான் அரம்பையர் ஐவர், சந்தனந் திளைக்கும் இளமுலைப் போகந் தரைமிசை நுகர்ந்துவாழ்ந் ததுவும். கூ

அங்கியங் கடவுள் ஏத்தியின் புலத்தார் அவிப்பொறை மது கைபெற் றதுவும், பங்கமின் றிறைஞ்சிச் சவுனக முனிவன் வீட்டி னைத் தலைப்படும் பரிசும், மங்கரு வெப்பு விழியவற் செகுத்த சுரக ரம் வானவர் வழுத்திப், புங்கவர் பெருமான் சுக்கிலம் பருகு வெப்பு நோய் போக்கிய வாறும். க0

புலிப்பத முனிவன் கான்முளை போற்றிப் பொங்குதீம் பாற் கடல் பெற்று, வலித்திறல் பார்த்தன் வலவனை முடிமேல் மலரடி சூட்டிஆண் டதுவும், கலித்தெழும் இமையோர் மலைமகள் மொழி யாற் கரிசறத் தெளிந்தருட் குறியில், சலிப்பறும் இயக்க வடிவு கொண் டணைந்த தலைவனைத் தொழுதுய்ந்த வாறும். கக

---

அ. மாதவன் - திருமால். பரசி - வணங்கி. தப - நீங்க. மதங்கன் - ஒரு முனிவர். கரி - யானை ஏதம் - குற்றம். வெள்ளி - சுக்கிரன். ததீசி - ஒரு முனிவர். குபன் - ஓர் அரசன். புறங்கண்ட - முதுகுகண்ட, தோற்று ஓடச்செய்த.

கூ. அந்தணன் - பிரமன். கூர்மம் - ஆமை. ஆயிடை - அவ்விடத்தில். பரசி - வணங்கி. மைந்து - வலிமை. *'கச்சபாலையத்' தெனவும் பாடம்.

க0. புலம் - இடம், உலகு. அவி - (வேள்வியிற் கொடுக்கும்) அவிசு. பொறை மதுகை - தாங்குதற்குரிய வலிமை. வெப்பு விழியவன் - சுராக்கன் என்னும் ஓர் அசுரன். சுரகரம் - சுரகரீசம்.

கக. புலிப்பத முனிவன் கான்முளை - வியாக்ரபாத முனிவர் புதல்வ ராகிய உபமன்னிய முனிவர். பார்த்தன் வலவன் - அருச்சுனனுடைய சாரதி, கண்ணன். கலித்து - ஆரவாரித்து, கரிசு - குற்றம். இயக்கன் - யட்சன். தலைவன் - சிவபெருமான்.

ஏதமில் பதிற்றுப் பதின்மரோ டீரொன் பதின்மரும் ஏத்திய வாறும், மாதர்மேற் றளியிற் கவுணியன் பாட்டான் மால்சிவன் உருவு பெற் றதுவும், ஆதரம் பூப்ப ஐங்கரப் புத்தேள் அனேகதங் காவ தம் பரசிக், கோதற உலகம் எண்ணியாங் குதவக் கொடுத்திடும் இறைமைபெற் றதுவும். ௧௨

மகதியாழ் முனியும் புத்தருங் கிறையும் வளம்பொழில் திருக் கயி லாயப், பகவனைத் தொழுது முப்புரத் தவரை மருட்டிய பாவம் மாற் றியதும், இகலுநர்ச் செகுப்ப இராகவன் வழுத்தி எறுழ்வலி எய்திய வாறும், புகழுறுங் கற்கி போற்றுபு கடைநாள் கயவரைப் புரட்டிய வாறும். ௧௩

நறைமலர்ப் பனந்தார் முடிபவன் வழுத்தி நலம்பயில் வரம் பெறு மாறும், அறைகழல் மகவான் தொழுதுசெல் லுருவாய் அச் சுதன் சென்னியைத் துணித்து, நிறைபெருங் கீர்த்தி கவர்ந்துமீட் டுய்யப் பூசனை நிகழ்த்திய வாறும், மறையவன் தலையைக் கொய்து வெம் பலிதேர் வயிரவன் பூசித்த வாறும். ௧௪

விண்டுநேர் விடுவச் சேனனார் பரவி வீரபத் திரன்நிறத் தணிந்த, வெண்டலை விழுங்கும் ஆழியை விகடக் கூத்தினால் எய்திய வாறும், மிண்டினால் வேள்வி ஆற்றிய தக்கன் வினைகெட அருச் சித்த வாறும், விண்டவர் புரத்தின் உய்ந்திடும் மூவர் தொழுதுமெய் வரம்பெறு மாறும். ௧௫

---

௧௨. ஏதம் - குற்றம். நூற்றுப்பதின்மரோடு ஈரொன்பதின்மர் - சதருத் ரர் முதலிய நூற்றுப்பதினெண்மர். மாதர் - அழகு. கவுணியன் - திருஞானசம் பந்த மூர்த்தி நாயனார். ஆதரம் - விருப்பம். பூப்ப - உண்டாக. புத்தேள் - கடவுள், விநாயகர். பரசி - வணங்கி, கோது - குற்றம்.

௧௩. மகதியாழ் - நாரதமுனிவரது வீணை; இது மிகுந்த நரம்புடையது. எறுழ்வலி - மிக்கவலிமை; மீமிசைச்சொல், கற்கி - குதிரை, திருமால் அவ தாரங்களில் ஒன்று. கடைநாள் - உகமுடிவு. கயவர் - கீழ்மக்கள், அசுரர்.

௧௪. பனைமாலை பலராமனுக்குரியது. அறைகழல் - ஒலிக்கின்ற வீரக் கழல். மறையவன் - பிரமன்.

௧௫. நேர் - ஒத்த. நிறம் - மார்பு. ஆழி - சக்கரம். மிண்டு - வலிமை, விண்டவர் - பகைவர்.

பொன்பெயர் படைத்தோன் கிளைஞரோ டெய்திப் பூசைசெய் தாசுபெற் றதுவும், கொன்பயில் விடையோன் அருள்வழி மாயோன் மடங்கலாய் அவனுயிர் குடித்துப், பின்புகும் தருக்கைச் சரபம்மாய்த் தகற்பின் பிழைகெடப் பூசித்த வாறும், வன்புடை இரணி யாக்கனை இறுத்த பன்றிபின் வழிபடும் இயல்பும். கசு

அந்தகன் பரசிப் புவிமுழு தாண்டு கடைமுறை அருள்பெறு மாறும், வெந்திறல் வாணன் இறுதியிற் பரவி விறற்கணத் தலைமை பெற் றதுவும், கந்தமென் மலர்கொண் டடிதொழு தோண காந்தனுங்* கதிபெறு மாறும், மைந்துற வழுத்திச் சலந்தரன் கடைக்கால் வீட்டின்பம் மருவிய வாறும். கஎ

கேசவன் திருமாற் பேற்றினிற் போற்றிக் கிளரொளி ஆழி பெற் றதுவும், வேசறு பரசி ராமன்ஏத் தெடுத்து வெம்மழுப் படை பெறு மாறும், தேசுறப் பரவி இரேணுகை யென்பாள் தெய்வத மாகிய வாறும், மாசறும் போகா சாரியர் தொழுது வயங்குதம் பதம்பெறு முறையும். கஅ

சித்தசன் போற்றி உலகெலாங் காமம் செறித்திடும் இறைமை பூண் டதுவும், அத்தனார் ஏவ லாற்றினால் அணைந்த அகிலதீர்த் தங்களும் வணங்கிப், பைத்தபாப் பல்குல் பாகனார் தம்பாற் பற்பல வரங்கள்பெற் றதுவும், தத்துநீர்க் கிறைவன் அருச்சனை யாற்றித் தங்கும்அப் பதம்பெறு மாறும். ககூ

---

கசு. பொன்பெயர் படைத்தோன் - இரணியன். கொன் - பெருமை. மடங்கல் - (நர) சிங்கம். தருக்கு - செருக்கு. சரபம் - எண்காற் பறவை.

கஎ. அந்தகன் - ஓர் அசுரன். பரசி - வணங்கி. கந்தம் - வாசனை மைந்து - வலிமை. கடைக்கால் - முடிவு. *"காந்தரும்" எனப் பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

கஅ. கேசவன் - திருமால். வேசு - இளைப்பு; இதனை வேசாறுதல் என்னும் வழக்குப்பற்றி யுணர்க. தேசு - ஒளி, புகழ். மாசு - குற்றம். வயங்கு - விளங்கும்.

ககூ. சித்தசன் - மன்மதன். அகிலம் - முழுவது. பைத்த - படம் விரித்த. பாப்பு - பாம்பு. பாம்பு விரித்த படம் போலும் அல்குலென்க. தத்து - தாவுகின்ற. நீர்க்கிறைவன் - வருணன்.

காசிவாழ் விசுவ நாதனுங் காஞ்சிப் பெட்பினால் அணைந்துவை கியதும், பூசனை உஞற்றிக் காற்றினன் கந்த வாகனப் பொலிவுறு மாறும், மாசறு கோள்கள் ஒன்பதும் வழுத்தி எண்ணிய வரம்பெறு மாறுந், தேசுறு வாம தேவநன் முனிவன் தொழுதுவெம் பிறவி தீர்ந்ததுவும். உ0

அகனுறப் பரசி மார்க்கண்டி முதலோர் இறப்பினைக் கடந்ததும் அயன்மால், இகலுறு செருக்கின் வருவினை தணப்ப இலிங்கம்அங் கருச்சித்த வாறுஞ், சகமெலாம் இறுத்து முக்கண்எம் பெருமான் தங்குவீ ராட்டகா சத்தின், முகில்நிறப் புத்தேள் பூசனை உஞற் றித் துகிர்நிறம் பெற்றிடும் முறைபும். உக

மாண்டகு காமக் கண்ணியை வணங்கி மலர்மகள் சாபம்மாற் றியதும், பாண்டவர் முதலோர் தொழுதுநல் வரங்கள் பரித்ததும் வணங்கிஈ சான, ஆண்டகை ஆசைக் கிறைமைஎய் தியதும் அச்சுதன் மச்சமாய்ப் போற்றி, வேண்டலர்ச் செகுத்து வேதநூல் கொணர்ந்து வேதியர் தமக்களித் ததுவும். உஉ

மீயுயர் குறளோன் அவுணனைச் சிறையிற் புகுத்துமீண் டிறைஞ் சியவாறும், மாயவன் பரவிக் கடல்விடந் தாக்கும் வெப்புநோய் மாறநின் றதுவும், நாயகி உருவிற் கவுசிகை தோன்றி நாதனைப் பூசித்தவாறும், தூயமா காளப் பாப்பர சிறைஞ்சித் தொல்லைவீ டுறப்பெறு மாறும். உங

அண்ணலார் ஆணை மறுத்தவெவ் தீமை அறுத்திடக் குமர கோட்டத்தில், நண்ணிவீற் றிருந்து சேயிலை நெடுவேல் நாயகன் பூசித்தவாறும், மண்மெலாம் பரவும் மார்க்கண்ட முனிபால் வஞ்

உ0. பெட்பு - விருப்பம். கந்தவாகன் - வாசனையைக் கொண்டுவருபவன்.

உக. பரசி - வணங்கி. மார்க்கண்டி - மார்க்கண்டேயர். தணப்ப - நீங்க. இறுத்து - அழித்து. துகிர் - பவளம்.

உஉ. காமக்கண்ணி - காமாட்சி. பரித்தல் - தாங்குதல், பெறுதல். ஆசை- திசை. வேண்டலர் - பகைவர். செகுத்து - அழித்து.

உங. மீ - மேல். குறளோன் - வாமனன். அவுணன் - மாவலி. உரு - கழித்த உருவம்.

சகங் கருதிய மாயோன், கண்ணுதற் பிரானை அத்தலத் திறைஞ்சி அவ்வினை கழுவிய வாறும். உச

சாத்தனர் போற்றி உரிமைபெற் றதுவும் மங்கைக் கையல் போற் றியதும், தீத்தொழில் அரக்கர்ச் செகுத்துவந் திராமன் பணிந்ததும் தேவர்கோன் வலவன், எத்திய வாறும் நாரணன் பரவிப் பாப்புரு இரித்ததும் மயானக், கூத்தனர் முழுதுந் தழலிடை ஒடுக் கிப் பண்டனைக் கொலைசெய்த வாறும். உரு

ஒவிய உலகைத் தோற்றுவான் எங்கோன் ஒற்றைமா மூலத்தின் முளைத்துத், தாவறு சிறப்பின் இலளிதைப் பிராட்டி தனைப்பயந் தாங்கவள் விழியின், மூவரைப் படைத்துச் செய்தொழில் வகுத் துச் செவியறி வுறுத்துமெய் கூந்தல், தேவியுங் கடவுள் மூவரும் பரவச் சிறப்பொடு வீற்றிருந் ததுவும். உகூ

திருவிளை யாட்டான் மந்தரத் துமையாள் சிவபிரான் விழியிணை புதைப்பக், கருகிருட் பிழம்பின் உலகெலாம் மூழ்கிக் கடப்பருங் கவலையுற் றதுவும், வருவினை தணப்பப் பூசனை புரிவான் மழவிடைச் செய்கையும் புகன்று, பெருநகர்க் காஞ்சிக் கிறையவன் விடுப்பப் பிராட்டிஅங் கெய்திய வாறும். உஎ

மெய்த்தகல் லறங்கள் வளர்த்திடு மாறும் விண்டுவீச் சரம்அகத் தீசம், மத்தள மாதவீச்சரம் வணங்கிப் போந்துமாந் தருவடி முளைத்த, சத்தறி வின்பத் தனிமுதற் பொருளைத் தவத்திறைக் கண்டுகொண் டிறைஞ்சிப், புத்தமிழ் தனையாள் விதிபுளி வழாமைப் பூசனை உஞற்றிய வாறும். உஅ

---

உரு. சாத்தனர் - ஐயனர். தேவர்கோன் வலவன் - இந்திரன் சாரதி, மாதலி. இரித்தது - நீக்கியது. பண்டன் - ஓர் அசுரன்.

உகூ. ஓவிய - ஒழிந்த. தா - குற்றம். மூவர் - மும்மூர்த்திகள்.

உஅ. சத்து - உண்மை, நிலைமாறுதல் இன்றி என்றும் ஒருபடித்தா யிருப்பது. இதுவே சைவசித்தாந்தத்திற் கூறப்படும் சத்திலக்கணம். பிறவாறு கூறுவார் கூற்றுப் பொருந்தாதென்பது, திராவிட மாபாடியத்துள் ஆறுஞ் சூத்திரத் துரையிற்காண்க. உண்மை, அறிவு, இன்பம் என்பதே வடமொழி யில் சத் + சித் + ஆனந்தம் = சச்சிதானந்தம் என வழங்கும்.

கருணைமீப் பொங்குந் திருவிளை யாட்டால் அழைத்துறுங் கம்பைநீர்ப் பெருக்கைக், குருமணிக் குழையாள் கண்டுளம் பதைத்துக் குழகனைத் தழுவிய வாறும், திருமுலைச் சுவடும் வால்வளைத் தழும்புஞ் சிவபிரான் பொலிவுறப் பூண்டு, மருமலர்க் குழலாள் காணமுன் நின்று வரம்பல அருளிய வாறும். ௨௯

இமவரைப் பிராட்டி கவுரமா நிறம்பெற் றெம்பிரான் வதுவை வேட்டதுவும், உமையவள் காள உரியினில் உயிர்த்த ஒளியிழை அவுணரை மாட்டி, விமலநா யகன்றன் அருள்பெறு மாறும் மேதகு விம்மிதத் திறமும், அமைவர ஒழுகும் ஒழுக்கமும் எங்கோன் அருட்சிவ புண்ணியப் பேறும். ௩௦

மற்றுமோ ராற்றாற் கிளந்திடுந் திறத்தின் மால்வரைக் கயிலையின் உமையாள், கற்றையஞ் சடையார் விழியிணை புதைத்துக் காஞ்சியிற் பூசனை யாற்றும், பெற்றியும் அந்தர் வேதியுங் கரிகால் வளவர்கோன் பெருமையும் வினைநோய், செற்றிடுந் தீர்த்தம் முதலிய மூன்றின் சிறப்பும் ஈண் டியம்பிடப் படுமால். ௩௧

ஆகத் திருவிருத்தம் - ௩௨௯.

---

## உரை நடை

---

நைமிசாரணிய முனிவர்கள் இறைவனைக் காணும் உபாயம் யாது என்று சூதமுனிவரை வினவியதும், சூதமுனிவர், நந்திபெருமான் சனற்குமாரமுனிவருக்குத்தாம் கொடுத்த சாபத்தைநீக்கி உபதேசித்தருளியதையும், இறைவன் இறைவிக்குச் சொல்லி யருளிய உண்மைகளையும் எடுத்துக்கூறியதும்; திருநெறிக் காரைக்காட்டில் சிவியென்னும் இந்திரன் பூசித்து முத்தியடைந்ததும்; புண்ணிய கோடீசத்தில் திருமால் பூசித்து பிரமனுடன்

---

௩௦. கவுரம் - பொன். வதுவை - திருமணம். வேட்டல் - திருமணம் செய்தல். ஈண்டு செய்தலென்னுந் துணையாய் நின்றது. காளம் - கறுப்பு. உரி- உடம்பாகிய சட்டை. விம்மிதம் - அற்புதம்.

௩௧. அந்தர் வேதி - நடுவேயுள்ள சமபூமி. பிறிதொரு நூலாதற்குரியன வாயினும் இவற்றையும் மக்கட்கு உபகாரப்படத் தாமே கூறக் கருதினாராகலின், 'ஈண்டியம்பிடப்படும்' என்றார். பின்னர் இவற்றைத் தமது மாணாக்கராகிய கச்சியப்ப முனிவரைக் கொண்டு செய்வித்தமை காண்க.

உலகை உண்டு மீள உண்டாக்கியதும்; அத்திருமால் வலம்புரி விநாயகரைப் பூசித்துத் தமது பாஞ்சசன்னியம் என்னும் சங்கைப்பெற்றதும்; பிரமதேவன் வேள்விசெய்து சிவாத்தானத்தில் எழுந்தருளியுள்ள பெருமானருளால் விண்டுவுடன் உலகத்தை உண்டு மீள உண்டாக்கியதும்; தேவர்கள் இறைவனைவிடம் உண்ணச்செய்த பாவம் நீங்குதற்கு மணிகண்டேசப் பெருமானைப் பூசித்ததும்; பொய்ச்சத்தியஞ்செய்த பாவம் நீங்க, வியாசர் சார்ந்தாசயத்தைப் பூசித்ததும்; அத்திரி முதலிய எழு முனிவர்களும் வீடு பெறுதற் பொருட்டு இறைவனைத் தனித்தனி வழிபட்டதும்; பராசர முனிவர் தமது தந்தைமார்களைக்கொன்ற இராட்சசனைக் குலத்துடன் அழிக்கப் பூசித்ததும்; விளக்கொளிப் பெருமாள் இறைவனைப் பூசித்து வேகவதி நதியைத் தடுத்ததும்; கருடன் முத்தீசரை வழிபட்டுத் தன் தாயினுடைய சிறையை விடுவித்துப் பாம்புகளை வருத்தியதும்; பாம்புகளும் பெருமானை வழிபட்டு அவர்க்கு ஆபரணமாகிக் கருடனை, 'சுகமோ' என்று கேட்டதும்;

இறைவன் ஊழிக்காலத்தில் பிரம விட்டுணுக்களுடைய உடலைத் தாங்கி, தேவதருவாகிய வியாழனும் இயமனும் வழிபடுமாறு காயாரோகணமென்னுந் தலத்தில் எழுந்தருளியதும்; மஞ்சள் நதிக்கரையில் எழுந்தருளியுள்ள பெருமானை வழிபட்டுச் சித்தர்கள் அளவில்லாத சித்திகளை அடைந்ததும்; திருமால் வழிபட்டுத் தாம் பிருகுவினால் அடைந்த சாபத்தின் பயம் நீங்கப்பெற்றதும்; சுக்கிரன் சொற்படி ததீசி முனிவர் இட்டசித்தீசரைப் பூசித்து வச்சிர சரீரம் பெற்றுக் குபனென்னும் அரசனை வென்றதும்; பிரமதேவன் கச்சபாலயத்தில் இறைவனை வழிபட்டுச் சிருட்டிக்கும் வன்மை அடைந்ததும்; திருமால் கூர்மாவதாரத்தில் அக்கச்சபாலயத்தில் வழிபட்டுப் பாவத்தை நீக்கிக்கொண்டதும்; மாண்டுகன்னி முனிவர் பூசித்து, வானுலகத்திலுள்ள ஐந்து அரம்பையர்களது போக நுகர்ச்சியைப் பெற்றதும்; அக்கினி தேவன் பூசித்துத் தேவர்களுக்குக் கொடுக்கும் அவிசைத் தாங்கும் ஆற்றல் பெற்றதும்; சவுனகமுனிவர் பூசித்து முத்தி பெற்றதும்; தேவர்கள் சுராக்கனென்னும் அசுரனை அழித்த இறைவன் எழுந்தருளியுள்ள சுரகரீசத்தைத் துதித்து, இறைவனது சுக்கிலத்தை உண்டதனாலாகிய வெப்பு நோயைப் போக்கிக்கொண்டதும்; வியாக்ரபாத முனிவருடைய புதல்வராகிய உபமன்னிய முனிவர் வழிபட்டுத் திருப்பாற்கடல் பெற்றதும்; யட்சவடிவு கொண்டு வந்த இறைவனை இறைவியின் சொல்லால் தெளிந்து தேவர்கள் பூசித்ததும்;

சதருத்திரர் முதலிய நூற்றுப்பதினெண்மரும் பூசித்ததும்; திருமேற்றளியில் திருமால் வழிபட்டுத் திருஞானசம்பந்தர் திருப்பாடலால் சிவபெருமான் திருவுருவத்தை அடைந்ததும்; விநாயகர் அனேகதங்காவதத்தில்

பூசித்து உலகத்திலுள்ளவர்களுக்கு வேண்டியவற்றை வேண்டியவாறே கொடுக்கும் தலைமை அடைந்ததும்; நாரதரும் புத்தரும் திருக்கைலாய நாதரைப் பூசித்து, முப்புரத்தவர்களை மயக்கிய பாவத்தைப் போக்கியதும்; இராமன் பூசித்து அரக்கர்களை வெல்லும் வலிமை பெற்றதும்; கற்கி அவதாரங்கொண்ட திருமால் பூசித்து யுகாந்தத்திலுள்ள அசுரர்களை அழித்ததும், பலராமர் பூசித்து வரம் பெற்றதும்; இந்திரன் பூசித்து செல்லுருவங் கொண்டு, திருமால் தலையை அறுத்துப் புகழைக் கவர்ந்துகொண்டு, பின்பு அத்திருமாலைப் பிழைப்பித்தற்குப் பூசித்ததும்; பிரமன் தலையை அறுத்த வயிரவர் பூசித்ததும்; விடுவச்சேனர் வழிபட்டு வீரபத்திரர் மார்பிலணிந்த வெண்டலை விழுங்கிய சக்கரத்தைப் பெற்றதும்; தக்கன் சிவபெருமானுக்கு மாறாக வேள்விசெய்த பாவம் போகும்படி பூசித்ததும்; திரிபுரத்தை எரித்த காலத்தில் பிழைத்த மூன்று அசுரர்கள் வழிபட்டு வரம் பெற்றதும்; இரணியன் சுற்றத்தார்களோடு பூசித்து அரசு பெற்றதும்; திருமால், இறைவன் திருவருளால் நரசிங்கமாய் இரணியனை அழித்து அதனால் செருக்குக் கொண்டபோது சரபம் தன்னை அழித்தபிறகு அக்குற்றம் நீங்கப்பூசித்ததும்;

இரணியாட்சனை அழித்த திருமால் அவதாரமாகிய வராகம் வழிபட்டதும்; அந்தகாசுரன் வழிபட்டு உலக முழுவதும் ஆண்டு முத்திபெற்றதும்; வாணாசுரன் பூசித்து சிவகணத்தலைமை அடைந்ததும்; ஓணன், காந்தன் என்பவர்கள் பூசித்து முத்திபெற்றதும்; சலந்தராசுரன் பூசித்துக் கடைசியில் முத்திபெற்றதும்; திருமால் திருமாற்பேற்றில் பூசித்துச் சக்கரம் பெற்றதும்; பரசுராமர் பூசித்து மழுவாயுதம் பெற்றதும்; இரேணுகை பூசித்துத் தெய்வமானதும்; யோகாசாரியர்கள் பூசித்துத் தங்கள் பதவியை அடைந்ததும்; மன்மதன் பூசித்து உயிர்களுக்கெல்லாம் காமத்தை உண்டாக்கும் தலைமை அடைந்ததும்; எல்லாத் தீர்த்தங்களும் பூசித்து வரங்கள் பெற்றதும்; வருணன் பூசித்து நீர்க்குத் தலைவனாகியதும்; காசிவிசுவநாதர் காஞ்சியை அடைந்ததும்; வாயுதேவன் பூசித்துக் கந்தவாகன் ஆனதும்; நவக்கிரகங்கள் பூசித்து வரம்பெற்றதும்; வாமதேவ முனிவர் பூசித்துப் பிறப்பைக்கடந்ததும்; மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் பூசித்து இறப்பைக் கடந்ததும்; பிரம விட்டுணுக்கள் தாம் செருக்கினால் போர் செய்த பாவம் நீங்கப் பூசித்ததும்; திருமால் வீராட்டகாசத்திற் பூசித்துப் பவள நிறம் பெற்றதும்; இலக்குமி காமாட்சி யம்மையாரைப் பூசித்துச் சாபம்நீங்கியதும்; பஞ்சபாண்டவர் முதலானவர்கள் பூசித்து வரம் பெற்றதும்; ஈசான மூர்த்தி பூசித்துத் திக்குப் பாலகரானதும்; திருமால் மச்சாவதாரத்திற் பூசித்து அசுரரை அழித்து வேதத்தைக்கொண்டு வந்து கொடுத்ததும்; வாமனர் மாவலியைச் சிறைவைத்து மறுபடியும் வந்து பூசித்ததும்;

திருமால் பூசித்து ஆலகால விடத்தின் வெம்மை நீங்கியதும்; இறைவி கழித்துவிட்ட உடற் சட்டையில் தோன்றிய கௌசிகை என்பவள் பூசித்ததும்; மாகாளன் என்னும் பாம்பு பூசித்து முத்தி அடைந்ததும்; முருகக் கடவுள், இறைவன் ஆணையை மறுத்த தீமையை நீக்குதற்குக் குமர கோட்டத்தில் இருந்து பூசித்ததும்; மார்க்கண்டேய முனிவரிடத்தில் வஞ்சனை எண்ணிய திருமால் பூசித்து அப்பாவத்தை நீக்கியதும்; ஐயனார்பூசித்து கணத்தலைமை பெற்றதும்; இராமன் அரக்கரை அழித்து வந்து பூசித்ததும்; இந்திரன் சாரதியாகிய மாதலி என்பவன் பூசித்ததும்; திருமால் பூசித்துப் பாம்பு உருவத்தை நீக்கிக் கொண்டதும்; கச்சிமயானப் பெருமான் உலக முழுதும் தீயில் ஒடுக்கிப் பண்டாசுரனை அழித்ததும்; இறைவன், அழிந்த உலகத்தை மறுபடியும் உண்டாக்குவதற்கு மாவடியில் தோன்றி இலளிதா தேவியாரை உண்டாக்கி, அவர் கண்ணிலிருந்து மும்மூர்த்திகளைப் படைத்து முத்தொழிலைத் தந்து, அத்தேவியாரும் மும்மூர்த்திகளும் வழிபட வீற்றிருக்கின்றதும்; இறைவி மந்தர மலையில் இறைவன் திருக்கண்களை மூடியதும்; அதனால் உலகமெல்லாம் இருளில் மூழ்கியதும்; இறைவி அப்பாவம் நீங்க இறைவனைப் பூசித்தற்கு இறைவன் அனுப்பக் காஞ்சியம்பதியை அடைந்ததும்; அடைந்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பதும்; பின்னர் அவ்விறைவி விண்டு வீச்சரம், அகத்தீச்சரம், மத்தள மாதவீச்சரங்களை வணங்கிச் சென்று மாவடியில் எழுந்தருளியுள்ள பெருமானைப் பூசித்ததும்; இறைவன் அப்பூசைக்கு இடையில் கம்பையாற்றைப் பெருக்கெடுத்து வரச் செய்ய, இறைவி அதுகண்டு மனம் பதைத்து இறைவனைத் தழுவிக் கொண்டதும்; இறைவன் தனத்தழும்பும், வளைத்தழும்பும் பூண்டு இறைவிக்கு முன்னே வெளிப்பட்டுப் பலவரங்கள்கொடுத்ததும்; இறைவி கவுரநிறம் பெற்றபின்னர் பெருமான் திருமணம் புரிந்ததும்; இறைவியினுடைய கறுத்த உடற் சட்டையில் தோன்றிய காளி, அசுரர்களை அழித்து இறைவன் திருவருள் பெற்றதும்ஆகிய வரலாறுகளும், காஞ்சியிலுள்ள அற்புதங்களும் ஒழுக்க நெறியும் சிவ புண்ணியப் பயனும், இப்புராணத்துட் கூறப்படும்.

மற்றொருவகையாகக் கூறப்படுகின்ற உமாதேவியார் திருக்கைலையில் சிவபெருமானுடைய திருக்கண்களைப் புதைத்துக் காஞ்சியில் இறைவனைப் பூசித்ததும், அந்தர்வேதியின் வரலாறும், கரிகாற் சோழன் பெருமையும், தீர்த்தம் மூர்த்திதலம் என்னும் மூன்றனுடைய சிறப்பும் இக்காஞ்சிமா மான்மியத்துள் வைத்துக் கூறப்படும்.

---

# புராண வரலாற்றுப் படலம்*

நைமிசாரணியர் சிறப்பு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மிடல்கெழு தவத்தோர் வேள்விசெய் வினைக்கு வேண்டிய வேண்டியாங் குதவக், கடவுளான் பயிலுங் காட்சியால் அவிஊண் கைக்கொளத் துதைந்தவா னவரால், தொடர்வுறும் ஓமப் புகை தழீஇச் சுரும்பர் உளர்தராப் பன்மலர்ப் பொழிலால், அடர்தருங் காமர் கற்பக வனமே யாயது நைமிசா ரணியம். க

தாதவிழ் கடுக்கை நறுந்தொடை மிலைச்சுந் தம்பிரான் அடியல துணரா, மாதவர் இயற்று மகவினை சிதைப்ப வருகருந் தயித்தியர் அவர்தங், காதுவெஞ் சாப வலிக்குடைந் தோடுங் காட்சியே கடுக் கும்அம் மகத்தீ, மீதுயர்ந் தண்டச் சுவர்த்தலம் உரிஞ்ச விசும்பெழு நறும்புகைப் படலை. உ

கருந்திரை அளக்கர் அகடுடைத் தெழுந்து கனையிருள் பருகு வெங் கதிரோன், இருந்தவர் வேள்விக் களத்தவிப் பாகம் ஏற்பவந் தணுகுவோன் மான, மருந்தெனக் கிளைத்து வானுற நிவந்த வளம் பொழில் கிளைகளைக் கரத்தால், திருந்துற ஒதுக்கிக் குனிந்துபுக் குலாவிச் சேணிடைப் போய்நிமிர்ந் துறுமால். ௩

---

*இது புராணம் வந்த வழியைச் சொல்லுவது.

க. மிடல்கெழு - வலிமை பொருந்திய. கடவுள் ஆன் - காமதேனு. துதைந்த - நெருங்கிய. தழீஇ - பொருந்துதலால். சுரும்பர் - வண்டுகள். உளர்தரா - சஞ்சரியாத. காமர் - அழகு. காமதேனுவும், தேவர்களும், வண்டு மொய்க்காத சோலைகளும் இருத்தலால், நைமிசாரணியம் தேவ லோகத்திலுள்ள கற்பக வனம்போலும் என்பதாம். ஓமப்புகையால் வண்டு கள் மொய்த்தில என்க.

உ. தாது - மகரந்தம். கடுக்கை - கொன்றை. தொடை - மாலை. மிலைச்சும் - சூடுகின்ற. தயித்தியர் - அசுரர். காது - கொல்லுகின்ற, கொடிய. கடுக்கும் - ஒக்கும். உரிஞ்ச - உராய. விசும்பு - வானம்.

௩. அளக்கர் - கடல். அகடு - வயிறு. கனை - நெருங்கிய. மருந்து - சல்லியகரணி முதலிய மருந்துகள். நிவந்த - உயர்ந்த. சேண் - தூரம்.

சிறகர்வண் டிமிரும் வட்டவாய்க் கமலச் செழும்பொகுட் டரசு
வீற் றிருக்கும், மறைமுதற் கிழவன் முனிவரர் வேண்ட வளைத்த
னன் விடுத்தபுல் நேமி, இறவுரு நின்றும் ஆயிடை உறைவ தெனக்
கவின் காட்டிடுந் தேத்தீ, அறைதரச் செறிந்து நறவம்ஊற் றெடுக்
கும் அரும்பெறல் மதுவிறல் வலயம். ௪

விரும்பிய விடபந் தாங்குதோற் றத்தால் விளங்கெரி உருவினிற்
பூத்த, வரும்பணி கொண்ட காட்சியாற் பெரிய வரையவண் இருந்
தவ ராக, இரும்புவி உய்யக் கோடலால் யாரும் ஏத்திடும் பெற்றி
யால் உலவாப், பெரும்பெயர்க் கயிலைக் கடவுளை போலும் பிறங்
கொளி நைமிசக் கானம். ௫

திசைமுகன் உந்தி யுறவளை நேமி சேர்ந்திடுங் கொள்கையால்
என்றும், அசைவில்வா னவர்க்குப் புரைஅவி அமிழ்தம் அளித்த
லாற் பூமணம் பெறலால், வசைதபு காட்சிக் கருநிறக் கருவி மழை
முகில் மேனிவந் தழகாய், இசைதலாற் சார்ங்கம் ஏந்தியோன் நிகர்க்
கும் இணையிலா நைமிசக் காடு. ௬

---

௪. இமிரும் - ஒலிக்கின்ற. பொகுட்டு - தாமரைக் கொட்டை. புல்
நேமி - தருப்பைச் சக்கரம். தேத்தீ - தேனீ. நறவம் - தேன். இறல்
வலயம் - தேனடையாகிய வட்டம். பிரமன்முனிவர்களுக்குத் தவத்திற்குரிய
இடம் காட்டுதற்பொருட்டு உருட்டிய தருப்பைச் சக்கரம் போய் நின்ற
இடமே நைமிச வனமென்க. நேமி சம்பந்தம் - நைமிசம்.

௫. இச்செய்யுள் இறைவனுக்கும் நைமிசாரணியத்திற்கும் சொல்
லொப்புமை (சிலேடை). இடபந்தாங்கு தோற்றத்தால் - இடபமானது
தாங்குகின்ற காட்சியால்; இடபராசியைத் தாங்குகின்ற காட்சியால். எரி
உருவினில் - தீப்போன்ற உருவத்தில்; தீயின்நிறத்தைப் போல. அரும் பணி -
அரிய பாம்பு, அரும்பு அணி - அரும்புகளின் வரிசை. பெரியவரை - மகா
மேரு மலையை; பெரியோர்களை. இருந்தவர் ஆக - பெரிய வில்லாக; பெரிய
தவசிகளாக. உலவா - கெடாத. 'பெரும்பெயர்க்கடவுள்' என்பதற்கு ஆசிரியர்
சிவஞானபோதத்துள், 'மகாவாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற்கட
வுள்' எனப் பொருளுரைத்தமை காண்க. கானம் - காடு.

௬. இச்செய்யுள் திருமாலுக்கும் நைமிசாரணியத்திற்கும் சொல்லொப்
புமை. திசைமுகன் உந்தி உறவளை நேமி சேர்ந்திடுங் கொள்கையால் - நான்
முகன் உந்திக் கமலத்தில் பொருந்த, சங்கு சக்கரங்கள் வாய்ந்த தன்மையால்.
நான்முகன் செலுத்த வளைந்த தருப்பைச் சக்கரம் பொருந்திய தன்மையால்

குலவுநால் வாய்கள் மருவலால் அகலங் கொண்டமுந் நூல்வயங் குதலால், சலமற வேத மொழிதலால் வனத்துத் தாமரை இருக் கைமே வுதலால், பலபொறிச் சுடிகைப் பையராச் சுமந்த பரவை சூழ் புடவியே முதலா, மலர்தலை உலகம் முழுதும்ஈன் றளித்த வள்ளலாம் நைமிசப் புறவம். எ

முனிவர் கூட்டம்

புகலும்இவ் வனத்தில் வசிட்டன், வே தார ணியன், புலத் தியன், துரு வாசன், சுகன், வசுச் சிரவன், ஆணிமாண் டவியன், சுனப்புச்சன், சமுவர்த்தன், மணிமே-சகன், சுனச் சேபன், இரைக் குவன், சம்பு தற்பரன்*, ஆத்திரே யன், சௌ-நகமுனி, புலகன், ஆசுவ லாய னன், சம தக்கினி, சங்கன். அ

இரைவதன், குசுரு விந்தன், மா தேசன், இலிகிதன், பராச ரன், கற்கன், கிருது, அக் கினிபன், பருப்பதன், நாசி கேதன், நா ரதன், அசி கர்த்தன், -உருரு, விச் சுவாமித் திரன், குணி, பரத்து வாசன், உத் தாலகன், வாசச் - சிரவன், சாண் டிலியன், காசிபன், வாம தேவன், தாற் பியன், இர சனியே. கூ

கண்ணுவன் முதலாம் எண்ணரு முனிவர் கழிபெருஞ் சீர்த் தியர் மாசு, மண்ணிய மனத்தார் பசுபதி அடியார் வடிவெலாம்

---

புரை அவி அமுதம் - (நரை முதலிய) குற்றங்களைப் போக்குகின்ற அமுதம்; உயர்ந்த அவிசாகிய அமுதம். பூ-பூதேவி; மலர். மணம்-திருமணம்; வாசனை. மேனி வந்து - திருமேனிவந்து; மேலே உயர்ந்து. சார்ங்கம் - திருமால் வில்.

எ. இச்செய்யுள் பிரமனுக்கும் நைமிசாரணியத்திற்கும் சொல்லொப் புமை. குலவு - விளங்குகின்ற. நால்வாய்கள் - நான்கு வாய்கள்; யானைகள். அகலம் - மார்பு; விரிவு. முந்நூல் - பூணூல்; மூன்று வேதங்கள். வயங்கு தல் - விளங்குதல். சலம் - மாறுபாடு; பொய். வேதம் மொழிதலால் எனவும், ஏதம் ஒழிதலால் எனவும் பிரித்துரைக்க. ஏதம் - குற்றம். வனத்து - நீரிலுள்ள; காட்டில். தாமரை இருக்கை மேவுதலால் - தாமரை ஆசனத்தில் இருத்தலால்; தாவுகின்ற மரை என்னும் மிருகங்கள் இருத்தலால். சுடிகை - உச்சி. புடவி - பூமி.

அ. இச்செய்யுளிலும் வருஞ் செய்யுளிலும் ஆசிரியர், முனிவர்கள் பெயரை அடை மொழியின்றிக்கூறினமை வியக்கற்பாலது. *'தற்பர' எ-ம் பா.

கo. கழி - மிகுந்த. மண்ணிய - கழுவிய. சண்ணித்த - பூசிய. அக்க மாலிகை - உருத்திராக்க மாலை. புண்டரம் - கீற்று.

நீறுசண் ணித்த, புண்ணியர் மும்மைப் புண்டர நிரையார் அக்கமா லிகையர்போர் விடையூர், அண்ணல்வாழ் தலத்திற் பற்றினோர் அன்னான் அருச்சனை இயற்றும்ஆர் வத்தார். க0

அங்கமும் மறையும் தெளிந்தவர் வேதம் அந்தித்த அறிவினர் விமலர், தங்கும்அஞ் செழுத்தே கிளப்பவர் பொறியைத் தடுத் துயர்ந் தவர்மக மனைவி, செங்கன லோடும் உறைபவர் தமைப்போற் சிற்றுயிர் அனைத்தையுங் காணும், பொங்குபே ரருளின் எல்லையர் இனையோர் பொலிவுற ஒழுங்குடன் குழும். கக

கறைமிடற் றிறையைக் கண்ணுறக் காணுங் காட்சியாங் கணிச் சியின் அல்லால், மறவினைக் கனிகள் மல்கிய உலக வாழ்வெனும் நச்சுமா மரத்தை, இறுமுறை காண்ப தரிதெனத் துணிந்தார் இதுபெறும் உபாயம்மற் றெவனென், றறிவினில் நெடும்போ தாய்வுழி அவருள் அருந்ததி கொழுநன்ஈ தறையும். கஉ

தவம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தவமே மேலாம் நெறியாகும் தவமே சிவனார் தமைக்காட்டும்
தவமே துறக்கம் அடைவிக்கும் தவமே நரனைத் தேவாக்கும்

---

கக. அங்கம் - வேதத்திற்கு உறுப்பாவன. அவை; சிக்ஷை, கற்ப சூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்னும் ஆறுமாம். அவை முறையே வேதங்களில் எடுத்தல் படுத்தல் முதலிய இசை வேறுபாட்டையும் எழுத்துச் சொற்பொருளியல்பையும், சொற் பொருளையும், காயத்திரி முதலிய சந்தங்களையும் விதிக்கப்படும் கருமங்களைச் செய்தற்குரிய காலங்களையும் உணர்த்துவனவாம். அந்தித்தல் - முடிவு செய் தல். கிளப்பவர் - சொல்பவர். மக - குழந்தை. மகமனைவி செங்கனலோடும் உறைபவர் என்றது வானப் பிரத்தர்களை.

கஉ. கணிச்சி - மழு, கோடரி. மறவினை - பாவச் செயல். மல்கிய - நிறைந்த. நச்சு மரம் - விடத்தன்மை யுடைய மரம். கணிச்சி, கனி, மரம் என்பன உருவகம். இறு முறை - அழிகின்ற முறை. இதுவென்றது இறை வனைக் காண்டலை. மற்று, அசை நிலை. அருந்ததி கொழுநன் - வசிட்டன். அறையும் - சொல்வார்.

கங. தவமென்றது ஈண்டு, மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டென விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயிலிலும்

தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்கன் அயனும் ஆக்குவிக்கும்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ என்று சாற்றினனால். கங

அறம்

அறமே மறங்கள் முழுதழிக்கும் அறமே கடவுள் உலகேற்றும்
அறமே சிவனுக் கொருவடிவ மாகும் சிவனை வழிபடுவோர்க்
கறமே எல்லாப் பெரும்பயனும் அளிக்கும் யார்க்கும் எவ்விடத்தும்
அறமே அச்சந் தவிர்ப்பதென அறைந்தான் சாதா தபமுனிவன். கச

கொடை

கொடையே எவர்க்கும் எப்பேறுங் கொடுக்கும் நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியின் ஒழுகச் செய்யும் குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும் குலவும் பூதம் அனைத்தினையுங்
கொடையே புரக்கும் என்றுள்ளங் கொள்ளப் புகன்றான் கவுதமனே

வாய்மை

மெய்யே சிறந்த பெருநலமாம் மெய்யே எவையும் நிலைபெறுத்தும்
மெய்யால் அழல்கால் கதிர்பிறவும் தத்தந் தொழிலின் விலகாவாம்

மழை பனிகளில் நீர் நிலையிலும் நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்குவருந் துன்பங்களைப் பொறுத்தலும், பிறவுயிர்களுக்கு உறுகண் செய்யாது ஓம்புதலுமாகிய பசு புண்ணியங்களையே, ஞானம் வாயிலாக வீடு பயக்கும் சரியை கிரியை யோகமாகிய சிவ புண்ணியங்களையன்று, மேல் சூத முனிவரால் சிறந்த உபாயமல்லவென விலக்கப்படுவன அவைகளே ஆகலானென்க. துறக்கம் - சுவர்க்கம். வலாரி - இந்திரன். சார்ங்கன் - திருமால். "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் - ஈண்டு முயலப் படும்" (குறள். உசரு.) என்றதனை ஒப்பு நோக்குக.

கச. ஈண்டு அறமென்றதும் பொது வகையாற் பசுக்களை நோக்கிச் செய்யும் நற்செய்கையும், நற்சொல்லும், நற்சிந்தையுமென்னும் இவற்றை. மறங்கள் - பாவங்கள். 'அறமே சிவனுக் கொரு வடிவ மாகும்' என்றதனை, "அறவாழி யந்தணன்" (குறள். அ.) என்பதனாலும், அறம் உறுதிப் பொருள் என்பதை, "சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங் - காக்க மெவனோ உயிர்க்கு" (குறள். கக.) என்பதனாலும் அறிக.

கரு. கொடை - கொடுத்தல். ஈகை சிறந்த தென்பதை, "மேலுலகம் - இல்லெனினும் ஈதலே நன்று" (குறள். உஉஉ.) என்பதனாலறிக.

கசு. மெய் - உண்மை, வாய்மை. இதன் சிறப்பை, "யாமெய்யாக்

மெய்யே எவைக்கும் இருப்பிடமாம் மெய்யே மெய்யே சிவமாகும்
மெய்யே பிரம பதமுமெனப் புகன்றான் வினைதீர் காசிபனே. கசு

வேள்வி

எச்சம் ஒன்றே இருமையினும் மேலாம் இமையோர்க் குவப்பாவ
தெச்சம் ஒன்றே மகத்திறையாம் எம்மான் விழையப் படுவதுவும்
எச்சம் ஒன்றே நனிசாலச் சிறந்த பொருளும் இருங்கரும
எச்ச நிகர்வே றில்லையெனப் பரத்து வாசன் இயம்பினனால். கஎ

மகவு

மகவே மேலாங் கதியாக்கும் மகவான் உலகந் தனைவெல்லும்
மகவின் மகவான் முடிவின்மை எய்தும் மகவின் மகவளித்த
மகவான் மேலைப் பதமுறுந்தென் புலத்தார் கடனை மாற்றுவதும்
மகவான் அன்றி யில்லையென வகுத்தான் தெரித்துக் கண்ணுவனே.

துறவு

துறவே அறங்கள் எவற்றினுக்கும் பெரிதாம் விடையூர் தோன் றலுக்கும், துறவே உவகை வரச்செய்யும் துறவே அயன்மால் உலகளிக்கும், துறவே ஈச னிடத்திருத்தும் எவரும் மேலாச் சொல்லுவதும், துறவே யாமென் றெழுந்துநின்று சொற்றான் சைவத் துருவாசன். கசு

---

கண்டவற்றுள் இல்லை எனைத்தோன்றும் - வாய்மையின் நல்ல பிற" (குறள். ௩௦௦) என்பதனை லறிக.

கஎ. எச்சம் - வேள்வி; இது யஜ்ஞமென்னும் வடசொல் திரிபு. இருமை - இம்மை மறுமை. வேள்விக்கு இறை சிவபெருமான் என்பதை, இப்புராணம் சிவாத்தான படலத்தில் உகூ ஆம் செய்யுளிலும் காண்க.

கஅ. இச்செய்யுளில், தமது மக்களாலும், தமது மக்கள் பெற்ற மக்களாலும்,அவர்கள் மக்களாலும்வரும் பயன் கூறப்படுகிறது. மகவான் உலகம் - இந்திரனுலகம். முடிவின்மை - அழிவில்லாத இன்பம். இது சுவர்க்க போகத்தைக் குறித்தது. மேலைப்பதம் - வீடு. "எழுபிறப்புந் தீயவை தீண்டா பழி பிறங்காப் - பண்புடை மக்கட் பெறின்" (குறள். சூஉ.) என்றமை காண்க.

கசு. துறவு - யான், எனது என்னும் இருவகைப் பற்றுக்களின் நீங்குதல். யான் என்பது உடம்பு. எனது என்பது மனைவி மக்கள் முதலிய உயிர்ச்சார்பும், செல்வம் முதலிய பொருட் சார்புமாம். "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க் - குயர்ந்த உலகம் புகும்" (குறள். ௩சசு.) எனத் துறவின் சிறப்புக் கூறப்பட்டமை காண்க.

### சூத முனிவர் வரவு

ஷை வேறு

இன்ன வாறுபன் முனிவரும் இயம்பினர் பிணங்குழி இவர்ஈட்டு
நன்னர் வான்தவங் கொணர்ந்தென ஆயிடை நணுகினான் விடைஊரும்
என்னை ஆளுடை இறையடி தைவரும் இடையறாத் தியானத்தான்
பன்னு மெய்த்தவப் பராசரன் பயந்தருள் பண்ணவன் மாணாக்கன்.

விளங்கு நீற்றொளி கதிர்செய வீங்கிருள் அக்கமா லிகைவீசும்,
வளங்க னிந்தபொன் மேனியான் புண்ணியம் வடிவெடுத் தென
வந்தான், துளங்கு றாதுபர் புராணமுற் றளந்தறி தொல்லையோன்
அமரர்க்காக், களங்க றுத்தவன் உண்மைதேர்ந் துயிர்க்கெலாங்
கருணைகூர்ந் தருள்சூதன். உக

### முனிவர் வினவுதல்

புக்க சூதனை முனிவரர் யாவரும் பொங்கிய பெருங்காதல்
மிக்க ஓகையின் எதிர்கொடு பூசனை விதிபுளி வழாதாற்றித்
தக்க ஆதனத் திருத்தினர் வினவுவார் தறுகண்ஐம் புலவாழ்க்கை
ஒக்க நீப்பயாம் முன்னரே அருந்தவம் உஞற்றினம் அதனாலே. உஉ

வென்றி வெள்விடைப் பிரானடி காண்பதே வீடுபேற் றினுக்
கேது, என்று தேறினம் காண்பதற் குபாயம்மற் றிதுவெனத்
தெளிகில்லேம், ஒன்ற லாதன வேறுவே றுரைத்தனம் உயங்கினம்
பிணங்குற்றேம்*, மன்ற கண்டிலேம் துணிவுமெய் யுணர்வினான்
மலக்குறும் பறச்செற்றோய். உங

---

உ0. பிணங்குழி - மாறுபடும்போது. ஈட்டும் - தேடிய. நன்னர் வான் தவம் - நல்ல பெரிய தவம். தைவரும் - தடவுகின்ற "நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும்" (பெரிய. நா. க௪0.) என்னும் அருள்மொழி இங்குக் கருதத் தக்கது. பயந்தருள் - ஈன்றருளிய. பண்ணவன் - முனிவர், வியாசர். அவர் மாணாக்கர் என்றது சூதமுனிவனை.

உக. வீங்கு - மிகுந்த. அக்கமாலிகை - உருத்திராக்க வடம். அக்கமாலிகை இருள்வீசும் என்க. துளங்குதல் - அசைதல். துளங்குறாது - அசைதலில்லாமல், உறுதியாக என்றபடி. தொல்லையோன் - பழையோன். களம் - கண்டம்.

உஉ. ஓகை - மகிழ்ச்சி. தறுகண் - கொடுமை.

உங. உயங்கினம் - வாடினோம். மன்ற - நிச்சயமாக. குறும்பு - தீமை. செற்றோய் - அழித்தவரே. துணிவு கண்டிலேம் என்க. * 'பிணக்குற்றேம்' எனவும் பாடம்.

எங்கள் பாக்கியப் பயனென நீஇவண் எய்திடப் பெற்றேம்யாம்
கொங்கு யிர்த்ததார்த் துளவனே வியாதன்அக் குலமுனி அருளாலே
அங்கண் மூவறு புராணமும் உணர்ந்தனை அறமுதல் பொருள்நான்கிற்
பொங்கு சீர்த்தியோய் நீஅறி யாதது புவனம்மூன் றினுமில்லை. உச

ஆத லாற்பல நெறியினுந் துணிந்தவா றரன்திரு வடிகாண்டற்
கேது எங்களுக் கருளுதி வறிதுநீ ஏகலை உயர்வானிற்
பாத வம்பொரப் பெரியவர் காட்சியும் பயன்படா தொழியாதால்
சூத மாதவ என்றலும் அகங்களி துளும்பிஒ துவன்சூதன். உரு

சூதமுனிவர் விடை கூறுதல்

மொழியும் இப்பொருள் மூவறு புராணத்துட் காந்தமூ விரு கூற்றிற், கழிவில் சீர்ச்சனற் குமாரசங் கிதையினிற் காளிகா கண்டத்தில், தழுவு தீர்த்தமான் மியத்தது நந்திபாற் சனற்குமா ரன் கேட்டங், கழிவி லாஅருள் வியாதனுக் குரைத்திட அவனெனக் கருள்செய்தான். உசு

நீயிர் பேரறி வாளராய் விரதநன் னெறியினிற் பிறழாமே, தூய மெய்த்தவ வலியினாற் பழமலத் துகளறுத் துமையோர்பால், நாய னாரருள் பெற்றுளீர் ஆதலின் நன்றும்இப் பொருள்உங்கட், கேய ஓதுவன் ஒருங்கிய மனத்தொடுங் கேண்மின்க ளெனவோ டும். உஎ

அண்டர் நாயகன் நடம்புரி நாயகன் அடியவர் உளக்கோயில், கொண்ட நாயகன் திருவடித் தரிசனங் கூடுதற் குபாயஞ்சீர், மண்டு

உரு. பாதவம் - மரம். வானில் பாதவம் - கற்பகத்தரு. பொர - ஒப்ப. துளும்பி - மீதூர்ந்து.

உசு. காந்த புராணத்தின் மூவிருகூறுவன: சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விண்டு சங்கிதை, சங்கர சங்கிதை, சூத சங்கிதை என்னும் ஆறுமாம். இவற்றுள் இங்குக் கூறப்பட்ட சனற்குமார சங்கிதையில் காளிகா கண்டமே காஞ்சிமான்மியங் கூறப்பட்டுள்ள இட மென்க.

உஎ. துகள் - குற்றம். நாயனார் - தலைவர். ஏய - பொருந்த.

உஅ. இருமை - இரண்டு. கூடுதற்கு உபாயமும், தாம் பெற்றவாறும் என்னும் இரண்டும். புலப்பட - அறிய. இறைவனுக்கு அடியவர் உள்ளமே கோயில் என்பதை, "காலையும் மாலையும் கைதொழு வார்மனம் — ஆலயம்

தீர்க்கமான் மியத்துநீ பெற்றடுதெவ் வாறெனக் கடாவுற்ற, பண்டை மெய்த்தவர்க் கிருமையும் புலப்படப் பகரலுற் றனன்சூதன். உஅ

ஆகத் திருவிருத்தம் - ௩ருஎ.

## உரை நடை.

நைமிசாரணியமானது, தன்னிடத்தில் தவசிகளுக்கு உதவி செய்தற்காக வுள்ள காமதேனுவும், அவிசை ஏற்றுக் கொள்ளுதற்கு நெருங்கி வரும் தேவர்களும், இருத்தலாலும், ஓமப்புகை பொருந்தியதனால் வண்டுகள் மொய்க்காத பூஞ்சோலைகளை உடைமையாலும் தேவலோகத்திலுள்ள கற்பக வனமே போலும். அவ்விடத்தில் முனிவர்கள் செய்யும் வேள்விப் புகை வானத்திற் செல்லுவது, அவ்வேள்வியை அழிக்க வரும் கறுத்த அசுரர்கள், அம்முனிவர்கள் இடும் கொடிய சாபத்திற்குப் பயந்து ஓடுவது போலும். சூரியன் அவ்வனத்திலுள்ள உயர்ந்த சோலைகளின் கிளைகளைக் கிரணமாகிய கைகளால் ஒதுக்கி அவிப்பாகத்திற்கு வருவான் போல உள்ளே புகுந்து, அதனைத் தாண்டித் தூரத்திற் சென்று உயர்ந்து செல்வான். அங்குத் தேனடைகள் இருப்பது, முன்னே பிரமதேவன் முனிவர்கள் பொருட்டாக உருட்ட வந்து தங்கிய தருப்பைச் சக்கரம் இன்றும் இருப்பது போலும்.

இன்னும் அவ்வனமானது சொல்வன்மையுடையவர்கள் சொற்பொதுமையால் இறைவனுக்கும், திருமாலுக்கும், பிரமனுக்கும் நிகராகக் கூறுதற்குரிய வனங்களை யுடையதாகும். இத்தகைய நைமிசாரணியத்தில் வசிட்டர், நாரதர், காசிபர், துருவாசர், கவுதமர், கண்ணுவர், முதலிய முனிவர்கள் பலரும் ஒருங்கு கூடியிருந்து, பாவச்செயல்களாகிய பழங்கள் நிறைந்த உலக வாழ்வாகிய நச்சு மரத்தை, சிவபெருமானைக் காணுதலாகிய கோடரியாலன்றி அழித்தல் இயலாதென்று தெளிந்தவர்களாய், அவ்விறைவனைக் காணுதற்கு உபாயம் யாதென்று ஆராய்வாராயினர்.

அப்போது வசிட்டர் தவமேசிறந்ததென்றும், சாதாதபர் அறமே சிறந்ததென்றும், கௌதமர் ஈகையே சிறந்ததென்றும், காசிபர் உண்மையே சிறந்ததென்றும், பரத்துவாசர் வேள்வியே சிறந்ததென்றும், கண்ணுவர் சந்ததியே சிறந்ததென்றும், துருவாசர் துறவே சிறந்ததென்றும் இவ்வாறு பலரும் பலவகையாகக் கூறி மாறுபடுகின்றபோது சூதமுனிவர் அவ்விடத்திற்கு வந்தனர். அவரை அம்முனிவர்கள் எதிர்கொண்டழைத்து உபசாரங்கள் பல

---

அநர் அரநெறி யார்க்கே," (திருமு. ச. பதி. கஎ. அ.) "நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்" (திருமு. ரு பதி. உ. க.) என்றற் றொடக்கத்து ஆசிரியத் திருமொழிகளா லுணர்க.

வும்செய்து இருக்கவைத்து, நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறி, நீர்அறியாதது மூவுலகத்தினும் இல்லை; ஆகையால், இறைவன் திருவடியைக் காணுதற்குரிய உபாயத்தை எங்களுக்குக்கூறுதல்வேண்டும்; கற்பகத்தருவை அடைந்தவர்கள் பயன் அடையாதிரார்கள்; அதுபோலவே பெரியோர் தரிசனமும் பயனின்றி யொழியாது' என்று பலவாறு கேட்டுக்கொண்டனர். அதற்குச் சூதமுனிவர் மகிழ்ச்சி மிகுந்து கூறுகின்றார்;

'முனிவர்காள், நீங்கள் கேட்ட இப்பொருள் பதினெண் புராணத்துள் காந்தபுராணத்திலுள்ள ஆறு சங்கிதைகளில் சனற்குமார சங்கிதையில் காளிகா கண்டத்தில் தீர்த்தமான்மியத்தில் உள்ளது. அதை, சனற்குமார முனிவர் நந்திதேவரிடத்தில் கேட்டு வியாசமுனிவர்க்குச் சொல்ல, வியாசமுனிவர் எனக்கு அருளிச்செய்தார்; அதனைத் தவத்தால் தூயராகிய உங்களுக்குக் கூறுகின்றேன்; ஒருமித்த மனத்தோடுங் கேட்பீர்களாக' என்றார்.

உடனே முனிவர்கள், 'முனிவரரேறே, இறைவன் திருவடியைக் காணும் உபாயமும், அதனை நீர் தீர்த்த மான்மியத்துப்பெற்ற வரலாறும் கூறுவீராக' என்று கேட்க, அவ்விரண்டையும் சூதமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

---

# சனற்குமாரப் படலம்

### மகாமேருச் சிறப்பு

#### எழுசீரடி யாசிரிய விருத்தம்

தொடுகடல் வரைப்பின், மன்பதைத் தொகைகள் சோழன்மீ
னவனென ஈண்டிப், படர்பொலங் குவைகள் கவர்ந்துறு வண்ணம்
பரிந்துகாப் பவரென அசுரர், கடவுளர் இயக்கர் சித்தர்கந் தருவர்
கின்னரர் சாரணர் பிறரும், உடனுற நெருங்கிப் போற்றமூ வுல
கம் உருவிமேல் நிவந்தது மேரு. க

சேர்ந்தன முழுதுந் தன்நிற மாக்குஞ் செய்கையால் தனக்கின
மாகிச், சார்ந்தமா ணிக்க வண்ணர்வு கம்பர் தமக்கலால் வணங்கிடா
தாகி, வார்ந்தபல் கோளும் நாள்களும் நாளும் வலம்வர இராப்பகல்

---

க. தொடு - (சகரரால்) தோண்டப்பட்ட. மன்பதை - மக்கட் பரப்பு. மீனவன் - மீனக் கொடியுடையவன், பாண்டியன். எனவென்பதைச் சோழனென்பதனோடுங் கூட்டுக. இவ்விடைச்சொல்பன்மை குறித்து நின்றது. ஈண்டி - நெருங்கி. நிவந்தது - உயர்ந்தது. காப்பவரெனப் போற்ற என்றது தற்குறிப் பேற்றம்.

உ. வார்ந்த - ஒழுகிய, உலாவுகின்ற. கோள் - கிரகம். நாள்கள் - நாண் மீன்கள். ஆசை - திக்கு. தமனியம் - பொன்.

விளக்கி, நேர்ந்தபே ராசை எட்டையும் பகுத்து நின்றதத் தமனியக் குன்றம். உ

எண்சீரடி யாசிரிய விருத்தம்

நயக்கும் மற்றிதன் ஒளிபரந் திமையோர் நாடு பொன்னிறம் படைத்ததென் றெவரும், வியத்த குங்கிரி மணிபல வான்றி மீது நின்றிழி முழங்குவெள் ளருவி, வயக்க மாண்டமுப் புரிசையன் றிறுத்த வள்ளல் பூட்டுவிட் டிருத்திய சிலையின், இயக்கம் மேவுபல் பொறியபன் னகநாண் இரைந்து கொண்டொளிர் தொடக்கமே ஒக்கும். ௩

மலைஎ வற்றையுஞ் சிறகரி வலாரி வயங்கெ டப்பொரு தழித்த வன் வணக்குஞ், சிலையி னைப்பறித் தூங்குவைத் தென்னத் திவலை இந்திர திருவிலைக் காட்டும், அலைதி ரைப்புனல் அருவிசூழ் மேரு அம்பொன் மாற்றினில் அதிகமா யதுதான், நிலைபெ றத்தவர் எண்ணிலர் குழீஇச்செய் நிறைத வக்கனல் கதுவலிற் போலும். ௪

சதசிருங்க மலைவளம்

தடாத பேரொளித் தமனியம் பழுத்த தண்ண ருச்சுனைக் குடுமியங் குவட்டு, வடாது மாமலைக் காந்தியின் பிறக்கம் மடங்கி டாதுபல் சுடர்விரித் தெழுந்த, கெடாத தோற்றமே உறழுமற் றதன்மேற் கிளர்சு ரும்பினம் பெடையொடு தழுவி, விடாது பண்படு பொழிற்சத சிருங்க வெற்பெ னத்திசை போயதொன் றுளதால். ௫

---

௩. நயக்கும் - விரும்பும். கிரி - மேருமலை; இங்குஏழனுருபு விரிக்க. வான்றி - வாரி. வயக்கம் - விளக்கம். மாண்ட - மாட்சிமைப்பட்ட. புரிசை - மதில். பன்னகம் - பாம்பு, வாசுகி. தொடக்கம் - இயைபு. அருவி, முழக்கத் துடன் ஒளிர்வது, வாசுகியாகிய நாண் இரைந்து கொண்டு ஒளிர்வது போலும் என்பது கருத்து. வாசுகிக்கும், வில் நாணிற்கும் இரையும் இயல்பு உண்டு.

௪. வலாரி - இந்திரன். வயம்-வெற்றி. ஊங்கு - அவ்விடத்தில். திவலை - நீர்த்துளிகள், நீர்த்துளிகள் பரவித் தெறிக்கும்போது சூரிய ஒளியால் வான வில் போன்ற வில் உண்டாதல் இயற்கை.

௫. தடாத - தடுத்தற்கியலாத. பிறக்கம் - விளக்கம். திசைபோயது - (தன்பெயர்) எங்கும் செல்லப் பெற்றது. தானே எட்டுத்திக்கும் அளாவிய தெனக் கூறுவாரும் உளர்.

குரவு, மாதவி, உழிஞை, மந்தாரம், குருந்து, பாடலம், பாலை, முந்திரிகை, மருது, போதி, பிடா, ஞெமை, ஓமை, வஞ்சி, காஞ்சி, குங்குமம், நமை, ஓடு, ஆண், அரை, தளா, உதி, செருந்தி, சே, எகினம், அகில், பலாசு, சந், தில்ல, மா, வில்லம், வரை, தமாலம், மாதளை, கணி, அதிங்கம், வகுளம், இன்னன நெருங்கின ஓங்கும். ௬

அன்றி ஞர்புரம் அழலெழ நகைத்த அண்ணல் சேவடிக் கன்பரு இயல்பின், துன்று மெய்த்தவ யோகியர்க் கெல்லாந் தூய நற்றவச் சாலைபு மாகித், தென்றல் ஊர்தரப் பூமணங் கஞலத் தெளிபு னற்சுனை அளவில கவின்று, பொன்றி டாக்கட வுளர்முத லோர்க்குப் போக பூமியும் ஆயதப் பொருப்பு. ௭

அங்கண் வாழ்தரும் அயன்மனைக் கிழத்தி அங்கி நாப்பண்நின் றருந்தவஞ் செயல்போல், கொங்கு லாந்துவர்ப் பங்கையத் திரை தேர் குறிப்பின் ஓதிமம் அசைவற இருக்கும், பொங்கு வெண்டிரைத்

---

௬. இச்செய்யுளில், குரவென்பது முதல் வகுளமென்பது காறும் மரப் பெயர்களை ஆசிரியர், அடைமொழியின்றிக் கூறினமை வியக்கத் தக்கது. குரவு - குரா. மாதவி - குருக்கத்தி, இஃது ஓர் கொடி. உழிஞை - சிறுபூளை. குருந்து-௩௩ஆம் பக்கம் பார்க்க. பாடலம் - பாதிரி. போதி - அரசு. வஞ்சி - ஒரு கொடி. அரை - ஒரு மரம், "பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும் - நினையுங்காலை அம்மொடு சிவணும்" எனத்தொல் காப்பியத்துக் கூறப்பட்டமை காண்க. (எழுத்து. உ௮௬.) 'நரை' எனப் பிரித்து அப்பெயருடையதொரு மரம் உளதென்பாரும், வெண்மையெனக்கொண்டு, தளாவுக்கு அடையாக்குவாரும் உளர். அவர், மோனைத்தொடை சிதைதலும், அடைகூறாது செல்லும் ஆசிரியர் போக்கும் நோக்கிற்றிலர். தளா - முல்லை. உதி - ஒதிய மரம். எகினம் - புளிய மரம். பலாசு - முருக்கு. சந்து - சந்தனமரம். இல்லம் - தேற்றாமரம். 'இல்ல மா' என்பதை இல்லம் மா எனவும், இல்லம் ஆ எனவும் பிரித்துப்பொருள் கொள்க. ஆ - ஆச்சாமரம். வில்லம் - வில்வம். வரை - மூங்கில். தமாலம் - பச்சிலை மரம். கணி - வேங்கை. அதிங்கம் - அதிமதுரம். வகுளம் - மகிழ். ஏனைய அவ்வப்பெயரே பெயராக உள்ளன.

௭. அன்றினர் - பகைவர்கள். கஞல - நெருங்க. கவின்று - அழகு படைத்து. பொன்றிடா - அழியாத - பொருப்பு - மலை.

௮. நாப்பண் - நடு. கொங்கு - வாசனை. துவர்ப்பங்கயம் - செந்தாமரை. ஓதிமம் - அன்னம். மாடு - பக்கம். பொதுவி - நெருங்கி. கடுக்கை - கொன்றை

தீர்த்தத்தின் மாடே புரங்க டந்தவர் வரம்அவட் குதவித், தங்கு காட்சியின் நறுமலர் பொதுளித் ததைக டுக்கைபொன் சொரிவன உடைத்தால். அ

மீது சந்திர சூரியர் கிரணம் விரவ லாமையின் ஒருபொழு தலர்ந்தோர், போது கூம்பும்அச் செய்கைஆங் கின்றிப் புரிமு றுக்குடைந் தென்றும்ஓர் இயல்பிற், கோதில் பன்மணிக் கதிரொளி வருடக் குளிர்ந்த லர்ந்திரண் டவத்தையுங் கடந்து, மாதர் வெண் பிறைக் கண்ணியர் அடிசேர் மாந்தர் ஒத்துள வளஞ்சுனை மலர்கள்.

வென்ற ஐம்புல வாழ்க்கையர் வடிவின் விளங்கு பூதியும் விரை கமழ் கடாத்த, குன்று போல்உயர் களிற்றுநீள் கோட்டுக் குலவு முத்தமும் வேய்உகு மணியும், துன்றி வானிலாக் கற்றைகால் வெண்மை தூய பொன்மையை விழுங்கிய தேயோ, அன்றி அவ்வரைப் பொன்மையே வெண்மை தனைவி ழுங்கிய தோஅது அறியேம். க0

இனைய சீர்பெறு சதசிருங் கத்தின் எண்ணி லாப்பெரு வளத்தன வாகி, நனைம லர்ப்பொழில் சண்பகம் சரளம் நரந்தம் தெங்குகோங் கரம்பைகள் உடுத்து, வனச நீள்சுனை மல்கிய பிரம

---

வெண்ணிறமுள்ள அன்னம் செந்தாமரையில் மீனைக் கவர்தற்கு அசைவற் றிருப்பது, சரசுவதி, தீயின் நடுவில் இருந்து தவஞ்செய்தல் போலும் என் பதாம்.

சூ. வருட - தடவ. மாதர் - அழகு. இரண்டு அவத்தை - உயிர்களின் சகலம் கேவல மென்னும் இரண்டு நிலைகள். இவை உயிர்கட்குக் கருவிக ளோடு கூடி நிற்றலாலும், அவற்றின் நீங்கி நிற்றலாலும் வருவன. இவை முறையே மலர்தலுக்கும் குவிதலுக்கும் உவமையாயின. கடந்து நிற்கும் நிலை, இறைவன் திருவருளானே உயிர், அறிவு விளங்கப் பெற்று நிற்கும் சுத்தா வத்தை.

க0. பூதி - திருநீறு. கடாத்த - மதத்தையுடைய. துன்றி - பொருந்தி. வால் நிலாக் கற்றை - வெள்ளொளித் திரட்சி. கால் - கக்குகின்ற. 'விழுங்கிய தேயோ விழுங்கியதோ அது அறியோம்' என்பது சேக்கிழார் பெருமானது நடை.

கக. சரளம் - தேவதாரு. நரந்தம் - நாரத்தை. அரம்பை - வாழை. வனசம் - தாமரை.

வனமொன் றுள்ளது மற்றதன் நாப்பண், தனைநி கர்ப்பது நான்மறைக் கிழவன் தானமாயது பிரமமா நகரம். கக

### சனற்குமார முனிவர் யோகுசெய் திருந்தல்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

பொற்பமர் இனைய நகர்க்கொரு பாங்கர்ப் பொங்கொளி மடங்கலே றொன்று, பற்பல மடங்கல் சூழவீற் றிருக்கும் பரிசெனத் தவளநீற் றொளியின், அற்புதக் கோலத் தறிஞர்சூழ்ந் தேத்த அருட்சனற் குமாரமா முனிவன், எற்பணிப் பெருமான் சரண்உளத் திருத்தி யோகுசெய் திருக்குநாள் ஒருநாள். கஉ

வைகறை எழுந்து கங்கைநீ ராடி வானவர் முனிவர்தென் புலத்தார், செய்கடன் உவப்பத் தெண்புனல் இறைத்து நியாசமுந் தியானமும் ஆற்றிப், பொய்களை விரசை அங்கியின் விதியாற் பூத்தநீ றங்கையின் எடுத்து, நைகரந் தீர்ந்த அன்பொடு நியாச நடைபெறு தியானமுன் னாக. கங

அடைவுறு பஞ்சப் பிரமமந் திரத்தால் அங்கியென் றற்றொடக் கத்தான், முடிவில்சா பால மனுக்கள்ஏ ழாற்றான் மூவிரண் டதர்வமந்

---

கஉ. மடங்கல் - சிங்கம். ஏறு - ஆண். எற்பு - எலும்பு.

கங. இச்செய்யுள் முதல் "ஐந்து மூவிடத்தும் அழகுற அணிந்து அருக்கற்குச் சந்திநீர் உதவி" என்பது காறும் நித்திய கன்மானுட்டானங் கூறப் படுகிறது. இவ்வனுட்டானம், சைவ முறையுமன்றி, வைதிக முறையுமன்றிச் சிறுபான்மை சைவமும், பெரும்பான்மை வைதிகமுங் கலந்துள்ள தென்க. இவ்விரண்டு முறையிலும் இப்போது வழக்கில் இல்லாத சில முறைகளும் காணப் படுகின்றன. இவற்றையும் ஆசிரியர் மொழி பெயர்ப்பு முறையாற் கூறினரென உணர்க. வைகறை என்றது பிராமி முகூர்த்த காலத்தை இது விடிய ஐந்து நாழிகையாம். தென்புலத்தார் - பிதிரர். புனல் இறைத்து - தருப்பணம் செய்து. அனுட்டானத்தில் முன்னே தருப்பணம் செய்தல் வைதிக முறையாகக் காணப்படுகிறது. நியாசம் - வைத்தல், தொடுதல். இது அங்க நியாசம் கரநியாசம் என இருவகைப்படும். அங்க நியாசம் இதயம், சிரசு முதலிய உறுப்புக்களையும், கரநியாசம் கைவிரல்களையும் அவ்வவற்றிற்குரிய மந்திரங்களால் முறைப்படி தொடுதல். நைகரம் - துன்பம்.

கச. விபூதியைப் பஞ்சப் பிரம மந்திரத்தால் மந்திரித்தல் சைவமுறை.

திரத்தால், வடிவுறும் இடக்கை வைத்துமுன் முக்கால் மந்திரித்
தறலினால் குழைத்துக், கடிகெழு சென்னி முதல்அடி காறும்
பிரமம்ஓர் ஐந்தையுங் கழறி. கச

நிறையஉத் தூளஞ் செய்துபின் திரியம் பகங்களால் நிகழ்த்தும்
அஞ்செழுத்தால், அறலின்ஆ சமித்துப் பின்னருந் திரியா யுடந்
திரி யம்பக மனுவான், முறையின்அஞ் செழுத்தால் புண்டர
மூன்றும் முச்சுடர் முக்குணம் மும்மை, மறைகள்மூ வுலகு முந்
நிறம் முத்தீ வடிவெனச் சிந்தையிற் கண்டு. கரு

ஐந்துமூ விடத்தும் அழகுற அணிந்தாங் கருக்கற்குச் சந்திநீர்
உதவி, இந்திர திசையை நோக்குபு மோனம் எய்திநல் லாதனத்
தும்பர்ப், பந்தமில் சுகஞ்சேர் இருக்கைய னாகிப் பஞ்சபூ தத்தை

---

அக்கினி முதலிய மந்திரத்தாலும், சாபால மந்திரம் ஏழாலும், அதர்வமந்திரம் ஆறினாலும் மந்திரித்தல் வைதிகமுறை.

கரு. நீரினாற் குழைத்துச் சர்வாங்கமும் பூசுவதும் திரியம்பக மந்திரத்தாலும் பஞ்சாட்சரத்தாலும் ஆசமனம் செய்வதும் வழக்கில் அனுட்டான முறையில் இருப்பதாகத் தெரியவில்லை. திரியாயுஷ மந்திரத்தாலும் திரியம்பக மந்திரத்தாலும் விபூதி யணிதல் வைதிக முறை. பஞ்சாக்கரத்தால் அணிதல் சைவமுறையாதல் வேண்டும். திரிபுண்டரங்களை முச்சுடர் முக்குணம் முதலியனவாகப் பாவித்தல் வைதிக முறை.

கசு. ஐந்து மூவிடம் - பதினைந்து இடம். பதினாறு, பன்னிரண்டு இடங்களில் திரிபுண்டரம் அணிதலே பெரும்பாலான வழக்கு. எட்டு இடங்களும் கூறுவதுண்டு. பதினாறு இடங்கள்: உச்சி, நெற்றி, விலாப்புறங்கள் அல்லது காதுகள் கழுத்து, மார்பு, தோள், உந்தி, முழங்கைகள், மணிக்கட்டுகள், முழங்கால்கள், முதுகு, என்பன: மணிக்கட்டுகளையும் முழங்கைகளையும் நீக்கப் பன்னிரண்டாம். அவற்றிலும் கழுத்து, முதுகு, விலாப்புறங்களை அல்லது காதுகளை நீக்க எட்டாகும். சந்திநீர் - சந்தியா காலத்தில் கொடுக்கப்படும் நீர். மோனம் - மௌனம். நல்லாதனம் என்றது தருப்பை முதலிய தூய பீடங்களை. சுகஞ்சேர் இருக்கை என்றது யோக நூலுட்கூறப்படும் பல வகை ஆசனங்களுள் எவ்வாறிருக்கில் சுகமாகுமோ அவ்வாறிருத்தல். இதனைத் தனித்ததொரு ஆசனமாகவும் கூறுவர். பஞ்ச பூதத்தை ஒன்றினொன் றொடுக்கி - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் இம்முறையில் ஒன்றின் ஒன்றாக ஐம்பூதங்களை ஒடுக்கி. ஆவி - உயிர். பிரமரந்திரம் - பிரமத்தை அடைதற்குக் காரணமான உச்சித்துவாரம். இது முதல் "ஆவியாம்

ஒன் றென்றின், உந்துற ஒடுக்கி ஆவியைப் பிரம ரந்திரத் தொடுக்கிய பின்னர். கசு

பாதகக் குழிசிப் புலேஉடல் தொடக்கைப் பவனபீ சத்தினல் உணக்கிப், போதர வன்னி பீசத்தால் வேவப் பொடித்தது வாரிபீ சத்தால், சீதமா நனைத்துத் தரணிபீ சத்தால் திரட்டிவே றுறுப் பெலாம் பகுத்து, மேதகச் சத்தி பீசத்தால் நிறைத்து மேயபின் விதியுளி உயிரை. கஎ

ஆசுதீர் உடம்பின் முன்புபோல் இருத்தி அங்கண்ஆ தாரபங் கயத்துத், தேசுறும் வன்ன ரூபியாய் நிறைந்த தேவியை முறை வழா தமைத்துப், பேசிரு பத்தோ ராயிரத் தறுநூ றுயிர்ப் பினைப் பிரித்தச பையினன், மாசறும் ஆனை முகப்பிரான் முதலோர் மகிழ்வுறும் படியவர்க் குதவி. கஅ

---

இலிங்கத் தந்தரியாக அருச்சனை விதியுளியாற்றி'' என்பதுகாறும் அகப்பூசை கூறப்படுகிறது. இது முதல் பூத சுத்தி.

கஎ. குழிசி - பாத்திரம். புலே - இழிவு. தொடக்கு - கட்டு. தொடக்கு உடலே என மாறுக. பவனம் - வாயு. பீசம் - பீசாட்சரம், வன்னி - அக்கினி. பொடித்து - நீறாக்கி. வாரி - நீர். தரணி - பிருதிவி. நிறைத்து - (முன்போலக்) குறைவற அமைத்து. சிவபூசை செய்வோர் அதற்குக் கருவியாய், இருவினைகளுக்குக் கொள்கலமாயும் பஞ்சபூத பரிணாமமாயும் உள்ள உடலேப் பாவனையால் அழித்து, மீள அருள் மயமாக உண்டாக்குதலே பூத சுத்தி எனப்படும். அது, இங்குக் கூறிய முறையிலும் பெறப்படுதல் காண்க. பிறவாறு செய்யும் பூதசுத்தியும் உண்டு. இதனுள், உணக்கி பொடித்து என்பவற்ருல் அழித்தலும், நனைத்து திரட்டி நிறைத்து என்பவற்ருல் உண்டாக்குதலும் கூறப்பட்டன.

கஅ. ஆசுதீர் உடம்பு - சுத்தி செய்யப்பட்ட உடம்பு. ஆதார பங்கயம் - மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களில் உள்ள தாமரைகள். வன்ன ரூபம் - எழுத்து வடிவம். இவை ஒவ்வோர் ஆதாரத்திலும் முறையே இதழுக்கு ஒன்ருக நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினறு, இரண்டாக உள்ள ஐம்பது எழுத்துக்களின் வடிவம். உயிர்ப்பு - சுவாசம். அசபை - அம்ச மந்திரம். இது பிராண வாயுவை அடக்கியும் விட்டும் நிற்கும். இதுவும் பிரணவத்தின் பரிணாமமே யென்க. மூலாதார மூர்த்தி விநாயகராதலால், 'ஆனைமுகப் பிரான் முதலோர் மகிழ்வுறும்படி அவர்க்குதவி' என்ருர். உதவுதல் - நிவேதித்தல்.

ஆவியாம் இலிங்கத் தந்தரியாக அருச்சனை விதிபுளி யாற்றி, மேவிய பின்னர்ப் புறத்தினுஞ் சென்னி முகமுதல் விளம்புறுப் பெல்லாந், தேவியை ஐம்பான் எழுத்துரு வான செல்வியை நலம் வர அமைத்துப் பாவுறும் பிராணு யாமங்கள் முறையிற் செய்து பின் பரிதிகா ணளவும். கக

அருமறைக் காயத் திரிப்பெரு மனுவை ஆயிரத் தெட்டுருக் கணித்துக், கருதிய யோக சித்தியின் பொருட்டுக் கணேசனை முன்புபூ சித்துப், பரிதிமண் டிலத்தும் தண்டிலந் தனினும் பகர்தரும் இலிங்கமூர்த் தியினும், மருவும்அங் குட்ட ரூபியாஞ் சிவனை வரன்முறை அருச்சனை புரிந்து. உ0

---

கக. ஆவி - உயிர். ஆவியாம் இலிங்கம், பிராண லிங்கம் ஆத்தும லிங்கம் எனக் கூறப்படும். இஃது உயிரையே இலிங்கமாகப் பாவித்தல். அந்தரியாகம், அகப்பூசை என்பன ஒரு பொருட் கிளவி. அந்தரியாக அருச்சனை - பொதுவும் சிறப்புமாகிய இருபெயரொட்டு. சென்னி - முகம் முதல்...... அமைத்து - சிரம், கண், காது முதலிய உறுப்புக்களில் அகாரம் முதலாகிய ஐம்பதெழுத்துக்களை வைத்துப் பாவித்து. பாவுறும் - பரவிய. பிராணயாமம் - மூச்சைத் தடுத்தல். பிராணன் - பிராண வாயு. ஆயாமம் - தடுத்தல். பரிதி - சூரியன். இங்குநின்றும் புறப்பூசை கூறப்படுகின்றது.

உ0. அருமை, மனுவை அடுக்கும். மறை - வேதம். காயத்திரி மனு - காயத்திரி என்னும் சந்தத்தையுடைய ஒரு மந்திரம். சந்தமாவது ஆரியப் பாடல்களின் அமைப்பு. இவ்வாரியச் சந்தங்கள் பிற்காலத் தமிழ்ப்பாடல்களிலும் வந்து விரவியுள்ளன. இம்மந்திரம் வேதங்களில் அரிதும் பெரிதுமாகக் கொள்ளப்பட்டதென்பார் 'அருமறைக் காயத்திரிப் பெருமனு' என்றார். காயத்திரி, அவ்வத் தேவர்களுக்குரியதாகப் பல்வேறு வகைப்படும். ஆயினும், பொதுவாகக் காயத்திரி என்பது, "தத்ஸவிதுர் வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோந: பிரசோத யாத்" என்னும் மந்திரத்தைக் குறிக்கும். இதன் பொருள்: 'எது எங்கள் ஞானேச்சாக் கிரியைகளைச் செலுத்துகின்றதோ அந்தத் தேவ சவிதாவினுடைய ஒளியைத் தியானிக்கின்றோம்' என்பது. இதனுள் தேவ சவிதா என்பதைச் சூரியனே எனவும், பர்க்கஸ் என்பதனை அதன் ஒளியே எனவும் பொருள் கொள்வர் வைதிகர். சைவர்கள் உருவகமெனக் கொண்டு, 'தேவசவிதா' என்பது சிவ சூரியன் எனவும், 'பர்க்கஸ்' என்பது சிவ சத்தியாகிய ஒளி எனவும் பொருள் கொள்வர். இவ்வாறே சிவா கமத்துட் கூறப்பட்டது. 'பர்க்கஸ்' என்பது தனி

யோகினைக் கூடித் தன்னுடை இதயத் தீசமென் றுரைக்குமெட் டிதழும், சேகறும் வயிராக் கியமெனும் பொகுட்டும் செப்புவா மாதிகே சரமும், ஆகிய கமலம் ஆவி ஆ யாமந் தலர்தரக் கண்டுமற் றதன்மேல், ஏகன்மும் மூர்த்தி யாகிமுக் குணங்கட் கிறைவன்மும் மண்டில ஈசன். உக

---

மொழியாய் நின்று ஒளிக்குப் பெயராதலே யன்றி; உலகங்களைப் பிரகாசிப் பித்தலால் ப எனவும், இச்சிப்பித்தலால் ர எனவும், ஒடுக்கித் தோற்று வித்தலால் க எனவும் பொருள் கொள்ளப் படுதலால், சிவ சத்தியின் வேறாகாத சிவனுக்குப் பெயரா மென்க. இவ்வாறு மைத்திராயணோப நிடதத்துக் கூறப்பட்டது. இதனால், 'பர்க்கஸ்' என்பது பராசத்திக்குப் பெயராமாறு காண்க. எனவே, 'எந்தச் சிவசூரியனுடைய (ஞானேச்சாக் கிரியா) சத்தியாகிய ஒளியானது எங்கள் ஞானேச்சாக்கிரியா சத்திகளைச் செலுத்துகின்றதோ அந்த முக்கியப் பொருளை (அஃதாவது அந்தப் பரா சத்தி யொளியை)த் தியானிக்கின்றோம்' என்பதே காயத்திரிக்குச் சைவர்கள் கொள்ளும் பொருளா மென்க. இக்கருத்து, "உயர் காயத்திரிக் குரிப்பொரு ளாகலின்" என இவ்வாசிரியர் பஞ்ச சுலோக மொழி பெயர்ப்பில்வந்திருத்தல் காண்க. இறைவனைத் தியானிக்காது சூரியனையே தியானிப்போரை நோக்கியே, "அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில் - அருக்கன் ஆவான் அரனுரு வல்லனோ - இருக்கு நான்மறை ஈசனையே தொழும் - கருத்தி னை நினை யார்கன் மனவரே" (திருமு. ரு. பதி. க00. அ) என்னும் திருமொழி எழுந்ததென்க. தண்டிலம் - ஓமாக்கினியைத் தாபித்தற்கு ஆசனமாக ஏற்படுத் தப்பட்ட இடம். இது ஆகு பெயராய் அக்கினியை உணர்த்தும். அங்குட்ட ரூபம் - பெருவிரலளவுள்ள வடிவம். சூரிய மண்டலம், அக்கினி, இலிங்க மென்பவற்றில் இறைவனை அங்குட்ட ரூபியாகப் பாவித்து அருச்சனை செய்தனர் என்பார், 'பரிதி மண்டிலத்தும் தண்டிலந்தனிலும் பகர்தரும் இலிங்க மூர்த்தியினும் - மருவும் அங்குட்ட ரூபியாஞ் சிவனை வரன் முறை அருச்சனை புரிந்து' என்றார்.

உக. ஈசம் - ஐசுவரியம். சேகு - கடினம், தீமை. வயிராக்கியம் - விடயங்களில் பற்றின்மை; இது விராகமென்பதினின்றும் வந்த தத்தி தம். கேசரம் - மகரந்தம். ஆவி ஆயாமம் - பிராணயாமம். இருதய கம லம்; அணிமா, மகிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா என்னும் எட்டு ஐசுவரியங்களே எட்டிதழ்களாகவும், வைராக்கியமே பொகுட்டாகவும், வாமை, சேட்டை, இரவுத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி என்னும் சத்தி

முக்கணன் புட்டி வருத்தனன் நீலப் பொன்மயன் முதிர்கறை மிடற்றன், தக்கஈ சானன் வன்னிரே தாநற் சத்தியன் அருவினன் உருவன், புக்கசீர்ப் புருடன் விச்சுவ ரூபன் புருட்டுதன் சிவன்புரு கூதன், வைக்குமெய்ச் சத்துப் பராபரம் பரமான் மாமகத் துயர் பரப் பிரமம். உஉ

என்றெடுத் துரைக்கும் பெயர்களின் பொருளாய் இயம்பரும் பரவெளி நாப்பண், நின்றதோ ரொளியின் பிழம்பினை இனைய

---

களே மகரந்தமாகவும் அமைந்துள்ளதெனவும், கீழ் நோக்கிக் குவிந்துள்ள அதனைப் பிராணாயாமத்தால் மேல் நோக்கி மலரச் செய்து எனவும், அதன்மேல் வைத்துத் தியானிக்கப்படும் இறைவன், ஏகனாய் மும்மூர்த்தியாய், முக்குணங் கட்கு இறைவனாய் மும்மண்டில ஈசனாய் இருக்கின்றானெனவுங் கூறியவாறும். ஆகி என்பதனை ஏகன் முதலியவற்றோடுங் கூட்டுக. இது முதல் மூன்று செய்யுள் குளகம். இங்குக் கூறிய இருதய கமல அமைப்பு, சிவஞானபோதம் சிவஞானசித்தியார் முதலிய மெய்கண்ட நூல்களிற் கூறப்படும் அமைப் புக்கு வேறு பட்டுள்ளது.

உஉ. புட்டி வருத்தனன் - அடியார்க்கு ஆற்றலை மிகச் செய்பவன். நீலப்பொன்மயன் (கிருஷ்ண பிங்களன்) - சத்திபாகமாகிய இடப்பக்கத்தில் கருமை நிறமும் தன்பாகமாகிய வலப்பக்கத்தில் பொன்னிறமும் உடைய வன். ஈசானன் - ஐசுவரியமுடையவன். வன்னிரேதா - அக்கினி மயமான விந்துவையுடையவன், திரவரூபமாய்க் கீழ் நோக்கும் இயல்புடைய மக்களுடைய விந்துப் போலாது, அக்கினி ரூபமாய் மேல் நோக்கும் இயல்புடைய விந்துவையுடைமையால் இறைவனை, வன்னிரேதா ஊர்த் துவரேதா என்பர். இது யோகியென்னுங் கருத்தை யறிவிக்கும். யோகியர்களும் தங்கள் விந்துவை யோகத்தால் அங்ஙன மாக்கிக்கொள்வர் என்க. விச்சுவரூபன் - உலக வடிவமாய் உள்ளவன். புருட்டுதன் - புருட னால் (ஆன்மாவினால்) துதிக்கப்பட்டவன். சிவன் என்பதன் பொருள் திருநெறிக்காரைக்காட்டுப் படலம் உகூஆம் செய்யுளுரையிற் காண்க. புரு கூதன் - முன் அழைக்கப்படுபவன். சத்து - கஙகூ ஆம் பக்கம் பார்க்க. பரா பரம் - மேலானதற்கும் மேலானது. இப்பொருட்குப் பராற்பரம் என்பது மருவியதாகக்கொள்வர். மகத்து பிரமம் என்பன பெரியது என்னும் பொருளுடையன. பரப்பிரமம் - மேலான பிரமம். மற்றையவை வெளி.

உங. மேலைச் செய்யுளிற்கூறிய பெயர்கள் சைவோபநிடதங்களில் ஆங்காங்குக்கூறப்படுவன என்பார், 'என்றெடுத்துரைக்கும் பெயர்கள்' என்றார்.

சத்தியி னோடுநேர் நோக்கி ஒன்றுதன் உயிரை அப்பெரும் பொருளோ டொன்றுவித் திருபகுப் பிறந்து, மன்றயோ கத்தின் அசைவற இருந்தான் மறையவன் ஈன்றருள் மதலை. உங

சிவபெருமான் திருவுலா

ஆங்கவன் அவ்வா றரியயோ கத்தின் ஆனந்த பரவச னாகி, ஓங்குபே ரறிவின் விழித்தனன் உறங்கும் எல்லையின் உம்பர்தம் பெருமான், மாங்குயிற் கிளவி மலைமக ளோடு மலர்தலை உலகுகாத் தளிப்பான், வீங்கிய கருணை ஊற்றெழுந் தரும வெள்விடை ஊர்தி மேல் கொண்டு. உச

உரகர்கந் தருவர் இராக்கதர் சித்தர் யோகிகள் ஆசைகாப் பாளர், நிரைமணி மோலி பாதுகை வருட நிகழும்ஆ காவுடன் ஊகூ, விரிபுகழ் ஏனை வீணைவல் லவரும் விருதெடுத் தோதியாழ் தடவ, இருவிசும் பகத்தின் இனிதெழுந் தருளி உலவினன் என்னைஆ ளுடையான். உரு

---

பரவெளி - பராசத்தி. இதுவே பரமாகாசம், சிதாகாசம், சிதம்பரம் எனக் கூறப்படும். இனைய என்பது பரவெளியைச் சுட்டிற்று. ஒன்றுவித்து - ஒன்றுபடுத்தி. இரு பகுப்பு இறந்து - தான் அது என்னும் வேற்றுமை யற்று. மதலை - புதல்வன். "(இ)ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்களம் - ஊர்த்துவ ரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாயவை நமோநம:" எனக் கிருஷ்ண யசுர்வேதம் தைத்திரிய ஆரண்யகம் பத்தாம் பிரபாடகம் இருபத்து மூன்றும் அநுவாகத்துக் கூறப்படுதல் காண்க.

உச. பேரறிவு - இயற்கையான முற்றறிவே வடிவமாகிய இறைவன். அவனிடத்தில் விழித்து உறங்குதலாவது, கருவிகளைக் கடந்து அறியாமை யடையாது அவனருளே கண்ணாகக் கண்டு, அவனிடத் தழுந்தி, உலக வாசனை அற்றிருத்தல். இதனைச் சாக்கிராதீத மென்பர். இதனியல்பைச் சிவப்பிரகாசம் முதலிய மெய்கண்ட நூல்களிற் கண்டுணர்க. இந்நிலையுடையவர்களையே, "பாசங்--கழித்த கண்களால் அரனுருக் கண்டுகொண் டுலகில் விழித்த கண்குரு டாத்திரி வீரர்" (திருவிளை. வாத. ௩அ.) என்று கூறுவர் என்க. விழித்தனன், முற்றெச்சம். எல்லை - பொழுது.

உரு. உரகர் - நாகர். ஆசை - திக்கு. மோலி - மகுடம். ஆகா, ஊகூ என்பவர்கள் கந்தருவர்கள். வீணை வல்லவர் - கந்தருவர்.

அதுசனற் குமாரன் யோகினில் வைத்த கருத்தினால் அறிந் திலனாகிக் கதுமென இருக்கை எழாமைகண் டெம்மான் கருணை கூர்ந் துமையவ ளோடு, விதுவணி சடிலத் தெம்மையே உளத்தின் விழைதர இருத்திமற் றெம்பாற், பொதுவற ஒருக்கு மனத்தினன் என்னைப் புரிவொடுங் கோயில்புக் கனனால். உசு

சனற்குமார முனிவர் சாபமேற்றல்

நந்திஎம் பெருமான் நோக்கினன் வெகுண்டு நலமிலா ஒட் டகமேபோல், அந்திலஎம் பிரானை இகழ்ந்திருந் ததனால் அவ்வுரு வாகெனச் சபிப்பச், சிந்தைகூர் முனியும் ஒட்டக மாகிச் செழு நிலத் துழிதரு காலை, முந்தைஞான் றியற்று நல்வினைப் பயனான் முன்னினன் கச்சிமா நகரம். உஎ

பிரமன் கச்சபேசரைப் போற்றல்

ஆயிடைக் கச்ச பேசனும் இறைவன் அமர்ந்தருள் கோயிலின் மாடே, காயும்ஐம் பொறியின் உலகெலாம் படைக்குங் கருத்தினான் மலரணைப் புத்தேள், தூயமா தவத்தின் இனிதுவீற் றிருக்குஞ் சூழலின் நணுகுத லோடும், தீயபா வத்தின் ஒட்டக வடிவாஞ் சிறு வனைக் கண்டனன் தாதை. உஅ

பாவடி நெடுங்கால் திரையெழு தோல்வாய்ப் பழியுடல் நெளிந்துநீள் கழுத்தின், யாவரும் இழிக்கும் ஒட்டக யாக்கை இள வலை நோக்கினன் றந்தோ, சேவுயர் கொடியான் அடித்தொழும் பாற்

உசு. கதுமென - விரைந்து. விது - சந்திரன். பொதுவற - ஒன்றற்கே உரிமையாகும்படி. ஒருக்கும் - ஒரு வழிப்படுத்திய. புரிவு - விருப்பம்; ஈண் டுக் கருணை மேற்று.

உஎ. அந்தில், ஆங்கு என்னும் இடப்பொருள் தருவதோர் இடைச் சொல். சிந்தை - ஈண்டுக் கவலை. கூர் - மிகுந்த. உழிதருதல் - திரிதல். ஞான்று - காலம். முன்னினன் - கருதினன், ஈண்டு அடைந்தனனெனப் பொருள் தந்தது.

உஅ. ஆயிடை - அவ்விடத்தில். மாடு - பக்கம். சூழல் - இடம்.

உகூ. பா அடி - பரந்த அடி. திரை எழு - திரை உண்டாகிய. திரை தல் - தசைகள் திண்மையின்றி நெகிழ்தல். இழிக்கும் - இழிவு படுத்தும். இளவல் - இளங்குமரன். தொழும்பு - தொண்டு. அந்தோ, ஆவ என்பன இரக்கக் குறிப்புகள். செய்கோ - செய்வேனோ.

றுந் திருவருட் குரியனும் இவனுக், காவளன் செய்கோ என்மகற்
கிதுவந் தடுத்ததெவ் வாறென எண்ணி. உகூ

யோகினைக் கூடி முன்நிகழ் வினைத்தும் உணர்ந்தனன் அவ்வினை
தவிர்ப்பான், ஆகம முறையாற் கச்சபே சன்பால் அடைந்துபூ
சனைசெய்தேத் தெடுப்பான், மாகர்போற் றிசைக்கும் இளம்பிறை
மோலி வள்ளலே உலகளித் தழிக்கும், ஏகனே ஆமை உருவொழித்
தரியை ஆண்டநின் இணையடி போற்றி. நூ0

காசிகே தாரம் புட்கரங் குருக்கேத் திரங்கடி நைமிசங் களி
னும், ஓசைகொள் காஞ்சி அதிகமென் றுரைப்ப துரைப்பிர மாண
மொன் றன்றால், ஈசனே நீயும் உமையுமே அல்லால் இந்நகர் படைத்
தவர் இல்லை, தேசுற யானே கண்ணுறக் கண்டு தெளிந்ததாம்
எந்தஊ ழியினும். நூக

புரியுநின் அருளால் உயர்ந்தவர் அனேகர் புரவுபூண் டெட்டுரு
வெடுத்தோய், வரிவிழி உமைபாள் மணந்தபே ரின்ப வடிவமே
இடும்பைநோய் அறுக்கும், கருணைவா ரிதியே இரங்கிடாய் எமக்குக்
களைகண்நீ யன்றிவே றில்லையென், றிருகணீர் சொரிய நெக்நெக்
குருகி ஏத்தினன் நாத்தழும் பேற. நூஉ

கச்சபேசர் காட்சி கொடுத்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திசைமாமுகன் வாழ்த்தொலி அஞ்செவியிற் சென்றேறலும்
ஆரருள் உந்துதலான், மிசைவானவர் பூதக ணம்புடையின் மிடை

---

நூ0. மாகர் - விண்ணவர். இறைவன் திருமாலினது ஆமை வடிவத்தைப் போக்கி ஆண்டமையை இப்புராணம் கச்சபேச படலத்திற் காண்க.

நூக. புட்காம் - ஒருதலம். கடி - விளக்கம், புதுமை முதலியவற்றுள் ஏற்பன கொள்க, ஓசை - புகழ். ஊழி - பிரளயம். காசி முதலியவற்றினும் காஞ்சி அதிகமென்பது ஆகமப் பிரமாண மாத்திரமன்று, யான் கண் கூடாகக் கண்டு அறிந்ததாகும் என்பதாம்.

நூஉ. புரவு - காத்தற்றொழில். எட்டுரு - ஐம்பெரும்பூதம், இருசுடர், உயிர் என்பன. இதனை, "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனுய மைந்தனே டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்" (திருவா - தோணே. ரு.) என்னும் அருளாசிரியர் திருமொழியா லுணர்க.

நூநூ. மிடைய - நெருங்க. வசை - நிந்தை. வேட்ட - விரும்பிய.

யப்பெரு மான்எதிர் நின்றருளி, வசைதீர்தர வேட்ட வரம்தரு
சேம் மைந்தாஉரை செய்கென வாய்மலர, இசைபாடினன் ஓகை
துளும்பிடநின் றிதுகூறுத லுற்றனன் வேதியனே. ௩௩

நின்றொண்டு வழாதவன் என்புதல்வன் நீடுந்தவ முற்று சனற்
குமரன், முன்றிண்சத கோட்டிடை நின்இருதாள் முன்னிச்சிவ
யோகு முயன்றுதவத், தொன்றும்பொழு தாயிடை நீவருதல்
உணர்ந்தானலன் நிட்டை கருத்துறலால், அன்றங்கருள் நந்தி சபித்
ததனல் அமர்ஒட்டக ஆக்கையன் ஆயினனே. ௩௪

பிரமன் நந்திதேவரை வேண்டல்

இன்றேஇது தீர்த்தரு ளென்னஇரந் தேத்தித்தொழ எந்தை
யும் எம்மடியார், நன்றேகொடு செய்தன யாவைஅவை நம்மால்வில
காஅத ஞன்மறையோய், பொன்றுதிது நந்தி தவிர்ப்பனெனப் புரி
வுற்றருள் செய்து மறைந்தனனல், அன்றேமல ராளி தவத்திறனல்
அங்குற்றருள் நந்தியை வேண்டுதலும். ௩௫

நந்திதேவர் கருணைகூர்தல்

நந்திப்பெரு மானும் மகிழ்ந்தலரோய் நங்கச்சப ஈசன் எதிர்ப்
படலால், அந்தப்பொழு தன்புதல் வன்பெறுசா பந்தீர்ந்தது ஆயி
னும் அன்பர்கள்பால், பந்தித்த பெருங்கரு ணைகரன்என் பதுநாட்டி
னன் எம்மிறை நின்புதல்வன், கந்தப்பொழில் சூழ்வட மேருவின்
அங் கண்ணெய்துக இவ்வுரு நீங்குமரோ. ௩௬

நவைதீர்ந்தபின் எம்அரு ளால்இவன்நம் மாணுக்கனு மாகி
நயந்துதவும், சிவதீக்கையை யுற்று விரிந்தகலைத் திரள்யாவும்
உறீஇச்சிவ ஞானமுணர்ந், தவமாற்றுவன் என்றருள் செய்தகல அல

ஓகை துளும்பிட - மகிழ்ச்சி மிகுதியாக. வேதியன் - பிரமன்.

௩௪. வழாதவன் - தவறாதவன். சதகோடு - சதசிருங்க மலை. கோடு, சிருங்க மென்பன ஒருபொருட் கிளவி.

௩௫. பொன்றுத - அழியாது. தவத்திறனல் அங்கு உற்றருளிய நந்தியை என்க.

௩௬. கருணைகரன் - அருளுக்கு உறைவிடமானவன்.

௩௭. நவை - குற்றம். நயந்து - விரும்பி. அவம் மாற்றுவன் - தீமையைப் போக்குவன். இவர்தல் - செறிதல். கணம் - தனது தேவ கூட்டம்.

ரோன்அவண் மைந்தனை அன்புறுதன், இவர்வுற்ற கணத்த ரொடும்
புதவிக் திப்பாலரு மாதவம் முற்றியபின். ௩எ

உயர்கச்சியில் ஒங்கு பலாசடியின் உறைகச்சப ஈசன் அருட்
கருணை, பயில்வுற்று முறைப்படி எவ்வுலகும் பண்டேயென நன்கு
படைத்தனன்மற், றியல்பின்வட மேருவின் நந்திபிரான் இருக்குநிலே
யத்தின் மலர்த்தலைவாழ், அயன்மைந்த ஞெடுஞ்செல் கணத்தவர்
அப் பெருமானடி ஏத்தி இயம்புவரால். ௩அ

நந்தி தேவநக்த சனற்குமார முனிவர் மாணுக்காதல்

வேதாஎமை ஏயினன் நீயிர்கள்போய் மேருப்புடை நந்தி மு
தற்குரவன், பாதாம்புயம் ஏத்திஇம் மைந்தன்அவன் மாணுக்கனு
மாம்படி சேர்த்திஇவண், போதீரென என்றருள் பெற்றவர்தாம்
போகத்தன் அருட்கணின் ஒட்டகமாம், கோதார்உரு நீத்தொளி
பெற்றவனை மாணுக்க னெனும்படி கொண்டனனே. ௩௯

வேறு

அன்னோன் அவன்பால் தீக்கைபுரீஇ வழிபா டாற்றி முழுதுணர்ந்
முன்னர்ப் புராணம் நியாயநூல் கரும முதல்நூல் தருமநூல் [தான்
மன்னு சிக்கை வழ்சந்தை வழங்கும் ஒன்பான் வியாகரணம்
பன்னும் எண்ணூல் முக்கந்தம் பலவும் முறையின் ஓதினுல். ௪௦

---

௩அ. பலாசு - முருக்கு. நிலேயம் - கோயில். 'இருக்குந் நிலேயத்தின்' எனப் பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

௩௯. வேதா - பிரமன். ஏயினன் - விடுத்தான். பாதாம் புயம் - திருடித்தாமரை. வேதா எம்மை, நீயிர்கள் போய் ஏத்தி சேர்த்தி போதீர் என ஏயினன் என்று (சொல்லி) அவர் அருள் பெற்றுப் போக என முடிக்க. கோது - குற்றம்.

௪௦. தீக்கை - சிவ தீட்சை. 'முன்னர்ப் புராணம் முழுதுணர்ந்தான்' எனக் கூட்டுக. இச்செய்யுளாலும் வருஞ் செய்யுளாலும் வித்தை பதினெட்டும் கூறியவாறு காண்க. வித்தை பதினெட்டாவன: இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதம் நான்கும்; சிக்கை, கற்ப சூத்திரம், வியாகரணம், நிருத்தம், சந்தோ விசிதி, சோதிடம் என்னும் அங்கம் ஆறும்; புராணம், நியாயநூல், மீமாஞ்சை, மிருதி என்னும் உபாங்கம் நான்கும்; ஆயுள் வேதம், வில் வேதம், காந்தருவ வேதம், அருத்த நூல் என்னும் உபவேதம் நான்குமாம். இவைகள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு

ஏயுங் கற்ப சூத்திரங்கள் இருக்கு முதலா நான்மறைகள்
ஆயுள் வேதம் வில்வேதம் அமல்காந் தருவம் அருத்தநூல்
பாய பலவும் விதிமுறையாற் பயின்று நந்திப் பிரான் அருள்சேர்
தூய முனிவன் பின்னரும்ஒன் றிரந்து வேண்டித் தொழுதுரைப்
[பான். சக

சனற்குமார முனிவர் வேண்டுகோள்

ஷை வேறு

உன்புடைக் கல்வி யெல்லாம் உணர்ந்தனன் அவைகள் எங்கும்
இன்புடைச் சிவப்பே றென்றே முத்திஎன் றியம்பும் எந்தாய்
புன்புலை உடம்பு நீங்கிப் பரவெளிப் பொருளைக் கூடும்
அன்புடைப் பசுவே அன்றோ சிவன்இயல் பதனைச் சேரும் சஉ

மானிடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்லோனுபின்
ஈனமில் சிவனைக் காணு திடும்பைதீர் வீடும் எய்தும்
மானமார் சுருதி கூறும் வழக்கிவை ஆதலாலே
யானமர் இறையைக் காணும் உபாயமே அறிதல் வேண்டும். சங

எனச்சங்க இலக்கியங்கள் தொகுக்கப்பட்டாற் போலத் தொகுக்கப்பட்ட ஆரிய நூல்கள். இவை இவ்வியல்பின என்பதை, ஆசிரியர், திராவிடமாபாடியத்துள் முதற்சூத்திரத்தின் முதலதிகரணத்தில் தொகுத்துக் கூறியிருத்தல் காண்க. கரும முதல் நூல் - மீமாஞ்சை. சீக்கை - சிக்கை. எண் நூல் - சோதிடம். சந்தை - சந்தோவிசிதி. கந்தம் - நிருத்தமாதல் வேண்டும்.

சஉ. புலை - இழிவு. பசு - உயிர்.

சங. விசும்பு - ஆகாயம். ஈனம் - தாழ்வு. இடும்பை - துன்பம். மானமார் - பெருமை நிறைந்த. இவ்வாறு சுவேதாச்சுவதரோபநிடதத்துக் கூறப்பட்டது. அது வருமாறு: "யதா சர்ம வதாகாசம் வேஷ்ட யிஷ்யந்தி மாநவா:-ததாசிவ மவிஜ்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி." இதனை அதர்வவேதம் கூறியதாக வயிரவேசப் படலத்தில் கூறப்பட்டது. இதன் கருத்துக் கந்தபுராணத்திலும், "பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும் விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைது மென்றல்—உருவமில் விசும்பிற் றோலை உரித்துடுப் பதற்கொப் பென்றே பெருமறை பேசிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ' எனக் கூறப்பட்டிருத்தல் காண்க. (தட்சகாண்டம் உபதேசப்படலம் - உரு) மேற்காட்டிய உபநிடத வாக்கியத்தில் 'சிவம்' என்பது 'தேவம்' என இப்போது காணப்படுகிறது. இதனுற் பெறப்பட்டது, ஆகாயத்தை எந்த மானிடனாலும் தோல்போற் சுருட்ட இயலாமைபோலச்

ஆங்கது பலவாற் றானும் அருளினை அவற்றி னுள்ளும்
நீங்கற எளிதிற் கூடும் உபாயமுஞ் செப்பு கென்ன
ஒங்குசீர்ச் சனற்கு மாரன் உரைத்தலுஞ் செவிம டுத்து
வீங்குபே ருவகை பூப்ப விளம்புவான் நந்தி எங்கோன். சச

நந்திதேவர் அனுக்கிரகம்

அருள்பெறு சனற்கு மாரன் அறுமுகன் கூறென் றன்னைச்
சுருதியிற் கிளந்த வாற்றால் அறிவினில் தூயை முற்றும்
இருளற உணர்ந்தாய் நீயே இருந்தவத் தலைவன் கேட்டி
மருளிநீர்ந் துலக முய்ய விளைபது வகுத்துச் சொல்வாம். சரு

அந்தணர் அரசர் நாய்கர் இருபிறப் பாளர் வேத
மந்திரக் குரியோர் நான்கு வகைநிலை இவர்கட் கென்ப
நிந்தையில் பிரம சாரி நிலைஉயர் மனையின் வாழ்க்கை
சுந்தர வனத்தின் வாழ்க்கை துறவறம் அந்நான் காமால். சசூ

கருநிலைக் கெட்டாம் ஆயுள் பதினொன்று கருதீ ராறும்
வருடத்தின் மறையோ ராதி மூவர்க்கும் மறையின் ஆசான்
தெருள்உப நயனஞ் செய்வன் முனிவர்தங் கடன்தீர்த் தற்குப்
பொருவிலா மறைகள் அங்கம் ஓதுதற் பொருட்டு மன்னோ. சஎ

---

சிவபெருமானை உணராமல் முத்தியடைதல் இயலா தென்பதாம். ஆன் அமர் இறை - இடப ஊர்தியை விரும்பும் சிவபெருமான். 'யான்' எனக்கொண்டு, அறிதல் வேண்டும் என முடிப்பாரும் உளர்.

சரு. கூறு - அம்சம். கிளந்த ஆற்றால் - சொல்லியபடி. மருளி என்புழி இகரம் பகுதிப் பொருள் விகுதி.

சசூ. நாய்கர் - வைசியர். எழுவாயாகும் செவ்வெண் தொகை விகாரத் தால் தொக்கது. இருபிறப்பாளர் என்பது அதற்குப் பயனிலை. இருபிறப்பு உபநயனத்திற்கு முன் ஒரு பிறப்பும், பின் மற்றொரு பிறப்புமாம். மந்திரத் துக்கு என்பது விகாரமாயிற்று. இவர்கள் என்று எடுத்துக்கொண்டு உரைக்க. நிலை - ஆச்சிரமம். மனையின் வாழ்க்கை - கிருகத்தம். வனத்தின் வாழ்ச்சை - வானப் பிரத்தம். துறவறம் - சந்நியாசம். இந்நு நின்றும் மிருதி வழக்கே பற்றிக் கூறப்படுகின்றது.

சஎ. கருநிலை - கருப்பவாசம். ஆம் வருடம் என்பதைப் பதினொன்று டனும் கூட்டுக. இம்மூன்றனையும் முறையே மறையோர் முதலாகக்

ஆங்கதன் பின்னர்க் காமம் அறம்பொருட் பேற்றி னேடும்
ஓங்குசீர்ப் பிதிரர் வானோர் கடன்களின் ஒழிவும் வேண்டி
மாங்குயிற் கிளவி மென்றோள் மனைவியை மணப்பர் பின்னர்த்
தாங்கரும் வனத்துச் செல்வர் தவம்மிகக் கிடைத்தல் வேண்டி. சஅ

கடனெலாம் விண்ட பின்பு கருதருந் துறவிற் செல்வர்
நடலைகூர் உலக வாழ்வை வெறுத்துநல் லறிவு தூய்தாய்
இடனுடைத் துறவிற் சென்றே இருவகை நியாயத் தோடு
மடனற நன்னூல் பற்றி மறைமுடி வுணர்தல் வேண்டும். சகூ

இருவகை நியாயம் பூர்வம் உத்தரம் எனப்பே ரெய்தும்
ஒருவகை சிவபூ சைக்காம் ஒருவகை சிவப்பேற் றிற்காம்
சுருதியே இலிங்கஞ் சொற்சேர் வெடுத்துக்கோள் இடமே சொல்லின்
வருபெயர் இவற்றுன் மென்மை வன்மையென் றிவற்றை ஆய்தல் ரு0

---

கொள்க. கருநிலைக்கு எனவே பிறப்பிற்கு ஏழு முதலியனவாகக் கொள்க. முனிவர் கடன் வேதம் ஓதுதலால் தீருமென்பது மிருதிநூல் துணிபு. இது பிரமசரிய நிலை.

சஅ. கிளவி - சொல். தேவர்கடன் வேள்வியாலும், பிதிரர் கடன் புதல்வரைப் பெறுதலாலும் நீங்குமென்பது மிருதிநூல் துணிபு. மணப்பர் என்றது கிருகத்த நிலையை; வனத்துச் செல்வர் என்றது வானப்பிரத்த நிலையை.

சகூ. விண்ட பின்பு - நீங்கிய பிறகு. நடலை - பொய். இடன் - பரந்த இடம். இருவகை நியாயம் வருஞ் செய்யுளிற் காண்க.

ரு0. நியாயம் என்றது ஈண்டு மீமாஞ்சைகளை. அவையும் வேதங்களை நியாயம் பற்றி ஆராய்தலுடைமையான் அப்பெயர் பெற்றன. அவற்றுள் பூர்வ மீமாஞ்சை வேதத்தின் கரும காண்டத்தை ஆராய்வது. அதனுல் அதனைச் சிவபூசைக்காம் என்றார். உத்தர மீமாஞ்சை வேதத்தின் ஞான காண்டத்தை ஆராய்வது; அதனுல், அதனைச் சிவப்பேற்றிற்காம் என்றார். பூர்வ மீமாஞ்சை சைமினி முனிவராற் செய்யப்பட்டது. வியாசர் செய்த பிரம்ம சூத்திரமாகிய வேதாந்த சூத்திரமே உத்தர மீமாஞ்சை எனப் படும். சொற்சேர்வு - வாக்கியம். எடுத்துக்கோள் - பிரகரணம். இடம் - தானம். பெயர் - குறியீடு. சுருதி, இலிங்கம் வாக்கியம், பிரகரணம், தானம், குறியீடு என்னும் ஆறும் வேதத்திற் கூறப்படும் கருமங்களை, இஃது இதற்கு அங்கம் எனவும், இஃது அங்கி எனவும் வேதத்தின் கரும காண்டத்தை

கடப்படு பூசை பூர்வ கருமநூல் நியாயத் தாகும்
தொடக்கம்ஈ றப்பி யாசம் அபூர்வதை பலமே சொல்லின்
எடுத்துரை அருத்த வாதம் இவைசிவப் பேறு கூறற்
கடுத்தஉத் தரநூல் உண்மை துணிவதற் கிலிங்கம் ஆமால். ருக

இரவெரி யாடுந் தேவை இம்முறை துணிந்த ஞானி
பிரணவ மனுவாற் போற்றிப் பேதுறு முடல்சாங் காறும்
பரவிடின் அவற்கு முக்கட் பரன்வெளிப் படுவன் பட்டால்
மருவுபே ரின்பந் துய்த்து விமலனில் வாழ லாமே. ருஉ

பின்னவன் மாய வாழ்விற் பிறந்திருன் சிவமே சேர்வன்
முன்னருஞ் சிவப்பேற் றிற்கு முறைவரும் உபாயம் ஈதாம்
இந்நெறி சிறியோர் யார்க்கும் எளிதன் றெளிதாய் நேராம்
அந்நெறி முக்கண் எம்மான் பதிகளின் அமர்தலாகும். ருங

---

ஆராய்வதற்குரிய கருவி- இவை பூர்வ மீமாஞ்சையில் மூன்றும் அத்தியாயத்திற் கூறப்பட்டன. இவற்றின் இயல்புகளை, ஆசிரியர், திராவிட மாபாடியத்துள் அவையடக்கத்து மீமாஞ்சை மதம் கூறுமிடத்துக் கூறியிருத்தலால் அறிக. அவற்றால் ஆராயப்படுங் கருமம் அங்கியாகிய தலைமைப் பொருளும் அங்கமாகிய தலைமையில் பொருளுமென இரண்டு வகைப்படுதலால், 'இவற்றுள் மென்மை வன்மை என்றிவற்றை ஆய்தல்' என்றார். சுருதி, இலிங்கம் முதலியவை ஒன்றினொன்று மென்மை யாவன; சுருதி எல்லாவற்றினும் வன்மையுடைய தென்க.

ருக. கடப்படு - கடமையாகக் கொள்ளப்படுகின்ற. பூர்வ கருமநூல் நியாயம் - பூர்வ மீமாஞ்சை. ஆகுமென்பது முற்று. தொடக்கம் ஈறு - உபக்கிரம உபசங்காரம். எடுத்துரை - உபபத்தி. இது, உத்திக்கு மிகப் பொருந்துவதா மெனக் கொண்டு உரைத்தற் பயத்ததாகலின், எடுத்துரை எனப்பட்டது. உபக்கிரம உபசங்காரங்கள், அப்பியாசம், அபூர்வதை, பலம், உபபத்தி என்னும் ஆறும் வேதத்தின் ஞான காண்டத்தை ஆராய்தற்குக் கருவியாதலால், 'சிவப்பேறு கூறற்கு அடுத்த உத்தரநூல் உண்மை துணிவதற்கு இலிங்கமாம்' என்றார். இவைகளை ஆசிரியர், 'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயத்துள் குறிப்பித்திருத்தல் காண்க. 'பூர்வதை' என்றே எல்லாப் பதிப்பிலும் உள்ளது. ஆயினும், அபூர்வதை என்பதன்றிப் பூர்வதை என ஒன்று இவ்வாறனுள் இல்லாமையால் 'அபூர்வதை' எனப்பாடங் கொண்டாம். அடுத்த - அமைந்த. உத்தரநூல் - உத்தர மீமாஞ்சை. துணிவதற்கு - தெளிவதற்கு. இலிங்கம் - ஈண்டுக் கருவி என்னும் பொருட்டு.

ஆயிடைச் சாக்கா டெய்தின் விலங்குநாய் அடுவான் புள்ளு
மேயபுன் மரங்க ளேனும் வீடுபே றடைவ துண்மை
நியிதற் கையங் கொள்ளேல் என்றலும் நெடிது வாழ்ந்து
தூயசீர் நந்தி பாதம் தொழுதெதிர் குமாரன் கூறும். ருச

சீர்த்தல வாழ்க்கை ஒன்றே செவ்வழி என்றாய் ஐய
பார்த்தலத் திறைவன் மேவும் பதிகள்எண் ணிலவாம் மிக்க
கீர்த்திசால் அவற்றுள் மேலாய்க் கிளர்சிவப் பேற்றூன் முத்தி
ஆர்த்தியின் றுதவுந் தானம் யாதுநீ அருளு கென்றான். ருரு

என்றலும் நந்திப் புத்தேள் கணப்பொழு தெண்ணி முன்னாள்
வன்றிறல் விடையோன் தேவிக் குரைத்தது மனத்துட் கொண்டான்
அன்றவர்ப் பணிந்து மைந்தா அரன்உமைக் கியம்பு மாற்றம்
நன்றுநீ கேட்டி யென்ன வரன்முறை நவில லுற்றான். ருசு

ஆகத் திருவிருத்தம் சுகரு.

---

## உரை நடை

---

தேவர்கள் முதலியோரால் சூழ்ந்து போற்றப்படுவதாய், பொன்மய முள்ளதாய், எட்டுத் திக்குகளையும் பகுப்பதாய், இறைவனுக்கு வில்லாகிப் பல வளங்களை உடையதாகிய மகாமேரு மலையின்மேல், 'சதசிருங்கம்' என்னும் பெயருடைய ஓர் மலை உண்டு. அது பல வளங்களை யுடையதாய் முனிவர்களுக்குத் தவச்சாலை யாகியதன்றியும், தேவர் முதலானவர்களுக்குப் போக பூமியுமாய் விளங்குவது. அதன்கண் பிரமவனமென்னும் ஓர் சிறந்த வனமும், அவ்வனத்தின் நடுவில் தனக்குத்தானே நிகராகிய பிரமநகரம் என்

---

ருச. சாக்காடு - இறப்பு. அடு - கொடிய. வான் - பெரிய. புள் - பறவை. ஆழ்ந்து - (மகிழ்ச்சியில்) முழுகி. 'நெடிது வாழ்ந்து' என்றது "அடித்தடித்து வக்காரமுன் தீற்றிய" (திருவா. அற். ரு.) என்றாற் போல நின்றது.

ருரு. சால் - அமைந்த. கிளர் - சிறந்த. ஆர்த்தி - துன்பம். இன்றி என்பது இன்றெனத் திரிந்து நின்றது.

ருசு. புத்தேள் - தேவர். அவர் - அவர்களை, இறைவன் இறைவி இருவரையும்.

னும் ஓர் அழகிய நகரமும் உண்டு. அந்நகரம் பிரமதேவனுக்கு உரியதாகும். அந்நகரத்திற்கு ஒரு பக்கத்தில் சனற்குமார முனிவர் என்பவர், ஓர் ஆண் சிங்கமானது பல சிங்கங்கள் தன்னைச்சூழ இருப்பதுபோலத் தம்மைப் பல முனிவர்கள் சூழ்ந்து போற்றத் தாம் சிவபெருமானது திருவடிகளை மனத்தில் தியானித்து யோகஞ்செய்திருந்தார்.

இவ்வாறு சனற்குமார முனிவர் யோகம் செய்திருக்கும் நாள்களில் ஒரு நாள்; விடியற்காலையில் எழுந்து, நீராடி, பிதிரர்களுக்கு நீர்க்கடன் ஆற்றி, அங்கநியாச கரநியாசங்களைச்செய்து, முறைப்படிகொண்ட திருவெண்ணீற்றை உள்ளங்கையில் வைத்து, பஞ்சப்பிரமமும், அக்கினி என்பது முதலியனவும், சாபாலமும், அதர்வமும் ஆகிய மந்திரங்களால் மூன்றுமுறை மந்திரித்து, நீரினாற் குழைத்து, தலைமுதல் கால்வரையிலும் பூசி, திரியம்பக மந்திரத்தாலும் பஞ்சாக்கரத்தாலும் ஆசமனஞ்செய்து, திரியாயுடம் திரியம்பகம் பஞ்சாக்கரமென்னும் மந்திரங்களால் திரிபுண்டரமாக உச்சி, நெற்றி, மார்பு, முதலிய இடங்களில் பதினைந்திடத்தில் தரித்து, அத்திரிபுண்டரங்களை முச்சுடர், முக்குணம், மூன்று வேதம், மூன்று நிறம், மூன்று அக்கினிகளாகப் பாவித்து, வினைக்கு இடமாகிய உடம்பை வாயு மந்திரத்தால் உலர்த்தி, அக்கினி மந்திரத்தால் சாம்பலாக்கி, வருண மந்திரத்தால் நனைத்து, பிருதிவி மந்திரத்தால் திரட்டி வெவ்வேறு உறுப்புகளாகப் பாகுபடச் செய்து, சத்தி மந்திரத்தால் பழையபடி நிரம்பச் செய்து, உயிரை முன்போல அதனுள் சேர்த்து, மூலாதார முதலிய ஆறு ஆதாரங்களிலும் உள்ள தாமரைகளில் இதழ்தோறும் எழுத்து ரூபமாய் நிறைந்த தேவியை முறைப்படி அமைத்து, இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்களை அசபையினாற் பிரித்து மூலாதார மூர்த்தியாகிய கணேசர் முதல் ஆறாதார மூர்த்திகளுக்கும் கொடுத்து, உயிராகிய இலிங்கத்தினிடத்தில் அந்தரியாக பூசை செய்து, பிறகு புறத்திலும், தலை முகம் முதலிய உறுப்புகளி லெல்லாம் ஐம்பத்து எழுத்து வடிவமான சத்தியை அமைத்து, பிராணாயாமங்களை முறைப்படி செய்து, பின் சூரியன் உதயமாகும் வரையிலும் காயத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டு உருச் செபித்து, பின்னர் யோகசித்தியின் பொருட்டு முன்னே கணேசரை வழிபட்டு, சூரிய மண்டலத்திலும் ஓமாக்கினியிலும் இலிங்கத்திலும் அங்குட்ட ரூபமாயுள்ள சிவபெருமானைப் பூசித்து, யோகத்தை யடைந்து, அணிமா மகிமா முதலிய எட்டு ஐசுவரியங்கள் எட்டு இதழ்களாகவும், வைராக்கியம் பொகுட்டாகவும், வாமை சேட்டை முதலிய சத்திகள் மகரந்தமாகவும் அமைந்த இருதய கமலத்தைப் பிராணாயாமத்தால் மலர்த்தி, அதன்மேல் மும்மூர்த்திபாகியும் முக்குணங்கட்குத் தலைவனுகியும் முக்கணன், புட்டி வருத்தனன், கிருஷ்ண

பிங்களன், சிகண்டன், ஈசானன், வன்னிரேதா, சத்தியன், அருவன், உருவன், புருடன், விச்சுவரூபன், புருட்டுதன், சிவன், புருகூதன், சத்து, பராபரம், பரமான்மா, மகத்து, பரப்பிரமம் என்று சொல்லப்படும் பெயர்களுக்குப் பொருளாகியும், பரமாகாசத்தின் நடுவில் பேரொளிப் பிழம்பாகியும் உள்ள இறைவனை அச்சத்தியோடு நேராகக் கண்டு, தன்னை அப்பரம்பொருளோடு ஒன்றுபடுத்தி, இரண்டற இருந்து சிவயோகத்தில் அசைவற்றிருந்தார்.

அங்ஙனம் சனற்குமாரமுனிவர் சாக்கிராதீத நிலையை அடைந்து உலக வாசனையற்று ஆனந்த பரவசராய் இருக்குங்கால், இறைவன் இறைவியோடும் வெள்விடையின்மேல் ஏறி, தேவகூட்டத்தினரும் நந்தி கணங்களும் சூழ வந்து ஆகாயத்தில் உலாவியருள, சனற்குமாரமுனிவர் யோகத்திலிருந்தமையால் அதனை அறியாராயினர். அதனால் விரைந்து எழுந்து வணங்கவில்லை. அப்போது சிவபெருமான் உமாதேவியாரை நோக்கி, 'இவன் உள்ளத்தில் நம்மையே இருத்தி மனஒருமையுடன் இருக்கின்றான்' என்றுசொல்லிக் கைலைக்கு எழுந்தருளினர். ஆயினும், நந்தியெம்பெருமான் அதனைக் கண்டு, 'இவன் எம்பெருமானை இகழ்ந்து ஒட்டகம்போல இருந்ததனால் ஒட்டகமாகுக' என்று சபித்துச் சென்றனர். சனற்குமார முனிவரும் அவ்வாறே ஒட்டகமாகி உலகமெல்லாம் திரிகின்றபோது முன்னேசெய்த நல்வினையினால் காஞ்சியம்பதியை அடைந்தனர்.

அக்காலத்தில் அவ்விடத்தில் கச்சபேசர் ஆலயத்தின் அருகில் பிரமன் தவஞ்செய்துகொண்டிருக்கும் இடத்தை அவ்வொட்டகம் அடைய, பிரமன் அதனைக் கண்டு, தனது புதல்வனாகிய சனற்குமாரமுனிவன் என்று தெரிந்து, 'அந்தோ! இறைவனுடைய திருவருட்கு உரியவனாகிய இவனுக்கு இவ்வொட்டகவடிவம் எவ்வாறுவந்தது! இதற்கு நான்இனி என்னசெய்வேன்!' என்று வருந்தி, நடந்தவற்றையெல்லாம் யோகத்தினால் அறிந்து, கச்சபேசுரரை ஆகம விதிப்படி பூசித்து, 'இளம்பிறைமுடித்தோய்! இன்னருள்வள்ளால்! மாயோன் ஆமைவடிவொழித்து ஆண்டவரம்பிலாக்கருணையாளனே போற்றி! காசி முதலிய எத்தலங்களினும் காஞ்சியே சிறந்ததென்பது நூல்களில்மாத்திரமன்று; இறைவியும் நீயுமேயன்றி இதனைப்படைத்தவர்கள் இல்லை என்று பிரளயந் தோறும் நானே நேராகக் கண்டுள்ளேன்! உயிர்களைக் காத்தருளுதற் பொருட்டு, இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்றுமாகி அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி நின்ற பெருமானே! மங்கை பங்காளனான இன்ப உருவே! பிறவித் துன்பத்தை நீக்கும் அருட்கடலே! இரங்கி யருளுதல்வேண்டும், எங்களுக்கு நீயன்றி வேறு பற்றுக்கோடில்லை' என்று நாத்தழும்பேறத் துதித்தனன்.

அதனைத் திருச்செவிசாத்திய பெருமான் விசும்பிடை விடைமேல் தோன்றி, 'மைந்தனே, உனக்கு வேண்டும்வரம் யாது? கூறுதி தருகின்றோம்' என்று திருவாய் மலர்ந்தருள, பிரமதேவன் மிகுந்த மகிழ்ச்சியுடையவனாய், 'பெருமானே, அடியேன் புதல்வனாகிய சனற்குமாரன் சதசிருங்க மலையில் யோகத்திலிருந்ததனால் தேவரீர் அவண் எழுந்தருளியதை அறியாதிருந்துவிட்டனன். அதனால் நந்திபெருமான் அவனை ஒட்டகமாகும்படி சபித்துவிட்டனர்; அவ்வொட்டக வடிவத்தை இன்றே நீக்கியருளுதல் வேண்டும்'என்று வேண்டிக்கொண்டனன். அதற்குச்சிவபெருமான், 'பிரமதேவனே, நமது அடியவர்களால் வந்தது நம்மால் நீங்காது; ஆகையால் நந்தியே அதனை நீக்குவான்' என்றுசொல்லி மறைந்தருளினர்.

பின்பு, பிரமதேவன் நந்திதேவரை நோக்கித் தவம்புரிய, அதற்கு மகிழ்ந்து எழுந்தருளிய நந்திதேவரைப் பிரமதேவன் வணங்கிக் குறையிரந்தனன். நந்திதேவர், 'நான்முக, கச்சபேசர் காட்சி அளித்தமையால் அப்பொழுதே உனது புதல்வன் சாபம் நீங்கிப்போய்விட்டது; ஆயினும், அவ்விறைவன் அடியார்களிடத்து நீங்காத பெருங்கருணை யுடையவன் என்பதை நிலைநாட்டினன்; இனி உனது புதல்வன் மேரு மலையை அடைந்தால் அவ்வொட்டக வடிவம் நீங்கப் பெறுவன். அதன் பிறகு நமக்கு மாணாக்கனுமாகி, சிவதீக்கை பெற்றுச் சிவஞான முணர்ந்து அரிய தவத்தைச் செய்வான்' என்று கூறி மறைந்தருளினர். அதன் பிறகு பிரமதேவன், தனது கணத்தவர்களால் அவ்வொட்டகத்தை மேரு மலையை அடையச் செய்தனன். அங்கு நந்திதேவர் தமது அருட்பார்வையால் சனற்குமார முனிவருடைய ஒட்டக வடிவத்தை நீக்கி, அவரைத் தமக்கு மாணாக்கராகக் கொண்டருளினர். சனற்குமார முனிவரும் நந்தி தேவரை வழிபட்டு, முன்னர்ப் புராணங்களை யுணர்ந்து, வேதம் வேதாங்கம் உபாங்கம் உபவேதம் ஆகிய எல்லா நூல்களையுங் கற்று அதன் பிறகு ஒன்றை வேண்டுவாராயினர்.

தேவரீரிடத்தில் அடியேன் கற்ற கல்விகளிலெல்லாம் முத்தியாவது சிவப்பேறென்றே யென்று கூறப்படுகின்றது. ஆகையால், இந்த உடலைவிட்டுப் பரமாகாசத்தைச் சேர்கின்ற உயிரல்லவா சிவனியல்பை அடையும்? 'ஒருவன் ஆகாயத்தைத் தோல்போல் சுருட்ட வல்லவனானால் சிவனைக்காணாமல் முத்தியையும் அடைவான்' என்று சுருதி கூறுதலால் இறைவனைக் காணும்உபாயம் எதுவோ அதனையே அறிதல்வேண்டும். அவ்வுபாயத்தையும் தேவரீர் பலவாறாகக் கூறியருளினீர்; ஆயினும், எளிதில்கூடும் உபாயத்தையும் சொல்லியருளவேண்டும் என்று கேட்டுக்கொள்ள, நந்திதேவர் மகிழ்ச்சியுடன் சொல்லுகின்றார்.

மாணாக்கனே, நீ தெளிந்த அறிவுடையவனாய் எல்லாவற்றையும் நன்கறிந்தனை. உலகம் உய்யுமாறு நீ கேட்டதனையும் வகுத்துச் சொல்லுகின்றோம் கேட்பாயாக. நால் வகை வருணத்தில் முதல் மூன்று வருணத்தாரும் உபநயனத்திற்கு உரியர். அவர்களுக்குரிய ஆச்சிரமங்கள் நான்கு. அவர்களில் அந்தணர் முதலிய மூவர்க்கும் உபநயனகாலம் முறையே கருப்ப வாசந் தொட்டு எட்டு, பதினொன்று, பன்னிரண்டு ஆண்டாகும். அக்காலங்களில் முனிவர் கடன் தீர்த்தற் பொருட்டு வேதம் ஓதுதற்காக ஆசிரியன் உபநயனம் செய்வன். அது பெற்று வேதத்தை ஓதுதல் பிரமசரிய ஆச்சிரமம். பிறகு இன்பம் அறம் பொருள்களை அடைதற்பொருட்டும், பிதிரர் தேவர் கடன்கள் தீர்த்தற்பொருட்டும் மனைவியை மணம் செய்வர். அது பெற்றுப் புதல்வரைப் பெறுதலும் வேள்வி செய்தலும் கிருகத்தாச்சிரமம். பின்னர் தவம் மிகுதற்பொருட்டு மனையாளோடுங் காடு புகுவர். அங்கு மனையாள் வழிபடத் தவம்புரிதல் வானப்பிரத்தாச்சிரமம். இவ்வாறு எல்லாக் கடனும் தீர்த்த பிறகு, துறவறத்தை அடைவர். இருவகைப் பற்றையும் அறத்துறந்து பூர்வம், உத்தரமென்னும் இருவகை மீமாஞ்ச நூல் பற்றி வேதவேதாந்தங்களை யுணர்ந்து, அவற்றின் வன்மை மென்மைகளை ஆராய்ந்தறிந்து, சிவபூசையும் சிவப்பேற்றையும் அறிந்து, அவற்றை அடைவது சந்நியாசாச்சிரமமாம். இறைவனை இம்முறையால் தெளிந்த ஞானி, பிரணவ மந்திரத்தால்உடல் நீங்குமளவும் வழிபாடு செய்தால் சிவபெருமான் வெளிப்பட்டருளுவர். வெளிப்பட்டால் முத்தியை அடையலாம்.

ஓ மாணாக்கனே, இஃது எல்லார்க்கும் எளியதன்று. எளிதாகிய வழி சிவதலங்களில் வசித்தலாகும். அத்தலங்களில் இறந்தால் விலங்கு, பறவை, புல், மரம் முதலிய யாவும் முத்தியடைவது உண்மையாகும். நீ இதற்கு ஐயப்படவேண்டுவதில்லை யென்று நந்தி தேவர் கூற, சனற்குமார முனிவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்து சொல்லுகின்றார்.

அடிகளே, சிவதலங்களில் வசிப்பது ஒன்றே நேராகிய வழியென்று கூறினீர்கள்; அத்தலங்களோ அளவிறந்துள்ளன; அவைகளில் எல்லாவற்றிற்கும் மேலாய், சிவப்பேற்றை வருத்தமின்றி எளிதில் தரும் தலம் யாது? அதனைச் சொல்லியருள வேண்டுமென்று கேட்க, நந்திதேவர் ஒரு நொடிப்போது நினைத்துப் பார்த்து, முன்னொருகால் இறைவன் இறைவிக்குச் சொல்லியருளியதை மனத்திற்கொண்டு, அவர்களை வணங்கி, மைந்த, சிவபெருமான் உமாதேவியாருக்குச் சொல்லியதைக் கேட்பாயாக என்று முறையாகச் சொல்லத் தொடங்கினர்.

---

# தலவிசேடப் படலம்

சிவபெருமான் திருவோலக்கச் சிறப்பு
எழுசீரடி யாசிரிய விருத்தம்

இழைத்தபன் மணிகள் காந்திவிட் டெறிக்கும் எரிசுடர்ப் பேரொளிப் பரப்பு, மழைக்களத் திறையைத் தொழப்புகுந் திறல்சால் வானவர் நோக்கலாற் றாது, விழித்துணை இமைப்பச் செய்தொறும் அவர்அவ் விளைவறி யாதெமக் கென்னே, பழுத்ததோ முடிவு காலமென் றழுங்கும் படியதோர் கனகமண் டபத்தில். க

எறுழ்வலித் திரள்தோள் இரணியன் மருமத் திரத்தநீர் வாய்மடுத் தெழுந்த, வெறிமயக் கறுத்த பெருவலி நோக்கி விலக்குறு மும்மல மயக்கும், தெறுகென நரமா மடங்கல்தான் முழுதும் மடங்கலாய்த் திருவடி தாங்கி, உறுவது கடுக்கும் மடங்கலேற் றெருத்தத் தொளியெறி மணிப்பொலந் தவிசின். உ

எரியவிர்ந் தனைய துவர்மணிச் சடிலத் தெறிதிரைக் கங்கையூ டலைந்து, பருவருங் கேண்மைச் சிறுபிறைக் கிரங்கிப் பற்றித்தன் இருக்கையிற் கொடுபோய்த், தெருமரா தளிப்பான் முழுமதி அணுகிச் செவ்விபார்த் துறைவது மானும், விரிகதிர்த் தாளத் தொங்கல்சூழ் வட்ட வெண்குடை மீமிசை நிழற்ற. ௩

தொல்லைநாட் புகழ்கள் எங்கணும் கெருக்கத் துன்றிவெற் றிடங்கள்இன் மையினல், அல்லுறழ் மிடற்றுப் பிரானிடத் துயிர்த்த அற்றைநாட் கீர்த்திகள் இருபால், செல்லிடங் துருவிக்

---

க. மழைக்களம் - மேகம் போன்ற கண்டம். திறல்சால் - வன்மை நிரம்பிய. அழுங்கும்படியது - வருந்துந் தன்மையுடையது. கற்பமுடிவில் தேவர்களது இமையா நாட்டம் இமைத்தலைச் செய்யும்.

உ. மருமம் - மார்பு. தெறுக - போக்கியருளுக. மடங்கல் - சிங்கம். எருத்தம் - பிடர்.

௩. துவர்மணி - பவளம். பருவரும் - வருந்துகின்ற. தெருமராது - மனங் கவலாது. அளிப்பான் - காப்பாற்றுதற்கு. செவ்வி - சமையம். மானும் - ஒக்கும். மானும் குடையென்க. தாளத் தொங்கல் - முத்துமாலை.

௪. தொல்லை - பழமை. துன்றி - பொருந்தி. அல் உறழ் - இருள்

கொட்பபோல் அரிமான் செழுந்தவி சொடுமணிக் குடைக்கீழ், எல்லையும் மேலும் வெள்ளொளி பரப்பும் இடையினிற் சாமரை இரட்ட. ச

வேட்டவேட் டாங்கு வரங்கள்பெற் றேகும் விண்ணவர் அது சொடு செருக்கிக், கோட்டமுற் றழியா தறிவுறுப் பவர்போல் கோட்டமுற் றழிகய முகத்தன், வாட்டிறற் சூரன் முதலியோர்ச் செகுத்த மருப்பொடு சுடர்வடி நெடிவேல், காட்டிய காத்தின் அறு முகத் தேவுங் கணேசனும் இருபுடை வயங்க. ரு

உருவினிற் பெருமை பெருமைஅன் றுருவிற் சிறுமையெய் தினும்உமை பாகன், அருளினிற் பெருமை பெருமைஎன் றுலக அகிலமுந் தெளிதரக் காட்டி, மருமலர்க் கிழவன் முதலியோர் புறத்து மன்னிட நகுநடைக் குறுத்தாட், பெருவயிற் றழல்கால் குழிவிழிப் பூதப் பெருங்கணம் அருகுநின் றேத்த. சு

கண்ணிணைக் கடங்காத் திருவுரு வழகைக் காண்தொறும் பண்டுதான் கொண்ட, பெண்ணுரு வெடுப்பக் கருதிநீள் முகுந்தன் பிரிவிலா தொருபுடை அமர்ந்த, பண்ணிசை மொழியாள் வனப்பும் எம்பெருமான் பார்வையும் நோக்கிமற் றெமக்கீங், கெண்ணிய எண் ணம் முற்றுறு தினியென் றெழுந்தவக் கருத்தினை மீட்ப. எ

ஆடலைத் தொடங்குந் தொறுந்திரு மேனி அழகினைக் கண்க ளான் மடுத்து, வாடரு மயல்பூண் டவசராய்ச் சதியின் வழிப்பதம்

போன்ற. மிடறு - கண்டம். உயிர்த்த - தோன்றிய. துருவி - தேடி. கொட்பபோல் - சுழலுதல் போல.

ரு. வேட்ட வேட்டாங்கு - விரும்பியவற்றை விரும்பியபடியே. கோட் டம் - மாறுபாடு. 'அறுமுகத் தேவுங் கணேசனும்' என்பது எதிர்நிரனிறை. புடை - பக்கம். வயங்க - விளங்க.

சு. அகிலம் - முழுது. அகில உலகமும் என்க. குறுந்தாள் என்பது வலிந்து நின்றது.

எ. முகுந்தன் - திருமால். பெருமானது பார்வையால், பெருமானுக்குப் பெருமாட்டி அழகின்மீ தன்றிப் பிறவிடத்து விருப்பம் செல்லாதெனக் கண்டனன் என்பதாம்.

அ. வாடருமயல் - சோர்தலில்லாத மயக்கம். அவசம் - வசமழிதல்.

பெயர்தரா நிலையை, நாடகத் தலைவர்க் கெதிர்அடி யேங்கள் நடிப் பதற் கஞ்சுதும் என்னச், சேடமை வனப்பின் உருப்பசி முதலோர் அவிநயச் செய்கையான் மறைப்ப. அ

மல்லலங் கமலத் திருவடி நோவ மறுவலும் மறுவலும் ஒடிக், கல்லொளி பரப்பு மணிமுடி அழுத்தங் கடவுளர் தொகையினை விலக்கு, நல்லமெய்ப் பணியை நான்பெற நல்கி அவரவர்க் கருள் செய்து போக்கி, எல்லைதீர் கருணை மலையின் ஓலக்கத் திருந்தனன் என்னை ஆளுடையான். கூ

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருந்தருள் காலை வெண்கேழ் இமம்பொதி அடுக்கல் ஈன்ற
முருந்திள முறுவற் செவ்வாய் முகிழ்முலைக் கடவுட் கற்பின்
திருந்திழை உலகம் ஈன்ற செல்விமுத் தேவுங் காணப்
பெருந்தகை அடிகள் போற்றி இதுஒன்று பேச லுற்றாள். க0

உமாதேவியார் வினா

கடப்படும் வீடு பேறன் திருவடிக் காட்சி தன்னால்
கிடைப்பதாம் மறைஈ றாய்ந்து கிளர்தவம் தியானம் நிட்டை
நடைப்படி முதிர்ந்து வாய்ந்த நல்லவர்க் கன்றி உன்றன்
அடித்துணை காண்டல் ஏனோர்க் கரிதரி தாகும் அம்மா. கக

ஏனையோர் விலங்கு புட்கள் இங்குனைக் கண்டு முத்தி
மேனிலத் துறுவ தெவ்வா றென்றனள் வினைத லோடும்
ஊனுடை உயிர்கள் யாவும் உய்யுமா கருணை கூர்ந்து
மானமர் கரத்துப் புத்தேள் வாய்மலர்ந் தருளும் மன்னோ. கஉ

---

சதி - தாளஒத்து. நாடகத்தலைவர் - சிவபெருமான். சேடு - திரட்சி. வனப்பு - அழகு.

கூ. மல்லல் - வளம். திருவடி என்றது இறைவன் திருவடியை. நோவ அழுத்தும் என இயைக்க. மறுவல் - மறுபடி. கல் - இரத்தினம். மணி - அழகு. இது நந்திதேவர் கூற்றாதலின் 'நான்' என்றது அவரையே என்க ஓலக்கம் - பேரவை. கருணைமலையின் - கருணையாகிய மலைபோல.

க0. கேழ் - நிறம். இமம் - பனி. பொதி - நிறைந்த. அடுக்கல் - மலை. முருந்து - மயில் இறகின் அடி. முறுவல் - பல். இழை - ஆபரணம். முத் தே - மும்மூர்த்திகள்.

சிவபெருமான் விடை

அரிபரந் தகன்ற உண்கண் அலர்முலை அணங்கு கேள்யாம்
பரவெளிப் பரப்பின் வைகும் பண்பினேம் உலகம் எங்கும்
விரவியே நிறைந்து நிற்பேம் விளங்கும்எம் நாலாம் பாதம்
தரைமுதல் உலகாம் மூன்று பாதம்வான் தலத்து மேவும். ௧௩

ஆவகை வயங்கு நம்மை யாவரும் அறிய மாட்டார்
ஓவரும் பெருமை சான்ற உத்தம தலங்கள் தம்மின்
ஏவருங் காண வாழ்வேம் என்றலும் உவகை பொங்கி
யாவைஅத் தலங்கள் என்றாட் கெம்பிரான் அருளிச் செய்யும். ௧௪

வேறு

திருச்சேது ஆலவாய் சிராப்பள்ளி திருவழுவூர் திருவையாறு
தருச்சூழும் இடைமருதூர் யாம்என்றும் கடம்புரியச் சலியாத் தில்லை
கருச்சாடு முதுகுன்றம் அருணகிரி திருவிரிஞ்சை கவினார் ஒத்தூர்
மருச்சூழுங் குழல்உமையே நின்னொடியாம் மகிழ்ந்துறையும் வளஞ்
[சூழ் காஞ்சி. ௧௫

ஆலவனம் காளத்தி திருச்சயிலம் சித்தவடம் அடியார் சைவக்
கோலநிறை விரூபாக்கந் திரியம்ப கந்திருக்கோ கன்னம் இன்பம்
சாலஉத வுச்சயினி மாகாளம் காசிகே தாரம் என்றும்
காலன்உறுப் பிரபாசம் இமயமலை மந்தரம்சீர்க் கயிலை யாதி. ௧௬

எண்ணிலவாம் யாம்மருவும் இடங்களென உரைத்தருள இறைவி கேளா, அண்ணலே இவற்றுள்ளும் சிறந்ததலம் யாதென்ன அருளிச் செய்வான், புண்ணியமெய்த் திருக்காஞ்சி எவற்றினும் மேம் படுபுரியாம் அவ்வூர் தன்னை, எண்ணினுங் கேட் பினுஞ்சொலி னும் வணங்கினும்பே ரின்பவீ டெவர்க்கும் நல்கும். ௧௭

---

௧௩. அரி - செவ்வரி. உண்கண் - மையுண்டகண். அலர் - விம்மிய. உலகு ஆம் - உலகத்திற் பொருந்தும்.

௧௪. ஆவகை - அவ்வகை. வயங்கும் - விளங்கும். ஓவரும் - நீங்குதலில் லாத.

௧௫. தரு - மரம். சலியா - வெறுக்காத. கரு சாடும் - பிறவியைப் போக்குகின்ற.

௧௬. திருச்சயிலம் - சீபருப்பதம். சித்த வடம், ஓர் வைப்புத்தலம்; இது திருவதிகைக்கு அருகிலுள்ளது.

அப்பதியின் எஞ்ஞான்றும் மகிழ்கூர்ந்து நின்னொடுநாம் அமர்வேம் அவ்வூர், பற்பலர்சூழ் அவிமுத்தத் தலத்தினும்மேம் பட்டதுவாம் அவிமுத் தத்தின், இப்புவனங் காப்பயாம் விச்சுவநா தப்பெயரான் இலிங்கந் தாபித், தொப்பருஞ்சீர் பெறவைத்தேம் காஞ்சிநகரிடத்தொருமா மூலந் தன்னில். கஅ

தோற்றம்நிலை இறுதிமறைப் பருளென்னும் ஐந்தொழிலும் நடாத்த யாமே, ஏற்றமுடை ஏகம்ப நாதனெனுந் திருப்பெயர்பூண் டிலிங்க மானேம், தேற்றும்இத னற்காஞ்சி எவற்றினுக்கும் அதிகமெனத் தெளிவாய் அங்கண், போற்றிஒரு நாளேனும் அமர்ந்துறையின் முத்திநிலை புகுத லாமால். கக

வழிச்செலவிற் புகுந்தேனும் மறந்தேனும் பொருளாசை மருவி யேனும், கழிப்பருஞ்சீர்க் காஞ்சியினிற் கணப்பொழுது வதிந்தோருங் கலப்பர் முத்தி, பழிப்பிலாக் காஞ்சியெனத் தன்னியல்பான் ஒருபொழுது பகரிற் கண்ணில், ஒழிப்பரும்பா தகமனைத்தும் ஒழிந்துபெருந் துறக்கவீ டுறுதல் உண்மை. உ௦

அக்காஞ்சி கலிநாசப் பொருட்டுநாம் படைத்துவைத்த தாதலாலே, எக்காலும் அந்நகரின் அகத்துயரும் வினைத்துயரும் எய்தாவாகும், மைக்காளஞ் சுவைஅமிழ்தின் மணந்தவிழி மணிநீவி அல்குல் எட்டுத், திக்காளர் தமைப்பொதியும் பெருங்கீர்த்தி நகரவளஞ் சிறிது கேட்டி. உக

கலிமுதல்தீங் கணுகரிய வேலியெனச் சூழ்பொழிலுங் காவல்மாறு, நிலையுடையுட் சேனையெனக் குவளைவிழி நந்தனநீள் வனமுந்தேவ, குலநிறைபஃ றீபமென நிரைக்கமலக் குளிர்தடமுங் கயிலை

---

கஅ. அவி முத்தம் - காசி. இதனை, 'இறக்க முத்தி தருவது' என்னும் பொருளுடையதாகக் கொள்ளலாம். பிறவாறுங் கூறப்படும்.

உ௦. வதிதல் - வசித்தல். பகரில் - சொன்னல். கண்ணில் - நினைத்தால். துறக்கம் - சுவர்க்கம். துறக்க வீடு, உம்மைத் தொகை.

உக. நீவி - ஆடை. நீவி அல்குல் என்பது அன்மொழித் தொகைப் பெயராய் அண்மை விளி ஏற்றது.

உஉ. குவளை, விழித்த கண்களையுடைய தென்பதனைக் குறித்தது. தேவ குலம் - கோவில். பல்+தீபம்=பஃறீபம்.

தன்னில், இலகுறுபல் குவடென்னப் பலதளியும் உடைத்தாகும் எறிநீர்க் காஞ்சி. ௨௨

பம்பைகம்பை புண்ணியநீர் மஞ்சள்நதி வேகவதி பாலி சேயா றென்பனஎ முலகும்இடும் ஏழ்மாலை யெனஒழுகும் எய்துவோரைச், செம்பதுமக் கரமெடுத்து விரையநகர் விளிப்பதுபோல் தெங்கு நீளும், வம்பவிழ்பூஞ் சோலைகளுள் மழைமறைத்த கதிர்போல வயங்கும் மூதூர். ௨௩

ஐயிருநூற் றுயர்சாகை சாகைகளாப் படைத்திங்கண் அமர்ந்து வாழும், ஐபனே என்முதலென் றெழுகோடி மனுக்கள்உப மனு வால் யார்க்கும், ஐயமறத் தெரிவிக்கும் மறைமாவின் சாரூபம் அடைந்தபோலும், ஐயநறு மாம்பொழில்கள் எஞ்ஞான்றுங் கனி களுறு தமலும் ஆங்கண். ௨௪

விப்பிரர்கள் முதல்நால்வர் சங்கரர்செய் தொழிலர்மயிர் வினை ஞர் செக்கார், செப்பிடையர் தச்சர்கொல்லர் பொன்வினைஞர் தேவ கணிகையர்கள் கூத்தர், விற்புருவப் பரத்தைமுத லோர்தெருக்கள் கலப்பின்றி வெவ்வே றாகிப், பொற்பநீண் டகன்றொழுங்காய் மதிக் கணிசெய் கதிர்களெனப் பொலியும் ஆங்கண். ௨௫

தந்தைதாய் இரண்டொழியப் பிறவெலாங் கொளத்தகும்ஆ வணங்கள் மல்கும், எந்தஊர் வேதவே தாந்தங்கள் மூவுலகும் எடுத்

---

௨௩. புண்ணியம் என்பது ஒரு நதி. பம்பை முதலிய ஏழு நதிகளும் இங்குக் கூறப்பட்டமை காண்க. வம்பு - வாசனை. மழை - மேகம்.

௨௪. சாகை இரண்டனுள் முன்னது வேதசாகை; பின்னது மாமரத் தின் கிளை. ஏழுகோடி மனுக்கள் - சப்தகோடி யகாமந்திரங்கள். கோடி - முடிட; எனவே ஏழுவகையான முடிபுகளையுடைய மந்திரங்களென்பதாம். அம் முடிபுகள் நம:, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், பட், ஹூம் பட் என்பனவாம். ஐய - அழகிய. அமலும் - நெருங்கும். இறைவனுக்கு நிழல் செய்யும் மாமரம் என்றும் கனிகளுடைமையால், அது போல என்றும் கனிகளுடையவற்றை அதன் சாரூபம் அடைந்தனபோலும் என்றார்.

௨௫. விப்பிரர் - பிராம்மணர். செக்கார் - செக்காடுவோர். பொற்ப - அழகுண்டாக. மதி, நகருக்கு உவமை.

துக் கூறும், அந்தணரெனக்கோடி மடமயிலே கவ்வென்ப தயன்பே ரென்ன, முந்தும்இருக் கோதும்அஞ்சென் பகுதிஅடை வொடு பூசை மொழியும் மாதோ. உசு

திசைமுகனால் அஞ்சிக்கப் படுதலினால் காஞ்சியெனத் திசை போய் மல்கும், இசையுடைய திருபிரம லோகமென்றும் இதனைப் பேர் எய்து மாற்றான், அசைவிலா தங்குறைவோர் எல்லோர்க்கும் வீடுதவும் அவ்வூர் நாப்பண், வசைஇன்றித் திப்பியமாய்ப் புண்ட ரிகம் போல்எமக்கு வயங்கும் கோயில். உஎ

அங்கதனிற் சோதிலிங்க வடிவாகி யாம்என்றும் அமர்வேம் இவ்வா, றிங்கிரண்டாம் மறைவிளம்பும் சந்தோகா மறைஎம்மை ஒளிவான் என்னும், துங்கநகர் தஹ்ரப்பிரம புரமென்னும் இறுதி மறை சுவர்க்கமென்னும், பங்கமறு தயித்திரியஞ் சோதிசூழ் சுவர்க்க மெனப் பகரா நிற்கும். உஅ

அப்பிரம புரங்காஞ்சி நகரல்லால் வேறில்லை யாகும் என்றே, செப்பும்உப நிடதமெலாஞ் சிவாகமங்க ளொடுமுழங்குஞ்* செல்வீ இந்த, வைப்பினைச்சே யிடையானும் ஆயிடையா யினும்இருந்து

---

உசு. ஆவணம் - கடைவீதி. மல்கும் - நிறையும். இருக்கு - வேதம். அஞ்சென் பகுதி - 'அஞ்ச்' என்னும் தாது. க+அஞ்சி=காஞ்சி என்றுவது வடநூல் விதி.

உஎ. அசைவிலாது - நீங்காது. நாப்பண் - நடு. வசை - நிந்தை. திப் பியம், திவ்விய மென்பதன் திரிபு. புண்டரிகம் - தாமரை.

உஅ. இரண்டாம் மறை - யசுர் வேதம். சந்தோகா மறை - சாந் தோக்கியோப நிடதம் என்பர். தொல்காப்பியப் பாயிரத்தில், "அறங்கரை நாவின் நான்மறை முற்றிய" என்புழியும், கலித்தொகைக் கடவுள் வாழ்த்தில், "ஆறறி யந்தணர்க் கருமறை பலபகர்ந்து" என்புழியும் நச்சினார்க் கினியர், 'மறையாவன: தைத்திரியமும், பௌடியமும், தலவகாரமும், சாம வேதமு மாம்' என்றார். அவைகளில் தலவகாரம் என்பதற்குப் பதிலாகச் 'சந்தோகம்' என்பது நாலாயிரப் பிரபந்தம் பெரிய திருமொழி எ, எ, உ-ல் "சந்தோகா பவுழியா தைத்திரியா சாமவேதியனே" என வருகின்றது; சந்தோகம், சாமம் என்றல் ஈண்டுப் பொருந்தாது. இறுதிமறை - அதர்வவேதம்.

[*'முழக்கும்' எனவும் பாடம்.]

வணங்கிற் கண்ணில், எப்பெரும்பா வமும்நீங்கி வீடெய்தும் உனக்குண்மை இயம்பி னேமால். உகூ

என்றிறைவன் உலகுய்ய வினவுமலைப் பெருமாட்டிக் கியம்பும் வாய்மை, அன்றுவினை வியசனற்கு மாரனுக்குத் திருநந்தி உரைத்தான் அன்னோன், வென்றபொறி வாதரா யணற்குரைப்ப அவனெனக்கு விளம்பல் செய்தான், குன்றனைய பெருந்தவத்தீர் சிவனைக்காண் பதற்கேது இதுவே கொண்மின். நூ0

நூற் பயன்

பரவருமந் தணமாகும் இக்காதை மெய்யன்பிற் படிப்போர் கேட்போர், கரிசுறுநோய் நீங்கிநெடு நாட்புவியின் மக்களொடுங் களித்து வாழ்ந்து, வரகுணராய் மறுமையினும் பெரும்போகம் இனிதுண்டு மாறு முத்தி, விரவுவர்என் றுளங்கொள்வச் சூதமுனி முனிவரர்க்கு விளம்பி னனால். நூக

ஆகத் திருவிருத்தம்—சசச.

---

## உரை நடை

---

முன்பு ஒருகால் திருக்கைலையில் சிவபெருமான், தேவர்களும் தங்கள் இமையா நாட்டத்தை இமைக்கும்படி ஒளி வீசுகின்ற இரத்தினங்களால் இழைக்கப்பட்ட பொன்மயமான மண்டபத்தில், பொன்னாலும் மணிகளாலும் அமைந்த அழகிய சிங்காதனத்தில், வெண்கொற்றக்குடை நிழற்றவும், சாமரை இரட்டவும், இரண்டு குமாரர்களும் இரண்டு பக்கத்தில் அமர்ந்திருக்கவும், பூதகணங்கள் அருகில் நின்று துதிக்கவும், திருமால் முதலிய தேவர்கள் தூரத்தே நின்று வணங்கவும், ஊர்வசி முதலிய அரம்பையர்கள் ஆடவும், தேவ கூட்டத்தை விலக்கி முறையாகவிட்டு அருள் பெற்றுப்போகச் செய்யும் சிறந்த பணியை யான் (நந்திதேவர்) செய்யவும் உமாதேவியாரோடும் வீற்றிருந்தருளினர்.

---

உகூ. செல்வீ, விளி. சேயிடை - தூரம். கண்ணில் - நினைத்தால்.

நூ0. வாதராயணன் - இலந்தைக் காட்டில் வசிப்பவன், வியாசர்.

நூக. பரவரும் - வெளிப்பட்டுச் செல்லாத. மந்தணம் - இரகசியம். கரிசு - குற்றம். வரகுணம் - மேலான குணம். விரவுவர் - கலப்பர். விளம்பினன் - சொன்னன்.

அப்போது உமாதேவியார் எழுந்து சிவபெருமான் திருவடிகளை வணங்கிச் சொல்லுகின்றார். 'சுவாமீ, முத்திப்பேறு தேவரீருடைய திருவடித் தரிசனத்தினாலேயே கிடைப்பதாகும். அத்தரிசனம் வேதாந்தங்களை ஆராய்ந்து, தவம் தியானம் நிட்டைகளில் முதிர்ந்தவர்க்கல்லது ஏனையோர்க்கு அரியதினும் அரியதாகும். அங்ஙனமாக, ஏனைய மக்களும் விலங்கும் பறவைகளும் தேவரீரைத் தரிசித்து முத்தியடைதல் எவ்வாறு?' என்று வினவியருளினார். அதனைத் திருச்செவி ஏற்ற பெருமான், உயிர்களெல்லாம் உய்யும்படி அருள் மிகுந்து திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

'ஏ தேவீ, உலகம் முற்றும் நிறைந்து நிற்கின்ற நமக்கு நான்கு பாதங்கள் உள்ளன. அவைகளில் ஒரு பாதம் மண்ணுலகம் முதலிய கீழுலகத்திலும்' ஏனைய மூன்று பாதங்கள் மேலுலகத்திலும் பொருந்தும். அங்ஙனம் விளங்கும் நம்மை யாரும் அறியமாட்டார்கள். ஆயினும், உத்தமமாகிய தலங்களில் எல்லாரும் காணும்படி எழுந்தருளியிருப்போம்' என்று அருளிச் செய்தனர்.

அது கேட்ட உமாதேவியார் மகிழ்ச்சி மிகுந்து, 'அவ்வுத்தம தலங்களாவன யாவை?' என்று கேட்க, சிவபெருமான் அருளிச் செய்கின்றார். 'ஏ உமையே; திருச்சேது, திருவாலவாய் (மதுரை), திருச்சிராப்பள்ளி, திருவழுவூர், திருவையாறு, திருவிடைமருதூர், திருத்தில்லை, திருமுதுகுன்றம், திருவண்ணாமலை, திருவிரிஞ்சை, திருவோத்தூர், திருக்காஞ்சி, திருவாலங்காடு, திருக்காளத்தி, திருச்சைலம் (ஸ்ரீசைலம்), சித்தவடம், விரூபாக்கம், திரியம்பகம், திருக்கோகன்னம், திருஉச்சயினி மாகாளம்; காசி, திருக்கேதாரம், பிரபாசம், இமயமலை, திருக்கைலை முதலாக அளவிறந்தனவாகும்' என்று அருளிச் செய்தனர், பின்னும் இறைவியார், 'அவைகளினும் மிகச் சிறந்ததலம் எது?' என்று வினவினர். இறைவனார்; உமையே, அவ்வெல்லாத் தலங்களினும் சிறந்தது புண்ணியம் மிகுந்த திருக்காஞ்சித்தலமேயாகும். அக்காஞ்சியம்பதியை நினைத்தாலும் கேட்டாலும் சொன்னாலும் வணங்கினாலும் எத்தகையோர்களுக்கும் பேரின்ப வீட்டை அளிக்கும்.

அத்திருப்பதியில் நாம் எக்காலத்திலும் உன்னோடு நீங்காது வீற்றிருப்போம். அத்தலம் காசியினும் மேலானதாகும். எதனாலெனின், காசியில்; நாம் இவ்வுலகத்தைக் காப்பாற்றுதற் பொருட்டு, 'விசுவநாதன்' என்னும் பெயரால் ஒரு இலிங்கத்தைத் தாபித்து வைத்தோம்; காஞ்சியில்; படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலையும் இயற்றுதற்கு ஒரு மாவடியில் 'ஏகம்ப நாதன்' என்னும் திருப்பெயரால் நாமே இலிங்க மாயினோம்; இதனால் அத்தலம் சிறந்ததாகும்.

வழிச்செலவிற் புகுந்தாயினும், மறதியாலாயினும், பொருளாசையாலாயினும் காஞ்சியம்பதியில் ஒருநொடி நேரம் தங்கினவர்களும் முத்தியை அடை

வார்கள். 'காஞ்சி' என்று ஒரு முறை நற்செயலாகச் சொன்னாலும் நினைத்தாலும், எல்லாப்பாவங்களும் நீங்கிப் பெரிய மோட்சத்தை அடைதல் உண்மையாகும்.

அக்காஞ்சியம்பதி, கலி நாசத்தின் பொருட்டு நம்மாற் படைத்து வைக்கப்பட்ட தாதலால், அவ்விடத்தில் எக்காலத்திலும் மனத்துன்ப மாயினும், வினையால் வரும் துன்பமாயினும் அணுகமாட்டா. அந்நகரத்தின் வளப்பத்தையும் சிறிது கேள்: வறுமை முதலாகிய தீமைகள் அணுகாதபடி அமைத்த அரண் போன்று சூழ்ந்துள்ள சோலைகளையும், அவ்வரணுக்குள் இருக்கும் சேனைகள் போல நீலோற்பலமாகிய கண்களையுடைய நந்தவனங்களையும், தேவாலயங்களில் ஏற்றப்பட்ட விளக்குகள் போன்ற செந்தாமரை மலர்கள் பூத்த தடாகங்களையும் உடையதாகும் அக்காஞ்சிமா நகரம். இன்னும் அந்நகரத்தில் பம்பை நதி, கம்பை நதி, புண்ணிய நதி, மஞ்சள் நதி, வேகவதி நதி, பாலி நதி, சேய் நதி என்னும் ஏழு நதிகளும் ஏழுலகமும் அதற்குச் சூட்டிய மாலைகள் போலப் பெருகிக் கொண்டிருக்கும். காஞ்சி மாநகரம் தன்னிடத்து வருகின்றவர்களைக் கையைத் தூக்கி விரைந்து வாருங்கள் என்று அழைப்பது போலத் தென்னை மரங்கள் ஓங்கி வளரும். அந்நகரம் பூஞ்சோலைகளுள் மறைந்து விளங்குதல், சூரியன் மேகங்களில் மறைந்து விளங்குதல் போலும். அந்நகரத்திலுள்ள ஏனைய மாமரங்களும் வேதமாவாகிய ஒற்றைமா மரத்தின் சாரூபத்தை அடைந்தாற் போல எக்காலத்திலும் மாறாது கனிகளை நிரம்ப உடையனவாய் இருக்கும். அந்தணர் முதலியோர்கள் வாழும் தெருக்கள் வகைவகையாக ஒழுங்காய் அழகுபெற நீண்டு சந்திரனுக்கு அழகு செய்கின்ற கிரணங்கள் போல விளங்கும். தந்தை தாய் என்னும் இரண்டு தவிர வேறெந்தப் பொருளையும் பெறுதற்கரிய கடைத் தெருக்கள் நிறைய உள்ளன.

ஓ தேவீ, எந்த ஊரானது வேதவேதாந்தங்களாலும் மூன்றுலகத்திலும் உள்ளவர்களாலும் சிறந்தெடுத்துப் பேசப்படுமோ அந்த ஊர் காஞ்சி எனப்படுமென்று அறிவாயாக. க - பிரமன், அஞ்ச் - பூசை எனப் பொருள் தருமாதலால் காஞ்சி என்பது 'பிரமனால் அஞ்சிக்கப் (பூசிக்கப்) பட்டது' என்னும் பொருளுடையதாம். (க+அஞ்சி=காஞ்சி). இதனால், அந்நகரம் பிரமலோக மெனவும் பெயர் பெறும். அங்கு வசிப்பவர்க் கெல்லாம் வீடு பேற்றைத் தருவதாகிய அக்காஞ்சியம்பதியின் நடுவில், திவ்வியமாய்த் தாமரை மலர் போன்று ஒரு திருக்கோயில் விளங்கும். அத்திருக்கோயிலில் எந்நாளினும் யாம் சோதிலிங்க வடிவமாக எழுந்தருளியிருப்போம். இவ்வாறு இரண்டாம் வேதமாகிய யசுர் வேதம் கூறும். சாந்தோக்கியோப நிடதம் எம்மைச் சிதாகாச மெனவும், அந்நகரத்தைப் பிரமபுரமெனவும் கூறுகிற்கும். அதனை, அதர்வண வேதம் சுவர்க்க மெனவும், தைத்திரிய சுருதி சோதி சூழ்ந்த

சுவர்க்கமெனவும் கூறும். எல்லா உபநிடதங்களும் சிவாகமங்களோடு கூடிப் பிரமபுரமாவது காஞ்சியே வேறில்லை என்று சொல்லும். அத்தலத்தை, தூரத்திலிருந்தாயினும் அவ்விடத்திலிருந்தாயினும் வணங்கினால் எத்தகைய பெரிய பாவங்களும் நீங்கி முத்தி கைகூடும். இவ்வுண்மையை உனக்கு எடுத்துச் சொன்னோம் என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினர் என்று நந்திதேவர் சனற்குமார முனிவருச் சொல்லியருளினர். அதனை அவர் வியாச முனிவர்க்குச் சொல்ல அவர் எனக்குக் கூறியருளினர்.

முனிவர்களே, சிவபெருமானைக் காணுதற்குரிய உபாயம் இதுவேயாகு மென்று கொள்வீர்களாக. மறைபொருளாகிய இவ்வரலாற்றைப் படிப்பவர் களும் கேட்பவர்களும் நோய்நீங்கி, இம்மையில் பூவுலகத்தில் மக்களோடு மகிழ்ந்து வாழ்ந்திருந்து, மறுமையில் சுவர்க்க லோகத்தையும் அடைந்து, நீங்காத வீட்டை அடைவார்கள் என்று நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூதமுனிவர் சொல்லியருளினர்.

---

# திருநெறிக் காரைக்காட்டுப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மெய்த்தவர் யாவரும் அங்கது கேட்டு விழித்துணை நீர்வாரக்
கைத்தலம் உச்சி முகிழ்த்து மயிர்ப்புள கங்கள் மலிந்தயர்வார்
முத்தி பெறற்குயர் காரணம் இன்று தொகுத்து மொழிந்தனை நீ
அத்தல மேன்மை அனைத்தும் விரித்தரு ளென்றலும் அச்சூதன். க

கச்சியுள் எண்ணறு தீர்த்தம் நிறைந்துள காமுறு பலதானம்
பொச்சமில் போகமும் வீடும் அளிப்பன போக்கரு மேன்மையவாம்
அச்சம் அறுத்து வியாதன் எனக்கருள் செய்த முறைப்படியே
இச்சையின் ஓதுவல் அந்தணிர் கேண்மின் எனச்சொல லுற்றனனால்

இந்நக ரிற்புகல் சத்திய மாவிர தப்பெயரிற் குணபால்
தன்னிகர் மெய்த்தலம் ஒன்றுள தங்கமர் சத்திய விரதீசர்

---

க. மலிந்து - மிகுந்து. அயர்வார் - பரவசப் படுவார்; முற்றெச்சம்.

உ. நிறைந்துள என்பது முற்று. காமுறு - விரும்புகின்ற. தானம் - இடம், தலம். பொச்சம் - பொய். போக்கரும் - நீக்குதலில்லாத.

ந. பெயரின் - பெயரால். குணபால் - கிழக்குப் பக்கம்.

என்னை யுடைப்பெரு மாட்டியும் ஓரிரு மைந்தரும் உடன்மேவ
மன்னி இருத்தலின் அத்தல மேன்மையை யாவர் வகுக்கவலார். ௩

சத்திய சத்தியர் சத்திய சோதகர் சத்திய சங்கற்பர்
சத்திய காமர் இருத்தலின் அப்பதி சத்திய விரதமதாம்
சத்திய நன்னெறி யார்க்கும் விரைந்தருள் செய்துறு தானமதிற்
சத்திய மாவிர தத்தடம் ஒன்றுள தத்தட நீராடி. ௪

புதனமர் நாளினில் நீர்க்கட னதி பொருந்த முடித்தங்கண்
இதமுறு சத்திய மாவிர தீசரை ஏத்தி வணங்குநர்தாம்
கதவினை* தீர்ந்தருள் உண்மை உணர்ந்து கலப்பர்கள் முத்தியினை
மதமுறு காம மயக்கம் அனைத்தும் அறுத்துயர் முனிவீர்காள். ௫

மனைவியர் மக்கள் நிலங்கலை செல்வமும் மற்றெவை வேண்டினும்
அனையவை முற்றும் அளித்துபர் வீடும் அளித்திடும் அத்தீர்த்தம்
இனைய தடம்பதி இந்திர தீர்த்தமும் இந்திர புரமுமெனப்
புனைபெய ரும்பெறும் அப்பெயர் எய்திய காரண மும்புகல்வேன். ௬

இந்திரன் அரசிழக்கை

மதுமல ராளிதன் மேதகு கற்பம் வராகம தறும்ஆறும்
முதுமனு வந்தர நாட்சிவி என்றொரு வாசவன் முன்னுளனல்

௪. சத்தியம் - உண்மை. சத்திய சத்தியர் - அழியாத உண்மையுடைய வர். சத்திய சோதகர் - உண்மையைத் தொழிற் படுத்துகின்றவர். உண்மை யான (தடைபடாத) தொழிற்படுத்துஞ் செயலை யுடையவர் எனினுமாம். சத்திய சங்கற்பர் - உண்மையான நினைவுடையவர்; உண்மையான நினைவாவது நினைத்தவற்றை நினைத்தவாறே செய்வது. சத்திய காமர் - உண்மையை விரும்புபவர். நன்னெறி - முத்தியாகிய நன்மைக்கு வாயிலாயுள்ளது, ஞானம். இது திராவிட மாபாடியத்திற் கண்டது. (சூ. அ. அதி. க.)

௫. அமர் - விரும்புகின்ற. இதம் - இன்பம். கதம் - கொடுமை. *'கதழ் வினை' எனவும் பாடம்.

௭. மலராளி - பிரமன். கற்பம் - ஒரு கால அளவை. அது நித்ய கற்பம், மகா கற்பம் என இரண்டு வகைப்படும். நித்திய கற்பம் என்பது பிரமன் நாள். மகா கற்பம் என்பது பிரமன் வாழ்நாள். அவற்றுள் இது நித்திய கற்ப மென்க. ஒவ்வொரு கற்பமும் அதன்கண் நிகழும் நிகழ்ச்சியாற் பெயர் பெறும். பிரளய வெள்ளத்தில் அழுந்திய உலகத்தைத் திருமால் வெள்ளைப் பன்றி வடிவங்கொண்டு தனது கொம்பினால் எடுத்து நிலைநிறுத்திய கற்பம்

விதுவினை ஒப்பன் அரம்பைய ராகிய மென்குழ றங்களிடைப்
பொதுவறு தானவ மாக்கட லுக்கு வடாதெரி கனல்போல்வான். ௭

கடவுளர் சேனைப் பங்கய பானு கற்சிறை அரிவயிரப்
படையவன் ஓர்நாட் கடவுள் அவைக்கட் பாசிழை வெதிர்பொருதோள்
படவர வல்குற் சசிபுடை மேவப் பன்மணி அரியணைமேல்
வடிவ மடங்கல் மேலோர் மடங்கல் போன்மென வைகினனால். ௮

இருபுடை வெண்கவ ரித்தொகை துள்ள மிசைக்குடை எழில்செய்ய
விருதுகள் மாகதர் சூதர் முழக்க வியன்மணி மாநிதியைந்
தருவொடு தேனு விழிக்கடை நோக்கினை நோக்குபு தலைநிற்ப
அருகுறு கின்னரர் யாழ்அமிர் தஞ்செவி ஆர விருந்தயர. ௯

மணங்கமழ் தோளணி கற்பக மாலை துளித்த மதுப்புனல்பாய்ந்
துணங்கரும் இன்ப விழிப்புனல் ஒப்ப உறைந்து விழிக்கெல்லாம்

---

சுவேதவராக கற்பம் எனப்படும் என்க. வராகமதுறும் கற்பம் எனக்கூட்டுக. மனு வந்தரம் - மனுவின் காலம். மனுக்கள்: சுவாயம்பு, சுவாரோசிஷன், உத்தமன், தாமசன், இரைவதன், சாட்சுஷன், வைவச்சுதன், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, உருத்திரசாவர்ணி, உரோச்சியன், பௌமியன் எனப் பதினால்வர் உளர் என்ப. ஒவ்வொரு மனு வந்தரத்திற்கும் ஒவ்வோர் இந்திரராகப் பதினான்கு இந்திரரும் உளர் என்ப. அவர்கள்: அரி, விபச்சித்து, சுசாந்தி, விபு, மனோசவன், சிபி, புரந்தரன், மாவலி, அற்புதன், சாந்தி, விருடன், இருததாமன், திவற்பதி, சுசி என்பவர்களாம். இப்போது வைவச்சுத மனுவந்தரம். இப்பதினான்கு இந்திரர்களும் அழிந்தால் பிரமனது பகற்காலம் முடியுமென்க. விது - சந்திரன். வடாதெரிகனல் - வடவாமுகாக்கினி.

௮. பானு - சூரியன். கல் - மலை. வயிரப்படை - வச்சிராயுதம். பாசிழை - பசுமையான ஆபரணம். வெதிர் - மூங்கில். சசி - இந்திராணி. அரியணை - சிங்காதனம்.

௯. விருது - கீர்த்தி. மாகதர் - இருந்தேத்துவோர். சூதர் - நின்றேத்துவோர். விழிக்கடை நோக்கினை நோக்குதல் - கடைக்கண் பார்வையின் குறிப்பை நோக்கிநிற்றல். தலைநிற்ப - (விரும்பியவற்றைக் கொடுத்தலில்) முற்பட்டுநிற்க. அயர - செய்ய.

௧௦. உணங்கரும் - கெடுதலில்லாத. உறைந்து - துளித்து, சிந்தி. அணங்கு - வருத்தம், சாந்தாற்றி - விசிறி. நுணங்கு - சிறுத்த, நொய்தின் - மெல்ல.

அணங்கு புரிந்திடல் கண்டு புலர்த்துநர் போல்அவிர் சாந்தாற்றி
நுணங்கிடை மங்கையர் ஒவற எங்கணும் நொய்தின் அசைந்தனுக.

அரம்பை உருப்பசி மேனகை முதலிய அரிமதர் விழிமடவார்
நிரம்பிய காம நலங்கனி அவிநய நெறிமுறை கரம்அசையப்
பரம்பு மிடற்றிசை விம்மிட விழிஇணை புடைபெயர் பயில்வினொடும்
வரம்பெறும் அற்புத மின்னவிர் கொடியென மகிழ்நடம் எதிர்புரிய.

மருத்துவர் வானவர் கின்னரர் சித்தர் வசுக்கள் மருத்துக்கள்
உருத்திரர் சாத்தியர் கந்தரு வத்தர் உடுக்கள் நவக்கோள்கள்
திருக்கிளர் மெய்த்தவர் யோகிகள் கைஇணை சென்னி மிசைக்குவியா
நெருக்கினுள் எய்தி இறைஞ்சி மருங்குற நிரல்பட நிற்பவரோ. கஉ

கணங்கொள் தயித்தியர் யாவரும் வந்து கடைத்தலை வாய்தலின்மாட்
டுணங்குபு செவ்வி கிடைத்திலர் நிற்ப ஒழிந்தவர் தங்குறைதீர்த்
தணங்கரும் இன்பவெள் ளத்தில் அழுந்தி அளப்பரு செல்வத்தான்
இணங்கலர்கோளரி இன்னணம் மேவுழி எண்ணினன் இவையெல்லாம்

இந்திரன் அரசியலை வெறுத்தல்

ஷை வேறு

இருவினை ஒப்பு வாய்ந்த பருவம்வந் தெய்தலாலே
மருவருந் துறக்க வைப்பின் அரசியல் வாழ்க்கை தன்னை
அருவருத் துவர்த்துக் காவற் சிறையிடை அகப்பட் டோரின்
வெருவரும் பகைக்கும் அஞ்சும் வேறிவை கருத்துட் கொள்வான்.

---

கக. அரி - செவ்வரி. மதர் - களிப்பு. பரம்பு - பரவிய. வரம் - மேன்மை.

கஉ. மருத்துவர் - தேவ வைத்தியர், அசுவினி தேவர்கள். மருத்துக்கள் - கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, கீழ், மேல், பல் யோனி யுயிர் எனவும், திதி என்பவள் வயிற்றில் இந்திரனால் கூறுபடுத்தப்பட்டுப் பிறந்து காற்று வடிவமாய்ச் சஞ்சரிக்கும் நாற்பத்தொன்பதின்மர் எனவும் கூறுவர். சாத்தியர் - தருமன் புதல்வர் பன்னிருவர் என்ப. நிரல்பட - வரிசையாக.

கங. கணம் - கூட்டம். தயித்தியர் - அசுரர். உணங்குபு - வாடி. செவ்வி - சமையம். அணங்கரும் - துன்பமற்ற. இணங்கலர் - பகைவர். கோளரி - சிங்கம்.

கச. துறக்கவைப்பு - சுவர்க்கலோகம். அருவருத்து - கூசி. உவர்த்து - வெறுத்து. வெருவரும் அஞ்சும் என்பன தம்முள் சிறிது வேற்றுமையுடையன.

அழியும்இவ் விடய வாழ்விற் களித்திருந் தந்தோ கெட்டேன்
பழிபவக் கடலிற் காலப் பாந்தள்வாய்க் கிடந்தும் நாணேன்
வழிமுறை அறியா மாய வல்லிருட் படுகர்ச் சேற்றுள்
இழியும்ஊர்ப் பன்றியேபோல் உழந்தனன் அறிவு நன்றால். கரு

அருவினை உலகம் எல்லாம் படைத்தளித் தழிக்கும் காலம்
கருவுறும் எவையும் கால வயத்தவாம் காலந் தான்மற்
றொருபொருள் வயத்த தன்றால் உந்தியோன் கற்பத் தீரேழ்
பொருவில்இந் திரர்கள் மாய்வர் பொன்றுவர் மனுக்கள் தாமும். கசு

ஓதும்இக் கற்பம் வேதற் கொருதினம் அந்நாள் முப்ப
தாதல்ஓர் மதியாம் திங்கள் ஆறிரண் டாயின் ஆண்டாம்
ஏதமில் வருடம் நூறேல் இருவகைப் பரார்த்த மாகப்
போதரும் போதில் அன்னான் பொன்றுவன் மன்ற மாதோ. கஎ

அம்மலர்க் கிழவன் காலம் அரிக்கொரு தினம்அன் னோனும்
அம்முறைத் திங்கள் கூடும் ஆண்டுநூ றெய்திற் பொன்றும்
அம்மவோ சீசீ இந்த அநித்திய* வாழ்வு வேண்டேன்
இம்மையில் வீடு பேற்றிற் குபாயமே அறிதல் வேண்டும். கஅ

எண்ணருந் தவம்தா னங்கள் பட்டினி எச்சந் தானோ
புண்ணிய நன்னீ ராடப் போதலோ முத்திக் கேது
நண்ணும்இவ் வினைத்துந் தேற நமக்கெலாங் குருவாம் பொற்பேர்
அண்ணலை வினாது மென்னத் துணிந்தனன் அமரர் கோமான். ககூ

அவையகத் துள்ளார்க் கெல்லாம் விடைஅளித் தெழுந்து போந்து
நவையற விரைவின் அந்தப் புரத்தினை நணுகி அங்கண்
புவிபுகழ் குரவற் கூவிப் போற்றிநின் றிதனை விள்வான்
சிவியெனத் திசைபோங் கீர்த்தித் தேவர்கட் கிறைவன் மன்னோ உ0

---

கரு. அந்தோ, இரக்கக் குறிப்பு. பழி - பழிக்கப்படுகின்ற. பவம் - பிறப்பு. பாந்தள் - பாம்பு. இருள் என்புழி ஏழனுருபு விரித்து உழந்த என்பதனுடன்இயைக்க. அறியா - அறியாத. படுகர் - பள்ளம். உழந்த - துன்புற்ற.

கஎ. பரார்த்தம் - பிரமன் வாழ்நாளிற் பாதி.

கஅ. * 'அனித்திய' எனவும் பாடம்.

ககூ. எச்சம் - வேள்வி. பொன்பேர் அண்ணல் - வியாழன், பிருகற்பதி.

உ0. நவை - குற்றம். விள்வான் - சொல்வான். அந்தப்புரம் - தனியிடம்.

இந்திரன் தேவதருவிடம் முறைகூறல்

இவ்வர சியற்கை தன்னில் இனிஎனக் காசை இல்லை
அவ்விதி முகுந்தன் ஏனோர் வாழ்க்கையும் அவாவு கில்லேன்
மெய்வகை உணர்ந்து முத்தி மேவுதற் குபாயம் ஒன்று
செவ்வன்ஓர்ந் துரைத்தி என்னத் தேசிகன் தேர்ந்து சொல்வான் உக

இந்திரனுக்கு தேவதரு உபதேசித்தல்

நன்றுநீ வினைய முத்தி நற்றவம் வேள்வி தானம்
கன்றுபட் டினிவே றொன்றாற் காண்பரி தாகும் மைந்தா
துன்றிய மாய வாழ்க்கைத் தொடக்கறுத் துய்யக் கொள்வான்
என்றும்எம் பெருமான் உள்ளான் அவன்திறம் இயம்பக் கேட்டி. உஉ

கலி விருத்தம்

குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அநாதியின்* நீங்கி நிற்றலின்

---

உஉ. நற்றவம் என்றதற்கு முன்னர் (கசுஎஆம் பக்கம்) உரைத்தாங் குரைக்க. கன்று - வருந்துதற்கு ஏதுவாகிய. தொடக்கு - பிணிப்பு. திறம் - இயல்பு.

உங. குறைவிலா-நிறைந்த.'சிவம்' என்பதற்குமங்கலம்என்னும்பொருள் உண்மையாலும், இறைவன், அதனை முற்றவுடையனுதலும், அமங்கலத்திற்கு ஏதுவாகிய மலத்தொடர்பை இயற்கையாகவே நீங்கி நிற்றலும் உடைமை யாலும், 'குறைவிலா........ அறைகுவர் சிவனென' எனவும், அறிவின் மிக் கார்க்கே இவற்றை யறிதல் கூடுமென்பார், 'அறிவின் மேலவர்' எனவும் கூறினர்.

'சிவம்' என்பது, சிவ என்பதன் அடியாகப் பிறந்து, சிவப்பு நிறத்தோடு செம்மைப் பண்பை உணர்த்தி, இறைவனது என்றும் மாறுபடாத செம் பொருட்டன்மையாகிய மங்கலத்தை உணர்த்துமென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. இறைவனைச் செம்பொருளென்றல் தமிழ்ச் சான்றோர்கள் வழக்கு என்பதை, "சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு" (குறள், ௩௫௮.) என்னும் மறைமொழி விளக்கும்.

இறைவன் அருட்டிருமேனி செந்நிறத்த தாதல்பற்றியும் சிவனெனப் படுவன். "சிவனெனு நாமந் தனக்கே யுடைய செம்மேனி யெம்மான்" (திரு மு. ௪. பதி. கக௨-௯.) என்று அருளிச்செய்தமை காண்க.

இறைவன் எப்பொருளினும் சிவணி நிற்றல்பற்றியும் சிவனெனப் படு

[*'அனாதியின்' எனவும் பாடம்.]

அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்
இறையவன் பெருமையை யாவர் கூறுவார். உங

மேலெனப் படுவன எவைக்கும் மேலவன்
மாலெனப் படுவன எவையும் மாற்றுவான்
நூலெனப் படுபவன எலாம்நு வன்றவன்
வேலெனப் படும்விழி பாகம் மேயினான். உச

பங்கயன் றன்னைமுன் படைத்து மால்முதல்
புங்கவர் தம்மைப்பின் உதவும் பொற்பினான்
அங்கவன் இலனெனில் அகில லோகமும்
பொங்கிய வல்லிருள் பொதிந்த நீரவே. உரு

பகல்இர விலதுள தெனும்ப குப்பிலா
அகலரும் இருள்பொதி அநாதி காலையில்*

---

வன் என அறிஞர்கள் கூறுவார்கள். சிவனி நிற்றலாவது, சத்தியும் சிவமு மாகிய தன் தன்மை அவை எல்லாவற்றிலும் புலப்பட்டுத் தோன்ற நிற்றல். இதனை, "தாவில்சரா சரங்களெலாம் - சிவம் பெருக்கும் பிள்ளையார்" எனவும், "நிற்பனவும் சரிப்பனவும் சைவமேயாம் நிலைமைஅவர்க் கருள்செய்து சண்பை வேந்தர்" எனவும் (பெரிய. ஞா. உகூ, கூஉகூ) வரும் அருள்மொழி களாலுணர்க.

இனி, வடமொழியில் 'சீ' என்னும் தாதுவுக்குக் கிடத்தலென்னும் பொருளுண்மையால், 'இறுதிக்காலத்து உலகம் தன்னிடத்து ஒடுங்கிக்கிடத்த லாலும், சற்சனங்களுடைய மனங்கள் தன்பாற் கிடத்தலாலும் இறைவன் சிவனெனப் படுவன்' எனவும், 'சி' என்னும் தாதுவுக்கு மெலிவித்தல் கூரு வித்தல் என்னும் பொருளுண்மையால், 'ஆன்மாக்களின் பாசசத்தியை மெலி வித்துச் சிற்சத்தியைக் கூருவித்தலால் சிவனெனப்படுவன்' எனவும் 'காந்தி யென்னும் பொருள் தரும் 'வசி' என்னும் சொல் எழுத்து நிலைமாறி 'சிவ' என நிற்றலால் சிவனெனப்படுவன்' எனவுங் கொள்வர்.

உசா. அநாதி காலை - காலத்திற்கு அப்பாற்பட்டநிலை. உகலரும் - அழி வில்லாத. உளன் என்புழி, 'அப்போது' என்பது எஞ்சி நின்றது. மிகும் உணர்வு - தடையிலா ஞானமாகிய பராசத்தி. படுதலாலென்பது பட்டெனத் திரிந்து நின்றது, "எழுவாரையெல்லாம் பொறுத்து" (குறள். கoகூஉ.) என்புழிப் போல. வெளிப்படுதல் - திரோதான சத்தியென நின்று, இச்சை

[* 'அநாதிகாலை' எனவும் பாடம்.]

உகலரும் பரசிவன் ஒருவனே உளன்
மிருமுனர் வவனிடை வெளிப்பட் டோங்குமால். உகூ

எங்குள யாவையும் இவன்வ யத்தவாம்
எங்கணும் இவன்ஒரு வயத்தின் எய்திடான்
எங்கணும் விழிமுகம் எங்கும் கால்கரம்
எங்கணுந் திருஉரு இவனுக் கென்பவே. உஎ

அரியயன் அமரர்கள் அசுரர் யோகிகள்
இருளறு வேதவே தாந்தம் யாரும்இப்
பெரியவன் அடியிணை காணும் பெட்பினல்
தெரிகிலர் மாறுகொண் டின்னுந் தேடுவார். உஅ

அவனவள் அதுவெனும் அவைதொ றேன்றும்இச்
சிவனலான் முத்தியிற் சேர்த்து வார்இலை
துவளரும் இம்முறை சுருதி கூறுமால்
இவனடி வழிபடின் முத்தி எய்துவாய். உகூ

---

ஞானங் கிரியை என முத்திறப்பட்டு வியாபரித்தல். ஓங்கும் என்பதற்கு உலகெலாம் என்னும் வினைமுதல் வருவித்துரைக்க.

உஎ. அவனன்றி ஓர் அணுவும் அசையாதாகலான், 'எங்குள யாவையும் இவன் வயத்தவாம்' என்றும், தான் ஆர்க்குங் குடியல்லாத் தன்மையான பெருமானுகலின், 'எங்கணும் இவனொரு வயத்தின் எய்திடான்' என்றும் கூறினர், இதனல் தன் வயத்தனுதல் பெறப்பட்டது. பின்னிரண்டடிகளை, "எங்கணும்பணி வதனங்கள் எங்கணும் விழிகள் - எங்க ணுந்திருக் கேள்விகள் எங்கணுங் கரங்கள் - எங்க ணுந்திருக் கழலடி எங்கணும் வடிவம் - எங்கணுஞ்செறிந் தருள்செயும் அறுமுகத் திறைக்கே" (கந்த. மகே. கா. அவைபுகு ப - கஙங.) என்றதனேடு ஒப்புநோக்குக. இதனல் வியாபகத்தன்மை பெறப்பட்டது.

உகூ. உலகம் அவன், அவள், அது என்னும் மூன்று பகுப்புடைமையாலும், இறைவன் அவ்வெல்லாவற்றிலும் கலந்து அவையேயாய் நிற்றலாலும், 'அவன் அவள் அது எனும் அவைதொறு ஒன்றும் இச்சிவன்' என்றார். இம்முக்கூற்றுப் பிரபஞ்சத்தினும் இறைவன் கலந்து நிற்றலை, "பெண்ணவனை ஆணவனைப் பேடானுனை" (திருமு. சா. பதி. சா௦. சா.) என்றற் றெடக்கத்து ஆசிரியத் திருமொழிகளாலும், மெய்கண்ட நூல்களாலும் உணர்க. 'அவன்... அவை' என்றது, "அவனவ ளதுவெனு மவை" (சிவஞா. சூ. க.) என்னும்

பன்னுவ தெவன்பல பரிந்து நெஞ்சினும்
அந்நியர் தமையொழித் தானை எத்துதி
இன்னதே வீட்டினுக் கேது வாமெனும்
பொன்னுரை மனக்கொடு புகலு வான்சிவி. ௫௦

குரவனே அயன்அரி குரவ னேசிவன்
குரவனே தந்தைதாய் குரவ னேயெலாம்
குரவனே என்று நூல் கூறும் உண்மையைக்
குரவனே என்னிடை இன்று காட்டினாய். ௫௧

உன்பெருங் கருணையால் உறுதி பெற்றனென்
இன்பொடும் எவ்விடத் தெவ்வி திப்படி
பொன்பொதி சடையனைப் போற்று மாறிது
அன்பொடும் அடியனேற் கருளு கென்றலும். ௫௨

கடலுடை வரைப்பினிற் காஞ்சி மாநகர்
இடனுடைக் குணக்கினில் எய்தி னாரெலாம்
விடலருஞ் சத்திய விரத தானத்தின்
முடிவில்சத் தியவிர தீசன் முன்பரோ. ௫௩

மேற்றிசைச் சத்திய விரத தீர்த்தமொன்
றுற்றவும் மேன்மைபெற் றுடைய தாயிடைப்
போற்றுறும் பசுபதி விரதம் பூண்டுசென்
றாற்றெழுந் துறுதடத் துதகம் ஆடியே. ௫௪

---

ஆசிரியர் மொழியைப் பொன்னேபோற் போற்றிக் கொண்டதென்க. சிவனலான் முத்தியிற் சேர்த்து வாரிலை என்பது முன்னர் (௧௬௮ ஆம் பக்கம்) விளக்கப்பட்டது. துவளரும் - சோர்தலில்லாத.

௫௦ பரிந்து எத்துதி என முடிக்க. நெஞ்சினு மென்புழி உம்மை, எச்சத்தோடு இழிவு சிறப்பு. பொன்னுரை - வியாழன் சொல்; பொன் போலும் மொழி என்னும் நயந்தோன்ற வைத்தமை அறிக. மனங்கொடு என்பது வலித்து நின்றது.

௫௧. குரவன் - குரு. ‘குரவனே தாய், குரவனே எலாம் என்று’ எனக் கூட்டுக. தாயை வேறு கூறினர், குரவன் ஞானத்தால் தந்தையாதலன்றித் தாயுமாவன் என்பதறிவித்தற்கு.

௫௩. வரைப்பு - இடம், மண்ணுலகம். குணக்கு - கிழக்கு.

௫௪. பசுபதி விரதம் - இறைவனைக் குறித்த விரதம். உதகம் - நீர்.

விதியுளி முடித்துநித் தியநை மித்திகம்
புதியநீ றுடலெலாம் பொதிந்து புண்டரம்
மதிநுதல் விளங்கிட அக்க மாமணி
நிதியெனப் பூண்டுசல் லொழுக்கம் நீடியே. ௩௫

தொள்ளொளிப் பளிங்கெனச் சிறந்த செவ்விசால்
வெள்ளொளிச் சத்திய விரத நாதனை
உள்ளகக் கமலத்தின் வழிபட் டுண்மையான்
நள்ளலர்க் கடந்தவ முத்தி நண்ணுவாய். ௩௬

என்றலும் இந்திரன் இறைஞ்சி என்கொலோ
வென்றிகொள் சத்திய விரதங் கேள்வியால்
தொன்றுள தொடர்புபோல் சுழலும் என்மனம்
சென்றுபற் றியதெனக் குரவன் செப்புவான். ௩௭

உள்ளது கூறினை உம்மை ஆயிடை
அள்ளிலைக் குலிசிநீ அணைந்து புந்திநாள்
வெள்ளநீர்ச் சத்திய விரதம் மூழ்கிஈண்
டெள்ளரும் விண்ணகர்க் கிறைமை எய்தினாய். ௩௮

ஒருபொழு தாடினர் உம்பர் கோனிடம்
இருபொழு தயனிடம் எண்ணும் முப்பொழு
தரியிடம் நாற்பொழு தாயின் முத்தியே
மருவுவர் யார்அதன் வண்மை கூறுவார். ௩௯

---

௩௫. நித்தியம் - நாள்தோறும் செய்வது. நைமித்திகம் - நிமித்தம் பற்றிச் செய்வது. அக்கமணி - உருத்திராக்கம்.

௩௬. செவ்விசால் - பொலிவு அமைந்த. இறைவனை வெள்ளை மேனியனாகக் கூறுதலை, "சங்கொத்த மேனிச் செல்வா" (திருமு. ௬. பதி. எ௫ அ) என்னும் திருமொழியிலும் காண்க. வெண்மை திருநீற்றினாலாயது என்பர். நள்ளலர் - பகைவர். கடந்தவ - வென்றவனே.

௩௭. விரதங் கேள்வி, இரண்டாம் வேற்றுமைத் தொகை. கேள்வி - கேட்டல்.

௩௮. உம்மை - முற்பிறப்பு. அள் - கூர்மை. குலிசி - வச்சிராயுதத்தை யுடையவன். புந்திநாள் - புதன்கிழமை.

புந்திநாள் முழுகுநர் புகுவர் முத்தியின்
அந்தநாள் மூழ்கலின் அரச நீயும்இப்
பந்தமில் வீடுறற் பாலை யாயினை
மந்தணம் இதுவெனக் கேட்ட வாசவன். ௪0

இப்பெருந் தீர்த்தநீர் எற்றை ஞான்றினும்
அப்புத வாரநாள் அதிக மாயதென்
செப்புதி என்றலுந் தேசி கப்பிரான்
ஒப்பறு கருணையின் உரைத்தன் மேயினன். ௪க

புதன் வழிபட்ட வரலாறு

கொச்சகக் கலிப்பா

மதிக்கடவுள் தாரைதனை மணந்தீன்ற மகவான
புதக்கடவுள் கிரகநிலை பெறுவதற்குப் புரிதாதை
கதித்துரைத்த மொழியாறே கருதருஞ்சத் தியவிரதப்
பதிக்கண்அணைந் துயர்தீர்த்தம் படிந்தாடித் தவஞ்செய்தான். ௪உ

மேதகுசத் தியவிரதப் பெருமானும் வெள்விடைமேல்
மாதுமையா ளுடன்ஏறி வயக்கரிமா முகன்இளையோன்
காதல்புரி அருள்நந்தி கணநாதர் புடைசூழ
ஆதரமோ டெழுந்தருளித் திருக்காட்சி அளித்தருள. ௪௩

கண்டுபர வசனாகிக் கைதொழுது பெருங்காதல்
மண்டிஎழ மயிர்சிலிர்ப்ப மனத்தடங்காப் பேருவகை
கொண்டுநில முறவீழ்ந்து குழைந்துருகி விழிதுளிப்பத்
தொண்டனேன் உய்ந்தேன்என் றெழுந்தாடித் துதிசெய்வான். ௪௪

---

௪0. மந்தணம் - இரகசியம். வாசவன் - இந்திரன்.

௪உ. மதிக்கடவுள் - சந்திரன். தாரை - பிருகற்பதியின் மனைவி. மணந்து - கூடி. பெறுவதற்குத் தவஞ்செய்தான் என்க. புரி - விரும்புகின்ற. தாதை - தந்தை. கதித்து - எழுச்சியுற்று.

௪௩. மேதகு - மேன்மைபொருந்திய. வயம் - வெற்றி. ஆதரம் - விருப்பம், கருணை.

௪௪. துளித்தலுக்கு நீர்என்னும் செயப்படு பொருள் வருவித்துரைக்க.

நெடியோனும் மலரவனும் நேடரிய திருவடிகள்
அடியேனுக் கெளிவந்த அருட்கருணைத் திறம் போற்றி
ஒடியாத எண்குணங்கள் உடையானே எனையுடையாய்
கடியார்சத் தியவிரத நாயகநின் கழல்போற்றி. ௪௫

என்றேத்தி எந்தையென யான்கிரக நிலைபெறவுங்
குன்றாதுன் திருவடிக்கீழ் மெய்யன்பு கூர்ந்திடவும்
இன்றாதி என்வாரத் தித்தீர்த்தம் படிந்துபொறி
வென்றோர்முன் னையின்இரட்டிப் பயன்எய்தி வீடுறவும். ௪௬

வேண்டுமென இரந்தேற்ப அளித்தருளி வெள்விடைமேல்
ஆண்டகைஅங் ககன்றனனால் அன்றுமுதல் அத்தீர்த்தம்
பூண்டபுத வாரத்துச் சிறப்பெய்தும் புந்தியுறக்
காண்டியெனுங் குரவன்உரை காரூர்தி செவிமடுத்தான். ௪௭

இந்திரன் சத்தியவிரதம் அடைந்து வழிபடுதல்

அப்பொழுதே அரசுரிமை அம்மறையோன் புடைவைத்துச்
செப்பருஞ்சத் தியவிரதத் திருநகரின் விரைந்தெய்தி

---

௪௫. நெடியோன் - திருமால். ஒடியாத - கெடாத. இறைவனது எட்டுக்குணங்களாவன: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன. இவற்றை முறையே சுதந்திரத்துவம், விசுத்ததேகம், நிராமயான்மா, சருவஞ்ஞத்துவம், அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, திருப்தி என்பர். இறைவன் எண்குணனாதலை, 'எண்குணத்தான்—தாளை வணங்காத்தலை" (குறள் - ௯.) என்னும் மறைமொழியாலும், "எட்டுக்கொலாமவர் ஈறில் பெருங்குணம்" (திருமு ௪. பதி. ௧௮. ௮.) "எட்டு வான்குணத் தீசன்எம் மான்றனை' (திருமு. ௫. பதி. ௮௯. ௮.) என்னும் அருட்டிரு மொழிகளாலும் உணர்க. கடி - காவல்.

௪௬. எந்தை என - எனது தந்தைபோல.

௪௭. பூண்ட - பொருந்திய. புந்தியுற - அறிவிற்பொருந்த. காண்டி - பாராய், அறிவாயாக. காரூர்தி - மேகவாகனத்தை யுடையவன், இந்திரன்.

௪௮. மெய்ப்படு - உண்மை உண்டாதற்குரிய. கண்டிகை - உருத்திராக்கம். புண்டரம் - (திருநீற்றுத்) திரிபுண்டரம். நுதல் - நெற்றி.

முப்பொழுதும் நீராடி முழுநீறு மெய்பூசி
மெய்ப்படுகண் டிகைபூண்டு புண்டரமும் நுதல்விளங்க. சஅ

உருத்திரமும் கணித்துள்ளப் புண்டரிகத் துமைபாகன்
திருப்பதங்கள் சிந்தித்துக் கோயிலினுள் சென்றெய்தி
அருத்தியொடும் பூசனைசெய் தாராமை மீக்கொள்ளப்
பெருக்கெழுந்த பேரன்பிற் பெருமானைத் துதிக்கின்றான். சகூ

இந்திரன் துதித்தல்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

மறைமுடி. விண்ணுந் தேறு மலர்சிலம் படியாய்* போற்றி
அறைபுனல் உலகம் எல்லாம் படைத்தளித் தழிப்பாய் போற்றி
சிறைநிறை வாசத் தெண்ணீர் சத்திய விரத தீர்த்தத்
துறைகெழு வரைப்பின் மேய சுந்தர விடங்கா போற்றி. ருo

அண்ணலே விடயத் துன்பம் ஆற்றிலேன் ஓலம் ஓலம்
எண்ணறும் யோனி தோறுந் திரிந்தலைந் தெய்த்தேன் ஓலம்
கண்ணினுள் மணியே வேறு கண்டிலேன் களைகண் ஓலம்
புண்ணிய முதலே இன்பப் பூரண ஓலம் ஓலம். ருக

புழுப்பொதிந் தசும்பு பாயும் புன்புலை உடலே ஓம்பிக்
கழித்தனன் கால மெல்லாம் கடையனேன் பொறிகள் யாண்டும்

---

சகூ. உருத்திரம் - சீருத்திரம். அருத்தி - விருப்பம். ஆராமை - அடங்காமை.

ருo. மலர் சிலம்படி - விரிந்தும், சிலம்பையணிந்தும் உள்ள திருவடி - அறை - ஒலிக்கின்ற. சிறை - கரை. வாசம் - மணம். கெழு - பொருந்திய. சுந்தர விடங்கன் - பேரழகன், மீமிசைச்சொல். *'மலர்ச்சிலம்படியாய்' எனவும் பாடம்.

ருக. ஆற்றிலேன் - பொறுத்திலேன். ஓலம் என்பது முறையீட்டுச் சொல். எய்த்தேன் - இளைத்தேன். களைகண் - பற்றுக்கோடு. புண்ணியமுதல். புண்ணியங்களுக்குக் காரணமானவன். இன்பம் என்பதும் இன்பவடிவினனே என்னும் பொருட்டாய் நின்றது. பூரணன் - எங்கும் நிறைந்தவன். பூரண இன்பனே என்றுரைப்பாரும் உளர்.

ருஉ. அசும்பு - (அழுக்கு நீர்) கசிவு. புலை - இழிவு. ஓம்பி - வளர்த்து. பொறிகள் - மெய், வாய் முதலிய ஐம்பொறிகள், அலைப்ப - வருத்த. சழக்கு - பொய். சரணமே சரணம் - திருவடிகளே புகலிடம்.

இழுக்கிழுக் கலைப்ப நொந்தேன் இனித்தினைப் பொழுதும் ஆற்
சழக்கறுத் தருள்வாய் உன்றன் சரணமே சரணம் ஐயா. [றேன் ருஉ

இந்திரனுக்குச் சத்தியவிரதீசர் காட்சி கொடுத்தருளுதல்

அடைக்கலம் அடியேன் என்றென் றழுதிரங் தயருங் காலை
விடைத்தனிப் பெருமான் அன்னோன் பத்தியின் விளைவு நோக்கி
நடைப்பிடி உமையா ளோடு நண்ணிநீ வேண்டிற் றென்னை
எடுத்துரை தருதும் என்றான் இந்திரன் தொழுது வேண்டும். ருங

வினைவழிப் பிறந்து வீந்து மெலிந்தநாள் எல்லை இல்லை
அனையவற் றடிகேள் உன்றன் அடிதொழப் பெற்றி லேனால்
நினைவருந் தவத்தால் இன்று நின்னருட் குரியன் ஆனேன்
இனிவரும் பிறவி மாற்றி என்றனை உய்யக் கோடி. ருச

இத்தலத் தீர்த்தம் என்றன் பெயரினான் இலக வேண்டும்
அத்தனே என்ன லோடும் அவ்வகை அருளி மீளா
முத்திசேர் கணநா தர்க்குள் முதல்வனாந் தன்மை நல்கிப்
பைத்தபாம் பாரம் பூண்ட பண்ணவன் இலிங்கத் தானான். ருரு

அற்றைநாள் முதல்அச் சூழல் இந்திர புரமாம் அங்கண்
கற்றைவார் சடையீர் ஓர்கால் கண்ணுறப் பெற்றோர் தாமும்
வெற்றிவேற் காலன் றன்பால் விரவிடார் கருவில் எய்தார்
இற்றதன் பெருமை முற்றும் யாவரே இயம்ப வல்லார். ருசா

---

ருங. அயருங்காலை - சோரும்பொழுது. பிடி - பெண்யானை. பிடி நடை எனமாறுக.

ருரு. மீளா, ஈறுகெட்ட வினையெச்சம். சேர், எதிர்கால வினைத்தொகை. சாலோகம் முதலிய பதமுத்திகளை அடைந்தவர்கள்; இருவினையொப்பு வாயாமையால் மீள நிலத்தின்கண் வந்து பிறப்பாரும், அது வாய்க்கப்பெற்று மீண்டு பிறவாது ஆண்டே ஞானத்தைத் தலைப்பட்டு முத்தியடைவாருமென இருதிறப்படுவர். அவருள் மீளப் பிறவாது முத்தியடைபவர்களுள் சேர்த்து முதன்மை யளித்தனரென்பார், 'மீளா முத்திசேர் கண நாதர்க்குள் முதல்வனாந்தன்மை நல்கி' என்றார். இவனுக்கு இருவினை ஒப்புவாய்த்தமை மேலே (கச ஆம் செய்யுளிற்) கூறப்பட்டது. பைத்த - படம் விரித்த. பதமுத்தியடைந்தார் இங்ஙனம் இருவகைப் படுவரென்பதை, சிவஞான போதம் எட்டாம் சூத்திரம் முதலதிகரணத்துக் காண்க.

ருசா. இற்று-இவ்வளவிற்று. இங்கு, 'என்று' என்பது தொக்குநின்றது,

சத்திய விரதம் காரைத் தருவனஞ் செறிதலாலே
சித்திசேர்ந் தவர்க்கு நல்குந் திருநெறிக் காரைக் காடென்
றித்திருப் பெயரின் ஓங்கும் என்பரால் மாசு தீர்ந்த
உத்தமக் கேள்வி சான்ற உணர்வுடை உம்பர் மேலோர். ௫௭

ஆகத் திருவிருத்தம் - ௫0௯.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (௧) 'ஆன்பணி பயன்படுதல் ஏனை யுலகங்களிற் கூடாமையால், வானிடத்தவரும் மண்மேல்வந்து ஆன்றனை அர்ச்சிப்பர்' என்னும் உண்மையை முதலாகக்கொண்டு, (௨) 'இந்திரன் முதலிய இறையவர் பதங்கள், இறைவன் வழிபாட்டினுல் மிகஎளிதிற் கிடைக்கும் என்பதும்; (௩) 'இறைவன் வழிபாடு, நுமக்கம் முதலிய பயன்களைப் பயந்ததாயினும், அவற்றே டொழியாது, முடிவில் ஞானத்தை வருவித்து, முத்தியைப் பயந்தேவிடும்' என்பது மாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள்; 'இந்திரன், பிரமன், மால் முதலிய தேவர்களும் கால வயத்தயராய்த்தோன்றி நின்று அழிவர்' என்பதும்; 'தவம், தானம், பட்டினி, வேள்வி முதலிய பசு புண்ணியங்களால் முத்திப்பெரும்பயன் கைகூடாது' என்பதும்; சிவபெருமானை யன்றி முத்தியளித்தற்கு வேறொரு கடவுளர் இலர்' என்பதும்; இறைவனது பொது, உண்மை இயல்புகளிற் சிலவும் இடைஇடையே கூறப்பட்டன. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

காஞ்சிமான்மியத்தைச் சூதமுனிவர் சொல்லக்கேட்ட நைமிசாரணிய முனிவர்களெல்லாம் ஆனந்த பரவசத்தராய்ச் சொல்லுவார்கள்: ஓ முனிபுங்கவரே, முத்திபெறுவதற்குரிய சிறந்த உபாயத்தை இப்போது நீர் தொகுத்துக்கூறினீர்; இனி அக்காஞ்சியம்பதியின் சிறப்புக்களை எல்லாம் விரித்துக் கூறுதல் வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, சூதமகா முனிவர், முனிவர்களே, அக்காஞ்சியம்பதியில் கணக்கற்ற புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்துள்ளன. கணக்கற்ற தலங்கள் போகமோட்சங்களைத் தருவனவாயுள்ளன.

---

௫௭. காரைத் தருவனம் - காரை என்னும் ஒருவகை மரங்கள் பொருந்திய காடு. சேர்ந்தவர்க்கு சித்தி நல்கும் எனக்கூட்டுக. உம்பர் மேலோர் - மேலான பெரியோர்; உம்மைத் தொகையாகக் கொண்டு உரைப்பாரும் உளர்,

அவைகளின் சிறப்புக்களை எல்லாம் வியாசமுனிவர் எனக்குச் சொல்லிய படி உங்களுக்கு நான் சொல்லுகின்றேன் கேட்பீர்களாக என்று சொல்லத் தொடங்கினர்.

மேற்சொல்லப்பட்ட பெருமைகளையுடைய காஞ்சித்தலத்தில் கிழக்குப் பக்கத்தில் 'சத்திய விரதம்' என்னும் திருப்பெயருடைய ஒரு தலம் உள்ளது. அங்கு எமது தாயாகிய இறைவி யோடும் சத்தியவிரதீசப் பெருமான் எழுந் தருளியிருத்தலால், அதன் பெருமையை யாவர் சொல்ல வல்லவர்கள்! அங்கு எழுந்தருளியுள்ள பெருமானுக்கு; சத்திய சத்தியர், சத்திய சோதகர், சத்திய சங்கற்பர், சத்திய காமர் என்னும் திருப்பெயர்களுண்மையால் அத்தலம் சத் திய விரதம் என்னும் பெயர் பெறும். அத்திருத்தலத்தில், 'சத்தியவிரததீர்த் தம்' என்னும் ஒரு தீர்த்தம் இருக்கின்றது. அதில் புதன் கிழமையில் முழுகி, சத்தியவிரதீசரை வணங்கினவர்கள், இருவினைகளின் நீங்கி முத்தியடைவார் கள். இன்னும் அத்தீர்த்தம் மனைவி, மக்கள், பூமி, கல்வி, செல்வம் மற்றும் எப்பொருள்களை விரும்பினாலும் அவைகள் எல்லாவற்றையும் கொடுக்கும். அத்திருத்தலத்திற்கு இந்திரபுரம் என்றும், அத்தீர்த்தத்திற்கு இந்திர தீர்த்த மென்றும் பெயருண்டு. அவற்றிற்கு அப்பெயர்கள் வந்த காரணத்தையும் சொல்லுகின்றேன் கேட்பீர்களாக.

பிரமனது கற்பங்களில் ஒன்றாகிய சுவேதவராக கற்பத்தில் ஆறாவது மனுவந்தரமாகிய சாட்சுஷ மனுவந்தரத்தில் 'சிவி' என்னும் ஒரு இந்திரன் இருந்தான். அவன் ஒரு நாள் தேவர்கள், கின்னரர், சித்தர், வசுக்கள் முதலா னவர்கள் நிறைந்திருக்க, அரம்பை, ஊர்வசி, மேனகை முதலிய தேவகணிகை யர்கள் ஆடல் புரிய, சிங்காதனத்தில் இந்திராணியோடும் இன்பமாகக் கொலு வீற்றிருந்தனன். அப்பொழுது அவனுக்கு இருவினை யொப்பு வாய்ந்த பக்கு வம் வந்தமையால், அந்தச் சுவர்க்கலோக அரசாட்சியை வெறுத்து, சிறையில் அடைக்கப்பட்டவர் போலப் பதைத்து அச்சமுற்றவனாய், பின்வருமாறு கருத லாயினன்.

அந்தோ! நிலையில்லாத இந்த விடய போகங்களில் களிப்படைந் திருந்து கெட்டொழிந்தேன். பிறவியாகிய கடலில் காலமாகிய பாம்பின் வாயில் அகப்பட்டுக் கிடந்தும் சிறிதும் வெட்கமில்லாதவ னாயினேன். பள்ளங்களிலுள்ள சேற்றில்விழுகின்ற ஊர்ப்பன்றிபோலப் பொய்யான இந்த வாழ்வாகிய அஞ்ஞானத்திற்கிடந்து துன்பத்தை அனுபவித்த எனது அறிவு நன்றாயிருக்கிறது! காலத்தைக் கடந்தவர் ஒருவருமில்லை. பிரமனுடைய ஒரு நாளில் பதினான்கு இந்திரர்களும் பதினான்கு மனுக்களும் இறப்பார்கள்; அவ் வாறு நூறுவருடமாயின் பிரமன் அழிவான்; ஒரு பிரமன்காலம் திருமாலுக்கு ஒரு நாளாகும். அவரும் அந்தமுறையில் நூறுவருடம் ஆனபின்பு அழிந்துபோ

வார். சீசீ! இப்படிப்பட்ட அநித்தியமான வாழ்வை இனிநான் விரும்பமாட்டேன்; முத்தியடைதற்குரிய உபாயத்தையே இனி அறிதல்வேண்டும்; அவ்வுபாயம் தவமோ! தானமோ! பட்டினி கிடத்தலோ! வேள்வி செய்தலோ! புண்ணிய தீர்த்தங்களில் முழுகுவதோ! இவற்றை யெல்லாம் நமது குருவாகிய வியாழ பகவானைக் கேட்போம் என்று துணிந்து, அவையிலுள்ளவர்களுக்கெல்லாம் விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் தான் அந்தப்புரத்திற் சென்று வியாழபகவானை அழைத்து இதனைச் சொல்லாநின்றனன்.

அடிகளே, இனி இவ்வரசாட்சியில் எனக்கு விருப்பமில்லை. ஏனைய அயன் அரி முதலானவர்களுடைய வாழ்வையும் விரும்புகின்றேனில்லை. மெய்யுணர்வு பெற்று முத்தியையே அடைய விரும்பினேன்; அதனையடையும் உபாயத்தைச் சொல்லியருள வேண்டும் என்றனன். அதுகேட்டு வியாழ பகவான் சொல்லுகின்றார்; ஓ தேவேந்திரனே, நீ கேட்ட முத்தியானது வேள்வியாலும் தானத்தினாலும், பட்டினியாலும், மற்றென்றினாலும் கிடைப்பது அரிதாகும். சிவபெருமான் ஒருவரைத் தவிர்த்து அதனை அளிக்கவல்லவர் வேறொருவரும் இலர்; ஆகையால், மனத்தினாலும் பிறரை நினையாது, அவர் ஒருவரையே வழிபட்டால் முத்தியடைவாய்; இதுதான் அதற்கு உபாயமென்று கூறினார்.

அவ்வார்த்தைகளை மனத்துட் கொண்ட இந்திரன், தனது குருவை நோக்கி, ஆசிரியரே, நூல்களெல்லாம், மாணாக்கர்களுக்குப் பிரமன் விண்டு சிவன் தாய் தந்தை மற்றும் எல்லாம் குருவே என்று சொல்லுகின்ற உண்மையைத் தேவரீர் இன்று என்னிடத்தில் காட்டினீர். உமது கிருபையால் அடியேன் நன்மையடைந்தவனானேன். நிற்க, சிவபெருமானை, எவ்விடத்தில் எவ்வாறு வழிபடல்வேண்டும்? அதையும் அருளிச் செய்தல் வேண்டுமென்றனன்.

அதற்குத் தேவகுரு கூறுகின்றார்: இந்திரனே, பூவுலகத்தில் 'காஞ்சி' என்னும் சிறந்த திருப்பதி ஒன்று உளது. அதில் கிழக்குத் திக்கில் சத்திய விரதம்' என்னும் ஓர் தலம் இருக்கின்றது. அதில், பெருமான் சத்திய விரதீசர்' என்னும் திருப்பெயருடன் வீற்றிருக்கின்றார். அவரது திருமுன்பில் மேற்குத் திக்கில் 'சத்திய விரத தீர்த்தம்' என்னும் ஒரு தீர்த்தம் உளது. அங்குச்சென்று, அத்தீர்த்தத்தில் முழுகி, திருவெண்ணீறும் கண்டிகையும் அணிந்துகொண்டு, நல்லொழுக்கத்துடன் சத்தியவிரதப் பெருமானை வழிபட்டு முத்தி அடைவாயாக என்றனர்.

அதனைக் கேட்டவுடன் இந்திரன் வீழ்ந்து வணங்கி, ஐயனே, சத்திய விரத தலத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே பழமையாகத் தொடர்பு உள்ளதுபோல என்மனம் அதனிடத்திற்றானே சென்று சுழல்கின்றதென்று

சொல்ல, வியாழ பகவான் கூறுகின்றார். உள்ளது! நீ முற்பிறப்பில் அவ் விடத்தில் அத்தீர்த்தத்தில் முழுகியே இப்பதவியைப் பெற்றாய்; அத்தீர்த்தத்தில் ஒருவேளை முழுகினவர்கள் இந்திர பதவியையும், இரண்டு வேளை முழுகினவர்கள் பிரமன் பதவியையும், மூன்று வேளை முழுகினவர்கள் முத்தியையும் அடைவார்கள். ஒருவேளையாயினும் புதன்கிழமையில் மூழ்குவார்களாயின் முத்தியை அடைவார்கள். நீயும் அந்நாளில் முழுகினமையால் முத்தியடைதற்குரியவனாயினை என்றனர்.

பின்னும் சிவி என்னும் அவ்விந்திரன், அத்தீர்த்தத்திற்குப் புதன்கிழமை சிறந்து நிற்றற்குக் காரணம் யாது? என்று வினவ, குரு சொல்லுகிறார்: சந்திரனுக்குத் தாரையினிடத்திற் பிறந்த புதனென்பவன் கிரக நிலையை அடைதற்பொருட்டு, தன்தந்தை சொற்படி அத்தீர்த்தத்தில் முழுகிச் சத்திய விரதப் பெருமானை நோக்கித் தவஞ் செய்தான். அப்பெருமான் அதற்கு மகிழ்ந்து அவனுக்குக் காட்சியளித்தனன். அதனைக்கண்ட புதன் ஆனந்த பரவசனாய் வீழ்ந்து வணங்கிப் பலவாறு துதித்து, எனது தந்தை போல அடியேனும் கிரக நிலையை அடையவும், எனது வாரத்தில் இத்தீர்த்தத்தில் முழுகினவர்கள் முத்தியடையவும் அருள் செய்யவேண்டுமென்று வேண்டினன். இறைவனும் அவ்வரங்களைக் கொடுத்து மறைந்தருளினன். அன்று முதல் அத்தீர்த்தத்திற்குப் புதன்கிழமை சிறந்ததாயிற்று என்றனர்.

இவைகளை எல்லாம் கேட்ட சிவி என்னும் இந்திரன் அப்பொழுதே அரசாட்சியைக் குருவினிடத்து ஒப்பித்து விட்டு, சத்திய விரத தலத்தினை விரைவில் அடைந்து, சத்திய விரத தீர்த்தத்தில் மூன்று வேளைகளிலும் நீராடி, திருவெண்ணீறும் கண்டிகையும் அணிந்து சீருத்திரத்தைச் செபித்து, சத்திய விரதப் பெருமானை அன்போடு பூசித்துத் தோத்திரம் பண்ணி, அண்ணலே! அடியேன் ஐம்புலங்களின் துன்பத்தை இனிப் பொறுக்கமாட்டேன், ஓலம்! பல பிறவிகளை எடுத்து இளைத்தேன், ஓலம்! அடியேனுக்கு வேறு பற்றுக்கோடில்லை ஓலம்! ஓலம்!! என்று முறையிட்டு, அடியேன் தேவரீரது அடைக்கலமென்று அலறி அழுதனன்.

பெருமான் அவனது பத்தியைக் கண்டு, பெருமாட்டியோடும் விடையின்மீதிவர்ந்து காட்சியளித்து உனக்கு வேண்டும் வரம் யாதென்று கேட்க, இந்திரன் வணங்கிக் கேட்கின்றான்: அடியேன் பிறந்திறந்து உழன்ற நாட்கள் அளவில்லை, இனிமேற் பிறவாதபடி ஆட்கொள்ள வேண்டும்; அன்றியும், இந்தத்தலமும் தீர்த்தமும் எனது பெயரினால் விளங்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டனன். இறைவனும் அவ்வரங்களை அவனுக்கு அளித்து முத்தியடையும் கணநாதர்களுக்குத் தலைவனாக்கி இலிங்கத்தில் மறைந்தருளினன்.

அதுமுதல் அத்தலம் இந்திரபுரம் என்னும் பெயருடையதாயிற்று. அதனை ஒருமுறை தரிசித்தவர்களும் எமபுரத்தை யடையமாட்டார்கள். கருவிலும் புகமாட்டார்கள் என்றால் அத்தலத்தின் பெருமையை இவ்வளவிற்றென்று யாவர் கூற வல்லவர்கள்! சத்தியவிரதம் என்னும் அத்தலம் காரை மரங்கள் நிறைந்த காடுகள் நெருங்கப்பெற்றமையால் திருநெறிக் காரைக்காடு என்னும் திருப்பெயரை உடையதாயிற்று என்று பெரியோர்கள் கூறுவார்கள்.

---

# புண்ணிய கோடீசப் படலம்

---

கலிநிலைத் துறை

செச்சைச்சடை அந்தணிர் தேமலர் ஓடை சூழ்ந்த
மெய்ச்சத்திய மாவிர தத்தல மேன்மை சொற்றும்
கச்சிப்பதி யிற்கவர் புண்ணிய கோடி மேன்மை
நச்சிப்புகல் கின்றனம் நன்கு மதித்துக் கேண்மின். க

மின்பாய்பொழிற் சத்திய மாவிர தத்த லத்தின்
தென்பாலது புண்ணிய கோடிநந் தேவன் வைப்பு
வன்பாலர்கள் எய்தரும் புண்ணிய தீர்த்த மாடே
என்போலி கட்கும் சிவப்பேறெறி தெப்பும் அங்கண். ௨

இறைவனிடத்துத் திருமால் வரம்பெறல்

மலர்மேபவன் மேகநல் வாகன கற்பம் ஒன்றில்
தலமேழ்புகழ் நாரணன் தாமரை யாளி யாதி
உலகேழையும் ஈன்றிடும் ஆசையின் உம்பர் கோனைப்
பலநாள் முகிலின் உருக்கொண்டு பரித்தல் செய்தான். ௩

நம்மான் இரங்கிக் கடைக்கண்அருள் நல்கி மாலோய்
வம்மோகூரர் ஆண்டினில் ஆயிர ஆண்டு மற்றிங்

---

க. செச்சை - சிவப்பு. கவர் - மனத்தைக் கவர்கின்ற. நச்சி - விரும்பி.

௨. மின் - மின்னல்; இது மேகங்கள் தவழ்கின்றன என்பதை யறிவிக்கும். வன்பாலர் - அன்பற்றவர்கள். மாடு - பக்கம்.

௩. தலம் - உலகம். உம்பர்கோன் - சிவபெருமான். பரித்தல் - சுமத்தல்.

இம்மேக உருக்கொடு தாங்கினை எம்மை வேண்டும்
அம்மாவரம் நல்குதும் ஓதுதி என்ன அன்னோன். ௪

எந்தாய்ஒரு நின்திரு மேனி இடப்புறத்து
வந்தேன் அடியேன் உயர்நின்அருள் வண்மை தன்னால்
நந்தாதஇவ் வாழ்க்கையும் எய்தினன் ஞாலம் முற்றும்
பைந்தாள்மல ரோனையும் இன்று படைத்தல் வேட்டேன். ௫

அவ்வாற்றல் அளித்தரு ளென்னும் அரிக்கு நாதன்
இவ்வாற்றல் கச்சிப் பதிஎய்தி இலிங்கந் தாபித்
தொவ்வாகளி னங்களி னாலுயர் பூசை ஆற்றின்
செவ்வேபெறு கிற்பை எனத்திரு வாய்மலர்ந்தான். ௬

திருமால் காஞ்சியில் இறைவனை வழிபடுதல்

அங்கப்பொழு தேவிடை கொண்டருட் காஞ்சி எய்திப்
பொங்கிப்பொலி தீர்த்த நறும்புன லாடிச் சூழும்
தெங்கிற்பொலி இந்திர நன்னகர்த் தென்தி சைக்கண்
துங்கச்சிவ லிங்கம் இருத்தி மெய் யன்பு தோன்ற. ௭

தெண்ணீர்த்தடம் ஒன்று வகுத்துத் திருந்த மூழ்கி
வெண்ணீற்றணி அக்க மணித்தொடை மெய்யி லங்கக்
கண்ணீர்க்கம லம்பல கொய்து கருத்து வாய்ப்ப
வண்ணீர்ச்சிவ பூசனை நித்தலுஞ் செய்து வாழ்ந்தான். ௮

கசேந்திரன் தொண்டு செய்தல்

வேறு

அன்னோன் ஏவல் மெய்ப்பணி ஆற்றும் அன்புந்தத்
தன்னே ரில்லா ஓர்மத வேழந் தானெய்தி

---

௪. வம் என்பது இங்கு ஒருமையில் வந்துளது. மோ, முன்னிலையசை. அம் மா வரம் - அந்தப்பெரியவரத்தை. இடைச்சொல் லாக்குவாரும் உளர்.

௫. எந்தாய் - எந்தையே; எந்தை - என் தந்தை நந்தாத - கெடாத. பைந்தாள் - பசிய தண்டு. வேட்டேன் - விரும்பினேன்.

௬ ஒவ்வா களினம்-தனக்கு நிகரில்லாத தாமரை மலர். செவ்வே-நன்கு.

௭. தீர்த்தம் - சிவகங்கை முதலிய தீர்த்தங்களில் ஒன்று. துங்கம் - உயர்ச்சி.

௮. வகுத்து - உண்டாக்கி. கண்ணீர் - தேனுறிய நீர். கருத்து வாய்ப்ப - மனம் பதிய. வண்ணீர் - வளப்பத் தன்மை. நித்தலும் - நாள்தோறும்.

என்நா யகனே என்பணி கொள்வாய் என்றேத்திப்
பொன்வாள் தோன்று முன்னர் எழுந்து புனலாடி. சு

நாளலர் தாமரை பாதிரி வில்வம் நறும்புன்னை
தாளுபர் சண்பகம் மல்லிகை தண்கழு நீர்மௌவல்
கோளறு கோங்கு முதற்பல கொய்து கொடுத்தென்றும்
வேளை அளித்தவன் உள்மகிழ் வித்திடும் அந்நாளில். க0

கசேந்திரனை முதலை பற்றல்

ஓர்பகல் நீர்நிறை பூந்தடம் ஒன்றுறு பூக்கொய்வான்
சீர்தரு திண்கரி சேறலும் அங்கொரு வன்மீனம்
நீரிடை நின்று வெகுண்டடி பற்றி நிமிர்ந்தீர்ப்பக்
காரொலி காட்டி அகன்கரை ஈர்த்தது காய்வேழம். கக

இவ்வகை தண்புன லிற்கரை மீதிவை ஓவாமே
தெவ்வுடன் ஈர்ப்புழி யாண்டுகள் எண்ணில சென்றேகக்
கைவரை ஆற்றரி தாய்அல றிக்கரு மாமேகத்
தவ்வடி வோனை அழைத்தது மூல மெனக்கூவி. கஉ

திருமால் கசேந்திரனைக் காத்தல்

அண்ட ரெலாம்யாம் மூலம் அலேமென் றகல்போழ்தில்
புண்டரி கக்கட் புண்ணியன் நன்புள் ளரசின்மேல்
கொண்டெதி ரெய்திக் கரிஅர செய்துங் கொடுவெங்கோய்
கண்டுளம் நெக்கான் அஞ்சலை அஞ்சேல் களிறென்னு. கங

ஆழி யெறிந்தான் அதன்உயிர் உண்டான் கரியோடும்
வாழிய காஞ்சி மாநகர் எய்திச் சிவபூசை

---

சு. வேழம் - யானை. பொன் வாள் - பொன்போன்ற ஒளி; இது ஆகு பெயராய்ச் சூரியனை உணர்த்திற்று.

க0. நாள் அலர் - அன்றலர்ந்த. தாள் - அடி. கோள் - தீமை. வேள் - மன்மதன். அளித்தவன் - பெற்றவன், திருமால்.

கக. வன்மீனம் - முதலை. வெகுண்டு - கோபித்து. கார் - மேகம்.

கஉ. 'இவ்வகை இவை புனலிலும் கரைமீதிலும் ஓவாமே ஈர்ப்புழி' எனக் கூட்டுக. தெவ் - பகைமை. சென்றேக, ஒருசொல் நீர்மைத்து. கைவரை - யானை.

கங. புள்ளரசு - கருடன். கரியரசு - கசேந்திரன்.

வேழம் அளிக்கும் மேதகு பள்ளித் தாமத்தால்
ஊழ்முறை ஆற்றித் தவம்நனி செய்தங் குறைகாலை. கச

எண்ணரு வானோர் இன்னமும் நாடற்கரியானைக்
கண்ணிணை ஆரக் காண்டகு காதல் கைமிக்கங்
குண்ணிகழ் அன்பால் நெக்குரு கிக்கண் உறைசிந்தப்
புண்ணிய வேதப் பழமொழி ஓதிப் புகழ்கிற்பான். கரு

### திருமால் துதித்தல்

கொச்சகக் கலிப்பா

நீராய் நிலனாய் நெருப்பாய் வளிவானாய்
ஏரார் இருசுடராய் ஆவியாய் யாவைக்கும்
வேராகி வித்தாய் விளைவாகி எல்லாமாம்
பேராளா எங்கள் பிரானே அடிபோற்றி. கசா

அண்டபகி ரண்டம் அனைத்தும் அகத்தடக்கிக்
கொண்டுநிறைந் தோங்கியபே ரின்பக் குரைகடலே
தொண்டரெலாம் உண்ணத் தெவிட்டாச் சுவைஅமிர்தே
தண்டலைசூழ் கச்சித் தலைவா அடிபோற்றி. கஎ

மாறா அறக்கடவுள் மான அடியேனும்
ஏறாகித் தாங்க அருள்சுரந்த எம்மானே

---

கச. ஆழி - சக்கரம். அதுவென்றது முதலவை. வாழிய, அசைநிலை; 'வாழ்வுடைய' என்பாரும் உளர். பள்ளித்தாமம் - இறைவனுக்குச் சாத்தும் பூமாலை. ஊழ்முறை - விதிப்படி.

கரு. கைமிக்கு என்புழிக் கை இடைச்சொல். உறை - நீர்த்துளி.

கசா. வளி - காற்று. இருசுடர் - சூரிய சந்திரர். ஆவி - உயிர். வேர் - மூலம். 'வித்தாய் விளைவாகி' என்றது காரணமும் காரியமும் ஆகிய எல்லாப் பொருளாகியும் என்றவாறு. பேராளன் - பெருமையுடையவன். "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன் - புலனாய மைந்தனோ டென் வகையாய்ப் புணர்ந்து நின்றான் - உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொரு வனுமே - பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ" (திருவா. தோணோ. ரு.) என்னும் அருட்டிருமொழி ஈண்டுக் கருதற்பாலது.

கஎ. அண்டம் - இந்த அண்டம். பகிரண்டம் - ஏனைய அண்டங்கள். குரைகடல் என்புழிக் குரை, இசைவடை. தண்டலை - சோலை.

சீரு துமைகளிப்பத் தேவியாக் கொண்டெனைநின்
கூறுட வைத்தருணக் குன்றே அடிபோற்றி. ௧௮

திக்காடை யாதி அணியோடு திவினையே
னக்கோடு கண்ணோ டுரிஎன் பணிந்தானே
இக்காய் மழுமுதலாம் வான்படையோ டென்றனையும்
தக்கோர் புகழ்கணையாக் கொண்டாய் சரண்போற்றி. ௧௯

மெய்யடியார் சாத்தும் விரைமலர்போல் அன்பிலாப்
பொய்யடியேன் ஊன்விழியுங் கொண்டருளும் பொன்னடியாய்
செய்யானே நந்தி கணத்தவர்போல் சேயேனும்
எய்தி அருட் கூத்தின் இயமுழக்கும் பேறளித்தோய். ௨௦

ஆலம் அளக்கர்எழும் அந்நாள் அடைக்கலமென்
றோலமிடும் எங்கட் குயிரளித்த சீராளா

---

௧௮. அறக்கடவுள் - தரும தேவதை. மான - ஒப்ப. ஏறு - இடபம். கூறுட என்புழி ஆடவென்பது, பொருந்த வென்னும் பொருட்டு.

௧௯. திக்கு ஆடை - திசைகளாகிய ஆடை; இதுவே திகம்பரம் எனப்படும். அணியப்படுதலால் ஆடையும் அணிகளுள் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டது. அக்கோடு என்புழி அகரம்பண்டறி சுட்டு. ஏனக்கோடு எனவும் பொருள்படுமாறு வைத்தமை காண்க. கோடு - (பன்றிக்)கொம்பு. கண் - மீனின் விழிஎலும்பு. ஓடு - ஆமை ஓடு. உரி - (நரசிங்கத்தின்) தோல். திருமால்; இரணியாட்சன், சோமுகன், இரணியன் என்னும் அசுரர்களை அழித்தற் பொருட்டும், திருப்பாற்கடலைக் கடைய மந்தரமலையைத் தாங்குதற் பொருட்டும் முறையே கொண்ட வராக, மச்ச, நரசிங்க, கூர்மாவதாரங்களை, அச்செயலின் முடிவில், அவைகள் கொண்ட செருக்கைப் போக்குதற்கு; முருகர், ஐயனார், வீரபத்திரர், விநாயகர்களால் அவற்றை அழிப்பித்து, அவைகளின் கொம்பு, விழி எலும்பு, தோல், ஓடு என்பவற்றை இறைவன் அணிந்து கொண்டனனென்பதும், சருவசங்கார காலத்தில் அழிந்த தேவர்களுடைய எலும்பை அணிகின்றானென்பதும், திரிபுரம் எரித்தகாலத்தில் இறைவன் திருமாலை அம்பாகக்கொண்டனனென்பதும் புராணவரலாறுகள். சரண் - திருவடி.

௨௦. விரை - வாசனை. செய்யான் - செம்பொருளாயுள்ளவன். இயம் - வாச்சியம்; ஈண்டு மத்தளத்தைக் குறிக்கும். திருமால் இறைவனுக்குத்தமது கண்ணைச் சாத்தினமையைத் திருமாற்பேற்றுப் படலத்திலும், மத்தளம் முழக்கியதைத் தழுவக்குழைந்த படலம் மத்தள மாதவேச வரலாற்றிலும் இப்புராணத்திற் காண்க.

காலமே காலங் கடந்த பெருங்கருணைக்
கோலமே ஆனந்தக் குன்றே அடிபோற்றி. உக

இறைவன் காட்சி கொடுத்தருளுதல்

கலி விருத்தம்

என்னப் பலபன் னியரந் தயரும்
பொன்னுக் கிறைமேல் அருள்பொங் கியெழ
மின்னற் சடையோன் விடைமீ துவரை
அன்னத் தொடுகாட் சிஅளித் தனனால். உஉ

கண்டான் இருகண் களிகூ ரமகிழ்
கொண்டான் வறியோன் கொழிதெள் ளமுதம்
உண்டா னெனஓ டினன்ஆ டினனால்
வண்டா மரைமா துமணா ளனரோ. உ௩

அதுகண் டுமைபால் அருள்நோக் குதவி
விதுவொன் றுபொலஞ் சடைவிண் ணவனோர்
முதிருங் குறுமூ ரல்முகத் தலர
மதுசூ தனகேட் டிவரந் தருகேம். உ௪

நரர்வா னவர்தம் மினுநா ரணநீ
பெருவான் வலிபெற் றுளஎம் அருளால்
பொருபோ ரினுள்எம் மினும்வென் றிபுனை
வரம்எம் மிடைமுன் பெறுமா தவனே. உ௫

எனஅங் கருள்செய் தலும்இந் திரைகோன்
மனம்ஒன் றவணங் கிவணங் கியெழுந்

உக. ஆலம் - விடம். அளக்கர் - கடல்.

உஉ. பன்னி - சொல்லி. அயரும் - சோர்கின்ற. பொன் - இலக்குமி. இவ்வினத்துச் செய்யுட்களை வஞ்சி விருத்தமாகக் கொள்வர் ஒருசாரார்.

உ௪. விது - சந்திரன். குறுமூரல் - புன்னகை. மதுசூதனன் - மது வென்னும் அசுரனை அழித்தவன், திருமால். சிவபெருமான் திருமாலி னுடைய அன்பின் பெருக்கை இறைவிக்குப் பார்வைக் குறிப்பாற் காட்டினர் என்பார், 'உமைபால் அருள்நோக் குதவி' என்றார்.

உ௫. இறைவன் தன்னிடத்திலும் வெற்றிபெறும்படி திருமாலுக்கு வரங்கொடுத்தமையை வாணேசப் படலத்திற் கூறுதும்.

துனதம் புயபா தயுகத் தடியேற்
கனகம் பெறுபத் தியளித் தருளாய். உசு

வரதா மறையோ னெடுமற் றுலகும்
வரதா தரல்வேட் டமனத் தினன்யான்
வாதா வரம்ஈ துவழுந் குதிநீ
வரதா எனஓ திவழுத் தினனால். உஎ

நின்னு ளைசநிரம் பவரங் கனெலாம்
இன்னே கொளநல் கினம்ஏ ரிழைமா
மன்னு பலகால் வரதா எனநீ
சொன்னாய் எமைஅன் புதுளும் புறவே. உஅ

வாசத் துளவோய் இனிநீ வரத
ராசப் பெயராற் பொலிவாய் எமதாள்
பூசித் தனைபுண் டரிகங் களினால்
பேசிற் பதுமாக் கனெனப் பெறுவாய். உகூ

அறுசீரடி யாசிரிய விருத்தம்

என்றருள் புரிந்த வள்ளல் இணையடி வணங்கி மாயோன்
வென்றிவெள் விடையாய் இன்னும் விண்ணப்பம் ஒன்று கேட்டி
நின்திருப் பாதபூசை நித்தலும் அடியேன் ஆற்ற
நன்றும்இவ் வத்தி ஏவற் பணிநயந் தொழுகிற் றன்றே. ௩௦

என்னிடை அன்பு சாலப்பூண்டதால் இதன்பேர் தன்னால்
உன்னெதிர் அடியேன் வாழும் உயர்வரைக் குடுமி ஓங்கல்

---

உசு. இந்திரை - இலக்குமி. யுகம் - இரண்டு. அனகம் - மாசில்லாமை, தூய்மை.

உஎ. வரம் - மேன்மை. வரதன் - வரத்தைக் கொடுப்பவன். வழுத்தினன் - துதித்தான்.

உஅ. ஏர் - அழகு. இழை - ஆபரணம். மா - இலக்குமி.

உகூ. வாசம் - வாசனை. புண்டரிகம் - தாமரை. பதுமாக்கன் (பத்மாட்சன்) - தாமரைக் கண்ணன்.

௩௦. அத்தி - யானை. பணி - தொண்டு. நயந்து - விரும்பி.

௩க. வரை - மூங்கில். குடுமி - சிகரம். ஓங்கல் - மலை. கன்னல் - கரும்பு. சிலை - வில். வேள் - மன்மதன்.

மன்னுசீர் உலகின் அத்தி கிரியென வழங்கல் வேண்டும்
கன்னலஞ் சிலைவேள் ஆகம் கனல்விழிக் குதவ வல்லோய். ௩௧

புண்ணிய தீர்த்தப் பொய்கைப் புனல்படிந் திங்கு ளார்செய்
புண்ணியம் ஒன்று கோடி மடங்குறப் புரிந்து மற்றிப்
புண்ணிய கோடி வைப்பின் உயிர்க்கெலாங் கருணை பூத்துப்
புண்ணிய கோடி நாத இலிங்கத்திற் பொலிக நாளும். ௩௨

அடியனேன் தண்டா தென்றும் நின்னெதிர் அமர்ந்து போற்றக்
கடிகெழு கற்பத் தண்தார்க் கடவுளர் முனிவர் யார்க்கும்
முடிவறு வரங்கள் நல்கி முழுதருள் சுரந்து வாழி
கொடியவெஞ் சீற்றத் துப்பிற் கூற்றுயிர் பருகுந் தாளோய். ௩௩

அண்ணலே என்று வேண்ட அவற்கவை அருளி எங்கோன்
புண்ணிய கோடி நாத இலிங்கத்துட் புக்கான் அந்நாள்
கண்ணுதற் பரனை மாயன் காருருக் கொண்டு தாங்கும்
வண்மையாற் கற்பம்மேக வாகனப் பெயர்பூண் டன்றே. ௩௪

ஆகத் திருவிருத்தம் - ருகரு.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு; (க.) 'திருமால் முதலிய காரணக் கடவுளர்களும் இறைவனாற் படைக்கப்பட்டவர்களே' என்பதும், (உ) அக் காரணர்கள் இறைவன் அருள்பெற்று ஒருவரை ஒருவர் படைத்தலும், உல

---

௩௩. தண்டாது - நீங்காமல். கடிகெழு - வாசனைபொருந்திய. கற்பக மென்பது குறைந்து நின்றது. தார் - மாலை. சீற்றம் - கோபம். துப்பு - வலிமை. எல்லாப் பதிப்பிலும் 'கூற்றுயிர்ப் பருகும்' என்றே காணப்படு கின்றது. ஆயினும், உரையாசிரியர், யாரோ ஒருவர் 'உயிர் பருகும்' எனத் திருத்தியிருக்கின்றாரென்று கூறி, அதனை மறுத்திருக்கின்றார். அம்மறுப்புப் பொருந்தாமையானும், "மெல்லெழுத்து மிகுவழி" (தொல் - எழுத்து. கருஎ) என்னும் சூத்திரத்து "அன்னபிறவும்" என்றதனால், இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வருமொழி வினையாயவிடத்து வல்லெழுத்து மிகாது இயல்பாதலே வேண்டுமாகலானும், 'கூற்றுயிர் பருகும்' என்றே பாடங் கொண்டாம்.

௩௪. பூண்டன்று - பூண்டது.

கத்தைப் படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்தலும் உடையர்' என்பதும், (௩) 'திருமாலும் இறைவனை வழிபடுகின்றவரே' என்பதும், (௪) 'அதனால், சிவபெருமான் ஒருவரே யாவராலும் வழிபடற்பாலர்' என்பதும், (௫) 'திருமால் முதலியோர்களுக்கு, இறைமைக்குணங்களுள் ஒரோவொன்றை விளக்கும் பெயர்களும் செயல்களும் அவர்கள் வாழ்வுகளும் இறைவன் வழிபாட்டினாலேயே உளவாவன' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

இங்குத் திருமாலை மூலமென்றது, பிரகிருதி மாயை காறும் வியாபித்துள்ள பிரதிட்டாகலைக்கு அதி தெய்வமாய், அதன்கண் முத்தொழிலும் செய்தல் பற்றியே யென்பது இந்நூலிற் குறிப்பாற் கொள்ளக் கிடக்கின்றது. மும்மூர்த்திகளாகிய காரணர்களைப் படைக்கும் இறைவன் அநாதிமூல மெனப்படுதலால், ஆதிமூலமே என்றழைத்த தென்னும் வரலாற்றிற்கும் மேற்கூறிய காரணம் பொருந்துமாறுணர்க. யானை தன்னையே குறித்து அழைத்தமையால் அவர் சென்று உதவினர் என்பது கந்த புராணத்திற் கூறப்பட்டது. (திருநக. ப. எ௪.)

---

## உரை நடை

அந்தணர்களே, இதுகாறும் சத்திய விரத தலத்தின் மேன்மையைச் சொன்னோம்; இனி, புண்ணியகோடி தலத்தின் பெருமையைச் சொல்லுகின்றோம். அத்தலம், மேற் கூறப்பட்ட சத்தியவிரத தலத்திற்குத் தெற்கில் புண்ணியகோடி தீர்த்தக்கரையில் உள்ளது. அதன் வரலாறு:

பிரமதேவன் கற்பங்களுள் ஒன்றாகிய மேகவாகன கற்பத்தில் திருமால் பிரமனையும் பதினான்கு உலகத்தையும் படைக்க விரும்பி, மேக உருவங் கொண்டு இறைவனைச் சுமந்தார். அதனால் இறைவன் திருவுளமிரங்கி, உனக்கு வேண்டுவது யாதென்றுகேட்க, திருமால், 'பெருமானே, அடியேன் உலகமுழுவதையும், பிரமதேவனையும் படைக்க விரும்பினேன். அத்தகைய ஆற்றலை அடியேனுக்கு அளித்தருளுதல்வேண்டும்' என்றனர். அதற்குச் சிவபெருமான், 'அவ்வாற்றலை, காஞ்சியில் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பெறுக' என்று திருவாய்மலர்ந்தருளினர். அப்பொழுதே திருமால் விடை பெற்றுக் காஞ்சியை அடைந்து திருநெறிக் காரைக்காட்டிற்குத் தெற்கில் ஒரு தடாகத்தை உண்டாக்கி, தாமரை மலர்களைக்கொண்டு இறைவனை வழிபட்டு வந்தனர்.

அதுகாலையில் ஓர் யானை திருமாலினிடத்து வந்து வணங்கி, எனது பணிவிடையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கூறி, நாள்தோறும் பூக்

கொய்து கொடுத்துக்கொண்டு வந்தது. அந்தயானை ஒருநாள் பூக்கள் நிறைந்த தடாகமொன்றில் பூக்கொய்தற்கு இறங்க, அதிலிருந்த முதலையொன்று அதன் காலைப்பற்றிக்கொண்டு நீரில் இழுக்க, யானை இடிபோன்ற பேரொலி காட்டிக் கரையின்கண் இழுத்தது முதலை நீரில்இழுக்கவும், யானை கரையில் இழுக்கவும் இவ்வாறு எண்ணிறந்த ஆண்டுகள் கழிந்தன.

பிறகு, யானை வலி இழந்து மூலமே! என்று திருமாலைக் கூவி அழைத்தது. அதுகேட்டுத் திருமால் கருடன்மீதிவர்ந்து வந்து, யானையை 'அஞ்சேல்! அஞ்சேல்!!' என்று சொல்லி, சக்கரத்தால் முதலையை அழித்து யானையை மீட்டு, அதனோடும் காஞ்சியை அடைந்தனர்.

பின்னர், திருமால் சிவபெருமானைப் பூசிக்கும் நாட்களில் ஒருநாள், மிகுந்த அன்போடு, 'அட்டமூர்த்தமாகிய எமது பெருமானே! எப்பொருட்கும் மூல காரணனே! இன்பமா கடலே! தெவிட்டாத் தெள்ளமுதே! காஞ்சிப் பதிக்குத் தலைவனே! போற்றி! போற்றி!! என்று பலவாறு துதித்து வணங்கினர்.

அதனால் இறைவன் கருணை கூர்ந்து, இறைவியோடும் வெள்விடைமீது இவர்ந்து வந்து காட்சி அளித்தனர். அதுகண்ட திருமால் பேரானந்தப்பெருங் கடலில் மூழ்கினவராய், ஆடிப் பாடித் துதிக்க, சிவபெருமான் விண்டுவே, உனக்கு வேண்டும்வரம் யாதென்றுகேட்க, திருமால் 'வரதா! வரதா!!' என்று பன்முறை அழைத்து, நான்முகனோடு எல்லா உலகத்தையும் படைக்கும் ஆற்றலை அளித்தருளவேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான் 'துளப மாலையோய்! நீகேட்ட வரத்தைக் கொடுத்தோம். நீஎம்மைப்பலகால் 'வரதா வரதா' என்று அழைத்தமையால் வரதராசன் என்று பெயர்பெற்று விளங்குக; அன்றியும் பதுமாக்கன் என்னும் பெயரும் உனக்கு உண்டாகுக' என்று அருளிச் செய்தனர்.

பின்னும் திருமால் 'எம்பெருமானே உமது திருமுன்பில் அடியேன் வாழும் மலை, என்னிடத்தில் அன்புபூண்ட இவ்யானையின் பெயரால் அத்திகிரி என்று வழங்குதல்வேண்டும்; புண்ணியகோடி தீர்த்தமாகிய இத்தீர்த்தத்தில் மூழ்குகின்றவர்கள் செய்கின்ற புண்ணியம் ஒன்று கோடியாகவும், இப்புண்ணியகோடி தலத்தில் தேவரீர் என்றும் எழுந்தருளி இருந்து உயிர்களுக்குத் திருவருள் செய்யவும், அடியேன் உமது திருமுன்பில் என்றும் நீங்காது தங்கியிருந்து, தேவரீரை வணங்கவும் அருள்புரிதல் வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்து, புண்ணியகோடி இலிங்கத்துள் மறைந்தனர். திருமால் மேக உருக்கொண்டு இறைவனைத் தாங்கினமையால் அக்கற்பம் மேகவாகன கற்பம் எனப் பெயர்பெற்றது.

# வலம்புரி விநாயகப் படலம்

கலி விருத்தம்

நலம்புரி புண்ணிய கோடி நாதர்தம்
புலம்புரி பெருமையைப் புகன்று ளேம்இனி
நிலம்புரி தவத்தினீர் அத்தி நீள்வரை
வலம்புரி விநாயகன் மாட்சி செப்புவாம். க

முன்னைநாள் அயன்அரி முனிவர் வானவர்
கின்னரர் ஓரிடைக் கெழுமித் தங்களுள்
பன்னுத லுற்றனர் படிறர் செய்வினை
அந்நிலை ஊறின்றி அழகின் முற்றுமால். உ

அங்கவர் தமக்கிடை யூற்றை ஆக்கவும்
நங்களுக் கூறுதீர்த் தினிது நல்கவும்
இங்கொரு கடவுளைப் பெறுதற் கெம்பிரான்
பங்கயத் திருவடி பழிச்சி வேண்டுவாம். ௩

இமையவர் இறைவனை வேண்டல்

என்றுளந் துணிந்தனர் எய்தி மந்தரக்
குன்றமீ தெம்பிரான் கோயி லுள்ளுறச்
சென்றனர் தொழுதனர் செவ்வி நோக்கிமுன்
நின்றனர் மறைகளால் துதிநி கழ்த்தினர். ச

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சற்றிது திருவுளஞ் செய்துகேட் டருளுதி தலைவ னேவெங்
குற்றமே துறுமனத் தானவக் கொடியவர் தொடங்கு செய்கை
முற்றுறு தூறுபட் டழியவும் எம்மனோர் முயன்ற செய்கை
இற்றுறூ தூறுதீர்ந் தாகவுங் கருணைசெய் எனஇ ரந்தார். ரு

---

க. புலம்புரி - மெய்யுணர்வைத் தருகின்ற; விரிந்த என்றுமாம். இப் பொருட்குப் புலம் - இடம்.

உ. ஓரிடைக் கெழுமி - ஓரிடத்தில் கூடி. படிறர் - வஞ்சகர், அசுரர். ஊறு - இடையூறு.

௩. நல்க - அருள் செய்ய. பழிச்சி - துதித்து.

ரு. துறு - நெருங்கிய. இற்றுறூது - அழியாது. ஆக - முற்றுப்பெற.

### விநாயகர் திருவவதாரம்

அம்மொழி செவிமடுத் தருள்புரிந் தகிலமும் உய்யு மாற்றால் [து
இம்முறை புரிதுமென் றவர்க்கெலாம் விடைஅளித் தெழுந்து போந்
கொம்மைவெள் விடையினான் சித்திரச் சாலையைக் குறுகி அங்கண்
செம்மைசால் சித்திரம் யாவையும் நோக்கினான் தேவி யோடும். ௬

வானகத் தச்சனால் அகிலமுஞ் சித்திரித் தெழுதி வாய்ந்த
ஊனமில் சாலையுள் எழுதுமா மனுக்களோ டுபம னுக்கள்
ஆனஎல் லாம்உமைக் கெம்பிரான் காட்டுபோ தவற்றுள் ஆதித்
தானமார் இருவகைப் பிரணவ மனுக்களைத் தையல் கண்டாள். ௭

உவகையாற் பற்பல்கால் நோக்கிஇங் கிவைஎவை உரைத்தி என்னச்
சிவபிரான் தேவியைத் தழீஇயினன் கூறுவான் செல்வி கேட்டி
தவவில்இப் பிரணவம் நமதுநாண் மூவரைத் தந்த தாகும்
நவிலின்மற் றதுநின தாகும்முச் சத்தியை நல்கு மூலம். ௮

மும்மறை முதல்எலாம் ஈன்றிடும் இருமுது குரவ ரான
இம்மனுக் கரியொடும் பிடியெனத் தோன்றலின் இவைக ளாகி

---

௬. செவிமடுத்து - திருச்செவியில் ஏற்று. கொம்மை - இளமை. செம்மைசால் - செப்பம் அமைந்த.

௭. அகிலம் - முழுது. எழுதி - எழுதப்பட்டு. ஆதித்தானம் - முதல் இடம். இருவகைப் பிரணவம் - 'ஓம்', 'உம' என்பன. உம என்பது தமிழில் 'உமை' என்றும் வடமொழியில் 'உமா' என்றும் வழங்கும். 'பிரணவம் ஒன்றே வாச்சிய ரூபமாய் நிற்கும்போது பரப்பிரணவம் எனவும், வாசக ரூப மாய் நிற்கும்போது அபரப்பிரணவம் எனவும் இருவகைப் படுதலால் இரு வகைப் பிரணவ மனுக்கள் என்றார்' என்றனர் உரையாசிரியர்.

௮. தழீஇயினன், முற்றெச்சம். தவவில் - கெடுதலில்லாத. நமது என்றது 'ஓம்' என்பதை. நினது என்றது 'உம' என்பதை. மூவர் - பிரமன், விண்டு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகள், முச்சத்தி - அவர்களுக்குச் சத்திகளாகிய வாணி, திரு, உமை என்பவர்கள்.

௯. ஆரியத்தில் அதர்வத்தையடக்கி வேதம் மூன்றென்றலே பெரு வழக்காதலின், அதுபற்றி மும்மறையென்றார். இவ்வாறே புராண வரலாற் றுப் படலம் ௭ஆம் செய்யுளிலும் கூறியது காண்க. எலாம் என்றது சொற் பிரபஞ்சம் அனைத்தையும். பிரணவமே சொற்பிரபஞ்சம் அனைத்திற்கும் காரணமென்றது மேலே காட்டப்பட்டது. (பக் ௧௧௩) இருமுதுகுரவர்-தாய்

அம்மநாம் புணர்தும்என் றவ்வுருக் கொண்டனர் ஆடு காலைச்
சும்மைநீர் உலகெலாம் உய்யவந் துதித்தனன் தோன்றல் அன்றே.

கயமுகப் பிள்ளையை இருவருங் காதலான் எடுத்தணைத்து
வயமுற மடித்தலத் திருத்திமெய்க் கலன்பல அணிந்து வாழ்த்த
இயல்புடைப் புதல்வனும் உவகையான் எழுந்தெதிர் நடித்தல் செய் [தான்
நயனம்மாக் களிகொள நோக்கினாள் உலகெலாம் ஈன்ற நங்கை. ௧௦

அங்கையான் ஒத்திநின் றுடல்கண் டகங்களி துளும்பி ஐயன்
பங்கயப் பதந்தொழு திறைவநீ பயந்தசேய் இவனை யின்னே
எங்குள கணங்களும் பல்கண நாதரும் எவரும் ஏத்தத்
துங்கமாம் இறைமைஈந் தருளென வேண்டலுஞ் சூல பாணி. ௧௧

கடவுளர் முனிவரர் அயனரி பலகண நாதரெல்லாம்
உடன்வரத் திருவுளஞ் செய்தழைத் தோதுவான் மடித்தலத்தின்
மிடலுடைச் சிறுவனை இருத்திமற் றிங்கிவன் வெற்பின் வந்த
மடமயிற் கினியவன் யாம்பெறு மூத்தமா மைந்தன் ஓர்மின். ௧௨

---

தந்தையர்கள். மனு - மந்திரம். ஓங்காரத்தின் வரிவடிவம் வளைந்து உயர்ந்தும், உம என்பதன் வடிவம் அதை ஒத்து அடங்கியும் யானைபோன்றிருத்தலால், 'கரியொடும் பிடியெனத் தோன்றலின்' என்றார். வடமொழிக்குரிய நாகர அட்சரத்தின் ஓங்கார வடிவம் யானை வடிவமாதற் கேலாமையால், ஓங்காரம் தமிழேயென்பர் ஆராய்ச்சியாளர். "கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே" (திருப்பு. அம்பொத்த.) என்பது அதற்கு அவர்கள் காட்டும் ஆதரவு. முன்னர்ப் புணர்தும் என்றதற்கேற்ப, 'ஆடுகாலை' என்பதற்குப் பொருளுரைக்க. சும்மை - ஒலி. தோன்றல் - பிள்ளை என்றது விநாயகக் கடவுளை. இவ்வரலாற்றை, "பிடியதனுருவுமை கொளமிகு கரியது—வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்—கடிகணபதிவர வருளினன் மிகுகொடை—வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே" (திருமு. க. பதி. ௧௨௩. ௫.) என அருளாசிரியரும் கூறியிருத்தல் காண்க.

௧௦. கயமுகம் - யானைமுகம். வயமுற - தம்வயமாக. மெய்க்கலன் - திருமேனியில் அணியும் ஆபரணம். நயனம் - கண்.

௧௧. கணங்கள் - பதினெண் கணங்கள். கணநாதர் - சிவகணநாதர்கள். இதனால் கணேசர்என்பது இவ்விருவகைக் கணங்களுக்கும் தலைவர் என்பது போதருதல் காண்க.

இவனை இவ் வுலகெலாந் தொழுதெழும் இறைமையின் இருத்து கின்றேம், குவிமுடி சூட்டுவான் வேண்டுப கரணநீர் கொணர்மின் என்றே, அவர் அவை கொணர்ந்தபின் மைந்தனை மடங்கல் ஆ தனத் தின் ஏற்றிச், சிவபிரான் திருவபி டேகநீ ராட்டினன் மகுடஞ் சேர்த்தான். கங

அரசினுக் குரியநல் லணிகளான் அலங்கரித் தன்பு கூரப்
பிரமனை மாயனைத் தேவரை முனிவரைப் பெட்பின் நோக்கி
உர னுடை உமக்கெலாம் நாயகன் இவன் இடை யூற்றி னுக்கும்
கரவிலா நாயக னாகநாம் வைத்தனம் கண்டு கொண்மின். கச

தீயவத் தானவர் கூறிழைப் பான் இவன் என்று செப்பும்
தூயவன் வாய்மொழி தலைமிசைக் கொண்டனர் துதித்தி றைஞ்சி
மாயவன் முதலியோர் கணேசனை வணங்கினர் கையு றைகள்
ஏயுமா றுதவினர் விடைகொடு தத்தம திருக்கை சேர்ந்தார். கரு

விநாயகர் திருவிளையாடல்

கலி விருத்தம்

பொருவருந் தடநெடும் புழைக்கை ஏந்தலும்
இருமுது குரவர்தாள் இறைஞ்சி மேவுநாள்
ஒருவருங் கணங்களோ டுலவி எங்கணும்
திருவிளை யாடலிற் சிந்தை வைத்தனன். கசா

---

கஉ. துங்கம் - உயர்ச்சி. இறைமை - தலைமை. சூலபாணி-சூலமேந்திய கையுடையவர், சிவபெருமான்.

கங. உபகரணம் - கருவிகளாயுள்ள பொருள்கள். மடங்கல் - ஆதனம், சிங்காதனம். மகுடம் சேர்த்தான் - திருமுடி சூட்டினார்.

கச. பெட்பு - விருப்பம். உரன் -வலிமை. இடையூற்றினுக்கு நாயகன்- விக்கின ராசன்.

கரு. தானவர் - அசுரர். ஊறு - இடையூறு. கையுறை - தம்மினும் மேலானவர்களைக் காணச்செல்வோர் தாம் அன்பினால் அவருக்குக் கொடுக் கும் சிறந்த பொருள். இஃது அவர்கள் கையில் உற்றிருத்தலால் அப்பெயர் பெற்றது. கையின்கண் உறைதலுடைமையால் கையுறையாயிற் றெனினு மாம்.

கசா. பொருவரும் - நிகரில்லாத. தடநெடும் புழைக்கை - பெரிய நீண்ட

ஒளித்துநின் றுடன்பயில் உழைச்சி றார்மிசைத்
தெளித்தெழு புழைக்கைநீர்த் திவலை தூஉய்இது
துளித்தது முகிலெனச் சொல்லி உள்ளகங்
களிப்பவான் கருமையைக் காட்டி வஞ்சித்தும். கஎ

புழைக்கையின் மோந்துயிர்ப் பெறிந்து பூமியைக்
குழித்துமுன் அணிந்தன பழமை கூர்ந்தஎன்
றொழித்தகல் பாதலத் துரகம் யாவையும்
இழுத்தெடுத் தணியெனப் புயத்தின் ஏற்றியும். கஅ

ஒன்பது கோள்களும் உடுக்க ணங்களும்
துன்பறப் பிணித்தசை துருவ சூத்திரம்
வன்பனைக் கரத்தினாற் பறித்து மார்பிடை
அன்பமர் நவமணி ஆர மாக்கியும். ககூ

என்னைநீர் கண்டெழா திருப்ப தென்னெனப்
பன்னகம் எவற்றையுங் கனன்று பற்றிவான்
மன்னிட வீசிஅங் குடைந்த வான்நதி
தன்னுடைத் தந்தைபோற் சடிலத் தேந்தியும். உ0

கலிநிலைத் துறை

இவ்வ கைப்பல சிறுகுறும் பெங்கணும் இயற்றிக்
கௌவை நீர்விளை யாட்டினிற் காதலன் ஒருநாள்

---

தும்பிக்கை. ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன். ஒருவரும் - நீங்குத லில்லாத.

கஎ. உழைச்சிறார் - நீங்காது தன் பக்கத்திலிருக்கும் சிறுவர்கள். தெளிந்தெனபது வலிந்து நின்றது. தூய் - தூவி. துளித்தது - சிந்தியது. முகில் - மேகம். முகில் துளித்தது எனக் கூட்டுக.

கஅ. உயிர்ப்பு - மூச்சு. உரகம் - பாம்பு.

ககூ. கோள்கள் - கிரகங்கள். உடுக்கணங்கள் - நட்சத்திரக் கூட்டங் கள். துருவம் - வடக்கே நிலை பெயராது காணப்படும் ஓர் நட்சத்திரம். இதுவே ஏனைய நாள் கோள்களை இயக்குமென்ப. சூத்திரம் - இயந்திரம்.

உ0. பன்னகம்-பாம்பு கனன்று - கோபித்து. சடிலம் - சடை. சிவ பெருமான் பகீரதன் பொருட்டு ஆகாய கங்கையைச் சடையில் ஏற்றனர் என்பது புராண வரலாறாதலால், 'தந்தைபோல் சடிலத் தேந்தியும்' என்றார்.

பௌவம் யாவையும் உழக்கினன் பாற்கடல் புகுந்தான்
கொவ்வை வாய்உமை பயந்தருள் குஞ்சரக் குரிசில். உக

புகுந்து வெள்ளநீர் முழுவதும் புழைக்கையின் மடுத்தான்
மிகுந்த பன்மணி நீருறை உயிர்கள்வெம் பணிக்கோன்
முகுந்தன் உந்தியன் றிருந்தான் முகப்பிரான் முகுந்தன்
சகுந்த மன்னவன் திருவும்அப் புழைக்கையுள் சார்ந்தார். உஉ

வறுங்க டற்பரப் பகட்டினில் எஞ்சுகூர் மங்கள்
உறுங்க ரும்பெருஞ் சேற்றிடை ஒளிப்பன முன்னாள்
நறுந்து ழாய்அணி ஆமையை நலிவுறப் பற்றிக்
குறும்ப டக்கிய பிரான்வரு திறங்குறித் தனபோல். உங

மாய மீன்விழி பறித்தவன் முன்வரும் இளவல்
மேய வாறுகண் டனவெனத் துடிப்பன சிலமீன்
பாய பூம்புனல் அரசன்நம் பனுக்கிடுந் திறைபோல்
சேய பன்மணி வயின்தொறும் இமைப்பன சிலவே. உச

ஐயன் வார்செவிக் காற்றினில் அலைகள்மிக் கெறிந்து
வெய்ய பேரொலி காட்டுவ பிறவியன் கடல்கள்
மைய கன்றதம் கிளைவறங் கூர்ந்தமை காணூஉக்
கையெ றிந்தழு திரங்கிவீழ்ந் தரற்றுவ கடுக்கும். உரு

---

உக. கௌவை - ஒலி. காதலன் என்னுங் குறிப்பு முற்று வினையெச்சப்பொருள் தந்தது. பௌவம் - கடல். உழக்கினன் - கலக்கினான். குரிசில்- பெருமையிற் சிறந்தோன்.

உஉ. மடுத்தான் - முகந்து கொண்டான். பணிக்கோன் - ஆதிசேடன். சகுந்த மன்னவன் - கருடன். சகுந்தம் - பறவை. திரு - இலக்குமி.

உங. அகடு - நடு. எஞ்சு - உட்புகாது நின்ற. கூர்மங்கள் - ஆமைகள். இதிலும் வருஞ் செய்யுளிலும் குறித்த வரலாறுகளை மேற் காட்டினம். (பக் உ0கூ.)

உச. இளவலென்றது பிள்ளை என்னும் பொருட்டாய் நின்றது. பாய - பரவிய. நம்பன் - விரும்பத்தக்கவன்; இஃது ஈண்டுக் காரணப் பெயராய்ப் பிள்ளையாரை உணர்த்திற்று. திறை - கப்பம். சேய - செந்நிறம் வாய்ந்த. வயின் - இடம். இமைப்பன - ஒளி விடுவன.

உரு. வெய்ய - கொடிய; இது மிகுதி குறித்து நின்றது. மை - குற்றம். வறங்கூர்தல் - வறுமையடைதல். அரற்றுதல் - அழுதல்.

இன்ன வாறுபாற் கடல்வறந் தழிவுற இருங்கை
தன்னில் ஏற்றநீர் மீளவுந் தரைமிசை விடுத்தான்
அன்ன நீருடன் வீழ்ந்தனர் அயன்அரி முதலோர்
துன்னு நீர்படு துரும்பெனத் திசைதொறுஞ் சிதறி. உ௬

பின்னர் ஓரிடைத் திரண்டுடன் குழீஇயினர் பெரிதும்
இன்ன லுற்றமை தத்தமுட் பேசினர் எளியோம்
முன்னை நல்வினைப் பயத்தினுல் இன்றுமூ துலகம்
தன்னில் வந்தவா மறுபிறப் பெனமதித் தனரால். உ௭

திருமால் சங்கிழந்தமை அறிதல்

மருட்சி தீர்ந்தபின் மாயவன் இடக்கையின் வழுவும்
உருட்சி கூர்ந்தவெண் சங்கினைக் காண்கிலன் உயங்கி
வெருட்சி கொண்டனன் தேடினன் வியன்திசைப் புறத்துத்
தெருட்சி கொண்டது ஒலிப்பது கேட்டனன் செவியில். உ௮

ஓசை யால்அது பாஞ்சசன் னியமென உணர்ந்தவ்
வாசை யிற்சிலர் தமைச்செல விடுத்தனன் அவர்போய்
மாசில் ஐங்கரப் பிரான்கணம் வாயிடைக் கொண்ட
வேச றுஞ்சுரி முகத்தினைக் கண்டுமீண் டுரைத்தார். உ௯

திருமால் திருக்கைலை யடைதல்

சொன்ன வாசகம் கேட்டுளந் துளங்கிமற் றினிநான்
என்னை செய்வல்என் றுசாவினன் கணங்களோ டெழுந்து
பன்ன கப்பகை அரசுமேல் கொண்டனன் படர்ந்தான்
கன்னி பாகன்வீற் றிருந்தருள் வெள்ளியங் கயிலை. ௩0

அங்கு நந்திதன் அருளினுல் தடைகடந் தணுகி
எங்கள் நாயகன் திருமுன்பு வீழ்ந்துதாழ்ந் தெழுந்து
பங்க யக்கரம் குவித்துநின் றிமவரை பயந்த
நங்கை யோடுறை செவ்விகண் டின்னது நவில்வான். ௩௧

---

உ௯. ஆசை-திக்கு வேசு-(பக் கடஎ பார்க்க). ஏசு-இகழ்ச்சி எனலுமாம்.

௩0. துளங்கி - கலங்கி. உசாவினன் - ஆராய்ந்தான்.

௩௧. இறைவன் இறைவியோடு எழுந்தருளி யிருக்குங்கால் அறக் கருணையே பெரிதும் செய்வனுகலான், 'இமைவரை பயந்த நங்கையோ டுறை செவ்விகண்டு நவில்வான்' என்றூர்.

அண்ணலேஉன தாணையின் அடியனேன் கடலுள்
கண்வளர்ந்தனன் ஆயிடை ஆடல்செய் கணேசப்
பண்ணவன்கடற் புனலொடும் என்னையும் பனைக்கை
யுண்மடுத்தனன் விடுத்தனன் மீளவும் உலகில். ௩௨

மறுகு சூழ்மணி மன்றுளாய் நின்னருள் வலியான்
மறுபிறப்பென உய்ந்துநின் பால்வரப் பெற்றேன்
மறுகும் அப்பொழு தென்கையில் வழீஇன சங்கை
மறுவில் ஐங்கரப் பிரான்கணத் தொன்றுவௌவியதால். ௩௩

ஐயனேஅது அடியனேன் காத்தெய்த அருளிச்
செய்ய வேண்டும்என் றிரந்திரந் திறைஞ்சலுஞ் சிறுமான்
கையன் எம்பிரான் கவுரிபாற் கட்கடை செலுத்தி
வையம் உண்டவ கேளென வாய்மலர்ந் தருள்வான். ௩௪

வலம்புரிந்தபே ராண்மையோய் யாம்இது வல்லேம்
வலம்புரிச்சங்கு நீபெறக் காஞ்சியில் வைகி
வலம்புரிக்கண பதியைநின் அத்திமால் வரைமேல்
வலம்புரிந்துதா பித்தருச் சனைபுரி மரபால். ௩௫

---

௩௩. சொற்பின் வருநிலை. மறுகு - தெரு. மணிமன்று - அழகிய பொன்னம்பலம். மறுகும்-மனம் சுழலுகின்ற. மறு-குற்றம். வௌவியது-கவர்ந்தது.

௩௪. அம்மையார் திருக்குறிப்பை நோக்கினர் என்பர், 'கவுரிபாற் கட்கடை செலுத்தி' என்றார்.

௩௫. சொற்பின் வருநிலை. வலம் புரிந்த - வெற்றியைச் செய்த, ஆண்மை - வீரம், வல்லேம் - வல்லோமல்லம்; வல்லென்பதனடியாகப் பிறந்த எதிர்மறைக் குறிப்பு முற்று. பாஞ்சசன்னியமும் வலம்புரியாக உள்ளமையால் 'வலம்புரிச் சங்கு' எனப்பட்டது. வலம்புரிக் கணபதி - வலம்புரிச் சங்கினைத் திருமாலுக்குக் கொடுத்த விநாயகர். இது பின் நிகழ்ச்சியைக் குறித்துக் கூறியது. தும்பிக்கையை வலப்புறமாக வளைத்து, வலக்கையிலுள்ள கொம்பு இடக்கையிலும் இடக்கையிலுள்ள பண்ணியம் வலக்கையிலுமாகக் கொண்ட விநாயகர் எனவும் கூறுவர். தாபித்து வலம் புரிந்து எனக் கூட்டுக. வலம் புரிந்து - வலம் வந்து. புரி வினைத்தொகை. 'மரபால் பெறுக' என வரும் செய்யுளில் முடிக்க. மரபு - முறை. மரபால் அருச்சனை புரி என முடிப்பாரும் உளர்.

திருமால் விநாயகரை வழிபடல்

அன்ன வன்திரு வருளினாற் பெறுகெனும் அருளைச்
சென்னி மேல்கொண்டு விடைகொண்டு மீண்டுகாஞ் சியினில்
கொன்னும் மேற்றிசை வாயிலார் குகையுடை அத்திக்
கன்ன கந்தனில் வலம்புரிக் கணேசனை இருத்தி. ௯௬

தருக்கு நீங்கிஆ வாகனம் பாத்தியா சமனம்
அருக்கி யம்புனல் ஆட்டுடை பூணுநூல் கந்த
வருக்கம் தூபதீ பம்பல பண்ணிய வருக்கம்
குருக்கொள் சுண்ணமார் பாகடை குளிர்புனல் பிறவும். ௯௭

ஓங்கு தந்திகா யத்திரி மனுவினால் உதவி
வீங்கு காதலால் வலஞ்செய்து புவியிடை வீழ்ந்தான்
ஆங்கு நின்றுகை கொட்டினன் ஆடினன் அழுதான்
தீங்கு தீர்மறை மொழிகளால் துதிபல செய்தான். ௯௮

திருமால் விநாயகரைத் துதித்தல்

கொச்சகக் கலிப்பா

ஐயா மறைமுடிவுந் தேராத ஆனந்த
மெய்யா பிரணவத்தின் உட்பொருளே வேழமுகக்

---

௯௬. கொன்னும் - மேன்மை பெற்ற. கல் நகம் - கல் மலை.

௯௭. இதனால் சோடச (பதினாறு) உபசாரங்களும் செய்தமை கூறப்படுகின்றது. ஆவாகனம் - வருவித்தல். பாத்தியம் - கால்கழுவு நீர். ஆசமனம் - பருகு நீர். (ஆசமனம் - உறிஞ்சுதல்.) அருக்கியம் - கை கழுவு நீர். புனலாட்டு - முழுகுவித்தல். உடை - வஸ்திரம். பூணுநூல் - யஜ்ஞோபவீதம். கந்தவருக்கம் - கலவைப்பூச்சு. தூபம் - நறும்புகை. தீபம் - விளக்கு. பண்ணிய வருக்கம் - சிற்றுண்டி நிவேதனம். (குரு - நிறம்) சுண்ணப்பொடி - வாசனைப்பொடி. பாகடை - தாம்பூலம். குளிர்புனல்என்றது பின்னர்க் கொடுக்கும் நீரை. பிறவும் என்றது தவிசு (ஆசனம்) அளித்தல், மலர் தூவல், கருப்பூரம் ஏற்றல் இவைகளை. இவற்றை 'உதவி' எனவருஞ் செய்யுளில் முடிக்க.

௯௮. தந்திகாயத்திரி - கணேச காயத்திரி. காயத்திரி பலவகைப் படுமென்பது மேலே (பக். ௧௬௦)உரைத்தாம்.

௯௯. பிள்ளையார், ஓங்காரத்துட் பொருளாதலைத் தமது தோற்றத்தாலும் வடிவாலும் காட்டினராதலால், 'பிரணவத்தினுட் பொருளே வேழ

கையாய் வெளியாய் கரியானே பொன்மையாய்
செய்யாய் பசியாய் பெருங்கருணைத் தெய்வமே. ௩௯

நல்லோர்க்கும் வானோர்க்கும் நண்ணும் இடையூற்றுக்
கில்லாமை நல்க அவதரித்த எம்மானே
வல்லார் முலைஉமையாள் ஈன்ற மழகளிறே
பொல்லார்க்கும் தானவர்க்கும் ஊறிழைக்கும் புத்தேளே. ௪0

சூரன்உயிர் உண்டு சுரர்உலகங் காத்தளித்த
வீரனுக்கு முன்பிறந்த வித்தகா முப்புரமுஞ்
சேரஉருத்த திருவாளன் ஈன்றெடுத்த
வாரணமே எந்தாய் வலம்புரிக் குஞ்சரமே. ௪௧

பண்ணியமும் வெண்கோடும் பாசாங் குசப்படையும்
நண்ணியசெங் கைத்தலத்து நாதா ஒருகோட்டுத்
தண்ணிய வெண்பிறைத் தாழ்சடையாய் மெய்யடியார்
எண்ணிய எண்ணியாங் கீந்தருளும் வள்ளலே. ௪௨

வழிபடுவோர்க் கெய்ப்பிடத்தின் வைப்பே உமையாள்
விழிகளிப்ப முந்நீர் விளையாடுங் காலை
பொழிமதக்கை யூடு புகுந்துவரப் பெற்றேன்
இழிவகன்று மெய்த்தூய்மை எய்தினேன் யானே. ௪௩

அங்கப் பொழுதின் அடியேன் கரத்தகன்ற
துங்கப் பணிலம்உலனச் சூழுங் கணநாதன்
செங்கைத் தலத்துளதால் செல்வா எனக்கதனை
இங்கிப் பொழுதே அளித்தருளாய் என்றிரப்ப. ௪௪

---

முகக்கையா' என்றார். அதன் பின்னுள்ளவை, 'வெளியாய் கரியாய்—பச்சையனே செய்ய மேனியனே'' (திருவா. நீத். ௩௧.) என்னும் அருட்டிரு மொழிப் பொருளை யுடையன என்க.

௪0. வல் - சூதாடு கருவி.

௪௨. இச் செய்யுள் பிள்ளையாரைத் தியானித்தற்குரியவாறு அமைந் திருத்தல் காண்க.

௪௩. எய்ப்பிடத்தின் வைப்பு - இளைத்த காலத்தில் உதவும் வைப்புப் பொருள். ''காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க'' (திருவா. அண். ௧0௫) என்பது மணிவாசகம். முந்நீர் - கடல்.

திருமால் சங்கு பெறுதல்

வேண்டுந் திருநெடுமாற் கெங்கோன் வெளிநின்று
காண்டகைய பூத கணங்கரத்துக் கொண்டிருந்த
மாண்டபுகழ்ச் சங்கம் அளித்தருளி மாயோனே
ஈண்டு நினக்கின்னும் வேண்டுவதென் னென்றருள. ௪௫

முன்னாய புண்ணியகோ டீசர் திருமுன்பென்
றன்னோடிவ் வத்தித் தடங்கிரியில் வீற்றிருந்திங்
கெந்நாளும் எல்லார்க்கும் எவ்வரமும் ஈந்தருளாய்
மன்னாஎன் றேத்த மகிழ்ந்தங்கண் வைகினனால். ௪௬

ஒன்னலரை வாட்டும் உலவைப் படைத்தேவும்
பன்னகப்பூம் பாயல் திகிரிப் படைக்கோவும்
அன்ன நடைக் குன்ற மால்வரையின் ஆருயிர்கட்
கென்ன வரமும் அளித்தென்றும் மேவுவார். ௪௭

மற்றிதனைக் கற்றோருங் கேட்டோரும் மாசிலர்க்குச்
சொற்றவரும் ஊறு தவிர்ந்தென்றுந் தொல்லுலகில்
பெற்றமக வாதிப் பெருஞ்செல்வத் தோடுறைந்து
பற்றறுத்து மேலைப் பரபோகம் மேவுவரால். ௪௮

ஆகத் திருவிருத்தம் - ௫௮௩.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'திருமால் பிரமன் முதலியோர் பெற்றுள்ள பொருள்களும் வாழ்வுகளும் இறைவன் திருவருளையின்றி நிலைபெற மாட்டா' என்னும் உண்மையை முதலாகக் கொண்டு, (௨)' அக்கடவுளர்களும் பகைவரால் வருந்துகின்றவர்களாய், அவர்களைக் கெடுத்துத் தாம் வாழ விரும்புகின்றவர்களே' என்பதும், (௩) 'இறைவன் திருவருளை நோக்கி நிற்பார்க்கு வினைப்பயன்கள் மென்மைப்பட்டும், அதனை நோக்காதவர்களுக்கு வன்மைப்பட்டும் நிற்குமாதலால், அவனை வழிபட்டார்க்கு இடையூறு தீர்தலும், வழிபடாதார்க்கு இடையூறு சேர்தலும் உண்டாகும்' என்பதும்,

௪௪ துங்கப் பணிலம் - சிறந்த சங்கு, பாஞ்சசன்னியம்.

௪௫. வெளி நின்று - பிரசன்னமாகி. மாண்ட - மாட்சிமைப்பட்ட.

௪௭. ஒன்னலர் - பகைவர். உலவை - கொம்பு. திகிரி - சக்கரம். அன்ன - அந்த; சுட்டு. நடைக் குன்றம் - யானை.

(ச) 'இறைவன், எவ்வாற்றலாயினும் தன்னை அறிந்து வந்து அடைந்தவர் களுக்கு அவர் வேண்டியவற்றைக் கொடுத்து ஆட்கொள்வான்' என்பதும், (ரு) சத்தியும் சிவமுமாகிய இறைவன் அருட்குறி ஓங்கார வடிவமானதுபோலப் பிள்ளையார் வடிவமும் ஓங்கார வடிவமே யாதலால், அவ்வடிவங்கள், வழி படுவார் தாம் விரும்பும் பயனுக் கேற்பக் கருதும் கருத்து வேறுபாடுபற்றி வேறவன வல்லது பொருளால் வேறல்ல' என்பதும், (சு) 'இறைவன், தன் திருவிளையாடல் மாத்திரை யானே உலகத்தை ஆக்கவும் அழிக்கவும் வல்லன்' என்பதும், (எ) அவனது ஆற்றலின் முன், ஏனைய திருமால் பிரமன் முதலியோ ரது ஆற்றல்களும் முனைத்து நிற்க மாட்டாவாய் அதன் வழிப்பட்டடங்கும்' என் பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

தாபதர்களே, நன்மையைச் செய்கின்ற புண்ணியகோடீசர் பெரு மையை இதுகாறும் சொன்னோம். இனி, அவர் திருமுன்பிலுள்ள அத்திகிரி யில் எழுந்தருளியிருக்கின்ற வலம்புரி விநாயகர் பெருமையைச் சொல்லு வோமாக.

முன்னொரு காலத்தில் திருமால், பிரமன், முனிவர்கள், தேவர்கள் முத லிய யாவரும் ஓரிடத்தில் கூடியிருந்து, வஞ்சகர்களாகிய அசுரர்கள் செய் கின்ற செயல்களெல்லாம் செவ்வனே முற்றுப் பெறுகின்றன. அங்ஙனம் முற்றுப்பெறுதபடி அவர்களுக்கு இடையூற்றைச் செய்யவும், நமக்கு வரும் இடையூற்றைப் போக்கி நன்மையை அளிக்கவும் ஒரு கடவுளை நாம் அடை தற்கு இறைவனை வேண்டுவோம் என்று துணிந்து, மந்தர மலையை அடைந்து, இறைவனைக் கண்டு, வணங்கித் தமது கருத்தைக் கூறிக் குறையிரந்தனர்.

அதனைத் திருச்செவி சாத்தியருளிய சிவபெருமான், 'அவ்வாறே ஆகுக' என்று சொல்லி அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு, இறைவி யோடும் சித்திரச் சாலையை அடைந்து அங்குத் தீட்டப் பெற்றுள்ள சித்திரங் களை எல்லாம் இறைவிக்குக் காட்டி யருளினர். அப்போது மந்திர வடிவங் களை எழுதப்பட்ட சித்திரங்களுள் இருவகைப்பட்ட பிரணவ வடிவங்களை இறைவி கண்டு, 'இவைகள் யாவை?' என்று கேட்க, சிவபெருமான் இவைகள் பிரணவங்களாகும். இப்பிரணவம் நம்முடையது, மும்மூர்த்திகளைப் படைத்த தாகும் எனவும், இப்பிரணவம் உன்னுடையது, முச்சத்திகளைப் படைத்தா கும் எனவும் கூறினர். அது கேட்ட இறைவி, இவைகள் ஆண் யானையும் பெண் யானையுமாகத் தோன்றுதலால் நாமும் அவ்வடிவத்தைக் கொண்டு கூடு வோம் என்று சொல்ல, அங்ஙனமே இருவரும் ஆகிய காலத்தில், யானை முகத்

தையுடைய பிள்ளையார் தோன்றி யருளினர். அவரை இருவரும் விருப்பத்தோடு எடுத்து அணைத்து ஆபரணங்கள் பலவும் அணிவித்து வாழ்த்தினர்கள். பிள்ளையார் அவைகளை அணிந்து கைகொட்டி ஆடல் செய்தனர்.

பிறகு உமாதேவியார், இவனை இப்பொழுதே கணங்களுக் கெல்லாம் தலைவனுக்க வேண்டுமென்று சொல்ல, அவ்வாறே இறைவன் திருமால் முதலியோரை வருவித்து, பிள்ளையாருக்குத் திருமுடி சூட்டி, கணங்களுக் கெல்லாம் தலைவராகச் செய்து, தேவர்களை நோக்கி, 'இவன் உங்களுக் கெல்லாம் தலைவனும் விக்கினங்களுக் கெல்லாம் அதிபதியாகிய விக்கினராசனும் ஆவான், நீங்கள் எண்ணியவாறு அசுரர்களுக்கு இடையூற்றையும் செய்வான்' என்று சொல்ல, அதனைக் கேட்ட தேவர்கள் மனமகிழ்ந்து, தங்கள் தங்களுக்கேற்ற கையுறைகளைப் பிள்ளையாருக்குக் கொடுத்து விடைபெற்றுச் சென்றனர்.

அதன் பிறகு பிள்ளையார் திருவிளையாட்டினை மேற்கொண்டு, பல குறும்புகளைச் செய்து வருங்கால், ஒருநாள் பாற்கடலை அடைந்து அதிலுள்ள நீர் முழுவதையும் தமது தும்பிக்கையால் முகந்து கொண்டார். அதனுல், அங்கு அறிதுயி லமர்ந்திருந்த திருமாலும், அவர் பாயாகிய ஆதிசேடனும், அவர் உந்தியிலிருந்த பிரமனும், அவர் தேவியாகிய இலக்குமியும் அவர் வாகனமாகிய கருடனும் ஏனைய நீர்வாழுயிர்க ளுடனே தும்பிக்கையுட் புகுந்தனர். பின்னர் பிள்ளையார் நீரை முன்போலக் கடலில் கவிழ்த்தபோது திருமால் முதலியோர் துரும்புகள்போலத் திசைகள்தோறும் சிதறி வீழ்ந்து, பிறகு ஓர் இடத்தில் கூடி, இது நமக்கு மறுபிறப்பாகும் என்று மதித்துத் தங்கள் வருத்தத்தைப் பேசிக்கொண்டனர்.

அவர்கள் அவ்வயர்ச்சி நீங்கப்பெற்ற பின்னர், திருமால் தமது கையிலிருந்த பாஞ்சசன்னிய மென்னும் சங்கைக் காணுதவராய்த் திகைத்தனர். அப்போது அஃது ஒலிக்கும் ஓசை கேட்டது. அத்திசையில் சிலரையனுப்பி, அது பிள்ளையார் கணங்களுள் ஒன்றன் கையிலிருப்பதாகத் தெரிந்து, இனி நான் என்ன செய்வேன்! என்று அதனைப் பெறவேண்டி, திருமால் கைலைக்குச் சென்று, இறைவனை வணங்கிக் குறையிரந்தனர். இறைவன், 'இது நம்மால் ஆவதன்று; நீ காஞ்சியை யடைந்து உனது அத்திகிரியில் கணபதியை வைத்து வழிபட்டு அதனைப் பெறுவாயாக, என்று விடைகொடுத்தனுப்ப, திருமால் அங்ஙனமே காஞ்சியை அடைந்து, அத்திகிரியில் வலம்புரி விநாயகப் பெருமானை முறைப்படி வழிபட்டுத் துதித்தனர். விநாயகப் பெருமான் அவர்க்குக் காட்சி யளித்து, அவர் வேண்டிய பாஞ்சசன்னியத்தை ஈந்து, மற்றும் உனக்கு வேண்டும் வரம் யாது? என்று கேட்கத் திருமால், புண்ணியகோடீசர் திருமுன்பில் என்னுடன் தேவரீரும் வீற்றிருந்தருளி, எந்நாளிலும் யாவர்க்கும் எவ்வரத்தையும் அளித்தருளவேண்டு மென்றனர்.

விநாயகப் பெருமான் அவ்வரத்தைக் கொடுத்தருளினர். அன்று முதல் வலம்புரி விநாயகப் பெருமானும், திருமாலும் அத்திகிரியில் உயிர்களுக் கெல்லாம் எத்தகைய வரத்தையும் கொடுத்துக்கொண்டு வீற்றிருப்பா ராயினர்.

இக்கதையைக் கற்றவர்களும் கேட்டவர்களும் நல்லவர்களுக்குச் சொன்னவர்களும் இவ்வுலகத்தில் இடையூறு நீங்கி, மக்கட்பேறு பெருஞ் செல்வம் முதலிய யாவும் அடைந்து வாழ்ந்து, பின் பற்றற்றவர்களாய்ச் சிவபோகத்தை அடைவார்கள்.

---

# சிவாத்தானப் படலம்

கலி விருத்தம்

அலம்புநீர் வாவிசூழ் அத்திமா மலைமிசை
வலம்புரி விநாயகன் வரவிது போகினன்
நலம்புரி பூசைசெய் நவில்சிவாத் தானமாம்
புலம்புரி பெருமையைப் புகலுதுங் கேண்மினே. க

ஆதிநாள் சிவனிடத் துதித்தவன் அருளினாற்
பேதியா துலகெலாம் படைத்திடப் பெற்றுள
சீதநாண் மலர்மிசைத் திசைமுகன் றன்னைமால்
மூதுல கோடும்உண் டாக்கினன் முறைமையால். உ

நாரணனைப் படைக்க நான்முகன் வேண்டல்

அதுமனத் தெண்ணினன் அழுக்கறுத் திளநிலா
விதுமுடிப் பிரான்திருக் கயிலையின் மேயினன்

---

க. அலம்பு - ஒலிக்கின்ற. வரவு - வரலாறு. போகினன் - பிரமன். புலம் - தலம். புரி - விரும்புகின்ற.

உ. சிவன் இடத்து - இறைவன் இடப்பாகத்தில். மால் உதித்து, அவன் அருளினால் திசைமுகன்றன்னை உண்டாக்கினன் என முடிக்க.

ங. அழுக்கறுத்து - பொறாமையுற்று. நிலா - சந்திரிகை. விது-சந்திரன். பொது அறத் தொழுதல் - இறைவனை மற்றைத் தேவர்களோடு ஒப்பவைத்து அவர்களை வணங்குதல் போல வணங்காது, எவ்வுயிர்க்குந் தலைவனாகிய முழு முதற் கடவுளாக அறிந்து வணங்குதல். இதனைத் திராவிட மாபாடியத்தின் எட்டாஞ் சூத்திரம் முதலதிகாரணத்துப் பசு புண்ணியம் சிவ புண்ணியங் களை விளக்குமிடத்துக் கூறியவாறுபற்றி யுணர்க. "பொது நீக்கித்தனைநினைய

பொதுவறத் தொழுதனன் போற்றிநின் றுரைசெய்வான்
மதுமலர்ப் பொகுட்டணி மாளிகைப் பண்ணவன். ௩

பெருமநின் இடப்புறத் தரிதனைப் பெற்றனை
அருளொடும் வலப்புறத் தென்னைஈன் றளித்தனை
உருவவை குந்தமுஞ் சத்திய உலகமும்
இருவரும் பெற்றுளேம் எந்தைநின் னருளினல். ௪

படைப்பதுங் காப்பதும் பணிஎமக் காக்கினை
தொடைப்பொலங் கொன்றையந் துணர்துறுஞ் சடைமுடி
விடைக்கொடிப் பகவனே விருப்பொடு வெறுப்பினை
உடைத்தநின் னருட்கிரு வேங்களும் ஒத்துளேம். ௫

பத்திசெய் துன்னருள் பெற்றுவெம் பாம்பணை
உத்தமன் என்னைஇவ் வுலகொடும் ஈன்றனன்
அத்திறத் தியானும்அம் மாயனே டகிலமுஞ்
சித்தனே படைக்குமா திருவுளஞ் செய்குவாய். ௬

என்றசொற் செவிமடுத் தெம்பிரான் உரைசெய்வான்
ஒன்றுகேள் மைந்தனே உனக்கிது வேண்டுமேல்
சென்றுகாஞ் சியின்எமைப் பூசைசெய் திருத்தியால்
மன்றஅங் கெய்திநீ வேட்டவா வழங்குதும். ௭

காஞ்சியில் பிரமன் கடவுளை வழிபடல்

ஐயுறேல் என்றலும் அம்புயன் தாழ்ந்தெழுந்
தொய்யெனக் கச்சியிற் போந்துமை கோன்வளர்
கொய்பொழிற் புண்ணிய கோடியின் குணதிசை
எய்துதன் பெயரினல் இலிங்கம்ஒன் றிருத்தினன். ௮

போக்கரும் பிரமதீர்த் தப்பெயர்ப் பொய்கைஒன்
றாக்கினன் அங்குநீ ராடிநல் வினைமுடித்

---

வல்லோர்க் கென்றும் பெருந்துணையை'' (திருமு - ௬ - ப்தி - க. ௫.) என்பது ஆசிரியத் திருமொழி.

௫. நினது ஆணையாற் கிடைத்த தொழிலென்பான் 'பணி' என்றான். தொடை - மாலை. துணர் - கொத்து. துறும் - நெருங்கிய. தொடைத் துணர் என்பதனைத் துணர்த்தொடை துறுமென மாற்றியுரைக்க.

௭. மன்ற - நிச்சயமாக. வேட்டவா - விரும்பியபடி.

தூக்கமார் அன்பினுன் மலரெடுத் துடையவன்
பூக்கமழ் சேவடிப் பூசனை செய்தபின். ௯

நான்முகன் வேள்வி செய்தல்

தீபவிர் குடங்கையான் திருவுளங் களிவரக்
காயமுற் சோமயா கஞ்செயக் கருதினன்
ஆயஅக் கருத்துணர்ந் தண்டரும் முனிவரும்
ஏயினர் ஆயிடை விண்ணவர் கோனொடும். ௧o

மங்கரும் திறல்மொழிக் கிழத்திவா னட்டவர்
தங்களின் நீங்கிநீர் தன்னகத் துற்றனள்
பங்கயன் வேள்வியைப் பற்றும்அக் காலையில்
துங்கமார் தருக்களில் தொக்கனள் என்பவே. ௧௧

எழில்வளர் நாமகள் என்றும்இவ் வுலகிடை
முழவினில் வீணையில் முழங்குதீங் குரல்படுங்
குழலினில் இசையெனக் குலவுகின் றுளெனப்
பழமறை முழுவதும் பன்னும்இவ் வகையரோ. ௧௨

ஆதலிற் காண்கிலான் அயனுஞ்சா வித்திரி
வேதகா யத்திரி என்னும்மின் னருடன்
ஏதமில் தீக்கையுற் றிருமகச் சாலையுள்
போதலுங் கலைமகள் கேட்டுளம் புழுங்கினள். ௧௩

நாவின் கிழத்தி நதியாய் வருதல்

திருமகச் சாலையைப் பாழ்படச் செய்வலென்
றிருவிசும் பூழிநாள் இடித்தெனக் கொதித்தெழுந்
தொருநதி வடிவுகொண் டுருகெழத் தோன்றினள்
கருநிலை உயிரெலாம் ஈன்றருள் காரணி. ௧௪

கலிநிலைத் துறை

மலர்மிசை வருதிசை முகன்உயர் மகவினை புரிஇடமே
அலஅவன் உறைஉல கமும்உடன் அழிவுசெய் திடஎழல்போல்

---

௧௧. மொழிக் கிழத்தி - சரசுவதி. தரு - மரம். தொக்கனள் - நட்ப வடிவங் கொண்டு மறைந்தனள். என்ப என்பது அசைநிலையாய் நின்றது.

௧௪- உருகெழ - அச்சம் பொருந்த. படைத்தற் றொழிலுடைய சத்தி யாகலின் 'உலகெலாம் ஈன்றருள் காரணி' என்றார்.

பலகுமி ழிகள்அலை திரைநுரை பயில்வுற அகல்ககனத்
தலமிசை நிமிர்விசை யொடுவரு தகையது குலநதியே. கரு

வரிஅளி யினம்உளர் நறைமது மலரவன் மகவினையைப்
புரிவுற இடம்உத வியதொரு புவிஇது எனவெகுளா
விரிபண மணிவிட அரவிறை வெருவர உடல்நெளிய
அரிலறு கடல்நிலம் முழுவதும் அகழ்வது குலநதியே. கசு

விரவிய மறைவிதி யுளிமக வினைபுரி உபகரணத்
திரவிய முழுதுத வினஇவை எனஎழு சினமதனல்
பரவிய புனல்நிறை கழனிகள் பலகய நிரைபொழிலின்
உரவியல் வளமுழு தழிவுசெய் துறுவது குலநதியே. கஎ

ஒடிவறு மசமது தனில்அவி உணவரும் இருசுடரை
இடைவழி யினில்எதிர் உறுதலும் எழுவெகு ளியினெடுகைப்
பிடியென உடன்விரை வொடுகொடு பெயர்வது பொரஇருகேழ்க்
கடிகெழு மரைமலர் பலகொடு கடுகிடு வதுநதியே. கஅ

அயனிடை உறும்வெகு ளியின்அணை பொழுதிணை விழியவைசேந்
தியல்வது பொரஎரி மருள்குவ ளைகள்இடை இடைஒளிர
வெயரென உறைசித றிடமுலை மிடைஅணி துகில்குழறித்
துயல்வரல் பொரவரை யொடுதிரை தொகவரு வதுநதியே. கக

---

கரு. அலை, வினைத்தொகை. திரை - அலை. ககனம் - வானம்.

கசு. வெருவர - அஞ்ச. வெகுளா - கோபித்து. அரில் - குற்றம், இது தற்குறிப் பேற்றம்.

கஎ. உபகரணம் - துணைக் கருவி. கயம் - குளம். இதுவும் தற்குறிப் பேற்றம்.

கஅ. இருகேழ் மரை மலர் - செந்நிறமும் வெண்ணிறமும் வாய்ந்த தாமரை. இவைகள் சூரிய சந்திரர்கள் போன்றன என்பதாம். 'இருசுடரை, கைப்பிடியெனக் கொடுபெயர்வது பொர' என்க.

கக. சேந்து - சிவந்து. மருள், உவம உருபு. உறை - நீர்த்துளி. குழறித் துயல்வரல் - குலைந்து அசைதல். வரை - மலை. மலையோடு அலைகள் பொருந்தி மீளுதல் தனத்தின்மேல் இட்ட துகில் குலைந்து விழுவது போலும் என்பதாம்.

அவிஉண நிறைசுரர் பலரையு மலைசெய எழுசெயல்போற்
கவிழ்தலை யனகுவ டுகளொடு வெதிர்களி னெடுகடுகிப்
புவிமுதல் அறவரு பிரளய நிலையுணர் புரையவருஞ்
செவியொடு விழிவெரு வரவரு திறலது குலநதியே. உ೦

அள்ளவி நிறைகள முழுவதும் அழிவுசெய் தபின்அதனின்
உள்ளுற நடவென மிகுசின மொடுகற கறவழிபாற்
கள்ளிகள் பலபல கொடுவிடு கணைநுதி நிகர்அயில்வாய்
முள்ளுடை முதல்பல பலகொடு முடுகுவ துயர்நதியே. உக

மேற்படு கலைமகள் நதியென வேற்றுரு வுறுசால்பிற்
கேற்புற அவயவ மவைகளும் எத்தெழில் உருமாறித்
தோற்றிய வெனஅறல் மிசைவரு தூத்திரள் மணிமலர்கள்
போற்றுறு பலகொடி யுடன்எழில் பூத்தனை வதுநதியே. உஉ

வருநெறி எதிருறு புரிசைகள் மாளிகை நிரைஅகழூற்
றுருமிடி யெனஅதிர் தரும்ஒலி யோடொரு நதிவடிவாய்ப்
பருவரல் செய்யஇம் முறைவரு பாரதி செயலதனை
முருகலர் அளியென இசைபயில் நாரத முனிகண்டான். உ௩

---

உ೦. அலை செய - வருத்த. குவடு - மலை. மலைகளைத் தலைகீழாக உருட்டிக்கொண்டு வருதலால், கவிழ்தலையன குவடுகள் என்றார். வெதிர் - மூங்கில். புரையவர் - பெரியோர்கள். முதல் அற - அடியோடு அழியும்படி.

உக. அள் - அள்ளிக்கொள்வது போல மிகுந்துள்ள; "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்" (நாலடி - உ௬உ.) என்றது காண்க; நெருக்கமு மாம். நடவென - நடுதற்கென்று. கறுகற வென்பது மிகுதிக் குறிப்பு. முதல் - அடி. அஃது ஆகுபெயராய்ச் செடியை உணர்த்தும். நுதி - நுனி. அயில் வாய் - கூர்மை வாய்ந்த. வாய், வினைத் தொகை; முனை எனலுமாம்.

உஉ. எத்து எழில் - புகழப்படும் அழகு. உரு - வடிவம். அறல் - நீர். தூ - தூய்மை. மணி - இரத்தினம். முகம், கை, கால் என்னும் உறுப்புக் கள் தாமரை மலர்களும், கண்கள் குவளை மலர்களும், பல் வாய் என்பன முத்தும் பவளமும், இடை கொடியுமாக மாறினபோலு மென்பதாம்.

உ௩. புரிசை - மதில். உரும் இடி - அச்சந்தரும் இடி. பருவரல் - துன் பம். பாரதி - சரசுவதி. முருகு அலர் அளி - நறுமணங்கமழும் பூவிலுள்ள வண்டு.

நாரத முனிவர் நதிவரவு கூறல்

வேறு

கண்டு செய்யசடை கட்டவிழ ஓடி முனிவன்
புண்ட ரீகனை வணங்கிஎதிர் நின்று புகல்வான்
அண்டர் நாயகநின் வேள்வியை அழிக்க முனிவு
கொண்டு வாணிநதி யாய்க்குறுகு கின்ற னளரோ. உச

கடிது நீதடை இயற்றுதி யெனக்க மறனும்
படியில் நான்முகன் உளத்தில்உமை பங்கர் இருசே
வடிஇ ருத்தினன் அறிந்தனர் அனைத்தும் இறைவர்
நெடிய மாயனை விளித்திது நிகழ்த்த லுறுவார். உரு

வேள்வி நீவரத ராசஉயர் வேள்வி இறைநாம்
வாழி அம்மகம் அழிப்பநதி வாணி வரலால்
காழ றக்கடிது காத்திடுதி என்று கருதார்
பாழி மும்மதில் அழித்தவர் பணித்த ருளலும். உசு

நாரணன் நதியைத் தடுத்தல்

உந்து வேள்வியினை காப்பமனம் ஊக்கி எதிர்சென்
றைந்தி யோசனையில் நாகணை விரித்த தன்மிசை
மைந்து நீலமலை போல்வழி மறுத்து மலரோன்
தந்தை கண்வளர்தல் கண்டனள் கலைத்த லைவியே. உஎ

கண்டு சேயிடை அகன்றுநெறி கண்டு வடபால்
மண்டி ஏகஅது நோக்கிஅரி பாதி வழியின்

---

உச. செய்ய - சிவந்த. புண்டரீகன் - பிரமன். முனிவு - கோபம். வாணி - சரசுவதி.

உரு. படி - நிலவுலகம். விளித்து - அழைத்து.

உசு. விண்டுவை யஜ்ஞம் என்றும், இறைவனை யஜ்ஞபதி யென்றும் வேதங்கள் கூறும். வாழி அசைநிலை. காழ் - வயிரம் (சரசுவதியின்) தணியாக்கோபம். கருதார் - பகைவர். பாழி - வலிமை.

உஎ. உந்து - (அவியைச்) செலுத்துகின்ற. ஊக்கி என்னும் வினை வினை, சென்று என்னும் முதல் வினையோடு முடிந்தது. நாகம் என்பதி லுள்ள 'அம்' தொக்கது. மைந்து - வலிமை.

உஅ. சேயிடை - தூரம். நெறிகண்டு - வழி உண்டாக்கி. மண்டி - மிகுந்து. மிண்டி - நெருங்கி. நாப்பண் - நடு.

மிண்டி நாப்பண்விழி துஞ்சமலர் வாணி விலகிக்
கொண்ட வேகமொடு தென்றிசை யுறக்கு றுகினள். உ௮

பின்னும் அங்கவன் விடாதுபிணை கச்சி நகரந்
தன்னி டைக்குலை யெனக்கிடை கொளத்த வளமான்
முன்னர் நோக்கிமுடி சாய்த்துநனி நாணம் முதிர
அன்ன தென்றிசையில் நீளிடை அகன்று விலகி. உ௯

வேள்வி செய்கள மதன்குண திசைக்கண் விரவி
ஆழி யிற்செல நடந்தனள் அயன்றன் மனைவி
தாழ்வு தீர்ந்தயன் உகந்தனன் மகிழ்ந்து தலைவன்
சூழ்க ணங்களொடு மாயனெதிர் தோன்றி அருள்வான். ௩0

மாலும் நதியும் வண்பெயர் பெறுதல்
அறுசீரடி யாசிரிய விருத்தம்

சொன்ன வண்ணஞ் செய்தநீ சொன்ன வண்ணஞ் செய்தவன்
என்ன என்றும் ஓங்குதி இத்தி ருப்பெ ருநதி
மன்னு வல்வி னையெலாம் வாட்டு வேக வதியென
இந்நி லத்தி னிற்சிறந் தின்ப வாழ்வ ளிக்கவே. ௩௧

இரவி ருட்கண் இந்நதி இப்ப திக்கண் எய்திடும்
வரவு காண நீஒரு வாள்வி ளக்கொ ளியென
விரவி னுய்வி ளக்கொளி விண்டு வென்ன மேவுகென்
றருளி எந்தை இம்முறை வேள்வி காத்த ளித்தபின். ௩௨

நன்னர் ஆற்று நீரென நண்ணி னள்த ருக்களில்
மன்னி நிற்ப நோக்கிவன் றுரு விற்செய் தண்டினோ
டின்ன வாணி தன்னைஏற் றேய்ந்த தீக்கை யுற்றனன்
துன்னு சீர்க்க லையினுற் சோமம் ஏற்ற பின்னரோ. ௩௩

---

உ௯. பிணை - (அந்நதி) அடைதற்குரிய. குலை - கரை. தவளமான் - வெண்ணிற முன்னவள், சரசுவதி. நீளிடை - தொலைவு.

௩௧. சொன்னவண்ணம் செய்த பெருமான் என்பதே யதோக்தகாரி பெருமான் என்பதன் பொருளென்க.

௩௨. இதிற் கூறப்படும் வரலாற்றை ஆதிபிதேசப் படலத்திற் காண்க.

௩௩. தாரு - மரம். உற்றனன், முற்றெச்சம். கலை - அம்சம். சோமம் - சோமயாகம். ஏற்றபின் - செய்யத் தொடங்கியபின். நதியுருவமாக வந்த

இன்ன வட்ப குத்திநீ இருத்து விக்கெ னப்படும்
அன்ன வர்க்கெ னக்கிளந் தம்பு யத்தன் அக்கதை
நன்ம யித்தி ராவரு ணன்க ரத்த ளிப்பஅம்
மின்னை வாங்கி மீட்டவர் வேதன் மாட்டி ருத்தினர். ௩௪

வேறு

மீண்டு திசைமுகன் றன்பால் மேவிய வாணி மகிழ்ந்தாங்
கீண்டிய தன்னுருக் கொண்டே எச்சத் துணைவியு மாகிக்
காண்டகு பாங்கர் இருப்பக் காதலன் வேள்வி முடித்தான்
ஆண்டை விதிமுறைத் தெண்ணீர் ஆடினன் வல்வினை வென்றான்

இறைவன் காட்சி கொடுத்தல்

அங்கண் இலிங்கத்தின் முன்னர் அணைந்து மனைவியர் மூவர்
துங்க வசிட்டன் முதலோர் சுராசுரர் சூழ்ந்து துதிப்பத்
தங்கும் அவைக்கண் இருந்து சம்புவை உள்ளத் திருத்திப்
பொங்கிய அன்பில் தியானம் புரிந்து வழிபடும் போது. ௩௬

வான இயங்கள் கலிப்ப மலர்மழை அண்டர்சொரிய
ஊனமில் சாமரை ஏந்தி உருத்திர மாதர் இரட்டப்

சாசுவதி பின்னர் முன்போலவே மரங்களில் சூக்குமமாகத் தங்கி நிற்ப, பிரமன் அம்மரத்தால் ஒரு தண்டாயுதம் செய்து அதிலுள்ள அவள் அம்சத்துடன் இருந்து யாகம் செய்யத் தொடங்கினு னென்பதாம். கலையினல் என்பது 'விலையினல்' என்று ஒரு பதிப்பில் உள்ளது.

௩௪. பகுத்தி - வேறுபிரி. இருத்துவிக்கு - யாக புரோகிதன். அன்னவர்க் கென்புழிக் குவ்வுருபை ஒடுவுருபாகத் திரிக்க. கிளந்து - சொல்லி. கதை - தண்டு. மயித்திராவருணன் - இருத்துவிக்குகள் பதினறுவருள் ஒருவர். இதுமித்திர (சூரிய)னுக்கும் வருணனுக்கும் மகனெனப்படும் தத்திதப் பெயராய் அகத்தியரை உணர்த்து மென்ப. உரையாசிரியர் வசிட்டரை உணர்த்து மென்றார். இச்செய்யுளில், சில பாடப் பிறழ்விருக்கு மெனத் தோன்றுகின்றது.

௩௫. எச்சம் - யாகம். யாகபூர்த்தியில் செய்யும் ஸ்நானம் அவமிருத ஸ்நான மெனப்படும்.

௩௬. பிரமன் மனைவியர் மூவராவார்: சரசுவதி, சாவித்திரி, காயத்திரி என்பவர்.

௩௭. இயங்கள் - வாச்சியங்கள். கலிப்ப - முழங்க. சனந்தர் முதலோர்: சனந்தர், சனதர், சனற்குமாரர், சனகர் என்னும் நால்வர்கள்.

பான்மை யினுற்கந் தருவர் பாடி விருதெடுத் தோத
ஞான சனந்தர் முதலோர் நண்ணி இருபுடை யேத்த. ௩௭

எண்டிசை யாளர் முடிகள் இணையடி தாங்கி நடப்ப
வண்டுளர் கோதை உமையை மடித்தல மீதுறக் கொண்டு
பண்டை மழவிடை ஏறிப் பண்ணவர் தம்பெரு மானும்
விண்டலம் ஏர்கொள எய்தி விழைதகு காட்சி அளித்தான். ௩௮

கண்டு விரிஞ்சன் எழுந்து கரையறு காதல்கை மிக்குக்
கொண்ட புளகங்கள் மல்கக் குவித்தகை சென்னியில் ஏற
விண்ட மொழிகள் குழற இன்பவெள் ளத்திடை ஆடி
மண்டனில் வீழ்ந்து வணங்கி மறைமொழி கொண்டு துதிப்பான்.

நான்முகன் போற்றி செய்தல்

வேறு

அடியவர் இழைத்த குற்றம் அனந்தமும் பொறுப்பாய் போற்றி
கொடியவர் தம்மைச் செய்யுங் குற்றங்கண் டொறுப்பாய் போற்றி
ஓடிவறு வணக்க முற்றுங் கைக்கோளும் உடையாய் போற்றி
முடிவிலா மொழிகட் கெல்லாம் வாச்சிய முதலே போற்றி. ௪0

---

௪0. வினைவயத்தனவாய்ப் பிறப் பிறப்பிற் பட்டுச் சுதந்தரமின்றிச் சிற்றறி வுடையனவாய் நிற்கும் பசுக்களாகிய ஏனைத் தெய்வங்கள், உயிர்கள் தமக்குச் செய்யும் வணக்கங்களின் பயனைத் தரமாட்டாவாக, இயல்பாகவே பாசங்களின் நீங்கிச் சுதந்தரனாய் முற்றறிவுடைய பசுபதியாகிய இறைவ னொருவனே ஏனைய எல்லாத் தெய்வங்களிடமாகவும் நின்று அவைகட்குச் செய்யும் வணக்கங்களை ஏற்று அருள் செய்வானாகலின், 'வணக்கம் முற்றும் கைக்கொளும் உடையாய்' என்றனன். 'உடையாய்' என்பது, பசுபதி என்னும் பொருட்டாய், கைக்கொள்ளுதலை யறிவிக்கும் குறிப்பேது வாய் நின்றது. இதனை, "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே —மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள் - வேதனைப்படும் பிறக்கும் இறக்கும் மேல் வினையும் செய்யும் - ஆதலான் இவையிலாதான் அறிந்தருள் செய்வ னன்றே" (சித்தி. சு. உ. செ. உரு.) என்னும் மெய் கண்ட நூலுரையாலுணர்க. வாச்சியம் - பொருள். முடிவிலா மொழிகள் - எண்ணிறந்த பாஷைகள். இறைவன் சொற்பொருளாயுள்ளவன் என்பதை, "சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானை" (திருமு. ௬ - ௭. ௭.) "சொல் லாகிச் சொற்பொருளாய் நின்றார் போலும்" (திருமு. ௬. ௨௮. ௬.) என்னும் அருட்டிரு மொழிகளாலுணர்க.

சீதநீர் உலகம் போற்றுங் தேவர்க்குந் தேவே போற்றி
கோதற உண்மை காட்டுங் குரவர்க்குங் குருவே போற்றி
பூதநா யகனே போற்றி புரீசர்க்கும் ஈசா போற்றி
பாதியில் உமையை வைத்த பசுபதி போற்றி போற்றி. ௪௧

ஒருமுறை பத்து நூறா யிரமுறை உனதாள் போற்றி
மருவரும் பொருளே போற்றி மறுவலும் போற்றி போற்றி
இருள்நிற மிடற்றாய் போற்றி யென்றுநாத் தழும்ப வேத்தித்
திருமலர்க் கடவுள் போற்றச் சிவபிரான் அருளிச் செய்யும். ௪௨

### இறைவன் வரங் கொடுத்தருளல்

உவந்தனம் மறையோய் உன்றன் பத்தியின் உறுதி நோக்கிச்
சிவந்தரும் எம்பால் நீமுன் வேட்டவா திருமா லோடும்
பவந்தரும் உலக மெல்லாம் படைத்தியால் என்று நல்கத்
தவந்திகழ் வேதன் மற்றும் இதுவொன்று தாழ்ந்து வேண்டும். ௪௩

என்றன்ஆத் தான மாக யான்உறை இருக்கை தன்னை
உன்றன்ஆத் தான மாகக் கோடலான் உம்பர் ஏறே
நன்றும்இத் தானம் என்றும் நவில்சிவாத் தானப் பேரால்
நின்றிட இங்கு நாளும் நீஇனி துறைதல் வேண்டும். ௪௪

நின்னருட் குரியே னாகி நின்பணி தலைநின் றாறா
உன்னடி யிணைக்கீழ்ப் பத்தி உலப்புறா தடியேன் என்றும்
நன்னெறி ஒழுகச் செய்யாய் நவில்சிவாத் தானத் தெய்தி
என்னரே யெனினும் நின்னை ஏத்தினோர் உய்யக் கோடி. ௪௫

உவாமுதற் சிறந்த நாளின் உடைதிரைப் பிரம தீர்த்தத்
தவாவுடன் ஆடிச் செய்யுங் கடன்முடித் தடிகேள் உன்னைத்

---

௪௧. பூதம் - பஞ்ச பூதம். இதனுள் இறைவன் மகாதேவன், முதற் குரு, பூதநாதன் என்னும் பொருள்கள் விளக்கப்பட்டவாறு காண்க.

௪௨- எண்கள் பன்மைக் குறித்து நின்றன. மறுவல் - மறுமுறை.

௪௩. சிவம் - நன்மை. வேட்டவா - விரும்பியபடி. பவம் - தோற்றம்.

௪௪. ஆத்தானம் - இருப்பிடம்.

௪௫. ஆறா - நீங்காத. ஆறாப் பத்தியென இயையும். உலப்புறா - கெடாது.

தவாதசீர்ச் சிவாத்தா னத்து வழிபடுந் தகையோர் செல்வக்
குவாலொடும் இனிது வாழ்ந்து முத்தியிற் கூடச் செய்பாய். ௪௫

என்றிரந் தேத்த எல்லாம் அருள்புரிந் திலிங்கத் தெங்கோன்
ஒன்றினன் அயனும் மாலை உலகொடும் விழுங்கி மீளத்
தொன்றுபோல் முறையான் நல்கித் துகளறு சிவாத்தா னத்தின்
மன்றவன் அருளான் முன்னர் வைகினன் உவகை கூர்ந்து. ௪௭

எழுசீரடி யாசிரிய விருத்தம்

முந்துற மனத்தைத் தோற்றினன் அதன்பால் முழங்குகா யத்திரி யதனில், சந்தைகள் அவற்றிற் சாமம்அச் சாமந் தன்னிடை யெசுர்கள்அங் கவற்றின், மைந்துடை நெடுமால் அவனிடைப் பைங்கூழ் பயிர்களின் மதியம்அம் மதியின், உந்துறும் பசுக்கள் பசுக்களின் மகவான் உவனிடை உலகெலாந் தந்தான். ௪அ

இம்முறை ஒருவர் ஒருவரைப் படைத்துச் செருக்கும்மற் றிவர்களைப் பரமென், றும்மைவல் வினையான் மருளுநர் மருள்க உண்மைநூல் உணர்ந்தருள் கூடுஞ், செம்மையோ ரெல்லாம் விடமிடற் றடக்கித் தேவரைப் புரந்துயர் குணங்கள், மும்மையுங் கடந்த முதல்வனே எவர்க்கும் மூலகா ரணனெனத் தெளிவார். ௪௯

ஆகத் திருவிருத்தம் - ௬௩௨.

---

௪௫. உவா - பௌர்ணிமி, அமாவாசை. தவாத - கெடாத. குவால் - குவியல்.

௪அ. சந்தைகள் - வேத சந்தசுகள். சாமம் - ஒரு வேதம். எசுர் - ஒரு வேதம்; அதன் பிரிவுகள் நோக்கிப் பன்மையாற் கூறப்பட்டது. மைந்து - வலிமை. பைங்கூழ் - பயிர். மகவான் - இந்திரன். உவன் - அவன். இப் படைப்பு முறைகள் சில ஒத்தும், சில பிறழ்ந்தும் காணப்படுகின்றன. இதனால் பிரமன் முதலியோர் இறைவன் திருவருள் பெற்றுப் படைக்கும் படைப்பு முறைகள் பல்வேறு வகைப்படுமென்பது போதரும்.

௪௯. பரம் - கடவுள். உம்மை - முற்பிறப்பு. மும்மை - மூன்று. முக்குணங்களாவன: இராசதம், தாமதம், சாத்துவிகம் என்பன. இறைவன் மாயா காரியமாகிய இக்குணங்களைக் கடந்து நிற்றலால் குணாதீதன் எனவும், நிர்க்குணன் எனவும் படுவன்.

முக்குண வயப்படுதலும் அவற்றைக் கடந்து நிற்றலும், உயிர்களையும் இறைவனையும் அறிதற்குரிய ஏதுக்களாதலால், அவைகள் முறையே ஒருவரை

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு; (க) 'பிரமன், முதலியோர் இறைவன் திருவருள் பெற்று ஒருவரை யொருவர் படைத்தும் உலகங்களைப் படைத்தும் மகிழும் அவாந்தர காரணர்களே' என்பதும்; (உ) 'அதனால் ஐந்தொழிற்கும் இறைவனே உண்மைக் காரணன்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். திருநெறிக் காரைக்காட்டுப் படலத்திற் கூறிய 'வானிடத்தவரும் மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்' என்னும் உண்மை பின்னுள்ள வரலாறுகளிலும் விளங்குதல் காண்க. முன்னர் வரும் வரலாறுகளுள்ளும் ஏற்குமிடத்துக் கொள்க. மற்றும் இதனுள், உ௯, ௪௦, ௪௮, ௪௯ ஆம் செய்யுட்களில் கூறப்பட்ட பொருள்களையும் ஆண்டாண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

முனிவர்களே, அத்திகிரியிலுள்ள வலம்புரி விநாயகர் வரலாறு இதுவாகும். இனி, பிரமன் பூசித்த சிவாத்தானத்தின் பெருமையைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

ஆதி காலத்தில், திருமால் சிவபெருமானுடைய இடப் பாகத்தில் தோன்றி பிரமனையும் உலகத்தையும் படைத்தார். அதை யெண்ணிப் பிரம தேவன் பொறாமை கொண்டு, கைலைக்குச் சென்று இறைவனை வணங்கிக் கூறுகின்றான். எமது பெருமானே, தேவரீரது இடப் புறத்தினும், வலப்புறத்தினும் தோன்றி உமது ஆணையால் படைத்தலும், காத்தலும் செய்கின்ற திருமாலும் யானும் தேவரீர் திருவுளத்திற்கு ஒத்தவர்களே யாவோம். அங்ஙனமாக, திருமால் அடியேனை இவ்வுலகத்தோடும் படைத்தனர். ஆகையால், அத்திருமாலோடு உலகத்தை அடியேன் படைக்கும்படி அருள் செய்ய வேண்டும் என்று வேண்டினன். அதற்குச் சிவபெருமான், 'இதனை நீ காஞ்சியில் எம்மைப் பூசித்துப் பெறுவாயாக' என்றருளினர். பிரமன் அவ்வாறே காஞ்சியை யடைந்து, புண்ணிய கோடீசத்திற்குக் கிழக்கில் தன்பெயரால் ஒரு இலிங்கம் தாபித்து, 'பிரம தீர்த்தம்' என்னும் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கி, இறைவனை விதிப்படி பூசித்தனன்.

---

ஒருவர் படைத்துச் செருக்குதலாலும், விடத்தைத் தான் உண்டு அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்து அவர்களைக் காத்ததனாலும் தெற்றென விளங்கவும் ஏனையோரைப் பரமெனக்கருதுதல் வினைப்பயனெனவும், திருவருளையடையும் பக்குவமுடையார்க்கே அவரை ஒழித்து இறைவனொருவனையே பரமெனக் கருதுதல் கூடுமெனவும் கூறியவாறும்.

பின்னும், பிரமதேவன் இறைவன் மகிழும்படி சோம யாகம் செய்யக் கருதினன். அதனையறிந்த தேவர்களும் முனிவர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். அதுகாலை சரசுவதி தேவர்களை விட்டு நீங்கி நீரிற்பொருந்தியிருந்தனள். பின்னர் பிரமன் யாகம் செய்யத் தொடங்கும்போது, சரசுவதி மரங்களில் சூக்குமமாக மறைந்திருந்தனள். அதனாலேயே மத்தளம், வீணை குழல் என்பனவற்றில் சரசுவதி இசை வடிவமாக இருக்கின்றாளென்று வேதங்கள் சொல்லுகின்றன. அதனால், பிரமதேவன் சரசுவதியைக் காணாதவனாய், சாவித்திரி காயத்திரி என்னும் மற்றை மனைவியர்களுடன் இருந்து யாகதீக்கை பெற்று, யாகம் செய்யத் தொடங்கினன். அதனையறிந்த சரசுவதி மிகவும் கோபங்கொண்டு, அந்த யாகத்தை அழிப்பதற்காக நதியுருவங்கொண்டு, பிரளய வெள்ளத்தினும் மிகுதியாகப் பெருக்கெடுத்து வருவா ளாயினள்.

அதை நாரதமுனிவர் கண்டு பிரமதேவனுக்கு அறிவிக்கப் பிரமதேவன் சிவபெருமான் திருவடியை மனத்தில் தியானித்தனன். அதனால் சிவபெருமான், வரதராசராகிய திருமாலை அழைத்து, 'வேள்வி வடிவினன் நீயும் வேள்வி இறைவன் நாமுமாவோம்; அத்தகைய வேள்வியை அழிக்க வரும் சரசுவதியைத் தடுப்பாயாக' என்று கட்டளை யிட்டனர். உடனே திருமால் அந்நதிக்கு எதிரே சென்று ஐந்து யோசனை யளவாகத் தமது பாம்பணையை விரித்து ஓர் நீலமலைபோலப் படுத்து உறங்கினர்.

அதனைக் கண்ட சரசுவதி தூரத்தே விலகி வடக்குத் திசையாகத் திரும்பி யாகத்தை நோக்கிச் சென்றனள். அவ்வழியிலும் திருமால் சென்று குறுக்கே படுத்தனர். பின்பு சரசுவதி தென்றிசையாகச் சென்று காஞ்சியை நெருங்க, திருமால் விடாது சென்று அவ்விடத்திலும் குறுக்கே பள்ளி கொண்டனர். அதனால் சரசுவதி மிகுந்த நாணத்தை யுடையவளாய், தூரத்தே விலகி, பிரமன் யாகம் செய்யும் இடத்திற்குக் கிழக்குப் பக்கமாகக் கடலை நோக்கிப் போய்விட்டனள்.

பின்பு சிவபெருமான் தோன்றி, 'விண்டுவே, நீ யாம் சொன்ன வண்ணம் செய்தமையால், 'சொன்ன வண்ணம் செய்தவன்' என்னும் பெயர் பெற்று விளங்குக' எனவும், 'இந்நதியானது 'வேகவதி' எனப் பெயர் பெற்று யாவர்க்கும் இன்பந் தருக' எனவும், இந்நதி இந்நகரில் இரவில் வருதலைக்காண நீ விளக்கொளியாய் நின்றமையால் 'விளக்கொளிப் பெருமாள்' என்னும் பெயர் பெற்று விளங்குக எனவும் கூறி மறைந்தனர்.

அதன் பின்னர் சரசுவதி நதியுருவம் மாறி, முன்போல மரங்களில் தங்கி நின்றனள். பிரமன் அம்மரத்திற் செய்த ஓர் தண்டினால் அவள் அம்சத்தை ஏற்று, அதிலிருந்து யாகத்தைச் செய்விக்கும் இருத்துவிக்குகளால் அவளை

வேறு பிரிக்கச் செய்து, தன் உருவத்தை யடைந்து மகிழ்ந்த சரசுவதி யுடன் இருந்து யாகத்தை முடித்தனன்.

பின்னர்ப் பிரமதேவன் சிவபெருமானை உள்ளன்போடு பூசிக்க, சிவ பெருமான் உமாதேவியாரோடும் எழுந்தருளிக் காட்சி யளித்தனர். அதுகண்ட பிரமதேவன் உவகைக் கடலுள் ஆழ்ந்து, பன்முறை வணங்கிப் பலவாறு துதித்து நிற்கச் சிவபெருமான், 'பிரமதேவனே, நீ விரும்பியபடியே திரு மாலோடும் உலகத்தைப்படைக்கும் ஆற்றலை யளித்தோம்' என்றனர். பிரம தேவன் பின்னும் வேண்டுகின்றான்: எனது ஆத்தானமாகிய இதனை உமது ஆத்தானமாகக் கொண்டமையால், இத்தலம் 'சிவாத்தானம்' என்று பெய ருடையதாக, இதன்கண் தேவரீர் என்றும் எழுந்தருளி யிருத்தல்வேண்டும்; உமது திருவடிக்கண் நீங்காத அன்பு அடியேனுக்கு உண்டாகவும்; இத்தலத் தில் தேவரீரை வணங்கினவர்களும், இத்தீர்த்தத்தில் முழுகினவர்களும் முத் தியடையவும் அருள்செய்ய வேண்டுமென்று வேண்டினன். சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்து இலிங்கத்தில் மறைந்தனர். பிரமதேவன் திருமா லோடு உலகங்களைப் படைத்து வாழ்ந்தனன்.

---

# மணிகண்டேசப் படலம்

---

எழுசீரடி யாசிரிய விருத்தம்

ஞிமிறுகால் உழக்க முகைஉடைந் தலர்ந்து நெட்டிதழ் வாய்
தொறும் நறவம், உமிழ்மலர்த் தடஞ்சூழ் திருச்சிவாத் தானத்
துண்மையைத் தெரிந்தவா றுரைத்தாம், அமிழ்தமும் கைப்பக்
குழாங்குழா மாகி அறிஞர்தாம் கழகங்கள் தோறும், தமிழ்தெரி
காஞ்சி வரைப்பினில் மணிகண் டேச்சரத் தலத்தியல் புரைப்பாம்.

தேவரும் அசுரருந் திசைமுகனை வேண்டல்

பாட்டளி உளரும் கற்பக நறுந்தார்ப் பனிமுடிக் கடவுளர்
தாமும், வாட்டிறல் படைத்த அசுரரும் முன்னாள் வல்வினை இறப்
பினுக் கஞ்சி, வேட்டனர் சாவா மருந்தினைப் பெறுவான் வெறிநறுக்

---

க. ஞிமிறு - வண்டு. நறவம் - தேன். கைப்ப - கசக்கும்படி. குழாம் - கூட்டம். தெரி - ஆராய்கின்ற.

உ. வேட்டனர் - விரும்பினர். வெறி - வாசனை. நறு - தேன். தோடு - இதழ். அணி - வரிசை. பழிச்சி - துதித்து. 'பாட்டளி உளரும்' என்பது இனவடை.

கொப்புளித் தலர்ந்த தோட்டணிக் கமலக் கிழவனை எய்திக் துணை யடி பழிச்சிநின் றுரைப்பார். உ

முக்குணப் பகுப்பின் மூவுருக்கொண்டு முத்தொழில் இயற்றி யோய் எங்குந், தொக்கநின் விழிப்பின் இமைப்பினில் எமக்குத் தோற்றமும் ஒடுக்கமும் ஆமால், ஒக்கநாம் இறப்புக் கஞ்சிவந் தடைந்தேம் உலப்புறு திருந்துபோர் புரியத், தக்கதோர் உபாயந் தெரித்தெமக் குரையாய் தலைவனே என்பது கேட்டு. ௩

மடநடைக் கலைமான் இளமுலை திளைக்கும் மார்பினன் அவரொ டும் எழுந்து, நடலைதீர் காட்சி வைகுந்த வரைப்பின் நண்ணுபு விழி யுறக் கண்டான், படவரா அணையின் முனிவரர் பழிச்ச மலர்மகள் பதாம்புயம் வருட, அடர்சிறைக் கலுழன் முதலியோர் சூழ அறி துயில் அமர்ந்தநா யகனை. ௪

நான்முகன் முதலோர் நாரணற் குரைத்தல்

கண்டுநாத் தழும்பத் தனித்தனி துதித்துக் கண்துயில் எழுப்பி முன் வணங்கி, முண்டகன் முதலாஞ் சுராசுரர் குழுமி மொழிவரால் இறப்பினுக் கஞ்சி, ஒண்டளிர்ச் சரணஞ் சரணமென் றடைந்தேம் உலப்பினைக் கடக்குமா றெமக்குத், தண்துழாய் அலங்கற் கருணையங் கடலே சாற்றென நாரணன் எழுந்து. ௫

கெடிதுபோ தெண்ணிச் செய்வகை துணிந்து நீயிர்மற் றஞ்ச லிர் இனிநாம், முடிவுறு திருப்பக் கடல்கடைந் தெடுத்து முனிவறப் பருகுவாம் அமிழ்தம், கடிபடும் அமிழ்தம் பருகிடின் இறப்பைக்

௩. சில உபநிடதங்கள் முதற்கடவுள் முக்குணங்களால் மூவுருக் கொள் வார் என்றும், அதனைப் பிரமன் சூரியன் முதலியோர்க்கும் ஏற்றியும் கூறு தல் பற்றி, 'முக்குணப்...முத்தொழில் இயற்றியோய்' என்றனர் என்க. படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களும் முறையே இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் முக்குணத் தொழில்களா மென்க. பிரமனுடைய ஒரு பகலில் பதினான்கு இந்திரர்கள் தோன்றியழிதலால், 'நின்விழிப்பினின்... ஆமால்' என்றனர். தெரித்து - வகுத்து.

௪. கலைமான் - சரசுவதி. நடலை - துன்பம். பதாம்புயம் - திருவடித் தாமரை. அறிதுயில் - யோக நித்திரை.

௫. முண்டகன் - பிரமன். சுராசுரர் - தேவரும் அசுரர்களும். உலப்பு - இறப்பு. அலங்கல் - மாலை.

கடக்கலாம் என்றலுங் களிகூர்ந், தடியிணை வணங்கிக் கடையுமா றெவ்வா றளக்கரை எனவினு யினரால். சு

இந்திரை கொழுநன் உளத்திடை எண்ணி எறிபுனல் அருவி யஞ் சாரல், மந்தரப் பறம்பு மத்தென நாட்டி வாசுகி கயிறெனப் பூட்டிச், சுந்தரத் திருப்பாற் கடலினைக் கடைந்து சுவைஅமிழ் தெடுத்துமென் றுரைப்ப, அந்தநாள் அவர்தாம் பெற்றபே ருவகை யாரெடுத் தியம்பவல் லவரே. எ

திருப்பாற்கடல் கடைதல்

கரைபொரு திரங்கும் வெண்டிரைத் திருப்பாற் கடலிடை யாவரும் எய்தி, நிறைமணிக் குவட்டு மந்தரம் நிறுவி நெளிஉடல் வாசுகி சுற்றி, வரைபடு திரள்தோள் அசுரருஞ் சுரரும் வலிப்புழி அவர்தமை நோக்கி, விரைநறுந் துளிக்கும் பசுந்துழாய் அலங்கல் விண்ணவன் ஒன்றுபே சுவனல். அ

இருதிறத் தவருள் வான்சுவை அமிழ்தம் எறுழினற் கடைந் தெடுத் தவரே, பருகிடத் தகுமால் ஏனையோர் எய்தற் பாலதன் றென்பது கேட்டுப், பொருதிறல் அசுரர் மகிழ்ந்தெழுந் தார்த்துப் பொறிஅரா இருபுடை பற்றித், தருவலி மிகையால் ஈர்த்தனர் அசலம் தன்பெயர் நாட்டிய தன்றே. கூ

இயக்கல்ஆற் றாமை இளைத்ததா னவரை எதிருறுங் கடவுளர் நோக்கி, வியத்தக எழுந்து நீர்இனி விடுமின் விடுமின்என் றெய் திவா சுகியை, வயத்துடன் பற்றி ஈர்த்தனர் அவரும் வலிஇழந் தெய்த்தனர் நின்றார், செயத்தகுந் திறம்எ தினியென யாருஞ் சிந்தை யிற் கவலைகூர் பொழுது. க0

வலன்உயிர் செகுத்த வானவன் உயிர்த்த வாலியாங் குரக்கினத் தலைவன், பலகட லிடத்துஞ் சென்றுபாண் டரங்கன் பதாம்புயம் அருச்சனை புரிவான், புலன்உயர் சிறப்பின் ஆயிடை இயல்பாற் போத

எ. இந்திரை - இலக்குமி. பறம்பு - மலை. வாசுகி - ஒரு பாம்பு.

கூ. எறுழ் - வலி. அசலம் - அசைதலில்லாதது, மலை. நாட்டியது - நிலை நிறுத்தியது; எனவே, அசையாது நின்றதெனபதாம்.

கக. வலன் - ஓர் அசுரன். அவனை அழித்தவன் இந்திரன். உயிர்த்த - பெற்ற. குரங்கு + இனம் = குரக்கினம். பாண்டரங்கன் - சிவபெருமான்.

லும் மாலயன் முதலோர், நலமுற நோக்கி உவகைமீ தூர நல்வர
வேற்றுநின் றனரால். கக

வந்தவன் அயனை மாயனை வணங்கி வானவர்க் கஞ்சலி அளித்
துச், சிந்தனை ஒருக்கி நீர்இவண் முயலுஞ் செயல்இது என்னென
வினவக், கந்தமா மலரோன் உள்ளவா றுரைத்துக் கருதருந் தெய்வம்
இங் குன்னைத், தந்ததால் எமக்கு நீ துணை செய்யத் தகுமென இறுத்
தனன் அவனும். கஉ

பெருவலி படைத்த சுராசுரர் குழுமிப் பெறலருந் திறத்தினில்
எளியேன், ஒருவனே வல்லேன் யாமெலாம் ஒருங்குற் றுததியைக்
கடைதுமேல் தெய்வந், தருவது காண்டும் எனநகைத் தியம்பித்
தானவர் கடவுள ரெல்லாம், வருகென விளித்து வாலிமா சுணத்தின்
வாற்புறம் பற்றிநின் றீர்த்தான். கங

பருங்கொலைப் படத்தை அசுரருஞ் சுரரும் பற்றினர் தனித்
தனி ஈர்த்தும், ஒருங்குநின் றீர்த்தும் ஆற்றலா துடைந்து தன்
புடை ஒதுங்குதல் காணூஉக், கருங்கழல் வாலி விடுமின்நீர் என்னுக்
கட்செவி வாலமும் பணமும், இருங்கையிற் பற்றி முறுகுற வாங்கி
ஈர்த்தனன் கடைந்தனன் புணரி. க௪

ஒருகரம் முடக்கி ஒருகரம்நீட்டி உவவுநீர் மதுகையிற் கடைபோ,
தருவரைக் குடுமி மந்தரங் கடலுள் ஆழ்தலுங் கச்சப வடிவாய்த்
திருமறு மார்பன் தாங்கஅச் சயிலம்தெண்கடல் மீச்செல மிதப்பக்,
கருமுகில் வண்ணன் கரமிசை நீட்டிக் கனங்கொள இருத்தினன்
வரையே. கரு

---

இது பாண்டரங்கமென்னும் ஒருவகைக் கூத்தை ஆடியதனால் வந்த பெயர். புலன் - அறிவு.

கஉ. இறுத்தனன் - விடை கூறினன். அவனும் என்றதுவாலியை. இது வருஞ் செய்யுளில் இயம்பி என்பதனோடு முடியும்.

கங. உததி - கடல், மாசுணம் - பாம்பு.

க௪. கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழல். வாலம் என்புழி அம்சாரியை. பணம் - படம். முறுகுற - கடுமை பொருந்த. புணரி - கடல்.

கரு. உவா என்பது குறுகி உகரம் ஏற்றது; கடல் என்பது பொருள். மதுகை - வலிமை. கச்சபம் - ஆமை. திருமறு - சீவற்சமென்னும் மறு. இது திருமாலின் மார்பில் உள்ளது.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருத்திய பின்னரி யேறும் இடம்வல மாக வரையைத்
திரித்துக் கடுகச் சுழற்றித் தெண்டிரை வேலை அலறிச்
சுரித்து விரித்துப் பரந்து துள்ளிக் கொதித்தெழுந் தாட
வருத்திக் கலக்கி மறுக வலித்துக் கடைந்திடு காலை. கசு

ஆலாலந் தோற்றம்

ஆற்றரி தாகி இளைப்புற் றரவிறை வாயின் நுரைகள்
காற்றி உயிர்ப்பு விடலுங் கடுஞ்சுடு நீர்க்கட லெங்கும்
தோற்று நுரைகள் பரம்பித் தொக்க கலப்பிடை நின்றும்
கூற்றுறழ் ஆலால மென்னுங் கொடுவிடந் தோன்றிய தன்றே. கஎ

அளக்கர் முழுதும் வறப்ப அண்ட கடாகம் அழற்றத்
துளக்கில் உயிர்த்தொகை முற்றுஞ் சுட்டெழும் வல்விடத் தீயின்
கிளக்கரு வெம்மை கதுவிக் கேழுடல் வாடி வெதும்பி
விளக்க முறும்புகழ் வாலி வெரீயினன் ஓட்ட மெடுத்தான். கஅ

வருகனல் வல்விடந் தாக்கி மாயவன் வெண்ணிற மேனி
கருகினன் அன்றுதொ டங்கிக் கரிய னெனப்பெயர் பெற்றான்
திருமல ரோன்உடற் பொன்மை தீர்ந்து புகைநிறம் உற்றான்
வெருவு திசைக்கிறை யோரும் வேற்றுரு வெய்தி அழுதார். கசு

கடவுளர்யாரும் கைலையை யடைதல்

யாரும்பதை பதைத் தோட்ட மெடுத்தினிச் செய்வதென் னென்று
சார்பு பிறிதொன்றுங் காணார் தாளொடு தாள்கள் இடற

---

கசு. அரி - குரங்கு. திரித்து - பல பக்கங்களிலும் திருப்பி. சுரித்து - (நீரை) மடக்கி. மறுக - சுழல.

கஎ. காற்றி - கக்கி; பிறவினை தன்வினையாயிற்று. உயிர்ப்பு - பெருமூச்சு. கடலுக்குச் சுடுதல் கடையப்பட்டமையால் வந்ததென்க. பரம்பி - பரவி. தொக்க - கூடிய. கூற்றுறழ் - இயமனை ஒத்த. வாசுகியின் வாயிலிருந்து தோன்றிய நுரையும் பெருமூச்சும் சூடடைந்த கடலில் தோன்றிய நுரையும் கூடிய கலவையிலிருந்து ஆலால மென்னும் விடந்தோன்றிய தென்க.

கஅ. அழற்ற - தீய; தன் வினைக்கண் வந்தது. கிளக்கரு வெம்மை - சொல்லுதற்கரிய வெப்பம். கேழ் - நிறம். வெரீஇனன் - அஞ்சினவனாய்.

காரண னேமுதல் லானோர் நண்ணினர்க் கின்ப மளிக்குஞ்
சீர்கெழு வெள்ளிக் கயிலைத் திருமலை நோக்கி நடந்தார். உ0

வெங்கதிர் தாக்க உடைந்தோர் மென்னிழல் சோர்ந்தெனச் சென்று
மங்கல வெற்பினை எய்தி வஞ்ச விடத்துயர் நீங்கி
அங்கண் வரையை வணங்கி அருளொடும் ஏறி இளங்கால்
தங்கிய போக புரமுன் சற்றிளைப் பாறி இருந்தார். உக

வேறு

படைத்தபெருந் துயர்நீங்கி நாற்றிசையுங் கண்விடுத்துப் பார்ப்போர் அங்கண், விடைக்கொடியோன் திருக்கயிலை விரிசுடர்வெண் கதிர்நீட்டும் விளக்கந் தன்பால், அடைக்கலமென் றுறுந்தம்மைத் தொடர்ந்துவருங் கொடுவிடம்அங் கணைவுறாமைப், புடைத்துந்தித் தள்ளுவான் நீட்டுதடங் கைகளெனப் பொலிவ கண்டார். உஉ

கடல்அகடு கிழித்தெழுந்த விடவேகம் ஆற்றாது கழிய நொந்தார், இடர்பெரியர் அளித்தக்கார் அந்தோஎன் றிரங்கினபோல் இலகும் வெள்ளித், தடவரைமேல் தூங்கருவி பனித்திவலை நீர்தங்கள் முகத்து வீசப், படரும்நெடுந் தடங்கொடிகள் சாந்தாற்றித் தொழில் செய்யும் பான்மை கண்டார். உ௩

அச்சமுற வருவிடத்தை யானெடுத்துப் பருகுவலென் றூற்றல் சாலப், பச்சைவரை உயர்கயிலைப் பறம்புவாய் அங்காந்த பரிசே போலச், செச்சைமணி கிடந்திமைக்கும் முழைகள்தொறும் வெண்

உக. இளங்கால் - தென்றற் காற்று. போகபுரம் என்பது கைலையைச் சார்ந்து இறைவன் இறைவியோடு ஒரோர்கால் உல்லாசமாய் தங்குதற்கிடமாயுள்ளது.

உஉ. பார்ப்போர் - பார்க்கின்ற தேவர்கள். பார்ப்போர் கண்டார் என இயையும்.

உ௩. கழிய - மிகவும். அளித்தல் - காப்பாற்றுதல், - அளி என்னும் முதனிலை அளிக்கவென்னும் வினையெச்சப் பொருள் தந்தது, "செய்தக்க வல்ல செயக்கெடும்" (குறள் - ௪௬௬.) என்புழிப் போல. பனி - குளிர்ச்சி. திவலை - துளி. சாந்தாற்றி - விசிறி.

உ௪. வரை - மூங்கில். பறம்பு - மலை. அங்காத்தல் - வாய் திறத்தல் செச்சை மணி - செம்மணி, மாணிக்கம். பொச்சம் - பொய்.

ணீறு திகழப் பூத்த, பொச்சமிலா முனிவர்குழாம் நிரைநிரையா வீற்றிருக்கும் பொலிவு கண்டார். உச

அழுந்தாழிப் புனலகத்து வடவையும்அக் கடுவெம்மைக் காற்று தங்கண், எழுந்தோடி முன்னாகத் திருக்கயிலைப் பருப்பதத்தில் எய்தி முன்னர், விழுந்தாறு தன்னில்வரங் கிடப்பதென வயங்கும் ஒளி மேவு செக்கர்ச், செழுந்தாம மணிபடுத்த நெறிநோக்கி அந் நெறிமேற் சேற லுற்றார். உரு

இந்திரனார் பட்டதுயர்க் குளம்இரங்கி அவர்ஊரும் எழிலி சேர, வந்தணுகி எந்தைபிரான் எதிர்நின்று முறையிட்டால் மான முன்னர், முந்துகுட முழமுதலாம் பேரியங்கள் பலமுழங்கு முழக் கங் கேட்டுச், சிந்தைநனி களிகூரச் சார்ங்கன்அயன் முதலியோர் திளைத்துச் சென்றார். உசா

யாம்எய்தி முறையிடும்போ தருள்தருமோ முனிந்திடுமோ எம்மான் என்று, நாம்எய்திச் செல்வோர்கள் ஆங்காங்குப் பூதகண நாதர் கூடிக், தோம்எய்திப் பிழைத்தோருஞ் சரணடையின் அருள் சுரக்கும் எங்கோன் என்று, தாம்எய்தித் தம்மியல்பிற் புகழெடுத் தோ துவகேட்டுத் தளர்வு தீர்ந்தார். உஎ

தம்மினத்தோர் வரவுதனை முன்னெய்தி அறிவிப்பச் சார்வோ ரென்ன, அம்மலைவாழ் எண்ணிலா அரிபிரமர் சேவைசெய்யும் அமை யம் பார்த்துக், கொம்மைமழ விடைப்பெருமான் கோயிலினுட் சென்றணையக் குறித்து நோக்கி, விம்மிஎழும் பெருமகிழ்ச்சி தலை சிறப்ப மாலயனும் விரைந்து செல்வார். உஅ

எம்பிரான் உருக்கொண்டங் குறைவோரை அவனெனச்சென் றெய்தி ஓர்பால், அம்பிகைஇ லாமையினால் அவனல்லர் எனத்

---

உரு. அழுந்து - ஆழ்ந்த. கடு - நஞ்சு. ஆறு - வழி. செக்கர் - சிவப்பு. தாமம் - மணியொழுங்கு. படுத்த - பதித்த.

உசா. எழிலி - மேகம். சார்ங்கன் - திருமால். திளைத்து - (களிப்பில்) மூழ்கி.

உஎ. நாம் - அச்சம். தோம் - குற்றம்.

உஅ. அமையம் - சமையம். கொம்மை - இளமை.

தெளிந்தே அப்பால் ஏகிச், செம்பதுமை வளர்மார்பன் அயன்முத லாம் யாவர்களுஞ் சேர ஈண்டி, நம்பன்அமர்ந் தினிதுறையும் திருக் கோயிற் கடைத்தலையை நண்ணி னால். உகூ

கணங்கள்மிடை முதல்தடையில் தடையுண்டு நின்றனர்கள் கருமதேவர், உணங்குதயித் தியர்இரண்டிற் கடவுளர்கள் மூன்றில் ஒரு நான்கு தன்னில், அணங்கறுசாத் தியர்முதலோர் மருத்துக்கள் முனிவரெலாம் ஐந்தில் ஆறில், நிணங்கமழ்வேல் திசைக்கிறைவர் எண்மர்களுந் தடையுண்டு நின்றார் அன்றே. ௩௦

இறைவனை வணங்கல்

தாமரையோன் திருமாலுந் தடையின்றி அணைந்துதனித் தடை யின் வைகும், தேமருதார் நந்திபிரான் அடிபணிந்தார் அவன் கொண்டு செலுத்தச் சென்று, காமருசீர் அரம்பையர்கள் ஆட லொடு பாடலறாக் கடியார் செல்வப், பூமருபே ரவைநாப்பண் அமர்ந் தருளும் பெருவாழ்வின் பொலிவைக் கண்டார். ௩௧

கண்டுபெருங் களிகூர்ந்து கணநாதர் பிரம்படியிற் கலங்கி ஏங்கி, மண்டியபே ரச்சமுடன் அன்பும்இரு புடைஈர்ப்ப வணங்கித் தாழ்ந்தே, அண்டன்எதிர் நீளிடைநின் றஞ்சலிசென் னியில்ஏற விழிநீர் வாரக், கொண்டமயிர்ப் புளகமுறப் பலமுறையும் பணிந் தெழுந்து குடந்தம் பட்டார். ௩௨

---

உகூ. எம்பிரான் உருக்கொண்டவர், சாரூபம் அடைந்தவர். செம் பதுமை - செந்தாமரை மலராள், இலக்குமி.

௩௦. கணங்கள் - சிவகணங்கள். மிடை - நெருங்கிய. தடை - வாயில். கருமதேவர் - வேள்வி முதலிய புண்ணியத்தைச் செய்து தேவராயினோர். தயித்தியர் - அசுரர். கடவுளர் - படைப்பிலேயே தேவராகப் பிறந்தோர். சாத்தியர் மருத்துக்களை மேலே (கசூ௦ஆம் பக்கம்) காண்க.

௩௧. தனித்தடை - திருவணுக்கன் திருவாயில், உள்ளகத்தை அடுத் துள்ள வாயில; "தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்" (பெரிய - மெய்ப். கூ.) என்புழியும் 'தனித்தடை' என்றது இப்பொருட்டாதல் காண்க.

௩௨. 'குடந்தம்பட்டு' என்பதற்கு நச்சினார்க்கினியர், 'வழிபட்டு' எனப் பொருளுரைத்து, 'வணக்கம்பட்டென்றும் உரைப்பர்; குடவென்பது தட வென்பதுபோல வளைவை யுணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின் அதனடி யாகப் பிறந்த பெயருமாம்' என்றார். (திருமுரு. உஉகூ.) "நால்விரல் முட

கொச்சகக் கலிப்பா

தூரத்தே இவர்நிற்ப அணித்தாகத் தொழுதணைந்து
வாரத்தால் நந்திபிரான் மலரோனுந் திருமாலுஞ்
சேரத்தாம் வந்ததிறம் விண்ணப்பஞ் செயக்கொன்றை
ஈரத்தா ருடையானும் ஈண்டவரைத் தருகென்றான். ௩௩

நந்திபிரான் திருப்பிரம்பை அசைத்தருள நாண்மலர்மேல்
அந்தணனும் நெடியோனும் அஞ்சலிசேர் கரத்தோடும்
வந்தணுகி மருங்குறலும் மணிநிலா நகைமுகிழ்ப்பப்
பைந்தொடியாள் ஒருகூற்றிற் பரம்பொருள்மற் றிதுகூறும்: ௩௪

மாயன்நீ இருந்தைஉரு வாய்த்தனைஎன் மலர்மேவும்
தூயநீ புகைஉருவந் தோற்றினைஎன் றென்றருளும்
ஆயபொழு தாண்டாண்டுக் கணநாதர் அலைப்பமெலிந்
தேயமுறை முறையிட்டார் புறம்நின்ற இமையவர்கள். ௩௫

ஆங்கவர்கள் மிகமுழக்கும் அரவோசை திருச்செவியேற்
றீங்கிதெவன் என்றருள அம்புயத்தோன் எதிர்வணங்கிப்
பாங்குடைய சுராசுரர்உன் பாதங்கள் தொழப்போந்தார்
பூங்கழற்கால் வெம்பூத கணந்தடுப்பப் புறம்நின்றார். ௩௬

விளித்தருளிக் கருணைசெய வேண்டுமெனத் திருநோக்கம்
அளித்தெந்தை நந்திதனைப் பணித்தருள அவன்எய்தித்
தெளித்தெழுபல் கணத்தோரைத் தடுத்துள்ளாற் செல்கவெனத்
துளித்தமதுப் பிரம்பசைத்துச் சுராசுரரைப் புகுவித்தான். ௩௭

---

கிப் பெருவிரல் நிறுத்தி - நெஞ்சிடை வைப்பது குடந்தமாகும்" எனவும் கூறுவர். 'குடந்தம்மெய் கோட்டிக்கை குவித்தலென்ப' என்பது பிங்கலந்தை.

௩௩. அணித்தாக - அருகாக. வாரம் - அன்பு.

௩௪. நந்திபெருமான் திருமாலையும் பிரமனையும் நின்ற இடத்திலிருந்தே சமிக்கையால் அழைத்தனர் என்பார், 'பிரம்பை அசைத்தருள' என்றார்.

௩௫. இருந்தை - கரி. இறைவன் மாலயனைக் கேட்குங்கால், தேவர்களும் தம் துயரத்தை உடன்கூற முற்பட்டனர் என்பார், 'ஏய முறை முறையிட்டார் புறம் நின்ற இமையவர்கள்' என்றார். ஏயமுறை - பொருந்திய முறையில்.

௩௭. மதுத்துளித்த பிரம் பென்பது மாலை சூட்டப் பெற்றதென்னுங் குறிப்பு.

உய்ந்தனம்உய்ந் தனம்என்றே உம்பர்களுந் தானவரும்
முந்திமணி வாய்தலிடை முடிநெருங்க நுழைந்தேகி
எந்தைபிரான் வீற்றிருக்கும் ஓலக்கம் எதிர்நோக்கிப்
புந்திநிறை களிகூரத் தொழுதெழுந்து போற்றினர். ௩அ

பிரமன் முறைப்பாடு

அங்கவரை எதிர்நோக்கி நகைத்தருள்கூர்ந் தருள்வாரி
பங்கயத்தோய் உருமாறி முகஞ்சாம்பி மெய்பனிப்ப
இங்கிவர்கட் குற்றதெவன் என்றருள மறைப்புத்தேள்
செங்கைபிணை முகிழ்த்திறைஞ்சி விண்ணப்பஞ் செய்கின்றான். ௩௯

ஐயனே அடியேங்கள் அறியாமைத் தொடக்குண்ட
கையரேம் ஆதலின்உன் கண்ணருள்பெற் றெய்தாது
வெய்யநறுஞ் சுவைஅமிழ்தம் பெறற்பொருட்டு வெவ்வினையேம்
பையரவான் மந்தரத்தாற் பாற்கடலைக் கடைந்தேமால். ௪௦

துன்றியதீஞ் சுவைஅமிழ்தந் தோன்றாது விடந்தோன்றி
இன்றுசரா சரம்அனைத்தும் எரிசெய்து நீறுக்கிற்
றன்றினர்ஊர் எரித்தாய்உன் அருளன்றி முயல்வதெலாம்
ஒன்றேழிய ஒன்றும்என் றுரைக்கும்மொழி மெய்யாமே. ௪௧

இற்றொழிந்தோர் ஒழியவே றெஞ்சியயாம் சிலர்வந்திங்
குற்றனம்வண் ணமும்மாறி உயங்கினேம் நீயலதோர்
பற்றிலேம் இவ்வளவில் உலகமெலாம் பாழாகும்
சற்றும்இனித் தாழாது தண்ணளிசெய் திரங்காயால். ௪௨

இதுபொழுது காத்திலையேல் எமக்கிறுதி இன்றேஆம்
விதுமுடித்த பெருங்கருணை வெள்ளமே என்றிரந்தான்
மதுமலர்த்தார் விண்ணவரும் மனங்கலங்கி முறையிட்டார்
அதுவுணர்ந்தெம் பெருமானும் அஞ்சலீர் என்றருளி. ௪௩

---

௩௯. சாம்பி - சோர்ந்து. பனிப்ப - நடுங்கும்படி.

௪௦. கையரேம் - சிறியேம். வெய்ய - விரும்பத்தக்க.

௪௧. சரம் - இயங்கியற் பொருள்; அசரம் - நிலையியற் பொருள். இவைகள் சங்கமம், தாவரம் என்றும் சொல்லப்படும். அன்றினர் - பகைத்தவர்.

௪௨. இற்றொழிந்தோர் - இறந்தொழிந்தவர்கள். உயங்கினேம் - வாடினேம்.

### இறைவன் விடமுண்டருளுதல்

*கலி நிலைத்துறை*

இருந்த வாறுளத் தெண்ணினன் மலர்க்கரம் நீட்டக்
கருந்த ழற்கடு கமலமீச் சிறைஅளி கடுப்பப்
பெருந்தி ருக்கரத் தெய்திவர் செய்துபே ராளன்
திருந்து பார்வையிற் சிற்றுரு வாய்அடங் கியதால். சச

அண்டர் மாலயன் உலகெலாம் அதிர்வுறப் பரந்து
மண்டு வெஞ்சினக் கடுவலி போய்மலர்க் கரத்தின்
ஒண்ட லிர்ப்பதத் தடியவர் சிந்தைபோல் ஒடுங்கக்
கண்ட எம்பிரான் பெருமையார் கட்டுரைத் திடுவார். சரு

தன்னடித்தொழும் பாற்றும்ஓர் தமிழ்முனி கரத்தில்
உன்னு முன்கடற் புனலெலாம் உழுந்தள வாமேல்
அன்ன தெண்கடல் தோன்றிய பெருவிடம் அம்மான்
பொன்ன லர்க்கரத் தடங்கிய தென்பதோர் புகழோ. சகூ

சேயி தழ்த்தடம் பங்கயக் கரத்திடைச் சிவணுங்
காயும் நஞ்சினைக் காண்தொறும் பதைக்கும்வா னவரைப்
பாயு மால்விடைப் பண்ணவன் பரிந்தெதிர் நோக்கித்
தூய வெண்ணிலாக் குறுநகை முகிழ்த்தனன் சொல்வான். சஎ

செறியும் நஞ்சினை உண்குமோ சேயிடைச் செல்ல
எறிகு மோபுகல் மின்களென் றருள்செய இமையோர்
வறிது மூங்கையர் போறலும் ஒருபுடை மணந்த
நெறிக ருங்குழல் மலர்முகம் நோக்கினன் நிகழ்த்தும். சஅ

---

சச. இருந்தவாறு - இருந்தபடியே. கருங்கடு, தழற்கடுவெனத் தனித் தனி முடிக்க. கடு - நஞ்சு. மீ - மேல். கடுப்ப - ஒப்ப.

சரு. கடுவானது வலிபோய் ஒடுங்க என்க.

சகூ. தமிழ் முனி - அகத்தியர். விருத்திராசுரனை வெளிப்படுத்துதற் பொருட்டு, இந்திரன் வேண்டுகோளால் அகத்தியர் கடல்நீரை உழுந்தளவாகக் கையிலேற்று ஆசமித்தாரென்பது புராண வரலாறு.

சஎ. சிவணும் - பொருந்திய. பரிந்து - அன்பு கூர்ந்து.

சஅ. உண்கும், எறிகும் என்பன எதிர்காலத் தன்மை முற்றுக்கள். அவ்விடத்திலுள்ள ஓகாரங்கள் வினாப்பொருளன. வறிது - சும்மா. மூங்கையர் - ஊமைகள். தேவர்களது அன்பின் நிலையைக் காட்ட இறைவன்

அரிவை கேட்டிஇக் கொடுவிடம் அகிலமும் ஒருங்கே
எரிம டுத்ததுன் பார்வையால் இன்னமு தாமால்
புரிவ தொன்றிலை பருகினற் புகறிநீ என்ன
வரிவி ழிக்கடை தோய்மணிக் கணங்குழை மடமான். சகூ

உலகெ லாந்தரும் அன்னைஅவ் வுலகின்மேல் வைத்த
அலகி லாப்பெருங் கருணைபாற் கொழுநன்மாட் டமைந்த
தலைமை அன்பினுன் மலர்முகம் ஒருபுடை சாய்த்துக்
குலவு செங்கையின் விடத்தினை நோக்கினள் குறித்து. ருo

மாழை உண்கணி நோக்கலும் திருவுளம் மகிழ்ந்து
பாழி மால்விடை கொடிமிசை உயர்த்தருள் பகவன்
ஏழை வானவர்க் கிரங்கியே இனிதுகண் ணோடி
ஆழி வல்விடம் பருகினன் அகிலமும் உய்ய. ருக

பருகு வெங்கடு மிடற்றிடை ஏகுழிப் பாரா
மருமலர்ப்பிரான் முகுந்தனே வஞ்சகஞ் செம்மான்
திருமி டற்றினுக் கழகுசெய் தமரர்சே யிழையார்
அருமி டற்றுநூல் காத்தது காண்கென அறைந்தான். ருஉ

---

இங்ஙனம் வினவினன் எனவும், தேவர்கள் தம்உயிர்க்கு இறுதிவருமென்னும் அச்சத்தால் எறியும்படி கூறாமலும், தாம் வாழ்தற் பொருட்டு இறைவனை நஞ்சருந்தக் கூறுதல் இழிவாமென்னும் நாணத்தால் உண்ணும்படி கூறாமலும் சும்மா இருந்தனர் எனவும் உணர்க.

ருo. உண்ணுதற்கு உடன் பட்டமை கருணையாலும், நோக்கியது அன்பினாலுமென்க. எனவே, இறைவனுக்கு நஞ்சு யாதொரு தீங்கும் செய்ய மாட்டாதென்பதை யறிந்தும் அதனை அமுதமாகும்படி நோக்கியதும் அன்பினலென்பது பெறப்படும்.

ருக. மாழை - மாமரம்; அஃது ஆகு பெயராய் வடுவையுணர்த்தும். பாழி - வலிமை. கண்ணோடி - கண்ணோட்டமுற்று. (கண்ணோட்டம் - தாட்சணியம்.)

ருஉ. மிடறு - கண்டம். ஏகுழி - செல்லும்போது. மரு - வாசனை. மலர்ப்பிரான் அறைந்தான் என்க. முகுந்தனே, விளி. "ஒத விடமுண் டுபய நிறத் தாமரைமேற் - கோதையர்க்குத் தாலி கொடுத்தவரார்" (ஏகாம்பர நாதர் உலா.) எனவும், "நம்பா நினக்கோலம் முறையோ வெனக்கால - நஞ்சுண்டு பித்துண்டு நாந்தேவ ரென்பார் - தம்பாவை யர்க்கன்று காதோலை பாலித்த தயவாளர்" (மதுரைக்கல உஅ.) எனவும் வருவன இங்குக் கருதத்தக்கன.

மிடற்றுச் செக்கர்வான் மிசைவிடக் கருமுகி லுறநோய்
கெடத்த ளிர்த்தலைங் கூடுமெனச் சுராசுரர் கெழுமிக்
கடற்பெ ரும்புனல் உடைத்தெனக் காதல்மீக் கூர
அடற்க ணிச்சியோய் சயசய போற்றிஎன் றார்த்தார். ௫௩

நாரணாதியர் கிளர்ச்சியை நோக்கிநன் கருளிக்
கோர வல்விடம் மிடற்றிடை அமைத்தனன் குழகன்
ஆர வாயிடை வயிற்றிடை யன்றிமற் றிடைக்கண்
ஆர மைத்திட வல்லவர் அமிழ்தமே யானும். ௫௪

சகமெ லாம்பொடி படுத்தெழுந் தழல்விடம் மிடற்றில்
திகழ வைத்தனன் முப்புரம் எரியெழச் சிரித்தோன்
அகல ருந்திறத் தெண்குணம் நிறைந்தபே ராண்மைப்
பகவன் மேன்மைமற் றெம்மனோர் அளவிடற் பாற்றோ. ௫௫

கந்த ரத்திடை அடக்கிய கறைவிடங் காணாஉச்
சுந்த ரத்திரு மாலயன் சுராசுரர் முனிவர்
இந்தி ராதியர் கவலைதீர்ந் தெண்ணாருங் களிப்பால்
சிந்தை அன்பொடும் அஞ்சலி சென்னிமேற் கொண்டு ௫௬

நீல கண்டனே போற்றிஎண் குணங்களால் நிறைந்த
மூல காரணா போற்றிமுன் சிறுவனுக் கிரங்குங்
கால காலனே போற்றிஇன் றெம்முயிர் காத்த
ஏல வார்குழல் பங்கனே போற்றிஎன் றிசைத்தார். ௫௭

---

௫௩. மிடற்றுவான், விடமுகில் என்பன உருவகம். கணிச்சி - மழு.

௫௪. ஆர - பொருந்த. அமிழ்தமே யாயினும் வாயிலேனும் வயிற்றிலேனும் வைக்க இயலுமல்லது இடையே கண்டத்தில் வைத்தல் யாவர்க்கும் இயலுவதன்றென அச்செயற்கருஞ் செயலை வியந்தவாறு.

௫௫. 'முப்புரம் எரியெழச் சிரித்தோன்' என்பது விடம்மிடற் றடக்கியதைச் சாதிக்கும் குறிப்பேது வாய்நின்றது. எண்குணங்கள் மேலே (௧௬௮ ஆம் பக்கம்) காட்டப்பட்டன. ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுக்கும் பகம் என்னும் பெயர் உண்மையால் அவற்றையுடைய இறைவன் 'பகவன்' எனப்படும் என்பர்.

௫௬. கறை - கறுப்பு. அஞ்சலி - கைகுவிப்பு.

௫௭. சிறுவன் - மார்க்கண்டேயர். ஏலவார் குழல் - மயிர்ச் சாந்தணிந்த நீண்ட கூந்தல். இஃது அன்மொழித் தொகையாய் இறைவியை உணர்த்தும்.

என்ற போதருள் சுரந்துமக் காற்றல்இன் றளித்தேம்
தொன்று போற்கடல் கடைந்துவான் சுவைஅமிழ் துண்பீர்
பொன்றி லீரெனத் திருவருள் புரிந்தனன் புனிதன்
ஒன்று பின்னரும் வேண்டுவர் மால்முதல் உம்பர். ௫அ

பொதுமை நீத்துநின் திருவடிக் கன்புபூண் டொழுகக்
கதுவு நின்னருள் நாள்தொறும் எம்வயிற் கலப்ப
விதுமு டிச்சடை வள்ளலே அருளென வேண்ட
அதுவ ழங்கினன் விடைகொடுத் தருளினன் அமலன். ௫௯

காஞ்சியை அடைந்து கடவுளர் வழிபடல்

மீண்டு மால்அயன் முதலிய விண்ணவர் குழுமி
ஈண்டு நம்பொருட் டிருள்விடம் பருகினன் இறைவன்
பூண்ட இப்பெரும் பிழைஅறும் படிசிவ பூசை
யாண்டு செய்துமென் றெண்ணினர் தெளிந்தனர் இதனை. ௬0

தலமும் தீர்த்தமும் மூர்த்தியும் சிறந்தமெய்த் தானங்
குலவு காஞ்சிமா நகரமாம் அந்நகர் குறுகி
நலமு றச்சிவ பூசனை உஞற்றிடின் நசியா
அலகில் பாவமும் நசிக்குமென் றப்பதி எய்தி. ௬௧

அன்று தம்உயிர் அளித்தது மணிகண்ட மென்னும்
நன்றி யான்மணி கண்டநா தப்பெயர் இலிங்கம்
வென்ற புண்ணிய கோடிநா தர்க்குமேல் பாங்கர்
ஒன்றும் அன்பினால் இருத்தினர் பூசனை உஞற்றி. ௬௨

மணிகண் டேசர்தம் அருளினால் வன்பிழை தவிர்ந்து
பணியி னாற்கடல் கடைந்தமிழ் தெடுத்தனர் பருகித்
தணிவில் வெஞ்சினத் தானவர் தமைத்துரந் தகற்றிப்
பிணியும் நீங்கினர் இறப்புறுப் பெருநலம் பெற்றார். ௬௩

---

௫௯. பொதுமை நீத்து அன்பு பூணுதல் மேலே (உஉஅ-ஆம் பக்கம்) விளக்கப்பட்டது. கதுவு - நீங்காது பற்றிய.

௬௧. நசியா - அழியாத. அலகில் - அளவில்லாத.

௬௨ மணிகண்டம் - நீலமணி போன்ற கண்டம் ;

௬௩. பணி - (வாசுகி என்னும்) பாம்பு. துரந்து - துரத்தி.

பஞ்மணீச வரலாறு

அத்த லத்திடைத் தன்பிழை அகலவா சுகியும்
பத்தி யிற்பணா மணீசனைப் பண்புற இருத்திச்
சுத்த நீர்நிறை அனந்ததீர்த் தத்தடந் தொட்டு
நித்தம் அக்கரைக் கண்இருந் தருச்சனை நிரப்பி. சூச

பணாம ணீசனைத் தன்பண மணிகளாற் பரவி
நணாவ கத்தமர் நம்பனை நலிவுசெய் விடத்தை
உணாவெ னக்கொளும் உத்தமா எனத்துதித் துமையாள்
மணாளன் மேனியில் இழையெனப் பயில்வரம் பெற்றான். சூரு

கொங்க லர்ந்தபூந் துணர்தொறும் நறுநறாக் கொழிக்கும்
பொங்கர் சூழ்கலிக் கச்சியுட் பழமறைப் பொருளாய்
அங்கண் வாழ்மணி கண்டனை அருச்சனை ஆற்றித்
துங்க முத்தியிற் சேர்ந்தவர் தொகுப்பின்எண் ணிலரால். சூசு

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அடுங்காலம் இதுவென்ன விடம்எழலும் நனிவெருவி அயன் மால் எனோர், கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்புகுதக் கொதித்து வாழ்நாள், பிடுங்காமல் அருள்புரிந்த பரம் பொருளை யன்றியும்ஓர் பிரான்உண் டென்ன, நடுங்காதார் தமைக் காணப் பெற்றிடினும் என்னுள்ளம் நடுங்கும் மாதோ. சூஎ

ஆகத் திருவிருத்தம்-சூகூக.

---

சூரு. பணாமணீசன் - பணத்தின் (படத்தின்) இரத்தினங்களாற் பூசிக்கப்பட்ட இறைவன். நணா - கொங்கு நாட்டிலுள்ள ஒரு தலம். இஃது இப்போது பவானி கூடல் என்று வழங்கப்படுகிறது. உணா - உணவு. இழை - ஆபரணம்.

சூசு. பொங்கர் - சோலை. தொகுப்பின் - தொகை கூறப்புகுந்தால்.

சூஎ. அடுங்காலம் - சங்கார காலம், இறைவன் விடத்தையுண்ட வழியும் அதனால் யாதொருமாறு பாடின்றி யிருத்தலையும், எனைத் தேவர்கள் இறப்பிற்கு அஞ்சுதலும், விடத்தின் வெம்மை யானே பெருந்துன்பம் எய்தினமையும், அங்ஙனம் துன்பமெய்திய தேவர்கள் இறைவனிடத்து அடைக்கலம் புகுந்தமையும், புகுந்த அவர்கள் இறைவனாற் காக்கப்பட்டமையும் அறிந்தும் அவர்களைப் பரம் என்றல் உண்மை நோக்கிற்கு மாறுதலால், 'பரம் பொருளை

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறைவன், எப்பொருள்களும் தன்னையடையின், அவை தம் வன்மை மடங்கித் தன்வயமாதலல்லது, தான் அவற்றின் வயப்படுபவனல்லன்' என்பதும் (உ) 'இறைவன், இறப்பைக் கடந்து நிற்பவன்' என்பதும், (ந) 'இறைவன் தன்மாட்டுப் பிழை செய்தாரும், பின்னர்த் தன்னை யடைவாராயின், முனியாது காக்கும் பேரருளாளன்' என்பது மாகிய உண்மைகளை முதலாகக் கொண்டு, (ச) 'திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும் இறத்தலும், தந்நலங் கருதுதலுமாகிய உயிர்க் குணங்களை உடையர்' என்பதும், (ரு) 'இறைவன் திருவருளின்றி முயல்வன எல்லாம் ஒன்றேழிய ஒன்றாதும் என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள்; சுஎஆம் செய்யுளில் கூறப்பட்ட பொருளும் ஆண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

இதுகாறும் சிவாத்தானத்தின் உண்மையை அறிந்தவாறு கூறினேம். இனி, அறிஞர்கள் கழகங்கள் தோறும் கூட்டங் கூட்டமாகக் கூடியிருந்து தமிழை ஆராய்கின்ற அக்காஞ்சியம்பதியி லுள்ள மணிகண்டேச்சுரத் தலத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

முன்னொருகால் தேவர்களும் அசுரர்களும் சாவுக்குப் பயந்து சாவா மருந்தைப் பெறவேண்டிப் பிரமதேவனிடத்தில் சென்று வணங்கி, இறவாதிருத்தற்கு உரிய உபாயம் ஒன்றைச் சொல்லவேண்டும் என்று கேட்டனர். பிரமதேவன் அவர்களோடும் வைகுந்தத்தை அடைந்தனன். அங்கு, பாம்பணையில் அறிதுயில் அமர்ந்த திருமாலைத் தேவர்கள் தமது தோத்திர ஒலியால் எழுப்பி, இறப்பினைக்கடக்குமாற்றைச் சொல்லவேண்டும் என்று வேண்டினர். திருமால் நெடுநேரம் ஆராய்ந்து 'நீங்கள் இனி அஞ்சவேண்டுவது இல்லை; திருப்பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்து அருந்தினால் இறப்பைக் கடக்கலாம்' என்றனர். அப்போது தேவர்களுக்குண்டாகிய மகிழ்ச்சியை யார் சொல்ல வல்லவர்கள்!

பின்னர் யாவரும் திருப்பாற்கடலை யடைந்து தாம் எண்ணியவாறே மந்தரமலையை மத்தாக இட்டு வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகச் சுற்றி,

---

யன்றியுமோர் பிரானுண்டென்ன - நடுங்காதார் தமைக் காணப் பெற்றிடினும் என் உள்ளம் நடுங்கும்' என்றார். "இருவரால் மாறுகாணு எம்பிரான் தம்பிரானுந் - திருவுரு வன்றி மற்றோர் தேவரெத் தேவரென்ன அருவாத தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே" (திருவா. அச்ச, உ.) என்பது அருளாசிரியர் திருமொழி.

அசுரர்களும் தேவர்களும் இழுக்கத் தொடங்கியபோது, திருமால் அவர்களை நோக்கி, உங்கள் 'இருதிறத்தினருள் இதனைக் கடைந்தெடுத்தவர்களே அமுதத்தை உண்ணற்பாலர்' என்று சொல்ல, அசுரர்கள் மகிழ்ச்சி யடைந்து சென்று, வாசுகியின் இருபக்கத்தையும் பிடித்து இழுக்க, மந்தரமலை அசைந்திலது. அதனால் இளைத்த அசுரர்களைத் தேவர்கள் பார்த்து, நீங்கள் விடுமின்கள் என்று விலக்கித் தாங்கள் பற்றி இழுத்தபோதும் அஃது அசையாதது கண்டு கவலையுற்றனர்.

அப்போது கடல்கள் தோறும் சென்று சிவபூசை செய்யும் வாலி என்னும் வானர அரசன் தற்செயலாக அங்கு வந்தனன். அவனைக் கண்டவுடன் தேவர்கள் மனமகிழ்ச்சி அடைய, பிரமதேவன் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறி, 'எங்களுக்கு நீ உதவி செய்தல் வேண்டும்' என்றனன். வாலி, 'நான் ஒருவன் மாத்திரம் இதனைச் செய்தல் கூடுமோ! யாவரும் ஒன்று கூடிக் கடைவோம்' என்று சொல்லி, தான்வாசுகியின் வாற்புறம்பற்றி இழுத்தனன். தேவாசுரர்கள் தலைப்புறம் பற்றி இழுக்க, அவர்கள் வாலியுடன் இழுக்கமாட்டாமையால், மந்தரமலை தன் பக்கமே ஒதுங்கியது கண்ட வாலி, அவர்களை விலக்கி, இருபுறத்திலும் தானே பற்றி இழுத்தனன். அப்பொழுது மந்தரமலை கடலுள் அமிழ, திருமால் ஆமை வடிவங்கொண்டு அதனை மிதக்கும்படி தாங்கினர். பின்னர் வாலி, மந்தரகிரியை இடம் வலமாகச் சுழற்றிக் கடலைக் கடைந்தனன். அதனால், வாசுகி பொறுக்கலாற்ருது வாய் நுரையைக் கக்கிப் பெருமூச்செறிய, அதினின்றும் ஆலாலம் என்கின்ற பெருவிடம் தோன்றி அண்டகடாகத்தையும் தீப்பதாயிற்று. அதனால் தாக்கப்பட்ட வாலி அஞ்சி ஓடினன்.

அந்த விடத்தின் வெம்மை தாக்கியதனால் திருமால் வெண்ணிறம் நீங்கிக் கருநிறமுற்றனர். பிரமன் பொன்னிற மிழந்து புகைநிறம் அடைந்தனன். திக்குப் பாலர்களும் உருமாறி வருந்தினர். யாவரும் அவ் விடவேகத்திற்கு ஆற்ருதவர்களாய்க் காலோடுகால் இடறும்படி கைலையை அடைந்து, திருக்கோயில் திருவாயிலை அணுகினர். அங்கு அவரவர்கள் தத்தமக்குரிய வாயில்களில் தடையுண்டு நிற்க, திருமாலும் பிரமனும் நந்திதேவர் அருள் பெற்று உள்ளே சென்று, இறைவனை வணங்கினர்கள்.

இறைவன் அவர்களை நோக்கி, நீங்கள் உருமாறியது என்னென்று கேட்குங்கால், புறத்தே நின்ற தேவர்களும் முறையிட்டனர். இறைவன் அவர்களையும் வருவித்து நீங்கள் எல்லீரும் முகம் வாடி, உடல் நடுங்குமாறு உங்களுக்கு வந்த துன்பம் யாது? என்று வினவியருள, பிரமதேவன் வணங்கி, நிகழ்ந்ததை அறிவித்து, 'தேவரீரது திருவருளின்றிச் செய்வதெல்லாம் ஒன்றேழிய ஒன்றதும்' என்பது உண்மையன்றே! இப்பொழுதே அடியேங்களைக்

காத்தருளுதல் வேண்டும்; இல்லையேல், இன்றே யாவரும் அழிந்தொழிவோம்' என்று மனங்கலங்கி முறையிட்டனன். சிவபெருமான் 'அஞ்சலீர்' என்று கூறி, அந்த விடத்தை அங்கு வரும்படி திருவுளம் பற்றி, மலர்போன்ற கரத்தை நீட்ட, அப்பெரிய விடமானது செந்தாமரை மலரின்மேல் உள்ள வண்டு போல அவரது திருக்கரத்தை அடைந்து, அவர் பார்வையினால் சிற்றுருவாய் அடங்கியது.

அதுகாலை சிவபெருமான் புன்னகையுடன் தேவர்களைப் பார்த்து, இவ் விடத்தை யாம் உண்ணுதல் நலமோ? எறிந்துவிடுதல் நலமோ? என்று கேட்க, தேவர்கள் ஒன்றும் கூறாது ஊமையர்போ லிருந்தார்கள். அதன் பின்பு இறைவன் இறைவியை நோக்கி, இந்த விடமானது உனது பார்வை யால் அமுதமாகுமென்று சொல்ல, அம்மையார் உயிர்கள்மேல் வைத்த கருணை யினாலும், தமது நாயகன்மேல் வைத்த அன்பினாலும் அந்த விடத்தின்மீது திருக்கண் சாத்தியருளினார். பின்பு அதனைச் சிவபெருமான் உலகமெல்லாம் உய்யும்படி உண்டு கண்டத்தில் அமைத்தனர். அக்காலையில் தேவர்கள் சய சய போற்றி யென்று ஆரவாரித்துத் துதித்தனர். சிவபெருமான், 'இனி நீங்கள் கடலைக் கடைந்து அமுதத்தைப் பெற்று உண்டு, இறவாது வாழ்வீர் களாக' என்று விடை கொடுத்தருளினர். விடை பெற்றுத் திரும்பிய மால் அயன் முதலிய தேவர்கள், தாம் இறைவனை விடமுண்ணச் செய்த பாவம் நீங்கக் காஞ்சியை அடைந்து, தம்மைக் காத்தது மணிகண்டம் என்னும் கருத்தால், 'மணிகண்ட நாதன்' என்னும் பெயரால் ஒரு இலிங்கம் தாபித்து வழிபட்டு, அப்பாவத்தினின்றும் நீங்கிப் பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்து உண்டு, இறவாப் பெருநலம் பெற்றனர்.

### பணாமணீச வரலாறு

அத்தலத்தில் வாசுகியும் தான் விடத்தைக் கக்கிய பாவம் தீர்தற் பொருட்டு, 'அனந்த தீர்த்தம்' என்னும் ஒரு தீர்த்தம் உண்டாக்கி, அதன் கரை யில் ஒரு இலிங்கம் தாபித்து, தனது படங்களிலுள்ள மாணிக்கங்களால் அருச்சனைசெய்து, இறைவன் திருமேனியில் அணிகலமாகப் பொருந்தும் வரத் தைப் பெற்றனன்.

இன்னும் அம் மணிகண்டேசப் பெருமானை வழிபட்டு முத்தியடைந்த வர்கள் எண்ணிறந்தவர்கள் ஆவார்கள்.

---

# சார்ந்தாசயப் படலம்

கலிநிலைத் துறை

வளைத்த பாப்பணி அணிமணி கண்ட நாயகனும்
முளைத்த வெண்பிறைக் கண்ணியோன் வரவிது மொழிந்தாம்
விளைத்த சூளினால் இளைத்துறும் வியாதனைக் காத்த
இளைத்துச் சார்ந்தவர் சார்பினன் வரவினி இசைப்பாம். க

வியாசர் முனிவர்களுக்கு உரைத்தல்

பராச ரப்பெயர் முனிவரன் பழுதறு வரத்தால்
தராத லத்திடைத் தோன்றினான் மறைதனிப் பதினெண்
புராணம் எனவும் பகுத்துயர் புரவுபூண் டோங்கிப்
பிரானெ னத்தகு வியாதனும் பெரியவன் மேனாள். உ

கொடிய பாதகக் கலியுகம் வருநிலை குறித்துப்
படியில் யாங்கினிச் செல்வதென் றஞ்சிமெய் பனித்துக்
கடிந றும்புனற் கங்கைசூழ் காசியின் எய்தி
முடிவில் மாதவஞ் செய்துவீற் றிருந்தனன் முறையால். ௩

அங்கண் மெய்த்தவர் யாவரும் அவனடி வணங்கி
இங்கெ மக்குநீ மறைமுடி புண்மைஈ தென்னச்
செங்கை நெல்லியின் தெளிவரத் தெருட்டுகென் றிரந்தார்
வெங்கொ டும்பகை வினைக்குறும் பெறிந்துபர் வியாதன். ௪

---

க. சூள் - சத்தியம். சார்ந்தவர் சார்பு என்பதே, 'சார்ந்தாசயம்' என்பதன் பொருளென்க. சார்ந்தார் ஆச்ரயம் சார்ந்தாசயமென வந்தது. ஆச்ரயம் - ஆதரவு. சார்ந்தார் என்பது தமிழ்ச்சொல்; ஆச்ரயம் என்பது வடசொல். இதனால் தமிழ்ச்சொல்லும் வடசொல்லும் விரவி, இருமொழியிலும் வழங்குதல் தெளியப்படும்.

உ. வரம் - ஈண்டுத் தவம். தனி - ஒப்பற்ற. புரவு - காத்தல்

௩. படி - நிலவுலகம். பனித்து - நடுங்கி.

௪. வேதத்திலுள்ள விழுப்பொருள் காணலுறுவார் உபநிடதங்களையே நோக்குவாராகலின், 'மறைமுடிபு' எனவும், அவையும் அருத்தவாதம் (புனைந்துரை) முதலியவற்றால் பலபடக் கூறுதல்பற்றி, 'உண்மை' எனவும், ஒருவாற்றால் உண்மை காணினும் ஐயமின்றித் தெளிதல் அரிதாகலின், 'ஈதென்

மிருதி நூல்புரா ணத்தொகை வேதநூல் அங்கம்
இருவ கைப்படு நியாயம்ஆ யுள்மறை எழிற்கந்
தருவ வேதம்வில் வேதமோ டருத்தநூல் இவற்றின்
பொருளின் உண்மைமற் றிதுஇது வெனத்தனி புகன்றான். ரு

பெருவ லித்தவ முனிவரர் கேட்டுளம் பிறழா
தொருவ ழிப்படத் துணிந்தொரு வார்த்தையின் எமக்குச்
சுருதி நூல்முடி பிதுவெனத் தொகுத்துரை என்றார்
மருளின் மூழ்கிய சிந்தையின் வியாதமா முனிவன். சு

வியாசர் பொய் கூறல்

உறுவர் யாரையும் நோக்கிமுன் உரைக்குமா றாகத்
தறுகண் ஆண்மையிற் கூறுதல் உற்றனன் தவத்தீர்
அறிவு நூலெலாம் பன்முறை ஆயினுந் தெளியப்
பெறுவ தொன்றது நாரண னேபரப் பிரமம். எ

வண்ண மாமறை நூற்குமேல் நூலிலை மதியோர்
எண்ணு கேசவன் றனக்குமேல் தெய்வமும் இல்லை
கண்ணும் எவ்வகை நூல்கட்குந் துணிபிது காண்மின்
உண்மை உண்மைஈ தெனக்கரம் எடுத்துநின் றுரைத்தான். அ

கேட்ட மாதவர் வெரீஇயினர் கிளர்மறைப் பொருட்குக்
கோட்ட மாம்இது எம்மனோர் கோட்டக்க தன்றால்
நாட்டி ஈங்கிவன் புகன்றதென் னென்றுளம் நடுங்கி
நீட்டு செஞ்சடை முனிவரன் றன்னைநேர் நோக்கி. கூ

---

னச் செங்கை நெல்லியின் தெளிவரத் தெருட்டுக' எனவும் இரந்தனர் என்க. குறும்பு - தீமை.

சு. மறைமுடிபு உண்மையைத் தெளிய வினவினர்க்கு, மிருதி முதலிய வற்றின் பொருளை விரித்தமையால் இவ்வாறு வினவினர் என்க.

எ. உறுவர் - முனிவர். தறுகண் ஆண்மை - (அஞ்ச வேண்டுவதற்கு) அஞ்சாமையுடைய வீரம். முன் உரைக்கு மாறாக என்றதனால் முன்னர்ப்பல நூல்களையும் கூறியபொழுது, 'சிவபெருமானே பரப் பிரமம்' என்பது படக் கூறினனென்பது பெற்றாம். ஆயினும் - ஆராய்ந்தாலும்.

கூ. வெரீஇயினர் - அஞ்சினர். கோட்டம் - மாறுபாடு. எம்மனோர் - எம்மைப் போன்றவர். கோட்டக்கது - கொள்ளத் தக்கது. நாட்டி - நிலை பெறுத்தி. நீட்டு - நீண்ட; பிறவினை தன்வினைக்கண் வந்தது.

வாத ராயண நீஇவண் மொழிதரு மாற்றம்
வேத நூற்பொருள் உண்மையே யாமெனில் விசுவ
நாத னார்திரு முன்பெமக் குரையென நவின்றார்
ஓதுகேனென மூர்க்கனும் எழுந்துசென் றுற்று. க0

விச்சு வேசன்முன் நின்றிரு கரமிசை நிமிர்த்தாங்
கச்ச மின்றிமுன் புகன்றதே புகன்றனன் அந்தோ
விச்சை நூல்பல கற்பினுஞ் சிவன்அருள் விரவாக்
கோச்சை யோர்தமை விடுவதோ கோடேலச் சேருக்கு. கக

அறிவு போல்அடர்ந் தெழும்அறி யாமையின் வலியால்
பொறிஇ லான்இது கிளப்பவும் வெகுண்டிலன் புனிதன்
மறுவில் கூற்றெலாந் தன்பெயர் எனுமறை வழக்கால்
வெறிம லர்க்குழல் உமையொடு மகிழ்ந்துவீற் றிருந்தான். கஉ

நந்தி யெம்பிரான் வெகுண்டுநாண் மலர்க்கரம் எடுத்த
அந்த வண்ணமே அசைவற நிற்குமா சபிப்ப

---

க0. வாதராயணன் - (கஅசு ஆம் பக்கம் பார்க்க.) சிவ சந்நிதானத்தில் பொய் கூறத் துணிந்தனனாகலின், 'மூர்க்கன்' என்றார்.

கக. சிவ சந்நிதியில் கூறிய பொய்யுரையைக் கூறுதற்கு நாவெழாதவனாய், 'முன் புகன்றதே புகன்றனன்' என்றார், ''பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய'' (பெரிய. மெய்ப், கரு.) எனவும், ''முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்'' (பெரிய. ஏனாதி - சு0.) எனவும் கூறுதலுடைமையாலென்க. கொச்சையோர் - இழிந்தோர்.

கஉ. தான் அறியாமையுடையனா யிருத்தலை யறியாதவாறு அறிவை மறைத்துத் தன்னை அறிவென்றே கொள்ள எழுதல் அறியாமையின் இயல்பாகலின், 'அறிவுபோலடர்ந் தெழுமறியாமை' என்றார். அறியாமை - அஞ்ஞானம். பொறி - அறிவு. புனிதன் - சிவபெருமான். கூற்று - ஈண்டுப் பெயர். நாராயணன் முதலிய சிறப்புப் பெயர்களும் காரணப் பெயராயும், ஆகுபெயராயும் சிவபெருமானையே உணர்த்தி நிற்குமெனவும், எல்லாப் பெயரும் பரமசிவன் பெயரென்பதே வேதத்தின் துணிபென்பது சுவேதாச்சுவதரோபநிடதத்திற் கூறப்பட்டதெனவும், ஆசிரியர் திராவிட மாபாடியத்துக் கூறியவாறு காண்க. (சூ. க. அதி. உ, ங.)

கங. மந்தன் - கூர்மை இல்லாதவன். வல்லாமை - இயலாமையால். சிலை - கல்.

மந்த னாயினன் நிமிர்த்தகை மடக்கவல் லாமை
நிந்தை யாற்சிலைத் தூணமொத் தசைவற நின்றான். கங

தெற்றற் செஞ்சடை யெம்பிரான் திருமுன்பு நாட்டும்
வெற்றித் தம்பமொத் திலகிவல் லிடும்பைகூர் வியாதன்
பற்றிச் சிந்தையில் நெடியாமல் இணையடி பரவ
அற்றைப் போதுமுன் தோன்றிநின் றச்சுதன் அறைவான். கச

### வியாசருக்கு விண்டு புத்தி புகட்டல்

என்ன காரியஞ் செய்தனை என்னையுங் கெடுத்தாய்
பன்ம றைப்பரப் பியாவையும் பாற்படுத் தவற்றுட்
சொன்ன மெய்ப்பொருள் உண்மையைத் துணிந்தநீ அந்தோ
கொன்னும் இம்மயக் கெவ்விடைப் பெற்றனை கூறாய். கரு

“ஏனை யாரையும் அறத்துறந் தியாவரும் என்றும்
பான்மை யில்தியா னஞ்செயப் படும்ஒரு முதல்வன்
மேன்மை கூர்சிவன் ஒருவனே” எனவிரித் தன்றே
நான்ம றைத்தலை யாம்அதர் வச்சிகை நவிலும். கசு

---

கச. தெற்றல் - பின்னல். இடும்பைகூர் - துன்பம் மிகுந்த.

கரு பாற்படுத்து - கூறுபடுத்தி. கொன்னும் - அஞ்சத்தகும்.

கசு. அதர்வசிகை என்பது ஓர் உபநிடதம். அது விரித்து நவிலுதலாவது; “அந்தத் தியானம் யாது? அன்றியும் தியானிப்போன் யாவன்? தியானிக்கற் பாலரும் யாவர்?” என்றெடுத்துக் கொண்டு, அவ்வினாக்களுக்கு இசையத் தியானத்தையும், தியானிப்போனையும் நிரூபணம் செய்த பின்னர், தியானிக்கற்பாலரை, “சிவபெருமான் ஒருவரே தியானிக்கற் பாலர்” எனக் கூறுதல் என்க. அவைகளில், தியானிக்கற் பாலரை நிச்சயித்தற்குக் கூறிய வாக்கியங்களின் பொருளையே ஆசிரியர் ஈண்டு எடுத்துக்கூறினர் என்க. அவ்வாக்கியங்கள்: “த்யாயீதேசாநம் ப்ரத்யாயிதவ்யம் ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணிசேந்த்ரியாணி ஸஹபூதைர் நகாரணம் காரணாநாம் தாதா த்யாதா காரணந்து த்யேயஸ் ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வரச் சம்புராகாசமத்யே.” எனவும், “சிவ ஏகோத்யேயச் சிவம் கரஸ் ஸர்வமந்யத் பரித்யஜ்ய ஸமாப்தாதர்வசிகா.” எனவும் வருவன. அவற்றின் பொருள்: (க) ‘மிகவுந் தியானிக்கற் பாலராகிய ஈசானரைத் தியானிக்க. அந்தப் பிரம விஷ்ணு ருத்ரேந்திராதிகளாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர். எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே கூட (உற்பத்தியாகின்றன.)

யாமே லாம்அவன் இணையடித் தியானஞ்செய் பசுக்க
ளாமே னத்தெளி அவனருள் சேர்தலிற் பசுவும்
பூமி சைத்தியா னப்பொரு ளாமெனப் புனைந்து
தோம றச்சில நூல்புகல் உண்மையுந் துணியாய். கஎ

---

காரணங்களும், காரணங்களைப் படைத்தோரும் கருதினோருமாகியவர் (உற்பவித்தல்) இன்று. காரணமும் சருவைசுவரிய சம்பன்னரும் சருவேசுரரும் சம்புவுமாகியவரே ஆகாசமத்தியில் தியானிக்கற் பாலர்.", (உ) "மற்றதெல்லாம் விட்டுச் சுகத்தைச் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர். அதர்வசிகை முற்றிற்று." என்பதாம். இப்பொருள் யாவும் இச்செய்யுளில் பொதிந்து கிடத்தலை உய்த்துணர்க. 'காரணங்களை' என்றது மும்மூர்த்திகளை எனவும், கருதினோர் என்றது எல்லாவற்றையும் சங்கற்ப மாத்திரத்தானே செய்பவர் எனவும் அறிக.

பிரமன் முதலிய நால்வரும் பூதேந்திரியங்களோடு ஒப்ப உற்பத்தியுடையாராகலானும், அதனால், வரையறைப்பட்ட ஐசுவரிய முடைய ரென்பது பெறப்படுத லானும் தியானிக்கற்பால ரல்லர் எனவும், சிவபெருமான் இடைக் காரணங்களாகிய அவர்களைக் கரணத்தானன்றிச் சங்கற்ப மாத்திரத்தால் படைத்துத் தாம் உற்பத்தி எய்தாமையாலும், அதனால், வரையறைப் படாத ஐசுவரிய முடைய ரென்பது பெறப் படுதலானும் அவரொருவரே தியானிக்கற்பால ரெனவும் கூறியபடி. வரையறைப்படாத ஐசுவரிய முடையாராகலின், போக மோட்சங்களை விரும்பும் எல்லாராலும் எந்நிலையிலும் தியானிக்கற்பாலரென்பார், 'யாவரும் என்றும்' எனவும், இதனை யறிந்து முறைப்படி வழிபடுவார்க்கே அப்பயன் கைகூடும் என்பார், 'பான்மையில்' எனவும், ஏனைய உபநிடதங்களில் ஏனைய தேவர்களுக்குத் தலைமை பேசப்படுமிடத்து அவரவருடைய தலைமைகளை மற்றையோர்க்குச் செல்லாதவாறு பிரித்துக் கூறாமையும், யுக்தி கூறாமையும், அவர்க்குத் தலைமை கூறியதோடு தாம் முடிந்தமை உணர்த்தாமையும் உடைமையால் அவை வலியில்லனவாய் ஒழிய, தான் சிவபிரானது தலைமையை ஏனையோர்க்குச் செல்லாதவாறு பிரித்துக் கூறுதலும், அது அளவுபடாத தென்பதை யுக்தி காட்டி விளக்குதலும், இப்பொருள் கூறிவிட்டுத் தான் முடிந்தமையை உணர்த்துதலும் உடைமையின் ஏனைய எல்லாவற்றிலும் வலியுடையதாகலின், 'நான் மறைத்தலையாம் அதர்வச்சிகை' என்றார், எனவும் கூறினர்.

கஎ. விண்டு இறைவனைத் தியானித்தலையும், எல்லாத்தேவர்களும் உயிர் வருக்கத்துட் பட்டவர்கள் என்பதையும் மேலே (கககூ- கஎ, உருகூ

அறிஞர் கொண்டகோட் பாடிது அறிந்திலை அம்மா
பிறவில் ஆணவச் செருக்கினின் மயங்கிய பேதாய்
வெறிய நீஇனி உய்வது வேட்டனை யாயின்
குறிபி றழ்ந்திடா தென்னுரை மெய்யுறக் கோடி. கஅ

மந்தி ரத்தழல் மகத்தினுக் கிறையவன் மகவான்
சந்த மாமறைக் கிறையவன் தாமரைக் கிழவன்
இந்தி ராதியாம் உலகினுக் கிறையவன் யானே
மைந்த னேயெனக் கிறையவன் மணிமிடற் றிறையோன். கசு

அகில நாயகன் அவற்குமேல் இறையவன் இல்லை
அகில லோகமும் அவன்திரு ஆணையின் நடக்கும்
அகில லோகமும் படைத்தளித் தழிப்பவன் அவனே
அகில நூல்களும் உரைத்திடுந் துணிவிது வாமால். உ0

வானம் ஏத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நான்முகன் சத்திய உலகம்நண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கைஎய் தியதும்
ஆனு யர்த்தவன் அருட்குறி அருச்சனைப் பயனால். உக

அன்ன வன்திரு வடிகளே சரணம்என் றடைமோ
இன்ன தாயநின் மயக்கினை விடுமதி இன்றேல்

---

ஆம் பக்கங்களிற்) காண்க. திருமால் முதலியோரைத் தியானப் பொருளாகக் கூறுதல் இறைவன் திருவருள் பெற்றமை பற்றி என்பதை, "அயன்றனை யாதியாக அரன்உரு என்பதென்னை - பயந்திடுஞ் சத்தியாதி பதிலால்" (சித்தி சூ க. செ. கூ0.) என்னும் அருள்நூ லுரை யாலுணர்க.

கசு. இந்திரன், பிரமன், திருமால் இவர்களை இறையவர் என்று கூறுதல் இக்கருத்தாலென்பது, இச்செய்புளால் தெளியப்படும்.

உக. ஆன் - இடபம். அருட்குறி - சிவலிங்கம். இச்செய்யுள், "வண்டு ளருந் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும் - புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும் - அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும் ஆலாலம் - உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்" (திருவிளை. வெள்ளை. கச.) என்பதுடன் ஒப்பு நோக்கற் பாலது.

உஉ. மதி, முன்னிலையசை. வேணி - சடை. பின்னல் வேணியென்னும் அன்மொழித் தொகைப் பெயர் அண்மை விளி ஏற்றது.

பின்னல் வேணிநீ கெட்டனை பிறரையுங் கெடுக்க
உன்னு கின்றனை எனவெகுண் டுரைத்தனன் திருமால். ௨௨

விண்டு வியாச முனிவரை முனிதல்

வாயு றுத்திய கடுமொழி கேட்டனன் மற்றைத்
தூய வானவத் தொகையெலாந் துரும்பெனக் கழித்தான்
பாயு மால்விடைப் பகவனே பரமெனத் தெளிந்தான்
ஏயு மாறருள் கிடைத்துயர் இருந்தவத் தலைவன். ௨௩

மெய்த்த வத்தவர் தமையெதிர் நோக்கிமே தகையீர்
இத்த கைத்தமால் உமக்கும்என் போலஎய் தியதோ
சுத்த மாமறை முழுவதுந் துகளறத் தெரிந்த
சித்தர் காள்எனை வினவிய தென்கொலோ செப்பீர். ௨௪

விச்சு வன்சிறைப் புள்ளர சுயர்த்தவன் விளம்பும்
விச்சு வாதிகன் எறுழ்வலிச் சினவிடை ஊர்தி
எச்ச மேசுரும் புளர்துழாய் அலங்கலான் என்ப
எச்ச நாயகன் பொலந்துணர் இதழிமா லிகையான். ௨௫

மாயை யாம்கோடு முரன்றனைச் செகுத்துயர் வயவன்
மாயை யாள்பவன் முப்புரம் கனற்றிய வள்ளல்

---

௨௩. வாய் உறுத்திய - உண்மையை அறிவுறுத்திய. இருந்தவத் தலைவன் என்றது வியாதனை.

௨௪. மால் மயக்கம். துகள் - குற்றம். சித்தர் - மனத்தையுடையவர்.

௨௫. விச்சுவன் - உலகமாயிருப்பவன். விச்சுவாதிகன் - உலகத்திற்கு அப்பாற்பட்டவன். இச்செய்யுளின் நான்கடிகளும் முறையே "விச்வம் நாராயண: பர:", "விச்வாதிகோருத்ரோ மகர்ஷி", "யஜ்ஞோவை விஷ்ணு:', "மேதபதிம்ருத்ரம்" என்னும் வேதமந்திரங்களின் பொருளை அறிவிக்கும். இதழி - கொன்றை.

௨௬. மாயை என்றது மூலப் பிரகிருதியை. முரன் - ஓர் அசுரன். வனிதை - பெண். தரியார் - பகைவர். திருமால் மாயை என்பதும், சிவபெருமான் அதற்கு நிமித்த காரணரென்பதும், "வாஸுதேவ: ப்ரக்ருதி:" எனவும், "ய: காரணநி நிகிலாநி தாநிகாலாத்ம யுக்தாந் யதிஷ்டத்யேக:" எனவும் வரும் வேதமந்திரங்களின் பொருளாமென்க. ஆள்பவன், கருத்தா, செய்பவன், வினை முதல், நிமித்த காரணன் என்பன ஒரு பொருட் சொற்கள்.

சாயல் மாமயில் வனிதையே நாரணன் தரியார்
சாய வென்றசீர்ப் புருடனும் கண்ணுதல் தலைவன். உ௬

என்ன மாமறை மிருதி நூல் புராணம்மற் றெவையும்
பன்னு கின்றதில் ஐயுறற் பாலதொன் றுளதோ
புன்ம ருட்சியில் மயங்கினேன் புலங்கொளத் தெருட்டா
தென்னை இவ்வணங் கண்டனிர் இது நுமக் கழகோ. உ௭

சிவனை யாவரே அருச்சனை செயாதவர் சிவன்மற்
றெவரை யாயினும் அருச்சனை இயற்றிய துண்டோ
கவர் மனத்தினை ஒழித்தினி யாமெலாங் கவலா
தவன் மலர்த்துணைச் சரணமே அடைதும்என் றியம்பி. உ௮

வியாசர் வேண்டுகோள்

பவள முண்டகக் கிழத்திதோய் பணைப்புயக் குரிசில்
தவள மேனியை நீனிறம் ஆக்கிவெண் சலதி
துவள வந்தெழும் கொடுவிடம் மிடற்றினில் தூங்கக்
கவளம் ஆக்குநின் பெருமையார் கணித்திட வல்லார். உ௯

சிரித்தெ ரித்தனை முப்புரம் திறற்சமன் வாழ்நாள்
இரித்த ழித்தனை உதையினில் இலங்கையார்க் கிறையை
நெரித்து வீழ்த்தினை பெருவிரல் நுதியினின் நீறுப்
பொரித்து விட்டனை காமனைப் பொறிநுதல் விழியால். ௩0

பிரம னார்சிரம் உகிரினிற் பேதுறக் கொய்தாய்
சுரர்கள் யாரையும் சிறுவிதி வேள்வியில் தொலைத்தாய்

---

"புருஷோவைருத்ரஸ் ஸந்மஹோநமோநம:" என்னும் சுருதியால் இறைவன் புருடனென்பது கூறப்பட்டது.

உ௯. பவளம் - ஈண்டு அதன் நிறத்தை உணர்த்திற்று. தவளம் - வெண்மை. நீலம் என்பதிலுள்ள அம்தொக்கது. சலதி - கடல். துவள - வருந்த. மிடறு - கண்டம். தூங்க - தங்க. கவளம் - ஈண்டு உணவு. கணித்திட - அளவிட.

௩0. சமன் - இயமன். நுதி - நுனி. இரித்தழித்தனை, ஒரு சொல் தன்மைப்பட்டது. பொறி - ஈண்டுத் தீ.

௩௧. உகிர் - நகம். பேதுற - வருந்த. சிறு விதி - தக்கன். மடங்கல் - சிங்கம், வாமனம் - குறள். கூர்மம் - ஆமை. கேழல் - பன்றி, உரம் -

நரம டங்கல்மீன் வாமனன் கூர்மம்நற் கேழல்
உரமெ லாம்அறத் தடிந்தனை ஒவ்வொரு கூற்றால். நக

அந்த கன்றனை மாயனைச் சூலமீ தமைத்த
எந்தை நின்பெருந் தகைமையான் என்னறிந் திசைப்பேன்
சிந்தை மையலில் தொழுத்தையேன் செய்பிழை பொறுத்தே
உந்து பேரருட் கருணையால் உய்வகை அருளாய். நஉ

என்று கண்கள்நீர் சொரியநாத் தழும்பநின் றேத்தி
ஒன்று காதலான் நெக்குநெக் குருகினன் பிரிந்த
கன்று போல்பதைத் தலந்திரந் தயரும்அக் காலைக்
கொன்றை வார்சடைக் குழகனும் கருணைகூர்ந் தருளி. நந

இறைவன் திருவாய்மலர்ந்தருளல்

வெள்ளி யங்கிரி எழுந்தென விளங்கொளி விடைமேல்
வள்ளை வார்குழை உமையொடு மகிழ்ந்தினி தேறிப்
பிள்ளை வாரணக் கடவுளும் பிறங்கெரி வடிவேல்
அள்ளி லைப்படை ஏந்தலும் இருபுடை அணுக. நச

பிறங்கு சக்கர பாணியும் பிரமனும் இருபால்
அறங்கு லாந்திரு வடியிணை தாங்கினர் நடப்ப
மறங்கு லாம்படைக் கடவுளர் வான்மிசை மிடைந்து
கறங்கு வண்டுறுக் கற்பக மலர்மழை பொழிய. நரு

எட்டு மாதிரத் தலைவரும் போற்றெடுத் திறைஞ்ச
வட்ட வெண்குடை நந்திதன் திருக்கரம் வயங்கக்

---

வலிமை. கூறு - அம்சம். தக்கன் வேள்வியில் தேவர்களை அழித்தமை தக்கேசப் படலத்தில் இப்புராணத்திலும் காண்க. மற்றைய வரலாறுகள் மேலே (உ0௬ ஆம் பக்கத்திற்) குறிக்கப்பட்டன.

நஉ. அந்தகன் - ஓர் அசுரன். மாயன் என்றது அபரவிண்டு எனப்படும் விடுவச்சேனனை. இவ்வரலாறுகள் முறையே அந்தகேசப் படலம், விடுவச்சேனேச படலங்களில் முறையே காண்க. தொழுத்தை - அடிமை.

நச. வள் - காது. ஐ - அழகு. வள்ளை என ஒரு சொல்லாக்கி,வள்ளைத் தண்டை யொத்த காதெனவுமாம். வார் - நீண்ட. குழை - காதணி. அள் - கூர்மை.

நரு. பிறங்கு - விளங்குகின்ற. மறம் - வீரம். கறங்கு - ஒலிக்கின்ற

கட்டு சாமரை உருத்திர கன்னியர் இரட்ட
ஒட்டி மாகதர் சூதர்கள் வாழ்த்தொலி எடுப்ப. ௩௬

நீண்ட செஞ்சடைப் புதுமதி இளநிலா விரிப்ப
ஈண்டு பூதவெங் கணங்களோ டெதிரெழுந் தருளி
மூண்ட பேரருள் ஊற்றெழக் குறுநகை முகிழ்த்து
மாண்ட சீர்முனித் தலைவனை நோக்கிவாய் மலரும். ௩௭

அறுசீரடி யாசிரிய விருத்தம்

எவனைநீ மதித்து நம்முன் சூளுற விசைத்தாய் இந்நாள்
அவன்இதோ காண்டி மற்றெம் அடியிணை தாங்கி நின்றான்
சவலைநீ பேதை நீரால் சாற்றினை எம்மைத் தேறா
துவலையாம் மதத்தில் பட்டோர் இடும்பைநோய் உழப்பர் கண்டாய்.

வடிவுடை எமதி டப்பால் வந்தவன் மாயன் ஏனைக்
கடிமலர்ப் பொகுட்டு மேய கடவுள்எம் வலப்பால் வந்தோன்
இடிபுரி தகையோய் இன்ன இருவரும் எம்பால் அன்பாம்
அடியவர்க் கடிமை பூண்டே அணுக்கராய் அமர்வர் கண்டாய். ௩௯

கற்பங்கள் தோறுந் தோன்றும் கணக்கிலாப் பிரமர் மாயர்
முற்பொன்று தலைகள் கோத்து நாற்றிய முளிபுன் மாலை
பொற்பொன்று நமது சென்னி புயம்அரை சரணம் எங்கும்
சிற்பங்கள் விளங்கப் பூண்ட திறம்இது நோக்கிக் காணாய். ௪௦

மாண்டவிண் ணவர்கள் எற்பு மாலையும் பலவும் பூண்டேம்
ஈண்டிவை பூண்ட தெற்றுக் கென்றியேல் நின்போல் வார்க்குப்
பூண்டமால் ஒழிப்பான் அன்னோர் பொன்றுறும் அநித்த வாழ்வும்
காண்டகும் எமது நித்தத் தன்மையுங் காட்டக் கண்டாய். ௪௧

---

௩௬. மாதிரம் - திசை. மாகதர் - இருந்தேத்துவோர். சூதர் - நின்றேத்துவோர்.

௩௮. சவலை - (அறிவு) முதிராமை. பேதை நீர் - அறியாமைத் தன்மை. உவலை - பொய். மதம் - சமயம். உழப்பர் - அனுபவிப்பார்கள்.

௩௯. இடிபுரி தகையோய் - (உயர்ந்தோரால்) இடித்துரைத்தற்குரியவனே. அணுக்கர் - அருகி லிருத்தற் குரியவர்.

௪௦. பொன்று - அழிந்த. நாற்றிய - தொங்கவிட்ட. முளி - உலர்ந்த. பொற்பு - அழகு. ஒன்று - பொருந்திய. சிற்பம் - (மாலயனது) அற்பம்.

சொன்மறை முடிபு தேறுந் தூயருள் தலைவன் நீயே
பன்முறை உலகம் எல்லாம் படைத்தளித் தழிக்கும் எம்மை
நன்மைகூர் வழிபா டாற்றி முத்தியில் நண்ணு கென்னுப்
புன்மருள் அகல நல்கி மறைந்தனன் பூத நாதன். ௪உ

நாயகன் கிளந்த எல்லாங் கேட்டுளம் நடுங்கி அஞ்சித்
தீயனேன் அந்தோ கெட்டேன் என்இது செய்தேன் இந்நாள்
ஏயும்இம் மடமைக் கேதி யாதென வியாதன் எண்ணி
ஆயதோர் மூர்த்தம் எம்மான் அடியிணை சிந்தை செய்து. ௪௩

வியாசர் காஞ்சியை யடைதல்

விருதுடைக் காசி வைப்பின் விச்சுவ நாதன் யார்க்கும்
அருள்வது மெய்யே யாகும் ஆயினும் ஈங்கு வாழ்வார்
தெருமாத் தேவர் கூடி ஊறுகள் செய்ப என்ப
இருவினை யுடையேன் இங்கு வைகுதற் கிடையூ றீதால். ௪௪

இடையறு காசி மூதூர் தன்னினும் இருமை சான்ற
இடையறுக் காஞ்சி மூதூர் எம்பிராற் கினிய தாகும்
இடைஒசி முலையாள் பாகன் கருணையால் எவர்க்கும் அவ்வூ
ரிடைஇடை யூறொன் றின்றி முத்திவீ டெளிதின் எய்தும். ௪௫

காசியின் இறப்ப முத்தி காஞ்சியை நினைப்ப முத்தி
ஆசற உதவும் என்னும் அரும்பொருள் துணிந்து சிந்தை
மாசுதீர் முனிவர் கோமான் விரைந்துமா ணாக்க ரோடும்
தேசினல் திசைபோங் காஞ்சித் திருநகர் அடைந்தான் மன்னோ. ௪௬

---

௪௩. மடமை - அறியாமை. மூர்த்தம் - முகூர்த்த காலம்.

௪௪. விருது - வெற்றி. தெருமா - மனங்கலங்க.

௪௫. இடையறுக் காஞ்சி என்றது, காசியில் இறைவன், திவோதானன் காரணமாக ஒருகால் நீங்கி இருந்ததுபோல் இல்லாமல் என்றும் நீங்கா திருத்தல் பற்றியும், பிரளய வெள்ளத்தில் அழியாதிருத்தல் பற்றியும், முதல் எழுத்து கடை எழுத்துக்களுடன் இடையெழுத்தும் தனது பெயரில் பெற் றிருத்தல் பற்றியுமென்க. இடை ஒசி - இடையை ஒசிக்கின்ற. ஒசித்தல் - முறித்தல், வருத்துதல். திவோதானன் காரணமாகக் காசியினின்று இறை வன் நீங்கி இருந்தமையைக் காசி காண்டத்துட் காண்க.

௪௬. ஆசு, மாசு என்பன குற்றம். தேசு - புகழ்.

வியாசர் இறைவனை வழிபட்டு வரம் பெறல்

திகழ்சிவ கங்கை யாடித் தேமலர் ஒருமா மூலப்
பகவனை வழிபா டாற்றி மஞ்சள்நீர் நதியின் பாங்கர்
நிகழ்மணி கண்ட நாத நெடுந்தகை நிருதி வைப்பில்
தகவினால் இளைத்துச் சார்ந்தார் சார்பினன் றனைத்தா பித்து. ௪௭

விதியுளிப் பூசை யாற்றி விழைதகத் துதிக்குங் காலை
மதிபொதி சடில மோலி வரதனும் மகிழ்ச்சி பொங்கி
எதிரெழுந் தருளி வேண்டும் வரமெவன் இயம்பு கென்ன
முதிர்பெருங் காதல் நீடி முனிவரன் வேண்டு கிற்பான். ௪௮

ஐயனே இளைத்துச் சார்ந்தேற் கரும்பெறற் சார்பாம் இந்தத்
தெய்வலிங் கத்து நாளும் செழித்துவீற் றிருந்து ஞாலம்
உய்வகை அவர வர்க்கு வேட்டன உதவாய் நின்தாள்
மெய்வகைப் பத்தி நாயேற் கருள்இவை வேண்டும் என்றான். ௪௯

அவ்வரம் முழுதும் அந்நாள் வியாதனுக் கருளி எங்கோன்
பௌவநீர் உலகம் போற்றப் பைத்தபாம் பல்குற் செங்கேழ்க்
கொவ்வைவாய்க் களபக் கொங்கைக் குலவரைப் பிடியி னோடும்
செவ்விதின் வியாத சார்ந்தாச் சிரயமா இலிங்கத் துற்றான். ௫0

முழுதுணர் கேள்வி சான்ற வியாதனை முறைமை மாறிப்
பழுதுபூண் டிவ்வா றெள்ளப் பட்டனன் என்னில் அன்னோ
வழுவறு நூல்ஒன் றானும் உள்ளவா றுணர மாட்டா
இழுதையோர் தெளிவர் கொல்லோ இருவருக் கரியான் உண்மை. ௫௧

ஆகத் திருவிருத்தம் - ௭௫0.

---

௪௭. தேமலர் - தெய்வத்தன்மை விரிந்த. பகவன் என்பதன் பொருள் மேலே (உ௫௩ஆம் பக்கம்) காண்க. மஞ்சள் நதியின் பாங்கர் என்றது மணி கண்டேசத்திற்குக் கூறியது. நிருதிவைப்பு - தென்மேற்குப் பக்கம்.

௫0. பைத்த - படம் விரித்த. பாம்பு விரித்தபடம் என்பது பொருள். வரைப்பிடி - உமாதேவியார்.

௫௧. எள்ளப்பட்டனன் - இகழப்பட்டனன். அன்னோ - இரக்கக்குறிப்பு. வழு - குற்றம். இழுதையோர் - அறிவிலிகள். நூலறிவுடையாரே, அவனருள் பெருமையால் மயங்குவார்களாயின், அதுதானும் பெறுதார், 'எமக்கு இறைவன் உண்மை தோன்றாதவாறென்னே!' எனப் பிணங்குதல் கூறவேண்டா என்பதாம்.

## படல உண்மை

இப் படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'பரம்பொருளாவார் சிவ பிரான் ஒருவரே' என்னும் உண்மையை முதலாகக்கொண்டு, (உ) 'ஏனைத் திருமால் முதலிய யாவரும் உயிர்வருக்கத்துட்பட்டவரே' என்பதும், (ங) எல்லா நூல்களையும் நன்கு பயின்றார்க்கும் இறைவன் திருவருள் இல்வழி உண்மையறியவாராது' என்பதும், (ச) 'இறைவன் திருமுன்பில் பொய் கூறு தல் அதிபாதகமாய் இம்மையிலேயே வந்து வருத்தும்' என்பதும், (ரு) 'அப் பாதகம் இறைவனை வழிபடுதலொன்றனே நீங்கும்' என்பதுமாகிய உண்மை களை விளக்கும். மற்றும் இதனுள்; கஉ, கரு, கஎ, கக, உ0, உக, உரு, உகூ, உஅ, ஙகூ, ச0, சக, ருக ஆம் செய்யுட்களிற் கூறிய பொருள்களையும் ஆண்டாண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

இதுகாறும் மணிகண்டேசப் பெருமான் வரலாற்றைக் கூறினோம்; இனி, பொய்ச் சத்தியம் செய்தமையால் துன்பம் அடைந்து வந்த வியாச முனிவரைக் காப்பாற்றிய சார்ந்தாசயப் பெருமான் வரலாற்றைச் சொல்லு வோம்.

பராசர முனிவருடைய தவத்தால் உதித்து நான்கு வேதம் பதினெண் புராணம் முதலியவற்றை வகைப்படுத்தி, அவைகளுக்குத் தலைவர் என்று சொல்லப்படும் தகுதிவாய்ந்த வியாச முனிவரானவர், முற்காலத்தில் கலியுகம் வருவதை அறிந்து அதற்குப் பயந்து, காசியையடைந்து அங்குத் தவம்செய்து கொண்டிருந்தனர். அப்போது அங்கிருந்த தபோதனர்களெல்லாம் அவரை வணங்கி, 'தேவரீர் எங்களுக்கு வேதாந்தத்தின் உண்மையை இது வென்று தெளிவிக்கவேண்டும்' என்று குறையிரந்தனர்.

வியாசமுனிவர் அம்முனிவர்களுக்கு, வேதம் புராணம் முதலிய எல்லா நூல்களுடைய பொருளையும் தனித்தனி எடுத்துக் கூறினர். முனிவர்கள், வேதத்தின் முடிந்த பொருள் இதுவென்று ஒருவார்த்தையில் எமக்குத் தொகுத்துச் சொல்லுவீர் என்று கேட்டனர். அதற்கு வியாச முனிவர் முன்னே கூறியதற்கு மாறாகச் சொல்லுகின்றார்: 'முனிவர்களே, நூல்கள் எல்லாவற்றையும் பன்முறை ஆராய்ந்தாலும் தெளியப்படும்பொருள் ஒன்றே, அது, 'நாராயணனே பரப்பிரமம்' என்பதாகும்; இதுவே எல்லா நூல்களுக்கும் துணிபு; இது சத்தியம்! சத்தியம்!! என்று கையெடுத்து நின்று கூறினர். அதைக்கேட்ட முனிவர்கள் அச்சங்கொண்டு, இதுவென்ன மாறுபாடென்று

மனம் நடுங்கி வியாசரை நோக்கி, 'நீர் கூறியது மெய்யாகுமானல் விசுவநாதர் சந்நிதியில் வந்து சொல்லவேண்டும்' என்றனர்.

வியாசர் அப்பொழுதும் அஞ்சாது சென்று விசுவநாதர் சந்நிதியில் நின்று, இரண்டு கைகளையும் தூக்கி, முன் கூறியவாறே கூறினர். வியாசர் அறியாமையால் மயங்கிக் கூறிய வார்த்தைகளுக்கு, விசுவநாதர் எல்லாப் பெயர்களும் தமது பெயரே என்பதனல் கோபங்கொண்டிலர். ஆயினும், நந்திபெருமான் கோபித்து, தூக்கியகைகள் அப்படியே நிற்குமாறு சபித்தனர். அதனல் தூக்கிய கை மடக்க முடியாமல், வெற்றிக்காக நாட்டிய கல்லுக் கம்பம்போல் நின்ற வியாசமுனிவர், திருமாலைத் தியானித்தனர்.

அப்போது திருமால் அவருக்கு முன்னே தோன்றி, 'வியாசனே, என்ன காரியஞ்செய்தாய்! நீ கெட்டதுமன்றி என்னையும் கெடுத்தனையே! வேதங்களை எல்லாம் வகைப்படுத்திய நீ இம்மயக்கத்தை எங்கே பெற்றனை? 'மற்றெல் லாரையும் நீக்கி மிகவும் தியானிக்கப் பாலர் சிவபிரான் ஒருவரே' என்று நான்கு வேதங்களுக்குத் தலைமையாகிய அதர்வசிகோபநிடதம் கூறுகின்ற தல்லவா? யாமெல்லாம் அப்பெருமானுடைய திருவடிகளைத் தியானிக்கின்ற பசுக்களாவோம். அவனது திருவருள் பெற்றமையால் பசுக்களாகிய எம்மை யும் தியானப் பொருளென்று சில நூல்கள் கூறும். ஒவ்வோர் இடங்களில் இந்திரனை இறைவனகக் கூறுவது வேள்விக்கு இறைவனதல் பற்றியும், பிரமனை இறைவனகக் கூறுவது வேதத்திற்குத் தலைவனதல் பற்றியும், என்னை இறைவனகக் கூறுவது இந்திரலோகம் முதலிய உலகங்களுக்குத் தலைவனதல் பற்றியும் என்க. இங்ஙனம் இந்திரன், பிரமன் முதலியவர் களுக்கு இறைவனகிய எனக்கு இறைவன், நீலகண்டத்தையுடைய சிவபெருமா னகும். சர்வத்திற்கும் நாயகனகிய அப்பெருமானுக்கு இறைவன் ஒருவனும் இல்லை. எல்லா உலகமும் அவன் ஆணையின்படியே நடக்கும். தேவர்கள் எல்லாம் துதிக்கும்படி யான் வைகுந்த வாழ்வை அடைந்ததும், பிரமன் சத்தியலோகத்தைப் பெற்றதும், மற்றைய தேவர்கள் தங்கள் தங்கள் பதவியை அடைந்ததும் சிவபெருமானுடைய அருட்குறியாகிய சிவலிங்கத்தைப் பூசித்ததன் பயனேயாகும். ஆகையால், வியாசனே அப்பெருமானுடைய திருவடிகளையே சரணமென்றடை; இல்லையேல், நீயும் கெட்டாய்! பிறரை யும் கெடுக்க நினைக்கின்றாய்! என்று கூறினர் திருமால்.

அக் கடுமொழியைக் கேட்ட வியாசர் மனந்தெளிந்து, முனிவர்களை நோக்கி, 'பெரியோர்களே என்னைப்போல நீங்களும் மயக்கமடைந்தீர்களோ? என்னை இவ்வாறு வினவியதன் காரணமென்ன? விண்டுவை விசுவன் என் றும், யஜ்ஞமென்றும், பிரகிருதி என்றும், ஸ்திரீ என்றும், சிவபெருமானை விசுவாதிகன் என்றும், யஜ்ஞபதி என்றும், பிரகிருதியின் நிமித்தகாரண

னென்றும், புருடனென்றும், சுருதி, ஸ்மிருதி, புராணம்முதலிய எல்லா நூல்களும் கூறுகின்றதில் சந்தேகம் ஒன்றுளதோ? சிவபெருமானைப் பூசிக்காதவர்கள்யார் இருக்கின்றார்கள்? சிவபெருமான் யாரையாவது பூசித்ததுண்டோ? யாமெல்லாம் ஒரே மனமாக சிவபெருமான் திருவடிகளையே சரணம் என்று அடைவோம் என்று சொல்லி, சிவபெருமானைப் பலவாறு துதித்தனர். அதனால் சிவபெருமான் மகிழ்ந்து, வெள்விடை மீது உமாதேவியாரோடும் இவர்ந்து, திருமாலும்பிரமனும் இரண்டு திருவடிகளையும் தாங்கி நடக்க, மற்றைக் கணங்கள் புடை சூழ வந்து காட்சியளித்துச் சொல்லுகின்றார். 'ஏ· வியாசனே, நீ யாரை மதித்து எமது சந்நிதியில் சத்தியம் செய்தனையோ, அவன் இதோ எமது திருவடியைத் தாங்கி நடத்தலைப்பார்; கற்பங்கள் தோறும் தோன்றி அழியும் எண்ணிறந்த பிரம விட்டுணுக்களுடைய தலைகளும், அநேக தேவர்களுடைய எலும்புகளும் மாலையாக நமது மார்பில் இருப்பதைப் பார். இவைகளெல்லாம் அத்தேவர்களுடைய அநித்தியத்தையும் எமது நித்தியத்தையும் உன்போன்றவர்க்குக் காட்டுதற்காகவே அணிந்திருக்கின்றோம். ஆதலால் எம்மையே பூசித்து முத்தி அடைவாயாக, என்று சொல்லிச் சிவபெருமான் மறைந்தருளினர்.

இவற்றை யெல்லாம் கேட்ட வியாசமுனிவர் நடுக்கமுற்றவராய் 'இம் மயக்கம் எனக்கு வந்ததற்குக் காரணம் யாது?' என்று ஒரு முகூர்த்தநேரம் இறைவன் திருவடிகளைச் சிந்தித்திருந்து, இக்காசியில் தவஞ்செய்பவர்களது மனஞ்சுழலும்படி தேவர்கள் இடையூறு செய்வார்களென்று கூறுவர். இக் காசியிலும் காஞ்சியே இறைவனுக்கு இனியதாகும். அந்த முத்தியும் இடையூறின்றிக்கிடைக்கும் என்று துணிந்து, வியாச முனிவர் காஞ்சியை அடைந்து, சிவகங்கையில் முழுகி, திருவேகம்பப் பெருமானை வணங்கி, மணிகண்டேசத்திற்குத் தென்மேற்கில் சார்ந்தாசயப் பெருமானைத் தாபித்து வழிபட்டனர். பெருமான் அவருக்குக் காட்சியளித்து, வேண்டும் வரம் யாதென்று கேட்க; வியாசர், தேவரீர் என்றும் இவ்விலிங்கத்துள் வீற்றிருந்து உயிர்கள் விரும்பியவற்றைக் கொடுக்கவும், தேவரீரிடத்தில் உண்மையான அன்பு அடியேனுக்கு உண்டாகவும் அருள் செய்ய வேண்டும் என்று வேண்டினர். இறைவன் அவ்வரங்களை அவருக்குக் கொடுத்து, வியாச சார்ந்தாசய இலிங்கத்துள் மறைந்தனர்.

எல்லா நூல்களையும் அறிந்த வியாச முனிவரே இவ்வாறு மயங்கினர் என்றால், யாதொரு நூலையும் அறியாதவர்கள் இறைவன் உண்மையை எங்ஙனம் அறியவல்லார்!

---

# சத்த தானப் படலம்

கலிநிலைத் துறை

சாத்திரம் வல்ல வியாதனை ஆண்டருள் சார்ந்தாரைக்
காத்த பிரான்திறம் இங்கிது கட்டுரை செய்தேமால்
ஏத்தரு மஞ்சள் நதிப்புடை ஏழ்முனி வோர்எந்தாய்
சோத்தென ஏத்திய ஏழிட மேய வளஞ்சொல்வாம். ௧

அத்திரி குச்சன் வசிட்டன் அருட்பிரு குப்பாசங்
கைத்துயர் கௌதமர் காசிப ரோடங்கி ராவென்றேழ்
மெய்த்தவ ரும்பனி சூழ்இம யக்கிரி மேல்முன்னாள்
உத்தம மான அருந்தவம் ஆற்ற லுறுங்காலை. ௨

ஆயிதழ் அம்புய வாழ்க்கை நெடுந்தகை ஆங்கெய்தி
நீயிர் விழைந்தமை கூறுமின் என்றலும் நேர்போற்றிப்
பாயிருள் சீத்து விளங்கொளி கான்றெழு பானுப்போல்
மீயுயர் தோற்ற முறுந்தவ வேந்தர் விளம்புற்றார். ௩

முதுக்குறை வாளர் பெறத்தகு முத்தி அருட்செல்வம்
மதிக்குறை வுற்றுழல் வோர்களும் மற்றெளி திற்கூடப்
புதுக்கும் உபாயம் எமக்கரு ளென்ன மலர்ப்போதன்
விதுக்குறை சூடி மலர்ப்பதம் ஏத்தி விரிக்கின்றான். ௪

பற்றிக லற்றுக் குற்றமில் சிந்தைப் பனவீர்காள்
கற்றுயர் காட்சிக் கொற்றமி லோருங் கருநோய்தீர்
பெற்றியின் உற்றுப் பெறலரு முத்திப் பேறெய்தும்
அற்றமில் ஏதுக் கேண்மின் நுமக்கின் றறைகிற்பேன். ௫

---

௧. சோத்து - இழிந்தோர் செய்யும் அஞ்சலி; இது சோத்தமெனவும் வரும்.

௩. ஆய்இதழ் - நுட்பமான (மென்மையான) இதழ்கள். அம்புயம் - தாமரை. பா - பரவிய. சீத்து - நீக்கி. பானு - சூரியன்.

௪. முதுக்குறைவு - பேரறிவு. மதி - அறிவு. புதுக்கும் - ஈண்டுப் புதிதாகிய என்னும் பொருட்டு. விது - சந்திரன்.

௫. பற்று - உறவு. இகல் - பகை. பனவர் - அந்தணர். காட்சி - அறிவு. கொற்றம் - வலிமை. அற்றம் - சோர்வு.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தருமமென் றியம்பும் ஒன்றே தழல்விடம் பருகும் எங்கோன்
திருவுளங் கருணை பூப்பச் செய்யும்அவ் வருளால் யார்க்கும்
மருவரு முத்திப் பேறு வாய்க்கும்அத் தருமந் தானும்
அருள்சிவ தருமம் ஆவித் தருமம்என் றிருகூ றுமால். ௬

பளகறும் இட்டி யாதி பசுதரு மங்கள் காலத்
தளவையிற் கழியும் என்றும் வச்சிர அரிசி மானத்
தளர்வுறா நிலைபெ றெய்தும் உயர்சிவ தருமம் அன்பால்
உளமுறச் சிவனை எண்ணல் முதற்பல உளவாம் அன்றே. ௭

சிவலிங்கப் பதிட்டை செய்தல் எவற்றுளுஞ் சிறந்த தாகும்
சிவபத்தர் பதிட்டை தானும் அன்னதே இவைதாம் செல்வச்
சிவன்அமர் தலங்கள் தம்மிற் செய்பயன் கோடி மேலாம்
சிவநிறை காஞ்சி வைப்பிற் செய்திடின் அனந்த கோடி. ௮

காஞ்சியை நினைப்பிற் காசிக் கடிநகர் வசித்த பேறும்
காஞ்சியே எவற்றி னுள்ளுஞ் சிறந்தது காண்மின் என்னுங்
காஞ்சிசூழ் அல்குல் வாணி கணவனுர் மொழிஉட் கொண்டு
காஞ்சியை அடைந்தார் மாசு கடிந்துயர் எழுவர் தாமும். ௯

அருட்சிவ கங்கை நன்னீ ராடிஏ கம்ப வாணர்
திருப்பதந் தொழுது மஞ்சட் செழுநதிக் கரையின் எய்தி

---

௬. ஆவித்தருமம் - பசு புண்ணியம். சிவதருமம், பதிபுண்ணியம் என்பனவும், உலக தருமம், பசு புண்ணியம் என்பனவும் ஒருபொருட் சொற்கள்.

௭. பளகு - குற்றம். இட்டி - வேள்வி. மான-ஒப்ப. பசு புண்ணியங்கள் அழிதலும், பதி புண்ணியம் அழியாதிருந்து முத்தியை தருதலும் உடைய வென்பதை, "பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் - இசைத்து வரு வினையில் இன்பம் - இசைத்த-இருவினை யொப்பில் இறப்பில் தவத்தான் - மருவுவனும் ஞானத்தை வந்து" (சிவஞா. சூ. அ. அதி. க.) என்னும் மெய் கண்ட மொழியா லுணர்க.

௮. பதிட்டை - நிலைபேறு; இது பிரதிட்டை என்னும் வடசொல் திரிபு. சிவபத்தர் பதிட்டையாவது சிவனடியார்களை உண்டி முதலியவற்றால் உபசரித்தல். சிவம் - நன்மை.

௯. காஞ்சிசூழ் அல்குல் என்புழிக் காஞ்சி - மேகலை.

௧0. அருத்தி - விருப்பம். கூர் - மிகுந்த.

அருத்திகூர் வியாத நாதன் அணிமையில் தத்தம் பேரான்
இருத்தினர் இலிங்கம் பூசை இயற்றினர் ஆர்வத்தோடும். ௧௦

பச்சிலே பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்
கெச்சமில் இருமைப் பேறும் அளித்தருள் இறைவா போற்றி
முச்சக முதலே போற்றி மூலச்சுவட் டணியாய் போற்றி
நச்சினர்க் கினியாய் போற்றி எனத்துதி நவிலுங் காலே. ௧௧

ஆயிடை வெளிநின் றெம்மான் அத்திரி பிருகு வாதித்
தூயரை நோக்கி வைவச் சுதமனு வந்த ரத்தில்
நீயிர்எம் ஆணையாற்றான் நிகழும்ஏழ் முனிவர் ஆமின்
மாயிரு முத்தி ஈற்றின் வழங்குதும் என்று பின்னும். ௧௨

ஏழ்இலிங் கத்தும் எம்மைத் தரிசித்தோர்க் கிருமைப் பேறும்
வாழ்வளித் தருள்கேம் என்று வரங்கொடுத் தகன்றான் ஐயன்
பாழ்வினை அறுக்குஞ் சத்த தானத்திற் பணியப் பெற்றோர்
ஊழ்வலித் தொடக்கு நீங்கி உம்பர்கோன் அடியிற் சேர்வார். ௧௩

ஆகத் திருவிருத்தம்-எசுஙு.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (௧) 'இறைவன் வழிபாடொன்றே முத்தியை எளிதில் தரும்.' என்னும் உண்மையை விளக்கும். மற்றும் இதனுள், 'புண்ணியம், சிவபுண்ணியம் பசுபுண்ணியம் என இருவகைப்படும்' என்பதும், 'அவைகளில் வேள்வி முதலியன பசுபுண்ணியங்கள்' என்பதும், 'அவை, தத்தம் பயன்களைக் கொடுத்து ஒவ்வோர் கால எல்லையில் அழியும்' என்பதும், 'சிவபுண்ணியம் அவ்வாறு அழியாது வச்சிர அரிசிபோல நின்று முத்தியைத் தரும்' என்பதும், 'அச்சிவபுண்ணியம் சிவபெருமானைத் தியானித்தல் முதலாகப் பலவகைப்படும்' என்பதும், 'அவை யெல்லாவற்றி

---

௧௧. பழம்போது - பழைய மலர். எச்சம் - குறைவு. நச்சினர்க்கு - விரும்பினவர்களுக்கு.

௧௨. ஏழு முனிவராவார்: அத்திரி, ஆங்கிரசன், கிருது, புலகன், மரீசி, புலத்தியன், வசிட்டன் எனவும், அத்திரி, வசிட்டர், சமதக்கினி, கௌசிகன், பாரத்துவாசன், கௌதமன், காசிபன் எனவும் கூறுவர்.

லும் சிறந்தன சிவபூசையும் அடியார் பூசையுமேயாம்' என்பதும், 'அவற்றை யும் சிறந்த தலங்களிற் செய்தல் பெரும்பயனுடைத்தாம்' என்பதுமாகிய பொருள்களும் கூறப்பட்டமை காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

**வி**யாச முனிவரை ஆட்கொண்ட சார்ந்தாசயப் பெருமான்திறம் இது வாகும். இனி மஞ்சள் நதிக்கரையில் எழுமுனிவர்கள் வழிபட்ட எழு இடங்களின் பெருமையைச் சொல்லுவோம்.

முற்காலத்தில் அத்திரி, குச்சன், வசிட்டன், பிருகு, கௌதமர், காசி பர், அங்கிரா என்னும் எழு முனிவர்கள் இமய மலையில் தவம் செய்யுங்கால் பிரமன் அவர்களுக்கு முன்னேதோன்றி, 'உங்களுக்கு வேண்டியது யாது?' என்றனன். முனிவர்கள், 'பேரறிவாளர்கள் பெறத்தகுந்த முத்திச் செல் வத்தை அறிவிற் குறைந்தவர்களும் பெறத்தகுந்த உபாயத்தைச் சொல்ல வேண்டும்' என்றனர். அதற்குப் பிரமன் சொல்லுகின்றான்:

தருமம் என்று சொல்லப்பட்ட ஒன்றே சிவபெருமான் திருவுள்ளத்தை மகிழச்செய்யும். அம்மகிழ்ச்சியாகிய திருவருளால் முத்திப்பேறு கிடைக்கும். அத்தருமந்தானும் சிவதருமம், உலக தருமம் என இரண்டுவகைப்படும். உலக தருமமாகிய பசு புண்ணியங்கள் வேள்வி முதலியனவாம். அவை தத் தம் பயனைக் கொடுத்து ஒவ்வொரு கால எல்லையில் கழியும். சிவதருமமாகிய பதிபுண்ணியம் வச்சிர அரிசிபோல என்றும் அழியாது முத்தியைக் கொடுக் கும். அச்சிவபுண்ணியம் சிவனைத் தியானித்தல் முதலாகப் பலவாய் உள்ளன. அவைகளெல்லாவற்றிலும், சிவலிங்கப் பதிட்டையும் சிவனடியார் பூசையும் சிறந்தனவாகும். அவற்றையும் சிவதலங்களிற் செய்தால் கோடிமடங்கு அதிகமாகும். அச்சிவதலங்களிலும் காஞ்சியிற் செய்வது அநேகங்கோடி மடங்கு அதிகமாகும் என்றனன்.

அது கேட்ட முனிவர்கள் காஞ்சியை அடைந்து, சிவகங்கையில் முழுகி, திருவேகம்பரைத் தொழுது, மஞ்சள் நதிக்கரையில் சார்ந்தாசயத்திற்கு அரு கில் தங்கள் பெயரால் ஒவ்வொரு இலிங்கம் தாபித்துப் பூசித்தனர். பெரு மான் அவர்களுக்குக் காட்சிதந்து, 'நீவிர் வைவச்சுத மனுவந்தரத்தில் எழு முனிவர்களாகத் தோன்றுமின்; பின்னர் முடிவில் முத்தியைக் கொடுப் போம். இந்த எழு இலிங்கத்திலும் எம்மை வணங்கினவர்களுக்கு இம்மை மறுமை இன்பங்கள் உண்டாகும்' என்று சொல்லி மறைந்தருளினர். அச் சத்ததானத்தை வணங்கப்பெற்றவர்கள் வினைத் தொடர்பு நீங்கி இறைவன் திருவடியை அடைவார்கள்.

# பராசரேசப் படலம்

கலி விருத்தம்

தருமம்பிற ழாத சத்ததா னத்தின்
பெருமைஉரை செய்தாம் சத்திபெறு மைந்தன்
தருதந்தையர்க் கொன்ற அரக்கர்தம தாவி
பருகவழி பட்ட பராசரஞ் சொல்வாம். ௧

விசுவாமித்திரன் சூழ்ச்சி

மத்தப்புலன் வென்ற வசிட்டன் தரவந்தார்
பத்தையிரு மக்கள் பதுமத்தவன் ஒப்பார்
சத்திமுத லானோர் தகவால்இவர் வாழ்நாள்
சுத்தநெறி தேர்விச் சுவாமித்திரன் என்போன். ௨

அசித்துப்புரஞ் செற்றோன் அருளான்உயர்ந் தோங்கும்
வசிட்டனுடன் என்றும் மாறுகொண் டுள்ளான்
வசிக்குந்தவ வாழ்க்கை வசிட்டன்குல மெல்லாம்
நசிக்கும்படி ஒன்று நாடிஇது செய்தான். ௩

மன்னர்வழித் தோன்றி வசிட்டன்சா பத்தால்
துன்னும்அரக் கன்னாஞ் சுதாசன்எனும் பேரோன்*

---

௧. சத்தி - வசிட்டரது முதற்புத்திரர்.

௨. மத்தம் - மயக்கம். பதுமத்தவன் - பிரமன்.

௩. அசித்து-சிரித்து. தவவாழ்க்கை (யில்) வசிக்கும் வசிட்டன் என்க.

௪. வசிட்ட முனிவர் சாபத்தால் அரக்கனானவன் மித்திரசகன் என்னும் சூரிய குலத்து அரசன் எனவும், சுதாசன் என்பவன் அவன் தந்தை எனவும் வேறு சில நூல்கள் கூறும். அவ்வரலாறு, அவ்வரசன் வேட்டைக்குச் சென்று காட்டிலிருந்த ஒரு அரக்கனைக் கொன்றனன். அதனால் வயிரங்கொண்ட அவன் தம்பி அரசனை வஞ்சித்து, அவனுக்குச் சமையற்காரனாக அமர்ந்தான். ஒரு நாள் அவ்வரசனிடத்தில் வசிட்ட முனிவர் வந்தபொழுது, சமையற்காரனாகிய அரக்கன், இதுதான் சமயமென்று நரமாமிசத்தை அவருக்குப் படைத்தனன். அதனால் வசிட்டர் கோபங்கொண்டு, அரசனை அரக்கனாகும்படி சபித்தனர். அரசன், அறியாது நிகழ்ந்த இக்குற்றத்திற்காகச் சபித்த வசிட்டரைச் சபிப்பேனென்று சாபநீரைக் கையில் எடுத்தனன். பின்னர், அவன் மனைவி தடுத்தமையால் அந்நீரைத் தன் காலிலேயே பெய்து

[* 'பெயரோன்' எனவும் பாடம்.]

றன்னைவிளித் தேவத் தறுகண்ணவன் எய்தி
இந்நாற்றுவர் தம்மை எடுத்துவாய்ப் பெய்தான். ௪

வடமீனவ ளோடும் வசிட்டன்அது கேட்டுப்
படர்கூர்ந்தழு தேங்கி ஆற்றிப்பறம் பேறிப்
புடவிமிசை வீழப் பூமாதுளம் நெக்காள்
உடல்விண்டொழி யாமே தாங்கிஉய் வித்தாள். ௫

வன்பர்ப்பதம்* ஏறி வீழ்ந்தும்மா யாமே
அன்பிற்புவி தாங்க அயர்ச்சிதெளிந் தேங்கி
இன்பமக வெல்லாம் இழந்தசோ கத்தால்
துன்பக்கரை காணார் புலம்பிச்சோர் காலை. ௬

பாராசரர் பிறத்தல்

கொன்னும்வசிட் டன்தன் குலமைந்தரின் மூத்தோன்
மன்னுந்தவச் சத்தி யென்பான்மனை யாட்டி
அன்னசெயல் கேளா அரற்றிக்கருப் பத்தால்
துன்னும்வயி றெற்றிப் புரளுந்துயர் கண்டான். ௭

ஆவாஎன் செய்தாய் அந்தோகெட் டேன்என்
தாவாச்சந் தானத் தானந்தனை எற்றி
மூவாக்குலம் முற்றும் முடிக்கமுயல் கின்றாய்
பாவாய்என நைந்து கூறப்பணைத் தோளி. ௮

மாமன்மொழிக் கஞ்சி வாளாஅமர் போது
தூமென்மலர்க் கூந்தல் எற்றுந்துயர்க் காற்றாப்

---

கொண்டனன். அதனால் அவன் கால் கறுத்து மூங்கில்போல் ஆயினமையால், 'கன்மாட பாதன்' எனப்பட்டனன். (கன்மாடம்-மூங்கில்.) பின்னர், வசிட்ட முனிவர் பன்னிரண்டு வருடத்திற்குப்பின் முன்போலாகுக என்றபடி பன்னிரண்டு வருடம் அரக்கனாய்க் காட்டில் திரிந்துகொண்டிருந்தனன்.

௫. படர் - துன்பம். பறம்பு - மலை.

௬. பர்ப்பதம் - மலை. சோகம் - துயர். * 'பற்பதம்' எனவும் பாடம்.

௭. கொன்னும் - அஞ்சும், மனவலி இழந்த. அரற்றி - அழுது. எற்றி - மோதி.

௮. ஆவா, இரக்கக் குறிப்பு. தாவா, மூவா என்பன கெடாத. சந்தானம் - சந்ததி.

பூமென்கருப் பத்துட் பொலிபுங்குழ லிகைநந்
தாமென்கனி வாய்வின் டமுபேரொலி கேட்டு. ௯

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இவ்வேவாதை எவர்ஓதை யெனவசிட்டன் தன்உள்ளத் தெண்ணு நிற்கும், அவ்வேல்லைப் படநாகச் சேக்கைமிசைக் கண்படுக்கும் அறவோன் தோன்றிச், செவ்வாய்மை முனிவரநின் சந்தானந் தழைத்தோங்கத் தேயம் வாழ, ஒவ்வாதார் குலஞ்சிதைய நின்மக னுக் கொருமைந்தன் உதிக்கின் றுனல். ௧௦

அணங்கொருபால் அமர்ந்தபிரான் திருவடிக்கு மெய்யன்பன் அகில நூலும், உணர்ந்துதெளிந் தெனைஒப்பான் பாணியா தின்னே வந் துறுமா காணென், றிணங்கமொழிந் தேகியபின் வசிட்டனுந் தன் மனக்கவலை யின்றி வாழ்ந்து, வணங்கும்இடை அருந்ததியோ டானந்தந் தலைசிறப்ப வைகும் போது. ௧௧

சத்திமனைக் கிழத்திஅதிர் சந்திபால் உலகுய்யத் தருமம் வாழ, உத்தமச்சீர்ப் பராசரன்வந் தவதரிப்ப இராக்கதர்தம் ஊர்கள் தோறும், மொய்த்தெழுந்து குருதிமழை பொழிந்தனவால் முனித் தலைவன் மகவை நோக்கி, மெய்த்தமனங் களிகூர்ந்து சாதமுதற் சடங்கனைத்தும் விதியிற் செய்தான். ௧௨

இளம்பிறைபோல் வளர்மைந்தன் ஒருஞான்று மடித்தலமீ திருந்து நோக்கி, வளம்பயிலும் மங்கலமின் றிருந்தனையால் யாண் டையன்மற் றெந்தை என்ன, உளம்பரியப் பயந்தாளை வினவுதலும் அவள்கேட்டங் குள்ளம் மாழ்கி, விளம்புவாள் பிள்ளாய்உன் தந்தை தனை வெகுண்டரக்கன் மிசைந்தான் என்று. ௧௩

அழுதிரங்கிக் கண்ணீரான் இளமைந்தன் றனைஆட்ட அருகு சூழ்ந்த, வழுவகன்ற முனிமடவார் முனிவரரும் அருந்ததியும் வசிட்

௧௦. எல்லை - பொழுது. ஒவ்வாதார் - பகைவர்.

௧௧. அகிலம் - முழுது. பாணியாது - தாமதியாமல்.

௧௨. அதிர்சந்தி - சத்தி முனிவர் மனைவி. சாதம் - பிறந்தநாள் செய்யும் சடங்கு; இது 'சாதகன்மம்' எனப்படும்.

௧௩. யாண்டையன் - எங்கே இருக்கின்றான். மாழ்கி - வருந்தி. மிசைந் தான் - உண்டான்.

டன் ருனும், தொழுதியெனக் கிடந்தரற்றி அழக்கண்டு ருவிதிரு வருளால் இன்னே, முழுதுலகும் வாய்மடுப்பல் எனவெகுண்டான் முனிவர்இள ஏறு போல்வான். கச

வசிட்டமுனிவர் உபதேசம்

அம்மொழிகேட் டுயர்வசிட்டன் உலகெல்லாம் என்செய்யும் அப்பா அந்த, வெம்மைநிலை அரக்கர்குலம் வேரறுப்பச் சிவபூசை விழையாய் என்ன, இம்முறையேல் விடையூர்தி என்பூசை கொண் டருளி இன்னே நல்குஞ், செம்மைநூல் துணிபான சிறந்ததலம் யாததனைச் செப்பு கென்றான். கரு

கலி விருத்தம்

என்றலும் நன்றுநீ வினைய திங்நலக்
துன்றிய பெரும்பதி தூய வானவர்
முன்றிலும் அரங்கமும் முகில்உ ரிஞ்சநீள்
மன்றமும் முழுவருக் காஞ்சி மாநகர். கசு

மறுவறு வானவர் மனிதர் மற்றுளோர்
உறுபெருந் தவர்எனை உள்ளிட் டோர்களும்
பெறலரும் பேறுபெற் றெய்தும் பெட்பின
திறுவழி நினைப்பினும் முத்தி ஈவது. கஎ

பன்னருங் கொடியவெம் பாத கர்க்கும்அப்
பொன்நகர் வரைப்பின்ஓர் தினத்துள் போர்விடை
மன்னவன் திருவருள் வாய்க்கு மேயெனின்
உன்னைஒப் போர்க்கினி ஓதல் வேண்டுமோ. கஅ

ஆயிடைச் செல்கெனும் வசிட்டன் அம்புயத்
தூயமென் மலர்ப்பதந் தொழுதெ ழுந்துதன்
தாயினை விடைகொடு தடங்கொள் காஞ்சியில்
காய்பொறிப் பராசரன் கடுக எய்தினன். ககூ

---

கச. தொழுதி - பறவைக் கூட்டத்தொலி. வாய் மடுப்பல் - விழுங்கு வேன்.

கசு. வானவர் முன்றில் - திருக்கோயில். அரங்கம் - நாடகசாலை. மன்றம் - பொதுவிடம். பெட்பினது - நன்கு மதிக்கப்படுவது. இறுவழி- இறக்கும்பொழுது.

பாராசரர் சிவபூசை

கம்பைநீ ராடிஏ கம்ப நாயகர்
தம்பனி மலர்ப்பதந் தாழ்ந்து மஞ்சள்நீர்
வம்பவிழ் கரைமிசை மணிகண் டேச்சர
நம்பர்தம் வடகுட ஞாங்கர் நண்ணினன். உ0

தன்பெயர் இலிங்கம்ஒன் றிருத்தித் தாவிலா
அன்பினின் மலர்எடுத் தருச்சித் தேத்துழிப்
பொன்புரி வேணியோன் கருணை பூத்தெதிர்
வன்பழ விடைமிசை வந்து தோன்றியே. உக

வேட்டன கூறுகென் றருள வேதநூற்
பாட்டினாற் பலமுறை பழிச்சித் தாழ்ந்துமுன்
வாட்கதிர் ஐம்படை மார்பிற் கிண்கிணித்
தாட்டுணை மழமுனி சாற்றல் மேயினன். உஉ

எறும்விடைப் பரிமிசை எந்தை எந்தைஓர்
குறுவலி அரக்கனாற் கோட்பட் டான்அவன்
உறுகுல முழுவதும் மறலி ஊர்புகத்
தெறுவரம் எனக்கருள் செய்ய வேண்டுமால். உங

ஈண்டுநீ இனிதமர்ந் தெவர்க்கும் இன்னருள்
மாண்டகு சிறப்பினின் வழங்க வேண்டுமால்
ஆண்டகை என்றிரந் தன்பு மேதக
வேண்டலும் எம்பிரான் விளம்பல் மேயினன். உச

---

உ0. வம்பு அவிழ் - வாசனை வீசுகின்ற. வடகுடஞாங்கர் - வடமேற்குப் பக்கம்.

உஉ. ஐம்படை - காத்தற் கடவுளாகிய திருமாலினது சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் என்னும் ஐந்து ஆயுதங்களின் வடிவாகச் செய்யப்பட்ட ஆபரணம். இவை குழந்தைகட்கு இடையூறு வாராதிருத்தற்பொருட்டு மார்பில் அணியப்படும். இக்காலத்தவர் இரண்டொன்றை இடையில் அணிப. வாள் கதிர் - பேரொளி; மீமிசைச்சொல். மழமுனி - இளைய முனிவர்.

உங. பரி - ஈண்டு ஊர்தி, "ஆடும்பரி" (கந்தர் அனு. க.) என் புழிப் போல. மறலி - இயமன். தெறு -அழிக்கின்ற.

பராசரர் வரம்பெறல்

மைந்தநின் பூசையில் தம்பி மாரொடு
நுந்தைமற் றெமைஅடைந் துற்று நோன்மைசால்
அந்தண னும்உனைக் காணும் ஆசையின்
முந்துற நின்றவா காண்டி மொய்ம்பினோய். உரு

அரக்கரைக் கொலைசெயும் வேள்வி யாற்றிஅந்
நெருப்பினில் அவர்தமை நீறு செய்திஇவ்
வரைப்பினில் என்றுநாம் மகிழ்ந்து வாழ்துமென்
றுரைத்தனன் மறைந்தனன் வேதத் துச்சியில். உசு

பராபரன் திருவருள் பெற்றுப் பாய்புகழ்ப்
பராசர நெடுந்தகை பணைத்த வேள்வியில்
பராய்மனத் தரக்கரை நீற்றிப் பாற்றினன்
பராயசீர் உறுவர்தம் பகர்ச்சி யாற்கதம். உஎ

எழுசீரடி யாசிரிய விருத்தம்

விரிபுனல் படிந்தோர் பருகினோர் தீண்டப் பெற்றுளோர் தமக்கும்வீ டளிக்கும், முரிதிரை முகட்டு வராலினம் உகளும் முழங்கொலி மஞ்சள்நீ ராற்றங், கரைமிசைத் தகைசால் முனிவரர் வழுத்துங் கண்ணுதல் வளாகங்கள் இன்னும், உரைசெயப் புக்கால் உலப்புறு காண்மின் உயர்நிலைப் பெருந்தவ முனிவீர். உஅ

ஆகத் திருவிருத்தம் - எகூக.

---

உரு. நுந்தை - உனது தந்தை. மொய்ம்பு - (தவ) வலிமை.

உசு. சிவபெருமானது இயல்பு வேதத்தின் முடிவிலேயே பேசப்படுதலால், அதனை அவருக்கு இடமாக்கி, 'வேதத்து உச்சியில் மறைந்தனன்' என்றார்.

உஎ. சொற்பின் வருநிலை. பராபரம் என்பதன் பொருள் மேலே (கசூஉ ஆம் பக்கத்திற்) காண்க. பராய் - ஒரு மரம். இது பிராய் எனவும் கூறப்படும். இதன் முருட்டினை (விறகை) வன்மைக்கு எடுத்துக்காட்டுவர்; "வன்பராய் முரு டொக்கும்என் சிந்தை" (திருவா. செத். ச.) என்றருளியது காண்க. பராய-பரவிய, வழிபட்ட. உறுவர்-முனிவர். பகர்ச்சி-சொல். கதம்-கோபம்.

உஅ. முகடு - உச்சி. வளாகம் - இடம்.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு; (க) 'பகைவரை வெல்லு தலும் இறைவன் வழிபாட்டினால் எளிதில் கிடைக்கும்' என்பதும், (உ) 'இறைவனை வழிபடுவார்க்கு இறைவன், அவர் கருதிய பயனேயன்றிப் பிறபயனையுந் தானே யளிப்பன்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

அறங்கள் வழுவாத சத்ததானத்தின் பெருமையை இதுவரையிற் சொன்னோம். இனி, சத்தி முனிவர் பெற்ற பராசர முனிவர் தம் தந்தைமார்களைக் கொன்ற அரக்கர்களை அழித்தற்கு வழிபட்ட பராசரேசத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

வசிட்ட முனிவரிடத்தில் என்றும் பகைகொண்டுள்ள விசுவாமித்திர முனிவர், வசிட்டருடைய சாபத்தால் அரக்கனாகத் திரிந்து கொண்டிருக்கும் சுதாசன் என்னும் அரசனை அழைத்து, வசிட்ட முனிவர் புதல்வர்களாகிய சத்திமுனிவர் முதலிய நூற்றுவர்மேல் ஏவ, அவன் சென்று அவர்கள் எல்லோரையும் விழுங்கினன். அதனை அருந்ததியோடும் வசிட்ட முனிவர் கேள்வியுற்று, பெருந்துயர் கொண்டு, உயிரைவிட ஒரு மலைமேல் ஏறி வீழ்ந்தனர். அதனைப் பூமிதேவிகண்டு, அவர் உடல் வருந்தாதபடி தாங்கிப் பிழைப்பித்தாள். பின்னர் வசிட்ட முனிவர் புத்திர சோகத்தால் வருந்திப் புலம்புங்கால், தமது மூத்த பிள்ளையாகிய சத்திமுனிவருடைய மனைவி கருப்பம் பொருந்திய தனது வயிற்றில் அறைந்துகொண்டு அழுவதைக் கண்டனர். உடனே 'ஏ பாவாய், எனது சந்ததி இருக்கும் இடத்தை மோதி, எனது குலத்தை அடியோடு அழிக்க முயல்கின்றாய் இது தகுமோ' என்றனர். அதனால் அவள் அஞ்சிச் சும்மா இருக்கின்றபோது, கருப்பத்திலிருக்கும் குழந்தை பொறாது அழுகின்ற பேரொலி கேட்டது. வசிட்ட முனிவர் இவ்வொலி யாதென்று ஆராயும் பொழுது, திருமால் தோன்றி, 'சிவபெருமானிடத்தில் மெய்யன்புடையவனும், எல்லா நூல்களையும் அறிந்து என்னை ஒத்தவனும் உள்ள ஒரு புதல்வன், உனது மகனுக்கு இப்பொழுதே பிறப்பான்' என்று சொல்லி மறைந்தனர். அதனால், வசிட்டர் மனவருத்தம் நீங்கி மகிழ்ச்சியுற்று இருக்கும்போது, சத்தி முனிவர் மனைவியாகிய அதிர்சந்தியினிடத்தில் பராசர முனிவர் பிறந்தனர். வசிட்டர் அவருக்குச் சாதகன்மம் முதலிய சடங்குகளைத் தவறுமற் செய்தனர்.

இளம்பிறை போல வளர்கின்ற அப்புதல்வர் ஒருநாள் தனது தாயின் மடிமேலிருந்து கொண்டு, 'அன்னையே நீ மங்கலம் இல்லாதிருக்கின்றாய், எனது தந்தை எங்கே?' என்று கேட்டனர். அதனைக் கேட்டதாய் துயர முற்று, 'பிள்ளாய் உனது தந்தையை ஓர் அரக்கன் விழுங்கிவிட்டனன்' என்று சொல்லித் தனது கண்ணீரினால் அவரை முழுகுவித்தனள். அப்போது பக்கத்திலிருந்த முனிவர் பத்தினியர்களும், முனிவர்களும், அருந்ததியும், வசிட்டரும் பேரொலியாக அழுதனர். அதைக்கண்ட பராசர முனிவர் கோபங்கொண்டு, 'சிவபெருமான் திருவருளால் இப்பொழுதே உலக மெல்லாவற்றையும் விழுங்குவேன்' என்றனர். வசிட்டர், 'அப்பா குழந்தாய், உலகமெல்லாம் என்ன செய்யும்? அரக்கர் குலத்தை வேரறுப்பதற்குச் சிவபூசை செய்வாயாக' என்றனர். பராசர முனிவர், 'அதற்குச் சிறந்த தலம்யாது'? என்று கேட்க, வசிட்டர் காஞ்சியே சிறந்ததென்று அதன் பெருமையை எடுத்துக் கூறி, அக்காஞ்சிமா நகரத்தில் கொடிய பாதகர்களுக்கும் ஒரே நாளில் சிவபெருமானுடைய திருவருள் கிடைக்குமென்றால், அவ்விடத்தில் உன் போன்றவர்களுக்கு அப்பெருமானது திருவருள் எளிதிற் கிடைக்குமென்றல் கூறவும் வேண்டுமோ? ஆகையால், அவ்விடத்திற்குச் செல்க' என்று உரைத்தனர்.

உடனே பராசர முனிவர், விரைவில் காஞ்சியை அடைந்து, கம்பையாற்றில் முழுகி, ஏகாம்பரநாதரை வணங்கி, மஞ்சள் நதிக்கரையில், மணிகண்டேசுரருக்கு வடமேற்கில், தமதுபெயரால் ஒரு இலிங்கம்தாபித்துப் பூசித்தனர். சிவபெருமான் அவருக்குக் காட்சி அளித்து, 'வேண்டுவனவற்றைக் கூறுக' என்றனர். பராசர முனிவர் துதித்து வணங்கி, 'எனது தந்தையார் ஓர் அரக்கனால் விழுங்கப்பட்டனர்; ஆதலால், அவ்வரக்கர் குலம் முழுவதும் அழிக்கும் வரத்தை எனக்கு அளிக்கவேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான் 'மைந்த, உனது பூசையால் எம்மை அடைந்து, உன்னைக் காணும் விருப்பத்தால், இதோ வந்திருக்கின்ற உனது தந்தையைப் பார்ப்பாயாக; ஓர் வேள்வி செய்து அதில் அரக்கர்களை எல்லாம் நீறு செய்க; இத்தலத்தில் நாம் என்றும் மகிழ்ந்து வாழ்வோம்' என்று அருளிச் செய்து மறைந்தனர். பராசர முனிவர் அவ்வாறே ஓர் வேள்வி செய்து பற்பல அரக்கர்களை அழித்து முனிவர்கள் சொல்லால் தமது கோபந்தணிந்து வாழ்ந்தனர்.

முனிவர்களே நீர் மிகுத்த மஞ்சள் நீர் ஆற்றங்கரையில் முனிவர்கள் வழிபட்ட சிவதலங்கள் மற்றும் எண்ணிறந்துள்ளனவென்று அறிவீர்களாக.

---

# ஆதிபிதேசப் படலம்

கலி விருத்தம்

பாரரை மாநிழற் பண்ணவன் மேவிவாழ்
பராச ரேசம் பகர்ந்தனம் மாதவன்
பராய பைம்பொழில் ஆதிபி தேச்சரம்
பராக மாவினைப் பற்றற ஓதுவாம். க

அன்ன ஊர்தி மகத்தை அழிப்பலென்
றுன்னி வாணி நதிஉருக் கொண்டநாள்
கன்னி பால்வளர் கண்ணுதல் ஏவலின்
முன்னர் ஏகி முகுந்தன் தடுத்தனன். உ

அங்கங் கெய்தித் தடுத்தும் அடங்கிடாப்
பொங்கு வேகப் புதுநதி நள்ளிராத்
துங்கக் காஞ்சியில் துண்ணெனத் தோன்றலுஞ்
சங்க பாணி தளர்ந்தழி வுற்றரோ. ௩

பெருவி ளக்கொளி யாகிப் பிறங்கிமற்
கருணை மால்கரி காத்தவன் சூழலின்
அருகு மேற்றிசை ஆதிபி தேசமென்
றொருசி வக்குறி உங்கண் இருத்தியே. ௪

---

க. சொற்பின் வருநிலை. பாரரை - பருத்த அடிமரம். பண்ணவன் - கடவுள். மேவி - விரும்பி. பராய - பரவிய, வணங்கிய. பராகம் - தாள். 'வினைப்பற்று பராகமா அற' எனக்கூட்டுக.

உ. அன்னஊர்தி - அன்னவாகனத்தை உடைய பிரமன். மகம் - வேள்வி. உன்னி - நினைத்து. முகுந்தன் - திருமால். பிரமன் வேள்வியை அழிக்கச் சரசுவதி நதி உருவங்கொண்டு வந்தமையும், அதனைச் சிவபெருமான் ஆணையால் திருமால் தடுத்தமையும் சிவாத்தான படலத்திற் காண்க.

௩. நள்ளிரா - நடு ராத்திரி. துண்ணென, அச்சக்குறிப்பு. சங்கபாணி - சங்கை ஏந்திய கையையுடையவர், திருமால்.

௪. பிறங்கி - விளங்கி. மல் - வளம்; மன் எனக்கொண்டு இடைச் சொல்லாக்கலுமாம். கருணை - கருணையால். மால் - பெரிய; மதமயக்கமுமாம். கரி - யானை. உங்கண் - அவ்விடத்தில்.

பூசை யாற்றிப் புரிவரம் பெற்றெழுந்
தோசை நீத்தந் தடுத்துயர் வேள்விகாத்
தாசை ஆடை யவன்எதிர் வைகினன்
வீசு சோதி விளக்கொளி அண்ணலே. ரு

செங்கண் மால்தொழும் ஆதீபி தேச்சரம்
பொங்கு காதலிற் போற்றப் பெறுநர்தாம்
இங்கண் வேண்டும் வரங்களும் எய்திமற்
றங்கண் முத்திப் பதமும் அடைவரால். சு

ஆகத் திருவிருத்தம் - எகூஎ.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'திருமால் முதலியோர்க்கு சிறப்புப் பெயர்களும், நினைத்தவற்றைச் செய்து முடித்தலும் இறைவன் திருவருளானே உண்டாகும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

## உரை நடை.

ஒற்றை மாவடியில் எழுந்தருளியுள்ள பெருமான் விரும்பி வாழ்கின்ற பராசரேசத்தின் பெருமையை இதுகாறும் சொன்னோம்; இனி திருமால் வழிபட்ட ஆதீபிதேசத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

பிரமதேவன் காஞ்சியம்பதியில் செய்த வேள்வியை அழிப்பதற்குச் சரசுவதி நதியுருவங்கொண்டுவர, சிவபெருமான் கட்டளைப்படி திருமால் சென்று அதனைத் தடுக்குங்கால் அந்நதி நடுராத்திரியில் காஞ்சியை அணுக, திருமால் அவ்விருளை நீக்கி நதியின் வருகையைக் காண்பதற்கு விளக்கொளியாய் நின்று, அந்திகிரிக்கு மேற்கில் 'ஆதீபிதேசம்' என்னும் பெயரால் ஒரு சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசித்து, தாம்விரும்பிய வரத்தைப்பெற்று, அந்நதியைத் தடுத்து வேள்வியைப் பாதுகாத்து, 'விளக்கொளிப் பெருமாள்' என்னும் பெயருடன் ஆதீபிதேசர் திருமுன்பில் தங்கினர். அவ்வாதீபிதேசப் பெருமானை வணங்கினவர்கள் வேண்டிய வரங்களைப்பெற்று முத்தியையும் அடைவார்கள்.

---

ரு. புரிவரம் - விரும்பிய வரம். நீத்தம் - வெள்ள நீர். ஆசை - திக்கு.

சு. விளக்கொளி எனப் பொருள்தரும் தீபிதம் என்னும் வடசொல், ஆ என்னும் உபசர்க்கம் சேர்ந்து ஆதீபிதம் என நின்றது.

# மூத்நீசப் படலம்

கலி விருத்தம்

கற்றைச் செஞ்சடைக் காமரு கொள்கையீர்
அற்றம் நீத்தருள் ஆதிபி தேச்சரஞ்
சொற்ற னம்புள் ளரசு தொழுதுசீர்க்
கொற்றம் உற்றமூத் தீச்சரங் கூறுவாம். க

**காசிபர் மனைவியர் கலகம் விளைத்தல்**

மன்னு காசிபன் றன்மனை யாட்டியர்
பன்னு கத்துருப் பாவை சுபருணை
என்னும் மாதர் இருவருந் தம்உரு
நன்ன லத்தை நயந்துகொண் டாடினர். உ

தத்தம் மேனித் தகைநலஞ் சாற்றுபு
மெய்த்த பூசல் விளைத்தனர் தோற்றவர்
உய்த்த வெஞ்சிறை மேவுகென் றொட்டினர்
அத்த வத்தனை அண்மி வினயினர். ங

பைத்த பாப்பகல் அல்குற் பணிமொழிக்*
கத்து ருப்பெயர்க் காரிகை வேறலாற்
சுத்த நீர்மைச் சுபருணைப் பேரிய
மைத்த கண்ணியை வெஞ்சிறை மாட்டினள். ச

வீடு செய்யென அங்கவள் வேண்டலுங்
கூடு மூன்றும் விசும்பிற் குளிர்மதிப்

---

க. காமரு - (யாவரும்) விரும்புகின்ற. கொள்கை - தவக் கொள்கை. அற்றம் நீத்தருள் - குற்றத்தைப் போக்கி அருளுகின்ற. புள்ளரசு - கருடன். கொற்றம் - வெற்றி.

ங. தகை - அழகு. பூசல் - போர். மேவுக என்பதில் அகரம் தொக்கது. ஒட்டினர் - சபதஞ் செய்தார்.

ச. பணிமொழி - மெல்லிய மொழி. காரிகை - பெண். வேறலால் - வெல்லுதலால். நீர்மை - குணம். பேரிய - பெயரையுடைய. மைத்த - மை தீட்டிய. *'பனி மொழி' எனவும் பாடம்.

ரு. வீடு - விடுதலை. 'மூன்றும் - மூன்றுவது உலகமாகிய' என்பர்.

பாடு தோன்றும் அமிழ்தம்அப் பண்ணவர்
நீடு காவலின் உள்ளது நேரிழாய். ௫

அதுகொ ணர்ந்திங் களித்துநின் வெஞ்சிறை
விதுமு கத்தி விடுவித்துக் கொள்ளெனக்
கதிர்செய் பூண்முலைக் கத்துரு கூறலும்
மதிஅ ழிந்து வருந்திச் சுபருணை. ௬

கருடன் பிறத்தல்

ஆசில் மெய்த்தவம் ஆற்றி அரும்பெறற்
காசி பன்அருள் பெற்றுக் கலுழனை
மாசி லாத மகவென ஈன்றனள்
பேசி னள்அம் மாற்கிது பெற்றியே. எ

கேட்டெ ழுந்து கிளர்ந்து விடைகொடு
கோட்ட மில்புட் குலத்தர சன்னைதன்
வாட்டம் நீப்ப வலிந்து கடுகிவிண்
நாட்டின் இன்னமிழ் துற்றுழி நண்ணினன். ௮

அங்கண் வைகிய காவல ராயினர்
தங்கள் வீரந் தபப்பொரு தேற்றெதிர்
வெங்கண் வெண்கய வேந்தனை ஒப்பினன்
பொங்கு வேகப் பொலஞ்சிறைக் காற்றினல். ௯

---

சந்திரனது கலைகளின் அமுதத்தைத் தேவர்கள் உண்கின்றார்கள் என்பது புராண வரலாறு. பண்ணவர் - தேவர்.

௬. விது - சந்திரன். கதிர்செய் - ஒளிவீசுகின்ற, பூண் - ஆபரணம். மதி - அறிவு.

எ. 'ஆசில் மெய்த்தவம் ஆற்றி' என்றது, காஞ்சியை யடைந்து முத்தீசரை வழிபட்டதை. இதனைப் பதினாறவது செய்யுளில் குறிப்பித்தல் காண்க.

௮. கிளர்ந்து - கிளர்ச்சியுற்று. கோட்டம் - மாறுபாடு. வாட்டம் நீப்ப - வருத்தத்தைப் போக்க.

௯. தப - அழிய. பொருது - போர்செய்து. எதிர் - எதிர்ந்த. கயம் - யானை. ஒப்பினன் - ஓட்டினன்.

அமிழ்தம் வெள்ளி அகல்வழி மால்எதிர்ந்
துமிழ்சி னத்தின் உருத்துவெம் போர்செயத்
தமிய னாய உவணனுந் தாக்கினான்
இமிழி சைப்போர் இருவர்க்கும் மூண்டதே. க௦

ஏழ டுக்கிய முந்நாள் இருவரும்
தாழ்வொன் றின்றிச் சமர்பெரி தாற்றுழி
ஆழி மாயன் அகமகிழ் கூர்ந்துயர்
பாழி வன்சிறைப் பார்ப்பினை நோக்கியே. கக

வன்புள் வேந்தநின் வீரம் மகிழ்ந்தனன்
என்பு டைவரங் கொள்ளென ஈங்கிவன்
உன்பெ ருந்திறற் குள்மகிழ்ந் தேன்மற்றென்
றன்பு டைவரங் கொள்ளெனச் சாற்றினான். கஉ

திருமால் வரம்பெறல்

மாயன் அம்மொழி கேட்டு மகிழ்ச்சியின்
தூயை ஓதிய சொல்தவ றாயெனின்
நீயெ னக்கு நெடுந்தகை ஊர்தியாய்
ஏயும் இவ்வரம் யான்கொள நல்கென்றான். க௩

ஆர்த்தி கூர்தர அம்மொழி கேட்டொரு
மூர்த்தம் எண்ணி உயிர்த்து மொழிந்தமெய்
வார்த்தை யிற்பிறழ் வஞ்சிஅற் றாகெனச்
சீர்த்தி யாளன் விடைபெற்றுச் சென்றனன். கச

கருடன் வரம்பெறல்

மறுவில் கத்துரு மாட்டுச் சுதைக்குடங்
குறியெ திர்ப்பை கொளக்கொடுத் தன்னையைச்

---

க௦. உமிழ் - பொங்கி வழிகின்ற. உருத்து - மனம் கொதித்து. தமியன் - தனியானவன். உவணன் - கருடன். இமிழிசை - ஒலிக்கின்ற ஓசை.

கக. ஏழ் அடுக்கிய முந்நாள் - இருபத்தொருநாள். பாழி - வலிமை. பார்ப்பு - பறவைக் குஞ்சு.

கச. ஆர்த்தி - துன்பம். கூர்தர - மிக. உயிர்த்து - பெருமூச்செறிந்து.

க௫. சுதை - அமுதம். குறியெதிர்ப்பை - கொடுத்த அளவிற்கு ஒப்ப

சிறையின் நீக்கினன் சிறா வங்கள்பால்
கறுவு செய்து கொலைசெயுங் காதலான். கரு

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சி வைப்பினை எய்தி ஆதிபிதக் கடிநகர் வடகீழ்பால், நச்சும்
அன்னைதன் சிறைக்குவீ டருளும் முத்தீசனை நயந்தேத்தி, இச்சை
யாற்றினிற் பெருவரம் பெற்றனன் எறுழ்வலிப் பணிக்கூட்டம்,
அச்ச முற்றிடச் சிறகெழு வளியினில் அலைத்தெழு புள்வேந்தன். கசு

சித்த மாசொரீஇ விளங்குமவ் வாலயத் திருக்குறிப் புத்தொண்டர்
அத்த லத்தினில் வீடுபே றெய்தினர் மற்றுமவ் விடைப் போற்றி
முத்தி சேர்ந்தவர் எண்ணிலார் மதிமுடி முழுமுதல் அடிப்போதின்
வைத்த சிந்தையின் முக்குறும் பெறிந்துயர் மாதவத் தலைவீர்காள்.

ஆகத் திருவிருத்தம் - அகச.

---

## படல உண்மை

இப்படலத்திற் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இம்மையில் வருந் துன்பத்தை நீக்கிக் கொள்ளுதலும், பகைவரை வெல்லும் வலிமையும் இறைவன் வழிபாட்டினுற் கிடைக்கும்' என்னும் உண்மையை விளக்கும். மற்றும், ஆராயாது ஒன்றை வாக்குறுதி செய்தல் கூடாதென்னும் நீதியும் தோன்றும். பிறவும் உளவேற்கொள்க.

---

எதிராகக் கொடுப்பது. கறுவு- வயிரம். காதலான் என்புழி ஆன் மூன்ற னுருபு; அது வருஞ் செய்யுளில், 'எய்தி' என்பதைக் கொண்டு முடியும்.

கசு. நச்சும் - விரும்புகின்ற. வீடு - விடுதலை. எறுழ்வலி - மிக்க வலிமை; மீமிசைச்சொல். பணி - பாம்பு. வளி - காற்று. இச்செய்யுளில், 'அன்னைதன் சிறைக்கு வீடருளும் முத்தீசன்' என்றமையால், சுபருணை காஞ்சியை யடைந்து முத்தீசரை வழிபட்டு, தனது மைந்தனுல் சிறையி னின்று நீங்கும் வரத்தைப் பெற்றனள் என்பது அறியக்கிடத்தல் காண்க. கருடனுல் பூசிக்கப்பட்ட இலிங்கம் 'கருடேசுரம்' என வேறொரு இலிங்கம் முத்தீசாருக்கு மேற்கில் அவ்வாலயத்திலேயே உள்ளது.

கஎ. ஒரீஇ - நீக்கி. முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்கள். திருக்குறிப்புத்தொண்ட நாயனர் வரலாற்றைப் பெரிய புராணத்தில் காண்க.

## உரை நடை

கற்றையாகப் பொருந்திய சிவந்த சடையினையுடைய முனிவர்களே, இதுவரையில் ஆதிபீதேசத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, கருடன் வழிபட்டு வெற்றியையடைந்த முத்தீசத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

காசிப முனிவருடைய மனைவியர்களாகிய கத்துரு, சுபருணை என்னும் இருவர்களும் தங்கள் அழகினைத் தாங்களே கொண்டாடிப் போர் விளைத்துத் தோற்றவர் சிறைப்படவேண்டும் என்று சபதம் செய்து, காசிபமுனிவரைத் தங்கள் அழகின் உயர்வைக் கூறும்படி கேட்டனர். அவர் கத்துருவின் அழகே சிறந்த தென்றமையால், சுபருணை தோல்வி அடைந்தனள். அதனால், கத்துரு சுபருணையைச் சிறையிலிட்டனள். சுபருணை வருந்தி, தனது சிறையை விடுதலை செய்யும்படி கத்துருவை வேண்ட, அவள் 'தேவலோகத்திலுள்ள அமுதத்தைக் கொண்டு வந்து கொடுத்து உனது சிறையை நீக்கிக்கொள்' என்றனள்.

சுபருணை காஞ்சியை அடைந்து ஆதீபீதேசத்திற்கு வடகிழக்கில் உள்ள முத்தீசரை வழிபட்டுத் தனது மைந்தனால் சிறை நீங்கும் வரத்தைப் பெற்று, காசிபமுனிவர் அருளால் கருடனைப்பெற்று வளர்த்து, அவனுக்கு இச்செய்தியைக் கூறினாள். கருடன் உடனே தேவலோகத்திற்குச் சென்று, அங்குள்ள காவலாளர்களை வென்று, இந்திரனைத் தனது சிறைக்காற்றினால் புறங்காட்டி ஓடச்செய்து, அமுதத்தைக் கவர்ந்துகொண்டு திரும்பி வருங்கால், திருமால் வந்து எதிர்த்தனர். இருவரும் இருபத்தொருநாள் கடும்போர் செய்யும்போது, திருமால் கருடனை நோக்கி, 'உனது வீரத்திற்கு மகிழ்ந்தோம்; உனக்கு வேண்டிய வரத்தை எம்மிடத்திற் பெற்றுக்கொள்க' என்றனர். கருடன் 'உனது வல்லமைக்கு யான் மகிழ்ந்தேன்; உனக்கு வேண்டியவரத்தை நீ என்னிடத்தில் பெற்றுக்கொள்க' என்றனன். திருமால் மகிழ்ந்து, 'நீ சொன்ன சொல் தவறாதவனாயின், எனக்கு நீ வாகனமாகும் வரத்தைக் கொடு' என்றனர். கருடன் வருந்தி ஒரு முகூர்த்தநேரம் ஆராய்ந்து, சொல்தவற அஞ்சி, 'அங்ஙனமே ஆகுக' என்றுசொல்லி விடைபெற்றுச்சென்று, அமுதக்குடத்தைக் கத்துருவின்பாற் சேர்த்துத் தாயைச் சிறையினின்றும் நீக்கினன். பின்னர், தன்னை வருத்திய கத்துருவின் புதல்வர்களாகிய பாம்புகளைக் கொல்லும் விருப்பத்தால், தனது தாய் பூசித்த முத்தீசரை வழிபட்டு, பாம்புகளை எல்லாம் கொல்லும் வரத்தைப் பெற்றனன். முனிவர்களே, அத்தலத்தில் ஏகாலியர் குலத்திற் பிறந்த திருக்குறிப்புத் தொண்ட நாயனாரும் முத்தியை அடைந்தனர். மற்றும் அம்முத்தீசரை வழிபட்டு முத்தியை அடைந்தவர் எண்ணில்லாதவர்கள் ஆவார்கள்.

# பணாதரேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கவைய டிக்கய வாய்க்கரு மேதிகள் உழக்கிய கடிவாவிச்
சுவைந றும்புனல் வாளைமீன் குதிக்கும்முத் தீச்சரத் தியல்சொற்றும்
குவைம லர்ச்செழும் பொதும்பரிற் பாட்டளி கொழிநறு மதுத்தும்பர்
அவைவி யந்தகப் பண்பயில் பணாதரேச் சரம்இனி அறைகிற்பாம்.

பழுக்கச் சுட்டபொற் பிழம்பெடுத் தப்பிய பரிசுறழ் திருமேனிக்
கழுக்க டைப்படை ஏந்துமுத் தீசன்ஒண் கழலடி தொழும்பேற்றால்
இழுக்கித் தங்களை முருக்குறுங் கலுழன தெறும்வலித் திறம்நோக்கி
வழுக்கில் வெம்பணிக் குலங்களெம் பிரானடி வழிபட நினைவுற்று. உ

தழங்கு தீங்கிணை முழக்கறுத் தடநெடுங் கச்சிமா நகர்சார்ந்து,
முழங்கு வெண்டிரை சுழித்துவான் நிமிர்ந்துநான் முகன்மகந் தபச்
சீறி, வழங்கு நன்னதி வடக்கண்ஆ நீடுதவளநகர்த் தென்பாங்கர்ப்,
பழங்கண் நோயறப் பணாதரேச் சரன்றனைப் பத்தியில் தாபித்து. ங

விதிமு றைச்சிவ பூசனை யாற்றிமால் விடைக்கொடிப் பெருமா
னின், புதிய பூங்கழல் அருச்சனைப் பேற்றினாற் புள்ளிறை மிடல்
எய்தி, அதிர்வுறுத் தெமை அலைத்திட வெரீஇயினம் அடைக்கலம்
புகுந்தேம்யாங், கதிஎ மக்குவே றில்லைஎன் றிரத்தலுங் கண்ணுதல்
அருள்கூர்ந்து. ச

---

க. கவை - பிளவுபட்ட. கயவாய் - பெரியவாய். உம்பர் அவை - (அங்கு வந்துள்ள) தேவர் கூட்டம்.

உ. பரிசு உறழ் - தன்மையை ஒத்த. கழுக்கடை - சூலம். இழுக்கி - தாழ்வு படுத்தி; இழுக்குவித்து என்பதில் பிறவினை விகுதிதொக்கு நின்றது, "குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்" (குறள். கஎக.) என்புழிப் போல. முருக்குறும் - அழிக்கின்ற. வழுக்கு - தவறு.

ங. தழங்கு - ஒலிக்கின்ற. தீங்கிணை - இனிய ஓசையையுடைய மருத நிலப்பறை. தப - அழிக்க. வழங்கு - பெருகிய. நதி, வேகவதி. பழங்கண் - துன்பம்.

ச. மிடல் - வலிமை. வெரீஇயினம் - அஞ்சினேம்.

பன்ன கங்களைப் பணியெனத் தாங்கினன் பன்னகா பரணன்றன்
இன்ன ருட்பெறும் மதுகையான் மற்றவை எந்தைபால் அரியோடும்
துன்னு வெம்பகைக் கலுழனைக் 'கலுழனேசுகங்கோல்'என் றஞ்சாமே
பன்னி மேன்மையின் விஞ்சின இம்மொழி பாரெலாம் எடுத்தோதும்.

சிறிய ராயினர் சார்பினை விழைபவின் திறல்கெழு பெரியோராம்
அறிஞ ராயினர் சார்பினை விழைமினோ அலரிதழ் விரிகொன்றை
வெறிந றுந்தொடை எம்பிரான் சார்பினை விழைதலால் உரகங்கள்
மறுவில் ஆற்றல்சால் கலுழனை விஞ்சின வாழ்ந்தனை யோவென்ன. கூ

பவளச் செந்தளிர் நீட்டிய பைம்பொழிற் பணாதரேச் சரவைப் பிற், குவளைக் கண்ணியோ டுயிர்க்கெலாம் இன்னருள் கொழித்து வீற்றிருந்தோங்கும், கவளக் கைவரை உரித்தவன் இக்கதை கற்றவர் கேட்டோர்க்கும், தவளப் பூதிகொள் மேனியிர் வெம்பணித் தழல்விடம் அணுகாதால். எ

ஆகத் திருவிருத்தம் - அஉக.

---

## படல உண்மை.

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறும், (க) மேலைப்படல உண்மையிற் கூறப்பட்ட உண்மையையே விளக்கும். மற்றும் இதனுள், 'சிறியோரை விட்டுப் பெரியோரை அடுத்தல் வேண்டும்' என்னும் பொருளும் கூறப்பட்டது. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை.

நீர் நிறைந்த தடாகத்தையுடைய முத்தீசத்தின் இயல்பினை இதுகாறும் சொன்னோம்; இனி, வண்டுகள் தேன் உண்டு இசைபாடும் சோலைசூழ்ந்த பணாதரேசத்தின் பெருமையைச் சொல்வோம்.

---

ரு மதுகை - வலிமை. மொழி என்றது, 'ஏன்கருடா சுகமோ' என்னும் பழமொழியை.

சூ. திறல் கெழு - வலிமை பொருந்திய. வெறி - வாசனை. நறு - நல்ல. உரகங்கள் - பாம்புகள். மறு - குற்றம். ஆற்றல் சால் - வன்மை நிரம்பிய.

எ. பவளச் செந்தளிர் - பவளம் போலும் சிவந்த தளிர். கவளம் - யானையுணவு. கைவரை - யானை. தவளப் பூதி - வெண்மையான விபூதி. பணி - பாம்பு.

கருடன் இறைவனை வழிபட்டுப் பெற்ற வரத்தினல் தமது குலத்தை யழித்தலைக் கண்ட பாம்புகள், தாமும் காஞ்சியையடைந்து, வேகவதி நதியின் வடகரையில் அதீபிதேசந்திற்குத் தெற்கில், பணாதரேசப்பெருமானைத் தாபித்துப் பூசித்துத் தமது துன்பத்தைக் கூறி முறையிட, சிவபிரான் கருணை கூர்ந்து, அப்பாம்புகளை ஆபரணமாக அணிந்து கொண்டனர். அங்ஙனம் அணியப்பட்ட அப்பாம்புகள், திருமாலோடும் இறைவன் திருமுன்பு வந்த கருடனை, 'ஏன் கருடா சுகமோ' என்று கேட்டன. இதனை உலகிலுள்ளவர்களெல்லாம் பழமொழியாக எடுத்துச் சொல்வார்கள். இதனல், சிறியோரைச் சாராது பெரியோரைச் சார்தல் வேண்டுமென்பது அறியப்படும். இக்கதையைக் கற்றவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் பாம்பின் விடம் அணுகாது.

---

## காயாரோகணப் படலம்*

எழுசீரடி யாசிரிய விருத்தம்

வயிறுளைந் தலறிச் சங்கினம் உயிர்த்த மணிநிலா எறித்திருள்
சீத்துப், பயில்விரை முளரி இலஞ்சிசூழ் கிடந்த பணாதரேச் சரம்
இது பகர்ந்தாம், துயில்வர வறியாப் பல்லியந் துவைக்குந் தூமணித்
தெற்றிசூழ் காஞ்சிக், குயிரெனச் சிறந்த உத்தமத் திருக்கா
ரோணத்தின் உண்மையை உரைப்பாம். க

பிரமனுதியோர் கால அளவு

படுங்கலை முகுர்த்தங் காட்டைகள் என்றுப் பகல்இராப் பக்கமே
திங்க, ளொடும்புணர் இருது ஆண்டுகத் தொடக்கத்தோதிய அவ

* 'காரோணப் படலம்' எனவும் காணப்படுகிறது.

க. உளைந்து - வருந்தி. உயிர்த்த - ஈன்ற. முளரி - தாமரை. இலஞ்சி - தடாகம். பல்லியம் - பல வாச்சியம். துவைக்கும் - ஒலிக்கின்ற. தெற்றி - திண்ணை. காரோணம், காயாரோகணம் என்பதன் மரூஉ. காஞ்சியிலுள்ள தலங்களிற் சிறந்த தலங்களிலும் சிறந்தன திருவேகம்பம், கச்சபேசம், காயாரோகணம் என்னும் மூன்றுமேயாகலான், 'காஞ்சிக்கு உயிரெனச் சிறந்த' என்றார். இவை மூன்றும் சிறந்தன என்பதை, ஆசிரியர் கச்சியப்ப முனிவர் கூறுதல் காண்க. இங்ஙனம் எல்லாராலும் நன்கறியப்பட்ட தலமாகலின் திசையும் கூருதொழிந்தார்.

உ. படும் - கூறுபடுகின்ற. கலை - ஒருகால நுட்பம். காட்டை - பதினெட்டு இமைப்பொழுது கொண்ட காலம் என்ப. முகுர்த்தம் - முகூர்த்

யவப் பகுப்பான், இடும்பைதீர் காலங் கழிவுறுங் காலத் தெல்லையில் யாவரும் இறுவர், நெடும்புலக் குறும்பு கடந்துளீர் உலகின் நிலைப்ப தோர் பொருளும்மற் றின்றால். உ

ஈண்டும்ஓர் இருபான் ஆயிரந் தலைஇட் டியன்றநாற் பத்துமூன் றிலக்க, யாண்டெனப் படுவ நான்குகத் தளவை இம்முறை ஆயிரம் இறந்தாற், காண்டகும் அயனுக் கொருபகல் அதுவே கற்பமாம் இர வும்அத் துணைத்தவ், வாண்டகைக் கந்நாள் முப்பதோர் திங்கள் அஃ தொரு பன்னிரண் டாண்டே. ங

பகர்ந்தனுண் டொருநா ளிருவகைப் பராத்தம் பற்றறில் வெள்ளிவண் டோடு, தகர்ந்திட உடைத்து முடங்குகால் ஞிமிறு தழங்கிசைப் பேட்டொடு நறுந்தேன், நுகர்ந்துபண் பயிற்றும்

---

தம்; இதனையும் பலவாறாகக் கூறுவர்; மூன்றே முக்கால் நாழிகை கொண்ட தென்பதே பெருவழக்கு. பக்கம் (பட்சம்) - பதினைந்து நாள் கூடியது. திங்கள் - மாதம். இருது - இரண்டு மாதங் கொண்டது. ஆண்டு - வருடம்.

கலை, முகூர்த்தம், காட்டை முதலியன காலத்தின் இயற்கைப் பகுப் பெனவும், பகல் இரவு முதலியன ஞாயிற்றின் செலவு முதலியவற்றாலாகிய செயற்கைப் பகுப்பெனவும் கூறுவார், இடையே 'என்றா' என்னும் எண் ணிடைச்சொற் கொடுத்துப் பிரித்தார். காலத்தின் பகுப்பை இங்ஙனம் விதந் தோதியது; காலம், ஒன்றாய் வியாபகமாய் நித்தமாய் உள்ளது என்னும் நையாயிகர் முதலியோரை மறுத்து, 'அவயவப் பகுப்புடையதாய் எல்லா வற்றையும் தொழிற்படுத்தித் தானும் அழியும்' என்று நிறுவுதற்கென்க. இறப்பு நிகழ்வு முதலியவற்றால் காலம் பலவுமாகும். அவயவப் பகுப்புடை மையே அழியும் என்பதற்குப் போதிய ஏதுவாகலின், பலவாதலைக் கூறா தொழிந்தார். காலம் என்பதொன்று உளதென்பதையும், அது பலவாய் அவயவப் பகுப்புடையதாய் அழிவதாகும் என்பதையும், ஆசிரியர் திராவிட மாபாடியத்துள், (சூ. உ. அதி. உ.) தடைவிடைகளான் விரித்து விளக்கினமை காண்க. இதனால் யாவரும் கால வயத்தராய்த் தோன்றி யழிவரென்பது கூறப்பட்டது.

ங. ஈண்டும் - கூடிய. தலை இட்டு இயன்ற - முடிவில் கூட்ட நடந்த; எனவே, நாற்பத்து மூன்றிலக்கத்து இருபதினாயிரம் வருடம் என்பதாம்.

ச. பராத்தம் - பிரமன் வாழ்நாளிற் பாதி. இப்போதுள்ள பிரமனுக்கு இரண்டாம் பரார்த்தத்தில் முதல் வருடத்தில் முதல் நாள் நடக்கின்றது

பொகுட்டலர் கமல நோன்மலர் அணங்கினுக் கரங்கம், நிகர்ந்தநா வகத்துப் பழமறை கொழிக்கும் நெடுந்தகைக் கிறைவந் துறுமால்.

அங்கது முகுந்தன் றனக்கொரு பகலாம் அம்முறை யாண்டு நூ றெய்தின், செங்கதிர்ப் பரிதி மழுங்கவிட் டெறிக்குஞ் சேயொளி விலைவரம் பிகந்த, பைங்கதிர்க் கடவுட் கவுத்துவம் இமைப்பப் பசுந் துழாய் துயல்வரு மார்பில், கொங்கலர் கதுப்பின் திருவிளை யாடுங் குரிசிலும் எய்துவன் ஒடுக்கம். ரு

காயாரோகணப் பெயர்க் காரணம்

இருவரும் ஒருங்கே இறவருங் காலை எந்தையே ஒடுக்கி ஆங் கவர்தம், உருவம்மீ தேற்றிக் கோடலாற் காயா ரோகணப் பெயர் அதற் குறுமால், வருமுறை இவ்வா றெண்ணிலா விரிஞ்சர் மாயவர் காயம்மேல் தாங்கிக், கருணையால் அங்கண் நடம்புரிந் தருளும் காலமாய்க் காலமுங் கடந்தோன். சு

திருமகள் வழிபாடு

ஆதலாற் சிறந்த திருநகர் அதனை அடைந்துளோர் இருமையும் எய்தி, மேதகு துரியங் கடந்தபே ரின்ப வீட்டினைத் தலைப்பட வல்லர், சீதள கமலப் பொகுட்டணைக் கிழத்தி செஞ்சடைப் பிரானை வில் லத்தால், கோதற வழிபட் டச்சுதன் தனக்குக் கொழுநனைப் பெற்றனள் அங்கண். எ

---

என்ப. நோன் - பொறுக்கின்ற. வெள்ளி - வெள்ளை நிறத்தையுடையது. அணங்கு - சரசுவதி. கமல மலர்நோன் அணங்கு என மாற்றுக. கொழிக்கும் - ஆராய்கின்ற.

ரு. செங்கதிர் என்பது முதல் கடவுள் என்பது வரையும் கவுத்துவத் திற்கு அடைமொழி. கடவுள் - தெய்வத்தன்மை. கவுத்துவம் - திருப்பாற் கடலில் தோன்றிய ஓர் சிறந்த மணி. இமைப்ப - விட்டு விளங்கும்படி. இமைப்பத்துயல்வரும் என இயையும். துயல்வரும் - அசைகின்ற. மார்பில் விளையாடும் என்க. கதுப்பு - கூந்தல். திரு - இலக்குமி.

சு. இருவரும் ஒருங்கே இறவருங்காலை என்றது, திருமால் இறக்குங் காலத்திலும் ஒரு பிரமன் இறப்பனாகலின், அவ்விருவரும் ஒருங்கு இறக்குங் காலத்தை என்க. காயம் - உடல். ஆரோகணம் - ஏறுதல் காய+ஆரோ கணம்=காயாரோகணம். விரிஞ்சர் - பிரமர்.

எ. இருமை - இம்மை மறுமைப் பயன்கள். வில்லம் - வில்வம்.

வியாழன் வழிபாடு

பிறங்கொளி விசும்பிற் குரவனும் வியாழப் பெருந் தகை ஆயிடை எய்திக், கறங்கிசை விளரிப் பாட்டளி இமிர்ந்து களிமது உண்டு தேக் கெறிந்தங், குறங்குபொன் இதழி நறுந்தொடை வேணி ஒருவனை அருச்சனை யாற்றி, அறங்கரை சிறப்பிற் சேந்தநாத் தழும்ப ஆரண மொழிகளால் துதிப்பான். அ

பிராமணன் நீயே கடவுளர் தம்முள் பின்னுகா வனையோர் தம்முள், பிராமணன் யானே பிராமணன் றனக்குப் பிராமணன் கதிஉனை இகழ்வோன், பிராமணன் அல்லன் தன்குல தெய்வம் விண்டுபின் னென்றனைத் தொழும்அப், பிராமணற் கிரண்டும் பயப்படா நிரையம் புகுவன்என் றுயர்மறை பேசும். கூ

அடியனேன் உன்தாள் அடைக்கலம் நீயே அன்னையும் அத்தனும் குருவும், துடிஇடைப் பதுமை கேள்வனும் அயனுந் தொடர்வருஞ் சோதியே செல்வக், கொடிமிசை இடபம் உயர்த்தருள் கருணைக் குன்றமே அருட்பெருங் கடலே, படிபுகழ் மறைநூல் வடித்த தெள் ளமிழ்தே பகவனே இணையடி போற்றி. கo

வியாழன் வரம்பெறல்

என்றெடுத் தேத்தும் ஆண்டளப் பானுக் செம்பிரான் எதிர் எழுந் தருளி, நன்றுநீ வேட்ட கூறுகென் றருள வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சினன் நவில்வான், குன்றவில் குழைத்துப் புரிசைமூன் றிறுப்பக் குறுநகை முகிழ்த்தருள் குழகா, நின்திரு வடிக்கீழ் இடையறுப் பத்தி நெறிஎனக் கருள்செய வேண்டும். கக

---

அ. விளரி - ஓர்பண். தேக்கெறிந்து - நிறைந்து வழிந்து. அறம் - அறநூல். கரை - சொல்லுகின்ற.

கூ. சிவபெருமான் தேவர்களில் பிராமணரென்பது, "த்வம் தேவேஷு ப்ராஹ்மணோ அஸி அஹம்மநுஷ்யேஷு ப்ராஹ்மணோவை ப்ராஹ்மணமு பதாவத்யுபத்வா தாவ்மி" எனச் சாமவேதத்திற் கூறப்பட்டது. அப்பிராமணன் - பிராமண குலத்திற் பிறந்து பிராமணிகத்தை இழந்தவன். இச்செய்யுள், சிவ வழிபாட்டை விரும்பாத பிராமணர்களைக் குறித்துக் கூறியவாறு.

கக. ஆண்டளப்பான் - வியாழன். புரிசை - மதில்.

வளங்கெழு வேக வதிநதித் தென்பால் வயங்கும்இத் தீர்த்த நீர் படிந்து, விளங்கும்என் வாரத் துன்னடிச் சேவை விழைதகப் பெற்றுளோர் தத்தம், உளங்கொளும் உறுதிப் பயன்அளித் தருளி முத்தியும் உதவிஈண் டென்றும், இளங்கதிர் முலையோ டினிதமர்ந் தருளாய் இவ்வரம் வேண்டும்என் றிரந்தான். கஉ

இயமன் வழிபாடு

அங்கவை வழங்கிக் கடவுளர்க் காசான் ஆம்பெருந் தகைமையும் நல்கிச், சங்கவெண் குழையான் இலிங்கத்தின் மறைந்தான் தருமன் அங் கெய்தினத் தெடுப்பப், புங்கவன் தோன்றித் தென்திசைக் கிறையாம் புரவளித் தெமைவணங் குநர்க்கு, மங்கருந் தண்டம் இயற் றில்அன் றுனக்கு மாளும்இப் பதமென விடுத்தான். கங

தென்புலத் தவர்க்குச் செய்கடன் ஆங்குச் செலுத்திடின் வீடு பெற் றுய்வார், மின்பழுத் தன்ன நெறித்தவார் சடிலம் வீழ்மென வெரிந்புறங் கிடப்பப், பொன்பழுத் தனைய ஐந்தழல் நாப்பண் புரிதவக் கொள்கையீர் அனேகர், அன்புசெய் தங்கண் பேறுபெற் றுயர்ந் தார் அத்தல மேன்மையார் மொழிவார். கச

ஆகத் திருவிருத்தம் - அ௬௫.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'திருமால், பிரமன் முதலியோர்களும் காலத்திற்கு உட்பட்டவர்களே' என்பதும் (உ) இம்மை இன்பம், ஆசிரியத்தன்மை, அதிகாரம் முதலிய யாவும் இறைவழி பாட்டினாலேயே கிடைப்பன' என்பதும், (௩) 'இறைவன் அடியவர்க்கு, யமபயம் முதலியன இல்லை' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுன், 'சிவவழிபாட்டினை விரும்பாத பிராமணன் பிராமணன் அல்லன்' என்னும் பொருளுங்கூறப்பட்டது. பிறவும் உளவேற்கொள்க.

---

கங. கடவுளர்க்கு ஆசான் - தேவகுரு. தருமன் - யமன். புரவு - காவல்.

கச. வீழ் - விழுது. வெரிந்புறம் - முதுகு; ஒரு சொல் நீர்மைத்து. ஐந்தழல்; நாற்றிசையில் வளர்த்த தழலும், சூரியன் வெப்பத்தழலுமாம். நாப்பண் - நடு.

## உரை நடை

நீர்வளம் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த பணாதரேசத்தின் பெருமையை இதுவரையிற் சொன்னோம்; இனி, காஞ்சியம்பதிக்கு உயிர்போலச் சிறந்த காயாரோகணத்தின் உண்மையைச் சொல்வோம்.

கலை, முகூர்த்தம், மாதம், வருடம் முதலியனவாக வேறுபடும் காலங்கள் சென்றால் யாவரும் அழிவர். மனித வருடம் நாற்பத்து மூன்று லட்சத்து இருபதினாயிரம் வருடம் கொண்டது ஒரு சதுர்யுகம். இப்படிப்பட்ட சதுர்யுகம் ஆயிரம் கொண்டது பிரமதேவருக்கு ஒரு பகல். அந்த முறையால் நூறுவருடம் கழிந்தால் ஒரு பிரமதேவர் இறப்பார். ஒரு பிரமாவின் காலம் திருமாலுக்கு ஒரு பகலாகும். அந்த முறையால் நூறு வருடம் கழிந்தால் ஒரு திருமால் இறப்பார். இங்ஙனம் திருமால் இறக்கும் இறுதி நாளிலும் ஒரு பிரமா இறப்பாராதலால், அங்ஙனம் இருவரும் இறக்கவரும் அக்காலத்தில், காலத்தைக் கடந்தவனாகிய இறைவனே அவர்களை ஒடுக்கி, அவர்கள் சரீரத்தைத் தனது தோள்மேல் தாங்கி அந்த நடனம் செய்தருளுவன். ஆதலால், அத்தலம் 'காயாரோகணம்' என்னும் பெயரைப் பெற்றது. அத்தலத்தை அடைந்தவர்கள் இம்மை, மறுமை, வீடென்னும் மூன்றனையும் அடைவார்கள்.

அத்தலத்தில் இலக்குமி இறைவனை வில்வத்தால் வழிபட்டுத் திருமாலைத் தனக்குக் கணவனாகப் பெற்றாள். வியாழ பகவான் அவ்விடத்தில் இறைவனை வழிபட்டு, 'எம்பெருமானே! தேவரீரே தேவர்களுள் பிராமணராவீர்! ஏனையோர்களுள் பிராமணன் அடியேன்; பிராமணனுக்குப் பிராமணனே கதி. தேவரீரை இகழ்வோன் பிராமணன் அல்லன். தனது குல தெய்வமாகிய தேவரீரை விட்டு, வேறு தெய்வங்களை வணங்குகின்ற அப்பிராமணனுக்கு இகபரம் இரண்டும் பயன்படா. அதுவன்றி நரகத்திலும் புகுவன். இவ்வாறு உயர்ந்த வேதம் கூறும். அடியேன் தேவரீரது அடைக்கலம்' என்று பலவாறு துதித்தனர். சிவபெருமான் அவருக்கு முன்னே தோன்றி, 'நீ விரும்பியவற்றைக் கூறுக' என்றனர். வியாழபகவான் வணங்கி, 'தேவரீரது திருவடியில் என்றும் நீங்காத அன்பும், வேகவதி நதிக்குத் தென்கிலுள்ள இக்காயாரோகண தீர்த்தத்தில் எனது வாரத்தில் முழுகி, தேவரீரை வணங்கினவர்களுக்கு, அவர்கள் விரும்பிய பயன்களைத் தந்து, முத்தியையும் அளித்து, அம்மையாரோடு இங்கு எந்நாளும் தேவரீர் எழுந்தருளி இருத்தலும் வேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்துத் தேவர்களுக்குக் குருவாகும் தன்மையையும் அளித்து இலிங்கத்தில் மறைந்தருளினர்.

இயமன் அவ்விடத்தை அடைந்து பூசிக்க, இறைவன் தோன்றி, தென் திசைக்குத் தலைவனாகச் செய்து நம்மை வணங்குவோரைத் தண்டிப்பாயானால் அன்று இப்பதவி உனக்கு நீங்கும் என்று சொல்லி விடுத்தனர்.

அவ்விடத்தில் பிதிரர்களுக்குச் செய்கின்ற கடனைச் செய்தால் அவர்கள் வீடு பெறுவார்கள். மின்னல்போலும் நீண்ட சடையினையுடைய முனிவர்களே, அத்தலத்தில் மற்றும் அநேகர் வழிபட்டுப் பேறுபெற்றனர். ஆதலால் அதன் பெருமையை யாவர் சொல்ல வல்லவர்கள்!

---

# சித்திரப் படலம்

கொச்சகக் கலிப்பா

மருக்காவி வண்டுத மதுஊற்றும் வாவித்
திருக்காயா ரோகணத்தின் சீர்மைஇது சொற்றும்
கருக்காயும் மற்றதற்கு வடகிழ்சார் கண்டோர்
தருக்காத சித்திசந் தன்னியல்பு சொல்வாம்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கம்பை மாநதி யின்க ரைப்பெருங் காதல் கூர்தவம் ஆற்று மால்வரைக், கொம்பு மஞ்சளின் காப்ப ணிந்துமெய் குளிர ஆடுநீர் மணங்க மழ்ந்தெழூஉப், பம்பு மஞ்சள்நீர் நதிஎ னப்புடை பரந்து சேறதும் பாய்பு னற்சடை, எம்பி ரான்அருள் பொங்கும் ஓகையின் இலிங்க மாய்அவண் எழுந்து தோன்றினன். ௨

கூடு கொள்கைபால் குலவு மஞ்சள்நீர்க் கூத்த னென்றுபேர் கொண்ட நாயகன், ஆடு தாளிணை சித்தர் பற்பலர் அணைந்து போற்றி வான் சித்தி எய்தலாற், பாடு சான்றசித் திச னும்பெயர் பாவி ளங்கும்அவ் வண்ணல் சந்நிதி, மாடு கூவல்ஒன் றுன்னி னோர்க்கெலாம் வழங்கு சித்திசால் சித்த தீர்த்தமே. ௩

---

௧. மரு - வாசனை. காவி - குவளை மலர். காவி மது ஊற்றும் எனக. கரு - பிறப்பு. காயும் - போக்குகின்ற. தருக்காத - (ஆணவ மலத்தால்) செருக்கடையாத.

௨. வரைக்கொம்பு - பார்வதி தேவியார். பம்பு - நிறைந்த. ஓகை - மகிழ்ச்சி.

௩. பாடு சான்ற - பெருமை நிரம்பிய. மாடு - பக்கம். கூவல் - கிணறு

ஒற்றை ஆழியங் கொடிஞ்சி வையமீ தொளிப ரப்பிவிங் கிருள்து மித்தெழுங், கற்றை வெங்கதிர்க் கடவுள் நாளினும், கருமு டத் திறல் காரி நாளினும், எற்று தெண்டிரைச் சித்த தீர்த்தநீர் எய்தி ஆடிஅவ் வேந்தல் தாள்தொழும், கொற்ற வாழ்வினர்க் கெழுபி றப்பு நோய் கோடி யோசனைக் கப்பு றத்ததே. ௪

ஆகத் திருவிருத்தம் - அ௩௬.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (௧) 'இறைவன் தனது அருட்சத்தியாகிய இறைவியினிடத்து நீங்காத அன்புடையன்' என்பதும், (௧) 'யோகத்தால் வருந்திப் பெறும் சித்திகள் பலவும் இறைவன் வழிபாட்டினுற் கிடைக்கும்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உள வேற் கொள்க.

---

## உரை நடை

தடாகங்கள் சூழ்ந்த திருக்காயாரோகணத்தின் பெருமையை இதுகாறும் சொன்னோம்; இனி, அதற்கு வடகிழக்கிலுள்ள சித்தீசத்தின் பெருமையைச் சொல்வோம்.

இறைவி கம்பையாற்றங் கரையில் தவம்புரியுங்கால்; மஞ்சள் காப்பணிந்து முழுகிய நீர், மஞ்சள் நீர் நதியாகப் பெருகிச் செல்லுங்கால், இறைவனுர் மகிழ்ந்து அந்நதிக்கரையில் இலிங்கமாகத் தோன்றியருளினுர். அதனுல், அவருக்கு, 'மஞ்சள் நீர்க் கூத்தர்' என்னும் திருப்பெயர் உண்டாயிற்று. அப்பெருமானைப் பற்பல சித்தர்கள் பூசித்து, எண்ணிறந்த சித்திகளை அடைந்தார்கள். அதனுல், சித்தீசர் என்னும் திருநாமம் உண்டாயிற்று,

சித்தீசர் திருமுன்பில் 'சித்த தீர்த்தம்' என்னும் கிணறு ஒன்று உளது. அதில் ஞாயிறு, சனிக்கிழமைகளில் முழுகி, சித்தீசப் பெருமானை வணங்கினோர் பிறவி நீங்கப் பெறுவார்கள்.

---

௪. ஆழி - சக்கரம். கொடிஞ்சி - தாமரைப்பூ வடிவமாகச் செய்து தேர்த்தட்டின்முன் நடுவது. வையம் - தேர். துமித்து - அழித்து. காரி - சனி. கொற்றம் - வெற்றி.

# அரிசாப பயந்தீர்த்த தானப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

புரிமு றுக்குடைந் தவிழ ஆறடிப் புள்மு ரன்றுவாய் மடுக்கும்
இன்னறை, விரிம லர்த்தடம் புடைஉ டுத்தசித் திச மேன்மையின்
விளைவி யம்பினும், உரிய மற்றதன் உத்த ரத்துறும் உவண ஊர்தி
ஆச் சிரம வைப்பினில், திரிவி லாஅரி சாப வெம்பயந் தீர்த்த வான
வன் சீர்த்தி கூறுவாம், ௧

திருமால் கியாதியைக் கோறல்

செப்பு முன்னைநாள் அதிதி மைந்தருந் திதியின் மக்களும்
இடைய றாதபே, ரப்பு மாரிபெய் தெண்ணில் ஆண்டுகள் அழுக்க
றுத்துவெஞ் சமர்இ யற்றுழி, மைப்பு றுத்தகண் அரம்பை மார்முலை
உழுத மார்பினர் வலிஇ ழத்தலும், துப்பெ றிந்தபூங் கமல வாள்
விழித் தோன்றல் எய்திவெம் படைவி திர்த்தனன். ௨

எஞ்சு தானவர் அஞ்சி ஓட்டெடுத் திருமை யோகுசெய் பிருகு
மாமுனி, தஞ்ச மாமனைக் கிழத்தி பூமகள் தாயெ னப்படுங் கியாதி
தன்புடை, வஞ்சம் இன்றிவந் தடைக்க லம்புக வருந்து றேன்மி
னென் றபய நல்கிஅப், பஞ்சின் மெல்லடிப் பாவை ஆச்சிர மத்தின்
உள்ளுறப் பாது காத்தனள். ௩

சீற்றம் மிக்கெழச் சேந்த கண்ணினன் திகிரி ஓச்சிஅங் கெய்து
மாதவன், போற்றி வாய்தலின் வைகு மாமியைப் பொருக்கெ

---

க. புரிமுறுக்கு - (அரும்பின்) புரியாகிய கட்டு. ஆறடிப்புள் - வண்டு. முரன்று - ஒலித்து. உத்தரம் - வடக்கு. உவண ஊர்தி - கருட வாகன முடையவர், திருமால். திரிவு - மாறுபாடு.

உ. அதிதி மைந்தர் - தேவர்; திதியின் மக்கள் - அசுரர்; அதிதி திதி இருவரும் காசிபரின் மனைவியர். அம்பு + மாரி = அப்பு மாரி. மாரி - மழை. அழுக்கறுத்து - பொறாமையுற்று. மைப்புறுத்த - மைதீட்டுதல் வாய்த்த. துப்பு எறிந்த - செவ்வொளி வீசாநின்ற. விதிர்த்தனன் - சுழற்றினன்.

௩. எஞ்சு - தோல்வியுற்ற. இருமை - பெருமை. தஞ்சம் - பற்றுக்கோடு. பூமகள் - இலக்குமி.

௪. திகிரி - சக்கரம். ஓச்சி - எறிந்து. மாதவன் - திருமால். போற்றி - பாதுகாத்து. பொருக்கென, விரைவுக்குறிப்பு. ஏறு - ஏறப்பெற்ற. அரிவை

னச்சிரந் துணித்து வீழ்த்தலும், எற்றெழுந்தகூ கூறு வித்திரள் இருசெ வித்துளை எறு மாமுனி, மாற்ற ருந்திறல் யோகு நீங்கிமுன் மனைவி பட்டதும் மற்றும் நோக்கினான். ௪

திருமால் சாபம் பெறல்

கண்டு மாழ்கினன் துயரின் மூழ்கினன் கண்கள் சேந்தனன் இதழ்து டித்தனன், மண்டு வெங்கனற் பொறிதெறிப்பஅம் மாதவன்றனை வெகுண்டு நோக்கினான், ஒண்ட ளிர்க்கரத் தரிவை தன்னைமற் றுனக்கு டாமியைத் தறுக ணாளனாய், மிண்டி னாற்கொலை செய்து வீட்டினாய் வெய்ய பாவிநீ உய்வு மாறெவன். ௫

எடுத்தி யம்பிய சைவ மேஎவற் றுள்ளும் உத்தம மென்னில் யாங்களும், கடுத்த தும்பிய கண்ட னாடிக் கமல மன்றிவே றறிகி லேமெனில், கொடுத்து ரைக்கும்இச் சத்தி யத்தினால் துயரு ழந்துநீ நரக வல்வினை, மடுத்த வெம்பிறப் பொருப தெய்துக வழுவு பாதகக் குழிசி யாயினாய். ௬

நின்ற னக்கடித் தொண்டு பூண்டவர் நெறிய லாப்புறத் தாற்று நூல்வழித், துன்று தீக்கையுற் றென்றும் முப்புரஞ் சுட்ட எம்பிரான் திருவ டிப்பிழைத், தொன்று மூன்றுதண் டேந்தி ஈனராய் உலப்பி லாதவெந் நிரைய மேவுக, மன்ற அங்கவர்க் கண்டு ளோர்களும் மறலி ஊரினைக் குறுகி மாய்கவே. ௭

---

மாமி, என்பன ஒரு பொருள்மேல்வந்த பல பெயர்களாய்த் தனித் தனி உரு பெற்று நின்றன.

௫. மிண்டு - வலிமை. வீட்டினாய் - அழித்தாய்.

௬. கடு ததும்பிய - விடம் மிகுந்த. குழிசி - பாத்திரம்.

௭. புறத்தாற்று நூல் என்றது பாஞ்சராத்திரம் முதலியவற்றை. ஒன்று மூன்று தண்டு - எகதண்டம் திரிதண்டங்கள். எகதண்டம் எந்துவோர், சுமார்த்த வைணவ சந்நியாசிகள். திரிதண்டம் எந்துவோர், வைணவ சந்நியாசிகள். சிவபெருமானையும், சிவசின்னங்களையும், சிவனடியார்களையும் இகழும் இத்தகைய சாபம் ஆரியப் பிராமணர்களுக்குத் ததீசி முனிவரால் நேரிட்டமை இப்புராணம் தக்கேசப் படலத்திலும், கந்த புராணத்திலும், கூர்மபுராணத்திலும், கௌதமரால் நேரிட்டமை சூத சங்கிதையிலும் காண்க.

எவ்வ மேமிருந் தமோகு ணம்பயின் றிழிந்த யோனியின் மீன
மாதியாம், வெவ்வி னைப்பவந் தோறும் இன்னலே விரவு வாயென
வெய்ய சாபம்இட், டவ்வி யத்தொகை இரிய நூறும்அப் பிருகு
வெள்ளியால் ஆவி பெற்றெழு, நவ்வி வாள்விழி மனைவி தன்னொடு
நாரி பாகனை வழுத்தி வைகினன். ௮

திருமால் காஞ்சியை யடைந்து தவம் புரிதல்

நிறைமொ ழித்தவப் பிருகு ஓதிய சாபம் எய்திகெஞ் சழுங்கி
ஏங்குபு, நறைம லர்த்துழாய்ப் படலை மார்பினன் நாடி னன்இதன்
தீர்வி யாதெனப், பிறைமு டிச்சடைப் பிரான்உ ளன்மனுப் பிரமம்
ஐந்துள யாமு ளேம்இனிக், குறைஎ மக்கெவன் என்று தேறினன்
கொழிதி ரைப்புனற் கச்சி எய்தினன். ௯

தூய நீர்ச்சிவ கங்கை வாவியுள் தோய்ந்தெ ழுந்தொரு மாவின்
நீழல்வாழ், நாய னாடி வழுத்தி ஏகிஅந் ஞாங்கர் வைகும்ஆச் சிர
மம் ஒன்றமைத், தாயி டைச்சிவ லிங்கம் ஒன்றுகண் டன்பு கூர்தர
அருச்சித் தேத்திஅங், கேபு மாறருள் பெற்று மாதவம் இயற்ற லுற்ற
னன் வயப்புள் ளூர்தியே. ௧௦

பூதி மேனியன் நெற்றி நீட்டுமுப் புண்ட ரத்தினன் அக்க
மாலையன், சீத வேணியோன் திருஉ ருத்திரஞ் செப்பு நாவினன்
அடகு நீர்கனி, வாத உண்டியன் பிரமம் ஐவகை மனுக்க ணித்
துளக் கமலம் நள்ளுற, மாது பாகனை இருத்தி ஐந்தழல் மத்தி நின்
றருந் தவம்உ ஞற்றினன். ௧௧

திருமால் இறைவன் திருவருள் பெறுதல்

இன்ன வாறுபல் லாண்டு மாதவம் இவன்இ யற்றுழி முக்கண்
நாயகன், பொன்இ மாசலப் பூவை தன்னொடும் புடைமி டைந்துபல்

---

௮. எவ்வம் - துன்பம். பவம் - பிறப்பு. இன்னல் - துன்பம். அவ்வியம் - மனக்கோட்டம்; அஃது ஈண்டு ஆகுபெயராய்த் தன் காரியமாகிய வினையை யுணர்த்திற்று. இரிய - நீங்க. நூறும் - அழிக்கின்ற. வெள்ளி - சுக்கிரன். நவ்வி - மான்.

௯. அழுங்கி - வருந்தி. ஏங்குபு - ஏக்கமுற்று. படலை - மாலை. தீர்வு - நீங்கும் வழி. மனு பிரமம் ஐந்து - பஞ்சப் பிரம மந்திரம்.

௧௦. திருஉருத்திரம் - சீருத்திரம். வாத உண்டி - காற்றாகிய உணவு. நள்ளுற - நடுவிற் பொருந்த.

கணங்கள் போற்றுறப், பன்னும் அவ்விலிங் கத்தி னின்றெழூஉப் பாய்வி டைப்பரி மேல்அ ணைந்துநீ, நன்னர் வேட்டன கூறு கென்ற லும் நறுந்து ழாய்மலர்ப் படலை மோலியான். ௧௨

எட்டு றுப்பினும் ஐந்து றுப்பினும் இருநி லத்திடை வீழ்ந்து வீழ்ந்தெழுந், தட்ட மூர்த்தியாய் போற்றி என்னையாள் அண்ண லே அடி போற்றி என்வினைக், கட்ட றுத்தவா போற்றி மாறிலாக் கருணை வெள்ள மே போற்றி போற்றிஎன், றுட்ட தும்பிய காத லால்தொழு துருகி நீர்விழி சொரிய விள்ளுவான். ௧௩

ஐயனே உனைச் சரணம் எய்தினேன் அடிய னேன்இனி மற் றோர் பற்றிலேன், பொய்யில் கேள்விசால் பிருகு மாமுனி புகன்ற சாபநோய்க் கஞ்சி நொந்துளேன், உய்யு மாறருள் செய்ய வேண்டும் என் றுரைத்த லந்துநின் றிரப்ப எம்பிரான், மையு லாம்விழிப் பது மை கொங்கைதோய் மார்ப கேளென வாய்ம லர்ந்தனன். ௧௪

கலிநிலைத் துறை

நடுஇ கந்திடா நம்அடித் தொழும்பரால் நாட்டப்
படுவ தொன்றெது அஃதவ்வப் பயன்றனைப் பயந்தே
விடுவ தல்லது பழுதுறு தின்றுநீ மெலிய
அடும்இச் சாபமும் அனுபவித் தல்லது விடாதால். ௧௫

---

௧௩. எட்டுறுப்பு; தலை, கைகள், காதுகள், மோவாய், தோள்கள். ஐந்துறுப்பு; தலை, கைகள், முழந்தாள்கள். எட்டுறுப்புகள் நிலத்தில்பட வணங்குதல் அட்டாங்க நமற்காரம் எனவும், ஐந்துறுப்புகள் நிலத்தில் படிய வணங்குதல் பஞ்சாங்க நமற்காரம் எனவும் கூறப்படும். மாறிலாக் கருணை வெள்ளம் என்றது "மாறி லாதமாக் கருணை வெள்ளமே" (திருவா. சத. ௬௧.) என்னும் அருட்டிருமொழியைப் பொன்னேபோற் போற்றிக்கொண்டதென்க.

௧௪. அலந்து - துன்புற்று. பதுமை - தாமரை மலரில் இருப்பவள், இலக்குமி.

௧௫. நடு - நடுவு நிலைமை. இகந்திடா - கெடாத. தொழும்பர் - அடியார். நாட்டப்படுவது - நிலைபெறுத்தப்படுவது. அவ்வப்பயன் என்றதற்கேற்பனது, அஃது என்பவற்றையும் அடுக்கி யுரைக்க. அடும் - வருத்துகின்ற

தாங்கு கொள்கையின் உயர்ந்தநம் அடியவர் தமக்கோர்
தீங்கி ழைத்திடுங் கொடியரைச் செகுப்பதே கருமம்
ஆங்கும் வல்லிருட் குழிவிழுந் தழுங்குவர் அந்தோ
யாங்கண் உய்வர்எம் அடியவர் தமக்கிடர் இழைத்தோர். ௧௬

பெருகும் அன்பினுல் எம்மைநீ வழிபடும் பேற்றல்
இருமை சால்முனி சபித்திடும் ஐயிரு பிறப்பும்
திரிபு றுதல கினுக்குப காரமாம் தெளிநீ
அருளும் ஐந்தினில் ஐந்தினில் தண்டமும் புரிகேம். ௧௭

என்று வாய்மலர்ந் தருளலும் நெடியவன் இறைஞ்சி
நன்றும் உய்ந்தனன் அடியனேன் ஞாலத்தின் நீயே
சென்று தண்டமும் அருளும்மற் றியான்பெறச் செய்யின்
மன்ற இப்பெரும் பேற்றினும் பேறுமற் றுளதோ. ௧௮

இன்னும் ஓர்வரம் வேண்டுவல் எளியனேற் குன்பால்
மன்னும் மேதகும் உழுவல்அன் பருள்மதி வள்ளால்
பன்னும் இவ்வரி சாபவெம் பயந்தவிர் இலிங்கந்
தன்னில் என்றும்நீ அமர்ந்தருள் என்றலுந் தலைவன். ௧௯

வேட்ட யாவையும் வழங்கினன் உவகைமீ தூர்ந்து
பாட்ட ளிக்குலம் விருந்தயர் பசுந்துழாய் மார்பன்
தோட்ட லர்க்கரங் குவித்தெதிர் நிற்பமுச் சுடராம்
நாட்டம் மூன்றுடை நாயகன் இலிங்கத்தின் மறைந்தான். ௨0

---

௧௬. செகுப்பது - கொலை செய்வது. இருள் - நரகம். அழுங்குவர் - வருந்துவர்.

௧௭. இருமை - பெருமை. சால் - நிரம்பிய. திரிபுறாது - தப்பாமல். 'ஐந்தில் அருளும் ஐந்தினில் தண்டமும் புரிகேம்' என்க. அவ்வாறு புரிதலை முன்னர்க் காண்க.

௧௯. உழுவல் அன்பு - பிறப்புக்கள்தோறும் விடாது தொடர்ந்துவந்த அன்பு.

௨0. விருந்தயர் - விருந்தாக உண்கின்ற. தோடு - இதழ். முச்சுடர் - சூரியன், சந்திரன், அக்கினி.

திரிகால ஞானேசம்

அனைய சூழலின் குணதுமுக் காலமும் அறிவான்
முனிவர் சிற்சிலர் எய்திமுன் இலிங்கம்ஒன் றிருத்தி
இனிய பூசனை இயற்றிட அவர்க்கது ஈந்தார்
கனியும் அன்பருக் கருளும்முக் காலஞா னேசம். உக

மதங்கேசம், அபிராமேசம்.

விதந்த மற்றிதன் வடக்கது வெம்புலன் அடங்க
மதங்க மாமுனி அருச்சனை புரிமதங் கேசம்
அதன்கு டக்கபி ராமேசம் அச்சுதன் குறளாய்ச்
சிதைந்து மாவலி தபத்தெற வழுத்திய வரைப்பு. உஉ

ஐராவதேசம்

அத்த ளிக்குட பாலதன் றிமைபவர் கடைபோ
தத்தி மேலெழும் வெண்கரி அருச்சனை ஆற்றி
அத்தி கட்கர சாகிவிண் அரசினைத் தாங்க
அத்த ஞர்அருள் பெறும்அபி ராவதேச் சரமால். உங

இவைகளின் பெருமை

துவற்று தேத்துளி துறுமலர்ப் பொதும்பர்சூழ் கிடந்த
இவற்றுள் ஒன்றனில் எந்தைதாள் வழிபடப் பெற்றோர்
கவற்றும் வல்வினைப் பிறவிவித் தாயகா மாதி
அவற்றின் நீங்குபு மழுவலான் அடியிணை சேர்வார். உச

ஆகத் திருவிருத்தம்-அசுஙு.

---

உக. குணது - கிழக்கில் உள்ளது. ஈந்தார் - கொடுத்தருளிய இறைவர்; வினையாலணையும் பெயர். 'அனையசூழலின் குணது ஈந்தார் ஞானேசம்' என்க.

உஉ. குடக்கு - மேற்கு. அபிராமேசத்திற்குத் தனிப் படலமும் முன்னர்க் காண்க. தப - அழிய. தெற - அழிக்க. வழுத்திய - துதித்த. வரைப்பு -இடம்.

உங. தளி - தலம். குடபாலது - மேற்குத் திக்கில் உள்ளது. அத்தி - கடல். அமுதங் கடைந்த காலத்தில் வெள்ளையானை முதலியன தோன்றின என்பது வரலாறு. அத்திகட்கு - யானைகட்கு. விண்ணரசு - இந்திரன்.

உச. துவற்று - சிந்துகின்ற. துறு - நெருங்கிய. கவற்றும் - வருத்துகின்ற. காமாதி - காமம், வெகுளி, மயக்கம் என்பன.

## படல உண்மை.

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'திருமால் முதலிய யாவ ரும் வெகுளி முதலிய தீக்குணங்களும், முனிவர்களது சாபத்தை ஏற்று வருந்துதலும், அவ்வருத்தத்தை இறைவனை வழிபட்டு அவனருளால் நீக்கிக் கொள்ளுதலும் உடையர்' என்பதும், (உ) 'இறைவன் அடியார்களால் நிறு வப்பட்டதை, இறைவனை யடைந்தும் நீக்கிக் கொள்ளுதல் இயலாது' என்பதும் (ங) 'முக்கால உணர்ச்சியும், ஐம்புலன் அடக்கலும், வலிமையும் இறைவன் வழிபாட்டினால் எளிதிற் கிடைக்கும்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

தடாகங்கள் சூழ்ந்துள்ள சித்தீசத்தின் பெருமையை இதுவரையிற் சொன்னோம்; இனி, அதற்குத் தெற்கிலுள்ள அரிசாப பயந்தீர்த்த தானத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் பெரும்போர் புரியும் போது, திருமால் தேவர்களுக்கு உதவியாகச் சென்று அசுரர்களைச் சாடினார். அதனால், அசுரர்கள் ஆற்றாதவர்களாய் ஓடிச்சென்று, பிருகுமுனிவர் பத்தினி யும் இலக்குமிக்குத் தாயுமாகிய கியாதியினிடத்தில் அடைக்கலம் புகுந்த னர். கியாதி, அவர்களைத் தனது இல்லத்தில் வைத்துத் தான் வாயிலிலிருந்து அவர்களைப் பாதுகாத்திருந்தனள்.

அப்போது திருமால் அங்குவந்து, கியாதியின் செயலை நோக்கிக் கோபங் கொண்டு, தனக்கு மாமி என்றும் பெண்பாலென்றும் நோக்காது, தமது சக்கரத்தால் அவளது தலையை அறுத்தனர். அதனால் கூ கூ என்று கூக்குர லிட்டு இறந்த கியாதியின் ஓசை, அங்கு யோகஞ்செய்திருந்த பிருகு முனிவர் காதில் பட்டது. உடனே, பிருகு முனிவர் எழுந்துவந்து, தமது மனைவி கொலையுண்டு கிடப்பதையும், திருமால் நிற்கின்ற நிலையையும் கண்டனர். கண்டதும், அவரது கண்கள் சிவந்தன; இதழ்கள் துடித்தன; இவ்வாறான பெருங்கோபத்துடன், கண்களினின்று தீப்பொறி பறக்கத் திருமாலை நோக்கி, 'அடா பாவீ, இவ்வாறான செயலைச் செய்த உனக்கும் கடைத் தேறுதலுண்டாகுமோ? உண்டாகாது. நிற்க, சைவ சமயமே எல்லாச் சமயங்களினும் உயர்ந்ததென்பதும், யாங்கள் சிவபெருமான் திருவடியை யன்றி வேறொன்றையும் அறியோம் என்பதும் உண்மையாகுமானால், நீ நரகத் துக்கேதுவாகிய கொடுஞ்செயல்களை புரியும் பிறப்புக்கள் பத்து அடை

வாயாக. ஏ, பாதகத்துக்குப் பாத்திரமானவனே, உனக்குத் தொண்டு பூண்டு ஒழுகுகின்றவர்கள், புறச்சமய நூலின் வழியாகிய தீக்கையைப் பெற்று, சிவபெருமான் திருவடிகளைக் காணுதவர்களாய், ஏகதண்டம் திரிதண்டங் களை ஏந்தி உழல்வார்களாக' என்று கொடிய சாபத்தை இட்டு, பின்பு சுக்கிரனால் எழுப்பப்பட்ட தமது மனைவி கியாதியுடன் சிவபெருமானைப் போற்றி வாழ்ந்திருந்தனர்.

இப்பால் பிருகு முனிவர் சாபத்தை ஏற்ற திருமால் மிகவும் மனம் வருந்தினவராய், இதற்கு யாது செய்வது என்று ஆராய்ந்து, ஒருவாறு மனந் தேறிக் காஞ்சியை யடைந்தனர். அடைந்து, சிவகங்கையில் முழுகித் திருவேகம்பப் பெருமானை வணங்கி, அந்நகரத்தின் ஒரு பக்கத்தில் ஓர் ஆச் சிரமத்தை அமைத்து, அவ்விடத்தில் ஒரு சிவலிங்கம் தாபித்துப் பூசித்து, பஞ்சாக்கினி மத்தியில் நின்று சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்தனர்.

சிவபெருமான் அத்தவத்திற்கு மகிழ்ந்து, திருமாலுக்குக் காட்சி யளித்து, 'நீ விரும்பியவற்றைக் கூறுக' என்றனர். திருமால், அட்டாங்க பஞ்சாங்க நமற்காரங்கள் செய்து எழுந்து துதித்து நின்று, 'ஐயனே, பிருகு முனிவர் இட்ட சாபத்தை நீக்கியருளவேண்டும்' என்று வேண்டினர். அதற்குச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். 'துளபமாலை யணிந்த மார்பினை யுடையவனே, நமது அடியார்களால் நிறுவப்பட்டதை யாராலும் மாற்றுதல் அரிது. ஆகையால், இச்சாபம் நீ அனுபவித்தே தீரவேண்டும்; ஆனால், நீ எம்மை வழிபட்டமையால் அப்பத்துப் பிறவிகளும் உலகத்திற்கு உபகாரமாவனவாகுக; அன்றியும், அவைகளில் ஐந்து பிறப்பில் தண்டமும், ஐந்து பிறப்பில் அருளும் யாம் செய்வோம்' என்று அருளிச்செய்தனர். திருமால் மகிழ்ந்து, 'பெருமானே, இதனினும் சிறந்தபேறு எனக்கு யாது ளது? இனி, அடியேனுக்குத் தேவரீரிடத்தில் என்றும் நீங்காத அன்பை யளித்து, இந்த அரிசாப பயந்தீர்த்த இலிங்கத்தில் என்றும் அமர்ந்தருள வேண்டும்' என்றனர். சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்து அவ்விலிங் கத்தில் மறைந்தருளினர்.

திரிகால ஞானேசம்

அவ்வரிசாப பயந்தீர்த்த தானத்திற்குக் கிழக்கில், சில முனிவர்கள் முக்கால உணர்ச்சியும் பெறவேண்டி ஓர் இலிங்கம் தாபித்துப் பூசிக்க, அவர்களுக்கு அதனையளித்த பெருமான் எழுந்தருளியுள்ள திரிகால ஞானே சம் உள்ளது.

மதங்கேசம்

அதற்கு வடக்கில் ஐம்புலனை அடக்க வேண்டி மதங்க முனிவர் பூசித்த மதங்கேசுரம் உள்ளது.

அபிரா மேசம்

அந்தந் தலத்திற்கு மேற்கில், திருமால் வாமனராகி மாவலியை அழித்தற்குப் பூசித்த அபிராமேசம் உள்ளது.

ஜராவதேசம்

அதற்கு மேற்கில், தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அக்கடலில் தோன்றிய வெள்ளையானையாகிய ஐராவதம் இந்திரனைத் தாங்குதற்குப் பூசித்த ஐராவதேசம் உள்ளது.

இவைகளில் ஒன்றை வணங்கினவர்களும் பிறவிக்கு வித்தாகிய காமாதி குற்றங்களினின்றும் நீங்கி, இறைவன் திருவடியை அடைவார்கள்.

---

# இட்ட சித்தீச்சரப் படலம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திகழ்அரி சாபம் தீர்த்த திருநகர் முதல்வா னுடர்
புகழ்அயி ராவ தீசப் பொன்மதில் வரைப்பி ருக
நிகழ்தரு தளிகள் சொற்றும் நிறைஅயி ராவ தேசத்
திகழ்தருந் தென்சார் இட்ட சித்தீசத் துண்மை சொல்வாம். க

தொழுதகு பெருமை சான்ற சுக்கிரன் அங்கண் எய்திக்
கெழுதகு பூசை ஆற்றிக் கிடைத்தனன் சித்தி எல்லாம்
முழுதருள் பெற்ற அன்னோன் மொழிவழித் ததீசி எய்தி
வழிபடு முறையின் ஏத்தி வச்சிர யாக்கை பெற்றான். உ

உதீசிமா நாகங் கோட்டி முப்புரம் ஒறுத்த அயிரா
வதீசனுக் கணிய தென்பால் வைகிய உணர்வுக் கெட்டா
அதீதனை வழுத்தி அந்நாள் வச்சிர யாக்கை பெற்ற
ததீசியின் செயல்வி ரித்துச் சாற்றுவன் முனிவீர் கேண்மின்.

---

உ. கெழுதகு - (அன்பினால்) உரிமையுடைய.

௩. உதீசி - வடக்குத்திசை. நாகம் - மலை, மேருமலை. கோட்டி - வளைத்து. அணிய - அருகிலுள்ள. அதீதன் - கடந்தவன்; இது வாளா பெயராய் நின்றது. 'ஐராவதேசன்' என்பது எதுகை நோக்கி ஐராவதீசன் என்றாயிற்று. முதல் அடியில் 'ஐராவதீசன்' எனப் பாடங் கொள்ளுதல் சீர் இயல்புக்குச் சிறந்தது.

### ததீசி முனிவர் செய்கை

பிருகுவின் மரபில் தோன்றும் பிறங்குசீர்த் ததீசி மேலோன்
அருவிமா மதமால் யானைக் குபன்எனும் அரசன் தன்னே
டொருவருங் கேண்மை எய்தி அளவளாய் உறையுங் காலை
இருவரும் ஒருநாட் கூடி நகுபொழு தினைய சொல்வார். ௪

விப்பிரர் கொல்லோ அன்றி வேந்தரோ பெரியர் என்னும்
அப்பொழு தந்தணாளர் அரசரிற் சிறந்தோ ரென்னச்
செப்பினன் ததீசி மன்னன் மன்னரே சிறந்தோர் என்றான்
இப்பரி சிருவருக்கும் எழுந்தது வயிரப் பூசல். ௫

அழலென முனிவன் சீறி அடித்தனன் அடித்த லோடும்
மழலைவண் டிமிரும் தாரான் வச்சிரம் சுழற்றி வீசிப்
பழமறை முனிவன் ஆக்கை இருதுணி படுப்ப அன்னோன்
கிழமைகூர் வெள்ளி தன்னை நினைந்துகீழ் நிலத்து வீழ்ந்தான். ௬

### சுக்கிரன் உபதேசம்

சுக்கிரன் உணர்ந்து போந்து துணியுடல் பொருத்திக் கூட்டி
அக்கணத் தெழுப்பித் தேற்றி அறைகுவான் முனிவ கேண்மோ
நக்கலர் கமல வாவிக் காஞ்சியின் நணுகி அன்பான்
முக்கணற் றொழுதி யாண்டுங் கொலையுறா முதன்மை கோடி. ௭

இழைமணி மாடக் காஞ்சி இட்டசித் தீச வைப்பின்
மழைதவழ் மிடற்றுப் புத்தேள் மலரடி வழுத்திப் பெற்றேன்

---

௪. ததீசி முனிவர், பிருகுவின் வம்சத்தராகிய துந்துமுகர் குமாரர் என்பர். குபன் என்பவன் கிரேதாயுகத்தில் மக்களுக்கு அரசன் இல்லாமையால் திக்குப் பாலகர் அம்சமாகப் பிரமதேவனால் சிருட்டிக்கப் பட்டவன் என்றும், சூரிய குலத்து அரசனான சையாதியின் புதல்வன் என்றும் கூறுவர். ஒருவரு - நீங்குதற்கரிய. கேண்மை - நட்பு. அளவளாய் - கலந்து. நகு பொழுது - சிரிக்குங்கால்.

௫. விப்பிரர் - அந்தணர். வயிரம் - மனக்காழ்ப்பு. பூசல் - போர்.

௬. மழலை - மழலைச்சொல் போல (இமிரும் என்க). கிழமை - (வம்ச) உரிமை. வெள்ளி - சுக்கிரன்.

௭. நக்கு அலர் - ஒளிவிட்டு மலர்கின்ற.

விழைதரு மிருத சஞ்சி வினி* இது அதன்தென் பாங்கர்த்
தழைபுகழ் இட்ட சித்தி தரும்புனல் தடமொன் றுண்டால். ௮

அத்தடம் படிந்தோர் தம்பால் ஆருள் சுரக்கும் ஈசன்
பத்தியால் அதனைக் கண்டோர் தீண்டினோர் பருகலுற்றோர்
புத்தியோ டாடப் பெற்றோர் அறம்பொருள் இன்பம் வீடாம்
சித்திகள் பெறுவார் என்றால் அதன்புகழ் செப்பற் பாற்றே. ௯

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மல்லல் நீர்அரி வாரம் மூழ்கிடின் மகவி லான்மக வின்றிடும்
இல்லம் இல்லவன் மனைவி எய்துவன் ஆயுள் இல்லவன் அஃதுறும்
கல்வி இல்லவன் கல்வி எய்துவன் கண்ணி லான்விழி பெறுகுவன்
செல்வம் இல்லவன் செல்வம் மேவுவன் அரசி லான்அரசு செய்யு
[மால்.

அலகை பூதம தாதி பற்றி அலைக்க நின்றவர் இரவிநாள்
குலவும் அத்தடம் ஆடின் அங்கவை கோடி யோசனை பின்னிடும்
கலிகெ மூந்துயர் குட்ட வெம்பிணி முயல கன்பெரு நோயெலாம்
விலகி நீங்கும்அந் நீர்படிந்திடும் அக்க ணத்திது மெய்ம்மையே. ௧௧

காத ளாவிய குழைகி ழித்துவி டங்க னிந்து குமிழ்ம்மிசை
மோதுமையரி வாள்த டங்கண் முகிழ்த்த கொங்கை நுணங்கிடை
மாத ராயினும் மைந்த ராயினும் வந்து பூம்புனல் ஆடினோர்
யாதி யாது விரும்பி னுலும்அவ் விட்ட சித்தி அளிக்குமால். ௧௨

மூந்து கந்தனில் வாணி தன்னொடு முளரி மெல்லணை நான்முகன்
வந்து மேதகும் இட்ட சித்தி மலர்த்த டந்தனில் ஆடிநன்
முந்து சத்திய லோக வாழ்க்கை படைத்தி டுந்தொழி லோடுற
இந்து சேகரன் அருள்கி டைத்தனன் எறுழ்வ லித்தவ முனிவனே.

---

௮. * 'சஞ்சீவனி' எனவும் பாடம்.

௧௦. மல்லல் - வளம். அரிவாரம் - ஞாயிற்றுக்கிழமை. 'அரசு' என்புழிக் குற்றியலுகரம் அலகு பெறாது நின்றது. 'அரசெய்துமால்' என்றிருத்திருத்தல் கூடும்.

௧௩. முந்து உகம் - கிரேதாயுகம். இந்து சேகரன் - சந்திரனைத்தரித்த திருமுடியை யுடையவர், சிவபெருமான்.

எயும் நற்றிரே தாயு கத்தின்என் றாழ்ப டிந்து மறைத்தனு
ஆயி ரங்கதிர் ஆண்டு தன்றினத் தத்த டம்படிந் தோர்க்கான்
மேய சித்திகள் விரை வின் நல்கவும் விருச்சி கத்தின்அந் நாளுறின்
வாயும் அப்பயன் மிகவி ரைந்து வழங்க வும்வரம் எய்தினன். ௧௪

தவாப ரத்தரி பூவின் மாதொடு தோன்றி அத்தடம் ஆடினன்
தவாது பல்லுயிர் காக்கும் வாழ்வொடு மால்ப தந்தனைப் பெற்றனன்
உவாம திக்கலை ஆன னம்பிகை கலியு கத்தில்அந் நீர்படிந்
தவாநி றைந்தருள் கம்ப நாயகர் பாதி மேனி அடைந்தனள். ௧௫

இவர்கள் நால்வரும் நான்கு கங்களுக் கிறைவ ராயினர் மற்றும்இச்
சிவமு றம்புனல் ஆடி முன்தின கரன்இ ழந்தபல் எய்தினன்
தவள மாமதி முயல கப்பிணி சாடி னன்பகன் என்பவன்
துவளு மாறுயர் வீர பத்திரன் தொட்ட வாள்விழி பெற்றனன். ௧௬

வடதி சைக்கிறை வரைம டக்கொடி வடிவு நோக்கி இழந்தகண்
ணுடன் அரற்கொரு நட்பும் எய்தினன் ஓது துச்சரு மேளனும்

௧௪. என்றாழ் - சூரியன். சூரியன் இருக்குமுதலிய வேதங்களின் வடிவமாக இருக்கின்றானென்பது ஓர் கொள்கையாகலின், 'மறைத்தனு' என்றார். மறை - வேதம். தனு - உடம்பு. விருச்சிகம் - கார்த்திகைமாதம்.

௧௫. உவா - பௌர்ணமி. கலைமதி என மாறுக. ஆனனம் - முகம். அம்பிகை - இறைவி.

௧௬. பிரமன் முதலிய நால்வரும் தாம் கருதியவற்றை அடைந்தமையே யன்றி அவ்வவ் யுகங்களுக்குத் தலைவராயினர் என்பார், 'இவர்கள் நால்வரும் நான்குகங்களுக் கிறைவராயினர்' என்றார். சிவம் - நன்மை. தினகரன் - சூரியன்' பகன் - பன்னிரு சூரியர்களுள் ஒருவன்; இவன் புரட்டாசி மாதத் திற்கு உரியவன்; ஒரு தேவன் எனவும் கூறுவர். முன் என்றது தக்கன் வேள்வி செய்த காலத்தை. தொட்ட - தோண்டிய.

௧௭. வடதிசைக்கிறை - குபேரன். குபேரன் தான் செய்த வினைப் பயனால் கலிங்க நாட்டில் அருந்தமன் என்பவனுக்குத் தமன் என்னும் புதல்வனாகப் பிறந்து இறைவனை நோக்கித் தவம் புரிந்த காலையில், இறை வன் யாது வேண்டுமென, உம்மைக்காண வேண்டுமென்று கேட்டு, அவ் வகை யருள, அருகிலிருந்த இறைவியை நோக்கிக் கண் ஒளி மழுங்கினன் என்பது புராண வரலாறு. துச்சருமேளன் - ஓர் அரசன். ஒரு முனிவர் என்பாரும் உளர். உடல் - போர் செய்கின்ற. உருப்பசி - ஊர்வசி என்பு

உடல்கணேக்கரு விழிஉ ருப்பசியுகள கொங்கை மணந்தனன் [ளுன்.
மிடல்கொள் கண்ணன் அளித்த சாம்பனுங் குட்ட வெம்பிணி நீங்கி

நிடதம் மன்னிய நளன்அ யோத்தி இராமன் நீள்புகழ்ப் பாண்டவர்
மடனில் இங்கிவர் முத்தி றத்தரும் மருவ லாரை அழித்துவென்
றிடன்இ ழந்திடும் இறைமை எய்தினர் இரியும் ஐம்புல வாழ்க்கை
தடவு மென்மலர் இட்ட சித்தி தருந்த டம்படி பேற்றினல். [யோய்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தோற்றமார் வடாது வெந்நோய் துமித்திடுந் தரும தீர்த்தம்
போற்றருங் குணது விண்ணோர் புகழ்தரும் அருத்த தீர்த்தம்
கூற்றுறுந் தெனது மாருக் குரைபுனற் காம தீர்த்தம்
சாற்றிய குடாது முத்தித் தீர்த்தம்அத் தடத்துள் ஒங்கும். ௧௯

நாற்பயன் உதவுந் தீர்த்தம் நான்குடை இனைய தீர்த்தம்
ஏற்புறத் திங்கள் தோறுஞ் சிறந்ததே எனினும் சால
மேற்படும் இடபம் கும்பம் விருச்சிகம் கடகந் தன்னில்
பாற்படும் அவற்றின் மேலாம் கார்த்திகைப் பானு வாரம். ௨௦

பானுநாள் விடியற் போதின் அத்தடம் படிந்தோர் யாவ
ரேனும்அங் கவர்கள் எய்தும் பேறெவர் இயம்பற் பாலார்

---

தன் திரிபு. ஊர்வசி (பிரமன்) தொடையிற் பிறந்தவள். யுகளம் - இரண்டு. சாம்பன் என்பவன் கண்ணனுடைய மனைவியருள் சாம்பவதியின் புதல்வன். இவன், கண்ணனோடு ஆய்ச்சியர்கள் நீர் விளையாடிக் கொண்டிருக்குமிடத்தில் அறியாது செல்ல, அப்பெண்கள் இவன் அழகைக்கண்டு மனந்திரிந்தமை நோக்கிக் கண்ணனால் குட்டநோய் அடையுமாறு சபிக்கப்பட்டனன் என்பது புராண வரலாறு.

௧௮. நிடதம் - ஒரு நாடு. மடன் - அறியாமை. மருவலர் - பகைவர். தடவு - பெருமை.

௧௯. துமித்திடும் - நீக்குகின்ற. வடாது முதலிய நான்கும் திசை குறித்து நின்றன. குணது - கிழக்கு. குடாது - மேற்கு. குரை - ஒலிக்கின்ற. கூற்று - புகழ்ச்சிச் சொல்; இயமன் என்பாரும் உளர்.

௨௦. இடபம் - வைகாசி. கும்பம் - மாசி. விருச்சிகம் - கார்த்திகை. கடகம் - ஆடி. தன்னில் என்பதைத் தனித்தனி கூட்டி, ஒன்றில் ஒன்று சிறந்ததாக உரைக்க. பானுவாரம் - ஞாயிற்றுக் கிழமை.

௨௧. கணித்தல் - மந்திரம் செபித்தல்.

தானம்நீ ராடல் ஓமம் கணித்தல்அத் தடவுக் கஞ்சத்
தேனலர் இட்ட சித்தி தீர்த்தத்தொன் றனந்த மாமால். ௨௧

ஆதலின் அங்கண் மூழ்கி அருங்கொலை யுறாத மேன்மை
நீதறப் பெறுகென் றோதி மிருதசஞ் சீவி னிப்பேர்
மேதகு மனுவும் நல்கிச் சுக்கிரன் விடுப்பப் போந்து
கோதிலா முனிவன் ஓகை கூர்ந்துகாஞ் சியினைச் சேர்ந்தான். ௨௨

ததீசிமுனிவர் வச்சிரயாக்கை பெறுதல்

சேர்ந்தவன் இட்ட சித்தி தீர்த்தநீர்ப் படிந்து கண்ணீர்
வார்ந்திட இட்ட சித்தி வரதனை அருச்சித் தன்பு
கூர்ந்தனன் சின்னாட் பின்னர்க் குழப்பிறை மோலி தோன்றி
ஈந்தனன் வயிர யாக்கை இனிவருங் கொலைஎய் தாமே. ௨௩

அவ்வகை வரங்க ளெல்லாம் அண்ணல்பாற் பெற்று மீண்டு
மெய்வகைத் ததீசி எய்தி வேத்தவை வேந்தன் சென்னி
எவ்வமில் இடத்தாள் ஓச்சி உதைத்தனன் இவனுக் கென்று
தெவ்வெனச் சமரின் ஏற்ற மாயனைச் செயிர்த்து வென்றான். ௨௪

இடனுடைப் புரிசை சுற்றும் இட்டசித் தீச வைப்பில்
குடதிசை முகமா வைகுங் குழகனை வழிபட் டின்னும்
நடலைதீர்ந் திட்ட சித்தி நண்ணினர் எண்ணி லாதார்
புடவியில் அதன்றன் நீர்மை யாவரே புகலும் நீரார். ௨௫

ஆகத் திருவிருத்தம்-௮௮௮.

---

௨௪. வேந்து+அவை=வேத்தவை. எவ்வம் - குற்றம். தெவ் - பகைவன். குபனுக்காகத் திருமால் வந்து ததீசி முனிவர் மேல் சக்கரத்தையும், தமது மாயையால் அநேக திருமால்களையும் ஏவி அவர் பிரமிக்குமாறு செய்ய, ததீசி முனிவர் ஒரு காலைச் சற்றே தூக்கி யசைக்க, அக்காற் பெருவிரலினின்று அநேக விட்டுணுக்கள் தோன்றி அவர்களை வென்றனர் என்பதும், பின்னும் ததீசி முனிவர் தருப்பையில் பல தேவாத்திரங்களை ஆவாகித்து ஏவி, அவர் சக்கரத்தையும் பின்னிடச் செய்து வென்றனர் என்பதும் புராண வரலாறு.

௨௫. புரிசை - மதில். நடலை - துன்பம். புடவி - பூமி.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'உடல் வன்மையும் இறைவன் வழிபாட்டினால் பெறுவதாகும்' என்பதும் (உ) "சென்றாடு தீர்த்தங்க ளானார் தாமே" (திருமு, ௬. பதி. எ௮. க.) என்னும் அருட்டிரு மொழியின்படி 'இறைவன் தீர்த்த வடிவமாக உள்ளானாதலின், அத்தீர்த்தத்தில் மெய்யன்போடு முழுகுவோர்கள் இட்டசித்தியை அடைவர்' என்பது மாகிய உண்மைகளை முதலாகக் கொண்டு, (௩) 'வெற்றியை இறைவன் வழிபாடு தரும்' என்பதும், (௪) 'இறைவன் திருவருள் பெற்றாரது வலிமையின் முன் ஏனையோரது வலிமைகள் நிற்கமாட்டா' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். 'நகையாலாயினும் மாறுபாட்டினை மேற்கொள்ளுதல் கூடாது' என்னும் நீதியும் தோன்றும். பிறவும் உளவேற்கொள்க,

---

## உரை நடை

விளங்குகின்ற அரிசாப பயந்தீர்த்த தானம் முதல் ஐராவதேசம் ஈறாக உள்ள தலங்களின் பெருமைகளை இதுகாறும் சொன்னோம்; இனி, ஐராவதேசத்தை அடுத்து அதற்குத் தெற்கிலுள்ள இட்டசித்தீசத்தின் உண்மையைச் சொல்வோம்.

பிருகு முனிவர் வம்சத்தில் தோன்றிய ததிசி என்னும் முனிவர், குபன் என்னும் அரசனோடு நட்புக்கொண்டு வாழும் நாளில், ஒரு நாள் இருவரும் மகிழ்ச்சியாக நகைத்துக்கொண்டு இருக்கும்போது அந்தணர் சிறந்தவரோ? அரசர் சிறந்தவரோ? என்று பேசினர். அப்போது ததிசி முனிவர் அந்தணரே சிறந்தோர் எனவும், அரசன் அரசரே சிறந்தோர் எனவும் கூற, இருவருக்கும் பெரும்போர் விளைந்தது. அப்போது முனிவர் சிறி அரசனை அடிக்க, அரசன் வச்சிராயுதத்தால் முனிவரை இரண்டு துண்டாக வெட்டினான். அங்ஙனம் வெட்டுண்டு விழுகின்ற முனிவர் சுக்கிரனை நினைத்துத் தரையில் விழுந்தனர்.

அதைச் சுக்கிரன் அறிந்து வந்து துண்டுபட்ட உடலைப் பொருத்தி, ததிசி முனிவரை எழுப்பிக் கூறுகின்றான்: 'முனிவ, நீ காஞ்சியையடைந்து, இறைவனை வழிபட்டு, யாண்டுங் கொலையுறாத தன்மையை அடைவாயாக' என்று கூறிப் பின்னும் சொல்லுகின்றான். யான் அக்காஞ்சியிலுள்ள இட்ட சித்தீசப் பெருமானை வழிபட்டே இந்த மிருத சஞ்சீவினி என்னும் (இறந்தவரை எழுப்பும்) மந்திரத்தைப் பெற்றேன். அந்த இட்டசித்தீசத்திற்குத் தென்பால், 'இட்டசித்தித் தீர்த்தம்' என்னும் ஒரு தீர்த்தம் இருக்கின்றது. அதில்

முழுகினவர்களுக்குச் சிவபெருமான் திருவருள் பாலிப்பார். அதனைக் கண்டவர்களும், தீண்டினவர்களும், முழுகினவர்களும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருளை அடைவார்கள் என்றால், அத்தீர்த்தத்தின் பெருமை சொல்ல இயலுவதோ!

அத்தீர்த்தத்தில் ஞாயிற்றுக்கிழமை முழுகினால் மனைவி, மக்கள், கல்வி, செல்வம், அரசு முதலாக எண்ணிய யாவும் கிடைக்கும். கண்ணில்லாமை முதலிய அங்க ஈனங்கள் நீங்கிக் கண் முதலியன பெறுவார்கள். பேய், பூதம் முதலியவற்றால் பீடிக்கப்பட்டவர்கள், அத்தீர்த்தத்தில் ஞாயிற்றுக் கிழமை முழுகினால், அவைகள் அவர்களை விட்டுக் கோடி யோசனைக்கு அப்பால் நீங்கும். குட்ட நோய், முயலகன் முதலிய பெருநோயெல்லாம் அத்தீர்த்தத்தில் மூழ்கிய அக்கணமே நீங்கும். பெண்களாயினும் ஆண்களாயினும் அதில் மூழ்கினோர்களுக்கு வேண்டியவற்றை அத்தீர்த்தமானது அளிக்கும்.

அத்தீர்த்தத்தில் கிரேதாயுகத்தில் பிரமன் சரசுவதியுடன் வந்து முழுகி, படைத்தல் தொழிலும், சத்தியலோக வாழ்வும் பெற்றான். திரேதா யுகத்தில் சூரியன் முழுகி வேத உருவமான உடலையும், ஆயிரங் கதிர்களையும், தனது வாரத்தில் அதில் முழுகினவர்களுக்கு அவர் விரும்பியவற்றை விரைந்து தருதலும், கார்த்திகை மாதத்தில் தனது வாரத்தில் முழுகினவர்களுக்கு மிக விரைந்து தருதலுமாகிய வரத்தையும் பெற்றான். துவாபரயுகத்தில் திருமால் இலக்குமியுடன் வந்து முழுகி, காத்தல் தொழிலும், வைகுந்த வாழ்வும் பெற்றார். கலியுகத்தில் இறைவியார் முழுகி, திருவேகம்பர் திருமேனியில் பாதியாகக் கலந்தார். மற்றும் சூரியனும், பகன் என்பவனும் முழுகி, தக்கன் யாகத்தில் தாம் இழந்த பற்களையும், கண்களையும் அடைந்தனர். குபேரன் முழுகி, முன்னே தான் பார்வதி தேவியாரை நோக்கினமையால் இழந்த கண்ணைப் பெற்று, இறைவனுக்குத் தோழனாதலையும் அடைந்தான். துச்சருமேனன் என்பவன் முழுகி, ஊர்வசியின் இன்பத்தைப் பெற்றான். கண்ணன் புதல்வன் சாம்பன் என்பவன் முழுகிக் குட்ட நோயினின்றும் நீங்கினான். நளனும், பஞ்ச பாண்டவரும் முழுகி, தமது பகைவர்களைவென்று தமது அரசினை அடைந்தார்கள்.

இன்னும் அத்தீர்த்தத்தில் வடக்கில் தரும தீர்த்தமும், கிழக்கில் அருத்த தீர்த்தமும், தெற்கில் காம தீர்த்தமும், மேற்கில் முத்தி தீர்த்தமும் உள்ளன. இந்நான்கு தீர்த்தங்களையும் தன்னிடத்துக் கொண்டுள்ள அந்த இட்டசித்தித் தீர்த்தமானது எல்லா மாதங்களிலும் சிறந்ததாயினும் வைகாசி, மாசி, கார்த்திகை, ஆடி என்னும் மாதங்களில் முறையே மேன்மேலும் சிறந்தனவாகும்.

அவ்வெல்லாவற்றிலும் கார்த்திகை மாதத்து ஞாயிற்றுக்கிழமை சிறந்ததாகும். தானம் செய்தல், முழுகுதல், ஓமம் செய்தல், மந்திரம் கணித்தல் இவைகளை அத்தீர்த்தத்தில் செய்தால் ஒன்று அனந்தமாகும். ஆதலால் அதில் மூழ்கி, கொலையுறாத மேன்மையை அடைவாயாக என்று சுக்கிரன் ததீசிக்குச் சொல்லி, மிருத சஞ்சீவினி என்னும் மந்திரத்தையும் உபதேசித்துச் சென்றனன்.

பின்னர்த் ததீசி முனிவர் காஞ்சியம்பதியை அடைந்து இட்டசித்தித் தீர்த்தத்தில் முழுகி, இட்டசித்தீசரைப் பூசித்து, அப்பெருமான் எழுந்தருளி வந்து என்றுங் கொலையுறாத வச்சிரயாக்கை தரப் பெற்றனர். பிறகு அம்முனிவர் குபன் என்னும் அரசன் அவையிற் சென்று, தமது இடதுகாலால் அவ்வரசன் தலையில் உதைத்தனர். அவனுக்காக வந்து தம்முடன் போர் புரிந்த திருமாலையும் வென்றனர்.

இத்தகைய இட்ட சித்தீசத்தில் மேற்கு முகமாக எழுந்தருளியுள்ள இறைவனை வழிபட்டு இட்டசித்தியை யடைந்தவர்கள் எண்ணிலாதவர் ஆவர். ஆதலின், அத்தலத்தின் பெருமையை யாவர் சொல்லவல்லவர்கள்!

---

# கச்சபேசப் படலம்

*கலிநிலைத் துறை*

ஓடரிக் கண்ணியார் ஆடலும் பாடலும் ஓவுறாச்
சேடமை இட்டசித் தீசமேன் மைஇது செப்பினும்
ஆடமைத் தோளிஓர் பாகர்வாழ் அன்னதன் தென்புடைத்
தோடவிழ் சோலைசூழ் கச்சபே சத்தியல் சொல்லுவாம். ௧

பெருமான் உலகினைப் படைத்தல்

ஐவகைப் பூதம்மால்அயன்முத லாயபல் சராசரம்
எவ்வகை யுள்ளவும் ஈறுசெய் திமபமா மயிலொடும்
அவ்விர வாட்டயர்ந் தங்கவை மீளவும் ஆக்குவான்
தெவ்வடு குறுககைச் சிற்பரன் திருவுளஞ் செய்தனன். ௨

---

௧. ஓடு அரி - பரந்த செவ்வரி. ஓவுறா - நீங்காத. சேடு - பெருமை. ஆடு, இனவடை. அமை - மூங்கில். தோடு - பூவிதழ்.

௨. அவ்விரவு என்றது, சருவ சங்கார காலத்தில் எல்லாம் அழிக்கப்பட்டுப் பேரிருளாகிய நிலையை. ஆட்டயர்ந்து - நடனம் செய்து. அப்பொழுது யாரும் இன்றித் தனது சத்தியும் தானுமே இருத்தலின், அவ்

உலகெலாம் அழிவுறுங் காலையுந் தன்னுடைக் காவலிற்
குலவுசீர்க் காஞ்சியிற் சோதிலிங் கத்துருக் கொண்டெழுந்

வம்மையார் தாளம்போடச் சிவபெருமான் ஆடுவராதலின், 'இமயமாமயி லோடும் அவ்விரவு ஆட்டயர்ந்து' என்றார். இறைவன் எல்லாவற்றையும் அழித்து நிற்கின்ற காலையில், அங்ஙனம் அழித்த சாம்பலைத் தனது திருமேனியிற் பூசி அத்தீயின்கண் ஆடுவன் என்க. இறைவனை, 'ஈமத்தாடி, சுடலைப் பொடி பூசி, இரவெரியாடி' என்று கூறுவனவற்றிற்கும் இவையே கருத்தென அறிக. இரவென்பது எல்லாம் துஞ்சிய நிலையையும், எரி என்பது இறைவனது போராற்றலையும், பொடி என்பது யாவும் தத்தம் காரணங்களில் ஒடுங்கிய வழி, காரணரூபமாய் நின்ற சத்தி சமூகமாகிய மாயையும், பூசுதல்என்பது அம்மாயைக்கு வேறு பற்றுக்கோடின்மையின் அதற்கு இறைவனே பற்றுக்கோடாக நிற்றலையும், ஆடுதலென்பது எல்லாவற்றையும் அழித்த பின்னர் மீளத்தோற்றுவித்தல் முதலியனவாகிய தூல ஐந்தொழிற்கு அவைகள் தகுதியுடையவாமாறு சூக்கும ஐந்தொழில் செய்தலையும் குறிப்பனவாம் என்க. இறைவன் இவ்வாறு இந்நிலையில் இறைவியோடு நின்று ஆடுவன் என்பதை, "பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோடுமைபாடத் - தெறிகிளரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்," (திருமு. ௩. பதி ௧0௧, ௨. )"தேய்பொடி வெள்ளை பூசி யதன்மேலொர் திங்கள் திலகம் பதித்தநுதலர், காய்சின வேலை நீல ஒளி மாமிடற்றர் கரிகாடர் காலொர் கழலர் - வேயுடனாடு தோளி யவள்விம்ம வெய்ய மழுவீசி வேழவுரிபோர்த் - தேயிவ ராடுமாறும் இவள்காணு மாறும் இதுதான் இவர்க் கோரியல்பே", "உறைவது காடு போலும்.........உமையென்னும் நங்கை பிறழ்பாட நின்று பிணைவான் (திரு. மு. ௪, பதி அ. ௩, ரு,) என்றற்றொடக்கத்துத் திருமொழிகளானும், "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ—கொடு கொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குற்—கொடிபுரை நுசுப்பினள் கொண்டசீர் தருவாளோ; மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து —பண்டரங்க மாடுங்காற் பணையெழி லணைமென்றோள்—வண்டரற்றுங் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ; கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்—தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கான்—முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ" (கலி - கடவுள் வாழ்த்து.) என்னும் சான்றோருரையாலும் உணர்க.

௩. யாவையும் என்றது, புவனங்களை எனவும், நாமரூபங்கள் என்றது,

திலகுதன் சத்திபான் முன்புபோல் யாவையும் நல்கினன்
அலகிலா நாமரூ பங்களும் ஆக்கினன் அண்ணலே. ௩

பிரமன் வழிபட்டது
போற்றுசீர் அவ்விலிங் கத்தினைப் போற்றினேர் யாவரும்
மாற்றரும் வீடுபே றெய்துவர் நான்முகன் வாணியோ
டாற்றலான் ஆயிடை மாதவம் ஆற்றிஅவ் வங்கணன்
ஊற்றமார் அருளினல் படைத்திடுந் தலைமைபெற் றேங்கினன்.

திருமால் ஆமையாய் வழிபட்டது
முன்னொரு பிரமகற் பத்திடை நாரணன் மூரிநீர்
மன்னுமந் தரமலை யாமையாய்த் தாங்கிவார் கடல்கடைந்
தின்னமு தஞ்சுரர்க் கீந்தபின் வெஞ்செருக் கெய்திஆங்
கன்னமுந் நீர்முழு துழக்கினன் உலகெலாம் அஞ்சவே. ௫

அச்சம்நீத் தாருயிர் உய்வகை அருள்சுரந் தாங்குறீஇக்
கச்சபத் தின்னுயிர் செற்றதன் ஓட்டினைக் கதுமென
நச்சிய வெண்டலை மாலிகை நடுவுறக் கொண்டனன்
பச்சிளங் கிள்ளைபால் வீற்றிருந் தருளிய பண்ணவன். ௬

இப்பெரும் பிழைதவிர்ந் துப்புமா நாரணன் எம்பிரான்
வைப்பெனுங் காஞ்சியிற் சோதிலிங் கத்தினை வழிபடூஉ
மெய்ப்படும் அன்பினல் இரந்திரந் தேத்தலும் விடைமிசைத்
துப்புறழ் செஞ்சடைத் தோன்றல் அங்கவன்எதிர்தோன்றினன்

காண்டலுங் கண்கள்நீர் வார்தரக் கரையறு காதலின்
பூண்டபே ரன்பினல்வீழ்ந் துவீழ்ந்திறைஞ்சினன்போற்றினன்

---

அவற்றின்கணுள்ள இயங்கியற் பொருள் நிலை இயற்பொருள்களை எனவும் கொள்க.

௫. மூரி - பெரிய. முந்நீர் - கடல். உழக்கினன் - கலக்கினன்.

௬. ஆங்குறீஇ - அவ்விடத்திற்குப் போய். கச்சபம் - ஆமை. கதுமென, விரைவுக்குறிப்பு. இவ்வரலாறு மேலே (பக். ௨௦௬) குறித்ததினின்றும் சிறிது வேறுபட இறைவனே நேராகச் சென்றதாகக் கூறப்படுதல் ஒற்றுமை பற்றியென்க.

௮. ஆண்தகாய் - ஆண் தன்மையை யுடையவனே, புருடனே என்ற படி; விளி.

ஆண்டகாய் ஆருயிர்த் தலைவனே அங்கணா அடியனேன்
வேண்டுவ யாவையும் தந்தருள் என்றெதிர் வேண்டினான்.

மழுவலான் இணையடிப் பொதுவறு பத்தியும் மால்பதத்
தழிவிலா இறைமையும் அவ்விலிங் கந்தனக் கன்றுதொட்
டொழிவருங் கச்சபே சத்திரு நாமமும் உம்பரார்
தொழுதெழ ஆங்கரன் உமையொடும் இனிதமர் தோற்றமும். ௯

அத்தலந் திகழ்அவி முத்தமாந் தலத்தினும் அதிகமா
வைத்திடுந் தலைமையும் வரமெனக் கொண்டனன் வள்ளலும்
சித்தம்நீ டுவகையின் அங்கவை முழுவதுந் தேத்துழாய்ப்
பத்தனுக் கருள்புரிந் தாயிடை மறைந்தனன் பரையொடும். ௧0

அன்றுதொட் டென்றும்அக் காஞ்சியின் நீங்கலா தமர்ந்திடுங்
கொன்றைவார் சடையனைக் கச்சபே சனைக் கும்பிடச்
சென்றவர் கண்டவர் கருதினர் யாவருந் தீதுதீர்ந்
தொன்றிஒன் றுநிலை மாறிலா முத்திபெற் றுய்வரே. ௧௧

---

௯. மால்பதம் - வைகுந்தம். கச்சபேசன் - ஆமைக்கு அருள்புரிந்த இறைவன். கச்சப+ஈசர்=கச்சபேசர்.

௧0. அவிமுத்தம் - காசி. பரை - இறைவி.

௧௧. தீது - இருவினையும், மலமறைப்பும். ஒன்றி ஒன்றும் நிலையாகிய மாறிலாமுத்தி என்க. மகாகாயத்தின் வேறாகாத குடாகாயம், குடம் உடைந்த வழி அதனோடு ஒன்றுதல் போல, பரமான்மாவின் வேறாகாத சீவான்மா உடல் நீங்கிய வழி அதனுடன் ஒன்றுதலே முத்தியென்னும் அம் முத்தியன்றி, பாலோடு கூடிய நீர் பாலெனத் தானெனப் பிரித்தறிய வாராது உடனாய் நிற்றல்போல, உயிர் இறைவனுடன் கலந்துநிற்கும் முத்தியென்பார், 'ஒன்றி ஒன்றும் நிலை........முத்தி' என்றார். ஒன்றி - கூடி. இனி, 'ஒன்றி ஒன்று நிலை' எனக்கொண்டு, உலகத்தோடு கூடியும் கூடாது நிற்கும் சீவன் முத்த நிலை எனவும், மாறிலா முத்தி என்றது பரமுத்தி எனவும் உரைப்பினும் அமையும். இப்பொருட்கு, ஒன்றி ஒன்று நிலை, மாறிலாமுத்தி என்பன உம்மைத் தொகையாகக் கொள்ளப்படும். முத்திப் பெரும்பயன் கூறவே ஏனைய பயன் சொல்லவேண்டா வாயின.

துர்க்கை முதலியோர் வழிபாடு
துர்க்கையுஞ் சாத்தனும் இரவியும் வயிரவத் தோன்றலும்
நற்கரி முகனுடன் ஐவருங் கச்சப நாயகன்
பொற்கம லப்பதம் பூசனை யாற்றிஅங் குடன்அமர்ந்
தொற்கமில் கணங்களோ டப்புரிக் காவல்பூண் டுறுவரால். ௧௨

சத்தியமொழி விநாயகர் சிறப்பு
அந்தணிர் கச்சபே சக்குட வைப்பினில் ஆயிதழ்க்
கந்தமா மலர்மிசைச் செல்விதன் கணவனுர் போற்றிசெய்
துய்ந்தசத் தியமொழி விநாயகன் உளன்அவற் போற்றினுர்
எந்தஞ ருந்தவிர்ந் திம்மையே வேட்டவை எய்துவார். ௧௩

ஆகத் திருவிருத்தம் - ௩௦௧.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'சிவபெருமான் ஒருவரே இறுதிக் காலத்தில் எல்லாவற்றையும் அழித்துத் தம்மை ஒருவரும் அழிப்பாரின்றித் தமது சத்தியும் தாமுமே தனித்து நிற்பார்' என்பதும், (உ) 'அதனுல், அழிந்த உலகத்தை மீண்டும் அவரே தோற்றுவிப்பர்' என்பதும், (௩) 'அதனுல் அவரோருவரே முழுமுதற் கடவுள்' என்பதும், (௪) 'திருமால் முதலியோர் உயிர் வருக்கத்துட் பட்டவராகலின், செருக்கினுல் சிவபெருமானுல் தண்டிக்கவும், அவரை வழிபடுதலால் அருளவும் பெறுவர்' என்பதும், (௫) 'துர்க்கை, ஐயனுர் முதலியோர் சிவபெருமான் திருவருள் பெற்று விளங்கும் தெய்வங்கள்' என்பதும், (௬) 'திருமால் முதலியோர் சிவகுமாரர்களையும் வழிபட்டு நலன் எய்துவர் ஆகலின், அக்குமாரர்கள் சிவபெருமானின் வேறல்லர்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பெருமையமைந்த இட்டசித்தீசத்தின் மேன்மையை இதுவரையிற் சொன்னேம்; இனி, அதற்குந் தெற்கிலுள்ள கச்சபேசத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

---

௧௨. சாத்தன் - ஐயனுர். ஒற்கம் - தளர்ச்சி.
௧௩. அந்தணிர், விளி. மலர்மிசைச் செல்வி - திருமகள்.

சிவபெருமான் ஒருகால் ஐம்பெரும் பூதங்கள், திருமால் பிரமன் முதலிய சராசரப் பொருள்கள் ஆகிய எல்லாவற்றையும் அழித்து, அவ்விரவின்கண் இறைவியோடு தனித்திருந்து திருக்கூத்தினைச் செய்து, மீளவும் உலகத்தைத் தோற்றுவிக்கத் திருவுளம் பற்றினர்.

அக்காலத்தில், உலகமுற்றும் அழிந்தபோதும், தமது காப்பினால் அழியாதிருக்கும் காஞ்சியம்பதியில், சோதிலிங்கமாக உருக்கொண்டெழுந்து, தமது சத்தியால் முன்போல் எல்லா உலகங்களையும், எல்லாப் பொருள்களையும் படைத்தனர். அச்சோதிலிங்கத்தை வழிபட்டவர்கள் முத்தியை அடைவார்கள். அவ்விலிங்கத்தைப் பிரமன் சரசுவதியுடன் பூசித்துப் படைத்தற்றொழில் தலைமை பெற்றனன்.

முன்னொரு கற்பத்தில் தேவர்கள் திருப்பாற்கடல் கடைந்த காலத்தில், மத்தாகிய மந்தரமலை கடலில் அமிழாது, மிதக்கும்படி திருமால் ஆமையாக இருந்து தாங்கி, தேவர்களுக்கு அமுதம் கொடுத்தமையால் அகங்கரித்து, உலகமெல்லாம் அஞ்சும்படி அக்கடல்கள் முழுவதையும் கலக்கினர். அப்போது சிவபெருமான் உயிர்கள் அஞ்சாதவாறு அவ்வாமையை அழித்து, அதன் ஓட்டினைத் தமது மார்பிலணிந்திருக்கும் வெண்டலை மாலையின் நடுவிற் கோத்து அணிந்துகொண்டனர். திருமால் தாம்செய்த குற்றம் நீங்க, இச்சோதிலிங்கத்தை வழிபட்டு, நீங்காத சிவபத்தியும், வைகுந்த பதவித் தலைமையும் தமக்கு வரவும், அன்று முதல் அவ்விலிங்கத்திற்குக் 'கச்சபேசன்' என்கின்ற திருப்பெயர் வழங்கவும், இறைவன் அங்கு என்றும் எழுந்தருளியிருக்கவும், அத்தலம் காசியினும் மேலாகவுமாகிய வரங்களைச் சிவபெருமான் தோன்றி வழங்கப் பெற்றனர்.

அக்கச்சபேசப் பெருமானைக் கும்பிடவேண்டுமென்று சென்றவர்களும், சென்று கண்டவர்களும், செல்லவேண்டுமென்று நினைத்தவர்களும் யாவரும் இவ்வுலகத்தில் துன்பம் நீங்கி இன்புற்றிருந்து மீளா முத்தியையும் அடைவார்கள்.

அக்கச்சபேசப் பெருமானை, துர்க்கை, ஐயனர், சூரியன், வயிரவர் விநாயகர் இவர்களும் வழிபட்டு அத்திருநகரைக் காப்பாராயினர்.

அக்கச்சபேசருக்கு மேற்கில் திருமால் பூசித்த சந்நியமோழி விநாயகர் இருக்கின்றனர். அப்பெருமானை வணங்கினவர்கள் எப்படிப்பட்ட இடையூறுகளும் தீர்ந்து விரும்பியவற்றை அடைவார்கள்.

# சகோதர தீர்த்தப் படலம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

வெள்ளிக்குப் பாயம் போர்த்தெனப் பொதிந்த வெண்டிரு நீற் றொளிக் கதிர்கள், அள்ளிக்கொள் வனைய மேனியீர் கச்ச பாலயம் அறைந்தனம் மலநோய், தள்ளிப்பே றுதவும் அத்தலக் குடபால் சகோதர தீர்த்தநீர்க் கரையில், புள்ளித்தோ லாடை புனைந்தநம் பெருமான் பொலிவுறும் இருக்கைகள் மொழிவாம். க

மாண்ட கன்னிச வரலாறு

மன்னுமெய்க் கிளவிக் கரிமுகன் தென்பால் மாண்டகன் னிசனை வழுத்திக், கன்னிஓர் பாகன் அருளினுன் மாண்ட கன்னிமா முனிவரன் என்பான், மின்னிடைக் கடவுள் மடந்தையர் ஐவர் வீங்கிள வனமுலை திளைத்துப், பொன்னுல கடத்தின் நுகர்பெரும் போகம் புவிமிசை இருந்தவா நுகர்ந்தான்.

மதமலம் அறுக்குஞ் சகோதரத் தடநீர் வரைப்பிடை வளாகம் ஒன் றியற்றி, அதனிடை இனிது வீற்றிருந் தரம்பை அந்நலார் இளமுலைப் போகஞ், சதமகன் சமழ்ப்ப நுகர்ந்தனன் நெடுநாள் கடைமுறை முத்தியிற் சார்ந்தான், சிதர்அரித் தடங்கண் ஐயரம் பையர்தந் தீர்த்தம்என் றுரைப்பதத் தடமே. ந

வரிவிழி சேப்பக் குடமுலை மதர்ப்ப வால்வளை கறங்கவண் டிமிருந், தெரிமலர்க் கூழைத் தையலார் குடையுந் தெண்புனல் தடம்

---

க. குப்பாயம் - சட்டை. பொதிந்த - நிறைந்த. கச்சப + ஆலயம் = கச்சபாலயம்.

உ. மெய்க்கிளவிக் கரிமுகன் - சத்தியமொழி விநாயகர். 'மண்ட' என்னும் வடசொல்லின் தாது அடியாக வந்தமையால், மாண்ட கன்னி என்பதற்கு அழகிய காதையுடையவன் என்பது பொருள் என்ப. பழைய பதிப்பில் யாண்டும் ,மாண்டு கன்னி' என்றே காணப்படுகிறது.

ந. மதமலம் - செருக்குக்காரணமாகிய ஆணவமலம். வளாகம் - இடம். அம் நலார் - அழகினையுடைய நல்ல மகளிர். சதமகன் - இந்திரன். சமழ்ப்ப - நாண. கடைமுறை - இறுதி. சிதர் - பரந்த.

ச. சேப்ப - சிவக்க. மதர்ப்ப - விம்ம. வால்வளை - வெள்ளிய (சங்க) வளையல். கறங்க - ஒலிக்க. இமிரும் - ஒலிக்கின்ற. தெரி - ஆராய்ந்த.

அதன் குலைமேல், எரியலர் குடங்கை மாண்டகன் னீசன் இனிதமர் இருக்கையின் குடசார், அரில்அறுத் தருள்வன் னீசம்ஒன் றுண்டால் அதுவருங் காரணங் கேண்மின். ௪

வன்னீச வரலாறு

மூதழற் கடவுள் தன்னுடன் பிறந்த முன்னவர் மும்மையர் உள்ளார், பேதுறு மதுகை மூவரும் விண்ணோர் பெறும் அவிசுமக்கலாற் றுது, மேதகும் ஆவி இறந்தனர் அதனை விரிதழற் பண்ணவன் நோக்கி, யாதினிப் புரிவல் எனக்கும்இவ் விடும்பை எய்துமே என்றுள மழுங்கி. ௫

மகோததி யனைய ஐயரம் பையர்தம் வாவியி னுள்ளுறக் கரந்து, சகோதரர் தம்மை இழந்தஎன் றனக்குச் சகோதரம் நீதடம் புனலே, உகாதெனைப் புரத்தி என்றுரைத் தங்கண் உறைந்தனன் அன்று தொட் டளிகள், முகேரெனப் பாயும் மலர்த்தடம் அதற்கு மொழிபெயர் சகோதர தீர்த்தம். ௬

---

கூழை - கூந்தல். குடையும் - முழுகுகின்ற. குலை - கரை. எரிஅலர் - நெருப்பு விரிந்த. குடங்கை - அகங்கை. அரில் - குற்றம்.

௫. மூதழற் கடவுள் - பெரிய அக்கினிதேவன். அக்கினிதேவன் தமையன்மார் மூவரை, காருகபத்தியம் முதலிய மூன்று அக்கினிகள் என்றார் உரையாசிரியர். பேதுறு - மயங்காத. மதுகை - வலிமை. அவி - வேள்வியிற் கொடுக்கும் தேவர் உணவு.

அக்கினிதேவன் இவ்வாறு அழுதமையின் அவனுக்கு, 'ருத்ரன்' என்னும் பெயர் வந்ததென்க. ருத்ரன் என்பது, ரோதனம் செய்தவன் (அழுதவன்) என்னும் பொருளில் அக்கினிதேவனுக்கும், ருதத்தை (துக்கத்தை) ஓட்டுபவன் என்னும் பொருளில் இறைவனுக்கும் பெயராய் வழங்கும். இவ்வாறு கந்தபுராணம் ததீசிப் படலத்திலும் கூறப்பட்டமை காண்க. (௫௫—௫௬) இஃதறியாதார் உருத்திரன் என்பதுபற்றி இறைவனை அழுதவனென்று கூறித் தாம் அழுகின்றவராவர். அக்கினிதேவன் அழுதவரலாறு, 'தேவாசுரயுத்தத்தில் தேவர்கள் அக்கினியினிடத்தில் பாதுகாத்தற்கு வைத்த பொருள்களை அவன் அபகரித்தமைபற்றித் தேவர்கள் அவனை வலிசெய்ய, அதனால் அழுதனன்' எனவுங் கூறப்படும்.

௬. மகோததி - பெரிய கடல். உகாது - புறம்பே தள்ளாமல். புரத்தி - காப்பாற்று. முகேரென, ஒலிக்குறிப்பு.

எரிகழற் புத்தேள் அன்னணம் உறைய இமையவர் எங்கணுந் துருவிப், பெரிதிளைப் பெய்தி ஆண்டுவந் துறலும் பெருந்தடத் துறையுமீன் அவர்க்குத், தெரிதர இயம்பிற் றுகவெங் கனலோன் செயிர்த்தடைக் கலம்புகுந் தேனைப், பரிவுறக் காட்டிக் கொடுத்த நீர் தூண்டிற் படுகொலை யுறுகெனச் சபித்து. ௭

மின்னென வெளிக்கொண் டிரந்துநின் றழைக்கும் விண்ணவர் தங்களை நோக்கி, முன்னுறப் போமின் வருவல்என் றியம்பி முளரி நீர்த் தடமதன் கரையின், மன்னுவன் னீச வள்ளலை இருத்தி மர புளி அருச்சனை யாற்றி, அன்னவன் அருளாற் பெற்றனன் இமை யோர் அவியெலாஞ் சுமந்திடும் ஆற்றல். ௮

தமையன்மார் மூவர் சுமக்கலாற் றாது தளர்வுறும் அவியெலாந் தானே, கமையுறப் பொறுக்கும் மதுகைபெற் றிமையோர் குழாத் தினுட் கலந்தனன் கனலோன், இமையவில் வாங்கிப் புரிசைமூன் றிறுத்த எந்தைவன் னீசனை அண்மி, அமைவரும் அன்பால்வழி படப் பெற்றோர் அருந்திறல் எய்திவீ டடைவார். ௯

சவுனகேச வரலாறு

விளம்புவன் னீசந் தனக்குமேல் பாங்கர் விழைதருஞ் சவுன கேச் சரத்திற், களங்கனி விளர்ப்ப விடங்கிடந் திமைக்குங் கறைமி டற் றடிகளை இருத்தி, வளம்பயில் காதற் சவுனக முனிவன் மரபுளி அருச்சனை யாற்றி, உளம்பயில் மலநோய் தவிர்ந்துபே ரின்ப வீடுபே றுற்றதவ் வரைப்பு. ௧௦

ஆகத் திருவிருத்தம் - ௯௧௧.

---

௭. மீன்கள் அக்கினி தேவனைத் தங்களுக்குக் காட்டினமையால் தேவர்கள் அவற்றிற்கு இமையாநாட்டம் அளித்தனர் என்ப.

௯. கமை - பொறுமை. திறல் - வலி.

௧௦. சவுனகர் என்பது கிருச்சமதமுனிவர் புதல்வராகிய சுனகர் புதல்வராகலின் வந்த தத்திதப்பெயர். இவரைப் பிருகுமுனிவர் மனைவியை அரக்கன் தூக்கிக்கொண்டு போகும்பொழுது அவன் தோளில் பிறந்தவர் என்றுங் கூறுவர்.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள் (க)'இன்பமும், வீடும், வலிமையும் இறைவன் வழிபாட்டினால் அடையலாகும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

வெள்ளிச் சட்டையை அணிந்தாற்போல வெண்ணீற்றொளிவிளங்கும் மேனியை உடைய முனிவர்களே, இதுகாறும் கச்சபாலயத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, மலநோயைப் போக்கி, வீடுபேற்றினைத்தரும் சகோதர தீர்த்தத்தின் கரையிலுள்ள தலங்களின் பெருமையைச் சொல்வோம்.

### மாண்ட கன்னீசம்

சத்திய மொழி விநாயகருக்குத் தெற்கில், மாண்டகன்னி முனிவர் தமது பெயரால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்து, தேவமாதர்கள் ஐவர் இன்பத்தை நுகர்ந்து, பொன்னுலகத்தில் அனுபவிக்கும் போகத்தை, மண்ணுலகத்திலேயே, அத்தடாகக்கரையில் ஓர் இடம் அமைத்து, இந்திரன் காணும்படி அனுபவித்திருந்து, முடிவில் முத்தியை அடைந்தனர். அதனால் அத்தீர்த்தத்திற்கு 'ஐயரம்பையர்' தீர்த்தம் என்னும் பெயர் உண்டாயது.

### வன்னீசம்

அத்தலத்திற்கு மேற்கில் 'வன்னீசம்' என்னும் ஒருதலம் இருக்கின்றது. அதன் வரலாறு: அக்கினிதேவனுடன் பிறந்த தமையன்மார் மூவர், தேவர்களுக்குத் தரப்படும் அவிசைச் சுமக்க இயலாதவர்களாய் இறந்தனர். அதைக் கண்ட அக்கினிதேவன், தனக்கும் இத்துன்பம் வருமே என்று மனம்நொந்து, காஞ்சியில் ஐயரம்பையர் தீர்த்தத்தையடைந்து, 'சகோதரரை இழந்த எனக்கு நீயே சகோதரம், என்னை வெளியில் அகற்றாது காப்பாற்றவேண்டும்' என்று சொல்லி அதனுட் புகுந்து மறைந்திருந்தனன். அன்றுமுதல் அதற்குச் 'சகோதர தீர்த்தம்' என்னும் பெயர் உண்டாயிற்று. தேவர்கள் அக்கினிதேவனை எங்கும் தேடிக் காணாது அங்குவந்தனர். அந்நீரிலுள்ள மீன்கள் அக்கினிதேவன் அங்கு மறைந்திருப்பதைத் தேவர்களுக்குத் தெரிவித்தன. அதனால், அக்கினிதேவன் அவைகளை 'நீவிர் தூண்டிலின் வாய்ப்பட்டுக் கொலையுறுக.' என்று சபித்து, மின்னலைப்போலக் கரையில்வந்து நின்று, தேவர்களை நீங்கள் முன்னே செல்லுங்கள்; யான் பின்னே வருவேன் என்று சொல்லி அனுப்பிவிட்டு, அத்தீர்த்தக்கரையில் வன்னீசப்பெருமானை இருத்தி வழிபட்டு, தமையன்மார்களால் சுமக்க இயலாத அவிகளையும் தானே சுமக்கும் ஆற்றலைப் பெற்ற

னன். அப்பெருமானை வழிபடுகின்றவர்கள் மிக்க வலிமை பெற்று முத்தியையும் அடைவார்கள்.

சவுன கேசம்

வன்னீசத்திற்கு மேற்கில் சவுனகமுனிவர், தமது பெயரால் ஓர் இலிங்கம் தாபித்து முறைப்படி பூசித்து, மலநோய் நீங்கி வீடுபேற்றை அடைந்தனர். அத்தலம் சவுனகேசம் எனப்படும்.

---

# சுரகரேசப் படலம்

எண்சீரடியாசிரிய விருத்தம்

தாண்டவம் ஆடுதல் வல்ல பெம்மான் தங்குஞ் சகோதர தீர்த்தப் பாங்கர், மாண்டகன் னீசம்வன் னீசம் விண்ணும் மண்ணும் புகழுஞ் சவுன கேசம், ஈண்டு விளங்க எடுத்து ரைத்தாம் எம்மையும் நல்கிடுஞ் சவுன கேசத், தாண்டகை வைப்பின் வடக்கண் மேவும் அண்ணற் சுரகரம் பன்னு கிற்பாம். க

மந்தரமலைச் சிறப்பு

கலி விருத்தம்

சுந்த ரத்திருமால் முதற் சூழ்சுடர்
அந்த ரத்தவர்க் காரமு தீந்தது
கந்த ரத்து முனிக்கணம் யோகுசெய்
மந்த ரப்பெயர் மால்வரை உண்டரோ. உ

சுற்றும் யாளி முழைதொறுந் துஞ்சுவ
வெற்றி மத்தென வேலை கடைந்தநாள்
அற்றம் நீக்கும் அமுதம் இடைஇடைப்
பற்றி நின்றிடும் பான்மை நிகர்க்குமால். ௩

வஞ்சிக் கப்படு தானவர் வாரியின்
விஞ்சத் தீஞ்சுவை வேறு கடைந்தெய்தத்

---

க. எம்மையும் - இம்மை, மறுமை, வீடு என்னும் முப்பயனும். அண்ணல் - பெருமை.

உ. சுடர்சூழ் என மாறுக. கந்தரம் - குகை.

௩. 'துஞ்சுவ நிகர்க்கும்' என முடிக்க.

௪. தேவர்களால் அமுதம் உண்ணுதவாறு வஞ்சிக்கப்பட்டனர் ஆத

தஞ்சத் தற்பெயர்ப் பான்அகழ் தன்மையி
னஞ்சப் புற்றங் ககழ்வ குடாவடி. ச

துன்னு தானவர் சூழுஞ் செயலறிந்
தன்ன குன்றம் பெயர்ப்பரி தாகமா
மன்னு மார்பினன் பள்ளிகொள் மாட்சியின்
மின்னு நீல்முகில் மீமிசைத் துஞ்சுமால். ரு

திரிபு

செல்லி யங்குழல் வண்டிமிர் தேக்கடி
வல்லி யங்குழ வாட்கண் படுப்புவ
அல்லி யங்குழ லார்வெறி யாடிய
பல்லி யங்குழ லாற்பனித் தஞ்சுமால். சு

இரண்டடிப் பாடக மடக்கு

காம ரம்பு கனற்றம ரம்பரர்
காம ரம்பு கனற்றம ரம்பரர்

---

லால், 'வஞ்சிக்கப் படுதானவர்' என்றார். விஞ்ச - மிகுதியாக. 'விஞ்ச எய்த' என இயையும். சுதை - அமுதம். தஞ்சம் - எளிமை. அஞ்ச - யாவரும் அஞ்சும்படி; நஞ்சப் புற்றென வுரைத்தலுமாம். குடாவடி - கரடி.

ரு. சூழ்தல் - ஆராய்தல், சுற்றிக் கொள்ளுதல் இருபொருளுங் கொள்க. மா - இலக்குமி. மின்னல் இலக்குமியையும், நீலமுகில் கரிய திருமாலையும் ஒக்கும் என்றபடி.

சு. (இச் செய்யுள் முதல் உரு ஆம் செய்யுள் வரையிலும் உள்ளவை மிகப் பழைய உரை. இவற்றையே பின் வந்தோர் யாவரும் கொண்டிருக்கின்றனர்.)

இ-ள். செல் இயங்கு உழல் வண்டு இமிர் தேக்கு அடி - மேகங்கள்தவழாநின்ற (உன்னதத்தையும்) சுழன்று திரியாநின்ற வண்டுகள் (தேனுண்டு) இசைபாடும் (பூங்கொத்தையுமுடைய) தேக்கமரத்தினது அடியின் கண், குழ வாள் கண் படுப்புவ வல்லியம் - தமது குட்டியை ஒள்ளிய கண்துயிற்றும் புலிகள், அல்லி அம் குழலார் வெறியாடிய - அகவிதழால் (ஆகியமாலையையணிந்த) அழகிய கூந்தலையுடைய குறமகளிர் வெறியாட்டயருமிடத்தில் நிகழும், பல் இயம் குழலால் பனித்து அஞ்சும் - பலவாச்சியங்களினொலியாலும் வேய்ங்குழ லொலியாலும் நடுக்குற்று அஞ்சும் எ-று. குழ, ஆகுபெயர். ஆல், அசை.

எ. இ-ள். காமர் அம்பு கனற்று அமர் அம்பரர் - மன்மதபாணம்

ஏம மல்கி யிருந்துணர் கான்றரு
ஏம மல்கி யிருந்துணர் கான்றரும் ௭

வண்ட லம்படர் மாவரை யாரமை
வண்ட லம்படர் மாவரை யாரமை
பிண்டி யைவன நாறிய வில்லமுன்
பிண்டி யைவன நாறிய வில்லமும் ௮

வான ரம்பைய ராவிற் பயந்துதாய்
வான ரம்பைய ராவிற் பயந்தாத்

---

உடற்றுகின்ற போரினுக்கு (உடைந்த) தேவர்கள், புகல் காமரம் நல் தமரம் - பாடும் காமரமென்னும் ஓரிசையாகிய நல்ல ஒலியை, பார் ஏமம் அல்கி இருந்து உணர் கான் தரு - அஞ்சியரான குறவர் மறைவிடத்திற் றங்கியிருந்து கேட்டு இசைவிகற்பங்களை ஆராயும் காட்டின் கண்ணுள்ள மரங்களினது, ஏமம் மல்கி இருமை துணர்கான் தரும் - பொன்னொளி நிறைந்து விளங்காநின்ற பெரிய பூங்கொத்துக்கள் வாசனையை வீசும் எ-று.

அம்மலையிலுள்ள குறவரும் பண்விகற்பங்களுணர்ந்தோர் என்பார், உணரென்றார். காமர், உயர்வின் கண்வந்த பால்வழுவமைதி.

௮. இ-ள் வண்மை தலம் படர் மா வரையார் - வளவிய இடங்களிற் செல்லும் கரிய மலையின்கண்ணுள்ள குறவர், அமை பிண்டி ஐவனம் நாறிய இல்லம் முன் - செய்தமைத்த தினைமாவும் மலைநெல்லும் பொருந்திய குடிசைகளின் முன்னர், பிண்டி ஐ வனம் நாறிய வில்லம் உம் - அசோகும் அழகிய சுனைநீரும் மணம் வீசாநின்ற வில்வமரமும் - வண்டு அலம்பு அடர் மா அரை ஆர் அமை - வண்டுகள் இசை பாடாநின்ற நெருங்கிய மாமரமும் தூரையுடைய ஆத்தியும் மூங்கிலும் உள்ளன எ-று.

நிலைமொழி உயிரீறுதலின் வில்லமென்னும் வருமொழியின் இகர உயிரூர்ந்த மெய்யை வகர உடம்படு மெய்யாக்கி, அம்மொழியை இல்லமெனக்கொண்டு, தேற்றாமரமெனினும் அமையும். விரிந்துத் தொக்குநின்ற உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன.

௯. இ-ள். வானரம் பை அராவின் பயந்து வான் தாய் - குரங்கானது படத்தையுடைய பாம்பிற்குப் பயந்து ஆகாயத்தில் தாவி, அரம்பையர் ஆவில் பயம் தர - அங்ஙனம் வசிக்கும் தெய்வமகளிர் காமதேனுவின் ஒளி பொருந்திய பாலைக் கறந்தூட்ட, தான் நிரப்பு அவிய கணத்து உண்டு - அக்குரங்கு தான் (பசியென்னும்) வறுமைகெடக் கணப்போதினுண்டு, தால்

தானி ரப்பவி யக்கணத் துண்டிசை
தானி ரப்பவி யக்கணந் துஞ்சுமே. ௯

### சித்திர கவி

### முரச பந்தம்

வஞ்சிவிருத்தம்

தான மாந்தரு மஞ்சரி
வான மாந்தரு மஞ்சரி
தான மாந்தரு மஞ்சரி
வான மாந்தரு மஞ்சரி. ௧௦

---

இசை நிரப்ப வியம் அம் கண் துஞ்சும் - அம்மகளிர் காவாலிசையைப் பாட (தாலாட்டுப்பாடல் செய்ய என்றபடி) பெருமையாகிய அழகிய கண் துயிலும் எ-று.

ஏ - ஈற்றசை - அராவின், உருபுமயக்கம்.

௧௦. ஒவ்வோரடி ஒவ்வொரு வரியாக நான்கடியும் எழுதி, மேலிரண்டு வரியும் தம்முட்கோமூத்திரியாகவும் கீழிரண்டு வரியும் தம்முட் கோமூத்திரியாகவும் சிறுவார் போக்கப்பட்டும், மேல்வரி இரண்டாம் வரியினும் மூன்றும் வரியினும் நான்காம் வரியினும் கீழுற்று மீண்டு மேல் நோக்கவும், கீழ்வரியினும் அவ்வாறே மேலுற்று மீண்டு கீழ் நோக்கவும் பெருவார் போக்கப்பட்டும் இந்தவார் நான்கும் நான்கு வரியாக வருவது. இம்முரசபந்தம், கோமூத்திரி, உபய நாகபந்தம், சுழிகுளம், சருப்பதோபத்திரம் இவற்றின் சித்திரத்தை இப்புத்தகத்திறுதியிற் காண்க.

இ-ள். தானம் ஆம் தருமம் சரி - சோடச தானமும் உண்டாகிய முப்பத்திரண்டறங்களும் (உலகத்தில்) சஞ்சரிக்க, வானம் ஆம் தரும் அம் சரி - மேகங்கள் நீரைப் பொழியாநின்ற அழகிய அம்மலையின் பக்கத்தில், தானம் மாந்தரு மஞ்சரி - யானையின் மதசலங்களும் மாமரங்களின் பூங்கொத்துக்களும், வானம் மாந்தர் உம் அஞ்சு அரி - விண்ணுலகத்தி லுள்ளோரும் மண்ணுலகத்தி லுள்ளோரும் அஞ்சாநின்ற சிங்கங்களு முள்ளன எ-று.

சரி என்னும் முதனிலைத் தனிவினை வினை எச்சப்பொருளில் வந்தது. தானம், மாந்தரு மஞ்சரி, அரி இவை விகுதி பெறாதுவந்தசாதி யொருமை. வானம் இடவாகு பெயர். தொக்கும் விரிந்தும் வந்த உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன.

தகர விகற்பத்தான் வந்த மடக்கு

கலி விருத்தம்

தத்தை தித்தித்த தோதிதை தாதுதேத்
தொத்து தித்துத் திதித்ததத் தித்துதூத்
துத்தித் தேதத்த தீதுதை தீத்தத்தத்
தொத்த தாது ததைத்துத் துதித்ததே. ௧௧

கோமூத்திரி

வான ளாவின வார்கனி யாவிரை
கான றுவிள வார்கடி யாவரை

௧௧. இ-ள். தத்தை தித்தித்தது ஒது இதை - கிளிகள் தித்தித்தவ சனங்களைப்புகலா நின்ற புதியதினைப்புனம், தாது தேம் தொத்து உதித்து திதித்தது - (வேங்கைமரங்களில்) மகரந்தத்தையுந் தேனையுமுடைய பூங் கொத்துக்கள் அரும்பக் குறமகளிர் காவலுடையதாய், அத்தித்து - யானையின் கொம்புகளும், தூ துத்தித்து - பாம்பினது புனிதமான தலையின்கணுள்ள ரத்னங்களும், ஏதத்த தீது உதை தீதத்து அத்து ஒத்த தாது - துன்பப்பகு தியவான தீங்குகளை யோட்டாநின்ற நெருப்பிற் சுடப்படுதலால் (மாற்று யர்ந்து) சிவந்த நிறம் பொருந்திய பொற்சட்டிகளும், ததைத்து துதித்தது- நெருங்கப்பெறுதலால் (யாவரும்) புகழுந் தன்மையை யுடையது எ-று.

தித்தித்தது, வினைமுற்றுப் பெயர் திதித்ததென்னும் வினைமுற்று வினை எச்சமாய்த் துதித்ததென்னும் முற்று வினையைக் கொண்டு முடிந்தது. யானைக்கொம்பு முதலியவை குறிஞ்சிக் கருப்பொருளாதலானும், அந்நிலத் துள்ள புனத்தின் சிறப்புக் கூறுதலானும் அத்தித்து துத்தித்து என்னும் குறிப்பு வினைமுற்றுப் பெயர்கள் கொம்பையும் மணியையும் உணர்த்தின. துத்தி, இருமடி யாகுபெயர். துத்தி - படப்பொறி. அது படத்தையுணர்த் தித் தானியாகுபெயராய்த் தலையை யுணர்த்திற்று. உதித்து, செயவெனெச் சத்திரிபு. தத்து, படுவிகுதி குன்றிவந்த செயப்பாட்டு வினையெச்சம். ததைத்து, மெல்லொற்று வல்லொற்றாய் வந்த பிறவினை யெச்சம்

இரண்டிரண்டு வரியாக ஒரு செய்யுள் எழுதப்பட்டு மேலும்கீழும் ஒன்று இடையிட்டு வாசித்தாலும் அச்செய்யுளே வருவது. இது முன் இரண்டு அடி யும், பின் இரண்டு அடியும் தம்முட் கோமூத்திரியாகும். ஒன்றும், மூன்றும் இரண்டும் நான்கும் தம்முட் கோமூத்திரியாதலும் உண்டு.

௧௨. இ-ள். வான் அளாவின வார் கனி ஆவிரை - ஆகாயத்தை யளாவிய நீண்ட கனிகளையுடைய ஆவிரையும், கான் அறு விள ஆர் கடியா வரை-

தேன லம்பின திங்கட மாருமான்
தான வம்பன ருங்கெட வூருமால். ௧௨

கூட சதுக்கம்

கந்த மல்கிய காவிற் குலாய்க்கமழ்ந்
தந்தி மானு மவிர்தளிர்க் கொக்குதிர்
செந்து வர்க்கனி தித்திக்கு மாசினி
மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்குமால். ௧௩

மாத்திரைச் சுருக்கம்

விடியற் காலத்தோர் மாத்திரை வீந்ததும்
மடியும் கஞ்சொன்று மாய்ந்ததும் ஒன்றுமாய்

---

வாசனை நீங்காத விளாமரமும் ஆத்திமரமும் நீங்காத அம்மலையின் கண்ணுள்ள, தேன் அலம்பின திம் கடம் ஆரும் மான் தானம் அம்பு - வண்டுகளாரவாரிக்க இனிய மதம் நிறைந்த யானைகளின் மதநீரானது, அனல் தாம் கெட ஊரும் - (புனங்களிற்பற்றிய) நெருப்பு அவியச்செல்லும் எ-று. ஆல், அசை. தாம் சாரியை.

௧௩. ஈற்றடி எழுத்துக்கள் ஏனை மூன்றடியுள்ளும் கரந்து நிற்க வருவது கூடசதுக்கம்.

இ-ள். கந்தம் மல்கிய காவில் குலாய் - வாசனை நிறைந்த சோலையின்கண் குலவி, கமழ்ந்து அந்தி மானும் அவிர் தளிர் கொக்கு உதிர் செம்மை துவர் கனி - வாசனை வீசி வண்ணத்தாற் செவ்வானத்தை நிகர்க்கும் விளங்குந் தளிரையுடைய மாமரத்தினின்றும் உதிர்ந்த சிவந்த பவளம் போன்ற கனியையும், தித்திக்கும் ஆசினி - தித்தியாநின்ற ஈரப்பலாவின் கனியையும், மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்கும் - பெண் குரங்குகள் புசித்துக் களிகூர்ந்து குதித்து விளையாடும் எ-று.

அந்தி மானுந்தளிர், பண்புபற்றி ஒரு பொருளோடு பலபொருள் வந்த உவமை அணி.

ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல் ஒரு மாத்திரையைக் குறைப்ப வேறு பொருள் பயக்குஞ் சொல்லாய் வருவது மாத்திரைச் சுருக்கம்.

௧௪. இ-ள். விடியற்காலத்து-விடியலாகிய காலத்தில் (விடியல் - காலை.) ஓர் மாத்திரை வீந்தது உம் - ஒரு மாத்திரையைச் சுருக்கக் கலையென்றாயிற்று, கலை - கலைமான் ஒலியும், மடியும் கஞ்சு - மடியச் செய்யுந் தன்மையையுடைய கஞ்சு, (கஞ்சு - காரி.) ஒன்று மாய்ந்தது உம் - ஒரு மாத்திரையைச் சுருக்கக் கரி என்றாயிற்று. கரி - யானை யொலியும், ஒன்று மாய்கடிகொள் அந்தியில் - ஒரு மாத்திரை குறைந்த அச்சத்தைத் தராநின்ற மாலை

கடிகொள் அந்தியிற் கானவர் தங்களோன்
ருேடியு நீளறை யார்ப்பொ டுலம்புமால். ௪௪

மாத்திரை வருத்தனை
அளபொன் றேறிய வண்டதி ரார்ப்பினுல்
அளபொன் றேறிய மண்ணதிர்ந் துக்கன
அளபொன் றேறிய பாட்டல ரீர்ஞ்சுனை
அளபொன் றேறழ கூடலைந் தாடுமால். ௪௫

---

யில் (அந்தி - மாலை.) (ஒரு மாத்திரை குறைந்த மாலை யென்றமையால் மலை யென்ருயிற்று.) அம்மலையில் வசிக்கும், கானவர் தங்கள் ஒன்று ஒடியும் நீள் அறை - குறவர்களது ஒரு மாத்திரை குறைந்த நீண்ட பாறையினது (அறை-பாறை.) (ஒரு மாத்திரை குறைந்த பாறை யென்றமையால் பறையென்ரு யிற்று.) பறை - பறையினது, ஆர்ப்பொடு உலம்பும் - சத்தத்தோடு கூடி யொலிக்கும் எ-று.

கலைமான் ஒலியும், யானையொலியும் குறவர் பறையொலியோடு கூடி யொலிக்கும் என்பது கருத்து. விடியல் காலம், இனஞ்சுட்டிய இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. ஈண்டு விடியலைக் காலை என்றது பொதுப்பட வழக்குப்பற்றி யென்க. மடியும், பிறவினை விகுதி தொக்குநின்ற பெயரெச்சம்.

௪௫. ஒரு பொருள் பயக்கும் ஒருசொல் ஒருமாத்திரை பெற்று வேறு சொல்லாய்ப் பொருள் பயந்து நிற்பது மாத்திரை வருத்தனை.

இ-ள். அளபு ஒன்று ஏறிய வண்டு - ஒரு மாத்திரை கூடிய வண்டு, (வண்டு - அளி.) (அளபொன்றேறிய அளியென்றமையால்) ஆளி - ஆளி யென் னும் ஓர் மிருகம், அதிர் ஆர்ப்பினுல் - ஒலிக்கும் முழக்கத்தால், அளபு ஒன்று ஏறிய மண் - ஒரு மாத்திரை கூடிய மண் (மண்-தரை.) அளபொன்றேறிய தரை யென்றமையால்) தாரை - நட்சத்திரங்கள், அதிர்ந்து உக்கன - கம்பித் துதிர்ந்தன, அளபு ஒன்று ஏறிய பாட்டு - ஒரு மாத்திரை கூடிய பாட்டு, (பாட்டு - கவி.) (அளபொன்றேறிய கவியென்றமையால்) காவி - நீலோற் பலங்கள், அலர் ஈரம் சுனை - அலராநின்ற குளிர்ந்த சுனையிலுள்ள நீரானது, அளபு ஒன்று ஏறு அழகு ஊடு - ஒரு மாத்திரை கூடிய அழகு ஊடு, (அழகு - வனப்பு.) (அளபொன்றேறிய வனப்பு என்றமையால்) வானப்பு, வான் அப்பு ஊடு - ஆகாச கங்கையினிடத்தில், அலைந்து ஆடும் - கலத்தசைபும் எ-று.

ஆளி முழக்கத்தால் நட்சத்திரங்கள் விண்ணினின்று உதிரும் என்பதும், சுனைநீர் ஆகாச கங்கையோடு கலவும் என்பதும் கருத்து. ஈரம் ஈரென நின்றது செய்யுள்மருஉ. சுனை, இடஆகுபெயர்.

எழுத்து வருத்தனை

காந்தள் போல்வன காமுகர் வீழ்வன
போந்து சேர்ப்பர்கள் பூக்குறி வைப்பன
சாந்தம் நாறிய சாரலின் நாரிமார்
வந்து சீர்எழிற் கைதகை கேதகை. ௧௬

உபய நாக பந்தம்

ஆம்ப னீண்மருப் பாரமு மாசறு
காம்பு மாண வுகுங்கதிர் முத்தமும்

---

௧௬. ஒருபொருள் பயப்பதோர் சொல்கூறி, அதனில் ஒவ்வோரெழுத்துச் சேர்க்க வெவ்வேறு பொருள் பயப்பது எழுத்து வருத்தனை.

இ-ள். சாந்தம் நாறிய சாரலின் நாரிமார் வந்து சீர் எழில் கை - சந்தன மரம் வாசனை வீசாநின்ற அம்மலைப்பக்கங்களில் வசிக்கும் குறமகளிரது சிறப்பு வாய்ந்த அழகிய கைகள், காந்தள் போல்வன - காந்தள் மலரை யொப்பனவாம், நாரிமார்தகை - அம்மடவார் வனப்பு, காமுகர் வீழ்வன - காமிகளால் மயங்கி வீழப்படுவனவாம், போந்து சேர்ப்பர்கள் பூ குறிவைப்பன கேதகை - (இரவுக்குறிக்கண்) வந்து (தலைவிவரப் பெருமையால் தாம் வந்தமை யறிதற்கு) தலைவர்களால் அழகிய அறிகுறியாக வைக்கப்படுவன தாழை மலர்கள் எ-று.

கை தகை கேதகை என்பனவற்றைக் கை தகை கேதகை எனப்பிரித்துக் காந்தள் போல்வன காமுகர்வீழ்வன போந்து சேர்ப்பர்கள் பூக்குறிவைப்பன என்பவற்றொடு முறைநிரனிறையாகக் கொள்க. கேதகை, பொருளாகுபெயர். இரவுக் குறிக்கட் போந்த தலைவர் தலைவி வரப்பெறுமையின் குறிவைத்துச் சென்றமை தலைவிக்கு இரங்கலைத்தரும் ஆதலின் இரங்கலுரிப் பொருட்குரிய நெய்தற்றலைவராகச் சேர்ப்பரென்றார்.

௧௭. இரண்டு பாம்பு தம்முள் இணைவனவாக உபதேச முறையான் வரையப்பட்டு, அவற்றுள் இரண்டு கவியெழுதப்பட்டுச் சந்திகளினின்ற எழுத்தே மற்றை யிடங்களினும் உறுப்பாய் நிற்க வருவது உபய நாக பந்தம்.

இ-ள். ஆம்பல் நீள் மருப்பு ஆரம் உம்-யானையினது நீண்ட கொம்பிற் பிறந்த முத்தமும், மாசு அறு காம்பு மாண உகும் கதிர் முத்தம் உம் - குற்றமற்ற மூங்கில்கள் மாட்சிமைப்படச் சிந்திய கிரணங்களை யுடைய முத்தமும், பூ பசுமை பொழில் நீடும் புரை இருள் ஓம்பி - பூக்களையுடைய பசிய சோலையின் கண் நீடிய பெரிய இருளை யோட்டி. முட்டாது பப்பு ஒளி மேவும் - குறைபாடில்லாமல் பரவிய ஒளியை வீசும் எ-று.

பூம்ப சும்பொழி னீடும் புரையிரு
ளோம்பிப் பப்பொளி மேவுமுட் டாதரோ. ௧௭

செம்பொ னன்சுனை சேர்முகை நீலமா
வம்பு நீடு மருங்களி யாரவிள்
கொம்புப் பூமலி பொன்னவிர் குன்றத்தூர்
பம்பு சேணதி பாமருட் டாருமே. ௧௮

சூழி தளம்
வஞ்சித் துறை

மதிபகவே யான்ற
தினைமணிமா வாவன்

---

முத்தங்களினொளி சந்திர கிரணம் போலக் குறைபாடின்றி இருளை யோட்டுமென்பது கருத்து.

௧௮. செம்பொன் நன்மை சுனை சேர் முகை நீலம் மா வம்பு நீடு மருங்கு அளி - சிவந்தபொன்னாலாகிய நல்ல சுனையிற் பொருந்திய முகைத்த நீலோற் பலங்களின் பெருமை பொருந்திய வாசனை நீடிய பக்கங்களில்( சஞ் சரிக்கும்) வண்டுகள், ஆரவிள் கொம்புப்பூ மலி பொன் அவிர் குன்றத்து ஊர் பம்புசேண் நதி - மிகவும் மலர்ந்த கோட்டுப்பூக்கள் நிறைந்த பொற்கட்டி கள் விளங்காநின்ற அம்மலையின்கண் தவழாநின்ற நெருங்கிய ஆகாய கங்கை யில், பா மருட்டு ஆரும் - பாய்ந்து ஆகாய கங்கையைச் சுனைநீரென்றே மயங்குதலைப் பொருந்தும் எ-று.

பா என்னும் முதனிலைத்தனிவினை, வினையெச்சப் பொருளில் வந்தது. மருட்டு, தொழிற்பெயர். நதி என்பதன் முன் பகரம் மிகுதல் சித்திரத்திற்கு ஒவ்வாமையின் இயல்பாகவே பாடங்கொண்டாம். ஏழாம்வேற்றுமைத் தொகையில் சிலவிடத்து இயல்பாதல் உண்டு.

ஒரு செய்யுள் எவ்வெட்டெழுத்தாக நான்குவரி யெழுதப்பட்டு, மே னின்று கீழிழிந்தும் கீழ்நின்று மேலேறியும் புறநின்று வந்து உள் முடிய அவ்வரி நான்குமேயாகி அச்செய்யுளே வருவது.

௧௯. இ-ள். மதி பக வேய் ஆன்ற தினை மணி - சந்திரனுடல் பிளவுபட (உயர்ந்த) மூங்கில்களமைந்த தினைப்புனத்திற் சென்று, மா ஆ அன்பு அமர் துறு சே ஆயா - பெரிய பசுக்களுடன் அன்பு பொருந்திய நெருங்கிய இட பங்கள் (அப்புனத்திலுள்ள தினைக்கதிர்களை மேய்ந்து) (உடல்) வாடா, மா கனி துவன்றும் - (அம்மலையிலுள்ள) மாமரங்கள் (எப்போதும்) கனிகளால் நெருங்கி நிற்கும் எ-று.

மனி, னகரம் தொகுத்தல் விகாரம்.

பமர்துறுசே வாயா
சுளிதுவன்று மாவே. ௧௯

சருப்பதோபத்திரம்
கலிவிருத்தம்

வீயா வாமா மாவா யாவீ
யாவா யாரா ராயா வாயா
வாயா டேமா மாடே யாவா
மாரா மாதோ தோமா ராமா. ௨௦

மாலை மாற்று

தேடா வாழை மாவீ டாதே
தேனு ராமா வாழா யாதே

---

நிரையாக அறுபத்து நான்கறைகீறி, எவ்வெட்டெழுத்தால் ஒவ்வோரடியாகத் தொடுத்த நான்கடியும் மேனின்று கீழிழியவுங் கீழ்நின்று மேலேறவும் எழுதப்பட்டு, மேனின்று கீழிழியவும் கீழ்நின்று மேலேறவும்,முதல்தொடங்கி யிறுதியாகவும் இறுதி தொடங்கி முதலாகவும், மாலைமாற்றாக நான்கு முகத்திலும் வாசித்தாலும் அச்செய்யுளே வருவது சருப்பதோபத்திரம்.

௨௦. இ-ள். ஆமா வீயாவாம் - (அம்மலையிலிருக்கும்) காட்டுப் பசுக்கள் (எக்காளும்) இறவாவாம், வாயா வீ ஆ ஆராயா வாயார் ஆபா - கிடைத்தற்கரிய பூக்களைப் பசுக்களாராய்ந்து வாய் நிரம்பக் குதட்டிப் புசித்து (உடல்) வாடாவாம், வாய் ஆடு மா மாடு ஏயா - பொருந்தியவரை யாடுகள் (தமக்குக் குறைவின்மையின்) பெரிய (அம்மலைப்) பக்கங்களிலுள்ள வேறிடத்திற் செல்லாவாம், ஆம் ஆர் ஆம் - அருவி நீரும் ஆத்திமரமும் எங்குமுளவாம், மாது மா தோம் ஆரா - அழகிய மாமரங்கள் (குறைவின்றி நிற்றலின்) குற்றத்தைப் பொருந்தா எ-று.

ஏகாரம் தேற்றப் பொருளிலும், ஓகாரம் அசைநிலைப் பொருளிலும் வந்தன. அம்மலை தெய்வத் தன்மையுளதாதலின், அங்கிருக்குங் காட்டுப் பசுக்கள் வீயாஎன்றார். தெய்வமணமும் வாடாமையு முளதாதலின், கிடைத்தற்கரிய மலர் என்றார். பருவகாலமன்றி எக்காளும் பூத்துக் காய்த்துப் பழுத்து நிற்றலின், அவை இன்மையென்னுங் குற்றங்கள் கண்டோர் சொல்லப் பொருந்தா என்பார், மா தோம் ஆரா என்றார். வாயார் என்பது வினையெச்சப் பொருள் தந்தது.

ஒரு செய்யுளை ஈறுமுதலாகக்கொண்டு வாசிப்பினும் அச்செய்யுளே வருவது மாலைமாற்று.

தேயா மூவா மாரா ஞாதே
தேடா வீமா ழைவா டாதே. ௨௧

காதை கரப்பு

கலி விருத்தம்

இனநீடிய யானைவி லாரு லாவ
வனமோடிட மாதவி யாரு நாவி
புனமோடிடை யாதவி லாருண் மன்னி
யனல்வாயவி யாருவ கன்றி மாதோ. ௨௨

---

௨௧. இ-ள். தேள் தா வாழை மா வீடாது - வானத்திலுள்ள விருச்சிக ராசியைத் தோயாநின்ற (உன்னதத்தையுடைய) வாழை மரங்களும் மாமரங்களும் (எந்நாளும்) கெடாமல் நிற்கும், தேன் ஆர் ஆமா வாழ் ஆயாது - (சோலையிலுள்ள மலர்கள் ஒழுக்கும்) தேனைப் புசித்துச் (சஞ்சரிக்கும்) காட்டுப்பசுக்கள் தம் வாழ்விற்கெடாது நிலைபெறும், தே யாழ் ஆ ஆம் - தெய்வத் தன்மையுடைய மிதுனராசியைத் (தீண்டாநின்ற உயர்ச்சியையுடைய) ஆச்சா மரங்கள் பல்கிநிற்கும், ஆர் ஆறாது - ஆத்திமரங்கள் நீங்காது நிலைபெறும், தேடா வீ மா ழை வாடாது - எளிதிற் கிடைக்கும் மலர்களையுடைய புளிமா மரங்களும் உலராது நிற்கும் எ-று.

ஏகாரம் நான்கும் ஈற்றசை. அம்மலை தெய்வத்தன்மையும், கயிலை முதலியவற்றோடொன்றாகச் சேர்த்தெண்ணப்படு மான்மியமு முடைத்தாதலின், அங்கிருக்கும் மரங்களும் மிருகங்களும் கெடா என்பார், ‘வாழை மா மாழை வீடா’தென்றும், ‘ஆமா வாழாயா’ என்றும் கூறினர்.

ஒரு செய்யுள் முடிய எழுதப்பட்டு, அதன் ஈற்று மொழியின் முதலெழுத்துத்தொடங்கி ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொருசெய்யுள் போதுவது காதை கரப்பு. (அவ்வெழுத்துக்களை ஈண்டுத்தடித்த உருவினும், அச்செய்யுளை அடுத்த பக்கத்திலும் காண்க.)

௨௨. இ-ள். வில்லார் உலாவ நீடிய யானை இனம் வனம் ஓட - வில்லையுடைய குறவர்கள் உலாவுதலைக் கண்டு அச்சமுற்ற யானையின் கூட்டங்கள் காட்டில் விரைந்தோடும் அரவத்தைக்கேட்ட, மாதவி ஆரும் நாவி - குருக்கத்தி மரங்களின் (மறைந்து) தங்கியகத்தூரி மிருகம், புனம் ஒடுங்கையாத வில்லார் உள் மன்னி - தினைப்புனத்தின்கட் பயந்தோடிக் (குறைவின்மையின் வருந்துதலில்லாத குறவர் குடிசையுட் சேர்ந்து, அனல்வாய் கன்றி அவி ஆருவ - (அக்குடிசையிலுள்ள) நெருப்பிற்பட்டுவாடி (அக்குறவர்கட்கு) உணவாகப் பொருந்தும் எ-று.

வாய் என்னும் முதனிலை, வினையெச்சப் பொருளில் வந்தது.

காதைகரப்பிற் கரந்தது

வஞ்சித் துறை

கருவி வானனி
மருவி யாடின
விருவி மாடின
வருவி யாடின. ௨௩

திரிபங்கி

காப்பியக் கலித்துறை

சந்தன மார்-தடஞ் சாரலெ லாம்-தனி வானளவுங்
கொந்தலர் வீ-நெடுங் காவினெ லாம்-குனி மாந்தருவின்
நந்திய தேன்-படுஞ் சூழலெ லாம்-நனி மாந்தர்விழை
கந்தநி லாம்-கடந் தாழ்கரி போம்-கனி வீழ்ந்தழியும். ௨௪

---

௨௩. இ-ள். கருவி வான் நனி ஆடின அருவி-உலகத்திற்குத் துணைக் காரணமாகிய மேகங்கள் மிகவும் பொழியாநின்ற நீராலாய (அம்மலையினின்று விழும்) அருவியின் நீர்ப் பெருக்கில், மாடு இருவி இனம் மருவி ஆடின - பக்கத்திலுள்ள தினைத்தாட் கூட்டங்கள் பொருந்தி மூழ்கா நிற்கும் எ-று.

ஒரு செய்யுளாய் உறுப்பமைந்து ஒரு பொருள் பயப்பதனை, மூன்றாகப் பிரித்து எழுத, வெவ்வேறு செய்யுளாய்த் தனித்தனியே பொருள் பயந்து, தொடையுங் கிரியையும் தனித்தனியே காண வருவது திரிபங்கி.

௨௪. இ-ள். சந்தனம் ஆர் தடம் சாரல் எலாம் நனி மாந்தர் விழை கந்தம் நிலாம் - சந்தன மரங்கள் நிறைந்த விசாலித்த மலைப் பக்கங்களெல்லாம் மிகவும் மனிதர் விரும்பும் மலர் வாசனை விளங்கும், தனி வான் அளவும் கொந்து அலர் வீ நெடுமை காவின் எலாம் கடம் தாழ் கரிபோம் - ஒப்பற்ற ஆகாயத்தை யளாவிய பூங்கொத்தின்கண் அலர்ந்த பூக்களையுடைய நெடிய சோலைகளிலெல்லாம் மதமொழுகா நின்ற யானைகள் சஞ்சரிக்கும், சூழல் எலாம் குனி மாந்தரு இன் நந்திய தேன் படும் கனி வீழ்ந்து அழியும் - அம் மலையினிடமெல்லாம் (கனிப்பொறையால்) தலைவளைந்த மாமரங்களினது மிகுந்த தேன் பொருந்திய கனிகள் சிந்தி அழியும் எ-று.

(சாரலெலாம், காவினெலாம், சூழலெலாம் என நிறுத்தி, கந்தம் நிலாம், கரிபோம், கனி வீழ்ந்தழியும் என்பவற்றை முறை நிரனிறையாகக் கொள்ளப் பட்டது.)

மேலைச்செய்யுளிற் பிரித்த செய்யுட்கள்

வஞ்சித் துறை

க. சந்தன மார்
கொந்தலர் வி
நந்திய தேன்
கந்தநி லாம்.

உ. தடஞ்சா ரலெலாம்
நெடுங்கா வினெலாம்
படுஞ்சூ ழலெலாம்
கடந்தாழ் கரிபோம்.

ங. தனிவா னளவுங்
குனிமாங் தருவின்
நனிமாந் தர்விழை
கனிவீழ்ந் தழியும்.

பிறிது படுபாட்டு

கலி விருத்தம்

ஆன்றார்ந்த காவி னளியாடு பூந்தேன்
மான்றீன்ற வேரன் மணியீர்ங்க வுண்மாச்

---

க. (இம்மூன்றுக்கும் பழைய உரை இல்லை.) இவற்றின் பொழிப்பு: சந்தன மரத்தில் நிறைந்த கொத்தாக மலர்ந்த பூக்களில், மிகுந்த தேனும் வாசனையும் நிலைபெறும்.

உ. அகன்ற மலைச்சாரல்களிலும், நீண்ட சோலைகளிலும், மிக்க முனிவர் முதலியோர் வாழும் இடங்களிலும் மதமொழுகும் யானைகள் செல்லும்.

ங. ஒப்பற்ற வானத்தை அளாவிய, கனிகளால் வளைந்த மாமரங்களினது மனிதர்கள் மிக விரும்புங்கனிகள் வீழ்ந்து அழியும் என்பதாம்.

ஒரு செய்யுள் அடியையுந் தொடையையும் வேறுபடுப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொரு செய்யுளாய் வருவது பிறிதுபடுபாட்டு.

உரு. இ-ள். ஆன்று ஆர்ந்த காவின் அளி ஆடு பூ தேன் - பெருமை அமைந்து நிறைந்த சோலையிலுள்ள வண்டுகள் குடைந்தாடா நின்ற பூவினின்றொழுகுந் தேன் பெருக்கானது, மான்று வேரல் ஈன்ற மணி - ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிராநின்ற மூங்கிற் கணுக்கள்பெற்ற முத்துக்களை, சான்று ஓங்கு காட்டில் ஈரம் கவுள் மா தயக்குமணி முத்தோடு என்று ஊர்ந்து - (மரங்களால்) நிறைந்துயர்ந்த காட்டிற் சஞ்சரியாநின்ற குளிர்ச்சி

சான்றோருங்கு காட்டிற் றயங்குமணி முத்தோ
டேன்றார்ந்து நாட்டி னடக்கவெழு மார்த்து. உரு

ஆன்றார்ந்த காவி னளியாடு பூந்தேன்மான்
றீன்றவே ரன்மணி யீர்ங்கவுண்மாச் - சான்றோருங்கு
காட்டிற் றயங்கு மணிமுத்தோ டேன்றார்ந்து
நாட்டி னடக்கவெழு மார்த்து.

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இனைய வளம்பல பெற்று நீடி இம்பரும் உம்பரும் ஏத்த வாய்ந்து, நனைமலர்க் காவு மருங்கு டுத்து நளிர்மழைப் போர்வை தன் மெய்யிற் போர்த்துக், கனைகதிர்ப் பன்மணிச் சென்னி மேல்வான் கங்கை தலைச்சுற்று மானஓங்கிப், புனைபுகழ் மல்க அரசு வைகும் பொற்பமர் மந்தர வெற்பின் மாதோ. உசு

குமார சம்பவம்

ஆருயிர் யாவையும் உய்யு மாற்றால் அற்புத மேனி எடுத்து நின்று, பேரருள் ஐந்தொழில் ஆட்டு கந்த பிஞ்ஞகன் கந்தனை நல்க வேண்டிச், சீரிமயத்து மடப்பிடியைத் திருமணஞ் செய்தபின் எய்தி அங்கண், ஏரியல் அந்தப் புரத்தின் மன்னி இன்பக் கலவி நடாத்த லுற்றான். உஎ

---

பொருந்திய கபோலத்தையுடைய யானையினது (தந்தங்களினின்றும் உதிர்ந்த) விளங்காநின்ற அழகிய முத்துக்களோடு வாரிக்கொண்டு (அந்நில முதலியவற்றில்) பரந்து, நாட்டின் நடக்க ஆர்த்து எழும் - மருதநிலத்திற் செல்லச் சத்தித்து எழாநிற்கும் எ-று. இக்கலிவிருத்தம் வெண்பாவாய் வந்தமை அடுத்தபடியிற் காண்க.

உசு. காவு என்புழி உகரம் சாரியை. கனை - நெருங்கிய. தலைச்சுற்று - தலைப்பாகை.

உஎ. அற்புதம் - ஞானம். இங்குக் கூறப்படுகின்ற முருகவேள் திருவவதாரம் கந்த புராணத்திற் கூறப்படுகின்ற முறைக்குச் சிறிது வேறுபட்டுள்ளது. இவ்வாறு முருகவேள் திருவவதாரம் வடமொழியில் பலபடக்கூறப்பட்டுள தென்பதை, ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியர் குறிப்பித்திருக்கின்றனர். ஆசிரியர் சிவஞான சுவாமிகளுக்கு, இந்நூல் கற்றார்க்கு எவ்வகையாக வழங்கும் வரலாறுகளும் ஒழுக்கவகை முதலிய பொருள்களும் வேறொரு நூல் வேண்டாதவாறு பெரும்பாலும் புலனாய்விடுதல் வேண்டு

வண்டிமிர் கூந்தல் இமய வல்லி வனமுலை தாக்க மகிழ்ந்து புல்லிக், கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றுப் பன்னாட் கலவிப் பெருநலந் துய்க்குங் காலை, அண்டர் உணர்ந்து வெருவி அஞ்சி அம்பிகை தன்பாற் கருப்ப வீறு, கொண்டிடு முன்னஞ் சிதைவு செய்யுங் கொள்கையின் அங்கியை ஏவினார்கள். ௨௮

ஏவலும் அங்கிமற் றங்கண் ஏகி எம்பெருமான்கோயில் வாயில் முன்னர்த், தேவி உகைக்கும் மடங்கல் வைகுஞ் செய்கையை நோக்கி நடுங்கி மீண்டு, மேவிய விண்ணோர் குழாத்தை நண்ணி வினவும் அவர்க்கு விளைந்த தோதி, நீவிர்க ளேஅவண் எய்தி ஊறு நிகழ்த்திடு மின்க ளெனக்க ரைந்தான். ௨௯

அரியய னாதி அமர ரெல்லாம் அம்மொழி கேட்டுள் அழுங்கி நொந்து, பெரிதுயர் மந்தரப் பாங்கர் எய்திப் பேணி நிலமிசை வீழ்ந்தி றைஞ்சி, உரிய முறையிற் பழிச்சி நின்றே ஒலிடும் மாற்றம் உணர்ந்து நம்மான், தெரிவையொ டாடும் புணர்ச்சி நாப்பண் சென்ற னன் வெற்றரை யோடும் அங்கண். ௩௦

கண்டனர் காமனைச் செற்ற கோவைக் கழிபெருங் காதல் கரைஇ கப்பப், புண்டரி கக்கண் முகுந்தன் வாசப் பூந்தவி சாளி உருத்தி ரர்கள், அண்டர் மருத்துவர் சாத்தி யர்கள் அனைவரும்

---

மென்பது, இப்புராணத்தை இயற்றத் தொடக்கிய நோக்கங்கள் பலவற்றுள் ஒன்றாகலானும், அதற்கேற்ப இப்புராணமும் அமைந்துள்ள தாதலானும் இவ் வரலாற்றையும் வடநூலிற் கிடந்தவாறே கூறியருளினர் என்க.

௨௮. 'கண்டுகேட் டுண்டுயிர்த்து' என்றது, "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்—ஒண்டொடி கண்ணேயுள" (குறள். ௧௧௦௧) என்னும் பொய்யா மொழியைப் பொன்னேபோற் போற்றிக் கொண்ட தென்க. அம்பிகைபாற் கருப்பந் தங்கின் அம்பிகைக்குச் சிறிது மாறுபாடு உண்டாகும். அதனால் உலகத்திற்குத் துன்பம் உண்டாகுமெனத் தேவர் அஞ்சினர் என்க. அங்கி - அக்கினிதேவன்.

௨௯. உகைக்கும் - செலுத்துகின்ற. மடங்கல் - சிங்கம்.

௩௦. பழிச்சி - துதித்து. நாப்பண் - நடு.

௩௧. இறைவனும் இறைவியும் காம வயப்பட்டு உலகிற்கு இடர் விளைப் பா ரல்லர் என்பார், 'காமனைச் செற்றகோ' என்றார்.

எல்லையில் அன்பு பொங்கிக், கொண்ட மயிர்ப்புள கங்கள் மல்கக் குவித்த கரத்தொடும் ஏத்த லுற்றார். ௩௧

வெள்விடை பூங்கொடி மீது வைத்து வென்றி மழுப்படை ஏந்தி வஞ்சக், கள்ளர் கருத்தின் அகப்படாத கண்ணுதற் சாமிநின் தாளிணையில், அள்ளல் அளக்கர் அமிர்தந் தன்னாற் பூசனை யாற்றி அமிர்த ராளும், எள்ளரு மாமலர் இட்டி றைஞ்சிச் சுமன ரெனும் பெயர் எய்தி னேமால். ௩௨

ஆழி யுடைப்புவி மீதொர் சிற்றார் ஆள்பவர் தம்மை அடுத்த வரும், தாழ்வரும் இன்ப மகிழ்ச்சி எய்தித் தகைபெற வாழுகின் றார்கள் என்னில், பாழி உயர்அகி லாண்ட கோடிப் பரப்பு முழுதும் அரசு செய்யும், மாழை விழிஉமை பாக நின்னை வந்தடுத் தேங்களுக் கென்கு றையே. ௩௩

துறந்தவர் உள்ளக் கமல மேவுஞ் சோதித் திருவுரு போற்றி போற்றி, மறந்திகழ் வோரை எறிந்து வீசும் மறந்திகழ் வாட்படை யாளி போற்றி, உறந்த மலர்ப்பதம் போற்றி யாங்கள் உன்றன்

---

௩௨. இறைவன் வஞ்ச நெஞ்சக் கள்ளர் கருத்தின் அகப்படாதவன் என்பதை, "காவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" (திருமு. ௪. பதி. ௭. ௧.) என்றற் றொடக்கத்துத் திருமொழிகளா லுணர்க. அள்ளல் அளக்கர் - சேற்றையுடைய கடல். இறைவன் ஆலகால விடத்தை உண்டபின் தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் பெற்ற காலத்தில் அவ்வமுதத்தால் இறைவனைப் பூசித்தனரென்றும், அதனால் அவர்களுக்கு அமுதர் என்கின்ற பெயர் வந்ததென்றும் இதனால் தெரிகின்றது. சுமனர் - நல்ல மனத்தை யுடையவர்.

௩௩. மாழை - மாமரம்; அஃது ஆகுபெயராய் வடுவை உணர்த்தும்.

௩௪. ஏனைப் பற்றுக்களைத் துறந்து தன்னையே உள்கும் அன்பர்கள் உள்ளத்து இறைவன் சோதித் திருவுருவமாக விளங்குவன் என்பதை, "அன் பில் ஊன்ற உள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்" (பெரிய. ஞா. அ௩௫.) எனவும், "இரந்திரந் துருக என்மனத்துள்ளே யெழுகின்ற சோதியே" (திருவா. கோயில்திரு. ௬.) எனவும், "ஒப்புனக்கில்லா ஒருவனே அடியேன் உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே" (திருவா. பிடித். ௫.) எனவும் வரும் அருட்டிரு மொழிகளாலுணர்க. மறம் இரண்டனுள் முன்னது மாறுபாடு, பின்னது வெற்றி. உறந்த மலர் - நுணுகிய (மென்மையான) மலர்.

அடைக்கலங் கண்டு கொள்ளென், றறந்தலை நின்ற அமரர் போற்ற
அங்கணன் நோக்கி அருள்சு ரந்து. ௩௪

வேண்டுவ கூறுமின் நுங்கட் கின்னே மேவர நல்குதும் என்ற
ருள, ஈண்டிய மாயனை உள்ளிட் டோர்தம் ஏவலின் நான்முகன்எத்தி
எந்தாய், மாண்ட மலைமகள் பாற்க ருப்பம் வாய்ப்பது வேண்டிலர்
மால்மு தலோர், காண்டக வந்தனர் மேல்இ யற்றுங் கடன்அறி
யேங்கள் எனக்க ரைந்தான். ௩௫

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தனக்கெனச் சிறிதும் வேண்டாத் தன்மையன் உயிர்கட் கென்றே
நினைப்பரு நடனம் பூண்ட நின்மலன் அற்றேல் இந்தப்
பனித்தமுத் துருக்கி யன்ன வெண்புனல் பருகு மின்கள்
எனப்புகன் றருள வல்லே எரிஇறை அங்கை ஏற்றான். ௩௬

எண்ணரும் வருடங் காறும் ஆயிர இரவிப் பொற்பின்
அண்ணல்பால் நின்று வீழும் அதனைஅவ் வனலோன் உண்ண
விண்ணவர் எவர்க்கும் அந்நாள் மேவருங் கருப்பம் நீடத்
துண்ணெனத் துளங்கி வெப்பு நோயினில் தொடக்குண் டார்கள். ௩௭

மீளவும் இரந்து வேண்டும் விண்ணவர் குழாத்தை நோக்கி
வாளெனப் பிறழ்ந்து நீண்டு மதர்த்தரி பரந்து கூற்றை

---

௩௫. மேவர - பொருந்த. மேவரம் எனக்கொள்வாரும் உளர். தம் கருத்தைத் தெரிவித்தற்கு அஞ்சினவராய், தேவர்கள் யாவரும் நான்முகனை ஏவினர் என்பார், 'மாயனை உள்ளிட்டோர்தம் ஏவலின் நான்முகன் எத்தி...... கரைந்தான்' என்றார். கரைந்தான் - கூறினன்.

௩௬. இமையவர் வேண்டிய இதற்கு இறைவன் முனிவு கொள்பவனல்லன் என்பார், 'தனக்கெனச்......நின்மலன்' என்றார். எரிஇறை - அக்கினி தேவன்.

௩௭. இறைவனது வீரியம் அக்கினி மயமாதலின் யாவரும் வெப்புநோய் கொண்டார் என்க. இறைவன் ஊர்த்துவரேதா, வன்னிரேதா எனப்படுதலை மேலே (௧௯௨. பக்) காண்க. அக்கினிதேவன் தான் உண்டதைத் தேவர்கள் எல்லாரிடத்தும் ஆக்கும் இயல்புடையனாதலால் அவன் உண்ணத் தேவர்கள் யாவரும் கருக்கொண்டனர் எனக.

௩௮. ஆள் - அடிமை. சேனை என்றது மன்மதனுக்குப் படையாகிய பெண்களை.

ஆளெனக் கொண்டு மைதோய்ந் தசல்விழிச் சேனை வில்வேட்
காளையை முனிந்த வீரன் கருணையால் விளம்ப லுற்றான். ௩௮

கராத்துயிர் பருகி வேழங் காத்தவன் முதலாம் நீவிர்
பராய்த்தொழுங் காஞ்சி வைப்பிற் பயில்சுர கரேச மென்னச்
சுராக்கனும் அவுணன் ஆவி தொலையநாம் அமைத்த தானம்
இராக்கதிர் எறிக்கும் இந்து முடிநமக் கினிய சூழல். ௩௯

சுரகரே சத்தின் பாங்கர்ச் சுரகர தீர்த்தம் உண்டால்
விரவிநீர் படிந்தோர் பாவ வெப்புநோய் முழுதும் நீங்கும்
இரவிநாள் கழிய நன்றாம் நீர்அவண் எய்தி நம்மைப்
பரவிநீ ராடில் இந்த வெப்புநோய் பாறுங் காண்மின். ௪௦

ஆயிடை நீங்கிப் பின்னர் மேருவை அணுகி அங்கண்
மேயஇக் கருப்பந் தன்னை விடுமின்என் றகன்று நீங்க
மாயனே முதலாம் விண்ணோர் மகிழ்ந்தெழும் உள்ளத் தோடுந்
தூயசீர்க் காஞ்சி எய்திச் சுரகரந் தன்னைக் கண்டார். ௪௧

காண்டலும் உவகை பொங்கிச் செயத்தகு கடன்கள் முற்றித்
தீண்டினோர் பிறவி மாய்க்குஞ் சுரகர தீர்த்தம் ஆடி
மாண்டரு சுரக ரேச வள்ளலை அருச்சித் தேத்தி
வேண்டினர் வேண்ட லோடும் வெப்புநோய் ஒழியப் பெற்றார். ௪௨

பெற்றபின் அங்கண் நீங்கிப் பெறலரு மேருக் குன்றின்
உற்றமாத் திரையின் அன்னோர் வயாவுநோய் ஒழிவு பெற்றார்
மற்றவர் அகட்டின் நீங்கி வளங்கெழு சுடர்பொற் சோதி
பற்றிளம் பரிதி நூறு யிரமெனப் பரந்து தோன்றி. ௪௩

வடவரை முழுதுஞ் செம்பொன் வண்ணமாச் செய்து தெண்ணீர்த்
தடநெடுங் கங்கை யாற்றாற் சரவணப் பொய்கை மேவிக்

௩௯. கரா - முதலை. பராய் - துதித்து. இரா வென்புழி எழாவது விரிக்க. இந்து முடி - சந்திரனைச் சூடிய. சூழல் - இடம். சுராக்கன் என்னும் அசுரனை அழித்த வரலாற்றை, ஆசிரியர் கச்சியப்ப முனிவர் கூறியிருத்தலின், (இருபத்தெண்டளிப் படலம் உ௫௭—உ௯௯) ஆண்டுக் காண்க.

௪௩. வயாவுஎன்புழி உகரம் சாரியை. பொருள், கருப்ப நோய். அகடு - வயிறு.

கடவுளர் முனிவர் எல்லாம் உய்யுமா கருணை காட்டிச்
சுடர்வடி நெடுவேல் அண்ணல் அறுமுகன் தோன்றி னனால். ௪௪

சுரந்தவிர்த் தமரர்க் காத்த சுரகர தீர்த்தம் ஆடி
வரந்தருஞ் சுரக ரேச வள்ளலை வணங்கிப் போற்றி
நிரந்தரம் அன்பு செய்யப் பெற்றவர் நெடுநீர் ஞாலத்
தரந்தைநோய் தவிர்ந்து முத்திப் பேற்றினை அடைவர் மாதோ. ௪௫

ஆகத் திருவிருத்தம் - ௩௫௯.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்டவரலாறு, (௧) காமவயப் படாமையும், ஏனையோரால் தாங்கலாற்றாத அக்கினி மயமான வித்தவும் உடைமையால், 'இறைவன் தன்மை உயிர்களின் தன்மையின் வேறு' என்னும் உண்மையை முதலாகக்கொண்டு, (௨) 'எல்லாப்பொருளும் சத்திசிவ வடிவமாகவே யுள்ளன' என்பதும், (௩) 'உடலுக்குவரும் நோயும் இறைவன் வழிபாட்டினால் நீங்கும்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

இறைவன் எழுந்தருளியுள்ள மாண்டகன்னீசம், வன்னீசம், சவுனகேசம் என்னும் தலங்களின் பெருமையைச் சொன்னோம்; இனி, சவுனகேசந் திற்கு வடக்கிலுள்ள சுரகரேசத்தின் பெருமையைச் சொல்வோம்.

சிவபிரான் முருகக்கடவுளைத் தருதற்பொருட்டு, இமயமலையில் அம்பிகையை மணம்புரிந்து கொண்டபிறகு, தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்ததும், எண்ணிறந்த வளங்களையுடையது மாகிய மந்தரமலையில் அந்தப்புரத்தில் உமாதேவியாரோடு கூடியிருப்பாராயினர். அதனைத் தேவர்கள் அறிந்து, இறைவியின்பாற் கருப்பம் உண்டாயின், அதனால் உலகத்திற்கு இடர் உண்டாகுமென்று அஞ்சினவர்களாய், அக்கினியை அழைத்து அக்கருவைச் சிதைக்குமாறு ஏவினர். அக்கினிதேவன் சென்று, அம்மையபார் ஊர்தியாகிய சிங்கம் வாயிலின்முன் அமர்ந்திருத்தலைக்கண்டு, அஞ்சி மீண்டு, தேவர்களை

---

௪௪. மேருமலை பொன்மயமாயதற்குக் காரணங் கூறியவாறு. முருகன் என்னாது அறுமுகன் என்றது அவர் திருவுருவத்தைச் சுட்டிக் கூறியபடி.

௪௫. நிரந்தரம் - இடையீடில்லாமை. அரந்தை நோய் - துன்பந்தரும் நோய்கள்.

யடைந்து, தனது செய்தியைச் சொல்லி, நீங்களே சென்று அக்கருப்பத்திற்கு இடையூறு செய்மின்கள் என்றனன்.

அதுகேட்ட திருமால் முதலிய யாவரும் மந்தரமலையை அடைந்து, புறத்தே நின்று முறையிட்டனர். இறைவன் அப்போது அவர்கள் முறைப் பாட்டிற்கு இரங்கி அங்கு வந்து, தன்னைத் துதித்த தேவர்களை நோக்கி, 'நமக்கு வேண்டுவனவற்றைக் கூறுக' என, திருமால் முதலிய தேவர்கள் ஏவலின்படி பிரமன் துதித்து, 'எந்தையே, திருமால் முதலிய யாவரும் அம்மையாரிடத்துக் கருப்பம் வாய்த்தலை விரும்பாதவர்களாய் இங்கு தேவரீரைக் காணவந்தனர்; அதற்குமேல் செய்வது இன்னதென்று அறியோம்' என்றனன்.

அதனைத் திருச்செவி சாத்தியருளிய பெருமான், தனக்கென்று ஒரு சிறிதும் விரும்பாது, எல்லாவற்றையும் உயிர்கள் பொருட்டாகவே கொண் டருளுபவன் ஆதலின், அதனால் ஒரு சிறிதும் முனிவுகொள்ளாது, அங்ஙன மாயின் இவ்வெண்மையான நீரை நீங்கள் பருகுமின்கள் என்று சொல்ல, அக்கினிதேவன் கையேற்றனன். ஆயிரம் சூரியர்கள் ஒருங்கு தோன்றினாற் போன்ற பேரொளியோடு எண்ணிறந்த வருடங்காறும் விழுந்த அச்சிவ வீரியத்தை அக்கினிதேவன் உண்டனன். அதனால் எல்லாத் தேவர்களிடத் திலும் கருப்பம் உண்டாக, யாவரும் வெப்புநோயை உடையவரானார்கள்.

மீண்டும் தேவர்கள் வேண்டிக்கொள்ள, சிவபெருமான், சுராக்கன் என் னும் அசுரனை யழித்தற் பொருட்டு யாம் நிறுவிய 'சுரகரேசம்' என்னும் ஒரு தலம் காஞ்சியின்கண் இருக்கின்றது. அது நமக்கு மிகவும் இனியதாகும். அந்தச் சுரகரேசத்தை யடுத்துச் சுரகர தீர்த்தம் என்னும் ஒரு தீர்த்தம் இருக் கின்றது. அதில் முழுகி, சுரகரேசத்தில் நம்மை வணங்கினால், இந்த வெப்பு நோய் நீங்கப் பெறுவீர்கள்; பின்னர் மேருமலையை யடைந்து இக்கருப்பத்தை அங்கு விடுவீர்களாக' என்றுகூறி நீங்கினர்.

தேவர்கள் அவ்வாறே காஞ்சியை யடைந்து சுரகர தீர்த்தத்தில் முழுகி, சுரகரேசப் பெருமானை வணங்கி, சுரநோயினின்றும் நீங்கினர். பின்னர்த் தேவர்களெல்லாம் மகாமேரு மலையை அடைந்தனர். அடைந்த மாத்திரத் தில் தாம் கொண்டிருந்த கருப்பநோய் நீங்கப்பெற்றார்கள். அவர்கள் வயிற்றி னின்று, இலட்சம் இளஞ்சூரியர்களை யொத்த பொன்மயமான சோதியொன்று பாந்து தோன்றி, மேருமலை முழுவதும் பொன்மயமாகச் செய்து, கங்கையாற் றின் வழியாகச் சரவணப் பொய்கையை யடைய, அங்கு தேவர்கள் முனி வர்கள் யாவரும் உய்யும்படி, ஆறு திருமுகத்தோடு முருகப் பெருமான் தோன்றியருளினர்.

தேவர்களைச் சுரநோயினின்றும் நீக்கிக் காத்தருளிய சுரகர தீர்த்தத்தில் முழுகி, சுரகரேசப் பெருமானை வணங்கினவர்கள் நோய் நீங்கப்பெற்று முத்தியையும் அடைவார்கள்.

---

# தான்தோன் றீச்சரப் படலம்

அறுசீரடி யாசிய விருத்தம்

கிளைத்தெழுங் குழவித் திங்கட் கீற்றிளங் கொழுந்து மோலி
வளைத்தழும் பாளன் வைகுஞ் சுரகர வளாகஞ் சொற்றும்
திளைத்தவர் கருவில் எய்தாச் சுரகர தீர்த்தத் தென்பால்
இளைத்தவர்க் கிரங்குந் தான்தோன் றீச்சரத் தியல்பு சொல்வாம். க

முழுமலத் தொடக்கு நீங்கி ஆருயிர் முத்தி சேர்வான்
மழுவலான் தானே தோன்றும் வாய்மைபால் தான்தோன் றீசக்
கெழுதகு பெயரின் ஓங்கும் கிளக்கும்அவ் விலிங்கந் தன்னைத்
தொழுதொரு சிறுவன் தீம்பால் பெற்றவா சொல்லக் கேண்மின். உ

உபமன்னியர் பாற்கடல்உண்ட வரலாறு

சலிப்பறு தவவ சிட்டன் தங்கையை மணந்து ஞானப்
புலிப்பத முனிவன் ஈன்ற புகழ்உப மனியன் என்னும்
ஒலிச்சிறு சதங்கைத் தாளோன் மாதுலன் உறையுள் மேவிக்
கலிப்பகைச் சுரபித் தீம்பால் உண்டுளங் களித்து வாழ்நாள். ௩

---

க. மோலி - முடி. தான் தோன்று ஈச்சரம் - தானே தோன்றிய இறைவன் எழுந்தருளியுள்ள தலம். தோன்று இறந்தகால வினைத்தொகை. தான் தோன்றி என்பதைச் சயம்பு என்பர்.

உ. முழுத்தொடக்கு என இயையும். தொடக்கும் என்புழி உம்மை முற்று. மலத்தொடக்கு முற்றும் என்பது கருத்து. முழுமலம் எனவும், தொடக்கு எனவும் கொண்டு, வேண்டியவாறே உரைப்பர். தொடக்கு - கட்டு. கெழுதகு - உரிமையுடைய; பொருந்தத்தக்க எனவுமாம்.

௩. சலிப்பு - அசைவு, நிலைகலங்குதல். புலிப்பதம் - வியாக்ரபாதம். மாதுலன் - மாமன். உறையுள் - வீடு. கலி - வறுமை. சுரபி - பசு. வேண்டியவற்றை வேண்டியவாறே கொடுக்கும் இயல்புடைமையால் காமதேனுவை, 'கலிப்பகைச் சுரபி' என்றார்.

தாதையுந் தாயும் ஏகித் தநயனைக் கொண்டு தங்கள்
மேதகும் இருக்கை புக்கு மேவுழிச் சிறுவன் தீம்பாற்
காதரம் எய்தி அன்னை அடிபணிந் திரப்ப அந்நாள்
கோதறு நெல்மா நீரிற் குழைத்திது கோடி என்றாள். ௪

ஏற்றனன் பருகித் தீம்பால் அன்றிது புனல்என் றோச்சி
மாற்றினன் மாதுலன்றன் மனைவயின் பருகுந் தீம்பால்
ஆற்றவும் நினைந்து தேம்பி அழுதழு திரங்க நோக்கிக்
கோற்றொடி நற்றாய் நெஞ்சம் உளைந்திது கூற லுற்றாள். ௫

தவம்புரி நிலையின் வைகுஞ் சார்பினேம் அதாஅன்று முன்னாட்
சிவன்றனை வழிப டாமை இலம்படுந் திறத்தி னேங்கள்
அவந்தெறும் ஆன்பால் யாண்டுப் பெறுதுவம் அப்பா முக்கண்
பவன்றனை வழிபா டாற்றிப் பால்மிகப் பெறுதி கண்டாய். ௬

கச்சிமா நகரத் தெய்திக் கண்ணுதல் பூசை ஆற்றி
இச்சையின் ஏற்ற மாகப் பெறுவைஎன் றியம்பும் அன்னை
மெச்சிட விடைகொண் டேகி விழைதகு காஞ்சி எய்தி
முச்சகம் புகழுந் தான்தோன் றீச்சர முதலைக் கண்டான். ௭

கண்டுளங் குழைந்து நெக்குக் கரையிலாக் காதல் பொங்கித்
தொண்டனேன் உய்ந்தேன் என்று தொழுதெழுந் தாடிப் பாடி
இண்டைவார் சடிலத் தண்ணல் இணையடி அருச்சித் தங்கண்
அண்டரும் வியக்கு மாற்றால் அருந்தவம் புரியும் எல்லை. ௮

தகைபெறுஞ் சயம்பு லிங்கத் தலத்துறை கணிச்சிப் புத்தேள்
உகைமுகில் ஊர்தி அண்ணல் உருவுகொண் டெய்திப் பத்தி

---

௪. தநயன் - மகன். ஆதரம் - விருப்பம். நெல்மா - நெல்லரிசியால் ஆக்கிய மா. கோடி - கொள்வாயாக.

௫. ஓச்சி - எறிந்து. ஆற்றவும் - மிகவும். உளைந்து - வருந்தி.

௬. அதாஅன்று - அதுவல்லாமல். வழிபடாமை - பூசிக்காமையால். இலம்படு - வறுமையுற்ற. திறத்தினேம் - தன்மையுடையோம். அவந்தெறும் - துன்பத்தைப் போக்கும். ஆன்பால் - பசுவின்பால். யாண்டு - எங்கே. பவன் - சிவன்.

௮. இண்டை - ஒருவகை மாலை. சடிலம் - சடை.

௯. 'சயம்பு,' ஸ்வயம்பு என்னும் வடசொல் திரிபு. கணிச்சி - மழு. உகை - நடத்துகின்ற. முகிலூர்தி அண்ணல் - தேவேந்திரன். 'பத்தியின்

மிகையினை அளந்து தானுந் தன்மையை விளங்கக் காட்டி
நகைமுகம் அருளித் தீம்பாற் கடலினை அழைத்து நல்கி. ௯

முற்றுணர் தெளிவும் மூவா இளமையுஞ் சாக்கா டெய்தாப்
பெற்றியும் உதவி இன்னும் வேண்டுவ பேசு கென்றான்
கற்பகம் சுரபி சிந்தா மணிவளை கமல மெல்லாம்
பற்றுடை அடியார் ஏவற் பணிசெயப் பணிக்கும் வள்ளல். ௰

என்னலும் முனிவன் போற்றி எளியனேற் குனது கோன்தாள்
மன்னுபே ரன்பு வேண்டும் மற்றும்இவ் விலிங்க மூர்த்தி
தன்னில்எக் காலும் நீங்காத் தண்ணருள் கொழித்து வாழ்ந்து
துன்னினோர் எவர்க்கும் பாவம் துமித்துவீ டுதவ வேண்டும். ௧௧

என்றுநின் றிரந்து போற்றும் இளவலுக் கருளிச் செய்து
மன்றலங் குழலி யோடும் இலிங்கத்தின் மறைந்தான் ஐயன்
அன்றுதொட் டறிஞர்க் கெல்லாம் அருட்பெருங் குரவனாகி [னான்.
வென்றிவெள் விடையான் சைவம் விளக்கிவீற் றிருந்தான் அன்

கண்ணன் சிவதீக்கை பெறல்

பிருகுமா முனிவன் சாபப் பிணிப்பினாற் பிறந்து வீயும்
மருமலர்த் துளவோன் கண்ணனாயநாள் மனித யாக்கை

---

மிகையினை யளந்து தானுந்தன்மையை விளங்கக்காட்டி' என்றது, இறைவனார் இந்திரன் உருவமாக வந்து நின்று சிவபெருமானைப் பலவாறு நிந்திக்க, உபமன்னிய முனிவர் பொறாது அவ்விந்திரனை யழிக்கக்கருதி, அகோராஸ்திர மந்திரத்தை உச்சரித்துத் திருநீற்றைத் தெறிக்க, அதனை நந்திதேவர் தடுத்தமையால், மூலாக்கினியால் உயிர்விடத் துணிந்தமை கண்டு, தமது உண்மை வடிவத்தைக் காட்டினமையை. இவ்வாறு வாயுசங்கிதையில் கூறப்பட்டது.

௰. சாக்காடு - இறப்பு. சுரபி - காமதேனு. வளை - சங்கநிதி, கமலம் - பதுமநிதி.

௧௧. கோன்தாள் - வலிய திருவடி; வலிமை, அடைந்தவரைத் தாங்கும் வன்மையை உணர்த்தும்.

௧௨. இளவல் - இளமையானவர். மன்றல் - நறுமணம்.

௧௩. வீயும் - இறக்கின்ற. கண்ணன் - கிருட்டினன். உபமன்னிய முனிவர் கண்ணனுக்குத் திருவடி தீக்கைசெய்தமையை, "யாதவன் துவாரைக் கிறையாகிய - மாதவன் முடிமேல் அடிவைத்தவன்" (பெரிய. திருமலைச். ௩௧)

அருவுருப் பெனஆங் கெய்தி அத்தகு முனிவன் றன்பால்
திருவளர் தீக்கையுற்றுத் தேகசுத் தியினைப் பெற்றான். ௧௩

பாண்டவர் தூத னென்னப் பயிலிய பெயரான் அங்கண்
ஆண்டகை அடிகள் போற்றி வைகினான் அன்று தொட்டு
நீண்டுல களந்த மாலே நிறைதிரு நீற்றுக் கோலம்
பூண்டுயர் சைவன் என்னப் புகன்றிடும் உலக மெல்லாம். ௧௪

ஆகத் திருவிருத்தம் - ௬௭௦.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இம்மைக்கண் வேண்டு வனவாகிய பொருள்களும் இறைவன் வழிபாட்டினுற் கிடைக்கும்' என்னும் உண்மையை விளக்கும். மற்றும் இதனுள், முற்பிறப்பில் இறைவனை வழி பட்டார்க்கே இப்பிறப்பிற் செல்வமும், வழிபடாதார்க்கு இப்பிறப்பில் வறு மையும் உளவாகும் என்னும் பொருளுங் கூறப்பட்டது. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

இளம்பிறையினை யணிந்த திருமுடியினையுடைய இறைவன் எழுந் தருளியுள்ள சுரகரேசத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, சுரகரதீர்த் தத்திற்குத் தெற்கிலுள்ள தான்தோன்றீச்சரத்தின் தன்மையைச் சொல்லு வோம்.

உயிர்கள் மலப்பிணிப்பினின்றும் நீங்கி முத்தியை அடைதற்பொருட்டு, இறைவன் இலிங்க வடிவமாகத் தானே தோன்றியருளினமையால் தான் தோன்றீசன் என்னும் திருப்பெயருடைய அவ்விலிங்கத்தை, ஒரு சிறுவர் வழிபட்டு, இனிய பால் பெற்ற வரலாற்றைக் கேட்பீர்களாக.

வியாக்கிரபாத முனிவர் வசிட்ட முனிவரது தங்கையை மணந்து பெற்ற உபமன்னியன் என்கின்ற சிறு குழந்தை, தனது மாமன் வீட்டில்

---

என்பதனானும் அறிக. கண்ணன் உபமன்னியர்பால் சிவ தீக்கை பெற்ற வர லாறு, வேறொரு வகையாகவும் கூறப்படும்.

௧௪. ஆண்டகை - சிவபெருமான். பாண்டவர்தூதன் என்னப் பயிலிய பெயர் - பாண்டவ தூதேசுரர் எனவும், இப்பெருமானைப் பூசித்த பெருமாள் பாண்டவதூதப் பெருமாள் எனவுங் கூறுவர்.

காமதேனுவின் பாலைத் தெவிட்ட உண்டு வாழ்ந்துவருகின்ற நாளில், தந்தையும் தாயும் சென்று தமது புதல்வனைத் தம்மில்லத்திற்கு அழைத்துக்கொண்டு வந்தனர். அங்கு அச்சிறுவன் பால் கேட்டபோது, தாய் நெல்லரிசி மாவை நீரிற் குழைத்துக் கொடுத்தனள். அதனைச் சிறுவன் இது பால் அன்று, நீர் என்று சொல்லி எறிந்து, தனது மாமன் வீட்டில் உண்டிருந்த பாலை நினைந்து, மிகவும் தேம்பியழ, தாய், 'அப்பா குழந்தாய், முற்பிறப்பிலே சிவபெருமானை வழிபடாமையால் வறுமையுற்றிருக்கும் யாங்கள் பசுவின் பாலுக்கு எங்கே போவோம்? நீ சிவபெருமானைக் காஞ்சியம்பதியில் பூசித்துப் பாலை மிகுதியாகப் பெறுக' என்றனள்.

அப்பொழுதே அவ்விளஞ்சிறு முனிவர் தாயினிடத்து விடைபெற்றுச் சென்று, காஞ்சியை யடைந்து தான்தோன்றீசப் பெருமானைக் கண்டனர். கண்டதும் அடங்காக் காதல்கொண்டு, வணங்கித் துதித்துப் பூசித்து, அரிய தவத்தைச் செய்திருந்தனர். அப்போது இறைவன் அவரது சிவபத்தியை அளத்தற்பொருட்டு, இந்திரனாக வந்து சிவநிந்தைசெய்ய, முனிச்சிறுவர் அதனைப் பொறாது அவ்விந்திரனை அழிக்கவேண்டி, அகோராஸ்திர மந்திரத்தை உச்சரித்துத் திருநீற்றை எறிந்தனர். அதனை நந்திபெருமான் தடுக்க, முனிவர் மூலாக்கினியால் உயிர்விட முயன்றனர். உடனே சிவபெருமான் தமது உண்மைத் திருமேனியைக் காட்டியருளி, நகைமுகத்தோடு இருந்து திருப்பாற் கடலை அழைத்துத் தந்து, சிறந்த ஞானமும், என்றும் மூப்படையாத இளமையும் கொடுத்து, 'மற்றும் வேண்டுவனவற்றைக் கூறுக' என்றனர்.

உபமன்னிய முனிவர், அடியேனுக்குத் தேவரீரது திருவடியில் என்றும் நீங்காத அன்பும், இவ்விலிங்கத்தில் தேவரீர் என்றும் வீற்றிருந்து உயிர்களுக்குப் பாவத்தை நீக்கி முத்தியை யளித்தலும் வேண்டுமென்று வேண்டினர். இறைவனார் அவ்வரங்களை எல்லாம் அவருக்குக்கொடுத்து, ஆசிரியத்தன்மையும் அருளி, அவ்விலிங்கத்தில் மறைந்தருளினார். அன்று முதலாக உபமன்னிய முனிவர் ஞானாசிரியராய் இருந்து சைவத்தை விளக்கி வீற்றிருந்தருளினார்.

திருமால் அவதாரமாகிய கிருட்டின மூர்த்தி, இம்மானிடப் பிறவி அருவருப்புடையதென்று அவ்விடத்தையடைந்து, உபமன்னிய முனிவரிடத்துச் சிவதீக்கை பெற்றுச் சரீர சுத்தியை அடைந்தனர். அவர் 'பாண்டவதூதர்' என்னும் பெயரால் இறைவனை வழிபட்டு அங்குத் தங்கினர்.

---

# அமரேசப் படலம்

கலி விருத்தம்

தெத்தேயென வரிவண்டினம் முரலமதுச் சிந்துந்
தொத்தேர்மலர்ப் பொழில்சுற்றுசு வாயம்புவஞ் சொற்றும்
முத்தார்துறை அதன்கீழ்த்திசை முப்பத்துமுக் கோடிப்
புத்தேளிரும் வழிபாடுசெய் அமரேச்சரம் புகல்வாம். க

தேவாசுரயுத்த வரலாறு

வரிவண்டின முரலாமண மாலைக்கட வுளரும்
முரிநுண்ணிடைத் திதிமைந்தரும் முன்னாள் ஒருகாலத்
தெரிமண்டியெனச்சீறி எதிர்த்துப்பொர லுற்றார்
நரிபேய்கொடி சேனங்கழு குழலுங்கள ஞாங்கர். உ

முற்றிப்பல உகம்அங்கவர் தண்டாதமர் முயலக்
கற்றைச்சடை இறையோன்மலை மகளோடுபர் ககனத்
துற்றுச்சம ராடற்றிறம் நோக்கிஉறைந் தனனால்
வெற்றித்திறந் தோலாவகை மேன்மேல்அமர் மூண்ட. ங

உண்ணாஅமு தனையாள்எனை உடையான்முகம் நோக்கி
எண்ணால்உணர் வரியாய்இரு திறத்தோர்இவர் தம்முள்
மண்ணாவிறல் ஒருகூற்றினர் வாகைபுனை கெனலும்
விண்ணாடரை வன்றானவர் வென்றார்திறல் கொண்டார். ச

அதுகண்டுமை அந்தோபெரு மானேஅருள் புரியாய்
மதுஒன்றிய வெற்றித்தொடை வானோர்புனை கெனலும்

---

க. தெத்தே, ஒலிக் குறிப்பு. முரல - ஒலிக்க. தொத்து - பூங்கொத்து. சுவாயம்புவம் - தான்றோன்றீச்சரம்.

உ. முரி - வளைகின்ற, துவள்கின்ற. திதிமைந்தர் - அசுரர். சேனம் - பருந்து. ஞாங்கர் - எழனுருபு.

ங. தண்டாது - நீங்காது. ககனம் - வானம்.

ச. எண் - எண்ணம், நினைவு. எண்ணாலென்புழிச் சிறப்பும்மை தொக்குநின்றது. மண்ணா - நீக்கப்படாத. விறல் - வலிமையால். வாகை புனைக - வெற்றிபெறுக; இஃது அவ்வாறு திருவருள்செய்தல் வேண்டு மென்றபடி.

விதுஒன்றிய சடையோன்அருள் விண்ணோர்புடை வைப்ப
முதுவன்பகை அறவென்றனர் முடிவானவர் அம்மா. ௫

வெற்றிப்பறை சாற்றிப்பெரு விறல்விண்ணவர் மீண்டு
கொற்றத்துயர் கடவுள்ளவைக் களமேவரக் குறுகிச்
செற்றுச்செரு வென்றோங்கிய திறலோடுறை குற்றார்
மற்றப்பொழு துயர்வாசவன் மதமுற்றுரை செய்வான். ௬

அச்சோஎன தாண்மைத்திறம் ஆர்கூறுவர் என்றான்
அச்சீர்அவன் றனைவெங்கனல் அவனைச்சமன் நிருதி
அச்சூரனை அவனைப்புன லரசன்வளி அவனை
அச்சிலனை அளகைக்கிறை ஈசானன்அங் கவனை. ௭

ஈசானனை மலரோன்அவன் றனைநாரணன் இகலிப்
பேசாவிறல் பேசிப்பிணக் குறுபூசலை நோக்கித்
தூசார்வன முலைஅம்பிகை துணைவற்றொழு தின்னோர்
மாசார்செருக் கொழியும்படி வள்ளால்அருள் என்றாள். ௮

பெருமான் தேவர்கள் அகந்தையை ஒழித்தல்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

நிணம்புல்கு சூலம் வலமாக ஏந்தி நெடுமால் விரிஞ்சன் முதலோர், பிணம்புல்கு காட்டின் நடமாட் டுகந்து பிறைவேணி வைத்த பெருமான், கணம்புல்கு தேவர் முரணைத் தவிர்ப்ப அவர்முன்பு காமர்அளிவீழ், மணம்புல்கு தொங்கல் அணிதோள் இயக்க வடிவொன்று கொண்ட ணுகினன். ௯

அணுகித் துரும்பை எதிர்நட்டு முன்னர் இறுமாந்து வைகும் அவனைப், பணிலத்த னாதி இமையோர்கள் நோக்கி இவண்நீ பயிற்

௬. விறல் - வலிமை. கொற்றம் - வெற்றி. திறல் - ஈண்டு இறுமாப்பு.

௭. அச்சோ, வியப்பிடைச்சொல். அச்சீர் - அத்தன்மையாக. சமன் - இயமன். புனலரசன் - வருணன். வளி - வாயுதேவன்.

௮. விறல் - வெற்றி. பிணக்கு - மாறுபாடு. தூசு - நல்லாடை. வனம் - அழகு.

௯. நிணம் - (பகைவர்) கொழுப்பு. புல்கு - பொருந்திய. முரண் - மாறுபாடு. காமர் - அழகு. தொங்கல் - மாலை. இயக்கன் - யக்ஷன் என்னும் வடசொல் திரிபு.

றும் இதுவென், துணிபுற்று வைகும் ஒருநீ எவன்கொல் புக லென்று சொல்லும் மொழிகேட், டுணர்விற் சிறந்த தவர்கண்டு கொள் ளும் உவன் இன்ன பேச லுறுவான். ௧௦

எவனேனு மாக வரும்நான் நமாது வலிஇன் றளக்க லுறு வேன், துவளாது நம்முன் நடும்இத் துரும்பு துணிசெய்ய வல்லன் எவனோ, அவனே தயித்தி யரைவென்ற மீளி அறிகென் றுரைப்ப மகவான், இவரா எழுந்து குலிசத்தை வீசி வறிதே இளைத்த னனரோ. ௧௧

மற்றைத் திசைக்கண் உறைவோரும் வன்மை முழுதுஞ் செலுத்தி வலியில், ஒற்றைத் துரும்பை அசைவிக்கும் ஆற்றல் இல ராய் உடைந்து விடலும், செற்றத் தெழுந்த அயனார் தமாது படை யைச் செலுத்த அரியும், அற்றப் படாத படைவீசி ஆர்ப்ப அவை கூர் மழுங்கி யனவே. ௧௨

இறைவி தோன்றி இமையவர்க்குப் புத்தி புகட்டல்

துரும்பொன்று தன்னில் வலிமுற் றிழந்த சுரர்அச்சம் எய்தி வியவா, இரும்பண்பு கூர எவன்நீ இயம்பு கெனலும் இயக்க வடி வாய், வரும்பாண்ட ரங்கன் உருவம் கரப்ப மறாகித் திகைக்கும் அவர்முன், கரும்பொன்று தோளி மலையான் மடந்தை எதிர்காட்சி தந்த ருளினள். ௧௩

எதிர்காண நின்ற கருணைப் பிராட்டி இருதாள் பழிச்சி இமையோர் முதிர்காதல் கொண்டு வழிபட்டு வண்கை முடிமீது கூப்பி உலகம்

---

௧௦. பணிலம் - சங்கு. பயிற்றும் - செய்கின்ற. இமையோர்கள் இறை வனை யறிதற்குரியர் அல்லர் என்பார், 'உணர்விற் சிறந்த தவர்கண்டு கொள் ளும் உவன்' என்றார்.

௧௧. 'வரும்நான் எவனேனுமாக' எனக்கூட்டுக. நுமாது - உங்க ளுடைய. துணிசெய்ய - வெட்ட. தயித்தியர் - அசுரர். மீளி - வீரன். இவரா - துள்ளி. குலிசம் - வச்சிராயுதம். முன்னர் ஒரு வகையாக விடை கூறிப் பின்னர் தமது பெருமிதம் தோன்ற, 'நம்முன்' என வேறு பொருள் கூறுகின்றாராகலின் ஒருமை பன்மை மயக்கமன்மை யுணர்க.

௧௨. செற்றம் - சினம். அயனார் படை - பிரமாஸ்திரம். அரியின் படை- சக்கராயுதம்.

௧௩. மதியேம் - அறியோம்.

பதினுலும் ஈன்ற முதல்வி இயக்கர் பதியாய் அணைந்த அவன்யார்
மதியேம் எமக்கு மொழிகென் றிரப்ப மலைவல்லி இன்னபுகலும். கச

எவன்வாணி கேள்வன் முதலோர் பதங்கள் நிலைபேறு செய்யும் இறைவன், எவன்எப் பொருட்கும் ஆதாரமாகி எவருந் தொழப்ப டுபவன், எவன் முற்றும் ஆக்கி நிலைசெய்து போக்கி அறிஞர்க் கினிக்கும் அமுதன், அவனென்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த அழகன். கரு

எவனுக்கு முற்றும் வடிவங்க ளாகும் எவன் உண்மை யாரும் அறியார்
எவன்எங்கும் யாவும் அறிவுற்று நிற்பன் எவனல் நடக்கும் உலகம்
எவனைத் துதிக்கும் மறைஈறு முற்றும் எவன்அங் கவைக்கும் அரியான்
அவனென்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த அழகன். கசு

எவன்நாமம் எண்ணின் எவன்தாள் பழிச்சின் எவனைக் கருத்தின் நிறுவின், எவன்அன்பர் சேவை புரியிற் பவங்கள் இரிவுற்று முத்தி மருவும், எவன்உண்மை இன்ப அறிவாகி நிற்பன் எவன் இந்து வேணி முடியான், அவனென்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த அழகன். கஎ

ஒற்றைத் துரும்பின் நமதாற்றல் முற்றும் ஒழிவித் தகன்ற அவனைப், பற்றுற்று நீவிர் அறிகின்றி லீர்கள் பழையோன் அவன்றன் வலமே, அற்றத்தின் நீக்கும் அவன்பால் உதித்த அகிலங்

---

கஎ. இறுதியில் நிற்றற்குரிய இன்பம் சந்தம் நோக்கி இடைநின்றது.

கஅ. பற்று - ஈண்டு யான் என்னும் செருக்கு. உற்று - உற்றமையால். தன் முனைப்புடைமையால் நீவிர் இறைவனை யறியீர் என்பார், 'அவனைப் பற்றுற்று நீவிர் அறிகின்றிலீர்கள்' என்றார். அற்றம் - குற்றம். அகிலம் - உலகு. கடம் - குடம். ஆதி என்பதனை மண்ணென்பதனோடும் கூட்டி, மண் முதலிய காரணப்பொருள்களின் வலியே குடம் முதலிய காரியப்பொருள் களின் வலியா மாறுபோல என்றுரைக்க. இவ்வாறின்றி ஆதி என்றதனல் கலசம் முதலியவற்றைக் கொள்வாரும் உளர். கிழங்கின் கண் தோன்றிய தாமரையைப் பங்கயம் என்பதுபோல, மாயையில் தோன்றிய உலகத்தை, அதற்கு ஆதாரமாகிய சிவசத்தியில் தோன்றியதாகக் கூறுதலுண்மையானும், சத்தி சிவத்தின் வேறன்மையானும், 'அவன்பால் உதித்த அகிலம்' என்றார். பங்கயம் - சேற்றில் தோன்றுவது. இறைவன் சத்தி, உடனாய் நின்று

தனக்கு வலமாம், மற்றுத் தமக்கு முதலாய மண்ணின் வலியே கடாதி வலிபோல். ௧அ

இனிநீவிர் உய்தி பெறுமா றுரைப்பல் இமையாத முக்கண் இறையோன், பனிவீசு கம்பை நளிநீர் துளிக்கும் ஒருமா நிழற் படியில்என், றனையாண்டு கொண்டு மகிழ்காமர் கச்சி தனில்எய்தி வெள்ளை விடையோன், துனிதீர் சரண்கள் சரணென் றடைந்து தொழுமின்கள் உம்ப ருலகீர். ௧௯

தேவர்கள் சிவபூசை செய்தல்

கலிநிலைத் துறை

என்று கூறினள் மறைந்தனள் உலகம்ஈன் றெடுத்தாள்
அன்று மாலயன் தொடக்கமாம் அமரர்கள் எல்லாம்
நன்று நம்அறி விருந்தவா றென்றுளம் நாணிச்
சென்று சேர்ந்தனர் கச்சியந் திருநகர்த் தேத்து. ௨0

திரித சேச்சரப் பெயரினுற் சிவக்குறி இருத்திக்
கரிய கண்டனை அருச்சனை கரிசற ஆற்றிப்

---

தொழிற்படுத்தாதவழி அறிவுள் பொருளும், அறிவில் பொருளுமாகிய எப் பொருளின் ஆற்றலும் தொழிற்படுவன அல்லவாகலின், 'அவன்றன் வலமே அகிலந்தனக்கு வலமாம்' என்றார். அவன்பால் உதித்த என்பது, அவைகளின் தோற்றத்திற்கும் அவனேகாரணம்என மேல் வருவதைச்சாதிக்கும் ஏதுவாய் நின்றது. காரணம் - நிமித்த காரணம். மண்ணுதியும் கடாதியும் காரண காரிய மாத்திரைக்கு எடுத்துக் காட்டப்பட்டன. கடாதிகளுக்கு மண்ணுதி கள் முதற் காரணமும் உலகத்திற்கு இறைவன் நிமித்தகாரணமுமா மென்க. இறைவன் காட்டுதலே யன்றிக் காணுதலும் வேண்டுமென்பதை விளக்கு மிடமாதலின், இத்தகைய உவமை கூறினர்.

௧௯. பனி - குளிர்ச்சி. படி - இடம். துனி தீர் - துன்பத்தை நீக்கு கின்ற.

௨0. தேம் என்னும் இடப்பெயர் ஏழாம் வேற்றுமைத் தொகையில் மகரங்கெட்டு, அகரங்கெட்டுநின்ற அத்துச்சாரியை பெற்றுத் தேத்து என நின்றது.

௨௧. 'திரிதசர்' என்பது தேவர்களுக்கு ஒரு பெயர். இது (எப் பொழுதும்) முப்பது வயதுடையவர் எனவும், பால யவ்வன கௌமார மென்னும் மூன்று பருவங்களை யுடையவர் எனவும் பொருள்தரும். திரி

பெரிது மாமிடல் பெற்றனர் வரங்களும் பெற்றார்
அரிவை பாகனுக் கினியதாம் அத்திருக் கோயில். ௨௧

ஆகத் திருவிருத்தம் - ௬௬௧.

---

## படல உண்மை

இப்படலத்திட் கூறப்பட்ட வரலாறு, (௧) 'இறைவன் உயிர்களோடும் உலகத்தோடும் உடனாய் நின்று செய்தாலன்றி, அவைகள் ஒன்றையும் செய்ய வல்லுநவல்ல' என்னும் உண்மையை விளக்கும். மற்றும் ௧௫, ௧௬, ௧௭ ஆம் செய்யுட்களிற் கூறிய பொருள்களையும் ஆண்டுக்காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

சோலைகள் சூழ்ந்த தான்தோன்றீசத்தின் இயல்பை இதுகாறும் சொன்னோம், இனி, அதற்குக் கிழக்கில் முப்பத்து முக்கோடி தேவர்களும் வழிபட்ட அமரேசத்தின் பெருமையைச் சொல்வோம்.

முன்னொருகால் தேவர்களும் அசுரர்களும் மூண்டு வெற்றி தோல்வியின்றிப் பல யுகங்களாகப் போர் செய்தனர். அப்போது சிவபிரான் உமையம்மையாரோடு ஆகாயத்திலிருந்து பார்த்திருந்தனர். அப்போது அம்மையார் இறைவனை வணங்கி, இவ்விருதிறத்தினருள் ஒரு திறத்தினர் வெற்றி பெறச் செய்க' என வேண்டினர். அங்ஙனமே செய்ய, அசுரர்கள் வெற்றியடைந்தார்கள். அம்மையார், 'பெருமானே, தேவர்கள் வெற்றி பெறவேண்டுமென்று வேண்டினர். இறைவன் தேவர்களிடத்தில் திருவருள் வைக்க, தேவர்கள் அசுரர்களை வென்றனர். பின்னர்த்தேவர்கள் சயபேரிகை முழக்கித் தேவசபையிற் சென்று இறுமாந்திருந்தனர்.

அப்பொழுது இந்திரன் செருக்குற்றுச் சொல்லுகின்றான்: 'அச்சோ எனது வீரத்தை யார் கூறவல்லர்!' என்றான். அவ்வாறே ஏனைய திக்குப் பாலகரும், பிரம விட்டுணுக்களும் தனித் தனி கூறி, ஒருவரோடு ஒருவர் மாறுபட்டுப் போர் விளைத்தனர். அதுகண்டு உமாதேவியார், 'இவர்களது செருக்கை ஒழித்தருள வேண்டும்' என்று இறைவனை வேண்ட, இறைவன் ஒரு யட்சனாக வந்து, ஒரு துரும்பை முன்னே நட்டுவைத்து இறுமாந்திருந்தனர். அவரைத் திருமால் முதலிய தேவர்கள் பார்த்து, 'நீயார்? நீ செய்யுங்

---

தசம் - முப்பது; திரிதசா - மூன்று தசை. மூன்றும் தசையாகிய கௌமார தசையை உடையவர் எனவுங் கூறுவர். கரிசு - குற்றம். மிடல் - வலி.

காரியம் யாது?' என்று வினவினர்கள். இறைவன், 'நான் எவனாயினும் ஆருக; இன்று உங்கள் வலிமையை நான் அளப்பேன்; இதோ நமது முன்னே நடப்பட்டிருக்கும் துரும்பை எவன் வெட்டுகின்றானோ அவனே அசுரர்களை வென்ற வீரனாவான்' என்றனர். உடனே இந்திரன் துள்ளி எழுந்து, தனது வச்சிராயுதத்தை வீசி, அதனை வெட்டமாட்டாது இளைத்தனன். மற்றைய திக்குப் பாலகர்களும் தமது வன்மை முற்றும் செலுத்தியும், அத்துரும்பை அசைக்க மாட்டாது நின்றனர். பின்னர்ப் பிரமன் தனது பிரமாஸ்திரத்தையும், திருமால் சக்கரத்தையும் ஏவ, அவைகள் கூர் மழுங்கின.

அதனால் அச்சமுற்ற தேவர்கள், 'நீயாவன்? கூறுக' என்று கேட்க, இறைவனார் திருவுருக் கரந்தனர். அதனால் வருந்தித் திகைக்கும் தேவர்கள் முன்னேஉமையம்மையார் தோன்றியருளினர். அப்பெருமாட்டியைத்தேவர்கள் துதித்து, இந்த யட்சனாக வந்தவன் யாரென்று கேட்க, அம்மையார் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

'ஓ தேவர்களே, எவன் பிரமன் முதலியோர் பதவிகளை நிலைபெறச்செய்கின்றானோ, எவன் எப்பொருட்கும் ஆதாரமாய் இருக்கின்றானோ, எவன் எல்லாராலும் வணங்கப்படுகின்றானோ, எவன் எல்லாவற்றையும் தோற்றி நிறுத்தி அழிக்கின்றானோ, எவன் ஞானிகளுக்கு இனிக்கும் அமுதமாகின்றானோ, எவனுக்கு எல்லாம் வடிவங்களாகுமோ, எவனுடைய உண்மையை யாரும் அறியார்களோ, எவன் எங்கும் எல்லாவற்றையும் அறிகின்றானோ, எவனால் உலகம் நடக்கின்றதோ, எவனை வேதாந்தங்களெல்லாம் துதிக்கின்றனவோ, எவன் அந்த வேதங்களுக்கும் எட்டாதவனோ, எவனது திருப்பெயரை நினைத்தால்-எவனது திருவடிகளைத் துதித்தால்-எவனைத் தியானித்தால்-எவன் அடியார்களை வணங்கினால் பிறவி நீங்கி முத்திகை கூடுமோ, எவன் சச்சிதானந்தமயனாய் இருக்கின்றானோ, எவன் சந்திரனைத் தரித்த சடையையுடையவனோ அவனே யட்சனாக வந்தவனென்று அறிவீர்களாக' என்று கூறிப் பின்னும் சொல்லுகின்றார்.

ஒரு துரும்பினிடத்தில் உங்கள் ஆற்றல் முழுதும் நீக்கிய அப்பெருமானை, நீங்கள் தற்போதத்தினால் அறியாதிருக்கின்றீர்கள். அப்பெருமான் தந்த ஆற்றலே எல்லாப் பொருள்களின் ஆற்றலும் என்று உணர்வீர்களாக. இனி நீங்கள் சென்று, கம்பையாற்றின் நீர்த்துளி வீசப்படும் ஒரு மாவடியின்கீழ் என்னை ஆண்டருளிய காஞ்சியம்பதியை அடைந்து, இறைவனை வழிபடுவீர்களாக என்று சொல்லி அம்மையார் மறைந்தருளினர்.

தேவர்கள் அவ்வாறே காஞ்சியை யடைந்து 'திரிதசேசர்' என்னும் பெயரால் ஒரு இலிங்கத்தைத் தாபித்துப் பூசித்து, மிகுந்த வலிமை யடைந்தார்கள். அத்தலம் இறைவனுக்கு மிக இனியதாகும்.

# திருமேற்றளிப் படலம்

கலி நிலைத்துறை

துளிம துத்தொடைக் கடவுளர் தொழும்அம ரேசம்
களிவ ரப்புகன் றனம்உருத் திரகண முதலோர்
அளியி னால்தொழு தேத்தும்ஈ ரைம்பதிற் றொன்பான்
தளிகள் ஈண்டெடுத் தியம்புதும் வழுத்தபு நெறியீர். ௧

சேகு தீர்அம ரேசத்தின் சேயிடைத் தென்பால்
மாக வைப்பினை உரிஞ்சிய மணிமதிற் காயா
ரோக ணக்குட பாங்கர்நூற் றுப்பதி னெட்டு
நாகர் போற்றிட நலங்கெழு தலங்கள்நன் குளவால். ௨

அண்டங் காத்தமர் உருத்திரர் நூற்றுவர் அருட்சீ
கண்டன் வீரன்கு ரோதனை முதல்கரு தெண்மர்
மண்ட லத்திறை யோர்இரு நால்வரும் வழுத்திப்
பண்டு பூசனை புரிந்திடப் பட்டஅத் தளிகள். ௩

---

௧. துளி - சிந்துகின்ற. மது - தேன். தொடை - மாலை. கடவுளர் - தேவர். அளி - அன்பு. ஈரைம்பதிற்றொன்பான் - நூற்றுப்பதினெட்டு.

௨. சேகு - குற்றம். மாகம் - வானம். நாகர் - தேவர்.

௩. அண்டம் காத்தமர் உருத்திரர் நூற்றுவரார்: அண்டத்தின் கிழக்கு முதலிய எட்டுத்திக்கிலும் அமர்ந்து இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களையும், மேலே அமர்ந்து பிரமனையும், கீழே அமர்ந்து திருமாலையும் தொழிற்படுத்தி, அவர்களால் வழிபடப்பட்டு, ஒரு திக்குக்குப் பதின்மராகப் பத்துத் திக்கிலும் தனித்தனி ஒவ்வொரு புவனத்திலும் அமர்ந்து அண்டத்தைக் காக்கின்ற கபாலீசன் முதலிய நூறு உருத்திரர்களை. அவர்கள் பெயரையெல்லாம் சிவஞானபாடியத்துக் காண்க. (சூ. ௨. அதி. ௩.) சீகண்டர் - சீகண்ட ருத்திரர். வீரன் - வீரபத்திரர். இவர் மேற்கூறிய எல்லா உருத்திர புவனங்களுக்கும் மேலே இருப்பவர். குரோதர் முதலிய எண்மராவார்: குரோதர், சண்டர், உன்மத்தர், அசிதாங்கபர், ருரு, கபாலி, பீஷணர், சங்கரர் என்பவர். மண்டலத்திறையோர் இருநால்வரென்றது, அனந்தர், சூட்சுமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, சீகண்டர், சிகண்டி என்னும் சூக்கும புவனாதிகள் எண்மரை.

### திருமால் சிவசாரூபம் பெற விரும்பல்

இருமை யுந்தரு மேன்மைஅத் தளிகளை என்றும்
பொருவில் மெய்த்தவர் பற்பலர் அருச்சனை புரிவார்
கருத ரும்புகழ் அவற்றிடைக் கண்டவர் கருநோய்
ஒருவி வீடுறும் மேற்றளி என்பதொன் றுளதால். ௪

நவிலும் அத்தலத் தெய்திமுன் நாகணைப் புத்தேள்
கவிர்இ தழ்ச்சிறு நுணுகிடைக் கவுரிதன் களபக்
குவிமு லைத்தடச் சுவடுதோய் குரிசில்சா ரூபம்
புவிமி சைப்பெற விழைந்துமெய்த் தவம்புரிந் தனனால். ௫

ஐம்பு லன்களை அடக்கிநின் றறுபகை துறந்து
நம்பு நீற்றணி அக்கமா லிகையுட னயந்து
கம்பி யாதுருத் திரங்கணித் திதயநற் கமலத்
தெம்பி ரான்அருள் வடிவினை இடையறா திருத்தி. ௬

ஆற்ற ருந்தவம் இயற்றுழி அழல்விழித் தறுகண்
கூற்றை வென்றருள் பரம்பொருள் கருணைகூர்ந் தடல்ஆ
னேற்றின் மீதெழுந் தருளிஎம் அடியரிற் சிறந்தோய்
நோற்று நொந்தனை வேட்டன நுவறிஎன் றருள. ௭

உந்தி பூத்தவன் அளப்பரும் உவகையுள் திளைத்துச்
சந்த மாமலர் அடிமிசை வீழ்ந்துதாழ்ந் தெழுந்தான்
எந்தை நீதர முழுவதும் பெற்றுளேன் இந்நாள்
அந்தில் என்றனக் களித்தருள் ஐயநின் உருவம். ௮

---

௪. இருமை - போகம், மோட்சமென்னும் இரண்டு. பொருவில் - நிகரில்லாத. ஒருவி - நீங்கி.

௫. நாக அணைப்புத்தேள் - திருமால். கவிர் - முருக்க மலர். இதழ் - வாய்.

௬. அறுபகை - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. நம்பு - விரும்புகின்ற. கம்பியாது - மனம் அலையாமல், ஒருவழிப்பட்டு. உருத்திரம் - சீருத்திரம்.

௭. தறுகண் - அஞ்சாமை. கூற்று - இயமன். அடல் - வலிமை. ஆனேறு - இடபம். நோற்று - தவம்செய்து. நுவறி - சொல்லு.

௮. சந்தம் - அழகு. அந்தில், அசைநிலை.

சம்பந்தர் பாடலால் திருமால் சாரூபம் பெறுதல்

என்ற வாய்மொழி திருச்செவி ஏறலும் எங்கோன்
ஒன்று கூறுத லுற்றனன் உவணம்மீ துயர்த்தோய்
நன்று தேர்வைவச் சுதமனு வந்தரம் நணுகும்
அன்று நாலிரண் டீற்றுடை இருபதாங் கலியில். ௯

காழி மாநகர்க் கவுணியர் குலத்தொரு காளை
ஏழி சைத்தமிழ் ஞானசம் பந்தனெம் அடியான்
யாழ நீபெற எம்முரு இங்குவந் தளிப்பான்
ஆழி யோய்அது காறும்இவ் வரைப்பினில் அமர்ந்து. ௧௦

ஈட்ட ருந்தவம் இயற்றுகென் றருளிநீங் குதலும்
கோட்டம் இன்றிமால் அம்முறை வதிந்துபூங் கொன்றைத்
தோட்ட லங்கலாற் றொழப்புகும் முத்தமிழ் விரகர்
பாட்ட லங்கலால் பரஞ்சுடர் திருஉருப் பெற்றான். ௧௧

ஆகத் திருவிருத்தம் - ௪௦௦௨.

---

### படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (௧) 'இறைவன் திருவருள் பெற்று உருத்திரர் என்னும் பெயருடையார் பலர் உளராகலின், அவர்களாலும் வழிபடப்பட்டு அவர்கட்கும் மேலானவன் இறைவன்', என்பதும், (௨) 'திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் முதலிய நால்வர் ஆசிரியன்மார்கள் திருவருள் மயமாகிய தமது தமிழ்ச்செம்பாடலால் எல்லாம் செய்ய வல்லுநர்' என்பதும்,

---

௯. உவணம் - கருடன் நாலிரண்டு ஈற்றுடை இருபது - இருபத்தெட்டு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் அவதரித்த இக்கலியுகம் வைவச்சுத மனுவந்தரத்தில் இருபத்தெட்டாம் கலியுகம் என்பது புராணக்கொள்கை.

௧௦. "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்" (திருமூ எ. பதி.........) ஆகலின், 'ஏழிசைத் தமிழ் ஞானசம்பந்தன்' என்றார். யாழ, முன்னிலையசை.

௧௧. கோட்டம் - மாறுபாடு. வதிந்து - தங்கி. தோடு - பூவிதழ். அலங்கல் - மாலை. தமிழ் விரகர், தமிழ் ஞானசம்பந்தர் என்பன திருஞானசம்பந்தப் பெருமானே தமக்குக் கூறிய திருப்பெயர்களென்க. பாட்டலங்கல் - பாமாலை. திருஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்தில் திருமாலுக்குச் சிவசாரூபம்வர அருளிய திருப்பதிகம் கிடைத்திலது.

(௩) 'அதனால் இறைவன் தனது அருட் செயல்களை அவர்கள் வாயிலாகச் செய்தருளுவன்' என்பதும், (௪) 'அதனால், இறைவன் திருவருளை அப் பெருமக்கள் வாயிலாக எளிதிற் பெறலாம்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும், பிறவும் உளவேற் கொள்க.

---

### உரை நடை

தேவர்கள் வழிபட்ட அமரேசத்தின் பெருமையை இதுகாறும் சொன்னோம்; இனி, சதருத்திரர் முதலியோர் தொழுத நூற்றுப் பதினெட்டுத் தலங்களைக் கூறுவோம்.

அமரேசத்திற்குச் சேய்மையாக அநந்தத் தேந்தும் காயாரோகணத்திற்கு மேற்குமாக உள்ள இடத்தில் நூற்றுப் பதினெட்டுத் தலங்கள் உள்ளன. அவை, அண்டத்தின் பத்துத் திசைகளிலும் திக்குக்குப் பதின்மராகத் தங்கி அதனைக் காக்கின்ற நூறு உருத்திரர்கள், சேஷ்டர் வீரபத்திரர் என்னும் இருவர், குரோதர் முதலிய எண்மர், மண்டலாதிபதிகள் எண்மர் என்னும் நூற்றுப்பதினெண்மராலும் பூசிக்கப்பட்டவைகளாம். அவைகளை எக்காலத் திலும் பற்பல தபோதனர்கள் பூசிப்பார்கள்.

அத்தலங்களில் திருமேற்றளி என்னும் ஒருதலம் உண்டு. அதில் முன்னாளில் திருமால் சிவசாரூபம் பெற விரும்பித் தவம் செய்தனர். சிவபெருமான் அவருக்குக் காட்சியளித்து, 'நீ விரும்பிய நமது சாரூபப் பேற்றை, வைவச்சுத மனுவந்தரத்தில், இருபத்தெட்டாங் கலியுகத்தில், சீகாழிப்பதியில் தோன்றும் நமது அடியவனாகிய திருஞானசம்பந்தன் அளிப்பான்; அதுகாறும் நீ இங்கே இருந்து தவம்புரிக' என்று அருளிச்செய்து மறைந்தனர். திருமால் அங்ஙனமே தவஞ்செய்திருந்து திருஞானசம்பந்தப் பெருமான் அங்கு எழுந்தருளி வந்து, தமது அருட்செம் பாடலால் சிவசாரூபம் தரப்பெற்றனர்.

---

## அனேகதங்காவதப் படலம்

கலி விருத்தம்

அச்சத ருத்திர ராதியர் போற்றுபு
மேச்சிய பஃறளி மேன்மை விளம்பினும்
எச்சம்இல் மேற்றளி யின்வட சார்அமர்
கச்சி அநேகதங் காவதங் கூறுவாம். ௧

---

௧. மெச்சிய - கொண்டாடிய. பல் + தளி=பஃறளி, தளி - கோயில். எச்சம் - குறைவு. 'கச்சி அனேக தங்காவதம்' (திருமு. எ.பதி......) என்பது

கறையடிச் சிறுவிழிக் கடுநடைச் சொரிமதப்
பிறையெயிற் றெறுழ்வலிப் பிளிறொலிக் கரிமுகத்
திறைபுகழ்க் கச்சியில் எய்திஎம் பிரான்றனை
நிறையுமெய்க் காதலான் அருச்சனை நிரப்புவான். ௨

சயமிகும் அனேகபேச் சுரனெனத் தன்குறிப்
பெயரினால் இலிங்கம்ஒன் றிருத்தினன் பெட்பொடு
மயர்வறும் பூசனை மரபுளிப் புரிதரும்
இயல்புகண் டெம்பிரான் எதிர்எழுந் தருளினன். ௩

வேட்டதென் மைந்தனே விளம்பெனத் தாதைதன்
தாட்டுணை மலர்மிசைத் தாழ்ந்தெழுந் திபமுகன்
நாட்டினில் யான்செயும் பணிஎவன் நல்கெனப்
பாட்டளி துதைமலர்க் கொன்றையான் பகர்தரும். ௪

கலிநிலைத்துறை

சுருதி நூல்முறை நிறுவவும் தூயவர் தொடக்கும்
கருமம் ஊறுதீர்த் தளிப்பவும் தயித்தியர் கயமைத்
திருவி லார்க்கிடை யூற்றினைச் செய்பவும் இவண்நீ
வருதல் வேட்டமை முன்னமே வழுத்தினர் வானோர். ௫

ஆத லாற்புறச் சமயநூல் அரட்டருக் கென்றும்
தீது சால்இடை யூற்றினை விளைமதி சிவநூல்

---

ஆசிரியத் திருமொழி. அனேகதங்காபதம் என்பது பகர வகர ஒற்றுமையால், அனேகதங்காவதம்எனவும் கூறப்படும். அனேக தங்காபதம் என வடநாட்டில் ஒரு தலம் இருத்தலால், இதனைக் 'கச்சி அனேகதங்காபதம்' என்ப.

௨. கறை - உரல். கரிமுகத்திறை - விநாயகர். முகம் யானை யாதல் பற்றி, யானைக்குரியவை யாவும் கூறப்பட்டன.

௩. அனேகபம் - யானை. மயர்வு - மயக்கம்.

௪. இபம் - யானை. துதைத - நெருங்கிய.

௫. தயித்தியர் - அசுரர். கயமை - கீழ்மை. திரு - நன்மை. வானோர் முன்னமே வழுத்தினமையை, மேலே (பக் - ௨௪௫.) வலம்புரி விநாயகப் படலத்திற் காண்க.

௬. அரட்டர் - துட்டர். மதி முன்னிலையசை. ஏதம் விரவாது நீத்து எனக் கூட்டுக.

வேத நன்னெறி ஒழுகுநர்க் கூறுகள் விரவா
தேதம் நீத்தருள் புரிதிஎம் ஆணையின் வலியால். ௬

உலகெ லாமுனை வழுத்துக வழிபடா தொழியின்
கலிகொள் வேதியர் உம்பரா யினும்அவர் கருமம்
நிலமி சைப்பயன் எய்துறா தழிகநின் இணைத்தாள்
மலர்வ ழுத்தினோர் பெரும்பயன் எய்துக மாதோ. ௭

மங்க லங்களும் அமங்கல மாம்உனை வழுத்தார்
தங்க ளுக்கிவை வரம்உனக் கருளினம் தக்கோய்
இங்கு நீஇன்னும் ஒன்றுகேள் இரணிய புரமாம்
அங்கண் வாழ்பவர் கேசியே முதற்பலர் அசுரர். ௮

அவனி யாவையும் அலைத்துவெங் கொலைபுரிக் தமர்வார்
அவர்கள் ஆருயிர் தாளினாற் செகுத்தவர் கருவுள்
அவர்கள் சத்தியாம் வல்லபை அணங்குவீற் றிருக்கும்
அவளை நாள்தொறுங் கெழீஇக்கலந் தன்புகொண் டமர்வாய். ௯

வல்ல பைத்திரு வோடுனை வழிபடப் பெற்றோர்க்
கொல்லை வேட்டன யாவையும் உறுகென அருளி
எல்லை யில்பெருங் கருணையால் உச்சிமோந் தெடுத்துப்
புல்லி எம்பிரான் விடுத்தனன் மீண்டனன் புதல்வன். ௧௦

மீண்ட நாயகன் இரணிய புரத்தினை மேவி
ஈண்டு தானவக் குழுக்களைத் தாளினால் எற்றிக்
காண்ட குந்திறல் முருங்கவென் றழித்தவர் கருவின்
மாண்ட சத்தியை வாங்கினன் மணந்துவீற் றிருந்தான். ௧௧

விநாய கப்பிரான் அருச்சனை புரியவீற் றிருக்கும்
அனேக பேசனை அனேகதங் காவதத் திறைஞ்சின்
இனாத வெந்துயர்ப் பிறவிதீர்ந் தென்னையா ளுடையான்
றனாது வெள்ளியங் கயிலையிற் சார்ந்துவை குவரால். ௧௨

ஆகத் திருவிருத்தம் - ௧௦௧௬.

---

௮. இரணியபுரம் என்பது பாரதத்திற் கேட்கப்படும் காலகேயர் என்னும் அசுரர்கள் பட்டணமாகிய இரணியபுரமன்று; இதுவேறு.

௯. தாள் - கால். அணங்கு - தெய்வப்பெண்.

௧௨. இனாத என்பது குறைந்து நின்றது. அனேக தங்காவதம். அனேக பலனைத் தருகின்ற வேள்வித்தானம் அல்லது பிரமபுரம் என்பர்.

## படல உண்மை

இப் படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'விநாயகப் பெருமான் முதலியோரும் சிவலிங்க வழிபாடு செய்தமையின், அதுவே எல்லாவற்றினும் சிறந்த வழிபாடாகும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

நூறு உருத்திரர் முதலியோர் பூசித்த பலதளிகளின் பெருமைகளைச் சொன்னோம்; திருமேற்றளிக்கு வடக்கிலுள்ள அனேக தங்காவத வரலாற்றைச் சொல்லுவோம்.

யானைமுகத்தையுடைய விநாயகப்பெருமான் 'அனேகபேச்சுரன்' எனத் தமது பெயரினால் அவ்விடத்து ஓர் இலிங்கம் நிறுவி வழிபடச் சிவபெருமான் அவருக்கு முன்னே எழுந்தருளி, 'நீ விரும்பியது யாது? என்று கேட்டனர். விநாயகர் வணங்கி, 'அடியேன் செய்யும் பணியாது? அதனை யருளிச்செய்ய வேண்டும்' என்றனர்.

சிவபெருமான், 'மைந்தனே, உண்மை நூல் முறைகளை நிலைநிறுத்தவும், நல்லோர் தொடங்கும் செயல்களை இடையூறு தீர்த்துக் காக்கவும், அசுரர்களுக்கு இடையூற்றைச்செய்யவும் நீஅவதரித்தல்வேண்டும் என்று முன்னமே தேவர்கள் நம்மைத் துதித்தனர். ஆதலால், அவற்றைச் செய்வாயாக' என்று கூறிப் பின்னும் சொல்லுகின்றார். தேவராயினும் மற்றும் யாவராயினும் உன்னை வழிபடாதவர் பயன் பெறாது அழிக. உன்னை வழிபட்டவர் பெரும் பயன் அடைவாராக. உன்னைத் துதியாதவர்களுக்கு மங்கலமும் அமங்கலமாகும். உன்னைத் துதித்தவர்களுக்கு அமங்கலமும் மங்கலமாகும். இவ்வரங்களை உனக்குக் கொடுத்தோம். அன்றியும் இரணியபுரம் என்னும் இடத்தில் கேசி முதலாகிய பல அசுரர்கள் இருக்கின்றனர். அவர்களை உனது காலால் உதைத்துக் கொன்று, அவர்கள் கருவில் இருக்கும் 'வல்லபை' என்னும் அவர்கள் சத்தியை மணந்து வீற்றிருப்பாயாக. வல்லபையோடு உன்னை வழிபட்டவர்கள் விரும்பியவற்றை யெல்லாம் விரைவிற் பெறுவார்களாக' என்று அருளிச்செய்து, தழுவியெடுத்து, உச்சி மோந்து விடுப்ப, விநாயகப்பெருமான் மீண்டனர்.

பின்பு விநாயகப்பெருமான் இரணிய புரத்து அசுரர்களைத் தமது காலால் உதைத்து அழித்து, வல்லபைச் சத்தியைப் பிரித்துத் தாம் மணந்து வீற்றிருந்தனர். விநாயகப்பெருமான் பூசித்த அநேகபேசப் பெருமானை அநேக தங்காதத்தில் வழிபட்டவர்கள் பிறவியினீங்கிக் கைலையைஅடைவார்கள்.

# கயிலாயப் படலம்

கலித் துறை

அல்லிப்பூஞ் சேக்கைமிசை அன்னச் சேவல் பெடைக்குருகைப்
புல்லிக்கண் படுபொய்கை அனேக தங்கா வதம்புகன்றும்
எல்லைச்செய் மணிக்கோயில் அதன்மேல் பாங்கர் இறைஞ்சினவர்க்
கொல்லைப்பே ரருள்கூருங் கயிலா யத்தை உரைசெய்வாம். க

முப்புரத்தவர் ஒழுக்கம்

நிலமீதும் அந்தரத்தும் நெறிதாழ் கூந்தல் அரம்பையர்வாழ்
புலமீதும் வெவ்வேறு பொன்னின் வெள்ளி தனில்இரும்பில்
வலமேவு மாதவத்தான் மயனார் வகுத்த முப்புரிசை
உலமேவு புயத்தவுணர்க் குளவா யினவால் முன்னாளில். உ

அங்கவற்றின் உறும்அவுணர் சுருதி மிருதி ஆய்ந்துணர்ந்தோர்
துங்கநிலை ஆகமங்கள் முழுதுந் தேர்ந்து துகளில்லோர்
கங்கையணி சடைப்பெருமான் வழித்தொண் டாற்றுங் கடப்பாட்
தங்குதிரு வெண்ணீறு சண்ணித் தொளிகால் வடிவினார். [டோர்

சிவலிங்கத் தருச்சனையே செய்யும் நியதிக் கடன்பூண்டார்
சிவதருமந் தலைநின்றார் திகழப் பூணுஞ் சாதனத்தார்
சிவனடியார் தமைக்காணின் உவகை துளும்புஞ் சிந்தையினார்
சிவநெறியிற் பிறழாத செயலில் தமக்கு நிகரில்லார். ச

எவ்விடத்துஞ் சிவகதையே இயம்பு வோரும் கேட்போரும்
எவ்விடத்துஞ் சிவபணியே இயற்று வோரும் மெச்சுநரும்
எவ்விடத்துஞ் சிவனடியார் எதிர்கொள் விருந்து புறந்தருதல்
எவ்விடத்துஞ் சிவநாம முழக்க மன்றி இலைஅங்கண். ரு

---

க. அல்லி - அகவிதழ். சேக்கை - படுக்கை. குருகு - பறவை. கண்படு - உறங்குகின்ற. எல் - ஒளி. ஐ, உருபு. ஒல்லை - விரைவு.

உ. வலம் - வன்மை. மயன் - அசுரத் தச்சன். புரிசை - மதில், கோட்டை; இவை திரிபுரம் எனப்படும். உலம் - திரண்டகல்.

ங. துகள் - குற்றம். கடப்பாடு - நியதி. சண்ணித்து - பூசி. கால் - வீசுகின்ற.

ச. சாதனம் - சிவசின்னம். துளும்பும் - மிகுகின்ற. 'புரந்தருதல்' என்னும் பாடம் சரியன்று.

திருமால் சூழ்ச்சி

இத்தகைய தயித்தியரால் இரியல் போகி உடைந்தழியுஞ்
சித்தமுடைக் கடவுளர்போய்த் திருமால் சரணஞ் சரணடைந்தார்
பைத்தபணிச் சேக்கைமிசை மலர்க்கண் படுக்கும் பசுந்துளபத்
தொத்துவிரியும் நறுந்தாரான் அவரோ டிதனைத் தொடங்கினான். ௬

வேதமனு எடுத்தோதிக் கொடிய வேள்வி புரிகாலைப்
பூதமிகத் தோன்றினவால் அவைதாம் மும்மைப் புரஞ்சிதையக்
காதுகெனாந் திருநெடுமால் ஏவ லாற்றிற் கடிதணைந்து
நீதிநிலைத் தயித்தியர்முன் நிற்க லாற்றா தழிந்தனவே. ௭

அதுகாணூஉ நனிநடுங்கும் அமரர் தம்மை முகம்நோக்கி
மதுவாரும் நறுந்துளப மாயன் இதனை வகுத்துரைப்பான்
இதுகேண்மின் நமரங்காள் அச்சோ அவுணர் எல்லாரும்
பொதுமேவி நடம்நவிற்றும் புத்தேள் சரணஞ் சரணடைந்தார். ௮

தீத்தொழிலில் தலைநின்ற கொடிய ரேனுஞ் சிவபத்தி
வாய்த்தவர்கள் சாவாத மதுகை யுடையர் யாம்அவரைப்
பூத்தநுதிக் கணையொன்றாற் பொருக்கென் றழிக்கும் வலிஇல்லேம்
ஆர்த்தபுகழ்ச் சிவபெருமான் தானே அதற்கு வல்லவனாம். ௯

கலி விருத்தம்

அனையவன் அடிபேணி அடைந்தவர் அவர்கண்டீர்
இனிஅவர் சிவபத்தி சிதைவுசெய் திடுகேம்யாம்
நினைதரும் இதுவல்லாற் பிறிதில்லை நெறியென்னாப்
புனைபுகழ் நெடுமாயன் புகன்றிது புரிகிற்பான். ௧௦

மறைநெறி பழுதென்றும் மறுமையொன் றில்லையென்றும்
உறைதரு பொருளெல்லாங் கணத்தழி வுறுமென்றும்

---

௭. கொடிய வேள்வி என்றது, பிறரைக் கொல்லுதற்குச் செய்யும் ஆபிசார யாகத்தை. காதுக - கொல்லுக.

௮. நமரங்காள் - நம்மவர்களே. அச்சோ, வியப்பிடைச் சொல்.

௯. மதுகை - வலிமை. பூத்த - பொலிவமைந்த. நுதி - நுனி. பொருக்கென்று; விரைவுக் குறிப்பு.

௧௧. கணத்தழிவுறும் என்று அறைதரும் என்றது கணபங்கங் கூறுதலை. கணபங்கக்கூறுதலாவது, எல்லாப்பொருளுங் கணத்தோறும் தோன்றியழி

அறைதரும் ஒருநூலை ஆக்குபு வடிவத்திற்
பொறைபுரி தன்கூற்றோர் புருடனை வருவித்தான். ௧௧

அங்கவன் முகம்நோக்கி அடல்அரி புகல்கிற்பான்
இங்கிது புத்தாகேள் இனையதோர் நூல்கொண்டே
பொங்கிய சிவநேசம் பூண்டுயர் புரஅவுணர்
தங்களை மயல்பூட்டிச் சிவநெறி தபுவிப்பாய். ௧௨

நாரதன் துணையாக நடமதி இருவிர்க்குஞ்
சீரிய மறைவாய்மை சிந்தையின் நிலைபெறுகென்
றேர்பெற விடைநல்க யாழிசை முனிவோனும்
தேரனும் விரைந்தெய்தித் திரிபுரம் அணுகுறலும். ௧௩

மீயுயர் புரமூன்றின் மேவுநர் அவர்செய்யும்
மாயையின் மருளுற்று மற்றவர் மாணாக்க
ராயினர் அவர்கூறுஞ் சாத்திர மதுநம்பித்
தீயதோர் வழிஒழுகிச் சிவநெறி தனைவிண்டார். ௧௪

தாழ்நெறி தலைநின்று சாதனம் திருநீறு
வாழ்வுறுஞ் சிவதருமம் மறைநெறி கைவிட்டார்
ஊழ்வலி எவர்வெல்வார் ஊக்குவர் மனைவியரும்
யாழ்முனி மொழிகேட்டுக் கற்பினை இழந்தார்கள். ௧௫

திருமால் திருக்கைலை அடைதல்

விழியுறக் கண்டதுவே மெய்யெனுந் துணிபினராய்
இழிதொழில் பலபுரியும் இவர்செயல் முழுதோர்ந்து

---

யும் என்கை. ஒரு நூல் என்றது பிடகத்தை. புருடன்-ஆதிபுத்தன். விட்டுணுவின் கூறாய்த்தோன்றிய ஆதிபுத்தனே புத்தமதத்தை யுண்டாக்கினன் என்பது புராணவரலாறு. புத்தம் முதலிய புறச்சமயக் கொள்கைகள் சிவஞான சித்தியார் பரபக்கத்திலும், சிவஞான பாடியம் அவையடக்க வுரையிலும் விளக்கப்பட்டிருத்தல் காண்க.

௧௨. மயல் - மயக்கம். தபுவிப்பாய் - நீக்குவாய்.

௧௩. அவர்களை மயக்குதலன்றி நீவிர் மயங்கற்க என்பார், 'சீரிய மறைவாய்மை சிந்தையின் நிலைபெறுக' என்றார். தேரன் - புத்தன்.

௧௫ சாதனம் என்றது பஞ்சாக்கரம் உருத்திராக்கம் என்பவற்றை.

௧௬. விழியுறக் கண்டதுவே மெய் என்பது - கண்ணாற் கண்டதே

பழுதறு புகழ்மாயோன் பண்ணவர் புடைசூழக்
கழிபெரு மகிழ்வோடுங் கைலையை அணுகினனால். ௧௬

அங்கணைந் திறையோனை அடியிணை தொழுதேத்தி
பங்கயக் கரங்கூப்பிப் பரிவொடும் உரைசெய்வான்
சங்கணி குழையாய்முப் புரமுறு தானவர்தாம்
எங்களுக் கிடர்செய்ய நொந்தனம் இதுகாறும். ௧௭

மாயையின் நெறிகாட்டும் புத்தனின் மருளுற்றுத்
தூயநின் னெறிவிட்டார் துகள்படும் அவர்தம்மை
மாய்வுசெய் தெமைஆள்வாய் யாமளை வனிதைமுத
லாயினர் தமைமுன்னாள் மருள்புரி அடிகேளோ. ௧௮

பெருமான் முப்புரம் எரித்தல்
வஞ்சி விருத்தம்

என்று மாயன் இயம்புசொல்
சென்று வார்செவி சேர்தலும்
மன்று ளாடிய வான்பொருள்
ஒன்று கூறுத லுற்றிடும். ௧௯

கருவி மூதெயில் காதுபோர்க்
கருவி ஒன்றிலம் காண்வரக்
கருவி கூடிற் கணத்தவர்
கருவெ லாமிறல் காண்டியால். ௨௦

என்னும் வாய்மொழி எம்பிரான்
முன்னர் நந்தி முகத்தினாற்

---

உள்ளது. அவ்வாறன்றி அனுமித்து அறிவதும், நூலால் அறிவதும் உண்மையல்ல எனக்கொள்ளுதல்.

௧௮. யாமளையை மருள்புரியென்பது, காளியைத் தோற்கச் செய்தலைக் குறிக்கும் போலும்! யாமளை என்பவளைத் தாருகாவனத்து முனிவர் பத்தினியரில் முதலானவளாக உரையாசிரியர் கூறினர்.

௨௦. சொற்பின் வருநிலை. கருவி மூன்றனுள் முன்னது (படைக்) கூட்டம். ஏனைய துணைக்காரணம். மூதெயில் - பெரிய கோட்டை. காது - கொல்லுகின்ற. காண்வர - அழகுவர. கணம் - காலநுட்பம்.

சொன்ன காலைத் துழாயனும்
அன்ன தேவரோ டாய்ந்தனன். ௨௧

ஷை வேறு

உருகெழு நிலம்ஒரு வையமும்
இருசுடர் இருபுடை ஆழியும்
சுருதிகள் துகளறு வாசியும்
மருமல ரணையவன் வலவனும். ௨௨

தடநெடு வடவரை சாபமும்
படவர விறைபகர் நாரியும்
மடல்விரி துளவினன் வாளியும்
கடவுளர் பிறர்பிற கருவியும். ௨௩

ஆயினர் அதுபொழு தண்ணலும்
ஏய்வுறும் இரதம தேறினன்
மாயிரு நெடியவில் வாங்கினன்
காய்கனல் உமிழ்கணை பூட்டினன். ௨௪

எறழ்வலி முழுவதும் எண்ணினன்
கறுவுறு குறுநகை காட்டினன்
முறுவலின் உயர்புரம் மும்மையும்
நெறுநெறு நெறுவென நீறின. ௨௫

பரவுறும் இமையவர் பார்த்தனர்
குரவையி னொடுமகிழ் கூர்த்தனர்

---

௨௧. தேவர்களுக்குக் கூறும் மொழியை நந்திபெருமான் முகத்தைப் பார்த்துக் கூறினர் என்பார், 'நந்தி முகத்தினுற் சொன்னகாலை' என்றூர்.

௨௨. உருகெழு - அச்சம் பொருந்தும். வையம் - தேர்த்தட்டு. இருசுடர் - சூரிய சந்திரர். ஆழி - சக்கரம். சுருதிகள் - வேதங்கள். வாசி - குதிரை. வலவன் - சாரதி.

௨௩. வடவரை - மேருமலை. சாபம் - வில். வாளி - அம்பு.

௨௫. திரிபுரத்தின் வலிக்குப் புன்னகையே போது மெனக்கருதினர் என்பார், 'எறழ்வலி முழுவதும் எண்ணினன்' என்றூர். முறுவல் - நகை. நெறுநெறு நெறு வென, ஓசைக் குறிப்பு.

பொருபுள கமும்உடல் போர்த்தனர்
அரகர கரவென ஆர்த்தனர். ௨௬

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அனைய வானவர்க் கரும்பெறல் வரம்பல அருள்செய்து கயிலாயத்
தெனையு டைப்பிரான் இனிதெழுந் தருளினன் இமையவர் எல்லாரும்
நனைம லர்த்துழாய் நாரணன் அயனொடு நலம்பெறக் குழீஇஅந்நாள்
வினைஇ கந்தல குய்யுமா றிஃதொன்று விதிக்கலுற் றனர்மன்னோ.

இற்றை நாள்முதல் சைவலிங் கார்ச்சனை இல்லவர் வினைமாசு
செற்ற நீற்றணி கண்டிகை இகந்தவர் சிவன்பெயர் வழுத்தாதார்
கற்றும் அஞ்செழுத் துருத்திரங் கணித்திடார் எமக்கய லவராக
அற்ற வாறவர் கடையரே எனவகுத் தவரவர் இடம்புக்கார். ௨௮

புத்தனும் நாரதனும் பூசனை புரிதல்

மன்னு நாரத முனிவனும் புத்தனும் மனங்கவன் றழிந்தேங்கி
என்ன காரியம் இயற்றினம் இமையவர் இயம்பிய மொழிகேட்டுப்
பன்ன ருஞ்சிவ பத்தரில் உயர்ந்தவர் பழமறை கரைகண்டோர்
அன்ன தானவர் தமைவறி தேமயல் பூட்டினம் அந்தோவே. ௨௯

பழியில் வாய்மையர் பலர்தமைத் தீவழிப் படுத்தஇப் பெரும்பாவக்
கழிவு வேதநூல் யாங்கணுங் கண்டிலேம் கற்பகோ டியின்மேலும்
ஒழிவு றாதெமக் கிருள்நர கினிச்செயல் யாதென உளம்நெக்கார்
சுழிபு னற்பணைக் காஞ்சியின் எய்தினர் தொடுபழி வினைமாற. ௩௦

கருத்த விர்த்தருள் மழுவலான் புரந்தருள் காஞ்சியிற் புகலோடும்
இருப்புக் குன்றுறழ் திண்பெருந் தீவினை எம்பிரான் அருளாலே
பருத்திக் குன்றென நொய்மைய தாயது பார்த்தனர் இருவோரும்
அருத்தி கூர்ந்தனர் அவ்விடம் பருத்திக்குன்றமெனப் பெயரிட்டார்.

---

௨௬. குரவை - கைகோத்தாடுங் கூத்து. கூர்த்தனர் - மிக்கனர்; வலித்தல் விகாரம். புளகம் - மயிர்க்கூச்செறிதல்.

௨௮. புத்தமதத்தை உண்டு பண்ணினர் ஆகலான், அதுவளராமைப் பொருட்டு, இங்ஙனம் கூறிச் சென்றனர் என்க.

௩௦. கழிவு - தீரும் வழி. தொடு - பற்றிய.

௩௧ அருத்தி - விருப்பம், அன்பு.

அவ்வ ரைப்பினில் இருந்துகொண் டிருவரும் அதன்வட கீழ்பாங்கர்
எவ்வம் இல்லதோர் விசித்திரக் கோயில்அங் கியற்றினர் அதன்உள்
சைவர் சூழ்கயி லாயநா தன்றனைத் தாபனஞ் செய்தேத்திச் [ளால்
செவ்வன் மாதவம் பன்னெடு நாளுறச் செய்தனர் அநுகாலை. ௩௨

கயிலாய நாதர் காட்சிதந்தருளல்

பளிக்கு மால்வரை நிமிர்ந்தன விடைமிசைப் பல்கணம் புடை சூழ, ஒளிக்கு மூர்த்திரண் டெழுந்தென எழுந்தருள் ஒருவனைக் கண்ணுற்றார், தெளிக்கும் இன்னிசைத் திவவியாழ் முனிவனுந் தேரனும் விழிநீருட், குளிக்கு மேனியர் பலமுறை பணிந்தனர் கூறுத லுற்றாரால். ௩௩

ஐய னேஉனக் கடியரை அடியரேம் அரில்படு புறநூலான், மையல் பூட்டினேம் இப்பிழை பொறுத்தருள் வள்ளலே எனவேண்டத், தொய்யில் பூத்துவிம் மாந்தெழுந் தணிகெழு துணைத்தபூண் முலைக்கோபச், செய்ய வாய்உமைக் கொருபுறம் அளித்தருள் சிவபிரான் இதுபேசும். ௩௪

வேறு

கொடியநீர் இழைத்த பாவம் கோடியாண் டவதி யாற்றுங்
கடன்நெறி எவற்றி னானுங் கழிவுறா கண்டீர் நந்தம்
அடியரைப் படிற்று நூலாற் பொருளினால் ஆசை காட்டிப்
படிமிசை மயக்கு வோர்கள் படுகுழி நரகில் வீழ்வார். ௩௫

பாதகம் எவற்றி னுக்குந் தீர்திறம் பகரும் நூல்கள்
மேதகும் அடியார் தம்மை மயக்கிய வினையி னோர்க்கு
கோதகு நரகே யன்றி நவன்றிடா வேறு தண்டம்
ஓதுழி அதுவுங் காஞ்சி உற்றவர்க் கொழிவு கூடும். ௩௬

---

௩௨. எவ்வம் - குற்றம். விசித்திரம் - மிகுந்த சித்திரம்.

௩௩. திவவு - யாழின் வார்க்கட்டு. தேரன் - புத்தன்.

௩௪. அரில்படு - குற்றம் பொருந்திய. தொய்யில் - தனத்தில் எழுதப் படும் கோலம். செம்மாந்து என்பது போல விம்மாந்து என்பது ஒரு சொல். கோபம் - இந்திர கோபம் (பக். ௩௩ பார்க்க.)

௩௫. அவதி - எல்லை. படிறு - வஞ்சனை.

கச்சியில் உறுத லானும் கடுவினை மெலிதாய் விட்ட
திச்சையின் இலிங்கம் இங்கண் இருத்துபு வழிபா டாற்றும்
அச்செயல் வலியாற் சாலக் கழிந்ததே யானுங் கேண்மின்
முச்சகம் புகழும் நல்யாழ் முனிவனே புத்த ரேறே. ௩௭

பிறர்க்குப கார மாதற் பொற்றியான் ஒருகாற் பாவத்
திறத்தினைப் புரிவ ரேனுஞ் சிவநெறிச் சிதைவு தன்னை
மறப்பினும் எண்ணல் ஓம்பல் எண்ணினோர் வழங்கல் செல்லா
நெறிப்படு நரகின் வீழ்ந்து நீந்தரும் இடும்பை கூர்வார். ௩௮

இன்றுநீர் வழுத்தும் அன்புக் கிரங்கினேம் நமது பாவம்
துன்றுபல் பிறவி தோறுஞ் சுழன்றலாற் கழியா தாகும்
நன்றது கழியு மாறு நவிலுதும் இனைய வைப்பின்
மன்றமற் றெமைப்பூ சித்து வலம்புரிந் துறைதிர் என்றும். ௩௯

வலஞ்செயப் புகும்அப் போதும் வெளிக்கொளும் போதும் வாயிற்
புலந்தனைச் சுருங்கை யாகப் புரிதும்அங் கவையே கன்மப்
பலங்களை நுகருந் தோற்றம் இறப்பெனும் பகுதி யாகி
இலங்காண் டினிது வாழ்மின் இறுதியில் தருதும் முத்தி. ௪௦

சித்திகள் எவையும் நல்கும் விசித்திரச் சிற்பம் வாய்ந்து
சித்தர்கள் அருச்சித் தேத்தத் திகழ்கயி லாய மேன்மை
சித்தமா சகன்றோர்க் கன்றித் தெரிவுறா காண்மி னென்று
சித்தசன் எரிய நோக்குஞ் சேவகன் கரந்து போந்தான். ௪௧

இருவரும் அவ்வா றங்கண் இறைவனை வலஞ்செய் தேத்திக்
கருவற நெடுநாள் வைகித் திருவருட் கலவி பெற்றார்

---

௩௮. மறப்பினும் - மறதியினாலும். எண்ணல் ஓம்பல் - நினைத்தலைத் தம்மிடத்து நிகழாமற் பாதுகாக்க. வழங்கல் செல்லா - யாரும் செல்லுதல் இல்லாத. 'எண்ணினோர் வீழ்ந்து இடும்பை கூர்வார்' என முடிக்க. பிறர்க்கு உபகாரமாதற் பொருட்டு ஒருகால் பாவச்செயல் செய்தல் தருமாயினும், அதன் பொருட்டாயினும் சிவநெறியை அழித்தலாகிய சிவாபராதத்தை நினைத்தலுங்கூடாதென்பார், 'பிறர்க்கு......ஓம்பல்' என்றார்.

௪௦. சுருங்கை-நுழைவழி. வெளிவருதல் பிறப்பும், உட்புகுதல் இறப்பு மாகும் என்பதாம்.

௪௧. சித்தசன்- மன்மதன். சேவகன்- வீரன்

திருவளர் காஞ்சி மூதூர்த் திண்பெருங் கயிலை போலும்
ஒருதலம் அதுவே யன்றி உலகம்மூன் றிடத்தும் இல்லை. சஉ

ஆகத் திருவிருத்தம் - கoருசு.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறை வழிபாடுடை யாரை யாவராலும் வெல்லுதல் இயலாது' என்பதும், (உ) 'சிவநெறி யில் நிற்பாரை அதினின்றும் நீங்கச் செய்து சிவ நெறியை அழித்தல் எவற் றலும் தீராத அதிபாதகமாய், எண்ணிறந்த காலம் நரகத்திற் கிடந்து, எண்ணி றந்த பிறவிகள் எடுத்து உழலச் செய்யும் என்பதும், (ங) 'இறைவன் அழிக்கக் கருதிய வழி, அவனது போற்றலின் முன் எப்பொருளின் ஆற்றலும் முனைத்து நிற்கமாட்டாது அணுவாயடங்கி அழியும்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

தாமரை மலர்களில் அன்னங்கள் வசிக்கும் பொய்கைகள் சூழ்ந்த அனேகதங்காவத வரலாற்றைச் சொன்னோம்; இனி, அதற்கு மேற்கிலுள்ள கயிலாயம் என்னும் தலத்தின் வரலாற்றைச் சொல்லுவோம்.

பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூன்று உலகங்களிலும் பொன், வெள்ளி, இரும்புகளாலாகிய மூன்று கோட்டைகளை உடையவர்களாய், திரிபு ரத்தவர் என்னும் மூன்று அசுரர்கள் இருந்தார்கள். அவ்வசுரர்கள் வேதாகமங் களை நன்குணர்ந்து, சிவ பத்தி அடியார் பத்திகளிற் சிறந்து, சிவ சின்னங் களை அணிந்து, சிவலிங்க பூசையிலும் சிறந்து விளங்கினர்கள். அவர்களது திரிபுரங்களில் எங்கும் சிவகதையே சொல்லுவோரும் கேட்போரும், சிவத் தொண்டே செய்கின்றவர்களும், சிவனடியாரைப் பூசிப்பவர்களும், சிவநாமத் தையே சொல்லுகின்றவர்களுமாக இருப்பார்கள். ஆயினும், அவர்கள் தமது குலஇயற்கைப்படி தேவர்களை வருத்தி வந்தனர். அதனால் வருந்திய தேவர் கள் திருமாலைச் சரணடைந்தனர். திருமால் அத்தேவர்களோடு ஒரு வேள்வி செய்து, அதிற் பல பூதங்களை உண்டாக்கித் திரிபுரத்தவர் மேல் ஏவ, அவைகள் அவர்களை அணுகமாட்டாவாய் அழிந்தன. பிறகு திருமால் தேவர்களை நோக்கி, 'அவ்வசுரர்கள் சிவபெருமானை அடைந்திருக்கின்றமையால், அவர்களை

---

சஉ. அது வென்றது, கயிலாய நாதர் கோயிலை. கயிலை போலும் ஒரு தலம் காஞ்சி மூதூரிலுள்ள அதுவேயன்றி இல்லை என்க.

அழிக்க நாம் வலியில்லாதவர்களாய் இருக்கின்றோம். அவர்களைச் சிவபெருமானே அழிக்கவல்லர்; ஆகையால் அவர்கள் கொண்டுள்ள சிவபத்தியைச் சிதைப்போம்' என்று சொல்லி, வேதநெறி குற்றமுடைய தென்றும் மறுமையென்று ஒன்று இல்லையென்றும், எல்லாப் பொருளுங் கணந்தோறும் தோன்றியழியும் என்றும் கூறும் ஒரு நூலைச்செய்து, தனது அம்சத்தில் ஆதிபுத்தன் என்னும் ஒரு புருடனைப் படைத்து, 'நீ நாரதமுனிவனுடன் சென்று, இந்நூலைத் திரிபுரத்தவர்களுக்குப் போதித்து மயக்கிச் சிவநெறியினின்றும் நீக்குக' என்று அனுப்பினர்.

நாரத முனிவரும் புத்தனும் அவ்வாறே சென்று, திரிபுரத் தவரைத் தமது மாயையால் மயக்கித் தமது மாணாக்கராகச்செய்து, புத்த மதத்தைப் போதித்துச் சிவநெறியினின்றும் நீங்கச்செய்தனர். அவர்கள் மனைவிமார்களும் நாரதமுனிவர் போதனையால் கற்பை இழந்தார்கள். இதையறிந்த திருமால் மிகுந்த மகிழ்ச்சியுற்றுத் தேவர்களோடு திருக்கைலையை அடைந்து, திரிபுரத்தவர்களால் தாம் பட்ட துன்பமுதல் நிகழ்ந்த யாவுங் கூறி, அவர்களை அழிக்கும்படி வேண்டினர். சிவபெருமான், 'போர்க்குரிய கருவி யாதும் இல்லையே' என, பூமி தேர்த்தட்டாகவும், சூரிய சந்திரர் சக்கரங்களாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும், மேருமலை வில்லாகவும், வாசுகி நாணாகவும், திருமால் அம்பாகவும் மற்றைய தேவர்கள் மற்றைய கருவிகளாகவும் அமைந்து நின்றனர்.

சிவபெருமான் அத்தேர்மீதேறி, அவ்வில்லை வளைத்து நாணேற்றிக் கணை பூட்டித் திரிபுரத்தவர்களை நோக்கினர். நோக்கி ஓர் புன்னகை புரிந்த காலையில் திரிபுரங்களும் வெந்து நீறுபின. தேவர்கள் அரகரவென்று ஆரவாரித்தார்கள். சிவபெருமான் தேவர்களுக்குப் பலவரங்களை அளித்துக் கைலைக்கு எழுந்தருளினர்.

பின்பு, திருமால் முதலிய தேவர்கள் சிவபூசையையும், விபூதி உருத்திராக்கத்தையும் இழந்தவர்கள் எமக்கு வேறானவராவார்கள் என்று சொல்லித் தம் இருப்பிடத்திற்குச் சென்றனர். நாரத முனிவரும் புத்தனும் நாம் சிவனடியார்களை மயக்கி என்ன காரியம் செய்தோம்! இப்பெரும்பாவம் கற்ப கோடி காலத்திலும் நீங்காதே என்று வருந்திக் காஞ்சியை அடைந்தனர். அடைந்த மாத்திரத்தில் இரும்பு மலைபோல் இருந்த தமது பாவம் பருத்தி மலைபோல் மெலிவடைந்தது கண்டு, அவ்விடத்திற்குப் 'பருத்திக்குன்றம்' எனப் பெயரிட்டார்கள்.

பிறகு, அவ்விடத்தில் தாம் இருந்து கொண்டு அதற்கு வடகிழக்கில் மிகுந்த சித்திரம் எழுதப்பெற்ற ஒரு கோயில் அமைத்து, அதில் 'கயிலாய

நாதன்' என்னும் பெயரால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பன்னெடு நாள் தவம் செய்திருந்தனர். அப்போது சிவபெருமான் அவர்களுக்குக் காட்சியளிக்க, இருவரும் வணங்கி, 'தேவரீரது அடியவரை மயக்கிய குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான், எம் அடியார்களை, பொய்ந்நூல் போதித்தாயினும், பொருளாசை காட்டியாயினும் மயக்குகின்றவர்கள் நரகில் வீழ்ந்து வருந்துவார்கள். நீவிர் செய்த இப்பாவம் கற்ப கோடி காலத்திலும் நீங்காது. பிறர்க்கு உபகாரமாதற் பொருட்டு ஒருகால் பாவம் செய்யலாமாயினுட், அவ்வாற்றாற் சிவாபாரதஞ் செய்ய நினைத்தலும்கூடாது. இன்று நம்மைப்போற்றிய அன்பிற்கு மகிழ்ந்தோம். காஞ்சியை அடைந்தமையால் உமது பாவம் பெரிதும் நீங்கிற்றாயினும், அது எண்ணிறந்த பிறவி எடுத்து உழன்றாலன்றி நீங்காது. அதனால் இத்தலத்தை வலம் செய்யப்புகும் வாயிலையும் வெளிவரும் வாயிலையும் சுருங்கையாகச் செய்வோம். அதிற்புகுந்து என்றும் வலம் செய்துகொண்டு இங்கிருப்பீர்களாக. அதுவே பிறப்பிறப்பாக அமையும்; இறுதியில் முத்தியளிப்போம்' என்று சொல்லித் திருவுருக்கரந்தனர்.

நாரத முனிவரும் புத்தனும் அங்ஙனமே அங்கு நெடுநாள் இறைவனை வலம் செய்திருந்து முடிவில் திருவருளை யடைந்தனர். கயிலைக்கு நிகரான தலம் அக்காஞ்சியில் அதுவே யல்லது வேறு ஒரு தலமும் மூன்று உலகத்திலும் இல்லை.

---

## வீர ராகவேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

புத்தருக் கிறையும் நல்யாழ்ப் புலங்கெழு முனியும் போற்ற
அத்தனார் இனிது வைகுங் கயிலையின் அடைவு சொற்றாம்
இத்தகு வரைப்பின் கீழ்பால் இளநறுக் கொப்பு ளித்துத்
தொத்தலர் பொழில்சூழ் வீர ராகவஞ் சொல்ல லுற்றாம். க

இராமன் முறையிடல்

ஒன்னலர் குருதி மாந்தி ஒளிறுவேல் இராமன் என்பான்
தன்மனைக் கிழத்தி தன்னைத் தண்டக வனத்து முன்னாள்

க. புலங்கெழு - அறிவு பொருந்திய. அடைவு - முறை.

உ. ஒன்னலர் - பகைவர். குருதி - இரத்தம். மாந்தி - உண்டு. ஒளிறு -

கொன்னுடைத் தறுகண் சீற்றக் கொடுந்தொழில் அரக்கன் வெளவித்
துன்னரும் இலங்கை புக்கான் மேல்வரு துயரம் நோக்கான். ௨

பெய்கழல் கறங்கு நோன்தாள் பெருவிறல் இராமன் அந்நாள்
எய்சிலைத் தம்பி யோடும் இடருழந் தழுங்கி ஏங்கிக்
கொய்தழை வனங்கள் எங்குங் கொட்புறீஇக் கமல வாவிச்
செய்புடை யுடுத்த காஞ்சித் திருவளர் நகரஞ் சேர்ந்தான். ௩

இடும்பைநோய் அறுக்குந் தெண்ணீர் எழிற்சிவ கங்கை யாடி
நெடும்பணை ஒருமா மூல நின்மலக் கொழுந்தை ஏத்திக்
கொடும்படைச் சனகன் ஈன்ற கோதையைப் பெறுவான் கூற்றை
அடும்புகழ்ச் செய்ய தாளை இரந்துநின் றழுது வேண்டி. ௪

தாழ்ந்தெழுந் தேகித் தென்பால் அகத்தியேச் சரத்தின் முன்னர்
வாழ்ந்திடுந் தகைமை சான்ற வண்டமிழ் முனியைக் கண்டான்
சூழ்ந்தவெந் துயரத் தோடும் ஓடினன் துணைத்தாள் மீது
வீழ்ந்தனன் புலம்ப லோடும் வெருவரேல் என்னத் தேற்றி. ௫

இத்துணை இடும்பைக் கேது எவன்என வினவுஞ் செல்வ
முத்தமிழ் முனிவன் கேட்பப் புகுந்தவா மொழிய லுற்றான்
மைத்தவார் கரிய கூந்தற் கௌசலை மணந்த திண்தோள்
சத்துவ குணத்தான் மிக்க தசரதன் ஈன்ற செம்மல். ௬

கலிநிலைத் துறை

எம்பி ரான்இது கேட்டருள் ஏழிரண் டாண்டு
வெம்பு காட்டகத் துறைதிநீ வியனிலந் தாங்கி
நும்பி யாகிய பரதனை வாழ்கென நுவன்று
கம்பி யாதெனை எந்தைஇக் கானிடை விடுத்தான். ௭

---

ஒளி வீசும். கொன்னுடை - அச்சந்தருதலுடைய. தறுகண் - அஞ்சாமை. அரக்கன், இராவணன்.

௩. பெய்கழல் - இடப்பட்ட வீரக்கழல். கறங்கு - ஒலிக்கின்ற. நோன்தாள் - வலியகால். விறல் - வலிமை. இடர் உழந்து - துன்பப்பட்டு. கொட்புறீஇ - சுழன்று. செய் - வயல்.

௪. பணை - கிளை. படை - சேனை.

௫. வெருவரேல் - அஞ்சாதே.

௭. நும்பி - உனது தம்பி. கம்பியாது - (மனம்) நடுங்காமல்.

ஏய ஆணையைச் சிரமிசைக் கொண்டெழும் எனையே
தூய சீர்இலக் குமணனுஞ் சீதையுந் தொடர்ந்தார்
ஆய மூவருந் தண்டக வனத்தமர்ந் திடுநாள்
மாய மானெனத் தோன்றினன் அங்கண்மா ரீசன். அ

தோன்றி மற்றெனைச் சேயிடைக் கொண்டுபோய்ச் சுலவி
மான்ற அம்பினிற் பொன்றுவான் சீதையை வலியான்
ஆன்ற எம்பியை விளித்துவீழ்ந் தனன்அது கேளா
ஏன்ற சீதையை விடுத்தெனைத் தொடர்ந்தனன் இளவல். கூ

அனைய காலையில் இராவணன் அவட்கவர்ந் தகன்றான்
புனைம லர்க்குழற் பூங்கொடி தணத்தலிற் புலம்பி
இனையும் என்னுயிர் பொன்றுமுன் இரங்குதி எந்தாய்
உனைஅ டைந்தனன் சரணம்என் றழுதழு துரைத்தான். க0

அகத்தியர் இராமனைத் தேற்றுதல்

உரைத்த வாய்மொழி கேட்டெதிர் அகத்தியன் உரைப்பான்
விரைத்த தார்ப்புய வேந்தகேள் வீங்குநீர் உலகின்
நிரைத்த ஐம்பெரும் பூதத்தின் நிலைபெறும் உடலம்
தெரிக்கில் யாவையும் உடன்பிறந் தவையெனத் தெளிநீ*. கக

மற்று யிர்க்குவே றுண்அவி பெண்ணென வழக்குஞ்
சற்றும் இல்லைநீர்ச் சலதியுட் படுபல துரும்பின்
பெற்றி போலும்இப் பூதத்தின் கூட்டமும் பிரிவும்
கற்று ளோய்இவை இருமைக்கும் மாயைகா ரணமாம். கஉ

---

அ. ஏய - ஏவிய. ஆணை - கட்டளை.

கூ. சுலவி - சுலவுவித்து, சுழலுவித்து. மான்ற - பெருமையுற்ற, பொன்றுவான் - இறக்கின்றவன். சீதையையும் எம்பியையும் விளித்து என்க ஏன்ற - தான் பாதுகாப்பதாக ஏற்றுக்கொண்ட.

க0. தணத்தலின் - பிரிதலால். இனையும் - வருந்துகின்ற.

கக. விரைத்த - வாசனை வீசுகின்ற. வீங்கு - மிகுந்த. நிரைத்த - முறைப்படுத்தப்பட்ட. எல்லாப் பொருளும் பஞ்சபூதக் கூட்டரவால் ஆயவாகலின், 'யாவையும் உடன் பிறந்தவை' என்றார். * 'தெளிதி' எ - ம், பா - ம்.

கஉ. இருமை - கூட்டம், பிரிவு என்னும் இரண்டு.

செய்வினைப்பயன் உள்ளது வருமெனத் தெளிதி
எவ்வம் உற்றுழந் திரங்கலை மகிழ்ந்திரு எனலும்
பௌவம் முற்றும்ஓர் உழுந்தள வாக்கிமுன் பருகுஞ்
சைவ மாமுனி மொழிக்கெதிர் அரசனுஞ் சாற்றும். ௧௩

அத்த நின்உரை முழுவதும் உண்மையே யானும்
இத்த லைக்கிது இணங்குமோ மனையவள் மாற்றான்
கைத்த லத்தகப் பட்டுழித் தத்துவங் காண்போன்
பித்தன் என்றுல குரைத்திடும் ஆதலிற் பெரியோய். ௧௪

பறந்த லைப்புகுந் தொன்னலர்ச் செகுத்துயிர் பருகிச்
சிறந்த சீதையை மீட்டபின் ஐயநீ தெரிக்கும்
உறந்த தத்துவ ஞானத்துக் குரியவன் ஆவேன்
அறைந்த வாறல தென்உளம் அடங்கிடா தென்றான். ௧௫

மலைய மாதவன் கேட்டுநின் மனத்துறும் விழைவு
கலைம திக்கழுஞ் சிறுவனோ டொக்கும்அக் கதிர்ப்பூண்
முலைம டந்தையை இராவணன் கவர்ந்துபோ முறைமை
இலைகொள் வேலினாப் எவர்உனக் கியம்பினர் என்றான். ௧௬

சடாயு என்றுயர் கழுகிறை சானகி பொருட்டு
விடாது போர்உழந் திறப்பவன் விளம்பிடத் தெளிந்தேன்
கடாது கொண்டவட் பெறுந்திறம் அருளெனக் கரையும்
வடாது வெற்புறழ் புயத்தனை மாமுனி நோக்கி. ௧௭

நின்கருத்திது வேல்உயர் நெடுவரை குழைத்து
வன்கண் மாற்றலர் புரம்பொடி படுத்தவன் மலர்த்தாள்

---

௧௩. பயன், இன்பத் துன்பங்கள். பயனாய் உள்ளது எனக் கொள்க. உள்ளது, சாதியொருமை. எவ்வம் - துன்பம். அகத்தியர் கடலைப் பருகிய வரலாற்றை மேலே (பக் ௨௫௧.) காண்க.

௧௪. தலை - ஈண்டுப்பொழுது.

௧௫. பறந்தலை - போர்க்களம். உறந்த - நண்ணிய.

௧௬. மலயம் - பொதிகை மலை, மலையம், போலி.

௧௭. கடவாது என்பது கடாதென நின்றது. நீர் கூறும் முறையைக் கடவாது கொண்டு என்பதாம்.

௧௮. புன்கண் - துன்பம். மதி, முன்னிலையசை.

புன்கண் நீங்குமா றடைக்கலம் புகுமதி அவனே
உன்க ருத்தினை முடித்திட வல்லன்என் றுணராய். ௧அ

உலகம் யாவையும் ஒருநொடிப் பொழுதினில் அழிப்போன்
நிலையும் வில்லினன் கொடுங்கொலைப் பகழியன் நிகரா
அலகில் ஆற்றலன் உருத்திரன் ஒருவனே யன்றி
இலையெ னப்புகன் றோலிடும் இபம்பருஞ் சுருதி. ௧௯

தென்தி சைக்கிறை இராவணன் திருவடி விரலின்
ஒன்ற னல்இறக் கண்டனன் ஒருசிறு துரும்பால்
அன்று விண்ணவர் தருக்கொடு மிடலறச் செய்தான்
வென்றி பூண்டுயர் கூருகிர் நகைவிழிப் படையான். ௨௦

அனைய னாகிய தனிமுதல் பாற்சரண் அடைந்தோர்
எனைய வேட்பினும் எண்மையின் எய்துவர் அதனாற்
கனைகொள் பூந்தடம் உடுத்தஇக் காஞ்சிமா நகரிற்
புனைம லர்க்குழல் பாகனை அருச்சனை புரிவாய். ௨௧

வீரம் வேண்டினை ஆதலின் விதியுளி வழாது
வீர ராகவப் பெயரினால் விமலனை இருத்தி
வீர னேதொழு தேத்துதி எனமுனி விளம்ப
வீரர் வீரனும் அம்முறை பூசனை விளைப்பான். ௨௨

இராமன் இறைவனை வழிபடல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வெண்ணீறுங் கண்டிகையும் உடல்விரவப் பாசுபத விரதம் பூண்டு
தண்ணீடு மலர்க்கடுக்கை வீரரா கவமுதலைத் தாபித் தன்பால்
எண்ணூறும் இருநூறும் ஆயதிருப் பெயர்இயம்பி அருச்சித் தேத்தி
உண்ணீடு பெருங்காதல் வளர்ந்தோங்கத் தொழுதுநயந் துருகுங் [காலை.

எவ்வமறப் புரிபூசைக் கெம்பெருமான் திருவுள்ளம் இரங்கிப் போற்றும், அவ்விலிங்கத் திடைநின்றும் எழுந்தருளி விடைமேல் கொண் டமரர் சூழ, நவ்விவிழி உமையோடுங் காட்சிகொடுத் தருளு

௨௧. எண்மை - எளிமை, கனை - ஒலி.

தலும் நவியா வென்றித், தெவ்வடுதிண் புயத்தோன்றல் பலமுறை யுந் தொழுதேத்திச் செப்ப லுற்றான். ௨௪

அண்ணலே அடியேனுக் கெளிவந்த பெருங்கருணை அமுதே அன்பர், புண்ணியமே இராவணனும் அரக்கர்கோன் பொலந்தொடித் தோள் சீதை என்னும், பெண்ணரசைக் கவர்ந்தெடுத்துப் போயி னன் முறைபிறழும் அவனை இன்னே, நண்ணலரும் பறந்தலையிற் கிளையோடு முடிக்கவரம் நல்கு கென்றான். ௨௫

எனப்புகலச் சிவபெருமான் திருவருள்கூர்ந் தெமக்குநீ இன்று தொட்டு, மனக்கினிய ஞப்உலகில் வீரரா கவனெனும்பேர் மருவி வாழ்வாய், உனக்கிகலி எதிர்ந்தோர்கள் எனைத்துணைய ரேனும் அவர் உடையக் காண்டி, பனித்தநறுந் தொடையோய்என் றருள் செய்து பாசுபதப் படையும் நல்கி. ௨௬

முள்ளரைக்காம் பணிமுளரிப் பொகுட்டணையோன் தனிப் படையும் முரன்று மாக்கள், கொள்ளையிடு நறைத்துளவோன் படை யும்அவர் தமைக்கொண்டு கொடுப்பித் தேனைக், கள்ளவிழ்தார்க் கட வுளர்தம் படைபிறவும் நல்குவித்துக் கருணை கூர்ந்து, நள்ளலரைப் பொடிபடுக்கும் பெருவரமும் அளித்தருளி நவிலு கிற்பான். ௨௭

கவற்றிநெடும் பகைதுரக்கும் இவைஉனக்குக் கருணையினல் அளித்தேங் கண்டாய், இவற்றினெடும் இளவலொடும் கிட்கிந்தை இடத்தமர்சுக் கிரீபன் சேனை, அவற்றெடும்போய்ப் பரவைகடந் திராவணனைக் கிளையோடும் அறுத்து வீரஞ், சுவற்றியபின் சீதை யொடும் மீண்டரசு புரிந்துகலி துரந்து வாழ்வாய். ௨௮

என்றருள எதிர்இறைஞ்சி இராகவன்மற் றிதுவொன்று வினை லுற்றான், அன்றினர் புரமெரித்தோய் குறுமுனிவன் ஆருயிர்கட்

---

௨௪. நவ்வி - மான். தெவ் - பகை. நலியா - (பிறரால்) வருத்தப் படாத. அடு - கொல்லுகின்ற.

௨௭. முரன்று - ஒலித்து. மாக்கள் - வண்டுகள் துளவோன்படை - நாராயணாஸ்திரம்.

௨௮. பரவை - கடல். சுவற்றுதல் - வற்றச்செய்தல். கலி - வறுமை. துரந்து - ஓட்டி.

காண்மை பெண்மை, ஒன்றுமிலே யாக்கையெலாம் உடன்பிறந்த
வாகுமென உரைத்தல் செய்தான், மன்றஎனக் கலைமுழுதுந் தேற
விரித் தருளென்று வணங்கி வேண்ட. உகூ

வேதாந்த நிலேஅனேத்தும் அவன்தெளிய விரித்துரைத்து வரங்
கள் நல்கிக், காதார்ந்த குழைஉமையாள் உடனுக இலிங்கத்துட் கரந்
தான் எங்கோன், நாதாந்தப் பரஞ்சுடராம் இவ்விலிங்கந் தனேத்
தொழுது நயந்தோ ரெல்லாம், கோதார்ந்த பகைவென்று பெருஞ்
செல்வம் எய்திஅருள் கூடு வாரால். ௬௦

கற்கீச வரலாறு

எண்சீரடி யாசிரிய விருத்தம்

தகைபெறும்இக் கடிவரைப்பின் தென்பால் மண்ணித் தடங்
கரையில் கற்கிசத் தலமாம் அங்கண், உகமுடிவில் கயவர்தமை
அழிப்ப மாயோன் உயர்பிருகு சாபத்தால் கற்கியாகி, இகழருஞ்சீர்க்
காஞ்சியில்வந் திலிங்கந் தாபித் தினிதேத்தி எண்ணிலரும் வரங்கள்
பெற்ருன், புகழுறும்அவ் விலிங்கத்தைத் தொழுது மண்ணிப்
புனலாடும் அவர்பெறுவார் போகம் வீடு. ௬க

ஆகத் திருவிருத்தம் - க௦அஎ.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) கச்சபேசப் படலத்துப் படலஉண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியை விளக்கும். மற்றும் கக,கஉ, க௬, க௯-ஆம் செய்யுட்களிற் கூறப்பட்ட பொருளும் ஆண் டாண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

நாரத முனிவரும் புத்தரும் போற்றிய கயிலாயத்தின் வரலாற்றைச் சொன்னேம்; இனி, அதற்குக் கிழக்கிலுள்ள வீரராகவேசத்தின் வரலாற்றைக் கூறுவோம்.

தசரதன் குமாரனுகிய இராமன், முன்னுளில் தனது மனேவியாகிய சீதையைத் தண்டகாரணியத்தில் இராவணன் கவர்ந்து கொண்டு இலங்கைக்குச் சென்றமையால், காடெங்கும் திரிந்து வருந்திக் காஞ்சியம் பதியை யடைந்து,

---

௬௦. மண்ணி - ஒருதீர்த்தம். கயவர் - கீழ்மக்கள். கற்கி - குதிரை.

சிவகங்கையில் முழுகி, திருவேகம்ப நாதரை, சீதையை அடைய வேண்டித் துதித்து அழுது வேண்டி, அதற்குத் தெற்கில் இருக்கும் அகத்தியேச்சரத்தின்முன் தங்கியிருக்கும் அகத்திய முனிவரைக் கண்டு, அவரடியில் வீழ்ந்து புலம்பினன்.

அகத்தியர், அவனை அஞ்சாதே என்று தேற்றி, 'இவ்வளவு துன்பத்திற்குக் காரணம் யாது? என்று வினவினர். இராமன், தான் தனது தந்தை கட்டளையால் தம்பியுடனும் மனைவியுடனும் காடு புகுந்து, மாயமானல் மயங்கிச் சீதையை இழந்த வரலாறு முழுவதும் கூறி, சீதையின் பிரிவாற்றாமையால் எனது உயிர் நீங்குமுன் திருவுளம் இரங்கவேண்டு மென்று வேண்டினன். அகத்தியர் அவனுக்குத் தத்துவோபதேசம் செய்து, நீ கவலையற்றிருவென்று கூற, இராமன், தேவரீர் கூறுவன உண்மையாயினும், மனைவி பகைவனிடத்திற் சிக்குண்டிருக்குங்கால் தத்துவ விசாரணை செய்வோன் பித்தனுவான் என்று உலகம் பழிக்கும். ஆகலின், இப்பொழுதைக்கு இஃது ஏற்பதன்று; பகைவரை வென்று சீதையை மீட்ட பிறகு, தேவரீர் கூறிய ஞானத்திற்கு உரியவனுவேன்; அது செய்தாலன்றி எனது மனம் அடங்காது; அவளை மீட்டற்குரிய உபாயத்தைக் கூறவேண்டும் என்றனன்.

அகத்தியர், 'உனது கருத்து இதுவாயின், நீ வீரத்தை விரும்பினமையால், 'வீர ராகவேசன்' என்னும் பெயரால் ஒரு இலிங்கம் நிறுவி, இக்காஞ்சியில் சிவபெருமானைப் பூசிப்பையாயின், அவ்வன்மையை அடைவாய்' என்றனர். அவ்வாறே இராமன் பூசிக்க, சிவபெருமான் தோன்றி, தமது பாசுபதாத்திரத்தைக் கொடுத்து, பிரமாத்திரம் நாராயணுத்திரம் ஏனைய தேவாத்திரங்களையும் அவரவர்களைக் கொண்டு கொடுப்பித்து, 'இனி, நீ இலக்குமணனுேடும் கிட்கிந்தையிலிருக்கும் சுக்கிரீவன் சேனையோடும் சென்று, கடலைக் கடந்து, இராவணனைச் சுற்றத்தோடும் அழித்து, சீதையை மீட்டு அயோத்தியை அடைந்து அரசுபுரிக என்று அருளிச் செய்தனர்.

பின்பு அகத்தியர் கூறிய தத்துவ மொழிகளிலுள்ள ஐயத்தை சிவபெருமானைக் கேட்க, சிவபெருமான் அதனைத் தெளிவித்து இலிங்கத்தில் மறைந்தனர். அவ்விலிங்கத்தை வணங்கினேர் பகைவரை வென்று வாழ்ந்து, திருவருளை அடைவார்கள்.

கற்கீசம்

வீராகவேசத்திற்குத் தெற்கில் மண்ணி தீர்த்தக்கரையில் கற்கீசமென்னும் ஒரு தலம் உண்டு. அது யுகாந்த காலத்தில் கொடியவர்களை அழித்தற்குத் திருமால் கற்கி யவதாரம் கொண்டு பூசித்துத் தாம் விரும்பிய வரங்களைப் பெற்றதாகும். அவ்விலிங்கத்தை வணங்கி, அம்மண்ணி தீர்த்தத்தில் முழுகுவோர் போக மோட்சங்களைப் பெறுவார்கள்.

# பலபத்திர ராமேசப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

பகலோனைப் பல்லுகுத்து மதியைத் தேய்த்துப் படைவேளைப் பொடிபடுத்த பழையோன் என்றுந், திகழ்வீர பாகவேச் சரத்தி னோடு திருத்தகுகற் கீச்சரமும் புகன்றும் இப்பால், புகழுறுகற் கீச்சரத்தின் மேல்பால் கண்டோர் பொருவலித்திண் பகட்டூர்தி உடையக் காணும், நிகழ்பலபத் திராமேச் சரமென் றோது நீடு திருத் தானவளம் பாட லுற்றும். க

கலி விருத்தம்

மண்ணின் மிக்கு வயங்கு துவரைவாழ்
கண்ணன் முன்வரு காளை அலப்படை
அண்ண லாம்பல பத்திர ஆண்டகை
பண்ணு வெஞ்சமர்ப் பாரதம் மூண்டநாள். உ

கார்த்த டக்கைக் கடும்புசெய் கைதவப்
போர்த்தொ ழிற்குப் பொருத மனத்தனுப்த்
தீர்த்த யாத்திரை செய்யத் தொடங்கினன்
வார்த்த வாணி நதிக்கரை எய்தினன். ௩

அங்கண் முப்புரம் அட்ட பிரான்தளி
எங்கும் உள்ளன நோக்கி இறைஞ்சிஅத்
துங்க வைப்பினில் தொக்க முனிவரர்
தங்கள் சேவடி தாழ்ந்து வினவுவான். ௪

ஈசன் வைகும் இடங்கள் எவைஎவை
ஆசின் றோங்கும் அவற்றுளும் மேலதாந்
தேசின் மிக்க திருநகர் யாவது
பேசு கென்ன முனிவரர் பேசுவார். ௫

---

க. பொரு - போர்செய்யும். பகடு - கடா. வளம் - ஈண்டுமேன்மை.

உ. அலம்-உழுபடை. பண்ணு -(குதிரை முதலிய படைகளைப்) போர்க் கோலம் செய்த.

௩. கார் - மேகம் (போலும் கொடையினையுடைய). கடும்பு - சுற்றம். வாணி நதி - சரசுவதி நதி.

பருவ ரைத்தோட் பரதன் வருடமே
கரும பூமி எனப்படுங் காண்அது
மருவும் எவ்வுல கத்தினும் மாண்டதாம்
திரும லர்ப்பனத் தேந்தொடை மார்பனே. சு

கரும பூமி வரைப்பிற் கடவுளர்
மருவி டங்கள் சிறந்தன மாட்சியோய்
அருள்வி ளைக்கும் அவற்றினும் மேலவாம்
தரும சக்கர பாணி தலங்களே. எ

அவற்றின் மிக்கன மானிடர் ஆக்கிய
சிவத்த லங்கள் கடவுளர் செய்தன
அவற்றின் மேலன வாகுஞ் சயம்புவாம்
சிவத்த லங்கள் அவற்றிற் சிறந்தன. அ

சயம்பு வைகுந் தலங்களுள் மிக்கவாம்
வியந்தெ டுத்து விளம்பப் படும்அவை
நயந்த அங்கவற் றுள்ளும்நற் காசிமிக்
குயர்ந்த் தன்னதிற் காஞ்சி உயர்ந்ததே. கூ

ஓது காஞ்சிக் குயர்ந்ததும் ஒப்பதும்
பூத லத்திடை இல்லை புகலும்அம்
மாத லத்தின் உகத்தின் வருத்தமும்
பாத கப்பய னும்பட ராவரோ. கo

பிறந்து ளோர்கள் வதியப் பெறுநர்அங்
கிறந்து ளோர்உளத் தெண்ணுநர் யாவரும்
அறந்த ழைக்கும்ஏ கம்பர் அருளினாற்
சிறந்த முத்தி உறுவது தேற்றமே. கக

வேறு

என்றறி வுறுத்திய இயல்பின் மாதவர்
மன்றலம் பூங்கழல் வணங்கி யாதவன்

சு. பரதன் வருடம் - பரதகண்டம். மாண்டது - மாட்சிமைப் பட்டது. திரு. அழகு.

எ. கடவுளர் - தேவர். சக்கரபாணி - திருமால்.

கூ. 'விளம்பப்படும் அவை' என்றது முத்தி நகரங்கள் ஏழினை.

அன்றவர் ஏவலிற் காஞ்சி அண்மிஅங்
கொன்றிய வளனெலாம் உவந்து நோக்கினான். கஉ

தெறுமழுப் படைச்சிவ தீர்த்தம் யாவையும்
முறைமையின் ஆடினான் முரசு கண்படா
இறையவன் கோயில்கள் எவையும் போற்றிவண்
டறைபொழில் ஏகம்பம் அருச்சித் தேத்தினான். கங

அந்நகர் வயின்அமர்ந் தருளுஞ் சீர்உப
மன்னியன் இணையடி வணங்கித் தொண்டு பூண்
டுன்னருந் திருச்சிவ தீக்கை யுற்றனன்
தன்னுடைப் பெயரின்ஓர் இலிங்கம் தாபித்தான். கச

உண்ணிறை காதலின் அருச்சித் தோகையால்
பண்ணிசை மொழிகளிற் பழிச்சும் எல்லையின்
கண்ணுதற் சிவபிரான் கருணை கூர்ந்தெதிர்
விண்ணவர் தொழுவிடை மீது தோன்றியே. கரு

வேண்டுவ கூறுகென் றருள மெய்யெலாம்
பூண்டபே ருவகையின் புளகம் போர்த்தனன்
தாண்டவம் நவிற்றுநின் சரணில் ஏழையேற்
காண்டகை இடையறா அன்பு நல்குதி. கசு

இச்சிவ லிங்கத்தின் இமய மாதொடு
நிச்சலும் இனிதமர்ந் தருளி நின்னடி
நச்சினோர்க் கிருமையும் நல்கு வாய்என
அச்செயல் முழுவதும் அருளி நீங்கினான். கஎ

காருடைப் பளிக்குருக் கலப்பை வான்படைத்
தாருடைப் போந்தினான் தாபித் தேத்திய
சீருடை இலிங்கத்தைத் தெரிசித் தோரெலாம்
ஏருடைக் கைலையின் இனிது வாழ்வரால். கஅ

ஆகத் திருவிருத்தம் - ககoரு.

---

கங. கண்படா - உறங்காத, ஒலியடங்காத.

கரு. ஓகை - மகிழ்ச்சி, எல்லை - பொழுது.

கஅ. போந்தின் தாருடையவன் எனமாறுக. போந்து - பனை.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) கச்சபேசப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையை விளக்கும். 'நற்குண முடையோர், தமது சுற்றத்தினர் தீத்தொழில்புரிவதாகத் தோன்றினும் அவருடன் கலவாது இறைபணியை மேற்கொள்வர்' என்னும் பொருளும் தோன்றும். பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

விளங்குகின்ற வீரராகவேசம், கற்சீசங்களின் பெருமைகளைச் சொன்னோம். இனி, கற்கீசத்திற்குக் கிழக்கிலுள்ள பலபத்திர ராமேசத்தின் சிறப்பைச் சொல்லுவோம்.

பாரதப்போர் தொடங்கிய காலத்தில் கண்ணன் தமையனாகிய பலரா மன், தனது சுற்றத்தார் செய்யும் போர்த் தொழிலுக்கு மனம் பொறாதவனாய்த் தீர்த்தயாத்திரை செய்யத்தொடங்கி, சரசுவதி நதிக்கரையை அடைந்தனன். அங்குப் பல சிவதலங்களைத் தரிசித்து, அங்குள்ள முனிவர்களை வணங்கி, 'எல்லாச் சிவதலங்களிலும் மேலான தலம் யாது? சொல்லியருளவேண்டும்' என, முனிவர்கள் சொல்லுகின்றார்கள்.

எல்லா உலகத்திலும் சிறந்தது பரதகண்டமே. அதிலும் தேவர்கள் வாழும் இடங்கள் சிறந்தன. அவற்றிலும் சிறந்தன விட்டுணு தலங்கள். அவற்றிலும் சிறந்தன மனிதர் தாபித்த சிவதலங்கள். அவற்றிலும் சிறந்தன தேவர்கள் செய்த சிவதலங்கள். அவற்றிலும் சிறந்தன இறைவன் தானே தோன்றிய சிவதலங்கள். அவைகளிலும் முத்திநகர் ஏழு சிறந்தன. அவ்வேழி லும் காசி சிறந்தது. அதிலும் காஞ்சி சிறந்ததாகும். அதற்கு ஒத்ததும் உயர்ந் ததுமாகிய தலம் இல்லை என்று சொல்லி, மற்றும் அதன் பெருமையைக் கூறினார்கள்.

அது கேட்டு, பலராமன் உடனே காஞ்சியையடைந்து, எல்லாத்தீர்த்தங் களிலும் முழுகி, அங்குள்ள பல தலங்களையும் வணங்கி, திருவேகம்பத்தையும் தரிசித்துப் போற்றினான். பின்னர் அந்நகரில் வாழ்கின்ற உபமன்னிய முனி வர்பால் சிவதீக்கைப் பெற்றுத் தன்பெயரால் ஓர்இலிங்கம் தாபித்துப் பூசிக்க, சிவபிரான் தோன்றி உனக்குயாதுவேண்டும்? என்று கேட்டனர். பலராமன் தேவரீரது திருவடியில் நீங்காத அன்பு உண்டாகவும், இவ்விலிங்கத்தில் அம்பிகையோடு தேவரீர் எந்நாளும் எழுந்தருளியிருந்து, வி நம்பி வந்தோர்க் குப் போக மோட்சங்களைத் தந்தருளவும் வேண்டும் என்று வேண்ட, சிவ பெருமான் அவ்வரங்களைக் கொடுத்து மறைந்தருளினர். அவ்விலிங்கத்தைத் தரிசித்தவர்கள் திருக்கைலையை அடைவார்கள்.

---

# வன்மீக நாதப் படலம்

கலிநிலைத் துறை

தேன்தாழ் பொலம்பூங் கடுக்கைச் செழுந்தார் விரைக்கின்றதோள்
வான்தாழ் மிடற்றண்ணல் வைகுற்ற பலபத்தி ரஞ்சொற்றனம்
மீன்தாழ் கடஞ்சூழ் அதன்பச்சி மத்திக்கின் விண்ணாட்டவர்
கோன்தாழ நிலைபெற்ற வன்மீக நாதத்தின் இயல்கூறுவாம். க

திருமால் தலைஇழந்த வரலாறு

புத்தேளிர் முன்னாள் ஒருங்கே குழீஇக்கொண்டு புகழ்எய்துவான்
முத்தீ வளர்த்தோர் மகம்வேட்க லுற்றார்கள் மொழிகின்றனர்
இத்தால் வருங்கீர்த்தி எல்லாம் நமக்கும் பொதுத்தான்எனக்
கொத்தார் மலர்க்கூந்தல் பங்கன் துணைத்தாள் குறிக்கொண்டரோ. உ

குருக்கேத் திரத்தே மகஞ்செய்யும் எல்லைக் கொழுங்கொன்றைவெள்
ளெருக்கோ டணைக்குஞ் சடைச்செம்ம லார்தம்மின் அருள்கூர்தலால்
உருக்கூர் பளிக்குப் பறம்பிற் பெருங்கீர்த்தி உண்டாதலும்
தருக்கான் முகுந்தன் கவர்ந்தான் நடந்தான் தடுப்பக்கொடான். ங

ஓடுந் திறங்கண்டு விண்ணோர் தொடர்ந்தெய்த லுற்றார்அவன்
பீடொன்று வில்லம்பு கைக்கொண்டு வெம்பூசல் பெரிதாற்றுபு
நீடும்பர் தம்மைப் புறங்கண்டு பின்னீ ளிடைச்சென்றுநின்
றீடின்றி எல்லீரும் ஒருவேற் குடைந்தீர்க ளெனநக்கனன். ச

நக்கான் முகத்தால் அவன்தேசு முற்றும் நறுஞ்சாமையாய்
அக்காலை நீங்குற்ற வாற்றால் அடல்விற் கழுத்தூன்றுபு

---

க. கடுக்கை - கொன்றை. விரைக்கின்ற - மணங்கமழ்கின்ற. வான் தாழ் என்பதை, மேகமானது தாழ்வை யடையத் தகுந்த எனமிடற்றுக்கு அடையாக்குக. விண்ணுலகு வணங்கும் என இறைவனுக்கு அடையாக்கு வாரும் உளர்; அவர் மிடறென்பது குறித்த பொருள் விளக்காமை நோக்கிற் றிலர். பச்சிமத் திக்கு - மேற்குத் திசை.

உ. முத்தீ: காருகபத்தியம், தக்கணாக்கினி, ஆகவனீயம், இதனுல் என்பதில் சாரியை தொக்கு, இத்தாலென நின்றது.

ங. பளிக்குப் பறம்பின் - பளிங்கு மலைபோல.

மைக்காளம் அன்னான் நெடும்போது வாளாது நின்றான்குண
திக்காளி அன்னான்றன் நிலைகண்டு புகழ்வெளவு திறம்எண்ணினான்.

கச்சிப் பதிக்கண் விரைந்தெய்தி அங்கண் கடுக்கைப்பிரான்
இச்சித்த கயிலாய நிருதித் திசைக்கண் இலிங்கம்நிறீஇ
நச்சித் தொழுங்காலை எங்கோன் அணைந்தென்னை நவில்கென்றலும்
பச்சைத் துழாய்அண்ணல் கவர்கீர்த்தி விண்ணோர் பெறப்பாலியாய்.

என்னா நவின்றேத்து சசிகேள்வ னுக்கெம்பி ரான்ஓதுவான்
வன்மீக நாப்பண் சிறுச்செல் லுருக்கொண்டு வார்வில்லுடை
அந்நா ணறத்தின்று பின்கீர்த்தி கொள்கென்ன அருள்செய்தலும்
பொன்நாடர் கோமானும் விடைகொண்டு மீண்டான் பொருக்கென்
[றரோ.

அவ்வாறு புற்றிற் கிளைத்தெய்தி அந்நா ணறத்தின்றுழிப்
பைவாய்ப் பணிப்பாய லான்சென்னி அறுபட்டு வீழ்ந்தவ்விடம்
இவ்வாய்மை யாற்சின்ன மாகேச வத்தானம் என்றாபதால்
செவ்வே குறைச்சென்னி யாறங்கண் ஓடுந் திருத்தக்கதே. அ

திருமால் தலைபெற்ற வரலாறு

ஷை வேறு

ஆயகாலையில் அவன்புடை நின்றும்அப் புகழைப்
பாய விண்ணவர் கவர்ந்துகொண் டோகையிற் படர்ந்தார்
மாயி ரும்புவி மிசைவளர் இருபிறப் பாளர்க்
கேயும் எச்சனும் மாயவன் இன்மையின் உயங்கி. கூ

மீட்டும் எய்தினன் காஞ்சியை விதியுளி வழிபட்
டீட்டும் அன்பினுக் கெம்பிரான் எதிரெழுந் தருளப்

ரு. முகத்தால் - முகத்தின் வழியாக. சாமை - ஒரு தானியம். குணதிக்காளி - கீழ்த்திசைக்குத் தலைவன், இந்திரன்.

எ. சசி - இந்திராணி. கேள்வன் - கணவன். வன்மீகம் - புற்று. சிறுச்செல், சகரம் விரித்தல். பொருக்கென்று, விரைவுக் குறிப்பு.

அ. வீழ்ந்து, வீழ என்பதன் திரிபு. குறைச்சென்னியாறு, சிரோநதி என்பர்.

கூ. பாய - பரவிய. ஓகை - மகிழ்ச்சி. படர்ந்தார் - சென்றார். இருபிறப்பாளர் - அந்தணர். ஏயும் - பொருந்திய. எச்சன் - யாகவடிவினன். உயங்கி - வாடி.

பாட்டிசைப்பழ மறைகளாற் பரசினன் நவில்வான்
தோட்டலர்க்குழற் சசிமுலை திளைத்ததோள் குரிசில். ௧௦

கலி விருத்தம்

அறுபதம் முரன்றிசை முழக்கும் ஆய்இதழ்
நறுமலர்க் கடுக்கைசூழ் சடில நாயக
எறுழ்வலிச் சிலையினால் எச்ச னாகிய
சிறுமலர்த் துளவினான் சென்னி அற்றதால். ௧௧

உறப்புறும் எங்களுக் குதவும் உண்டியும்
மறத்தொழில் பயிலிய மானர்க் கான்றவான்
துறக்கமும் இல்லையாய் விட்ட துட்கென
இறத்தலின் எச்சன்இவ் வுலகின் எம்பிரான். ௧௨

ஆதலின் எச்சனுக் களித்தி சென்னியென்
றோதினன் வேண்டலும் உரைத்தல் மேயினான்
மாதர்வெண் குழச்சிறு மதிக்கொ ழுந்தினைப்
போதொடு மிலைச்சிய சடிலப் புங்கவன். ௧௩

எம்புடை வரம்பெறும் இரும ருத்துவ
உம்பரின் அவன்தலை ஒன்றிக் கூடுக
நம்பும்இவ் விருவரும் நந்தம் ஆணையால்
பம்பிய வேள்வியில் பாகம் எய்துக. ௧௪

என்றருள் மழுவலான் சரணம் ஏத்திமற்
றென்றிது வேண்டுவான் உடைய நாதனை

---

௧௨. உறப்பு - நெருக்கம். பயிலிய - செய்த. மானர் - மனிதர். பயில் இயமானர் எனக் கண்ணழித்து, இயமானர் - ஆன்மாக்கள் என்பாரும் உளர். உட்கென, அச்சக்குறிப்பு. எம்பிரான், அண்மைவிளி.

௧௩. மாதர் - அழகு. குழச்சிறுமதி - இளைய சிறிய சந்திரன். போது - மலர். மிலைச்சிய - சூடிய.

௧௪. இரு மருத்துவ உம்பர் - இரண்டு வைத்திய தேவர்கள், அசுவினி தேவர்கள். பம்பிய - நெருங்கிய. இவர்கள் சூரிய ரேதசால் குதிரையாயிருந்த அவன் மனைவியின் நாசியில் தோன்றினவர்கள் என்பது புராண வரலாறு; இவர்களுக்குச் சையாதி என்னும் அரசன் வேள்வியில் சோமபானங் கொடுத்த காலத்தில், இந்திரன் சினந்து வச்சிராயுதத்தை வீசினான் என்றும் கூறப்படும்.

மன்றநின் அருளினால் புற்றின் வாய்எழூஉத்
தின்றுநா ணறச்செயுந் திறல்பெற் றேனரோ. ௧௫

ஆதலின் வெவ்வினைத் தொடக்க றுக்கும்இம்
மேதகு வரைப்புவன் மீக நாதம்என்
றோதவும் கண்டவர் பிறவி ஒவவும்
ஈதிநீ வரமென விடையின் ஏந்தலும். ௧௬

தந்தனம் வரமெனச் சாற்றி நீங்கினான்
இந்திரன் மீண்டனன் இரும ருத்துவத்
தந்திரத் தலைவரால் எச்சன் றன்சிரம்
முந்துபோற் பொருத்தலும் முளரிக் கண்ணினான். ௧௭

தெய்வத்தின் வலியினாற் சென்னி பெற்றெழூஉக்
கொவ்வைச்செவ் வாய்உமை கூறன் தாள்தொழு
தவ்வத்தன் ஆணையால் அவியின் பாகம்அங்
குய்வித்தோர்க் கமைத்துத்தன் உலகம் புக்கனன். ௧௮

இகழரு முகுந்தனே இந்த வாறிழி
தகவுற இடும்பையில் தங்கு நீர்மையால்
உகலருஞ் செல்வத்தை உடம்பை அல்லது
புகழினை விரும்பலும் போதத் துன்பமே. ௧௯

ஆகத் திருவிருத்தம் - ௧௧௨௪.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'திருமால் இந்திரன் முதலிய தேவர்கள் புகழை விரும்புதலும், ஒன்றை விரும்புதல் காரணமாக ஒருவரை ஒருவர் வஞ்சித்தலும், அழியுந் தன்மையும் உடையர்' என்பதும், (உ) 'இந்திரன் முதலிய தேவர்கள் இறைவனை வழிபட்டு நலங்கள் எய்துவர்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் ௧௯ ஆம் செய்யுளிற் கூறிய பொருளும் ஆண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

௧௬. ஒவ - நீங்க. ஈதி - தந்தருள்.

௧௭. மருத்துவத் தந்திரம் - வைத்தியநூல், ஆயுள்வேதம்.

௧௯. உகலரும் - அழிதலில்லாத. போத - மிகவும்.

## உரை நடை

நீலகண்டத்தையுடைய இறைவன் எழுந்தருளியுள்ள பலபத்திர ராமேச வரலாற்றை இதுவரையிற் கூறினோம்; இனி, இந்திரன் வழிபட்ட வன்மீக நாதத்தின் இயல்பைச் சொல்லுவோம்.

முன்னொரு நாளில் தேவர்கள் யாவரும் புகழை அடைய விரும்பி, ஒரு வேள்விசெய்யத் தொடங்கினர். அப்போது இதனால் உண்டாகும் கீர்த்தி எல்லாருக்கும் பொதுவாகும் என முடிபு செய்துகொண்டு, குருட்சேத்திரத்தில் வேள்வியைச் செய்தனர். சிவபெருமான் திருவருளால் பளிங்குமலை போலப் பெரிய கீர்த்தி உண்டாயிற்று. அதனைத் திருமால் கவர்ந்துகொண்டு, யார் தடுக்கவும் கொடாது நடந்தனர். அதனால் தேவர்கள் எல்லோரும் திருமாலை வளைத்துக்கொண்டு போர்புரிந்து, அவர் அம்பிற்கு ஆற்றாது புறங்காட்டி ஓடினர். அப்போது திருமால், 'யான்ஒருவனுக்கு நீவிர் எல்லீரும் தோற்றீர்கள்' என்று நகைத்தார். அதனால், அவர் ஒளியெல்லாம் அவரது முகத்தின் வழியாகச் சாமையுருவமாய் உதிர்ந்தன. திருமால் வில்லைக் கழுத்தில் ஊன்றிக் கொண்டு சும்மா நின்றுகொண்டிருந்தனர்.

இந்திரன் விரைந்து காஞ்சியை அடைந்து, கயிலாயநாதர் திருக்கோயிலுக்குத் தென்மேற்கில் ஒரு இலிங்கம் தாபித்துப்பூசிக்க, சிவபிரான் தோன்றியருளினர். இந்திரன், 'திருமால் கவர்ந்து கொண்ட கீர்த்தியைத் தேவர்கள் பெறும்படி அருள் செய்யவேண்டும்' என்று இறைஞ்சினன். சிவபெருமான், 'இந்திரனே, நீ புற்றினிடையில் செல்லுருவங் கொண்டு திருமாலினுடைய வில்நாணை அரித்துப் பின் கீர்த்தியை அடைக' என்று திருவாய் மலர்ந்தருள, இந்திரன் மீண்டு அவ்வாறு நாணியை அரிக்க, நாணி அற்று வில் நிமிர்ந்தமையால், அதன்மேல் கழுத்தை ஊன்றிக்கொண்டிருந்த திருமால் தலை அறுந்து விழுந்தது. அவ்விடம், 'சின்ன மாகேசவத்தானம்' என்னும் பெயரை அடைந்தது. அந்த குறைச் சென்னியாறு என்னும் ஓர் ஆறு ஓடும். இவ்வாறான பொழுது தேவர்கள் புகழைக் கைக்கொண்டு சென்றார்கள்.

பின்பு, வேள்வியாய் இருக்கும் திருமால் இல்லாமையால், தேவர்கள் அவி இன்றி வாடுதலால், இந்திரன்மீண்டும் காஞ்சியை யடைந்து, இறைவனை வழிபட்டுத் திருமாலுக்குத் தலையளிக்கும்படி வேண்டினன். சிவபெருமான், நம்மிடத்தில் வரம் பெற்ற அசுவினி தேவர்களால் அவன் தலை கூடும். 'அவர்களுக்கும் இனி வேள்வியில் பாகம் தருக' என்று, அருளிச்செய்ய, இந்திரன், 'அடியேன் புற்றினிடத்தில் எழும் வரத்தை இங்குப் பெற்றமையால், இத்தலம், 'வன்மீக நாதம்' எனப் பெயர் பெறவும், அதனைத் தரிசித்தவர்கள் பிறவி நீங்கவும் வேண்டும்' என்று இரந்து, அவ்வரங்களைப் பெற்று, மீண்டு,

அச்சுவினி தேவர்களால் திருமாலின் தலையைப்பொருத்தி எழுப்புவித்தனன். உயிர்பெற்றெழுந்த திருமால் இறைவன் பணித்தபடி அசுவினி தேவர்களுக்கு வேள்வியில் பாகம் அமைத்துத் தம் உலகத்தை அடைந்தனர்.

திருமாலே இங்ஙனம் துன்புற்றமையால், 'செல்வம், யாக்கைகளையே யன்றிப் புகழை விரும்புதலும் மிக்க துன்பத்திற் கிடமாகும்' என்பது தெளியப்படும்.

---

## வயிரவேசப் படலம்

கலி விருத்தம்

வயிர வாளினன் வணங்கி வெந்துயர்
வயிரம் மாற்றும்வன் மீகம் ஓதினும்
வயிர மாடமற் றதற்குத் தென்றிசை
வயிர வேச்சர மாபி யம்புவாம். ௧

பிரமன் செருக்கு

வடவ ரைத்தலை முஞ்ச மானெனுந்
தடநெ டுங்கிரி தன்னி டைச்சிலர்
படிம உண்டியர் பாங்கின் ஞோற்றுழி
அடல்அ னப்பிரான் அருளின் எய்தினன். ௨

வதனம் ஐந்தொடும் வந்து தோன்றினன்
பதம லர்த்துணை பணிந்தி றைஞ்சினர்
துதிமு ழக்கினற் சூழ்ந்து கைதொழூஉக்
கதம்அ றுத்தவர் இதுக டாயினர். ௩

"இலதும் இச்சகம் யார்மு தற்று? மன்
உலகே வன்புடை உயிர்த்தோ டுங்கிடும்?

---

௧. சொற்பின் வருநிலை. வயிரவாள் - வச்சிராயுதம். துயர் வயிரம் - துன்ப உறுதி. வயிர மாடம் - வைரமணிகள் இழைத்த மாளிகை.

௨. தலை - சிகரம். படிமம் - விரதம். அன்னப்பிரான் என்பது குறைந்து நின்றது.

௩. வதனம் - முகம். கதம் - சினம். கடாயினர் - வினவினர்.

௪. மன் - நிலைபெற்ற. அறியவிரும்பினேம் என்னும் ஒழியிசைப் பொரு

பலப சுக்களின் பாசம் நீத்தருள்
தலைவன் யார்?இது சாற்று'' றென்றனர். ௪

ஐம்மு கத்தயன் அனைய காலையின்
மம்மர் நெஞ்சினன் மயங்கிக் கூறுவான்
இம்ம றைப்பொருள் யாரும் உய்வகை
நம்ம னக்கொள நுவலக் கேண்மினோ. ௫

"உலகி னுக்கியான் ஒருவ னேஇறை;
உலகம் என்கணே உதித்தொ டுங்கிடும்;
உலகெ லாம்எனை வழிபட் டும்பர் மேல்
உலகி னைத்தலைப் படுங்கள் உண்மையே. ௬

## வேதங்கள் உரைத்தல்

*கலித்திலைத் துறை*

என்றான் விரிஞ்சன் அதுகாலையில் வேத மெல்லாம்
முன்றோன்றி அங்கண் மொழிகுற்றன முண்ட கத்தின்
வென்றோய் புராணம் பலசாத்திரம் வேதம் மற்றும்
குன்றான்ற வில்லான் றனையே முதல் என்று கூறும். ௭

"அவனேமறு வற்ற பரம்பிர மப்பு ராணன்
அவனேமுழு துந்தரு காரணம் ஆங்கே வர்க்கும்
அவனே இறைவன் தொழுவார்க்கருள் வீட ளிப்போன்
அவனே'' என ஓதிவெவ் வேறும் உரைப்ப அங்கண். ௮

## இருக்கு வேதங் கூறல்

"எச்சன் றனக்கும் இமையோர்க்கும்எவ் வேதி யர்க்கும்
அச்சங் கரனே அரசன்விசு வாதி கன்சீர்

---

ளில் வந்த இடைச் சொல்லுமாம். உயிர்த்து - தோன்றி. பசுக்கள் - உயிர்கள். மூன்று வினாக்களையும் தொகுத்துக் கூறுகின்றார்களாதலின், 'இது' என்றனர்.

௫. மம்மர் - மயக்கம். மனங்கொள என்பது வலிந்து நின்றது.

௬. உம்பர் மேல் உலகு என்றது முத்தியை, "வானோர்க் குயர்ந்த உலகம்" (குறள் ௩௪௬) என்றதுங் காண்க. முனிவர் கேட்ட மூன்று வினாவிற்கும் விடை முறையே கூறப்பட்டமை காண்க. கள், விகுதி மேல் விகுதி.

௮. புராணன் - பழையோன்.

௯. எச்சன் - திருமால். சித்துரு - அறிவுரு.

நச்சும்உனே ஈன்றருட் பார்வையின் நோக்கி நல்கும்
மெய்ச்சித்துரு என்றறி'' என்ற திருச்கு வேதம். ௯

எசுர் வேதங் கூறல்

''தன்கூற்றில் வருங்கண நாதர் தடுக்க லாற்றுக்
கோன்கூர்சர பாதிய ரால்வயங் கூறும் விண்ணோர்
வன்காழ்வலி சேற்றவன் யார்அவ னேம திக்கு
நன்காரணம்'' என்று நவின்ற தடுத்த வேதம். ௧0

சாம வேதங் கூறல்

தோலாஅவை நாப்பண் அடைந்து துரும்பு நட்டு
மாலாதி விண்ணோர் வலிமுற்றவும் மாற்ற வல்லோன்
ஆலாலம் உண்டோன் அவனேஅகி லங்களுக்கு
மேலாய ஏது'' எனவிண்டது சாம வேதம். ௧௧

அதர்வ வேதங் கூறல்

''வளிதாழ் விசும்பைப் பசுந்தோலிற் சுருட்ட வல்லோர்
உளரேல்புடை வீங்கி எழுந்து திரண்டு ருண்ட
இளவெம்முலே பங்கனே யன்றியும் இன்ப முத்தி
அளவிற்பெற லாம்'' என விண்ட ததர்வ வேதம் ௧௨

முனிவோர்எதிர் அந்தணன் வேதம் மொழிந்த கேட்டுத்
தனிநாயகன் மாயையின் மூழ்கி வெகுண்டு சாற்றும்
சினநீடு தமோகுண சீலன்உருத்தி ரன்றான்
மனமோடுரை செல்லரு நிட்களம் வான்பி ரமம் ௧௩

---

௧0. கூறு - அம்சம். வயம் - வெற்றி. அடுத்த வேதம் - யசுர் வேதம்.

௧௧. தோலா - தோல்வியில்லாத, வெற்றியினையுடைய. இவ்வரலாற்றை மேலே அமரேசப் படலத்திற் காண்க.

௧௨. வளி - காற்று. விசும்பு - வானம். விண்டது - கூறிற்று. இக்கருத்தமைந்த உபநிடத வாக்கியம் மேலே (பக் ௧௬௮) விளக்கப்பட்டிருத்தல் காண்க.

௧௩. உருத்திரன்தான் என்புழித் தான் அசைநிலை. அவ்விடத்து, 'ஆதலின்' என்பது எஞ்சி நின்றது. நிட்களம் - தோய்வில்லாதது. வான், பரமென்னும் பொருட்டு. வருஞ் செய்யுளுடன் கூட்டி, 'உருத்திரன் தமோ குண சீலன்; ஆதலின், மனவாக்குக்கு எட்டாத நிட்களப்பொருள், பரப் பிரமம், ஓம் மொழிப் பொருள் அவன் என்று கூறுதல் தகாது என்றான் என முடிக்க.

பிரணவம் உரைத்தல்

சால்பான்உயர் 'ஓம்'என் மொழிப்பொருள் சம்பு என்றல்
ஏலாதென அம்மனு வேவடி வெய்தி வந்து
மாலால்உரை செய்தனை நீகம லப்பொ குட்டின்
மேலாய்இது கேண்மதி என்றுமுன் நின்று சொல்லும். ௧௪

வேதத்தலை யிற்புக லுற்றுயர் வேத ஈற்றும்
போதச்சுர மாய்நிறு வப்படு பொற்பி னேன்யான்
மாதர்ப்பகு திக்குள் அடங்கி வயங்கி னேற்கும்
ஆதிப்பரம் யார்அவ னாகும் மகேசன் அம்மா. ௧௫

எழுசீரடி யாசிரிய விருத்தம்

என்றிது விளம்பும் பிரணவந் தனையும் இகழ்ந்துதன் பெருமையே வியப்ப, மன்றலந் துளவோன் ஆயிடைத் தோன்றி மன்றயான் கருத்தன்என் றுரைத்தான், குன்றருங் கொடுநோய் ஆணவக் குறும்பாற் கோட்படும் இருவரும் இவ்வா, றொன்றிய செருக்கான் மீமிசை இகலி ஓவறப் பிணங்கும்அவ் வேல்வை*. ௧௬

வயிரவத் தோற்றம்

அலர்ந்தசெங் கமலம் நிகர்இணை விழியும் அதுமுகிழ்த் தனையதோர் விழியும், மலர்ந்தபொன் நிறத்த கேசமும் முகரோ மங்களும் வடிவமுங் காட்டி, நலந்திகழ் இரவி மண்டிலத் துறையும் நாயகன் அனையது கண்டான், சலந்தவிர்த் தருள்வான் உருகெழத் தோன்றித் தமனியக் கிரியென நின்றான். ௧௭

---

௧௪. சம்பு என்பது அவனென்னும் பொருட்டாய் நின்றது.

௧௫. தலை - முதல். புகலுற்று - சொல்லப்பட்டு. சுரம் என்பது வடமொழியில் உயிரெழுத்தைக் குறிக்கும் ஒரு பெயர். வேதத்தைத் தொடங்கும் பொழுதும் முடிக்கும் பொழுதும், 'ஓம்' என்பது கூறப்படுதல் மரபு. ப்ரக்ருதி என்னும் வடசொல்லின் திரிபாகிய பகுதியென்பது. (சொற் பிரபஞ்சங்கட்கு) முதற்காரணம் என்னும் பொருட்டு. எனவே, சுத்தமாயை என்பதாயிற்று. மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாதலின், மாதர்ப் பகுதி' என்றார். ஆண்டுப் பகரம் விரித்தல். பரம் - ஈண்டுத்தலைவன்.

௧௬. * 'அவ்வேலை' எனவும் பாடம்.

௧௭. கேசம் - மயிர், சலம் - கோபம். உருகெழ - அச்சந்தோன்ற.

காண்டலும் நெடியோன் நடுங்கிநீத் தகன்றான் கமலநாண் மலர் மிசைக் கடவுள், ஈண்டைஎன் புதல்வா வருகென விளிப்ப வெருண் டருள் எம்பிரான் உருவின், ஆண்டுவந் துதித்த வயிரவப் புத்தேள் அயன்மிசைச் செல்வுழி அயனும், மாண்டகு பிரமப் படைஎதிர் விடுத்தான் வந்ததத் தடுப்பரும் படையே. கஅ

வருபடை வேகக் காற்றினின் முரிய விரைந்துசெல் வயிரவப் புத்தேள், திருமலர்க் குரிசில் பழித்திடும் அஞ்சாஞ் சிரத்தினை யுகி ரினாற் கொய்தான், பெருவிறல் உயிர்போய் விழுந்தபின் மீளப் பிஞ் ஞகன் அருளினால் உய்ந்து, மருள்வலி நீங்கி எழுந்தனன் மறை யோன் வள்ளலை வணங்கிநின் றேத்தும். கசு

நான்முகன் முறையிட்டு வரம்பெறல்

விளைநறை உகுக்குங் கமலமென் பொகுட்டு மேவரும் எனை எடுத் தாண்ட, களைகணே ஆவித் துணைவனே சருமக் கலிங்கனே பிரமனே இருகால், வளைதரு பினாக பாணியே உனக்கு நெய்அவி மடுத்துநல் ஓமம், உளைவறப் புரிகேம் உலப்பறும் வாழ்நாள் உதவி மற் றெந்தமைக் காக்க. உ0

கரைபொரு திரங்கி வெண்டிரை சுருட்டுங் கருங்கடல் புடை உடுத் தகன்ற, தரையொடு விசும்பின் நள்ளிடைப் போந்த தழல் நிறச் சுடர்எறி காந்திக், குரைபுனல் மோலிக் குழகனே தறுகண் கொடுஞ்சினக் கடுந்தொழிற் பகட்டு, விரைசெலற் கூற்றின் அடுதி றற் பாச மிடலறத் துணித்தெமைக் காக்க. உக

உலகெலாம் விரியும் ஆதிகா லத்தின் ஒருவனே யாகிநின் றுள் ளாய், பலதிறப் புவன நாயகர் தம்மைப் பாற்படப் பயந்தளித் தருள்வோய், மலர்தலை உலகம் மீளவந் தொடுங்க மன்னிவீற் றிருந்

கஅ. ஒரு கற்பத்தில் பிரமனுக்குச் சிருட்டித் தொழில் கற்பித்தற் பொருட்டு அவனது நெற்றியில் உருத்திரர்கள் தோன்றினமையை உட் கொண்டு மயங்கி, 'என் புதல்வா' என்றான்.

உ0. களைகண் - பற்றுக்கோடு. சருமம் - தோல். கலிங்கம் - ஆடை. உளைவு - வருத்தம். உலப்பறும் - கெடாத.

உக. நள்ளிடை - நடுவில். குரைபுனல் மோலி - ஒலிக்கின்ற கங்கை யைத் தரித்த திருமுடி. விரைசெலல் - விரைந்து செல்லுதல். கூற்று - இய மன். மிடல் - வலிமை. துணித்து - துண்டுபடுத்தி.

தருள் முதலே, அலகிலா அருளான் நெய்அவி மிசைந்தீண் டாயுளை அளித்தெமைக் காக்க. உஉ

சிறுவிதி மகவாய் முன்வரும் பிராட்டி அம்பிகை சீர்இலக் குமிகோ, மறுவறும் அகில காரணி மலையான் மகளெனப் பெயரிய தலைவி, நறுமலர்க் கடுக்கைத் தொடையல்ஏம் பெருமான் நலங் கெழு சத்தியே விமலா, சறுமுறை இருதாள் வழிபடு கின்றேம் ஆயுளை அளித்தெமைக் காக்க. உ௩

அகிலம்ஈன் றெடுத்த இருமுது குரவீர் அடியிணை போற்றிஎன் றேத்து, நகுமலர்ப் பதுமத் தவிசிருேன் துதிக்கு நயந்துளங் கருணை கூர்ந் தருளி, முகிழ்முலை ஒருபால் மணந்துவீற் றிருந்து முரண் கெடக் கூற்றுயிர் குடித்த, பகைஅடு கணிச்சி ஆதியம் பகவன் பிர மனைப் பார்த்திது பகரும். உச

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இன்று தொட்டுநீ நான்முக னுகிஎம் ஆணையிற் பிறழாமே
நன்று வாழ்தியால் வேட்டது நவில்கென நாயினேன் உய்ந்தேன்இங்
கொன்று நின்னடிக் கன்புதந் தடியனேன் உஞற்றிய பிழையெல்லாம்
மன்ற நீபொறுத் தருளெனத் திசைமுகன் வேண்டலும் வரம்ஈந்து.

வயிரவர் வெற்றிப் படர்ச்சி

கூர்த்த சூலமுங் கபாலமுங் கொண்டுகை தொழுதொரு புடை நிற்கும், சூர்த்த நோக்குடை வயிரவத் தோன்றலை நோக்கினன் இது சொல்வான், கார்த்த மேனியோய் வயிரவ காலன்நீ கலவிக ரணன் சீர்சால், வார்த்தை சூழ்பெல விகரணன் பெலப்பிர மதனனுமா கின்றாய். உ௫

---

உ௩. இது அம்பிகை துதி. சிறுவிதி - தக்கன். கோ - பூதேவி என்பர். கா எனப்பாடங்கொண்டு சரசுவதியென உரைத்தல் சிறக்கும். இத் துதிகள் முழுதும் ஆயுளைவேண்டுதற்கு உரியவாதல் அறிக.

உச. நகு - விளங்குகின்ற. இருமுதுகுரவர் - தாய் தந்தையர். தவிசு - ஆசனம். முரண் - வலிமை. கணிச்சி - மழு.

உ௫. சூர்த்த நோக்கு - அச்சந்தரும் பார்வை. கார்த்த - கருமையடைந்த. கலவிகரணி, பெலவிகரணி பெலப்பிரமதனி, சர்வபூத தமனி முதலிய சத்தி கட்குச் சத்திமானுகிய தம்மின் வேறல்லர் என்பார், சிவபெருமான் வயிரவக் கடவுளை இவ்வாறு கூறினர்.

சருவ பூதைக தமனனி எம்முடைத் தனையர்கள் தமின்மூத்த
சிறுவ னேனெனத் திருவருள் செய்துநீ திறற்கணம் புடைசூழ
வெறிம லர்த்துழாய்ப் பண்ணவன் முதலிய விண்ணவர் உலகெல்லாம்
குறுகி வார்கறைப் பிச்சைஏற் றவர்மனக் கொடுஞ்செருக் கறமாற்றி.

விதியைப் பற்றும்இம் முனிவரர் செருக்கையும் விட்டுகென் றருள்கூரும், பதியைத் தாழ்ந்தனன் விடைகொடு வயிரவப் பண்ணவன் படர்குற்றான், மதியக் கிற்றணி எம்பிரான் மறைந்தனன் வார்கழல் தொழுதேத்தி, அதிர்வின் தீர்ந்திடும் மலரவன் முதலியோர் அவரவர் இடம்புக்கார். ௨௮

உட்கத் தோன்றிய வயிரவன் முன்னுற நெடியவன் உலகுற்றான், தட்கச் சென்றெதிர் வாயிலோர்த் துரந்தனன் விடுவச்சேனனைத்தாக்கிக், கொட்கச் சூலத்தின் நுதியினிற் கோத்தனன் குறுகினன் வட்காரை, வட்கப் போர்புரி மாயவன் இருக்கையுள் மதுகையின் நிகரில்லான். ௨௯

பிச்சை தேரிய வருஞ்செயல் கேட்டனன் பெட்பொடும் விரைந்தெய்திப், பச்சை மேனியோன் மனைவியர் இருவரும் பாங்குற எதிர்கொண்டு, செச்சை நாண்மலர்த் திருவடி வணங்கினன் செம்புனற் பலியாரும், மெச்ச நெற்றியின் நரம்பினைப் பிடுங்குபு விட்டனன் கபாலத்துள். ௩0

தாரை யாகிநூ றாயிரம் ஆண்டள வொழுகியுந் தகுநெய்த்தோர்
ஈர வெண்டலைக் கபாலத்தை நிறைத்தில திரத்தமுற் றறவோடும்

---

௨௭. வார் - ஒழுகின்ற. கறை - இரத்தம். தனையர், போலி.

௨௮. விதி - பிரமன். இம்முனிவரர் என்றது அங்கு நின்றவர்களை. பதி - கடவுள். அதிர்வு - நடுக்கம்.

௨௯. நெடியோன் - திருமால். தட்க - தடுக்க. எதிர் - எதிர்த்த. வாயிலோர் - வாயில் காப்பாளரை. துரந்தனன் - ஓட்டினான். விடுவச்சேனன் என்பான் சேனாதிபதி. கொட்க - சுழல. நுதி - முனை. வட்கார் - பகைவர். வட்க - நாண, தோற்க. மதுகை - வலி.

௩0. தேரிய - ஆராய்தற்கு, வாங்குதற்கு. இருமனைவியர் ஸ்ரீதேவி, பூதேவி. செச்சை - வெட்சி. பலி - பிச்சை. மெச்ச - கொண்டாட.

வீர மாதவன் நிலமிசை மூர்ச்சித்து வீழ்ந்தனன் அதுகாலை
வார முற்றருள் வயிரவன் திருக்கையால் வருடினன் மயல்தீர்த்தான்.

அயர்வுயிர்த்தனன் எழுந்தனன் அஞ்சலி அளித்தனன் குனிசார்ங்கன்
வயிர வப்பிரான் திருவடிப் பத்தியும் மற்றவன் தன்மாட்டுப்
பயிலும் இன்னருட் கருணையும் வேண்டினன் பரிந்தவற் கவைநல்கிப்
பெயர்பு மீண்டனன் பிச்சைதேர்ந் தருளிய பிறண்டும் எய்தினன்
[மாதோ.

உலகம் எங்கணுந் திரிந்துநெய்த் தோர்ப்பலி ஏற்பவ னெனஒன்னார்
வலம்மி சைந்தவேற் கடவுளர் தருக்கற வாங்கினன் முனிச்செல்வர்
குலம டப்பிடி அங்கலா ரையுங்குறு நகையினின் மயல்பூட்டி
நிலவ ரைப்பினிற் காஞ்சியை அணுகினன் நெடுந்தகை நெறியானே.

வயிரவர் வழிபாடு

கறைக்க பாலத்தை ஒருவயின் நிறுவினன் சேனைகா வலன்றன்னை
இறைத்த செம்புனற் கூலத்தின் நதியினின் இழிச்சுபு மால்வேண்ட
நிறைத்த பேரருட் கருணையால் உதவினன் நிகழ்ந்ததன் பெயரானே
மறைக்கு நாயகன் வயிரவேச ரன்றனை நிறீஇயினன் வழிபட்டான்.

ஐய னேமறை முடிமிசை நடித்தருள் அமலனே எனைஆண்ட
மெய்ய னேஎனப் பழிச்சிநெக் குருகினன் விளங்கிஇவ் விலிங்கத்தே
தைய லோடினி தமர்ந்தருள் யானும்நின் சந்நிதி எதிர்வைகி
உய்யு மாறருள் அடியனேன் செயத்தகும் உறுபணி அருள்என்றான்.

வேண்டி நின்றிரந் துரைத்தலுங் கருணையான் மேவிஇங் குறைகின்
ஈண்டு நீஎதிர் வைகிஇத் திருநகர் புரந்தினி தமர்வாயால் [றேம்

---

௩௧. நெய்த்தோர் - இரத்தம். ஈரம் - நிணப் பசை. வாரம் - அன்பு. வருடினன் - தடவி. மயல் - மயக்கம்.

௩௨. அயர்வுயிர்த்தனன் - தளர்வு நீக்கி. சார்ங்கம் - திருமாலினது வில். அவன் என்றது வயிரவரையும், தன் என்றது திருமாலையும் என்க. பயிலும் - செய்கின்ற. அருளிய, வினையெச்சம். பிறண்டும்-மற்ற இடங்களிலும்.

௩௩. முனிச்செல்வர் என்றது ௨அ ஆம் செய்யுளிற் குறித்தவரை.

௩௪. கறை - இரத்தம். சேனை காவலன் - விடுவச்சேனன். இழிச்சுபு - இறக்கி. மறைக்கு நாயகன் என்றது வயிரவரை.

காண்ட குங்கபா லத்தின்செய்த் தோரைநின் கணங்களுக் கருளென்
பூண்ட பேரருள் வழங்கினன் எம்பிரான் வயிரவப் புத்தேளும். [ளுப்

குருதி ஈர்ம்புனல் கணங்களுக் களித்தனன் குடிப்புழிச் சிலவேனும்
பருகு தற்குப்போ தாமைகண் டவனிமேற் பறந்தலைப் பெருவேந்த
செருவில் ஏற்றுயிர் மடிந்தவர் விண்மிசைத் திகழுஅங் கவர்செந்நீர் [ர்
இரண மண்டில வயிரவன் கணங்களுக் கினிதமைத் தருள்செய்தான்.

கயிர வத்தெழில் கவர்ந்தவாய் ஆய்ச்சியர் பாடியிற் கவர்ந்துண்ட
தயிர வற்கயர் வொழித்தருள் வயிரவத் தம்பிரான் தொழுதேத்தும்
வயிர வப்பெயர் ஈசனை வணங்குநர் அவமிருத் துவின் நீங்கிச் [வார்.
செயிர்அவத்தைகள் முழுவதுங் கடந்துபோய்ச் சிவனடி நிழல்சேர்

ஆகத் திருவிருத்தம் - ௧௧௯௨.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வாலாறுகள், (௧) 'சிவபெருமானே பரம்பொருள்' என்னும் உண்மையை முதலாகக்கொண்டு, (௨) 'திருமால் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் உயிர்க்குணங்களை யுடையவராய் உயிர் வருக்கத்துட்பட்டவர்களே' என்பதும், (௩) 'செருக்குக் கொண்டவர்களை இறைவன் தண்டிப்பான்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

இந்திரன் வழிபட்ட வன்மீகநாத வரலாற்றைச் சொன்னோம்; அதற்குத் தெற்கிலுள்ள வயிரவேச்சர வரலாற்றை இனிச் சொல்லுவோம்.

மேருமலைச் சிகரத்திலுள்ள 'முஞ்சமான்' என்னும் மலையில் சில முனிவர்கள் தவஞ்செய்ய, அவர்களுக்கு முன்னே பிரமன் ஐந்து முகத்தோடும் தோன்றினன். முனிவர்கள் அவனை வணங்கி, 'இவ்வுலகம் யாரை முதலாக உடையது? உலகம் யாரிடத்தில் தோன்றி ஒடுங்கும்? உயிர்களுக்குப் பாசத்தை

---

௩௭. பறந்தலை - போர்க்களம். செந்நீர் - இரத்தம். இரணமண்டில வயிரவனை இருந்து என்க.

௩௮. கயிரவம் - செவ்வாம்பல். ஆய்ச்சியர் பாடியில் தயிர் கவர்ந்துண்டவன் என்க. செயிர் அவத்தை - குற்றநிலை.

நீக்கித் திருவருள் செய்கின்ற தலைவன் யார்? இதனைச் சொல்லவேண்டும்' என்றனர்.

பிரமன் மயங்கிக் கூறுகின்றான்: 'முனிவர்களே, வேதத்தின் உண்மைப் பொருளாகிய இதனை, யாவரும் உய்யும்படி உங்கட்குச் சொல்லக் கேளுங்கள்; யான் ஒருவனே உலகத்திற்கு முதல்வன்; உலகமெல்லாம் என்னிடத்திற்றானே தோன்றி ஒடுங்கும்; உலகமெல்லாம் என்னையே வழிபட்டு முத்தியடையும்; இது சத்தியம்!' என்றனன்.

உடனே, வேதங்களெல்லாம் தோன்றி, 'ஏபிரமனே, புராணம் சாத்திரம் வேதம் முதலிய யாவும் சிவபெருமானையே முதற் கடவுளென்று கூறும்; அவனே பரப்பிரமம்; அவனே எல்லாவற்றையும் தருகின்ற காரணக்கடவுள், அவனே எல்லார்க்கும் இறைவன், அவனே வணங்குவார்க்கு முத்தியளிப்பவன்' என்று ஒருங்கு கூறிப் பின் தனித்தனியாகவும் கூறுகின்றன.

இருக்கு வேதமானது, 'திருமால் முதலிய தேவர்களுக்கும் அந்தணர்களுக்கும் தலைவன் சங்கரனே; அவன் உலகத்தைக் கடந்து நிற்றலால் விசுவாதிகன் எனப்படுவான்; உன்னையும் அவனே உண்டாக்கிப் படைத்தல் தொழிலும் அளிப்பான், ஞானமயனும் ஆவான் என்று அறிவாயாக' என்றது.

யசுர் வேதமானது, 'தனது அம்சத்தில் தோன்றிய கணநாதர்கள், சரபம் முதலியோரால் தேவர்கள் வலிமையை அடக்கினவன் எவனோ, அவனே எல்லாவற்றிற்கும் காரணனாவான்' என்றது.

சாமவேதமானது, 'தேவர்கள் கூட்டத்தின் நடுவில் ஒரு துரும்பை நட்டு, திருமால் முதலிய தேவர்கள் வலிமை முழுதும் போக்கவல்லவனும், ஆலகால விடத்தை உண்டவனும் ஆகியவன் எவனோ, அவனே உலகத்திற்கு மேலான காரணமாகும்' என்றது.

அதர்வணவேதமானது, 'ஆகாயத்தைத் தோல்போற் சுருட்டவல்லவன் இருந்தால், அவனே சிவபெருமானைவிட்டு மோட்சத்தைஅடைவான்' என்றது.

இவ்வாறு வேதங்கள் முனிவர் எதிரே கூறக்கேட்ட பிரமன் கோபித்து, தாமதகுணத்தை உடைய உருத்திரனை, மனவாக்குக்கு எட்டாத நிட்கள பரப்பிரமமென்றலும், பிரணவத்திற்குப் பொருள் என்றலும் தகாது என்றனன். அப்போது பிரணவமே உருவுகொண்டுவந்து, 'எனக்கும் அச்சிவபெருமானே பரமாவன்' என்றது. பிரமன் அப்பிரணவத்தையும் இகழ்ந்து, தன் பெருமையையே புகழ, விட்டுணு தோன்றி, யானே கடவுள் என்றுகூறி, இருவரும் போர் விளைத்தனர்.

அதனைச் சூரிய மண்டலத்தில் வாழும் இறைவன் கண்டு, அவர்கள் போரினை நீக்குதற்பொருட்டு மேருமலைபோல வந்து நின்றனர். அதைக் கண்ட திருமால் அஞ்சி நீங்கினர். பிரமன் 'எனது புத்திரனே, வருவாயாக' என்று அழைத்தான். அதனல் கோபித்த பெருமான் திருவுருவில் வயிரவர் தோன்றி, தம்மேல் பிரமன் விட்ட பிரமாத்திரத்தைத் தாம் செல்லும் வேகக் காற்றினல் முரியடித்து, இகழ்ந்து பேசும் அவனது ஐந்தாந்தலையை நகத்தாற் கிள்ளினர். அதனல் இறந்த பிரமன், மீண்டும் இறைவன் அருளாற் பிழைத்தெழுந்து, இறைவனையும் இறைவியையும் வாழ்நாள் தரும்படி துதித்து, நான் முகனய் இருந்து வாழவும், தான் செய்த பிழையைப் பொறுக்கவும் வரங்கள் பெற்றுச் சென்றனன்.

சிவபெருமான் வயிரவ தேவரை, திருமால் முதலிய தேவர்கள் இடங்களிற் சென்று அவர்கள்பால் இரத்த பிச்சை யேற்று, அவர்கள் செருக்கைப் போக்குக என்றும், பிரமனையே பற்றிய இம்முனிவர்கள் செருக்கையும் போக்குக என்றும் கட்டளையிட்டனர்.

வயிரவர் விடைபெற்று முன்னே வைகுந்தத்திற்குச் சென்று வாயில் காப்பவரைத் தாத்தி, சேனதிபதியாகிய விடுவச்சேனனைச் சூலத்தில் கோத்துக் கொண்டனர். திருமால் அதையறிந்து வந்து, தம்முடைய நெற்றி நரம்பைப் பிடுங்கி, வயிரவர் கொண்டுள்ள பிரம கபாலத்தில் விட, இலட்சம் வருடம் இரத்தம் ஒழுகிற்று. ஒழுகியும் கபாலம் நிறைந்திலது. திருமால் மூர்ச்சித்து விழுந்தனர். வயிரவர் அவரைத் தமது திருக்கரத்தால் தடவி மூர்ச்சை தெளிவித்து எழுப்பி, அவர் வேண்டிய வரத்தைக் கொடுத்து, மற்றைய இடங்களிலும் சென்று இரத்த பிச்சை யேற்றுத் தேவர்கள் செருக்குகளை நீக்கி, அம்முனிவர் மனைவியர்களையும் மயக்கிக் காஞ்சியை அடைந்தனர்.

அடைந்து கபாலத்தைக் கீழே வைத்து, விடுவச்சேனனைச் சூலத்தினின்றும்இறக்கி, திருமால் வேண்ட, அவருக்கு அவனைக் கொடுத்துத் தமது பெயரால்ஒரு இலிங்கம் நிறுவிப் பூசித்து, 'இறைவனே, இவ்விலிங்கத்தில் நீ என்றும் இருந்து அருள் செய்யவும், உனது சந்நிதியில் அடியேன் இருக்கவும், அருள் செய்து, யான் செய்யும் பணியையும் கட்டளை யிட வேண்டும்' என்று வேண்டினர். இறைவன் அவ்வரங்களைக் கொடுத்து, இந்நகரத்தைக் காவல் புரிவாயாக என்றருளி, கபாலத்தில் இருக்கும் இரத்தத்தை நின் கணங்களுக்குக் கொடு என்றனர். அங்ஙனம் கொடுக்கும்போது சிலவற்றிற்கும் அது போதாமையால் அரசர் போர்க்களத்து உதிரத்தைப் பருகச் செய்தனர்.

வயிரவர் வழிபட்ட வயிரவேசத்தை வணங்கினவர்கள், அவமிருத்துவினின்றும் குற்றத்தினின்றும் நீங்கி முத்தியை அடைவார்கள்.

## விடுவச்சேனேசப் படலம்

கலிநிலைத் துறை

போதணி பொங்கர் உடுத்ததண் கச்சிப் புரத்திடை
மாதர்வண் கோயில் வயிரவே சத்தை வருத்தனம்
ஆதியும் அந்தமும் இல்லான் அமர்ந்தருள் அங்கதன்
மேதகு தென்பால் விடுவச்சே னேச்சரம் விள்ளுவாம். க

திருமால் சக்கரம்இழந் தயர்தல்

வெங்தொழில் தக்கனுர் வேள்வி விளிந்தநாள் மாயவன்
சந்திர சேகரன் தாளிணை ஏத்தி விடைகொண்டே
அந்தண் விரசை கடந்துவை குந்தம் அடைந்தபின்
சுந்தரப் பொன்தவி சேறி இருந்திது சூழ்ந்தனன். உ

மலைவறு காட்சி விடுவச்சே னன்முதல் மந்திரித்
தலைவர் தமக்கு நிகழ்ந்தது சாற்றிக் கவன்றனன்
குலவும் அரக்கர் அவுணரைப் போரிற் கொலைசெய்திவ்
வுலக முழுவதும் ஓம்புதல் என்தொழி லாகுமால். ங

ஏயும் அலங்கரத் தின்றித் தொடங்கும் உழவன்போல்
ஆயுதங் கைஇன்றி எவ்வா றகிலம் புரப்பல்யான்

---

க. போது அணி - மலர்களைக் கொண்டிருக்கின்ற. பொங்கர் - சோலை. மாதர் - அழகு.

உ. விரசை யென்பது வைகுந்தத்திற்கு இப்புறத்திலுள்ள ஓர் ஆறு. சூழ்ந்தனன் - ஆராய்ந்தான்.

ங. மலைவு - மாறுபாடு. காட்சி - அறிவு. விடுவச்சேனன் என்பான் திருமாலின் பரிவாரங்களில் முதன்மை பெற்றவன்; சேனைத்தலைவன். இவன் திருமாலை ஒத்தவன் என்பது, பதிகத்தில் கரு ஆம் செய்யுளிலும், திருமாலுக்கு அடுத்தபடியில் வைத்து எண்ணப்படுபவன் என்பது இப்படலம் எ ஆம் செய் யுளிலும் இப்புராணத்திற்றானே கூறப்பட்டிருத்தல் காண்க. கவன்றனன் - கவலைப்பட்டான். ஓம்புதல் - காத்தல்.

ச. அலம் - உழுபடை. புரப்பல் - காப்பாற்றுவேன். கதிர்மண்டிலம் தோற்றும் - சூரியமண்டலத்தைத் தோற்றுவிக்கின்ற; எனவே, சூரியனைப் போலும் ஒளியினையுடைய. கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய. திருமால்

காய்கதிர் மண்டிலந் தோற்றுங் கடவுள்மா சக்கரம்
மாய்வரும் யாக்கைத் ததீசியி னல்வாய் மடிந்ததே. ௪

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மதனுடைத்திண் சலந்தரனை உயிர்செகுப்பச் சிவபெருமான் வகுத்த சோதிச், சுதரிசனப் படைஅன்னோன் தரப்பெற்றோன் அஃதின்று தக்கன் வேள்வி, சிதைவுசெயுந் திறல்வீர பத்திரன்மேல் விடுத்தலும்அச் செல்வன் பூண்ட, கதமுறுவெண் டலையொன்று கவ்வியதால் இனிச்செய்யக் கடவ தென்னே. ௫

நஞ்சுபடு துளையெயிறு தனைஇழந்த நாகத்தின் உயிர்ப்பும் ஒன்னார், அஞ்சுதகத் தலைச்செல்லுங் கோடிழந்த கடாக்களிற்றின் அடலும் ஏற்றார், நெஞ்சுருவப் பாயும்இரு மருப்பிழந்த விடை ஏற்றின் நெறிப்பும் கூர்வாய், வஞ்சநெடும் படைஇழந்த மதவீரன் வீறும்எவன் செய்யும் மாதோ. ௬

ஆழிகரத் துளதாயின் சிவனருளால் வியனுலகம் அளிப்பேன் அன்றிப், பாழிவரைத் தடம்புயத்தீர் என்செய்வேன் எனக்கவன்று பரியுங் காலை, வாழிநெடும் பொலஞ்சிறைய புள்ளூர்தி தனக்கிரண்டாம் வடிவ மான, காழிகந்த பெருங்கீர்த்தி உலம்பொருதோட் கனைகழற்கால் விடுவச் சேனன். ௭

---

ததீசிமுனிவர்மேல் சக்கரம் ஏவிய வரலாற்றை மேலே இட்டசித்தீசப் படலத்திற் காண்க.

௫. மதன் - வலி. சலந்தராசுரனை அழித்தற்குச் சிவபெருமான் சுதரிசனமென்னும் சக்கரத்தை உண்டாக்கிய வரலாற்றைச் சலந்தரேசப் படலத்திலும், அதனைத் திருமால் பெற்ற வரலாற்றைத் திருமாற்பேற்றுப் படலத்திலும் முன்னர்க் காண்க. கதம் - கோபம்.

௬. உயிர்ப்பு - சீறுதல். கோடு - தந்தம். கடாம் - மதம். களிறு - யானை. அடல் - வலி. ஏற்றார் - போரினை ஏற்று நின்றவர். மருப்பு - கொம்பு. நெறிப்பு - நிமிர்ப்பு. படை - ஆயுதம். வீறு - பெருமிதம்.

௭. பாழி - பெரிய. இரண்டாம் வடிவம் என்பதை அபரம் என்பர்; அபரவிண்டு என்றவாறு. காழ் இகந்த - மனவயிரம் அற்ற. உலம்பொரு - திரண்ட கல்லை ஒத்த.

வீரபத்திரர்பால் விடுவச்சேனன் செல்லல்

அன்றென்னை வயிரவனர் சூலத்தின் விடுவித்தே யருளும் நீலக், குன்றன்னன் றனக்காழி கொணர்ந்தளித்துக் கடன்தீர்த்துக் கொள்வேன் இந்நாள், என்றெண்ணி எழுந்திறைஞ்சி வயவீர பத்திரன்பால் யான்போய் இன்னே, நன்றுள்ளம் மகிழ்வித்துக் கொடு வருவல் ஆழியென நவின்று போற்ற. அ

அங்கவனைக் கொண்டாடி விடைகொடுத்தான் திருமார்பன் அவனும் போந்து, புங்கவர்சூழ் வயவீரன் இருக்கைமுதற் கோபுர முன் புக்க காலே, மங்கருஞ்சீர்ப் பானுகம்பன் முதலாய வாயில்காவலர்கள் நோக்கிப், பங்கமுற வெகுண்டெழுந்தார் அச்சுறுத்தார் அதுக்கினர் பழங்கண் நீட. கூ

பிறைசெய்த கரங்கொண்டு பிடர்பிடித்து நீளிடைக்கண் உந்தலோடும், கறைசெய்த வேல்தானைக் காவலன் ஆங் கிருந்தெண்ணிக் கவலை கூர்ந்தான், முறைசெய்த முனிவோர்கள் அந்நெறியிற் செல நோக்கி முன்போய் நின்று, மிறைசெய்த செயலனைத்தும் தன்வரவும் ஆங்கவர்க்கு விளங்கக் கூறி. க௦

விடுவச்சேனன் காஞ்சியை அடைந்து வழிபடல்

இனிச்செய்யுந் திறம்நீவிர் கூறுகெனத் தாபதரும் எண்ணி நோக்கிப், பனித்துண்டம் மிலைந்தானைக் காஞ்சியினில் தாபித்துப் பரவிப் போற்றின், மனத்தோன்றும் எண்ணமெலாம் பெறுவாய் என் றியம்புதலும் மகிழ்ச்சி கூர்ந்து, கனித்தொண்டை வாய்உமையாள் ஒருபாகன் திருக்காஞ்சி நகரஞ் சேர்ந்தான். கக

அங்கடைந்து தன்பெயராற் சிவலிங்கம் இருத்திமகிழ்ந் தருச்சித் தேத்திப், பொங்குபெருங் காதலினல் இனியதவம் பூண்டிருந்தா

---

கூ. அதுக்கினர் - உதட்டைக் கடித்தார். பழங்கண் - துன்பம்.

க௦. பிறைசெய்த - பிறைச் சந்திரனைப்போல வளைத்த. பிடர் - புறங் கழுத்து. நீளிடை - தூரம். உந்துதல் - தள்ளுதல். கறை - இரத்தம்; நஞ்சுமாம். தானை காவலன் - சேனாதிபதி. மிறைசெய்த - கணங்கள் தனக்குத் துன்பம் செய்த.

கக. பனித்துண்டம் - குளிர்ந்த பிறைச்சந்திரன். தொண்டை - கொவ்வை; தொண்டைக்கனி என மாறுக.

ணை அந்நாள், வெங்கடுநேர் வியாக்கிரனும் அசகரனும் பஞ்சமேட்டிரனு மென்னும், இங்கிவர்முத் தானவரும் வரப்பேற்றால் எவ்வுலகும் வருந்தச் செய்வார். ௧௨

அன்னோரைத் தெறுபாக்கு விண்ணோர் விரிஞ்சனொடும் அளவளாவிப், பொன்னாடை யுடையான்கைப் படைஇன்றி வறங்கூரும் புதுமை நோக்கி, என்னைவிடத் தணுகி மகிழ்ந்திறைஞ்சி இயம்புதலும் இமயம் ஈன்ற, மின்னாளும் இடத்தானும் வயவீர பத்திரனை விடுத்தான் மன்னோ. ௧௩

விடுவச்சேனன் வீரபத்திரரைக் காணல்

அவன்அணுகித் தயித்தியர்கள் மூவரையும் எதிர்ந்துபொருதழித்து வீட்டித், தவம்நிறையுந் திருக்காஞ்சி வளநகர்க்கு நெறியானே சார்தலோடும், சிவமுதலைத் தொழுதுறையும் முருந்தனார் தஞ்சேனைத் தலைவன் ஆங்கே, கவலையெலாம் விண்டகல வயவீரன் றனைஎளிதிற் காணப் பெற்றான். ௧௪

முயல்வுற்றும் அரிதாய திருக்காட்சி முயலாமே எய்தப் பெற்றான், இயல்புற்ற பெருந்தவத்தீர் சிவபூசைப் பயன்எவரே அளக்கற்பாலார், பெயர்வுற்றுச் சென்றாடுந் தீர்த்தம்எதிர் வந்தாடப் பெற்றோ னன்னான், பயில்வுற்ற மகிழ்வோடும் வீழ்ந்திறைஞ்சி மறைமொழியாற் பரச லுற்றான். ௧௫

நன்பார்நீர் தீவளிவான் உலகெங்கும் விராய்நின்ற நலமே போற்றி, முன்பாலும் தென்பாலும் பின்பாலும் வடபாலும் மேலும் மூவா, நின்பாரச் சிலைபோற்றி அன்பாளர்க் கன்பான நித்த போற்றி, வன்பாளர் தமைச்சீறும் வெம்புலிப்போத் தன்னானே என்று வாழ்த்தா. ௧௬

---

௧௨. வியாக்கிரன் - புலிவடிவினன். அசகரன் - மலைப்பாம்பு வடிவினன். பஞ்சமேட்டிரன் - ஐந்து ஆண்குறிகளையுடையவன். தானவர் - அசுரர்.

௧௩. தெறுபாக்கு - அழிக்க. அளவளாவி - கலந்து. பொன்ஆடை - பீதாம்பரம். வறங்கூரும் - வறுமை மிகுகின்ற.

௧௬. முன்பால் பின்பாலென்பன கிழக்கு மேற்குத் திக்குகளைக் குறிக்கும், வட நூலாரும் கிழக்கைப் பூர்வம் என்பர். மூவா - கெடாத,மடங்காத. வன்பாளர் - கொடியோர், போத்து - ஆண்.

திருவுள்ளங் களிசிறப்ப வேட்டதெவன் புகலென்னச் செம்மல் கேட்பக், கருவண்ணன் தமனானேன் கைகூப்பி நின்றியம்புங் கவுரி பாகன் அருளுண்மை தெளியாத தக்கன்றன் வேள்வியைநீ அழித்த ஞான்று, தெருளின்றி அமரேற்று நெடுமால்உன் மிசைவிடுத்த திகிரி தன்னை. ௧௭

அற்றவர்கட் கினியாய்உன் திருமேனி மிசைப்பூண்ட அயன்க பாலம், பற்றிவிழுங் கியதிந்நாள் அடியேனுக் களித்திஎனப் பகரக் கேளாச், சொற்றதுநங் கரத்தில்லை கபாலத்தின் வாயுளதேல் துக ளொன் றில்லாய், மற்றதுவே தரக்கோடி எத்திறத்தும் எனப்புகன் றான் வாகை வேலான். ௧௮

### விடுவச்சேனன் விகடக் கூத்தாடுதல்

உரைத்தமொழி உளங்கொள்ளா இனிச்செய்வ தென்னேஎன் றோர்ந்தான் யாருஞ், சிரிக்கவுறக் கால்இரண்டும் கரம்இரண்டும் குஞ்சிதமாச் செய்துகொண்டு, வரித்தகழல் வீரன்எதிர் வாய்நாசி விழிஇணையை மாறி மாறிச், சுரித்தசைத்து நடஞ்செய்தான் எவ்வ மொடு பயங்காட்டி எயிறு தோன்ற. ௧௯

இவ்வண்ணம் உடல்கூனி வளைந்துநெளிந் தொருவிகடம் இயற்ற நோக்கிச், செவ்வண்ண வயவீரன் வறிதுநகை தோற்று தலும் திரண்டோர் எல்லாம், மைவண்ணக் கடல்கிளர்ந்தா லென நகைத்தார் அக்காலை மலர்மேல் வைகும், அவ்வண்ணல் நகுபைங்கண் வெண்டலையும் அதுநோக்கிச் சிரித்த லோடும். ௨௦

போராழி அதன்வாயிற் கழிந்துபுவி மிசைவீழப் பொருக்கென் றங்கை, ஓரானை முகக்கடவுள் அதுகவர்ந்தங் கறியான்போன்

---

௧௭. கருவண்ணன் - திருமால். தமன் - கிளைஞன். திகிரி - சக்கரம்.

௧௮. அற்றவர் - மற்றைப் பற்றுக்களைவிட்டுத் தன்னையே அடைந்தவர்கள். மற்று, வினைமாற்று. கோடி. கொள்வாயாக.

௧௯. குஞ்சிதம் - வளைவு. வரிந்த என்பது வலிந்து நின்றது; கட்டிய என்பது பொருள். சுரித்து - முறுக்கி. எவ்வம் - துன்பம். எயிறு - பல்.

௨௦. விகடம் - விகடக் கூத்து. வறிது - சிறிது. வீரபத்திரருக்கு அஞ்சிச் சிரிக்காதிருந்தார்களாதலின், அவர் சிறிது சிரித்த உடனே, யாவரும் கடலொலிபோலப் பெரிதும் சிரித்தனர் என்க.

றிருப்ப நோக்கிப், பேராண்மைப் படைத்தலைவன் இனிச்செயலை தென்றழுங்கிப் பேதுற் றந்தச், சிராளன் திருமுன்புங் கைகண்ட விகடநடஞ் செய்து வேண்ட. உக

விடுவச்சேனன் விநாயகரிடத்தில் சக்கரம் பெறுதல்

ஏக்கறவான் அவன்இயற்றும் விகடநடம் நெடும்போதெம் பெருமான் நோக்கி, மாக்கருணை சுரந்தருளி ஆழிஅவன் றனக்களித் தான் வரத்தான் மிக்கீர், போக்கறும்இக் காரணத்தால் அன்றுமுதல் காஞ்சியின்அப் புழைக்கைத் தேவை, ஊக்கமுறுந் திறல்விகட சக்கர விநாயகன்என் றுலகங் கூறும். உஉ

விடுவச்சேனன் சக்கரத்தை விட்டுணுவிடம் சேர்த்தல்

கலிநிலைத் துறை

விகட சக்கர விநாயகன் அளித்தஅத் திகிரி
அகம லர்ச்சியாற் பெற்றனன் மீண்டனன் அகிலம்
புகழும் மால்புரத் தெய்தினன் பொலம்புனை ஆடைத்
தகவி னனடி இறைஞ்சிஅச் சக்கரம் ஈந்தான். உங

கண்ட னன்பணிப் பாயலான் கவலைகள் முழுதும்
விண்ட னன்தழீஇக் கொண்டனன் மீமிசை வியப்புக்
கொண்ட னன்தன தமைச்சியல் பூண்டஅக் குரிசிற்
கண்டர் போற்றுசே னைபதித் தலைமைஅன் றளித்தான். உச

விடுவச்சேனன் விண்டுவினிடத்தில் வரம்பெறல்

உருத்தி ரச்செயல் வீரபத் திரன்புடை உற்றுத்
திருத்த கும்படை பெற்றவா செப்புகென் றிசைக்குங்
கருத்த னுக்கவண் நிகழ்ந்தன யாவையுங் கரைந்தான்
அருத்தி கூர்படைக் கிறையவன் அச்சுதன் கேளா. உரு

முறுவல் பூத்தனன் மொழியும்அவ் விகடநா டகத்தை
உறுவர் ஏறனை எம்மெதிர் காட்டுகென் றுரைப்பத்

உக. பேதுற்று - திகைத்து. கைகண்ட - நேரே பயனளித்தலைக் கண்டறிந்த.

உஉ. ஏக்கறவு - ஆசையால் தாழ்தல். போக்கு - குற்றம்.

உரு. கருத்தன் - தலைவன், படைக்கிறையவன் என்றது விடுவச் சேனனை.

தெறுபெ ரும்படைக் கிறைவனுந் திருந்தவைக் களத்து
நறும லர்த்துழா யவனெதிர் நடித்தனன் அதனை. உகூ

நோக்கி அற்புதம் எய்தினன் மாயவன் நவல்வான்
ஊக்கும் ஆற்றலோய் உள்ளமும் விழிகளும் உவகை
மீக்கொ ளப்புரி வியத்தகும் இப்பெரு விகடம்
பார்க்கில் யாவரே கழிபெரு மகிழ்ச்சியிற் படாதார். உஎ

எமக்கு நன்மகிழ் வளிக்கும்இக் கூத்தினை இதன்மேல்
நமக்கு முன்னுற நலங்கெழீஇ நடிக்கும்நம் அடியார்
தமக்கு வேட்டன வழங்குவேம் தழல்மணிக் கதிர்கள்
இமைக்குங் காஞ்சியின் வரதரா சப்பெயர் எம்முன். உஅ

எவர்கள் இத்தனிக் கூத்தினை இயற்றும்ஆர் வத்தார்
அவர்க ளேஎமக் கினியவர் சாலஎன் றருளிப்
புவனம் ஏத்தும்அத் திகிரியை விதியுளிப் பூசித்
துவகை மீக்கொளக் கரமிசைக் கொண்டனன் உரைப்பான்.

முன்னை நாள்உயர் கச்சியின் வயிரவ முதல்வன்
றன்னை வேண்டிநன் றிரந்துரு லத்தலைக் கிடந்த
நின்னை யான்விடு வித்தனன் அதற்குநே ராக
இன்ன தாயகைம் மாறுநீ அளித்தனை இந்நாள் நுo

அறுசீரடி யாசிரிய விருத்தம்

செய்ந்நன்றி யறிவோரும் அதன்பயனைப் பெறுவோரும் திரைநீர் வைப்பின், நின்னன்றி யாருளரோ காஞ்சியில்நீ தொழுதேத்தும் இலிங்கம் போற்றி, உன்னன்பின் செயல்இதனைக் கேட்டோர்கள் எம்முலகம் உறுக என்னுக், தன்னன்பின் கிழவோனைத் தழீஇக் கொண்டு மகிழ்ந்திருந்தான் சார்ங்க பாணி. நக

ஆகத் திருவிருத்தம் ககககூ.

---

உகூ. உறுவர் - முனிவர்; தவம்புரிந்தமைபற்றி விடுவச்சேனன் இவ்வாறு கூறப்பட்டனன்.

நக. நன்றியை அறிதல், அதன் அருமை யறிந்து மறவாதிருத்தலும், அதன் பயனைப் பெறுதல், அதற்கேற்கக் கைம்மாறு செய்தலுமாம்.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'பெருமுயற்சி செய்தும் பெறற்கரிய பேறுகள் சிவபூசையால் எளிதிற் கிடைக்கும்' என்னும் உண்மையை முதலாகக் கொண்டதென்பதை, ஆசிரியர் ௧௫ ஆம் செய்யுளிற் குறிப்பாற் கூறினர். மற்றும், (உ) 'திருமால் முதலியோர், தமக்கு வேறயுள்ள கருவிகளைக்கொண்டன்றி ஒரு செயலையும் செய்யலாற்றாத வரம்புபட்ட ஆற்றலை உடையர்' என்னும் உண்மையையும் விளக்கும். 'நல்லோர்க்குச் செய்த நன்றி பயனுடைத்தாகும்' என்னும் நீதியும் தோன்றும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பூஞ்சோலைகள் சூழ்ந்த வயிரவேச வரலாற்றினை இதுவரையிற் சொன்னோம்; இனி, அதற்குத் தெற்கில் இருக்கும் விடுவச்சேனேச்சரத்தின் வரலாற்றைக் கூறுவோம்.

தக்க யாக சங்காரம் நிகழ்ந்த காலத்தில் திருமால் இறைவனை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, வைகுந்தத்தை அடைந்து, விடுவச்சேனன் முதலிய மந்திரிகளுடன் இருந்து கூறுகின்றார். 'அரக்கரை அழித்து உலகத்தைக் காத்தல் எனது தொழிலாகும். அதற்குத் துணையாய் இருப்பது சக்கரம். அதனைத் தக்க யாகத்தில் யான் வீரபத்திரர்மேல் ஏவியபொழுது, அவர் அணிந்துள்ள வெண்டலைகளில் ஒன்று கௌவிக்கொண்டது. எனது சக்கரம் குபன் என்னும் அரசன் பொருட்டுத் ததீசிமேல் ஏவியபொழுது, அவரது வச்சிர யாக்கையால் வாய் மடிந்து விட்டது. பின்பு சிவபிரான் சலந்தராசுரனை அழித்தற்கு உண்டாக்கிய சுதரிசனமென்னும் சக்கரத்தை, அவரை வழிபட்டுப் பெற்றேன். அது இவ்வாறாயிற்று. உழுபடையின்றி உழத் தொடங்கும் உழவன்போல, இனி நான் உலகத்தை எவ்வாறு காப்பேன்' என்று திருமால் கவலையுற்றனர். அப்போது விடுவச்சேனன் எழுந்து, 'என்னை நீர் அன்று வயிரவர் சூலத்தினின்றும் விடுவித்த நன்றிக்குக் கைம்மாறாக அந்தச் சக்கரத்தைக் கொண்டுவந்து உமக்குக் கொடுப்பேன்' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு சென்றனன்.

சென்ற விடுவச்சேனன் வீரபத்திரர் திருக்கோயிலுள் நுழைந்தான். அங்கு முதற்கோபுர வாயிலிலுள்ள பானுகம்பன் முதலியோர், அவனை அதட்டி, அச்சுறுத்திப் பிடரைப் பிடித்து நெடுந்தூரத்திற் கொண்டுபோய்த் தள்ளினர். அதனால் துன்புற்ற விடுவச்சேனன், அவ்வழியாகச் செல்லும் முனிவர்களிடத்தில் தனது குறையைச்சொல்லினன். அவர்கள், 'நீ காஞ்சியிற் சென்று சிவலிங்கந் தாபித்துப் பூசித்தால், எண்ணியதை அடைவாய்' என்றனர். உடனே, விடு

வச்சேனன் காஞ்சியை யடைந்து, தனது பெயரால் ஒரு இலிங்கம் தாபித்துப் பூசித்துத் தவம் செய்திருந்தான்.

அக்காலத்தில் தேவர்கள் வேண்டுகோளால் சிவபிரான் கட்டளையிட, வீரபத்திரர் போந்து வியாக்கிரன், அசகரன், பஞ்சமேட்டிரன் என்னும் மூன்று அசுரர்களை அழித்து, அவ்வழியாக வந்தனர். அவரை விடுவச்சேனன் தரிசித்துத் துதித்தனன்.

முனிவர்களே, தான் மிக முயன்றும் கிடைக்காத வீரபத்திரர் காட்சி, தானேகிடைக்கப் பெற்றான் விடுவச்சேனன் என்றால், சிவபூசையின் பயனை யார் அளந்து சொல்லவல்லவர்கள்! நிற்க, விடுவச்சேனன் தோத்திரத்திற்கு வீரபத்திரர் மகிழ்ந்து, 'உனக்கு வேண்டுவது என்ன? என, விடுவச்சேனன், தான்விரும்பியதைக்கூறினான். வீரபத்திரர், 'அச்சக்கரம் நம்மிடத்தில் இல்லை; வெண்டலையின் வாயில் இருக்குமானால், அதுவே கொடுக்க நீ வாங்கிக்கொள் என்றனர்.

அது கேட்டு விடுவச்சேனன், இனி என் செய்வது என்று ஆராய்ந்து, யாவரும் சிரிக்கும்படி, இரண்டு கைகளையும் கால்களையும் வளைத்து, வாயையும் நாசியையும் மாறிமாறிக் கோணச்செய்து அசைத்து, துன்பமும் அச்சமும் தோன்றும்படி ஒரு விகடக் கூத்தாடினன். வீரபத்திரர், அதைக்கண்டு சிறிதே நகைத்த காலத்தில், அங்குள்ள யாவரும் கடலொலிபோலப் பெரிதும் சிரித்தனர். அக்காலத்தில் வெண்டலையும் சிரிக்க, அதன் வாயிலிருந்த சக்கரம் விழுந்தது. அதைச் சடக்கென்று விநாயகர் எடுத்துக் கொண்டு, ஒன்றும் அறியாதவர்போல் இருந்தார். விடுவச்சேனன், இனிமேல் செய்வதென்னென்று, தனக்குக் கைகண்ட உபாயமாகிய விகடக் கூத்தை அவர் முன்பும் செய்து வேண்டினன். விநாயகர் அக்கூத்தை நெடுநேரம் பார்த்து மகிழ்ந்து, சக்கரத்தை யளித்தனர். அக்காரணத்தால் காஞ்சியிலுள்ள அவ்விநாயகருக்கு விகட சக்கர விநாயகர்' என்னும் பெயர் உண்டாயிற்று.

விடுவச்சேனன், சக்கரத்தைக் கொண்டுபோய்த் திருமாலிடம் கொடுக்க, அவர் மகிழ்ந்து அவனைத் தழுவிக் கொண்டு, இதனை நீ எவ்வாறு பெற்றனை யென்று கேட்டு, நிகழ்ந்தவற்றை யறிந்து, அவ்விகட நடத்தை நம் முன்னேயும் காட்டுக என்று கண்டு மகிழ்ந்து, இக்கூத்து நமக்கு மிகவும் இனியதாகும். இதை நமது முன்னே நடிக்கும் நமது அடியவர்களுக்கு விரும்பியவற்றைக் கொடுப்போம். காஞ்சியில் வரதராசப் பெயருடைய நம்முன் இதனைச் செய்தவர்கள் நமக்கு மிகவும் இனியவர்கள் ஆவார்கள் என்று கூறி, முன்னாளில் உன்னை யான் வயிரவர் சூலத்தினின்றும் விடுவித்ததற்குத் தக்க கைம்மாறு செய்தனை; நன்றியறிவுள்ளவர்கள் உன்போல் யார் இருக்கின்றார்கள்?

நீ பூசித்த இலிங்கத்தை வணங்குகின்றவர்களும், உனது செயலைக்கேட்டவர்களும் நமது வைகுந்தத்தை அடைவார்களாக என்று சொல்லித் திருமால் அச்சக்கரத்தைப் பூசித்துக் கரத்தில் கொண்டனர்.

---

# தக்கேசப் படலம்

அறுசீரடியாசிரிய விருத்தம்

விரவினோர் தணக்க லாற்று விடுவச்சே னேச்ச ரத்தின்
வரவினைத் தெரிந்த வாறு வகுத்தெடுத் துரைத்தேம் இப்பால்
இரவெரி ஆடும் எம்மான் இனிதமர் அதன்கீழ்ப் பாங்கர்*
கரவிலார்க் கருளுந் தக்கேச் சரத்தியல் கட்டு ரைப்பாம். ௧

தக்கன் மைந்தரை நாரதர் தவத்திற் செலுத்தல்

பொறிவரிச் சுரும்பு மூசப் புரிமுறுக் குடைந்து விள்ளுஞ்
செறிஇதழ்ப் புழற்கால் கஞ்சத் திருமலர்ப் பொகுட்டு வாழ்க்கை
அறிவன தேவ லாற்றல் அடல்வலித் தக்கன் என்போன்
மறிவரு வரத்தாற் பல்லோர் மைந்தரைப் படைத்தான் மன்னோ. ௨

அங்கவர் தக்கன் ஏவ லாற்றினாற் படைப்பான் எண்ணித்
தங்களுள் முயலுங் காலைத் தந்திரிக் கருவிச் சால்பின்
நங்கையோர் பாகற் பேணும் நாரதன் அவர்பால் தோன்றி
இங்குநீர் உழக்குஞ் செய்கை என்னெனக் கடாவ அன்னோர். ௩

படைமின்என் றெம்மைத் தாதை பணித்தனன் படைக்கும் ஆற்றல்
அடைவெமக் கருளிச் செய்யாய் ஐயஎன் றிறுத்தார் கேளா
நடைநெறி பிறழா வாய்மை நாரதன் மகதி நல்யா
ழுடையவன் அனையார் தேறச் செவியறி வுறுக்க லுற்றான். ௪

---

௧. விரவினோர் - சேர்ந்தவர்கள். தணக்கலாற்ற - பிரிய இயலாத. கரவு - வஞ்சனை. * 'நெடுங்கீழ்ப் பாங்கர்' எனவும் பாடம்.

௨. சுரும்பு - வண்டு. மூச - மொய்க்க. புழல்கால் - உள்துளையுடைய தண்டு. கஞ்சம் - தாமரை. திரு - அழகு. மறிவரு - கெடுதலில்லாத.

௩. தந்திரிக் கருவி - நரம்பினையுடைய யாழ். உழக்கும் - வருந்திச் செய்யும். கடாவ - கேட்க.

௪. மகதியாழென்பதை மேலே (பக். ௧௩௫) காண்க.

ஐந்தொழில் நடாத்து முக்கண் ஐயனே உலகம் எல்லாம்
மைந்துறப் படைக்கின் றனல் மற்றுநீர் உழந்தி ராயின்
பந்தமே பயக்கும் பந்தப் படைப்பினாற் பயப்ப தென்னே
வெந்தளைப் பட்டோர் வேறு நிகளமும் விழைவ ரேயோ. ரு

பிணிப்புறு நிகளம் நீக்கும் பெற்றியே எவரும் பெட்பர்
கணிப்பருந் தவத்தான் மிக்கீர் தெளிமினோ கருணை வெள்ள
மணிக்களத் திறைவன் பாதம் வழிபடல் ஒன்றே யன்றிப்
பணித்திடும் எவையும் தீய பந்தமே பயக்குங் கண்டீர். சு

ஆருயிர்க் குறுதிப் பேறும் அரும்பயன் எவற்றி னுள்ளுஞ்
சீரிய முத்தியொன்றே சிறந்ததாம் வினைப் பேறு
பேரிடர்ப் பால வாகும் ஆதலாற் பேசக் கேண்மின்
நாரிஓர் பாகன் மேய கச்சிமா நகரம் நண்ணி. எ
சிவலிங்கம் நிறுவிப் போற்றித் திகழ்சிவ ஞானப் பேற்றால்
கவலும்பொய்ப் பிறவி மாசு கழுவிவீ டுறுமின் என்று
நவலுஞ்சீர் முனிவர் கோமான் நோன்கழல் இறைஞ்சி ஏத்தித்
தவலின்றத் தக்கன் ஈன்றோர் அத்தொழில் தலைநின் றுய்ந்தார். அ

வினைவலித் தக்கன் கேளா வெய்துயிர்த் தழுங்கி வேறு
தனையரைப் படைத்தான் அன்னோர் தமக்கும்அம் முனிவன் எய்தி
இனையவா றியம்பி மீட்பக் காஞ்சியின் இலிங்கந் தாபித்
தனையவா றருச்சித் தேத்தி அவர்களும் முத்த ரானார். கூ

தக்கன் வேள்வி செய்யத் தொடங்கல்

தக்கன்ஆ ரிடருள் மூழ்கித் தழலெழ நோக்கி என்றன்
மக்களைச் சிவன்பால் அன்பு மருவுறுத் துலக வாழ்க்கை
ஒக்கநீ கெடுத்தாய் மக்கள் மனைஉனக் கின்மை யாக
முக்கணற் குரியாய் என்னு முனிவனைச் சபித்துப் பின்னர். ௧௦

---

ரு. மைந்துற - வலியுற, நன்கு. நிகளம் - விலங்கு.

சு. பெட்பர் - விரும்புவர். பணித்திடும் - சொல்லப்படுகின்ற. கண்டீர், முன்னிலையசை.

அ. கவலும் - துன்புறுகின்ற. தவல் இன்று - கேடில்லாமல்.

கூ. வெய்துயிர்த்து - துன்பத்தால் பெருமூச்செறிந்து.

௧௦. ஆரிடர் - நீக்குதற்கரிய துன்பம்.

கன்னியர் தமையே பெற்றான் முனிவனுங் கனன்று நோக்கி
நின்னுடைப் புதல்வ ரெல்லாம் நெறிச்செல விடுத்தேன் அற்றால்
என்னைமற் சபித்தாய் பேதைத் தக்கநீ இன்னே நெற்றித்
தன்னிடை விழித்த எம்மான் தண்டிக்கப் படுக என்றான். கக

இவன்நிலை இதுவாம் ஏனை இமையவர் தமைத்த தீசித்
தவமுனி சபித்தான் பார்ப்பான் தவறிலி தமியன் என்னை
அவமுறப் பொருதெல் லீரும் அகாரணத் தெதிர்த்தீர் நீயிர்
சிவபிரான் வெகுளித் தீக்கோட் படுகெனச் செயிர்த்து மேனாள். கஉ

இருதிறத் தவர்க்குஞ் சாபம் பழுந்தவா றியம்பு கின்றாம்
கருவியாழ் முனிவன் சிறிக் கழறிய பின்னர்த் தக்கன்
தெருமரு மயலின் மூழ்கிச் செருக்கினாற் புரமூன் றட்ட
ஒருவனை யன்றி வேள்வி உஞற்றுவான் தொடங்கி னானால். கங

ததீசி முனிவர் தக்கனுக்கு உரைத்தல்

மருத்துவர் முனிவர் சித்தர் வசுக்கள்ஆ தித்தர் மற்றை
உருத்திரர் அயன்மால் ஏனோர் யாவரும் உடங்கு சேரத்
திருத்தக விளித்து வேள்வி செய்வுழித் ததீசி மேலோன்
உருத்தனன் அவையை நோக்கித் தக்கனுக் குரைக்க லுற்றான். கச

தக்கன் ததீசி முனிவருக்கு உரைத்தல்

அளித்தருள் பயக்கும் வேள்விக் கரசனாஞ் சிவனை ஈண்டு
விளித்திலை எவன்கொல் என்று வினாதலும் தக்கன் சொல்லும்

---

கங. நன்றிசெய்தோர்க்குத் தீங்குசெய்யும் துட்டனாகினை எனப்பொருள் கருதலின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

கஉ. தவறிலி - குற்ற மற்றவன், தமியன் - தனியன், பார்ப்பான் முதலிய நான்கும் ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள். அகாரணம் - காரணமில்லாமை. செயிர்த்து - கோபித்து. தக்கன் வேள்விக்குமுன் ததீசி முனிவரை எல்லாத்தேவர்களும் எதிர்த்த வரலாறு ஒன்றிருத்தல் வேண்டும்.

கங. தெருமரும் - மனம் சுழலுதற்குக் காரணமான. மயல் - மயக்கம்.

கச. உடங்கு - ஒருங்கு. விளித்து - அழைத்து. உருத்தனன் - கோபித்து.

கரு. இளிப்பரும் - அவமதித்தல் இல்லாத. 'எச்சத்தை எச்சத்தால் தொழுக' என்பதன் பொருள் முன்னர்க் கூறப்படுதல் காண்க.

இளிப்பரும் எச்சந் தன்னை எச்சத்தால் தொழுக என்னத்
தெளித்திடுஞ் சுருதி எச்சன் மாயவன் எனவுஞ் செப்பும். ௧௫

ஆதலின் எச்ச மூர்த்தி அச்சுதன் அவனே யன்றிப்
போதருந் தமோகு ணத்தின் உருத்திரன் ஈண்டுப் போதற்
கேதுவென் றில்லை காண்டி என்றலும் முனிவன் நக்கு
நோதகும் அவையின் உள்ளார் யாரையும் நோக்கிச் சொல்வான். ௧௬

ததீசி முனிவர் மறுமொழி கூறல்

எச்சத்தால் எச்சம் என்னும் மறைப்பொருள் இதுவோ கூறீர்
எச்சத்தின் வேறும் ஏனைக் கருமங்கட் கெச்சம் போல
எச்சத்திற் குயர்ந்தோன் வெள்ளை ஏற்றினான் எனுங்க ருத்தால்
எச்சச்சொல் லதனான் முக்கட் பகவனை இயம்பும் அங்கண். ௧௭

ஆதலின் எச்சந் தன்னால் அணங்கொரு பாகன் றன்னை
மாதவன் முதலாம் விண்ணோர் வணங்கினர் வழிபட் டுய்யப்
போதுவர் என்ப தன்றே அம்மறைப் பொருளாம் அன்றி
ஏதமில் எச்சந் தன்னால் தனைத்தொழும் என்ப தாமோ. ௧௮

சகந்தனில் எவருந் தம்மின் உயர்ந்தவர் தமைப்பூ சிப்பர்
உகந்தவர்க் கன்றித் தம்மோ டொத்தவர் இழிந்தோர் தம்மை
அகந்தெறப் பூசை செய்வார் ஆருளார் விதியும் அற்றே
மகந்தனக் கரசன் முக்கண் வள்ளலே என்னும் வேதம். ௧௯

மலர்தலை உலக மெல்லாம் வழிபடு கடவுள் என்றும்
அலைகடல் உயிர்த்த நஞ்சம் அமுதுசெய் தருளும் மேருச்
சிலையுடை முதலே என்றி யார்இது தெளியார் என்னாப்
பலர்புகழ் ததீசி மேலோன் பகர்ந்தனன் பகரக் கேட்டு. ௨௦

---

௧௬. போதற்கு - போதுதற்கு. ஏது, இயைபென்னும் பொருட்டு.

௧௭. 'எச்சத்தால் எச்சத்தை வழிபடுக' என்பதில், பின்னுள்ள எச்சம் சிவபிரானைக் குறிக்கும் என்பதும், அங்ஙனம் குறிக்குமாறு: வைதிக கருமங்கள் எல்லாவற்றிற்கும் எச்சம் தலைமையாதலால், அதுபோல எச்சத்திற்குத் தலைவரான சிவபிரான் எச்சம் எனப்பட்டனர் என்பதும், இச்செய்யுளின் திரண்ட பொருளாகும். எச்சம் - வேள்வி. சிவபிரான் யக்ஞபதி என்று கூறப்படுதலை மேலிடங்களிற் (பக். ௨௬௫.) காட்டினாம்.

நந்திமுனிவர் சபிந்தல்

அவைக்களத் துறையும் பார்ப்பார் தருபொருட் காசை கூர்ந்து
கவர்த்தபுல் லறிவின் மான்று கடுந்தொழில் தக்கன் கூற்றே
நிவப்புறப் புகற லோடும் நெடுந்தகை மறுவில் காட்சித்
தவத்திறல் நந்தி சீறி விப்பிரர் தம்மை நோக்கி. உக

படுபொருள் வெஃகு நீரால் பார்ப்பனக் கடையர் காள்நீர்
நடுவிகந் துரைத்த வாற்றன் கடலைகூர் ஒழுக்கம் பூண்டு
கெடுநெறி பற்றிச் சைவ நிந்தையிற் கிளர்ச்சி கொண்டு
கொடுமுகக் கலியில் தோன்றிக் கலாய்த்தனிர் இடும்பை கூர்ந்து. உஉ

வைதிகப் புறத்த ராகிச் சைவநூல் வழியைக் கைவிட்
டுய்தியில் புறநூல் பற்றி உலப்பரு மறையின் நிந்தை

---

உக. கவர்த்த - இரண்டுபட்ட. மான்று - மயங்கி. நிவப்புற - மேற்பட. மறுவில் காட்சி - குற்றமற்ற அறிவு. விப்பிரர் - பிராமணர்.

உஉ. படு - கிடைக்கின்ற. வெஃகுநீரால் - விரும்பிய தன்மையால். கடலை - வஞ்சனை. கலாய்த்தனிர் - பிணங்கி. கலாய்த்தனிர் எனப் பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

உங. சைவநூலிற்கூறியபொருட்கேற்ப வேதநூற்குப்பொருள்கொண்டு அதனைத் தழுவிச்செல்லுதல் வைதிக சைவமெனப்படுதலின், அதற்குப் புறம்பாகுக என்பார், 'வைதிகப் புறத்தராகிச் சைவநூல் வழியைக்கைவிட்டு' எனவும், பாஞ்சராத்திரம் முதலிய நூல்களையே சிறந்தனவெனக் கொண்டு, அவற்றிற்கேற்ப வேதத்திற்குப் பொருள் கொண்டு, சைவோபநிடதங்களாகிய பரசுருதிகளை இகழ்கின்றவர்களாகுக என்பார், 'உய்தியில் புறநூல்பற்றி உலப்பருமறையின் நிந்தை - ஐதெனப் புகன்று' எனவும், இன்னகாலத்துத் தோன்றியவென அறியவாராது தொன்மைப்பட்டனவாய், செவ்விய உண்மை நூல்களைக்கொண்ட தமிழும் வடமொழியுமாகிய இவற்றைவிட்டு, இடைக் காலத்தில் தோன்றியனவாகியும், விழுமிய நூல்கள் இல்லாதனவுமாகிய மொழிகளை ஆதரிக்கக்கடவீர்கள் என்பார், 'வேற்று மொழியினை ஆதரித்து' எனவும், பண்டைப் பெருநூல்களிலும் பெரியார்களிடத்திலும் காணப்படும் திருநீற்றுத் திரிபுண்டரத்தை யணியாமல், மண் முதலியவற்றால் ஊர்த்துவம் முதலிய புண்டரங்களை அணிக என்பார், 'காகின் உய்க்கும் புண்டரம் பொலியக் கொண்டு' எனவும் கூறினர். இவ்வாசிரியர் காலத்திலேயே ஆங்கிலம் முதலிய மொழிகளைப் பிராமணர் விரும்பிக் கற்கத் தொடங்கினர் போலும்! கயிலாயப் படலம் கூடு-ஆம் செய்யுளில், எம் அடியவரைப் பொருளி

ஐதெனப் புகன்று வேற்று மொழியினை யாத ரித்துப்
பொய்திகழ் நரகின் உய்க்கும் புண்டரம் பொலியக் கொண்டு. ௨௩

எண்டிகழ் மறைக ளெல்லாம் இயம்பும்வெண் ணீற்று மும்மைப்
புண்டரம் அக்க மாலை சிவலிங்க பூசை தம்மின்
விண்டிடா வயிரங் கொண்டு திகிரியான் வெந்த புண்ணைத்
தண்டுசங் காழி கஞ்சக் குறிகளைத் தனுவில் தாங்கி. ௨௪

அந்தணர் தமக்குத் தேவாம் அரனடி தழாது தோளின்
வந்தவர் தமக்குத் தேவாம் மாயனைத் தழுவிப் பேணி
நிந்தனைக் குரிய ராகி நிலமிசைத் திரிக வாளா
கொந்துநீர் தழுவும் மாலும் நுங்களுக் கருள்செய் யானல். ௨௫

என்னவெங் கொடிய சாபம் இயம்பினன் சிதம்புத் தக்கன்
றன்னைமுன் செயிர்த்து நோக்கிச் சாற்றுவான் அச்ச மின்றிப்
பொன்னவிர் சடிலத் தேவை இகழ்ந்தனை பொறியி லாதாய்
நின்னுடைக் குலத்துக் கின்னே முடிபென நினைவிற் கோடி. ௨௬

வழிபடற் குரியார் தம்மை வழிபடல் மறுத்து மற்றை
வழிபடற் குரிய ரல்லார் தமைவழி படுவோ ராகி

---

னால் ஆசைகாட்டி மயக்குவோர்' என்றதும், கிறித்துவர் தமது மதத்தை வளர்த்தற்குக் கையாளும் சில இழிந்த முறைகளைக் குறித்தல் கூடும். ஐதென- அழகிதென்று. ஆதரித்து - விரும்பி வளர்த்து. உய்க்கும் - செலுத்தும்.

௨௪. விண்டிடா - நீங்காத. வயிரம் - மனக்காழ்ப்பு. திகிரி - சக்கரம். திகிரியின் வெந்த புண்ணை என்றது சக்கரம் சங்கு வடிவமாக உள்ளவற்றைக் காய்ச்சிச் சூடுதலை எனவும், குறிகள் என்றது மண் முதலியவற்றால் எழுதுவதையெனவுங் கொள்க. கஞ்சம் - தாமரை. தனு - உடம்பு.

௨௫. தோளின் வந்தவர் - க்ஷத்திரியர். அந்தணர்க்குத்தெய்வம் இறைவன் என்பதை மேலே (பக். ௨௯௮.) காண்க. இவ்வாறு ஆரியப் பிராமணர்களுக்குச் சாபம் வந்துள்ளதென்பதை இப்புராணம் அரிசாப பயந்தீர்த்த தானப் படலத்திலும், கந்தபுராணம் கூர்ம புராணங்களிலும் காண்க. வைதிக நூலையேபற்றிச் சைவ நூலை இகழ்வார்க்கு இத்தகைய சாபம் வந்துளதென்று சைவ நூலிலும், சைவ நூல் ஒழுக்கத்தை இகழ்ந்து கூறுதல் வைதிக நூலிலும் காணப்படுதலின், வைதிக ஒழுக்கமும் சைவ ஒழுக்கமும் வெவ்வேறே என்பர் ஆராய்ச்சியாளர்.

௨௬. சிதம்பு - கீழ்மை. பொறி - அறிவு.

வழீஇனார் தமக்குத் தெய்வம் வகுத்திடுங் கொடிய தண்டம்
வழியினால் இன்னே எய்தும் என்பது வழக்காம் மன்னோ. ௨௭

என்றனன் ததீசிச் செம்மல் எழுந்துதன் இருக்கை புக்கான்
அன்றது நோக்கிப் பூமேல் ஆண்டகை அச்சம் எய்தித்
துன்றிய குழுவின் நீங்கிச் சுடர்மழுப் படையான் பாங்கர்ச்
சென்றனன் சென்ற பின்னர்ச் சிறுவிதி எழுந்து நின்று. ௨௮

வீரபத்திரர் தோற்றம்

எச்சனும் துளவி னானை அடைக்கலம் என்று போற்றி
அச்சுதன் அருளால் வேள்வி தொடங்கலும் அனைய தெல்லாம்
முச்சகம் புகழும் நல்யாழ் முனிவரன் மொழியக் கேளாப்
பச்சிளங் கொடியி னன்னாள் பரம்பொருட் கிதனைக் கூறும். ௨௯

இறைவனே எனக்கு முன்னர்த் தாதைஎன் றிருந்த தக்கப்
பொறிஇலி நமக்குத் தீங்கே நாள்தொறும் புரியுந் தீயோன்
மறைநெறி வேள்விச் செந்தீ வளர்க்குமால் அதனை இன்னே
குறைபடச் சிதைத்தி நின்பாற் கொளத்தகும் வரமீ தென்றாள் ௩௰

இருள்குடி யிருந்த கூந்தல் இறைவிதன் மாற்றங் கேளாத்
தெருள்குடி யிருந்த சிந்தை தைவரச் சிவந்த நோன்தாள்
அருள்குடி யிருந்த பெம்மான் அழிதகைத் தக்கன் நெஞ்சின்
வெருள்குடி யிருத்து மொய்ம்பின் வீரபத் திரனைத் தந்தான். ௩௧

எண்ணரும் உலகம் ஈன்ற சிற்றகட் டெம்பி ராட்டி
வண்ணவார் புருவம் மீப்போய் நெரிப்பவாய் துடிப்பப் பொங்கிக்
கண்ணறு சினம்மீக் கொண்டு பத்திர காளி யென்னும்
பெண்ணணங் கரசை ஈன்றாள் பிறங்கெரி சிதறுங் கண்ணாள். ௩௨

---

௨௭. இதற்கு, 'அந்தணர் வழிபடுதற்குரிய சிவபிரானை விட்டு, இழிசனர் வழிபடுதற்குரிய ஏனைக் கடவுளரை வழிபடும் நமக்கு' எனச் சிறப்புப் பொருள் கொள்க. வழீஇயினார் - தவறினோர். இன்னே - இப்பொழுதே.

௨௯. எல்லாம் - முழுதும்; ஒருமைப் பன்மை மயக்கம்.

௩௧. தெளிந்தோர் மனம் இறைவனடியையேபற்றி நிற்றலால், 'தெருள் குடியிருந்த சிந்தை தைவரச் சிவந்த நோன்தாள்' என்றார். தைவர - தடவ.

௩௨. அகடு - வயிறு. 'எண்ணரும் உலகமீன்ற சிற்றகட்டெம் பிராட்டி' என்றது ஓர் நயம். கண்ணறு - கண்ணோட்டமற்ற.

பத்திர காளி வீர பத்திரன் இருவர் தாமும்
அத்தனை உமையைப் போற்றிப் பணிஎமக் கருளிர் என்ன
முத்தலைச் சூலத் தண்ணல் மொய்ம்பனை அருளின் நோக்கி
இத்திரு மடந்தை யோடும் இறைப்பொழு தின்கட் போந்து. ௧௧

பழித்தொழில் தக்கன் வேள்வி பாழ்படுத் துமையாள் சீற்றம்
ஒழித்திஎன் றருளிச் செய்தான் ஒள்ளிழை உமையும் அவ்வா
றழித்துநீர் வருதிர் என்று விடைகொடுத் தருளப் பெற்றுத்
தெழித்தனர் எழுந்தார் சென்றார் இருவருஞ் சீற்றம் பொங்க. ௧௪

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சண்ட வாயு மந்த மாக வடவை அங்கி தண்ணெனச்
சண்ட பானு மதியம் ஒப்ப மொய்த யங்கு தென்திசைச்
சண்டன் வீறு சாந்தம் எய்த வெஞ்சி னந்த லைக்கொளீஇச்
சண்டி கைத்த லைவி யோடு தலைவன் அங்கண் எய்தினன். ௧௫

தன்னை நேர்உ ரோம சப்பெ யர்க்க ணந்த வப்படைத்
தன்ன வெங்க ணங்கள் தம்மை வேள்வி யாற்று சாலையின்
வென்னெ ருப்பு வைப்ப எவி உட்பு குந்து மேவலாப்
புன்னெ றிச்செ லத்தக்கன் ஆவி பொன்றுமா துணித்தனன். ௧௬

உழைஉ ருக்கொ டோடும் வேள்வி உயிர்செ குத்த ருக்கர்தம்
விழிகள் மற்றை முப்ப திற்றி ரண்டு பல்லும் வீழ்த்தினன்
வழுவும் இந்து வைச்சி னந்து தேய்த்து வன்னி நாவினை
டெழுக ரந்து ணித்து மற்றும் எற்ற தண்டம் ஆற்றுவான். ௧௭

---

௧௫. சண்டவாயு - பெருங்காற்று; சண்டபானு - கொடிய சூரியன்; இவைகள் ஊழிக்காலத்தில் தோன்றுவன. மொய் - வலி. தயங்கு - விளங்குகின்ற. சண்டன் - இயமன். வீறு - மிகுந்த. சண்டிகை - காளி. சண்டிகைத் தலைவி, இருபெயரொட்டு.

௧௬. வீரபத்திரர் தம்மைப் போன்ற கணங்களைப் படைத்தனர் எனவும், அவர்கள் உரோமசர் எனப் பெயர்பெறுவரெனவுங் கூறுவார் 'தன்னை நேர் உரோமசப் பெயர்க்கணந் தவப்படைத்து' என்றார். தவ - மிகவும், செல் + தக்கன் = செலற்றக்கன். துணித்தலுக்குத் தலையென்னும் செயப்படு பொருள் வருவித்துரைக்க.

௧௭. உழை - மான். வேள்வி - யாக தெய்வம். அருக்கர் - சூரியர்'

குலவு வாணி தன்னி டத்து விங்கு கொங்கை மூக்கரிந்
துலகம் ஈன்ற அன்னை உம்பர் பெண்டி ருக்கும் உதுபுரிந்
திலகும் ஏனை விண்ண வர்க்கும் முனிவ ருக்கும் எண்டிசைத்
தலைவ ருக்கும் வீரன் அன்று தக்க தண்டம் ஆற்றினான். ௩௮

தடங்கொள் சாலை முற்றும் வெந்த முற்க ளித்தி யூபமும்
பிடுங்கி வேள்வி யாற்றி னோர்பெ ருங்க ழுத்தை நாணினால்
மடங்க யாத்து வேள்வி யங்கம் மற்றவும் எடுத்தெடுத்
திடங்கொள் கங்கை யூட மூழ்த்தி யிட்ட வன்க ணங்களே. ௩௯

இன்ன வண்ணம் வேள்வி முற்றும் இற்ற வாறு காண்டலும்
பொன்னு டைத்து ழாயி னான்பொ ருது ளம்பு ழுங்கினான்
முன்னர் வெள்கி மானம் உந்த மொய்ப றப்பை யேறெனப்
பன்னும் ஊர்தி மேல்இ வர்ந்து படையெ டுத்தெ திர்ந்தனன். ௪௦

ஆய காலை அண்ணல் ஆணை யாற்றின் நான்மு கப்பிரான்
மேய வையம் முன்னர் உய்ப்ப ஏறி வீர வள்ளலும்
மாய னோடெ திர்த்து வெம்ப டைக்க லம்வ ழங்கினான்
ஏய அங்கண் மூண்ட பூசல் யாவர் சொல்ல வல்லரே. ௪௧

வெற்றி தோல்வி இன்றி நின்று வெஞ்செ ருப்பு ரிவுழிச்
செற்றம் மிக்கு மாயன் வெய்ய திகிரி யைச்செ லுத்தினான்
மற்று வீர பத்தி ரன்றன் மார்பின் முண்ட மாலையுள்
ஒற்றை வெண்க பாலம் அப்ப டைக்க லத்தை உண்டதால். ௪௨

---

இந்து - சந்திரன். வன்னி - அக்கினி. விகாரப்பட்ட ஏழு என்பதை நாவிற்குக் கூட்டுக.

௩௮. வாணி - சரசுவதி. உலகம் ஈன்ற அன்னை என்றது உமாதேவியார் கூற்றில் வந்த காளியை. உது - அத்தண்டம். புரிந்து, செயவெனெச்சத் திரிபு.

௩௯. யூபம் - யாகத்திற்குக் கொண்டு வரப்படும் பசுக்களைக் கட்டும் கம்பம். ஆற்றினோர் என்றது, இருத்துவிக்குகளென்னும் யாக புரோகிதர்களை. நாண் - கயிறு. யாத்து - பிணித்து. அங்கம் - உபகரணங்கள்.

௪௦. பொன்னுடை - பீதாம்பரம். வெள்கி - நாணமடைந்து. பறப்பையேறு - பறவை யரசு.

௪௧. அண்ணல் - வீரபத்திரர். வையம் - தேர். உய்ப்ப - செலுத்த.

௪௨ முண்ட மாலை - தலை மாலை.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

உணங்கரும் வலத்த ஆழி உணங்கிய தோர்ந்து மாற்றார்க்
கணங்குசூழ் கணங்கள் அண்டம் வெடிபட முழங்கி ஆர்த்துத்
துணங்கையாட் டயரும் ஓதை துஞ்சினர் ஒழிய நின்ற
கணங்கெழு சுரர்கள் கேளாக் கலங்கிஓட் டெடுக்கும் எல்லை. ௪௩

காண்டகு வீரச் செம்மல் கணங்களான் வளைத்துத் தாளின்
மாண்டகு நிகள யாப்பு வலித்தலும் புரவி மான்தேர்
தூண்டிய எகினப் பாகன் துணையடி தொழுதி ரந்து
வேண்டினன் அடிகேள் சீற்றம் விடுத்தருள் இனிஎன் றேத்தி. ௪௪

பெருமான் எழுந்தருளுதல்

மாதர்வெண் கமலத் தோன்றல் விண்ணப்பஞ் செவிமடுத்து
மேதகைக் கணங்க ளோடும் வெகுளியை விடுத்து நம்மான்
பாததா மரைக்கீழ்ச் சிந்தை பதித்தனன் பதித்த லோடும்
பூதர மகளுந் தானும் ஆயிடைப் போந்தான் அண்ணல். ௪௫

குடமுழா பதலை தக்கை கொக்கரை பணவம் கோதை
படகம்ஆ குளித டாரி தகுணிச்சம் பம்பை மொந்தை
துடிபணை திமிலை கண்டை தொண்டகம் பேரி கல்ல
வடமுதல் இயங்கள் எல்லாம் வயின்தொறும் இயம்பி மல்க. ௪௬

---

௪௩. உணங்குதல் - கெடுதல். ஓர்ந்து - அறிந்து. மாற்றார் - பகைவர். அணங்கு - துன்பம். துணங்கையாட்டு - இருகையும் முடக்கிப் பழுப்புடை யொற்றியாடுதல். அயரும் - செய்கின்ற. ஓதை - பேரொலி. துஞ்சினர் - இறந்தார். ஓட்டெடுக்கும் எல்லை - ஓடத் தொடங்கிய போது.

௪௪. நிகளயாப்பு வலித்தல் - விலங்குத் தளையை இடுதல். எகினப் பாகன் - அன்னத்தை ஊர்தியாக நடத்துவோன், பிரமன்.

௪௫. நம்மான் - சிவபிரான். பூதரம் - மலை.

௪௬. பதலை, கோதை, மொந்தை - ஒரு கட்பறைகள். தக்கை, தடாரி - பம்பையின் பேதங்கள். கொக்கரை - சங்கு. பணவம் - தம்பட்டம். படகம் - போர்ப்பறை. ஆகுளி - சிறுபறை. தகுணிச்சம் - ஒருவகைத் தோற் கருவி. துடி - உடுக்கை. திமிலை - பம்பை மேளம். கண்டை - பெருமணி. தொண்டகம் - ஆகோட்பறை. கல்லவடம் - ஓர் வாச்சியம். இயம் - வாச்சியம். பணை - மூங்கிலுக்குப் பெயராய் வேய்ங்குழலை உணர்த்தும். முரசின் வகை யெனினுமாம்.

வளைவயிர் பணிலம் சின்னம் வங்கியம் தாரை காளம்
கிளைபடு நரம்பு வீணை தீங்குழல் மிடற்றுக் கீதம்
உளஎனைப் பிறவுங் காலும் துவைப்பொலி உறந்து விம்மி
அளவலின் உலகம் எல்லாம் இசைமய மாகித் தேங்க. ௪௭

வாலொளிக் கவிகை பிச்சம் சாமரை மணிப்பூண் தொங்கல்
ஆலவட் டங்கள் மற்றும் விடைக்கொடி அருகு செல்லக்
காலனைச் செகுத்த வாறும் முப்புரங் காய்ந்த வாறும்
போல்வன உலகந் தேறப் பூதர்கள் விருதுபாட. ௪௮

ஏற்றுருக் கொண்டு தன்போல் இணையடி தாங்கப் பெற்று
மாற்றல னாகித் தன்னேர் தருக்கிய மாயோன் செய்ய
காற்றலைப் பிணிப்புக் காணுங் களிப்பினன் மேல்கொண் டுய்க்கும்
ஆற்றல்சால் அறவெள் ளேறு பரந்துசெண் டாடிச் செல்ல. ௪௯

வெள்ளநீர்க் கிடையோன் வைத்த விழிஅவன் எவ்வம் காண
வெள்கியாங் கடியிற் சாத்தும் விரைமலர்க் குவையுள் மூழ்க
வெள்ளெனும் பணிகள் தங்கள் இனத்தவர் மெலிவு நோக்கி
உள்ளுடைந் தழுவ தேப்ப ஒன்றொடொன் றலம்பி ஆட. ௫௦

---

௪௭. வளை - வளைந்த. வயிர் - ஊது கொம்பு. பணிலம் - சங்கு. சின்னம் - திருச்சின்னம். வங்கியம் - இசைக்குழல். தீங்குழல் என்றது வேய்ங்குழலை. மேல் வாச்சியங்கள் கூறி, ஈண்டு இசைக்கருவியும் அவற்றோடு ஒருங்கு வைப்பனவும் கூறுகின்றாராகலின், மேலைச் செய்யுளிற் கூறப்பட்டவற்றுள் சிலவும் ஈண்டுக் கூறினர். காளம் - சிறு சின்னம். காலும் - வெளிவிடுகின்ற. துவைப்பு ஒலி - ஒலிக்கின்ற ஒலி. உறந்து - நெருங்கி. விம்மி - மிகுந்து. அளவலின் - கலத்தலால்.

௪௮. வால் - வெண்மை. கவிகை - குடை. பிச்சம் - பீலிக்குடை. தொங்கல் - மயில் தோகை.

௪௯. இது முதல் ௫௮ ஆம் செய்யுள் காறும் தற்குறிப் பேற்றம். மேல்கொண்டு உய்க்கும் - (இறைவன்) ஏறிச் செலுத்துகின்ற. செண்டாடுதல் - பூச்செண்டாடுதல் போலத் தாவிச் செல்லுதல். இறைவன் விடையின் செலவைச் செண்டாடுதலென்னும் வழக்குண்மையை, "சேண்டாடும் விடையாய்" (திருமு. ௭. பதி. ௨௯. ௧.) என்னும் திருமொழி நோக்கியறிக.

௫௦. கிடை - கிடத்தல். எவ்வம் - துன்பம். விழி மூழ்க என இயையும். அலம்பி - ஒலித்து; இது நக்குதலாகிய தன் காரணமுந் தோன்றநின்றது.

புன்னெறித் தலைநின் றெங்கோன் றனைஇகழ்ந் திடும்பை பூண்ட
இன்னரை எனக்கூ ணாக அளித்திடும் இறைவன் என்று
மன்னுபே ருவகை பொங்கி மலர்ந்தென நளினச் செங்கை
தன்னிடை வயங்கு செங்கேழ் இணர்எரித் தழல்கூத் தாட. ௫௧

உய்திறன் உணரா மற்றை உம்பர்போல் பழிப்பு ணாமே
செய்திறன் முன்னர்த் தேறிக் கொடிஞ்சித்தேர் செலுத்தி உய்ந்த
மைதபு தன்னேன் சீலம் அறிந்துள மகிழ்ச்சி பூத்தாங்
கைதென அயன்க பாலம் அற்புத முறுவல் காட்ட. ௫௨

மாறடு மதுகைத் தன்னை வள்ளலுக் கியம்பிக் கொல்வித்
தூறுகாண் அமரர் இந்நாள் உலந்தவா நோக்கி ஒகை
ஏறுதன் முடிஅ சைத்துத் தரும்தரும் என்ப தேபோல்
ஆறணி சடில மோலிக் கொக்கிற கசைவுற் றாட. ௫௩

மறைமுதல் ஏவ லாற்றின் வயமகன் இயற்றுந் தண்டக்
குறைபினை நிரப்ப எண்ணிக் கொடுவிடம் இறைப்ப தேபோல்

---

௫௧. இன்னரை - இவர்களை. ஊண் - உணவு. இணர் எரித்தழல் - பலசுடரை யுடைத்தாய் எரிதலையுடைய நெருப்பு.

௫௨. மைதபு - குற்றம் நீங்கிய. ஐது - அழகிது. அற்புத முறுவல் - ஆச்சரியச் சிரிப்பு.

௫௩. மாறடு மதுகைத் தன்னை - பகைவரைக் கொல்லும் வலியுடைய தன் செயலை. வள்ளல் - இறைவன். உலந்தவாறு என்பது செய்யுள் மரூஉவாய் நின்றது. கொக்குருவங்கொண்டு உலகை வருத்திய பகன் என்னும் அசுரன் கொடுமையைத் தேவர்கள் சிவபிரானுக்கு அறிவிக்க, அவர் அவனை யழித்து, அத்தேவர்கள் வேண்டுகோளால் அவன் இறகை யணிந்தனர் என்பது புராண வரலாறு.

௫௪. மறைமுதல் - இறைவன். வயமகன் - வீரபத்திரர். கறை-விடம். அணல் - கீழ்வாய். துத்தி - படப்பொறி. பாந்தள் - பாம்பு. கலன்கள் - ஆபரணங்கள். பூட்டுவிட்டு - திறந்து. வாய்பூட்டுவிட்டு என்பது கலன்கள் என்றதற்கேற்ப நயம்படக் கூறியவாறு. கவை - பிளவு. மூசென, ஒலிக்குறிப்பு. உயிர்த்து - மூச்சுவிட்டு. காசிபரின் ஒரு மனைவியரின் புதல்வர் தேவர்களும், மற்றொரு மனைவியரின் புதல்வர் ஆதிசேடன் முதலிய பாம்புகளுமாக, அவ்விருதிறத்தினருக்கும் பகை யுண்டென்று கூறுதல் புராண வழக்கு.

கறைஅணல் தூக்கிப் பாத்தட் கலன்கள்வாய் பூட்டு விட்டு
முறைமுறைக் கவைநா நீட்டி மூச்சென உயிர்த்து நோக்க. ௫௪

கணங்கொழு பாற்றுப் பந்தர்ப் பறந்தலைக் களத்து ஞாங்கர்
உணங்குறும் இமையோர் ஆவி உள்ளதோ இலதோ என்னப்
பிணங்களைத் தொட்டுப் பார்ப்பான் பிணைக்கரம் நீட்டி யாங்கு
வணங்குடல் மதியம் வெண்கேழ் வளங்கதிர் பரப்பா நிற்ப. ௫௫

இகழ்ந்தவர் தமக்கே பின்னும் இன்னருள் புரிய வேண்டிப்
புகுந்திறம் நோக்கி உள்ளம் பொருதுவேர்த் தூடிப் பொங்கி
அகந்தளர்ந் தெழுந்து வீழ்ந்து புரண்டுகை யெறிந்தா லென்ன
நெகுஞ்சடைக் கங்கை மாது நிரந்தரந் ததும்பி ஆட. ௫௬

தாதைஎன் றிருந்து தீங்கே தாங்கினுற் காக்கம் நல்கப்
போதரேன் யானென் றாடும் பூவையைத் தழீஇக்கொண் டேகும்
ஆதரங் கடுப்ப அன்ன அணங்கினை இடப்பாற் கையாற்
காதலித் திறுகப் புல்லி அணைத்திடுங் காட்சி தோன்ற. ௫௭

குருதிஎன் பிரத்தம் மூளை குடர்உடற் குறைகள் துன்றும்
பொருகளந் திருக்கண் சாத்தாப் பொருட்டவண் மறைப்பார் போலத்
தருமலர் மாரி தூவி உருத்திர கணங்கள் சாரக்
கருணைகூர்ந் தருளித் தோன்றுங் கடவுளை எவருங் கண்டார். ௫௮

கொடுங்கணுக் கண்டு வேர்த்துக் குழறிவாய் வெரூஉங்கால் அன்னை
அடுங்கணை ஒழித்து வல்லே அணைத்திடப் பெறுஞ்சி றார்போல்
நடுங்குறும் இமையோ ரெல்லாம் நாதனைக் கண்ட லோடும்
நெடுங்களி துளும்பி ஓகை நீடினர் வணங்கி நின்றார். ௫௯

இன்னரை நோக்கி எங்கோன் முறுவலித் தெமக்கு வெள்ளி
தன்னிடைப் பாகம் என்னே தந்திலீர் அஃது நிற்க
மன்னுபோர் அடுபே ராண்மை வலியினீர் பலரும் என்னே
பன்னும்ஓர் வீரற் காற்றா துடைந்தனிர் பகர்மின் என்றான். ௬0

---

௫௫. பாற்றுப்பந்தர் - பருந்துகள் தம் இறகுகளை விரித்த பந்தர்.
௫௬. 'எறிந்தாலன்ன' என்னும்' பாடம் சரியன்று.

௫௭. ஆக்கம் - நன்மை. போதரேன் - வருகிலேன், ஆதரம் கடுப்ப - தொடக்கத்தை யொப்ப.

### விண்ணவர் வேண்டுகோள்

அடியிணை தொழுது மாயோன் முதலிய அமரர் சொல்வார்
அடிபடும் எங்கள் ஆண்மை துரும்பொன்றில் அன்றே கண்டாய்
அடியராம் எம்மைப் பல்கால் குரங்குபோல் ஆட்டு விப்ப
தடிகளுக் கழகோ எந்தாய் ஆற்றிலேம் உய்யக் கொள்ளாய். ௯௧

அத்தனே பல்கால் இவ்வா றுணர்த்தியும் ஆடை மாசின்
மைத்துறு பேதை நீரால் பின்பினும் மயங்கு கின்றேம்
கைத்தளை யாடி ஒச்சிக் காதியும் ஆள்வர் அல்லால்
எத்தனை பிழைசெய் தாலும் இகப்பரோ அடிமை பெற்றோர். ௯௨

கறுத்தநின் மிடறு நோக்கேம் கையணி கபாலம் நோக்கேம்
வெறுத்தவெள் ளென்பு நோக்கேம் விழியடி கிடத்தல் நோக்கேம்
குறுத்தமோட் டாமை ஓடும் பன்றியின் கோடும் நோக்கேம்
இறுத்திடும் விதியின் ஆறே மதியெனல் எம்பாற் கண்டேம். ௯௩

பொங்கருட் பரமா னந்த பூரண முதலே இங்கு
நங்களை ஆளத் தோன்றி ஐந்தொழில் நடாத்தல் ஓரேம்

---

௯௧. அடிபடும் - (தேவரீருக்குப் பிழைசெய்து) தண்டனை யடையும் இயல்புடைய. துரும்பு ஒன்றிற்கண்டமை மேலே அமரேசப்படலத்திற் காண்க.

௯௨. ஆடை மாசின் மைத்துறு பேதை நீரால் - ஆடையில் அழுக் கேறுதல்போலக் கறுத்துப் பொருந்தும் அறியாமைத் தன்மையால். கைத் தளையாடி - கையில் விலங்கு பூட்டி. ஒச்சி - அடித்து. காதி - வருத்தி. இகப்பரோ - நீக்குவார்களோ.

௯௩. நீலகண்டம் முதலியவை, யாங்கள் அகந்தை நீங்கி ஒழுகுதற்குக் கொண்ட அடையாளங்களாக இருப்பவும், அவற்றை நோக்கவொட்டாது மறைத்தது எங்கள் ஊழ்வினை என்பார், இங்ஙனங் கூறினார்கள். வெறுத்த - மிகுந்த. குறுத்த - பறித்த. மோடு - பெரிது, இறுத்திடும்-தங்கும், செல்லும். 'விதியின் ஆறே மதி இறுத்திடும்' எனக்கூட்டுக. இறுத்திடும் என்பதை இறுதி செய்யும் என விதிக்கு அடையாக்கி, மதி என்புழிச் செல்லும் என் பதை அவாய் நிலையாக வைத்துரைப்பாரும் உளர்.

௯௪. உயிர்கள் உய்தற்பொருட்டுக்கொண்ட நினது அருள் நாடகத்தை, எம்மனோர் வினைக்கீடாகிய செயல்போன்றதென மயங்கி, அம்மயக்கக் காரணமாக உன்னையும் எம்மில் ஒருவனாக வைத்தெண்ணி, அதனால் கேடுற்

மங்கையை மணந்தாய் என்றும் மக்களை உயிர்த்தாய் என்றும்
எங்களில் ஒருவ னாக எண்ணியே இகழ்ந்து கெட்டேம். ௯௪

கடவுள்யாம் செருக்கா வண்ணம் கண்டனம் உய்யு மாற்றால்
விடமுதல் அடையா ளங்கள் நின்திரு மேனி வைத்தாய்
அடலுறும் அவையுந் தேறாச் செருக்கறிந் திந்நாள் எங்கள்
உடலினும் அடையா ளங்கள் உறுத்தினை போலும் உய்ந்தேம். ௯௫

இன்றெமை ஒறுப்ப வீரன் போந்தனன் ஏவ லாக
அன்றெமை ஒறுப்பப் போந்த விடமும்உன் அருளே என்று
மன்றயாம் தெளிந்தேம் இந்நாள் இடித்தெமை வரைநி றுத்தல்
என்றும்நின் கடனே யன்றோ ஈறிலாக் கருணை வாழ்வே. ௯௬

அன்றனை மதியா தாழி கடைந்ததூஉம் அன்றி எம்மேல்
சென்றடர் வதனுக் கஞ்சிச் செல்வநீ அமுது செய்யக்
கொன்றிடும் நஞ்சங் காட்டிக் குற்றம்மேல் குற்றஞ் செய்தேம்
இன்றுனை இகழ்ந்த தொன்றோ டொழிதலின் உய்ந்தேம் எந்தாய்.

அளவறு காலந் தீவாய் அள்ளலிற் குளித்தும் தீரா
வளரும்இச் சிவத்து ரோகம் வயப்புகழ் வீரன் றன்னால்
எளிதினில் தவிர்த்தாய் அன்றே இப்பெருங் கருணைக் கெந்தாய்
தெளிவிலாச் சிறுமை யேங்கள் செய்குறி யெதிர்ப்பை என்னே. ௯௮

இனையன பலவும் பன்னி இரந்திரந் தலந்து கண்டங்
கனையவாய் குழறக் கண்ணீர் வார்ந்திடக் கரங்கள் உச்சி
புனையநின் றிமையோ ரெல்லாம் போற்றுழி முன்னாள் கஞ்ச
மனையவன் எம்பி ரானை வணங்கிவிண் ணப்பஞ் செய்வான். ௯௯

---

றேம் என்பார், இங்ஙனங் கூறினார்கள். இறைவன் செயல்களின் உண்மை நோக்காது, அவனைத் தேவர் முதலியோருள் ஒருவனாக வைத்தெண்ணுதல் அறியாமையாகும் என்பதை, "ஊகியா மூட ரெல்லாம் உம்பரில் ஒருவன் என்பர்" என்பதனாலும், மற்றும் ஆண்டே (சித்தி. சூ க. ௪௦ முதல் ௫௫ வரையும் உள்ள செய்யுட்களில்) நன்கு விதந்தோதியவற்றானும் உணர்க.

௯௫. கடவுள், அண்மை விளி. கண்டனம் - கண்டு; முற்றெச்சம்.

௯௬. வரை நிறுத்தல் - ஆணைவழி நிறுத்துதல்.

௯௮. அள்ளல் - நரகம். குறியெதிர்ப்பை - ஈண்டுக் கைம்மாறு.

௯௯. கண்டம் கனைய - மிடறு விம்ம.

வேள்வியிற் பாகம் நல்கா மருள்மன விண்ணோ ரெல்லாம்
தாழ்நெறித் தக்கனோடுங் குறைவறு தண்டம் பெற்றார்
வாழிய இனிநீ எச்சம் வரமுற அருளிச் செய்து
பாழ்படச் சிதைந்த விண்ணோர் பண்டுபோல் உய்யச் செய்யாய். ௭௦

பிரமாதி தேவர் வரம்பெற்றுப் பூசித்தல்

கடுந்தளைப் பிணிப்புண் டார்க்குங் கட்டறுத் தருளாய் என்ன
அடுங்கரி உரித்த பெம்மான் அம்முறை கடைக்கண் சாத்த
இடும்பைதீர்ந் துய்ந்தார் அன்னோர் யாரையும் நோக்கிப் பின்னும்
கொடும்பிழை முழுதும் நீங்கும் வழியினைக் கூற லுற்றான். ௭௧

எமக்குநீர் பெரிதுங் குற்றம் இழைத்தனிர் அவைதீர்ந் துய்ய
நமக்குமிக் கினிய காஞ்சி நகர்வயின் நண்ணீர் அங்கண்
இமைத்தொளிர் கயிலா யப்பால் நாரதன் இயம்புங் கூற்றின்
அமர்த்தவேல் தக்கன் ஈன்ற அரியச்சு வப்பேர் மைந்தர். ௭௨

பொதுவற நம்பி நம்லமப் போற்றும்ஆ யிடைக்கண் சென்று
கதுமென இலிங்கந் தாபித் தருச்சிமின் கரிசு நீங்க
விதியுளித் தக்கன் றானும் இம்முறை விழைக பூசை
இதுபுரி காறும் நுங்கட் கிடும்பையே புரிவர் மாற்றார். ௭௩

கலிநிலைத் துறை

அனையர் தாரகன் சூரபன் மாமுத லாகும்
இனைய தானவர் என்றறி மின்கள்என் றருளிக்
கனைபொ லங்கழல் வீரனுங் கணங்களுஞ் சூழத்
தனைநி கர்த்தவன் கயிலையைச் சார்ந்தனன் இப்பால். ௭௪

புள்ளி னத்தர சுயர்த்தவ னுதிப்புத் தேளிர்
வள்ளல் ஆணையின் கிளவிபொச் சாத்தலின் மறுகை
நள்ளு சூரபன் மாமுதல் தயித்தியர் நலிய
விள்ள ருந்துயர்ப் பெருங்கடல் ஆழ்ந்தனர் மெலிந்து ௭௫

மெலிந்த பின்மறைக் கிழவனை உசாவுபு விடையோன்
வலிந்த வாய்மொழி நினைந்துபோய்க் கச்சியை மருவி

---

௭௦. வாழிய அசைநிலை. எச்சம்-(பொதுப்பட) வேள்வி. வரம்-மேன்மை.

௭௨ அமர்த்த - போர் செய்தலுடைய. அரியச்சுவர் என்பது தக்கன் மைந்தர்கள் பெயர்.

இலிங்கம் ஆயிடை நிறீஇத்தொழு திடும்பைதீர்ந் துய்ந்தார்
பொலிந்த விண்ணவர் தம்மொடு தக்கனும் போகி. ௭௬

மக்கள் பூசனை விளைத்தஅச் சூழலை மருவி
நெக்க அன்பினால் தானொரு சிவலிங்கம் நிறுவித்
தக்க வாய்மையின் தொழுதனன் வெவ்வினை தணந்தான்
மிக்க சீர்க்கண நாதனும் வீறுபெற் றிருந்தான். ௭௭

ஆகத் திருவிருத்தம் - ௧௨௭௦.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்டவரலாறுகள், (௧) 'வேதத்துட் கூறப்பட்ட கருமங்களுட் சிறந்ததாகிய வேள்வியைச் சிவபெருமானையே தலைவராகக்கொண்டு செய்தல்வேண்டும்' என்பதும், (௨) 'அவ்வாறன்றிப் பிறரைத் தலைவராகக்கொண்டு செய்வோர் கேடுறுவர்' என்பதும (௩) 'சிவபிரானை இகழ்வோரும், அச்சத்தாலேனும் பொருளாசையாலேனும் அவரை இகழ்ந்து உடன்பட்டவரும் அதிபாதகராய் அவரால் தண்டிக்கப்பட்டு, அப்பாவசேடத்தால் பின் பகைவர் முதலியோரால் நலியப்பட்டு வருந்துவர்' என்பதும், (௪) 'அப்பாதகம் சிவபூசையா லன்றிப் பிறிதோராற்றனும் பற்றறக் கழியாது' என்பதும், (௫) 'சிவபெருமானை இகழ்வோரை வெறுத்தலே உண்மைப் பெரியாரின் இயல்பு' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள்; சிவபரத்துவமும் ஆண்டாண்டுக் கூறப்பட்டிருத்தல் காண்க. பிறவும் உளவேற்கொள்க.

## உரை நடை

சென்று வணங்கினோர்கள் நீங்குதற்கரிய விடுவச்சேனேச்சரத்தின் வரலாற்றைத் தெரிந்த அளவிற்கூறினோம்; இனி, அதற்குக் கிழக்கிலிருக்கும் தக்கேச்சரத்தின் பெருமையைச் சொல்வோம்.

தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் புதல்வனாகிய தக்கன் என்பவன் தனது தந்தையின் கட்டளைப்படி சிருட்டித் தொழிலைச் செய்தற்கு இரண்டு

௭௫. பொச்சாத்தல் - மறத்தல். நள்ளு - செறிந்த. தேவர்கள் சூரபதுமன் முதலியோரால் துன்புற்றமையைக் கந்தபுராணத்துட் காண்க.

௭௬. உசாவுபு - விசாரித்து.

௭௭. தணந்தான் - நீங்கினான், வீறு - பெருமை.

முறை பல மைந்தர்களைப் படைத்தனன். அவர்கள் படைத்தல் தொழிலைச் செய்யும் வன்மை யடைதற் பொருட்டுத் தவஞ்செய்யுங்கால், நாரத முனிவர் இருமுறையும் அவர்கள்பாற் சென்று, 'ஐந்தொழிலையும் இறைவன் செய்யும்போது படைப்புத் தொழிற்கு நீங்கள் முயல்வானேன்? இறைவனை வழிபட்டு உய்வீர்களாக' என்று அவர்களைத் தவத்திற்கனுப்பி முத்தியடைவித்தனர். அதை யறிந்த தக்கன் நாரதரை, 'மனைவி மக்கள் இல்லாதவனுருக' என்று சபித்தனன். நாரதர் வெகுண்டு, 'நீ சிவபிரானால் தண்டிக்கப்படுக' என்று தக்கனைச் சபித்தனர். முற்காலத்திலே ததீசி முனிவர் தம்மை அகாரணமாக எதிர்த்த தேவர்களை, 'நீவிர் சிவபிரான் கோபத்திற்கு உள்ளாகுக' எனச் சபித்தனர். இருதிறத்தார்க்கும் சாபம் முதிர்ந்து பயன்தந்த வரலாற்றைச் சொல்லுகின்றோம்.

தக்கன் அகங்காரத்தினால், சிவபெருமானை விட்டு ஒரு வேள்வி செய்யத் தொடங்கினன். அக்காலையில் தேவர்கள் எல்லோரும் பிராமணர்களும் அவனால் அழைக்கப்பட்டு, அவன் வேள்விச் சாலையில் வந்திருந்தனர். அப்பொழுது ததீசி முனிவர் அங்கு வந்து தக்கனை நோக்கி, 'என் சிவபெருமானை அழைத்திலை?' என்று கேட்க, தக்கன் 'வேதம் எச்சத்தால் எச்சத்தை வழிபடுக என்று கூறுதலால், எச்சமாயுள்ள திருமாலன்றித் தமோகுணமுடைய உருத்திரன் ஈண்டு வருதற்கு யாதோரியையும் இல்லை' என்றான். ததீசி முனிவர் 'எச்சத்தால் எச்சத்தை வழிபடுக' என்பதற்குப் பொருள் இதுதானோ? வினைக்கருமங்களில் எச்சம் சிறந்து நிற்றல்போல, எச்சத்திற்குச் சிறந்தவர் சிவபெருமான் என்னும் கருத்தினாலன்றோ ஆங்கு வேதம் சிவபெருமானை எச்சமென்னும் பெயரினாற் கூறுகின்றது? என்றனர்.

அதனைக் கேட்டுச் சபையிலிருந்த பிராமணர்களும், தக்கன் கொடுக்கும் பொருளுக்கு ஆசை கூர்ந்து, தக்கன் கூறியதே சிறந்ததெனப் பேசினார்கள். அவர்களைத் ததீசி முனிவர், 'பார்ப்பனக் கடையர்காள், நீவிர்கள் கெடுநெறி பற்றிச் சைவத்தையும் சைவ சின்னங்களையும் இகழ்ந்து, வேறு குறிகளைத் தாங்கி உழல்கின்றவர்களாகுக' என்று சபித்துத் தக்கனை நோக்கி, 'நீ சிவபிரானை இகழ்ந்தமையால் உனது குலத்திற்கு இப்பொழுதே அழிவுகாலம் வந்ததென்று நினைவிற் கொள்வாயாக' என்று கூறித் தம்மிடத்திற்குச் சென்றனர். அதனைப்பிரமன் கண்டு அச்சங் கொண்டு, அவ்விடத்தினின்று நீங்கிச் சிவபெருமான்பால் சென்றனன்.

பிறகு தக்கன் திருமாலைத் தலைவராகக் கொண்டு வேள்வியைத் தொடங்கினன். இதனை, நாரதர் கைலையிற் சென்று இறைவனுக்குக் கூறினர். அப்பொழுது உமாதேவியாரும் கேட்டு, இறைவனை வணங்கி, ''எம்பெருமானே,

அடியேனுக்குத் தந்தையென்று இருந்து நமக்கு எப்போதும் தீமையே செய்கின்ற தக்கன் வேள்வியை அழித்தல் வேண்டும்; இது தேவரீரிடத்தில் அடியேன் வேண்டும் வரம்' என்றனர். சிவபெருமான் உடனே வீரபத்திரக் கடவுளை உண்டாக்கினர். இறைவியாரும் தமது கோபத்தினால் பத்திரகாளியை உண்டாக்கினர். இருவரையும், சென்று தக்கன் யாகத்தை அழித்து வருக என்று ஏவினர்.

வீரபத்திரரும் பத்திரகாளியும் அதிக உக்கிரத்துடன் கோபம்மிகுந்து வேகமாகச்சென்று, யாகசாலையுட் புகுந்தனர். வீரபத்திரரால் படைக்கப்பட்ட உரோமச கணங்கள் யாகசாலையை நெருப்பிட்டுக் கொளுத்தின. வீரபத்திரர் முன்னே தக்கனது தலையை வெட்டி வீழ்த்தினர். பின்பு மான் வடிவங் கொண்டு ஓடிய யாக தெய்வத்தைக் கொன்று, சூரியர்களைக் கண்ணைப் பிடுங்கிப் பற்களை உதிர்த்து, அக்கினிதேவன் கரவையும் கைகளையும் அறுத்து, சரசுவதியின் தனத்தையும் மூக்கையும் கொய்து, ஏனைய தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் திக்குப் பாலர்களுக்கும் தக்க தண்டனைகளைச் செய்தார். பத்திரகாளியும் தேவமாதர்களுக்குத் தக்க தண்டனையைச் செய்தனன். உரோமச கணங்கள் யாகசாலையைக் கொளுத்தியதேயன்றி, யூபங்களைப்பிடுங்கி எறிந்து, இருத்துவிக்குகளின் கழுத்தில் கயிறு கட்டி இழுத்து, நெய் முதலிய யாகத்திற்கு வைக்கப் பட்டிருந்த பொருள்களை யெல்லாம் எடுத் தெடுத்துக் கங்கையில் எறிந்தன.

இவ்வாறு வேள்வி முழுதும் அழிந்தமை கண்டு, அதற்குத் தலைவரா யிருந்த திருமால், வெட்கப்பட்டு, மானம் பின்னிருந்து தள்ள, கருடன்மீது ஏறிவந்து எதிர்த்தனர். அப்பொழுது வீரபத்திரர், பிரமன் செலுத்துகின்ற தேர்மேல் ஏறித் திருமாலுடன் போர்செய்தனர். இருவருக்கும் வெற்றி தோல்வியில்லாதவாறு நெடுநேரம் போர் நிகழ்ந்தது. பிறகு திருமால் சக்கரத்தை ஏவ, அதனை வீரபத்திரர் மார்பிலணிந்த வெண்டலை யொன்று கௌவிக்கொண்டது. அதனால் கணங்கள் ஆரவாரித்த ஓசையை இறவாது இருக்கும் தேவர்கள் கேட்டு அஞ்சி, ஓடத் தலைப்பட்டார்கள். வீரபத்திரர் அந்தத் திருமால் முதலிய தேவர்களை வளைத்துக் காலில் விலங்கு பூட்டினர். பிறகு, பிரமன் வேண்டுகோளினால், வீரபத்திரர் தமது கோபத்தை விட்டுச் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்தனர்.

உடனே சிவபெருமான் உமாதேவியாரோடும் அறவிடையின்மேல் ஏறிக் கணங்கள் புடை சூழ, பல வாத்தியங்கள் ஒலிக்க அவண் எழுந்தருளினர். அவரைத் தேவர்கள் வணங்கி நின்றனர். அவர்களைச் சிவபெருமான் புன்னகையோடு பார்த்து, 'நீவிர் எமக்கு ஏன் வேள்வியில் அவிப்பாகந் தரவில்லை? அது

நிற்க, நீவிர் பலபேரும் ஒருவனுக்குத் தோற்ற காரணம் என்ன? 'என்று வினவினர். அதற்குத் திருமால் முதலிய தேவர்கள் கூறுகின்றார்கள்: பெருமானே, எங்களுடைய வீரம் எல்லாவற்றையும் ஒரு துரும்பில்தானே அன்றே அறிந்தீர், அடியார்களாகிய எம்மை இவ்வாறு பல முறையும் குரங்கை ஆட்டுவதுபோல் ஆட்டுதல் அழகாகுமோ! தேவரீர் கொண்டுள்ள நீலகண்டம், எலும்பு முதலிய ஆபரணங்கள் இவையெல்லாம் தேவரீரது பரத்துவத்தை விளக்கவும், அவற்றை அறியாது அடிக்கடி மயங்குகின்றோம்; தேவரீரது செயல் அருட்செயலென்றறியாது, எங்களில் ஒருவராகவே தேவரீரை எண்ணிக் கெடுகின்றோம்; பன்முறை எம்மைத் தண்டித்துத் திருத்தவும், ஆடையில் அழுக்கேறுதல் போல அறியாமை மேலிட்டு மயங்குகின்றோம், எண்ணில்லாத காலம் நரகிற் கிடந்தாலும் தீர்தற்கரிய இச்சிவத்துரோகத்தை, வீரபத்திரரால் தண்டித்து எளிதில் நீக்கிய தேவரீரது கருணைக்கு அடியேங்கள் செய்யும் கைம்மாறு யாதுளது?' என்று, இவைபோல்வன பலவுங் கூறித் துதித்தனர்.

அதுகாலையில் பிரமதேவன் வேண்டுகின்றான்; 'இறைவனே, வேள்வியிற் பாகந்தராத தேவர்களெல்லாம் தகுந்த தண்டனையை அடைந்தார்கள். இனி அவர்களை முன்போலப் பிழைக்கும்படி அருள் செய்யவேண்டும்' என்றனன். சிவபிரான் தமது கடைக் கண்ணினால் நோக்கியருள, யாவரும் பிழைத்தெழுந்தனர். விலங்கிற்பட்டவர்களும் விலங்கு நீங்கப்பெற்றனர். பின்னர்ச் சிவபெருமான் யாவரையும் பார்த்து, 'இச்சிவத் துரோகத்தினால் வந்த பாவம் பற்றறக் கழிதற்குக் காஞ்சியில் தக்கனுடன் நீவிர் கயிலாயத் தலத்திற்கு அருகில், தக்கன் மக்கள் பூசித்த இடத்தில் இலிங்கம் தாபித்துப் பூசித்தல் வேண்டும். அது செய்யாதவரையில் உம்மைப் பகைவர்கள் வருத்துவார்கள்; ஆகையால் பூசித்து உய்வீர்களாக' என்று சொல்லி, வீரபத்திரருடன் கணங்கள் புடைசூழச் சிவபெருமான் கைலைக்கு எழுந்தருளினார்.

தேவர்கள் சிவபெருமான் கூறியதை மறந்தமையால், சூரபதுமன் முதலிய அசுரர்களால் துன்புறுத்தப்பட்டு, பின்னர்க் காஞ்சியை யடைந்து, இறைவன் கூறிய இடத்தில் இலிங்கம் தாபித்துப் பூசித்துத் துன்பம் நீங்கி வாழ்ந்தனர். தக்கனும் ஆங்குச்சென்று இலிங்கம் நிறுவிப் பூசித்துப் பாவத்தினின்றும் நீங்கிச் சிவகணநாதனாயினன்.

# முப்புராரி கோட்டப் படலம்

கலிநிலைத் துறை

சிறுவ தீர்த்தநி அஞ்சல்என் றியமனைச் சிறி
மறுவ தீர்த்தவன் மேயதக் கேச்சரம் வருத்தாம்
சறுவ தீர்த்தமேல் பாங்கரில் தாழ்ந்தவர்க் கவமாய்
உறுவ தீர்த்தருள் முப்புரா ரிச்சரம் உரைப்பாம். க

எழுசீரடி யாசிரிய விருத்தம்

முப்பு ரங்களின் மூவர் புத்தன் மொழித்தி றத்து மயங்கிடா
தப்ப ணிந்தவர் தாள்ப ணிந்தரு ளாற்றின் நின்றனர் ஆதலால்
பொய்ப்பு ரந்தபு காலை நீற்றறை நாவின் மன்னவர் போல்எரி
தப்பி வாழ்ந்தனர் ஈசன் ஆணையில் நிற்ப வர்க்கிடர் சாருமோ. உ

சுதன்மன் என்று சுசிலன் என்று சுபுத்தி என்று சொலப்படும்
அதன்மம் நீத்தஅம் மூவ ருக்கும் அருள்சு ரந்துமை பாகனார்
இதம்வி ளங்க வரங்கள் வேட்ட விளம்பு மின்னென அங்கவர்
பதம்வ ணங்குபு நின்தி ருப்பணி வாயில் காப்பருள் என்றனர். ங

க. சிறுவ - சிறுவனே; தீர்த்த - தூய்மையானவனே; இவைகள் மார்க் கண்டேயரைக் குறிப்பன. மறு அது ஈர்த்தவன் என்புழி, அது பகுதிப் பொருள் விகுதி. மறு (இயமன் செய்த) குற்றம். ஈர்த்தல் - ஈண்டு ஒறுத்து நீக்குதலின் மேற்று. வடமொழியிலுள்ளது ரகரம் ஒன்றே யாதலின், அதனை யுடைய வடசொற்கள் தமிழில் றகரமாயும் சிறுபான்மை வழங்கும். ஈண்டுத் திரிபென்னும் சொல்லணி கருதி, சருவதீர்த்தம் என்பது சறுவதீர்த்தம் எனப்பட்டது. அவமாய் உறுவ - தீமையாய் வந்து பொருந்துவனவற்றை.

உ. அப்பு - நீர். அருள்ஆறு - அருள்நெறி. திருவருள் நெறியில் நிற்றலே சிவநெறி யொழுக்கமாதலின், அஃது அருள் நெறியென்னும் பெயருடைத்து. தபு - அழிந்த. சமணர் வைத்த நீற்றறையினின்றுந் திருநாவுக்கரசு நாயனார் தீங்கின்றி எழுந்தமையைப் பெரியபுராணத்துட் காண்க. நீற்றறை - சுண் ணம்புக் கால்வாய். வேற்றுப்பொருள் வைப்பு. முப்புரத்தவர் புத்தன் மொழியால் மயங்கிச் சிவநெறியைக் கைவிட்டமையை மேலே கயிலாயப் படலத்திற் காண்க.

ங. வாயில் காப்பு - வாயிற்காவல், இறைவன் திருக்கோயில் வாயிற் காவலர் துவாரபாலகர் எனப்படுவர்.

கச்சி மாநகர் எய்தி நற்குறி கண்டு பூசனை செய்மினே
இச்சை யாற்றின் நமக்கு நந்தளி வாயில் காவலும் ஈதும்என்
றச்ச னாருள் செய்து நீங்கலும் அங்க ணைந்து வரம்பல
நிச்ச லுந்தரு முப்பு ராரி இலிங்கம் ஒன்று நிறீஇயினர். ௪

பூசை யாற்றி உளத்தில் எண்ணிய பேறு பூண்டனர் முப்புரா
ரீச மேன்மை அளக்க வல்லுநர் எவர் அப்பெயர் வண்மையான்
மாசில் காஞ்சி வயங்கு கோட்டம் எனப்ப டும்என வாய்திறந்
தோசை யால்உயர் சூதன் ஓத முனிக்க ணத்தர் வினவுவார். ௫

முப்பு ரத்துறை வோருள் இங்கிவர் மூவ ருந்திரு நாயகன்
செப்பு மாய மயக்கி னுக்குள் அகப்ப டாது செழுந்தழற்
கைப்ப ரம்பொருள் பத்தி வாய்மை கடைப்பி டித்து நிலைத்தவா
றெப்ப டித்தது அற்பு தச்செயல் எங்க ளுக்குரை என்றலும். ௬

தத்து|வெண்டிரை வேலை நஞ்சம் மிடற்ற டக்கிய தம்பிரான்
பத்தி மார்க்கம் இரண்டு கூற்றது பற்ற றுத்துயர் அந்தணீர்
புத்தி நல்குவ தொன்றி ரண்டறு பூர ணப்பொரு ளோடுலாம்
முத்தி நல்குவ தொன்றி ரண்டனுள் முன்இ யம்பிய பத்திதான். ௭

சார்பு பற்றி உதிக்கும் மற்றைய தொன்று சத்தி பதிந்தமெய்ச்
சார்பின் எய்தும் இரண்டும் முத்தி தழைக்கு மாயினும் வெவ்வினைச்

௪. குறி - இலிங்கம். கண்டு - நிறுவி. தளி - கோயில். ஈதும் - கொடுப்போம். அத்தன் அச்சன் எனப்போலியாயிற்று; தந்தையைக் குறிக்கும் ஓர் திசைச் சொல்லுமாம். முப்புரத்தை யழித்த பெருமான் திருவருளால் பூசிக்கலுற்றனராகலின் முப்புராரி எனப் பெயரிட்டு மூவரும் ஒரே இலிங்கத்தை நிறுவினர் என்க. நித்தம் நிச்சல் என வந்தது போலி. உம்மை, எச்சவும்மை.

௫. முப்புராரீசமென்புழிச் சுட்டுவருவிக்க. அப்பெயரான் கோட்டம் எனப்படும் என்க. அஃதாவது முப்புராரி கோட்டமெனப்படும் என்பதாம். காஞ்சி என்புழி எழாவது விரிக்க. அத்தலம் (முப்புராரி கோட்டம்) எனப்படும் என எடுத்துக் கொண்டுரைக்க. இதற்கு உரையாசிரியர் கூறிய உரை பொருந்தாதென்க. ஓசை - புகழ்.

௭. இரண்டறு பூரணப் பொருள் - எல்லாப் பொருளிலும் வேறற நிறைந்து அவையேயாய் நிற்கும் முதற்பொருள். உலாம் - கலக்கின்ற.

௮. சார்பு - புகழ் முதலியவற்றுள் யாதானும் ஒன்றனைப் பெறவிரும்பும் காரணம். சத்தி - அருட்சத்தி. சத்திபதிதல் என்பது சத்திநிபாதம்

சார்பி னோர்பெறு சார்பு பற்றிய பத்தி தான்இடை விள்ளும்அச்
சார்பி லாதெழும் உண்மை அன்பு தணப்பு றுதேவர் கட்குமே. அ

செய்த செய்வன வாய தீவினை யாவும் இச்சிவ பத்தர்பால்
எய்தி டாகம லத்தி லைக்கம லத்தின் என்றறி மின்களோ
ஐது காமம் விழைந்த பத்தியும் நல்ல றத்துறை யார்பெறின்
நைத ராதிது பத்தி பேதம் உணர்ந்து ளோர்நவில் கிற்பதே. கூ

திரிபு ரத்தவர் சார்பு பற்றிய பத்தி யோர்தனி திமையே
புரிம னத்தின ராத லால்வரு புத்த நாரத ரான்மயல்
மருவி இற்றனர் இன்ன மூவரும் வள்ளல் சத்தி பதிந்தெழும்
பெரிய பத்திய ராத லால்அவர் பேசு மையல் கடந்தனர். கo

கலி விருத்தம்

பேறு மெய்தினர் என்று பேதுறு
வாறு மேதகு சூதன் மாதவர்
கூறு கூற்றினுக் கிறைகொ டுத்தனன்
வேறு மாக்கதை மேல்வி ளம்புவான். கக

ஆகத் திருவிருத்தம் - கஉஅக.

---

எனப்படும். இஃது இருவினையொப்பு வாய்ந்து மலசத்தி கெடும்நிலையில் உண்டாவது. சத்திநிபாதம் வந்து எய்திய பத்தியே வீடுபயக்குமாறு நிலைத்து நிற்பதாகலின், அக்காரணத்தை, 'மெய்ச்சார்பு' என்றார். சார்பு பற்றிச் செய்யப்படும் சரியை கிரியை முதலியன உபாயச்சரியை கிரியை எனவும், சத்திநிபாதம் வந்து செய்யப்படும் சரியை கிரியை முதலியன உண்மைச் சரியை கிரியை எனவும் கூறப்படுமென்க. சரியை முதலியன இங்ஙனம் இருவகைப் படுதலும், மற்றும் பலவாற்றால் பலதிறப்படுதலும், அவற்றியல்புகளும், பயன்களும் ஆசிரியர் திராவிடமாபாடியத்துள் நன்கு விளக்கியிருத்தல் காண்க. (சூ. அ. அதி. க.) தழைக்கும் - தழைப்பிக்கும். புத்தியைத் தரும் பத்தியும் பாரம் பரியத்தில் முத்தியைத் தருமாகலின், 'இரண்டும் முத்திதழைக்குமாயினும்' என்றார்.

கூ. செய்தவினை - சஞ்சிதம். செய்வன வாயவினை-ஆகாமியம். இச்சிவ பத்தர் என்றது உண்மைப் பத்தியாளர்களை. கமலம் இரண்டனுள் முன்னது தாமரை, பின்னது நீர். ஐது - அழகிது. நைதராது - கெடாது.

கo. இற்றனர் - அழிந்தார்கள்.

கக. பேதுறுவாறு - மயங்காதபடி. இறை - விடை.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'யாதொன்றையும் விரும்புதல் காரணமாக இன்றி இறைவன்பால் எழுந்த உண்மை யன்புடையார் கொண்ட அன்பு எவ்வாற்றானும் மாறுபடாது நின்று முத்தியைப் பயக்கும்' என்னும் உண்மையை முதலாகக் கொண்டு, (உ) 'இறைவன் அருள்வழி நிற்பார்க்குத் தீங்கு அணுகாது' என்பதும், (இது ஆசிரியரால் அருளிச் செய்யப்பட்டது.) (ங) 'சிவபூசையால் எண்ணிய நலங்களை அடையலாம்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள் உபாயச்சரியை முதலியவை உண்மைச்சரியை முதலியவைகளின் இயல்புகளும் கூறப்பட்டன. கூஆம் செய்யுளிற் கூறிய பொருளும் ஆண்டுக்காண்க. பிறவும் உள வேற் கொள்க.

---

## உரை நடை

கூற்றையுதைத்த பெருமான் எழுந்தருளியுள்ள தக்கேசத்தின் வரலாற்றைக் கூறினோம்; இனி, சருவதீர்த்தத்திற்கு மேற்கில் உள்ள முப்புராரீச்சரத்தின் வரலாற்றைக் கூறுவோம்.

திரிபுரத்தில் இருந்தவர்களில் சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூவர்கள் புத்தன் பொய்யுரையால் மயங்காதவர்களாய்ச் சிவநெறியில் நின்றனர். அதனால், அவர்கள் திரிபுரம் வெந்து நீறாகிய காலத்தில், சமணர்கள் வைத்த சுண்ணாம்புக்கால்வாயினின்றும் தீங்கில்லாதெழுந்த திருநாவுக்கரசு நாயனார்போல அழியாது நின்றனர். அவர்களை இறைவனார் நோக்கி, உமக்கு வேண்டுவதென்னை? என்று கேட்க, 'தேவரீர் திருக்கோயிலில் வாயில் காக்கும் செயலை யளிக்க வேண்டுமென்றனர். 'அங்ஙனமாயின், நீவிர் காஞ்சியை யடைந்து எம்மைப் பூசித்தால் அதனை யளிப்போம்' என்று திருவாய் மலர்ந்தனர். அங்ஙனமே அவர்கள் காஞ்சியை யடைந்து, 'முப்புராரீசன்' என்னும் பெயரினால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்து அப்பேற்றை யடைந்தனர் என்று சூதமுனிவர் சொல்ல, முனிவர்கள் வினவுவார்.

'முப்புரத்தவருள் இவர்கள் மாத்திரம் மயங்காத காரணம் யாது?' என்றனர். சூதமுனிவர், 'யாதானும் ஒன்றனை விரும்புதல் காரணமாக உண்டாகும் சிவபத்தி இடையில் நீங்கும். சத்திநிபாதம் வாய்க்கப் பெற்று உண்டாகும் உண்மை அன்பு எக்காலத்தினும் நீங்காது. திரிபுரத்தவர்கள் சார்பு பற்றிய பத்தியுடைமையால் புத்தன் சொல்லால் மயங்கினர். இம்மூவரும் உண்மை அன்புடைமையால் மயங்காது நன்னெறி யடைந்தனர்' என்று விடைகூறினர்.

# இரணியேசப் படலம்

கலி விருத்தம்

அரணி யின்கனல் ஐயர் கூற்றடு
சரணி முப்புரா ரீசஞ் சாற்றினும்
முரணி அங்கதன் குணக்கண் முன்தொழும்
இரணி யேச்சரத் தியல்பு ரைத்துமால். ௧

இரணி யப்பெயர் அசுரர் ஏறனான்
குரவ னாய்நலங் கொளுத்து வெள்ளியைச்
சரணம் ஏத்துவான் தனியி டத்தினில்
வரவ ழைத்தனன் வணங்கி விண்டனன். ௨

அரும்பெ றல்திரு அரசு நான்பெறத்
தரும்ப டிக்கொரு விரதஞ் சாற்றென
விரும்பு மந்திரக் கிழவன் வீங்குதோள்
இரும்பின் அன்னவற் கிறைவ ழங்குவான். ௩

வேட்ட வாறிது வாயின் மேவரக்
கேட்டி இவ்வுரை கேடில் ஆற்றலோய்
நாட்டம் மூன்றுடை நாதன் சேவடிக்
கிட்டும் அன்பினால் தவம்இ ழைத்திநீ. ௪

பதும வாழ்க்கையான் படைக்கும் ஆற்றலும்
மதுவை மாட்டினான் அளிப்பும் வான்மிசை
அதுல னாகியோர் ஆசை ஆட்சியும்
பொதுந டிப்பவன் பூசைப் பேறரோ. ௫

---

௧. அரணி - தீக்கடைகோல். கனல் - தீயையுடைய வேள்வி. ஐயர் - அந்தணர்களே. சரணி - பாதத்தையுடையவன். முரணி - (தேவர்களோடு) பகைத்து. இரணியன் பெயர் முன்னர் வருகின்றமையின் தொழுதென் வாளா கூறியொழிந்தார்.

௩. மந்திரக் கிழவன் - சூழ்ச்சிக்கு உரியவன்.

௫. மது - ஓர் அசுரன். அளிப்பு - காத்தற்றொழில். அதுலன் - ஒப்பில்லாதவன் என்றது இந்திரனை. ஆசை - திக்கு.

செல்வம் ஆண்மைவர் சீர்த்தி வாழ்வருள்
கல்வி கட்டெழில் மகளிர் காழ்இலாச்
சொல்வ லித்திறஞ் சூழ்ச்சி ஏனவும்
அல்வெ ரூஉங்களன் அருச்ச னைப்பயன். ௬

மெய்த்த விண்ணவர் இருக்கை வேண்டினும்
நத்து மாலயன் நகரம் வேண்டினும்
முத்தி வேண்டினும் மூவ ருஞ்சிவ
பத்தி ஒன்றனல் எய்தற் பாலவே. ௭

ஒன்ன லார்பிணி உரகம் மண்ணை கோள்
என்ன வும்அவர்க் கிடர்இ ழைத்திடா
அன்ன ஆகலான் அரன்அ டித்தொழில்
முன்னி னார்க்கெவன் அரிது மொய்ம்பினோய். ௮

அறசீரடி யாசிரிய விருத்தம்

சிவன்றன் திருஉருவைக் காணாத கண்ணே குருடாம் சீர்சால்
சிவன்றன் திருஉருவை எண்ணாத சிந்தையே பித்தாம் என்றும்
சிவன்றன் திருப்புகழைக் கேளாச் செவியே செவிடாம் அன்பிற்
சிவன்றன் திருப்புகழை ஓதாத வாயே திணிந்த மூங்கை. ௯

நில்லா திளமையும் யாக்கையும் இன்னினியே நீங்கும் அன்றிப் பொல்லாத நோயும் அடர்க்துபெரும் பையுள் புகுத்து நீரால், எல்லாம் நரைத்துடலம் ஏகாமுன் நன்னெறிக்கே செல்வோம் என்று, வல்லான் உகைத்தானை அர்ச்சிப்பார் இவ்விடும்பை வாழ்க்கை வெல்வார். ௧0

---

௬. காழ்இலா - இனிய. சொல்வலித்திறம் - சொல்வன்மை. அல் - இருள். களன் - கண்டத்தையுடையவன்.

௭. நத்து - சங்கு. விரும்புகின்ற எனவுமாம். மூவரும் - கெடுதலில்லாத.

௮. உரகம் - பாம்பு. மண்ணை - பேய். கோள் - கிரகம்.

௯. மூங்கை - ஊமை.

௧0. இன்னினி என்பது இப்பொழுதென்னும் பொருள் தருவதோர் இடைச்சொல்; "இன்னினியே செய்க அறவினை" (நாலடி. ௨௯.) என்றமை காண்க. பையுள் - துன்பம். வல் ஆன் - வலிய இடபம்.

பத்தன் மொழிப்பகுதி சேவையினைக் கூறும் பரிசால் ஈசன்
பத்தன் அவற்கினிய சேவகனே ஆதலின்இப் பான்மை பூண்ட
பத்தர் படிமம் ஒழுக்கங் குலன்ஒன்றும் பார்க்க வேண்டா
பத்தர் எனப்படுவார் கண்டிகையும் நீறும் பரித்த மெய்யோர் ௧௧

அங்கவரைக் காணப் பெறுகிற்பிற் கங்கைநீ ராடற் பேறும்
அங்கவர்பாற் பேசப் பெறின்அகில தீர்த்தமுந் தோய்ந்தார்ஆவர் [ய்
அங்கவர்க்குச் செய்பூசை அண்டருக்கும் மூவருக்கும் ஆகுங்கண்டா
அங்கவர்க்கே தானம் அளிப்பர் அவர்தம்பால் ஏற்பர் நல்லோர். ௧௨

மாயன்அயன் விண்ணோர் வாழ்வுந் துரும்பா மதிக்கும் இந்தத்
தூய சிவனடியார் மேம்பாடி யானேயோ சொல்ல வல்லேன்
பாய பெருங்கீர்த்தித் தோன்றல் பலசொல்லி என்னை இந்நாள்
ஆயபிற வெல்லாங் கழித்துச் சிவனடியே அர்ச்சித் துய்வாய். ௧௩

என்னுங் குரவன் இணைத்தாள் தொழுதோகை எய்தி எந்தாய்
பன்னும் பரம்பொருளை எத்தானத் தெவ்வாற்றாற் பண்பு கூரப்
பொன்னங் கழலிணைகள் பூசித் திடுவதெனும் பொன்னோன் கேட்ப
மன்னும் பிருகு தரவந்த மைந்தன் வகுப்பான் மன்னோ. ௧௪

ஷை வேறு

எங்கணும் நிறைந்து நிற்கும் எம்பிராற் கினிய வாய
பங்கமில் வரைப்பு மண்மேற் பலஉள அவற்றுட் காசி
அங்கதிற் காஞ்சி மேலாங் காஞ்சியின் அதிகம் இல்லை
செங்கதிர் மதியஞ் செந்தீ மண்டிலம் அடியர் உள்ளம். ௧௫

---

௧௧. பத்தன் என்னும் சொல்லின் தாதுவாவது பஜ். பகுதி - தாது. சேவையினைக் கூறும் - சேவையென்னும் பொருளைத் தரும். ஈசன் பத்தன் என இயைத்து, இடையில் நான்காவதேனும் ஆறாவதேனும் விரிக்க. அவற்கு- அவ்வீசனுக்கு. சேவகன் - தொண்டுசெய்வோன். இதற்குப் பிறரெல்லாம் மயங்கி முரண்படப் பொருள்கூறியும், வழுவுதாரணங்காட்டி நிறுவியும் பிழைபாடெய்தினர். படிமம் - உருவம். பரித்த - தாங்கிய.

௧௨. ஈதலேயன்றி ஏற்றலும் நல்லோர்பாற் செயல்வேண்டு மாகலின், 'அவர் தம்பால் ஏற்பர் நல்லோர்' என்றார்.

௧௪. பொன்னோன் - இரணியன்.

௧௫. ஈற்றடியை வருஞ் செய்யுளோடு கூட்டிப் பொருள் கொள்க.

மந்தரங் கயிலை தம்மின் மேம்பட வயங்கித் தோன்றும்
அந்தமா நகரின் எங்கோன் வல்விரைந் தருள்சு ரக்கும்
மந்திர எழுத்தஞ் சோதிப் பச்சிலை மலர்வ தேனும்
சிந்தைகூர் அன்பிற் சாத்தித் தொழுவதே சிவனுக் கின்பம். கசு

கண்டிகை நீறு மெய்யிற் கவின்றிட இவ்வா றங்கண்
அண்டனைத் தொழுது மெய்ப்பே றடைகெனுங் குரவன் பாத
புண்டரீ கங்கள் போற்றி எழுந்தனன் பொறிவண் டூதுந்
தண்டலைக் காஞ்சி நோக்கி நடந்தனன் தறுக ணாளன். கஎ

தன்னுடன் பிறந்த கேண்மைத் தானவன் இரணி யாக்கன்
அன்னவன் தனையன் அந்த காசுரன் பிரக லாதன்
முன்னுறு புதல்வர் அன்னோர் வழிவரும் உரியர் தேசின்
மின்னுமா வலியே வாணன் விரோசனன் முதலி யோரும். கஅ

பற்றுகா யாதி* யாதி மனைவியர் பலரும் ஏனைச்
சுற்றமும் ஒருங்கு காஞ்சித் தென்னகர் எய்தித் தாந்தாம்
பெற்றிடும் பெயரான் முக்கட் பிரான்குறி நிறுவிப் போற்றக்
கொற்றமார் முப்பு ராரி கோட்டத்தின் குணபால் எய்தி. ககூ

தன்பெயர் இலிங்கம் ஒன்று தாபித்துக் குரவன் கூறும்
அன்புடை முறைமை யாறே அருச்சனை யாற்றி உண்டி
இன்பமும் வெறுத்துப் பன்னாள் மெய்த்தவம் இயற்றும் எல்லைப்
பொன்பொதி சடிலப் புத்தேள் எதிரெழுந் தருளப் போற்றி. உ0

---

கசு. தம்மின் என்புழி இன், ஒப்புப் பொருளில்வந்த ஐந்தனுருபு.

கஎ. தண்தலை - குளிர்ச்சியான இடம், சோலை.

கஅ. வேறு நூல்களிற் கூறப்படும் இரணியன் வரலாற்றை நோக்கப் பிரகலாதன் முதலியோர் இரணியனுடன் வந்து பூசித்தல் இயலாததாகத் தோன்றினும், இப்புராணத்திற் கூறப்படும் இரணிய பிரகலாத முரண்பாடு பிரகலாதன் இளமைக் காலத்தன்றிச் சிறிது முதிர்ந்த காலத்தில் நிகழ்ந்த தெனக் கொள்ளுதல் கூடுமாகலின், அது புராணபேதம் பற்றியதெனக் கொள்க. முன்னுறு - முதலாகிய. விரோசனன் என்பது பிரகலாதனுக்குப் புதல்வனும் மாவலிக்குத் தந்தையும் ஆகிய ஒருவனுக்கும், இரணியாட்சன் குமாரனுக்கும் பெயராகச் சொல்லப்படுகிறது.

ககூ. காயாதி-இரணியன் முதல் மனைவி, யாதல் வேண்டும்* 'காயாது' எனவும் பாடம்.

மக்களின் விலங்கின் மற்றை யோனியின் மண்ணில் விண்ணில்
உக்கதிப் படைகள் தம்மின் உணங்கலின் ஈரமென்னத்
தக்கதிற் புறம்பின் உள்ளிற் பகலினில் இரவிற் சாவாப்
பொக்கமில் வரமும் மும்மைப் புவனமும் புரக்கும் பேறும். உக

எம்பிரான் அருளக் கொண்டான் இரணிய கசிபும் ஆசை
அம்பகன் முதலி யோரும் அவரவர்க் கினிய பெற்றார்
வம்பலர் மலரிட் டன்னோர் வழுத்திய தலங்க ளோடும்
உம்பர்சூழ் இரணி யேசம் உத்தமச் சிறப்பின் ஒங்கும். உஉ

ஆகத் திருவிருத்தம் - கஙoஞ.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) மேலைப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட மூன்றாவது உண்மையை விளக்கும். மற்றும் இதனுள் சிவனடியார் பெருமையும், சிவபுண்ணியம் செய்யாதாரது இழிவுங் கூறப்பட்டன. பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

அந்தணர்களே, இதுகாறும் முப்புராரீசத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, அதற்குக் கிழக்கிலுள்ள இரணியேச்சரத்தின் பெருமையைச் சொல்லுவோம்.

இரணியன் என்னும் பெயருடைய அசுரன், தனது குலகுருவாகிய சுக்கிரனை அழைத்து வணங்கி, 'யாவராலும் பெறுதற்கரிய ஐசுவரியத்தையுடைய அரசினை நான் பெறுதற்குரிய ஒரு விரதத்தைச் சொல்லவேண்டும்' என்று கேட்டனன். சுக்கிரன், 'இது சிவபூசையினாலேயே பெறுதற்குரியதாகும். பிரமன் படைப்பும், திருமால் காப்பும், திக்குப் பாலகர் அரசாட்சியும் சிவபெருமானைப் பூசித்துப் பெற்றவைகளே. யாவர்க்கும் செல்வம், ஆண்மை, புகழ், வாழ்வு, இரக்கம், கல்வி, அழகு, நல்லமனைவியர், இனிய சொல்வன்மை,

---

உக. படைகள் - ஆயுதங்கள். உணங்கல் - காய்ந்த இடம். பொக்கம் - பொய். புரக்கும் - அரசாள்கின்ற.

உஉ. ஆசை அம்பகன் - பொற்கண்ணன், இரணியாட்சன். வம்பு - வாசனை. இரணியம் - பொன். அட்சம் - கண்.

சூழ்ச்சி இவை முதலாயினவெல்லாம் சிவபூசையால் வருவனவாகும்' என்று சிவபூசையின் சிறப்பும், சிவபுண்ணியத்தில் ஈடுபடாமையால் வருங் குற்றமும் சிவனடியார் பெருமைகளும் விரித்துக் கூறினன்.

பிறகு இரணியன் யான் சிவபூசையை எந்த இடத்தில் எவ்வாறு செய்வ தென்று கேட்க, காஞ்சியே சிறந்த இடமென அதன் பெருமைகளையும் கூறி, அவ்விடத்தில் திருவைந் தெழுத்தைச் சொல்லி, மலராவது பச்சிலையாவது சாத்துதலே சிவனுக்கு விருப்பமானதாகும் என்று கூறினன். இரணியன் உடனே, தனது தம்பியாகிய இரணியாட்சன், அவன் புதல்வன் அந்தாசுரன், தன்மகன் பிரகலாதன், அவர்கள் வழித் தோன்றிய மைந்தர்கள், தனது மனைவிமார் முதலானவர்களோடும் காஞ்சியை அடைந்து, அவர்களெல்லாம் தங்கள் தங்கள் பெயரால் இலிங்கங்கள் நிறுவிப் பூசிக்க, தான் முப்புராரி கோட்டத்திற்குக் கிழக்கில், தனது பெயரினால் ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்து, மனிதராலும், மிருகங்களாலும், மற்றைய சீவராசிகளாலும், பூமியிலும், ஆகாயத்திலும், ஆயுதங்களாலும், உலர்ந்த இடத்திலும், ஈரமான இடத்திலும், வீட்டிற்கு வெளியிலும், உள்ளிலும், பகலிலும், இரவிலும் சாவாத வரத்தையும், மூன்றுலகத்தையும் ஆளுதலையும் சிவபெருமான் திருவருளால் பெற்றனன். அவன் சுற்றத்தினரும் தாம் தாம் எண்ணிய நலங்களை அடைந்தார்கள். அத்தலங்களோடு இரணியேசம் உத்தமமாக விளங்கும்.

---

## நாரசிங்கேசப் படலம்

கலி விருத்தம்

தரணி மேற்புகழ் தாங்கிய காஞ்சியின்
இரணி யேச்சர மேன்மை இயம்பினும்
அரணி லேத்த அதன்குட பாங்கரின்
முரணி னரசிங் கேசம் மொழிகுவாம். க

தக்கன் வேள்வியஞ் சாலை அவியுணப்
புக்க தேவர் புரளச் சவட்டிய

---

க. அரண் - காவல்- முரண் இல் - மாறுபாடில்லாத. முரணின் எனக் கொண்டு, 'பகைவரொடு மாறுபடுதலையுடைய' என நரசிங்கத்திற்கு அடையாக்குவாரும் உளர்.; அது பொருந்தாமை யறிக.

உ. சவட்டிய - அழித்த. ஆடகன் - இரணியன்,

முக்க ணன்அருள் பெற்றபின் மூவுல
கொக்க ஆடகன் தாட்படுத் தோங்கலால். ௨

வண்ண வண்டிமி ராமலர்க் கற்பகக்
கண்ணி விண்ணவர் யாருங் கவன்று போய்த்
தண்ண றுந்துள வோனடி தாழ்ந்தெழூஉக்
கண்ணி லாக்கன கன்செயல் கூறலும். ௩

ஐம்ப டைத்திறல் ஆண்டகை காஞ்சிபுக்
கெம்பி ரான்றன் இணையடி ஏத்துபு
வெம்பு தெவ்வினை வெல்லும் உபாயம்அவ்
வும்பர் கோன்அருள் செய்ய உணர்ந்தரோ. ௪

உந்து தன்னொரு கூற்றை உவன்பெறு
மைந்தன் மாடுற வைத்துத் தருக்குழி
எந்து நீஇனி உய்திறன் ஈங்கெனச்
சுந்த ரப்பொலந் தூணங் கிழித்தெழீஇ. ௫

கொட்கும் மானிடக் கோளரி யாகிஅவ்
வட்கி லானைக் கவான்மிசை வைத்திருள்
நட்கும் அந்தியின் வாய்தலின் நள்ளிருந்
துட்கு கூர்உகிர் கொண்டுரங் கீறியே. ௬

வன்க ணான்உயிர் வவ்வி இரத்தநீர்
என்கண் ஆகென வாய்மடுத் திம்மெனத்

---

௩. கண்ணி - மாலை. கண் - கண்ணோட்டம். கனகன் - இரணியன்.

௪. உபாயம் இவையென்பது முன்னர் அறியப்படும்.

௫. உந்து - தூண்டுகின்ற. உவன் - அவன். மைந்தன், பிரகலாதன். தருக்குழி இரணியன் செருக்குக்கொண்டு பிரகலாதனுடன் வாதிடுங்கால். எந்து - என்ன; திசைச் சொல்; அதெந்துவே என்றருளாயே' (திருவா. அருட்) என வருதல் காண்க.

௬. கொட்கும் - (கோபத்தால்) சுழலும். மானிடக் கோளரி - நரசிங்கம். வட்கிலான் - அழிதல் இல்லாதவன். கவான் - தொடை. இருள்நட்கும் - இருளானது உறவுகொள்ளுகின்ற; எனவே, கூடியும் கூடாதுமிருக்கின்ற. வாய்தல் - வாயிற்படி. நள்ளிருந்து - நடுவில் இருந்து. உட்கு - அஞ்சுதற்குரிய. உகிர் - நகம். உரம் - மார்பு.

தன்கண் எய்துந் தருக்கின் மயங்கினன்
புன்கண் மும்மைப் பொழிற்கும் விளைத்தனன். எ

பிரக லாதன் பிறங்கெழிற் செய்யவள்
சுரரும் ஏத்தித் துதிசெயும் நன்னய
உரையுங் கேட்கலன் உன்மத்தம் மேலிடின்
கரையும் மென்மொழி காதினில் ஏறுமோ. அ

உய்தி இல்லவன் சோரியின் றித்துணை
வெய்ய வாய செருக்கு விளைக்குமேல்
பையுள் சூழ்அப் பதகன் கொடுமையை
ஐய யாவர் அளவிடற் பாலரே. கூ

சரபம் வருகை

அனைய காலை அயன்முதல் விண்ணவர்
இனையும் நெஞ்சினர் அஞ்சினர் எம்பிரான்
றனைய டைந்து சரணம்என் றேத்தினர்
வினைஇ கந்துயர் மந்தர வெற்பின்மேல். க0

வாய்பு லர்ந்து நடுக்குற வந்தவர்
ஏய வார்த்தை திருச்செவி ஏற்றனன்

---

எ. வாய்மடுத்து - உண்டு. இம்மென, விரைவுக் குறிப்பு. நால்வகைத் தோற்றத்துள் ஒன்றாகாதவாறு தூணில் தோன்றியும், மனிதனும் மிருகமு மாகாமல் நரசிங்கமாகியும், மண்ணிலும் விண்ணிலும் இல்லாமல் தொடையின்மேல் வைத்தும், பகலுமாகாமல் இரவுமாகாமல் அந்திப் பொழுதிலும், வீட்டிற்கு உள்ளுமாகாமல் வெளியுமாகாமல் வாயிற்படியிலும், ஆயுதங்களால் அல்லாமல் கைவிரல் நகங்களினாலும், அந்தி நேரத்தில் நீர் தெளிப்பாராதலின், உலர்ந்ததுமின்றி ஈரமும் இன்றியுள்ள இடத்திலும், அவன் உதிரம் கீழே வீழின் அவன் போல்வார் பலர் தோன்றுவாராகலின் உதிரத்தைக் குடித்தும் இரணியனை அவன் பெற்ற வரத்தையறிந்து இத்தகைய சூட்சியால் அழித்தனர் என்க. புன்கண் - துன்பம். மும்மைப் பொழில் - மூன்று உலகம்.

அ. செய்யவள் - திருமகள். உன்மத்தம் - வெறி. கரையும் - சொல்லுகின்ற. மென்மொழி - இன்சொல். வேற்றுப்பொருள் வைப்பு.

கூ. சோரி - இரத்தம். பையுள்சூழ் - துன்பத்தைச் செய்ய எண்ணும். ஐய, இரக்கக் குறிப்பு.

க0. இனையும் - வருந்துகின்ற. நெஞ்சினர், முற்றெச்சம்.

பாய பல்கணம் ஏத்தப் பனிவரை
யாயி னொடினி தாடல்செய் ஆண்டகை. ௧௧

அஞ்ச லீர்என் றளித்தனன் சிம்புளாய்
வஞ்ச மானிட வாளரி ஆயுளைத்
துஞ்சு வித்துரி கொண்டொளி தோற்றினான்
தஞ்ச முண்டவர் தஞ்சர ணாயினான். ௧௨

கலிநிலைத் துறை

நரம டங்கலின் நாரண னுந்திருக் காஞ்சியை
விரவி நாரசிங் கேச்சர வேந்தை நிறீஇயினான்
பரவி ஏத்தினன் வெவ்வினை நீத்தருள் பற்றினான்
உரவு நீருடை அத்தலம் உத்தம மாகுமால். ௧௩

வராகேச்சர வரலாறு

வரா கேச்சரம் அன்னதன் தெற்கது மன்னுபொற்
பேரான் றன்னொடு தோன்றிய பொன்விழிப் பேரினான்
பார்தான் வௌவினன் பாதலத் தேகலும் பைந்துழாய்த்
தாரான் சூகர மாய்அவன் றன்னைச் சவட்டியே. ௧௪

முன்போற் பாரைக் கொணர்ந்து நிறீஇமதம் மூண்டுழிக்
கொன்பாய் ஏற்றவன் வேடுருக் கொண்டுயிர் உண்டொரு
வன்பார் கோடு பிடுங்கி அணிந்தபின் மற்றவன்
அன்பால் ஈசனை அர்ச்சனை செய்தருள் பெற்றதே. ௧௫

ஆகத் திருவிருத்தம் - ௧௩௧௮.

---

௧௧. ஏய - ஏவிய, கூறிய.

௧௨. அளித்தனன் - அபயம் தந்து. சிம்புள் - எண்கால் பறவை, சரபம். உரி - தோல். தஞ்சமுண்டவர் - எளிமையாக்கப்பட்டவர், தளர்ந்தோர். சரண் - புகலிடம்.

௧௩. உரவு - பரவுதலையுடைய.

௧௪. பொற்பேரான் - இரணியன். பொன்விழிப் பேரினான் - இரணியாட்சன். பார் - பூமி. வௌவினன் என்றது பாயாகச் சுருட்டிக்கொண்டு ஓடினமையை. சூகரம் - பன்றி. சவட்டி - அழித்து.

௧௫. கொன் - அச்சந்தரும். பாய் - தாவுகின்ற. ஏற்றவன் - இடபவாகனத்தை யுடையவன். கொன், பாய் என்பன ஏற்றை விசேடித்தன. வேடு - வேடன். வன்பு ஆர் - வலிமை பொருந்திய. கோடு - கொம்பு.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) கச்சபேசப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையையும், (உ) முப்புராரிகோட்டப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட மூன்றாவது உண்மையையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

புகழ் அமைந்த காஞ்சியம்பதியில் உள்ள இரணியேசத்தின் மேன்மையை இதுவரையிற் சொன்னோம்; இனி, அதற்கு மேற்கிலிருக்கும் நாரசிங்கேசத்தின் வரலாற்றைக் கூறுவோம்.

இரணியன் மேற்சொன்னவாறு சிவபிரான் திருவருள் பெற்ற பிறகு, மூவுலகத்தையும்தன் ஆணைக்குட்படுத்தியாளுதலால், தேவர்கள் வருந்தித் திருமாலிடம் முறையிட்டனர். அவர் காஞ்சியையடைந்து இறைவனை வழிபட்டு இரணியனையழிக்கும் உபாயத்தையறிந்து, தனது ஒரு அம்சத்தை அவன் மகன் பிரகலாதன்பால் வைத்து அவ்விருவரையும் மாறுபடச் செய்து, அவ்விரணியன் அகங்கரித்துப் பேசுங்கால், அவன் வரம் தடுக்காதபடி, தூணில் நரசிங்கமாகத்தோன்றி, மாலைப்பொழுதில், வாயிற்படியில் இருந்துகொண்டு, அவனைத் தமது தொடையின்மேல் வைத்து, நகத்தினால் மார்பைப் பிளந்து, உதிரத்தைக் குடித்து அவனை அழித்தனர். அவ்வுதிர வெறியால் மூன்றுலகத்தையும் வருத்தத் தலைப்பட்டனர். அப்போது இலக்குமியும் பிரகலாதனும் தேவர்களும் துதித்தும் கேட்கிலர். பின்னர் யாவரும் சிவபெருமானை வேண்டிக்கொள்ள, சிவபெருமான் சரபமாய் வந்து, நரசிங்கத்தைக் கொன்று, அதன் தோலை மேலே போர்த்துக்கொண்டு விளங்கினர். பின்னர் திருமால் மீளவுங் காஞ்சியையடைந்து, நாரசிங்கேசப் பெருமானைத் தாபித்து வழிபட்டு, பாவத்தின் நீங்கித் திருவருள் பெற்றார். அத்தலம் உத்தமமானதாகும்.

### வாராகேச்சரம்

இரணியன் தம்பி இரணியாட்சன் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதலத்தில் ஒளித்துக்கொள்ள, திருமால் வராக வடிவங்கொண்டு அவனையழித்து, பூமியை முன்போலக் கொண்டுவந்து நிறுத்தினர். அச்செருக்கால் அவர் உலகிற்குத் துன்பம் செய்தபோது, சிவபிரான் வேடுவராய் அப்பன்றியைக் கொன்று, அதன் ஒரு கொம்பை அணிந்துகொண்டனர். பிறகு அத்திருமால் பூசித்துத் திருவருள் பெற்ற வாராகேசம் அந் நாரசிங்கேசத்திற்குத் தெற்கில் இருக்கின்றது.

# அந்தகேசப் படலம்

கலித்துறை

தாரார் கொன்றையன் நாரசிங் கேச்சரந் தன்னொடு
வாரா கேச்சர மேன்மை தெரிந்து வழங்கினும்
ஏரார் கின்ற இதன்குண பாங்கர் எறும்வலிப்
போரான் ஏற்றவர் அந்தக ஈச்சரம் போற்றுவாம். க

இரணி யாக்கன் அளித்திடும் அந்தகன் என்பவன்
மரபின் எந்தையை ஆயிடை ஏத்தி வரம்பெறாஉ
முரனை அட்ட பிரான்முதல் விண்ணவர் யாரையும்
உரனில் வென்று புறக்கொடை கண்டுல காண்டனன். உ

தேவர்கள் பெண்வடிவங் கொண்டு வசித்தல்

அன்ன தானவ னுக்கழி வெய்திஅச் சத்தினல்
பொன்ன வாம்மரு மத்தவ னுதிப்புத் தேளிர்தாம்
மின்னி டைக்கு நடுக்கம் விளைத்திறு மாந்தணி
மன்னு பூண்முலை யார்வடி வத்தை எடுத்தரோ. ங

கொள்ளி வட்டம் எனச்சகம் எங்கணுங் கொட்புறீஇ
வெள்ளி யங்கயி லைக்கிரி மேவினர் முத்தலை
அள்ளி லைப்படை அங்கண னாருள் பெற்றவண்
வள்ளி மாமி கணங்களி னேடும் வதிந்தனர். ச

இன்ன வாறுபல் காலம் அகல்வுழி எம்பிரான்
மன்னு தாரு வனத்துறை மாதவர் தங்களைத்

---

க. ஆன் ஏற்றவர் - இடபவாகனத்தை யுடையவர்.

உ. முதல் இரண்டடி வழிமொழிதல். முரன் - ஓர் அசுரன். அவனை யழித்தமையால் திருமால் முராரி எனப்பட்டனர். உரன் - வலி. புறக்கொடை - முதுகு காட்டுதல்.

ங. பொன் அவாம் மருமம் - திருமகள் விரும்புகின்ற மார்பு.

ச. கொள்ளி வட்டம் - கொள்ளியைச் சுழற்றுதலால் உண்டாகும் வட்டம். சகம் - உலகம். கொட்புறீஇ - சுழன்று. அள் - கூர்மை.

ரு. கொளீஇ - கொள்ளச் செய்து. சோதித்திட என்றது உலகவழக்குப் பற்றியது. அவ்விடை -அப்பொழுது.

துன்னி மையல் கொளீஇ அவர் உண்மைசோ திக்கிடும்
அன்ன செய்கை நினைந்தவண் எய்தினன் அவ்விடை. ௫

அந்தகாசுரன் விண்ணவர் வெள்ளி அடுக்கலின்
வந்து பெண்மைய ராகி மறைந்துறை செய்திகேட்
டுந்து சீற்றம் மிகுத்தவண் எய்தி உடற்றுழி
முந்தும் அம்பிகை தன்அருள் பெற்று முகுந்தனார். ௬

எண்ணில் பெண்டிர் தமைப்படைத் தேயினர் அத்தடங்
கண்ணி னார்க்கிடை கண்டகன் ஓடின னாகமற்
றண்ண லார்உறு வோர்அமர் தாரு வனத்திடை
நண்ணி அங்கண் நடாத்திய செய்கை நவிற்றுவாம். ௭

பிட்சாடனர் திருவிளையாடல்

கொச்சகக் கலிப்பா

கழல்கறங்கப் பலிக்கலனுங் கரத்தேந்திப் பலபரிதி
மழகதிரின் வரும்பெருமான் துடிமுழக்கஞ் செவிமடுத்துக்
குழல்இசைகேட் டருகணையும் அசுணமெனக் குளிர்தூங்கிப்
பழிதபுதா பதமடவார் பலிகொண்டு மருங்கணைந்தார். ௮

நிலவலர்ந்த நகைமுகிழ்க்கும் மணிவாய்க்கும் நெடுஞ்சூலத்
தலைகிடந்த திண்தோட்கும் தடமார்பின் அழகினுக்கும்
மலைமடந்தை கரஞ்சேப்ப வருடும்இரு குறங்கினுக்கும்
கலைநடங்க வருமடவார் கண்மலர்இட் டிறைஞ்சினார். ௯

---

௬. அடுக்கல் - மலை. உடற்றுழி - போர் செய்யுங்கால். முகுந்தனார் - திருமால்.

௭. ஏயினர் - விடுத்தார். இடை - தோற்ற. கண்டகன் - அசுரன். உறுவோர் - முனிவர்.

௮. கழல் கறங்க - காலிற்கட்டிய கழல் ஒலிக்க. பலிக்கலன் - பிட்சா பாத்திரம். மழகதிர் - இளவெயில். துடி - தமருகம். குளிர் தூங்கி - மகிழ்ச்சி மிகுந்து. அசுணம் - இசையை விரும்பும் ஒருபறவை; இது அசுணமா எனப்படுதலால் விலங்காதல் வேண்டுமென்பாரும் உளர். பலி - பிச்சை.

௯. மணி - அழகு. நடங்க - சோர. கண்மலர் இட்டு இறைஞ்சினார் என்பது திறம்படக் கூறியவாறு.

கண்மலரை எம்மானார் திருமேனி கவரஅவர்
பண்மலரும் வாய்மலரும் பனிமலரும் முகமலரும்
தண்மலரும் விழிமலரும் தாள்மலரும் கைமலரும்
விண்மலரும் மின்னனைய விளங்கிழையார் எதிர்கவர்ந்தார். க0

எம்பிரான் திருமேனி உளமுழுதும் இடங்கொள்ள
நம்பியநாண் முதல்நான்குந் துச்சிலர்போற் புறம்கடப்பக்
கொம்பனையார் கள்ளுண்டு களித்தோரின் இருமருங்கும்
பம்பினார் ஆடினார் பாடினார் என்செய்வார். கக

தண்ணறுஞ்சந் தனந்தீயத் தாளவடம் நீறாகக்
கண்ணெகிழ்பூந் தொடைமூசுங் களிவண்டின் நெடுங்கருக
எண்ணரிய காமத்தீ யிடைக்குளித்தார் புரம்பொடித்த
அண்ணல்இள நகைபோலும் அடிகள்இவர் நகையென்பார். கஉ

வழுவும்உடை கரத்திடுக்கிக் கொணர்ந்தபலி இடமாட்டார்
தொழுதகையார் பனந்தாளின் அணிந்தருளத் தொடைவுந்தி
எழுமவளின் மறுகுவார் எம்பிரான் கடைக்கணிப்ப
முழுதருள்பெற் றுய்ந்தேம்என் றகம்மலர முகம்மலர்வார். கந

---

க0. மலரும் என்பன பலவற்றுள்ளும் தோன்றுகின்ற எனவும், மலர் உம் எனவும் ஏற்றவிடம் அறிந்து பொருள்கொள்க. பனி - குளிர்ச்சி.

கக. நாண் முதல் நான்கு - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்பன. துச்சிலர் - ஒதுக்குக் குடியிருப்போர். பம்பினார் - நெருங்கினார்.

கஉ. தாளம் - முத்து. கள் நெகிழ் - தேன் சிந்தும். மூசும் - மொய்க்கின்ற.

கந. திருப்பனந்தாள் என்னும் தலத்தில் இறைவனைப் பூசித்த தாடகையென்பாள், ஒருநாள் யாவும் முடித்து இறைவனுக்கு மாலை சாத்தக் கையில் எடுத்துக் கொண்டு போம்போது ஆடைநெகிழ, அதனை முழங்கையால் இடுக்கி வருந்த, இறைவன் முடி சாய்த்து ஏற்றனன் என்பது புராண வரலாறு. அக்கோயில் தாடகை யீச்சரம் எனப்படும். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்றது. அப்பொழுது சாய்ந்த இறைவன் திருவுருவம், பின் குங்குலியக் கலய நாயனாரால் நிமிர்த்தப்பட்ட தென்பதைப் பெரிய புராணத்திற் காண்க. மறுகுவர் - வருந்துவார்கள். கடைக்கணிப்ப - கடைக்கண்ணால் நோக்க.

தக்கபலி கொளவந்தீர் தனப்பிச்சை தருகின்றேம்
கைக்கொடுபோம் இதோவெனமுன் உரம்நெளிப்பார் கழிகாமம்
மிக்கயாங் களும்நீரும் வெற்றரையேம் ஆயினமால்
இக்கிடந்த துகில்நமதோ எமதோசொற் றிடும்என்பார். கச

எம்மல்குற் றும்மல்குல் இணையொக்கும் போலும்அது
செம்மலீர் உடன்சேர்த்தித் தெரிதும்என அருகணைவார்
வெம்முலைவா ரணம்எங்கள் இடைக்கிறு விளையாமே
நும்முகிர்த்தோட் டியின்அடக்கின் அறன்உண்டு நமக்கென்பார் கரு

மன்றநீர் இரந்தபலி யாமளித்தேம் மற்றியாங்கள்
ஒன்றிரந்த தளியாக்கால் இகழன்றே உமக்கென்பார்
இன்றெனினும் விடுவேமோ ஈர்ங்கணைவேள் பறந்தலைக்கண்
சென்றுபெரும் போர்விளைத்தும் வளைமின்எனத் தெழித்தெழுவார். கசு

யாங்கொணர்ந்த பலியோடும் எம்முடைய வளைஆழி
பூங்கடிஞை யுறக்கொண்டீர் புனிதரே அவைஅளித்தால்
ஆங்கிரந்த மாலார்க்கு வளைஆழி மீட்டளித்த
வீங்குநீர்க் கலிக்கச்சி விநாயகர்ஒப் பீர்என்பார். கஎ

பாம்பலதிங் கிஃதல்குல் பகடல்ல இவைகொங்கை
கோம்பியல திதுநாசி கோளரியன் றிதுமருங்குல்
ஏம்பலிக்கும் இவைதம்மைக் கோள்இழைப்ப எனவெருவிப்
போம்பரிசு நினையாதீர் புல்லுமின்என் றடிதொழுவார். கஅ

---

கச. உரம் - மார்பு. துகில் - ஆடை.

கரு. வாரணம் - யானை. உகிர் - நகம். தோட்டி - அங்குசம்.

கசு. மன்ற - நிச்சயமாக. வேள் - மன்மதன். பறந்தலை - போர்க்களம். தெழித்து - ஆரவாரித்து.

கஎ. வளை ஆழி இரண்டனுள் முன்னது வளையலும் மோதிரமும்; பின்னது சங்கும் சக்கரமும். கடிஞை - பலிப்பாத்திரம். சங்குசக்கரங்களை விநாயகர் திருமாலுக்குக் கொடுத்தமையை மேலே வலம்புரி விநாயகப் படலத்திலும், விடுவச் சேனேசப் படலத்திலும் காண்க.

கஅ. பகடு - யானை. கோம்பி - பச்சை ஓணான். கோளரி - சிங்கம். மருங்குல் - இடை. ஏம்பலித்தல் - களித்தல். கோள் - தீங்கு.

இவ்வாறு தம்பிரான் திருமேனி எழில்நோக்கிச்
செவ்வாய்மைக் கற்பிழந்தார் திறங்கண்டு வெகுண்டெழுந்த
அவ்வாழ்க்கை முனிவர்இடு சாபங்கள் அடிகள்பால்
துவ்வாமை உறநோக்கிக் கொடுவேள்வி தொடங்குதலும். ௧௯

எழுந்தமுய லகன்புலிபாம் புழைபூதம் எரிமழுவும்
தொழுந்தகையார் கைக்கொண்டு தொடங்குதிரு நடங்காணூஉ
விழுந்தயர்ந்து சோர்ந்துள்ளம் வெரீஇயினர் தமக்குமதிக்
கொழுந்தணிவார் அறிவளிப்பக் குறைதீரத் தொழுதெழுந்தார். ௨0

சென்னிமிசைக் கரங்கூப்பித் தெய்வசிகா மணிபோற்றி
இன்னருளால் எமைப்புரக்க எழுந்தருளுஞ் செயல்போற்றி
பொன்னிதழித் தொடையாய்எம் பிழைஅனைத்தும் பொறுத்தருளிப்
பன்னரிய முத்திநிலைப் பரபோகம் அருள்என்றார். ௨௧

அவ்வண்ணந் தொழுதிரந்த அருள்முனிவர்க் கருள்கூர்ந்து
செவ்வண்ணத் திருமேனிச் சிவபிரான் இதுகூறும்
இவ்வண்ணம் வேண்டுதிரேல் எழிற்காஞ்சி நகர்வயின்போய்
மெய்வண்ண நாற்குலத்தும் தோன்றிஅவண் மேவுதிரால். ௨௨

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பற்றறத் துறந்தோர் பற்றுட் பட்டவ ரேனும் ஞானம்
பெற்றவர் மடவ ரேனும் பெரும்பன்றி கழுதை ஞாளி
புற்றரவப் புல்லுப் பூடு புழுமர மேனுங் காஞ்சி
நற்றலத் திறுதி கூடின் நம்அடி கலப்ப துண்மை. ௨௩

தேவதாருவன முனிவர் காஞ்சியிற் பிறத்தல்

ஆதலின் அங்கண் இல்லாற் றெழுகிவீ டடைமின் என்னக்
காதலின் வணங்கிப் போற்றிக் கடும்பொடும் பிருகு வாதி

---

௧௯. துவ்வாமை உற - அனுபவிக்கப்படாமையை அடைய. கொடு வேள்வி - ஆபிசார யாகம்.

௨0. முயலகன் - ஒரு பூதன். உழை - மான். எரி - தீ. இதன் விரிவைக் கந்தபுராணம் ததீசி யுத்தரப்படலத்தில் காண்க.

௨௧. தெய்வசிகாமணி - எல்லாத் தெய்வங்களுக்கும் சிரோரத்தினம் போன்று உயர்ந்தவர்.

௨௩. மடவர் - அஞ்ஞானிகள். ஞாளி - நாய்.

ஏதமில் காற்பத் தெண்ணா யிரவருங் காஞ்சி நண்ணிக்
கோதரு மரபின் ஆன்ற நால்வகைக் குலத்துந் தோன்றி. உச

மெல்லிதழ் நறுமென் போதால் விதியுளி வெவ்வே றன்பின்
அல்லுறழ் மிடற்றுப் புத்தேள் அருட்குறி அருச்சித் தேத்தி
நல்லன வரங்கள் பெற்று நாயகன் அருளால் அங்கண்
இல்லற நெறியின் மன்னி வாழ்ந்தனர் இனைய நீரால். உரு

எல்லைதீர் காஞ்சி யுள்ளார் யாவரும் முனிவர் அங்கண்
கல்லெலாம் இலிங்கம் சீதப் புனலெலாங் கங்கை சொல்லுஞ்
சொல்லெலாம் மனுக்கள் கைகால் தொழிலெலாம் விடையோன் ஏவல்
செல்லலாந் தகைத்தன் றம்ம தென்திசைக் கிழவற் கவ்வூர். உசு

அந்தகாசுரன் முத்தியடைதல்

அருந்தவக் கிழவர் தங்கள் செயல்அது வாக இப்பால்
பெருந்தகை கயிலை நண்ணிப் பிராட்டியோ டமர்ந்தான் அங்கண்
திருந்திழை மகளிர் கோலங் கொண்டுறை திருமா லாதி
இருந்திறற் சுரரும் போற்றி மருங்குற இருக்கும் எல்வை. உஎ

தனைப்புறங் கண்ட மின்னோர் தமைப்பற்றி வருதும் என்னும்
மனத்தருக் குப்ப மீட்டும் அந்தகன் வருதல் காணாஉப்
புனத்துழாய்ப் புத்தேள் முன்னர்ப் போற்றிவிண் ணப்பஞ் செய்ய
வினைத்தொடக் கறுக்கும் எங்கோன் வயிரவன் றனைவி டுத்தான். உஅ

வயிரவன் படையோன் முன்னும் வானவர்க் கிடுக்கண் செய்வான்
வயிரவன் துடியன் சேனை வலத்தவ னாகிப் போந்த

உச. இல்லாறு - இல்லறநெறி. கடும்பு - சுற்றம்.

உரு. அல் உறழ் - இருளை யொத்த.

உசு. சீதம் - குளிர்ச்சி. மனுக்கள் - மந்திரங்கள். தென்திசைக் கிழவன் - இயமன்.

உஎ. பெருந்தகை - சிவபிரான். எல்வை - பொழுது.

உஅ. உய்ப்ப - செலுத்த. புனம் - கொல்லை.

உகூ. சொற்பின் வருநிலை. வயிரவாள் - வச்சிராயுதம். வயிரவன் துடியன் - ஊதுகொம்பினையும், வலிய உடுக்கைப் பறையையும் உடையனாய். வயிரம் - நெடுநாள் கொண்டுள்ள கோபம்.

வயிரவன் மனத்தான் றன்னைப் பொருதுவண் சூலத் தேந்தி
வயிரவன் களிப்பு மிக்கு வாகையின் நடனஞ் செய்தான். ௨௯

அந்தகற் கருளால் உண்மை அறிவுவந் துதிப்ப அன்னோன்
கொந்துமுத் தலைச்சூ லத்திற் சோப்புண்டு கிடந்த வாறே
கந்தமென் மலர்த்தாள் போற்றித் துதித்தலுங் காரிப் புத்தேள்
மைந்தயாம் மகிழ்ந்தாம் வேட்ட வரம்இனிப் புகறி என்ன. ௩0

தானவன் முத்தி ஒன்றே தந்தருள் என்றான் அற்றேல்
கோனருள் பெற்றுக் காஞ்சி குறுகுவாம் என்று நண்ணி
ஆனுடை ஊர்தி அண்ணல் அருளினால் தனது காப்பாம்
மாநகர் எய்திச் சூல வைத்தலைக் கிடந்தான் றன்னை. ௩௧

தெறும்புரம் எரித்தார் கம்பம் திகழ்சிவ கங்கைத் தீர்த்த
நறும்புனல் மூழ்கு வித்துத் திருவருள் நல்கிப் பாசக்
குறும்பறுத் தளித்தான் தண்டக் குரிசில்அந் தகனும் தன்பேர்
உறும்பழ இலிங்கத் துள்ளாற் கரந்தனன் ஒருமை பெற்றான். ௩௨

ஆகத் திருவிருத்தம் - ௧௩௫0.

## படல உண்மை

இப்படலத்திற் கூறப்பட்ட வரலாறுகள். (௧) முப்புராரி கோட்டப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையையும், (௨) திருநெறிக் காரைக்காட்டுப் படல உண்மையிற் கூறப்பட்ட மூன்றாவது உண்மையையும், (௩.) 'இறைவன் உண்மை கொள்ளாது செய்வோர் நற்செயல்களும் பிழைபட் டொழியும்' என்னும் உண்மையையும் விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

## உரை நடை

கொன்றை மாலையைத் தரித்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள நாரசிங்கேசம் வாராகேசம் என்பவற்றின் மேன்மையை எடுத்துச் சொன்னோம்; இனி, வாராகேசத்திற்குக் கிழக்கிலுள்ள அந்தகேச்சரத்தைத் துதிப்போம்.

௩0. கொந்து - குத்திக்கோத்த. காரி - வயிரவர்.

௩௧. கோன் - சிவபிரான். வைத்தலை - கூர்மையான முனை.

௩௨. தெறும் - வருத்துகின்ற. குறும்பு - தீமை. தண்டக் குரிசில் - வயிரவர்.

இரணியேசப் படலத்திற் கூறியவாறு இரணியாட்சன் மகன் அந்தகாசுரன் என்பவன் இறைவழிபாட்டினுல் வரம் பெற்றுத் திருமால் முதலிய தேவர்களைப் புறங்கண்டு உலகத்தை ஆண்டுவந்தான். அத்தேவர்கள் அவனுக்குப் பயந்து பெண் வடிவங்கொண்டு, கைலையில் இறைவியின் கணங்களோடு வாழ்ந்திருந்தனர். அதுகாலை சிவபெருமான் தாருகாவனத்து முனிவர்களைச் சோதிக்கச் சென்றனர். அந்தகாசுரன் இதையறிந்து கைலையில் போருக்குவர, திருமால் அம்பிகையின் திருவருள் பெற்று, அனேக பெண்களையுண்டாக்கி யனுப்ப, அந்தகாசுரன் அவர்களுக்குத் தோற்று ஓடினன்.

இஃது இவ்வாறாக, தாருகாவனத்துச் சென்ற இறைவனுர் அழகு மிக்க பிட்சாடன கோலங்கொண்டு அம்முனிவர் பத்தினிகள்பால் பிட்சைக்குச் செல்ல, அம்மாதர்கள் பிட்சாடனரது அழகைக் கண்டு காதல் கொண்டு கற்பினை இழந்தனர். அம்முனிவர்கள், தமது மனைவிமார் கற்பினையழித்த இறைவனைக் கொல்லவேண்டுமென்று ஆபிசார யாகம் செய்து, அதில் உண்டாகிய முயலகன், புலி, பாம்பு, மான், பூதம், மழு, முடிவில் யாகத் தீ இவைகளை ஏவினர். சிவபிரான் அவற்றின் வலிமை அடக்கி, அவைகளை எல்லாம் கைக்கொண்டு நடனம் செய்தனர். அதுகண்டு அஞ்சிய அம்முனிவர்களுக்கு இறைவன் ஞானத்தையளிக்க, அவர்கள் வீழ்ந்து வணங்கித் துதித்து, 'முத்தியளிக்கவேண்டும்' என்று வேண்டினர். இறைவனுர், 'புல் பூடு முதல் எத்தகைய தாழ்ந்த உயிரும் காஞ்சியில் இறந்தால் முத்தியையடையும், ஆதலால், நீங்கள் அந்நகரத்திற் சென்று பிறந்து இல்லறம் நடாத்தி முத்தியடைக' என்று அருளிச் செய்தனர். அவ்வாறே பிருகு முதலிய நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் பிறந்து, இல்லறநெறியில் நின்று, தனித் தனி சிவபூசை செய்து, நல்ல வரங்களைப் பெற்று வாழ்ந்தனர். இங்ஙனம் அம்முனிவர்கள் அவண் தோன்றிச் சிவபூசை செய்தமையால், காஞ்சியிலுள்ளார் யாவரும் முனிவர்களே; அங்குள்ள கற்களெல்லாம் இலிங்கமே; நீரெல்லாம் கங்கையே; சொல்லுகின்ற சொற்களெல்லாம் மந்திரங்களே; செய்யும் தொழில்களெல்லாம் இறைவன் திருப்பணியே; ஆகையால், அந்நகரம் இயமனுக்கு நுழைதற் குரியதன்று.

முனிவர்கள் செயல் இதுவாக, பெருமான் திருக்கைலையை யடைந்த பிறகு, அந்தகாசுரன் தன்னைத் தோற்கடித்த பெண்களைப் பிடித்து வருதல் வேண்டும் என்று மீண்டும் அங்குவர, அதையறிந்து வேண்டிய தேவர்கள் வேண்டுகோளால் சிவபெருமான் வயிரவ மூர்த்தியை அனுப்பினர். அவர் சென்று அவனைச் சூலத்தில் கோத்து நடனம் செய்தனர். அந்தகாசுரன் அறிவு பெற்றவனுய், சூலத்தின் மேலிருந்தே துதித்தனன். வயிரவமூர்த்தி மகிழ்ந்து,

'உனக்கு வேண்டும் வரத்தைக் கேள்' என்று சொல்ல, அந்தகாசுரன், 'முத்தி ஒன்றே வேண்டும்' என்று வேண்டினன். வயிரவர் சிவபெருமானது திருவருள் பெற்றுக் காஞ்சியை யடைந்து, சூலத்திற் கிடக்கும் அந்தகாசுரனைச் சிவகங்கையில் முழுகுவித்து, திருவருளையளித்துப் பாசத்தை நீக்கினர். அந்தகாசுரன் முன்பு தான் வழிபட்ட இலிங்கத்தில் மறைந்து ஒன்றாயினன்.

---

# வாணேசப் படலம்

கலி விருத்தம்

அறம்பயில் காஞ்சியின் அந்த கேச்சரத்
திறஞ்சிறி தறிந்தவா செப்பி னும்இனிப்
பிறங்குசீர் அத்தளிக் குறைதி பேதுறாப்
பறம்புவில் உழவர்வா ணேசம் பன்னுவாம். க

வாணன் வரம்பெறல்

எறுழுடை வாணன்என் றியம்பு தானவன்
றெறுவினைக் காஞ்சியின் அருட்சி வக்குறி
நிறுவினன் அருச்சனை நிரப்பி மாதவம்
உறுவரின் உஞற்றினன் உலப்பில் காலமே. உ

அன்பினுக் கெளிவரும் அழகன் ஆங்கவன்
முன்புறத் திருநடம் முயலக் கண்டனன்
என்புநெக் குருகநின் றேத்தி னன்நந்தி
தன்பெருங் கணத்தொடு முழவு தாக்கினன். ங

குடமுழ விருகரங் குலுங்கத் தாக்குதோ
றடர்பெருங் கருணைகூர்ந் தடிகள் ஆயிரந்
தடநெடுங் கரம்பெற நல்கித் தானவ
விடலைநீ வேட்டது விளம்பு கென்றலும். ச

---

க. பேதுறா - வருந்தாத. பறம்பு - மலை. வில்லுழவர் - வீரர்.

உ. எறுழ் - வலி. உறுவரின் - முனிவர்கள் போல. உஞற்றினன் - செய்தான். உலப்பில் காலம் - எண்ணிறந்த காலம்.

ங. முழவு என்றது, குடமுழாவை.

ச. விடலை - ஆணிற் சிறந்தோன்.

ஆயிர முளரிநீண் டலர்ந்த நீனிற
மாயிருங் குன்றுறழ் வாணன் தாழ்ந்தெழூஉக்
தீயழற் புரிசையும் திறலும் ஆக்கமும்
பாயமூ வுலகமும் பரிக்குங் கொற்றமும். ௫

ஓவரு நிலைமையும் உன்ன டித்துணை
மேவரு பத்தியும் வேண்டி னேன்ஒரு
மாவடி முளைத்தெழு வள்ள லேஎனக்
காவணி உடுத்தொளிர் கம்ப வாணனும். ௬

அனையவை முழுவதும் அளித்து நீங்கினன்
புனைபுகழ் அசுரர்கோன் புவனம் யாவையும்
தனதடிப் படுத்தினன் தருக்கி வாழுநாள்
முனைவனைத் தொழுதெழக் கயிலை முன்னினன். ௭

நம்மைஆ ளுடையவன் நடன வேலையிற்
செம்மல்ஆ யிரமணிக் கடகச் செங்கையால்
தொம்மெனக் குடமுழா எழுப்பச் சூர்த்தகண்
கொம்மைவெள் விடையினன் கருணை கூர்ந்தரோ. ௮

எவ்வரம் விழைந்தனை யெனினும் நல்குதும்
அவ்வரம் புகல்என அசுரன் கூறுவான்
செவ்வன்நின் திருவடிச் சேவை நித்தலுஞ்
செய்வது விழைந்துளேன் கருணை செய்துநீ. ௯

பீட்டுயர் முருகவேள் வரைப்பி ராட்டிஓர்
கோட்டிளங் களிற்றொடு கோட்க ணங்களின்

---

௫. இல்பொருளுவமை. தீ அழல் - பிறவினை வினைத்தொகை. புரிசை - மதில். திறல் - வலி. ஆக்கம் - செல்வம். பாய - பரந்த. பரிக்கும் - தாங்குகின்ற. கொற்றம் - வெற்றி.

௭. முன்னினன் - அடைந்தான்.

௮. செம்மல் - தலைமை வாய்ந்த. தொம்மென, ஒலிக் குறிப்பு. சூர்த்த - அச்சந்தரும். கொம்மை - இளமை.

௧௦. பீட்டு உயர் - பெருமையோடு உயர்ந்த. கோள் - வலி. ஈட்டம் - கூட்டம்,

ஈட்டமோ டெய்திஎன் இருக்கை வாய்தலின்
மாட்டிருந் தெனக்கருள் எனவ ணங்கினான். க0

எண்ணிய எண்ணியாங் களிக்கும் எந்தைஅவ்
வண்ணமே ஆயிடை மருவி வைகினான்
கண்ணுறும் அசுரனுங் காலந் தோறும்அங்
கண்ணலை அடிதொழு தன்பின் வைகுநாள். கக

வாசவன் நெடியவன் மற்றை யாரையும்
பூசலிற் புறங்கொடுத் திரியப் போக்கினான்
காசணி மிடறுடைக் கடவுள் முன்னுறீஇ
ஏசறு செருக்கினால் இதுவி ளம்புவான். கஉ

என்னொடு போரெதிர்ந் திரியல் போயினார்
என்னரும் இனிமற்றென் புயக்கண் டூதியை
என்னுடைப் பிரானிடைத் தீர்ப்ப எய்தினேன்
என்னைநின் திருவுளம் இயம்பு வாயென. கங

வெருவலன் எதிர்நின்று விளம்பக் கேட்டலும்
திருவடி விரல்உகிர் விழிசி ரிப்பினான்
மருவலர்க் கடந்தருள் மதுகை எம்பிரான்
குருநிலா நகைமுகிழ்த் திதனைக் கூறுமால். கச

---

கக கண்ணுறும் - கருதிய. இங்ஙனம் சென்றமை கருணையாலென்பார், 'எண்ணிய எண்ணியாங் களிக்கும் எந்தை' என்றார்.

கஉ. வாசவன் - இந்திரன். நெடியவன் - திருமால். பூசல் - போர். இரிய - ஓட. காசு அணி மிடறு. நீலமணிபோலும் அழகிய கண்டம். ஏசு - இகழ்தற்குரிய. அறு - தான் அழிதற்கேதுவாகிய. ஏசு செருக்கு, அறு செருக்கு எனத் தனித்தனி முடிக்க. ஏனைய எல்லாரையும் வென்றதனால் வந்த வெற்றிச் செருக்காதலின் ஏசறு செருக்கு எனப்பட்டதெனலுமாம்.

கங. இரியல் போயினார் - தோற்றோடினார்கள். என்னரும் - எப்படிப் பட்டவரும். கண்டூதி - தினவு.

கச. வெருவலன் - அஞ்சாதவனாய். உகிர் - நகம். மருவலர் - பகைவர். மதுகை - வலிமை. குரு - நிறம். எம்பிரானுக்குக் கூறிய அடை கருத்துடை அடை.

முதுதவப் பிருகுவின் சாப மொய்ம்பினால்
எதுகுலத் துதித்தெனக் கினிய னாகிய
புதுமலர்த் துளவன்நின் புயக்கண் டுதிசையக்
கதுமெனப் போக்குவான் வருவன் காணென. ௧௫

தற்றெரு ழுவான்றனைத் தான்செ குப்பது
நற்றிற மன்றென நாடி இவ்வணம்
சொற்றனன் திருவுளஞ் சுளித்தி யாவையும்
அற்றமில் அவன்அவள் அதுகொண் டாட்டுவான். ௧௬

இருள்குடி யிருந்தபுன் மனத்தின் ஈங்கிவன்
முரணினை யடக்கவே போலும் முந்தைநாள்
செருவகத் தெம்மினுந் திறல்கொள் வாயென
வரம்அரிக் கெம்பிரான் வழங்குஞ் சூழ்ச்சியே. ௧௭

நம்பன்ஈ துரைத்தலும் நக்குக் கையெறிந்
தெம்பிரான் முப்பதாம் முறையின் என்னொடேற்

௧௫. எது குலம் - ஆயர் குலம். கதுமென, விரைவுக் குறிப்பு. கதுமென வருவன் என்க. போக்குவான், வானீற்று வினையெச்சம்.

௧௬. யாவையும் - எல்லா உயிர்களையும். அற்றம்இல் - சோர்வு இல்லாத. அவன் அவள் அது கொண்டு - இம் முக்கூற்று உலகத்தைக் கொண்டு; உயிர்கள் வினையை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் காரணமாய் இருப்பது உடல் முதலிய உலகமே ஆதலால் இவ்வாறு கூறினர்.

௧௭. முரண் - வலிமை. திறல் - வெற்றி. அரி - திருமால். ஒரு காலத்தில் திருமால் மைநாக மலையில் சிவபெருமானை நோக்கித் தவம் புரிய, சிவபெருமான் காட்சியளித்து, யாது வேண்டுமென்று கேட்க, திருமால், அசுரரும், இராக்கதரும் தேவரீரது திருவருளைப் பெற்று, மனிதரையும் தேவரையும் வருத்துகின்றார்கள்; அவர்களைத் தேவரீர் கொல்லீர்; ஆகையால், அடியேன் பல உருவங்கொண்டு அவர்களை அழிக்கும் வன்மையை அளிக்க வேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான், 'அங்ஙனமே யளித்தோம் ஒருகால் எம்மிடத்திலும் வெற்றி பெறுவாய்' என்று அருளிச் செய்து நீங்கினர் என்று, கண்ணபிரான் தருமனுக்குக் கூறியதாகப் பாரதம் சாந்தி பர்வத்தில் கூறப்பட்டது.

௧௮. நக்கு - நகைத்து. அம்பகம் - கண். முளரி - தாமரை. முளரி அம்பகன் என மாறுக.

றம்பரார் கணத்தொடும் ஓடி உய்ந்துளான்
அம்பக முளரியான் அமருக் காற்றலான். ௧௯

அவனை ஓர் ஆண்டகை மீளி யாகவைத்
தெவன் இது கிளந்தனை எந்தை நீயெனக்
கவர்மனக் கொடுந்தொழில் தறுகண் காய்சினத்
தவலுடை ஊழினன் இகழ்ந்து சாற்றலும். ௧௯

அவன் அமர்க் கிடைந்தவன் றனைக்கொண் டேஅவன்
கவர்மதம் அடக்கிய நினைந்த கண்ணுதற்
சிவபிரான் குறுநகை முகிழ்த்துச் செப்புவான்
தவலரும் ஆற்றலோய் சாற்றக் கேள்மதி. ௨௦

நின்னமர்க் குடைந்தபின் நினைஅ டக்குவான்
துன்னுசீர் உபமனி யனுக்குத் தொண்டுபூண்
டென்னருட் குரியனாய் எறும்ப டைத்தனன்
அன்னவன் முன்னவ னாக எண்ணலை. ௨௧

என்னநாள் அவன்வரும் என்றி யேல்ஒரு
நின்மகட் கோர்பழி நிகழ நின்நகர்
நன்னெடுங் கொடியுள்ஒன் றொடியும் நாள்வரும்
என்னலும் அசுரர்கோன் இருக்கை எய்தினான். ௨௨

உஷையின் களவொழுக்கம்

அங்கொரு நாள்அவன் பயந்த ஆயிழை
கங்குலிற் கனவினிற் கண்ணன் சேய்பெறும்
பொங்கெழில் அனுருத்தன் புல்லப் புல்லினாள்
வெங்களிப் பெய்தினள் விழிப்பக் கண்டிலாள். ௨௩

---

௧௯. ஆண்தகை - ஆண்தன்மை. மீளி - வீரன். கிளந்தனை - சொன்னாய். தவலுடை ஊழ் - கெடுதலையுடைய ஊழ்.

௨௦. இடைந்தவன் - தோற்றவன். கவர் - கைக்கொண்ட. அடக்கிய - அடக்க. கண்ணுதல் - கண்ணமைந்த நெற்றியினை யுடைய. தவலரும் - கெடாத.

௨௧. முன்னவன் - முன்னே இருந்தவன்.

௨௨. என்ன, வினாத் திரிபு.

௨௩. வாணன் மகள் பெயர் - உஷை; உஷாங்கனை என்பர். அநிருத்தன் தந்தை பிரத்யும்நன். வெம்மை - விருப்பம்.

கையெறிந் தழுதுகண் கலுழ்ந்து சோர்ந்தனள்
மெய்யணி சிதைந்துமெய் வெறுவி தாதல்கண்
டைதெனத் தன்மலர் அனங்கன் சூட்டினன்
தையல்தன் மருகியாச் சார்வ தோர்ந்தென. ௨௪

களங்கனிக் கூந்தலிற் கவற்றித் தற்றெறத்
துளக்குறு பழம்பகைத் தொடர்பின் வேள்கரி
விளங்கிழை முந்துதன் வீறு காட்டலால்
இளங்கொடி முதல்அரிந் தென்னச் சாம்பினள். ௨௫

பழிவரும் என்றசொற் பழுது றுவகை
உழைவிழிக் கிறந்துபா டொழிப்ப வல்விரைந்
தெழுபவன் போல்இருள் கிழித்து வெய்யவன்
சுழிபுனற் கருங்கடல் முகட்டுத் தோன்றினன். ௨௬

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அத்திறங் கேட்ட தோழி ஆய்ந்துருப் படத்தில் தீட்டி
இத்தனிக் குமர னேயோ என்றுள மகிழ்ச்சி நோக்கித்
தத்துநீர்த் துவரை நண்ணித் தவிசொடுந் துயில்கின் றானைச்
சித்திர மெனக்கொண் டெய்தித் திருந்திழை முன்னர் உய்த்தாள்.

கண்டனள் அசுரன் ஈன்ற கனங்குழை அமிழ்தம் அள்ளி
உண்டனள் என்ன ஓகை துளும்பினள் உவனைப் புல்லிக்

௨௪. ஐது - அழகிது. அனங்கன் - மன்மதன். தற்குறிப்பேற்றம்.

௨௫. களங்கனிக் கூந்தலின் - களாப்பழம் போலும் கரிய கூந்தலினால். கவற்றி - வருத்தி. தன்தெற - தன்னை யழிக்க. துளங்குறும் - மனந்தளர்ந்த. வேள்கரி - மன்மதனது யானையாகிய இருள். முந்து - முன்னே. வீறு - பெருமிதம். இளங்கொடி முதல் அரிந்தென்ன - இளமையான கொடியை வேரிலே அரிந்தாற் போல. சாம்பினள் - வாடினள்.

௨௬ உழை விழி - மான்போன்ற விழியினையுடையாள். இறந்து பாடு - இறந்துபடுதல். வெய்யவன் - சூரியன். தற்குறிப்பேற்றம்.

௨எ. தோழி சித்திரரேகை யென்ப. ஆய்ந்து என்றது, பல அரசிளங் குமரர் உருவங்களை எழுதிக் காட்டினமையை. துவரை - துவாரகை.

௨அ. வனப்பு - அழகு. இருவர்க்கும் விளைந்தமை தோன்ற, 'விளைந்த' எனப் பன்மையாற் கூறினர்.

கொண்டனள் காளை மேனி வனப்பெலாங் குறித்து நோக்கி
விண்டனள் கவலை அன்னான் விழித்தனன் விளைந்த காமம். ௨௮

இளமுலை வருடி மோந்து முத்தமிட் டிதழ்த்தேன் மாந்தி
விளரிவண் டிமிருந் தாரான் மேகலை நெகிழ்ந்து நீவித்
தளைவிடுத் தகல யாணர் அல்குலந் தடத்துள் மூழ்கி
விளைபெருங் கலவிப் போக வெள்ளத்தின் அழுந்தி னான். ௨௯

துணைவிழி சேப்பச் செவ்வாய் துடிப்பவேர் வரும்பப் பூக
மணிமிட றொலிப்ப ஆர்ப்ப வால்வளை தடந்தோள் வெறபிற்
பணைமுலைக் களிநல் யானை பாய்ந்துபாய்ந் துழக்க மெல்கும்
அணைமிசைக் கலவிப் பூசல் மடந்தையும் ஆடினாளே. ௩0

புணர்ச்சியின் மருங்கு நிற்றல் புரையென விலகும் மேலோர்
குணத்தையுற் றுடையும் நாணும் புறஞ்செலத் தூர்த்தர் மான
வணர்க்குழல் கட்டு விட்டு மருங்கெலாங் கொட்ப நோக்கி
இணைச்சிலம் பார்ப்பத் தண்டா தின்னலம் நுகர்ந்து வாழ்நாள். ௩௧

தளிரியல் நிறம்வே றாகித் தையலாள் கருப்பம் எய்த
வளமனை காப்போர் நோக்கி வாணனுக் குணர்த்த அன்னான்
இளவலை அரிதிற் பற்றி இருஞ்சிறைப் படுத்தான் காணூட
வளமரு மயிலின் தேம்பிப் பெண்கொடி அரற்றி வீழ்ந்தாள். ௩௨

கண்ணன் போருக்கெழுதல்

வீழ்ந்தயர் பொலங்கொ டிக்குத் துணையென விசும்பு நக்க
வீழ்ந்துயர் கொடியும் அந்நாள் வெய்யகால் உதைப்ப இற்று

---

௨௯. விளரி - ஓர் பண். இமிரும் - ஒலிக்கின்ற. வண்டு விளரி இமிரும் என்க. மேகலை - ஆடை மீது இடையில் அணியும் மணிக்கோவையாலாயதோர் அணிகலம். நீவித்தளை - ஆடையாகிய கட்டு. யாணர் - அழகு.

௩0. சேப்ப - சிவக்க. பூகம் - கமுகை யொத்த. வால்வளை ஆர்ப்ப எனக் கூட்டுக. இதில் போர்ச் செயலின் நிகழ்ச்சி தோன்றக் கூறினமை காண்க.

௩௧. புரை - குற்றம். தூர்த்தர் - காமுகர். வணர் - வளைவு. கொட்ப - வளைய. தண்டாது - நீங்காது.

௩௨. இளவல் - இளங்குமரன், அநிருத்தன். அளமரு - சுழலுகின்ற.

௩௩. சொற்பின் வருகிலே. விசும்பு - வானம். நக்க - தடவ. வீழ்ந்து உயர் - திரண்டு உயர்ந்த. கால் - காற்று. வீணை முனிவன் - நாரதர்.

வீழ்ந்தது வாணன் கொண்ட விழுத்தவப் பேறும் ஒக்க
வீழ்ந்தது நிகழ்ந்த செய்கை விண்மா முனிவன் ஓர்ந்தான். ௩௩

சிலைத்தொழில் மாண்ட தன்சேய் சிறுவனைக் காணு தெங்கும்
இலைப்புரை* கிளைத்து வாடுந் துவாரகைக் கிறைபால் எய்திப்
புலப்படப் புகலக் கேட்டுப் பொருபடை எழுக என்று
உலப்புயத் துளவத் தாரான் ஒலிமுர சறைவித் தானல். ௩௪

வியவரின் உணர்ந்தார் சாற்றும் விசிமுர சோதை கேட்டுச்
செயிர்அறத் தொகுவ அங்கண்சேனையே அல்ல மாறுச்
சயமுடை இமையோர் தங்கள் சிதறுநல் வினைகள் தாமும்
உயர்முர சோதை கேட்டவ் வும்பர்பால் தொகுவ மாதோ. ௩௫

கடுந்தொழில் அசுரர் தம்மால் தெறப்படுங் கால தூதர்
கெடுந்தொழில் அனையார்ப் பற்றக் கிளர்ந்துவேற் றுருவு கொண்டு
கொடுந்தொழில் முற்றக் கற்று லனையகூர்ங் கோட்டு நால்வாய்
அடுந்தொழில் தறுகண் வேழம் அளப்பில பண்ணி னார்கள். ௩௬

குவைமணி மோலி விண்ணோர் மனமெலாங் குழுமி நம்மைக்
கவலுற வருத்தி னாரை வெலற்கிது காலம் என்று
அவயவங் கொண்டு வெவ்வே றணைந்தென விரைசெல் காட்சி
இவறுசீர்க் கலினப் பாய்மா எண்ணில பண்ணி னரால். ௩௭

வரைமகள் கிரீசன் ஓங்கற் குறிஞ்சிமன் மதக்கை வெற்பென்
றுரைபெறு கிழமை யோரை ஒருங்குதன் வாய்தல் வைத்த
புரையினுன் றன்மேற் சீறி வரையெலாம் புறப்பட் டாங்கு
விரைசெலற் கொடிஞ்சித் திண்தேர் பண்ணினர் கோடி மேலும். ௩௮

---

௩௪. சிலைத் தொழில் மாண்ட - வில் தொழிலால் மாட்சிமைப்பட்ட. இலைப்புரை கிளைத்து - இலைகளின் சிறு துவாரங்களையும் கிளறித் தேடி. உலம் - திரண்டகல். * 'இலைப்புணர் கிளைத்து' எனவும் பாடம்.

௩௫. வியவர் - ஏவலாளர். விசி - வார்க்கட்டு. செயிர் - குற்றம்.

௩௬. வேழம் - யானை. பண்ணுதல் - போர்க்கோலம் செய்தல்.

௩௭. மோலி - கிரீடம். இவறு - விரும்புகின்ற. கலினம் - கடிவாளம். பாய்மா - குதிரை.

௩௮. கிரீசன் - மலைமேலிருக்கின்ற இறைவன். ஓங்கல் குறிஞ்சி மன் - மலைகளையுடைய குறிஞ்சி நிலத்திற்குத் தெய்வம். அம்பிகை முதலிய நால்

தடமதில் எரியாற் கோலப் பெற்றவன் தன்னை ஏவ
விடவரம் பெறவும் வல்லும் எனத்துணிந் தனையான் ஆவி
கொடுசெலக் குறித்துப் பல்வே றுருவுகொண் டணைந்த காட்சி
வடவைநேர் சிற்றத் துப்பின் மள்ளரும் மொய்த்தார் பல்லோர். ஙகூ

பண்ணுநாற் படையின் வீக்கம் பார்த்துமண் நடுங்கா வண்ணம்
வண்ணவெண் கவிகை பிச்சங் கொடிகள்மேல் மறைப்பத் திம்பால்
வெண்ணிறப் புணரி நள்ளு மேயதன் தோற்றங் காட்டிக்
கண்ணனுந் தானை நாப்பண் கடகளி றுகைத்துச் சென்றான். ச0

கொழுநன்ஆ டமர்க்குச் செல்லக் குலமனை யகத்து வாளாக்
கெழுவுறு தகைய ஞாலக் கிழத்தியுந் திருவை குந்தப்
பழமனை இயற்கை வல்லை பார்த்தனள் மீள விண்மேல்
எழுவது கடுக்கும் சேனைச் செலவிடை எழுந்த தூளி. சக

**கன்னன் படையும் வாணன் படையும் கைகலந்நல்**

இன்னணம் அளக்கர் ஏழும் எழுந்தென பரந்த சேனை
துன்னலர் அணுகல் செல்லாச் சோணித புரத்தை முற்ற
அன்னது தெரிந்த வாணன் அழலெழ விழித்து நக்குத்
தன்னிகர் அடுபோர்ச் சேனைத் தலைவரை ஏவி னானல். ச௨

எழுந்தன படைகள் நான்கும் இபம்பின இயங்கள் எங்கும்
வழிந்தன விலாழி மண்ணும் வானமுஞ் செறியத் துன்னி
ஒழுங்கின தூளி சேய்த்திற் கண்டவர் உருமண் மாரி
பொழிந்திடும் போலும் வாணன் புரத்தென மருட்கை கொள்ள. சங

வர்க்கும் மலையோடு தொடர்பு தோன்றக் கூறியிருத்தல் காண்க. புரை - குற்றம்.

ஙகூ. தன்னை என்றது வடவையை. துப்பு - வலி.

ச0. வீக்கம் - மிகுதி. நடுவெனப் பொருள்தரும் நள்ளென்னும் உரிச் சொல் உகரச்சாரியை பெற்று நின்றது.

சக. பார்த்தனள் மீள - பார்த்துவிட்டுத் திரும்புவதற்கு.

ச௨. சோணிதபுரம் என்பது வாணாசுரன் நகரத்திற்குப் பெயர். இது அக்கினி மயமான மதிலையுடைமையால் வந்தபெயர். சோணிதம் - சிவப்பு.

சங. விலாழி - யானை குதிரைகளின் வாய் நீர். ஒழுங்கின - ஒழுங்கு பட்டன. மருட்கை - திகைப்பு. தூளி மருட்கை கொள்ள ஒழுங்கின என்க.

நன்னுயிர்க் கணவன் மேற்செஃறானையுள் ளழுங்கக் கண்கள்
பொன்னுருப் புவனி மாது புழுதியாற் புதைப்பச் சீறி
அன்னவள் மருமம் நோவ அடிபெயர்த் ததிர்த்துச் சென்று
மின்னிலைப் படைய சேனை வியனகர் வெளிக்கொண் டன்றே. ௪௪

விதிர்படை மின்னுக் காட்ட விலாழிநீர் தாரை காட்ட
அதிர்ஒலி உருமுக் காட்ட அந்தநாள் படலை மேகம்
எதிரெதிர் உடன்றா லென்ன இருபெருங் கருவிச் சேனை
கதிர்முலைச் சயமான் மெச்சக் கைகலந் தமரின் மூண்ட. ௪௫

கலித் துறை

செங்களத் துடல் கிடப்பவரு திண்டி றலரை
அங்கு நின்றெதிர் கொளப்புகுநர் ஒப்ப அழல்சால்
வெங்களத் துறு செருத்திறமை நோக்க வியல்வான்
எங்கும் மொய்த்தனர்கள் ஈர்ந்தொடைபல் மோலி இமையோர். ௪௬

கல்லி யற்பொரு களத்திருவர் அங்க மதனில்
மெல்லி யற்சய மடக்கொடி நடிப்ப மிடையும்
பல்லி யத்தொகை முழக்கென எழுப்பு படகம்
சல்லி தக்கைமுதல் எண்ணில தழங்கு வனவால். ௪௭

பொருதொ ழில்திறனில் வல்லபக வன்பு ரம்அடும்
ஒருவ னேஎனல் உணர்ந்தனர் எனச்சி வன்முடிச்
செருகு தும்பையை மிலைச்சினர் தெழித்து மிடலான்
இருதி றத்தரும் உடற்றுசமர் யாவர் மொழிவார். ௪௮

கரிகள் ஊருந ரொடுங்கரிகள் ஊரு நர்களும்
புரவி ஊருந ரொடும்புரவி ஊரு நர்களும்

---

௪௪. செல்+தானை=செஃறானை. பொன் உரு - அழகிய உருவம். புவனிமாது - பூமிதேவி. தற்குறிப் பேற்றம்.

௪௫. அந்தநாள் - கடைநாள், ஊழிக்காலம். உடன்றா லென்ன - போர் செய்தாற்போல. கருவி - கூட்டம், சயமான் - விசய லட்சுமி.

௪௬. இது தற்குறிப் பேற்றம்.

௪௭. அங்கம் - சேனை. படகம் முதலியவற்றை மேலே (பக். ௬௨௬.) காண்க.

௪௮. உணர்ந்தனரென மிலைச்சினரென்பது தற்குறிப்பேற்றம்

இரதம் ஊருநர்க ளோடிரதம் ஊருநர்களும்
மரபின் மன்னரொடு மன்னரும் எதிர்ந்து பொருவார். ௪௯

தண்ட மென்பெயர் வழிக்குதவு தான வயவே
தண்டம் ஓச்சியெறி தண்டமவை ஒன்ன லர்கள்கைத்
தண்ட மோடுபுப தண்டமும் நிலத்தின் உருளத்
தண்டம் ஆற்றுவ சமர்க்கண் இனம் என்ப துளதோ. ௫௦

ஏறு தேர்வயவர் வற்றெதிர் விடுத்த திகிரி
மாறு தேரிடை நுழைந்திடுவ வானெ ழுவரைக்
கூறு கொண்டுழை நின்றெழு குலப்ப றவைகள்
வேறு குன்றமுழை யிற்குடிபு கல்வி ழைபவே. ௫௧

கலி விருத்தம்

ஆடுபரி சாரிகை தொடங்குதொ றடங்கார்
சேடுடை முடித்தலைகள் வீழ்ந்துதமர் தேரின்
ஓடுருள் தடுப்பஒரு நீயிரும் எமைப்போல்
ஈடழிய ஏகலிர் எனத்தடைசெய் தென்ன. ௫௨

வண்டுமுரல் வாவியுறை கஞ்சமனை யாளைக்
கொண்டுதன் இருக்கைசெல் சுடர்க்கொழுநன் ஒப்பத்
திண்டிறல் அடங்கலர் சிரந்திருகி ஏந்தி
அண்டவெளி யிற்சுழல்வ சுற்றிவிடும் ஆழி. ௫௩

---

௫௦. சொற்பின் வருநிலை. யானை செல்லும் வழிக்குத் தண்ட மென்று பெயர். தானம் - மதம். வயம் - வலி. வேதண்டம் - மலை. மூன்றாமடியிலுள்ள தண்டம் இரண்டும் தண்டாயுதம். தண்டம் ஆற்றுவ - தண்டனை செய்யும். 'சமர்க்கண் இனம் எஃபதுளதோ' என்பது, 'படுகளத்தில் ஒப்பாரி என்ன' என்னும் பழமொழியைக் கூறியவாறு. வேற்றுப் பொருள் வைப்பு.

௫௧. வயவர் - வீரர். திகிரி - சக்கரம். வான்எழு வரை - வானத்தை அளாவிய மலை. விழைய - ஒப்ப.

௫௨. ஆடுபரி - தாளகதிக்கேற்ப நடிக்கின்ற குதிரைகள். சாரிகை - வட்டமாயோடல். அடங்கார் - பகைவர். சேடு - பெருமை. ஓடு உருள், வினைத்தொகை. தடுப்ப - தடுக்கும். தற்குறிப்பேற்றம்.

௫௩. கஞ்ச மனையாள் - தாமரையாகிய மனைவி. சுடர்க்கொழுநன் - சூரியனாகிய கணவன்.

மீச்செல்வய வெங்கரிகள் ஒன்றன்மிசை ஒன்றங்
கோச்சுகதை மாற்றுகதை ஒள்ளிழை மடச்செவ்
வாய்ச்சியர்கோ லாட்டநிகர் வண்மையினை நோக்கி
ஏச்சறு விசும்பின்இமை யாதவர் வியப்பார். ருச

விழித்தவெகு ளிக்கண்இடன் ஆடுதொறும் மேவார்
அழித்திமை யெனக்கருதி ஆர்ப்பர்என வெள்கி
ஒழித்துவலன் நோக்கின்அழல் சிற்றம்நனி காட்டித்
தெழித்துவிறல் சாற்றிஅமர் ஏற்பர்திதி பெற்றார். ருரு

வேறு

வெங்கட்கரி கடிந்திட விண்ணத்தெழும் அவுணர்
அங்கைப்பிடி எஃகத்துடன் ஆணைகின்றமை காணா
நங்கட்கிடர் புரிவான்இவண் நணுகுற்றனர் என்றா
உங்கட்செறி விண்ணோர்இரி வுற்றார்உளம் அஞ்சி. ருசு

தெவ்வட்டழல் படைவெய்யவர் விண்ணிற்செல உந்தும்
கௌவைக்கரி பிளிறிக்கடம் ஒழுகப்புவி வீழ்வ,

---

ருச. ஏச்சு - இகழ்ச்சி. யானைகள் ஒன்றன்மேல் ஒன்று அடிக்கும் கதாயுதங்கள் தம்மில் தாக்குதல், பெண்கள் கோலாட்டம் ஆடுதல் போலும் என்பதாம்.

ருரு. திதி பெற்றார் - அசுரர். திதி, அசுரர்களின் தாய். அசுரர்களுக்கு அழிவு நேர்ந்தமைக்கு அறிகுறியாக இடக்கண் துடிப்ப, அதனைத் தமக்கு அஞ்சி, வெகுளி நோக்கை விட்டு இமைத்துப் புறங்கொடுத்தாரெனக் கூறிப் ப[illegible]கவர் ஆரவாரிப்பாரெனக் கருதி, வலக்கண்ணில் வெகுளி தோன்ற நோக்குவர் என்பதாம். வெகுளி நோக்கை அழித்து இமைத்தலும் வீரர்க்குப் புறங்கொடுத்ததாமென்னும் பொருள் அமைத்த, "விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின் - ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள். எஎரு,) என்னும் நாயனார் மொழியை உட்கொண்டு இங்ஙனம் கூறினார்.

ருசு. விண்ணத்து என்புழி அத்து, வேண்டாவழிச் சாரியை. எஃகம் - வேல். உங்கண் - மேலிடம். இரிவுற்றனர் - நீங்கினர்.

ருஎ. தெவ் அட்டு - பகைவரை அழித்து. கௌவை - துன்பம். கடம் - மதம். யானை ஒலித்தலை பிளிறுதல் என்பது மரபு. வலனைத் தெறும் இறை - இந்திரன். எழிலி - மேகம். வீழும் - ஒக்கும்.

எவ்வப்பட வலனைத்தெறும் இறைஏவலின் எழிலி
வெவ்விற்படை மாயற்கொரு துணையாய்வரல் வீழும். ருஎ

ஒருவன்திறல் அவுணன்கத முடன்ஊக்கிய பரிமா
பெருவிண்மிசை எய்திச்சுழல் காற்பட்டுழல் பெற்றி
வருவெங்கதிர் மான்தேர்மிசை பிற்றப்பிய வாசி
தெருமந்தினங் காணுதவண் உழிதந்தெனத் திரழும். ருஅ

வேறு

துன்னுகுரு தித்தசை வழுக்கிவிழு சூரர்
வெந்நிடை மதக்களிறு குத்துவெண்மருப்பு
முன்னுற உரீஇநிமிர்வ மைந்தர்முலை பெற்ற
தென்னென அரம்பையர் மருட்கையின் இசைப்பார். ருகூ

அட்டழல் கழல்மறவர் ஆகமிசை எஃகம்
பட்டபுழை நின்றிழிவ பாய்குருதி வெள்ளம்
ஒட்டலரை யான்உயிர் குடிப்பல்என ஒல்லை
உட்டிகழ் மறக்கனல் வெளிப்படுவ தொக்கும். கூ0

கடுங்களிறு கைக்கதை சுழற்றிஎறி கால்தேர்க்
கொடிஞ்சியின் நிரைத்தகுரு மாமணிகள் உக்க
அடும்படை வலத்தினர் தெழித்தெழும் அதிர்ப்பின்
நெடுங்ககன மீன்நிரை நிலத்துகுவ மானும். கூக

நீள்கொடி மிசைத்துகில் அனைத்தினும் நெடுங்கோல்
வாளிகள் பொதிந்தவை சிதர்ந்துவியல் வானின்
மீளிகள் அதிர்ப்பின்உயர் விண்மிசைய தாருத்
தாளதிர உக்கதழை போன்றன பறப்ப. கூஉ

---

ருகூ. வெந் - முதுகு. மருட்கை - வியப்பு.

கூ0. மறவர் - வீரர். ஆகம் - மார்பு. ஒட்டலர் - பகைவர். மறக்கனல்- வீரமாகிய தீ.

கூக. எறிகால் - எறியும்போது. உக்க - உதிர்ந்தன; இது தொழில்மேல் நின்றது.

கூஉ. துகில் - சீலை. கோல்வாளிகள் - திரண்ட அம்புகள். பொதிந்து - செறிதலால். சிதர்ந்து - அறுபட்டு உதிர்ந்து. வானின் - மேகத்தைப்போல. மீளிகள் - வீரர். தாள் - அடி. உக்க - உதிர்ந்த. போன்றனவாய்ப் பறப்ப என்க. பறப்ப - பறக்கும். அம்புகள் பட்டு கொடிச்சீலைகள் அறுந்து காற்

கைப்படை இழந்தவர் எதிர்ந்தவர் கடாவும்
மெய்ப்படு பெரும்படை பறித்தெதிர் விடுப்பார்
எப்பொருளும் அற்றழியும் ஏதிலர்கள் நல்கும்
அப்பொருள் கொளேங்களெனும் மானமுடை யாரேபோல். ௬௩

வீடினர் வயப்பொருநர் வீடின இபங்கள்
மூடின நிலங்குருதி மூடின பிணங்கள்
கூடின கருங்கொடிகள் கூடின பருந்தும்
ஆடின மகிழ்ந்தலகை ஆடின கவந்தம். ௬௪

எங்கணும் நிணங்குடர் இறைச்சிகொழு மூளை
எங்கணும் முறிந்தசிலை வாள்பலகை எஃகம்
எங்கணும் இறுத்தகிடு கச்சுருள் கொடிஞ்சி
எங்கணும் முடித்தலை நிமிர்ந்தன இடங்கள். ௬௫

பிணங்களொ டயர்ந்துவிழு பெற்றியரும் வீழ்தோட்
கணங்களொடு தண்டமும் விசித்தகடி * வள்வார்க்
குணங்களொடு புல்லிய கொழுங்குடரும் அங்கேழ்
நிணங்களொடு பன்மணியும் நீக்கறிய லாகா. ௬௬

---

றில் பறத்தல், வீரர்கள் அதிர்ப்பினால் அதிர்ந்து அசைந்த தேவ தருக்களிலிருந்து உதிர்ந்த இலைகள் பறப்பனபோலும் என்பதாம்.

௬௩. கடாவும் - செலுத்திய. மெய் - உடல். அவர்கள் படையை அவர்களிடத்திலேயே திருப்பிக் கொடுத்துவிடுதல்போல விடுப்பார்கள் என்பதாம். ஏதிலர் - பகைவர்.

௬௪. பொருநர் - வீரர். இபங்கள் - யானைகள். நிலத்தைக் குருதி மூடின பிணங்கள் மூடின என்க. கொடிகள் - காக்கைகள். அலகை - பேய். கவந்தம் - உடற்குறை.

௬௫. பலகை - கேடகம். எஃகம் - வேல். கிடுகச்சுருள் - தேரின் மரச்சுற்று.

௬௬. விசித்த - வலித்துக் கட்டிய. குணங்கள் - நாணிகள். பிணங்களையும் மூர்ச்சித்து விழுந்தவர்களையும், தோள்களையும் தண்டாயுதங்களையும், வில் நாணிகளையும் குடர்களையும், நிணத்தையும் பலமணிகளையும் பிரித்தறிதல் முடியா என்பதாம். * ‘தடி’ எனவும் பாடம்.

மண்ணிடம் மெலிந்தது பிணக்குவையின் வானோன்
நண்ணிடம் மெலிந்ததுடல் விட்டுறுநர் போழ்ந்து
விண்ணிடம் மெலிந்ததவர் துன்னிமிடை வோரை
எண்ணிட மெலிந்தனர் விரும்பின் இமை யாதார். ௬எ

மிடைந்துசமர் இன்னணம் விளைத்துழி இசைத்தேன்
குடைந்ததொடை வல்லவுண வீரர்வலி குன்றி
உடைந்தனர் நடுங்கினர் ஒடுங்கினர் சிதர்ந்தார்
இடைந்தனர் பெயர்ந்தனர் இரிந்தனர்கள் எங்கும். ௬அ

கொச்சகக் கலிப்பா

கள்ளவிழும் மலர்வாவித் துவரைக்கோன் கடற்சேனை
மள்ளர்படைக் கல்லெறியான் வல்லாண்மைக் குடம்உடைய
உள்ளிருந்த ஞண்டுகளின் தனித்தனியே இரிந்தோடி
நள்ளலான் பெருஞ்சேனை நகர்நோக்கி நடந்தனவால். ௬௯

கண்ணன் கணபதி முதலியோரை வழிபடல்

போர்தாங்கும் மறவீரர் பின்முடுக்கிப் போதரலும்
தார்தாங்கி முதல்வாய்தற் கடைமன்னு தவளமதிக்
கூர்தாங்கும் ஒருகோட்டுக் குஞ்சரப்புத் தேள்காணூஉச்
சூர்தாங்கி வருபடையைத் தொலைத்துழக்கிச் சவட்டினன். எ0

கண்ணனும்மற் றினிஎன்னை செயல்என்று கடுகச்சென்
றண்ணமைந்த பாலடிசில் கனிவருக்கம் உறுசுவைய

---

௬எ. குவையின் - குவையினால். வானோன் - சூரியன். போழ்ந்து - பிளத்தலால். வீரசுவர்க்கம் புகுவோர் ஒளி வடிவாய்ச் சூரிய மண்டலத்தை ஊடறுத்துச் செல்வர் என்பது மரபு. பாரதத்தில் கன்னன் அவ்வாறு சென்றமையைப் புலப்படக் கண்டதாக வரலாறு உண்டு. துன்னி - பொருந்துதலால்.

௬அ. தேன் - வண்டு. குடைந்த - உழுகின்ற. சிதர்ந்தார் - சிதறினர்.

௬௯. படைக்கல் ஆண்மைக் குடம், உருவகம். ஞண்டுகளின் - நண்டுகள் போல. நள்ளலான் - வாணன்.

எ0. வீரர், கண்ணன் படைஞர். முடுக்கி - துரத்தி. தார் - மாலை. சூர் - கண்டார்க்கு வரும் அச்சம். சவட்டினன் - அழித்தான்.

பண்ணியங்கள் எனைப்பலவும் அமுதுசெயப் படைத்திறைஞ்ச
அண்ணல்வயப் பகட்டேந்தல் அத்தொழிலின் மகிழ்ந்திருந்தான்.

இது கண்டு மற்றிரண்டாங் கடைவைகும் இளந்தோன்றல்
எதுமைந்தன் வருகென்று சிலைவாங்கி ஏற்றெழலும்
மதுவொன்று மலர்த்துளவோன் பூசனையான் மகிழ்விப்ப
அதுகண்டு மகிழ்ந்திருந்தான் ஆறுமுகப் பண்ணவனும். ௭௨

இருவர்களும் விடையளிப்ப எழில்மூன்றாங் கடைநண்ணி
மருமலர்த்தார்க் கருங்கூந்தல் மலைமகளைக் கண்டிறைஞ்சித்
திருவருள்பெற் றினிதேகத் திகழ்நாலாங் கடைமேவும்
உருகெழுவெஞ் சினவெள்ளை றுபர்த்தபிரான் கண்டனனால். ௭௩

முந்தைநாள் மைநாக முதுநாகத் தருந்தவஞ்செய்
இந்தநா ரணற்கெம்மான் யானேவந் துடன்றாலும்
மைந்துமிகு ஞாட்பின்கண் வாகைநீ பெறுகென்னத்
தந்தவரம் பொய்யாமைப் பாதுகாத் தற்பொருட்டு. ௭௪

பிநாகநெடுஞ் சிலையேந்தி எதிர்நிற்பப் பெருந்திருமால்
அநாதியாய் அனந்தமாய் ஆனந்த மாய்ஒளியாய்
மநாதிகளுக் கெட்டாத வான்கருணைப் பரம்பொருளைத்
தநாதுவிழி களிகூரக் கண்டெய்தித் தாழ்ந்தெழுந்தான். ௭௫

நாத்தழும்பப் புகழ்பாடி நளினமலர்க் கைகூப்பிச்
சோத்தெந்தாய் எனச்சொல்லி இமையவர்க்கே அருள்சுரந்து
காத்தருளுங் கடன்உடையாய் கண்ணோடா அவுணர்குலத்
தித்தொழிலான் றனைவெல்லத் திருவருள்செய் எனக்கென்றான். ௭௬

---

௭௧. பகட்டு ஏந்தல் - யானை முகத்தையுடைய விநாயகர்.

௭௨. எது மைந்தன் - ஆயர்குலப் பிள்ளை; அண்மைவிளி.

௭௪. முதுநாகம் - பெரியமலை. மைந்து - வலி. ஞாட்பு - போர். வாகை - வெற்றி. இவ்வாறு வரந்தந்தமையை மேலே (பக். ௪௬௦.) விளக்கினும்.

௭௫. பிநாகம் - சிவபெருமானது வில்.

௭௬. சோத்து - இழிந்தார் செய்யும் அஞ்சலி. கண்ணோடா - தாட்சணியம் செய்யாத.

என்றிரந்து நனிவேண்டும் நெடியோனை எதிர்நோக்கிக்
குன்றநெடுஞ் சிலைவல்லான் குறுமூரல் காட்டிஎமை
வென்றன்றே வாணனைநீ விறல்கொள்வ தெம்மோடு
மன்றபோர்க் கெழுகென்ன மணிவண்ணன் உளம்நடுங்கி. ௭௭

என்னருளிச் செய்தவா றெவ்வுயிர்க்கும் எளியேற்கும்
மன்னவன்நீ நாயனொடு மாறிழைப்ப தெனக்கழகோ
உன்னடிக்கீழ் மெய்த்தொண்டு பூண்டுரிமைப் பணிசெய்வேன்
றன்னிடத்தில் இவ்வாறோ சாமீநின் திருவருளே. ௭௮

எந்தையடி யருச்சனையால் எதிர்ந்தாரைப் புறங்காண
மைந்துபெறும் யான்நின்னோ டமரேற்க வல்லுவனோ
பந்தமுறும் உலகனைத்தும் தொழிற்படுத்தும் நின்னெதிர்நின்
றுய்ந்தவரும் உளரேயோ உபநிடதத் தனிமுதலே. ௭௯

எண்ணிகந்த அண்டமுழு தொருநொடியில் எரிக்குதவும்
கண்ணமைந்த நுதலாய்க்குக் கடையேன்ஓர் இலக்கன்றே
வண்ணமெலாம் யாங்காண நீநகைத்த மாத்திரையே
அண்ணல்ஆர் புரமூன்றும் கூட்டோடே அழிந்தனவால். ௮௦

துரும்பொன்றிற் புத்தேளிர் தருக்கெல்லாம் தொலைவித்தாய்
கரும்பொன்று சிலையானை நுதல்விழியாற் கனற்றினாய்
சுரும்பொன்று மலர்ப்பாதப் பெருவிரலாற் சுடர்இலங்கை
இரும்பொன்று மனத்தானை இடர்உழப்பக் கண்டனையால். ௮௧

---

௭௭. விறல் - வெற்றி. மன்ற - நிச்சயமாக.

௭௮. நாயன் - தலைவன். இதற்கேற்க, எனக்கு என்றதற்கு அடிமை யாகிய எனக்கு எனவுரைக்க. சாமீ - தலைவனே.

௭௯. எந்தை என முன்னிலை படர்க்கைபோலக் கூறப்பட்டது. மைந்து - வலி. வேத முதல்வன் எனக் கூறுதலின் கருத்து இதுவென்பான், 'உபநிடதத் தனிமுதலே' என்றான். சிறந்த உபநிடதங்களாகிய சைவோப நிடதங்களில் கூறப்படும் முதல்வனே என்பான், 'தனிமுதலே' என்றான்.

௮௦. இலக்கு - குறி. அண்ணல் ஆர் - பெருமை பொருந்திய.

௮௧. தேவர்கள் செருக்கை யெல்லாம் ஒரு துரும்பில் தொலைவித்த மையை மேலே அமரேசப் படலத்தில் காண்க.

நோனாத கூற்றுவனை நோன்றாளால் உயிர்உண்டாய்
தேனாடு மலரானை நகநுதியாற் சிரங்கொய்தாய்
மீனாமை பன்றிநர வெறிமடங்கல் உலகளந்தான்
றானும்என் பிறவிகளுந் தண்டிக்கப் பட்டனவே. ௮௨

தக்கன்றன் வேள்வியைநீ தரவந்த தனிவீரன்
புக்கன்றி யழித்தநாள் என்னோடும் புக்கேளிர்
நொக்கன்று பட்டபா டெடுத்தியம்பிற் சொல்லளவின்
மிக்கன்றால் உனக்கிவையும் விளையாடற் செய்கையே. ௮௩

அற்றமுற வெகுண்டுவரும் அடற்கங்கை வீறடக்கும்
கற்றைநெடுஞ் சடையாய்மற் றெனைமுனியக் கருதினையேல்
சற்றுநீ முகம்நிமிர்த்து நோக்கின்அது சாலாதோ
வெற்றிமலர்த் திருக்கரத்துப் படைக்கலமும் வேண்டுமோ. ௮௪

வடிவாளி விடையேறு மனைவியென நினக்குறுப்பாம்
அடியேனை எதிர்ப்பதுநின் அருட்பெருமைக் கொல்லுவதோ
குடியோடும் எனையடிமை கொண்டாய்இன் றெனக்கிரங்காய்
கடியாழி விடம்அயின்ற கண்டாநின் அடிபோற்றி. ௮௫

கண்ணனும் கடவுளும் கைகலத்தல்

என்றென்று பலமுறையும் இரந்திரந்து தொழுதிறைஞ்சும்
குன்றெடுத்த குடையானுக் கெங்கோமான் இதுகூறும்

---

௮௨. நோனாத - (உயிர்கள் தம் வாழ்நாள் எல்லையைக் கடந்து வாழப்) பொறாத. நோன்றாள் - வலிய திருவடி. ஆடு, பொருந்திய என்னும் பொருட்டு. பிர்மன் சிரங்கொய்த வரலாற்றை மேலே வயிரவேசப் படலத்திலும், ஏனைய வரலாறுகளை முன்னும் பின்னும் ஆங்காங்கும் காண்க.

௮௩. புக்கு - புகுந்து. அன்றி - மாறுபட்டு. நொக்கு - நொக்கப்பட்டு, அடர்க்கப்பட்டு. நொக்குதல் என்பது அடர்த்தல் என்னும் பொருள் தருவதோர் வழக்குச் சொல். நொக்கு பகுதி. அஃது செயப்பாட்டு வினையாய் உ என்னும் வினையெச்ச விகுதியேற்று நின்றது. உகரம் திரியாமை சிறப்பு விதியாகக் கொள்க.

௮௪. அற்றம் - அழிவு. சாலாதோ - போதாதோ.

௮௫. விடையேறு - இடபம். ஒல்லுவதோ - கூடுவதோ, தகுவதோ.

௮௬. குன்றெடுத்த குடையான் - இந்திரன் வெகுண்டு ஆயர்மேற்

மன்றநீ வெருவலேநின் மனக்கவலே ஒழிகண்டாய்
அன்றுனக்கு மைநாகத் தளித்தவரம் மறந்தனேயோ. அ௬

நின்வரவு வாணனுக்கு முன்னரே நிகழ்த்தினம்யாம்
அன்னவனே இனிநீவென் றடல்வாகை புனேகிற்பாய்
மின்னிமைக்கும் மணிமார்ப விசையனொடு *புரிவெம்போர்
முன்னெமக்கு முருகவேள் விளேயாட்டிற் சிறந்ததால். அஎ

அம்முறையே கணப்பொழுது நின்னேடும் அமர்புரிகேம்
இம்முறைகண் டுலகும்பர் மகிழ்வுறுக இதுவன்றித்
தெம்மரபிற் செய்கில்லேம் அஞ்சாதி எனத்தேற்றிக்
கைம்முகத்திற் பிடித்திருந்த கார்முகத்தை வணக்கினன். அஅ

உய்ந்தேனெம் பெருமானே அருளாயென் றுரைத்துரைத்து
மந்தார மணங்கமழும் மலரடிகள் தொழுதிசைந்து
பைந்தாம நறுந்துளவப் பண்ணவனும் பகைமுருக்குஞ்
சிந்தாத விறற்சார்ங்கச் சிலேவாங்கி நாணெறிந்தான். அ௯

கலிவிருத்தத் துறை

பவள வெற்பொடு நீலவெற் பெதிர்ந்தெனப் பருஉக்கைக்
கவள மாக்களி றட்டவர் இருவருங் கடுகித்
துவள வார்சிலே வாங்கினர் நாணெறி சும்மை
திவள லுற்றமு வுலகமுஞ் செவிடுறப் பொதிந்த. ௯0

---

பொழிந்த கல்மழையைத் தடுக்கக் கோவர்த்தன மலேயைக் குடையாகத் தூக்கிக் கொண்டவன், கண்ணன்.

அஎ. விசயன் - அருச்சுனன். அருக்சுனனோடு இறைவன் வேடனுய்ப் போர் புரிந்தமையைப் பாரதத்திற்காண்க. *'விசையினொடு' எனவும் பாடம்.

அஅ. தெம்மரபு - பகைமுறை. அஞ்சாதி - பயப்படாதே. கார்முகம் - வில்.

அ௯. முருக்கும் - அழிக்கின்ற. சிந்தாத விறல் - அழியாத வெற்றி. சார்ங்கம் - திருமாலினது வில்.

௯0. யானே யுருக்கொண்ட கயாசுரன் என்பவனேத் தேவர் வேண்டு கோளால் அழித்துத் தோலேயுரித்துப் போர்த்தவர் சிவபெருமானும், மாமனுகிய கஞ்சன் அனுப்பிய குவலயா பீடமென்னும் யானேயை அழித்தவன் கண்ணனும் ஆதலால், 'களிறட்டவர் இருவரும்' என்றூர். திவளல்- மெலிதல்.

மண்டும் ஓதையின் மற்றவர் சினக்கனல் புறநீர்
கொண்ட விப்பவான் வழிதிறந் தாலெனக் குலையா
அண்டம் விண்டது புடவியும் விண்டதப் பெருநீர்
உண்டல் வேட்கையின் உணங்கிவாய் பிளந்தமை ஒப்ப. ௬௧

சிலையின் நாணொலிக் கிளர்ச்சியால் திண்புவி அதிர்வுற்
றலையும் ஊதையின் ஆழிமா னுடம்மரம் பறவை
பலவும் தத்தமுள் மோதுபு தெளிதரப் பயிற்றும்
தலைவர் எப்படி அப்படி உலகெனுந் தகுதி. ௬௨

மூள்சி னத்துடன் அடுத்துழி முதல்வன்என் றறிந்து
மீள நோக்கியாங் கெம்பிரான் சரணமுன் வீழ
நீள்பெ ருந்தடங் குனிவரிச் சிலையிடை நெடியோன்
வாளி ஒன்றுதொட் டேயினன் அருச்சனை மாண்பின். ௬௩

சத்தி சத்திமான் ஆகிய இருதிறத் தவருந்
தொத்த ழற்கணை தூண்டினர் மூண்டது பெரும்போர்
பைத்த மாநிலம் அயிர்த்தது பனிவிசும் பிறுத்தார்
சித்தர் சாரணர் இமையவர் இயக்கர்கந் திருவர்*. ௬௪

புட்டில் வீக்கிய கரத்திடைப் பொருசிலை குழையத்
தொட்டவாளிகள் இறுதிநாள் முகிலெனச் சொரிவார்
அட்ட திக்கையும் அடைப்பர்கள் கணத்தவை மாற்றி
முட்ட வெங்கணை மீளவும் முடுக்குவர் தொலைப்பார். ௬௫

---

௬௧. குலையா - நிலைகுலைந்து. விண்டது - பிளந்தது. 'அண்டம் வழி திறந்தாலெனக் குலையா விண்டது' எனவும், 'புடவியும் வாய் பிளந்தமை ஒப்ப விண்டது' எனவும் கூட்டுக. தற்குறிப் பேற்றம்.

௬௨. ஊதை - காற்று. தகுதியென்புழி இரண்டாம் வேற்றுமை யுருபு தொக்கு நின்றது; அது மேலே பயிற்றும் என்பதனோடு முடியும்.

௬௪. தொத்து - கொத்து. பைத்த - பசுமை வாய்ந்த. நிலம், ஆகு பெயர். அயிர்த்தல் - சந்தேகித்தல் விசும்பு இறுத்தார் - வானத்தில் தங்கினர். * 'கந்தருவர்' எனவும் பாடம்.

௬௫. புட்டில் வீக்கிய - உறை கட்டிய. குழைய - வளைய. முட்ட - ஒன்றையொன்று தாக்க.

கடவுள் வான்படை எண்ணில வழங்குவர் கடுநோய்
படரும் வெப்பொடு குளிர்ப்பிணி படைத்தெதிர் விடுப்பார்
உடலும் மற்றவை ஒன்றின்ஒன் றழிவுறக் காண்பார்
அடைவின் இன்னணம் விளைத்தனர் அற்புதப் பூசல். ௯௬

மூவ ருந்தொழும் முதல்வனே முனைந்தனன் இனிஎன்
ஆவ தோஎன முனிவரர் அஞ்சினர் அகில
தேவர் அஞ்சினர் பூதங்கள் அஞ்சின தேவர்
கோவும் அஞ்சினன் திருவுளக் குறிப்பினை உணரார். ௯௭

இளிவில் வெஞ்சமர் இன்னணம் நெடும்பொழு தாற்றும்
அளவின் மற்றினி ஆற்றிலேன் அடியனேன் என்று
முளரி நோக்கினன் வணங்கலும் முறுவல்செய் தடியார்க்
கெளியன் என்பது விளக்கினன் என்னையா ளுடையான். ௯௮

அடிகள் நோவச்சென் றுநௌ்ள விறகுமண் சுமந்தும்
அடிபொ றுத்தும்ஓர் அரிவைதூ தாற்றியும் வெள்கா
தடியர் எண்ணமே முடிப்பது விரதமாக் கொண்ட
அடிகள் வாகைஇக் கண்ணனுக் களித்தனேதார் வியப்போ. ௯௯

தம்பி ரான்பெருங் கருணையின் சால்பினை நோக்கி
உம்பர் ஆர்த்தனர் உவணஎற் றிறைவனும் ஆவா

---

௩௯௬. கடவுள் வான்படை - தேவாத்திரம். உடலும் - போர் செய்கின்ற. ஒன்றின் - ஒன்றால்.

௩௯௮. இளிவு - இகழ்ச்சி. முளரிநோக்கு - தாமரைக்கண். அடியார்க்கு எளியன் என்பது விளக்கியதாவது, இனி ஆற்றிலேன் என்ற திருமாலுக்கு முன் போர்முனையில் நில்லாது நீங்கியது.

௩௯௯. இஃது என் சொல்லிய வாறோ எனின், இறைவன் இங்ஙனம் நீங்கியது அருள் நாடகமாயினும், சிற்றறிவுடையார் அதனையறியாது, போரிற் புறங்கொடுத்தார் எனக்கூறி இகழ்வராகலின், அங்ஙனம் இகழுமாறு நீங்கியது இறைவற்குத் தகுமோ என்னும் ஐயப்பாட்டினை நீக்கியவாறு. அரிவை தூதாற்றியதைப் பெரிய புராணத்திலும், ஏனையவற்றைத் திருவிளையாடற் புராணத்திலும் காண்க.

௪00. தம்பிரான் -'எல்லா உயிர்களுக்கும் தலைவன், சிவபெருமான். ஆவா, வியப்பிடைச்சொல். அம்பிகாபதி - பார்வதி தேவியாருக்கு நாயகர், சிவபெருமான்.

எம்பி ரான்அருள் என்னிடை இருந்தவா றென்னென்
றம்பி காபதி அடிதொழு தானந்தம் உற்றான். ௧௦௦

கன்னானும் வாளானும் கைகலத்தல்

துண்ட வெண்பிறைக் கண்ணியோன் போர்வினை துறப்பக்
கண்டு வெஞ்சினந் தலைக்கொளீஇக் கனைகழல் அவுணன்
அண்டம் விண்டென ஆர்த்தனன் மாயனை அடுத்தான்
மண்டு தீச்சிலை வளைத்தனர் விளைத்தனர் பூசல். ௧௦௧

தூழில் வன்படை இருவரும் நெடுமொழி நுவல்வார்
பாழி வன்புயம் புடைத்தெழூஉ வஞ்சினம் பகர்வார்
ஊழி ஏற்றனல் விழிஉகச் சீறுவர் உலகைப்
பூழி யாக்குவர் சாரிகை சுற்றுவர் பொருவார். ௧௦௨

இனைய மண்டமர் ஞாட்பிடை எம்பிரான் அருள்சேர்
வனைமலர்த் துழாய் வானவன் மதுகைமீக் கொண்டு
முனைவ ரிச்சிலை வாளிதேர் முடிகளை இறுத்துத்
தனிய னாக்கினன் சலம்புரி அவுணருக் கிறையை. ௧௦௩

கருப்புத் துண்டென நூற்றுப்பத் தடுக்கிய கனகப்
பொருப்புத் தோள்களை அரிவழி மதன்உடல் பொடித்த
நெருப்புக் கண்ணினன் எதிரெழுந் தருளிநீள் கருணை
மருப்புக் குஞ்சரங் காத்தவன் மேற்செல வழங்கி. ௧௦௪

கண்ண னேஇது கேட்டிஇக் கனைகழல் அவுணன்
அண்ணல் வாய்மைஉன் போல்எமக் கன்புமிக் குடையான்
எண்ணம் வாய்ப்பநம் பூசையின் அமைந்ததோள் இரண்டும்
வண்ண வாள்மலர் வதனமும் அரிதல்ஓம் பென்றான். ௧௦௫

---

௧௦௧. கண்ணி - முடியிற் சூடும் மாலை. மண்டு - மிகுந்த.

௧௦௨. தூழில் - கொன்று குவித்தலையுடைய. நெடுமொழி - தன் மேம்பாட்டுரை.

௧௦௩. ஞாட்பு - போர்க்களம். முனை - முற்படுகின்ற.

௧௦௪. கரும்பு + துண்டு = கருப்புத் துண்டு.

௧௦௫. ஓம்பு - ஒழிக.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

என்ற வாய்மொழி கேட்டலும் தொழுதெழுந் தியாதவர் குலத் தோன்றல், மன்ற மாமறை முழுவதும் முழுவதும் உருத்திரன் எனு மாற்றால், ஒன்றும் அன்பொடும் உன்னடி அருச்சனை உஞற்றி னேன் எமையெல்லாம், நன்று பூசனை இயற்றியோன் ஆதலின் நாற் கரம் விடுத்தேனால். ௪௦௬

அடியனேன்பிழை யாவையும் பொறுத்தருள் ஐயனே எனத் தாழ்ந்து, கொடியின் மேல்விடை உயர்த்தவன் ஆணையிற் குட வளைக் குடங்கையான், மடிவில் வாணனைக் கேண்மைகொண் டாங்க வன் மகளைத்தன் மகன்ஈன்ற, விடலை சேர்வுற மணம்புணர்த் துடன் கொண்டு மீண்டனன் தன்மூதூர். ௪௦௭

வாணன் முத்திபெறுதல்

ஐயி ரண்டினில் உறழ்தரு மும்முறை அமரகத் துடைந்தெள் ளல், எய்தி னானெனப் பட்டவன் றனைக்கொண்டே இவன்செருக் கறக்கண்டான், செய்பச் செய்திடா தொழியவே றொன்றனைச் செய்பவும் வல்லோனும், பைய ராஅணி பண்ணவன் பெருமையை யாவரே பகர்கிற்பார். ௪௦௮

கருவி மாமுகில் மேனியோன் அகன்றபின் கனங்குழை உமை பாகம், மருவு நாயகன் வாணனை நோக்கினின் மணிப்புயக் கண்டுநி,

---

௪௦௬. பின்னுள்ள முழுவதும், எல்லாப் பொருள்களும் என்னும் பொருட்டு. எல்லாப் பொருள்களும் உருத்திரனே என்பது திருவுருத்திரத்தில் நன்கு கூறப்பட்டது. இது எசுர் வேதத்தின் இடையிற் காணப்படுகிறது.

௪௦௭. குட வளை - குடம் போன்ற சங்கு. குடங்கை - உள்ளங்கை.

௪௦௮. ஐயிரண்டு - பத்து. அதில் உறழ்ந்த மூன்று - முப்பது. இறை வன் தனது சுதந்திரத்தால் ஒன்றைச் செய்தலும், செய்யா தொழிதலும், வே றொன்று செய்தலுமென்னும் இறைமைக் குணங்களை யுடையனாகலின், 'செய்யச் செய்திடா தொழிய வேறொன்றனைச் செய்தலும் வல்லோன்' என்றார். இவற்றை முறையே கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அந்யதா கர்த்தத்துவம் என்பர். இச்செயல்கள் பரதந்திரராகிய உயிர்கள் மாட்டு வெளிப்பட்டு நிற்றலின்; 'ஒன்றை நினைக்கின் அது வொழிந் திட்டொன்றாத லும், அன்றி அது வரினும் வந்தெய்தலும், ஒன்றை நினையாத முன் வந்து நிற்றலு' மாகின்றன என்க. (கல். ௨௭.)

ஒருவி னுப்பெகாலாம் எனக்குறு நகைமுகிழ்த் துரைத்தலும் முடி சாய்த்துப், பெரும மற்றினி வீடுபே றளித்திஎன் றிரந்தனன் பெருநேசன். கOகூ

முத்தி வேண்டுமேற் காஞ்சியின் எய்திநீ முன்னமை நிறீஇப் போற்றும், அத்த லத்திடைப் பெறுதிஎன் றருள்புரிந் தகன்றனன் எங்கோமான், பத்தி மேதகு வாணனுங் காஞ்சியிற் படர்ந்துதான் தொழுதேத்தும், நித்த னாரரு ளாற்கணத் தலைமைபெற் றுனந்தம் நிலைபெற்றான். கஅO

வரிச்சி றைச்சுரும் புளர்தரக் குவிமுகை முறுக்குடைந் தலர்வாசம் விரித்த கொட்டிதழ்ப் பங்கயப் பொய்கைசூழ் வியந்தகு வாணேசம் அருச்ச னைக்குரி மரபினிற் போற்றிசெய் அடியவர் கருத்திமை நரிச்சு நீங்கமெய்ப் பெருநலக் கிழமைவீ டெய்துவர் நமரங்காள்.

ஆகத் திருவிருத்தம் - கசசூக.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'யாவரையும் வெல் லும் மிகுந்த தோள் வலிமையும் இறைவன் வழிபாட்டினுற் கிடைக்கும்' என் பதும், (உ) 'இறைவன் தன்னை வேண்டினர்க்குத் தன்னையும் வழங்குதலும், தன்னினும் மேன்மை வழங்குதலுமுடைய பேரருளாளன்' என்பதும், (ந) 'செருக்குற்றவர்களை அவர்களால் இகழப்பட்டவர்களைக் கொண்டே இறைவன் அடக்குவன்' என்பதும்,(ச) 'வலியது மெலியதாதலும், மெலியது வலியதாதலும் இறைவன் திருக்குறிப்பைப் பொறுத்துள்ளன' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள், இறைவன் பெருமையும் திருமால் முதலியோர் சிறுமையும் முதலிய பொருள்களும் இடை இடையே கூறப்பட்டன. பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

திருமம் வளர்கின்ற காஞ்சியம்பதியிலுள்ள அந்தகேசத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, அதற்குக் கிழக்கிலிருக்கும் வாணேச வரலாற்றைச் சொல்லுவோம்.

---

கஙகூ. கண்டுதி - நினைவு.

கஅ - அருச்சனைக்குரி மரபினர் - சிவ தீக்கை பெற்றோர். உரிய வென்பது குறைந்து செய்யுள் மரூஉ வாயிற்று.

வலிமையையுடைய வாணன் என்னும் அசுரன், காஞ்சியம்பதியில் ஒரு இலிங்கத்தைத் தாபித்துப் பூசித்து அநேக நாள் தவஞ் செய்தனன். அதனால், சிவபெருமான் அவனுக்கு முன்னே தோன்றி நடனம் செய்தனர். வாணன் அதனைக் கண்டு, நந்தி கணங்களோடு தானும் குடமுழா முழக்கினன். இரண்டு கைகளால் குடமுழாவை முழக்குந் தோறும் இறைவனார் கருணைமிகுந்து, அவனுக்கு ஆயிரங் கைகளை யளித்து, 'நீ வேண்டியவற்றைக் கூறுக' என்றனர். வாணன் 'நெருப்பு மயமான கோட்டையும், வலிமையும், செல்வமும், மூன்றுலகத்தையும் ஆளும் வெற்றியும், அழியாத தன்மையும், தேவரீர் திருவடியில் நீங்காத அன்பும் தரவேண்டும்' என்று வேண்டினன். சிவபெருமான் அவ்வரங்களைக் கொடுத்துச் சென்றனர்.

பிறகு வாணன் எல்லா உலகத்தையும் வென்று தனது ஆணைக்குட்படுத்திச் செருக்குற்று வாழும் நாளில், ஒருநாள் கைலைக்குச் சென்று சிவபிரான் நடனம் செய்யும்போது ஆயிரங் கைகளாலும் குடமுழா முழக்கினன். சிவபிரான் மகிழ்ந்து, 'யாது வேண்டும்?' என்று கேட்க, வாணன், 'அம்பிகை, முருகவேள், கணபதி இவர்களுடன் தேவரீர் என்றும் எனது கோட்டை வாயிலில் வந்திருந்து, அடியேனுக்கு நாள்தோறும் காட்சி தந்தருளல் வேண்டும்' என்றனன். வேண்டுவார் வேண்டுவதே ஈயும் எந்தையாகிய இறைவன், அங்ஙனமே சென்று இருந்துவரும் நாளில் ஒரு நாள், வாணன் செருக்கோடும் சென்று கூறுகின்றான்: 'பெருமானே, இந்திரன், திருமால் முதலிய யாவரும் எனக்குத் தோற்று ஓடிவிட்டனர். இனி, என்னுடைய தோளின் தினவை எனது பெருமானிடத்தில்தான் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்று வந்திருக்கிறேன்; உமது திருவுள்ளம் யாது?' என்று கேட்டனன்.

சிவபெருமான் புன்னகைகொண்டு சொல்லுகின்றார்: 'வாண, நினது தோளின் தினவைத் தீர்த்தற்கு, துவாரகையில் இருக்கும் கண்ணன் விரைவில் வருவான்' என்று கூறினர். தம்மைப் பூசிப்பவனைத் தாமே அழித்தல் கூடாதென்று இவ்வாறு சொல்ல, வாணன், 'இறைவ, அக்கண்ணன் முப்பது முறை என்னோடு எதிர்த்து ஓடிவிட்டனன். அவனை ஒரு வீரனாகக் கூறியது என்னையோ' என்றனன். அதற்குச் சிவபெருமான், நீ சொல்வது உண்மையேயாயினும், அவனை முன்னிருந்த கண்ணனாக எண்ணாதே; உன்னிடத்தில் தோற்று ஓடின பிறகு, உபமன்னிய முனிவன்பால் சிவதீக்கைபெற்று எம்மைப் பூசித்து வலிமை பெற்றிருக்கின்றான். அவன் என்று வருவான் எனில், உனது பெண்ணுக்கு ஒரு பழிச்சொல் உண்டாக, உனது கொடிகளில் ஒன்று ஒடியும் நாளிலே வருவான் என்று கூறினர். வாணனும் எதிர்பார்த்திருந்தனன்.

அது நிற்க, ஒருநாள் வாணன் மகள் உஷை என்பவள் இரவில் துயிலும்போது, கண்ணபிரான் பேரனாகிய அநிருத்தன் என்பவன் தன்னைக் கூடியதாகக் கனவுகண்டு, விழித்தெழுந்து, அவன்மேல் காதல் மிகுந்து வாடினாள். அதனையறிந்த தோழியருள் ஒருத்தி, உலகத்திலுள்ள அரசகுமாரர்கள் உருவத்தையெல்லாம் தனித்தனி எழுதிக்காட்டி வரும்போது, அநிருத்தன் உருவத்தையே உஷை தான் கனவிற் கண்டவனாகக் கருதியது கண்டு, அத்தோழி துவாரகைக்குச்சென்று, அநிருத்தன் தூங்கிக்கொண்டிருக்கும் கட்டிலோடு தூக்கிக்கொண்டுவந்து உஷையின்முன் வைத்தனள். உஷை அவனது வடிவம் முற்றும் நோக்கி ஐயம் நீங்கினள். பின்னர் அநிருத்தன் விழித்தெழுந்து, உஷையைக்கண்டு காதல் கூர்ந்தனன். இருவரும்பன்னாள் கூடிக் கலந்து இன்புற்றிருந்தனர்.

பிறகு உஷை கருப்பமுற்றனள். அதையறிந்த சிலர் வாணனுக்குக்கூற, வாணன் அநிருத்தனைச் சிறையிலிட்டனன். அதனால் உஷை உயிர்சோர்ந்து வருந்தினள். அப்பொழுது வாணாசுரன் வெற்றிக்கொடியும் காற்றினால் அறுந்து விழுந்தது. இவற்றையெல்லாம் அறிந்த நாரத முனிவர், துவாரகைக்குச் சென்று, அநிருத்தனைக் காணாமல் தேடி அலைந்துகொண்டிருக்கும் கண்ணனுக்கு அநிருத்தனின் செய்தியைக் கூறினர். உடனே கண்ணன் தனது பெரும்படையோடும் வாணாசுரன்மேல் போர்க்கு எழுந்து, அவனது சோணித புரத்தை யடைந்தனன்.

அதையறிந்த வாணாசுரன் தனது படைத்தலைவர்களைப் போருக்கு அனுப்ப, அவர்கள் தங்கள் தங்கள் படையோடுசென்று கண்ணன் சேனையைத் தாக்கும்போது, இருபடைகளும் மூண்டு பெரும்போர் செய்தன. அக்காலத்தில் கண்ணன் சேனை ஆண்மை விஞ்சி, வாணன் சேனையைத் தாக்கி முறிடிக்க, அவைகள் சோணிதபுரத்தை நோக்கி ஓடத் தலைப்பட்டன. அப்பொழுது கண்ணன் படைவீரர், ஓடுகின்றவர்களைத் துரத்திக்கொண்டு கோட்டைவாயிலை அணுகினர். அவர்களை அங்கிருந்த விநாயகப் பெருமான் சாடினர். அதுகண்ட கண்ணன் இனி என்ன செய்வது என்று ஏங்கி, சிற்றுண்டி முதலியவற்றால் விநாயகப் பெருமானை உபசரிக்க, அவர் மகிழ்ச்சி யடைந்திருந்தார்.

அதற்கப்பால், இரண்டாம் வாயிலிலிருக்கும் முருகப்பெருமானையும், பூசைசெய்து மகிழ்வித்து, மூன்றும் வாயிலிலிருக்கும் அம்பிகையை வணங்கித் திருவருள்பெற்று, நான்காம் வாயிலிலிருக்கும் சிவபெருமானைச் சென்று கண்டனன் கண்ணன். அப்பெருமான் முன்னொரு காலத்தில் மைநாகமலையில், 'யானே வந்து அசுரர்கள் பொருட்டு எதிர்த்தாலும் நீ வெற்றி பெறுக'

என்று கொடுத்த வரத்தைக் காப்பாற்றுதற் பொருட்டு, பிணகமென்னும் பெரிய வில்லைக் கையிலே கொண்டு நிற்க, கண்ணன் வணங்கி, பெருமானே, வாணாசுரனை வெல்லத் திருவருள் செய்ய வேண்டும்' என, பெருமான், புன் சிரிப்பு செய்து, 'எம்மை வென்றல்லவோ வாணனை வெல்ல வேண்டும்? எம்முடன் போர் செய்க' என்று கூறினர். கண்ணன் நடுங்கிக் கூறுகின்றான். 'அடிமையின்பால் ஆண்டவனுக்கு இருக்கும் திருவருள் இதுவோ! அளவிறந்த அண்டங்களை ஒருநொடியில் எரிக்கும் நெற்றிக்கண்ணுடைய தேவரீர், என்னை வெல்லக் கருதினல், சிறிது முகத்தை நிமிர்த்து நோக்கினல் அது போதாதோ? கையில் ஆயுதமும் வேண்டுமோ? என்று பலவாறு துதித்து நின்றனன்.

சிவபெருமான், 'முன்னே உனக்கு நாம் மைநாக மலையில் கொடுத்த வரத்தை மறந்தனையோ? ஆகையால், பகைவரை அழிக்கும் முறையில் யாம் போர் செய்யோம்; அஞ்சாதே' என்று தேற்றினர். பின் இருவரும் அரிதும், பெரிதும், அச்சமும், வியப்புமாகிய போரைச் செய்தனர். அதைத் தேவர்களும், கண்டு இனி யாதாகுமோ என்று அஞ்சினர். அப்பொழுது கண்ணன் இனி, 'அடியேனல் இயலாது' என்று கூற, சிவபெருமான் அடியார்க்கெளியர் என்பதை விளக்கி, அவ்விடத்தினின்றும் நீங்கினர். திருவடிகள் நோவச் சென்று, விறகும் மண்ணும் சுமந்தும், பிரம்படி பட்டும், பெண்ணின்பால் தூது சென்றும், அடியார் எண்ணத்தை முடிப்பதே விரதமாகக் கொண்ட பெருமான், இக்கண்ணனுக்கு வெற்றியளித்தது ஒரு வியப்பாகுமோ? ஆகாது. நிற்க.

இறைவன் இவ்வாறு நீங்கியது கண்ட கண்ணன், இறைவன் தன்பால் வைத்த கருணையை நினைந்து உருகினன். வாணாசுரன் கோபங்கொண்டு கண்ணனோடு எதிர்த்தனன். இருவருக்கும் கடும்போர் நடந்தது. அதிற் கண்ணன் விஞ்சி, வாணாசுரனுடைய வில், அம்பு, தேர், முடி இவைகளை அழித்து அவனைத் தனிமையாக்கி, அவனது ஆயிரந் தோள்களையும் கரும்புத் துண்டினை அரிவது போல அரியுங்கால், சிவபெருமான் எழுந்தருளி வந்து, 'கண்ணனே, இவனும் உன்னைப்போல் நம்மிடத்தில் பத்தி பூண்டவன். நமது பூசைக்கு அமைந்த தோள்கள் இரண்டை அரிதலொழிக' என்று திருவாய் மலர்ந்தனர். அது கேட்டுக் கண்ணன், 'எம்பெருமானே, தேவரீரைப் பூசித்தல் யாவருக்கும் இன்பத்தைத் தருவதே, ஆகையால், இரண்டல்ல நான்கு கரங்கள் விடுத்தேன்' என்று சொல்லி, அப்பெருமானது ஆணையின்படி வாணனோடு நட்புக் கொண்டு, அவன் மகளைத் தனது பெயரனாகிய அநிருத்தனுக்கு மணம் செய்வித்து, தம்பதிகளை உடன் அழைத்துக் கொண்டு துவாரகையை அடைந்தனன்.

கண்ணன் போய்விட்ட பிறகு, சிவபெருமான் வாணனை நோக்கி, 'உனது தோள் தினவு நீங்கியது போலும்' என்றனர். வாணன் தலை குனிந்து நின்று, 'இனி, அடியேனுக்கு முத்தி தந்தருள வேண்டும்' என்றனன். சிவ பெருமான், 'முத்தி வேண்டுமாயின், நீ முன்னே நம்மைப் பூசித்த இலிங்கத்தில் பெறுக' என்று அருளிச் செய்து நீங்கினர். வாணாசுரன் காஞ்சியில் தான் பூசித்த இலிங்கத்தை யடைந்து, அப்பெருமான் திருவருளால் கணத் தலைமை பெற்றனன். அந்த வாணேசப் பெருமானை வணங்கினவர்கள் பிறவி நீங்கி முத்தியடைவார்கள்.

---

## திருஓணகாந்தன் தளிப் படலம்

கலி விருத்தம்

பேண வல்லார் பிறவி தீர்த்தருள்
வாண நாத மரபு சொற்றனம்
யாணர் வண்மை பெறும்இ தன்குணக்
கோண காந்தன் தளிஉ ரைத்துமால். க

மருவ லார்தாழ் வாணன் றன்னுடைப்
பொருவில் சேனைத் தலைமை பூண்டவர்
தரும வாற்றின் ஒழுகு* தானவர்
இருவர் ஓணன் காந்தன் என்றுளார். உ

வன்பு பூண்ட மனவ கப்படா
என்பு பூண்ட இறைவர் தம்மடிக்
கன்பு பூண்ட அறிவின் மேலவர்
துன்பு பூண்ட தொடர்பு நீக்குவார். ங

ஓங்கு காஞ்சி யூரை நண்ணினர்
தேங்கு தெண்ணீர்த் தீர்த்தந் தொட்டனர்
பாங்கி லிங்கம் பதிட்டை செய்தனர்
ஆங்கண் அன்பிற் பூசை ஆற்றினர். ச

---

க. யாணர் - புதுமை; அழகுமாம். வண்மை - வளம்.

உ. * 'தரும வாற்றினின் றொழுகு' எனவும் பாடம்.

ங. வன்பு - கடினம்; இது அன்புக்கு எதிரானது. நீக்குவார் எச்சப் பொருட்டு; இது வருஞ்செய்யுளோடு இயையும்.

ச. இருவரும் தனித்தனி ஒவ்வோர் இலிங்கம் நிறுவினர் என்க.

ஆற்றும் இருவர் அன்பு நோக்கிய
நீற்று மேனி நிமலன் அம்மையோ
டேற்றின் மேலாற் காட்சி ஈதலும்
போற்றி இன்பப் புணரி மூழ்கினர். ௫

கரைஇல் காதல் கைமி கத்தொழும்
புரைஇ லார்க்குப் பொங்கு வெள்ளிமால்
வரையி னார்இன் னருள்வ ழங்கிநீர்
உரைமின் வேட்ட வரம்என் றோதினர். ௬

கைகள் கூப்பிக் கண்கள் நீர்உகச்
செய்ய பாதந் தொழுது செப்புவார்
ஐய னேமெய் யறிவு தந்தெமை
உய்யக் கோடி உனக்க டைக்கலம். ௭

இனைய தீர்த்தம் ஆடி எம்பெயர்
புனைஇ லிங்கம் போற்றப் பெற்றவர்
நினைவு முற்றும் நிரப்பி ஈண்டுநீ
எனைய நாளும் இனிது வைகுவாய். ௮

என்று போற்றும் இருவர்க் கன்னவை
மன்றல் ஒற்றை மாவின் நீழலான்
நன்றும் அங்கண் நல்கி வைகினன்
அன்று தொட்டஃ தற்பு தத்தலம். ௯

ஆகத் திருவிருத்தம் - ௧௪௭௦.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வாலாறு, (க) 'இறைவன் வழிபாடு சிவ ஞானம் வாயிலாக முந்தியைத் தரும்' என்னும் உண்மையை விளக்கும். தீய குலத்திலும் நல்லோர் இருப்பர் என்னும் பொருளும் தோன்றும். பிறவும் உளவேற் கொள்க.

---

௫. ஏறு - விடை. மேலால் என்புழி ஆல் அசை. இதுபோன்று உள் என்னும் ஏழனுருபுபோடும் ஆல் என்னும் அசைநிலை இடைச்சொல் சேர்ந்து உள்ளால் என வருதல் காண்க. புணரி - கடல்.

௬. கைமிக என்புழிக் கை இடைச்சொல். புரை - குற்றம்.

௯. மன்றல் - வாசனை. அற்புதம் - வியப்பு.

## உரை நடை

வழிபடுகின்றவர்கள் பிறவியைப் போக்குகின்ற வாணேசத்தின் வரலாற்றைச் சொன்னோம்; இனி, புதிய வளங்களையுடைய ஓணகாந்தன்றளியின் வாலாற்றைச் சொல்லுவோம்.

மேற்சொல்லப்பட்ட வாணாசுரனுடைய சேனாதிபதிகள் இருவர் ஓணன், காந்தன் என்பவர் இருந்தனர். அவர்கள் தரும வழியைக் கடவாதவர்களாய், இறைவன் திருவடியில் அன்பு பூண்டொழுகும் அறிவிற் சிறந்தவராயிருந்தனர். அவர்கள் பாசத்தினின்றும் நீங்கவேண்டிக் காஞ்சியை யடைந்து, தீர்த்தம் ஒன்று உண்டாக்கி, அதன் கரையில் இலிங்கம் தாபித்துப் பூசித்தனர். சிவபெருமான் அம்மையாரோடு விடையின்மேற் காட்சி யளித்து, 'யாது வேண்டும்?' என, 'மெய்ஞ்ஞானத்தை யளித்து முத்தியைக் கொடுத்தல் வேண்டும்; இவ்விலிங்கங்களை வணங்கினவர்கள் எண்ணத்தை முடித்து, எக்காளும் தங்கியிருத்தல் வேண்டும்' என்று வேண்டினர். திருவேகம்பநாதர் அவ்வாங்களை அவர்களுக்குக் கொடுத்து அங்குத் தங்கியருளினர். அன்றுதொட்டு அது சிறந்த தலமாக விளங்குகின்றது.

---

# சலந்தரேசப் படலம்

*கலி விருத்தம்*

ஓணனார்க் கரியவர் ஓணகாந் தன்தளி
நீணகர் மேன்மையைத் தெரிந்தவா நிகழ்த்தினும்
மாணமர் காட்சிசால் மற்றதன் வடதிசைப்
பேணிய சலந்தரே சத்தியல் பேசுவாம். க

சலந்தரன் வெற்றி
சலத்திடைத் தோன்றியோன் சலந்தரப் பெயரிய
குலப்புகழ்த் தானவன் கோநகர்க் காஞ்சியில்
நலச்சிவ லிங்கம்ஒன் றமைத்துநா ளுந்தொழு
தலப்பரு மெய்த்தவம் உஞற்றினன் அவ்வுழி. உ

---

க. ஓணனார் - திருவோண நட்சத்திரத்திற்கு உரியவர், திருமால். மாண் - மாட்சி.

உ. சலம் - நீர். இந்திரன்மேல் ஒருகால் இறைவன் கொண்ட கோபத்தை அவன் பொறுக்க வேண்டினமையால், அதனைக் கடலில் எறிய,

காட்சிதந் தருளிய கண்ணகன் மாநிழல்
ஆட்சியார்த் தொழுதெழுந் தாண்மையும் மதுகையும்
மாட்சிசால் இறைமையும் மாற்றலர்த் தெறுதலும்
மீட்சிஇன் றருளென வேண்டினன் பின்னரும். ௩

நின்னலால் என்னுயிர் நீப்பவர் இன்மையும்
துன்னரு முத்திஇச் சூழலிற் பெறுவதும்
பின்னல்வார் சடையினுய் அருளெனப் பெற்றுமீண்
டன்னவா றுலகுதன் அடிப்படுத் தாளுநாள். ௪

இந்திரன் முதலிய எண்டிசைக் கிறைவரைக்
கந்தமென் மலர்மிசைக் கடவுளை வென்றுபின்
பைந்துழாய்க் குரிசிலைப் பன்னகப் பகையொடும்
வெந்திறல் நாகபா சத்தினுல் வீக்கினன். ௫

சிறையிடை மாட்டினன் சிற்சில நாட்செல
அறைகழல் வானவர் வணங்கிநின் றவுணனைக்
குறைஇரந் தினையனைக் கொண்டுமீண் டேகினர்
பிறைஎயிற் றவுணனும் பெருமிதத் துறையுநாள். ௬

திருமால் செயல்

இறுதிநாள் அடுத்தலின் எறுழ்விடைப் பாகனைத்
தெறுவல்என் றெழுந்துயர் கயிலையைச் சேறலும்
உறுதுயர்ச் சிறையிடை உறையுநாள் அன்னவன்
பெறுமனைக் கிழத்தியைக் காமுறும் பின்னைகோன். ௭

அற்றமீ தென்றறிந் தம்மனைப் புறமுறத்
துற்றபூம் பொழிலிடைத் தூத்தவ வடிவுகொண்

அஃது ஓர் உருவமாயிற்று. அதுவே சலந்தாசுரன் என்பது புராணவரலாறு. கோ - தலைமை.

௩. மதுகை - வலி. மீட்சி - நீக்கம்.

௪. சூழல் - இடம். அடிப்படுத்து - ஆணைக்குட்படுத்தி.

௭. பின்னை - பின்னே பிறந்தவள், இலக்குமி.

௮. அற்றம் - சோர்வு; இது அது நிகழ்ந்த காலத்தின்மேல் நின்றது. ஒசி - துவளுகின்ற. முற்று இழை - தொழில் முற்றிய ஆபரணம்.

டுற்றிடக் கண்டனள் ஒசிஇடைப் பணைமுலை
முற்றிழை தாழ்ந்துமுன் நின்றிது வினவுவாள். ௮

நற்றவத் தடிகளிர் நதிமுடிக் கடவுளைச்
செற்றமீள் வேனெனச் சென்றஎங் கொழுநர்பால்
வெற்றியோ தோல்வியோ விளைவதொன் றறிகிலேன்
எற்றிது மொழிமின்நீர் என்னமால் கூறுவான். ௯

அஞ்சுபூ தங்களும் அவற்றிடைப் பொருள்களும்
பஞ்சுதீப் பட்டது படவிழி திறந்தருள்
செஞ்சடைப் பகவன்முன் சென்றெவர் உய்ந்துளார்
புஞ்சவெள் வளையினாய் அறிந்திலை போலும்நீ. ௧0

அன்னபே ராளனோ டமரினுக் கேகலாற்
பன்னகப் படமெனப் பரந்தகல் அல்குலாய்
உன்னுடைக் கேள்வனும் பொன்றுவான் உண்மைகாண்
என்னவாய் விண்டனன் வளைகரந் தெய்தினான். ௧௧

கலிநிலைத் துறை

அந்த எல்லைஓர் தானவன் பங்கிசோர்ந் தலையச்
சந்த மென்புயத் துகிலுடை சழங்கவேர் ஒழுக
உந்து நெட்டுயிர்ப் பெறியமெய் நடுக்குற ஓடி
வந்து தோன்றிவாய் புலரநின் றின்னது வகுப்பான். ௧௨

இறைவி நின்தனிக் கொழுநன்நீள் கயிலையின் இளவண்
டறைக டுக்கையான் றனைஅறை கூவும்அவ் வளவில்
நறைம லர்க்கரக் கணிச்சியன் நோக்கினான் நமது
நிறைக டற்பெரும் படையெலாம் நீற்றினன் அதன்பின். ௧௩

பரிதி மண்டிலம் ஆயிர மெனக்கதிர் பரப்பும்
உருவ ஆழிஒன் றுக்கினன் ஒளிரும்அப் படையால்

---

௧0. புஞ்சம் - திரட்சி.

௧௧. பேராளன் - பெரியோன். கேள்வன் - கணவன். பொன்றுவான் - அழிவான். வளை - சங்கு.

௧௨. பங்கி - ஆண் மயிர். சந்தம் - சந்தனம். சழங்க - சரிய. வேர் - வியர்வை. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.

௧௩. அறை கூவுதல் - வலிதில் போருக்கு அழைத்தல். கணிச்சி - மழு.

பொருவ லித்திறற் சலந்தரன் பொன்றினன் அதனை
வெருவி நீளிடைக் கண்டுமீண் டித்தலைப் போந்தேன். ௧௪

என்ற வாய்மொழி கேட்டலுங் கொம்பரை இழந்த
மன்ற லங்கொடி போற்கிடந் தலமரு மயிலை
வென்றி வேள்படை துளைத்திட மெலிவுறு நெடியோன்
சென்று பற்றினன் திருந்திழை குறித்திது செப்பும். ௧௫

மன்னு கேள்வனை இழந்துளேன் வைகல்மூன் றகன்ற
பின்னை நின்மனைக் கிழத்தியே ஆகுவல் பெரும
என்ன வஞ்சித்து நீங்கினள் மனையகத் தெய்தி
வன்னி புக்குயிர் விடுத்தனள் கற்பினில் வழாதாள். ௧௬

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஏம்பலோ டுறையும் மாயன் இத்திறம் உணர்ந்தான் அந்தச்
சாம்பரிற் புரண்டு பேய்க்கோட் பட்டவர் தம்மின் மாழ்கித்
தேம்பினன் அனையாள் செல்வத் திருஉரு உளத்தில் தீட்டி
ஓம்பினன் என்செய் வான்அங் குழிதந்தான் நெடுநாள் இப்பால். ௧௭

சிவபெருமான் திருவருள் செய்தல்

இமையவர் பலரும் மாலை எங்கணுந் தேடிக் காணார்
சிமையநீள் கயிலை நண்ணித் திருவடி வணங்கிக் கூற
அமையெனத் திரண்டு நீண்டு பசந்தணி இலங்கு பொற்றோள்
உமையொரு பாகத் தெங்கோன் அவன்திறம் உணர்ந்து சொல்லும்.

சொற்பயில் கமலை கேள்வன் சலந்தரன் துணைவி யாய
கற்பினிற் சிறந்த காமர் விருந்தையைக் காமுற் றன்னாள்

---

௧௪ பரிதி - சூரியன். ஆழி - சக்கரம். தலை - இடம்.

௧௫. கொம்பு கொம்பர் என வருதல் போலி. மன்றல் - வாசனை. மயில் என்றது, சலந்தரன் மனைவியை.

௧௬. வைகல் - நாள். வன்னி - நெருப்பு.

௧௭. ஏம்பல் - வருத்தம். மாழ்கி - மனம் நொந்து. உழிதந்தான் - திரிந்தான்.

௧௮. சிமையம் - சிகரம். அமை - மூங்கில்.

௧௯. கமலை - திருமகள். காமர் - அழகு. காமுற்று - விரும்பி. பொற்பு - அழகு. ஈமப்பொடி - சுடுகாட்டுச் சாம்பல். வில் - ஒளி.

பொற்புரு இழந்த ஈமப் பொடியிடைக் கிடக்கின் றூனல்
விற்பொலி விசும்பின் வாழ்க்கை விண்ணவர் கேண்மின் என்னு. ககூ

பாயபல் லுலகும் ஈன்ற பனிவரைப் பிராட்டி மேனிச்
சேயொளிக் கலனைச் சாந்தின் அழுக்கினைத் திரட்டி நல்கி
நீயிர்இங் கிதனை அந்த நீற்றிடை வித்து வீரேல்
மாயவன் மயக்கந் தீர்க்கும் மரங்கள்மூன் றுளவாம் என்றான். உ0

விண்ணவர் அதனை ஏற்று விடைகொடு வணங்கிப் போந்து
தண்ணகை விருந்தை வீந்த சாம்பரின் வித்த லோடும்
அண்ணலந் துளவம் அங்கேழ் நெல்லிநீள் அகத்தி மூன்றும்
கண்ணெதிர் தோன்றக் கண்டான் கரியவன் மகிழ்ச்சி கொண்டான்.

மென்றுணர்த் துளவந் தன்னை விருந்தையாத் துணிந்து புல்லிக்
குன்றருங் கழுமல் நீங்கிக் குலவுதன் இருக்கை சார்ந்தான்
துன்றுபூந் துழாய்முன் மூன்றுந் துவாதசி வழுத்தப் பெற்றோர்க்
கன்றினர்க் கடந்த மாயோன் ஆரருள் சுரக்கும் மன்னே. உஉ

சலந்தரன் முத்திபெறுதல்

கடவரை இகந்த திண்தோள் சலந்தரன் கயிலை வெற்பில்
விடமிடற் றிறையால் வீந்து வியனகர்க் காஞ்சி வைப்பில்
படரொளிப் பிழம்பாய்த் தோன்றிப் பாசுதன் இலிங்க மூர்த்தத்
துடனுறக் கலந்தான் அன்னோன் பெருமையார் உரைக்க வல்லார்.

ஆகத் திருவிருத்தம் - கசகூ௩.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறைவனை வணங்குதலால் நலமும், இறைவனை அவமதித்தலால் தீங்கும் விளையும்' என்பதூஉம், (உ) 'திருமாலும் காமம் வெகுளி மயக்கம் வஞ்சனை முதலிய உயிர்க் குணங்களையுடையரே' என்பதுமாகிய உண்மைகளைவிளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

---

உ0. பாய - பரந்த. வித்துவீரேல் - விதைப்பீர்களானால்.

உஉ. கழுமல் - மயக்கம். மாயோன் சுரக்கும் என்க.

உ௩. பாசு - தான்வழிபட்ட. தன் இலிங்கம் - தன்னால் வழிபடப்பட்ட இலிங்கம். அன்னோன் என்றது சலந்தரேசனை.

## உரை நடை

திருமாலுக்கும் அறிவரிய இறைவனது திருவோணகாந்தன் தளிப் பெருமையைத் தெரிந்த அளவிற் சொன்னோம்; இனி, அதற்கு வடக்கில் இருக்கும் சலந்தரேசத்தின் இயல்பைச் சொல்லுவோம்.

சலத்தில் தோன்றினமையால் சலந்தரன் என்னும் பெயரைப் பெற்ற அசுரன், காஞ்சியில் சிவலிங்கம் அமைத்துப் பூசித்து, ஆண்மை, வலி, எல்லா வுலகத்தையும் ஆளும் ஆட்சி, வெற்றி, சிவபெருமான் தவிர வேறு யாவராலும் அழியாமை, காஞ்சியிலே முத்தியடைதல் ஆகிய வரங்களைப் பெற்று உலகங்களை ஆண்டான். அப்பொழுது இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களையும், பிரமனையும் வென்று, திருமாலைச் சிறைவைத்திருந்து, தேவர்கள் வேண்டுகோளால் விடுதலைசெய்து வாழுகின்ற நாட்களில், ஒருநாள் செருக்குக்கொண்டு, சிவபிரானை வெல்லக்கருதிக் கயிலைக்குச் சென்றனன்,

இதையறிந்த திருமால், தாம் சிறையிலிருக்குங்கால் கண்டு காமுற்ற சலந்தராசுரன் மனைவி பிருந்தையைப் பற்ற இதுவே சமையமென்று கருதி, ஒரு தவவேடம் பூண்டு, அவள் வீட்டை அடுத்துள்ள சோலையில் இருந்தார். பிருந்தை அவரைக் கண்டு, 'பெரியோரே, சிவபெருமான்மேல் போர்க்குச்சென்ற எனது கணவருக்கு வருவது வெற்றியோ? தோல்வியோ?' என்று கேட்டனள். திருமால், சிவபெருமானை எதிர்த்தவர்கள் பிழைத்ததும் உண்டோ? இல்லை; அதனால், உனது கணவனும் இறந்தே படுவன் என்றனர். அப்பொழுது ஓரசுரன் ஓடிவந்து, தலைவியே, உனது கணவன் சிவபெருமானைப் போருக்கு அழைக்கு முன்னமே அவர் தமது நெற்றிக்கண்ணினால் நமது சேனைகளை எரித்துவிட்டனர். பின்பு ஆயிரஞ் சூரியர்போல ஒளிரும் சக்கரம் ஒன்றை உண்டாக்கி, அதனால் நமது அரசனையழித்தனர் என்று கூறினான். அது கேட்டு பிருந்தை பெருந்துயர்கொண்டு, கொழுகொம்பில்லாக் கொடிபோல் வாடினாள். அவளைத் திருமால் பற்ற, அவள் மூன்று தினத்திற்குப்பின் உனக்கு மனைவியாவேன் என்று சொல்லி, வீட்டிற்சென்று நெருப்பில் வீழ்ந்து இறந்தனள். திருமால் அவள் இறந்த சாம்பரிற் புரண்டு கொண்டு கிடந்தனர்.

இங்ஙனம் இவ்வாறாக, தேவர்கள் திருமாலைக் காணாதவர்களாய், சிவபெருமானையடைந்து கேட்க, அவர் திருமாலின் செய்தியைச் சொல்லி, உமாதேவியார் அணிந்த சாந்தின்அழுக்கைத் திரட்டிக்கொடுத்து இதை அந்தச் சுடுகாட்டுச் சாம்பலில் விதைத்தால், திருமாலினது மயக்கத்தை நீக்கும் மரங்கள் மூன்று உண்டாகும் என்றருளினர். தேவர்கள் அதைக் கொண்டுபோய் அவ்வாறே

விதைக்க, துளசி நெல்லி அகத்தி என்னும் மூன்று மரங்கள் உண்டாயின. அவற்றால் திருமால் மயக்கந்தெளிந்து, துளசியைப் பிருந்தையாகக் கண்டு அணைந்து இன்புற்றனர். துளசி முதலிய மூன்றையும் துவாதசியில் துதித்தவர்களுக்குத் திருமால் திருவருள் பாலிப்பார்.

கைலேயில் இறைவனால் அழிக்கப்பட்ட சலந்தராசுரன் ஒளிப்பிழம்பாகக் காஞ்சியை யடைந்து, தான் பூசித்த இலிங்கத்தில் கலந்து முத்தியடைந்தனன். அச்சலந்தரேசப் பெருமானது பெருமையை யாவர் கூறவல்லவர்கள்!

---

# திருமாற் பேற்றுப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வணங்குநர்க் கிருமைப் பேறும் மேன்மையின் வழங்கி எங்கோன்
இணங்கிய சலந்த ரேச வரவினை எடுத்துச் சொற்றும்
அணங்கனர் ஆடல் பாடல் முழக்கறு அணிநீள் வீதிக்
கணங்கெழு திருமாற் பேற்றுக் கடிநகர்ப் பெருமை சொல்வாம். க

திருமால் சக்கரம்பெற வழிபடுதல்

குவலயம் காவல் பூண்ட குபன்என னும் அரசற் காகச்
சிவநெறித் ததீசி யோடுஞ் செருச்செய்நாள் விடுத்த ஆழி
தவமுனி வயிர யாக்கை தாக்கிவாய் மடித லோடும்
கவலுறு மனத்த னாகிக் கடுஞ்சமர் துறந்த மாயோன். உ

இனிப்படை பெறுவ தெவ்வா றென்றுவா ளவுணர்க் காற்றுப்
பனிப்புடை இமையோர் தம்மை உசாவினன் படைகட் கெல்லாம்
தனிப்பெருங் குருவாய் ஈசன் சலந்தரன் மடியக் கண்ட
சினப்பொறி சிதறுந் தீவாய்த் திகிரிஒன் றுளதென் றோர்ந்தான். ங

---

க. கணம் - திரட்சி. கெழு - பொருந்திய.

உ. குபனென்னும் அரசன் பொருட்டுத் திருமால் ததீசி முனிவர்மேல் சக்கரம் விடுத்த வரலாற்றை, மேலே இட்டசித்தீசப் படலத்திற் காண்க.

ங. பனிப்பு - நடுக்கம். கண்ட - உண்டாக்கிய; மடியக்கண்டவென ஒன்றுபடுத்தி இறக்கச் செய்தவென உரைத்தலுமாம். இவ்வாலாறு மேலேப் படலத்திற் கூறப்பட்டது.

உவகைமீ தூர விண்ணோர்க் கோதிலன் இதனை வேண்டிச்
சிவனடி பரசின் இன்னே திருவருள் சுரக்கும் என்ன
அவரொடும் போந்து காஞ்சி அணிநகர் வடமேல் பாங்கர்த்
துவர்இதழ் உமையாள் போற்றுஞ் சுடரொளி இலிங்கங் கண்டான்

சேயிழைக் கவுரி செங்கை தைவரச் சிவந்து தோன்றிப்
பாயொளிப் பவளக் குன்றர் எனப்பெயர் படைத்து நான்காம்
ஆயிரம் உகங்கள் அங்கண் அருந்தவர் வழுத்த வைகு
நாயனார் தமைக்காண் தோறும் நாரணன் இறும்பூ துற்றான். ரு

நிறைபெருங் காதல் கூர ஆயிடை நியமம் பூண்டு
மிறைவழி இகந்து பாசு பதத்தனி விரதம் ஆற்றி
முறைபெறு வெண்ணீ றங்கம் முழுவதும் பொதிந்து பாசப்
பொறைதவிர்த் தருளும் மும்மைப் புண்டரம் நுதலில் இட்டி. சு

கண்டிகை மாலை பூண்டு கதிர்ஒளி பரப்பும் ஆழித்
திண்படை பெறுதல் வேண்டிச் சங்கற்பஞ் செய்து கொண்டு
விண்டலத் திமையோர் அங்கண் வேண்டுவ எடுத்து நல்க
மண்டுபே ரன்பாற் பூசை விதியுளி வழாது செய்வான். எ

மாயிருங் கமலப் போது கைக்கொண்டு மாட்சி சான்ற
ஆயிரந் திருநா மத்தான் நித்தலும் அருச்சித் தேத்தி
மேயினன் திருமால் அன்னோன் பத்தியின் விளைவு காண்பான்
பாயிர மறைகள் தேறாப் பரம்பொருள் ஒருநாள் அங்கண். அ

வேறு

நறைவாரும் இதழ்துறுத்த செழும்பொகுட்டு நளினம்ஆ யிரத்
தில் ஒன்று, மறைவாகத் திருஉள்ளம் வைத்தருளக் கருவிமுகில்

---

சு. திருமாற்பேற்றிலுள்ள இலிங்க வடிவமும் இறைவியால் பூசிக்கப்பட்டு, அந்நகரம் ஆதிகாஞ்சி எனப்படுதலால், 'உமையாள் போற்றும் சுடரொளி இலிங்கம்' என்றார்.

ரு. 'ஆயிரம் நான்காகும் உகங்கள்' எனக்கூட்டுக; எண்ணிறந்த சதுர்யுகங்கள் என்பது பொருள். நாயனார் - இறைவன். இறும்பூது - வியப்பு.

சு. மிறைவழி - துன்ப வழியாகிய பொறி வழி. முறைபெறு - முறையாற் பெற்ற. பொறை - சுமை.

அ. பாயிரமறை - பாயிரத்தோடு கூடிய மறை.

வாட்டு மேனி, இறையோனும் பண்டுபோல் பவன்முதலாம் ஆயிரம் பேர் எடுத்துக் கூறிக், குறையாத பேரன்பிற் பதுமமலர் கொடுபூசை புரியும் எல்லை. ௯

பின்னும்ஒரு திருப்பெயர்க்கு நறுங்கமலங் காணாமைப் பதைத்து நோக்கி, என்னினிமேற் செயலென்று தெரிந்துணர்ந்து தனதுவிழி இடந்து பெம்மான், கோன்மலர்த்தாள் மிசைச்சாத்திக் களிகூர்ந்தான் உறுப்பினையுங் கொடுப்ப தல்லால், மென்மையுறத் தாங்கொண்ட விரதத்தை விடுவர்களோ கொள்கை மேலோர். ௧௦

இறைவன் திருமாலுக்குச் சக்கரம் அருளல்

பாறிலகு மழுப்படையோன் மாயவன்றன் அன்பின்ஒருப் பாடு நோக்கி, மாறிலாப் பெருங்கருணை ஊற்றெடுப்பச் செழுஞ் சோதி மலரப் பாங்கர், நூறியோ சனைஅளவும் எரிகொளுந்த நோக் கரும்பே ருருவு தாங்கி, ஈறிலாக் கதிர்இரவி மண்டிலநின் றிழிந் தெதிரே காட்சி ஈந்தான். ௧௧

இறைவரவு கண்டஞ்சிப் புடைமருவும் இமையவர்ஒட் டெடுப்ப நோக்கி, நிறைஉவகை தலைசிறப்பத் திருநெடுமால் இருநிலத்தின் வீழ்ந்து தாழ்ந்து, முறைமையினல் அட்டாங்க பஞ்சாங்க முற வணங்கி முடிகை ஏற, மறைமொழியின் துதித்தாடி ஆனந்த விழி மாரி வெள்ளத் தாழ்ந்தான். ௧௨

ஆங்கவனை எதிர்நோக்கி நின்பூசைக் ககமகிழ்ந்தேம் உனக்கிஞ் ஞான்று, தேங்கமல விழியளித்தேம் பதுமாக்கன் எனும்பெயரின் நிகழ்வாய் இவ்வூர், பாங்குபெறு திருமாற்பே றெனப்பொலிக என் றருளிப் பானு கோடி, தாங்குகதிர்ச் சுதரிசனப் பெயராழித் தனிப் படையும் உதவி எங்கோன். ௧௩

---

௯. நளினம் - தாமரை. கருவி - கூட்டம்.

௧௦. கோன் - பெருமை. வேற்றுப் பொருள் வைப்பு.

௧௧. பாறு இலகு - பருந்துகள் சூழும்; இது நிணம் பொருந்திய தென்பதைக் காட்டும் குறிப்பு மொழி. ஒருப்பாடு - ஒருமை.

௧௩. பதுமாக்கன், பத்மாக்ஷன் என்பதன் திரிபு. பத்மம் - தாமரை. அக்ஷம் - கண். பத்மாக்ஷன் - தாமரைக் கண்ணன். திருமாற் பேறு - திரு மால் பேறுபெற்ற தலம்.

வெல்லரிய செறுநரையும் இப்படையால் வெல்வாயால் ஈண்டு
நின்றாற், சொல்லியபேர் ஆயிரங்கொண் டெமைப்பூசை புரிவார்க்
குத் துகள்தீர்த் தென்றும், எல்லையிலா வீடளிப்பேம் இங்கிவையன்
றியுந்தீண்டச் சிவந்தா ராதிப், பல்குபெயர் கொண்டெம்மைத்
தொழுவோரும் முத்தியினிற் படர்வார் உண்மை. ௧௪

தணிவொன்று மனமுடையார் புகழ்தீண்டச் சிவந்தபிரான் சாத
ரூபர் மணிகண்டர் தபாநிதியார் பவளமலை யார்வாட்டந் தவிர்த்தார்
பாசப் பிணிவிண்ட சாகிசனர் திருமாற்குப் பேறளித்தார் எனும்
பேர் எட்டும், அணிகொண்ட ஆயிரம்பேர்க் கொப்பனவாம் அறிமதி
என் றருளிச் செய்தான். ௧௫

நம்பிரான் வாய்மலர்ந்த மொழிகேட்டுப் புண்டரிக நயனத்
தோன்றல், செம்பதுமத் தாள்இறைஞ்சிச் சென்னிமிசைக் கரங்கூப்
பிச் செங்கின் றேத்தி, எம்பிரான் இந்நகருட் கணப்பொழுது வதிந்த
வர்க்கும் இறவா வாழ்க்கை, உம்பர்வீ டளித்தருளாய் இன்னும்ஒரு
வரம்அடியேற் குதவாய் என்று. ௧௬

வள்ளலே என்பூசை கொண்டருளும் இவ்விலிங்கம் வணங்கப்
பெற்றோர், பள்ளநீர் வரைப்பின்உள சிவலிங்கம் எவ்வெவையும்
பணிந்த பேறு, கொள்ளஅருள் எனவேண்ட வேண்டுவார் வேண்
டியதே கொடுக்கும் எங்கோன், எள்ளருஞ்சீர் நெடியோனுக் கவை
யனைத்தும் அருள்செய்தவ் விலிங்கத் துற்றான். ௧௭

கொழிக்குமணித் தடந்திரைநீர் இலஞ்சிதொறும் இனவாளை
குதித்துப் பாயச், செழிக்கும்வளம் பொழிற்காஞ்சிப் பலதளியுள்
மேதகைய திருமாற் பேற்றின், வழிச்செலவின் ஒருபோது வதிந்த
வரும் மாறாத பிறவிப் பாசம், ஒழிப்பரெனில் என்றான்றும் அங்
குறைவோர் தமக்கினிஎன் உரைக்கு மாறே. ௧௮

ஆகத் திருவிருத்தம் - ௧௫௧௧.

---

௧௫. தணிவு ஒன்று மனம் உடையார் புகழ் - அமைதி பொருந்திய மனம் உடைய பெரியார்கள் புகழ்கின்ற. சாதரூபர் - பொன்போலும் வடிவினையுடையவர். சாகிசனர் - வேத சாகைகளுக்குத் தலைவர் என்ப.

௧௭. "வேண்டுவார் வேண்டியதே ஈவான்" என்பது திருமுறைத் திருமொழி (திருமு. ௬. ௨௩. ௧.).

## படல உண்மை

இப்படலத்திற் கூறப்பட்ட வரலாறு, (க) கச்சபேசப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியையும், (உ) விடுவச்சேனேசப் படல உண்மையிற் கூறப்பட்ட இரண்டாவது உண்மையையும், (ஙூ) ஆதிபீடேசப் படல உண்மையின் முற்பகுதியையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

எமது பெருமான், வந்து வணங்கினவர்களுக்கு இருமையும் அளித்துத் தங்கிய சலந்தரேசத்தின் வரலாற்றைச் சொன்னேம்; இனி, அழகிய மகளிரது ஆடல் பாடல்கள் நீங்காத வீதிகள் பொருந்திய திருமாற்பேற்றின் பெருமையைச் சொல்லுவோம்.

திருமால், குபன் என்னும் அரசன் பொருட்டுத் ததிசி முனிவர் மீது தமது சக்கரத்தை ஏவ, அது அவரது வச்சிரயாக்கையைத் தாக்கி வாய் மடிந்தது. அதனல் திருமால் கவலையுற்று, இனிச் சக்கராயுதத்திற்கு என்ன செய்வது என்று தேவர்களுடன் ஆராய்ந்து, சலந்தராசுரனை அழித்தற்கு உண்டாக்கிய சுதரிசனமென்னும் சக்கரம் சிவபிரானிடத்து உள்ளதென்று அறிந்தார். உடனே, திருமால் தேவர்களுடன் காஞ்சியம்பதிக்கு வடமேற்கில் அம்பிகை பூசித்த இலிங்கத்தை யடைந்து, நாள்தோறும் ஆயிரம் தாமரை மலர்களால், பவன் முதலிய ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி, இறைவனை அருச்சித்துவந்தனர்.

சிவபெருமான், அவரது பத்தியைக் காணவேண்டி, ஒருநாள் ஒருமலரை மறைத்தருளினர். திருமால் முன்போல அருச்சிக்கையில், ஒருதிருப்பெயருக்கு மலர் இல்லாமையால், தமது கண்ணைப் பறித்து இறைவன் திருவடியில் சாத்தினர். உடனே, சிவபெருமான் மகிழ்ந்து, நூறு யோசனையளவும் ஒளி வீசும்படி பார்ப்பதற்கரிய ஒருபெரிய வடிவங்கொண்டு, சூரிய மண்டலத்தினின்றும் இறங்கி வந்து காட்சியளித்தனர். அப்போது தேவர்கள் ஒட்டமெடுக்க, திருமால் பெருமகிழ்ச்சி கொண்டு, வீழ்ந்து வணங்கித் துதித்து நின்றனர்.

அவரைச் சிவபெருமான் பார்த்து, 'உனது பூசைக்கு மகிழ்ந்தோம்; உனக்குத் தாமரை மலர்போலும் கண்கொடுத்தோம்; நீ இனிப் 'பதுமாக்கன்' என்னும் பெயரடைவாயாக; இந்நகரமும் 'திருமாற்பேறு' எனப் பெயர் பெறுக' என்று சொல்லிச் சக்கரத்தைக் கொடுத்து, 'இதனல் எப்படிப்பட்ட

வர்களையும் வெல்வாய்; நீ சொல்லிய ஆயிரம் பெயர்களால் எம்மைப் பூசிப்ப வர்களுக்கு அழிவற்ற முத்தியைக் கொடுப்போம்; அன்றியும், நீண்டசிவந் தார், சாதரூபர், மணிகண்டர், தயாநிதியார், பவளமலையார், வாட்டந்தவிர்த் தார், சாகிசனர், திருமாற்குப் பேறளித்தார் என்னும் எட்டுப் பெயர்களும் அவ்வாயிரம் பெயருக்கு ஒப்பாகும்' என்று திருவாய் மலர்ந்தனர்.

திருமால் பின்னும் வணங்கி, 'இந்நகரத்தில் ஒரு கணநேரம் தங்கின வர்க்கும் முத்தியளிக்கவும் இவ்விலிங்கத்தை வணங்கினவர்கட்கு எல்லா இலிங்கத்தையும் வணங்கிய பயனும் அளிக்கவும் வேண்டும்' என்று வேண்டி னர். பெருமான் அவ்வரங்களைக்கொடுத்து அவ்விலிங்கத்தில் மறைந்தருளினர். அத்திருமாற்பேற்றில் வழிச்செல்கையால் ஒரு நாள் தங்கினவரும் முத்தி யடைவார்கள் என்றால், என்றும் அங்கேயே வாழ்வார்க்குச் சொல்லவேண்டுவ தென்ன!

---

# பரசிராமேச்சரப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சுழிபாடு படும்உந்தி மலைமகளும் யோகியரும் துழாயி னானும்,
வழிபாடு செயவைகும் மணிகண்டர் மாற்பேறு வகுத்தாம் பண்கள்,
கொழிபாடற் சுரும்பினஞ்சூழ் மருப்பொதும்பர் மாற்பேற்றின் குணபால் வேந்தர்,
பழிபாடிக் கொலைசெய்தோன் பரசிரா மேச்சரத் தின் பான்மை செல்வாம். க

இரேணுகை கொலையுண் டெழுநல்

சிவம்பழுத்த பிருகுமுனி இடுஞ்சாபத் தொடர்ச்சியினல் திரு மால் முன்னாள், தவமபழுத்தா லனையசம தக்கினியோ டிரேணு கைக்குத் தநய னாகி, அவம்பழுத்த குறும்பெறியும் இராமனென வைகுறுநாள் அன்னை பால்ஓர், நவம்பழுத்த தீங்குணர்ந்து தன் தாதை தனைஏவ நாடித் தேறி. உ

---

க. சுழி பாடுபடும் - நீர்ச்சுழியானது தனது பெருமையை யிழக்கின்ற. உந்தி - கொப்பூழ். பாடி - யாவரும் அறியப் பெரிதும் எடுத்துச் சொல்லி. கொலை செய்தோன் - பரசிராமன்; ஆண்டுத் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை அவன் செய்த வென்னும் பொருளில் வந்தது.

உ. சிவம் - சிவஞானம். நவம் - குற்றம். நாடி - ஆராய்ந்து. தேறி - தெளிந்து.

தாதைமொழி கடவாமை தருமமெனத் தனைஈன்று வளர்த்த தாயை, ஏதமுறக் கொலைசெய்து முனிஅருளால் மீண்டுய்ய எழுப்பி நின்றான், மேதகைய முனிமகிழ்ந்து வெகுளிதனை அறவிடுத்துச் சமாதி மேவும், போதவனை வெகுண்டெடப்திக் காத்தவீ ரியன் கோறல் புரிந்தான் மன்னோ. ௩

பாசிராமன் தவம்புரிதல்

மிடல்படைத்த திறல்திண்டோள் இராமன்அது நோக்கிநெடு வெகுளி மீக்கொண், டடல்படைத்த வயவேந்தர் குலமுழுதும் இறுப்பேன்என் றார்த்துப் பொங்கிக், கடல்படைத்த விடம்அயின் றோன் அருள்வேண்டி விரைந்தெய்திக் கலந்தார் தங்கள், உடல் படைத்த பேறெய்துங் காஞ்சியின்ஓர் இலிங்கம்அமைத் தருச் சித் தேத்தி. ௪

ஆற்றரிய தவம்ஆற்றி ஐம்புலனும் அகத்தடக்கி அமர்ந்தா னாகக், கீற்றிளவெண் பிறைக்குழவி தவழுநெடுஞ் சடிலமுடிக் கிழ வோன் அந்நாள், மாற்றரும்பே ரருட்கருணை கூர்ந்தருளி அவன் அன்பின் வாய்மை காண்பான், தோற்றமுறு மறைதேறாத் திருவடி கள் நிலந்தோய வருகின் றானால். ௫

பெருமான் புலையனாய் வருதல்

கலி விருத்தம்

மால்வரை ஈன்ற வயங்கிழை மாதும்
நூல்வரை மார்புடை நோன்றகை மாவும்
வேல்வலன் ஏந்திய வித்தக னுந்தன்
போல்வடி வந்தழு விப்புடை நண்ண. ௬

நான்மறை வள்ளுகிர் நாய்புறஞ் சூழக்
கான்மலர் சேர்த்த செருப்பெழில் காட்ட

௩. இவ்வரலாற்றை வருகின்ற படலத்தில் விளங்கக்காண்க.

௪. இறுப்பேன் - அழிப்பேன். கலந்தார் - அடைந்தவர்கள்.

௬. நூல்வரை மார்புடை நோன்றகைமா - முப்புரிநூல் பொருந்திய மார்பினையுடைய வலிய யானையாகிய விநாயகக் கடவுள். தன்போல் வடிவம் என்றது புலை வடிவத்தை.

௭. வள்ளுகிர் - கூரிய நகம். காழகம் - ஆடை. உறுத்த - பொருத்திய.

ஊன்மலி காழக மீதில்உறுத்த
தோன்மலி கச்சணி தோன்றி விளங்க ௭

ஏரியல் கொண்ட சுவல்மிசை இட்ட
வாரினன் உட்குந டையினன் மாணாச்
சீரியல் கோக்கொலை செய்புலை யன்போல்
ஆரிருள் மைத்தன மேனிய னாகி. ௮

வெங்கதிர் உச்சியின் மேவிய காலை
அங்கலுழ் பூம்புனல் ஆற்றிடை எய்திப்
பங்கமில் செய்வினை பான்மை தொடங்கும்
புங்கவ மாதவன் றன்னெதிர் போந்தான். ௯

பரசிராமன் போர்

கொட்கு மனத்தை ஒருக்கிய கொள்கை
வட்குற ஐம்பொறி வாட்டும் இராமன்
கட்கமழ் கின்ற களிப்பின னாகித்
துட்கென நேர்வரு சோதியை நோக்கா. ௧௦

வாய்திற வாது மலர்க்கை அசைப்பின்
சேயிடை ஏகெனச் செப்பலும் முக்கண்
நாயகன் அண்மையின் நண்ணினன் போபோ
நீயென விள்ளவும் நீங்கல னாகி. ௧௧

---

௮. ஏர் இயல்கொண்ட சுவல் - அழகிய இயல்பைப் பொருந்திய தோளின்மேல். உட்கும் - அஞ்சுகின்ற. மாணா - பெருமைப்படாத, இழிவான. மாணாக் கொலை என்க. கோ - பசு. ஆர் இருள் மைத்தன - செறிந்த இருள் (மேலும்) கறுத்தாலொத்த.

௯. அம் - அழகு. கலுழ் - பெருகுகின்ற. பூ - பூக்கள் நிறைந்த. இம்மூன்றும் புனலை விசேடித்து நின்றன. ஆறு - பாலியாறு. எய்தித் தொடங்கும் என்க. புங்கவன் என்பது விகாரப்பட்டு நின்றது. புங்கவன் - உயர்ந்தவன். மாதவப் புங்கவன் என்க.

௧௦. கொட்கும் - சுழல்கின்ற. ஒருக்கி - ஒருவழிப் படுத்தி. வட்குற - செயல் அடங்க. கள் கமழ்கின்ற - கள் (மிகக் குடித்தமையால்) புறத்தே நாற்றம் வீசுகின்ற. களிப்பு - மயக்கம். களிப்பினனாகி வருகின்ற என்க. துட்கென, அச்சக் குறிப்பு.

வேறு

மாயனொடு நான்முகன் மனக்குநனி சேயோ
னாயிறை சாலஅணி மைக்கண்உற லோடும்
தூயமுனி சீற்றமொடு சொல்லும்அற வாய்மை
போயபசு ஊன்நுகர் இழிந்தபுலை யாநீ. கஉ

தருக்குறுவ தென்னைஇது தண்டமது செய்வார்
ஒருத்தர்இவண் இல்லைஎன உன்னினைகொல் என்றான்
மருத்துணர் நெடுஞ்சடை மறைத்துவரு பெம்மான்
அருத்தமறை நாய்கள்தமை ஏவினன் அவன்பால். கஙு

கொற்றவடி வேற்கடவுள் கோள்இப முகத்தோன்
உற்றெழு வெகுட்சியரின் ஓடிஇரு கையும்
பற்றினர்கள் நாய்புடை வளைப்பஇரு பாலர்
வெற்றியுறு கைப்படு விழுத்தவனை நோக்கி. கச

கலிநிலைத் துறை

அந்தோ பாவம் ஐயம் இரக்கும் பார்ப்பான்நீ
நொந்தாய் போலும் என்று நுவன்றங் கிமவெற்புத்
தந்தாள் வெவ்வாய் நாயை விலக்கத் தவநோன்பின்
நந்தா வாய்மை இராமனும் நம்மான் முகம்நோக்கி. கரு

வேறு

எனைப்புடை உற்றாய் தீண்டுவ தென்ஈ தறன்அன்றால்
உனக்கிது பாவங் காண்என எங்கோன் உறுபாவம்
நினக்குள தோசொல் எனக்குள தோநீ தான்யாரே
எனக்கொரு கேள்போல் தோன்றிடு கின்றாய் எனஅன்னோன். கசா

---

கஉ. மனத்துக் கென்பதில் அத்துச் சாரியை தொக்கது.

கங. மரு - வாசனை. துணர் - பூங்கொத்து. அருத்தம் - பொருள்.

கச. கோள் இபம் - வலிய யானை. விழுத்தவன் - மேன்மை வாய்ந்த தவத்தை யுடையவன்.

கரு. ஐயம் - பிச்சை. தவநோன்பின் நந்தா - தவ விரதத்திற் கெடாத. 'இமவெற்புத் தந்தாள் விழுத்தவனை நோக்கி நொந்தாய் போலும் என்று நுவன்று நாயை விலக்க' என மேலைச்செய்யுளோடு கூட்டிப் பொருள்கொள்க.

கசா. காண், முன்னிலையசை. கேள் - உறவு.

என்னிது சொற்றனை யான்சம தக்கினி என்பான்றன்
நன்மகன் ஆகுவன் நீபுலை யோன்எனை நாணுமே
உன்னுற வாக உரைத்தது நன்றெனை ஒப்பில்லான்
மன்னிய சீர்ச்சம தக்கினி தன்மகன் நீயேயோ கஎ

கழிய எனக்குற வாயினை ஐய மிலைக்கண்டாய்
இழிவற நின்னை அளித்த இரேணுகை என்பாள்என்
பழுதறு சீர்மனை யாட்கினி யாளாம் பரிசாலே
விழுமிய நீயும்எனக்கினி யாய்காண் எனவிண்டான். கஅ

இராமன் நெருப்பெழ நோக்கி வெகுண்டனன் எல்லாரும்
பார்வுறு வேதியன் என்எதிர் பார்த்திது சொற்றாய்க்கு
விராவிய தண்டம்உன் நாக்கரி விக்கும் அதேயன்றித்
தராதல மேற்பிறி தில்லென லோடுந் தலைவன்றான். கக

யாவரும் அச்சுறு தாய்கொலை என்றுசெய் மாபாவி
ஒவில் அருட்குணம் ஒன்றிலை என்புடை வல்லாயேல்
நாவரி வாய்சிர மும்அரி வாய்இனி நாணுய்கேள்
ஓவறு கேளிர் தமைத்தழு வாதவர் ஆர்உள்ளார் உ0

பாம்புட னேனும் பழமை விலக்கார் தமராேனார்
வேம்பினை ஒப்பக் கைப்பினும் விள்ளார் உலகத்தோர்
தோம்பல பேசிச் சுற்றம் வெறுக்குங் கொடியோனைத்
தேம்பிடும் வண்ணஞ் செற்றிடல் வேண்டும் எனவெம்பி உக

சுணங்கனை யெல்லாம் மேற்செல ஏவித் துரிசோதிக்
கணங்கெழு கல்லும் ஒடும் எடுத்துக் கடிதோச்சி

---

கஅ. கழிய - மிகவும். ஐயம் - சந்தேகம். விழுமிய - மேலான. இஃது இறைவன் தமது உண்மை நிலையில் வைத்துக் கூறியதாகலின் மெய்மை யாதலறிக.

உக. பழமை - பழைய உறவு. விலக்கார், விள்ளார் என்பவற்றிற்கு உலகத்தாரென்பது வினை முதலாய் நின்றது. இத்தொடர் இரண்டனுள் முன்னது பொதுப் பொருளாயும், பின்னது சிறப்புப் பொருளாயும் நின்றன. அவற்றின் இறுதியில், 'அங்ஙனமாக' என ஒருசொல் வருவித் துரைக்க. 'கொடியோன்' என முன்னிலை படர்க்கை போலக் கூறப்பட்டது. வெம்பி- கோபித்து.

அணங்கொரு பாலான் எறிவுழி அம்மா முனிவெந்தீ
இணங்க வெகுண்டான் தண்டம் எடுத்தான் புடைவீசி. ௨௨

ஞாளிகள் தம்மை அதுக்கினன் நள்ளலர் ஊர்செற்ற
மீளியின் மேற்செல விட்டனன் வேழ முகக்கோன்அக்
கோளுறு தண்டம் முரித்திரு கூறு படுத்திட்டான்
காளியொ டாடிய கண்ணுதல் வெய்ய கதங்காட்டி. ௨௩

வன்மொழி கூறிப் புலையர் தொழுத்தை மகனும்நீ
என்மகன் நோவத் தண்டம் எறிந்தாய் தெய்வத்தால்
அன்னது பக்கது தாய்கொலை அஞ்சாய் அருளில்லாய்
நின்னை இனிக்கொல் வேனென நேர்ந்தான் கரம்ஓச்சி. ௨௪

நேர்ந்திடு காலையில் நீள்மறை ஞாளிகள் முன்னாகச்
சார்ந்து துரந்து முடுக்கலும் அத்தகை யான்அச்சங்
கூர்ந்து பதைப்புடன் ஓடினன் வெண்சிறு கூன்திங்கள்
வார்ந்த சடைப்பெரு மானும் விரைந்து தொடர்ந்துற்றான். ௨௫

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஒற்றையங் கரத்தாற் பற்றிக் கோடலும் உடையான் தீண்டப்
பெற்றுமெய்ப் புளகம் போர்ப்பப் பெரிதுளம் மகிழ்ந்தான் இச்சீர்ப்
பற்றியும் இழிஞன் தீண்டப் படுபெருஞ் சங்கை கொண்டு
முற்றவெந் துயரின் மூழ்கி வெகுண்டனன் மொழித லுற்றான். ௨௬

மறிகடல் வரைப்பின் யாங்க ணாயினும் மறையோன் றன்னைப்
பொறிஇலி இழிந்த வாழ்க்கைப் புலைமகன் வெருவ ராமே

௨௨. சுணங்கன்-நாய். துரிசு-குற்றம் பொருந்திய சொல், இழிசொல். அம்மாமுனி - அந்தப்பெருமை பொருந்தியமுனிவர். இணங்க, உவம உருபு.

௨௩. ஞாளிகள் - நாய்கள். அதுக்கினன் உதட்டைக் கடித்து (அச்சுறுத்தி). ஊர் - திரிபுரம். விட்டனன் என்றது தண்டத்தை. கோள் - வலிமை. கதம் - கோபம்.

௨௪. தொழுத்தை - அடிமைப் பெண். இப்போது தாங்கள் யாவரும் புலையராய் இருத்தலால், தமக்கு அடிமையாகும் இரேணுகையை இறைவனார் 'புலையர் தொழுத்தை' என்றார். பக்கது - ஒடிந்தது.

௨௫. துரந்து - துரத்தி. முடுக்கல் - ஓட்டுதல்.

௨௬. சங்கை - (கவலையான) எண்ணம்.

செறிஅழுக் கடைந்த கையால் தீண்டுமே அவ்வச் சாதி
பிறிவினிற் பிறழா வண்ணம் பிஞ்ஞகன் நடாத்துங் காலை. ௨௭

இன்னினி உனது சென்னி இறுவது தேற்றங் காண்டி
புன்னெறிக் குலத்தோய் என்னப் புகன்றுதன் உளத்தே வெம்பிப்
பன்னரும் புலையன் றன்பால் பட்டுளேன் அந்தோ சீசீ
என்னுடைத் தவமும் யானும் அழிந்தவா றெனப்புழுங்க. ௨௮

விழிபயில் நுதலும் முந்நீர் விடம்பொதி மிடறுங் கூர்வாய்
மழுமறிக் கரமுஞ் செங்கேழ் வடிவமும் கரந்து சாலக்
கழிபுலை வேடந் தாங்கி யெழுந்தருள் கருணைத் தோன்றல்
இழிவறும் இராமன் கூற்றுச் செவிமடுத் தினைய சொல்வான். ௨௯

வடுவறு மறைவ லாளர் மரபினை யெனில்யான் தீண்டப்
படுகுவை யல்லை நீதான் பார்ப்பனக் கடைய னாவை
அடுதொழிற் புலையன் யான்அவ் வொழுக்கினிற் சிறந்த வாற்றால்
இடுகிடைத் தாயைக் கொன்றோய் என்னினுங் கடையன்நீ காண். ௩௦

இழிஞருக் கிழிஞன் ஆனாய் எனக்குநீ அடிமை எய்திக்
கழிபெரு மகிழ்ச்சி கூர்வாய் உனக்கியான் களைக ணாவேன்
மொழிவது சரதம் என்றான் அவ்வுரை முனிவன் கேளாப்
பழியுறு கதையில் தாக்கப் படும்அர வென்னப் பொங்கி. ௩௧

அண்ணலை மலர்க்கை ஓச்சி அடித்தனன் அமரர் தேறாப்
புண்ணிய முதல்வன் றானும் பொருக்கென முனிவன் றன்னைத்
திண்ணிய இரண்டு கையும் சிக்கென ஒருகை பற்றிக்
கண்ணறக் கொடிறு வீங்கப் புடைத்தனன் கமலக் கையால். ௩௨

---

௨௭. பொறியிலி - அறிவில்லாதவன். வெருவராமே - அஞ்சாமல்.

௨௮. இன்னினி - இப்பொழுதே. சென்னி - தலை. இறுவது - அற்று விழுதல். தேற்றம் - தெளிவு. என - என்றுசொல்லி.

௩௦. அடுதொழில் - கொல்லுந் தொழில். இடுகு இடை - சுருங்கிய இடை.

௩௧. களைகண் - பற்றுக்கோடு. கதை - தண்டு.

௩௨. ஒருகை - ஒரு கையால். கண்ணற - கண்ணோட்டமில்லாமல். கொடிறு - கன்னம்.

முறைமுறை அதிரத் தாக்கி இருவரும் முனைந்து வெம்போர்
மிறையுறப் புரிதலோடும் மெல்லியற் பிராட்டி நோக்கி
இறைவன்நின் னடிக்கீழ் அன்பின் இனியவன் வருந்தா வண்ணம்
பொறைகொளப் புடைத்தி என்றாள் புனிதனும் மெலிதின் தாக்க.

கடன்அறி முனிவன் வாகை தனதெனக் கருதி வாங்கும்
வடவரைச் சிலையோன் மார்பிற் கரங்கொடு வலிதின் தாக்கி
மிடலுறத் தெழித்தா னாக விண்ணவர்க் கரிய கோமான்
கெடலருஞ் சினமீக் கொண்டான் போல்மறைக் கிழவன் றன்னை.

தன்றிடக் கரங்கள் காலிற் பிணிப்புறக் கட்டி நோன்தாள்
ஒன்றினால் உருட்டிச் சேணின் உந்தினான் அவனை வேத
வன்றிறல் ஞாளி சுற்றி வளைந்தன மருங்கு நின்ற
வென்றிகொள் மைந்தர் நோக்கி விலாவிறச் சிரித்திட் டாரால். ௩௫

திருவிளை யாட்டான் அண்ணல் சேவடிக் கமலத் தூந்தப்
பருவரும் உளத்த னாகிப் பசும்பதல் செறிய நீண்ட
தருவடித் தலத்தின் ஆவி சாம்பினான் ஒத்து வீழ்ந்தான்
மருமலர்க் கருமென் கூந்தல் இரேணுகை மைந்தன் அம்மா. ௩௬

அடங்கருந் துயரத் தாழும் அவ்வழி வேரிக் கஞ்சத்
தடம்புனல் குடைந்து வாசந் தாங்கிமென் மலர்ப்பூஞ் சோலை
இடந்தொறும் வதிந்து வீழ்ந்தார் இன்னுயிர் தளிர்ப்பச் செல்லும்
மடந்தைய ரென்ன மெல்லப் படர்ந்தது மலயத் தென்றல். ௩௭

தேம்பொதி இளங்கால் மேனி தைவரத் தெளிவு தோன்றி
மேம்படும் அயர்ச்சி நீங்க விழித்துணை விடுத்து நோக்கித்

---

௩௫. சேண் - தூரம். உந்தினான் - தூக்கியெறிந்தான். உந்தியதும் காலினாலென்க. இவ்வாறு இறைவன் பரசிராமனைவருத்தியது, தாய்க்கொலை செய்த பாவம் நீங்குதற்பொருட்டென ஊகித்தற்குச் சில குறிப்புகள் உண்டு.

௩௬. பருவரும் - துன்புறுகின்ற. தரு அடித்தலம் - மரத்தடி. ஆவி - உயிர். சாம்பினான் - ஒடுங்கினான்.

௩௭. வேரி - தேன். குடைந்து, தாங்கி, வதிந்து, என்பன மடந்தையர்க்கும் தென்றலுக்கும் பொது. வீழ்ந்தார் என்பது தம்மை விரும்பிய தலைவர் என மடந்தையர்க்குப் பொருள்தந்து, அயர்ந்து வீழ்ந்த பரசிராமன் இன்னுயிர் தளிர்ப்பச் சென்றது தென்றலென்பது குறித்துநின்றது.

தேம்பினான் இடும்பைச் செல்லை யாயினான் திரியாச் சிந்தை
ஏம்பலின் மறையோன் நெஞ்சத் திவைஇவை எண்ண லுற்றான்.

பரசிராமன் துன்புறுதல்

மறையொ ழுக்கம் வழாநெறி வாய்மையோர்க்
கிறைவ னாம்முனி வன்குலத் தெய்தினேன்
நிறைய வேதமும் அங்கம் நியாயமும்
முறையின் ஓதினன் மூவறு கல்வியும். ௩௯

பன்னெ டும்படை யாவும் பயின்றுளேன்
இன்ன னாய எனக்கிது காலையின்
முன்னை வல்வினை மூட்சி விளைந்தவா
றென்ன பாவம் எவர்இது தாங்குவார். ௪௦

என்னை ஈன்றவள் வெம்பழி எய்துறீஇக்
கொன்னும் என்னாற் சிரக்குறை பட்டனள்
பின்னர் எந்தையும் பேதை அரசனால்
சென்னி இற்றுச் சிதைந்தனன் அம்மவோ. ௪௧

ஈண்டு மற்றும் இழிஞன் புலைக்கரக்
கீண்டி என்னை அவமதி செய்திட
மூண்ட வெம்பழி மூழ்கியும் ஐயவோ
மாண்டி லேன்உயிர் வல்வினை யேனரோ. ௪௨

கவள மாகக் கடல்விடம் உண்டருள்
சிவனை எத்துநர் செல்லல் உறார்களால்
பவன்அ டித்துணை பற்றியும் என்இடர்க்
கவதி கண்டிலன் அற்புதம் அற்புதம். ௪௩

---

௩அ. தேம்பொதி - இனிமை நிறைத்த. இளங்கால் - தென்றல். தைவர - தடவ. ஏம்பல்இல் - வருந்துதல் இல்லாத.

௩௯. நியாயமும் என்புழி, முதலிய என்பது வருவிக்க. மூவறு கல்வியும் முறையின் ஓதினன் எனக்கூட்டுக. மூவறு கல்வி - பதினெட்டுவித்தை; அவற்றை மேலே (பக். ௧௬௭.) காண்க.

௪௩. செல்லல் - துன்பம். அவதி - எல்லை.

இன்பஞ் செய்தலின் சங்கரன்; எம்பிரான்
இன்பம் ஆக்கலின் சம்பு; இடும்பைநோய்
என்ப தோட்டும் இயல்பின் உருத்திரன்
என்ப ரால்அவை என்னிடைப் பொய்க்கவோ. ௪௪

பேதை நீரிற் பெரும்பிழை செய்தனேன்
ஆத லால்இவ் வருந்துயர் எய்தினேன்
பூத நாதனைப் போதப் பழிச்சினேன்
ஏதந் தீர்வல் எனத்துணிந் தேத்துவான். ௪௫

ஷை வேறு

மூவா தபடைப் புமுதற் றொழில்ஐந்
தோவா மைஇயற் றிஉயிர்த் தொகைகள்
தாவா மலமூன் றும்அறத் தருவாய்
ஆவா அடியேன் உன்அடைக் கலமே. ௪௬

படியா தியபற் பலதத் துவமாய்க்
குடிலாந் தம்அகன் றகுரூஉச் சுடரே
முடியா முடிவே முதலா முதலே
அடிகேள் அடியேன் உன்அடைக் கலமே. ௪௭

---

௪௪. சம் - சுகம்; கரன் - செய்பவன். சம் - சுகம்; பு - உண்டாக்குபவன். ருதம் - துக்கம்; திரன் - ஓட்டுபவன்.

௪௫. போத - மிகவும். பழிச்சி - துதித்து. ஏதம் - குற்றம்.

௪௬. மூவாத - கெடாத. மூன்று என்பது தொகைக் குறிப்பாய் மும்மலத்தை யுணர்த்தி நின்றது. ஆவா, இரக்கச்சொல்.

௪௭. படி - மண். குடிலாந்தம் - நாதாந்தம். பற்பல தத்துவமாய் என்றது உலகெலாமாகி நிற்றலையும், குடிலாந்தம் அகன்ற என்றது வேறாகி நிற்றலையும் உணர்த்தும். முதலா என்பது, முதல் என்னும் பெயரடியாகப் பிறந்த ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். முடிவு - முடிவைச் செய்பவன். முதல் - முதலைச் செய்பவன். முடியா முடிவு, முதலா முதல் என்பன, பிறிதினியைபு நீக்கிய விசேடணமடுத்து நின்ற பெயராய், தமக்கு ஒரு முடிவும் முதலும் பெற்று முடிதலும் முதலுதலும் எய்தி, தாம் ஒன்றற்கு முடிவும் முதலுமாய் நிற்கும் அவாந்தர காரணர்கள் போலாது, தனக்கு ஒரு முடிவும் முதலும் இன்றி முடிதலும் முதலுதலும் எய்தாது, தான் எல்லாவற்றிற்கும்

உமையாள் ஒருபால் உடையாய் முறையோ
இமையா சலவில் இறைவா முறையோ
அமையா விடமுண் டமைவாய் முறையோ
தமைநா டினர்தந் தலைவா முறையோ. சஅ

நச்சிப் பதிஎய் துபுநின் கழல்கள்
நச்சிப் பணிசீர் நரர்வா னவருள்
இச்சித் தபெறு தவரே எனினும்
பொச்சத் தொடுபோ யினர்தாம் உளரோ. சகூ

உளையுஞ் சிறியேன் இடர்உன் னலையோ
களைகண் பிறகண் டிலன்எம் பெருமான்
இளையா தினியே னும்இரங் கிடுவாய்
முளைவான் மதிவேய்ந் தமுடிச் சடையோய். ருO

பெருமான் காட்சி கொடுத்தருளல்

கலிநிலைத் துறை

என்றின்ன பழிச்சி இரந்தயர் கின்ற மேருக்
குன்றன்ன தவத்தவன் அன்பின் அளாய கொள்கை
துன்றுந்துதி வார்த்தை செவித்துணை எற்று நின்று
நன்றும்பெரி துள்ளம் மகிழ்ந்தருள் நங்கை பாகன். ருக

---

முடிவும் முதலுமாய் நிற்கும் உண்மைக் காரணனாகிய இறைவனை உணர்த்தின.

சஅ. இமயமும் மேருவைச்சார்ந்ததே யாதலால், 'இமையாசலவில் லிறைவா' என்றான்.

சகூ. நச்சி - விரும்பி. பொச்சம் - குற்றம். பெறுதவர் என்பது வினையெச்சப் பொருள்தந்தது. போயினர் உளர் என மேல்வருகின்றமையின் பெறுதவரென் றெழிந்தார். எனவே, இச்சித்த பெறுதவராய்ப் போயினர் உளரே எனினும் பொச்சத்தொடு போயினர் உளரோ என்று கூறிய வாறும். ஏகாரம் தேற்றம். எனினும் என்பது பெறுது போயினர் இல்லை என்பது விளக்கி நின்றது. ஓகாரம் எதிர்மறை. இதற்கு உரையாசிரியர் கூறியவுரை போலியென் றெழிக.

ருக. பழிச்சி - துதித்து. அளாய - கலந்த. துன்றும் - பொருந்திய.

அன்னன்எதிர் அவ்வுரு முன்உரு வாகத் தோற்றித்
தன்னேர்வடி வங்கொள் திருந்திழைத் தைய லோடு
மின்னார்வடி வேற்படை விண்ணவன் வேழப் புத்தேள்
என்னவரு மைந்த னொடுந்திருக் காட்சி ஈந்தான். ருஉ

கண்டான் முனிவன் கழிகாதல் நடுக்கம் அச்சங்
கொண்டான் எழுந்தான் துனிகூரும் இடுக்கண் முற்றும்
விண்டான் உவகைக் கடல்மூழ்கி மருட்கை மேவித்
தண்டாத அன்பிற் பெருமான்இரு தாள்ப ணிந்தான். ருங

பணிந்தான் றனை ஒல்லை எடுத்தணைத் துப்ப னிக்கோ
டணிந்தான்அருள் கூர்ந்துநம் பக்கம் இருத்தும் அன்பின்
துணிந்தாய்உளம் வேட்டது சொல்லுதி என்ன உள்ளந்
தணிந்தார்வம் உறக்கரம் அஞ்சலி சார்த்தி நின்று. ருச

பின்றாழ் சடிலத் திறையோய்பிழை ஒன்றும் இல்லா
என்றாதை யாருஞ் சமதக்கினி என்னும் அஞ்சும்
வென்றான் றனை யேகய வேந்தன் அருச்சு னன்றான்
கொன்றான் அவனைக் குலத்தோடறக் கொன்ற ழித்து. ருரு

---

ருஉ. அவ்வுருவென்றது புலையுருவத்தையும், முன்னுருவென்றது உண்மையுருவத்தையும் என்க. 'தன்னேர்' வடிவங்கொள் என்றது மைந்தனையும் அடுக்கும். தன் என்றது இறைவனை. தன்னேர் வடிவாவது புலைவடிவமும் உண்மை வடிவமுமென்க. இனித் தன்னேர் என்பதற்கு தனக்குத் தானே ஒத்தஎன் றுரைப்பாரும் உளர்.

ருங. கழிகாதல் - மிக்க அன்பு. துனிகூரும் - துன்பம் மிகுந்த. இடுக்கண் - இடர். மருட்கை - வியப்பு.

ருச. பனிக்கோடு - பிறைச் சந்திரன்.

ருரு. அஞ்சும் வென்றான் என்றது முனிவனென்னுந் துணையாய் நின்றது. கயவேந்தன் - கீழ்மைக் குணமுடைய அரசனாகிய; இவ்வாறன்றி, ஏகய வேந்தன் எனக் கொண்டு, அப்பெயருடைய அரசன் வழிவந்த அருச்சுனன் என்றுரைப்பாரும் உளர். ஏகயம் என்பது அவன் நாட்டின் பெயராதலால், அந்நாட்டிற்கு அரசனாகிய அருச்சுனன் எனலுமாம். அருச்சுனன் என்றது கார்த்த வீரியார்ச்சுனனை.

எந்தைக்கவர் தங்குரு திப்புனல் அங்கை வந்தி
நிந்திப்பறு தர்ப்பணம் ஆற்றிய சிந்தை நேர்ந்தேன்
அந்தத்திறல் உன்அடி யேற்கருள் என்ன ஐயன்
வந்திக்கும் மழுப்படை மீது கடைக்கண் வைத்தான். ௫௬

திருஉள்ளம் உணர்ந்து கணிச்சி திருந்து தன்கூற்
றொருதிண்படை ஆக்க உவற்கது நல்கி எங்கோன்
பெருவெண்களி றூளி தடுப்பினும் பேண லாரைச்
செருவின்கண் விடாது செகுத்தனை வெற்றி கொள்வாய். ௫௭

பரசுப்படை பெற்றனை அப்பெயர் பற்றி வாழ்கென்
றரவச்சடை அங்கணன் இன்னருள் செய்ய அன்னோன்
மரபிற்றொழு திவ்விலிங் கத்து மகிழ்ந்து வாழ்வாய்
புரம்அட்டருள் புண்ணிய இப்புனல் யாறு மூழ்கி. ௫௮

கற்றைக்கதிர் வெள்ளொளி கான்றிருட் கட்ட றுக்குங்
கொற்றச்சசி நாள்முதல் நாள்களிற் கொள்ளும் என்பேர்
பற்றிப்பயில் இவ்விலிங் கம்பணிந் தன்பர்க் கேன்ற
தற்றைப்பகல் நல்குநர் எய்துக ஆக்கம் வீடு. ௫௯

எனவேண்டி வணங்கி வணங்கி எழுந்த காலை
முனிவன்றனக் கவ்வரம் முற்றும் வழங்கி மூரிப்
பனிமால்வரை நல்கிய பைங்கொடி மைந்த ரோடும்
அனல்அங்கைகொள் அண்ணல் கரந்தபின் அங்கண் நீங்கி. ௬0

முனிவன்முனி வன்மழு வான்மணி மோலி வாய்ந்த
சினவெம்படை வேந்தர் தமைச்செரு விற்படுத்துக்

---

௫௬. ஆற்றிய - செய்தற்கு. திறல் - வலி. வந்திக்கும் - (யாவரும்) வணங்கும்.

௫௭. கணிச்சி - மழு. கணிச்சி உணர்ந்து ஆக்க என்க. உவற்கு - அப்பரசிராமனுக்கு. வெண்களிறூளி - இந்திரன். பேணலார் - பகைவர். செகுத்தனை - அழித்து.

௫௮. பரசு - மழு, அப்பெயர் - பரசிராமன். பரசு + இராமன் = பரசிராமன். இவ்வாறு என்றது பாலியாற்றை.

௫௯. சசிநாள் - திங்கட்கிழமை. ஏன்றது - (தம்மிலக்கு) ஏற்றது.

௬௧. முனிவன் என்பன இரண்டில் முன்னது ஒரு சொல்லாய்ப் பரசிரா

கனலன்ன செழுங்குரு திக்கய நீர்இறைத் திட்
டினமன்னு பிதிர்க்கடன் ஆற்றிமெய் இன்ப முற்றான். சுக

அப்பொற்பின் அருட்சிவ லிங்கம்மெய் யன்பின் அங்கண்
எப்பெற்றிய ரேனும் இறைஞ்சின் இறைஞ்சு முன்னர்க்
கைப்பட்டதோர் ஆமல கக்கனி போல வீடும்
செப்பற்கரி தாகிய செல்வமும் எய்தி வாழ்வார். சுஉ

ஆகத் திருவிருத்தம் - கருளசு.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்டவரலாறு, (க) பராசரேசப் படலத்துப் படல உண்மையின் முதாலவது உண்மையை முதலாகக்கொண்டு, (உ) 'தாய்க்கொலை மிகுந்த பாதகமாம்' என்பதும், (ந) 'இறைவன் தன்னை வழிபடுவாரை அவர் செய்திருந்த பன்னெடுநாள் துன்புறுதற்குரிய பாவத்தை, அவர்களைத் தண்டித்து எளிதில் நீக்குவன்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள் இறைவனுக்குச் சங்கரன் முதலிய பெயர்க்காரணம் முதலியவையுங் கூறப்பட்டன. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பார்வதிதேவியாரும் திருமாலும் வழிபட்ட மணிகண்டேசர் எழுந்தருளியுள்ள திருமாற்பேற்றின் வரலாற்றைச் சொன்னோம்; இனி, அதற்குக் கிழக்கில் உள்ள பரசிராமேச்சரத்தின் தன்மையைச் சொல்லுவோம்.

திருமால் சமதக்கினி முனிவருக்குப் புதல்வனாகப் பிறந்து இராமன் என்னும் பெயரோடு வளர்ந்திருந்த நாளில், ஒருநாள் தமது தந்தையார் தமது தாயாகிய இரேணுகையாரிடத்தில் சேர்ந்த ஒரு குற்றம் காரணமாக அவ்வம்மையாரைக் கொலை செய்யும்படி ஏவ, இராமர் ஆராய்ந்து, தந்தை சொல் கடவாமையே தருமமென்று தாயைக் கொலை புரிந்து, பின்பு தமது தந்தையார் அருளால் மீளவும் தாயை எழுப்பினர். அது நிற்க, சமதக்கினி முனிவர் பிறகு நிட்டையிலிருந்தனர். அப்போது அவரைக் கார்த்தவீரியார்ச்சுனன்

---

மன் எனவும், பின்னது இரண்டு சொல்லாய் முனிகின்ற (அழிக்கின்ற) வலிய எனவும் பொருள் தரும். குருதிக்கயம் - இரத்தக் குளம். பரசிராமர் அரசர் உதிரங்களை குருட்சேத்திரத்தில் ஐந்து குளந் தோண்டி அவற்றில் நிரப்பினர் என்ப. அவைகள் சமந்தபஞ்சக மடு எனப்படும் எனவுங் கூறுவர்.

சுஉ. அச் சிவலிங்கம் என இயையும். ஆமலகக்கனி - நெல்லிக்கனி.

கொலை செய்தனன். இராமர் அதுகண்டு மிகுந்த கோபங்கொண்டு, 'அரசர்கள் குலத்தை யெல்லாம் நான் வேரறுப்பேன்' என்று ஆரவாரித்துச் சிவபெருமான் திருவருள் பெறவேண்டி, காஞ்சியையடைந்து ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்துத் தவத்திலிருந்தனர்.

சிவபெருமான் அவர் அன்பைக் காணுதற்காக, தாம் ஒரு புலையராகி, அம்பிகை புலைச்சியாயும், கணபதி முருகன் இருவரும் புலையர் பிள்ளைகளாகியும், நான்கு வேதங்களும் நான்கு நாயாகியும் உடன்வர, இராமருக்கு முன்னேவந்தார். இராமர் அவரைக்கண்டு, வாய் திறவாது கையை அசைத்து, 'தூரமாகப் போ' என்று அறிவிக்க, இறைவனார் விலகாது நெருங்கினர். இராமர் வாயைத்திறந்து, 'போ போ' என்றனர். அப்பொழுதும் போகாது, இறைவனார் மிகவும் அருகில் சென்றனர். இராமர் மிகுந்த கோபத்தோடு, 'புலையா, இங்கு உன்னைத் தண்டிப்பவர் யாவரும் இல்லையென்று எண்ணினையோ?' என்றார். இறைவனார் நாய்களை ஏவினர். இரண்டு மைந்தர்களும் சென்று இராமரது இரண்டு கைகளையும் பற்றிக் கொண்டார்கள், இறைவி, இவ்வாறு அகப்பட்டுக்கொண்ட இராமரை நோக்கி, 'ஐயோ பாவம்! பிச்சை யெடுக்கும் பார்ப்பான் நீ மிகவும் வருந்தினை போலும்!' என்று நாய்களை விலக்க, இராமர் இறைவனை நோக்கி, 'இது உனக்குத் தருமமன்று, என்று சொல்ல, அதற்கு இறைவனார், 'நீயார்? எனது உறவினன்போல் காணப்படுகின்றாய்' என்றனர் இராமர், 'என்ன சொன்னாய்! யான் சமதக்கினி முனிவர் புதல்வனாயிற்றே' என, இறைவனார், 'அங்ஙனமாயின் எனக்கு நீ மிகவும் நெருங்கிய உறவினனாய் விட்டாய்; உனது தாயாகிய இரேணுகை என் மனைவிக்கு இனியவள்; ஆகையால் நீ எனக்கு மிக இனியவனாயினை' என்றனர்.

அதுகேட்டு இராமர் கண்களில் தீப்பொறி பறக்கக் கோபித்து, 'இவ்வாறு கூறிய உனக்குத்தண்டனை உன்னுடைய நாக்கை அரிவதேயாகும், என்றனர். இறைவனார், 'யாவரும் அஞ்சும்படியான தாய்க்கொலையை ஏற்றுச் செய்த மகாபாவியான நீ என்னை நாக்கைத்தானா அரிவாய்; கூடுமானால் தலையையும் அரிவாய்; உறவினரைக் கண்டால் யார்தான் தழுவிக்கொள்ள மாட்டார்கள்? உலகத்தவர் பாம்புடனாயினும் பழமையான உறவை விலக்க மாட்டார்கள்; அங்ஙனமாக, சுற்றத்தை வெறுக்குங் கொடியவனாகிய உன்னைத் தண்டித்தல் வேண்டும்' என்று சொல்லி, நாய்களை எல்லாம் இராமர்மேல் ஏவி, வைது, கல்லும் ஓடும் வாரி வீசியெறிந்து நின்றனர். இராமர் தீயைப் போலக் கோபித்துத் தமது யோக தண்டத்தைச் சுழற்றி நாய்களை விலக்கி, இறைவன்மேல் எறிந்தார். அத்தண்டினை விநாயகர் இரண்டு துண்டாக முறித்துவிட்டனர்.

இறைவனார் மிகுந்த கோபத்தைக் காட்டி, 'அடா புலையர்களுக்கு அடிமையானவள் மகனே, என் மகன்மேல் தண்டத்தை எறிந்தாய், அது தெய்வச் செயலால் ஒடிந்தது. தாய்க்கொலை அஞ்சாய்; இரக்கம் இலாய்; உன்னைக்கொல்வேன்' என்று கையை ஓங்கிக்கொண்டு வருங்கால், முன்னமே நாய்கள் சென்று துரத்த, இராமர் ஓடத்தலைப்பட்டார். இறைவனார் தொடர்ந்து ஓடி, ஒருகையாற் பற்றிக்கொண்டனர். அவரது திருக்கரம் பட்ட உடனே இராமருக்குத் தம்மையறியாது ஒரு பெருமகிழ்ச்சி தோன்றிற்று. ஆயினும், புலையனால் தீண்டப் பட்டோமே என்று சங்கைகொண்டு, தமக்குள்ளே ஏதேதோ வெறுத்துப் பேசிக்கொள்ள, அதனைக்கேட்ட இறைவனார், 'நீ உண்மையான பார்ப்பானாக இருந்தால் என்னால் தீண்டப்படமாட்டாய்; நீ பார்ப்பனக் கடையன்; யான் புலையர்களிற் சிறந்தவன்; ஆதலால், நீ என்னினுங் கடையனாவை; ஆகையால், எனக்கு நீ அடிமையாவாயாயின் உனக்கு யான் ஆதரவளிப்பேன்' என்றனர்.

இராமர் நாகம்போலச் சீறி இறைவனை அடித்தனர். இறைவனும் இராமரைக் கன்னத்தில் அறைய, இருவருக்கும் பெரும்போர் மூண்டது. அப்போது அம்பிகை, இறைவனுக்கு, 'இராமனை மெல்லத் தாக்குக' என்று அவர்மாத்திரம் அறியுமாறு கூறினர். இறைவன் அவ்வாறே செய்து, கடைசியாக இராமரைக் கையையும் காலையும் கட்டி ஒரு காலால் உதைத்து உருட்டி, தூரத்தில் காலால் தூக்கி யெறிந்தனர். அதைக்கண்டு மைந்தர்கள் இருவரும் விலாவிறச் சிரித்தார்கள்.

இராமர் நெடுந்தூரத்தில் பசும்புதல் அடர்ந்த ஒரு மரத்தின்கீழ் இறந்தவர்போல விழுந்து எழுந்து, கரைகாணாத துன்பத்தில் ஆழ்ந்து, தமது பிறப்பு முதலிய உயர்வுகளையும், தமது தாய் தந்தையர்க்கு நேர்ந்த தீங்குகளையும், மற்றும் பலவற்றையும் எண்ணி எண்ணித் துயரமுற்று, இனி, இறைவனைத் துதித்து எனது துன்பத்தை நீக்கிக் கொள்வேனென்று துணிந்து, 'இறைவனே! எம்பெருமானே! ஆருயிர்களின் பொருட்டு ஐந்தொழிலியற்றும் அருளாளனே! கருவிகளெல்லாங் கடந்துநின்ற கடவுளே! மங்கைபங்காளனே! நஞ்சமுதாகவுண்டு வானவரைக் காத்த வள்ளலே! அடியேன் உனது அடைக்கலம்! அடைக்கலம்!! காஞ்சியம்பதியை யடைந்து உனது கழல்களை வணங்கினோர், தாம் விரும்பியதை அடையா தொழியினும், துன்பத்தைப் பெற்றுச் சென்றவர் உளரோ! அடியேன் துயருறுதல் தெரிந்திலதோ! என்று பலவாறாகத் துதித்தனர்.

அதனால் இறைவனார் மகிழ்ந்து, உமாதேவியாரோடும் இரண்டு குமாரர்களோடும் இராமருக்குக் காட்சியளித்தனர். இராமர் கண்டு, பேரானந்தப் பெருமகிழ்வடைந்து, வணங்கித் துதித்து நின்றனர். இறைவனார், 'உனக்கு

வேண்டுவது யாது?' என்று கேட்க, இராமர், 'கார்த்த வீரியன் என்னும் அரசன், யாதொரு பிழையும் செய்யாத எனது தந்தையைக் கொன்றனன். அவனை அவன் குலத்தோடு அழித்து, அவர்கள் இரத்த நீரினால் எனது தந்தைக்குத் தருப்பணம் செய்ய விரும்பினேன்; அவ்வாற்றலை அடியேனுக்கு அருள்செய்யவேண்டும்' என்றனர். இறைவனார் தமது மழுவாயுதத்தை நோக்க, அது குறிப்பறிந்து தனது அம்சமாக ஒரு மழுவாயுதத்தை உண்டு பண்ண, அதனை அவருக்குக் கொடுத்து, 'இதனால் நீ இந்திரன் தடுத்தபோதிலும் பகைவரை வெற்றி கொள்வாயாக, நீ பரசாயுதம் பெற்றமையால், 'பரசிராமன்' என்னும் பெயர் பெறுக' என்றருளினார்.

பரசிராமர் பின்னும், 'இப்பாலியாற்றில் முழுகி, இவ்விலிங்கத்தை வணங்கினோர்க்கு அப்பொழுதே போகம் வீடு அளித்தருளவேண்டும்' என வேண்டினர். இறைவனார் அவ்வரங்களைக் கொடுத்து மறைந்தருளினார்.

பரசிராமர் தாம் எண்ணியபடி அவ்வரசர்களைக் கொன்று அவர்கள் இரத்தத்தைக் குளமாக்கி, அந்நீரால் தந்தைக்குத் தருப்பணம் செய்து இன்பமுற்றனர். அவ்விலிங்கத்தை வணங்கினோர் போகமோட்சங்களை விரைவிற் பெறுவார்கள்.

---

# இரேணுகேச்சரப் படலம்

கலி விருத்தம்

கொங்கவிழ் நறுமலர்க் கொன்றை வேணியன்
தங்கிய பரசிரா மேசஞ் சாற்றினும்
அங்கதன் தென்புடை அலைந திக்கரை
பொங்கர்சூழ் இரேணுகேச் சரத்தைப் போற்றுவாம். க

இரேணுகை மனங்கலங்கல்

கரேணுக திப்பரை கணவன் அன்பர்பா
தரேணுக வசம்உடல் தாங்கி நேர்ந்தமன் உ

---

க. நதி - பாலிநதி. கரை - கரையிலுள்ள; இரேணுகேச்சரம் என முடிக்க.

உ. கரேணு - பெண் யானை. கதி - நடை. பரை - உமையம்மை. பாத ரேணு - திருவடித் தூளி. ரேணு கவசம், உருவகம்; ககரம் மிகாமை

னரேணுக வெல்பார சிராமன் நம்புதாய்
இரேணுகை என்பவள் அழகின் எல்லையாள். உ

விச்சைதேர் பெற்றிய வரும வேந்தனார்
மெச்சிய வரத்தினில் தோன்றும் மெல்லியல்
அச்சம தக்கினி மனைவி யாயினாள்
பொச்சமில் கற்பினிற் பொலியும் மேன்மையாள். ங

மனைஅறக் கிழமையின் ஒழுகு மாணிழை
நனைமலர்க் குழலிஓர் ஞான்று பொய்கையில்
கனைதிரைத் தடம்புனல் கவரப் போந்துழி
வினைவழிக் கண்டனன் காத்த வீரியன். ச

காண்டலும் காமவேள் கணைக்கி லக்கமாய்
ஆண்டகை அவள்எதிர் அணுகி நின்றனன்
மாண்டதன் புறவடி நோக்கு மாதராள்
ஈண்டுபே ரழகுடை இறையை நோக்கலள். ரு

இனிச்செயல் எவன்என எண்ணி வேந்தர்கோன்
புனற்குமேல் விசும்பிடைப் பொலிந்து தோன்றினான்
பனித்தநீர்ப் பரப்பின்அப் பதகன் நீழலை
முனிக்குரி மரபினாள் முந்தி நோக்கினாள். சு

காமனுஞ் சிறிதுதன் மதுகை காட்டினான்
பூமலர்க் கூந்தலாள் உளத்தைப் பொள்ளென

---

வடநூன் முடிபு. மன்னர் வண் உக எனக் கண்ணழிக்க. வண் - வலி. உக - அழிய. நம்பு - விரும்புகின்ற.

ங. விச்சை - கல்வி. வரும வேந்தன் - வருமராசன்; இவனை அபேத்திய வருமன் எனவுங்கூறுவர். இரேணுகையின் தந்தை இரேணுவெனவுங் கூறுவர்.

ச. மனையறம் - இல்லறம். கிழமை - உரிமை. மாண் இழை - மாட்சிமைப்பட்ட ஆபரணம். காத்தவீரியன், சூரியகுலத்தில் உதித்த ஓர் அரசன்.

ரு. மாண்ட - மாட்சிமைப்பட்ட. புறவடி - புறங்கால். ஈண்டு - மிகுந்த.

எ. முதலடி இரேணுகை மனம் சிறிது மாறுபட்டமையைக் குறிக்கும் குறிப்பு மொழி. பொள்ளென, விரைவுக் குறிப்பு. ஆம் - நீர்.

வாய்மையின் தன்வழிப் படுத்து மாண்குடத்
தாமுகந் தெடுத்துமீண் டகத்தை நண்ணினள். எ

பரசிராமன் தாயைக் கொன்றெழுப்புதல்

எதிருறப் போந்துழி முனிவர் ஏறனன்
மதிமுக மனைவிபா ணித்த வாற்றினைக்
கதுமென அறிவினிற் கருதித் தேர்ந்தனன்
முதுநெறி கோடிய மூர்க்கன் செய்கையே. அ

வடவையின் வெகுண்டுதன் மகனை நோக்கினன்
படர்புகழ் இராமநிற் பயந்த பூங்குழல்
கடல்புரை எழில்நலங் காமுற் றண்மினன்
விடமெனத் தோன்றிய காத்த வீரியன். கூ

ஆங்கவன் இளமையும் அரசும் ஆற்றலும்
நீங்கரு மடமையும் நிறைந்த நீர்மையால்
ஈங்கிவட் பற்றுவன் எம்மை எண்ணலான்
ஓங்குயர் குணத்தினை உரைப்பக் கேட்டியால். க0

என்னுடை ஆணையின் நிற்றி யேல்இவள்
சென்னியைத் தடிமதி விரைந்து செல்கெனத்
தன்னுடைக் குருமொழி சிரத்தில் தாங்கினன்
அன்னையைக் கொடுபுறத் தணுகி னனரோ. கக

அல்லலே பெண்ணெனப் பிறத்தல் ஆங்கதின்
அல்லலே இளமையிற் சிறத்தல் ஆங்கதின்
அல்லலே கட்டழ குடைமை ஆங்கதின்
அல்லலே இரவலர் சாரபின் ஆகுதல். க௨

அரங்குறை படுத்தவாள் அங்கை ஏந்திநல்
உரங்குறை படுத்திடா உறுவன் அன்னைதன்

---

அ. பாணித்தல் - தாமதித்தல். கதுமென, விரைவுக் குறிப்பு. ஞான நோக்கால் அறிந்தனர் என்பார், 'அறிவினல் தேர்ந்தனன்' என்றார். கோடிய - பிறழ்ந்த.

கக. சென்னி - தலை. தடி - வெட்டு. மதி, முன்னிலையசை.

க௨. இரவலரென்பது, ஈண்டு வறியரென்னும் பொருட்டாய் நின்றது.

சிரங்குறை படுத்துமீண் டெய்தித் தேசிகன்
வரங்குறை படுத்திடா அடிவ ணங்கலும். கஙு

துன்பமுற் றருந்தவன் இரங்கிச் சொல்லுவான்
வன்பெரு மன்னவன் மகட்கு மைந்தன்நீ
என்பதும் என்னிடத் தன்பும் இன்றியான்
நின்புடைக் கண்டனன் அறிவின் நீடியோய். கச

என்னுரை நிறுவினை யேனுந் தாய்கொலை
நன்மையன் றுலகமும் பழிந விற்றும்என்
றன்னுரைப் படிஅவண் ஏகித் தாழ்குழல்
சென்னியைப் பொருந்துறச் சேர்த்தெ ழுப்பினே. கரு

பொன்னடி வணங்கிஅஞ் சலித்துப் போற்றிஎன்
அன்னைநின் கருத்தினுக் கடுத்த வாறுசெல்
கென்னஅங் ககற்றிஈண் டெய்து வாயெனத்
தன்னுடைத் திருமகற் கியம்பித் தாபதன். கசு

வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரதம் மாய்க்குமால்

---

கஙு. அரம் குறைபடுத்த - அரமானது அராவிய. உரம் - ஞானம். வரம்- வேண்டிய வரம்.

கச. கொலைக்கு அஞ்சாமையால் அரசகுலத் தொடர்புடைமையும், தாயை எண்ணுமையால் என்மாட்டு மிக்க அன்புடைமையும் உன்னிடத்துக் கண்டேன் என்பார், இவ்வாறு கூறினர்.

கரு. தந்தைசொல் கடவாமை அறமாயினும், தாயைக்கொலைசெய்தல் அதனின் மிக்க பாவமாதலின், 'என்னுரை...... நவிற்றும்' என்றார். தாயை எழுப்புதல் தந்தைகட்டளை யன்றென மயங்காதொழி என்பார், 'என்றன் னுரைப்படி' என்றார்.

கசு. எழுப்பினையாயினும், அவள் ஈண்டுவருதல் பொருந்துவதன்று என்பார், 'அங்கு அகற்றி ஈண்டு எய்துவாய்' எனவும், அகற்றுவையாயினும் அவள் மனம் வருந்தாதவாறு மகன் தாயினிடத்து ஒழுகும் முறையில் மாறற்க என்பார், 'பொன்னடி......செல்கென்ன' என்றார்.

கஎ. வெகுளி - கோபம், தீவினை - பாவம்.

வெகுளியே அறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறென் றில்லையால். கஎ

சமதக்கினியைக் கார்த்தவீரியன் கொலைசெய்தல்

என்றிவை தன்மனத் தெண்ணி வெஞ்சினம்
ஒன்றறத் துறந்தினி துறையுங் காலைஅப்
புன்றொழில் வேந்தன்அஃ துணர்ந்து பொள்ளென
வென்றிமா தவன்சிரந் துணித்து மீண்டனன். கஅ

இரேணுகை தெய்வமாதல்

மதலையின் ஆவிபெற் றகன்ற மாணிழை
இதமுறு கணவனை இழந்த துன்பினால்
நுதலரு மகன்வரப் பேறு நோக்கிஅப்
புதல்வன திசைவுபெற் றங்குப் போயினள். கசு

இளங்களி வண்டினம் இமிரும் பூம்பொழில்
வளங்கமழ் காஞ்சியை மருவி மைந்தனுர்
உளங்கொள வழிபடு நகரின் ஊங்குற
விளங்கொளிச் சிவக்குறி விதியின் தாபித்தாள். உ௦

மகவிடத் திருத்துபே ரன்பின் மாட்சிமை
தகவுறப் பூசனை தவாது பல்பகல்
அகமுறப் புரிவுழி அருளி ஆங்கெதிர்
நகமடப் பிடியொடும் நம்பன் தோன்றினன். உக

நுண்ணிடை இரேணுகை மடந்தை நோக்கினள்
உண்ணிகழ் காதலின் உருகிக் கைதொழூஉ

---

கஅ. அவ்வேந்தன் என்றது கார்த்தவீரியனை. அவ்வரசன் செயலுக்குப் பின் நிகழ்ந்தன முழுவதையும் தொகுத்து அஃதென்றார்.

கசு. மதலை - புதல்வன். இரேணுகை விலக்கப்பட்டாளாயினும் கணவன் மாட்டுள்ள அன்பினால் துன்புற்றனள் என்க. நுதலரு - கருதுதற்கரிய வரப்பேறு எனமுடிக்க. பரசிராமரால் அத்தலப் பெருமையை அறிந்து விடை பெற்றுச் சென்றனள் என்பார், 'புதல்வனது இசைவுபெற்றுப் போயினள்' என்றார். ஆங்கு என்றது, காஞ்சியில் பரசிராமர் பூசித்த இடத்தை.

உக. அன்பின் மாட்சிமை - அன்பினது பெருமை. தகவுற என்பது உவமைகூறுங் கருத்துடைத்து. தவாது - நீங்காது. நகம் - மலை.

வண்ணமென் குயிலினஞ் சமழ்ப்ப வாய்திறந்
தண்ணலைப் பழிச்சிநின் றறைதல் மேயினாள். ௨௨

ஏதமில் உயிர்த்தொகை எவற்றி னுக்கும்நீ
தாதைதாய் இமவரைத் தைய லாகுமால்
கோதறும் இருமுது குரவர் மாட்டெவர்
மேதகு மானம்விட் டியம்பி டாதவர். ௨௩

கலிநிலைத் துறை

அடியே னேன்பல திறத்தினும் பரிபவம் அடைந்தேன்
பொடிகொள் மேனியாய் இங்குனைப் பூசனை புரியும்
படியி லாப்பெரு வாழ்வுபெற் றெய்தினேன் படியோர்
கடித ராதருள் வைத்தெனைக் காப்பதுன் கடனால். ௨௪

புகழும் ஆக்கமும் முத்தியும் உயிர்க்கருள் புராணன்
இகழும் இன்னலுந் தவிர்ப்பவன் இருள்மலக் கிழங்கை
அகழும் நாயகன் யாங்கணும் நிறைந்தவன் அடியார்
திகழும் அன்பினுக் கெளியவன் சிவபிரான் என்றும். ௨௫

கொழுநன் யாரினும் இனியவன் என்றுகூ றுவர்அக்
கொழுநன் இவ்வுடற் குரியவன் குறிக்கில்ஆ ருயிர்க்குக்
கொழுநன் தந்தைதாய் செல்வமும் எனவுங் கொன்றைக்
கொழுந னைத்தொடைக் குளிர்சடைச் சிவபிரான் என்றும். ௨௬

இனைய வாயின பெருமைகள் எடுத்தெடுத் தெனக்கு
வினையின் நீக்கும்என் கணவன்நாள் தொறும்விரித் துரைக்கும்

---

௨௨. சமழ்ப்ப - நாண. பழிச்சி - துதித்து.

௨௩. இருமுது குரவர் - தாய் தந்தையர். மானம் - ஈண்டு நாணம்.

௨௪. பரிபவம் - துன்பம். படி - ஒப்பு. கடிதராது - விலக்காது.

௨௬. கொழுநன் - கணவன். செல்வமும் என்புழியுள்ள உம்மை, கொழுநன் முதலியவற்றொடும் இயையும். கொழுநன் என்பதே யன்றித் தந்தை முதலியனவும் ஆருயிர்க் கெனவே கொள்க. கொன்றைத் தொடையென இயையும். கொழுநனை - செழித்த தேன்.

௨௭. தன்னையே தெய்வமாகக் கருதி வழிபடும் மனைவியை, உடற்கு உறுதிபெறுமாறு காத்து இம்மைக்கண் இன்பத்தை யளித்தலே யன்றி, உயிர்க்கு உறுதியாமாறு உண்மைப் பொருளைக் கற்பித்து மறுமை இன்பம்

அனைய நிற்றொழு தய்ந்துளார் அளவிலார் அடியேன்
தனைய னுக்கும்ஈண் டரும்பெறற் பேறுதந் தளித்தாய். உஎ

ஐய னேஅடி யேனையுங் காத்தருள் அசலத்
தைய லேசகம் முழுவதும் அளித்திடுந் தாயே
உய்யு மாறெனைக் காத்தருள் உமைச்சரண் அடைந்தேன்
பொய்யர் சிந்தையின் அகப்படா போற்றிஎன் றிரந்தாள். உஅ

அம்மை அப்பராய் அகிலமும் புரந்தருள் கருணைச்
செம்ம லார்நகை முகிழ்த்தெழத் திருவுளம் மகிழ்ந்தே
எம்மை வேட்டவை விளம்புதி இமயம்ஈன் றளித்த
கொம்மை மென்முலை உனக்கவை தருமெனக் கூற. உகூ

அன்பின் ஏத்திநின் றிரேணுகை அணியிழை வேண்டும்
என்ப ணிக்கினி யாய்நனி விழுத்தக வெய்தித்
துன்பம் எண்ணில பட்டயான் தூயநின் அருளான்
மன்ப தைக்கெலாம் வழிபடு தெய்வமாய் வயங்கி. ௩0

போகம் அவ்வவர் வேண்டிய புணர்ப்பெலாங் கண்கூ
டாக நல்குபே றெனக்கருள் இவ்விலிங் கத்தின்
ஏக நாயக இனிதமர்ந் திருமையும் எவர்க்கும்
நீக னிந்தருள் புரிமதி எனநிகழ்த் துதலும். ௩க

அண்ண லார்உமை கூற்றினல் அவட்கவை உதவி
மண்ணின் மேற்கலி யுகத்துறு மானிடர் கருதும்
எண்ணம் எண்ணியாங் கியாவையும் இழிகுலத் துள்ளார்
நண்ணி வேட்டன சாலமிக் களிப்பவும் நல்கி. உ௩

---

வீட்டின்பங்களையும் அளித்தலே அறிவிற்சிறந்த கணவற்கு இயல்பகலானும், அங்ஙனம் கணவன் கற்பித்தவழி யொழுகுதலே இல்லாட்குக் கற்பாவதாகலானும், 'இனையவாயின ... எடுத்தெடுத் தெனக்கு என்கணவன் நாள்தோறும் விரித்துரைக்கும்' என்றாள்.

உகூ. எம்மை என்புழி இரண்டனுருபை ஏழனுருபாகத் திரிக்க.

௩0. விழுத்தகவு - மேம்பாடு. நனிஎய்தி - மிகவும் அடைந்து மன்பதை-மக்கட் பரப்பு.

௩க. புணர்ப்பு - ஈண்டுச் சித்தி. கண்கூடு - பிரத்தியட்சம்.

கொம்ப னாள்பெறத் தெய்வதத் திருஉருக் கொடுத்துக்
கம்ப னார்மலை மகளொடுங் கரந்தருள் செய்தார்
வம்பு வார்குழல் இரேணுகை மடந்தைஅப் பொழுதே
அம்பு விக்கொரு தெய்வதம் ஆயினள் அம்மா. ௩௩

கலி விருத்தம்

காதரா அணியினள் பலகைவாட் கையினள்
போதரா சன்முதல் பலகணம் புடையுற
வேதரா சிகள்பயில் விரிபொழிற் காஞ்சியின்
மாதராள் ஆயிடைத் தெய்வமாய் வைகினள். ௩௪

எண்ணியாங் குதவிசெய் இரேணுகை ஈச்சரத்
தண்ணலார் பெருமையார் அளவிடற் பாலரே
கண்ணும்இக் காதையைக் கற்றுரைப் போரைஅவ்
வொண்ணுதல் தெய்வதம் ஊறுசெய் யாதரோ. ௩௫

ஆகத் திருவிருத்தம் - ௧௯௦௮.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (௧) 'உலகில் உள்ள தெய்வங்களெல்லாம் இறைவனை வழிபட்டு அவனருளால் தெய்வமாய் விளங்குவனவே' என்னும் உண்மையை விளக்கும். மற்றும் இதனுள், 'அத்தெய்வங்கள் இறைவனை வழிபாடுவாரை வருத்தமாட்டா' என்னும் பொருளுங் கூறப்பட்டது. அன்றியும், ௧௨, ௧௫, ௧௭, ௨௫, ௨௯ ஆம் செய்யுட்களிற் கூறிய பொருளும் ஆண்டாண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

கொன்றை மாலை யணிந்த இறைவன் எழுந்தருளியுள்ள பரசிராமேசத்தின் வரலாற்றைச் சொன்னோம்; இனி, அதற்குத் தெற்கிலிருக்கும் இரேணுகேச்சர வரலாற்றைக் கூறுவோம்.

---

௩௪. காது - செவி; கொல்லுகின்ற எனவுமாம். பலகை - கேடகம். போதராசன், இரேணுகையின் பரிவாரங்களின் முதல்வன்.

௩௫. ஒண்ணுதல் தெய்வதம் - பெண்பாலாகிய தெய்வம். இத்தெய்வமே மாரியம்மை எனப்படும். ஊறு - தீங்கு. தெய்வதம் சொல்லால் அஃறிணையாதலின், 'செய்யாது' என்றார்.

பரசிராமர் தாய் இரேணுகை யென்பவள் அழகிற்கு ஓர் எல்லையாய் இருப்பவள். வருமராசன் புதல்வியாய்த் தோன்றிச் சமதக்கினி முனிவருக்கு வாழ்க்கைப்பட்டவள். அவள் ஒருநாள் தண்ணீர்கொண்டுவரச் சென்ற பொழுது, காத்த வீரியன் என்னும் சூரியகுலத் தரசன் கண்டு காமுற்று அவளெதிரே போய் நின்றனன். தன் புறங்காலையே நோக்கும் இரேணுகை, அவனைத் திரும்பியும் பார்த்திலள். அதனால் அவன் வானத்தி லெழுந்தனன். அவன் நிழலைத் தண்ணீரிலேகண்ட இரேணுகை சிறிது மனம் வேறுபட்டு, உடனே மனத்தை நல்வழியில் திருப்பித் தண்ணீர் கொண்டு இல்லத்தை யடைந்தனள்.

சமதக்கினி முனிவர் நடந்தவற்றை ஞானக்கண்ணாலறிந்து, மிக்க கோபங்கொண்டு பரசிராமரை யழைத்து, 'உனது தாயைக் காத்தவீரியன் விரும்பினான்; அவன் நம்மை மதியான்; எங்ஙனமாயினும் அவளைப் பற்றுவான்; நீ என் கட்டளைப்படி நடப்பாயாகில் இவள் தலையைவெட்டி யெறிந்துவா' என்றனர். பரசிராமர் அவ்வாறே செய்து வந்தனர். பிறகு சமதக்கினி முனிவர் துன்பமுற்றுப் பரசிராமரை நோக்கி, 'மைந்த, நீ தந்தை சொல் தவறாது செய்யினும், தாயைக் கொன்றனை யென்று உலகம் பழிக்கும்; ஆகையால் அவளை எழுப்பி அவளுக்கு விருப்பமான இடத்திற் செல்லும்படி அனுப்பி விட்டு வருக' என்று பரசிராமரை ஏவித் தாம் தவத்திலிருந்தனர். அதை யறிந்த காத்த வீரியன் அங்கு வந்து சமதக்கினி முனிவர் தலையை வெட்டிச் சென்றனன்.

பரசிராமரால் எழுப்பப்பட்ட இரேணுகை கணவனையிழந்தமையால் வருந்தி, பரசிராமர் சொல்லால் காஞ்சியை யடைந்து ஓர் இலிங்கம் தாபித்துப் பூசித்து, இறைவன் அம்மையாரோடு வந்து அருள் செய்ய, தான் உலகத்தில் சில தாழ்ந்த மக்களால் வழிபடும் தெய்வமாய் இருந்து அவர்கள் வேண்டியவற்றைக் கொடுக்கவும், தான் பூசித்த இலிங்கத்தில் அம்மையப்பர் எழுந்தருளியிருந்து யாவர்க்கும் போக மோட்சங்களைக் கொடுக்கவுமாகிய வரங்களைப் பெற்றுத் தெய்வமாயினள். அவ்விரேணுகேச்சரத்தின் பெருமையை யாவர் சொல்லவல்லவர்! இக்கதையைக் கற்றுப் பிறருக்குச் சொல்லுவோரை அத்தெய்வம் வருத்தாது என்க.

---

# யோகாசாரியர் தளிப் படலம்

கலி விருத்தம்

உரவுநீர்ச் சடைமுடிப் பகவனார் உமையொடும்
விரவிவாழ் இரேணுகை ஈச்சரம் விளம்பினும்
பரசிரா மேச்சரத் தெனாதுபா வியோகமாக்
குரவர்சூழ் பஃறளித் திறன்இனிக் கூறுவாம். ௧

சுவேதனே சுவேதகே துக்கருத் தொடர்பிலாச்
சுவேதசி கன்சுவே தாச்சுவன் தூயசீர்ச்
சுவேதலோ கிதனெடுஞ்* சுதாரனே சாதனம்
சுவேதநீற் றணியொளிர் துந்துமி முதலியோர். ௨

எயும்மெய்த் தவம்அறா இலகுளீ சன்முடி
வாயினோர் மற்றும்எண் ணில்லவர் அகிலமும்
பாயசீர் யோகமாக் குரவர்கள் படைமழுத்
தூயவன் கூற்றினில் தோன்றியோர் இவர்கள்தாம். ௩

யோகமாக் குரவர்தம் உயர்பதத் தெய்தவும்
மோகவல் வினையுறா முத்தியின் வைகவும்
போகுவெண் கயிலையின் மெய்த்தவம் புரிவுழி
ஏகநா யகன்அவர்க் கெதிரெழுந் தருளியே. ௪

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அம்மநீர் கச்சி மூதூர் அணுகிமா நீழல் வைகும்
எம்மடி வழுத்தி வெவ்வே றிலிங்கம்அங் கிருத்திப் போற்றி
மம்மர்தீர் தவங்கள் ஆற்றி வைகுமின் ஆண்டு நாங்கள்
தம்மனக் கருத்து முற்றத் தருதும்என் றருளிச் செய்தான். ௫

௧. உரவு - பரவிய. பல்+தளி=பஃறளி.

௨. சாதனமென்றது உருத்திராக்கத்தை. சுவேத நீறு - வெண்ணீறு.

* 'நெடும்' எனவும் பாடம்.

௩. மழுத் தூயவன் - உருத்திரன். கூறு - அம்சம்.

௪. யோகாசாரியர் பதமென்பது ஒருபதவி. போகு - நீண்ட.

௫. அம்ம கேட்பித்தற்பொருட்டு. முற்ற - முடியுமாறு. தருதும் - அருள் செய்வோம்.

மற்றவர் தொழுது போற்றி வள்ளலை விடைகொண் டேகி
முற்றிழை மகளிர் நல்லார் ஊடலின் உகுத்த முத்தங்
கற்றைவெண் ணிலவு கான்று கனை இருள் பருகு நீண்ட
பொற்றட நெடுந்தேர் வீதி பொலிதிருக் காஞ்சி நண்ணி. கூ

முழங்கிசை ஞிமிறு பாய முகைமுறுக் குடைந்து தீந்தேன்
வழங்குபூங் கமலத் தெண்ணீர் மணிச்சிவ கங்கை தோய்ந்து
பழங்கண்நோய் அறுக்கும் மாவிற் பகவனை வழிபா டாற்றித்
தழங்கொலி மறையின் ஆற்றால் தனித்தனி இலிங்கஞ் செய்தார். எ

முன்பொரு காலத் தங்கண் முதல்வனைத் தொழுது மூன்றாற்
றைம்பதிற் றைவர் யோகா சாரிய ராகி முத்தி
தம்பத மாகக் கொண்டார் அவரெனத் தாமும் அன்பின்
நம்பனைத் தத்தம் பேரால் நலத்தக நிறுவிப் போற்றி. அ

கறைபணி மிடற்றுப் புத்தேள் கருணையால் உகங்கள் தோறும்
நிறைபுகழ் படைத்த யோகா சாரிய நிலைமை எய்திக்
குறைவிலா முத்தி பெற்றார் ஆங்கவர் குலவிப் போற்றும்
இறையவன் தளிகள் யார்க்கும் வீடுபே றெளிதின் நல்கும். கூ

வென்றிகொள் இனைய வெல்லாம் பரசிரா மேச்ச ரத்தின்
தென்றிசை தொடங்கிச் சார்வ தீர்த்தத்தின் வடபால் காறும்
ஒன்றருஞ் சுவேத லிங்க முதல்இல குளீசம் ஈறாத்
துன்றிடும் இவற்றுள் மேலாச் சொலப்படும் இலகு ளீசம். க௦

ஆகத் திருவிருத்தம் - கரூகஅ.

---

கூ. பருகு வீதி, நீண்ட வீதி என்க.

எ. ஞிமிறு - வண்டு. வழங்கும் - ஒழுகுகின்ற.

அ. யோகாசாரிய நிலைமையடைந்தோர் ஒவ்வொரு மனுவந்தரத்திலும் இருபத்தொட்டாங் கலியுகத்தில் பெருமக்களாய்த் தோன்றிப் பல அருஞ் செயல்கள்செய்து முத்திபெறுதல் வழக்கென்றும், திருஞான சம்பந்தர் முதலியோரும் அப்பெருமக்களாவார் என்றும் கூறுவர்.

க௦. பால் - கரை. துன்றிடும் - பொருந்தும்.

### படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'எத்தகைய சிறந்த பதவியும், முத்தியும் இறைவன் வழிபாட்டினால் கிடைப்பனவாகும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

### உரை நடை

இறைவன் இறைவியோடு எழுந்தருளியிருக்கும் இரேணுகேச்சர வரலாற்றைக் கூறினோம்; இனி, அநந்தத் தெற்கில் யோகாசாரியர்கள் பூசித்த தலங்களின் சிறப்பைச் சொல்லுவோம்.

சுவேதன், சுவேதகேது, சுவேத சிகன், சுவேதாச்சுவன், சுவேத லோகிதன், சுதாரன், துந்துமி முதல் இலகுளீசன் ஈறாக உள்ளவர்களும், மற்றும் பலருமாகிய உருத்திராம்சமாகத் தோன்றிய யோகாசாரியர்கள், யோகாசாரிய பதவியைப் பெறவும், முத்தியடையவும் வேண்டித் திருக்கைலையில் தவம் செய்தார்கள். இறைவனார் அவர்களுக்கு முன்னே தோன்றி, 'நீங்கள் காஞ்சியை அடைந்து, தனித்தனி இலிங்கம் அமைத்து வழிபட்டால், உங்கள் கருத்தை முற்றுவிப்போம்' என்றருளினர். அவர்கள் அங்ஙனமே காஞ்சியை அடைந்து பூசித்துத் தாம் விரும்பியபேற்றை அடைந்தனர். அத்தலங்கள் யாவர்க்கும் எளிதில் மோட்சத்தைத் தரும். அத்தலங்கள் பரசிராமேசத்திற்குத் தெற்கிலிருந்து சருவதீர்த்தத்தின் வடகரை வரையிலும் சுவேதேச்சரம் முதல் இலகுளீசம் ஈறாக உள்ளன. அவற்றுட் சிறந்தது இலகுளீசமாகும்.

---

## சருவ தீர்த்தப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருட்கொடும் பிறவி மாற்றும் இலகுளீச் சரம்ஈ றாகக்*
தருக்கறு காட்சி யோகா சாரியர் தளிகள் சொற்றும்
மருத்துதை மலர்மேற் பூத்த வளம்புனல் குடைவோர் தங்கள்
கருத்தவிர் சருவ தீர்த்தக் கரைபொலி தலங்கள் சொல்வாம். க

காமேச்சரம்

குடவளை அலறி ஈன்ற குரூஉமணித் தாளக் குப்பைப்
படலைவெண் ணிலவு கான்று படர்இருள் இரிப்ப ஞாங்கர்

க. மரு - வாசனை. துதை - நிறைந்த. கரு - பிறப்பு. * 'இலகுளீச் சரீசம் ஈறு' எனவும் பாடம்.

உடைதிரை ஒதுக்குந் தெண்ணீர் ஒலிபுனற் சருவ தீர்த்தத்
தடநெடுங் கரையிற் காமேச் சரமெனுந் தலம்ஒன் றுண்டால். உ

கருப்புவில் குழைய வாங்கிக் கடிமலர்ப் பகழி தூண்டும்
அருப்பிளங் கொங்கைச் சேனை அடல்வலிக் காமன் முன்னாள்
மருப்பொதி இதழிக் கோமான் மனத்திடைப் பிறந்தான் ஐயன்
திருப்பதம் இறைஞ்சிப் போற்றி செய்துமற் றிதனை வேண்டும். ௩

மகப்பயில் பிறவிக் கேது வாகிவண்* புணர்ப்பு நல்கி
இகப்பில்சீர் இரதிக் கென்றும் இனியனுப் கொடுப்போர் கொள்
அகத்திருந் தினைய செய்கை ஆற்றிஎன் ஆணை மூன்று [வோர்
சகத்தினுஞ் செலுத்தும் பேறு தந்தருள் என்னக் கேட்டு. ௪

மற்றெமக் கினிய மூதூர் வளம்பயில் காஞ்சி அங்கண்
உற்றெமை வழிபட் டேத்தி ஊங்குவை பெறுகென் றெங்கோன்
சொற்றலும் விரைந்து காஞ்சித் தொன்னகர் எய்திக் காமன்
அற்றமில் சருவ தீர்த்தத் தடந்திரை அலைக்குங் கோட்டின். ரு

தவாதபே ரன்பிற் காமேச் சரன்றனை இருத்திப் போற்றி
உவாமதி முகத்து மென்றோள் ஒள்ளிழை உமையாள் தன்னைக்
கவான்மிசைக் கொண்ட பெம்மான் கண்ணருள் கிடைத்து நெஞ்சத்
தவாவிய பேறு முற்றும் அங்கிலை எய்தி னனால். ௬

---

உ. குடவளை - குடம்போலும் சங்கு. குரூஉ - நிறம். இரிப்ப - ஓட்ட. திரை தாளக் குப்பையை இருள் இரிப்ப ஒதுக்கும் சருவதீர்த்தம் என்க. நீராகிய புனலென்க.

௩. கரும்பு + வில் = கருப்புவில். வாங்கி - வளைத்து. அருப்புக் கொங்கை - அரும்புபோலுந் தனம். மனத்திற் பிறந்த காரணத்தால் மன்மதனைச் சித்தசன் என்பர்.

௪. ஏதுவாக என்பதன் ஈற்று அகரம் தொக்கது. இவண் - இவ்வுலகில். புணர்ப்பு - புணர்ச்சி. இகப்பில் - நீக்குதலில்லாத. கொடுப்போர் கொடுக்க விரும்புதலும், ஏற்போர் ஏற்க விரும்புதலும் காமக்கடவுளாலாவன என்பது பௌராணிகமதமாதல் வேண்டும். *'வண் புணர்ப்பு' எனவும் பாடம்.

ரு. அலைக்கும் - மோதுகின்ற. கோடு - கரை.

௬. உவாமதி - பௌர்ணிமைச் சந்திரன். கவான் - துடை.

ஏதமில் உயிர்கள் எல்லாந் தோற்றுதற் கேது வாகிக்
கோதறத் தானம் ஈவோன் கொள்பவன் தானுந் தானாய்
மேதகும் இறைமை பெற்று விளங்கினான் மறையோர் ஏற்கும்
போதுளத் தவனை எண்ணிற் புரைதவிர்ந் துய்வார் அன்றே. எ

தீர்த்தேச்சரம்

பரவினோர் விழைந்த காமப் பயன்அளித் தருளுங் காமேச்
சரநகர் வந்த வாறு சாற்றினம் இதன்பா லாகப்
பரிதிமான் தடந்தேர் ஈர்க்கும் பரிக்குளம் பிடறிப் போய
திருமணிச் சிகரக் கோயில் வயங்குதீர்த் தேசம் உண்டால். அ

குழைஉதை நெடுங்கண் செவ்வாய்க் கோமளச் சயிலப் பாவை
விழைதகத் தழுவு மாற்றால் விரிசினைத் தனிமா நீழல்
மழைதவழ் மிடற்றுப் புத்தேள் வருகென விளித்த ஞான்று
தழைபுனல் தலைவ னோடுந் தடநதி வடிவந் தாங்கி. கூ

விழுமிய அண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந் தீர்த்தம்
முழுவதுந் திரண்டு காஞ்சி முதுநகர்க் குடபால் எய்திக்
கொழுமலர்த் தனிமா நீழற் குழகனை உமையாள் வல்லைத்
தழுவலும் எழுந்த வேகம் தணிந்துமீட் டல்கி அங்கண். க0

கலைமதிக் குழவி மோலிக் கடவுளைத் தீர்த்த ராசத்
தலைவனென் றிருத்தி வீங்குந் தடம்புனல் அருவிக் குன்றச்
சிலைநுதற் பிடியி னோடும் அருச்சனை திருந்தச் செய்ய
மலையினைக் குழைத்த திண்தோள் வள்ளலும் எதிரே நின்று. கக

இற்றைஞான் றாதி யாக நம்மிடத் தெய்தி மூழ்கிச்
செற்றமில் முனிவர் விண்ணோர் தென்புல வாணர் தங்கட்
குற்றநீர்க் கடன்கள் நல்கி உறுபொருள் உறுநர்க் கீந்து
மற்றெமை ஈண்டுக் காண்போர் முத்தியின் மருவச் செய்கேம். கஉ

---

எ. புரை யென்றது, ஆசையால் ஏற்குங் குற்றத்தை.
அ. பரிதிமான் - சூரியனாகிய மகான். காமப்பயன்-விருப்பமாகியபயன்.
கூ. உதை - மோதுகின்ற. புனல் தலைவன் - வருணன்.
க0. வல்லை - விரைவில். அல்கி - தங்கி.
கக. குன்றப் பிடி - உமை. சிலை நுதல் - வில்போலும் நெற்றி.
கஉ. செற்றம் - கோபம், உறுநர் - (இரக்க) வந்தடைந்தோர்.

இன்னமும் புகலக் கேண்மின் எனப்பெருங் கருணை கூர்ந்து
தன்னிகர் பிராட்டி ஆரத் தழீஇக்கொளச் செய்த வாற்றால்
அன்னதற் கியையக் கைம்மா றளிப்பவன் என்ன அங்கேழ்ப்
பொன்னவிர்* சடையோன் தீர்த்தப் புனல்களுக் கிதனை நாட்டும். கங

கொலைகளிற் கொடுமை சான்ற பார்ப்பனக் கொலைவல் வீரக்
கொலைகருக் கொலைதாய் தந்தைக் கொலைகவைக் கோட்டு நல்லான்
கொலைமுதல் பிறவும் நீங்குங் கொடுவினைப் பாசத் தெவ்வைக்
கொலைபுரி மரபின் நும்பாற் குடைந்தெமைத் தொழப்பெற்றோர்க்கே.

முரிதிரை சுருட்டு தெண்ணீர் நும்மிடத் தொருகால் மூழ்கி
விரிபுகழ்த் திருவே கம்பம் விழைதகக் காணப் பெற்றோர்
உரிமையின் ஆன்ற நாற்கூற் றுறுதியும் பெறுவர் மீள
அரிவையர் அகட்டுள் எய்தா தெம்மருள் அகட்டின் வாழ்வார். கரு

என்றிது நிறுவித் தீர்த்த நாயகன் இலிங்கத் துற்றான்
அன்றுதொட் டங்கண் மேவும் அலங்கொளிச் சருவ தீர்த்தத்
தின்றடம் புனலின் மூழ்கி எழில்வளர் திருவே கம்பஞ்
சென்றுகண் டிறைஞ்சப் பெற்றோர் செய்கொலைத் தீமை தீர்வார்.

சருவதீர்த்தப் பெருமை

தந்தையைச் செகுத்த பாவம் தணந்தனன் பிரக லாதன்
முந்தையோர்ச் செகுத்த பாவம் வீடணன் முழுதுந் தீர்ந்தான்
மைந்துடைப் பரசி ராமன் வீரரை வதைத்த பாவஞ்
சிந்தினன் சருவ தீர்த்தச் செழும்புனல் குடைந்த பேற்றால். கஎ

அருச்சுனன் துரோண மேலோ னாதியர்ச் செகுத்த பாவம்
பிரித்தனன் அசுவத் தாமன் பெறுங்கருச் சிதைத்த பாவம்
இரித்தனன் உலகில் இன்னும் எண்ணிலர் சருவ தீர்த்தத்
திருப்புனல் குடைந்து தீராக் கொலைவினைத் தீமை தீர்ந்தார். கஅ

---

கங. * 'பொன்னவிழ்' எனவும் பாடம்.

கச. ஆன் - பசு. பாசத் தெவ் - பாசமாகிய பகை.

கரு. அகடு இரண்டனுள் முன்னது வயிறு, பின்னது நடு.

கஎ. முந்தையோர் - தமையன்மார். வீடணன் - விபீடணன்.

கஅ. அச்சுவத்தாமன் சந்திரகுலத்தரசர் மனைவியரின் கருக்களை எல்லாம் சிதைத்தமையைப் பாரதம் சௌப்திக பருவத்திற் காண்க.

சிலைநுதல் மகளிர் மைந்தர் இன்றும்அத் தெண்ணீர் மூழ்கின்
கொலைவினைப் பாவந் தீர்வார் குரைகடற் பரப்பென் றெண்ணித்
தலைவரு முகிலின் கூட்டந் தனித்தனி வாய்மடுக்கும்
அலைபுனல் சருவ தீர்த்தப் பெருமையார் அளக்கற் பாலார். ககூ

### கங்காவரேச்சரம்

மற்றதன் கரையின் கீழ்பால் வருணன்எம் பெருமான் றன்னை
முற்றிழைக் கங்கை யாளோ டிருத்திமுன் தொழுதூ நீருள்
உற்றுறை உயிர்க்கும் நீர்க்கும் ஒருதனித் தலைவ னாகப்
பெற்றனன் அதன்பேர் கங்கா வரமெனப் பிறங்கு மாலோ. உ0

### விசுவநாதேச்சரம்

பாற்றினம் மிடைந்த கூர்வாய்ப் படைமழுக் குடங்கைப் புத்தேள்
மாற்றருங் கருணை முந்நீர் வாரியின் நிறைந்து தேங்கும்
நாற்றிசை அணவுஞ் சீர்த்தி நளிபுனல் சருவ தீர்த்த
மேற்றிசைக் கரைக்கண் மேவும் விச்சுவ நாதத் தானம். உக

மலர்தலை உலகின் முக்கண் வானவன் இனிது வைகுந்
தலமெலாம் மருவுங் காஞ்சி* விச்சுவ நாதன் றன்பால்
கலிபுகழ் விசுவ நாத முதல்வனுங் காசி தன்னில்
இலகொளி மாடக் காஞ்சி நகர்எமக் கினிதென் றெண்ணி. உஉ

---

ககூ. தலைவரும், ஒருசொல் நீர்மைத்து.

உ0. கங்காவரம் - கங்கைக்கு நாயகர் எழுந்தருளியுள்ள தலம்.

உக. பாற்று இனம் - பருந்துக் கூட்டம். கருணைவாரி என இயையும். முந்நீர், வாரிக்கு இன அடை. முந்நீர் என்பதற்கு ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீர் என்பது பொருள் என்பர். அடியார்க்கு நல்லார் அதனைக் காரணங் காட்டி மறுத்துப் படைத்தல், காத்தல், அழித்தலென்னும் மூன்றுமுள்ள நீர் என்பர்.(சிலப்.ஆய்ச்.உள்.ந.) இப்பொருள் இறைவன் கருணைக்கும் பொருந்துதல் காண்க. வாரி - கடல். இன், ஒப்புப்பொருளில் வந்த ஐந்தனுருபு.

உஉ. 'தலமெலாம் காஞ்சி விச்சுவநாதன்பால் மருவும்' எனக் கூட்டுக. * 'காசி விச்சுவநாதன்' எனப் பழைய பதிப்பிற் காணப்படுகின்றது. அதனை உரையாசிரியர் பிழையென்று கூறி' 'காஞ்சி விச்சுவநாதன்' எனப் பாடங் கொண்டுள்ளார்.

வெள்ளிவெண் கயிலை யாதி இடங்களின் மேன்மை சான்ற
அள்ளலம் பழனக் காஞ்சி யணிநகர்ச் சருவ தீர்த்தப்
பள்ளநீர்க் கரைக்கண் எய்தி வைகினன் பரிவால் அங்கண்
வள்ளலைத் தொழுது முத்தி மண்டபங் காண்போர் முத்தர். உந

முத்தி மண்டபம்

மண்டப வருநாள் செல்லாக் காஞ்சிமா நகரின் மூன்று
மண்டபந் திகழும் முத்தீச் சரத்தெதிர் வயங்கும் முத்தி
மண்டபம் ஒன்று சார்வ தீர்த்தத்தின் மருங்கு முத்தி
மண்டபம் ஒன்று கண்டோர் தமக்கெலாம் வழங்கும் முத்தி. உச

இராமேச்சரம் - பரமாநந்த மண்டபம்

உருவமென் கமலம் பூத்த உயர்சிவ கங்கைத் தென்பால்
திருவிரா மேச்ச ரத்துச் சிவபிரான் திருமுன் னாக
இருவினைப் பிறவிக் கஞ்சி எய்தினோர்க் குறுபே ரின்பம்
மருவுறும் பரமா நந்த மண்டபம் ஒன்று மாதோ. உரு

மண்டபம் இனைய மூன்றும் வைகறை எழுந்து நேசங்
கொண்டுளம் நினையப் பெற்றோர் உணர்வெலாங் கொள்ளை கொண்ட
பண்டைவல் வினையின் வீறும் பற்றிய மலங்கள் மூன்றும்
விண்டுபே ரின்ப வெள்ள வேலையில் திளைத்து வாழ்வார். உசு

ஆகத் திருவிருத்தம் - கரூசச.

---

## படல உண்மை

இப் படலத்திற் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'எவ்வேந் தேவர்கள் ஆற்றும் செயலும் இறைவன் வழிபாட்டின் பேறே' என்னும் உண்மையை யும், (உ) இட்ட சித்தீசப்படல உண்மையிற் கூறப்பட்ட இரண்டாவது உண் மையையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

உங. 'பரிவால் தொழுது' என்க.

உச. மண்தப வருநாள் செல்லா - உலகம் அழிய வருங்காலம் தன் னிடத்துப் புகாத, எனவே ஊழிக் காலத்திலும் அழியாத. 'கண்டோர் தமக்கெலாம் முத்தி வழங்கும்' என்பதனை வருஞ் செய்யுளின் இறுதியிற் கூட்டிப் பொருள்கொள்க.

## உரை நடை

செருக்கற்ற மெய்யறிவினையுடைய யோகாசாரியர்கள் வழிபட்ட தளிகளின் பெருமையைச் சொன்னோம்; இனி, சருவ தீர்த்தக் கரையிலுள்ள தலங்களின் பெருமையைச் சொல்வோம்.

### காமேச்சரம்

இறைவன் மனத்தில் தோன்றிய மன்மதன் இறைவனை வணங்கி, 'நான், உயிர்கள் பிறத்தற்குக் காரணமாக ஆண் பெண் சேர்க்கையை உண்டாக்கி, இரதி தேவிக்கு இனியவனாய் இருந்து, ஈவோர் ஏற்போர்களுடைய உள்ளத்திருந்து அவற்றைச் செய்வித்து, மூன்று உலகத்திலும் என் ஆணையைச் செலுத்தும் வரத்தைக் கொடுத்தருள வேண்டும்' என்று வேண்டினான். இறைவனார், 'இதனை நீ காஞ்சியை அடைந்து எம்மை வழிபட்டுப் பெறுக' என்றருளிச்செய்ய, மன்மதன் அங்ஙனமே காஞ்சியை அடைந்து, சருவ தீர்த்தக் கரையில், 'காமேச்சரன்' என்னும் பெயரால் ஒரு இலிங்கம் தாபித்துப் பூசித்துத் தான் கருதிய வரங்களைப் பெற்றான். தானம் வாங்கும் பிராமணர் தானம் வாங்கும்போது அவனை நினைத்தால், ஆசையால் வாங்கும் அக்குற்றத்தினின்றும் நீங்குவர். அத்தலம் 'காமேச்சரம்' எனப்படும்.

### தீர்த்தேசசரம்

காமாட்சியம்மையார் மாவடியில் தம்மைத் தழுவுதற் பொருட்டுத் திருவேகம்பர் தங்களை அழைத்தபோது, அண்டத்தின் அகத்தும் புறத்தும் உள்ள எல்லாத் தீர்த்தங்களும் திரண்டு நதியுருவங்கொண்டு காஞ்சியம்பதிக்கு மேற்குத் திக்காக வந்து, அம்மையார் இறைவனைத் தழுவிக்கொண்ட பின்பு வேகந்தணிந்து அங்கேயே தங்கி, இறைவனை, 'தீர்த்தராசன்' என்னும் பெயரால் வழிபாடு செய்தன. அவைகளுக்கு இறைவன் வெளிப்பட்டு, 'இன்று முதலாக நம்மிடத்தில் மூழ்கி, முனிவர் தேவர் பிதிரர்களுக்குத் தருப்பணம் செய்து, தானம் கொடுத்து எம்மை வணங்கினவர்கள் முத்தியையடையச்செய்வோம். அன்றியும் பிரமகத்தி, வீரகத்தி, சிசுகத்தி, கோகத்தி முதலிய பெருங்கொலைப் பாவங்களும் நம்மிடத்தில் முழுகி எம்மைக் கண்டவர்களுக்கு நீங்கும். நம்மிடத்தில் ஒருகால் முழுகித் திருவேகம்பத்தைத் தரிசித்தோர் அறம் முதலிய நாற்பயன்களும் பெற்று, மீண்டு ஒரு தாய் வயிற்றிற் புகாது எமது திருவருளில் வாழ்வார்கள்' என்று அருளிச் செய்தனர். அன்று முதல் சருவ தீர்த்தத்தில் முழுகித் திருவேகம்பத்தை வணங்கினோர் கொலைப் பாவத்தின் நீங்குவார். அத்தீர்த்தத்தில் முழுகினமையால், பிரகலாதன் தந்தையைக் கொன்ற பாவத்தையும், விபீஷணன் தமையன் மார்களைச் கொன்ற பாவத்தையும், பரசிராமன் வீரரைக்கொன்ற பாவத்தை

யும், அருச்சுனன் குரு முதலியோரைக் கொன்ற பாவத்தையும், அச்சுவத்தாமன் கருவையழித்த பாவத்தையும் நீக்கிக்கொண்டார்கள். மற்றும் பலர் அச்சருவதீர்த்தத்தில் முழுகிக் கொலைப்பாவத்தின் நீங்கினர். அத்தீர்த்தத்தின் பெருமையை யாவர் அளக்கவல்லார்!

கங்காவரேச்சரம்

அத்தீர்த்தத்தின் கிழக்குக் கரையில், வருணன் கங்காதேவியோடு இறைவனைப் பூசித்து நீருக்கும், நீர்வாழ் உயிர்களுக்கும் தலைவனுதலைப் பெற்றனன். அத்தலம் 'கங்காவரேச்சரம்' எனப்படும்.

விசுவநாதேச்சரம்

அத்தீர்த்தத்தின் மேற்குக் கரையில் விசுவநாதேச்சரம் உள்ளது. அவ்விடத்தில், உலகத்தில் உள்ள சிவதலங்கள் எல்லாம் சூக்குமமாகப் பொருந்தியிருக்கும். அத்தலம் காசி விசுவநாதரும் காசியிலும் காஞ்சி சிறந்ததென்று வந்து தங்கியதாகும். அவ்விடத்தில் முத்தி மண்டபம் ஒன்று உளது. அவ்விறைவனை வணங்கி அம் முத்திமண்டபத்தைக்கண்டவர்கள் முத்தராவார்கள்.

முத்தி மண்டபம்

ஊழிக்காலத்திலும் அழியாத காஞ்சியம்பதியில் மூன்று மண்டபங்கள் உள்ளன. அவை: முத்தீசர் சந்நிதியில் இருக்கும் முத்தி மண்டபம் ஒன்று; சருவதீர்த்தக் கரையில் உள்ள முத்தி மண்டபம் ஒன்று; சிவகங்கைக்குத் தெற்கில் இருக்கும் இராமேச்சரத்திலுள்ள இறைவன் சந்நிதியில் இருக்கும் பரமானந்த மண்டபம் ஒன்று. இம் மூன்று மண்டபங்களையும் விடியற்காலையில் எழுந்து அன்போடு நினைப்பவர்கள் பாசத்தின் நீங்கி முத்தியை அடைவார்கள்.

---

# நவக்கிரகேசப் படலம்

கலிநிலைத் துறை

கிழங்குபெரும் புனற்பரவைச் சருவ தீர்த்தத் தடங்கோட்டின்
முழங்குமறித் திருக்கரத்து முதல்வன் இடங்கள் எடுத்துரைத்தாம்
வழங்குவளிக் கடவுளும்ஒன் பதிற்றுக் கோளும் வழிபட்ட [வாம்.
குழங்கல்நறுந் தொடைக்கொன்றைக் குழகன் தளிகள் இனிப்புகல்

---

க. வளிக்கடவுள் - வாயுதேவன். கோள் - கிரகம். குழங்கல் - ஒரு மாலை.

சூல தீர்த்தம்

பைத்தலைப்பூண் வயிரவனுர் பணைத்த தடந்தோள் அந்தகனை
முத்தலைச்சூ லத்தலைநின் றிழித்த ஞான்று முழங்கழல்வாய்
அத்தகைத்திண் சூலத்தால் அகழ்ந்த சூலத் தடந்தீர்த்தம்
இத்தரைக்கண் சிறப்பெய்தும் உவாவில் அந்நீர் இனிதாடி. உ

செவ்வந்தீச்சரம்

தென்புலத்தோர் கடன்செலுத்தில் அனையர் துறக்கஞ் சென்றெய்தி
இன்புறுவார் அதன்கரைக்கண் இலிங்கம் அமைத்து மருத்திறைவன்
மென்பனிநீர் செவ்வந்தி வேரிச் செழும்பூப் பலகொண்டு
வன்பகல வழிபட்டுக் கந்த வாகன் எனப்பெற்ருன். ந

பரிதிக் குளம்

மருத்தேத்துஞ் செவ்வந்திச் சரமால் வரைப்பின் வடகுடக்காந்
திருத்தேத்துக் கதிர்ப்பரிதிச் செல்வன் பரிதிக் குளந்தொட்டுக்
கருத்தேய்த்து வீடளிக்கும் அந்நீ ராட்டிக் கருதார்ஊர்
உருத்தேத்துஞ் சுரர்க்கருளும் ஒளியைத் தொழுது வரம்பெற்ருன்.

சந்திர தீர்த்தம்

வீங்கிருள்சீத் தொளிபரப்பிப் பைங்கூழ் புரக்கும் வெண்கதிரோ
தேங்கமல முகைஅவிழ்க்குஞ் சருவ தீர்த்தத் தென்திசையின் [ன்
ஆங்கண்நறுஞ் சுவைத்தெள்ளா ரமுதத் தடந்தொட் டதன்கோட்டி
பாங்குபெறப் பிஞ்ஞகன்தாள் அருச்சித் தேத்திப் பயன்பெற்ருன். [ற்

---

உ. பைத்தலை - பாம்பு. உவா - பௌர்ணிமை, அமாவாசைகள். அந்த காசுரன் வரலாற்றை மேலே அந்தகேசப் படலத்திற்காண்க.

ந. துறக்கம் - சுவர்க்கம். மருத்திறைவன் - வாயுதேவன். செவ்வந்தி யென்பது இக்காலத்தில் சாமந்தி என வழங்கப்படுகிறது. வேரி - தேன். வன்பு அகல - தீமை நீங்க. கந்தவாகன் - நாற்றத்தைக் கொண்டு வருபவன்.

ச. மருத்து - காற்று. திரு தேத்து - அழகிய இடத்தில். பரிதிச் செல் வன் - சூரியன். கருதார் ஊர் என்றது முப்புரத்தை. உருத்து என்பது அழித்து என்னும் பொருள் தந்து நின்றது. உருத்து அருளும் என்க.

ரு. சீத்து - நீக்கி. பைங்கூழ் - பயிர். பயிர் வளர்தற்குச் சந்திர கிரணம் துணையாகும். வெண்கதிர் - சந்திரன்.

நலம்ஒன்று செவ்வந்திச் சரக்கீழ் ஞாங்கர் எழ்இலிங்கம்
நிலமைந்தன் மதிமைந்தன் வியாழம் வெள்ளி நீடுசனி
அலமந்த இருபாந்தள் அருச்சித் தருங்கோள் நிலைபெற்றார்
வலம்வந்தங் கவைதொழுவோர் தம்மைக் கோள்கள் வருத்தாவால். கூ

ஆகத் திருவிருத்தம் - கரு௱௦.

---

## படல உண்மை

இப் படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) மேலைப் படலத்துப் படல உண்மையிற் கூறப்பட்ட முதலாவது உண்மையையும், (உ) 'நவக்கிரகங்களும் இறைவன் திருவருள் பெற்றே தம் செயலைச் செய்வனவாகலின், அவைகள் இறைவனை வழிபடுவோரை வருத்தமாட்டா' என்னும் உண்மையையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

சருவதீர்த்தக் கரையில் இருக்கும் இறைவன் தலங்களைச் சொன்னோம்; இனி, வாயுதேவனும் நவக்கிரகங்களும் வழிபட்ட தலங்களைச் சொல்வோம்.

### சூலதீர்த்தம்

வயிரவக் கடவுள் அந்தகாசுரனைச் சூலத்தினின்றும் இறக்கியபோது அச் சூலத்தால் அகழ்ந்த சூலதீர்த்தம் உலகத்தில் மிகச் சிறந்ததாகும். அத் தீர்த்தத்தில் அமாவாசை பௌர்ணிமைகளில் மூழ்கிப் பிதிர்க்கடன் முடித்தால் அவர்கள் சுவர்க்கத்தை அடைவார்கள்.

### செவ்வந்தீச்சரம்

அத்தீர்த்தத்தின் கரையில் ஓர் இலிங்கம் அமைத்து வாயுதேவன் செவ்வந்தி மலர்களால் வழிபட்டுக் கந்தவாகனுயினன்.

### நவக்கிரகேசம்

செவ்வந்தீச்சரத்திற்கு வடமேற்கில் சூரியன், 'பரிதிக்குளம்' என்னும் தீர்த்தத்தை உண்டாக்கி, அதன் நீரினல் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்வித்து வழிபட்டு வரம்பெற்ருன். சந்திரன், சருவ தீர்த்தத்திற்குத் தெற்கில் ஓர் தீர்த்தத்தை உண்டாக்கி, அதன்கரையில் இறைவனை வழிபட்டு வரம் பெற்ருன். செவ்வாய் முதலிய மற்றை எழு கிரகங்களும் செவ்வந்தீச்சரத்திற்குக் கிழக்கில் ஒவ்வோர் இலிங்கம் தாபித்துப் பூசித்துக் கிரக நிலையை அடைந்தார்கள். அவற்றை வணங்குவோர்களைக் கிரகங்கள் வருத்தமாட்டா.

---

கூ. நிலமைந்தன் - செவ்வாய். மதிமைந்தன் - புதன். இருபாந்தள் - இராகு கேதுக்கள்.

# பிறவாத் தானப் படலம்

கலி விருத்தம்

பவன னேடொன் பதிற்றுக் கோள்களும்
இவறிப் போற்றும் இடங்கள் கூறினும்
சிவனைச் செவ்வாய் முதலி யோர்தொழும்
புவியிற் பிறவாத் தானம் போற்றுவாம். க

வாம தேவன்* என்னும் மாமுனி
காமர் அன்னை கருவின் வைகுநாள்
பேமு றுத்தும் பிறவி அஞ்சினன்
ஏமு றாமை இதுநி னைக்குமால். உ

பொதியும் மாயப் புவியில் தோன்றினான்
மதிம யங்கி மற்றும் இன்னணங்
கொதிபி றப்பிற் கொட்பு றாதெனக்
கதிப னேஇங் கருளிச் செய்என. ௩

தோற்றம் ஈறில் லாத சோதிவெள்
ளேற்றி னானை இதயத் தன்பினால்
போற்று காலை புனிதன் ஆண்டுமீ இச்
சாற்ற லுற்றான் தவமு னிக்கரோ. ச

மண்ணின் மீது தோன்றி மற்றெமை
நண்ணிக் காஞ்சி நகரிற் பூசனை
பண்ணு மோவெம் பவத்தொ டக்குனை
அண்ணு றாதென் றருளிச் செய்தனன் ரு

க. பவனன் - காற்று. இவறி - விரும்பி. செவ்வாய் முதலியோர் தொழும் புவியில் என்றது, அவ்விடத்திற்கு அடுத்துள்ள என இடங் கூறிய வாறு.

உ. காமர் - விரும்புகின்ற. பேம் - அச்சம். ஏமுறாமை - இன்புறாமல், துன்புற்று. *'வாமதேகன்' என்றே புதிய பதிப்பிற் காணப்படுகின்றது.

௩. மாயம் பொதியும் புவி எனக் கூட்டுக. மாயம் - நிலையாமை. கொதி - வருத்துகின்ற. அதிபன் - தலைவன்.

ரு. மோ, முன்னிலையசை. அண்ணுறாது - அணுகாது.

வள்ளல் புகலும் மாற்றங் கேட்டனன்
உள்ளம் மேன்மேல் உவகை பூத்தனன்
பள்ள முந்நீர்ப் படிமி சைப்பிறங்
தெள்ள ருஞ்சீர்க் காஞ்சி எய்தினன். ௬

இலிங்கம் அங்கண் இனிதி ருத்திநாற்
புலங்கொள் முறையிற் பூசை ஆற்றுபு
கலங்கு பிறவிக் கரிசின் நீங்கினன்
மலங்க ருஞ்சீர் வாம தேவனே. ௭

கலிநிலைத் துறை

அன்ன வாற்றாற் பிறவாத் தான மாயதால்
இன்ன தானம் வழிபட் டேத்தப் பெற்றவர்
பின்னர் மாதர் கருவின் எய்திப் பேதுறார்
கன்னி பாகன் கருணை வெள்ளங் காண்பரே. ௮

அங்கட் போற்றி வாம தேவன் அருளினால்
துங்கக் கயிலை எய்தி நோன்தாள் தொழூஉக்
கங்கைச் சடையான் உதவி லிங்கங் கைக்கொடு
பங்கப் பழனக் காஞ்சிப் பதியின் மீண்டரோ. ௯

முத்தீச்சரம்

மேன்மை சான்ற பிறவாத் தான மேற்றிசை
ஞான வாவி ஞாங்கர் முத்தீச் சரனென
மான முத்தித் தளியின் நிறுவி வாழ்த்தினன்
ஏன வெண்கோட் டணியார்க் கினிதாம் அன்னதே. ௧௦

ஆகத் திருவிருத்தம் - ௧௯௯௦.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (௧) 'பிறவாமுத்தி இறைவன் வழிபாட்டினாலேயே கிடைக்கும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

௭. கரிசு - குற்றம். மலங்குதல் - வருந்துதல்.

௯. உதவு - கொடுத்த. பங்கம் - சேறு.

௧௦. மானம் - பெருமை. ஏனம் - பன்றி.

## உரை நடை

வாயுதேவனும் நவக்கிரகங்களும் வழிபட்ட இடங்களைச் சொன்னோம்; இனி, செவ்வாய் முதலியோர் வழிபட்ட இடத்தினின்று அருகிலிருக்கும் பிறவாத் தானத்தைச் சொல்லுவோம்.

வாமதேவன் என்னும் முனிவர் தாயினது கருப்பத்திலிருக்கும்போதே பிறவிக்கு அஞ்சி, பிறவாமையை யளிக்கவேண்டும் என்று அங்கேயே இறைவனை இருதயத்தில் வழிபட, இறைவனார் அங்கு அவருக்குத் தோன்றி, 'நீ உலகத்திற் பிறந்து காஞ்சியில் எம்மைப் பூசித்தால் உன்னைப் பிறவி அணுகாது' என்றருளினர். அங்ஙனமே வாமதேவமுனிவர் பூமியிற் பிறந்து காஞ்சியை யடைந்து, ஓர் இலிங்கம் அமைத்துப் பூசித்துப் பிறவி நீங்கப் பெற்றார். அதனால், அவ்விடம் பிறவாத்தானமென்றாயிற்று. அத்தலத்தை வணங்கினோர் பிறவி நீங்கி இறைவன் திருவருளை அடைவார்கள்.

### முத்தீசம்

அத்தலத்தில் வழிபட்ட வாமதேவ முனிவர் இறைவன் திருவருளினாற் கைலையை அடைந்து, இறைவனை வணங்கி, அவ்விறைவன் கொடுத்த ஓர் இலிங்கத்தைப் பெற்று மீளவுங் காஞ்சியை யடைந்து, பிறவாத்தானத்திற்கு மேற்கில் ஞானதீர்த்தக் கரையில் முத்தீசர் என்னும் பெயரால் தாபித்துப் போற்றினர். அத்தலம் இறைவனுக்கு மிக இனியதாகும்.

---

# பிறவாத் தானப் படலம்

### கலிநிலைத் துறை

புள்ளி வண்டு பெடையொ டாடிப் பொங்கரிற்
பள்ளி கொள்ளும் பிறவாத் தானம் பன்னினும்
துள்ளி வாளை பாயும் நீர்சூழ் இதன்அயல்
வெள்ளி வரையார் இறவாத் தானம் விள்ளுவாம். க

இறவிக் கஞ்சிச் சிஃறு பதர்கள் மாதவம்
முறையிற் செய்தார் முன்னாள் அந்நாள் முன்னுற
நறவில் திகழும் முளரி மேலோன் நண்ணிநின்
றறவர்க் கென்னே வேட்ட தென்றான் ஆங்கவர். உ

---

உ. இறவி - இறப்பு. சில்+தாபதர்=சிஃறுபதர், தாபதர் - முனிவர்

உலக முழுதும் உதவும் எந்தாய் உன்னடித்
தலமே யன்றிச் சரணம் இல்லேம் சாவதற்
கலகில் அச்சம் உற்றேம் அதனை வெல்லுமா
றிலக எங்கட் குரையாய் என்றங் கேத்தினர். ௩

செங்கால் அன்னப் பாகன் கேளாத் தேத்துணர்க்
கொங்கார் பொங்கர்க் காஞ்சி நண்ணிக் கோமளை
பங்கார் ஆதி பகவன் பாதம் வழிபடின்
அங்கே இதனைப் பெறலாம் என்றான் அவர்களும். ௪

அன்னத் தோன்றல் அடிகள் போற்றி விடைகொடு
நன்னர்க் காஞ்சி நகரம் நண்ணி நாயகன்
றன்னைத் தாபித் தேத்திச் சாவா மாட்சியின்
மன்னப் பெம்மான் உதவப் பெற்று வாழ்ந்தனர். ௫

சுவேதன் என்பான் வாழ்நாட் கழிவு துன்னுநாள்
சுவேதந் தீற்று மாடச் சூழல் அதனிடைச்
சுவேத நல்லான் ஊர்தி நோன்தாள் தொழுதனன்
சுவேத நீற்றான் நீத்தான் இறவித் துன்பமே. ௬

மார்க்கண் டேயன் அங்கண் போற்றி மறலியைத்
தாக்கி நிலைமை பெற்றான் சாலங் காயினன்
ஆக்க மைந்தன் மகனும் அங்கண் எத்துபு
சாக்கா டற்றான் கணநா தச்சீர் தழுவினன். ௭

ஆயுள் மாய்வின் இன்னும் அங்கண் எண்ணிலர்
தூய அன்பின் தொழுது நிலைமை பெற்றனர்
ஏய வாற்றால் ஆயுள் வேட்டோர் யாவரும்
பாய சீர்த்தி இறவாத் தானம் பணிகவே. ௮

ஆகத் திருவிருத்தம் - ௧௬௬௮.

---

௪. தேத்துணர்க் கொங்கு - தேன் பொருந்திய பூங்கொத்துக்களின் வாசனை.

௬. சொற்பின் வருநிலை. சுவேதம் - வெண்மை.

௭. சாலங்காயினன் - ஒரு முனிவன். மைந்தன் மகன் - பெயரன். சாக்காடு - இறப்பு. அற்றான், முற்றெச்சம்.

### படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறப்பைக் கடத்தல் இறைவன் வழிபாட்டினாலேயே கூடும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

---

### உரை நடை

வண்டுகள் வாழும் சோலை சூழ்ந்த பிறவாத்தான வரலாற்றைச் சொன்னோம்; இனி, அதந்த அருகிலிருக்கும் இறவாத்தான வரலாற்றைச் சொல்லுவோம்.

முன்னொரு காலத்தில் சில முனிவர்கள் இறப்பிற்கு அஞ்சித் தவம் புரிய, பிரமதேவன் அவர்கள் முன்னே சென்று, 'நீவிர் விரும்பியது என்னை?' எனக் கேட்டனன். முனிவர் தமது கருத்தைச் சொல்லப் பிரமதேவன், 'இதனைக் காஞ்சியிற் சென்று இறைவனை வழிபட்டாற் பெறலாம்' என்றனன். உடனே, முனிவர்கள் காஞ்சியை அடைந்து இறைவனைத் தாபித்துப் பூசித்துச் சாவாவரம் பெற்றனர். சுவேதன் என்பவனும், மார்க்கண்டேயரும், சாலங்காயின முனிவர் பேரனும் அத்தலத்தை வணங்கி இறப்பைக் கடந்தார்கள். அத்தலத்தை வணங்கி இறப்பைக் கடந்தவர் மற்றும் பலர். ஆகையால், நீண்ட வாழ்நாளை விரும்பினோர் அத்தலத்தை வணங்கக் கடவர்கள்.

---

## மகாலிங்கப் படலம்

*கலிநிலைத் துறை*

வெள்ளைத் திங்கட் பிள்ளைக் கீற்று மிளிர்சடை
வள்ளற் கோமான் இறவாத் தானம் வாழ்த்தினம்
கிள்ளைச் சொல்லார் பயிலும் அதனின் கீழ்த்திசை
விள்ளற் கருமா லிங்கத் தானம் விள்ளுவாம். க

பிரமனும் மாலும் பெரும்போர் புரிதல்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

வையம் முழுதும் மடிய வரும்ஓர் ஊழி முடிவின்
வெய்ய இருள்வந் தடர விரிநீர்ச் சலதி வேகஞ்

---

க. கிள்ளை - கிளி. விள்ளற்கரும் - நீங்குதற்கரிய.

உ. சலதி - கடல். பைய - மெல்ல.

செய்து நிமிர்ந்து பொங்கித் தேங்கிக் கிடந்த காலைப்
பைய உறக்கம் நீத்து மீளப் படைக்க உன்னி: ௨

தூங்கத் தனது நகரிற் சுடரும் மறையின் கிழவன்
எங்கும் அலைகள் புரள வேகப் புணரி வெள்ளம்
தங்கு செயலை நோக்கித் தடவுக் கருவி முகில்போல்
அங்கண் அரவில் துயிலும் ஐயன் றனையுங் கண்டான். ௩

கண்டு புடையி னணுகிக் கடுக எழுப்பி மையல்
கொண்டு நீயார் என்று வினவக் கொண்ட லனையான்
அண்டம் முழுதுங் காக்கும் அகில முதல்வன் யானே
மிண்டு நீயார் என்பால் வேட்ட தென்கொல் என்றான். ௪

நறவம் ஒழுகு மலரோன் கேட்டு நகைஉட் கொண்டு
பிறரும் அல்லர் நீயும் அல்லை பேணி உலகம்
நிறுவு முதல்வன் யானே என்னும் இனைய நெறியின்
மறலிக் கூறித் தம்முள் ஊடல் வளர்த்து நின்றார். ௫

சிந்தை நாணுக் கழலச் சிலையின் நாணுப் பூட்டி
முந்து கணைகள் தூர்த்தார் மூரிக் கனலி வருணன்
இந்து இரவிப் படையும் ஏவி அவைகள் மடியப்
பந்த வினையின் மருள்வார் தத்தம் படைவிட் டார்த்தார். ௬

மும்மைப் புவனம் ஈன்றோன் படையும் முகுந்தன் படையும்
தம்முட் பொருது மாய்ந்த பின்னர்க் கமலத் தவிசோன்
வெம்மைப் பாசு பதமாப் படையை விடுப்ப மாயோன்
செம்மல் உருத்தி ரத்தின் படையைச் செலுத்தி நின்றான். ௭

---

௩. சுடரும் - விளங்குகின்ற. மறையின் கிழவன் - பிரமன். ஏக வெள்ளம் - ஒன்று பட்ட வெள்ளம். வேகவெள்ளம் எனவுங் கொள்வர். புணரி - கடல். தடவு - பெருமை. ஐயன் - தந்தை.

௪. மையல் - மயக்கம். மிண்டு - செருக்குடைய.

௫. மறலி - மாறுபட்டு. ஊடல் - கோபம்.

௬. உலகத்தில் இருவர், தம்மில் ஒருவற்கு உரிமையாகற்பாலதைப் பற்றி வாதிடுதல் இயல்பாக, தம் இருவர்க்கும் வேறாகிய ஒருவர்க்கு உரியதாகற்பாலதைப்பற்றி வாதிடுகின்றனராதலின், 'சிந்தை நாணுக்கழல' என்றார்.

### பெருமான் சோதிலிங்க வடிவாயது

அம்ம இரண்டு படையும் அயுத வருடம் நேர்ந்து
தம்முள் உடலுங் காலைத் தழங்கும் எரியின் பொறிகள்
தும்ம எழுந்து தோன்றிச் சோதி இலிங்க வடிவாய்
நம்மை யுடைய பெருமான் அவற்றின் நடுவு நின்றான். அ

நின்ற சோதி உருவின் நேர்ந்த இரண்டு படையும்
சென்று கரப்ப நோக்கித் தெருமந் தரியும் அயனும்
இன்று தோன்றும் இதுஎன் னென்று தம்முள் எண்ணிக்
கன்றும் இதன்றன் அடியும் முடியுங் காண்டும் என்னா. கூ

கேழல் எகின மாகிக் கீழும் மேலுந் துருவி
ஊழின் இரண்டைஞ் ஞூறு வருடம் உழிதந் துற்றார்
வாழி முடியைக் காணான் வண்டு முரலும் மலரோன்
பாழிச் சிறகர் முறியாப் பையுள் எய்தி வீழ. க0

நாறுந் துளவத் தவனும் நாடிச் சரணங் காணான்
வீறும் வலியுங் குன்றி எய்ப்பும் இளைப்பும் விரவ
ஏறும் பரவைப் பெருநீர் இடையுள் எழுந்தங் குற்று
மாறும் இருவர் களுமால் எய்தி மருட்கை கொண்டார். கக

### வேதம், முதல்வன் உண்மை கூறல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

எமுறு பொழுதவண் ஒலிவடிவின் நாதம தெழுபுமுன் இரு
திறனாய், ஓம்என உமைஎன மருவிஇருக் கோடுயர் நெறிஅருள் புரி

---

அ. அயுதம் - பதினாயிரம். உடலல் - போர் செய்தல். தும்ம - சிந்த. பெருமான் வடிவாய் எழுந்து தோன்றி நின்றான் என முடிக்க.

கூ. தெருமந்து - மனஞ்சுழன்று. கன்றும் - உருத்தெழுந்த.

க0. கேழல் - பன்றி. எகினம் - அன்னம். குளகமாதலின் மேலைச் செய்யுளில் அரியும் அயனும் என்றதற்கு ஏற்ப, 'கேழல் எகினம்' என்பதனை முறைநிரனிறையாகக் கொள்க. உழிதந்து - திரிந்து. வாழி, அசைநிலை. பாழி - வலி. பையுள் - துன்பம்.

கக. எய்ப்பு - மேற்கொண்ட செயலில் சோர்வு. இளைப்பு - உடல் வருத்தம். மருட்கை - மயக்கம்.

க௨. எமுறுதல் - மயங்குதல். நாதம் - நாததத்துவம். முன் - முன்னே. இருதிறனாய் - இரண்டு கூற்றதாய். ஓம், உம என்பன இரண்டும் பிரணவ

எசுவும், சாமமும் எனநிலை பெறவிரிவுற் றங்கவை தம்வலி மிகும் அவர்முன், காமுறு தகையநல் வடிவொடுநின் றினைபன கருணையின் உரைசெயுமால். கஉ

எவனடி மறையவர் மகவினையால் இருவினை வலிகெட வழிபடு வார், எவன்அரி அயன்எனும் நமைஒருதன் இடவல வடிவினில் வர அருள்வோன், எவன்நமை நம்பதம் உறநிறுவும் இறையவன் நம திருள் கழியவரும், அவனது குறிஇது அறிமின்என அருள்வழி வருமறை யவைபுகல. கங

அயனும் அரியும் துதித்தல்

நறைகமழ் துளவணி தொடையவனும் நகைமல ரணைமிசை மறையவனும், மறைமொழி செவியுற மயல்கழிவுற் றலைகடல் வரும் விடம் அமுதுசெயும், இறைவனை முறைமுறை பரசினரால் எனை யுடை முதல்வனும் அவரெதிர்நின், றுறைபெரு மயலினை இனி விடுமோ உதவுதும் விழைவன உரைமினென. கச

பங்கயன் இருகரம் உச்சிமிசைப் பயில்வுற அடிதொழு துளம் உருகி, எங்குறை இன்று பொறுத்தருளி எளிவரு நாயக உனை

மென்பதும், 'உம' என்பது உமை எனத்தமிழில் வழங்குமென்பதும் மேலே (பக். உகரு.) யுரைத்தாம். இருதிறனுதலை முன்னென்றமையால், மருவுதலைப் பின் எனக்கொள்க. மருவி - கலந்து. இருக்கு, யசுர், சாம மென வேதம் மூன்றே என்னும் ஆரியக் கொள்கைபற்றி, 'இருக்கு எசுர் சாமமென விரிவுற்று' என்றார். விரிவுற்று, விரிவுற என்பதன் திரிபு. அவை யென்றது வேதங்களை. நாதமது ஒலிவடிவின் எழுபு முன் ஓமென உமை யென இருதிறனும் (பின்) மருவி இருக்கு எசுர் சாமமென விரிவுற அவை வடிவொடு நின்று உரைசெயும்' என முடிக்க. வேதம் வடிவுகொண்டு வந்து உரைத்ததெனக் கூறவந்தவர், ஊழிக்கால மாதலின் அவற்றின் தோற்ற முறையும் உடன் கூறினர். இதனால் முதற்கண் நாதத்தில் பிரணவம் தோன்றுமென்பதும், பின்னர் அவற்றின்கண் மறைகள் எல்லாம் தோன்றும் என்பதும், அம்மறைகளே மக்கட்கு உறுதியை யுரைக்கும் என்பதும் கொள்க.

கங. மகவினை - வேள்விச் செயல். வடிவின் இடவலத்தில் என மாறுக. நிறுவும், பெயரெச்சம். எவனென்பதைப் பின்னுங்கூட்டி எவன் நமதிருள் கழியவரும் என்க.

கச. பரசினர் - துதித்தார். மோ, முன்னிலையசை.

உணரா, துங்குறு மயல்இனி எனைஅணுகா துன்புடை நிலைபெறும் அன்புதவி, மங்கலில் ஊழிதோ றென்வடிவில் வந்தரு ளெனமொழி விண்டனனே. கரு

திருமகள் விழைதரு திகழ்மருமச் செம்மலும் அடியிணை தொழுதினிஇம், மருள்எனை ஒருபொழு தினும்அடரல் உன்னடி வழிபடு செயல்பிறழல், கருமுகில் உறழ்மிட றுடையவநின் கருணை என் னிடைநிலை பெறநிறுவில், ஒருகுறை உளதுகொல் அடியடியேற் கென்றுள மகிழ்வுடன் ஓதினனால். கசு

அயனும் அரியும் அருள்பெற் றுய்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இவ்வண்ணம் இருவர்களும் இரந்தேத்தி விண்ணப்பஞ் செய்யக் கேளா, அவ்வண்ண மாகவெனப் பெருங்கருணை கூர்ந்தருளி அகிலம் ஈன்ற, மைவண்ணக் கருங்கூந்தல் முலைச்சுவடும் வளைத் தழும்பும் மாறா மேனிச், செவ்வண்ணப் பரமேட்டி பின்னரும் அங் கவர்க்கிதனைத் தெரித்துக் கூறும். கஎ

இற்றைநாள் நீர்காணும் இவ்விலிங்கப் பெருவடிவம் இறுதிக் காலம், முற்றுநாள் அணுகாது கொற்றங்கொள் திருக்காஞ்சி மூதூர் மாடே, பற்றுபெருங் காதலினால் தாபித்து வழிபட்டுப் பரசி ஆனாப், பெற்றியுறு வியனுலகம் படைத்தளிக்கும் பெருமதுகை பெற்று வாழ்மின். கஅ

வெண்டிரைநீர் அகல்வரைப்பின் நம்முதலோர் விண்ணவர்கள் அவுணர் சித்தர், பண்டைவினைக் குறும்பெறியும் முனிவரர்மா னிடர் யாரும் பாசக் கூட்டம், விண்டகலும் படிஇன்று தொட்டெம்மை

---

கரு. குறை - குற்றம். உக்கு என்பது முன்னெனக் காலஞ் சுட்டி நின்றது. என்வடிவில் வந்தருளென்றது, சிருட்டியைக் கற்பித்தற் பொருட்டுப் பிரமன் நெற்றியில் உருத்திரர்கள் தோன்றுதலைக் குறிப்பது.

கசு. மருமம் - மார்பு. அடர்தல் - நெருங்குதல், அடரல், பிறழல் என்பன எதிர்மறை வியங்கோள்.

கஅ. இதைச் சுட்டு வடிவத்தைச் சுட்டிற்று. கொற்றம் - வெற்றி.

கக. ஓம்பல் என்பது உடன்பாட்டு வியங்கோளாய் ஒழிகவெனப் பொருள் தந்தது.

இலிங்கத்தின் மீளா நேசங், கொண்டுபூ சனைபுரிக புரிவோர்க்கு மயல்என்றுங் குறுக லோம்பல். கக

கடப்பாடு வறுமைபயம் மனக்கவலை பசிபாவங் கடுநோய் மற்றும், உடற்றுமை ஆங்கவர்க்கு மீளவினைப் பிறவியுறல் உறினும் இன்பங், கிடைத்தானுப் பெருமகிழ்ச்சி தலைசிறப்ப நனிவாழி கிளருஞ் சீற்ற, நடைக்காலன் மற்றவர்பால் நணுகற்க நம்ஆணை வலியான் மன்னே. உ௦

வேதியர்மன் னவர்வணிகர் வேளாளர் சங்கரத்தின் மேயோ ராக, மூதிமையோர் உரகர்தயித் தியர்அரக்கர் கந்தருவர் முனிவ ராகப், பூதிதரும் இலிங்கபூ சனைஇல்லார் பூதிசா தனங்கள் பேணுர், ஏதிலராம் இழிஞரினும் இழிஞரே அவரொடுபேச் சியம்பி னோரும். உக

நியதிமகம் தவம்தானம் விரதநிலை பிறவற்றின் நிகழ்த்தும் பூசைப், பயன்எவையும் இலிங்கபூ சனைக்கோடி கூற்றின்ஒரு பயனுக் கொவ்வா, வியனுலகம் உய்யுமுறை இவ்வாறு நமதாணை விதித் தேம் போற்றி, உயலுறுவீர் என்றருளிச் சிவபெருமான் அடியர் உளக் கோயில் புக்கான். உஉ

பாப்பணையில் துயில்வோனும் பனிமலரிற் பயில்வோனும் பணிந்து நீங்கி, யாப்பமைநீர்த் தடம்பொய்கைத் திருக்காஞ்சி வள நகரம் எய்தி ஆங்கண், மீப்பொலியும் மகாலிங்கம் நிறீஇத்தொழுது பயன்பெற்றார் விரிநீர் வைப்பின், நீப்பரிய சிவலிங்க வழிபாட்டின் பேறெவரே நிகழ்த்த வல்லார். உ௩

ஆகத் திருவிருத்தம் - கருசக.

---

உ௦. உறல் - பொருந்தாதொழிக. ஆணு - நீங்காத. நடை - ஒழுக்கம்.

உக. பூதிதரும் - செல்வத்தைக் கொடுக்கும். ஏதிலர் - பற்றுக் கோடில்லாதவர். இயம்பினோரும் இழிஞரினும் இழிஞரே என்க. இதனால், எவரும் இலிங்க பூசை செய்தற்கு உரியவர் என்பது தெளியப்படும்.

உஉ. நியதி - கட்டுப்பாடு. நியதி முதலியவற்றால் இறைவனை வழிபடு தலினும் இலிங்கத்தில் வழிபடுதல் எண்ணிறந்த மடங்கு சிறந்ததென்பது இதனாற் கூறப்பட்டது.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'இறைவனொருவனே முழு முதற் கடவுள் என்பது உண்மைநூற் றுணிபு' என்பதும், (உ) 'இறைவன் உலகத்தைக் கடந்து நின்றவனாகலின், அவனை, உலகத்துட்பட்ட திருமால் பிரமன் முதலியோர் அறிதல் கூடாது' என்பதும், (ங) 'சிவலிங்க பூசையே எல்லாவற்றிலும் சிறந்தது' என்பதும், (ச) 'சிவலிங்க பூசையுடையார்க்கு இம்மை மறுமை வீடு என்னும் மூவகை இன்பமும் இனிது கிடைக்கும்' என்பதுமாகிய உண்மையை விளக்கும். மற்றும் இதனுள், சொற்பிரபஞ்சங்களின் தோற்றமுங் கூறப்பட்டது. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பிறை சூடிய பெம்மான் எழுந்தருளியுள்ள இறவாத் தானத்தை வாழ்த்தினோம்; இனி, அதற்குக் கிழக்கிலுள்ள மகாலிங்கத்தைக் கூறுவோம்.

ஒரு கற்பமுடிவில் இருள் சூழ, கடல்நீர் புரண்டு வெள்ளமாகத் தேங்கிக் கிடக்க, பிரமன் துயிலெழுந்து உலகத்தைப் படைக்க எண்ணுகையில், அவ்வெள்ளத்தில் பாம்பணையில் துயிலும் தனது தந்தையாகிய திருமாலைக் கண்டனன். கண்டு, தனது மயக்கத்தால் அவரை எழுப்பி, 'நீ யார்?' என்று வினவினன். திருமால், 'உலகிற்கு முதல்வன் யான்; நீ என்னிடத்தில் விரும்பியதென்ன?' என்று கேட்க, பிரமன் சிரித்து, 'உலகிற்கு முதல்வன் நீயுமல்லை; பிறருமல்லர்; யானே முதல்வன்' என்றனன். இவ்வாறு இருவருக்கும் போர்மூண்டது. வில்லை வளைத்துத் தேவாஸ்திரங்களைச் சொரிந்து போர்செய்து, முடிவில் தங்கள் அஸ்திரங்களை ஏவி அவை அழிந்தபின், பிரமன் பாசுபதாஸ்திரத்தையும், திருமால் உருத்திராஸ்திரத்தையும் விட்டுப் போர்செய்தனர். அவ்வஸ்திரங்கள் பதினாயிரம் வருடம் போர்செய்ய, அவற்றின் இடையில் இறைவன் தீப்பொறி சிந்தச் சோதிலிங்க வடிவமாய் எழுந்தருளினன். அவ்விலிங்கத்துள் அவ்விரண்டு அஸ்திரங்களும் மறைந்தன.

திருமாலும் பிரமனும் அதைக்கண்டு, இது யாது? இதன் அடிமுடியைக் காண்போமென்று, திருமால் பன்றியாகிக் கீழ்ச்சென்றும், பிரமன், அன்னமாகி மேற்போகியும் ஆயிர வருடந் தேடியும் காணாது இளைத்து வந்து மருட்சி யடைந்தார்கள். அப்போது நாதமானது ஒலி வடிவமாய் எழுந்து, ஓம், உம என இரண்டு கூறாகி, உடன் கலந்து இருக்கு, யசுர், சாமமென்னும் மூன்று வேதமாய் விரிந்து நிற்க, அவ்வேதங்கள் மாலயனை நோக்கி முழு

முதற் கடவுளாகிய இறைவன் இயல்பைச் சொல்லி, 'அவனது அருட்குறியாகும் இது என்று கூறின. அதனால், இருவரும் மயக்கம் தெளிந்து, இறைவனைத் துதித்தனர். அதனால் இறைவன் எழுந்தருளி வர, அவ்விருவரும் துதித்து வணங்கி, தங்கட்கு அத்தகைய மயக்கம் இனி அணுகாமலிருக்கவும், இறைவன்பால் அன்பு மிகவும் வரம் வேண்டினர். பிரமன் சிருட்டித்தொழில் நிலைபெறத் தனது வடிவில் தேவரீர் தோன்ற வேண்டுமெனவுங் கேட்டனன். இறைவனார் அவ்வரங்களைக் கொடுத்து, பின்னும் சொல்லுகின்றார்.

'நீவிர் காஞ்சியம்பதியில் இதுபோலும் ஓர் இலிங்க வடிவத்தை நிறுவிப் பூசித்துப் படைத்தல் காத்தல்களைச் செய்யும் ஆற்றல் பெறுவீர்களாக. இன்று முதல் மானிடர்களில் எந்தச்சாதியினரும் தேவர் முதலியோரும் சிவலிங்க பூசையை மேற்கொள்வார்களாக. அங்ஙனம் கொண்டவர்களுக்கு மயக்கம், வறுமை, பயம், மனக்கவலை, பசி, நோய் முதலிய யாவும் வருத்தாவண்ணம் பிறவி யொழிவதாக. ஒருகால் பிறந்தாலும் பெருமகிழ்ச்சியுற்று மிகவும் வாழ்வார்களாக. அவர்களிடத்தில் இயமன் அணுகாதொழிக. சிவலிங்க பூசையில்லாதார் தமக்கொரு பற்றுக்கோடில்லாதவராவார். அவர்களோடு பேசினோரும் இழிஞரிலும் இழிஞராவர். வேள்வி, தானம், விரதம் முதலியவற்றால் வழிபடுதல் இலிங்க வழிபாட்டின் கோடியிலொருபங்கிற்கும் நிகராகா. உலகம் உய்யுமாறு இவ்வாறு நமதாணை விதித்தோம்' என்று சொல்லி மறைந்தனர். அரியும், அயனும் அவ்வாறே காஞ்சியை அடைந்து இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பயன்பெற்றார்கள். சிவலிங்க வழிபாட்டின்பயனை யாவர் அளக்கவல்லவர்!

# விராட்டகாசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தண்காமர் புனல்குடையுந் தையலார் திமிர்ந்தநறுந் தகர ஞாழல்
எண்காதங் கமழ்இலஞ்சி மகாலிங்கத் தளிபுகன்றும் இதன்வ டாது

க. திமிர்ந்த - பூசிய. தகரம் - ஒருவகை வாசனைப் பொருள். ஞாழல் - குங்குமம். தகர ஞாழல் என்பது, தகரமும் ஞாழலும் கூட்டியமைத்த ஒரு வகைச் சாந்து எனப் பொருள்தரும். விண்காவலுடையார் - தேவர்கள். ஆலம் - விடம். உண்கா - விண்ணவோ; விடுக்கா - விட்டுவிடவோ; இவைகள் உண்கு, விடுக்கு என்னும் எதிர்காலத்தன்மை முற்றுக்கள் வினாப்பொருளுணர்த்தும் ஆகாரமேற்று நின்றவை. ஆல், ஓ அசைகள். இறைவன் தேவர்

விண்காவ லுடையார்முன் இளநகைபூத் திவ்வாலம் விடுக்கா அன்றி
உண்காஎன் றருள்செய்தான் வீரட்ட காசநகர் உரைத்து மாலோ. க

முற்றழிப்புக் காலத் திருக்கூத்து

வள்ளவாய் நறைக்கமல வெண்பீடத் தரசிருக்கும் மாதர் அன்னப், புள்ளவாம் நடைநல்லாள் முலைமுகட்டிற் கோட்டியபூங் களபந் தோய்ந்த, கள்ளவாந் தொடைத்திண்தோள் மறைக்கிழவன் ஒருவனுக்குக் கடையேன் உள்ளத், துள்ளவாம் இறைவகுத்த பராத்தங்கள் ஓரிரண்டும் ஒழிந்த காலை. உ

ஐவண்ண நிறம்படைத்த திருமுகம்ஐந் துடையபிரான் அருளால் அந்திச், செவ்வண்ணக் காலத்தி உருத்திரப்புத் தேள்நுதற்கண் செந்தீப் பொங்கி, மொய்வண்ண அண்டமெலாம் முழங்கிநிமிர்ந் தெழுந்துருக்கி உண்டு தேக்கி, மெய்வண்ண மனத்தன்பர் வினைப்பறம்பின் நீருக்கி விட்ட தாக. ங

ஆயநாள் இரவில்லை பகல்இல்லை அயன்இல்லை அரியும் இல்லை, மேயவான் முதல்பூதம் இலைஎனைப் பவுதிகத்தை விளம்பு மாறென், பாயபே ரண்டமெல்லாம் இவ்வாறு படநீற்றிப் புரமூன் றட்ட, காய்கணையோன் ஆனந்த மேலீட்டின் தன்னியல்பு கருத்துட் கொள்ளா. ச

கடைநாளும் அழியாது தன்ஒருபாற் பெருமாட்டி காப்ப வைகும், நடைமாறுத் திருக்காஞ்சி நகர்மன்னி உலகீன்ற நங்கை காண, இடையாம இரவெல்லாம் திருக்கூத்து நவின்றருளி எழுழ்கால்

---

களை இவ்வாறு வினவினமையை, மணிகண்டேசப் படலம் சஅ ஆம் செய்யுளிற் காண்க.

உ. வள்ளவாய் - கிண்ணம்போலும்வாய். மாதர் - அழகு. அவாம் - விரும்புகின்ற, மறைக் கிழவன் - பிரமன். உள்ளத்துள் அவாம் என்புழி அவாவுதல் இருத்தலின்மேற்று. கடையேனது உள்ளம் என்க; இனி, கடையேன் அவாவுகின்ற எனவுமாம்.

ங. காலத்தி உருத்திரர் - காலாக்னி யுருத்திரர். பறம்பின் - மலை நீருவதுபோல்.

ச. பவுதிகம் - பூதங்களின் காரியமாகிய பொருள்கள். நீற்றி - நீறுசெய்து.

வெள்ளை, விடையாளுந் தனிப்பாகன் ஆர்த்தார்த்து வீரநகை விளைத்தான் மேன்மேல். ரு

அவ்விரவு புலர்காலைத் திருநடனம் நீத்திலிங்க வடிவ மாகி, அவ்வரைப்பின் விளங்கினன்ஆதலினால் வீராட்ட காசத் தேவாம், அவ்விலிங்கம் வழிபட்டுச் சிலர்சித்தர் அற்புதமாம் சித்தி பெற்றார், அவ்வியல்பு தனைக்கேட்டுக் கொங்கணமா முனிச்செல்வன் அங்கண் எய்தி. சு

கோங்கண முனிவர் வழிபாடு

அவ்விலிங்க மேன்மையினை அளந்தறிவான் ஆங்கதன்றன் சென்னி மீது, செவ்வனே தன்குளிகை ஈந்திட்டான் மற்றவற்றின் சிரமேல் வைப்பின், எவ்வமுற நீருக்கும் அனைத்தையக் கணமேஅவ் விலிங்கம் உள்ளால், வெளவியது தனைக்கண்டான் வியப்பெய்தி அவ்விலிங்க முன்னர் வைகி. எ

மெய்த்தவங்கள் இனிதாற்றிப் பேறுற்றான் இன்னும்அவண் மேவிச் சீர்சால், சித்திகளை உழவாது பெறுகின்றோர் எல்லைஇலர் செந்நீர் தேக்கும், முத்தலைவேல் வீராட்ட காசேசன் மேன்மைஎவர் மொழிவார் மாயன், அத்தலத்தே வழிபட்டுப் பவளநிறம் பெற்றான்அவ் வகையுஞ் சொல்வாம். அ

திருமால் பவளநிறம்பெற்ற வரலாறு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

விரிதிரை சுருட்டிக் கரைமிசை எறியும் வெள்ளிவெண் பாற்கடல் வரைப்பின், எரிமணி மாடப் போகமா புரத்தின் எய்தருந் தனியிடத் திருந்து, புரிமுறுக் குடைந்து நறவுகொப் புளிக்கும் பூந்தவி சணங்கினோ டிணங்கி, வரிவளைக் குடங்கை வானவன் விளையாட் டியற்கையின் மகிழ்வுறும் ஒருநாள். கூ

---

ரு. வீரப் பெருஞ்சிரிப்புச் செய்த இறைவனாகலின் வீராட்டகாசத் தேவாம் என்பது கருத்து; ஹாசம் - சிரிப்பு; அட்டஹாசம் (அட்டகாசம்) - பெருஞ்சிரிப்பு; வீர + அட்டகாசம் = வீராட்டகாசம்.

அ. உழவாது - வருந்தாது, எளிதில்.

கூ. வெள்ளி - வெள்ளிபோலும். எரிமணி - மாணிக்கம். வளை - சங்கு. குடங்கை - அகங்கை.

மாயிரு ஞால முழுதும்ஈன் றளித்த மனைவியும் மணாளனு மாயோர், ஆயிடைப் பொழுது கழிப்பிய தம்முட் கதைசில அறைகு வான் அமைந்தார், பாயபாப் பணையில் அறிதுயில் அமர்வோன் பனி மலர்க் கிழத்தியை நோக்கித், தேயும்நுண் நுசுப்பின் அகன்றபே ரல்குல் ஒருகதை கேளெனச் செப்பும். ௧௦

நன்னிறம் படைத்த நாமநீர்ப் பரவை நளிதிரைப் பாற்கடல் மாமை, புன்னிறந் தோற்ற வெள்ளொளி விரிக்கும் புகரறு கயிலை எம்பெருமான், மின்னிடை மருங்குல் உமையுடன் ஒருநாட் கறங்கு வெள் ளருவியஞ் சாரல், தன்னிறம் மாண்ட மந்தரப் பறம்பின் தனி யிடத் தினிதுறும் எல்லை. ௧௧

எழால்மிடற் றளிகள் கொள்ளைகூட் டுண்ண ஈர்ந்தொடை நறுவிரி ஐம்பால், கழாமணி மேனிப் பிராட்டியை நோக்கிக் காளி என் றெம்பிரான் அழைப்ப, வழாநிலைக் கற்பின் உள்ளகம் வெதும்பி வரிவிழி நித்திலம் உகுத்துக், குழாமுடை இமையோர் வத்தெடுத் திறைஞ்சுங் கோமளை இன்னது கூறும். ௧௨

விடுந்தகைக் காள நிறம்படைத் துளன்யான் வெண்ணிறம் படைத்துளை நீயே, நெடுந்தகாய் நமக்குப் புணர்ச்சி எவ்வாறு நிகழும்மற் றிங்கிது காறும், கடுந்தகை என்மாட் டருளினால் இன் பக் கலவியில் திளைத்தனை இனிநான், அடுந்தகைப் படையோய் கவுரியாம் வண்ணம் பெறுமுறை அருடிஎன் றிரந்தாள். ௧௩

---

௧௦. கழிப்பிய - போக்குதற் பொருட்டு.

௧௧. மாமை - நிறம். புன்னிறந் தோற்ற - புன்மையான நிறமாகக் காணப்பட. நன்னிறமென்பது முதல் விரிக்குமென்பதுகாறும் கயிலைக்கு அடை. கறங்கு - ஒலிக்கின்ற. மாண்ட - மாட்சிமைப்பட்ட.

௧௨. எழால்மிடறு - யாழ் நரம்பினொலிபோன்ற ஒலியைச் செய்யுங் கண்டம். கொள்ளை கூட்டுண்ண - கொள்ளையாகக் கூடியுண்ண. கழாமணி - சாணை பிடியாத நீலமணி. காளி - கறுப்பி. நித்திலமென்றது முத்துப் போன்ற கண்ணீரை.

௧௩. விடுந்தகை - விடத்தக்க. காளநிறம் - கருமை நிறம். நெடுந் தகாய் - பெருந் தகுதியுடையவனே. கடுந்தகை - கடுமைத் தன்மை, விரும் புதற்கேலாத இயல்பு. படை என்றது சூலத்தை. கவுரி - பொன்னிற முடையவன்.

பொலங்குவட் டிமயப் பனிவரைப் பிராட்டி புகன்றன திருச் செவி சாத்தி, இலங்குவெண் ணீற்றுச் சுந்தரக் கடவுள் இயம்புவான் வரிவிழி கேட்டி, கலங்கஞர் எய்தேல் கடவுளர் கருமப் பொருட்டினை இம்முறை அழைத்தேம்*, நலங்கொள உலகம் நாள்தொறும் புரத் தல் நங்கட னதலின் கண்டாய். கச

மற்றது பின்னர்த் தெளிதிநீ கவுர நிறம்பெறு மாறனக் குரைப்பல், வெற்றிடம் இன்றி எங்கணும் நிறைந்து பரவெளிப் பரப்பிடை மேவும், பெற்றியன் யானே யாயினுந் தகைசால் பீடுயர் தலங்களின் மாட்டும், அற்றமில் மறையோர் அகத்தினும் உலவா அருள்சுரந் தினிதுவீற் றிருப்பேன். கரு

மேம்படும் அவற்றின் உத்தமத் தளிகள் விதியுளி மறைநெறி ஒழுக்கம், ஓம்பிமிக் குயர்ந்தோர் உள்ளமும் எனக்குச் சிறந்தன அவற்றினும் மேலாய்த், தேம்பொழில் வேலிக் காசிமா நகரும் யோகிகள் சிந்தையுஞ் சிறந்த, வாம்பகர் அவற்றிற் காஞ்சியும் உண்மை அடியவர் உள்ளமுஞ் சிறந்த. கசு

தகைபெறும் அவற்றின் வேறெனக் கினிய தானம்மற் றெங் கணும் இல்லை, நகைமலர்க் கொடியே அந்நகர் எய்தி நயந்தெனை அருச்சனை யாற்றி, மிகையறு தவத்தான் வேட்டவா பெறுதி என்ற லும் விளங்கிழை உமையாள், பகைவினை துரக்குங் காஞ்சியின் எய்திப் பஞ்சதீர்த் தக்கரை ஞாங்கர். கஎ

மாதவம் இயற்றிப் பொன்னுருப் பெற்றுக் கவுரியாய் வயங்கி னள் இனைய, மேதகும் இறும்பூ தென்னெனப் புகல்வேன் வெறி மலர்ப் பங்கயத் தவிசின், மாதர்வாள் நகையாய் என்றெடுத் துரைத் தான் மந்தரம் அலமரச் சுழற்றி, ஓதநீர் அளக்கர் அமுதெடுத் திமையோர்க் கூட்டிய பெருந்திறற் குரிசில். கஅ

---

கச. அஞர் - துன்பம்.* 'அழைத்தேன்' எனவும் பாடம்.

கரு. மற்று, வினைமாற்று. அது என்றது கடவுளர் கருமம் இன்னதென் பதை. உண்மை அடியவர் - ஞானிகள். புறத்தே புண்ணிய தலங்கள், உத் தம தலங்கள், காசி, காஞ்சி என்பனவும்; அகத்தே மறையோர், ஒழுக்கமுடை யோர், யோகிகள், ஞானிகள் இவர்களுடைய உள்ளமும் ஒன்றிலொன் றுயர்ந் தன என்றவாறு.

கஅ. இறும்பூது - வியப்பு. மாதர் - அழகு. ஓதம் - வெள்ளம்.

## திருமகள் வேண்டுகோள்

செய்யவள் கேட்டு வியப்புமீக் கூர்ந்து செப்புவாள் என்னை ஆளுடையாய், ஐயஇச் செயலைக் கேட்டொறும் உலவா அற்புதம் பயக்குமால் மன்ற, மெய்யுணர் வின்பச் சத்தியும் சிவனும் விளைக்கும்இவ் விளைவுக ளெல்லாம், மையறத் தெளிந்தோர் திருவிளையாட்டின் வண்மைஎன் றியம்புவர் மன்னே. ௧௯

இற்றலாற் காமற் காய்ந்துமுற் றுணர்ந்து வரம்பில்இன் புடையஈ சனுக்கு, மற்றெவன் உளதோ அவ்விளை யாட்டும் உலகெலாம் உய்யுமா றன்றே, அற்றென உணராக் கயவர்கள் காமத் திறமெனக் கருதுவர் அனையர், பெற்றியை யாரே தெளிதரற் பாலார் பிறங்கொளி மணிநிறக் குரிசில். ௨௦

நிலைஇயற் பொருளும் இயங்கியற் பொருளும் நிலைபெறத் தொழிற்படுத் துடைய, தலைவன்அங் கவனே பனிவரைப் பிராட்டி தன்னையும் நின்னையும் இடப்பால், மலரணைப் புத்தேள் தன்னையும் எனையும் வலப்புடைக் காலருத் திரனைக், கலைமகள் தனையும் உளத்திடைத் தந்தான் காத்துயிர்த் தழிப்பது கருதி. ௨௧

அகிலமுந் தானே அருள்தொழில் நடாத்தும் ஆங்கவற் கெவற்றினும் சால, மிகுபெருங் காதல் உமையவ ளிடத்தும் விரவுநின் னிடத்திலும் அன்றே, முகில்உறழ் கூந்தல் அவளென நீயும் முதல்வனே உன்னடி யேற்கு, மகிழ்வுமீக் கிளைப்ப அவ்வுருப் பெறுதி என்றனள் மலரணைக் கிழத்தி ௨௨

---

௧௯. கேட்டொறும் - கேட்குந்தோறும். மை - குற்றம்.

௨௦. இற்று - இத்தன்மைத்து. மற்று, பிறிதென்னும் பொருளது. விளையாட்டு என்பதும் பயனுடைத்தன்றி வீண் தொழில் அன்றாகலின், அஃதும் தன்பொருட்டன்றென்பார், 'உலகெலாம் உய்யுமாறன்றே' என்றார். அன்றே, பலரறி தேற்றம். குரிசில், அண்மைவிளி.

௨௧. பிரமன், விண்டு, உருத்திரன் என்பவர்களையும்; திரு, உமை, வாணி என்பவர்களையும் முறையே வலம், இடம், உள்ளங்களில் இறைவன் தோற்றுவித்தனன் என்பது இச்செய்யுளின் திரண்ட பொருள். உயிர்த்து - படைத்து.

௨௨. திருமாலே, நீயும் கருநிறத்தை நீக்கிப் பொன்னுருவத்தை அடைக எனக் கூறுவாள், அவளென எனவும், உமையவளோடு ஒப்புக் கூறுதற்கு இவ்வாறும் இனிமையாக எடுத்துக் கூறினள் என்க.

விளங்கிழை மாற்றம் அச்சுதன் கேளா வெகுண்டுநின் மனக் கருத் திதுவேல், களங்கனி அனையேன் றன்னுடன் இந்நாள் காறும்நீ பொலஞ்சுடர் நிறத்தாய், வளங்கெழும் இன்பம் என்னணம் நுகர்ந்தாய் மற்றினிச் செக்கர்வான் உருவம், உளங்கொளப் பெறுகேன் என்றவட் கியம்பிக் கதுமெனக் காந்தனன் ஊங்கு. உ௩

கச்சிமா நகரம் எய்திவீ ராட்ட காசநல் வரைப்பினுக் கெதிரா, அச்சிவன் வீர நகைதிரண் டனைய சக்கர தீர்த்தம்உண் டாக்கி, முச்சகம் ஏத்துங் கங்கையிற் சிறந்த அத்தடம் மூழ்கினோன் பியற்றிப், பச்சைமால் வதிந்தான் வதிந்திடம் பச்சை வண்ணன்ஆ லயமெனப் படுமால். உ௪

ஆங்கனம்* வைகி நாள்தொறும் ஈரே ழாயிரம் அளிகெழு பொகுட்டுத், தேங்கமழ் கமலங் கொண்டுவீ ராட்ட காசமா தேவனை அருச்சித், தோங்குபே ரன்பின் தொழுதெழுந் திரப்ப உலப்பருங் கருணைமீக் கூர்ந்து, மாங்குயில் பாகன் எதிரெழுந் தருளி வழங்கினன் பவளம்நேர் வடிவம், உரு

பொரிஅரைக் காயாம் போதுறழ் வண்ணங் கழீஇத்துகிர் புரைநிறம் எய்திப், பெரிதுளம் மகிழ்ந்தான் ஆயிடைச் சிலநாள் வைகிமீண் டரவணைப் பெருமான், விரிதிரைத் தீம்பாற் கடலகத் தணுகி விரைமலர்க் கிழத்தியோ டிணங்கித், தெரியிழைத் திருவே காண்டிநீ பவளச் சேயொளி தழைக்கும்இவ் வடிவம். உ௬

கச்சறப் பணைத்துப் புடைபரந் தெழுந்த கதிர்மணி முலையினாய் இதுஎன், இச்சையாற் பெற்றேன் விழைந்தவா றென்மாட் டின்னலம் நுகரெனக் கேட்டுப், பச்சிளந் தோகை இந்நிறம் அடிகள் இச்சையாற் படைத்ததேல் மாய, விச்சையே போலும் நிலைமையன் றெனக்கீ தென்பயன் விளைத்திடும் என்றாள். உ௭

---

உ௩. என்னணம், எவ்வணம் என்பதன் மரூஉ.

உ௪. வதிந்த என்பதன் ஈற்று அகரம் தொக்கது.

உரு. ஈரேழாயிரம் - பதினாலாயிரம். *'ஆங்கனம்' எனவும் பாடம்.

உ௬. போது - பூ. உறழ் - ஒத்த. கழீஇ - நீக்கி. துகிர்புரை - பவளத்தை ஒத்த. சேயொளி - சிவந்த ஒளி.

### திருமகள் காஞ்சியை யடைதல்

பாய்சிறைக் கலுழப் புள்ளர சுகைக்கும் பஃறலைச் சேக்கையன் வெகுளா, நீயினி இருந்தை வண்ணமா கென்னச் சபித்தலும் நேரிழை மேனிச், சேயொளி கருகக் கண்டுளம் பதைத்தாள் சிறியனேன் செய்பிழை பொறுத்திங், கேயும்இச் சாபம் தவிர்த்தருள் பொறையாள் கொண்கனே என்றடி பணிந்தாள். ௨௮

தெம்முனை கடந்த திகிரியோன் இரங்கிச் சீற்றத்தால் விரைந்துனைச் சபித்தேன், அம்முறை யாற்றாற் கரிநிறம் பெற்றாய் ஆயினும் முன்னையின் விழைய, வெம்முலைப் போகம் எனக்குள தாக வெருவலை எனத்தழீஇக் கொள்ளச், செம்மலர்த் திருவும் அடியிணை இறைஞ்சித் திருந்துதன் இருக்கையுட் புக்காள். ௨௯

புக்கபின் அங்கண் பாங்கியர் தம்மோ டுசாவினள் புதுநறுக் கான்று, நக்கபூஞ் சோலைக் காஞ்சிமா நகரை நண்ணிஆங் கிணைவிழி களிப்பத், திக்கெலாம் பரசத் திகழ்உல காணித் தீர்த்தநீர்த் தடங்கரை மாடே, மைக்குழல் உமையாள் இனிதமர்ந் தருளித் தவஞ்செயும் வரைப்பினைக் கண்டாள். ௩0

அனையநல் வரைப்பு நண்பில மாகி அருட்பர வெளிபதாய்த் திகழும், கனைகடல் உடுக்கை நிலமகட் குந்தித் தானமாம் கமழ்நறுங் கடுக்கைத், தனிமுதற் பிரமந் தனக்கொரு வடிவாம் தாழ்குழல் உமையவட் கடியார், வினைதபு மூலத்திரு அதுவே விளங்கொளிக் காஞ்சியம் பதியுள். ௩௧

---

௨௮. இருந்தை - கரி. பொறையாள் - பூமிதேவி. கொண்கன் - கணவன்; இது கருத்தோடு கூடிய அடை.

௨௯. தெம்முனை - போர்முனை. சீற்றம் - கோபம். வெம்மை - விருப்பம்.

௩0. உலகாணித் தீர்த்தம், பஞ்சதீர்த்தம் என்பன காமாட்சியம்மையார் திருக்கோயில் திருக்குளத்தின் பெயர்கள்.

௩௧. உந்தி - நாபி. வடிவாம் உமையவள் என்க. 'காஞ்சியம்பதியுள் உமையவட்கு மூலத்திருவுரு அதுவே' எனக்கூட்டுக. காஞ்சியில் இறைவன் மூலவடிவங்கள் உள்ள பல தலங்கள் இருப்பினும், அவ்வெல்லாவற்றிற்கும் அம்மையார் மூலவடிவம் உள்ள தலம் அஃது ஒன்றேயாகலின், இவ்வாறு கூறினர்.

குறைவிலா நிறைவாய் உண்மையாய் அறிவாய்க் கொட்புறு மனமடங் கிடமாய், மறைமுடிப் பொருளாய் இன்பமாய்ச் சிவமாய் மாசற வயங்குரூப ரொளியை, நிறைதவ யோகத் தலைவர் இவ்வாறு நெஞ்சகத் தேவழி படுவார், அறைகடற் பரப்பிற் காஞ்சிமா நகரின் ஆயிடை வழிபடு வாரால். ௩௨

காமகோடிப் பெயர்க் காரணம்.

ஒருமுறை அங்கட் காமமாம் தருமம் உஞற்றுநர் தமக்கும்அத் தருமம், தருபயன் கோடி யாதலிற் கரடத் தடத்திழி கடாம்படு கலுழிப், பெருவரை வதனப் பிள்ளையைக் குகனைப் பெற்றவள் அமர் பிலம் அதுதான், கருதரு காமக் கோடிஎன் றுலகிற் காரணப் பெயரி னால் வயங்கும். ௩௩

அன்றியும் காமக் கிறைபவர் தனதர் அனையவர் கோடியர்த் தரலால், என்றும்ஓர் இயல்பின் எங்கணும் விரவி எவற்றினுங் கடந்தரூப ரொளியைக், குன்றுறழ் கொம்மைக் குவிமுலைத் தடத் தாற் குழைத்தருள் கருணைஎம் பிராட்டி, நன்றுவீற் றிருக்கும் பேரொளிப் பிலத்திற் கப்பெயர் நாட்டலும் ஆமால். ௩௪

---

௩௨. குறைவிலா நிறைவு என்பது பரிபூரணம் எனவும், உண்மை யென்பது சத்து எனவும், அறிவு என்பது சித்தெனவும், மனமடங்கிடம் என்பது மனாதீதம் எனவும், மறைமுடிப்பொருள் என்பது வேதாந்தமென வும், இன்பமென்பது ஆனந்தமெனவும் கூறப்படும். இவ்வாறு என்றது குறைவிலா நிறைவாதல் முதலிய இயல்புடைய தாகக்கொண்டு என்றபடி. இவ்வாறு என்பது பின்னும் சென்றியையும். யோகத்தலைவர் இவ்வாறு கொண்டு அகத்தே நெஞ்சினும், புறத்தே காஞ்சியில் அப்பிலத்தினும் வழி படுவார் என்க.

௩௩. இது முதல் ஆறு செய்யுட்களால் காமகோடி என்னும் அப்பிலத் தின் பெயர்க்காரணம் கூறுகின்றார். காமமாந் தருமம் - காமியத் தருமம். கரடம் - மதம்பாய் சுவடு. தடம் - விசாலித்த இடம். கடாம் - மதசலம். படு - பெருகுகின்ற. கலுழி - ஆறு. காமம் (காமியத்தருமம்) கோடியாத லால் காமகோடியாயிற்று என்பதாம்.

௩௪. காமத்துக்கு என்பதில் அத்துச்சாரியை தொக்கது. காமம் என்பது, ஈண்டு விரும்பத் தருவதாகிய செல்வத்தையுணர்த்தி நின்றது. இறையவராகிய தனதர் என்க. தனதர் குபேரர். அனையவர் - ஒத்தவர்.

இன்னும்இப் புவனப் பரப்பினிற் காமம் என்பன மனைவியர் மக்கள், பொன்னணி இருக்கைப் பூண்முதல் பலவாம் பூந்தளிர் அணிநலங் கவற்றுங், தன்னடி வணங்கி இரந்தவர் தமக்குத் தடங்கிரி பயந்தபே ராட்டி, அன்னவை கோடி அளித்திட லானும் அப்பெயர் எய்தும்அங் கதுவே. ௯௫

அல்லதூஉங் கவைத்தாட் கரும்பகட் டூர்தி அடுதொழிற் கூற்றினைக் குமைத்த, கொல்லைஏற் றண்ணல் நுதல்விழிச் செந்தீக் கோட்படும் ஒருதனிக் கருப்பு, வில்லியை விளையாட் டியற்கையிற் கோடி காமரா விழித்துணைக் கடையால், அல்லியங் கோதை ஆங்களித் திடலால் அப்பெயர் பூண்டதும் ஆமால். ௯௬

மற்றும்ஆ ருயிர்சேர் நாற்பொருட் பயனில் வகுத்தமூன் றாவது காமம், பற்றுகா மத்திற் கோடியா முடிவிற் பயில்வது வீடுபே றாகும், உற்றவர் தமக்கு வீடுபே றளிக்கும் உண்மையி னாலும்அப் பெயராற், சொற்றிடப் படுமால் உலகெலாம் ஈன்றாள் அமர்ந்தருள் சுடரொளி விமானம். ௯௭

பின்னரும் ஒன்று ககரமே அகரம் மகரமாப் பிரிதரும் மூன்றும், அன்னஎ றுகைக்கும் அயன்அரி ஈசன் ஆயமுத் தேவரைப் பகரும், இன்னவர் தம்மை யுகந்தொறுங் கோடி முறைஎழில் விழிகளிற் படைத்தாள், மின்னிடைப் பிராட்டி என்பத னானும் அப்பெயர் விளங்கும்என் பதுவே. ௯௮

---

௯௫. காமம் கோடிதருதலால் காமகோடியாயிற்று என்பதாம்.

௯௬. கவை - பிளவு. தாள் - கால். பகடு - கடா. குமைத்த - வருத்திய. கொல்லை என்புழி ஐ சாரியை. அல்லி - அகவிதழ். கோதை - மாலை. காமர் கோடி பேரைத் தருதலால் காமகோடி என்றாயிற்று என்பதாம்.

௯௭. காமத்தின் கோடியில் (முடிவில்) உள்ளதனை(வீட்டை)த் தருதலால் காமகோடி என்றாயிற்று என்பதாம்.

௯௮. க - பிரமன். அ - மால். ம - உருத்திரன். க+அ=கா+ம= காம+அட்சி=காமாட்சி. அட்சி - கண்ணையுடையவள். க, அ, ம என்னும் இவர்களைக் கண்களால் கோடிமுறை படைத்தவள் இடமாகலின் காமகோடி பீடமாயிற்று என்பதாம்.

வேறும்ஒன் றுங்கட் காவெனப் படுவாள் வெண்மல ராட்டிமா என்பாள், ஊறுதேங் கமலப் பொகுட்டணை அணங்காம் ஊங்குவர் இருவரும் முகிலே, மாறுகொள் ஐம்பால் உமைவிழிக் கோடி தன்னிடை வருமுறை யானும், ஏறும்அத் திருப்பேர் எம்பெரு மாட்டிக் கென்றெடுத் தியம்புவர் உணர்ந்தோர். ௩௯

விந்துவின் வயங்கி அம்பைவீற் றிருக்கும் வியன்திருச் சக்கர வடிவாம், அந்தவான் பிலந்தான் இயம்பிய காமம் அனைத்திற்கும் ஆதர மாகிப், பந்தமில் காமக் கோட்டம்என் றொருபேர் பரித்திடும் மற்றெவற் றினுக்கும், முந்திய பீடம் ஆதலின் ஆதி பீடமும் மொழிந்திடப் படுமால். ௪௦

### திருமகள் வழிபாடு

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இனைய தாகிய திருப்பிலம் அதனை எழால்மி டற்றிளஞ் சுருப்பினம் முரலும், நனைக லுழ்ந்தலர் மலர்த்தவி சிருக்கை நகைமலர்க்கொடி கண்டுகை தொழுதே, அனைய சூழலின் இடப்புறம் வைகி அடங்க லார்புரம் அழலெழச் சிரித்த, மூனவ ரார்க்கொரு சத்தியாய் இன்பாய் முழுது மாகிய அகிலகா ரணியை. ௪௧

பாதம் ஒன்றொடு நிவிர்த்தியால் தரைக்கண் பதம்இ ரண்டொடு பதிட்டையால் புனற்கண், பாதம் நான்கொடு வித்தையால் கனற்கண் பதங்கள் எட்டொடு சாந்தியால் வளிக்கண், பாதம் ஒன்பத னொடு வெளிப் பரப்பிற் பகருஞ் சாந்தியின் அதீதமாங் கலையாற், பாதம் ஆயிரத் தொடுபர வெளிக்கண் பயிலும் அக்கரத் தனிமுதற் பரையை. ௪௨

---

௩௯. கா+மா+அட்சி - காமாட்சி. கா, மா இவர்களைக் கோடிமுறை படைத்தமையால் காமகோடியாயினள் என்பதாம்.

௪௦. விந்து வடிவம் வட்டம். ஆதாரமென்பது குறுகி நின்றது. எவற்றினுக்கும் என்றது சத்திபீடங்கள் அறுபத்துநான்கிற்கும் என்றவாறு.

௪௧. நனை - தேன். கலுழ்ந்து - ஒழுகி

௪௨. நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐந்துகலைகளிலும் சத்தி முறையே ஒன்று, இரண்டு, நான்கு, எட்டு ஒன்பது என்னும் பாதங்களோடும், பரவெளியில் ஆயிரம் பாதங்களோடும் இருப்பள் என்பது இச்செய்யுளின் பொருள்.

கருமை செம்மைவெண் ணிறமுடை யாளைக் காமக் கோடி
வான் பிலவடி வாளை, அருவி தாழ்குவட் டணிமலை மகளை மாயை
யோடுல கனைத்தும்ஈன் றாளை, உருகி நெக்குநெக் குளப்பெருங்
கோயி லுள்ளு றுத்திஎன் உடம்பினைப் பொதிந்து, மருவும் இக்கரு
நிறஞ்செதில் எடுப்பான் கருணை செய்கென வழிபட லுற்றாள். ௪௩

வருண னார்உனை வாருணி என்னப் பிருகு மாதவற் கருளிய
வாற்றால், பிருகு வாரநாள் உனைவழி படுவார் பெருவ ளத்தொடு
வாழ்வர்என் றுரைப்ப, அருவி னைப்புலக் குறும்பெறிந் துயர்ந்த
பிருகு மாமுனி மகள்அடி யேற்கும், கருணை செய்வது கடன்உனக்
கன்றே கருப்பு வில்லியைக் காய்ந்தவர்க் கினியாய். ௪௪

காஎ னப்பெய ரியகலை மகளை முந்தை ஞான்று நின் கண்
ணெனப் புரந்தாய், மாஎ னப்பெய ருடையமற் றெனையும் மலர்ந்த
நின்விழி போற்புரந் தருளி, ஏஎ னப்பிறழ் தடங்கணாய் காமக்
கண்ணி யாம்பெயர் எய்துவை என்னாப், பூஎ னப்பயில் அணைமிசைக்
கிழத்தி போற்றி சைத்தலும் எதிரெழுந் தருளி. ௪௫

திருமகள் வரம்பெறல்

எம்பி ராட்டிவான் கருணைகூர்ந் தருளி ஏட விழ்ந்தபூந்
தவிசுறை அணங்கே, கம்பி யாதிமற் றுன்உடற் கருமை கரிய
சாந்தமாக் கழிகமுன் னையினும், நம்பு நல்லுருப் பெறுதிஇப்
பொழுதே நார ணற்குமிக் குரியவ ளாவாய், வம்ப றுத்தெழுந்
தோங்கிஅண் ணாந்து மதர்த்து வீங்கிய வனமுலைத் தோகாய். ௪௬

அழகு வாய்ந்தநின் வடிவினிற் கழியும் அனைய சாந்தணி றுதலி
னார் தமக்கு, விழவும் இன்பமுஞ் செல்வமும் புகழும் மேகல் இன்

---

௪௩. நிறச்செதில் என்பது மெலிந்து நின்றது. செதில் - தோல்.

௪௪. இறைவியை வருணன், பிருகுமுனிவருக்கு 'வாருணி' என்னும் பெயரால் புதல்வியாகக் கொடுத்ததாக ஓர் வரலாறு இருத்தல்வேண்டுமென்பது இதனால் தெரிகின்றது. பிருகுவாரம் - வெள்ளிக்கிழமை. இலக்குமி பிருகுமுனிவர் மகள் என்பது மேலே அரிசாப பயந்தீர்த்த தானப் படலத்திலும் காண்க.

௪௬. கம்பியாதி - அஞ்சாதே. நம்பு - விரும்புகின்ற. வம்பு - கச்சு. மதர்த்து - பூரித்து. வனம் - அழகு.

மையும் இகழுமற் றொழிக, பழைய வேதமுற் றுணர்ந்துயர் சிறப்பிற் பனுவ லாட்டியும் இவண்அமர் செயலாற், கழிவில் அன்பினீ வேட்டவா றெனக்குக் காமக் கண்ணியாம் பெயர்உறு கென்ன. ௪௭

### இறைவி திருமாலுக்குக் கட்டளையிடுதல்

இனைய வாறிவண் நிகழ்வுழிச் சுரும்பர் இமிருந் தாமரை உந்தி யங் கடவுள், மனைய கத்துமா மடந்தையைக் காணான் மனம ழுங்கினன் பிரிவுநோய் வருத்தக், கனைக டற்பரப் பெங்கணுந் தேடிக் காஞ்சி மாநகர் ஆவயின் கண்டான், அனைய தாரமும் இறைவியும் தம்முள் அறைவ கேட்டவண் ஒளித்துநின் றனனால். ௪௮

ஒள்வ ளைக்கரத் திருவரும் அவனை உணர்ந்து நோக்கினர் என்னை ஆளுடையாள், கள்வன் ஒத்திவண் நிற்பவன் யாரே எனக்க டாயினள் கடிமலர் அணங்கும், வெள்க லுற்றுமுன் இறைஞ்சினள் மாயோன் விரைவின் அம்பிகை திருவடி வணங்கி, உள்ள கம்பெரு மகிழ்ச்சியின் திளைப்ப ஒருமருங்குற ஒடுங்கிநின் றனனே. ௪௯

நங்கை நாகணைக் குரிசிலை நோக்கி நன்று வந்தனையோஎன வினவி அங்கண் முச்சகம் நீபுரந் தளிக்கும் ஆருயிர்த்தொகை இனிதுவாழ்ந் தனவே, பங்கயக்கணுப் என்றலும் கலுழப் பாகன் நின்னருட் கருணைபெற் றுடையேம், எங்கள் வாழ்வினுக் கெவன் குறை யானும் இவளும் உய்ந்தனம் எனத்தொழு துரைத்தான். ௫௰

இறைவி பின்னரும் ஒன்றவற் கியம்பும் ஈண்டு முப்பதிற் றிரண் டறம் வளர்க்கும், முறையின் என்அறச் சாலைஈ திங்கோர் மூரிப் பாரிடம் இதற்கிடை யூறாய்க், குறைவில் ஆற்றலின் உழிதரும் அத

---

௪௭. மேகல் - மேவுக; 'மேக' எனப்பாடங்கொள்ளுதல் சிறக்கும். பனுவலாட்டி - சரசுவதி.

௪௮. காஞ்சிமாநகர் - காஞ்சிமா நகரில். ஆவயின் - அவ்விடத்தில்.

௪௯. ஒள் வளை கரத்து இருவரும் - ஒளிபொருந்திய வளையலை யணிந்த கரத்தையுடைய (அம்மையாரும் இலக்குமியுமாகிய) இருவரும். நோக்கினள் என்னும் பாடத்திற்கு வளை கர திரு வரும் அவனை எனக் கொண்டு, வளையல் அணிந்த கரத்தையுடைய இலக்குமி வருகின்ற அத்திரு மாலை எனவுரைக்க. கடாயினள் - கேட்டாள்.

௫௰. 'நன்று வாழ்ந்தனையோ' எனப்பாடம் இருந்திருத்தல் வேண்டும்.

௫௧. மூரி - வலிமை. பாரிடம் - பூதம். உழிதரும் - திரியும்.

னைக் குறும்ப டக்குதி நீஎன ஏவ, நறைம லர்த்துழாய் மோலியும் இறைஞ்சி நயந்து பஞ்சதீர்த் தத்தடங் கரைப்பால். ௫௧

திருமால் பூதத்தை அடக்கல்

அன்று பாரிடம் பாரிடை வீழ்த்தி ஆற்ற லான்மிதித் ததன் மிசை நின்றான், நின்ற வன்றனை உந்திமேல் எழும்ப நெரித்தி ருந்தனன் இருந்தவன் றனையும், வென்றி சால்விறற் பூதம்மேல் உந்த நீண்டு மற்றதன் மிசைப்படக் கிடந்தான், கன்று பூதமும் வலிமுழு திழந்து கமலக் கண்ணனை வணங்கிஒன் றிரக்கும். ௫௨

வள்ள லேமலர்த் திருவினை யாடு மார்ப னேபெரும் பசிஎனை வருத்த, உள்ளு டைந்துளேன் ஆண்டுதோ றடியேற் கொருமகன்றனை உயிரொடும் உதவின், கொள்ளும் அப்பலி ஏற்றுளம் மகிழ்வேன் கொடுத்தி இவ்வரம் எனக்கெனஅரவப், பள்ளி யோனும்அற் றாகென விளம்பிப் பத்தர் போற்றஅத் தலத்தினி திருந்தான். ௫௩

கள்வன் நின்றவன் இருந்தவன் கிடந்தோன் என்னும் நால்வகைக் கரிசறு வடிவால், வெள்வ ளைக்கரக் கடவுள்அங் கமர்ந்தான் விமல நாயகி ஆணையின் ஆற்றான், முள்ளெ யிற்றராப் பணம்புரை அல்குல் முளரி மாதும்அப் பிலத்தயல் இருந்தாள், புள்ளு யர்த்தவற் கினியவாம் அங்கட் போற்றப் பெற்றவர் வைகுந்தம் புகுவார். ௫௪

கறைமி டற்றிறை வைகும்வீ ராட்ட காச மேன்மையின் தொடர்ச்சியால் இங்கே, அறைக ழல்திரு நாயகன் வரலா றனைத்தும் கூறினும் அத்திரு நகரை, நிறைவி ருப்பினல் வழிபடப் பெறுவோர் நிலமி சைப்பெரு வாழ்வின ராகிப், பிறைமு டிப்பிரான் திருவடிக் கலப்பிற் பெறல ரும்பர போகமுற் றிருப்பார். ௫௫

ஆகத் திருவிருத்தம்-௧௱௪௯.

---

௫௨. பாரிடம் - பூதத்தை. பாரிடை - பூமியில் உந்தி - தள்ளி.

௫௪. வளை - சங்கு. பணம்புரை - படம் போன்ற.

௫௫. தொடர்ச்சி - இயைபு; இது மற்றொன்று விரித்தலாகாது என்றபடி. திருநாயகன் - திருமால். அத்திருநகர் என்றது வீராட்டகாசத்தை.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) மணிகண்டேசப் படல உண்மையிற் கூறப்பட்ட முதலாவது உண்மையையும், (உ) கச்சபேசப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியையும், (௩) 'இறைவனும் இறைவியும் செய்யும் செயல்களெல்லாம் பிறர் பொருட்டே' என்பதும், (௪) 'இலக்குமி முதலிய சத்திகளெல்லாம் இறைவியினிடத்து அடங்கியவர்களே' என்பதுமாகிய உண்மைகளையும் விளக்கும். பிறவும் உள வேற் கொள்க.

---

## உரைநடை

மகளிர் நீராடுதலால் அவர்களணிந்த சாந்தின் வாசனை நீண்டதூரம் வீசும் தடாகங்கள் சூழ்ந்த மகாலிங்கத்தளியின் வரலாற்றைச் சொன்னோம்; இனி, வீராட்டகாசத்தின் வரலாற்றைச் சொல்லுவோம்.

சங்கார காலத்தில் எல்லாம் காலாக்கினி உருத்திரர் நெற்றிக்கண் தீயினால் அழிக்கப்பட்டபோது இறைவன் ஆனந்த மிகுதியால் மேன்மேலும் வீரநகையைச் செய்தார். அதனால் அவ்விடம் 'வீராட்டகாசம்' என்றாயிற்று.

பின்பு இறைவன் அங்கு இலிங்க உருவங் கொண்டு அமர்ந்திருந்தனன். அவ்விலிங்கத்தைச் சில சித்தர்கள் வழிபட்டு அற்புதமாகிய சித்திகளை அடைந்தார்கள். கொங்கணமா முனிவர் அங்கு வந்து, அவ்விலிங்கத்தின் பெருமையைச் சோதித்தற்கு எண்ணி, எந்தப் பொருளின்மேல் வைத்தாலும் அதனை நீறாக்குகின்றதாகிய தமது குளிகையை அதன் முடியில் வைத்தனர். அக்குளிகையை அவ்விலிங்கம் உள்ளே இழுத்துக்கொண்டது. கொங்கண முனிவர் வியப்புற்று அவ்விடத்திலேயே தங்கித் தவம்செய்து பயன் பெற்றார். மற்றும் அவ்விடத்திலடைந்து சித்திகளை எளிதில் பெற்றவர், அளவிறந்தவர். அவ்விடத்தில் திருமால் வழிபட்டுப் பவளநிறம் பெற்றனர். அவ்வரலாற்றையும் சொல்லுவோம்.

ஒருநாள் திருமால் திருமகளோடு திருப்பாற்கடலினிடத்துப் போகமாபுரத்தில் தனியிடத்திருந்து பொழுதுபோக்காக இருக்குங்கால் இலக்குமியை நோக்கி, ஒரு கதை கேட்பாயாக என்று சொல்லத் தொடங்கினர். மந்தர மலையில் ஒருநாள் சிவபெருமான் உமாதேவியாரைக் காளி என்று அழைத்தனர். அதனால் உமாதேவியார் வருந்தி, 'பெருமானே, யான் கருநிறமுடையேன்; தேவரீர் வெண்ணிறமுடையீர்; நமக்கு எவ்வாறு ஒத்த இன்பம் உண்டாகும்? ஆதலால், யான் பொன்னிறம் பெறுமாறு அருள்செய்ய வேண்

டும்' என்று வேண்டினர். அதுகேட்டு இறைவனுர், 'பெண்ணே, வருந்தற்க; தேவர்கள் காரியத்தின் பொருட்டாக உன்னை இவ்வாறு அழைத்தோம்; அதை நீ பின்னர் அறிவாய்; நிற்க, நீ விரும்பிய பொன்னிறத்தைக் காஞ்சியை யடைந்து எம்மைப் பூசித்துப் பெறுக' என்றருளினர். அவ்வாறே அம்மையார் காஞ்சியை யடைந்து, பஞ்ச தீர்த்தக் கரையில் தவம்செய்து, பொன்னுருவம் பெற்றுக் 'கவுரி' என்னும் பெயரை அடைந்தனர் என்று கூறினர் திருமால்.

இலக்குமி கேட்டு, இஃது ஆச்சரியம் என்று சொல்லி, தேவரீரும் உமாதேவியார் போல இறைவனுக்கு இனியவராதலால், நீரும் அவ்வாறே எனக்கு மகிழ்ச்சி மிகுதியுண்டாகும்படி பொன்னுருவம் பெறுக என்றனள். திருமால் கோபங்கொண்டு, 'கறுப்பாகிய என்னுடன் பொன்போன்ற நிறம் உடைய நீ இதுகாறும் எவ்வாறு இன்பம் நுகர்ந்தாய்? இனி நான் செந்நிறம் பெறுவேன்' என்று விரைவில் காஞ்சியை யடைந்து, வீராட்டகாசத்திற்கு எதிரில் சக்கர தீர்த்த மென்னும் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கித் தவம்செய்துகொண் டிருந்தனர். அவ்விடம் 'பச்சைவண்ணர் ஆலயம்' எனப்படும். அந்தத்திருமால் நாள்தோறும் பதினுலாயிரம் தாமரை மலர்களால் வீராட்டகாச இறைவனை வழிபட்டு, அவர் வெளிபட்டருளிப் பவளநிறம் தரப்பெற்றனர். பெற்றுத் திருமகள்பால்சென்று தமது பவள வடிவத்தைக் காட்டி, 'இஃது என் இச்சையாற் பெற்றதாகும்; நீ விரும்பியபடி என்னிடத்து இன்பம் நுகர்வாயாக' என்றனர். திருமகள், 'இஃது உமது இச்சையால் பெற்றதாயின், மாயவித்தை போலும்' இதனுல் எனக்கு என்ன பயன்?' என்றனள். அதனுல் திருமால் சினந்து, நீ கரிபோன்ற கருநிறத்தையடைக' எனச் சபித்தனர்.

திருமகள் பயந்து வணங்கி, 'எனது குற்றத்தைப் பொறுத்து இச்சாபத்தை நீக்கவேண்டும்' என்று வேண்டினள். திருமால் இரங்கி, கோபத்தால் விரைந்து சபித்துவிட்டேன். அவ்வாறு நீ கரிநிறம் அடைந்தாலும் முன்னிலும் உன்பால் எனக்கு விருப்பம் உண்டாகுக' என்றனர். திருமகள் வணங்கித் தன்னிடத்திற்குச் சென்றனள். சென்றவள் தனது தோழிமார்களோடு உசாவிக் காஞ்சியையடைந்து உலகாணித் தீர்த்தக் கரையில் இறைவி தவம்செய்யும் இடத்தைக் கண்டனள். அவ்விடம் பிலாகாசமாய் விளங்குவது. காஞ்சியம்பதியில் இறைவியின் மூலத் திருவுருவம் விளங்குவது அஃது ஓர் இடமே. யோகிகள் முதற்பொருளை, அகத்தில் நெஞ்சிலும், புறத்தில் அப்பிலாகாசத்திலும் வழிபடுவார்கள். அதற்குக் காமகோடிபீடம் என்று பெயர். அப்பெயர்க்குப் பல காரணங்கள் உள்ளன.

தன்னிடத்திற் செய்த காமிய தருமத்தை ஒன்று கோடியாகச் செய்தலாலும், காமமாகிய செல்வத்திற்குத் தலைவராகிய குபேரர்கள் போன்ற

அநேகரைத் தருதலாலும், மனைவி மக்கள் முதலிய காமப் பொருளை, கோடியாக இறைவி தன்திருவடியை வணங்கினோர்க்குக் கொடுத்தலாலும், இறைவி தனது இருவிழியின் கடையினாலும் கோடி காமக் கடவுளரைப் படைத்தமையாலும், உறுதிப்பொருள் நான்கில் காமத்திற்குக் கோடியில் உள்ள வீடுபேற்றைத் தருதலாலும், க என்னும் பிரமனையும், அ என்னும் திருமாலையும், ம என்னும் உருத்திரனையும் கோடிமுறை இறைவி விழியிற் படைத்ததனாலும், கா என்னும் சரசுவதியும், மா என்னும் இலக்குமியும் இறைவியின் விழிக்கோடியில் வருதலாலும் காமகோடி யென்னும் பெயர்பெற்றதென்பர் அறிந்தோர். விந்து வடிவமாய்ச் சக்கராகாரமாகிய அப்பிலமானது எல்லாக் காமப்பொருட்கும் ஆதாரமாய் நிற்றலால் காமக்கோட்டம் எனவும், சத்தி பீடங்கள் எல்லாவற்றிற்கும் முதற்பீடமாதலால் ஆதிபீடம் எனவும் சொல்லப்படும்.

அத்தகைய பிலத்தைத் திருமகள் அடைந்து, இறைவியை வழிபட்டு, எனது கருநிறச் சட்டையை நீக்க வேண்டுமென்று துதித்து வேண்டினள். அம்மையார் கருணைகூர்ந்து, 'திருமகளே நீ அஞ்சற்க; உனது கருநிறம் கருஞ்சாந்தாகக் கழிக; முன்னையிலும் சிறந்த உருவத்தை அடைந்து திருமாலுக்கு மிக இனியவளாகுக; உனது உடம்பினின்றும் கழிந்த சாந்தினை அணிகின்றவர்கட்கு வறுமை முதலியன நீங்கிச் செல்வம் உண்டாகுக; சரசுவதியும் இங்கு இருத்தலால் நீ விரும்பியபடி எமக்குக் காமாட்சி என்னும் பெயர் உண்டாகுக' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

இவ்விடத்து இது நிகழ, அங்குத் திருமால் திருமகளை எங்குங்காணாது தேடிக் காஞ்சியில் அவ்விடத்தையடைந்து அவ்விருவரும்பேசுதலைக் கண்டு ஒளித்திருந்தனர். அவரை அவ்விருவரும் அறிந்துபார்த்தார்கள். காமாட்சியம்மையார், 'இங்குக் கள்வன்போல் ஒளித்து நிற்பவன்யார்?' என்று கேட்க, திருமால் வந்து வணங்கி ஒதுங்கி நின்றார். திருமகள் வெட்கமுற்றனள். அப்போது அம்மையார் திருமாலை நலம் வினவினர். திருமால், 'தேவரீர் திருவருள் பெற்ற எங்களுக்குக் குறையென்னை? யாங்கள் இருவரும் உய்ந்தோம்' என்றனர். இறைவியார் மீண்டும் திருமாலை நோக்கி, 'யாம் முப்பத்திரண்டு அறங்களையும் செய்யும் அறச்சாலையாகும் இது. இங்கு ஒரு பூதம் அதற்கு இடையூறாகத் திரிகின்றது; அதன் குறும்பையடக்குக' என்றனர். திருமால் அங்ஙனமே பஞ்சதீர்த்தக் கரையில் அப்பூதத்தை வீழ்த்தி அதனை மிதித்து அதன்மேல் நின்றனர். அவரை அப்பூதம் தள்ளிமேலெழ, அதனைத் திருமால் நெரித்து அதன்மேல் உட்கார்ந்திருந்தனர். மறுபடியும் பூதம் மேலெழக்கண்டு அதன்மேல் படுத்தனர். அதனால் பூதம் வலியிழந்து, திருமாலை நோக்கி, வள்ளலே எனது பசி தீரும்படி ஆண்டுக்கு ஒருமுறை ஒரு

பிள்ளையை உயிரோடுகொடுத்தால் அப்பலியை யேற்று மகிழ்வேன்; இவ் வரத்தைக் கொடுக்கவேண்டும்' என்றது. திருமால் அவ்வாருருக என்றனர்.

அவ்விடத்தில் திருமால் கள்வன், நின்றான், இருந்தான், கிடந்தான் என நான்கு வடிவமாக அமர்ந்திருக்கின்றார். இறைவியின் கட்டளைப்படி இலக்குமியும் அப் பிலத்தருகிலிருக்கின்றனள். அவ்விட்டுணுத் தலங்களைப்போற்றுவோர் வைகுந்தத்தை அடைவார்கள். மேற்கூறிய வீராட்டகாசத்தலத்தை வணங்கினோர் இம்மையில் பெருவாழ்வுற்று இறைவன் திருவடிப்பேற்றை அடைவார்கள்.

---

## பாண்டவேசப் படலம்

கொச்சகக் கலிப்பா

பேரின்பச் சாக்கியனார் கல்லெறிக்கும் பேறுதவு
வார்தங்கும் வீராட்ட காச வரவிதுவால்
சீர்தங்கு தென்பால் திருப்பாண்ட வேச்சரமாம்
கார்தங்கும் இஞ்சிக் கடிநகரங் கட்டுரைப்பாம். க

தருமம் பயந்த தநயன் முதலோர்
உருகெழுவெங் காட்டின் உரோமசனே யாதித்
திருமுனிவர் தம்மோடுந் தீர்த்தமெலாம் ஆடக்
கருதி நடந்தார் கழியாத காதலார். உ

அங்கங் கிலிங்கம் நிறுவி அருச்சித்துப்
பங்கந் துமிக்கும் பரம்பொருளைப் போற்றிசைத்துச்
சிங்கம் படுக்குந் திறலார் வருநெறியார்
தெங்கம் பொழில்சூழ் திருக்காஞ்சி நண்ணினார். ங

அங்கட் பலதளியும் நோக்கி அகமகிழ்ச்சி
பொங்கித் திருக்கம்ப மாதியாப் புண்ணியநீர்க்

---

க. சாக்கியனார் - அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். கார் - மேகம். இஞ்சி - மதில். வீராட்டகாசமே சாக்கிய நாயனார் கல்லெறிந்த இடமென்பதாக ஐதிகம் உண்டு; அக்குறிப்பு இங்கும் காணப்படுகிறது.

உ. தருமம் - தருமதேவதை. உருகெழு - அச்சந்தரும்.

ங. படுக்கும் - அழிக்கும். தெங்கம் பொழில் - தென்னஞ் சோலை.

கங்கைச் சடிலக் கடவு ளிடமெல்லாம்
தூங்கப் பேரன்பின் தொழுதுதொழு தேகினர். ௪

வீராட்ட காசங் கடைக்கால் வியன்மலர்கொண்
டாராப் பேரன்பின் அருச்சித் ததன்தென்பால்
ஏரார் தத்தம் பெயர்சாத்தி எல்லாரும்
தாரார்த்த கொன்றைச் சிவலிங்கந் தாபித்தார். ௫

அறமைந்தன் வீமன் விசயன் அலர்பூந்தார்
நறவிண்ட திண்தோள் நகுலசகா தேவர்
மறனின்றி இன்னோர் மனைக்கிழமை பூண்ட
முறையொன்று கற்பின் துரோபதைமுன் னானோர். ௬

சீரார் திருட்டத் துமனன் சிகண்டிமற்றும்
ஏரார் கழற்கால் யதுமரபின் மன்னருடன்
ஊரானேற் கன்பின் உரோமசர் முற்கலனார்
பாரார் வியாதர் முதலாய பன்முனிவர். ௭

என்றினைய ரெல்லாம் இலிங்கந் தனித்தனியே
நன்றிருத்தி ஏத்தி நயப்பாடு பெற்றார்
அன்றவர்கள் போற்றும் இலிங்க மவைகண்டோர்
மன்றின் நடமாடும் வள்ளல் அருள்பெறுவார். ௮

கயிலாயம்

அன்னவற்றின் தென்பால் கயிலாயம் அவ்வரைப்பின்
நன்னர்க் கயிலாய நாதன் றனைநிறுவி

---

௪. திருக்கம்பம் - திருவேகம்பம்.

௫. கடைக்கால் (ஆக) - முடிவாக. ஏர்ஆர - அழகுபொருந்த.

௬. அறமைந்தன் - தருமன். நறவிண்ட - (மாலையின்) தேன் ஒழுகுகின்ற - மறன் - பாவம்.

௭. திருட்டத்துமனன், சிகண்டி இவர்கள் துரோபதையின் உடன்தவர்கள். ஊர் ஆனேற்கு என்பதை ஆன் ஊர்வாற்கு என மாற்றி, இடபவாகனத்தையுடைய இறைவனுக்கு எனப் பொருள்கொள்க.

௮. நயப்பாடு - விரும்பிய பொருள்.

மன்னுந் திசைக்கிறைமை பெற்றான் மருவலார்க்
கின்னல்புரி முத்தலைவேல் ஈசானன் என்பவே. கூ

ஆகத் திருவிருத்தம் - கஎருரு.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) முப்புராரிகோட்டப் படல உண்மையிற் கூறப்பட்ட மூன்றாவது உண்மையை விளக்கும். பிறவும் உள வேற் கொள்க.

## உரை நடை

சாக்கிய நாயனார் கல்லால் எறிந்ததற்கும் வீடு பேற்றைத் தந்த இறைவன் எழுந்தருளியுள்ள வீராட்டகாச வரலாறு இதுவாகும். இனி, பாண்டவேச வரலாற்றைச் சொல்லுவோம்.

தருமன்முதலிய பாண்டவர்கள் ஐவரும் உரோமசர் முதலிய முனிவர்களுடன் தீர்த்தயாத்திரை செய்து, அங்கங்கு இலிங்கம் தாபித்துப் பூசித்து வருவோர் காஞ்சியை யடைந்து, அங்குள்ள பல தலங்களையுங்கண்டு மகிழ்ந்து, திருவேகம்பம் முதலாக வணங்கி, வீராட்டகாசத்திற்குத் தெற்கில் ஐவரும் துரோபதை முதலிய அவர்கள் மனைவிமார்களும் உரோமசர் முதலிய முனிவர்களும் திருட்டத்துய்மன், சிகண்டியும், யதுகுலமன்னர்களும் தனித்தனி தங்கள் பேரால் இலிங்கம் தாபித்துப் பூசித்துத் தாங்கள் கருதிய பயன்களை அடைந்தனர்.

கயிலாயம்

அவைகளுக்குத் தெற்கில் ஈசானன், 'கயிலாயநாதன்' என்னும் பெயரால் ஓர் இலிங்கம் நிறுவிப் பூசித்துத் திக்குப்பாலகனாயினன்.

# மச்சேசப் படலம்

கலி விருத்தம்

பார்த்த ராதியோர் வழிப டும்புகழ்
ஆர்த்த சூழல்கள் விளம்பி னும்அருள்
கூர்த்த அப்புலக் குடக்கண் இப்பிநீர்த்
தீர்த்த ஞாங்கர்மச் சேசங் கூறுவாம். க

கூ. மருவலார் - பகைவர். முத்தலைவேல் - சூலம்.

க. பார்த்தர் - அருச்சுனர்; பாண்டவர்களிற் சிவபூசையிற் சிறந்தவனாகலின், பன்மையாகவும் முதலாகவும் கூறினர். புகழ் ஆர்த்த - புகழைப் பிணித்த. சூழல்கள் - தலங்கள். கூர்த்த - மிகுந்த.

ஒப்பில் அற்புதம் உணர்த்த எம்பிரான்
இப்பி முத்தம்அங் கெடுத்த ளித்தலால்
செப்ப ரும்புகழ் இப்பி தீர்த்தம்என்
றப்பெ ரும்பெயர் அதனுக் காயதே. உ

மற்ற தன்கரை மச்ச லிங்கம்என்
றற்றம் இல்அரி அருச்சித் துள்ளது
துற்ற பாதகச் சோம காசுரன்
கற்கும் மாமறை கவர்ந்தொ ளித்தநாள். ௩

ஒத்தொ ழிந்தன உலகம் யாவையும்
நீத்த வேள்விய நிலைமை குன்றலான்
தீத்தெ றும்பசித் தேவர் மாயனைச்
சோத்து நீசரண் எனத்து தித்தனர். ௪

அஞ்ச லீரென அருளி அச்சுதன்
நெஞ்ச கத்துற நினைவின் நாடினன்

---

உ. இப்பிமுத்தம் - இப்பியில் தோன்றும் முத்துக்கள். இறைவன் முத்தமெடுத்துத் தந்தவரலாறு, 'இராதந்திர கற்பத்தில் காஞ்சியில் இருந்த வித்தியாதரன் என்னும் வேதியன் ஒருவன் சிவயோக நிலையை அடைந்திருந்து ஒருகால் அளகாபுரிக்குச் சென்று, அங்குள்ள ரேகாவதி என்பவளைக் காமுற்று, குபேரனால் அவளை மணந்துவந்து காஞ்சிப்பதியில் இப்பிதீர்த்தக் கரையில் இல்லறம் நடாத்திவந்தனன். அவர்களுக்குப் புத்திரப்பேறின்மையால் ரேகாவதி சிவபூசை செய்ய, ஓர்சற்புத்திரன் உதித்தனன். ரேகாவதி பின்பு இறைவனை நாள்தோறும் ஆயிரம் முத்துக் கொண்ட ஆயிரம் முத்தாரங்களால் அருச்சித்து வந்தனள். ஒருநாள் அக்குழந்தை ஒரு முத்தாரத்தைத் தூபத்திற் கமைந்த நெருப்பில் இட்டது. அதனைத் தியானத்திலிருந்த ரேகாவதி அறியாமல் பின்னர் அதனது குறிப்பால் அறிந்து, அக்குழந்தையை வாளால் கழுத்தையரியுங்கால் இறைவன் அம்மையப்பராய்த் தோன்றிக் குழந்தையை எழுப்பித்தந்து, அவள் அருச்சித்தற்காக அத்தீர்த்தத்தில் இப்பி முத்தத்தையுண்டாக்கி, அவளுக்கு அருள் செய்தனர்' என்பது. இது இந்நூலின் வடமொழி முதனூலில் உள்ளது.

௩. அரி - திருமால். துற்ற - நெருங்கிய. சோமுகன் என்பது இங்குச் சோமகன் எனக் காணப்படுகிறது.

௪. நீத்த வேள்விய - நீங்கிய வேள்வியை யுடையனவாய். தீ தெறும் - தீபோலச்சுடும். பசி - பசியினையுடைய. சோத்து - அஞ்சலி.

எஞ்சு றுமறை யாவுங் கைக்கொடு
வஞ்சன் ஆழியுள் மறைந்த வண்ணமே. ௫

பிருகு மாமுனி சபித்த பெற்றியால்
ஒருவ ருங்கயல் உருவு தாங்குபு
மரும லர்பொழிற் காஞ்சி வைப்பிடைப்
பொருவில் இப்பிநீர்ப் புடையில் நண்ணினுன். ௬

வேறு

சலங்கொள் மீன்உருத் தன்பெயர் நாட்டிஅங்
கிலிங்கம் அன்பின் இருத்தி அருச்சனை
துலங்கச் செய்தருள் பெற்றுத் தொகுநிதிக்
கலங்கள் மல்கு கடலகத் தெய்தினுன். ௭

சோம கன்றனை அட்டுச் சுருதிகள்
மாம றைக்குலத் தார்க்கு வழங்கினுன்
நாம நீர்க்கடல் நாகணைப் பள்ளிமேல்
தாம ரைக்கண் வளருந் தகைமையான். ௮

சங்கம் நேர்உருப் பஞ்ச சனப்பெயர்
வெங்க ணனையும் ஆயிடை வீட்டியே
துங்க ஓசை வலம்புரித் தோற்றமாம்
அங்க வன்றன் எலும்பை அணிந்தனன். ௯

கச்சி மாநகர் வைப்பிற் கருந்துழாய்
மச்சம் அர்ச்சித்த மச்சலிங் கத்தினை
நச்சி ஏத்துநர் தாம்பெறு நன்னலம்
இச்ச கத்தெவர் இற்றென் றளப்பரே. ௧௦

ஆகத் திருவிருத்தம் - ௧௱௪௫.

---

௫. எஞ்சுறு - குறையாத. ஆழி - கடல்.

௬. கயல் - மீன். பொருவில் - நிகரில்லாத.

௭. சலம் - நீர். கலங்கள் - மரக்கலங்கள்.

௯. வலம்புரித் தோற்றம் - சங்குபோன்ற தோற்றம்.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) முப்புராரிகோட்டப் படல உண்மைகளில் மூன்றுவது உண்மையையும், (உ) கச்சபேசப் படலத்தின் நான்காவது உண்மையின் பிற்பகுதியையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

## உரை நடை

அருச்சுனன் முதலியோர்கள் வழிபட்ட தலங்களைச் சொன்னோம் இனி, அவற்றிற்கு மேற்கில் உள்ள மச்சேசத்தைக் கூறுவோம்.

இறைவன் ஒரு அடியவள் பொருட்டு இப்பிமுத்தம் வருவித்தமையால் இப்பி தீர்த்தமெனப் பெயர்பெற்ற அத்தீர்த்தத்தின் கரையில் திருமால் மச்சாவதாரத்தில் பூசித்த மச்சலிங்கம் உள்ளது. அவர் பூசித்த வரலாறுவது:- சோமுகனென்னும் ஓரசுரன் வேதங்களைக் கவர்ந்துகொண்டு கடலில் ஒளித்தனன். அதனுல் வேள்வியில்லையாக வருந்திய தேவர்கள் திருமாலைச் சரணடைய, அவர் மச்சவடிவங்கொண்டு காஞ்சியை யடைந்து, இப்பி தீர்த்தக் கரையில் மச்சேசரைத் தாபித்து வழிபட்டுத் திருவருள் பெற்றுக் கடலிற் புகுந்து, சோமுகாசுரனையும் அவனுக்குத் துணையாய் சங்குருவங் கொண்டிருந்த பஞ்சசனையுங் கொன்று, சங்குவடிவமாகிய பஞ்சசன் எலும்பைப் பாஞ்சசன்னியமாகக் கொண்டு, வேதங்களைப் பிராமணர்களுக்குக் கொடுத்தனர். அம்மச்சேசப் பெருமானை வழிபட்டவர் பெறும்பேற்றை யாவர் அளந்து கூறுவர்!

# அபிராமேச்சரப் படலம்

கலி விருத்தம்

காவு சூழக் கஞலிச் சுரும்பினம்
மேவு மச்சலிங் கேசம் விளம்பினும்
வாவி மல்கும் அதன்வட மேற்றிசைத்
தாவில் சீர்அபி ராமேச் சரஞ்சொல்வாம். க

ஷை வேறு

மாவலி எனப்பெயர் மரீஇய தானவர்
காவலன் உலகெலாங் காத்த ளிக்குநாள்

---

க. கஞலி - நெருங்கி. தா - குற்றம்.

தேவர்கட் கிறையவன் அரசு தேய்தலின்
யாவது செயல்எனக் கினியென் றெண்ணுழி. ௨

செந்தளிர் மலரடித் திருவின் நாயகன்
இந்திரற் கிளையவன் என்னக் காசிபன்
மைந்தனுய்க் குறள்உருத் தாங்கி மன்னினுள்
முந்தையோர்க் கரசியல் உதவ முன்னியே. ௩

அலங்கொளிக் காஞ்சியின் அபிரா மேச்சர
இலிங்கம்அங் கியல்புளி வழிபட் டேத்தினுன்
வலம்பெறச் சிலபகல் வைகிக் கங்கைநீர்
சிலம்புவே ணியன்அருள் செய்யப் போந்தனன். ௪

வெய்யவாள் அவுணர்கோன் வேள்விச் சாலையின்
எய்திமூ வடிநிலம் இரந்து வேண்டினுன்
கைதவம் உணர்ந்தெதிர் தடுத்த காம்படு
மையறு வெள்ளியை விழியை மாற்றினுன். ௫

தன்னடி மும்மையின் அளவை சால்இடம்
அந்நிலை அவுணர்கோன் அளிப்ப ஏற்றனன்
கொன்னுற வளர்ந்தனன் அண்ட கூடமேல்
சென்னிபோய் உரிஞுறத் திகழ்ந்து தோன்றினுன். ௬

---

௩. இந்திரற் கிளையவன் - உபேந்திரன்; இங்ஙனங் கூறியது, காசிபன் மனைவியருள் இந்திரன் தாயாகிய அதிதியின் கருப்பத்தில் தங்கிப் பிறந்தமையாலென்க. குறள் உரு - குறுகிய வடிவம், வாமன வடிவம்.

௪. அலங்கு - இமைக்கின்ற. வலம் - (மாவலியை அழிக்கும்) வலிமை. சிலம்பு - ஒலிக்கின்ற.

௫. கைதவம் - வஞ்சனை. வெள்ளியை விழியை மாற்றியதாவது: திருமால் சூழ்ச்சியை யறிந்த சுக்கிரன் அதனை மாவலிக்குக் கூறித் தடுக்க, மாவலி கேளாது தாரை வார்க்கத் தொடங்கியபோது, அக்கரகத்தின் மூக்குத் துளையைச் சுக்கிரன் வண்டுருவங்கொண்டு அடைத்துக்கொள்ள, வாமனன் தனது தருப்பையால் குத்தி அவனது விழியைப் போக்கியதென்க.

௬. சால் இடம் - அமைந்த இடம். கொன் - அச்சம். உரிஞுற - உராய,

ஈரடிப் படுத்தனன் உலகம் யாவும்மற்
றோரடிக் கிடம்பெறான் உதவி னன்றனை
ஆரிடைப் பாதலச் சிறையின் ஆக்கினன்
ஏருடைப் புரந்தரற் கிறைமை நல்கினன். எ

மறுவறுங் காஞ்சிமா வரைப்பின் நண்ணுபு
நறுமலர்ச் சடைஅபி ராம நாயகன்
பிறைமுடிக் காட்டுவான் வாம னப்பெயர்
நிறைபுனற் குண்டம்ஒன் றகழ்ந்து நீடியே. அ

புண்ணியப் பூம்புனல் ஆட்டிப் போர்விடை
அண்ணலைத் தொழுதுல களந்த பேருருக்
கண்ணுதல் மகிழ்வுறக் காட்டிப் பூந்துழாய்ப்
பண்ணவன் ஆயிடைப் பணியின் மேயினன். கூ

ஆகத் திருவிருத்தம் - கஎஎ௪.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) கச்சபேசப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

## உரை நடை

வண்டுகள் நிறைந்த சோலை சூழ்ந்த மச்சேச வரலாற்றைக் கூறினோம். இனி, அதற்கு வடமேற்கில் உள்ள அபிராமேச வரலாற்றைச் சொல்லுவோம்;

மாவலியென்னும் அசுரன் உலகமெல்லாவற்றையும் ஆண்டு வந்தனன். அதனால் இந்திரன் அரசு குன்ற, இந்திரன் யாது செய்வதென்று எண்ணும்

எ. மண்ணுலகத்தை ஓரடியாகவும், விண்ணுலகத்தை ஓரடியாகவும் அளந்ததை, 'ஈரடிப்படுத்தனன் உலகம்யாவையும்' எனவும், மூன்றாமடிக்கு மாவலியின் தலையில் காலைவைத்து அழுத்திப் பாதலத்தில் வீழ்த்தினமையை, 'ஓரடிக்கிடம் பெறான்......ஆக்கினன்' எனவும் கூறினர்.

அ. குண்டம் - குளம்; இது வாமன தீர்த்தம் எனப்படும்,

கூ. பேருரு - திரிவிக்கிரம வடிவம். இப்படல வரலாறு மேலே அரிசாப பயந்தீர்த்ததானப் படலத்தில் குறிக்கக்கப்பட்டிருத்தல் காண்க.

பொழுது, திருமால் காசிபர் புதல்வராய் வாமனராகத் தோன்றி, காஞ்சியை யடைந்து, 'அபிராமேசன்' என்னும் பெயரால் இலிங்கம் நிறுவி வழிபட்டுச் சிவபெருமான் திருவருள் பெற்று, மாவலி செய்யும் யாகசாலையில் சென்று அவனை மூன்றடி நிலம் கேட்டனர். அச்சூழ்ச்சியை யறிந்து சுக்கிரன் மாவலியைத் தடுக்க, அச்சுக்கிரனது கண்ணைப் போக்கினர். பின்னர் மாவலி மூன்றடி மண் கொடுக்க, மண்ணுலகத்தை ஓரடியாகவும் விண்ணுலகத்தை ஓரடியாகவும் அளந்து, மூன்றாம் அடியை மாவலி தலையில் வைத்து அழுத்திப் பாதலத்தில் வீழ்த்தி இந்திரனுக்கு அரசளித்தனர்.

மீண்டும் காஞ்சியை யடைந்து, முன்பு தாம் பூசித்த அபிராமேசருக்கு நீராட்டுதற்காக வாமன குண்டமென்னும் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கி, இறைவனைப் பூசித்துத் தாம் உலகமளந்த திரிவிக்கிரம வடிவத்தை இறைவனுக்குக் காட்டி அங்கேயே இறைவன் திருமுன்பில் இருப்பாராயினர்.

---

## கண்ணேசப் படலம்

கலி விருத்தம்

வாம னப்பெயர் மாணி தொழும்அபி
ராம நாத வரைப்பு விளம்பினும்
நாம நீர்த்தடங் காஞ்சி நகர்வயின்
ஏமம் மாண்டகண் ணேசம் இயம்புவாம். க

கடல்உ யிர்த்த கடுவிடந் தாக்கிமுன்
உடலெ லாங்கரி வுற்று வெதும்பலால்
படஅ ராவணைப் பண்ணவன் மாழ்கிஅவ்
விடம்அ யின்ற விமலனைப் போற்றுவான். உ

கச்சி எய்தினன் கண்ணலிங் கத்தினை
நச்சி அன்பின் நிறீஇநயந் தேத்தினான்

---

க. மாணி - பிரமசாரி. ஏமம் - காவல். மாண்ட - மிக்க.

உ. உயிர்த்த - உண்டுபண்ணிய. அயின்ற - உண்ட.

௩. கண்ணன் வழிபட்டதாகலின் கண்ணலிங்கம் எனத் தன் பெயரை இட்டனன் என்க. கண்ணன், க்ருஷ்ணன் என்பதன் மரூஉ; இதன் பொருள்

பச்சை மென்கொடி பாகன் கருணைகூர்ந்
திச்சை யாது விளம்புதி என்றலும் ௩

குமுத வாய்ப்பசுங் கோமளை கூறநீ
இமிழ்தி ரைக்கடல் வெவ்விடம் என்பொருட்
டமுது செய்தனை அங்கதன் முன்னம்அத்
திமிர நஞ்சஞ் சிறிதெனைத் தாக்கலால். ௪

மேனி முற்றுங் கருகி வெதும்பினேன்
யானி னிப்படும் வெப்பிது ஆற்றலேன்
கானி லாய கடுக்கைத் தொடையொடு
தூநி லாப்பிறை சுற்றிய மோலியாய். ரு

பங்கம் நீக்கி நலந்தரு பான்மையாற்
சங்க ரன்சிவன் சம்பு உருத்திரப்
புங்க வன்என நாமங்கள் பூண்டனை
அங்க ணாஅடி யேன்உன் அடைக்கலம். ௬

என்று மாயன் இரந்திது வேண்டலும்
கொன்றை மாலைக் குழகன் இரங்கினன்
மன்ற லந்துணர் வாசத் துளவினோய்
ஒன்று கேட்டி உனக்கிது வேண்டுமேல். ௭

என்றும் யாம்மகிழ் ஏகம்ப லிங்கமுன்
சென்று நம்முடித் திங்கள் நிலாத்தயல்
நின்று கச்சி நிலாத்துண்ட மாலென
ஒன்று நாமம் பெறுதிஎன் றும்பர்கோன். அ

---

கறுப்பன்; இது கிருஷ்ணனைக் குறியாது காரணப் பெயராய்க் கருநிறமுற்ற திருமாலைக் குறித்தது.

௪. கூற - ஒரு பாகத்தவனே. இமிழ் - ஒலி. திமிரம் - இருள்.

ரு. கான் - வாசனை. நிலாய - பொருந்திய.

௬. இதன் விளக்கத்தை மேலே பாசிராமேசப் படலம் ௪௪ ஆம் செய்யுளிற் காண்க.

அ. முடித்திங்கள் - முடியில் உள்ள சந்திரன். நிலாத்து அயல் - நிலவின் பக்கத்தில்.

நாம வெந்துயர் தீர்திறம் நல்குபு
வாம மேகலை யோடும் மறைந்தனன்
தாம லர்த்துள வோனும் தொழுதெழூஉத்
தீமை தீரத் திருமுன்னர் வைகினன். ௯

கவுசிகீச்சரம்

கரிய வன்பணி கண்ணலிங் கேசனை
உரிய அன்பின் வழிபடு வோர்உம்பர்
மருவி வாழ்குவர் மற்றுங் கவுசிகீச்
சரம்ஒன் றுள்ளது சங்கரன் தானமே. ௧௦

வரைஅ ணங்கு வடிவிற் கழிந்தகா
ருரிவை கோசத் துதித்த கவுசிகி
இருமை அன்பின் இருத்தி அருச்சனை
புரியும் பொற்பது மற்றும் புகலுவாம். ௧௧

மாகாளேச்சரம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

உலகாணித் தடமருங்கு மாகா ளேசம் ஒன்றுளது மாகாளன் எனும்பே ரன்பின், விலகாத பாப்பரசு வீடு பேறு விழைந்தேதென் திசைக்கயிலை வேணித் திங்கட், கலையானைத் தொழுதுறைநாள் ஆணை யாற்றற் காஞ்சியிற்போந் தவ்விலிங்கம் நிறுவிப் போற்றி, நிலம்நீடு தென்கயிலை மீள நண்ணி நீப்பரிய பெருவாழ்வு நிலாய தன்றே. ௧௨

ஆகத் திருவிருத்தம் - ௧எஅ௯.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (௧) கச்சபேசப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியையும், (௨)

---

௯. நாம் - அச்சம்; இது நாமம் எனத் திரிந்து நின்றது. வாமம்-அழகு. வாமமேகலை என்பது அன்மொழித் தொகையாய் இறைவியைக் குறித்தது.

௧௧. இவ்வரலாற்றைத் தழுவக் குழைந்த படலம் ௬௧அ, ௬௧௯, ௬௨௦ஆம் செய்யுட்களால் அறிக.

௧௨. தென்கயிலை - காளத்தி. இவ்வரலாறு சீகாளத்தி புராணத்திலும் குறிக்கப்பட்டுளது.

முப்புராரி கோட்டப் படல உண்மையிற் கூறப்பட்ட மூன்றாவது உண்மையையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

வாமனர் வழிபட்ட அபிராமேச வரலாற்றைச் சொன்னோம்; இனி, கண்ணேச வரலாற்றைச் சொல்வோம்.

திருப்பாற்கடலில் தோன்றிய விடந்தாக்க உடல் கரிந்து வெதும்பிய திருமால் காஞ்சியை அடைந்து, கண்ணலிங்கத்தைத் தாபித்து வழிபட்டனர். அதற்கு மகிழ்ந்து வெளிப்பட்ட சிவபெருமானைத் திருமால் வணங்கி, 'அடியேன் ஆலகால விடத்தின் வேகத்தால் மிகவெதும்புகின்றேன்; இனி அவ்வெப்பத்தைப் பொறுக்கிலேன்; அடியேன் அடைக்கலம்!' என்று போற்றினர். சிவபிரான் கருணை கூர்ந்து, 'நீ நமது திருவேகம்பச் சந்நிதியில் நமது முடியில் உள்ள சந்திரனது நிலாவிற்கு அருகில்நின்று இவ்வெப்பு நீங்கி, 'நிலாத் துண்டப்பெருமாள்' எனப்பெயர் பெற்று இருக்க' என்று அருளிச்செய்தனர். திருமால் அங்ஙனமே திருவேகம்பர் திருமுன்னர் வைகி வெப்பு நீங்கினர். அவ்விலிங்கத்தை வழிபடுவோர் மேலுலகத்தை அடைவர்.

### கவுசிகீசம்

'கவுசிகீச்சரம்' என்று ஒரு சிவதலம் காஞ்சியில் உள்ளது. அது உமாதேவியார் கழித்த கருஞ்சட்டையில் தோன்றிய கவுசிகி என்பவள் பூசித்ததாகும்.

### மாகாளேசம்

மற்றும் உலகாணித் தீர்த்தத்திற்கு அருகில், மாகாளேசம் என்று ஒன்றுளது. அது, 'மாகாளன்' என்னும் ஒரு பாம்பானது வீடுபேற்றை விரும்பித் தென்கைலையாகிய காளத்தியில் இறைவனை வழிபட்டிருந்து, அவ்விறைவன் ஆணையால் காஞ்சியை அடைந்து, அவ்விலிங்கத்தைத் தாபித்துப் பூசித்து, மீண்டும் காளத்தியை யடைந்து வீடடைந்ததாகும்.

---

# குமரகோட்டப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கடப்ப ரும்பிறவி வேலை சுவற்றுங் கண்ண லிங்கமொடு கவுசிக லிங்கம், மடப்பி டிக்கிடம் அளித்த பிரான்மா காள லிங்கமெனும் மூன்றும் மொழிந்தாம், அடற்ப டைச்செறுநர் சேனை அனைத்தும்

அழித்து ழக்கிநிணம் உண்டு திளைத்துக், குடர்க்கொ ழுந்தொடை மிலைச்சிய செவ்வேற் குரிசில் வாழ்குமர கோட்டம் உரைப்பாம். க

குமாரக் கடவுள் திருவிளையாடல்

தருக்கு மிக்குடைய தாருகன் என்னுந் தான வர்க்கிறையை வெய்ய களத்தின், முருக்கி ஆருயிர் செகுத்து விசும்பின் முதல்வ னுக்கிறைமை நல்கிய பின்னர்ச், செருக்க டந்தவடி வேல்வலன் ஏந்துஞ் செம்மல் வெண்கயிலை மால்வரை எய்தி, மருக்க டுக்கைமுடி வள்ளலை ஓர்பால் மலைம டந்தையை வணங்கி மகிழ்ந்து. உ

அலகில் அண்டமும் அளித்து வளர்க்கும் அம்மை அப்பர்தம் மடித்தலம் ஏறி, நிலவ ரும்புகனி வாய்எழில் காட்டி நெடிது போது விளை யாடி அடுக்கற், குலம டப்பிடி கலன்பல பூட்டி விடுப்ப மீண்டு கொடி நீள்கடை வாயில், வலமி குத்தகய மாமுகன் ஆவி மாட்டு முன்இளவல் வைகுழி உற்றான். ௩

ஊங்கு வன்மடி மிசைக்கொடு பல்கால் உச்சி மோந்துகவுள் முத்தமும் உண்டு, வீங்கும் அன்பொடு தழீஇக்களி கூர்ந்து விடைஅ ளிப்பமுகம் ஆறுடை எங்கோன், யாங்கும் வைகுகண நாதர் இடந்தோ றெய்தி ஆடலுறு வான்அது காலை, ஆங்கண் நான் முகவன் உம்பர் குழாத்தோ டம்மை அப்பரை வணங்க அணைந்தான். ௪

அங்கண் நின்றுவிளை யாட்டயர் செவ்வேல் அண்ணலைச்சிறி தும் நோக்கலன் நண்ணி, மங்கை பாகனை வணங்கி வழுத்தி வாழ்வு பெற்றுவிடை கொண்டு தனுது, பொங்கு சீர்உலகம் எய்திய மீண் டான் மீளும் அப்பொழுதும் ஆவயின் ஆடுந், துங்க வேல்இறையை நோக்கலன் ஏகத் தோகை மஞ்ஞையுடை யான்அது கண்டான். ௫

---

க. சுவற்றும் - வற்றச் செய்கின்ற. செறுநர் - பகைவர்.

உ. முருக்கி - (வலியைக்) கெடுத்து. செகுத்து - அழித்து. விசும்பின் முதல்வன் - இந்திரன். மரு - வாசனை. கடுக்கை - கொன்றை.

௩. நிலவு - நகை; சிறப்புருவகம். அடுக்கல் - மலை. கயமுகன் - ஓர் அசுரன். மாட்டு - அழித்த. முன்இளவல் - மூத்த பிள்ளை.

௪. ஊங்கு உவன், ஒருசொல் நீர்மைத்தது. கவுள் - கன்னம்.

௫. எய்திய - அடைதற்கு. ஆவயின் - அவ்விடத்தில்.

பிரமன் சிறைப்படல்

செழும லர்க்கமலம் வைகிய செம்மல் இகழ்ந்து செல்லும் அறி வின்மை குறித்து, விழிசி வந்தருகுறு மூரல் அரும்பி வருக ஈண்டென விளித்தலும் அன்னோன், கழிசெ ருக்கினன் வணங்கி அடங்கிக் கைகள் கூப்பிநனு கிப்புடை யுற்றான், கொழும றைப்ப னுவ லான்முகம் நோக்கிக் குன்றெ றிந்தசுடர் வேல்இறை விள்ளும்.

யாவன் நீஉறைவ தெவ்விடம் மன்னும் யாது செய்தொழிலும் எக்கலை வல்லாய், நீவி ளம்புகென யான்பிர மன்சீர் நிறைஅருட் கருணை நந்தை எனக்கன், றோவ றுங்கலைகள் முற்றும் விளங்க ஓது வித்துலகம் நன்கு படைப்பான், ஏவ வைகுறுவல் சத்திய லோகத் தென்று பன்முறை வணங்கி உரைத்து. ௭

இமவ ரைத்தலைவி யோடு பிரானை ஏத்த வேண்டிஇவண் எய்தி னன் அன்னோர், தமத ருட்கருணை பெற்றனன் மீண்டேன் தாழ்வி லாதுசெய் தவத்திற னல்உன், கமல நோக்கருளும் இன்று கிடைத் தேன் காதல் உன்னடி யேன்இனி என்னூர்க், கமல நாயகசெல் கின்றனன் என்றான் அறுமு கக்கடவுள் அன்னது கேளா. ௮

நன்று சொற்றனை உணர்ச்சியின் மிக்காய் ஞாலம் முற்றுதவும் நான்முகன் நீகொல், குன்ற வில்லிஅரு ளாற்கலை எல்லாங் கோத றத்தெளித லுற்றனை அன்றே, ஒன்றும் அக்கலைகள் முன்னுற

---

௬. கழி - மிகுந்த. செருக்கினன், முற்றெச்சம். கழி செருக்கினன் எனவே, வணங்குதல் முதலியன மேற்பூச்சென்பது போதரும். இனிச் செருக்கினன் என்பதைப் பெயராகக் கொண்டு, வணங்குதல் முதலியவற்றை உண்மையெனக் கூறுவாரும் உளர்; பின்னர் முருகப்பெருமான், 'தருக்குமிகப் பூண்டான்' எனக் கூறுதலாலும், ஒறுத்தலாலும், பிறவாற்றாலும் அது பொருந்தாதென்க.

௭. மன், உம்மைகள், அசைநிலைகள்.

௮. பெற்றனன், முற்றெச்சம். 'அடியனேன்' எனப் பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

௯. 'நன்று சொற்றனை' என்றதும், 'உணர்ச்சியின் மிக்காய்' என்றதும் வஞ்சகப் புகழ்ச்சி. அன்றே, வினா. 'ஓதும் அக்கரம் என்னே' எனக் கூட்டுக. எல்லாக் கலைகட்கும் ஓம் என்பது முதலால், பொதுப்பட 'ஒன்றும் அக்கலை

என்னே ஓதும் அக்கரம் அதன்பொருள் யாதோ, இன்றெ னக்கிது விளம்புதி என்முன் வட விழ்க்கும்மல ராளி இறைஞ்சி. கூ

ஐய நந்தைஅருள் இன்றி எமக்கோர் அறிவும் உள்ளதுகொல் ஆதியில் ஓது, மெய்யெ முத்தைஅறி கின்றிலன் அங்கண் விளம் பும் முப்பொருளு மியான்அறி கில்லேன், உய்யு மாகருணை வைத் தெனை ஆள்என் றுரைத்நி ரந்துகடி தேக முயன்முன், பொய்க டந்தவனும் ஆதி எழுத்தின் பொருள்உ ரைத்தலது போகலை என்று.

சென்னி ஐந்துடைய எந்தை பிரான்றன் திருவ டிக்கண்விரை யாக்கலி வைப்பேன், பன்னு கிற்றிகடி தென்றலும் அன்னோன் பகவன் ஈன்றதனி மாமகன் நீயே, என்ன பல்கலையும் உன்னிடை வைகும் எம்பி ரான்அடியில் ஆணைத ரேல்யான், உன்ன ரும்பொரு ளின் உண்மை எனக்குத் தெரிந்த வண்ணம்உரை செய்குவல் என்று.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பல்கலைக்கும் முதலாகப் புகன்றிடுவ தோம்என்னும் பதமாம் அந்தச், சொல்விளக்கும் பொருள்அயன்மால் ஈசனெனும் மூவ ரெனச் சொல்வர் மேலோர், மல்குமறை உட்பொருளாய்ச் சுட ரொளியாய் யோகுடையார் மனத்தே தோன்றும், அல்கியசீர்ப் பிரணவத்தை உணர்ந்தவரே வீட்டின்பம் அடைய வல்லார். கஉ

முன்னெழுத்தும் அதன்பொருளும் இவ்வளவே யான்அறிந் தேன் முதல்வா போற்றி, என்னைஇனி விடுத்தருளாய் எனலோடுங்

---

கள் முன்னுற' என்றார். வருஞ் செய்யுளில் பொதுப்பட 'ஆதியில்' என்றதும் அது கருதி.

கO. மெய் - உண்மை, முப்பொருள்: சொற்பொருள், கருத்து, அகலம் என்பன.

கக. விரையா - விரைந்து. கலி - ஆணை.

கஉ. மேலிடங்களில் எழுத்தென்று கூறி ஈண்டுப் பதமென்றது மலை வாம் போலு மெனின், ஆகாது; ஓசை நிலையால் எழுத்தாயும் பொருள் தரு தலாற் சொல்லாயும் நிற்றலின் என்க. சீர் அல்கிய என்க. அல்கிய - தங்கிய. இப்பொருளின் விளக்கம் மேலே (பக். கககூ, கககூ.) காண்க.

கங. 'ஓம்' என்பதன் பொருள் இறைவனே யாதலையும், அவன் தொழி லாகிய முத்தொழில்களை அது குறித்தலையும் மேலே (பக். கககூ.) காட்டி

கணங்கள்முகம் நோக்கி இன்னோன், புன்னிலையன் சிறிதேனும் உணர்ந்திலான் தருக்குமிகப் பூண்டான் கண்டீர், துன்னரிய சிறை யின்கண் மற்றிவனைப் புகுத்தும்என வெகுண்டு சொல்லி. கங

தன்வரைப்பில் அலரோனைச் சிறைப்படுப்பித் துலகமெலாந் தானே தோற்றும், இந்நிலைமைத் தலைநின்றான் அறுமுகவே ளுடன் எய்து முனிவர் தேவர், அன்னவனைக் கொடுபோதப் பின்சென்றார் அவ்வரைப்பி னளவும் அப்பால், கன்னவில்தோள் கணநாதர் பிடித் துந்த மீண்டமுங்கிக் கயிலை புக்கார். கச

### பெருமான் பிரமன்சிறையை விடுவித்தல்

புக்கிறைவன் றனைவணங்கி நிகழ்ந்தவெலாம் விண்ணப்பஞ் செய்யப் பூந்தேன், நக்கநறுந் தொடைஇதழிக் கடவுள்அவர் தமை நோக்கி நவில்வான் என்னே, அக்கமலன் விளம்பியவா நம்மையும்நம்

---

ணும். அஃது அயன் முதலிய மூவரையும் குறித்தல், அத்தொழில்களுள் ஒரோவொன்றை அவனருளால் பெற்றுச் செய்தல் பற்றி யென்க. எனவே, ஓங்காரத்திற்குரிய உண்மைப் பொருள் இறைவனே என்பதும், அயன், மால் முதலியோர் அவாந்தரப் பொருள் என்பதும், அவ்வவாந்தரப் பொருள் தானும் வியட்டியாகக் காணும் பொழுதன்றிச் சமட்டியாகக் காணும் பொழுது செல்லாதென்பதும் பெறப்படும். ஓங்காரத்தின் பொருள் இறைவனே என் பதை, "ஒருசுடராய் உலகேழு மானான் கண்டாய் ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் கண்டாய்," "ஓங்காரத் துட்பொருளை உலகமெல்லாம்—பெற்றானை," "உருமூன்றாய் உணர்வின்கண் ஒன்றானை ஓங்கார மெய்ப்பொருளை" என றற் றொடக்கத்து ஆசிரியத் திருமொழிகளாலுணர்க. (திருமு. சு. பதி. நசு, கO. சுங, ந. அசு, ந.) இதனால் ஓங்காரத்தின் பொருள் இறைவனேயென அறிதலே உண்மையறிவாக, அதனையறியாது மும்மூர்த்திகளே அதன் பொரு ளெனக் கூறியதனால், 'புன்னிலையன் சிறிதேனும் உணர்ந்திலான்' எனவும், மூவர்களுள் தானும் ஒருவன் எனக் கருதினானாகலின், 'தருக்குமிகப் பூண் டான்' எனவுங் கூறினர்.

கச. தன் வரைப்பு - கந்தலோகம். தோற்றும் - தோன்றச் செய்கின்ற, படைக்கின்ற.

கரு. முருகப்பெருமான் இறைவனின் வேறன்மையால் பிரணவத்தின் பொருளென்றல் அமைவுடைத்தாதலறிக. கொன்றை மலர் ஓங்கார வடிவா யிருத்தலால், அது ஓங்காரப் பொருளாகிய இறைவனுக்கு அடையாள மாலை

புதல்வனையும் அன்றே மான, மிக்கபுகழ்ச் சுருதியெலாம் பிரணவத்தின் பொருளாக விளம்பு மாறே. கரு

"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும் ஈசன் என்னத், தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன்ஓம்" எனவேதம் சாற்றும் அல்லால், முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன் ஓமெனவும் முக்காற் கூறும், இக்கருத்தை அறியானை எவ்வாறு விடுவிப்ப தியம்புமின்னே. கசு

அருள்வலியால் ஆங்கவனை விடுவித்தும் அஞ்சேன்மின் என்று கூறித், திருநந்தி நாயகனை எதிர்நோக்கி அறுமுகன்பால் சென்று முற்றுந், தருகின்றன் றனைவிடுமோ வெகுளேல்என் றெம்முரையாற் சாற்றித் தேன்பாய், மருவொன்று மலரோனை விடுவித்து நம் மாட்டுக் கொணர்தி என்றார். கஎ

வேத்திரத்தின் படையாளி விடைகொண்டு வேற்படையோன் உலகம் நண்ணி, மாத்தடிந்த பெருமானைத் தொழுதிறைஞ்சி எங்கோவே மழுவாள் எம்மான், பூத்தவிசிற் புத்தேளை நீவிடுமா றருள்செய்தான் என்று போற்றி, ஏத்தும்வழி அறுமுகவேள் இதழ் அதுக்கி வெகுளுதலும் வெருவி மீண்டான். கஅ

பிஞ்ஞகனின் திருவாணை விண்ணப்பஞ் செயச்சிறிதும் பேணுகி, மஞ்ஞையான் சினவுதலின் வெரீஇப்பெயர்ந்தேன் எனநந்தி

---

யாயிற்று என்பது மேலோர் துணிபாதலின், 'இதழித் தொடைக்கடவுள்' என்றது கருத்துடை அடை.

கசு. இச்செய்யுளின் முதல் இரண்டு வரிகள், 'ஈசாநஸ் ஸர்வ வித்யாநாம் ஈச்வாஸ் ஸர்வ பூதநாம் ப்ரஹ்மாதிபதிர் ப்ரஹ்மணோதிபதிர் ப்ரஹ்மாசிவோமே அஸ்து சதாசிவோம்' என்னும் மகா நாராயணோப நிடத வாக்கியப் பொருளை யுரைப்பனவென்க. முதல், பிரமம் என்பன ஒரு பொருள் மேல் வந்த பெயர்கள். மூன்றும் அடி, 'சுப்ரஹ்மண்யோம்! சுப்ரஹ்மண்யோம்!! சுப்ரஹ்மண்யோம்!!! என்னும் வேத மந்திரத்தைக் குறித்தது.

கஅ. வேத்திரப்படையாளி - நந்திதேவர். வேற்படையோன் உலகம் - கந்தலோகம். மா - சூரனாகிய மாமரம். தடிந்த - அழித்த. இதழ் அதுக்கி - உதட்டை மென்று.

கக. சினவுதலின் - கோபித்தலால். கைஞ்ஞெரித்தார், கைந்நெரித்தார் என்பதன் போலி.

வள்ளல் கூற, மொய்ஞ்ஞிமிறு முரல்பூந்தார்க் கடவுளரும் முனிவ ருங் கேட்டுத் தம்முள்,கைஞ்ஞெரிந்தார் வெருக்கொண்டார் இறை யவனே காவாய்என் றடியில் வீழ்ந்தார். ௧௯

சயிலாதி வாய்மொழியும் சுரர்முனிவர் மனத்துயரும் தரை சால்வெள்ளிக், கயிலாயத்தெம்பிரான் திருவுளத்திற்கொண்டருளிக் கருணை கூர்ந்து, மயிலாலும் மலைமகளோ டெழுந்தங்கண் மகவிருப் பால் எய்த நோக்கி, அயிலாளுந் திருக்கரத்தான் விரைந்தெதிர்சென் றடிவணங்கிப் போற்றி நின்றான். ௨௦

அனையானை இருவர்களும் மடித்தலமீ திருத்திமகிழ்ந் தன்பு கூரக், கனிவாயின் முத்தங்கொண் டுச்சிமோந் தகங்கனியத் தழீஇய பின்னர், எனையாளுஞ் சிவபெருமான் குறுமூரல் எழில் காட்டி மேனி தைவந், துனைஓரா வேதியனைச் சிறைவிடுத்தி மைந் தாஎன் றுரைத்துப் பின்னும். ௨௧

முருகக்கடவுள் காஞ்சியை அடைதல்

நம்மாணை கடந்தனையால் அன்னதற்குக் கழுவாய்நீ நயத்தல் வேண்டும், வெம்மாயம் அணுகரிய திருக்காஞ்சி நகர்வரைப்பின் மேவி அன்பின், அம்மாடே சேனைப தீச்சரம்என் றோர்இலிங்கம் அருச்சித் தேத்திக், கைம்மாணத் தவம்புரிதி என்றருளக் கேட் டெழுந்தான் கடப்பந் தாரான். ௨௨

திசைமுகனைக் கணங்களாற் சிவபெருமான் திருமுன்னர்ச் செலுத்தி உள்ளப், பசையின்இரு முதுகுரவர் அடிவணங்கி விடை

௨௦. சயிலாதி - நந்தி தேவர்; சிலாதரர் புதல்வர் என்பதைக் குறிக்கும் தத்திதப் பதம். ஆலும் - ஆடுகின்ற. மக விருப்பு - புத்திர வாஞ்சை. 'அயில் ஆளும் திருக்கரத்தான் நோக்கி எதிர் சென்று' எனக் கூட்டுக.

௨௧. தைவந்து - தடவி. பிரணவப் பொருள் நீ என்று அறியாதவ னென்பார் பிரணவப் பொருளை யறியாத பிரமனை, 'உனையோரா வேதியன்' என்றார்.

௨௨. கழுவாய் - பிராயச்சித்தம். நயத்தல் - விரும்புதல்; இது செய்த லாகிய காரியத்தின்மேல் நின்றது. மாயம் - வஞ்சனை. அம்மாடு - அவ்விடத் தில். கை - ஒழுக்கம். மாண - மாட்சிமைப்பட.

௨௩. பசை - ஈரம், அன்பு. வசைகடந்த என்றது புகழ் கொண்ட என்றபடி. இசை - புகழ். தேவசேனாபதி என்பது முருகனுக்கு ஒரு பெயர்;

கொண்டு பழனக் காஞ்சி, வசைகடந்த நகர்எய்தி உலகாணித் தட மேல்சார் மாகா ளப்பால், இசைவிளங்கு தேவசே னாபதீச் சர இலிங்கம் இருத்திப் போற்றி. ௨௩

புள்ளிமான் தோல்உடுக்கை முஞ்சிநாண் அரைப்பொலிய அக்க மாலை, தெள்ளுநீர்க் குண்டிகையுங் கரத்தொளிரத் திருக்குமர கோட் டம் என்னும், உள்ளியோர் பிறப்பறுக்கும் ஆச்சிரமத் தினிதிருந் தான் உறுவர் போற்ற, வள்ளியார் இணைக்களப மணிக்கலச முலை திளைக்கும் வாகைத் தோளான். ௨௪

குருமணிகள் வெயில்எறிப்பக் குயிற்றுநீள் மதிற்குமர கோட் டம் ஓர்கால், இருவிழியிற் காண்டல்பெறின் கடையோரும் எழு பிறப்பின் மறையோ ராவர், திருமறையோர் முதலானோர் தொழு திறைஞ்சப் பெறுகிற்பின் தேவர் தேறாப், பொருள்நிலைமை தெளிந் தின்பப் பெருவீட்டிற் பரபோகம் திளைத்து வாழ்வார். ௨௫

கறங்கருவிப் பொலங்குடுமி வரைகிழித்த நெட்டிலைவேற் கடவுள் போற்றப்,பிறங்கியஇத் தேவசே னாபதீச் சரமுதலைப் பெட் பின் ஏத்தி, மறங்குலவுஞ் சுடராழி வலன்ஏந்து மால்உருகும்

---

இது தேவசேனை எனப்படும் தெய்வயானை யம்மையாருக்குக் கணவன் என வும், தேவர்களுடைய படைக்குத் தலைவன் எனவும் பொருள்தரும்.

௨௪. இச்செய்யுளிற் கூறப்பட்ட வடிவமே குமரகோட்டத் தெழுந் தருளியுள்ள முருகப்பெருமான் மூல வடிவமென்க. உடுக்கை - உடை. முஞ்சி நாண் - தருப்பைக் கயிறு. அக்கமாலை - உருத்திராக்கவடம். குண்டிகை - கமண்டலம். உள்ளியோர் - தியானித்தவர். உறுவர் - முனிவர். இக்கோலம் பிரமசரிய கோலமாகும். பிரமனைச் சிறையிட்டுப் படைத்தற் றொழில்செய்தகோலம் இதுவேயாகலின், இக்கோலத்தையே கொண்டு அமர்ந்தனர் என்க. போகவடிவங்கொண்டு போகியாயிருப்பவன் ஈண்டு இவ்வாறு இருந்தனன் என்பார், 'வள்ளியார் இணைக்களப மணிக்கலச முலைதிளைக்கும் வாகைத் தோளான் உறுவர் போற்ற இனிதிருந்தான்' என்றார்.

௨௫. குரு - நிறம். குயிற்று - பதித்த. தேவர் தேறாப்பொருள் - மெய்ப்பொருள்.

௨௬. வரை, கிரௌஞ்ச கிரி. மறம் - வீரம். அறங்கரைவார் - அறத் தைச் சொல்லுதற்குரிய பெரியோர். அறமுதற் பொருளை உலகிற்கு உள்ள

உள்ளத் தானென், றறங்கரைவார் எடுத்துரைக்கும் ஒருதிருப்பேர்
பெற்றான்அம் முறையுஞ் சொல்வாம். உகூ

மார்ப்பேறுழி

கலிநிலைத் துறை

முள்ள ரைச்செழுந் தாள்மலர் முளரிவீற் றிருக்கும்
வள்ளல் கற்பம்ஒன் றிறுதலும் யாவையும் மலங்கப்
பொள்ளெ னப்பரந் துலகெலாம் விழுங்கிய புணரி
வெள்ள நீர்மிசை மிதந்தனன் மார்க்கண்டி* மேலோன். உஎ

தனிய னாகிவெஞ் சலதியின் உழிதரும் தகைசால்
புனித மாதவன் ஆயிடைப் பொறிஅராத் தவிசின்
இனிது கண்வளர் மாயனைக் கண்டுசென் றிறைஞ்சி
நனிம கிழ்ச்சிமீக் கிளர்ந்தெழு மனத்தொடு நவில்வான். உஅ

நகைம லர்த்துழாய் நாயக ஞாலம்மற் றெவையும்
பகல்செய் வெங்கதிர்ச் சண்டமாப் பரிதியின் றெரிப்பத்
துகள்ப டுஞ்செயல் கண்டயான் அத்துணைப் பொழுதின்
இகழ ருந்திறல் அறிவுபோய் எய்தினன் மயக்கம். உகூ

எய்ந்த மையல்தீர்ந் திதுபொழு துணர்ச்சிவந் தெழுந்தேன்
காந்து வெம்புனற் கடுந்திரைப் பரப்பிடை மிதந்து
நீந்தி நீந்திஎன் நெடியகால் கரங்களும் மெலிந்தே
ஓய்ந்த நல்வினை இருந்தவா றுனைஇவண் கண்டேன். ௩0

---

வாறுணர்த்துவார் அவரேயாகலான், பற்றற்ற உள்ளமுடைய பெரியோரை 'அறங்கரைவார்' என்றார்.

உஎ. முளரி வீற்றிருக்கும் வள்ளல் - பிரமன். மலங்க - அழிய. மார்க்கண்டி - மார்க்கண்டேயர். * 'மாற்கண்டி' எனவும் பாடம்.

உஅ. சலதி - கடல். மாதவன் என்றது மார்க்கண்டேயரை.

உகூ. சண்டம் என்பது வேகம், கொடுமை, மிக்கவலி முதலியவற்றைக் குறிப்பது; அதனால், ஊழிக் காலத்தில் தோன்றும் சூரியன், தீ, காற்று இவைகள் சண்ட சூரியன் முதலிய பெயர்களைப் பெறும். துகள் - தூள்.

௩0. ஊழித்தீ முதலியவற்றால் கொதிக்கும் நீராகலின், 'காந்து வெம்புனல்' எனப்பட்டது. ஓய்ந்த - ஓய்ந்து போயின.

நிலம டக்கொடி வனமுலே திளைக்கும்கீள் மார்ப
உலகம் எங்கணும் கருகிருள் மூடிய துரவோய்
இலகு பேரொளி இருசுடர் யாங்ஙனம் போய
குலவும் ஏனைய கோளொடு நாள்களெங் கிறந்த. ௩க

சகமி சைப்பயில் பொருளெலாம் எவ்வுழிச் சார்ந்த
திகழ நீஎனக் கிவையெலாந் தெரித்தியென் றிரப்ப
நிகழும் மாதவன் மாதவன் றன்னைநேர் நோக்கி
அகலி டத்துள பொருளெலாம் என்அகட் டுளவால். ௩உ

மார்க்கண்டேயர் மாயனை முனிதல்

புகுந்து நோக்குதி என்றலும் முனிவரன் புகல்வான்
முகுந்த முன்ஒரு கற்பத்திம் மொழியினை லன்றே
மிகுந்த வஞ்சனைப் படுத்தனை விளைமதுப் பிலிற்றி
நகுந்த டம்பொகுட் டம்புய வாழ்க்கைநான் முகனை. ௩௩

முனைக டந்தவேல் மணிமுடி அம்பரீ டன்றன்
மனையில் நாரதப் பருப்பத முனிவரை வஞ்சித்

---

௩க. உரவோய் - அறிவுடையவனே. போய - போயின. இறந்த - ஒழிந்தன.

௩உ. எவ்வுழிச் சார்ந்த - எவ்விடத்தில் அடைந்தன. தெரித்தி - தெரியச் சொல். மாதவன் இரண்டனுள் முன்னது திருமால், பின்னது மார்க்கண்டேய முனிவர். அகடு - வயிறு.

௩௩. நான்முகனைப் படுத்தனை எனக்கூட்டுக. ஒரு கற்பத்தில் நான்முகனும் திருமாலை இவ்வாறு கேட்டு, அவர் கூறிய வார்த்தைகளை நம்பி, அவர் வயிற்றுக்குட் புகுந்து காணாது வருந்தி வெளிவருமாறின்றி நாபியின் வழியே வெளிப்போந்தனன் என்பது புராண வரலாறு.

௩௪. முனை - போர்முனை. அம்பரீடன் என்னும் அரசன் மகளை, நாரதர் பருப்பதர் என்னும் இருமுனிவர்கள் மணக்க விரும்பி, இருவரும் ஒருவரை ஒருவர் அறியாமல் திருமாலிடம் சென்று, நாரதர் பருப்பதருக்குக் குரங்கு முகமும், பருப்பதர் நாரதருக்குக் கிழமுகமும் உண்டாக வேண்டுமென்று கேட்க, இருவருக்கும் அவ்வாறே செய்து, அரசன் சபையில் அவ்விருவரும் அவ்வாறிருந்த காலையில், மாலை கொண்டுவந்த அரசன்மகள் அவ்விருவருக்கும் மாலையிட நாணியபோது, திருமால் தோன்றி, அவள் மாலையிடப்

தனைய மன்னவன் புதல்வியைக் கவர்ந்துகொண் டகன்றாய்
இனைய மாவலி தனக்குமுன் வஞ்சனை இழைத்தாய். ௩௪

இன்ன வாறனை நம்புநர் அடியவ ரிடத்தும்
துன்னு மாயமே செய்வதுன் தொழிலெனக் கண்டேன்
நின்னை அஞ்சுகேன் நெறிக்கொடு செல்வன்என் றியம்பி
அன்ன நீரினைக் கரங்கொடு நீந்திஅங் ககன்றான். ௩௫

மார்க்கண்டேயர் காஞ்சியை யடைதல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

செல்லும் எல்லை நீர்மிசைத் தோன்றும் வேத மாஞ்சினைப்
பல்ல வங்கள் கண்டவை பற்றி உள்இ ழிந்தனன்
ஒல்லை அங்கண் நோக்கினான் ஒளிப்பி ழம்பின் நீடிய
மல்லல் அம்பொன் இஞ்சிசூழ் மாடக் காஞ்சி மாநகர். ௩௬

எற்று தெண்டி ரைப்புனல் இஞ்சி யின்வ ளைப்பவெண்
புற்பு தத்தின் உள்வெளிப் பொற்பெ னத்தி கழ்ந்துநீள்
ஒற்றை மாவி னார்அரு ளொளிது ளும்ப மன்னும்ஊர்
அற்பு தத்தை நோக்குதோ றற்பு தத்த னாயினான். ௩௭

அங்கண் எய்ப்பு நீத்தபின் அண்ணல் கம்ப வாணரை
உங்கண் எய்தி அர்ச்சனை உஞற்றி அவ்வி ராவெலாந்
துங்க மாவின் நீழல்வாழ் சோதி முன்னர் வைகினான்
சங்கம் ஆழி ஏந்தியோன் றானுந் தொடர நண்ணினான். ௩௮

திருமால் வரம்பெறுதல்

நண்ணும் நெறியிற் காஞ்சிமா நகரம் எய்தி அந்நகர்
வண்ணம் முற்றும் அற்புதம் மருவ நோக்கி மாநிழல்

---

பெற்றனர் என்பது வரலாறு. மாவலியை வஞ்சித்தமையை மேலே அபிராமேசப் படலத்திற் காண்க. இனைய - வருந்த.

௩௫. இடத்தும் என்பதனை நம்புநர் என்பதனோடுங் கூட்டுக.

௩௬. மாஞ்சினை - மாமரத்தின் கிளை. பல்லவம் - தளிர். இஞ்சியின் - மதிலின் புறத்தில்; மதில்போல என்றுமாம்.

௩௭. புற்புதம் - நீர்க்குமிழி. துளும்ப - மிகுதியாக.

௩௮. எய்ப்பு - இளைப்பு. அவ்விரா என்றது பிரளய காலத்தை. தொடா - தொடர்ந்து.

அண்ண லாரை ஏத்திஅம் முனிவன் சொன்ன யாவையும்
எண்ணி எண்ணி நெஞ்சுளெந் தென்றி னைந்த வாறெனா. ௩௯

சேர்ந்த வர்க்கு வஞ்சமே நாள்தொ றுஞ்செய் கின்றனேன்
வார்ந்த கூந்தல் அம்பிகை மாயை யின்ம யங்கினேன்
நேர்ந்த மாயம் நீக்குமா நீள்வ ரைப்பி ராட்டிதாள்
சார்ந்து போற்று வேனெனத் தனிப்பி லத்தை நண்ணினான்.

ஆயி டைப்பி ராட்டியை அருச்சித் தேத்தி அருளினான்
மாயம் நீக்கி மெய்யுணர் வெய்திப் பஞ்ச வாவிநீர்
ஏய மூழ்கித் தேவதே சனுப தீசத் தேகிஅந்
நாய னாரை விதியுளி நயந்து பூசை ஆற்றினான். ௪௧

கருணை கூர்ந்து நம்பனார் காட்சிதந் தளித்தலும்
பரசி ஏத்தி நின்னடிப் பத்தி மாறி லாவரம்
அருள வேண்டும் மெய்த்தவர் அடியர் மாட்டு வஞ்சனை
ஒருக ணத்தும் எண்ணிடா உளம்எ னக்கு வேண்டுமால். ௪௨

ஈண்டு நின்பு தல்வனே டெந்தை திருமுன் வைகவும்
வேண்டும் என்றி ரந்துவிண் ணப்பஞ் செய்ய வெண்பிறை
நீண்ட செஞ்ச டைப்பொதி நிரும லப்ப ரம்பொருள்
ஆண்ட கைப்பி ரான்மகிழ்ந் தன்ன வாக என்றுபின் ௪௩

என்றும் அன்பின் ஏகிநீ உருகும் உள்ளக் கோயிலான்
என்று நாமம் எய்துகென் றருளி இறைவன் நீங்கினான்
குன்றெ டுத்து முந்துகோ நிரைகள் காத்த குரிசிலும்
மன்றல் வெட்சி மாலையான் அருளின் அங்கண் வைகினான். ௪௪

௪௦. வார்ந்த - நீண்ட. அம்பிகை மாயை - இறைவியால் தொழிற் படுத்தப்படும் மாயை. தனி - ஒப்பற்ற. பிலம் - காமகோடிபீடம்.

௪௨. அளித்தல் - கருணை செய்தல். பரசி - வணங்கி.

௪௪. ஏகி - ஒழுகி. கோநிரைகள் - பசுக்கூட்டங்கள். மன்றல் - வாசனை. வெட்சி மாலையான் - முருகன். இறைவன் திருவருளையன்றி முருகப் பிரான் திருவருளும் பெற்றே அங்குத் தங்கினன் என்பார், 'வெட்சி மாலையான் அருளின் அங்கண் வைகினான்' என்றார்.

கூறும் இனைய மேன்மைசால் குமர கோட்ட வைப்பினிற்
பாறு நச்சு வேலினன் பாதம் அங்கி அகிலநாள்
வேறு நாற்றி னங்களில் விரும்பிச் சென்றி றைஞ்சினோர்
பேறு முற்றும் யாவரே பேச வல்ல நீர்மையார். சரு

ஆகத் திருவிருத்தம் - க௮௩௧.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறைவன் ஆணையைக் கடத்தல் பெருங்குற்றமாம்' என்னும் உண்மையை முதலாகக்கொண்டு, (உ) 'ஓங்காரப் பொருள் இறைவனே' என்பதும், (௩) 'முருகப்பெருமானும் இறைவனில் வேறல்லர்' என்பதும், (௪) 'அறியாமையால் முருகப்பெருமானை அவ்வாறு அறியாது இகழ்வோர் அவரால் தண்டிக்கப்படுவர்' என்பதும், (ரு) 'வேதப்பொருளை நன்கறியாது படைத்தல் இயலாது' என்பதும், (சு) மேல் (க) 'கூறிய குற்றம் இறைவனை வழிபடுதல் ஒன்றனே நீங்கும்' என்பதும், சலந்தரேசப்படல உண்மையில் இரண்டாவதாகக் கூறப்பட்டதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள்; கசு ஆம் செய்யுளிற் கூறப்பட்ட பொருளும்ஆண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பிறவிக்கடலை வற்றச் செய்கின்ற கண்ணேசம், கவுசிகேசம், மாகாளேசம் என்னும் மூன்றனுடைய வரலாற்றையும் சொன்னோம்; இனி, முருகவேள் வாழ்கின்ற குமரகோட்ட வரலாற்றைச் சொல்லுவோம்.

முருகப்பெருமான் தாரகாசுரனை அழித்து, இந்திரனுக்கு வானுலக ஆட்சியைக்கொடுத்து, கயிலையில் அம்மையப்பர் மடித்தலத்தில் விளையாடியும், மூத்த பிள்ளையார் மடியில் விளையாடியும் இருந்து, பின்னர் கணநாதர்களது இடந்தோறும் சென்று விளையாடுவாராயினர். அப்பொழுது பிரமன் தேவர்களுடன் இறைவனை வணங்கக் கைலையை அடைந்தான். அடைந்து, முருகப்பெருமானைச் சிறிதும் நோக்காது, சென்று இறைவனை வணங்கி மீண்டு செல்லத் தொடங்கும்போது, முருகப்பெருமான் கண் சிவந்து

---

சரு. பாறு நச்சு - பருந்துகள் விரும்புகின்ற. நாள் என்பதனை அங்கியென்பதனோடுங் கூட்டுக. அங்கிநாள் - கார்த்திகை. அகிலநாள் - விசாகம். வேறுநாற்றினம் - சஷ்டி, பூசம், செவ்வாய், வெள்ளி என்றார் உரையாசிரியர்.

நோக்கி, 'இங்கு வருக' என அழைத்தனர். மிக்க செருக்குடைய பிரமன் அடங்கினவன்போலக் காட்டிக் கை கூப்பி அடைந்தனன். அவனை முருகப் பெருமான் பார்த்து, 'நீ யாவன்? நீ இருப்பது எவ்விடம்? நீ செய்யுந் தொழில் யாது? உனக்கு எந்த நூல் தெரியும்? சொல்லுக' என்றனர். பிரமன், 'யான் பிரமன்; உமது தந்தையார், முன்னே எனக்கு எல்லாக் கலைகளையும் கற்பித்து உலகத்தைப் படைக்கும்படி கட்டளையிட, அதனைச் செய்து சத்தியலோகத்தில் வாழ்கின்றேன்; இன்று அவ்விறைவரை வணங்க வந்து, அவரது திருவருளோடு தேவரீர் திருவருளும் பெற்றேன்; இனி என் ஊர்க்குச் செல்கின்றேன்' என்றனன்.

முருகப்பெருமான், 'நன்று சொன்னாய்! அறிவில் மிகுந்தவனே, எல்லாக் கலைகளையும் இறைவன்பால் தெளிந்தனையன்றோ? அக் கலைகளுக்கு முன்னே சொல்லப்படும் எழுத்து யாது? அதன் பொருளென்ன?' என்று கேட்டனர். பிரமன், 'ஐயனே, அந்த எழுத்தையும் அதன் பொருளையும் யான் அறியேன்; என்மீது கருணை செய்யவேண்டும்' என்று சொல்லி விரைந்து செல்ல முயன்றான். முருகப்பிரான், 'அதன் பொருளைக் கூறியல்லது போகக்கூடாது; இறைவன் திருவடியில் ஆணைவைப்பேன் என்றனர். பிரமன், 'அது வேண்டா, எனக்குத் தெரிந்த அளவு சொல்வேன்' என்று சொல்லி, 'எல்லாக் கலைக்கும் முதலாவது 'ஓம்' என்பதாகும். அதன் பொருள், பிரமன், விண்டு, உருத்திரன் எனப் பெரியோர்கள் சொல்வார்கள். அது மறைகளின் உட்பொருளாயும், சுடரொளியாயும் யோகிகள் உள்ளத்தில் தோன்றும்; யான் அறிந்தது இவ்வளவே' என்றான். முருகப்பெருமான், 'இவன் அற்பன்; சிறிதும் அறிந்திலன்; செருக்குமாத்திரம் மிகவும் உடையவனாய் இருக்கின்றான்; இவனைச் சிறையிடுங்கள்' எனக் கணங்களுக்குச் சொல்லி, தமது இடத்தில் பிரமனைச் சிறைசெய்து தாமே படைத்தற்றொழில் செய்திருந்தனர்.

பிரமனுடன் வந்த முனிவர்களும் தேவர்களும் அவனை அழைத்துக் கொண்டு போகவேண்டி அவன்பின் செல்ல, கணநாதர்கள் பிடித்துத் தள்ளினமையால் மீண்டு இறைவன்பால் சென்று வணங்கி, நிகழ்ந்தவற்றை விண்ணப்பித்தனர். இறைவனார், 'என்னே அப்பிரமன் கூறியவாறு! சுருதிகளெல்லாம் நம்மையும் நமது புதல்வனையுமன்றோ பிரணவப் பொருளாக விளம்பும்! 'எல்லாக் கலைகட்கும், எல்லாப் பூதங்களுக்கும், பிரமனுக்கும் ஈசனெனப்படும் முதல்வனும் பரப்பிரமமுமாகிய சதாசிவன் ஓம்' என்று வேதம் சொல்லும். அன்றியும், அவ்வேதம் சுப்ரஹ்மண்யோம்! சுப்ரஹ்மண்யோம்!! சுப்ரஹ்மண்யோம்!!! என்று மூன்றுதாம் கூறும். இக் கருத்தையறியாத பிரமனை எவ்வாறு விடுவிப்பது?' என்று சொல்லி, நந்திதேவரை நோக்கி

நீசென்று முருகனிடத்தில், 'பிரமனைச் சிறைவிடுக' என்று யாம் சொல்லிய தாகச் சொல்லி, பிரமனை மீட்டுக்கொண்டுவா' என்று அனுப்பினர்.

நந்திதேவர் முருகப்பிரானிடத்துச் சென்று அவ்வாறே சொல்ல, அவர் உதட்டைக்கடித்துக் கோபிக்க, நந்திதேவர் அஞ்சி மீண்டுவந்து இறைவருக்கு உரைத்தனர். இறைவனார் அம்பிகையோடு எழுந்து அவண் சென்றனர். முருகப்பிரான் கண்டு, எதிர்சென்று வணங்கி நின்றார். அவரை அம்மையப்பர் இருவரும் தழுவியெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டபின்பு, சிவபெருமான் முருகக்கடவுளை நோக்கி, புன்சிரிப்புக் காட்டி, பிரமனைச் சிறை விடுக' என்று சொல்லிப் பின்னும் சொல்லுகின்றார். நீ நமது கட்டளையை மீறினமையால் அதற்குப் பிராயச்சித்தம் செய்தல் வேண்டும். ஆகையால் நீ காஞ்சியை யடைந்து அங்குத் 'தேவசேனாபதீசம்' என்னும் பெயரால் ஓர் இலிங்கம் அமைத்துப் பூசித்துத் தவஞ்செய்திருப்பாயாக என்று கூறினர். உடனே முருகப்பெருமான் பிரமனைச் சிறையினின்றும் விடுவித்துக் காஞ்சியை யடைந்து, உலகாணித் தீர்த்தத்திற்கு அருகில் மாகாளேசத்திற்கு அணிமையில், தேவசேனாபதீச்சர இலிங்கத்தை நிறுவிவழிபட்டு, 'திருக்குமர கோட்டம்' எனப்படும் ஆச்சிரமத்தில், இடையில் புள்ளிமான்தோல் உடையும், தருப்பைக் கயிறுகிய அரைநாணும், கையில் உருத்திராக்க வடமும். கமண்டலமும் உடையவராய் முனிவர்கள் வணங்க வீற்றிருந்தார். அத், தலத்தை வணங்கினோர் மறுமையில் உயர்ந்த பிறப்படைந்து, மெய்ப்பொருளுணர்ந்து வீட்டின்பத்தை அடைவார்கள்.

அத் தேவசேனாபதீச்சரப் பெருமானை வணங்கித் திருமால், 'உருகும் உள்ளத்தான்' என்னும் பெயரைப் பெற்றார். அவ்வரலாற்றையும் சொல்லுவோம்.

முன்னொரு கற்பத்தில் பிரளய வெள்ளத்தில் மார்க்கண்டேய முனிவர் மிதந்துகொண்டு தனியாக உழன்றனர். அப்போது பாம்பணையில் கண் வளர்கின்ற திருமாலைக் கண்டனர். கண்டதும் மகிழ்ச்சியோடு கூறுகின்றார்: 'ஏ மாயவ, உலகம் எல்லாவற்றையும் சண்டசூரியன் எரிப்பக்கண்ட யான் மயக்கத்தை யடைந்தேன்; இப்போது மயக்கம் தெளிந்து உணர்ச்சிவரத் தெழுந்தேன். இந்த வெள்ளத்தில் நீந்தி நீந்தி என் கைகளும் கால்களும் ஓய்ந்துபோயின. புண்ணியவசத்தால் உன்னைக் கண்டேன். உலகமுழுவதும் பேரிருள் மூடிக்கொண்டது; சூரிய சந்திரர் எங்கே? அக்கினி எங்கே? நாள் கோள்களெல்லாம் எங்கேபோயின? உலகத்துப் பொருள்களெல்லாம் எங்கே சென்றன? கூறவேண்டும்' என்று கேட்டனர். அதற்குத் திருமால், 'எல்லாப் பொருள்களும் என்வயிற்றிலே இருக்கின்றன; புகுந்துபார்' என்றனர்.

மார்க்கண்டேயர், 'முகுந்தனே, இவ்வார்த்தையினாலல்லவா முன்னொரு கற்பத்தில் பிரமனை வஞ்சித்தாய்? அம்பரீடன் என்னும் அரசன் சபையில் நாரதர் பருப்பதரென்னும் இரண்டு முனிவர்களை வஞ்சித்து, அவ்வரசன் புதல்வியைக் கவர்ந்துகொண்டு சென்றாய்! மாவலியை வஞ்சித்தாய்! இவ்வாறு உன்னை நம்புகிறவரிடத்திலும் உனது அடியார்களிடத்திலும் வஞ்சகமே செய்யும் உன்னிடத்தில் நான் மிகவும் அஞ்சுகின்றேன். இதோ நான் போகின்றேன்' என்று சொல்லி நீந்திக்கொண்டு சென்றனர்.

அவ்வாறு செல்லும் அம்முனிவர்க்குமுன், ஏகாம்பரநாதர் எழுந்தருளி யுள்ள வேதமாமரக் கிளைகளும் தளிர்களும் அவ் வெள்ளத்தின் மேலே தோன் றின. மார்க்கண்டேயர் அவற்றைப் பற்றிக்கொண்டு உள்ளே இறங்கிக் காஞ் சியம்பதியைக் கண்டனர். பிரளய வெள்ளமானது மதிலின்புறத்தே சூழ்ந்து கிடப்ப, நீர்க் குமிழியின் உள்வெளிபோலத் திருவேகம்பர் திருவருளால் நிலைபெற்று நிற்கும் காஞ்சியின் அற்புதத்தைக் காணுந்தோறும் முனிவர் ஆச்சரிய மடைந்தனர். அடைந்து, அவ்விரவு முழுதும் ஒற்றைமாவின்கீழ் எழுந்தருளியுள்ள இறைவன் திருமுன்பு வைகினர்.

அஃது அங்ஙனமாக, மார்க்கண்டேயரால் இகழப்பட்ட திருமாலும் அவ ரைத் தொடர்ந்துவந்து காஞ்சியை யடைந்து, ஆச்சரியமுற்று, திருவேகம்ப நாதரை வணங்கி, மார்க்கண்டேய முனிவர் தம்மை இழித்துரைத்தமையை எண்ணி எண்ணி மனம்வருந்தி, யான் என்செய்கின்றேன்! இறைவியின் மாயையில் மயங்கினேன்! மாயையை நீக்கும் இறைவியின் திருவடிகளைப் போற்றுவேன் என்று பிலாகாசத்தை யடைந்து, அம்பிகையை வழிபட்டு மாயை நீங்கப்பெற்று, பஞ்சதீர்த்தத்தில் முழுகித் தேவசேனாபதீசரை விதிப் படி பூசித்தனர். அதனால் இறைவன் கருணை கூர்ந்து காட்சியளிக்க, திருமால் வணங்கி, 'தேவரீர் திருவடியில் நீங்காத அன்பும், அடியார்மாட்டு வஞ்சனை எண்ணாத உள்ளமும், இவ்விடத்தில் தேவரீர் திருக்குமாரரோடு தேவரீரது சந்நிதியில் அடியேன் இருத்தலும் வேண்டும்' என்று வேண்டினர். இறைவர் அவற்றை அளித்து, நீ என்றும் அன்புடையனாய் இருந்து, 'உருகும் உள்ளத் தான்' என்னும் பெயர்பெறுக' என்றருளிச் செய்து மறைந்தனர். அன்று முதல் அத்திருமால் அப்பெயருடன் அங்குத் தங்கினர்.

அத்தகைய குமரகோட்டத்தில், கார்த்திகை, விசாகம், சஷ்டி முதலிய மற்றும் நான்கு தினங்களில் முருகப் பெருமானை வணங்கினவர்கள் பெறும் பயனை யாவர் கூறவல்லவர்கள்!

---

# மாசாத்தன் தவிப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

நறைகொப் புளிக்கும் நறும்பொகுட்டு நளின வாழ்க்கைப் புத்தேளைச், சிறையிற் புகுத்தும் பெருமானார் குமர கோட்டச் சிறப்புரைத்தாம், நிறையப் பூத்த மலர்ப் பொதும்பர் நீடும் அதற் குத் தென்திசைக்கண், முறையின் திகழும் மாசாத்த முதல்வன் தானம் எடுத்துரைப்பாம். க

சுராசுரர் கலகம்

வைவாள் எயிற்றுத் தானவரும் வானோ டவரும் மந்தரத்திற்
பைவாய்த் தாம்பு பிணித்தீர்த்துக் கடைந்த ஞான்று பரவைஎழும்
வெவ்வாய் நஞ்சம் மிடற்றடக்கி வெருவா தளித்த பெருங்கருணை
ஐவாய்ப் பணிப்பூண் பெருமானார் அருளான் மீளக் கடைந்தவழி.

சேட்டை அணங்கு திருமணிஆன் தெய்வ மகளிர் மருத்துவர் நாற், கோட்டு மதமா முதல்பலவும் குரைநீர்க் கடலுள் தோன்றிய பின், வாட்டும் இறவிப் பெரும்பிணிக்கு மருந்தா அமிழ்தந் தோன்று தலும், வேட்ட விண்ணோர் அவுணர்களும் தம்முட் கலாங்கள் விளைத்தனரால். ௩

திருமால் மோகினி வடிவாதல்

ஆற்றல் மிகையாற் சுதைக்குடத்தை அடல்வாள் அவுணர் கைப் பற்றத், தோற்று மறுகிப் புத்தேளிர் அலமந் தேங்குந் துயர்நோக்

---

உ. வை - கூர்மை. வாள் எயிறு - கொலைப் பல். பரவை, திருப்பாற் கடல். அளித்த - காத்த. பணி - பாம்பு.

௩. சேட்டையணங்கு - மூதேவி. திரு - இலக்குமி. மணி - சிந்தா மணி. ஆன், காமதேனு. தெய்வமகளிர் - அரம்பையர்கள். மருத்துவர் - தேவ வைத்தியர்; இவர்கள் அசுவினி தேவர்களின் வேறுதல் வேண்டும்- நாற்கோட்டு மதமா - நான்கு கொம்புகளுடைய யானை, ஐராவதம். கலாம் - கலகம். முதல் பலவும் என்றது கௌத்துவம் முதலியவற்றை.

௪. சுதை - அமுதம். மறுகி - வருந்தி. காற்றும் - உமிழ்கின்ற. பிரசம் தேன். பிரசம் காற்றும் என மாற்றியுரைக்க. கமஞ்சூல் - நிறைந்த கருப்பம்.

கிக், காற்றும் பிரச நறுந்துளவக் கமஞ்சூற் கொண்டல் இணைவிழிக்குக், கூற்றம் பதைக்கும் மோகினியாம் வடிவம் ஆங்குக் கொண்டனுல். ச

கலி விருத்தம்

இரண்டறப் பெண்மையும் எழிலும் வஞ்சமும்
திரண்டுருக் கொண்டெனத் திகழ்ந்து தோன்றிமால்
முரண்தரும் அவுணர்கைக் கொண்ட மூரிநீர்
வரண்டுமா மணிக்கடல் அமிழ்தம் வாங்கினுன். ரு

வாங்கிநின் றசுரருஞ் சுரரும் வல்லையே
ஆங்கநீர் நிரைநிரை யாக வைகுமின்
ஈங்குநல் லமிழ்தம்எல் லீர்க்கும் வேட்டவா
பாங்குறத் தனித்தனி பகுந்து நல்குகேன். சூ

வேல்விழி மாதர்யான் வீழ்ந்து ளார்பெறச்
சாலநல் குவல்எனச் சலதிச் சேக்கைவாழ்
வால்வளைக் குடங்கையான் மகிழக் கூறலும்
கோல்வளைத் திதிமைந்தர் குறித்து நோக்கினுர். எ

---

கொண்டலென்பது உவமையாகுபெயராய்த் திருமாலை உணர்த்திற்று. கூற்றம் - இயமன்.

ரு. இரண்டற - வேறற, ஒன்றுபட. பெண்மை - பெண்தன்மை. முரண் - வலி. மூரி - பெரிய, மிகுந்த. வரண்டு, வான்று என்பதன் மரூஉ; கொழிக்கப்படுகிற என்பது பொருள். மூரி நீரையும், வரண்டு மணியையும் உடைய கடல் என்க.

சூ. ஆங்க - ஆசை நிலை. வேட்டவா - விரும்பியவாறு. பகுந்து - பங்கிட்டு.

எ. மாதர்யான் - மாதராகிய யான். வீழ்ந்துளார் - விரும்பியவர்கள். சலதி - கடல். சேக்கை - படுக்கை. வால் - வெண்மை. வளை - சங்கு. குடங்கை - உள்ளங்கை. மோகினி கூறியது முறையன்றுயினும் அவள் கூறிய இனிய மொழிகளால் மகிழ்ந்து யாவரும் இசைந்தனர் என்பார், 'மகிழக்கூறலும்' என்றுர். திதிமைந்தர் - அசுரர். எவற்றை நோக்கினுர் என்பதை வருஞ்செய்யுள் முதலாகக் காண்க.

மோகினியின் முற்றுருவப் புனைவு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கலிதிரை முகந்த சூல்முகில் விளர்ப்பக் கடைகுழன் றிருண்டு நெய்த் தொழுகிப், பொலிவுற மகரம் வலம்புரி திருத்தி எஃகிடை தொட்டபூங் குழலைக், குலிகநீர் அளவி மழவிளம் பரிதிக் குரூஉச் சுடர் உரிஞ்சிய காட்சி, இலகொளித் தேய்வை அரும்பெறல் திலகம் இட்டகீற் றிளம்பிறை நுதலை. அ

மாற்றரு மதுகை ஐங்கணைக் கிழவன் வாங்கிய நறுஞ்சுவைத் தேறல், காற்றுவெஞ் சிலைக்குச் சிலைத்தொழில் பயிற்றுங் கட்டெழிற் புருவமென் கொடியைச், சீற்றவல் விடமும் அமிழ்தமும் விரவிச் சிதர்அரி பரந்துமை தோய்ந்து, கூற்றர சிருக்கும் இணைவிழி களவு கொள்ளநோக் கிடுஞ்சிறு நோக்கை. கூ

செயிரறுந் தரள வெண்மணி நாலத் திருந்தெழில் படைத்தெதிர் கண்டோர், உயிரினைப் பருகிக் குமிழெனத் திகழ்ந்த ஒள்ளொளி நாசியின் வனப்பை, வெயில்விடு மணிப்பூண் காளையர் மனங்கள் ஆடுபொன் ஊசலின் விளங்கி, மயிரெறி கருவி முதலெனக் கவின்று மணிக்குழை வயங்கிரு செவியை. க0

குயிலினஞ் சமழ்ப்பக் குழல்இசை பழகும் சின்மொழிக் குறுநகை மொக்குள், கயிரவம் மலர்ந்த செய்யவாய் அமிழ்தம் ஊற்றெ

---

அ. கலி - ஓசை. திரை, கடலை உணர்த்திற்று. சூல்முகில் - கருக்கொண்டமேகம். குழன்று - வளைந்து. நெய்த்து - நெய்ப்பசை படைத்து. ஒழுகி - நீண்டு. மகரம் - சுறுமீன்; வலம்புரி - வலம்புரிச் சங்கு; இவை அவ்வடிவமாகச் செய்த ஆபரணங்கள். திருத்தி - திருந்த அணிந்து. எஃகி - நெகிழ்ந்து; இதில் ஈற்று இகரம் தொக்கது. இடைதொட்ட - இடைமேற் புரள்கின்ற. குலிகம் - சாதிலிங்கம். அளவி - கலந்து. உரிஞ்சிய - தங்கிய. காட்சித் திலகம் எனஇயையும். தேய்வை - சந்தனத்தேய்வை.

கூ. வாங்கிய - வளைத்த. வாங்கிய சிலைஎன்க. காற்று - உமிழ்கின்ற. சிதர் அரி - சிதறிய வரி. விழிநோக்கும் நோக்கை என்க.

க0. நால - தொங்க. மயிரெறிகருவிமுதல் - கத்தரிக்கோலின் அடி. கவின்று - அழகாகி.

கக. சமழ்ப்ப - நாண. சில் மொழியென்றது மென்மொழி என்றவாறு. கயிரவம் - செவ்வாம்பல், மூயல் - களங்கம்.

மூங் கனிஇதழ் ஒளியைப், பயில்இருள் ஒதுக்கிப் பால்நிலாக் கான்று படரொளி பரப்புவெண் மதியம், முயலிறுத் தெழுந்தா லனையபே ரழகின் முண்டக வாள்முக மலரை. கக

மடல்அவிழ் பாளைப் பசியபூங் கமுகோ வயிறுநொந் தலறிமுத் துயிர்க்கும், குடவளைப் பொலிவோ எனமரு ளுறுப்பக் கவின்குடி இருந்தகந் தரத்தைக், கடிகமழ் கொழுஞ்சா றொழுகமென் கரும் பைக் கண்ணறத் தகர்த்திளம் பணையைத், தடவரைப் புகுத்தித் தொடையலை வாட்டித் தகைஅமை அணிகெழு புயத்தை. கஉ

மடிதிரைப் பரவை அமுதுறழ் இசைய மகரயாழ் புறங்கொடுத் திரியத், தொடிகளும் வயிரக் கடகமும் செறித்துத் தூநலம் படைத்த கூர்ப் பரத்தை*, நொடிபயில் கிள்ளைப் பவளவாய் கடுக்கும் நுதி யுடைக் கூருகிர் வனப்பின், படியறு விரல்வாய்ந் தொள்ளொளி துளும்பும் பனிமலர்க் காந்தளங் கரத்தை. கங

சுணங்குடை வனப்பும் ஆரமும் எழுதுந் தொய்யிலுஞ் சந்த னக் களியும், இணங்கிஅண் ணாந்து பாதிகாண் டகமேற் படாம் பொதி இளமுலைப் பொருப்பை, அணங்குறுத் திளையோர் மதியினைப் படுக்கும் படுகுழி யனையஉந் தியின்மேல், நுணங்குவண் டொழுக் கிற் கருமயிர் ஒழுகி நோக்கமை சிறுவயிற் றழகை. கச

கொடியென நுடங்கி வேலெனக் கரந்து குவிமுலைக் கிடைந்து செந் தளிர்க்கைப், பிடியினுள் அடங்கித் துடியெனச் சுருங்கி மின்

---

கஉ. கந்தரம் - கழுத்து. கண்ணற - என்பது கண்ணோட்டமற என வும், கணுக்கள் முறிய எனவும் இருபொருள் பயந்து நின்றது. பணை - மூங் கில். வரை - மலை. தொடையல் - மாலை. தகை - அழகு. கரும்பு முதலியவற் றின் இயல்பைஅவளது தோளுக்குத் தோற்றமையாற்செய்த தண்டனையாகக் கூறியது தற்குறிப்பேற்றம்.

கங. அமுதுறழ் இசைய - அமுதத்தை ஒத்த இசையினுடைய. கூர்ப் பரம்-முழங்கை. நொடி-சொல். படி-ஒப்பு. *'கூற்பரத்தை' எனவும் பாடம்.

கச. சுணங்கு - தேமல். ஆரம் - மணிவடம். தொய்யில் - தனத்தி லெழுங்கோலம். களி - குழம்பு. ஆடவர்களை மயக்க வந்தவளாகலின், தனது தனம் பாதி தோன்றவந்தனள் என்க. படாம்பொதி - துகில் மறைத்த. அணங்குறுத்து - துன்பம் செய்து. படுக்கும் - விழச்செய்கின்ற. நுணங்கு - நுணுகிய. ஒழுக்கின் - ஒழுங்குபோல. நோக்கு - அழகு.

னெனப் பிறங்குறுண் நுசுப்பைப், படிமையர் சீலக் குறும்பெலாம்
அடக்கி நடுவுயர்ந் தகன்றெழில் படைத்து, வடிமலர்ப் பகழி வேந்
தர சிருப்ப வயங்கிய அல்குலின் பரப்பை. கரு

நெட்டிலைக் கதலித் தண்டெனச் சேர்ந்து செறிந்துநீள் விலை
வரம்பிகந்த, வட்டொளி அரத்தம் நுழைஇழைக் கலிங்க மணிகெழு
வளம்பயில் குறங்கைக், கட்டெழில் மதவேள் ஊதுகா களமும்
கணைபொதி ஆவநா ழிகையும், பெட்டவர் மருள வீற்றிருந் தனைய
பிதிரொளிப் பொற்கணைக் காலை. கசு

கறுத்தவாள் முகனை வெரீஇப்பதம் பணியுங் கலைமதி வெள்ளுகி
கிர் மதநூல், பொறித்தபுத் தகமாம் புறவடி அன்ன மென்னடைப்
பூந்தளிர் அடியைக், குறித்துரை உவமைக் கிடம்பெறு தள்ளிக்
கொளத்தகும் பேரழ கமைந்த, மறுத்தபூ மேனி இளநலங் கனிந்து
மணிநிறம் வயங்குகோ மளத்தை. கள

திருமால் தேவர்களுக்கு அமுதமளித்தல்

கலி விருத்தம்

காண்டலும் மாரவேள் கணைக்கி லக்கமாய்
மாண்டனர் எனஅறி வழிந்து மையல்நோய்
பூண்டனர் தானவர் மடந்தை போல்வரும்
ஆண்டகை மாயையால் அவரை வஞ்சித்து. கஅ

கடவுளர்க் கமுதெலாங் கடுக ஈந்தவர்
வடிவெடுத் துடனுற வதிஇ ராகுவைத்

---

உடுக்கை. பிறங்கு - விளங்குகின்ற. படிமையர் - தவத்தோர். சீலக்குறும்பு - ஒழுக்கமாகிய பகை.

கசு. கதலி - வாழை. வட்டொளி - திரண்ட ஒளி. அரத்தம் - சிவப்பு. கலிங்கம் - ஆடை. குறங்கு - தொடை. ஆவநாழிகை - அம்புக்கூடு. பெட்டவர் - விரும்பியவர். பிதிர் - புறத்தே செல்லும்.

கள. கறுத்த - சினந்த. மதி உகிர் - சந்திரன்போலும் வெள்ளிய நகங்களையுடைய. மறுத்தவென்பது எதுகை நோக்கி மறுத்தவென்றாயது; மணம் பொருந்திய என்பது பொருள். கோமளம் - அழகு.

கஅ. அவர் வடிவு, தேவர் வடிவு. மூழை - சட்டுவம், அகப்பை. அரிந்து - வெட்டி.

தடநெடு மூழையான் அரிந்து தானும்அக்
கடலமிழ் தருந்துபு களிப்பின் நீடினன். கக

வேறுகொள் அவுணரை ஞாட்பின் வென்றுபோய்
மாறடும் ஆழியான் இருக்கை மன்னினான்
ஏறணி நெடுங்கொடி எரியின் நீள்சடை
ஆறணி அடிகள்இவ் வனைத்துங் கேட்டரோ. உ0

ஐயனார் அவதாரம்

நன்னடி வழிபடச் சார்ந்த மாயனை
அன்னவை என்னெனக் கடாவி அவ்வுரு
என்னெதிர் காட்டுகென் றியம்பச் சார்ங்கனும்
மன்னிய மலைமகள் வதனம் நோக்கியே. உக

மையல்செய் மோகினி வடிவங் காட்டுபு
வெய்தென நடந்தனன் வேளை வென்றகோன்
ஓய்யென எழுந்துசென் றுற்றுப் புல்லவுங்
கையகன் றோடினன் கரிய மேனியான். உஉ

மறுவனும் எம்பிரான் வலிந்து பற்றிஆங்
கிறுகுறத் தழீஇயினன் இனைய காலையின்
உறுபுகழ்ச் சாத்தனென் றுங் குவர்க்குத் தோன்றினான்
நிறுமுறை உலகெலாம் நிறுத்துங் கோலினான். உங

ஐயனார் இறைவன் அருள்பெறல்

ஆயபின் கேசவன் வெள்கி அண்டர்கோன்
சேயதாள் தொழுதுதன் உலகஞ் சேர்ந்தனன்
பாய்புகழ்ச் சாத்தனும் பகவன் தாளிணை
வாயினால் துதிசெய்து வணங்கி வேண்டுவான். உச

---

உ0. ஞாட்பு - போர். மாறுஅடு - பகையை அழிக்கின்ற. ஆழி - சக்கரம்.

உக. இறைவிமுன் தாம் பெண்ணுருக் கொள்ளுவதற்கு நாணினமையால், திருமால் இறைவியை நோக்கினர் என்க.

உஉ. வெய்தென, ஒய்யென விரைவுக் குறிப்புக்கள். இஃதோர் திருவிளையாட்டாவதன்றிக் காமத்தா லன்றென்பார், 'வேளைவென்றகோன்' என்றார்.

உங. சாத்தன் - ஐயனார். உவர்க்கு - அவர்களுக்கு. நிறுமுறை - நிறுத்தும் முறை.

உச. கேசவன் - திருமால். அண்டர்கோன் - இறைவன்.

அரில்அறச் செய்பணி அருளி நின்னருட்
குரியபே ரிறைமையும் உதவ வேண்டுமால்
கருவிடம் பருகிய களகண் எந்தைநின்
திருவடிச் சார்புடைச் சிறிய னேற்கென. உரு

மறைமிடற் றெம்பிரான் இயம்பும் மைந்தகேள்
இறைமைநம் அருளினல் எய்தற் பாலதாம்
அறைதரும் அருளும்மெய் யன்பின் ஆவதப்
பொறைசெழு பத்தியும் பூசைப் பேறரோ. உசு

பூசையா வதுசிவ லிங்க பூசைஅத்
தேசமை அருச்சனைக் கிடனுஞ் சீர்த்திசால்
ஆசறு தலங்களாம் அங்க வற்றினும்
காசிமற் றதனினுங் காஞ்சி மாநகர். உஎ

கண்ணகன் புரிசைசூழ் காஞ்சி வைப்பிடைப்
புண்ணியச் சிவக்குறி நிறுவிப் பூசித்து
விண்ணவர் தவமுனி வேந்தர் யாவரும்
எண்ணரும் பேறுபெற் றின்பம் நீடினர். உஅ

ஆயிடை நீஎமை அருச்சித் தேத்துதி
மாயிருந் தலைமைநாம் வழங்கு கேமெனச்
சேயிழை பங்கினன் அருளிச் செய்தனன்
காயிலைப் படையவன் காஞ்சி நண்ணினன். உகூ

உருகெழு பனிவரைப் பிராட்டி ஒண்மலர்த்
திருவடிச் சுவடுதோய் செல்வக் காஞ்சியின்
மருவிவேற் கடவுளை வழுத்தி ஆங்கவன்
அருளினற் சிவக்குறி நிறுவி அர்ச்சித்தான். ௩௦

உரு. அரில் - குற்றம். இறைமை - தலைமை.

உசு. இறைமைக்குக் காரணம் திருவருளும், திருவருட்குக் காரணம் அன்பும், அன்புக்குக் காரணம் பூசையும் என்பதாம்.

உஎ. பூசை எனப்படுவது சிவலிங்க பூசையேயாம் என்பது ஈண்டு அறியற்பாலது.

உகூ. காய் இலைப் படை - வெல்லுகின்ற இலைபோலும் படை.

௩௦. வேற்கடவுள் - முருகப்பெருமான்.

மறைமுதல் விடைமிசைத் தோன்றி மற்றவற்
கறைகழல் இமையவர் அருகு சூழ்தர
முறைகெழு பூதங்கள் முழுதுங் காப்புறும்
இறைமையின் மணிமுடி இனிது சூட்டினான். ௩௧

பல்கரி வீரர்தேர் பரிகள் தம்முடன்
நல்கிய தலைமைபெற் றனைய சாத்தனும்
ஒல்கிடை மலைமகள் உவகை மீக்கொள
மல்குசீர்ப் பிலத்தயல் மகிழ்ந்து வைகினான். ௩௨

கடாம்திரை ஏழுயர் கரிகள் மேல்கொடு
நடாய்உளங் களித்திறு மாந்து நாள்தொறும்
வடாதுபாற் செண்டணை வெளியின் மாறடும்
அடாவலி படைத்தவன் ஆடல் பேணுமால். ௩௩

வலம்படர் சிறப்பின்மா சாத்தன் ஏத்திய
நலம்படர் கருணைமா சாத்த நாதனைப்
புலம்படர் சிந்தையாற் போற்றப் பெற்றவர்
இலம்படார் இருமையும் இன்பம் எய்துவார். ௩௪

மங்களேச்சரம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மற்றதன் வடபால் மலைமகள் இகுளை மங்கலை மண்டபம் இழைத்து, வெற்றிமண் டபத்தின் பிறகுற மங்க ளேசனை விதியுளி நிறுவி, அற்றமில் சிறப்பின் மங்கள தீர்த்தம் அகழ்ந்துநீ ராட்டுபு தொழுதாள், பற்றுமங் களநாள் அத்தடம் படிந்து பணிபவர் இருமையும் பெறுவார். ௩௫

---

௩௨. தலைமை - பூதகணத்தலைமை. பிலம் - காமகோடி பீடம்.

௩௩. கடாம் - மதசலம். ஏழ் - ஏழுமுழம்; கை, கால், வால், கோசம் என்னும் ஏழுறுப்பெனவுங் கூறுவர். நடாய் - செலுத்தி. காஞ்சியில் வடக்குப் பக்கத்தில் இவ்வையனார் ஆடும் செண்டணை வெளி என்பது உண்டு. அடா வலி - அழிக்க முடியாத வலி.

௩௪. வலம் படர் - வன்மை மிகுந்த. புலம்படர் - அறிவு மிகுந்த. இலம் படார் - வறுமையுறார்.

௩௫. இகுளை - தோழி, மங்கலநாள் - செவ்வாய்க் கிழமை.

இராமநாதேச்சரம்

உரைத்ததன் குடபால் தசரதன் மதலை அரக்கனை அடுபழி ஒழிப்பான், அருட்குறி யிருத்திச் சேதுவில் தொழுதங் கண்ணலார் ஏவலிற் காஞ்சி, வரைப்பின்உற் றிராம நாதனை நிறுவி வழிபடூஉக் கொடுவினை மாற்றித், திரைபுனல் அயோத்திப் புகுந்தர சளித்தான் சேதுவில் சிறந்ததந் தலமே. ருசு

மாதலிச்சரம்

இனையதன் வடபால் மாதலி என்பான் இராகவன் இலங்கையர் கோமான், றனைஅடு ஞான்று வாசவன் விடுப்பத் தயங்குதேர் செலுத்துவா னாகி, நனைமலர் வாகை முடித்தபின் இராமன் றன்னொடு காஞ்சியை நண்ணிப், புனைபுகழ் மாத லீச்சரந் தொழுது புரந்தரற் கினியவ னானன். ருஎ

ஆகத் திருவிருத்தம் - கஅசுஅ.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'இறைவன் திருவருள் பெற்றுச் செய்யும் செயல்கள் தாம் கருதிய பயனையே யன்றி வேறு பல நன்மைகளையுந் தரும்' என்பதும், (உ) சலந்தரேசப் படல உண்மையில்இரண்டாவதாகக் கூறப்பட்டதும், (ங) 'திருமால் இறைவனுக்கு ஒரு சத்தி' என்பதும், (ச) சருவதீர்த்தப் படல உண்மையில் முதலாவதாகக் கூறப்பட்டதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

பிரமதேவனைச் சிறையிலிட்ட முருகப் பெருமானர் எழுந்தருளியுள்ள திருக்குமரகோட்டத்தின் சிறப்பை இதுவரையிற் சொன்னோம்; இனி, அதற்குத் தெற்கில் விளங்கும் மாசாத்தன் தளியைச் சொல்லுவோம்.

சிவபெருமான் ஆலகால விடத்தை யுண்டபின்பு, அவரது திருவருளைப் பெற்றுத் தேவரும் அசுரரும் திருப்பாற்கடலைக் கடைந்தபோது, அதிலிருந்து முன்னே மூதேவி, இலக்குமி, சிந்தாமணி, காமதேனு, அரம்பையர்கள், ஐராவதம் முதலிய பொருள்கள் தோன்றிய பிறகு, அமுதந் தோன்

---

ருசு. குடபால் - மேற்குத்திசை. அரக்கன், இராவணன்.

ருஎ. மாதலி - இந்திரன் தேர்ச் சாரதி. வாசவன், புரந்தரன் - இந்திரன்,

றிற்று. அதனை எமக்கெமக்கென்று தேவாசுரர்கள் சண்டையிட்டனர். அச் சண்டையில் அசுரர் வலிமை மிகுந்து அமுதக் குடத்தைக் கைப்பற்றினர். அப்போது திருமால் அழகில் மிகுந்த பெண்ணாகிய மோகினி யுருவம் கொண்டு அவர்களுக்கு முன்னே தோன்றி, அசுரர்கள் கொண்டுள்ள அமுதக் குடத்தை வாங்கிக்கொண்டு, நீங்கள் எல்லாரும் பந்தி பந்தியாக உட்காருங் கள்; எல்லாருக்கும் நான் அமுதம் படைக்கின்றேன்; ஆனால், எனக்கு விருப்ப மானவர்களுக்கு மாத்திரம் மிகுதியாகப் படைப்பேன் என்று சொல்லிப் படைக்கத் தொடங்கினர்.

அசுரர்கள் மோகினியின் அழகில் மயங்கி அவளது ஒவ்வோர் உறுப்புக் களையும் உற்றுநோக்கிக்கொண்டிருந்தனர். அப்போது திருமால் மாயையால் அசுரர்களை வஞ்சித்துத் தேவர்களுக்கு மாத்திரம் அமுதத்தை யளித்து, தேவ உருவங் கொண்டு தேவர்களுள் ஒருவனாக வந்திருந்து அமுதம் உண் ணக் கருதிய இராகுவைச் சட்டுவத்தால் தலையைப் பிளந்து, தாமும் அமுதம் உண்டுகளித்தனர். பின்னர் இது மாயை என்றறிந்து போர்செய்த அசுரர்களை வென்று, திருமால் தம் இடத்திற்குச் சென்றனர்.

இவற்றை யறிந்த சிவபெருமான், தம்மை வணங்குதற்குக் கைலையை யடைந்த திருமாலை அம்மோகினி வடிவத்தைக் காட்டுமாறு கட்டளையிட, திருமால் இறைவியின் முகத்தை நோக்கிப் பின்பு அவ்வடிவத்தைக் காட்டி நடந்தனர். இறைவன் தொடர்ந்து சென்று பற்றிப் புல்லவும் திருமால் ஓடினர். மறுபடியும் சிவபெருமான் வலிந்து பற்றித் தழுவினர். அவ்விருவர்க் கும் சாத்தனார் பிறந்தார். பின்னர், திருமால் வெட்கமுற்று இறைவனை வணங்கிச் சென்றனர்.

சாத்தனார் இறைவனை வணங்கி, 'அடியேன் செய்யும் பணியைக் கட்டளையிட்டு, உமது திருவருளுக்குரிய தலைமையும் அளிக்கவேண்டும்' என வேண்டினர். இறைவன், 'இதனை நீ காஞ்சியில் எம்மைப் பூசித்துப் பெறுக' என்றருள, சாத்தனார் காஞ்சியை அடைந்து குமரகோட்டக் கடவுள் திரு வருள் பெற்று, ஓர் இலிங்கம் நிறுவிப் பூசிக்க, இறைவன் விடைமேல் தோன்றித் தேவர்கள் சூழ இருந்து, சாத்தனாருக்குப் பூதகணங்களைக் காக்குந் தலைவராக முடி சூட்டினர். சாத்தனார் மகிழ்ந்து காமாட்சியம்மையார் வாழும் பிலத்தருகில் தங்கினார். அவர் யானைமேல் கொண்டு, காஞ்சியின் வடக்குப் பக்கத்தில் செண்டணை வெளியில் ஆடல் புரிவார். அவர் பூசித்த மாசாத்த நாதப் பெருமானை வணங்குவோர் இருமைப் பேறும் அடைவார்கள்.

மங்களேச்சரம்

அதற்கு வடக்கில், இறைவியின் தோழி யொருத்தி மங்களை என்பவள், மண்டபம் ஒன்று உண்டாக்கி, அதற்குப் பின்னாக மங்களேசனைத்

தாபித்து, மங்கள தீர்த்தம் என ஒரு தீர்த்தம் உண்டாக்கிப் பூசித்தனள். செவ்வாய்க் கிழமையில் அத்தீர்த்தத்தில் முழுகி மங்களேசப் பெருமானை வணங்கினோர் இருமைப்பேறும் அடைவார்கள்.

இராமநாதேச்சரம்

அதற்கு மேற்கில், தசரத குமாரனாகிய இராமன் இராவணனை அழித்த பாவந்தீரச் சேதுவில் சிவபூசை செய்து, இறைவன் ஆணையால் காஞ்சியை அடைந்து, இராமநாதரை இருத்தி வழிபட்டுப் பாவம் நீங்கி அயோத்தியை யடைந்தான். அத்தலம் சேதுவினும் மேலானதாகும்.

மாதலீச்சரம்

அதற்கு வடக்கில், இராமன் இராவணனுடன் போர்புரியுங்கால் அவனுக்குத் தேர் செலுத்துதற்காக இந்திரன் தனது சாரதியாகிய மாதலியை விடுப்ப, அவன் இராமனுக்குத் தேர் செலுத்தி, இராமன் வெற்றியடைந்த பின்பு அவனுடன் காஞ்சியையடைந்து பூசித்து, இந்திரனுக்கு இனியவனான மாதலீச்சரம் இருக்கின்றது.

---

# அனந்த பற்பநாபேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வருவினை தெறுமா சாத்தன் தளிஒளி மங்க ளேசம்
திருவிரா மேசம் மாத லீச்சரந் தெளியச் சொற்றும்
தருவலர் நிரந்த முன்றின் மாதலீச் சரத்தின் மேல்பால்
ஒருவில்சீர் அனந்த பற்ப நாபத்தின் உண்மை சொல்வாம். க

இறைவன் இறைவியர் திருவிளையாடல்

எண்ணரும் உயிர்கள் ஈன்ற இருமுது குரவ ரானோர்
அண்ணலங் கயிலை வெற்பின் அமர்வுழி ஒருநாள் அங்கண்
உண்ணிறை களிப்பின்நீடி ஒள்ளொளி மணிச்சூ தாடக்
கண்ணினர் அகிலம் உய்யக் கண்ணினார் அனைய காலை. உ

---

க. தரு அலர் நிரந்தமுன்றில் - கற்பக தருக்களின் மலர்கள் நிறைந்த வாயில்; இது தேவர்கள் தொழுதலைக் காட்டும் குறிப்பு மொழி. ஒருவில் - நீங்குதல் இல்லாத.

உ. கண்ணினர் - கருதினார். கண்ணினரொன்றது அப்பொருட்டாகிய வினையாலணையும் பெயர்.

மாலையந் துளவோன் எய்தி வணங்கிச்சாந் தாற்றி கோடல்
மாலைய னாகி நின்று மெய்வெயர் மாற்ற நோக்கி
மாலைவெண் பிறைதாழ் வேணி வள்ளலும் உமையும் ஆங்கண்
மாலைஅவ் வினைக்குச் சான்று வைத்தனர் ஆடி னார்கள். ௩

பிடித்தெறி கவறாட் டத்திற் பிஞ்ஞகன் தோற்பச் செங்கேழ்
அடித்தளிர்ப் பிராட்டி நோக்கி அடிகளை வென்றேன் என்றாள்
விடைக்கொடிப் பெருமான் யாமே வென்றனம் என்றான் பாசம்
உடைத்தவர் தங்கட் கிவ்வா றுற்றன கலாங்கள் மேன்மேல். ௪

### திருமால் சாபமுறுதல்

யாமினிக் கலாய்த்தல் வேண்டல் ஒழிகென இருவர் தாமும்
மாதணி மார்பன் றன்னை வினாதலும் மாயோன் ஐயன்
தாமரை வதனம் நோக்கித் தலைவனும் வென்றான் என்றான்
கோமளங் கவின்ற மேனிக் கோற்றொடி சீற்றங் கொண்டாள். ௫

கண்டது கண்ட வண்ணங் கழறிலை வாரம் பற்றித்
தண்டுணர்த் துளவத் தாரோய் கைதவச் சான்று சொற்றாய்
அண்டரும் பிறரும் ஏசக் கட்செவி யாதி என்னா
ஒண்டொடி சபிப்ப மாயோன் உளம்பதைத் திரந்து போற்றி. ௬

### திருமால் வழிபாடு

அடியனேன் மடமை நீரால் அறைந்தது பொறுத்துச் சாப
முடிவளித் தருளாய் என்றென் றேக்கற முதல்வி நோக்கி
நெடிதருள் சுரந்து மாயோய் அஞ்சலை நிலைநீர்க் காஞ்சிக்
கடிநகர் வரைப்பின் ஏகிக் கடிதெமைப் புரிதி பூசை. ௭

---

௩. சொற்பின் வருநிலை. துளவ மாலையோன் எனமாறுக. சாந்தாற்றி - விசிறி. மாலையன் - தன்மையன். மாலைப்பிறை - அந்திப்பிறை. மாலை - விட்டுணுவை.

௪. கவறு - சூதாடுகருவி. கலாம் - மாறுபாடு.

௫. கலாய்த்தல் - போர் செய்தல். மாது அணி - இலக்குமியைக் கொண்ட. ஐயன் வதனம் நோக்கி என்றது, முகத்துக்கஞ்சுதல் என்னும் வழக்கைக் குறிப்பது. கோமளம் கவின்ற - அழகு அழகையடைந்த. 'மாமணி மார்பன்' எனப்பாடம் இருந்திருத்தல் வேண்டும்.

௬. வாரம் பற்றி - ஒருபால் பற்றடைந்து, பட்சபாதங்கொண்டு. கைதவச் சான்று - பொய்ச்சான்று. கட்செவி - பாம்பு.

இகழுறும் இலிங்க வேதி என்னுரு இலிங்க மூர்த்தி
திகழ்மதிச் சடில மோலிச் சிவபிரான் வடிவு கண்டாய்
புகழ்தரும் இலிங்க வேதிப் பொற்பினுல் என்னை நின்பேர்
நிகழ்வுற நிறுவிப் போற்றி நீக்குதி சாபத் தீமை. அ

நலம்புரி அனந்த பற்ப நாபன்என் றேங்கு வாயால்
வலம்புரிக் கரத்தோய் என்று வழங்கினுள் குவவுத் திண்தோள்
உலம்புரி அனந்த பற்ப நாபனும் உமையாள் தன்னைப்
பொலம்புரி சடிலத் தேவைத் தொழுது போய்க் காஞ்சி புக்கான். ௯

வணங்கினன் திருவே கம்பம் மற்றதன் அயலே வேதி
இணங்குறும் அனந்த பற்ப நாபமா இலிங்கம் பூசித்
தணங்கருள் பெற்றுப் பாந்தள் மூதுரி அகற்றி யாங்குப்
பிணங்கிய சாபம் நீத்துப் பேரருட் குரிய னுனன். ௧௦

ஆகத் திருவிருத்தம் - ௧அ௭அ.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'பொய்ச்சான்று சொல்லுவோர் தெய்வத்தால் தண்டிக்கப்படுவர்' என்னும் உண்மையை முதலாகக் கொண்டு, (௨) சலந்தரேசப் படல உண்மையிற் கூறப்பட்ட இரண்டாவது உண்மையையும், (௩) கச்சபேசப் படல உண்மையிற் கூறப்பட்ட நான்காவது உண்மையின் பிற்பகுதியையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

**வி**னையை நீக்கும் மாசாத்தன் தளி, மங்க஌சம், இராமேசம், மாதலீசங்களைச் சொன்னேம்; இனி, மாதலீச்சரத்திற்கு மேற்கிலுள்ள அனந்த பற்பநாபேசத்தின் உண்மையைச் சொல்லுவோம்.

ஒருகால் கைலையில் இறைவனும் இறைவியும் மகிழ்ச்சியால் சூதாட எண்ணினுர்கள். அப்போது திருமால் அங்கிருக்க, அவரை அவ்வாட்டத்திற்குச் சான்முக வைத்து ஆடினர். ஆடுகையில் இறைவன் தோற்க, இறைவி

அ. வேதி - பீடம். இவ் விலிங்கஉண்மை சிவஞான சித்தியாரிலும் கூறப்பட்டது. (சு. க. ௬௯.)

௯. அனந்தன் - பாம்பு. பற்பநாபன் - தாமரை உந்தியன், திருமால்.

௧௦. அணங்கு - இறைவி. உரி - தோல். ஆங்கு, உவமஉருபு.

யார் யான் உம்மை வென்றேன் என்றனர். இறைவனார் யானே வென்றேன் என, இருவரும் இவ்வாறு மாறுகொண்டு திருமாலைக் கேட்கத் திருமால் இறைவன் முகத்தைப்பார்த்து, இறைவனே வென்றனர் என்றனர். உமாதேவியார் சினந்து, 'நீ பொய்ச்சான்று கூறினமையால் பாம்பாகுக' என்று சபித்தனர். திருமால் நடுங்கி வணங்கி, அடியேன் அறியாமையாற் செய்த குற்றத்தைப் பொறுத்து இச்சாபம் நீங்குமாற்றை அருளிச் செய்யவேண்டும் என்று கேட்க, அம்மையார் திருவுளம் இரங்கி, 'நீ அஞ்சற்க; இலிங்கம் இறைவன் வடிவமும், இலிங்க பீடம் எனது வடிவமுமாகும்; ஆதலால், அத்தகைய இலிங்கத்தைக் காஞ்சியில் அமைத்து, என்னைப் பூசித்து, இச்சாபம் நீங்குக; நீயும் அனந்த பற்பநாபன் என விளங்குக' என்றனர். அவ்வாறே திருமால் காஞ்சியையடைந்து திருவேகம்பத்தை வணங்கி, அதற்கருகில் அனந்த பற்பநாப இலிங்கத்தைத் தாபித்து வழிபட்டுப் பாம்புருவம் நீங்கித் திருவருளுக் குரியவராயினர்.

---

## கச்சி மயானப் படலம்

கொச்சகக் கலிப்பா

சிற்பநிகழ் மணிமாட நெடும்புரிசைத் திருவனந்த
பற்பநா பேசத்தின் பரிசறிந்த வாறுரைத்தாம்
நிற்பனவும் சரிப்பவுமாய் நிறைந்தபிரான் இனிதுறையும்
அற்புதமாந் திருக்கச்சி மயானத்தின் அடைவுரைப்பாம். க

பண்டாசுரன் வரம்பெறல்

முன்னொருநான் முகன்புருடப் பெயர்க்கற்பம் முடிவெய்திப்
பின்னுறுசீர் அகோரமாங் கற்பத்துப் பிறங்குலகின்
மன்னுயிர்கள் வளர்ந்தோங்கி வைகுநாள் விறற்பண்டன்
என்னும்ஒரு வல்லவுணன் இப்புவனத் துளனானான். உ

அங்கவன்செய் மாதவத்தால் அகமகிழ்ந்து காட்சிதரும்
பங்கயனை அடிவணங்கிப் பன்னுசுரா சுரர்முதலோர்

---

க. சிற்பம் - சிற்பத்தொழில். சரிப்பன - இயங்குவன. சரிப்பன நிற்பன எனினும், சராசரம் எனினும் ஒக்கும்.

உ. புருடப்பெயர்க்கற்பம் - தற்புருட கற்பம். வீரியம் - இந்திரியம்.

ங. நங்க - உண்ண. நனித்து - நணுகி. எண்ணி - ஆராய்ந்து.

தங்களுடம் பிடைவிரவித் தகைபெறுவீ ரியம்அனைத்தும்
நுங்கவரம் அருள்என்றான் முண்டகனும் நனித்தெண்ணி. ௩

அற்றதென் றகலுதலும் அவுணர்கோன் உடம்புதொறும்
உற்றாவி யுடன்விரவி வீரியங்கள் உண்டிருப்பப்
பற்றுய வீரியம்போய் ஆருயிர்கள் பருவந்து
வற்றுத ஒளிமாழ்கி வளர்வின்றி அஃகினவால். ௪

தேவர் முதலியோர் முறையீடு
எழுசீரடி யாசிரிய விருத்தம்

மருத்துவர் இயக்கர் வானவர் அவுணர் மானிடர் சித்தர்கந் தருவர், உருத்திரர் வசுக்கள் இராக்கதர் அருக்கர் உரகர்சாத் தியர் மருத் துக்கள், அருத்திகூர் விரிஞ்சன் அச்சுதன் பிறரும் அவ்விடர் ஆற்றலர் குழுமித், திருத்தகு கயிலைப் பருப்பதம் புக்குச் சிவ பிரான் அடிதொழு துரைப்பார். ௫

வீரியம் இன்றி வலிகுறைந் தடியேம் வெற்றுடம் பெனத்திரி கின்றேம், காரணங் காணேம் அன்னது தவிர்க்கும் உபாயமுங் கண்டிலேம் என்று, நாரணன் முதலோர் உலந்துநின் றிரப்ப நாயகன் நகைமுகிழ்த் துரைக்கும், சீரிய நமது வீரியம் முழுதும் திருந்து பண் டாசுரன் கவர்ந்தான். ௬

ஆங்கவன் எல்லா உடம்பினும் விரவி ஆவியோ டுறைதலின் எவ்வா, றீங்கினி வெல்லப் படுவன்என் றருள இமையவர் யாவரும் வெருவி, மாங்குயிற் கிளவி மலைமகள் கொழுநா மறிதிரை வளைகடல்

---

௪. ஆவியுடன்விரவி என்றது, உயிர்களோடுகூட அவற்றின் இடமாகிய உடலில் வதிதலை. பற்று - பற்றுக்கோடு. பருவந்து - வருந்தி. அஃகின - குறைந்தன.

௫. இச்செய்யுளிற் கூறப்பட்டவர்களை மேலே (பக் ௧௯௦) காண்க.

௬. உலந்து - வலியழிந்து. மறதிக் குணத்தினால், வரந்தந்த பிரமனும் அறியாது போயினன் என்க. பண்டம் என்பது உடலுக்கு ஒரு பெயராதலின் அதிற்கலந்த அசுரன் பண்டாசுரன் எனப்பட்டனன்.

௭. கொடுமையும் வலிமையும் வாய்ந்த அசுரர்களது பெயரைக் கேட் பினும் அஞ்சும் இயல்புடைய தேவர்கள், அத்தகைய ஓர் அசுரன் தம் உடலி

உயிர்த்த, பூங்கடு மிடற்றுப் புனிதனே எம்மைப் புரப்பதுன் கடன் எனத் துதிப்பார். எ

வேறு

முடிவில் ஆற்றலே தன்வ யத்தினை முற்று ணர்ச்சியை பேரருள்
மடிவில் ஆட்சியை தூய மேனியை மற்றி யற்கை புணர்ச்சியை
படியி லாஇயல் பாக நீங்கிய பாச நோயை வரம்பில்இன்
புடையை உன்னடி யேங்கள் என்றும் உனக்க டைக்கலம் ஐயனே.

அண்டம் ஓர்அணு வாம்வ ளர்ச்சியை அணுவின் நுண்ணியை அண்டமார், பிண்டம் எங்கணும் நின்ற சைக்கும் நிமித்த னுய்நிறை பெற்றியை, கண்ட யோகியர் சிந்தை மேயினை கரணம் முற்றும் அகன்றனை, ஒண்டொ டிக்கொரு பங்க யாங்கள் உனக்க டைக்கலம் ஐயனே. கூ

பிரமம் என்மரும் ஈசன் என்மரும் சீவன் என்மரும் பேதுறுங்
கருமம் என்மரும் வேறும் அவ்வவ கடவுள் என்மரு மாகியே

---

னுள்ளேயே கலந்திருக்கின்றனென்று சொல்லக் கேட்டதும் பெரிதும் அஞ்சித் துதிப்பாராயினர் என்க.

அ. இச்செய்யுள் இறைவன் எண்குணத்தையும் கூறுதல் காண்க. இறைவனது எண்குணங்களை மேலும்(பக் கூகூஅ) உரைத்தாம். இக்குணங்களை யுடைய உனக்கு அவ்வசுரனை வெல்லுதல் அரிதோ என்பதாம்.

கூ. இறைவனது வளர்ச்சியை நோக்க அண்டம் அணுவாகவும், அவனது நுணுக்கத்தை நோக்க அணு அண்டமாகவும் தோன்றும். இக்கருத்து, "அண்டங்க ளெல்லாம் அணுவாக அணுக்க ளெல்லாம் - அண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயி னானும்" எனத் திருவிளையாடற் புராணம் கடவுள் வாழ்த்திலும் கூறப்பட்டமை காண்க. பிண்டம் - உலகத்தொகுதி. நிமித்தன் - நிமித்தகாரணன், கருத்தா. அசைக்கும் - ஆட்டுகின்ற. கரணம் - கருவி. கரணத்தாற் செய்வோரும், சங்கற்பத்தாற் (நினைவாற்) செய்வோருமென்னும் இருதிறக் கருத்தாக்களில், கரணத்தாற் செய்யும் எம்மனோர் போலாது சங்கற்பத்தாற் செய்யும் தேவரீருக்கு இது கூடாததோ என்பதாம்.

க0. இறைவனது சொரூப லட்சணம் தடத்த லட்சணங்களையும், உயிர்களின் இயல்பினையும் நன்கறியாது, பிரமம் நிர்க்குணமாய் (யாதொரு குணமும் இல்லாததாய்) இருப்பது எனவும், அப்பிரமம் மாயையிற் பிரதி விம்பித்த பிரதி விம்ப சைதன்யமே ஈசனாகலின் அவ்வீசுரன் கற்பிதனெனவும்,

முரணி அவ்வவர் பேச நின்றருள் முதல்வ னேமுதல் ஈறிலா
வொருவ னேஅடி யேங்கள் என்றும் உனக்க டைக்கலம் ஐயனே. ௧௦

இறைவன், வேள்வியில் உலகை ஒடுக்கல்
அறுசீரடி யாசிரிய விருத்தம்

இனைய வாறுளங் களிவரப் பழிச்சுறும் இமையவர் தமைநோக்கிக், கனக முற்பிரான் வீரியம் பெறுவதே கருத்துமக் கெனில்ஏற்கும், வினைமு டித்தவற் கொல்லுதும் அல்லது விரவி எங்கணும் நிற்கும், அனைய கள்வனைச் செருத்திடல் அரிதுமக் கிசைவுகொல் அதுஎன்றான். ௧௧

ஐயன் வாய்மொழி கேட்டலுங் கடவுளர் அவ்வினை தாழாமே, செய்ய வேண்டும்மற் றுலகெலாம் புரப்பதெம் இசைவுபெற் றோரு செந்தீக், கைய னேஎனத் தலைவனும் அன்னதேற் காஞ்சியின்

---

மேற்கூறப்பட்ட பிரமம் ஆன்மாவின் வேறன்று எனவும் கூறுவார் ஏகான்ம வாதிகள் ஆகலின், பிரமம் முதலிய மூன்றென்பார் அவரே என்க. உயிர்கள் செய்யுங் கன்மமே செய்த அவ்வுயிர்கட்குத் தம் பயனைக் கொடுக்கும் என்பார் மீமாஞ்சகர். இவர் கன்மப் பிரம வாதிகளெனப்படுவர். அவ்வவ கடவுள் என்பார், திருமால் முதலியவர்களேயே கடவுளென்னும் பாஞ்சராத்திரிகள் முதலிய பிறசமயிகள். சமயவாதிகள் எவர்க்கும் பயனைத்தரும்பொருள் ஒன்று உண்டென்பது ஒப்பமுடிந்ததாகலானும், பயனைத்தரும் பொருள் உண்மையில் இறைவனேயாகலின், அவனே, தத்தம் அறிவிற்கேற்ப அறிந்து ஒருவரோடொருவர் முரணிக்கூறும் அச்சமயவாதிகளுக்கு அவர் கூறும் பயனை அளிக்கின்றானாகலானும், எச்சமயிகளும் இறைவனையே கூறுகின்றனர் என்பார், 'முரணி அவ்வவர் பேசநின்றருள் முதல்வனே' என்றார் என்க. 'முடிவில் ஆற்றலை' என்னும் செய்யுள் இறைவனது உண்மை இயல்பையும், அடுத்த செய்யுள் அவனது பொதுஇயல்பையும்' இச்செய்யுள், அவனை உயிர்கள் பக்குவத்திற்கேற்ப அறிந்து பயன்பெறுதலையும் கூறியவாமென்க.

௧௧. இறைவன் நம்மாட்டு ஒருஞான்றும் நீங்கிழையான் எனக்கொள்ளும் உறுதிப்பாட்டில் நில்லாது கலங்கும் இயல்புடையாராகலான் இறைவனார் தேவர்களைக் கேட்டலும், முதற்கண்ணே நீவாய்மடுக்க என்னில் அஞ்சுவாராகலின், 'ஏற்கும் வினைமுடித்து' எனக் கூறுதலும் செய்தனர்என்க.

௧௨. தழற்குறி - நெருப்பாகிய இலிங்கம். அவிபெண - வேள்வித்தீயில் இடும் பொருளாக. விரவுக - சேர்க. ஆர்கை விரவுக எனஇயையும்.

நமதாக்கை, வெய்ய செந்தழற் குறியிடை அவியென விரவுகென் றருள்செய்தான். கஉ

யாங்கள் இங்கிருந் தென்பயன் நின்சுடர்க் குறியிடைக் கரந்தே மேல், ஓங்கும் இன்பமே தலைப்படப் பெறுதும்என் றுரைத்தடி தொழுதேத்தும், ஆங்க வர்க்கெலாம் விடைஅளித் தருவரை அணங்கொடுந் திருக்காஞ்சி, ஞாங்கர் எம்பிரான் செழுந்தழற் பிழம் பொளி கலந்திகழ் உருக்கொண்டான். கந

அளப்ப ருஞ்சிகைப் படலைமீக் கவைத்தெழுந் தெங்கணும் அழல்வீசக், கிளைத்து நின்றுதன் வலப்புடை உகிரினாற் குண்ட மும் கெழுவித்து, வளைத்த குண்டத்து வாமதே வத்திரு வடிவின் நெய் பூரித்து, விளக்கு தத்துவத் தருப்பைமுக் குணப்பெரும் பரிதிமே வரக்கொண்டு. கச

ஷை வேறு

வேள்வியுந் தானே வேள்விப் பொருள்களுந் தானே வெய்ய
வேள்விவேட் பவனுந் தானே வேள்விகொள் இறையுந் தானே
வேள்வியின் பயனுந் தானே என்பது விளக்கி எம்மான்
வேள்விசெய் தீக்கை யுற்றான் விளங்கருட் சத்தி யோடும். கரு

வண்டுற்ற மலரோ னாதி வலிகெழு தருக்கள் ஈறு
அண்டத்தின் அகத்த பூதம் அனைத்தையும் பெருங்கால் வேகச்

---

கச. கவைத்து - பிளவுபட்டு. தன் என்றது தழலுருவத்தை. வலப் புடை கெழுவித்து என்க. கெழுவித்தல் - பொருந்துவித்தல். வாமதேவத் திருவடிவின் - வாமதேவ மூர்த்தமாக; வடக்கிலுள்ளது வாமதேவமூர்த்த மாகலின் இங்ஙனங்கூறினர். பூரித்து - நிரப்பி. இறைவன் தானே தழற் பிழம்பாய் அருகில் நிற்றலால் குண்டத்தில் நெய்மாத்திரமே பூரிக்கப்பட் டது. தத்துவத் தருப்பை - தத்துவங்களாகிய தருப்பையையும். முக்குணப் பரிதி - (சாத்துவிகம் முதலிய) முக்குணங்களாகிய யாக மேடைகளையும். மேவர - பொருந்த.

கரு. இறைவன் உலகெலாமாகிநிற்கும் தன்மையால் வேள்வி முதலியன தானே எனப்படுதலை, இன்று உள்ளவாறு அவற்றிற்பல தானேயாகி நின்றமை யால் விளக்கினனென்பதாம். வேள்விசெய்தீக்கை - யாகதீக்கை. யாகம் செய்வோர் மனைவியுடன் யாகதீக்கை பெற்று இருத்தல் முறையாதலின், 'அருட்சத்தியோடும் வேள்வி செய்தீக்கையுற்றான்' என்றார்.

சண்டத்தின் வாங்கி வாங்கி ஆச்சியந் தயங்கும் அங்கேழ்க்
குண்டத்தில் தூய்மை செய்து கொழுந்தழல் மடுத்திட் டானால். ௧௬

வேறு

மடுப்ப மடுப்ப மீதெழுந்து வயங்கிச் சுடருந் தழற்பிழம்பில்
அடுப்ப நனைக்கும் புறத்தெண்ணீர் அண்ட முகடு வேவாமைத்
தடுத்த தாகும் அன்றுயின் மன்ற நிறையுஞ் சராசரங்கள்
உடுத்த மேலைச் சுவர்த்தலமும் உருகிக் கவிழும் உலகன்றே. ௧௭

வேறு

இவ்வகை வடிவு முற்றும் இணர்எரிப் பிழம்பு ளாக்கிக்
கௌவையில் காலச் செந்தீப் பிரான்முதல் கணங்கள் தாமும்
எவ்வம்இன் றெரிருந் தன்னோ டேகமாய்ச் சேர்த்துப் பின்னர்
அவ்விடை விரவும் பண்டா சுரனையும் அழலிற் பெய்தான். ௧௮

எண்ணரும் உயிர்க ளெல்லாம் எரியகத் தொடுங்கி நாளும்
கண்வளர் காலத் தெய்தும் இன்பத்திற் களித்து வாழ்ந்த
அண்ணுதற் கரிய அத்தீ அன்றுதொட் டிலிங்க மாகிப்
புண்ணிய மயான லிங்கம் எனப்பெயர் பொலிவுற் றன்றே. ௧௯

---

௧௬. தேவர் முதல் தாவரம் ஈறாக உள்ள எழுவகைப் பிறப்பையுடைய உயிர்களை எல்லாம் என்பார், 'வண்டுற்ற......... அனைத்தையும்' என்றார். பூதம் - உயிர். சண்டப்பெருங்கால் வேகத்தின் எனமாற்றி, பிரசண்டவாயு வின் வேகம்போல என உரைக்க. ஆச்சியம் - நெய்.

௧௭. தழற்பிழம்பில் - தீப்பிழம்பினால். அடுப்ப - அடுத்து; உடனே என்றபடி. புறத்தெண்ணீர் - அண்டமுகட்டிலுள்ள ஆகாயகங்கை. 'அண்ட முகடு தழற்பிழம்பில் வேவாமை அடுப்ப நனைக்கும் புறத்தெண்ணீர் தடுத்த தாகும்' எனக் கூட்டுக. அன்றே - அந்நாளிலேயே.

௧௮. இணர்எரி - பலசுடரையுடைத்தாகிய தீ. கௌவை - துன்பம். எவ்வம் இன்று - குற்றமில்லாமல். அவ்விடை விரவும் பண்டாசுரனை என்றது, ஒவ்வோர் உயிருடனும் எல்லா உடம்பிலும் நட்பமாகக் கலந்திருந்து, அவைகள் தீயில் இடப்படுந்தோறும் அவற்றினின்றும் நீங்கிக்கொண்டே வந்து, முடிவில் எல்லாம் அழிந்தமையால் வேறு நிலையின்றித் தன்வடிவத் தோடுவந்து நின்ற பண்டாசுரனை என்றவாறு.

௧௯. கண்வளர் காலம் - துயில்கின்ற காலம். ஒடுங்கி களித்து என இயையும். அண்ணுதற்கரிய - நெருங்குதற்கரிய. எல்லாவற்றையும் ஒடுக்கிக் கொண்டமையின் மயானலிங்கமாயிற்று.

அத்தகை இலிங்கந் தன்னில் அளப்பருங் கருணை பூத்துப்
பைத்தபாப் பல்குற் செவ்வாய்ப் பனிவரை அணங்கி னோடுந்
தத்துநீர் வேணிப் பெம்மான் றன்னடி யிணைக்கீழ்ச் சிந்தை
வைத்தவர்க் கிருமைப் பேறும் வழங்கிவீற் றிருக்கும் மன்னோ. ௨௦

சிவகங்கை வரலாறு

நிகழ்பெரு வேள்வி முற்றி நிறைந்தநெய்க் குண்டந் தன்னைத்
திகழ்சிவ கங்கைப் பேரால் தீர்த்தநா யகமாச்* செய்து
புகழ்அப விரத நன்னீர் ஆடினன் புரமூன் றட்ட
இகழறு சீற்றத் துப்பின் ஈர்ந்துழாய்ப் பகழி வல்லான். ௨க

மறக்களிற் றடியின் ஏனை அடியெலாம் அடங்கு மாறும்
உறக்கும்ஆல் வித்தின் உள்ளால் ஒடுங்கிய வாறும் போலத்
திறப்படச் சிவபி ரான்செய் சிவகங்கைத் தடத்தின் அண்டப்
புறத்தன அகத்த தீர்த்த மியாவையும் பொலிய வைகும். ௨௨

அத்தடம் படிந்து மேனாள் அருந்தவ முனிவர் சில்லோர்
வித்தக மயானத் தெம்மான் அருளினால் வினையின் நீங்கி
முத்தியிற் கலந்தார் அன்ன முளரிநீர் இலஞ்சி மேன்மை
சித்தமா சகன்றீர் யாரே இற்றெனத் தெரிய வல்லார். ௨௩

ஆகத் திருவிருத்தம் - க௯௦க.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறு, (க) 'சிவபெருமான் ஒருவரே எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகலின், அவரே ஏனைய திருமால் முதலிய யாவராலும் செய்தற்கரிய செயலைச் செய்து உயிர்களைக் காப்பர்'

---

௨க. வேள்வி செய்வோர் அதனை முடித்தபின் அபவிரத ஸ்நானம் என ஒரு கிரியை செய்தல் முறை. துப்பு - வலிமை. துழாய்ப்பகழி - திருமாலாகிய அம்பு. *'நாயகமாய்ச் செய்து' எனவும் பாடம்.

௨௨. களிற்று அடி - யானையின் அடி. ஏனை அடி - மற்றவற்றின் அடி. உறக்கும் - நெருங்குகின்ற. ஆல் - ஆலமரம். வித்தினுள்ளால் - அதன் வித்தினுள். உவமை இரண்டனுள் முன்னது சிறுமை பெருமையில் அடங்குதற்கும், பின்னது எப்பொருளும் தனது காரணத்தில் நுட்பமாய் அடங்கியிருத்தற்கும் எடுத்துக் காட்டப்பட்டன.

என்பதும், (௨) 'அதனால், அவரொருவரே யாவர்க்கும் புகலிடமாய் உள்ளவர்' என்பதும், (௩) 'சிவபெருமான் ஒருவரே எல்லா உலகத்தையும் ஒடுக்குகின்ற மகாசங்கார காரணர்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள், ௮, ௯, ௧௦, ௧௫ ஆம் செய்யுளிற் கூறிய பொருள்களும் ஆண்டாண்டுக் காண்க. பிறவும் உளவேற் கொள்க.

---

## உரை நடை

சிற்பத் தொழில் விளங்கும் மதில்கள் சூழ்ந்த அனந்தபற்ப நாபேசத்தின் பெருமையைச் சொன்னோம்; இனி, சராசரங்கள் எல்லாவற்றிலும் நிறைந்த பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கச்சி மயானத்தின் சிறப்பைச் சொல்லுவோம்.

முன்னொருகால் தற்புருட கற்பமென்னும் பிரமகற்பம் சென்று, அதற்குப்பின் வந்த அகோரகற்பத்தில் உயிர்கள் தோன்றித் தழைத்துள்ள நாளில், பண்டாசுரன் என்னும் ஓர் அசுரன் பிரமனைநோக்கித் தவஞ்செய்தனன். அதனால் பிரமதேவன் அவனுக்கு முன்னே தோன்ற, அசுரன் வணங்கி, தேவர் அசுரர்கள் முதலியோர்களது உடம்பிற்கலந்து அவர்களுடைய வீரியமெல்லாவற்றையும் உண்ணுகின்ற வரத்தை அளிக்கவேண்டுமென்றனன். பிரமன் நன்கு ஆராய்ந்து, 'அவ்வாறேயாகுக' என்று கூறிச்செல்ல, அசுரன் எல்லா உடம்புகள்தோறும் உயிருடன் கலந்து வீரியங்களை உண்டிருந்தனன். அதனால் எல்லா உயிர்களும் வருந்தி, ஒளியிழந்து, வளர்ச்சியின்றிக்குறைந்தன.

அவ்வாறே திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும் வருந்தி யாவரும் கைலையை அடைந்து, இறைவனை வணங்கி, 'அடியேங்கள் வீரியமின்றி வெற்றுடம்பாய்த் திரிகின்றோம்' அதற்குக் காரணத்தையும், அதனை நீக்கும் உபாயத்தையும் அறியோம்; அருள் செய்யவேண்டும்' என்று குறையிரந்தனர். இறைவனார் புன்னகை புரிந்து, 'உங்கள் வீரியங்களையெல்லாம் பண்டாசுரன் கவர்ந்தான்; அவன் எல்லா உடம்பிலும் கலந்து இருத்தலால், அவனை எவ்வாறு அழிப்பது?' என்றனர்.

அதுகேட்ட தேவர்கள் திடுக்கிட்டு நடுங்கி, 'முடிவிலாற்றலுடைமை முதலிய எண்குணங்களையுடைய பெருமானே! எல்லாவற்றையும் சங்கற்பமாத்திரையாற் செய்யும் இறைவனே! சமயவாதிகள் பலராலும் பலவகையாகக் கூறி வழக்கிடப்படும் பரம்பொருளே! அழிவதும் ஆவதும் கடந்துநின்ற முதல்வனே! யாங்கள் உனக்கு அடைக்கலம்! அடைக்கலம்!!' என்று சொல்லித் துதித்தனர்.

அதனால் சிவபெருமான் மகிழ்ந்து, 'அவனை அழித்தற்கு ஒருசெயலைச் செய்யவேண்டும், அஃது உங்களுக்கு இசைந்ததாகுமோ?' என்றனர். தேவர்கள், 'உலகங்களைக்காத்தல் எங்கள் இசைவுபெற்றுத் தானே! ஆகையால், வேண்டியவாறே செய்யலாம்' என்றார்கள். சிவபெருமான், 'அங்ஙனமாயின், உங்கள் சரீரமெல்லாம் காஞ்சியில் வேள்வித்தீயிலிடும் அவிப்பொருளாக ஆதக' என்று சொல்லித் தாம் இறைவியாரோடும் காஞ்சியில் எழுந்தருளி, தாம் வளர்க்தெரியும் ஒரு தீப்பிழம்புருவங்கொண்டனர். அப்பிழம்பிற்கு வலப் பக்கத்தில் நகத்தினால் ஒரு குண்டம் உண்டாக்கி, அதில் நெய்யை நிரப்பி, தத்துவங்களையெல்லாம் தருப்பைகளாகவும், முக்குணங்களை வேதிகைகளாகவும் கொண்டு, அம்மையாரோடு தாம் யாகதீக்கை பூண்டு யாகம் செய்யத் தொடங்கினர். பெருமான் வேள்வித்தீயும், வேள்வி செய்வோருமாக அமர்ந்ததனால், எல்லாப் பொருளும் அவனே என்னும் உண்மை விளக்கியவாறும். நிற்க,

சிவபெருமான், பிரமன்முதல் மரங்கள் ஈறாகவுள்ள எல்லா உயிர்களையும் பிரசண்டமாருதம்போல வேகமாக எடுத்தெடுத்து வேள்வித்தீயில் இட்டனர். காலாக்கினி உருத்திரர்முதல் எல்லாரும் தீயில் ஒடுங்கியபிறகு, பண்டாசுரனுக்கு நிலைவேறின்றித் தன் உருவத்துடன் வந்து நின்றனன். அவனையும் அத்தீயின்கண் பெய்தனர். எல்லா உயிர்களும் அத்தீயின்கண் ஒடுங்கி, உறங்குங்கால் அடையும் இன்பத்தைப்போலும் இன்பம் அடைந்திருந்தன. பின்பு அத்தீயானது இலிங்க உருவமாகி, அன்றுமுதல் மயான இலிங்கம் என்னும் பெயரைப் பெற்றது. அவ்விலிங்கத்தில் இறைவனார் அம்மையாரோடும், தம்மை வணங்கினோர்க்கு இருமைப்பயனும் தந்து வீற்றிருந்தனர்.

வேள்வி முற்றியபின், நெய்க்குண்டத்தைச் சிவகங்கை என்னும் பெயரால் தீர்த்தங்களுக்கெல்லாம் முதன்மையான தீர்த்தமாகச் செய்து, இறைவனார் அபவிரதஸ்நானம் செய்தனர். அச்சிவ கங்கையில் அண்டத்தின் அகத்தும் புறத்தும் உள்ள எல்லாத் தீர்த்தமும் பொருந்தும். அத்தீர்த்தத்தில் சிலமுனிவர்கள் முழுகி முத்திபெற்றார்கள். அத்தீர்த்தத்தின் பெருமையை இவ்வளவென்று யாவர் அறியவல்லார்!

# திருவேகம்பப் படலம்

கலிநிலைத் துறை

கல்வித்தமி ழோர்புகழ் கச்சி மயானம் ஈதால்
தொல்லைத்தவத் தீர்இனித் தோமறு சீர்த்தி சான்ற
மல்லல்தலங் கட்கர சாமணித் தெய்வக் கோயில்
செல்வத்திரு வேகம்பஞ் சிந்தையுட் கொண்டு சொல்வாம். க

உலகத் தோற்றம்

மயானச்சுட ரின்வடி வான்மணி வண்ணன் தேறுந்
தியானப்பொருள் ஆக்கைக ளோடும் விராய சிந்தைத்
தயாஅற்ற பண்டன் றனைஅட்டபின் ஆவியெல்லாம்
உயாஅற்றுட லோடிசை யத்திரு உள்ளஞ்செய்து. உ

பகுப்பின்றி மன்னும் பழமாமறை தன்னைநோக்கி
வகுக்கும்படைப் பின்பொருட் டுத்தனி மாவதாகிச்
செருக்குந்திறல் வல்ல மயானத்தின் மேற்றி சைக்கண்
தொகுக்குந்தளிர் பூகனி துன்ற வயங்கு கென்றான். ங

---

க. தமிழ்க்கல்வியோர் என மாறுக. ஏனைய தலங்கட்கு உயிராய்ச்சிறந்த அரியதலமாகலின், 'மல்லல் தலங்கட்கு அரசாம் மணித் தெய்வக் கோயில் - செல்வத் திருவேகம்பம்' எனவும், அதனை நினைந்த உடனே எழுந்த அன்பின் மிகுதியால், 'சிந்தையுட் கொண்டு சொல்வாம்' எனவுங் கூறினர். ஏகம்பம் - ஏகாம்ரம் என்பதன் திரிபு.

உ. மணிவண்ணன் - திருமால். தியானப்பொருள் - தியானித்தற்குரிய பொருள், இறைவன். தியானிக்கற்பாலர் சிவபெருமான் ஒருவரே என்பதை மேலே (பக் உ௯உ, ௯ங) காண்க. விராய-கலந்திருந்த. சிந்தை-உள்ளத்தில். தயா அற்ற - இரக்கம் இல்லாத. உயா அற்று - வருத்தம் நீங்கி. 'தியானப் பொருள், ஆக்கைகளோடும் விராய (வனும்) சிந்தைத் தயாவற்ற (வனுமாகிய) பண்டனை, மயானச் சுடரின் வடிவான் அட்டபின், ஆவி எல்லாம் உடலோடி சையத் திருவுள்ளம் செய்து' எனக் கூட்டுக.

ங. பகுப்பின்றிமன்னும் பழமாமறையாவது எழுத்துக்கள் சிறிதும் பிரிந்துதோன்றாது நிலைபெற்ற சூக்கும வாக்காகிய பரநாதம். அது சுத்தமாயை யின் வேறன்மையால், 'மன்னும்' என்றார். மற்றும் இதன் விரிவைப் பதினெந் தாம் செய்யுளுரையிற் காண்க. தனிமா - ஒற்றை மாமரம்; இதுவே ஏகாம்

வேறு

தாவ ரும்பழ மாமறை தம்பிரான் அருளான்
மேவ ருந்தனிச் சூதமாய் மயானத்தின் மேல்பாற்
பூவ ரும்பிமென் தளிர்கனி புதுமலர் துறுமி
ஓவ ருங்குளிர் நிழல்குலாய் ஓங்கிய தன்றே. ௪

கொன்றை மாலிகைச் சடைமுடிக் குழகன்அங் கதன்கீழ்த்
துன்றும் ஆனந்தப் பேரொளி இலிங்கமாத் தோன்றி
வென்ற நல்லெழில் விரிந்ததன் மெய்இடப் புறத்து
மன்றல் வார்குழல் இலளிதை மாதினை உயிர்த்தான். ௫

வணங்கு நுண்ணிடைக் கிடர்செய மதர்த்துமே லெழுந்த
இணங்கு பூண்முலை இலளிதைப் பிராட்டியும் எழுந்தங்
கணங்கு வெம்பவக் கடலின்நின் றருட்கரை விடுக்கும்
நிணங்கொள் சூற்படை நெடுந்தகை திருவடி இறைஞ்சி. ௬

விளங்கும் ஏகம்பம் மேவிய விமலவிண் ணவர்கள்
துளங்க ஆர்கலி முகட்டுவந் தெழுஞ்சுடு விடத்தைக்
களங்கு லாவஉண் டமைத்தருள் கனகணே எனக்கு
வளங்கு லாவிய அருட்பணி வகுத்தருள் எனலும். ௭

நிரந்த நீள்உல குக்குபா தானம்நீ நிமித்தம்
அரந்தை தீர்த்தருள் செய்யும்யாம் ஆதலின் அணங்கே
கரந்த வையகம் பண்டுபோற் காண்டகு மாறுன்
சுரந்த பேரெழில் வடிவினில் தோற்றெனப் பணித்தான். ௮

---

ரம் எனப்படும். ஏகம் - ஒன்று. ஆம்ரம் - மாமரம். ஏக + ஆம்ரம் = ஏகாம்ரம். அது, பகுதிப்பொருள் விகுதி.

௪. தாவரும் - கெடுதலில்லாத. சூதம் - மாமரம். துறுமி - நெருங்கி.

௫. மெய் இடப்புறத்து - திருமேனியின் இடப்பாகத்தில். இலளிதை மாது - இலளிதை என்னும் தேவி. இலளிதை - மனோகரத்தைச் செய்பவள். உயிர்த்தான் - தோற்றுவித்தான்.

௬. அணங்கு - வருத்துகின்ற. சூலம் என்பதில் அம் தொக்கது.

௮. நிரந்த - நிறைந்த. உபாதானம் - முதற்காரணம். உலகிற்கு உபாதானமாகிய மாயைக்கு ஆதாரமாதல்பற்றிச் சத்தியை உபாதானமாகக் கூறினார். கரந்த - ஒடுங்கிய. தோற்று - தோன்றச்செய்.

அரவும் அம்புலிக் குழவியும் அலையெறி நதியும்
விரவு செஞ்சடைப் பெருந்தகை பணித்தமெய் யருள்தன்
சிரமி சைக்கொடு செறிந்தபல் லுயிர்களும் முறையால்
பரவை நித்தில முறுவலாள் படைப்பவ ளானாள். ௯

எண்க ணாளனை எழில்வலக் கண்ணினும் பதும
வண்க ணாளனை மற்றிடக் கண்ணினும் நுதல்மேல்
ஒண்க ணாளனை நள்ளுடைக் கண்ணினும் உலவாப்
பெண்கள் நாயகி ஈன்றனள் முத்தொழில் பிறங்க. ௧௦

தழங்கும் அங்கியங் கடவுள்கா யத்திரிச் சந்தம்
முழங்கு சீர்இர தந்திர சாமம்முத் தோமம்
பழங்க ணின்மறை யோருட னயத்தினைப் பரிவின்
வழங்கு பேரருட் கருணைகூர் மதிமுகத் தளித்தாள். ௧௧

காமர் இந்திரன் திரையிட்டுப் பெனக்கரை சந்தம்
தோமில் ஐந்துமூன் றுறழ்ந்ததோ மம்பெருஞ் சாமம்
தாம நீள்முடி மன்னவர் அவியினைத் தகைசால்
மாம ணிக்கலன் வயங்குமென் புயத்திடைத் தந்தாள். ௧௨

தக்க விச்சுவ தேவர்கள் சாகதச் சந்தம்
பொக்க மில்வயி ரூபமாம் புகலருஞ் சாமம்

---

௧௦. நள்ளுடை - நடுவிலே உடைய. பிரம, விட்டுணு, உருத்திரர்களாகிய மும்மூர்த்திகளை, முறையே வலக்கண், இடக்கண், நெற்றிக் கண்களில் உண்டுபண்ணினள் என்பதாம்.

௧௧. இருக்கு வேதத்திலுள்ள மந்திரங்கள் இருக்குகள் எனப்படும். அவைகளே இசைகூட்டிப் பாடிற் சாமங்களாம். அவை இரதந்திரம் முதலிய பெயர்பெறும். தோமம் சாமத்திற்கு உறுப்பாவது. முகத்தில் காயத்திரிச் சந்தத்தையும், இரதந்திர சாமத்தையும், மூன்று தோமங்களையும் அந்தணர்களையும் ஆட்டையும் படைத்தனள் என்பதாம்.

௧௨. தோளில், இந்திரனையும், திருட்டுப்புச் சந்தத்தையும், பதினைந்து தோமத்தையும், பிருகத்சாமத்தையும், சத்திரியர்களையும், அவிசையும், படைத்தனள் என்பதாம்.

௧௩. விச்சுவ தேவர்களையும், சாகதச் சந்தத்தையும் வயிரூபசாமத்தையும், பதினேழு தோமத்தையும், பசுக்களையும், வைசியர்களையும், தொடையில் தோற்றுவித்தனள் என்பதாம்.

தொக்க மேன்மையிற் பதினேழு தோமம்ஆன் வணிகர்
இக்கி ளர்ந்தவை முழுவதுங் கவானிடத் தின்றாள். ௪௩

சந்த மாம்அனுட் டுப்புவை ராசமென் சாமம்
வந்த மூவெழு தோமம்வாம் புரவிபின் னவரைச்
செந்த ளிர்ப்பதத் தின்றனள் இவர்க்கொரு தெய்வம்
தந்தி லாமையின் முன்னவர் இவர்தொழுந் தலைவர். ௪௪

ஏனைப் புல்மரம் முதலிய பூதகா ரியமும்
மேனிப் பால்உரோ மங்களின் உயிர்த்துமெய் யன்பின்
ஈனப் பூங்குழல் நாயகி மாந்தரு நீழல்
வானக் கங்கைதோய் முடிச்சடை வள்ளலைத் தொழுதாள். ௪௫

---

௪௪. பின்னவர்-சூத்திரர். முன்னவர் - முதல் மூன்று வருணத்தார்கள். அனுட்டுப்புச் சந்தத்தையும், வைராச சாமத்தையும், இருபத்தொரு தோமத்தையும், குதிரைகளையும், சூத்திரர்களையும், திருவடியில் தோற்றுவித்தனள் என்பதாம்.

௪௫. பூதகாரியம் - உடம்பின் வகைகளும் மற்றைய பொருள்களும். நானம் - கத்தூரி.

ஐந்தொழில் செய்யும் முதல்வன், ஒடுங்கிநின்ற சுத்தமாயையை மீளக் காரியப்படுதற்கு யோக்கியமாம்படி ஞான சத்தி மாத்திரையால் நோக்கி நிற்பன்; அதனால் கலக்குண்ட பாகமாகிய சிவதத்துவத்தை இடமாகக் கொண்டு சிவனென நின்று, மேற்செயல்களைச் செய்வன். மேற்செயல்களாவன: சூக்கும இச்சா ஞானக் கிரியா சத்திகளோடுகூடிச் சத்திதத்துவத்தில் நின்று, தூலவைந்தொழிற்கு ஏதுவான சூக்கும ஐந்தொழில் செய்தலும், தூல இச்சா ஞானக் கிரியா சத்திகளோடு கூடிச் சதாசிவதத்துவத்தில் நின்று இருவகைப் பிரபஞ்சத்தையும் தோற்றுவித்தற்கு உன்முகமாய் நிற்றலும்; பின்னர் ஈசுரதத்துவத்தில்நின்று சுத்தப் பிரபஞ்சங்களைத் தோற்றுவித்தலும்; சுத்த வித்தையில் நின்று, அநந்ததேவர், உருத்திரன், மால், அயன் என்னும் இவர்களை அதிட்டித்து மிச்சிர அசுத்தப் பிரபஞ்சங்களைத் தோற்றுவித்தலுமாம். இப்பொருள், 'பகுப்பின்றி மன்னும்' என்னும் செய்யுள்முதல் இச் செய்யுள்காறும் குறிக்கப்பட்டது. எங்ஙனமெனில், கூறுதும்:

'பகுப்பின்றி மன்னும் பழமாமறை தன்னை நோக்கி' என்றது, சுத்த மாயையை ஞானசத்தி மாத்திரையால் நோக்கி எனவும், 'மாவதாகித் தளிர் பூ கனி துன்ற வயங்கு கென்றான்' என்றது, சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களாகச் செய்தனனெனவும், 'இலிங்கமாத் தோன்றி இலளிதை மாதினை

தொழுத நங்கையைத் தூமடித் தலமிசைக் கொண்டு
முழுது மாகிய முன்னவன் மாந்தரு நிழற்கீழ்
விழும ணித்தவி சும்பரின் விளங்கிவீற் றிருந்தான்
கழுமல் நீங்கிஎவ் வுயிர்களுங் களிப்பொடு வாழ்ந்த. ௧௧

௧௧. விழுமணி - உயர்ந்தமணி, மாணிக்கம். கழுமல் - துன்பம்.

உயிர்த்தான்' என்றது, வித்தைக் கேதுவாகிய ஈசுரனாய் நின்று ஞானசத்தியை மிக்குச் செலுத்திப் பிரவிருத்தி செய்தனன் எனவும், இலளிதை மும்மூர்த்திகளைப் படைத்து, சந்தம் தோமம் முதலியவற்றையும், தேவர்கள் முதலியோரையும் படைத்தாளென்றது, அநந்ததேவர் முதலியோர்பால் இறைவனது சத்தி பதிந்துநின்று அசுத்த மாயையிலும் பிரகிருதி மாயையிலும் உபாதி வயத்தால் தூலமாயும் அதிதூலமாயும் நிற்கும் நால்வகை வாக்குக்களாகிய சொற்பிரபஞ்சங்களையும், ஏனைய பொருட்பிரபஞ்சங்களையும் தோற்றுவித்ததெனவும் கூறியவாறும்,

எனவே, 'பழமாமறை தன்னைநோக்கி' என்றதனால் சிவதத்துவ நிலையும்; 'தளிர் பூ கனி துன்ற வயங்குகென்றான்' என்றதனால், முறையே சத்தி, சதாசிவம், ஈசுரம், என்னும் தத்துவ நிலைகளும்; 'இலிங்கமாத் தோன்றி...... இலளிதை மாதினை உயிர்த்தான்' என்றதனால், சுத்தவித்தியா தத்துவ நிலையும் பெறப்பட்டமை காண்க. வைகரி வாக்கானது அதிதூலமாய்த் தோன்றும்பொழுதே நம்மனோர்க்கு மொழிவேற்றுமை காணப்படுதலின், எம்மொழியில் எந்நூல் சிறந்ததாகக் கொள்ளப்பட்டு வருகின்றதோ அந்நூலாகிய மறையையே இறைவன் சத்தி தோற்றுவித்ததாக அம்மொழியிற் கூறுதல் இயல்பு. அவ்வாறே ஈண்டு ஆரியவேதத்தைத் தோற்றுவித்ததாகக் கூறப்பட்டது. எனவே, வேதமாமரம் என்றதிற் கூறப்படும் வேதம் பகுப்பின்றி மன்னும் பழமாமறையாகிய பரநாதமாகலின், ஆண்டு இன்ன மொழி இன்னநூலென்னும் வேற்றுமை இன்றென்க. அப்பழமாமறை இறைவனால் பக்குவமெய்திய பெருமக்கட்குப் புறத்தே நின்று ஓதவும், உள்நின்று உணர்த்தவும் படுமென்க. உள்நின்று உணர்த்த அப்பரநாத ஒலியால் கேட்டுணர்ந்த பெருமக்கள் அதனைப் பின்னர் மக்கட்கு எம்மொழியிலாயினும் வெளிப்படுத்துவர். ஆதலின், அவைகள் மறைகள் எனப்படும். இது பற்றியன்றே அருளாசிரியர்கள் ஆணையாகக் கூறிய மொழிகளை, "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த - மறைமொழி தானே மந்திர மென்ப" (தொல். பொருள் ௪௯௰) எனத் தொல்காப்பியனாரும், "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து-மறைமொழி காட்டிவிடும்" (குறள். ௨அ.) எனத் திருவள்ளுவ நாயனாரும் 'மறை' என்று அருளிச் செய்தனர் என்க. எனவே, வேதமா

மூவர் வரம்பெறல்

அந்த ணாளன்முன் மூவரும் இலளிதை யவள்பால்
வந்த மாத்திரை யேதுயின் றெழுந்தவர் மான
முந்தை வாலறி வெய்தினர் முதல்வி தன் பதமும்
எந்தை பாதமுந் தொழுதெழுந் திறைஞ்சினர் தெடுப்பார். ௧௭

அறுசீரடி யாசிரிய விருத்தம்

காங்கவெண் புணரி கான்ற தழல்விடம் பருகி எம்மை
இரங்கிஅன் றளித்தாய் மற்றும் இன்றொரு பண்டன் றன்னால்
உரங்கெழும் அடியேம் ஆவி முழுவதும் உய்யக் கொண்டு
வரங்கிளர் கருணை கூர்ந்த வள்ளலே போற்றி போற்றி. ௧௮

சைவச்செந் தழலின் யாங்கள் ஆகுதிச் சமிதை யாகச்
செய்வித்து வேள்வி யாற்றுஞ் சிவபிரான் அருளி னாலே
உய்வித்து மீள எம்மை உதவிய கருணை நாட்டத்
தெய்வப்பூங் கொம்ப ரன்ன செல்வி நின் சரணம் போற்றி. ௧௯

அம்மையாய் அப்ப னாகிக் குருவுமாய்த் தெய்வ மாகிச்
சும்மைநீர்க் காஞ்சி வைப்பின் இருவகை உருவு தோற்றி
எம்மையும் ஆண்டு கொண்ட இருமுது குரவீர் அன்பர்
வெம்மனச் சுரும்பு வீழும் விரைமலர்ப் பாதம் போற்றி. ௨௦

மைந்தர்கள் குழறிப் பேசு மழலைமென் கிளவி வேட்கும்
தந்தையுந் தாயு மென்னத் தமியரேம் புகழ்ச்சி கொண்டு

---

௧௭. அந்தணாளன் முன் - பிரமன் முதலாகிய. முந்தை - வேள்வித் தீயிற்புகுமுன்னர்ப் படைத்திருந்த. வாலறிவு - தூய அறிவு.

௧௮. வரங்கிளர் - மேன்மை மிகுந்த. இஃது இறைவன் வணக்கம்.

௧௯. சைவத்தழல் - சிவாக்கினி. இஃது இறைவி வணக்கம்.

௨௦. அம்மை - தாய். அப்பன் - தந்தை. சும்மை - முழக்கம். இருவகை உருவு - நாயக நாயகி வடிவம். இருவகை உருவு தோற்றி என்றமையால், பொருள் ஒன்றே என்பது பெறப்படும். வெம்மனம் - விருப்பம் பொருந்திய மனம்.

---

மரம் என்பது பாநாதமென்றுணர்க. இவ்வாறே பிருண்டும் வேதகிரி வேதநாபுரம் என்றும், வேதம் ஓதுவித்தான் என்றும் வருவனவும் இக்கருத்துப் பற்றியனவே என்றுணர்க.

புந்திமிக் குவகை பூப்பத் திருவருள் புரியீர் என்று
கைந்திரு விழிநீர் சோர நயந்திருந் துதிகள் செய்தார். ௨௧

மடங்கருங் காதல் மேன்மேல் வளர்ந்தெழக் குடந்தம் பட்ட
முடங்குகால் ஞிமிறு பாயும் முண்டகத் திறையை மாலை
அடங்கமூ வுலகும் நீற்றும் அண்ணலை அருளின் நோக்கி [ன்
விடங்கனி மிடற்றுப் புத்தேள் வேட்டதென் உரைமின் என்று

அவ்வண்ணம் அருளிச் செய்யக் கேட்டவர் அறைத லுற்றார்
கவ்வெனுங் கமலத் தோனும் அவ்வெனுங் கரிய மாலும்
மவ்வெனும் அரனு மாய மற்றெமை விழியின் ஈன்ற
இவ்வன்னை காமக் கண்ணி எனப்பெயர் பெறுக மன்னோ. ௨௩

சேந்தமென் தளிர்கள் கோதித் தீங்குயில் இனிது கூவும்
ஏந்திணர்ச் சாகை தோறும் இளநறு ஒழுக்கி வாசப்
பூந்துகள் உகுத்துச் சிதப் புதுநிழல் விரிக்குந் தெய்வ
மாந்தரு வடியின் நீவிர் வைகலும் வதிக என்றார். ௨௪

தவளவெண் ணீற்று மேனித் தலைவன்அவ் வரங்கள் நல்கி
இவறிமற் றவர்கள் மீட்டும் இணைக்கரங் குவித்து வேண்டப்
புவனம்ஓர் மூன்றும் உய்யப் புதுநிழல் மாவின் மூலத்
தவிர்ஒளி மயமாய்த் தோன்றும் அருட்குறி மேன்மை விள்ளும்

திருவேகம்பப் பெயர்மாட்சி

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இன்னி சைச்சுரும் புளர்மலர்த் தொடையல் இணங்கு தோட்
டுணை மைந்தர்காள் கேண்மின், மன்னு ருத்திரன் ஒருவனே பிரமம்

---

௨௧. கிளவி - சொல். வேட்கும் - விரும்புகின்ற. தமியரேம் - வேறு பற்றுக்கோடில்லாத எம்முடைய.

௨௨. குடந்தம் படுதலென்பதைமேலே (பக் ௨௪௮, ௪௯.) கூறினும்.

௨௩. அவரென்றது மும்மூர்த்திகளை. இச்செய்யுள், மேல் வீராட்டகாசப் படலத்தின் ௩௮ ஆம் செய்யுளின் பொருளையுடையது.

௨௪. சேந்த - சிவந்த. இணர் - பூங்கொத்து. சாகை - கிளை. இணர் ஏந்து சாகை என்க. பூந்துகள் - மகரந்தப்பொடி.

௨௫. தவள வெண்ணீறு - மிக்க வெண்மையுடைய நீறு. இவறி - விரும்பி. மற்று, வினைமாற்று. அவிர் - ஒளிவீசுகின்ற. ஒளிமயமாய்த் தோன்றும் அருட்குறி - சோதி லிங்கம்.

ஒன்று மற்றிலை என்பது துணிபால், பன்னு மெய்ப்பொருட் பிரம
மாம் வேதம் ஒற்றை மாவெனப் பணைத்தது கண்டீர், அன்ன தற்
கிறையாகிய யாமே இலிங்க மாய்அதன் அடித்தலத் துறைகேம். ௨௬

ஏதம் நீக்குசொல் வடிவினுந் தனிமா எனப்ப டுந்தரு வடிவி
னும் அதற்கு, நாதர் யாமெனத் தெளிமின்இங் கெமது நாமம் ஏகம்ப
நாதன்என் றுரைப்ப, ஆதி மந்திரம் அஞ்செழுத் திதுவே ஐம்பெ
ருங்கொடும் பாதகம் அறுக்கும், ஓதும் ஐவகைப் பிரமமந் திரத்
தும் அஞ்செ ழுத்தினும் உயர்ந்ததிம் மனுவால். ௨௭

---

௨௬. மற்று ஒன்று இலை - வேறொரு பொருளும் பிரமமாவதில்லை;
எனவே, பிரமமன்று என்பதாம். மெய்ப்பொருட் பிரமமாம்வேதம் - மெய்ப்
பொருளையுடைய பிரமமென்னும் பெயரையுடைய வேதம். பணைத்தது -
கிளைத்தது. அன்னதற்கு - அவ்வேதத்திற்கு. இறை - தலைவன்.

௨௭. இங்ஙனம் வேதம் மாமரமாகவும், யாம் அதன்கீழ் இலிங்கமா
கவும் இருத்தல் இதனைத் தெளிவித்தற்கென்பார், 'சொல்வடிவினும் தருவடி
வினும் அதற்கு (அவ்வேதத்திற்கு) நாதர் யாமெனத் தெளிமின்' எனவும்,
அங்ஙனம் தெளியுமாறு அப்பொருளமைந்த பெயரே எமது பெயரென்பார்,
'எமது நாமம் ஏகம்பநாதன் என்றுரைப்ப' எனவும். வேதத்திற்குத் தலை
வன் என்பது, உலகைத் தோற்றுவிக்கும் முதல்வன் என, யாம் உலகிற்கு
ஆதியாதலை உணர்த்தி, ஆதிகாலத்துப் பெயராய் நிற்றலால், முதல்மந்திரம்
என்பார், 'ஆதிமந்திரம் இதுவே' எனவும், மந்திரங்களுட் சிறந்த பஞ்சாக்
கரம்போல இதுவும் ஐந்தெழுத்துக்களை உடையதென்பார், 'அஞ்செழுத்து
இது' எனவும் அருளினர். தரு - மரம். பாதகம் - மலம். ஐந்துமலம்: ஆணவம்,
மாயை, கன்மம், மாயேயம், திரோதானம். உயிர்கள் பக்குவமெய்திப்
படிமுறையானே சரியை முதலிய நெறிகளில்நின்று ஆசிரியன் வாயிலாக
ஞானத்தை அடைந்து ஐந்தெழுத்தின் புணைபிடித்துப் பிறவிக்கடலைக் கடந்து
அடைதற்குரிய முத்தியை, தீர்த்தம், மூர்த்தி தலங்களால் எளிதிற் பெறலா
மென, அதற்கு மேலுள்ள படிகளைக் கூறாது ஞானத்திற்கு முதற்படியாகிய
சரியைத் தொண்டில் சாமானியர்களை வரச்செய்தற்குத் தீர்த்தம் முதலிய
மூன்றனை இறப்பவுயர்த்திக் கூறுதலும் தலபுராணங்களின் இயல்பாகலின்,
ஈண்டும் ஏகம்பநாதன் என்பது திருவைந்தெழுத்தினும் உயர்ந்த தென்று
கூறப்பட்டது. ஏகம்பநாதன், 'ஏகாம்ரநாத:' என்னும் வடசொல் திரிபு.
இதனுள் ஒற்று நீக்கி ஐந்தெழுத்தாதல் காண்க.

விதிவ மூதபல் லுறுப்புடை மறையின் மிக்க தாகுங்காயத்திரி அதனின், அதிகம் அஞ்சமா மந்திரம் அதனின் ஆறி ரண்டெழுத் ததனின்எட் டெழுத்தாம், பதியும் மேன்மைஎட் டெழுத்தின்அஞ் செழுத்துக் கோடி கோடிமேம் பட்டதஞ் செழுத்தின், நதனும் ஏகம்ப நாதமா மனுத்தான் நூறு கோடியின் மிக்கதென் றுணர்வீர்.

அன்ன தன்மையின் மனுஎவற் றினுக்கும் அதிகமாகிய ஏகம்ப நாதன், என்னும் மந்திரம் இயம்புநா வுடையாற் கிப்பி றப்புறும் பெரும்பயன் எய்தும், பன்ன ரும்பெருங் கீர்த்தியும் ஊக்கப் பாடும் ஆக்கமும் ஆயுளும் வளரும், மன்னு கல்வியுங் கேள்வியும் ஒழுக்கும் வழுக்கி லான்அவ னேஎனத் துணிவீர். உ௯

கன்னி தந்தைதாய் வேதியர்ச் செகுத்தோர் கள்ளு மாந்துநர் கள்ளுநர் குரவன், பன்னி மாணலம் விழைந்தவர் மற்றைத் தீர்வு காணரும் பழிவினை விளைத்தோர், என்னர் ஆயினும் ஏகம்ப நாதன் என்னும் மந்திரம் ஒருமுறை கணிப்பின், துன்னும் வெங்கொடும் பாதகம் அனைத்தும் துனைவின் அங்கவர் தம்மைவிட் டோடும். ௩0

அறப்பயன்பொருள் இன்பம்வீ டென்று அனைத்தும் ஓதுநர்க் களிக்கும்இம் மனுவை, இறப்ப வந்துமுற் றிரும்பசிப் பிணியின் ஈண்டி ஆருயிர் கவற்றும்வல் லிடரின், மறப்பி னுயினுங் கிளக்கவல் லுநரே மற்றெ மக்குமிக் கினியவர் கண்டீர், சிறப்ப இம்முறை மனுஇதன் பெருமை தெரிந்து கூறினர்க் கின்பவீ டளிப்பேம். ௩௧

---

உ௮. பல்லுறுப்பு - பஞ்சாதி முதலிய பல உறுப்புக்கள். காயத்திரி மந்திரத்தை ௬௯0ஆம் பக்கத்திலும், அஞ்ச (அம்ச) மந்திரத்தை ௧0௬ஆம் பக்கத்திலும் மேலே காண்க. ஆறிரண்டெழுத்து, 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' எனவும், எட்டெழுத்து 'ஓம் நமோ நாராயணாய' எனவும் கூறுவர். அஞ்செழுத்து - பஞ்சாக்கரம்.

௩0. கள்ளுநர் - களவு செய்வோர். குரவன் பன்னி - குருபத்தினி. தீர்வு - கழுவாய், பிராயச்சித்தம். துனைவு - விரைவு.

௩௧. என்று, எண்ணிடைச் சொல். இறப்ப முற்று - மிகவும் பற்றுகின்ற. பசிப்பிணியினுயினும், வலிய இடரினுயினும் கிளக்க வல்லுநரேல் என்க. கிளத்தல் - சொல்லுதல். எச்செயலையும் அதன் உண்மையறிந்து செய்யின் பெரும்பயன் விளையுமாகலின், 'மனுஇதன் பெருமை தெரிந்து கூறினர்க்கு இன்பவீ டளிப்பேம்' என்றருளினர்.

என்று மாவடி முளைத்தெழுந் தருளும் இலிங்க மேன்மையை எடுத்துரைத் தருள, ஒன்றும் ஆனந்த உததியின் மூழ்கி ஒன்ன லார்குடர் குழம்பியுள் வெதும்ப, வென்ற சூர்ம்படைத் தாணுமா லயனு விளம்பு மூவரும் விரைத்தபூந் தொடையல், கொன்றை வார்சடை முதல்வனுர் கமலக் கொழும லர்ப்பதந் தொழுதுபோற் றிசைத்து. ௩௨

காட்டின் நாடகங் குயின்றருள் இறைவ கம்ப மேவிய கருணையங் கடலே, மோட்டு நீர்ப்புவி வியத்தகும் இனைய முதுந கர்ப்பெருந் தன்மையுந் தனிமா, ஈட்டு மேன்மையும் எமக்குரைத் தருளாய் என்று வேண்டலும் ஈர்ந்துணர் இதழித், தோட்டு மாலிகைச் சடைமுடிக் குழகன் சொன்ன கர்த்திறங் கேண்மின்என் றியம்பும். ௩௩

காஞ்சித் திருநகர் மாட்சி

கறங்கு வண்டிமிர் கமலமுந் துழாயுங் கடுக்கை மாலையுந் துயல் வரு புயத்தீர், பிறங்கு கவ்வெனும் மொழிப்பொருள் பிரமம் பிரம மானயாம் அஞ்சிக்கப் படலால், உறங்கி டாப்புகழ்க் காஞ்சிஎன் றுரைக்கும் ஒருதி ருப்பெயர் எய்தும்இந் நகரம், அறங்க ரைந்தநூல் எமைப்பரம் பிரமம் அகில காரணம் என்பது தெளிவீர். ௩௪

இலகு வாணகை அரிமதர் மழைக்கண் இருண்ட வார்குழல் வேய்மருள் பணைத்தோள், கலப மாமயில்இயல்எழில் மடவார் உந்தித் தானத்தைக் காஞ்சிஎன் றுரைப்ப, சுலவு வெண்டிரைப் பனிக்கடல் உடுக்கைத் தொல்லை நானில மடக்கொடி தனக்குக், குலவு காஞ்சி நற் றானமாய்ப் பொலிந்த கொள்கை யானும்அத் திருப்பெயர் வழங்கும். ௩௫

---

௩௨. உததி - கடல். ஒன்னலார் - பகைவர். சூர்ம்படை என்றது சூலத்தை. தாணு - உருத்திரன்.

௩௩. குயிலுதல் - செய்தல். கம்பம் - திருவேகம்பம். மோட்டுநீர் - மிகுந்த நீர். ஈட்டு - மிகுந்த.

௩௪. காஞ்சி என்பது க, அஞ்சி எனப் பிரிக்கப்பட்டு, க - பிரம மாகிய இறைவன்; அஞ்சி - அஞ்சிக்க (வழிபட)ப்பட்டிருக்கும் தலம் எனப் பொருள்தரும் என்பதாம். நூல் என்பது என இயையும்.

மற்றுங் கவ்வெனல் சென்னியோ டின்ப மலர வன்றனே உணர்த்தும்அஞ் சித்தல், சொற்ற பூசனை அடைவுமாம் யாருஞ் சென்னி மேற்கொடு தொழத்தகுஞ் சிறப்பால், பற்றி வைகுநர் பேரின்பம் உறலாற் பங்க யத்தவன் வழிபட லானும், பெற்ற தாகும் இத் திருப்பெயர் இதனற் பிரம லோகம்என் றுரைக்கவும் படுமால்.

வீடு பேற்றினர் தேவர்என் றுரைப்ப விழையும் இந்நகர் வரைப் பிடை வீடு, கூடும் வாழ்க்கையர் நிறைதலின் தேவ புரமெ னப்படுங் கொடுவினைத் திறத்தால், பாடு சான்றபோர் புரிவருந் தகவின் அயோத்தி என்னவும் பகரும்இந் நகரம், நீடு மன்னவர் உறைதரும் அயோத்தி நிகழும் முத்தருக் குறைஇடம் அன்றல். ௩௭

சுவர்க்கம் எய்தினர் தேவர்என் றேதுஞ் சுருதி யால்அது நாகரா டன்று, நவிற்று ருத்திர லோகமே சுவர்க்க மாகும் ஆதலின் நலங் கெழுஞ் சோதி, நிவக்கும் என்றிடும் அயோத்திநீள் பிரம லோகம்

---

௩௬. இனி, க என்பது சிரசெனவும், பிரமன் எனவும் பொருள்தருமாக லான், க அஞ்சி - யாவரும் சிரமேற்கொண்டு தொழப்படுவது எனவும், பிரமனல் அஞ்சிக்கப்பட்டது எனவும் பொருள்தரும் என்பதாம். பிரமன் வழிபட் டமையாற் பிரமலோகமெனவும்படும் என்பதாம். இதன் பிற்பகுதிப்பொருள் மேலே தலவிசேடப் படலத்திலுங் கூறப்பட்டமை காண்க. (செ. ௨௭)

௩௭. வீடுபேறடைதற்குரிய சிவன் முத்தர்கள் வாழ்தலால் இது தேவ புரம் எனப்படும் என்பதாம். இதனுள், தேவர் வாழ்வதன்றே தேவபுரமா கும் என்னும் கடாவை ஐயுற்று, தேவர் என்பதற்குச் சிறந்தபொருள் வீடு பேற்றிற்குரியவர் என்பதே என மறுப்பார், 'வீடுபேற்றினர் தேவரென் றுரைப்ப'என்றார். உரைப்ப - (அறிந்தோர்) சொல்லுவர். இதனல், சாமா னியப் பொருள்பற்றி, சில புண்ணிய விசேடத்தால் தேவரானோர் வாழ்தல் பற்றித் தேவபுரம் எனப்படும் விண்ணுலகத்தினும் இது சிறந்ததென்பதும் பெறப்பட்டவாறறிக. பின்னர், யாவராலும் போர்புரிந்து வெல்லுதற்கரி தாதலால் அயோத்தி யெனவும்படும்; ஆனல், அயோத்தி அரசர்களுக்கிடமாத லால் பகைவரால் வெல்லப்படாது; இது சிவன் முத்தருக்கிடமாதலால் வினைத்திறத்தால் வெல்லப்படாது; அதனல் வாழ்வோரை நோக்க அயோத்தி தாழ்ந்தது; காஞ்சி உயர்ந்த தென்பதாம். அயோத்தி - போர்செய்யப் படாதது. யோத்தி - போர்செய்யப்படுவது.

௩௮. மேலைச் செய்யுளில் தேவராவார் வீடுபேற்றினரே என்றமையால், 'சுவர்க்கமெய்தினர் தேவர்' என்பதில் சுவர்க்கமென்பதற்குப் பொருள் உருத்

நீடொளித் தேவமா புரமும், புவிக்குள் மேதகு காஞ்சியே யன்றிப் புவனம் மூன்றினும் வேறிலை கண்டீர். ௩அ

இந்தி ருப்பெருங் காஞ்சியின் எம்மை மறலிக் கஞ்சுநர் இகபரம் விழைந்தோர், நித்தம் அன்பொடு வழிபடூஉப் பழிச்ச நிறைந்த பேரருட் கருணைபூத் துறைகேம், மெய்த்த மாமறை முழுதும்இவ் வாறு விளம்பும் ஆதலின் மற்றெமக் கினிய, உத்த மப்பதி இது எனத் தெளிமின் ஓங்கு மாந்தருப் பெருமையும் உரைப்பாம். ௩கூ

மாந்தருவின் மாட்சி

மீது மன்னிய மூலமுங் கிழக்கு நோக்கு சாகையு மாய்விரை கமழும், பாத வந்தனை உணர்ந்தவன் வீடு பற்றும் ஆங்கது பலகனி படைத்துச், சீத வார்புனல் ஒழுக்கறுக் கம்பைத் திருந திக்கரை மருங்கொலி வேதச், சூத மாமர மெனத்திகழ்ந் தொளிருந் தொல்லை வையகம் பெரும்பயன் படைப்ப. ௪௦

---

திர லோகமெனப்படும் சிவலோகமேயாகுமாதலின், அதுபோல, போர்செய் யப்படாமையால் அயோத்தி யெனவும், பிரம சம்பந்தமுடைமையால் பிரம லோகமெனவும், தேவர்கள் வாழ்தலால் தேவபுரமெனவும் கூறப்படுவன வேறிடங்களல்ல காஞ்சியே என்பதாம். வானவர் தேவரெனப்படுதலும், அவருலகம் சுவர்க்கமெனப்படுதலும் உபசாரமாக, உண்மையில் தேவரெனப் படுவார் வீடு பேற்றினரும், சுவர்க்கமெனப்படுவது சிவலோகமுமாதல்போல, போர்செய்யப்படாமை முதலிய காரணத்தால் அயோத்தி முதலியனவாகச் சொல்லப்படும் மூன்றும் வேறிடங்களாதல் உபசாரமாக, உண்மையில் அவை யாவும் காஞ்சியே என்றபடி. நாக நாடு - விண்ணுலகம். உருத்திர லோகம் - சிவலோகம். ஒளி நிவக்கும் என்றிடும் - ஒளி ஓங்கி எழுமென்று சொல்லப் படுகிற.

௩கூ. மறலி - இயமன். இக பரம் - இம்மை மறுமை இன்பங்கள். பழிச்ச - துதிக்க. மாந்தரு - மாமரம்.

௪௦. மீது மன்னிய - மேலே பொருந்திய. மூலம் - வேர். கிழக்கு - கீழ். சாகை - கிளை. பாதவம் - மரம். ஒருசொல்லின் தன்மைப்பட்டு நின்ற ஆங்கது என்பது, மாந்தரு என்றதைச் சுட்டிற்று. வேதச் சூதமா மெனத் திகழ்ந்தொளிரும் என்க. படைப்ப ஒளிரும் என இயையும். அம் மாமரத்தை வேர் மேலாகவும் கிளை கீழாகவும் உள்ளதாகப் பாவித்தவர் வீடு பெறுவர் என்பதாம். வேதம் மேலதாகிய நாதத்தினின்றும் தோன்றி அதன் கீழுள்ள விந்துவின் காரியமாய் நிற்றலால் அங்ஙனம் பாவித்தல் அதன்

ஏழி ரட்டிய கல்வியும் அதன்மேல் மல்லி கைக்கொடி எனப் படர்ந் தமரும், பாழி விச்சைகட் கிறைவியாங் காமக் கண்ணி அத் தரு பசுங்கொடிக் கினியாள், ஊழி ஈற்றினும் உலப்பருந் தகைசான் ருேங்கு மாவினுக் குரிமையம் யாமே, ஆழி ஏந்திய நாரணன் விரிஞ் சன் அரன்என னப்படும் அன்புடைப் புதல்வீர். சக

மாறி லாமறை எமது வாசகமாம் வாசகத்தோடு வாச்சியந் தனக்கு, வேறு பாடில்லை ஆதலின் எமக்கும் இனைய மாவிற்கும் வேறுபா டில்லை, ஈறி லாஇதன் மூலத்தின் என்றும் இலிங்க மூர்த்தி யாய் உறைகுதும் நெருநல், காறும் யாவரும் கண்டிலர் இந்நாட்கவுரி யோடுநீர் காணவீற் றிருந்தேம். சஉ

அகில நாமமும் எமக்குரிப் பெயராம் அவற்றி னும்பவன் முதற் பெயர் சிறப்பாத், தகும்அ வற்றினுஞ் சம்புவே மயோபு சங்க ரன் மயக் கரன்சிவன் மற்றை, இகழ ருஞ்சிவ தரனெனும் பெயர்கள்

---

உண்மை உணர்தலாகும். சிவபூசையில் உடலை ஆலமரமாகப் பாவித்துச் செய்யும் ஒருவகைப் பூத சுத்தியிலும் தோற்ற முறைபற்றி வேர் மேலாக வும் கிளை கீழாகவும் பாவிக்கப்படுதலும் அறிக.

சக. ஏழ் இரட்டிய கல்வி - பதினான்கு வித்தை. வித்தை பதினெட்ட னுள் வேதம் நான்கும் மாமரமாயினமையின், ஏனைய பதினான்கும் மல்லி கைக்கொடி ஆயின. வேத மாமரத்திற்குத் தாம் தலைவராயினமையின், ஏனைய வித்தைகளாகிய கொடிக்கு அம்மையார் தலைவராயினர் என்க. வித்தை பதினெட்டும் மேலே (பக். கதூஎ.) காண்க.

சஉ. எமது வாசகம் - எம்மைப் பொருளாக உடைய வாசகம். வாச கம் - சொல். வாச்சியம் - பொருள். சொல்லும் பொருளும் வேறேயாயி னும், சொல்வந்தெழலும் பொருள் தோன்றுதல்பற்றி அபேதமென்பார் மதத்தை ஒருவாற்ருன் உடம்படுதலும் உடைமையின், 'வாசகத்தொடு வாச் சியந்தனக்கு வேறுபாடில்லை' என்றூர். வேறுபாடில்லை என்புழி 'அதனல்' என ஒருசொல் வருவித்துரைக்க. இவ்வேதமாமரமும், அதனடியில் யாம் இலிங்க வடிவமாக எழுந்தருளியிருத்தலும் என்றும் இருப்பினும் நெருநல் காறும் யாருக்குங் கட்புலனுயினவல்ல என்பார், 'நெருநல்காறும் யாவருங் கண்டிலர்' என்றூர்.

சங. எல்லாப் பெயரும் இறைவனுக்குரிய பெயரே என்பதை மேலே (பக். உகூக.) விளக்கினும். பவன் முதலிய பெயர்களினும் சம்பு, மயோபு

இனிய வாகும்அங் கெவற்றினும் மேலாய்ப், புகழ்ப டைத்தவ காம் பர நாதன் எனப்பு கல்பெயர் எமக்குமிக் கினிதாம். ௪௩

இன்ன தன்மையிற் கான்முளை முதலோர்க் கித்தி ருப்பெய ரிட் டழைப் பவர்க்குத், துன்னும் வல்வினை முழுவதும் அகலத் தொலைத்து முத்தியும் செல்வமும் அளிப்பேம், பன்ன ருந்தனி மந் தணம் உமக்குப் பகர்ந்து ளேமெனப் பண்ணவன் இறுப்ப, அன்ன மூவரும் உவகைமீக் கிளைப்ப அம்மை அப்பரை வணங்கிவே றுரைப் பார். ௪௪

கம்பாநதி மாட்சி

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கன்னி மாநதி கம்பை ஒன்றிவண் உள்ள தென்றருள் செய் தனை, இன்ன கார ணம் என்று தேறிலம் இறைவ னேஎன எம்பிரான், முன்னெ முந்து மதர்த்து வீங்கி முகிழ்த்த மென்முலை அம்பிகை, தன்னை நோக்கி மகிழ்ந்து மைந்தர்கள் கேண்மின் என்றது சாற்று வான். ௪௫

வடிவம் எட்டு நமக்க மைந்தன மறைஉ ரைக்கும் அவற்றுள் ஓர், வடிவ மாப்புனல் உலகெ லாம்இது தூய்மை செய்யும் வனப் பது, வடிவம் உற்றவர் உயிர்த ளிர்ப்ப வழங்குமற்றிது மாநதி, வடிவு கொண்டிவண் ஒழுகு கின்றது மன்னு யிர்த்தொகை உய்யவே. ௪௬

இந்த திப்புனல் எம்மை நேர்வ யார்வி ழிக்கும் அகப்படா, துன்ன ருஞ்சிவ யோக சிந்தையுள் யாம்உ றைந்திடு மாறுபோல்,

---

சங்கரன், மயக்கரன், சிவன், சிவதரனென்னும் பெயர்கள் சிறந்தன; அவற்றி னும் ஏகாம்பரநாதன் என்பது சிறந்ததென்பதாம். 'மயக்கான்' என்னும் பாடம் சரியன்று.

௪௪. கான்முளை - புதல்வன். மந்தணம் - இரகசியம். இறுப்ப - விடை கூற. வினு, மேலே ௩௩ ஆம் செய்யுளிற் காண்க.

௪௫. கன்னி - அழியாமை. நதியை ஆண்டுக் காணுமையின், 'இன்ன காரணமென்று தேறிலம்' என்றார். அதனைக் கூறவேண்டுமென்பது குறிப் பெச்சம். இலளிதா தேவியார்க்கு அது தெரியுமாதலின், அவரது முகத் தைப் பார்த்து நகைத்துப் பின்னர்க் கூறுவாராயினர் என்க.

௪௬. இறைவன் எட்டுருவை மேலே (பக். ௨௦௮.) காண்க. வடிவ முற்றவர் - உடலெடுத்தவர். வழங்கும் - நடக்கும். மற்று, வினைமாற்று. இது - இத்தகையநீர்.

வன்னி லத்தின் அகத்து வார்ந்து வழங்கு கின்றது காண்மினே,
கன்னி யாறிது கம்பை என்றொரு கார ணப்பெயர் பெற்றதே. சஎ

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பன்னுபா என்றல் தூய்மை பருகுதல் காப்புங் கூறும்
கன்னிவான் கங்கை யாதி கம்மெனும் புனல்கள் தம்பால்
துன்னிமூழ் குநர்வெம் பாவத் தொகுதிமெய் அழுக்குந் தீரத்
தன்னிடை முழுகித் தூய்மை தாங்கலாற் கம்பை என்ப. சஅ

கம்மெனுஞ் சிரமேல் தீண்டின் தூய்மைசேர் கவினால் உண்டோர்
கம்மெனும் ஆவி தம்மைக் காத்தலான் மூழ்கி னோரைக்
கம்மெனும் பெருவீட் டின்பம் நுகர்விக்குங் காட்சி யானும்
கன்மநோய் அறுக்கும் இந்தத் தடநதி கம்பை யாமால். சகூ

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கங்கை மாநதி யமுனை வாணி முதல்க வின்பெறு நதியெலாம்
பொங்கு வெண்டிரை எற்று கம்பை நறும்பு னற்கிணை எய்துறு
மங்க லந்தரு கம்பை மென்புனல் தோய்ந்த காற்று வழங்கிடத்
தங்கண் மேவிய புன்ம ரங்களும் இன்ப முத்தியை அண்ணுமால். ருo

யோக நன்னிலை யிற்ற வத்தின் வழீஇயி னார்உயர் கம்பையின்
மோக மில்கய லாதி யாகி உயிர்த்து முத்தியின் நண்ணுவார்

சஎ. அகப்படாதென்பது முற்று; எச்சமாக வைத்துரைப்பின் எம்மை நேர்வார என்பது நின்றுவற்றும்; நதி கட்புலனாகாமையும் பெறப்படாது. மண்ணில் திண்மையே வைக்கப்பட்டிருத்தலின், 'வன்னிலம்' என்றார். கன்னிப்பெண் ஓர் ஆடவனாலும் தீண்டப்படாதவாறுபோல, இதுவும் யாவராலும் காணப்படாமையின், 'கன்னியாறு' எனப்பட்டது. காரணப் பெயராமாறு முன்னர்க் காண்க.

சஅ. 'பா' என்னும் பகுதி தூய்மை, பருகுதல், காப்பு என்னும் பொருள்களைத் தரும் என்க. கம்பா என்பது, கம் - நீர்களை; பா - தூய்மை செய்வது எனப்பொருள்தரும் என்பதாம்.

சகூ. கம் - சிரசில் படின், பா - தூய்மை செய்வது எனவும், கம் - உயிர்களை; பா - காப்பாற்றுவது எனவும், கம் - முத்தியை; பா - உண்ண (அநுபவிக்க)ச் செய்து எனவும் பொருள்தரும் என்பதாம்.

ருo. வழங்கிடத்து - வீசுமிடத்தில். அண்ணும் - அடையும்.

ருக. மோகம் - அவா. போகும் - நீண்ட. வழூஉம் - தவறிய.

போகும் அக்கரை யிற்கி ளைத்த புதல்ம ரங்கள் உருத்திர
லோக நின்று வழூஉம் உருத்திர ராகும் உண்மை உணர்ந்திடீர். ௫௧

யாண்டி றப்பவர் கட்கும் இப்புனல் இறுதி வேலையின் உச்சியில்
தீண்டு மேல்அவர் முத்தி எய்துவர் தீஞ்சு வைஅமிழ் துண்பவர்
ஏண்ட குந்திறல் அமர ராகுவர் இனைய பூம்புனல் உண்பவர்
ஆண்ட நம்முட னுவர் ஆதலின்அமிழ் தின் மிக்கது கம்பைநீர். ௫௨

காட்சி எய்தரு மேன்மை சான்றுயர் கம்பை வார்புனல் ஆற்றினல்
ஆட்சி எய்திய பதிஎ வற்றினும் அதிக மாயது காஞ்சியூர்
மீட்சி யில்புகழ் இவ்வி ரண்டினும் வேறெ மக்குள வேணவா
மாட்சி பெற்றுறு கங்கை காசியின் வைத்தி லேம்இது மெய்ம்மையே.

பன்னிரு பெயர் மாட்சி

அறுசீரடி யாசிரிய விருத்தம்

புவன சாரம் மும்மூர்த்தி வாசம் விண்டு புரம்காஞ்சி
தவமார் கலிசித் திலயசித்து சகல சித்தி தபோமயஊர்
கவினூர் பிரம புரம்ஆதி பீடங் கன்னி காப்புவினைப் [தால்.
பவநோய் அறுக்குஞ் சிவபுரமாப் பகர்பன் னிரண்டு திருப்பெயர்த்

புவனம் மூன்றன் பயனாகிப் பொலிவு பெறலால் புகழ்தகைய
புவன சார மெனத்திகழும் புனல்கால் உயிர்தீ இருசுடர்வான்
புவன வடிவாம் நந்தமைநீர் மும்மூர்த் திகளும் பூசித்துப்
புவனம் ஏத்த வைகலின்மும் மூர்த்தி வாச புரமாமால். ௫௫

பரவு மேக வாகனமாங் கற்பத் தெம்மைப் பங்கயக்கண்
வரத ராசன் வழிபடலால் விண்டு புரமாம் வளர்காஞ்சி

---

௫௨. யாண்டு இறப்பவர்கட்கும் - எவ்விடத்தில் இறப்பவர்களுக்கும். இறுதிவேலை - முடிவுகாலம். உண்பவராகிய அமரரென்க. ஏண்தகும் பெருமையமைந்த.

௫௩. காட்சி எய்தரு மேன்மை - கட்புலனாகாமையாகிய பெருமை. வேறு உள - தனியாக இருக்கின்ற.

௫௪. தலங்களுள் பன்னிரண்டு பெயருடைய தலம் சிறந்ததாகும். இப்பெயர்களின் பொருளை வருஞ்செய்யுள் முதலாகக் காண்க.

௫௬. வரதராசன் வழிபட்டதை மேலே புண்ணிய கோடீச படலத்திற் காண்க. கலிநோய் - வளம்படாமையாகிய நோய். நல்குதல் - காத்தல்.

புரமா யதுமுன் வகுத்துரைத்தாம் பொல்லாக் கலிநோய் கலியுகத்தும்
விரவா வண்ணம் நல்குதலால் விளங்குங் கலிசித் தெனப்படுமால்.

கடைநாள் எமக்கீ தாடரங்காம் கவினல் இலய சித்தாகும்
தடைதீர் சகல சித்திகளும் தரலாற் சகல சித்திபுரம் [அன்ன
படையா வாய்மைத் தவம்இயற்றிப் பனிமால் வரையின் வரும்
நடையாள் வழுத்தும் பரப்பிரம மயமாம் நகரந் தபோமயமாம். ருஎ

வேதன் எமக்குத் தருஞ்சோம வேள்வி செயலாற் பிரமபுரம்,
ஆதி பீடம் முதற்பீட மாய சிறப்பால் கன்னிஎனுங், காதல்
அணங்கு புரந்திடலாற் கன்னி காப்பிங் கெமைக்கண்டோர், பேத
மின்றிச் சிவன்உண்மை பெறலா லாகுஞ் சிவபுரமே. ருஅ

ஷை வேறு

எடுத்தி யம்பும்இப் பன்னிரு நாமமும் வைகறை எழுந்தோ
தில், அடுத்த தீக்கனுக் காட்டிய இடும்பைநோய் வறுமைதீர்ந் தருள்
வாரி, மடுத்து வான்கதி எய்துமா றுமக்கிவை வகுத்தனம் அரு
ளால்என், றுடுத்த திக்குடை நாயகன் விளம்பலும் உவகையங் கட
லாழ்ந்து. ருகூ

இறைவன் மும்மூர்த்திகட்குப் பணித்தல்

உலம்ப டைத்ததோள் பண்டனும் அவுணனல் ஒளிஇழந் துலந்
தேமை, நலம்ப டைத்தவான் சோதியுள் ஒடுக்கிமீட் டிறைவிதன் நடு
வாமம், வலம்ப டைத்தமூ விழியினும் வருவித்த வள்ளலே அடி
யேங்கள், புலம்ப டைத்தினிச் செய்பணி அருளெனப் போற்றினர்
முதல்மூவர். கூ0

---

ருஎ. கடைநாள் - சங்காரகாலம். படையா வாய்மை - இயல்பாக
வுடைய உண்மை. பரப்பிரமமென்பது மெலிந்து நின்றது. மயமாம் நகர
மென்புழி, ஆதலாலென்னும் சொல்லெச்சம் வருவித்துரைக்க.

ருஅ. பிரமன் சோமயாகம் செய்தமையை மேலே சிவாத்தானப் பட
லத்தில் காண்க. கன்னிகாப்பு என்பதற்கு இரண்டு காரணங்கள் கூறப்பட்
டன. அணங்கு - அம்பிகை.

ருகூ. கதி எய்தலுக்கு உயிர்களென்னும் வினைமுதல் வருவித்துரைக்க.
'எய்துமா றுமக்கிவை' எனப்பாடம் இருந்திருத்தல் வேண்டும்.

கூ0. வாமம் - இடம். புலம் - அறிவு.

ஓதும் அவ்வுரை திருச்செவி சாத்தினம் உளங்களி வரச்செய் யுங், காதல் மைந்தர்நீர் ஆதலின் நமக்கருள் காட்டுதும் எனஓர்பால், போத ளாங்குழல் முகிழ்முலைப் பொலக்கொடிப் பூங்கணை மதர்வேற் கண், மாதர் வாணுதற் பசுங்கொடி மணந்தவன் வாய்மலர்ந் தருள் செய்யும். ௬௧

பிள்ளை வண்டினம் முரன்றுபண் பயிற்றிவார்ந் திழிதருப் பெருவெள்ளங், கொள்ளை கூட்டுணும் மலர்த்தடம் பொதும்பரிற் கொழிதமிழ் மறைப்பாடற், கிள்ளை பாடுசீர்க் காஞ்சியின் என்றும்இக் கிளரொளி இலிங்கத்தே, வெள்ளை வாணகைத் துவர்இதழ் உமை யொடும் இனிதுவீற் றிருக்கின்றோம். ௬௨

---

௬௧. ஒருபால் பசுங்கொடி மணந்தவன் என்க.

௬௨. கொழி - ஆராய்ந்த. தமிழ்மறைப் பாடல் - தமிழ்மறையாகிய பாடல். தமிழ்மறையாவன தேவார திருவாசகம் முதலிய திருமுறை களே என்பது இப்பொழுதைக்குப் பொருந்துவதன்றி இறைவன் கூறிய படைப்புக் காலத்திற்குப் பொருந்துவதன்றாகலான், ஆதிகாலத்தே இறைவ னால் அருளப்பெற்ற மறைகள் தமிழில் இருந்தன எனக்கொள்ளுதலே ஆசிரியர் கருத்தாதல்வேண்டும். இல்லையேல், காலமலைவா மாதலானும், ஆசிரியர் அங்ஙனம் ஆராயாது கூறுவாரல்ல ராகலானு மென்பது. முன்னர்த் தழுவக் குழைந்த படலத்தில் 'மன்னியவித் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்து' (௨௪௫) எனக் கூறுவதும் ஆசிரியர்க்கு இக்கருத்துளதென்பதை வலியுறுத்தும். தமிழில் ஆதியில் இறைவனால் அருளிச்செய்யப்பட்ட மறைகள் இருந்தமைபற்றியன்றோ தமிழ்நூல்களின் வகைகூறவந்த ஆசிரியர் தொல் காப்பியனார், "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முத னூலாகும்" (தொல். பொருள். ௬௪௯.) என்றருளுவாராயினர். இனி, தொல் காப்பியப் பாயிரத்து, "அறங்கரை நாவின் நான்மறை முற்றிய" என்பதி லுள்ள நான்மறை, 'இருக்கும், யசுவும், சாமமும், அதர்வணமும் என்பாரு முளர். அது பொருந்தாது; இவர் இந்நூல் செய்தபின்னர் வேதவியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராதலின்' என்று நச்சினார்க்கினியர் கூறுதலும், புறநானூற்றில் உள்ள, வியாசர் காலத்திற்கு முற்பட்டதொன்றும், அவர்வேதங்களை நான்காக வகுத்தற்கு முற்பட்டதொன்றுமாகிய இரண்டு செய்யுட்களில், முறையே "நான்மறை முனிவர்" (௬) எனவும், "நால்வேதநெறி" (௨) எனவும் வருத லும் பழமையாகத் தமிழில் மறைகள் இருந்தன என்பதை வலியுறுத்தும். நச்சி னார்க்கினியர் மேற்குறித்தவாறு கூறுதலின், "இசையொடு சிவணிய—நரம்

எம்மை யாவருங் காணலர் ஒருபொழு தியோகியர்க் கெதிர் காண்
பேம், அம்ம நீர்இவண் எம்மடிப் பூசனை அருமறை விதியாற்றுன்,
மும்மை யாகிய உலகமும் படைத்தளித் தழிக்குமா முயல்கிற்பீர்,
நம்மி டத்துறு பத்தியும் அருச்சனை நலத்திறைப் பெறுவீரால். ௬௩

பின் மறைய என்மனர் புலவர்'' எனவும், ''அளவிற் கோடல் அந்தணர்
மறைத்தே'' எனவும், தொல்காப்பியனர் (எழுத்து. ௩௩; ௩௦௨.) கூறும் மறை
கள் தமிழ்மறைகளே என்பது தெளியப்படும்.

ஆரிய வேதம் இருக்கு முதலிய நான்காயது வியாசர் காலத்தே யாக
லானும், அவர் காலத்துக்கு முற்பட்ட தொல்காப்பியப் பாயிரத்திலும், மேற்
காட்டிய புறநானூற்றுச் செய்யுளினும் நான்மறை, நால்வேதமென்பன
காணப்படுதலாலும், வேதமென்னும் தலையாயநூலும், அது நான்கு திறப்
பட்டிருத்தலும் வியாசருக்கு முன்னமே தமிழில் இருந்தமை பெறப்படும்.
அதனல், தமிழ்நாட்டிற்குவந்த ஆரியர்கள் தங்கள் ஒழுக்கங்களையும், தெய்வ
வழிபாட்டையும் பற்றிய பாடல்களை வேதமென வழங்கியிருத்தல் வேண்டு
மெனவும், பின்னர்ப் பலவாய்ச் சிதறிக்கிடந்த அவ்வாரியப் பாடல்களை வியா
சர் தொகுத்து தமிழ்வழக்கைக் கொண்டே நான்காக வகுத்திருத்தல்
வேண்டுமெனவும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இக்காலத்திலும் தமிழ் நாட்
டுக்குவந்த விவிலியர் தங்கள் நூலைச் 'சத்திய வேதம்' என வேதமென்று
கூறுதல் ஈண்டுக் கருதற்பாலது.

வேதம், மறை என்பன ஒருபொருட் சொற்களென்பதும் ஆராய்ச்சியாளர்
துணிபு. மறைஎன்பது நுண்ணிய மறைபொருள்களையுடைய தென்பது.
வேதம் என்பதும், மூடுதல் என்னும் பொருளுடைய வேய்தல் என்பதன்
முதனிலையாகிய 'வே' என்பதினின்றும் பிறந்து, மூடுபொருள் (மறைபொ
ருள்) உடையது எனப் பொருள்தருமெனவும், இருக்குவேதம் முதலிய
பழைய ஆரியநூல்களில் யாண்டும் வேதம் என்னும்சொல் அறிவுநூலென்
னும் பொருளில் வாராமையால், அது தமிழ்ச்சொல் என்பது இனிது பெறப்
படுமெனவும் அவர் நிலைநாட்டுவர்.

இனி, தேவாரத் திருமுறைகளில் நான்மறை, நால்வேதமென வருவன
வும் பண்டைத் தமிழ்நான்மறைகளையே குறிக்கும். எங்ஙனமெனில், அந்
நான்மறைகளுக்கு அவற்றிற் கூறப்படும் வரலாறு, 'இறைவன் கல்லால நிழலி
லிருந்து நான்கு முனிவர்களுக்கு, அறம், பொருள், இன்பம், வீடு என்னும்
நான்கு உறுதிப்பொருளைக் கூறும் நான்கு வேதங்களை அருளிச்செய்தனன்'
என்பதாகும். ஆரிய வழக்கில் வேதம் சுயம்பு எனவும், பிரமனல் செய்யப்
பட்டது எனவும், பலவகையான கருத்துக்களுண்டு. ஆனல், அதனைப்

படைத்தி பங்கயன் அளித்திமால் உருத்திரன் பற்றற உல
கெல்லாந், துடைத்தி என்றருள் வழங்கிஇச் சுரிகுழல் தேவியும்
எமைநண்டே, கிடைத்த போன்பின் நாள்தொறும் பூசனை யாற்றுக
எனக்கேட்டோர், அடைத்த நல்விதி புகல்முறை யாகநது வந்தவா
றெவன்என்றார். கூச

கூச. பங்கயன் முதலிய மூன்றும் அண்மைவிளி. அடைத்த-பொருத்திய.

பார்க்குமிடத்துப் பல முனிவர்களால் செய்யப்பட்டதென்பது விளங்குகிறது. நான்கு முனிவர்களுக்கு அருளிச்செய்யப்பட்டதாக எங்கும் கூறப்படவே யில்லை. கந்தபுராணத்துள் சனகர் முதலியோர்க்கு இறைவன் அருளியதாகச் சொல்லப்படுவதும் ஆகமப்பொருளென்றே கூறப்படுகிறது. ஆரியத்தில் வேதம் நான்காக இருப்பினும் மூன்றென்றலே பெருவழக்காகவும், வேதம் அனந்தமென்பது அதனினும் வலியுடைத்தாகவும் இருக்கின்றன. இருக்கு முதலிய நான்கு வேதங்கள் அறம் முதலிய நான்கினையும் கூறுவனவாக இல்லை. இதனால், திருமுறைகளிற் கூறப்படும் நான்மறைகள் ஆரிய வேதங்களல்ல என்பது பெறப்படும். படவே, அவைகள் தமிழ்நான்மறை என்பதே துணிபு. அன்றியும், "இசையொடு சிவணிய நரம்பின் மறைய" (தொல் எழுத்து ௩௩.) என்றாற்போல, "பண்பொலிநான்மறை" (திருமு ௩. அ. கூ.) என்பதுபோன்ற தமிழ்வழக்குப்பற்றிய குறிப்புக்களே காணப்படுகின்றன. "முத்தமிழ் நான்மறை" (திருமு. ௩. பதி உ,கக) எனவும் வந்துள்ளது. அதனாலும், மற்றும் பிறவாற்றாலும் அவைகள் தமிழ்மறைகள் என்பதே முடிந்த முடிபாகும். அற்றேல், தேவாரத் திருமுறைகளில் ஆரிய வேதங்கள் குறிக்கப்படவில்லையோ எனின், "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" (திருமு-கூ பதி. உ௩. ரு.) என்று எல்லாவற்றையும் இறைவனாகக்காணும் நம் ஆசிரியர்கள், அக்காலத்துத் தலைஎடுத்துலவிய ஆரிய வேதங்களையும் குறித்தே இருக்கின்றனர். அவற்றை ஏற்குமிடமறிந்து, இவை தமிழ்மறை எனவும், இவை ஆரியவேதமெனவும் உணர்ந்துகோடல் வேண்டும்.

அத்தமிழ்மறைகள் குமரி கடல்கொள்ளப்பட்ட காலத்து மறைந்தன வாதல் வேண்டும். அங்ஙனம் மறைந்த தமிழ்மறைகளின் கருத்தை எடுத்துரைக்கவே நால்வர் ஆசிரியன்மார்கள் உலகிற்குவந்து, அருட்செம்பாடல்கள் அருளினராகலான், அப்பாடல்களாகிய தேவார திருவாசகங்களும், அவற்றின் வழிப்பட்ட ஏனைய திருமுறைகளும் தமிழ்மறை எனப்படும். இக் கருத்துப் பற்றியன்றோ தேவாரங்களை, திருமுறைகண்ட புராணமுடையார், 'இது என்றும் உளதாம்' (செ. கஎ.) என்றனர்.

இங்ஙனம் கூறியவாற்றால், படைப்புக் காலத்திலேயே இறைவனால் அருளிச்செய்யப்பெற்ற தமிழ்நான்மறைகள் இருந்தன என்றும், அவற்றையே

என்ற மூவருக் கிளநிலா நகைமுகிழ்த் தெம்பிரான் உரைசெய் யும், நன்று கேண்மின்எம் இரவிடைத் திருநடம் நவின்றிருள் புலர் காலை, மன்ற எம்மிடை ஒடுங்கிய உலகுயிர் முழுவதும் வழுவாமே, தொன்று போற்படைத் திடுவது கருதினேம் முத்தொழில் புரிவீர் காள். ௬௫

படர்ஒ ளிப்பிழம் பாகும்இவ் விலிங்கமே பற்றிநின் றுலகெல் லாம், உடைய நம்மிடை நிலைபெறு மறைகளை முன்னுற உயிர்ப்பித் தேம், தொடைஇ ணங்கும்அப் பழமறை முழுவதும் நம்மடி தொழு தேத்திக், கடைஇ லாதபே ரன்பினுற் பழிச்சின பிரமிசைக் கரங் கூப்பி. ௬௬

பாரின் மேயினை பாரொரு வடிவினை பாரினுக் கறியொண்ணுய், பாரும் மற்றைஅப் பாரிடைப் பொருளும்நின் ஆணையிற் பயில்வித் தாய், நீரின் மேயினை நீரொரு வடிவினை நீரினுக் கறியொண்ணுய், நீரும் மற்றைஅந் நீரிடைப் பொருளும்நின் ஆணையின் நிலைப்பித் தாய். ௬௭

---

௬௫. எம் இரவு - எமக்கு இரவாகிய சங்காரகாலம்.

௬௬. 'நம்மிடை நிலைபெறு மறைகளை' என்றது, மேலே(செ. ௩.) 'பகுப் பின்றி மன்னும் பழமாமறை' என்றதை நினைவுறுத்தும்.

௬௭, ௬௮, ௬௯. இச்செய்யுட்களால் இறைவன் அட்டமூர்த்தமாயும் அவற்றிற்கு வேருயும் அவற்றோடு உடனுயும் நிற்றல் கூறப்பட்டது. மேயினை என்பன உடனுதலையும், வடிவினை என்பன ஒன்றுதலையும், அறி வொண்ணுய் என்பன வேறுதலையும் குறிக்கும். ௬௯ ல் இம்முறை என்பது மேற்கூறிய மூன்றையும் குறிக்கும்.

---

இறைவன், 'கொழிதமிழ் மறைப்பாடற் கிள்ளைபாடுசேர்க் காஞ்சி' என மும் மூர்த்திகட்குக் கூறினனெனவும் விளக்கியவாறுயிற்று.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் நுதலிய பொரு ளாகவுடைய நான்குமறைகள் இக்காலத்துக் கிடைத்திலவேனும், அறம், பொருள், இன்பங்களை விளக்கமாகவும், வீட்டைக் குறிப்பாகவும் உணர்த்தும் மறையாகத் திருக்குறளும், வீட்டை விளக்கமாக விரித்துக்கூறும் மறைகளா கத் தேவார திருவாசகம் முதலிய திருமுறைகளும், உந்திகளிறு உயர்போதம் சித்தியார் முதலிய மெய்கண்ட நூல்களும் தமிழ்நாட்டுத் தவப்பயனுக வுள்ளன வென்க.

நெருப்பின் மேயினை நெருப்பொரு வடிவினை நெருப்பினுக் கறியொண்ணுப், நெருப்பும் மற்றைஅந் நெருப்பிடைப் பொருளும் நின் ஆணையின் நிறுவித்தாய், மருத்தின் மேயினை மருத்தொரு வடிவினை மருத்தினுக் கறியொண்ணுப், மருத்தும் மற்றைஅம் மருத் திடைப் பொருளும்நின் ஆணையின் வதிவித்தாய். ௬௮

விண்ணின் மேயினை விண்ணொரு வடிவினை விண்ணினுக் கறி யொண்ணுப், விண்ணும் மற்றைஅவ் விண்ணிடைப் பொருளும்நின் ஆணையி னிறுவித்தாய், கண்ணும் ஆருயிர் இருசுடர் எவற்றினும் இம்முறை கலந்தோங்கி, எண்ணினுல் அறி வரும்பெரு முதல்வநின் இணையடி மலர்போற்றி. ௬௯

கலி விருத்தம்

இன்ன வண்ணம் பழிச்சி எமைத்தொழும்
மன்னும் அன்பின் மறைகளை நோக்கிநீர்
நன்னர் வேட்டன நல்குதும் வேதங்காள்
சொன்மின் என்றலுஞ் சொல்லுத லுற்றன. ௭0

எந்தை நின்முகத் தெங்களை ஈன்றனை
அந்த மெய்ப்பெரும் பேறுடை எங்களைச்
சிந்தை செய்து திருவருள் வைத்துநின்
சந்த மேனி அணியெனத் தாங்குவாய். ௭௧

நயக்கு மாறினி நாங்கள் உலகிடைச்
செயத்த கும்பணி செப்புதி மற்றெமை
வியப்ப வேதங்கள் என்று விளித்தனை
உயர்த்த அப்பெயர்க் காரணம் ஓர்கிலேம். ௭௨

என்ற மாமறை தம்மை இயல்பினல்
அன்று கோவணம் நூபுர மாதியா
மன்ற மெய்யணி யாக்கி மகிழ்ந்துபின்
ஒன்று கூறினம் ஊங்கிவை கேட்பவே. ௭௩

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அறம்பாவம் என்றிரண்டின் எம்முண்மைத் தன்மையினும் அகில லோகந், திறம்பாமற் பிரமாண மாவீர்வித் தெனும்பகுதி

௭௧. சந்தம் - அழகு. அணி - ஆபரணம்,

ஞானஞ் செப்பும், புறம்பாயா மனப்பெரியோர் நும்மொழியான் எமைஉணரும் பொலிவான் வெள்ளிப், பறம்பாரும் எமக்கினிய பான்மையீர் வேதமெனப் பெயர்பெற் றீரால். எச

வேதியர்கள் முதல்மூவர் உமைஓதி வீடுபே றடைக முற்றும், ஓதுமறை இரண்டானும் ஒன்றானும் ஓதாது புறநூல் கற்கும்,அதில் இரு பிறப்பாளர் இருட்குழிவீழ்ந் திடர்ப்படுவா ராக நீயிர், பேதியா மெய்யன்பின் எமைஈண்டு வழிபாடு பேணி வாழ்மின். எரு

உலகுய்தற் பொருட்டுநாம் எவ்விடத்தின் எவ்வுருவம் எடுப் போம் அங்கண், நலம்எய்தும் அதற்கியைந்த வடிவம்நீர் கொள் கென்று நயப்ப முன்னாள், அலர்தலைமா நிலம்பரசும் இந்நகரின் வரம் அளித்தேம் அடையார் உட்கும், வலமன்னுந் திரள்திண்தோள் மைந் தர்கள் ஆதலின்அம் மறைக ளெல்லாம். எசு

ஈங்குநாம் பரஞ்சோதி இலிங்கவடி வாய்அமர்ந்தே மாக ஈண் டைத், தேங்கவிழ்க்குங் கவிழ்இணர்ப்பூங் கனிதுவன்றும் ஒருமா வாய்த் திகழ்ந்து நின்ற, வீங்குதிறற் புரம்மூன்றும் இறுத்தநாள் போர்க்கோலம் மேயி னேம்யாம், ஆங்கவையுங் கொய்புளைவெங் கலினவாம் பரிவடிவாய் அமைந்த காண்மின். எஎ

மற்றைவே றுருவாதி வடிவம்நாங் கொண்டுழிமா மறையும் ஆங்கண், பற்றமைக ருகிர்ஞாளி முதலியவாய்ப் போந்தனஇப் பதியுள் ஓர்பால், வெற்றிநடம் புரிகாலை நூபுரமாய்ப் பொலிந்தனஅவ் விரிநீர்ச் சூழல், அற்றைநாள் முதல்வேத நூபுரப்பேர் பெற்றுவினை அறுக்கு மாலோ. எஅ

---

எச. பின்னுள்ள உம்மையை இரண்டின் என்பதனோடுங் கூட்டுக புண்ணிய பாவமென்னும் இரண்டை அறிதற்கண்ணும், எமது உண்மையை உணர்தற் கண்ணும் யாவரும் மாறுபடாதவாறு பிரமாணமாவீர்களாக என்ப தாம். வித் என்னும் தாது அறிவு எனப் பொருள்தருமாகலின், அறிதற்குக் கருவியாகிய நீர் வேதமெனப் பெயர்பெற்றீர் என்பதாம். புறம்பாயா மனம் - புறவிடயங்களிற் செல்லாத மனம். வெள்ளிப் பறம்பு ஆறு ஆம்-கைலைமலையை அடைதற்கு வழியாகிய. ஆரும்பான்மையீர் எனவும், உணரும் பொலிவான் பெற்றீர் எனவும் இயைக்க.

எரு. ஓதுமறை - ஓதுதற்குரிய மறை.

எசு 'மைந்தர்காள்' எனப்பாடம் இருந்திருத்தல் வேண்டும்.

மாண்டபெரு வளம்படைத்த தாருகா வனத்திடைநாம் பயிக்க வேடம், பூண்டவழிக் கோவணமாய்ப் பொலிந்தனவால் இவ்வாறு புரைதீர் நம்பால், வேண்டும்வரம் பெற்றேருங்கும் வேதநூல் உணராதார் எம்மைத் தேரூர், ஆண்டகைமை வேதியர்க்கு மேம்பாடு வேதமே யாகும் அன்றே. எசூ

இத்தகைய மாமறைநூல் முந்நாள்இத் திருக்காஞ்சி வரைப்பில் தென்சார், தத்துநீர் அலைபுரட்டுஞ் சேயாற்றின் தடங்கரைக்கண் இமையோர் கட்கும், மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் ஆதலின் மேவுதிரு ஓத்தூர் என்னும், அத்தலத்தின் எமைத்தொழுவோர் அருமறைநூல் முழுதுணர்ந்து வீடு சேர்வார். அ௦

இன்னமறை விதியால்இவ் வேகம்பத் தெமைப்பூசை இயற்றீர் என்னப், பன்னகப்பூண் அணிமார்பிற் பரமேட்டி பணித்தமொழி பேணி அன்னோர், சென்னிமிசைக் கரங்கூப்பி ஆனந்தப் பெருங் கடலில் திளைத்து வாழ்ந்து, பொன்னிமயப் பிடிமணந்த மணவாள நம்பிகழல் பூசிப் பாரால். அக

இலளிதை முதலியோர் இறைவனை வழிபடல்

கலி விருத்தம்

சயமுறு காரணத் தலைவர் மூவரைக்
கயல்விழித் தோற்றிய காமக் கண்ணியாம்
பெயரிய இலளிதைப் பிராட்டி வானளாய்
உயரிய மாமுதல் ஒளியைப் பூசித்தாள். அஉ

மற்றதற் கணியதென் மருங்கின் அப்பெயர்
பற்றிய சிவக்குறி நிறுவிப் பாயிதழ்
பொற்றசெந் தாமரைப் புனிதன் பூசனை
தெற்றெனச் செய்தனன் தெளிந்த சிந்தையான். அ௩

பன்னரு மாமுதல் வாம பாகத்தின்
அன்னண மணியணி அகன்ற மார்பினன்

---

எசூ. பயிக்க வேடம் - பிட்சாடன கோலம்.

அ௩. அப்பெயர், கம்பர். பொற்ற - அழகிய.

அ௪. மணி, கௌத்துவம், பொன்அவிர், பொன்போல விளங்கும்.

மன்னிய உலகெலாம் மயக்கும் ஆசையின்
பொன்னவிர் மலர்கொடு பூசை ஆற்றினன். ௮௪

பேதமில் பாவனை பிறங்கத் தாணுவும்
காதலிற் பூசைமுன் இயற்றிக் கண்ணுதல்
மேதகை அடிகளோ டொருமை மேயினன்
ஆதலின் இருவர்க்கும் இல்லை வேற்றுமை. ௮௫

வெள்ளக் கம்பர்

வாலிய சிந்தையான் மலர்ப்பொ குட்டணை
மேலவன் வழிபடும் வெள்ளக் கம்பனை
ஆலிய அன்பினால் அருச்சித் தேத்துவார்
தோலுடற் பொறைகழீஇத் தூய ராகுவார். ௮௬

கள்ளக் கம்பர்

மருள்புரி கருத்தினன் மாயன் ஏத்தலின்
கருதும்அப் பெயரிய கள்ளக் கம்பனைத்
திருவடி வழிபடப் பெற்ற சீரியோர்
உருகெழு கொடுவினை மைய லுட்படார். ௮௭

நல்ல கம்பர்

உருத்திரன் நலத்தகும் ஒருமை பூண்டுயர்
கருத்தொடும் வழிபடு நல்ல கம்பனை
அருத்தியின் வழிபடும் அடியர் எம்பிரான்
மருத்தபூந் திருவடிக் கலப்பின் மன்னுவார். ௮௮

கருதரு நல்லனே கள்ளன் வெள்ளனேர்
கருதிரு வேகம்பன் என்று தன்னொடு
மருமலர்க் கவிழ்இணர் மாவின் நீழல்வாழ்
ஒருவனே நால்வகை உருவம் மேயினன். ௮௯

---

௮௫. தாணு - உருத்திரன். ஒருமை - ஒன்றாந்தன்மை.

௮௬. வாலிய - தூய. ஆலிய - அகன்ற. கழீஇ - கழித்து. வெள்ளை யான உள்ளத்தோடு பூசிக்கப்பட்டவராகலின் வெள்ளக்கம்பர் எனப் பெயர் பெற்றனர். வெள்ளைக்கம்பர் என்பார் கூற்றுச் சிறக்கும்.

௮௮. மன ஒருமையே சிறந்த நன்மையைப் பயப்பதாகலின், அவ்வாறு பூசிக்கப்பட்ட கம்பர் நல்லகம்பராயினர். அருத்தி - விருப்பம். மருத்த - மணம்கமழ்கின்ற.

தென்னுயர் கச்சியின் அகில சித்தியும்
மன்னுயிர்க் குதவிய மகிழ்ந்து நம்பிரான்
அன்னணம் பூசைகொண் டருளி மூவர்க்கு
முன்னிய வரங்களும் முறையின் நல்கினன். ௯0

இறைவி வேண்டுகோள்

இறைவிஇம் மாநிழல் இனிது வைகிய
மறைமுதல் அடியிணை வழிபட் டேத்துபு
நிறைபெரு மகிழ்ச்சியின் நீடு காதலாற்
குறைவறு வரம்பல குறித்து வேண்டுவாள். ௯௧

ஷை வேறு

வேதக் கோவண வேதப் புரவிய
வேதப் பூணவ வேத முதல்வனே
வேதத் தானும் உணர்வரு மேதகாய்
வேதச் செல்வஎன் விண்ணப்பங் கேள்மதி. ௯௨

மன்ற லார்மறை மாவின் அடித்தலத்
தென்றும் மேவுதி யேனுமி யோகியர்க்
கன்றித் தோன்றிலை யாயினை ஈண்டினி
மன்ற யாவர்க்குங் காட்சி வழங்குவாய். ௯௩

தெள்ளு தீம்புனல் இத்திருக் கம்பையும்
வள்ளல் ஓரிடைக் காண்டக மன்னுகென்
றெள்ளி மைக்கிரி உத்தமி வேண்டலும்
பிள்ளை வெண்பிறைக் கண்ணியன் பேசுமால். ௯௪

இறைவன் கூறல்

ஷை வேறு

மன்னுயிர் முழுவதும் பயந்த மாணிழாய்
அன்னவை உய்யுமா கருதி அன்பினல்

---

௯0. தென் - அழகு. உதவிய - கொடுத்தற்கு.

௯௨. மேதகாய்-பெருந்தகுதியை யுடையவனே. மதி, முன்னிலையசை.

௯௩. மன்றல் - வாசனை. மன்ற - நிச்சயமாக

௯௪. வள்ளல், அண்மைவிளி. மன்னுக என்பதில் அகரந் தொகுத்தல்.

௯௫. அன்னவை - அவ்வுயிர்கள். மனங்கொள என்பது வலிந்து நின்றது

இன்னவை புகன்றனை மகிழ்ச்சி எய்தினேம்
பன்னுதும் மனக்கொளப் பரிந்து கேள்மதி. ௬௯௫

மேதகு சிற்பர வியோம ரூபம்நீ
ஓதிய சிற்பர வியோம ரூபியாம்
மாதர்வா ளுதலிஅப் பரம வானமும்
பேதுற ஒழிக்கும்இப் பிலத்து வாரமே. ௬௯௬

மற்றிரு வேங்கட்கும் வடிவ மாகும்அப்
பொற்றனிப் பிலத்தினைப் புண்ணி யஞ்செய்து
பற்றறத் துறந்தவர் காண்பர் பற்றமை
சிற்றறி வுடையவர் தமக்குச் சேயதே. ௬௯௭

ஆயிடை மகிழ்ந்தினி துறைதும் ஆய்தொடி
மேயஅப் பிலத்தினும் மிக்க காதலின்
ஏயும்இச் சுடரொளி இலிங்கத் துன்னொடு
மாயிரும் புவிதொழ மன்னி வைகுகேம். ௬௯௮

இதற்குமுன் ஈண்டெமை எவருங் காண்கிலர்
இதற்குமேல் நீபெறும் எழில்வ ரத்தினாற்
கதித்திட யாவருங் கண்டு போற்றுக
கதிர்த்தவான் பிலத்திடை உனையுங் காண்கவே. ௬௯௯

எற்றுநீர்க் காஞ்சியே எமக்கு மேனியாம்
தெற்றெனத் தெளிமதி இனைய சீர்மையான்

---

௬௯௬. சிற்பர வியோமம் - ஞானப்பரவெளி. சித் - ஞானம். பரம் - மேன்மை. வியோமம் - ஆகாசம். சிதாகாசமென்றபடி. சிதாகாசமெனப்படுவது அருளாகலின், அவ்வருளையுடைய இறைவன் சிதாகாச ரூபியாவன் என்க. பேதுறவு - மயக்கம். இப்பிலமென்றது காமகோடி பிலத்தை.

௬௯௭. மற்று, அசைநிலை. சிதாகாச வடிவமாயிருப்பவர் அம்மையாரும், அவ்வடிவத்தை உடையவராயிருப்பவர் இறைவருமாகலான், 'இருவேங்கட்கும் வடிவமாம் பிலத்தை' என்றார்.

௬௯௯. கதித்திட - கதியடைய. கதிர்த்த - ஒளிபொருந்திய.

௭00. காஞ்சி பிலாகாசமாக விளங்குதலின் காஞ்சியே எமக்கு மேனியாம் என்றார். தேவர் என்பது ஒளியுடையவர் எனவும் பொருள்தருதலால் 'முற்றொளி வானவர்' என்றார். 'மறைந்தும்' என்றிருத்தல் வேண்டும்,

முற்றொளி வானவர் முனிவர் தாமெலாம்
மற்றிவண் விளங்கியும் மறைந்து வைகுவார். ௧௦௦

உலகம்இக் கோயிலின் உறுப்பு முற்றுமாய்க்
குலவிஈங் கெமைத்தொழு துறைபுங் கோற்றொடிப்
புலவுவேல் இணைவிழிப் புளகப் பூண்முலை
இலவிதழ் மதிநுதல் இமய மாதராய். ௧௦௧

அறுசீரடி யாசிரிய விருத்தம்

விரவுசீர் நல்ல கம்பம் விளங்கொளி வெள்ளக் கம்பம்
வரமருள் கள்ளக் கம்பம் வண்டிரு மயானம் வாலீச்
சரமெனும் இலிங்கம் ஐந்தில் தகுபஞ்ச பிரம மாகி
இரவுசெய் குழலாய் நின்னோ டினிதுவீற் றிருப்பங் கண்டாய். ௧௦௨

வாலீச்சரம்

என்னலும் இறைஞ்சி நல்வா லீச்சரம் யாங்கண் எந்தாய்
அன்னது கண்டோர் யாவர் அதன்திறம் யாதோ என்னப்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொம்மல்வெம் முலையாள் கேட்ப
கன்னல்வேள் எரிய நோக்குங் கண்ணுதல் அருளிச் செய்யும். ௧௦௩

வாலிமா இலிங்க மேன்மை கேண்மதி மயானக் கீழ்சார்
சீலமார் சித்தர் பல்லோர் சித்திகள் வேண்டிப் போற்ற
மூலமாய் ஒளியாய் இன்பாய் முகிழ்த்தது வாயு லிங்கம்
ஏலவார் குழலாய் என்றும் மகிழ்ந்தினி திருப்பேம் அங்கண். ௧௦௪

வாலிமுன் தொழுது நேர்ந்தார் வலத்தினிற் பாதி யாண்டுந்
தோல்விஇல் வாகை யோடும் பெற்றனன் தோகாய் என்றான்
கோல்வளை வாலி என்பான் யாரவன் குமரன் மற்றுன்
பால்வரம் பெற்ற தெவ்வா றென்றலும் பகா லுற்றான். ௧௦௫

---

௧௦௨. நல்ல கம்பம் ஈசானமும், வாலீச்சரம் தற்புருடமும், மயானம் அகோரமும், கள்ளக்கம்பம் வாமதேவமும், வெள்ளக் கம்பம் சத்தியோசாத முமாகக் கொள்ளற்பாலன.

௧௦௪. முகிழ்த்தது - தோன்றிற்று.

௧௦௫. நேர்ந்தார் - போருக்கு எதிர்ந்தார். வலம் - பலம், பாதி, வாகை என்பன அவைகளை அடையும் வரத்தின்மேல் நின்றன.

பண்ணவர் முனிவர் ஆன்றோர் பாங்குற மிடைந்து வைக
விண்ணவர்க் கிறைவன் புத்தேள் வேத்தவைத் தவிசின் மேனாள்
நுண்ணிடை அணங்கு நல்லார் மின்கொடி நுடக்கம் மானக்
கண்ணெதிர் ஆடும் ஆடல் கண்டுவீற் றிருந்தா னாக. கoசு

அங்கவர் ஆடல் காணும் ஆசையால் இருள்கால் சீக்குஞ்
செங்கதிர்க் கடவுள் மான்தேர் செலுத்துறும் அருணன் ஆங்கண்
வெங்கதிர் விடைபெற் றேகி அரம்பையர் விண்ணோ ரெல்லாம்
எங்கணும் நிறைந்த வாற்றால் இடம்பெறா திதனைச் செய்வான். கoஎ

அற்புத வனப்பின் வாய்ந்த அரம்பையர் எவர்க்கும் முன்னர்
நிற்பது நோக்கித் தானும் நேரிழை வடிவு கொண்டு
பொற்புறும் ஆடல் பார்த்து நிற்றலும் புல்லார் உட்கும்
மற்பொலி குலிசப் புத்தேள் அத்தகை வடிவைக் கண்டான். கoஅ

கண்டலுங் குழைத்த வில்வேள் கடுங்கணைக் கிலக்க மாகி
மூண்டவெங் காமம் மூழ்கி முரணினால் வலிந்து பற்றி
ஆண்டொரு பாங்கர் எய்தி அணிமுலை பொதியப் புல்லிப்
பூண்டபே ரின்ப வெள்ளப் புதுநலம் பருக லோடும். கoகூ

வாலி பிறப்பு

அரக்கர்கோன் நகைப்ப நந்தி வெகுண்டுநீ அழிப்ப வல்வா
னரக்குலந் தாமே யென்னச் சபித்தவா நயந்து விண்ணோர்

---

கoசு. மின்கொடி நுடக்கம் மான - மின்னற்கொடியின் துவட்சிபோல.

கoஎ. அருணன், சூரியன் தேர்ச்சாரதி என்பது குறிக்கப்பட்டது. வெங்கதிர் - சூரியன்.

கoஅ. அரம்பையர் நிற்பது நோக்கி என்க. புல்லார் - பகைவர். உட்கும் - அஞ்சும். மல் - வலி.

கoகூ. குழைத்த - வளைத்த. வேள் - மன்மதன். முரண் - வலிமை.

ககo. இராவணன் குபேரனிடத்திலிருந்து கவர்ந்த புட்பக விமானத்தின்மேலேறி வான்வழியாகக் கைலைக்கு அருகில் வருங்கால் விமானம் செல்லாது தடையுற்று நிற்க, இதற்குக் காரணம் யாதென்று இராவணன் ஆராயும் பொழுது, நந்திதேவர் வந்து, இஃது இறைவன் எழுந்தருளியுள்ள மலையாகலின் செல்லாதாயிற்று; ஆகலின் நீ வேறு வழியாகச் செல்க; அவ்வாறின்றி வேறுவகையான செயல்களைச் செய்வாயாகில் துன்புறுவாய் என்றனர். இராவணன் அது கேட்டு, அடா குரங்குமுக முடையவனே, யார் என்று என்னை

குரக்கிலம் ஆனுர் அன்றே இனையவன் குரக்கு வேந்தாய்ச்
சுரர்க்கிறை கூற்ருல் அப்போ தாயிடைத் தோன்றினுைல். ககo

ஆயபின் கூத்து நோக்கி ஆவயின் நின்று போந்து
சேயொளிப் பரிதித் தேர்மேல் திகழ்ந்தனன் வலவ னாகக்
காய்கதிர்க் கடவுள் அங்கண் நிகழ்ந்தமை கடாவி முற்றும்
வாய்மையிற் புகலக் கேட்டவ் வடிவிவண் காட்டு கென்ன. கக௧

உவகைமீ தூர மேன்மேல் வேண்டலும் ஊரு வில்லான்
பவளவாய் கரிய கூந்தல் பால்மொழி திதலை பூத்த
குவிமுலை பரந்த அல்குல் கோல்வளைத் தளிர்க்கை தோற்றிக்
கவின்உருக் கொண்டா லென்னக் காட்டினன் தனது பெண்மை.

சுக்கிரீவன் பிறப்பு

காண்டலுங் கதிரோன் ருனுங் காமுற்றுக் கலவி செய்ய
ஆண்டகைச் சுக்கி ரீபன் ஆயிடைப் பிறந்தான் இப்பால்
மாண்டகு மகவான் ஈன்ற வாலியைக் கமலக் கையால்
தீண்டினன் உச்சி மோந்து செவியறி வுறுத்தல் செய்வான். ககங

பண்ணவர் முனிவர் யாரும் பரவினர் பேறு பெற்ற
புண்ணிய நகரங் காஞ்சி ஆயிடைப் போந்து முக்கண்
அண்ணலைத் தொழுது மைந்தா கவிகளுக் கரசாம்பேறு
நண்ணுகென் றுரைப்ப வாலி நளிர்புனற் காஞ்சி புக்கான். ககச

நடலைவெம் பிறவி மாற்றுஞ் சிவகங்கை நன்னீ ராடிச்
சுடரொளித் திருவே கம்பந் தொழுதுபோய் மயானக் கீழ்பால்
மடனறச் சித்தர் பல்லோர் வழிபடும் பெருமை சான்ற
கடனுடை வாயு லிங்கங் கண்களி பயப்பக் கண்டான். ககரு

---

மருட்ட வந்தாய் என்று நகைக்க, நந்திதேவர் வெகுண்டு,'நீ என்னைக் குரங்கு முகனெனக் கூறி அவமதித்தமையால், உனது நகரம் குரங்குகளால் அழியக் கடவது' எனச் சபித்தனர்என்பது இராமாயண வரலாறு. சபித்தவா நயந்து-சபித்தவாற்றை விரும்பி.

கக௨. ஊரு இல்லான் - தொடையில்லாத அருணன். கவின் உருக் கொண்டாலென்ன - அழகே ஓர் உருவங் கொண்டாற் போல.

ககச. கவிகள் - குரங்குகள். நளிர் - குளிர்ந்த.

ககரு நடலை - துன்பம், மடன் - அறியாமை.

மடல்பெறு வேட்கை யாளன் வாயுவின் மிடலென் றெண்ணிக்
கடல்புரை அன்பின்அங்கட் கைதொழூஉத் தவங்க ளாற்றி
மடலவிழ் கடுக்கை நம்பால் வரம்பல கொண்டு நேர்ந்தார்
அடல்வலி பாதி யோடு குரக்கினத் தரசும் பெற்றான். ௧௧௬

பெற்றபின் இலிங்கந் தன்னைப் பிறங்குதன் இருக்கை உய்ப்பான்
பற்றினன் வலியாற் காஞ்சிப் பதிநமக் கினிய வாற்றான்
மற்றவன் பெயர்க்க லாற்றான் மிடலெலாம் வைத்து வாலிற்
சுற்றிஈர்த் தணிவால் இற்றுத் தூரத்தே அலறி வீழ்ந்தான். ௧௧௭

வீழ்ந்தவன் எழுந்து வந்து மென்மல ரடிகள் போற்றித்
தாழ்ந்தெழுந் தடியேன் இல்லந் தனில்எழுந் தருளிச் சூடும்
போழ்ந்தவெண் மதியாய் செய்யும் பூசைகொண் டருளாய் என்று
சூழ்ந்துநின் றிரந்து வேண்டத் தோன்றிமுன் இதனைச் சொன் [னேம்.

கச்சிமூ தூரின் நீங்காக் காதலம் எம்மை ஈண்டே
அர்ச்சனை புரிதி நின்வால் அழுந்திய தழும்பு பூண்டு
சச்சைவெண் ணீற்று வாலீச் சரனென விளங்கித் தோன்றி
முச்சகம் பரச வாழ்தும் எனமொழிந் திலிங்கத் துற்றேம். ௧௧௯

அன்றுதொட் டனைய சூழல் அற்புதத் திருவா லீசம்
என்றொரு பெயரின்ஓங்கும் ஏரிழாய் பஞ்ச தீர்த்த
மன்றநீர் வாவி மூழ்கி வருத்தஇப் பஞ்ச லிங்கம்
நன்றுகண் டேத்தப் பெற்றோர் நலிவினைப் பிறவி தீர்வார். ௧௨௦

---

௧௧௬. மடல்பெறு வேட்கையாளன் - மகளிர் மடலேறுதற்குரிய வேட்கை அடைதற்கேதுவான அழகை உடையவன். வாயுவின் மிடல் என்று-வாயுதேவன் அடைந்த வலிமைக்குக் காரணமானதென்று. இதனால் வாயு பூசித்து வன்மை பெற்றமை பெறப்படும்.

௧௧௭. தன் இருக்கை உய்ப்பான் - தனது இல்லத்தில் சேர்த்தற்கு.

௧௧௯. சச்சை, செச்சை என்பதன் மரூஉ. செச்சை - திருநீறு. சச்சை வெண்ணீறு, ஒருபொருட் பன்மொழி.

௧௨௦. பஞ்சதீர்த்தம் - உலகாணித் தீர்த்தம். பஞ்சலிங்கங்களுக்கு ஏற்பப் பஞ்சதீர்த்தமாய் அமைந்த சிவகங்கை எனவும் கூறலாம்.

இன்னணம் அருளிச் செய்து பொலங்குவட் டிமயம் பூத்த
மின்னொடும் மூவ ரோடும் விளங்கொளித் திருவே கம்பந்
தன்னிடைக் கரந்து நின்றான் சதாசிவப் புத்தேள் அந்த
நன்னகர்ப் பெருமை முற்றும் யாவரே நவில வல்லார். கஉக

ஆகத் திருவிருத்தம் - உ௦உஉ.

---

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகள், (க) 'உலகத்தை ஒடுக்கிய இறைவனே மீள அவற்றைத் தோற்றுவிப்பன்' என்பதும், (உ) 'அங்ஙனம் தோற்றுவிக்குங்கால் இறைவன் தனது சத்திவியாபார பேதம்பற்றி, இலயம் போகம் அதிகாரமென்னும் நிலைகளை எய்துவன்' என்பதும், (ங) 'இறைவன் மும்மூர்த்திகட்கும் அப்பாற்பட்டவன்' என்பதும், (சு) 'மும்மூர்த்திகளும் இறைவன் அருள்பெற்று முத்தொழில் செய்பவர்' என்பதும், (ரு) 'வேதப் பொருளாவான் இறைவனே' என்பதும், (சு) முப்புராரி கோட்டப் படல உண்மையில் மூன்றாவதாகக் கூறப்பட்டதுமாகிய உண்மைகளை விளக்கும். மற்றும் இதனுள், 'தீர்த்தம் மூர்த்தி தலங்கள், மக்கள் நலனடைவதற்கு ஏதுவாம்' என்பதும், தமிழ்மறை உண்மையும், வேதமென்னும் சொற்குப் பொருளும் கூறப்பட்டன. சுஎ, சுஅ, சுகூ, ஆம்செய்யுட்களில் கூறப்பட்ட பொருளும் ஆண்டுக்காண்க. பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

பழமையான தவத்தையுடைய முனிவர்களே, தமிழ்ப் புலவர்கள் புகழ்கின்ற கச்சிமயானத்தின் வரலாறு இதுவாகும். இனி, மற்றைய தலங்கட்கு அரசாகி நிலைபெற்றுள்ள திருவேகம்பத்தை மனத்துட்கொண்டு, அதன் வரலாற்றைச் சொல்வோம்.

தியானப் பொருளாகிய இறைவனார் மயானலிங்கமாக இருந்து, உடல் தோறும் கலந்திருந்த பண்டாசுரனை அழித்த பின்பு, உலகத்தைப் படைக்கத் திருவுளங்கொண்டு, பிரிவற்று நிற்கும் பழைமையான வேதங்களை நோக்கி ஒரு மாமரமாய் தளிர் பூ கனிகளுடன் விளங்குக என்று அருளிச் செய்து, அதன் நிழலில் தாம் சோதிலிங்க வடிவமாய் எழுந்தருளி இருந்து, தமது இடப்பாகத்தில் இலலிதா தேவியாரை உண்டாக்கினர். அவ்வம்மையார் இறைவன் ஆணைப்படி வலக்கண், இடக்கண், நெற்றிக்கண்களில் பிரமன்,

கஉக. அந்தநகர் என்றது திருவேகம்பத்தை.

விண்டு, உருத்திரர்களை உண்டாக்கி, மற்றும் முகம் முதலிய உறுப்புக்களில் சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சங்களையெல்லாம் தோற்றுவித்து நின்றனர். இறைவனூர் அவ்வம்மையாரை மடிமேற்கொண்டு வீற்றிருந்தனர். தேவர் முதலிய உயிர்களெல்லாம் மகிழ்ச்சியோடு வளர்ந்தன.

பின்பு மும்மூர்த்திகளும் இறைவனை வணங்கித் துதித்து, க, அ, ம என்னும் பிரம, விட்டுணு, உருத்திரர்களாகிய எங்களைக் கண்களிற் படைத்த இவ்வம்மையார் காமாட்சி எனப்பெயர் பெறவும், இம்மாவடியில் நீங்கள் என்றும் இருக்கவும் வேண்டும் என்று வேண்டினர். இறைவனூர் அவ்வரங்களைக் கொடுத்து, மாவடியிலுள்ள அவ்விலிங்கத்தின் மேன்மையைக் கூறுவாராயினர்.

ஓ மும்மூர்த்திகளே, வேதமே ஒற்றை மாமரமாக வளர்ந்தது. அதற்குத் தலைமை பூண்ட நாமே அதன்அடியில் இலிங்கமாயினேம். சொல்வடிவத்திலும் தருவடிவத்திலும் யாமே அதற்குத் தலைவரென்றறிக. எமதுபெயர் 'ஏகாம்பரநாதன்' என்பதாகும். ஐந்தெழுத்தாகிய இதுவே ஆதிமந்திரமாகும். இது பஞ்சப்பிரமமந்திரம் பஞ்சாக்கரங்களினும் மேலானதாகும். வேதத்திற் சிறந்தது காயத்திரி மந்திரம். அதனினும் அம்சமந்திரமும், அதனினும் துவாதசாட்சர மந்திரமும், அதனினும் அட்டாட்சர மந்திரமும், அதனினும் பஞ்சாக்கரமும், அதனினும் ஏகாம்பரநாதன் என்பதும் சிறந்தனவாகும். இம்மந்திரத்தைச் செபித்தவர்களுக்குக் கீர்த்தி, செல்வம், ஆயுள் முதலிய நலங்கள் உண்டாகும். ஸ்திரீ அத்தி, பிரமகத்தி முதலிய பெரும்பாதகங்களைச் செய்தவர்களும் இம்மந்திரத்தை ஒருகாற் செபித்தால் அவைகள் விரைவில் நீங்கும். அறம் முதலிய பயன்களைத்தரும் இம்மந்திரத்தை, பசி நோய் முதலிய துன்பத்தாலாயினும், மறதியாலாயினும் கூறுவோர் எமக்கு இனியவராவர். இதன் பெருமையறிந்து செபிப்பவர்களுக்குப் பேரின்பமாகிய முத்தியைக் கொடுப்போம் என்று அருளிச் செய்தனர்.

பின்னும் திரிமூர்த்திகள் வணங்கி, 'காஞ்சியின் மேன்மையும் இவ்வொற்றை மாவின் பெருமையும் கூறவேண்டும்' என்றனர். இறைவனூர், திருவாய் மலர்ந்தருளுகின்றூர். க என்பது பிரமம்; பிரமமாகிய யாம் அஞ்சிக்கப் (வழிபடப்) படுதலாலும், பெண்களுடைய உந்திக்குக் காஞ்சி யென்னும் பெயருண்மையின், பூமிதேவிக்கு உந்தித்தானம் இத்தலமாதலாலும், க என்பது சிரசு, பிரமன் எனப்பொருள்படுதலின், யாவரும் சிரமேற்கொண்டு அஞ்சிக்கப் படுதலாலும், பிரமனூல் அஞ்சிக்கப்படுதலாலும் இத்தலம் காஞ்சி எனப்படும். பிரமன் அஞ்சித்தலால் பிரமபுர மெனவும், முத்திக்குரியவரே தேவராதலின் அத்தகைய சிவன் முத்தர்கள் வாழ்தலால் தேவபுரமெனவும், வினைகளால் போர்செய்தல் கூடாமையால் அயோத்தி எனவும் கூறப்படும். இயமனுக்கு அஞ்சுவோரும், இகபரங்களை அடைய விரும்பினேரும் இத்திரு

நகரத்தில் நம்மைப் பூசிக்க எழுந்தருளியிருப்போம். ஆகையால் இஃது உத்தமமான தலமாகும்.

இம்மாமரத்தினை வேர் மேலாகவும், கிளை கீழாகவும் பாவித்தவர்கள் மோட்சத்தை அடைவார்கள். கம்பையாற்றின் கரையில் வேதமே மாமரமாக விளங்குகின்றது. மற்றைப் பதினைந்து வகையான கல்வியும் அதன் மேல் மல்லிகைக் கொடியாகப் படர்ந்திருக்கின்றன. அவ்வித்தைகட்குத் தலைவியாகிய காமாட்சி அக்கொடிக்கு இனியவளாவாள். மாமரத்திற்கு யாம் உரிமையுடையோம். வேதம் நம்மை யுணர்த்தும் வாசகமாதலால், வாசகத்திற்கும் வாச்சியத்திற்கும் வேறுபாடின்மையால் இம்மாமரத்திற்கும் நமக்கும் வேற்றுமை இல்லை. எல்லாப் பெயர்களும் நமது பெயர்களே யாகும். அவைகளில் சிறந்தன பவன் முதலிய பெயர்கள். அவைகளினும் சம்பு, மயோபு, சங்கரன், மயக்கரன், சிவன், சிவதரன் என்னும் பெயர்கள் சிறந்தன. அவைகளிலும் ஏகாம்ரநாதன் என்பது எமக்கு மிக இனியதாகும். இத்தன்மையால், புதல்வர் முதலியோர்க்கு இப்பெயரிட்டு அழைப்பவர்களுக்கு வினைகளை எல்லாம் போக்கிச் செல்வத்தையும் முத்தியையும் கொடுப்போம் என்றருளினர்.

அதற்குப்பின், திரிமூர்த்திகள், 'கம்பாநதி என்று ஒரு நதி இங்கு இருப்பதாகக் கூறினீர்; அக்காரணத்தை அறியோம்' என்றனர். ஏகம்பநாதர் அருளுவார். அட்டமூர்த்தமாகிய நமக்கு நீர் ஒரு வடிவமாகும். அது இங்கு உலகம்உய்ய நதியுருவங்கொண்டு செல்கின்றது. அது எம்மைப் போலவே யாவர் கண்ணுக்கும் புலப்படாது. யாம் யோகியர் உளத்திலிருப்பதுபோலப் பூமியினுள்ளே அந்தர் வாகினியாய்ச் செல்லுகின்றது. கம் என்பது தூய்மை, உண்ணல், காத்தல் எனப் பொருள்படுமாகலின், கங்கை முதலிய நதிகள் இதில் முழுகித் தம்மிடத்து வந்து முழுகுகின்றவர்கள் பாவமும் உடலழுக்கும் நீங்கித் தூய்மை பெறுதலாலும், சிரசில் பட்டால் தூய்மை செய்தலாலும், உயிர்களைக் காத்தலாலும், முத்தியை அனுபவிக்கச் செய்தலாலும் இந்நதி கம்பாநதி எனப்பட்டது. எந்நதிகளும் இதற்கிணையாகா. இதன் காற்றுப் பட்ட புல் மரங்களும் முத்தியடையும். அதன் கரையிலிருக்கும் மரம் முதலியன உருத்திர லோகத்திலிருந்து தவறிய உருத்திரர்களாம். எவ்விடத்தில் இறப்பவர்களுக்கும் இறக்கும்போது இதன்நீர் தலையிற் பட்டால் தேவராவார்கள். இதன் நீரை உண்போர் நம்முடனுறதலாகிய முத்தியைப் பெறுவர். இந்நதியினும் காஞ்சியினும் எமக்குள்ள விருப்பம் கங்கையினும் காசியினும் இல்லை; இஃது உண்மையாகும் என்றருளிப் பின்னும் அருளிச்செய்கின்றார்.

இந்நகருக்குப் புவனசாரம், மும்மூர்த்தி வாசம், விண்டுபுரம், காஞ்சி, கலிசித்து, இலயசித்து, சகல சித்திபுரம், தபோமயம், பிரமபுரம், ஆதிபீடம், கன்னிகாப்பு, சிவபுரம் என்று பன்னிரண்டு பெயர்கள் உள்ளன. இப்பன்னிரண்டு பெயர்களையும் விடியற்காலையில் எழுந்து கூறினால், தீக்கனுக்கண்ட தீமையும், நோயும், வறுமையும் நீங்கி எமது திருவருளை அடைவார்கள் என்றருளினர்.

அதனைக் கேட்டு மகிழ்ந்த மும்மூர்த்திகள் வணங்கி, 'இனி அடியேங்கள் செய்யும் பணியைக் கட்டளையிட வேண்டும்' என்றார்கள். அதற்குத் திருவேகம்பப் பெருமான், 'வண்டுக் கூட்டங்கள் தேனை உண்கின்ற சோலையில் கிளிகள் தமிழ்மறைப் பாடல்களைப் பாடும் காஞ்சியம்பதியில் எம்மை வேத விதிப்படி பூசித்துப் படைத்தல் முதலிய முத்தொழில்களையும் செய்வீர்களாக' என்றனர். பிரமன் முதலியோர் 'வேதமாவது யாது? அது வந்தவழி யாது?' என்று கேட்க, இறைவனார் கூறுகின்றார்.

'யாம்உலகத்தைப் படைக்கக் கருதியபொழுது, இவ்விலிங்கத்தை இடமாகக் கொண்டிருந்து வேதங்களை உண்டாக்கினோம். அவைகள் நம்மைத் துதித்து, எம்மைத்தேவரீர் அணியாகக் கொள்ளவேண்டும் என்றுவேண்டின. அவ்வாறே அவைகளை யாம் கோவணம் சிலம்புகளாக அணிந்து, ஞானத்தையுணர்த்துவது வித்தென்னும் தாதுவாதலால் ஞானத்திற்கு ஏதுவாகிய நீவிர் வேதமெனப் பெயர்பெற்று உலகிற்குச் சிறந்த பிரமாணமாய்த் திகழ்க; எங்கு நாம் எவ்வுருவாய் வருகின்றோமோ அங்கு நீங்கள் அதற்குப் பொருந்திய உருவமாக வருக என்று முன்னாளில் அருளிச்செய்தோம். அதனால்தான் இங்கு மாமரமாக வந்தன. வேடுவ உருவம் முதலிய உருவங்களை நாம் கொண்டபொழுது அவைகள் நாய் முதலிய உருவங்களை யடைந்தன' என்று கூறியருளினர்.

மும்மூர்த்திகளும் அவ்வாறே தனித்தனி இலிங்கம் அமைத்து வேத விதிப்படி பூசித்தார்கள். காமாட்சியம்மையார் மூல இலிங்கத்தைப் பூசித்தனர். பிரமன் தூய சிந்தையோடு பூசித்தமையால் அவ்விலிங்கம் வெள்ளக்கம்பம் எனப்படும். அதனை வழிபடுவோர் தூயராவர். இது மூல இலிங்கத்தின் தெற்கில் உள்ளது. மாயோன் உலகத்தை மயக்க விரும்பிப் பூசித்தமையால் அவ்விலிங்கம் கள்ளக் கம்பம் எனப்படும். இது மூல இலிங்கத்தின் வடக்கில் உள்ளது. அதைப் பூசித்தோர் மயக்கத்தில் அகப்படார். உருத்திரர் இறைவனோடு ஒருமைபெறப் பூசித்தது நல்லகம்ப மாகும். அதனை வழிபடுவோர் இறைவன் திருவடி நீழலை அடைவார்கள். மும்மூர்த்திகட்கும் அவர்கள் வேண்டிய வரங்களைப் பெருமான் அருளினர்.

இறைவியார் பூசித்து, தேவரீர் யோகியர்கள் உள்ளத்திலிருப்பினும் இம் மாவடியில் யாவர்க்கும் காட்சியளிக்கவும், இக்கம்பாநதியும் இங்கு ஓரிடத்தில் யாவர்க்கும் தோன்றவும் வேண்டுமென வேண்டினூர். பெருமான் அவ்வாறங்களை யளித்து, சிதாகாச ரூபம் நீயும் சிதாகாசரூபி நாமுமாதலால், சிதாகாசமாகிய இந்நகரிலுள்ள பிலத்தில் நாம் இருவரும் வாழ்வோம். அதிலும் சிறப்பாக இவ்விலிங்கத்தில் வாழ்வோம். இங்கு நம்மை வணங்குவோர் பிலத்தினிடமாக உன்னையும் வணங்கக்கடவர். இக் காஞ்சியே நமக்குத் திருமேனியாகும். இங்கு மற்றைத்தேவர்கள் தோன்றியும் தோன்றாதும் வசிப்பார்கள். உலகமெல்லாம் இந்நகரத்திற்கு உறுப்பாகும். இங்கு நல்லகம்பம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், மயானம், வாலீச்சர மென்னும் ஐந்திலும் பஞ்சப் பிரமமாய் விளங்குவோம் என்றனர். அம்மையார், 'வாலீச்சரமாவது யாது?' என்று கேட்க இறைவனூர் கூறுகின்றூர்.

### வாலீச்சரம்

கச்சிமயானத்திற்குக் கிழக்கே சித்தர்கள் வழிபட வாயுலிங்கம் தோன்றிற்று. அதனை வாலி வழிபட்டனன். வாலியாவான் யாரெனில்,முன்னொரு காலத்தில் இந்திரன்சபையில் நாடகமகளிர் ஆடும் ஆடலைக் காணவேண்டிச் சூரியன் தேர்ப்பாகனாகிய அருணன் சென்று, இடமில்லாமையால் பெண்ணுருக்கொண்டு, முன்னே நிற்கும் பெண்களோடு தானும் நிற்க, இந்திரன் கண்டு காமுற்று வலிதிற்பற்றித் தழுவ, அவ்விந்திரனது கூறாய்ப்பிறந்த வானரவீரனாவான். பின்னர் அருணன் சூரியன்பால் சென்றபோது சூரியன் அருணனை அவ்வடிவத்தைக் காட்டச்செய்து தழுவச் சுக்ரீவன் பிறந்தான். அதுநிற்க, இந்திரன் வாலிக்குக் காஞ்சியின் பெருமை கூறிவிடுப்ப, வாலி இவண்வந்து மேற்கூறிய வாயுலிங்கத்தை வழிபட்டு, தன்னைப் போரில் எதிர்த்தவர்கள் பலத்திற் பாதி தான்அடையவும், வானர வீரர்களுக்கு அரசனாகவும் நம்மிடத்தில் வரங்களைப் பெற்றனன். பின்பு, அவ்விலிங்கத்தைத் தன் இருப்பிடத்திற்குக் கொண்டுபோக நினைத்து, எடுத்தபோது பெயர்க்க முடியாமையால் தனது வாலால் அதனைச் சுற்றித் தனது பலம் முழுவதுங்கொண்டு இழுத்தகாலையில் வால்அறுந்து அலறித் தூரத்தே விழுந்து பின் எம்மைத் துதித்தனன். யாம் அவனுக்கு முன்னேதோன்றிக், 'காஞ்சியை விட்டு யாம் நீங்கோம்' என்று கூறி, இலிங்கத்தில் மறைந்தருளினோம்.

அன்றுமுதல் அது வாலீச்சரமென்னும் பெயரைப் பெற்றது. பஞ்சதீர்த்தத்தில் முழுகி, இப்பஞ்சலிங்கத்தை வணங்கினோர் பிறவியினின்றும் நீங்குவர் என்று அருளிச்செய்து, அம்மையாரோடும் மும்மூர்த்திகளோடும் இறைவனூர் திருவேகம்ப இலிங்கத்தில் மறைந்தருளினூர். அத்தலத்தின் பெருமை முழுவதும் யாவர்கூறவல்லுநர்!

# தழுவக் குழைந்த படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கம்ப மால்கரி உரித்தவர் சிரமேற் கம்ப தித்தவர் பசும்பொழில் தலத்துக், கம்ப லம்விரித் தெனமலர் பரப்புங் கம்பம் மேவிய தொரு சிறி துரைத்தாம், கம்ப லைத்ததிர்த் தெழுந்துமீக் கடுகுங் கம்பை மாநதிப் பெருக்கினைக் காணூஉக், கம்பம் உற்றுமை தழுவமெய் குழைந்த கருணை மேன்மையுங் கட்டுரைத் திடுவாம். க

பிரமன் செயல்

பொற்ற தாமரைப் பொகுட்டணைக் கிழவன் புகுத லுற்றதற் புருடகற் பத்தில், பற்றும் வைகறைத் துயிலொழிந் திமயப் பாவை பாகனர் அடிதொழு தெழுந்தான், முற்றும் வெள்ளநீர்ப் பரப்பிடை அவனி முழுதும் ஆழ்ந்தது கண்டுளங் கவன்று, மற்றி னிச்சக அகிலமும் படைக்கும் வண்ணம் யாதென மயங்குறும் பொழுது.

பூதி மேனியார் திருவருள் கூடிப் புரிந்த முன்நிகழ் உணர்ச்சி வந் தெய்த, ஆதி கற்பத்தில் எதிர்எழுந் தருளி அண்ண லார்கற்பந் தொறுந்தொறும் நின்பால், சோதி சேர்எழிற் குமாரநல் வடிவால் தோன்றி நாம்உனக் கருளுதும் என்னுப், பேதி யாவகை தனக்கு முன் அளித்த பெருவ ரத்தினைத் தெளிந்தனன் பிரமன். ௨

அன்ன தன்மையின் இன்றும்அங் கவரே அருள்செய் வாரெனத் துணிபுடை மனத்தால், தன்னு தற்றலத் தடியிணை கருதித்

---

க. கம்ப மால் கரி - அசைதலையுடைய மதமயக்கம் பொருந்திய யானை; கம்பத்திற் கட்டப்படும் யானை எனவும் கூறுவர். கம் பதித்தவர் - நீரைவைத்தவர். கம்பம் மேவியது - திருவேகம்பத்தில் எழுந்தருளிய வரலாறு. கம்பலைத்து - ஆரவாரித்து. கம்பமுற்று - நடுக்கமடைந்து.

உ. பொற்ற - அழகிய. புகுதலுற்ற - அடைந்த. தாமரைக் கிழவன் கற்பமென இயையும். துயிலெழுங்கால் தற்புருட மந்திரத்தைக்கூறி எழுந்தமைப்பற்றித் தற்புருட கற்பமாயிருத்தல் வேண்டும். துயிலெழுந்து என்றமையால் இது நித்தியகற்பமாதலறிக.

௩. நுதல்தலம் என்றது புருவமத்தியத்தை. சென்னி ஆற்றினர் - சிரசில் கங்கையையுடையவர். உருத்திர காயத்திரி - ருத்திரகாயத்திரி

தவங்கள் பல்பக லாற்றுழித் திகழுஞ், சென்னி ஆற்றினர் உருத்திர காயத் திரியி னேடெழிற் குமாரநல் வடிவாய், முன்னர் எய்திட நோக்கிஅம் மனுவான் முதல்வ னார்தமை உணர்ந்துகை தொழுது.

ஏற்ற தற்புரு டற்குற நினைதும் எமக்கு ருத்திரன் அருளுக என்னும், ஆற்றல் சான்றகா யத்திரி மனுவை அனைத்தும் ஆக்கு வான் முறையுளி கணித்துப், போற்ற வார்ந்திழி அருவியங் குவட் டுப் பொருப்பு வில்லவர் கருணைகூர்ந் துலகந், தோற்று மாறருள் கொடுத்தெழுந் தருளத் தோட்டு வெண்மலர்க் கலைமகள் துணைவன்.

ஒருமை அன்பின்அப் புருடனை நினைந்தாங் குலகம் ஆக்குழி ஆண்மையே தோன்ற, முருகு லாங்குழற் பெண்மையும் படைப் பான் முயன்றும் எய்திலன் புந்தியின் தேர்ந்து, புருட னுக்கெனத்

---

மந்திரத்திற்குரிய தேவி. அம்மந்திரம், "தத்புருஷாய வித்மஹே மஹாதேவா யதீமஹி தந்நோருத்ர ப்ரசோதயாத்" என்பது. இதன் பொருளை வரும் செய்ய ளிற் காண்க.

ரு. ஏற்ற - பொருந்திய. 'தற்புருடற்கு.........அருளுக' என்பது அம் மந்திரத்தின் பொருளாம். அதனுள், 'உற' என்பது (எமது நினைவு)பொருந்த எனப் பொருள் தந்து, தற்புருடனுக்கு என்னும் நான்காம் வேற்றுமைக்குப் பயனிலையாக ஆசிரியரால் தந்துரைக்கப்பட்டது. இவ்வாறே முன்னருந் தந்துரைத்தல் காண்க.

சூ. அப்புருடன் என்றது தன்முன் தோன்றிய குமாரவடிவ இறைவனை. ஆணென்றது ஆண்மை என்றமையால், எப்பிறப்பினும் ஆண் பெண்ணென வேறு நிற்பனவன்றி, அவ்விருதிறப்பொருள்களில் தனித்தனியும் ஆண்மை பெண்மை என்னும் இருதன்மையும் உள்ளனவென்பதும், அவ்விருதன்மை யின் கலப்பினலேயே எப்பொருளும் நிலைபெறும் என்பதும், அவற்றுள் பெண்தன்மை தோன்றுது ஆண்தன்மையே தோன்றிற்றென்பதும் பெறப் படும். உலகத்தில் எப்பொருள்களினும் அம்மையப்பராய் ஒருடம் பிருவராகி நிற்கும் சத்தி சிவங்களின் தன்மை தோன்ற நிற்கும் என்பதை, "சத்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலக மெல்லாம் ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியுமாகி வைத்தனள்" (சித்தி - சு. க. செ. சூகூ.) என்பதனு லுணர்க. (பக் ௧௬௩ காண்க.) தற்பொருட்டு எய்தும் பொருள் என் றது 'தனக்கு' என நான்காம் வேற்றுமையாகப் பொருந்தும் பொருள் என்ற வாறு. பொருண்மை என்றது ஆகுபெயராய் அதனையுடைய மேற்காட்டிய மந்திரத்தை உணர்த்திற்று. சகத்திர நயனம் - ஆயிரங்கண். 'சகத்திர நயன...

தற்பொருட் டெய்தும் பொருண்மை நீத்தனன் சகத்திர நயனப், புருடன் றன்னுடைப் பேரருள் நினைகேம் உருத்தி ரப்பிரான் எமக் கருள் புரிக. கூ

என்னும் வேறுகா யத்திரி மனுவை எழிற்பு ணர்ச்சியின் உல கம்உண் டாக்க, மன்னு சீர்க்கிழ மைப்பொருள் வாய்ப்பக் கணித்து மாதவம் புரிவுழி வகிர்நாப், பன்ன கம்புனை சடைமுடிப் பிரானர் பாதி பெண்ணுருத் திகழ்தரு வடிவான், முன்னர் எய்திஇம் மனு வினைக் கணித்தாய் முளரி வாழ்க்கைநீ வேட்டது தெளிந்தேம். எ

நினக்கு நாயகி இவள்எம திடப்பால் நின்று நீங்குபு தன்னொரு கூற்றால், உனக்குப் பெண்உருப் படைத்திடும் ஆற்றல் உதவும் என்றுரைத் தருளஅக் கணமே, தனக்கு நேர்வரும் பிராட்டியும் ஆங்குத் தணந்து தோன்றுபு தன்ஒரு கூற்றின், வனப்பு மிக்கவே றணங்கினைப் படைத்து மலர்ப்பொ குட்டணை யவற்கிது வகுப்பாள்.

இவளை நாள்தொறும் நீவழி பட்டுப் பெண்கள் யாரையும் படைத்திஎன் றியம்பி, அவளை நோக்கிநின் கூற்றினிற் பெண்கள் அனைத்தும் நீபகுத் திடுகென அருளித், தவள முண்டகக் கிழத்தி தன் கொழுநன் றனக்கு நல்கித்தன் தலைவரை மணந்தாள், கவள வெங்கரி உரித்தவர் தாமுங் கருணை செய்துபோய்க் கயிலையைப் புக் கார். கூ

---

.........அருள் புரிக' என்பது வேறொரு காயத்திரி மந்திரத்தின் பொருள். அம்மந்திரத்தை வருஞ்செய்யுளுரையிற் காண்க.

எ. வேறு காயத்திரி மந்திரமாவது: 'ஸஹஸ்ராக்ஷஸ்ய புருஷஸ்ய வித் மஹே மஹாதேவஸ்ய தீமஹி தந்நோ ருத்ரப்ரசோதயாத்' என்பது கிழமைப் பொருள் - சம்பந்தப் பொருள். இஃது ஆறும் வேற்றுமைக்குரியது. தற்புரு டனுக்கு என்னும் பொருளுடைய மேற்கூறப்பட்ட காயத்திரியைச் செபிக் குங்கால் ஆண்கூறாகிய இறைவனையே நினைந்தமையின் ஆண்தன்மையே தோன்றிப் பெண்தன்மை தோன்றிற்றிலது என்றறிந்து அதனை விடுத்து, புருடனுடைய என்னும் பொருளுடைய இம்மந்திரத்தைச் செபிக்குங்கால் பெண்கூறாகிய அவ்விறைவனது சத்தியையும் உடன்நினைக்க வேண்டுதலின், அஃது இரண்டும் தோன்றுதற்கு ஏதுவாம் என்றறிந்து செபித்தனனாகலின், இறைவன் அம்மையப்பராய்த் தோன்றி அவன் விரும்பியவண்ணமே அருளப் பெற்றனனென்க.

அ. நாயகி - இறைவி. கூறு - அம்சம்.

புக்க பின்தனைத் தொழுதுபோற் றிசைக்கும் போதி ஞானஅவ் வளைக்கையாய் நோக்கி, நெக்க சிந்தையோய் நினக்கியான் புரியும் நிகழ்ச்சி யாதென மலரவன் வணங்கித், தொக்க பேரருள் எந்தையா ரிடத்துத் தோன்றும் அன்னைநீ பெண்ணுரு முழுதுந், தக்க வாப டைத் தருள்கதில் லன்றேற் படைக்கும் ஆற்றலென் றனக்கருள் புரியாய். ௧௦

இறைவி தக்கன் மகளாதல்

உம்பர் போற்றுநின் திருவடிப் பொடியை உச்சி மேல்கொண்டு நான்படைக் கின்றேன், அம்பை இன்னம்ஓர் விண்ணப்பம் உளதால் அடிய னேன்பெறு தக்கன்றன் மகளாய், இம்பர் நீஅவ தரித்திடல் வேண்டும் என்று வேண்டலும் உலகம் ஈன் றளிக்க, கொம்பர் நுண்ணிடை எம்பெரு மாட்டி கூர்த்த பேரருட் கருணையின் உணர்த் தும். ௧௧

முழுது மாய்உயிர்க் குயிரெனத் திகழும் முதல்உ ருத்திரன் என்றிடுஞ் சுருதி, தழுவி ஆங்கவன் இடப்புறம் மேவுஞ் சத்தி யான்அவன் சத்தியன் அதனால், தொழுத குந்திறல் அவன்திரு வடி வாம் தொல்ச கங்களின் இடப்புறம் எனதாம், பழுதி லாளநின் வடிவினைப் பகுத்துப் பாதி பெண்மைஆண் பாதியில் திகழ்தி. ௧௨

அண்ண லார்அருட் சத்தியுஞ் சிவனும் ஆய தன்மையின் அன்றுதொட் டுலகம், பெண்மை ஆண்மைஎன் றிருவகைப் புணர்ப் பாற் பெண்ணும் ஆணுமாய்ப் பிறங்கும்என் றியம்பிப், பண்ணை மாமறைக் கடவுளுக் கருளிப் பாவை அம்பிகை ஆயிடைக் கரந்து, மண்ணெ லாம்உய்யச் சதிஎனும் பேரால் வயங்கு தக்கனுக் கொரு மக ளானாள். ௧௩

ஆய நங்கையை விதியுளி அரனார்க் களித்து நான்முகன் அன்ன ணந் திகழ, மாயி ருஞ்சகம் ஆணொடு பெண்ணாய் வயக்க முற்றன

---

௧௦. யாய் - தாய். தில், விழைவுப்பொருளில் வந்தது.

௧௧. அம்பை - இறைவியே. கூர்த்த - மிகுந்த.

௧௨. திகழ்தி என்றது, அது நான் எனப்பாவிக்கும் சோகம் பாவனை; யால் விளங்குக என்றதாம்.

௧௩. அண்ணலார் ஆய தன்மையின் என இயையும். பண்ணை-கூட்டம்.

அகிலநா யகியும், பாயும் வெள்விடைப் பாகரை மணந்து பழித்த தக்கனை வெறுத்தவன் மகண்மை, மேய மேனியை நீத்திம கிரிக்கு மேனை பால்மக ளாய்அவ தரித்து. ௧௪

அங்கண் மேவிய பிஞ்ஞகன் ஏவற் பணியின் மேவின ளாகமற் றந்நாள், பங்க யத்தவன் நல்கிய வரத்தால் தாரு காசுரன் எனப் பயில் கொடியோன், பொங்கும் ஆண்மையின் உலகெலாம் வருத்தப் பொன்ந கர்க்கிறை சுரவனை முதலோர், தங்கு மூதத்தொடும் உசாவிநான் முகத்தோன் றன்னை எய்திஅக் கொடுந்தொழில் இயம்பி. ௧௫

எந்தை நீஇது தீர்திறம் புகல்என் றிறைஞ்சி வேண்டலுந் திசைமுகப் புத்தேள், அந்த வெந்திறல் தாருகன் செருக்கை அடக் கும் ஆண்மையன் முருகவேள் அன்றிக், கந்த மென்றொடைக் கடவுளர் ஏனோர் வல்ல ரல்லர்அக் கந்தனைத் தருவான், இந்து சேகரன் உமையினை மணக்கும் உபாயம் நீபுரி கெனவிடை கொடுத் தான். ௧௬

மீண்டு வாசவன் மாரனை நினைப்ப வேனில் வேள்சிலை பகழி கைக் கொண்டு, காண்ட குங்கவின் இரதியும் மதுவும் மருங்கு மேவரக் கடுகிவந் திறைஞ்சி, ஈண்டு நின்னருள் ஆணையின் வழியால் யாதும் ஆற்றுவல் செய்பணி அருளாய், மாண்ட முப்புரம் பொடித் தவர் தமையும் வெல்ல வல்லுநன் மற்றுரை யெவனோ. ௧௭

ஈதி யம்புழி இந்திரன் உவகை எய்தி விண்ணவர் இடும்பையும் அவுணன், நீதி யில்லன புரிவதும் மலரோன் நிகழ்த்தும் மாற்ற மும் வகுத்துரை செய்து, பேதி யாவகை பெருந்தகை இன்னே பிஞ்ஞ கன்றனை உமையொடுஞ் சேர்த்தி, போதி என்றலும் ஐங் கணைக் கிழவன் பொன்ந கர்க்கிறை விடைகொடு மீண்டான். ௧௮

---

௧௪. பழித்த தக்கனை வெறுத்தமையை மேலே தக்கேசப்படலத்திற் காண்க. இப்பிரமன் செயல், ‘இறைவனை அம்மை யப்பாகவே தியானித்தல் வேண்டும்’ என்னும் உண்மையை விளக்கும்.

௧௭. மது - வசந்தன்; இவன் மன்மதனது தோழன்.

௧௮. பெருந்தகை, அண்மை விளி.

இறைவன் இறைவியை மணத்தல்

மீண்டு செம்மலார் இருந்துழி அணுகி மெல்ல வெஞ்சிலை வாங்கலும் அவனை, மாண்ட குந்திரு நுதல்விழி நெருப்பின் மடுத்து வார்குழல் இரதியின் இரப்பக், காண்ட காவகை உருவிலி யாக்கிக் கடுந்த வம்புரி மலைமகள் மணந்து, தூண்டு வேற்படைக் குரிசிலை உதவித் தாரு கன்றனைத் தொலைத்தருள் செய்தார். ௧௯

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஆங்கதன் பின்னர்ச் செங்கேழ் அலங்கொளி வடிவின் நஞ்சந்
தூங்கிய மிடற்றி னாருஞ் சுரிகுழல் இமய மாதும்
ஓங்குயர் பலவுஞ் சந்தும் வேரொடும் ஒடியத் தள்ளி
வீங்கொலி அருவி தாழும் மந்தர வெற்பின் மேலால். ௨௦

உலகெலாம் உய்யு மாற்றால் உவளகத் தைந்து மூன்றாச்
சிலதியர் அடுக்கி யிட்ட செழுந்தவி சணையின் மன்னி
விலகரு மகிழ்ச்சி மீதூர் திருவிளையாடற் செய்கைக்
சலவியின் நயந்து தம்முட் களித்தினி திருக்கும் எல்லை. ௨௧

கலிநிலைத் துறை

மும்மைப்புவ னங்களுஞ் செய்தவப் பேறு முற்றச்
சும்மைத்திரை நீருடை மேதினி தோற்றம் எய்தச்
செம்மைத்திசை எட்டினுந் தென்றிசை மிக்கு வெல்ல
மம்மர்த்தொகை நூறிய வண்டமிழ் நாடு வாழ. ௨௨

நலம்மன்னிய தண்டக நாடு செழித்து மல்கப்
பலரும்புகழ் காஞ்சி வளம்பதி மேன்மை சாலக்

---

௨௦. அலங்கு - விட்டு விளங்குகின்ற. பல - பலா மரம். சந்து - சந்தன மரம். தாழும் - ஒழுகுகின்ற.

௨௧. ஐந்தாகவும், மூன்றாகவும் அடுக்கிய அணை என்க. சிலதியர் - பாங்கியர்.

௨௨. இதுமுதல் நான்கு செய்யுட்கள், திருஞானசம்பந்தர் திருவவதாரத்தைக் கூறுமிடத்துள்ள சேக்கிழார் நடையைக் கொண்டுள்ளன. சும்மை - ஒலி. தோற்றம் - புகழால் விளங்குதல். மம்மர்த்தொகை - மயக்கக் கூட்டம். நூறிய - போக்கிய; இது தமிழுக்கு அடை; நாட்டிற்கு ஆக்கலுமாம்.

௨௩. தண்டகனென்னும் அரசன் ஆண்டமையின் தொண்டைநாடு

குலவுஞ்சம யங்களொ ராறும் மகிழ்ச்சி கூர
உலகெங்கணும் வைதிக சைவம் உயர்ந்து மன்ன. ௨௩

எவ்வெத்தவத் துஞ்சிவ பூசனை ஏற்றம் என்னப்
பௌவப்புனல் சூழ்படி மேலவர் தேறி உய்யத்
தெவ்வுத்தொழில் பூணும் அறக்கடை தேய நல்கூர்
எவ்வத்திறம் நீங்கி உயிர்ப்பயிர் எங்கும் ஓங்க. ௨௪

முப்பான்முத லிட்ட இரண்டற முந்த ழைப்ப
எப்பால்உல கத்தொளி யாவையும் எம்பி ரானார்
தப்பாவிழி யின்னொளிச் சால்பென யாருங் காண
அப்பார்சடை யார்அடித் தொண்டர் அகங்க ளிப்ப. ௨௫

இறைவன் திருக்கண்களை இறைவி புதைத்தல்

கைம்மிக்கெழு காதல் விருப்புமீ தூர்கு றிப்பின்
விம்மிப்பணைத் துப்புடை வீங்கி எழுந்த கொங்கைப்
பொம்மற்பெரு மாட்டி வெரிந்புறத் தெய்தி வல்லே
செம்மற்பிறை வேணிய னார்திருக் கண்பு தைத்தாள். ௨௬

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருண்டபூங் குழலாள் செங்கை இறுகுறப் புதைத்த லோடும்
இருண்டகந் தரத்தார் நோக்கின் இருசுடர் மறைந்த வாற்றால்
இருண்டது புவனம் முற்றும் இருண்டஎண் டிசையும் என்றும்
இருண்டறி யாத விண்ணோர் இருக்கையும் இருண்ட தந்நாள். ௨௭

அழுங்கவே தன்னை நாளுங் காய்ந்துலாம் அருக்கர் தம்மோ
டொழுங்குறத் திரட்டி நீட்டிச் செருங்கவைத் திட்டா லொக்குஞ்

---

தண்டகநாடு எனப்பட்டது. வைதிகசைவ மென்பதற்குப் பொருள் மேலே (பக் ௬௩௩.) கூறினும்.

௨௪. தெவ்வு-பகை. அறக்கடை-பாவம். எவ்வத்திறம் - துன்பப்பகுதி.

௨௫. முப்பத்திரண்டறங்கள் இவை என்பதை முன்னர்க் காண்க. அப்பு ஆர் சடை - நீர் பொருந்திய சடை.

௨௬. பொம்மல் - பொலிவு. வெரிந் - முதுகு.

௨௭. கந்தரம் - கண்டம். தேவருலகு எப்பொழுதும் ஒளியுடைத்தாகலின், 'என்றும் இருண்டறியாத விண்ணோர் இருக்கை' என்றார்.

௨௮. இரண்டாம் அடி கதிருக்கு அடை. செழுமை - வளம். உடு - நட்சத்திரம். திரளை - திரட்சி. விழுங்குதல் அவற்றின் ஒளியை அடக்குதல்.

செழுங்கதிர் மதியஞ் செந்தீ உடுமணித் திரளை யெல்லாம்
விழுங்கித்தன் வீறு காட்டிப் படர்ந்தது திமிர வீக்கம். ௨அ

சிறைபடு கூகை யாதி கருங்கொடித் திரள்க ளொத்த
மறமலி புலிக ளாதி வானரக் குலங்க ளொத்த
நறைகமழ் குமுதப் போதும் நளினமுந் தம்மு ளொத்த
உறுதுயர் நேமிப் புள்ளுஞ் சகோரமும் ஒருங்கே யொத்த. ௨௯

அலர்தலை உலகங் காணார் அதற்படு பொருள்கள் காணார்
நிலைபெறு தத்தம் யாக்கை நீர்மையுங் காணார் முந்நீர்க்
கலிதிரை வரைப்பி னோருங் கண்டறி யாத வானத்
தலைவருந் திமிரம் ஒன்றே தணப்பறக் காண்டல் பெற்றார். ௩0

இறந்தது படைப்பின் ஆக்கம் இகந்தன வேள்விச் செய்கை
பறந்தன தவந்தா னங்கள் பறைந்தன கடவுட் பூசை
துறந்தன கலவி இன்பந் தொலைந்தன அறிவின் தேர்ச்சி
மறந்தன மறைநூற் கேள்வி மயங்கின உலக மெல்லாம். ௩௧

இறைவி கைநீப்ப இறைவன் கண்திறத்தல்

கடவுளர் முனிவர் மக்கள் யாவருங் கவன்றுங் காங்குப்
படலைவல் லிருளின் மூழ்கிப் பதைபதைத் தாவா வென்னக்

---

திமிர வீக்கம் - இருளின் மிகுதி. 'திமிர வீக்கம் அருக்கர் தம்மோடு மதியம் தீ உடு மணித்திரளை எல்லாம் விழுங்கிப் படர்ந்தது' என முடிக்க.

௨௯. கூகை - கோட்டான். கொடி - காக்கை. குமுதம் - ஆம்பல். நளினம் - தாமரை. நேமிப்புள் - சக்கரவாகப்புள். இருளின் மிகுதியால். இரவில் உலவும் கூகையும் புலி முதலியனவும், இரவில் உலவாத காக்கையும், குரங்கும் போன்றன. நிலவு இல்லாமையால், இரவில் மலரும் ஆம்பல் இரவில் மலராத தாமரைபோல் மலராமலும், நிலவையுண்ணும் சகோரப்பட்சிகள் சக்கரவாகப்புள்போல வாளாவும் இருந்தன.

௩0. அலர்தலை - விரிந்த இடம். அதற்படு - அதன்கணுள்ள. திரை வரைப்பினோர் - மண்ணுலகத்தார். வானத்தலைவர் - விண்ணுலகத்தார். தணப்பற - நீங்காமல்.

௩௧. பொருட்பின் வருநிலை. பறந்தன, பறைந்தன ஒருபொருட் சொற்கள்.

௩௨. ஆவா, இரக்கக்குறிப்பு. வெற்பின் மடவரல் - பார்வதி தேவியர்.

கடலொலிக் கிளர்ச்சி நாண முறையிடுங் காலை வெற்பின்
மடவரல் கரங்கள் நீப்ப மலர்விழி திறந்தார் ஐயர். ௫௨

அல்கின ஒளிகள் எங்கும் அஃகிய திருளின் வீக்கம்
மல்கின படைப்புங் காப்பும் வயங்கின அறத்தின் ஈட்டம்
பல்கின வேள்வி எங்கும் பரந்தன இறைவர் சீர்த்தி
புல்கின வேத வாய்மை பொலிந்தன உயிர்க ளெல்லாம். ௫௩

வெறிமலர்த் தளவ மூரல் விழியிணை மறைத்து நீக்குஞ்
சிறுபொழு துலகுக் கெல்லாம் எண்ணில்பல் லூழி சென்று
மறைநெறி படைப்புச் செய்கை யாதிய மறுத்த வாற்றால்
இறைவிதன் வதனம் நோக்கி ஏந்தலார் அருளிச் செய்வார். ௫௪

இறைவன் இறைவிக்குப் பணித்தல்

இருசுடர் தமக்கா தார மாகிய எமது கஞ்சத்
திருவிழி புதைத்த வாற்றால் படைப்பாதிச் செய்கை மாறி
உருகெழு தீமை நின்னை உற்றதால் அதற்குத் தீர்வு
மருமலர்க் குழலி னாய்நீ மரபுளி இயற்றல் வேண்டும். ௫௫

இகப்பருங் கருணை பூண்ட எமக்குநின் றனக்கும் நந்தம்
அகத்தடி யவர்க்கும் பாவம் அணுகுவ தில்லை யேனும்

---

கரங்கள் நீப்ப - கைகளை வாங்கிக்கொள்ள. மலர்விழி திறந்தார் - மலர் போன்ற கண்களைத் திறந்தனர்.

௫௩. அல்கின - நிலைபெற்றன. அஃகியது - சுருங்கியது.

௫௪. வெறி - வாசனை. மலர் என்றது அரும்பினை. தளவம் - முல்லை. மூரல் - பல். தளவ மூரல் என்பது, உவமத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் இறைவியை உணர்த்திற்று. ஊழி - ஊழியாக. சென்று, செல்ல என்பதன் திரிபு.

௫௫. உருகெழு - அச்சந்தரும். தீமை - பாவம். தீர்வு பிராயச்சித்தம். இத்திருக்கண் புதைத்த வரலாறு, 'எல்லா ஒளிகட்கும் காரணம் இறைவன் அருளுருவத்தின் ஒளியே' என்னும் உண்மையை விளக்கும். "நாயகன் கண் நயப்பால் நாயகி புதைப்ப எங்கும் - பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித் - தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பின்-தேயமா ரொளிக ளெல்லாம் சிவனுருத் தேச தென்னார்" (சித்தி. சு. க. செ. ௫௨.) என மெய்கண்ட நூலும் கூறுதல் காண்க.

௫௬. அகத்தடியவர் - அணுக்கத் தொண்டர், சிவ ஞானிகள். வருத்

வருத்தவா புரிதி எல்லாக் கருமமும் மரபி னல்யாம்
நிகழ்த்திய வாறே பற்றி நிகழ்த்திடும் உலகங் கண்டாய். ஙசு

என்றருள் செய்யக் கேட்டு நடுக்கமுற் றிறைஞ்சி நின்று
மன்றலங் குழலாள் கூறும் வள்ளலே கழுவாய்ச் செய்கை
என்றறி யாது செய்யுங் காலமே திடமே தெல்லாம்
நன்றெனக் கருளாய் என்ன நம்பனர் வருத்துச் சொல்வார்.

கலிநிலைத் துறை

வில்லிழை பூண்டி று மாந்தெழு கொங்கை விரைக்கோதாய்
அல்லன செய்துபின் அஞ்சுப வர்க்குறு கழுவாய்தாம்
நல்லற நூல்களின் மாதவர் நாட்டினர் அவையெல்லாஞ்
சொல்லிய தீர்வு மிகச்சிறு மைத்தது துணிவாயால். ஙஅ

எத்துணை வன்மை அறக்கடை முற்றும் இறச்செய்யும்
அத்தகு சீர்க்கழு வாய்எமை அன்பின் அருச்சித்தல்
சித்தம் ஒருக்கி நினைத்தல் பழிச்சுதல் பேர்செப்பல்
பத்தியின் எம்அடி யார்வழி பாடெனும் இவையாமால். ஙகூ

முற்றிய சீர்இரு முப்பரு வங்களும் முறையானே
அற்றமில் கால மெனப்படும் யாம்பெரி தானந்தம்

---

தவா - யாம்பணித்தபடி. கண்டாய் என்பது கட்டுரைச்சுவைபட நின்றது. ‘பாவம் அணுகுவ தில்லையேனும் யாம் நிகழ்த்தியவாறே பற்றி உலகம் நிகழ்த்திடும் (அதனால்) வருத்தவா புரிதி’ எனமுடிக்க.

ஙஅ. வில் இழை - ஒளிபொருந்திய ஆபரணம். அல்லன - பாவச்செயல். மாதவர் - முனிவர்கள். அவை எல்லாம் - அவை எல்லாவற்றிலும். தீர்வு - (பாவந்)தீர்தல். முனிவர் விதித்த பிராயச்சித்தங்களில் அவர்களால் தீருமென்று சொல்லப்பட்ட பாவத்தீர்வு மிகச் சிறுமையுடைத்து என்பதாம். மற்று, பெரிதுந் தீர்தற்குரிய பிராயச்சித்தம் யாதெனின், அது வருஞ்செய்யுளிற் கூறப்படும்.

ஙகூ. அறக்கடை - பாவம். எத்துணை வலிய பாவத்தையும் முழுதும் நீங்கச்செய்யும் பிராயச்சித்தமாவது, சிவபூசையும், சிவத்தியானமும், சிவதோத்திரமும், சிவனடியார் பூசையுமேயாம் என்பது இதன் பொருள்.

சுo. இருமுப்பருவம் - விடியல் முதலிய ஆறு காலங்கள். கழுவாயாவது யாது? அதனைச் செய்யும் காலம் இடங்கள் எவை? எனக்கேட்ட வின

உற்றுறை கின்ற இடங்கள் இடங்கள்எம் உறும்அன்பர்
பற்றிய தானமும் அத்தகை மைத்தென அறிபாவாய். ௪௦

ஆதலின் நாம்உறை வைப்பிடை யாயினும் எம்அன்பர்
மேதக வைகும் வரைப்பிடை யாயினும் மீப்பொங்குங்
காதலி னல்எமை அர்ச்சனை யாற்றுதி இதுகாணூஉப்
பாதலம் மண்ணகம் விண்ணம் உய்வது பண்பென்றார். ௪௧

என்றலும் அங்கணர் பங்கய பாதம் இறைஞ்சித்தாழ்ந்
தொன்றிய சிந்தையின் ஆளுடை நாயகி உரைசெய்வாள்
அன்றிய நெஞ்சுரை செல்லரு நீஅவ ரவர்தத்தம்
பொன்றும் உணர்ச்சியின் அர்ச்சனை பூணவும் எளிவந்தாய். ௪௨

நானும் மகிழ்ந்துனை அர்ச்சனை செய்யும் நலம்பெற்றேன்
தேனமர் கொன்றை மிலைச்சிய செஞ்சடை வள்ளால்நின்
ஊனமில் பூசனை செய்திறம் எத்திறம் உரைஎன்ன
ஆளுடை ஊர்தி அருட்கட லன்னவர் புகல்கிற்பார். ௪௩

கரிசறு நித்தநை மித்திக காமிய மெனமூன்றும்
உரிமையின் எம்அடி அர்ச்சனை ஏனைய உலகத்துப்

---

விற்குக் கழுவாயாவது இது என்று மேலைச் செய்யுளிற் கூறி, இச்செய்யுளில் ஆறுகாலங்கள் காலமும், யாம் மேவிய தலங்களும் நம் அடியார் விரும்பியுள்ள இடமும் இடங்களும் என்றருளியவாறும்.

௪௧. காணூஉ - கண்டு. உய்வது, எதிர்காலத் தொழிற்பெயர். பண்பென்றது நலமென்னும் பொருட்டு. பண்பென்புழி, 'ஆதலால்' என்பது சொல்லெச்சமாய் நின்றது.

௪௨. அன்றிய - மாறுபட்ட, சிவஞானத்திற்கு வேறான. நெஞ்சு உரை - மனம் வாக்கு. செல்லரும் - எட்டாத. ஆசிரியர், திராவிடமாபாடியத்துள், 'வாக்கு மனாதீதகோசரம்' (சி சூ. அதி.உ.) என்றவிடத்து, வாக்கு என்பதற்கு நாதமுடிவான பாசஞான மெனவும், மனம் என்பதற்கு அவற்றின் வேறாகிய பசுஞானமெனவும் உரைத்தமை ஈண்டுக் கருதற்பாலது. பொன்றும் உணர்ச்சி - சிற்றறிவு.

௪௩. கரிசு - குற்றம். ஏனையஉலகம் - மண்ணுலகொழித்த உலகங்கள். சிவபூசை நித்தம், நைமித்திகம், காமியம் என மூன்றாகும். அவைகளில், ஏனைய உலகத்தில் செய்யும் பூசை நித்தியமொன்றேயாம் என்பது இச்செய்

புரிதரு பூசனை நித்திய பூசனை யாம்அன்றித்
தெரிதரில் இன்னவை காமியம் நைமித் திகம்ஆகா. ௪௪

பொருவறு மூன்று முறும்கரு மம்புரி நிலமீதே
கருமநி லந்திகழ் பாரத மாம்வரு டங்கண்டாய்
திரைகெழு கீழ்க்கடல் மேற்கடல் சேதுவொ டிமயத்துள்
மருவிய மேதினி பாரத மால்வ ருடம்மாமால். ௪௫

இத்தகு பாரத மாம்வரு டத்தின் எமக்கான
உத்தம வைப்பின் விதிப்படி எம்மை இலிங்கத்தின்
முத்துறழ் வெண்ணகை முற்றிழை மூதல கெல்லாம்மெய்ச்
சித்தி பெறும்படி வல்லை அருச்சனை செய்கிற்பாய். ௪௬

காஞ்சியே தவம்செயற்கு இடமெனல்

என்றலும் ஆவயின் எண்ணில் தலங்களுள் எம்மான்நீ
நன்று மகிழ்ந்துறை மிக்குயர் நற்றலம் யாதென்னக்
குன்று குழைத்து வடிக்கணை பூட்டினர் கோல்கோடி
அன்றினர் இஞ்சி அழித்தருள் அங்கணர் தாம்சொல்வார். ௪௭

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஆயிடைநாம் மகிழ்ந்துறையும் திருப்பதிகள் பலகோடி அவற்றுள் மேலாம், ஆயிரத்தெட் டவற்றதிகம் ஒருநூற்றெட் டவற்றதிகம் அறுபத் தெட்டாம், ஆயினவற் றுயர்காசி காஞ்சிஎனும் இரண்டதிகம் அறிவான் மிக்கோர், ஆயின்அவை இரண்டுள்ளும் சாலநமக் கினியநகர் அணிநீர்க் காஞ்சி. ௪௮

---

யுளின் பொருள். நிலவுலகத்திற் புரிவது மூன்றுமா மென்பது வருஞ்செய்யுளிற் காண்க.

௪௫. கருமம்புரி நிலம் - கருமபூமி. கரும பூமியிற் செய்வது நித்திய முதலிய மூன்றுமாகும் என்பதும், கரும பூமியாவது பாரத வருடமென்பதும், பாரத வருடமாவது இமசேது கீழ்க்கடல் மேற்கடல் என்னும் நான்கெல்லைக்கு உட்பட்ட பூமியென்பதும் இதன்பொருள்.

௪௬. வைப்பு - தலம்.

௪௭. பூட்டினர் - முற்றெச்சம், கோல் கோடி - முறை பிறழ்ந்து. அன்றினர் இஞ்சி - பகைவர் மதில், திரிபுரம்.

௪௮. ஆயினவற்று - ஆகியவைகளில். ஆயின் - ஆராய்ந்தால்.

இவ்வண்ணம் தானங்கள் பலவகுத்த தெற்றுக்கேல் இயம்பக் கேளாய், மைவண்ண இருள்மலத்தின் இருவினையாற் பிணிப்புண்டு மருளின் மூழ்கி, உய்வண்ணம் அறியாத பசுக்கள்தமை அம்மலத் தின் உறாத நாமே, மெய்வண்ணப் பெருங்கருணைத் தன்மையினல் விடுவிக்க வேண்டு மாற்றுன். சகூ

மருவாரும் பூங்குழலாய் ஐவகைய சத்திகளை வகுத்துப் பின்னர், அருநான்கும் உருநான்கும் அருவுருவந் தான்ஒன்றும் ஆக ஒன்பான், திருமேனி தோற்றுவித்துத் தோற்றமுதல் ஐந்தொழி லும் செய்வான் உன்னி, இருவேறு மாயைகளின் உடல்கருவி இடம் அனைத்தும் உயிர்கட் கீந்து. ருo

உள்ளமுதல் விகாரத்தின் எய்தும் இரு வினைக்குரிய பிறவி காட்டிப், பள்ளநீர் நடுக்கிழ்மேல் ஊசலெனக் கொட்புறுத்துப் பருவம் நோக்கி, மெள்ளவினைப் பயன்ஊட்டி நஞ்சோடு சுவையமிழ்

---

சகூ. மருள் - மயக்கம்; ஒன்றை ஒன்றாக அறியும் விபரீத உணர்வு. 'அநாதியே பாசத்திற் கட்டுண்ட உயிர்களை அவ்வாறின்றி அநாதியே பாசத்தி னீங்கி நின்ற நாமே விடுவிக்க வேண்டுதலின்' என்க. இதுமுதல் மூன்று செய்யுள் குளகம்.

ருo. ஐவகைச் சத்தி: பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி என்பன. இவை: தீயின் சத்தியொன்றே அடும் சத்தி, சுடும்சத்தி முதலாகக் காரிய வேறுபாட்டால் வேறாதல்போல, இறை வன் சத்தியொன்றே உயிர்களை உய்வித்தல் வேண்டி ஐந்தொழில் செய்தற் பொருட்டுச் சிறப்பு வகையாக வியாபரிக்கும் வியாபார பேதம்பற்றி வெவ் வேறாம். ஒன்பான் திருமேனி - நவந்தருபேதம்; அவைகளை மேலே (பக், நடரு, நசா,) காண்க. ஐந்தொழில்: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. இருவேறு மாயை, சுத்தமாயை, அசுத்த மாயை. உடல் - தனு. கருவி - கரணம். இடம் - புவனம். அனைத்துமென்றதனுல் போகமுங் கொள்க.

ருக. விருப்பு வெறுப்புக்களாகிய உள்ளத்தின் விகாரமே இருவினைகட் குக் காரணமாதலானும், அவ்விகாரம் மனமுதலிய அந்தக்கரணங்களின் ஆவதாகலானும், 'உள்ளமுதல் விகாரத்தின் எய்தும் இருவினை' எனவும், இறைவன் வினைக்கீடான பிறப்பைக்கொடுத்து வினையை நுகர்விப்பனுகலின், 'கொட்புறுத்து வினைப்பயன் ஊட்டி' எனவுங் கூறினர். பள்ளநீர் நடு -

தும் விரவித் தீற்றித், தெள்ளுதவம் அறிந்தறியா துபாயத்தும் உண்மையினும் சேரச் செய்வேம். ருக

தீக்கையின் வகை

சரியையெனக் கிரியையென யோகமென ஞானமெனச் சாற்று நான்காம், இரியமலத் துகளறுத்து நமைக்காட்டும் அருந்தவங்கள் இவற்றிற் சேறற்*, குரிமைதரும் உயர்தீக்கை சமயமுதல் மூன்றவை தாம் உதவும் முத்தி, அரிலகன்ற எம்முலகத் துறலாதி நான் கென்ன அறையும் நூல்கள். ருஉ

தேக்கூறு தேமொழியாய் மலம்சீக்கும் தீக்கைபல விதமாம் அங்கண், நோக்கூறு மொழிஎண்ணம் நூல்யோகம் அவுத்திரியா நவனும் எழுள், மீக்கூறும் அவுத்திரிதான் வியன்கிரியை ஞான

கடல்நீர் சூழ்ந்த மண்ணுலகம். கீழ்மேல் என்றதும் அவ்வுலகங்களை. கொட்புறுத்து - சுழல்வித்து. தவமென்பது சரியை முதலிய சிவபுண்ணியங் களென்பதற்குத் தெள்ளு தவமென விசேடிக்கப்பட்டது. அறிந்து - புத்தி பூர்வமாயும். அறியாது - அபுத்தி பூர்வ மாயும். உபாயம், உண்மை என்னும் இருவகைச் சரியை முதலியவைகளை மேலே (பக். சஙஎ.) விளக்கினும். உயிர்கள் கன்மத்தை நுகர்ந்து கன்மத்தை ஈட்டுதற்கு இடையே புத்தி பூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் இருவகைச் சரியை முதலியவற்றை நிகழ்வித்தலை, 'நஞ்சோடு அமிழ்தும் விரவித்தீற்றி' என்றார். "வேம்பினொடு தீங் கரும்பு விரவிஎனைத் தீற்றி" (திருமு. எ. பதி. சஙு. உ.) என்னும் அருட்டிரு மொழியை ஆசிரியர் திராவிடமாபாடியத்துள் எடுத்துக் காட்டியிருத்தலுங் காண்க. (சு. அ. அதி. க) உபாயத்தும், உண்மையினும் என்பன ஏழாம் வேற்றுமைத் தொகையும் விரியுமாம்.

ருஉ. துகள் - குற்றம். மலத்துகளை இரிய அறுத்து நமைக்காட்டும் அருந்தவங்கள் நான்காம் என்க. அரில் - குற்றம். எம்முலகத்துறல் என்றது சாலோக பதமுறுதலை. சமய முதலிய தீக்கைகளையும், சாலோக முதலிய பயன்களையும் முன்னர்க் காண்க. * 'சேரற்' கெனவும் பாடம்.

ருஙு. தேக்கு ஊறு தேமொழியாய் - இனிமை மிகுகின்ற தேன் போலும் மொழியினையுடையவளே. சீக்கும் - போக்குகின்ற. தீக்கை என்னும் சொல்லுக்கு மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுக்குமென்பது பொருளாகலின், 'மலம் சீக்கும் தீக்கை' என்றார். நோக்கு - சட்சுதீட்சை; இஃது ஆசாரியன் சிவத்தியானத்தோடு மாணுக்கனைத் தனது கண்ணால் மலம் நீங்க நோக்குதல், ஊறு - பரிசதீட்சை; இஃது ஆசாரியன் தனது வலக்கை

மென இருபா லாய்முப், பாற்கூறு படுஞ்சமய விசேடநிரு வாணம்
எனும் பகுப்பி னாலே. ருஅ

மருவுபுறம் அகமென்னும் மதத்துழன்று வருணநிலை வழாது
நின்று, மிருதிமறை நெறிவேள்வி பலபுரிந்து வேதாந்தப்
பொருண்மை தேறி, வருமுறையான் இவையனைத்தும் முற்றியபின்
மேல்நோக்கும் மதியான் மிக்கோர், தெருளுதவு சைவநெறிப் படுஞ்
சமய தீக்கைதனக் குரிய ராவர். ருச

சரியாபாதமும் அதன்பயனும்

அவ்வாற்றான் யாமருவும் திருக்கோயில் அலகிடுதல் மெழுகல்
அன்பின், செவ்வாற்றான் மலர்கொய்து தார்மாலை தொடுத்தணிதல்

---

யில் சிவபெருமானைப் பாவனைசெய்து பூசித்து மாணக்கன் சிரசில் வைத்தலா
கிய அஸ்த மஸ்தக சையோகத்தைச் செய்தல். மொழி - வாசகதீட்சை; இது
பஞ்சாக்கரத்தை உபதேசித்தல். எண்ணம் - மானத தீட்சை; இஃது ஆசாரி
யன் தனது யோகாப்பியாசத்தால் மாணக்கன் இருதயத்துட் புகுந்து அவன்
அறிவில் சிவமாந்தன்மை விளங்கச்செய்தல். நூல் - சாத்திர தீட்சை; இது
ஞானநூலை ஓதுவித்தல். யோகம் - யோக தீட்சை; இஃது ஆசாரியன் மாணக்
கனுக்கு யோகாப்பியாசத்தை உபதேசித்தல். அவுத்திரி - ஔத்திரி தீட்சை;
இஃது அக்கினி காரியத்தால் அத்துவசுத்தி முதலியவற்றைச் செய்தல்.
இதுவே சிறந்த தீட்சையாதலின், 'மீக்கூறும் அவுத்திரி' என்றார். ஔத்திரி
தீட்சை கிரியாவதி ஞானவதி என்றிருவகைப்பட்டு, சமயம் விசேடம்
நிருவாணமெனத் தனித்தனி மூன்றுமென்றபடி இத்தீட்சைகளின் இயல்பு
களை எல்லாம் திராவிடமாபாடியத்துள் சிறப்புப்பாயிர உரையிலும், சிவ
ஞான சித்தியார் எட்டாஞ் சூத்திரத்திலும், சிவப்பிரகாசத்திலும், சோமசம்பு
சிவாசாரியார் முதலியோர் பத்ததிகளிலும், சிவாகமங்களிலும் பரக்கக் காண்க.
ஈண்டு விரிப்பிற் பெருகும்.

ருச. புறம் அகமென்னும் சமயங்களைச் சிவஞான சித்தியார் பரபக்கத்
திலும், சங்கற்பநிராகரணத்திலும், திராவிடமாபாடியத்திலும் காண்க.
இச்செய்யுள், 'புறச்சமய நெறிநின்றும்' என்னும் சித்தியார் செய்யுளின்
பொருளைக் கொண்டது. (சூ அ. கக.)

ருரு. அவ்வாற்றான் என்றது சமயதீக்கை பெற்ற நெறியால் என்றவாறு.
எனவே, சமயதீக்கை பெற்றவரே சரியைக்குரியர் என்பது பெறப்படும்.
நெறி - மார்க்கம். தாதமார்க்கம் - அடிமை நெறி. தாதநெறியாகிய சரியை
என்க. இதுமுதல் மூன்று செய்யுட்களும் முறையே சிவஞான சித்தியார்

நீபம் எற்றல், மெய்வாய்ப்பச் சிவனடியார் பணித்தபணி தலைநின்று மேவலாதி, இவ்வாற்றில் தாதநெறிச் சரியையினைப் புரிவோர்எம் உலகின் வாழ்வார். ருரு

கிரியாபாதமும் அதன்பயனும்

ஈதியற்றி முற்றியபின் மகநெறிக்காம் விசேடத்தை எய்திப் பூசைக், கோதியகொண் டாதார சத்திமுதல் சத்திஈ றோங்கு கஞ்சத், தாதனமே மூர்த்திமுதல் பாவித்தா வாகித்தா வரண பூசை, ஆதியசெய் தழலோம்பும் இக்கிரியை வழாதார்எம் அருகு வாழ்வார். ருசு

யோகபாதமும் அதன்பயனும்

இக்கிரியை முற்றியபின் இயமாதி எட்டுறுப்பின் இயல்பு வாய்ந்து, பக்கவளி தனைஅடக்கி நடுநாடி உறப்பயிற்றி ஆறு தாரந், தொக்கபொரு ளுணர்ந்தேகி மதிவரைப்பின் அமுதுண்டு சோதி உள்ளால், புக்கழுந்துஞ் சகமார்க்க யோகுழப்போர் எம்உருவம் பொருந்தி வாழ்வார். ருஎ

---

எட்டாஞ் சூத்திரத்தின் கக, உ0, உக ஆம் செய்யுட்களின் பொருளை வெங்க. எம்முலகு என்றது சிவலோகத்தை. அதில் வாழ்தல் சாலோக மெனப்படும்.

ருசு. மகநெறி - புதல்வர் நெறி, சற்புத்திர மார்க்கம்; இது கிரியையில் நிற்பது. விசேடம் - விசேட தீட்சை. இதனால் விசேட தீட்சை பெற்றவரே கிரியைக்குரியர் என்பதாயிற்று. 'ஓதிய கொண்டு' என்றது புறத்தும் அகத்தும் செய்யும் பூசைக்குச் சொல்லப்பட்ட மலர் முதலிய பொருள் களைக்கொண்டு என்றவாறு. ஆதார சத்தி என்றது மூலாதார சத்தியாகிய புடவிதத்துவத்தைப்போலும். சத்தி - சத்திதத்துவம். இவ்விதய கமல அமைப்பை, 'மண் முதல்நாளம்' என்னும் (சிவஞா. சு சு. அதி. ௩.) மெய் கண்ட மொழியாலுணர்க. மூர்த்தி முதல் - மூர்த்தியையும் முதல்வனையும். இவ்வகப்பூசை புறப்பூசைகளின் இயல்பு சித்தியார் முதலிய நூல்களில் விளங்க உணர்க. அருகு வாழ்தல், சாமீப பதம் எனப்படும். 'ஆதனமேல்' எனப்பாடம் இருந்திருத்தல் கூடும்.

ருஎ. இயமாதி எட்டுறுப்புக்களாவன: இயமம், நியமம், ஆசனம். பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. பக்க வளி - இடைகலை, பிங்கலை நாடிகளின் வழியாக ஓடும் காற்று. நடுநாடி - சுழுமுனை. ஆறுதாரப் பொருள் - அங்குள்ள தெய்வங்கள். இவ்யோக முறை யைச் சிவஞான சித்தியாரிலும், யோக நூலிலும் விளங்க உணர்க. விரிக்கிற் பெருகும். இறைவன் உருவம் பெறுதல் சாரூபம் எனப்படும்.

ஞானபாதமும் அதன்பயனும்

முறையானே இம்மூன்றும் முற்றிஅருள் பதிந்துவினை ஒப்பு வாய்ந்து, நிறைவாய பருவத்தின் உயிர்க்குயிராய் நின்றருளும் யாமே தோன்றி, மறைவாய்மை நிருவாண விதியாற்றால் வழிஆறும் தூய்மை செய்து, குறைபாத பேரருளின் அறிவுறுக்கும் அஞ் செழுத்தின் கொள்கை தேற்றி. ௫௮

அருவுருவங் குறிகுணங்கள் முதல்ஈறு கட்டுவி டனைத்தும் இன்றிப், பெருமையதாய் நுண்ணியதாய்ப் பேருணர்வாய் ஆனந்தப் பிழம்பாய் எங்கும், ஒருமுதலாய் அழிவின்றி ஒங்கொளியாய் நிறைந்துளதாய் உயிர்கள் தோறும், விரவியுடன் தொழிற்படுத்துப் புலங்கொளுத்தி விடுக்கும் பதியாம் எம்மை. ௫௯

எண்ணிலவாய் வகைமூன்றாய் வெண்சிலைபோல் பற்றியவை தாமாய் என்றும், உண்மையவாய்ச் சத்தசத்தும் பகுத்துணர்சத் தாய்இருளும் ஒளியும் அல்லாக், கண்ணியல்பாய் வசிப்பவரு நிறை வாய்எம் அருளாற்கட் டறுத்து வீடு, நண்ணுபவாய் உணர்த்தவுணர் சிற்றறிவிற் பலவாம்நற் பசுக்கள் தம்மை. ௬௦

---

௫௮. தோன்றி - குருவாய்த் தோன்றி. வழி - அத்துவா. ஆறத்துவாக் கள், மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்பன. இவற்றைத் திராவிட மாபாடியம் இரண்டாம் சூத்திரம் மூன்றாம் அதிகரணத்திற் காண்க. அருள் பதிதல், சத்திநிபாதம் எனப்படும். உயிர்கள், சத்திநிபாதத் தால் இருவினை யொப்பு வரப்பெற்று உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனே குருவாய் வந்து அருளப் பெறும் என்பதைச் சிவஞான போதம் எட்டாஞ் சூத்திரப் பேருரையில் ஆசிரியர் விளக்கக் கூறியிருத்தல் காண்க. தோன்றி அறிவுறுக்கும் என்க. அஞ்செழுத்தின் கொள்கை மேலே (பக் ௭, ௮.) காட் டப்பட்டது. தேற்றி என்பது தன்வினையாய் நின்றது. இதுமுதல் ஆறு செய் யுட்களால் ஞானபாதமாகிய சன்மார்க்கமாவது, ஞானாசிரியன்பால் ஞானோப தேசம் பெற்று முப்பொருளியல்புகளை ஐயந்திரிபற உணர்தலே என அதனி யல்பு கூறுகின்றார். இச்செய்யுட்கள் சிவஞான சித்தியார் எட்டாஞ்சூத்திரத் தின் ௨௨-ஆம் செய்யுளின் விரியாயுள்ளன. 'தேறி' எனப் பாடம் இருந்திருத் தல் வேண்டும்.

௫௯. இது பதியிலக்கணம் கூறிற்று. புலம் - ஞானம்.

௬௦. இது பசுவிலக்கணம் கூறிற்று. மூன்றுவகை: ஒருமலம் உடையன, இருமலம் உடையன, மும்மலம் உடையன. வெண்சிலை - படிகம்.

ஒன்றாகி அழிவின்றிப் பலஆற்றல் உடைத்தாய்ச்செம் புறுமா சென்னத், தொன்றாகி அருள்விளைவின் நீங்கும்இருள் மலத்துடன் அத் தொடக்கு நீப்ப, மின்றாவும் உடலாதி நல்கும்இரு மாயைஇரு வினைகட் கேது, என்றோது கருமம்இவை நிகழ்த்துதிரோ தமும் எனும்ஐ வகைப்பா சத்தை. ௬௧

திரிபுணர்வு பொதுமாற்றிச் சிறப்பியல்பான் உணர்ந்தெண்ணித் தெளிந்து தேறும், அரியபெறற் சன்மார்க்க ஞானநிலை இது கிடைத்த அறிவான் மிக்கோர், பெரியமலப் பிணியவிழ்த்துச் சிவா னந்தப் பெரும்பேறு மருவிப் பாசம், இரிவதூஉம் புகுவதூஉம் இன்றிஒரு நிலையாம்அவ் வியல்பு தன்னில். ௬௨

உணர்பொருளும் உணர்வானும் உணர்வுமெனும் பகுப் பொழியா தொழிந்து பானுப், புணர்விழியும் நீர்நிழலும் தீயிரும்பும் புனல்உவரும் பரிதி மீனுங், துணையஇரண் டறுகலப்பின் எம்

---

௬௧. இது பாச இலக்கணங் கூறிற்று. ஆற்றல் - சத்தி. மாசு - களிம்பு. தொன்றாகி - அநாதியாய். இருள் மலம் - ஆணவ மலம். தொடக்கு - கட்டு. மின்றாவும் - ஒளி பொருந்திய. உடலாதி - தனுகரணபுவன போகங்கள். இருமாயை - சுத்த மாயை, அசுத்த மாயை. கருமம் - மூலகன்மம். இவை நிகழ்த்து - இவற்றைத் தொழிற் படுத்துகின்ற. திரோதம், இறைவனது ஒரு சத்தி; இது மலத்தைத் தொழிற் படுத்துதலால் மலமென்று உபசரித்துக் கூறப்படும்.

௬௨. திரிபுணர்வு - மாறுபட உணர்தல். பொது - ஒன்றைப் பற்றி உணர்தல். சிறப்பியல்பான் உணர்தல் - உணரப்படும் பொருளையே பற்றி உணர்தல். எண்ணி - சிந்தித்து. தெளிந்து தேறல், ஒருபொருட் பன்மொழி.

௬௩. இது முத்தி இலக்கணங் கூறிற்று. உணர்பொருள் - உணரப் படும் பொருள். உணர்பொருள் முதலிய மூன்றும், காட்சிப் பொருள், காண்பான், காட்சி எனவும், ஞேயம், ஞாதுரு, ஞானமெனவுங் கூறப்படும். காண்பானுக்கு அவ்வேற்றுமையுணர்வு அழிவதன்றிப் பொருளழியாமையின், 'ஒழியா தொழிந்து' என்றார். பானுப்புணர்விழி முதலியன சுத்தாத்துவித சித்தாந்த முத்திக்கு எடுத்துக்காட்டுகள். முத்திக் காலத்துச் சீவன்மா பர மான்மாவென இரண்டுபொருளில்லை, பரமான்மாவேயாமென்பார் கொள் கையை மறுத்து, ஒன்றாயினும் பதி இன்பத்தில் அழுத்துவித்தலும் பசு அழுந் துதலுமுடைமையால் பொருட்டன்மையால் வேறே என்றற்குப் பானுப் புணர்விழியும், இருபொருளாயின் பிரிந்து தோன்றுமென்பார்க்கு அங்ஙன

முடனாய்ப் பேரின்பம் துய்த்து வாழ்வார், இணர்விரைத்த மலர்க்
கோதாய் அவர்வடிவே எமக்கினிய கோயி லாமால். ௬௩

முத்திமுடி பிதுகண்டாய் முன்இயம்பு மூன்றும்முத்திப் பதங்க
ளாகும், இத்தகைய முத்திகளை இம்முறையான் முயன்றவரே
எய்தற் பாலார், அத்தகைய வழியில்லோர் எளிதாக விடுபே றடை
வான் எண்ணி, வைத்தபெருங் கருணையினன் மேதினிமேற் பல
தானம் வயக்கச் செய்தேம். ௬௪

அங்கவற்றில் வதிவோர்கள் முயலாதெம் உலகாதி பதங்கள்
சேர்வர், கொங்குயிர்த்த மலர்க்குழலாய் அவற்றுள்ளும் குருமாடக்
காசி வைப்பில், தங்குபவர் எம்உருவந் தனைப்பெறுவர் திருக்
காஞ்சித் தலத்தில் வாழ்வார், மங்கரிய மலந்துமித்து நம்முடனும்
பேரின்ப வாழ்வு சேர்வார். ௬௫

எம்முலகத் துறைவதனில் எம்அணிமைக் கண்ணமர்தல்
ஏற்ற மாகும், எம்முருவந் தனைப்பெறுதல் அதற்கதிகம் அதற்
கதிகம் இறவா இன்பத், தெம்முடனாய் ஒற்றித்தல் இம்முறையால்

---

மன்று, உயிர் விரவிநிற்கச் சிவமே தோன்றும் என்றற்கு நீர் நிழலும், அவ்வாறு கலந்துநிற்றல் எங்ஙனமெனின், உயிர் தனது போதங்கெட்டுச் சிவமே யாய் நிற்குமென்றற்குத் தீயிரும்பும், இருபொருள் ஒன்றுமாறு யாங்ஙன மென்பார்க்கு வியாபக வியாப்பியத்தால் ஆமென்றற்குப் புனல் உவரும், அங்ஙனமாயின் ஒன்று கெட்டு ஒன்றும் என்பார்க்கு, அற்றன்று ஒன்றன் சந்நிதி யில் ஒன்று அடங்கி நிற்குமென்றற்குப் பரிதி மீனும் உவமையாயின. உவர் - உப்பு. பரிதி - சூரியன். மீன் - நட்சத்திரம். துணைய - ஒப்ப. உடனாய் - அத்துவிதமாய். இறைவனோடு உடனாதல் சாயுச்சமெனப்படும்.

௬௪. முடிபு முத்தி இது எனவும், மூன்றும் பதமுத்திகள் எனவும் மாறிக்கூட்டுக. முடிபு முத்தி - பரமுத்தி. ௫௫ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் ஆசிரியர் சைவ சித்தாந்த உண்மைகளை நிரப்பி வைத்திருத் தலால் அவைகளைத் தனித்தனி விளக்கப்புகின் பெரிதும் விரியுமாதலின், அவற்றைச் சிவஞானபோதம் திராவிடமாபாடியத்திலும் சித்தியார் சிவப்பிர காசம் முதலிய ஏனைய மெய்கண்ட நூல்களிலும் கண்டு கொள்க.

௬௫. ஏனைய தலங்களில் வாழ்வோர் சாலோக சாமீப பதங்களையும் காசியில் வாழ்வோர் சாரூப பதத்தையும் காஞ்சியில் வாழ்வோர் சாயுச்சத்தை யும் அடைவார்கள் என்பதாம்.

வதிவோர்கள் எவர்க்கும் மாறு, தெம்முடனும் பேறளிக்குங் காஞ்சி எவற் றினுமதிகம் என்னத் தேறாய். ௯௬

மறைமுடிவும் இவ்வாறே வீடுதவும் வளநகரம் காஞ்சி என்ன அறைதருமால் அன்னதூஉம் வகுத்துரைப்பக் கேட்டியென அரு ளிச் செய்வார், மிறைபுரியுந் தக்கனர் வேள்வியகத் திமையவர்தம் மேனி முற்றும், குறைபடுத்துத் தகைத்துழக்கிச் சவட்டியபின் இரங்கியருள் கொடுக்க வல்லார். ௯௭

கேசாந்த முத்தி

தன்னிகரில் கேசாந்தம் உறும்ஆவி தன்சிரத்துக் கபாலம் கீறி, வன்னியினில் பூவெனப்போய் வாயுவினில் புவவெனப்போய் இரவி மாட்டுப், பின்னம்அறு சுவவெனப்போய் விண்அரசின் மகவெனப் போய்ப் பிரமத் தொன்றாய், மன்னிடும்இக் கேசாந்த முத்தியினை எவ்வுயிர்க்கும் வழங்கும் காஞ்சி. ௯௮

கவ்வெனச்சொல் விதிக்கீசன் ஆயஎமைக் கேசன்எனக் கழறும் வேதம், எவ்விடத்தில் ஆருயிர்கள் எம்பாலே அந்தத்தை எய்தா நிற்கும், அவ்விடத்தில் அதுமுத்தி கேசாந்த முத்தியெனப் படு மால் அந்தச், செவ்விடமும் நமக்கென்றும் அரசிருக்கை எனத்திக ழும் காஞ்சி மூதூர். ௯௯

இன்னும்ஒரு வாறியம்பக் கேண்மதிநீ கம்மென்றல் சிரமாம் அந்தச், சென்னிமிசைச் சயனம்உறு வதுகேசம் அதுதனைஅஞ் சித் தல் காஞ்சி, அன்னதனல் காஞ்சியொடு கேசம்ஒரு பொருட்கிளவி

௯௮. கேசாந்த முத்தியை அடைதற்குரிய பக்குவம் வாய்ந்த உயிரானது அக்கினி மண்டலத்தில் பூ: எனவும், வாயு மண்டலத்தில் புவ: எனவும், சூரிய மண்டலத்தில் ஸ்வ: எனவும், இந்திர லோகத்தில் மஹ: எனவும் சென்று பரப்பிரமத்தினிடத்தில் ஒன்றும் என்பதும், பக்குவம் வாய்ந்து அரிதி லடையும் அக்கேசாந்த முத்தியினைக் காஞ்சியம்பதி எல்லா உயிர்க்கும் கொடுக் கும் என்பதும் இச்செய்யுளின் திரண்டபொருள். எனவே, காஞ்சியில் வாழ்கின்ற எல்லா உயிரும் கேசாந்த முத்தியை அடையும் என்பதாம். 'புவ்,' 'சுவ்' என்னும் பாடங்கள் சரியல்ல.

௯௯. கேசாந்த முத்தி என்பது இறைவனிடத்திலே அந்தத்தையடை தலாகிய முத்தியாம். எங்ஙனமெனில் க+ஈசன்=கேசன். க - பிரமன்; பிர மனுக்கு ஈசன் இறைவன்; அவனிடத்திலே அந்தத்தையடைதல் கேசாந்தம்.

யாகும் தேம்பு, மின்னிடையாய் கேசாந்தம் ஆவதுமே தருகாஞ்சி அந்த மாமால். ௭௦

என்றும்நமக் கினியதனால் முதன்மையால் தானங்கட் கெல்லாம் சென்னி, என்றியம்பப் படுங்காஞ்சி இத்திறத்துக் கேசாந்தப் பெயர்சால் வைப்பின், ஒன்றுணரா மடவோர்கள் விலங்குமரம் முதல்அனைத்தும் உயிர்போங் காலை, மன்றமிவசத் தலைஓடு கீறி உடல் விடுத்தேகும் மலர்ப்பூங் கோதாய். ௭௧

ஆதலின்அங் கிறந்தவர்கட் குடல்வேங்கால் சிரம்அனலில் வெடியா தின்றும், வேதமெலாம் எடுத்தியம்பும் அந்நகரின் பெருமை எவர் விளம்பற் பாலார், ஏதமற அங்கெய்திக் கழுவாய்நீ இயற்றுதி முன் இடப ஏறும், கோதகலக் கழுவாய்அங் காற்றிபது கோதாய் என் றருளிச் செய்தார். ௭௨

இடபேசர வரலாறு

கலிநிலைத் துறை

அருளுந்திரு வாய்மொழி கேட்டலும் அங்கை கூப்பிப்
பெருவெள்விடை யாதது செய்பிழை என்னை தீரப்
புரியுங்கழு வாய்எவ னோபுகல் கிற்றி என்றாட்
கிருள்கண்டன வல்விடம் ஏந்திய கண்டர் சொல்வார். ௭௩

முன்னோர்கடை நாள்முளரிக்கண் முகிழ்த்த புத்தேள்
முன்னாஞ்சகம் முற்றும்நம் மான்முடி வுற்ற தாகப்

---

௭௦. கம்+சயனம்=கேசம், சிரசின்மேல் இருப்பது. கம்+அஞ்சி=காஞ்சி, சிரசின்மேல் அஞ்சிப்பது. இதனால் கேசம், காஞ்சி ஒருபொருட்சொற்களாதற்குரியவாதலின் கேசாந்த முத்தி, காஞ்சி முத்தி என்பன ஒருபொருட் சொற்களாம். எனவே, காஞ்சியில் முத்தியடைதல் கேசாந்த முத்தியாம் என்பது கருத்து.

௭௧. இத்திறம் என்றது மேலைச் செய்யுளிற் கூறிய திறத்தை. முத்தியடைதற்குரிய உயிர் உடலை விட்டுப் போங்காலத்துக் கண்முதலிய வழிகளாற் செல்லாமல் பிரமரந்திரத்தின் வழியாகச் செல்லுதல் இயல்பாகலானும், காஞ்சியில் இறக்கும் எல்லா உயிரும் முத்தியடையு மென்பதனாலும், 'அனைத்தும் உயிர் போங்காலை தலை ஓடுகீறி ஏகும்' என்றார்.

௭௨. கண் முதலிய வழிகளால் உயிர் சென்ற உடலைச் சுடுங்கால் தலை வெடித்தல் இயல்பாதலானும், காஞ்சியில் இறக்கும் உயிர் உடலை விட்டுப்

பொன்னேர் சுணங்கின் பொலம்பூண்முலைப் பூவை யன்னுய்
அந்நாள்அறத் தெய்வதம் அத்திறம் உற்று நோக்கி. ௭௪

நில்லாஉல கத்துளவாய சரிப்ப நிற்ப
எல்லாம்அழி வுற்றன யானும் இறப்ப லோஎன்
றல்லாந்தினிச் செய்வகை யாதென் றிறைஞ்சி நம்பாற்
கொல்லேறுரு வங்கொடு வந்தது போற்றி யென்ன. ௭௫

கண்டாம் அதனைக் கவலாதிஎன் றார்தி யாக்கிக்
கொண்டாம் கொளப்பெற் றுலவாக்களி கூர்ந்த தாக
வண்டார் அளகக் கொடிஅவ்விருள் மாண்ட காலைத்
தண்டா அருளால் அதற்கின்னது சாற்ற லுற்றேம். ௭௬

தரிப்பித்தலின் நீதரு மம்தரிப் பித்தி டாமை
தெரிப்பிக்கும் அதன்ம மெனப்பெயர் செப்பு மால்எம்
பொருட்டுப்புரி பாவமும் புண்ணிய மாக்கி எம்பால்
விருப்பற்றவர் செய்அற மும்மற மாக்கு விப்பாய். ௭௭

இவ்வேற்றிட பப்படி வத்துடன் எங்கும் எம்முன்
செவ்வேவதி கென்றருள் செய்திடும் நல்வ ரம்பெற்
றவ்வாறு நமக்கெதிர் நித்தலும் வைகும் அங்கேழ்ச்
செவ்வாய்க்கரு மென்குழல் வெண்ணகைச் செம்பொற் பூணுய்.

---

போகும்பொழுதே கபாலத்தை உடைத்துக் கொண்டு செல்லுதலாலும், 'அங்கு சிரம் அனலின் வெடியாது' என்றார்.

௭௪. கடைநாள் - ஊழிக்காலம். அறத்தெய்வதம் - தருமதேவதை.

௭௫. நில்லா - நிலையில்லாத. அல்லாந்து - மனம் சுழன்று.

௭௬. கவலாதி - கவலையுறாதே. உலவா - கெடாத. அளகம் - கூந்தல். கொடி. இறைவி; அண்மைவிளி. மாண்டகாலை - நீங்கியபொழுது. தண்டா-நீங்காத.

௭௭. தர்மம் என்பது தரிப்பிப்பது (தாங்குவிப்பது) எனப்பொருள் தருவதாகலான், 'தரிப்பித்தலின் நீதருமம்' எனவும், 'தரிப்பித்திடாமை தெரிப்பிக்கும் அதன்மம், எனவும் கூறினர். எனப்பெயர் செப்பும் என்றதற்கு, ஆதலால் இவ்வாறென்று பெயர் சொல்லும் உலகமென்றுரைக்க. பின் இரண்டடிகளால், இறைவன் மாட்டு அன்புகொண்டு செய்தலே அறமென்பதும், அவன்பால் அன்பில்லாது செய்தலே பாவமென்பதும் பெறப்படும்,

வீறார் தருமக் கடவுட்சின வெள்வி டைக்கோர்
கூறாதலின் மாயனும் முப்புரங் கொன்ற அஞ்ஞான்
றேறாப்ளமைத் தேரோடு தாங்கினன் ஏறு வந்த
வாறாம்இது மேல்அது செய்பிழை மற்றுஞ் சொல்வாம். ௭௯

கருடன் செருக்கடைதல்

கலி விருத்தம்

பின்னொரு காலத்துப் பிறங்கும் ஆற்றல்சால்
பன்னகப் பகைமைகொள் பறவை நாயகம்
பொன்அமர் மார்பனைப் பொறுத்து வல்லையே
அந்நிலை உலகெலாம் அணுகி மீண்டதால். ௮௦

மீண்டபின் தருக்குமீக் கொண்டு வீறுடன்
ஆண்டகை மாயனை நோக்கி அண்ணலே
காண்டகும் ஆற்றலிற் கதழ்வின் என்நிகர்
மாண்டவர் உளர்கொலோ வையம் மூன்றினும். ௮௧

நிற்பன சரிப்பன யாவு மாய்நிறை
நிற்பொறுத் தரைக்கணப் பொழுதின் நீடியோய்
பொற்பமூ வுலகினும் போந்து மீளும்இவ்
அற்புதம் எனக்கலா தார்க்குண் டாகுமோ. ௮௨

என்றிது புள்ளர சியம்பக் கேட்டலும்
நன்றெனக் குறுநிலா நகைமு கிழ்த்தமோ
இன்றிதன் செருக்கெலாம் இடப நாயகம்
ஒன்றறக் களையுமென் றுளத்தி லெண்ணினான். ௮௩

மெய்புரை விளம்பினை உலக மீமிசை
ஐயநிற் கிணையவர் ஆரும் இல்லெனக்

---

௭௯. திருமாலும் உலகத்தில் அதர்மத்தைப் போக்கித் தர்மத்தை நிறுத்திக் காக்கும் காப்புக்கடவுளாதலின் அவரை, 'அறத்திற்கு ஒரு கூறு' என்றார்.

௮௦. பறவை நாயகம் - கருடன், பொன் - இலக்குமி.

௮௧. கதழ்வு - விரைவு, மாண்டவர் - மாட்சிமைப்பட்டவர்.

௮௨. நீடியோய் - நீண்டவனே, அற்புதம் - ஆச்சரியம்.

௮௩. ஒன்றற - சிறிதுமில்லாமல்.

குய்யம்வைத் தனிமுடி தூளக்கிக் கூறினன்
செய்யவள் வனமுலை திளைக்கும் மார்பனே. அச

வார்சடைப் பிரான்அடி வணங்கு வாம்எனப்
போர்வலிப் புள்ளொடும் சயிலை புக்கனன்
ஏர்கெழு போகமா புரத்தின் எல்லைஅவ்
வூர்தியின் இழிந்துசென் றுங்கண் எய்தினன். அரு

ஐந்ததாம் ஆவர ணத்தின் எம்மெதிர்
ஐந்துகோ மாதர்சூழ்ந் தனுகி வைகவாழ்
மைந்துடை விடைஅவண் மாய னேடுறும்
வெந்திறற் புட்குல வேந்தைக் கண்டதால். அசு

கருடன் துன்பம்

தன்னெதிர் இகழ்ச்சியால் தருக்கும் ஆங்கதன்
புன்னிலை நோக்குபு பொருக்கெ னச்சிரம்
தன்னிடக் குறங்கினிற் சார்த்தித் துஞ்சுவ
தென்னநெட் டுயிர்ப்பினிற் சிமிழ்த்த தேந்திழாய். அஎ

மாயவன் எம்மடி வணங்கி அன்பினன்
ஆயிடை நெடும்பொழு தமர்ந்து வைகினன்
பாயிடை ஊர்திநெட் டுயிர்ப்பிற் பட்டுழல்
காய்சினக் கலுழனும் கழிய நொந்ததே. அஅ

விட்டுவிட் டடக்குதோ றுயிர்ப்பின் வேகத்தால்
அட்டதூ றியோசனை அவதி போந்தபின்

---

அச. எவர் என்பது வினவும், ஆரும் இல் என்பது விடையுமாய் நின்றன. குய்யம் - வஞ்சனை.

அரு. போகமாபுரம் - மேலே (பக். ௨௯௬.) காண்க.

அசு. ஆவரணம் - மதில்சூழ் இடம், பிராகாரம். கோமாதர் - பசுக்கள். ஐந்து பசுக்கள்: நந்தை, சுபத்திரை, சுரபி, சுசிலை, சுமனை என்பன. மைந்து - வலி.

அஎ. இடக் குறங்கு - இடது தொடை. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. சிமிழ்த்தது - அகப்படுத்திற்று.

அஅ. அட்டதூறு - எண்ணூறு. அவதி - எல்லை. கொட்புறுத்து - சுழல்வித்து. அலைத்தது - வருத்திற்று.

கட்டெழில் நாசியின் நுனிக்கண் சார்தரக்
கொட்புறுத் தலைத்தது பறவைக் கோவினை. ௮௯

ஒய்யென கெட்டுயிர்ப் புதைந்து மீள்தொறும்
மெய்வயிற் சுஃஃஃறென விரிந்து கூம்பிடுஞ்
செய்யபொற் சிறைகளிற் சிதைந்து புன்மயிர்
துய்யென வெளியிடைச் சுழன்ற யாங்கணும். ௯0

அதிர்ந்தன விண்ணெலாம் அயர்ந்த திக்கயம்
உதிர்ந்தன தருத்தழை உக்க மீன்கணம்
பிதிர்ந்தன வரைக்குலம் பெயர்ந்த கோள்களும்
உதிர்ந்தெழும் சினவிடை உயிர்ப்பின் மொய்ம்பினுன். ௯௧

எதிருற விலங்கிய வரையும் ஏனவும்
மதலையிற் பற்றுவான் மனத்தின் எண்ணுமுன்
கதழ்வின் நூ றியோசனை கடத்தி மீட்குமால்
மதனுடைக் கலுழனை உயிர்ப்பின் வாயுவே. ௯௨

சரிந்தது தருக்குடல் சழங்கல் உற்றதால்
இரிந்தது மிடல்இறு மாப்பும் இற்றது
முரிந்தன பொலஞ்சிறை முதிர்ந்த இன்னல்நோய்
கரிந்தது மாமையும் கருடற் கென்பவே. ௯௩

பருவரும் புடையினிற் கழியப் பார்க்கும்மீ
தொருவருந் தகைத்தெனும் ஊக்கம் இன்மையின்

---

௯0. மெய்வயின் - உடலில். சுஃறென்பது ஒலிக்குறிப்பு. துய்யென- பஞ்சின் நுனிபோல. புன்மயிர் யாங்கணும் சுழன்ற என்க.

௯௧. திக்கயம் - திசையானை. தரு - கற்பகத்தரு. மொய்ம்பு - வலிமை.

௯௨. விலங்கிய - குறுக்கிட்ட. மதலையின் - துணை. பற்றுவான் - பிடித்தற்கு. கதழ்வின் - விரைவினுல். மதன் - வலி.

௯௩. சரிந்தது - நீங்கிற்று. உடல் சழங்கலுற்றது - உடல் தளர்ந்து போயிற்று. இரிந்தது - நீங்கிற்று. மிடல் - வலி. மாமை - நிறம்.

௯௪. பருவரும் - வருந்தும். புடையினில் கழியப்பார்க்கும் - பக்கத்தில் ஒதுங்கநினைக்கும். ஒருவருந் தகைத்தெனும் - நீங்குதற்கரிய தன்மை

தெருமரும் உணங்குறும் திகைக்கும் தேம்பிடும்
வெருவரும் மாயனை விளிக்கும் என்செயும். கூ௪

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஐயனே உலகங் காக்கும் அடிகளோ காயாம் பூவின்
மெய்யனே என்னை ஆண்ட விமலனே திகிரி ஏந்துங்
கையனே எய்ப்பின் வைப்பாம் களைகணே கலந்தார்க் கென்றும்
மெய்யனே கலவா தார்க்கு வெய்யனே வேந்த னேயோ. கூ௫

விடைஅர உயிர்ப்பிற் பட்டு மெலிகின்றேன் ஓலம் இந்தத்
தடைவிடுத் தடிய னேனைத் தாங்குவாய் ஓலம் அன்றேல்
கடையனேன் ஆவி இன்றே கழிந்திடும் ஓலம் என்னை
உடையவா ஓலம் என்றென் றோலம்இட் டழைத்த தாலோ. கூ௬

இறைவன் பணித்தல்

சிறுவெம் பணிவாய்ப் பட்ட தேரையின் மறுகி ஓசை
வேறுபா டெய்தி மாலை விளிப்பதெம் செவியில் கேட்டே
மாறடு திகிரி யோய்ஈ தென்என வட்கார் தம்மை
நூறிய சீற்றத் துப்பின் நோன்றகை நெடியோன் செல்வான். கூஎ

இன்றுநின் அடிகள் போற்றும் இச்சையின் என்னோ டிங்கு
வன்றிறல் கலுழன் போந்தான் வாய்தலில் துயிலும் வெள்ளிக்
குன்றுறழ் இமிலேற் றண்ணல் உயிர்ப்பினிற் கோட்பட் டாவி
பொன்றுவான் என்ன நொந்து விளிக்கின்றான் புனித என்றான். கூஅ

மாதவன் விளம்பக் கேளா மற்றிது நிகழ்தற் கேது
ஏதுநீ அறிந்த துண்டேல் இயம்புதி விடுத்தும் என்ன
நாதனே கலுழன் சாலத் தருக்கினன் அதனைப் போக்கும்
காதலால் ஈங்கு வந்தேன் காரணம் இதுவால் என்றான். கூகூ

---

யுடைய தென்று எண்ணும். தெருமரும் - மனம்சுழலும். உணங்குறும்- சோரும். வெருவரும் - அஞ்சும்.

கூஎ. வட்கார் - பகைவர். நூறிய - அழித்த. சீற்றத்துப்பு - கோப வன்மை. நோன்றகை - வலிமை.

கூஅ. இமில் - முதுகின் மேல் திமில்.

கூகூ. ஏது ஏது - காரணம் என்ன.

உள்ளது புகன்றாய் என்ன நந்தியை ஊங்கு நோக்கிக்
கள்ளவிழ் தொடையாய் நம்மை வழிபடுங் கருத்தான் எய்தும்
புள்ளர இனையா வண்ணம் பொருக்கெனப் போந்து சீற்ற
வெள்விடை உயிர்ப்பி னின்றும் விடுவித்துக் கொணர்தி என்றாம்.

இத்தகும் ஆணை தாங்கி ஆவயின் எய்தி நந்தி
பொய்த்துயில் கொள்ளும் ஏற்றைப் புடைத்தனன் எழுப்ப லோடும்
மெய்த்துயில் உணர்ந்தான் மான வல்விரைந் தெழுந்து கண்கள்
அத்துறு கலக்கம் காட்டி ஆங்ஙனம் நின்ற காலை. க0க

போற்றுசீர் நந்திப் புத்தேள் புண்ணுறும் உடம்பிற் புள்ளின்
ஏற்றொடு விடையின் ஏற்றை எம்மெதிர் உய்த்தா னெனச்
சீற்றமும் செருக்கும் ஆண்மைத் திட்பமும் வீறும் குன்றி
மாற்றரு மதுகைப் புள்ளே றெம்மடி வணங்கிப் போற்றி. க0உ

ஒடுங்கிஉள் ளுடைந்து தண்டா துயிர்ப்பெறிந் திரங்கி மேனி
நடுங்கிடக் கண்ணீர் வார முரிசிறை மருங்கு நால
நெடுங்கைதன் சிரமேற் கூப்பி மால்புடை நிற்ப நோக்கிக்
கொடுங்கொலைப் பகழிக் கண்ணுப் விடைக்கிது கூறலுற்றாம். க0௩

எம்முடை ஆணை இன்றி எம்மெதிர் நீயே இந்நாள்
மம்மரின் இதனைச் செய்தாய் மானிட வடிவம் தாங்கிச்
சும்மைநீர் வரைப்பிற் காஞ்சித் தொன்னகர் எய்தி அங்கண்
நம்மைநீ புரிதி பூசை நவைஇது கழிபு மாறே. க0௪

---

க00. இனையாவண்ணம் - வருந்தாதபடி.

க0க. அத்துறு - சிவப்புப் பொருந்திய.

க0௩. தண்டாது - நீங்காது. நால - தொங்க.

க0௪. மம்மரின் - மயக்கத்தால். நவை - குற்றம்.

இவ்விடபேச்சர வரலாறு, (க) 'அறம் இறைவனையே பற்றுக்கோடாக உடையதாய் அவன் ஆணைவழி நடப்பதாதும்' என்பதும், (உ) 'அதனால், இறைவனிடத்து அன்புகொண்டு செய்வனவே அறமும், அங்ஙனமன்றிச் செய்வனவே பாவமுமாம்' என்பதும், (௩) 'இறைவனாணையின்றி ஒருவனைத் தண்டித்தல் குற்றமாம்' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

விடை காஞ்சியில் விமலனை வழிபடல்

எனவிடை யளிப்பப் போற்றிப் புடைபரந் தெழுந்து வஞ்சி
யனவிடை துவள வீங்கும் அலர்முலைக் கொம்ப ரன்னப்
சினவிடை யரசு வல்லே நரவுருத் திகழக் கொண்டு
மனவிடை இமைத்த செம்பொன் மாளிகைக் காஞ்சி நண்ணி. ௧0௫

கவிழிணர்த் தனிமா மூலத் தெம்மெதிர் கமலப் பூந்தோ
டவிழ்சிவ கங்கைக் கோட்டின் ஆங்கது வைகும் வைப்பிற்
குவிவரும் பெருமை சான்ற குடதிசை முகமாத் தன்பேர்ப்
புவிபுகழ் இலிங்கம் தாபித் தருச்சனை புரிந்து போற்றி. ௧0௬

காட்சிதந் தருளும் நம்பால் வரம்பல கருதிப் பெற்று
மாட்சியின் உலகம் எல்லாம் மனுமுறை வழாது பன்னாள்
ஆட்சிசால் அரசு செய்து கடைமுறை ஆனேற் றண்ணல்
மீட்சியின் அருள்பெற் றிங்கு மேவிவீற் றிருந்த தன்றே. ௧0௭

அம்மையார் காஞ்சிக் கெழுந்தருளல்

ஆதலின் நீயும் அங்கண் அகிலமும் உய்வான் எம்மை
மேதகு கமுவாய் நீரின் விதியுளிப் பூசை செய்யப்
போதராய் என்று நல்கப் புரிகுழ லணங்கு தாழ்ந்து
நாதனர் இசைவு பெற்று நயந்தெழுந் தருள லுற்றாள். ௧0௮

நம்பனர் தம்மை இன்ப நகையிடைத் தணக்கும் நோயும்
கம்பரைப் பூசை செய்யுங் காதலும் இருபால் ஈர்ப்ப
எம்பிரான் அருளாய் என்று தாழ்ந்துதாழ்ந் தெழுந்து நின்று
கொம்பரின் ஒல்கிப் பல்காற் புறவிடை கொண்டு போற்றி. ௧0௯

---

௧0௫. மனவு - இரத்தினம்.

௧0௬. கோடு - கரை. அதுவைகும் வைப்பென்றது, இடபமுள்ள இடத்திற்கு அருகில் என்றவாறு. குவிவரும் - குவிதலில்லாத, பரந்த.

௧0௮. நீர் - தன்மை. உண்மையில் கமுவாயன்மையின், 'கமுவாய் நீரின்' என்றார்.

௧0௯. தணக்கும் - பிரிகின்ற. நோய் - துன்பம். புறவிடை - புறத்தே செல்லுதற்குரிய விடை.

மின்கொண்டல் மிடற்றார் காட்சி விழிக்கெதிர் மறையுங் காறும்
பின்கொண்டு நடந்து சென்று பெருமுதல் வாய்தல் நீங்கி
முன்கொண்டு நடவா நின்றாள் முக்குறும் படக்கி ஐவர்
வன்கொண்டி கடந்த மேலோர் காண்டக வயங்கும் அம்மை. ௧௧௦

ஆயிடை அரிதின் நீங்கி அங்கணா ரருளால் அங்கண்
பாயபல் கணங்கள் உய்த்த படரொளி எறிக்கும் அங்கேழ்
மாயிரு விமானத் தும்பர் மன்னுயிர்த் தோழி மார்தம்
ஆயமும் தானும் ஏறி வழிக்கொண்டாள் அனைய காலை. ௧௧௧

எழுசீரடி யாசிரிய விருத்தம்

உலகெலாம் ஈன்ற எம்பெரு மாட்டி ஓங்குயர் விழுப்புகழ்க் கம்பத், தலைவரை விதியான் அருச்சனை செய்பச் சார்கின்றாள் என்றுபே ரோகை, மலியெடுத் *தியம்பு மங்களங் கேளா உருத்திர மடந்தையர் முதலோர், அலகிலா மகிழ்ச்சி மீக்கொளும் களிப்பின் ஆர்த்தெழுந் தொருங்குவந் திறுத்தார். ௧௧௨

தாமரை மடவார் புடைபரந் தணுகத் தாமரை மடவரல் வந்தாள், நாமிசைக் கிழத்தி பற்பல வெள்ள நாரியர் புடைவர வந்தாள், கோமள வனப்பின் ஆம்பல்மெல் லியலார் குழாத்துடன் உயர்சசி வந்தாள், காமரு மாதர் எழுவரும் சங்கக் கன்னியர் சூழ்தர வந்தார். ௧௧௩

---

௧௧௦. மின்கொண்டல் மிடறு - மின்னுகின்ற மேகம்போலும், கண்டம். இறைவன் சந்நிதியில் பின்காட்டி நடத்தல் கூடாதாகலான், முன்காட்டிப் பின்னாக நடந்தார் என்க. முக்குறும்பு-காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று தீமைகள். ஐவர் - ஐம்புலன்கள். கொண்டி - கொள்ளை, இஃது ஈண்டு அறிவைக் கவர்தலை உணர்த்திற்று.

௧௧௨. மலிய என்பதன் ஈற்று அகரம் தொக்கது. * 'மலிபெடுத்' தெனவும் பாடம்.

௧௧௩. தாமரை மடவார், வெள்ள நாரியர், ஆம்பல் மெல்லியலார், சங்கக் கன்னியர் என்புழித் தாமரை, வெள்ளம், ஆம்பல், சங்கம் என்பன எண்ணுப் பெயர்கள்; இவை மிகுதிகுறித்து நின்றன. கோமளம் - இளமை. சசி - இந்திராணி. தாமரை மடவரல் - இலக்குமி. நாமிசைக்கிழத்தி - சரசுவதி. மாதர் எழுவர் - சப்த மாதர்கள், அவர்கள்: அபிராமி, மகேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, காளி என்பவர்கள்.

வான்மட மகளிர் வேறுபல் வகுப்பின் மங்கையர் பற்பலா யிரவர், ஊன்மலி சூலத் திடாகினி காளி யோகினித் திறத்தவர் அனேகர், நீன்முகிற் கூந்தல் முனிவர்பன் னியரும் நிரந்தரம் மிடைந்தனர் உவகைப், பான்மையின் இறைஞ்சி அவரவர்க் கடுத்த பணிதலை நின்றுடன் போத. ௧௧௪

உரகர் கந்தருவர் இராக்கதர் இயக்கர் உருத்திரர் மருத்துவர் வசுக்கள், கருடர்கிம் புருடர் சாரணர் சித்தர் கடவுளர் அயன்அரி முனிவர், மருவுபல் சமய தேவர்கள் முதலோர் வந்தனர் அடிதொழு திறைஞ்சிப், பொருவருங் களிப்பால் சயசய போற்றி போற்றிஎன் றேத்திமுன் செல்ல. ௧௧௫

தண்ணுமை முருடு குடமுழா மொந்தை தகுணிச்சம் பேரிகை தக்கை, அண்ணலம் பதலை அதிர்குரல் முரச மாதிய எழுப்புவ பிறவும், பண்ணமை சின்னம் காகளம் கோடு பணிலமே தீங்குழல் முதலா, எண்ணருந் திறத்தின் ஊதுவ பலவும் எழுகடல் முழக்கினை அடக்க. ௧௧௬

பயின்மணிக் கவரி கவிகைசாந் தாற்றி படரொளி ஆலவட்டங்கள், வயின்வயின் வயங்கக் கற்பகத் தாரு மலர்மழை எங்கணும் இறைப்பக், குயின்மொழி மடவார் குழாங்குழா மாகிக் குலவுபல் லாண்டெடுத் திசைப்பக், கயின்மணிக் குழைபார் ஆணுடை தாங்கிக் கதிர்த்தவாள் ஏந்தினர் ஏக. ௧௧௭

வேதகம் பயக்குஞ் சிலைமுதலான விம்மிதத் திறத்தன பலவும், பூதிமிக் களிக்கும் கடவுளர் தருக்கள் புண்ணிய தீர்த்தங்கள் நதிகள், ஏதமில் சிறப்பின் இனையன பிறவும் உடன்செலச் சிந்தொடு குறள்கள், காதலின் முன்னை கையிணை வீசிக் கதுமெனக் குறுகுறு நடப்ப. ௧௧௮

---

௧௧௬. இவ் வாச்சியங்களை மேலே (பக் ௬௨௩. ௨௫.) காண்க.

௧௧௭. கவிகை-குடை. சாந்தாற்றி - விசிறி. கயில் - பூணின் மூட்டுவாய்.

௧௧௮. வேதகம் பயக்குஞ் சிலை - இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கும் குளிகைக்கல். விம்மிதம் - அற்புதம். பூதி - செல்வம். குறள் - தீரக் குறுகியது; சிந்து - சிறிது நீண்டது; இவை பூதங்களைக் குறிப்பன.

கலகல முழக்கும் களகள முழக்கும் கலின்கலின் முழக்கமும் கருவிச், சலசல முழக்கும் சளசள முழக்கும் சடசட முழக்கமும் எனைச், சிலசில முழக்கும் அரகர முழக்கும் சயசய முழக்கும்எண் டிசைவாய்ப், பலபல முழக்கும் அடைத்துமேல் ஓங்கிப் படியொடு வானமும் நிறைப்ப. ௧௧௯

மறைமுதல் ஒருபால் மணந்தவள் வந்தாள் வானவர்க் கரியவள் வந்தாள், நிறைபெருங் கருணை நாயகி வந்தாள் நிருமலப் பேரொளி வந்தாள், அறைபுனல் காஞ்சிக் கம்பரை வணங்க அகிலமும் ஆதிநாள் பயந்த, இறைவியே வந்தாள் என்றுபல் சின்னத் தெழும்ஒலி யாங்கணும் விம்ம. ௧௨௦

அளவிலாக் கருணைப் பெருங்கட லென்ன அடர்ந்தவல் விருளுடைந் தோடுங், கிளைவழி தருவித் தூரந்துகொண் டெய்தும் கேழ்கிளர் ஒளிக்குழா மென்ன, வளமலி தென்பால் செய்தவந் திரண்டு வருவதே என்னவும் உலவாக், களிவரு சிறப்பின் வான்நெறிப் படர்ந்தாள் கணவனார் அருள்வழி நின்றாள். ௧௨௧

வேறு

எண்ணி லார்மி டைந்து விண்ப ரப்ப டைத்தி யங்கலால்
அண்ணல் ஞாயி றுதி வாள்ம றைந்தி ருள்அ டர்ந்திடக்
கண்ணு றுத்த யிர்க்கு முன்க டுப்பின் எய்து வோரொளி
வண்ணம் அவ்வி ருள்கி ழிப்ப நோக்கி ஞால மாந்தர்தாம். ௧௨௨

மாலு றுக்கு நீர்மை யோடு தோன்றி இங்கு மாய்ந்தது
நீல மின்னல் போலும் என்பர் என்னு முன்னர் நீளிடைச்
சால மிக்க ஓதை கேட்டு மின்ப யந்த தண்முகில்
காலும் ஓதை யாங்கொல் என்று காதின் ஓர்த்து நிற்பரே. ௧௨௩

செல்லு வோர்நெ ருக்கி டைத்தெ றித்தி டும்பொ லஞ்சுடர்ப்
பல்ல ணிக்க லன்கள் உக்க பன்ம ணித்தி ரள்களை

---

௧௨௨. கண்ணுறுத்து - கண்ணைப் பொருத்திக் கண்டு. அயிர்க்குமுன் - ஐயுறுதற்குமுன். கடுப்பின் - வேகமாக.

௧௨௩. மாலுறுக்கும் - மயக்கத்தைச் செய்கின்ற. நீலம் - மேகம்; ஆகுபெயர். மின்பயந்த - இம்மின்னலை உண்டாக்கிய. ஓர்த்து - ஆராய்ந்து.

நல்லை நோக்கி ஆர்த்த மேகம் ஒன்ப திற்று மாமணிக்
கல்லின் மாரி பெய்வ தென்று காண்டொ றும்வி யப்பரே. கஉ௪

முறையி னல்அ டுக்க நண்ணும் மொய்கு ழாத்தை நோக்குவார்
இறைவி யென்று சின்னம் எங்கும் எங்கும் ஓசை கேட்குவார்
நிறைம கிழ்ச்சி யிற்கி ளர்ந்து நீடும் இன்ப வெள்ளநீர்த்
துறைப டிந்து கண்கள் நீர்து ளிப்ப நின்று போற்றுவார். கஉரு

எம்பி ரான்த னிப்ப அம்மை இங்கு வந்த தென்னெனக்
கம்ப வாணர் பூசை செய்க ருத்தின் வந்த தாமென
நம்பி னேங்கள் வீடு பேறு நண்ணு காலம் ஈதென
இம்பர் ஞாலம் எத்த வம்ப டைத்த தென்ன விள்ளுவார். கஉசு

மண்ண கத்து வைகும் மாந்தர் இன்ன ராக மாணிழைப்
பெண்ணின் நல்ல வள்வி மான நின்றும் இப்பெ ரும்புவிப்
புண்ணி யத்த லங்கள் தோறி ழிந்தி ழிந்து போர்விடை
அண்ண லார்இ லிங்க பூசை செய்து காசி அண்மினள். கஉஎ

முச்ச கம்பு கழ்ந்து போற்று மொய்கொள் காசி மாநகர்
விச்சு வேசர் பூசை யாற்றி வேறி லிங்கம் ஒன்றமைத்
தர்ச்ச னைத்தி றத்தின் ஏத்தி வைகி அங்க கன்றுசீர்க்
கச்சி யம்ப திக்கண் வைத்த காதல் உய்ப்ப ஏகினள். கஉஅ

அங்கண் அங்கண் எந்தை யார்அ மர்ந்து வாழ்இ டந்தொறும்
பொங்கு கின்ற காத லோடு பூசை செய்து செய்துபோய்
மங்க லத்த மிழ்ப்பு விக்கு வாண்மு கமெ னத்தகும்
துங்க மிக்க கீர்த்தி பெற்ற தொண்டை நாட்டை நண்ணினள். கஉகூ

---

கஉ௪. கலன்கள் உக்க - ஆபரணங்களினின்றும் உதிர்ந்த. மணிக்கல்- இரத்தினக் கற்கள்.

கஉரு அடுக்க - அடுத்து, சூழ்ந்து. கேட்குவார் என்புழிக் கு தவிர்வழி வந்த சாரியை; குகரம் வந்தமையின் வகர இடைநிலை பெற்றது.

கஉசு. என என்புழியெல்லாம் எண்ணும்மைகள் தொக்கன. விள்ளுவார் - சொல்வார்கள்.

கஉஎ. இன்னராக-இத்தன்மையராக. 'பெண்ணின் நல்லவள்' என்றது, "அண்ணலார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள் - பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து" (பெரிய - திருக். ருக.) என்னும் அருள் மொழியைப் பொன்னேபோற் போற்றிக் கொண்டதென்க.

அம்மையார் காஞ்சியை யடைந்தநாள்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அண்ணலங் துலேசேர் என்றூழ் ஐப்பசித் திங்கட் பூரம்*
வெண்மதி யாட்சி மூன்றும் பின்பக்கம் நந்தை மேய
புண்ணியத் திருநாள் எல்லாப் புவனமும் பெருவாழ் வெய்த
விண்ணவர் பிராட்டி காஞ்சி வியனகர் எல்லே சேர்ந்தாள். ௧௩௦

பார்த்தனள் கடைநாள் செல்லாப் பழம்பதி மகிழ்ச்சி மேன்மேற்
கூர்த்தனள் சிரமேற் செங்கை குவித்தனள் புளகம் மேனி
போர்த்தனள் விழிநீர் மாரி பொழிந்தனள் அங்கோர் வாவித்
தீர்த்தநீர் குடைந்து மூழ்கிச் சங்கற்பஞ் செய்து முற்றி. ௧௩௧

கங்கணதீர்த்தம் கங்கணேச்சரம்

அலங்கொளிக் கரத்துச் செம்பொற் காப்புநாண் அணிந்து மூவா
இலிங்கம்ஆண் டுருவிப் பூசை இயற்றினள் அனேய தீர்த்தம்

---

௧௩௦. துலேசேர் என்றூழ் - துலாராசியை யடைந்த சூரியன், துலாரவி. திங்கள் - மாதம். பூரம் வெண்மதியாட்சி - பூரநட்சத்திரத்தில் சந்திரன் இருத்தல்; எனவே, பூரநட்சத்திரத்தில் என்பதாம். மூன்றும் நந்தை என்றெட்டுக. பதினைந்து திதிகளை ஐந்தைந்து திதிகள் ஒருகூறாக மூன்று கூறாக்கி அவ்வைந்துக்கும் முறையே நந்தை, பத்திரை, சயை, இருத்தை, பூரணை என்னும் பெயர்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதனால், பதினைந்து திதிகளில் நந்தைமுதலிய ஐந்திலும் ஒவ்வொரு பெயர்கொண்ட திதிகள் மும்மூன்று உள்ளன எனவும், அவைகளில் பிரதமை, சட்டி, ஏகாதசி என்னும் திதிகள் நந்தையென்னும் பெயர்பெறும் எனவுங்கொள்க. அவற்றுள் மூன்றும் நந்தை என்றதனால் ஏகாதசி என்பது பெறப்படும். பின்பக்கம் என்றதனால் அமரபக்கத்து ஏகாதசிதிதி என்பதாம். இப்பொழுதும் ஐப்பசிப் பூரத்தில் அமரபக்கத்து ஏகாதசி சம்பந்தம் இருத்தல் கருதத்தக்கது.
*பழைய பதிப்பொன்றில், 'ஐப்பசித் திங்கட்பூசம்' எனக் காணப்படுகின்றது. பின்னர் வரும் வெண்மதி 'யாட்சி' என்பதற்குச் சந்திரன் ஆட்சிராசியில் இருக்குங்கால் எனப்பொருள் கொண்டால் சந்திரனுக்கு ஆட்சிக்குரிய இராசி கடகமே யாதலால் அது பூசத்திற்கே பொருந்துகின்றது. ஆயினும், வடமொழியில் பூரநட்சத்திரமென்றே கூறப்பட்டுள்ளது. பூரநட்சத்திரத்தைக் கொண்டாடுதலே வழக்கமாகவும் இருக்கின்றது.

௧௩௧. கடைநாள் செல்லா - ஊழிக்காலத்தின் செயல்செல்லாத. கூர்த்தனள் - மிகுந்தாள்.

நலங்கெழு காப்புத் தீர்த்த மெனப்பெயர் நவில்வர் சேர்ந்தார்
குலங்களோ டுய்யச் செய்யும் இலிங்கமுங் கொள்ளும் அப்பேர். கரு௨

கடகேச்சரம்

நவமணிக் கடகம் பூணும் ஞாங்கருங் கடகே சானச்
சிவபரஞ் சுடரைப் பூசை செய்துதன் கரத்திற் பூண்டாள்
அவிர்மணி நகையாள் போற்றும் அக்குறி இரண்டுங் கண்டோர்
தவலரு மலநோய் மாற்றி முத்தியில் தவிர்ந்து* வாழ்வார். கருங

அன்னணம் அருச்சித் தேத்தி ஆளுடை எம்பி ராட்டி
உன்னுவோர் பிறவி மாய்க்கும் உள்நகர் வரைப்பின் முற்ற
மன்னிய வளங்க ளெல்லாம் மனங்களி பயப்ப நோக்கிப்
பன்னரும் பெருமை சான்ற பரவெளிப் பிலத்தை யுற்றாள். கருச

உலகாணித் தீர்த்தம்

ஐம்பெரும் பூதம் முன்னாள் ஆயிடை மலர்ப்பூம் பொய்கை
தம்பெயர் நிறுவித் தொட்டுத் தடந்திரை கொழிக்குந் தூநீர்ப்
பைம்புனல் படிந்து பன்னாள் மெய்த்தவம் பரிக்குங் காலைக்
கம்பனார் கருணை கூர்ந்து காட்சிதந் தருளப் போற்றி. கருரு

மூவருந் தம்முட் கூடல் முதலிய வேறு பாட்டான்
மேவருங் கரணம் யாக்கை விடயம்ஆ தாரம் எல்லாம்
ஆவனை வரங்கள் பெற்ற அத்திறத் துலக முற்றும்
பாவுதன் வடிவாய் ஓங்கும் உலகாணிக் கரையின் பாங்கர். கருசா

---

கரு௨. இறைவனை வழிபடுதற்பொருட்டு அம்மையார் காப்பணிந்து கொண்டனர் என்க. இருவி - இருத்தி. அப்பேர் - காப்பு லிங்கம். இது கங்கணேச்சரம் எனப்படும்.

கருங. ஈசானர் - ஈசர். கடகம் பூண்டதும் அதன் பொருட்டு. இரண்டு: கடகேசம், கங்கணேசம் என்பன. தவிர்ந்து - தங்கி. *'தரித்து' எனவும் பாடம்.

கருரு. ஐம்பெரும்பூதம் - பிருதிவி முதலிய பஞ்சபூதங்கள். தம்பெயர்- பஞ்சதீர்த்தம்.

கருசா. மூவரும் - கெடுதலில்லாத, கரணம், யாக்கை, விடயம், ஆதார மென்பன கரணம், தனு, போகம், புவனமெனப் பொருள்தரும். முதலிய

ஆங்கினி தமர்ந்து வைகித் தவம்புரி கருத்த னாகி
ஊங்குடன் அணைந்த விண்ணோர்க் கருள்விடை உதவி அங்குத்
தேங்குநீர் உலகம் உய்யத் திருஅறச் சாலை ஆக்கி
மாங்குயிற் கிளவி நங்கை அறமெலாம் வளர்க்க லுற்றாள். கசுஎ

அம்மையார் அறம்வளர்த்தல்

தெய்வம்தென் புலத்தார் பூதம் மானிடம் பிரமம் என்றோர்
ஐவகை எச்சம் பூர்த்தம்* துறந்தவர் மடங்கள் அன்பு
செய்யும்இல் வாழ்வார்க் கில்லம் மனைக்குப கரணம் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்தர் எங்கணும் பிறங்கு சோலை. கசுஅ

இரப்பவர் குருடர் எவ்வ முற்றவர்ப் புரத்தல் வெங்நோய்
தூரக்கும்நன் மருந்து தூவாய் மகவினை ஓம்பல் சுண்ணம்
பரித்தபா கடையே எண்ணெய் பைம்புனல் குளிப்ப வேண்டும்
மருக்கிளர் துவர்க ளாதி மலரணை நிலன்ஆன் கன்னி. கசுகூ

---

என்பது பிரிதல், ஒன்றும் பலவுங் கூடாமை, மிகுதல், குறைதல் முதலிய வற்றைக் குறிக்கும். ஆவகை - ஆகும்படி. பெற்ற - பெற்றன. அத்திறத்து - அத்திறத்தினால். பாவு - பரவிய, தன்வடிவாய் ஒங்கும் உலகாணி என்க; உலகாணி என்னும் பெயர்க்காரணமும் ஈண்டே அறிக. பஞ்சதீர்த்தமென் னும் பெயர்க்காரணம் மேலைச் செய்யுளிற் கூறப்பட்டது. பாங்கர் என்புழி வந்து என்னும் ஒருசொல் வருவித்துரைத்தல் சிறக்கும்.

கசுஎ. அறச்சாலை - தருமஞ் செய்யுமிடம்.

கசுஅ. பூர்த்தம் - தருமம், வறியார்க்கு ஈகை. முப்பத்திரண்டு அறங் களில் இதனுள், (க) தேவயாகம், (உ) பிதிர்யாகம். (ங) பூதயாகம், (ச) மானிடயாகம், (ரு) பிரமயாகம், (சா) வறியார்க்கு ஈகை, (எ) துறந்தவர்க்கு மடம், (அ) இல்வாழ்வார்க்கு இல்லம், (கூ) இல்வாழ்க்கைக்குரிய கருவிப் பொருள்கள், (க0) தண்ணீர்ப் பந்தல், (கக) பூஞ்சோலை என்னும் பதி னொன்று கூறப்பட்டன. * 'சூக்தம்' எனவும் பாடம்.

கசுகூ. எவ்வம் - துன்பம். தூவாய் - தூய்மையான வாய். பாகடை - தாம்பூலம், துவர்கள் - சீயக்காய் முதலிய அரைப்புக்கள். ஆன் - பசு. இத னுள், (கஉ) யாசிப்பவர் குருடர்முதலிய அங்கஈனர்கள் முதலாகத் துன்ப முற்றவரை ஆதரித்தல், (கங) நோய்க்கு மருந்து கொடுத்தல், (கச) குழ வியை வளர்த்தல், (கரு) சுண்ணம்பு கொடுத்தல், (கசா) தாம்பூலம் கொடுத் தல், (கஎ) தலைக்கு எண்ணெய் வார்த்தல், (கஅ) முழுதுகற்கு அரைப்புப் பொடிகள் கொடுத்தல், (ககூ) படுக்கை அளித்தல். (உ0) பூதானம், (உக)

கடிமணம் விளக்கு மாறுக் கடன்ஒழித் திடுதல் ஈசன்
அடியவர் விழைவ ஈகை அக்கமா மணிவெண் ணீறு
படியிலாக் கடவுட் பூசை உபகா ணங்கள் பாசக்
கடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராணம் நல்கல். ௧௪௦

சிவபிரான் அடிக்கீழ்ப் பத்தி செவியறி வுறுத்த லோடும்
உவகையின் அபயம் யார்க்கும் வழங்குதல் உள்ளிட் டோதும்
நவைபிரி அறம்எண் ணான்கும் நாள்தொறும் நிகழ்ச்சி மாணப்
பவநெறி துரக்கும் ஞானப் பைந்தொடி நிறுவிப் பின்னர். ௧௪௧

அம்மையார் திருவேகம்பத்திற் கெழுந்தருளல்

வீங்குநீர்க் கம்பை யாற்றின் கரைமிசை விரிமா நீழல்
ஓங்கொளிப் பொருளைக் காணும் உறுபெறுங் காதல் ஈர்ப்ப
வாங்குநுண் மருங்குல் நோவ வளரிளங் குவவுக் கொங்கைப்
பாங்கியர் முதலோர் சூழப் படரொளி மறுகிற் போந்தாள். ௧௪௨

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மலையான் மடமகள் மறுகூ டணைதலும் வளமா நகரவர் தொழு
தாடி, உலவா நசையொடு பணிவார் மனமகி ழுறுவார் வயின்வயின்
அணிசெய்வார், குலைநீள் கதலிகள் கமுகந் துகில்விரி கொடிவே*

கோதானம், (௨௨) கன்னிகாதானம் செய்தல் என்னும் பதினொன்று கூறப்பட்டன.

௧௪௰. இதனுள், (௨௩) மணம் செய்வித்தல், (௨௪) விளக்குக்கொடுத்தல், (௨௫) தீராக்கடன் தீர்த்தல், (௨௬) சிவனடியார் வேண்டுவன கொடுத்தல், (௨௭) உருத்திராக்கமளித்தல், (௨௮) திருவெண்ணீறு கொடுத்தல், (௨௯) பூசைக்குரிய பொருள்கள் தருதல், (௩௰) சைவநூல் புராணம் முதலிய நூல்களைத் தருதல் (ஓதுவித்தலெனலுமாம்) என்னும் எட்டு கூறப்பட்டன.

௧௪௧. இதனுள், (௩௧) சிவபத்தியை உபதேசித்தல், (௩௨) அபயமளித்தல் என்னும் இரண்டு கூறப்பட்டன. ஆக முப்பத்திரண்டாதல் காண்க. இவற்றைச் சிறிது வேறுபடவுங் கூறுவர். ஆசிரியர் கச்சியப்ப முனிவரும் சிறிது வேறுபடவே கூறியுள்ளார்.

௧௪௨. வாங்கு - வளைந்த. குவவு - திரட்சி.

௧௪௩. மறுகூடு - வீதியில். உலவா நசை - கெடாத விருப்பம். *'கொடியென்றினையன' எனவும் பாடம்.

றிணையன நடுவார்கள், மலர்மா லிகைகவெ மணிமா லிகைஎழில் மலி
தோ ரணநிரை நிறைவிப்பார். ௧௪௩

மறுகெங் கணும்விரை கமழும் படிகுளிர் பனிநீர் விடுவார்கள்
மறைஓதி, நிறுவுந் தவநிலை முனிவோர் கரமிசை நிறைபொற் குட
முடன் எதிர்கொள்வார், சிறுநுண் ணிடைமறை மடவார் வாழ்த்
திசை திகழ்மங் கலமொழி உரைசெய்வார், நறவம் பயில்குழல் அர
மங் கையரொடு நரமங் கையர்நட மிடுவாரால். ௧௪௪

பொங்கும் பெருகெழில் புனையுந் திருநகர் புரிவின் வலம்வரு
முறையானே, தங்குங் கலைமகள் மலர்மா திமையவர் மடவார் காளி
கள் சாத்தன்சீர், எங்கும் பரவிய திறல்யோ கினிகளை எழுமா தர்
களை இடந்தோறும், அங்கங் கிருவினள் என்னெஞ் சிருவிய அம்
பொற் றிருவடி பிறர்காணாள். ௧௪௫

குணபால் முதல்நதி முடியார் இனிதமர் கோயில் முழுவதும்
முறையிற்சென், றிணரார் மலர்கொடு வழிபட் டருளொடும் எனை
ஆ ளுடையவள் எய்துற்றாள், உணரா தரிஅயன் முதலோர் அலம
ரும் ஒருபே ரொளிமரு மலர்தூவும், மணமா நிழலிடை வெளியே
எளிவர மாகம் புவிதொழும் ஏகம்பம். ௧௪௬

ஏணிற் பொலிமலை அரசன் தருமயில் உள்ளங் களிவர எம்மா
னார், ஆணைப் படிமன நினைவிற் கடவுளர் யவனன் புரியும் அருட்
கோயில், மாணப் பலமணி குயிலுந்* தமனிய வடிவிற் புரிசையி

---

௧௪௪. மறுகு - வீதி. மறைமடவார் - பார்ப்பனப் பெண்கள்.

௧௪௫. அங்கங்கு - தக்க இடங்களில். இருவுதல் - இருத்துதல். காணாள் - காணப்படாதவள்; இது உயர்திணை தொடர்ந்த சினை அதனோடு சார்த்தி யுரைக்கப்பட்டது.

௧௪௬. ஒளி எளிவர (அதனைத்) தொழும் என்க. மாகம் - விண்ணுலகம். தொழும் - என்னும் பெயரெச்சம் ஏகம்பமென்னும் இடப்பெயர் கொண்டது.

௧௪௭. ஏண் - பெருமை. கடவுளர் யவனன் - தேவதச்சன். இதனால், இறைவன் முன்பு தேவதச்சனைத் திருவேகம்பத் திருக்கோயில் அமைக்கும்படி பணிக்க, அவன் நினைவினால் படைத்தனன் என்பது பெறப்படுகின்றது. ஒக்கம் - உயர்வு; நோக்கமெனக்கொண்டு அழகெனலுமாம். * 'முயலும்' எனவும் பாடம்.

ஞேக்கத்தைக், காணப் பெறுகளி காதற் கடலிடை மூழ்கித் துளைப வள் கரைகாணுள். கசஎ

விழிநீர் பொழிதர உள்ளங் குழைவுற மெய்யிற் புளக முகிழ்ப் பெய்தப், பொழிகார் மழைநிகர் கற்றைப் புரிகுழல் மிசையே கை யிணை குவியப்போய்க், குழுவா னவர்மிடை விண்வத் துபரிய கொடிநீள் கோபுர நெடுவாய்தல், தொழுநீர் மையினில் இறைஞ்சிப் பன்முறை துதிசெய் துவகையின் உள்புக்காள். கசஅ

அங்கட் சகமுழு தடையப் பொலிவுறும் ஐந்தாம் ஆவா ணந் தன்னில், தங்கித் திகழ்சிவ மறையோர் முதலிய சைவர்க் கருள் செய்து வலம்வந்து, செங்கட் கதிரவர் காலத் தீயிறை யவர்மா லப ஞெடு செறிநான்கின், எங்கட் கிறையவள் எய்தித் தென்புடை விண்டுத் தளிஎதிர் கண்டுற்ருள். கசகூ

விண்டுவீச்சா வரலாறு

கலிநிலைத் துறை

என்று கூறிய சூதனை இருந்தவத் தலைவர்
நன்று போற்றினர் நலிதரும் ஐம்புலக் குறும்பு
வென்ற மேதகாய் விண்டுவீச் சரம்என்ற தென்னை
இன்று நீவிரித் துரைஎனக் கடாவலும் இறுப்பான். கரு௦

அள்ளி லைப்பண்டக் கடவுளார்க் காரமு தளிக்கும்
வெள்ளி வெண்டிரை விரிகடல் வரைப்பினில் மாயோன்
முள்ளெ யிற்றரா வணைமிசை நாடகம் முயலும்
வள்ள லாரடி மனத்திடைத் தழீஇயினன் துயில்வான். கருக

---

கசஅ. பொழி கார் மழை - பெய்கின்ற கரிய மேகம். குழு வானவர் - கூட்டமாகிய தேவர்கள். விண்வத்து - வானத்தில்.

கசகூ. ஆவரணம் - பிராகாரம். சிவமறையோர் - ஆதிசைவர்கள். இதனுல் திருக்கோயில்களில் ஆதிசைவர்கள் முதலிய சைவப் பெரியார்கள் முன்னர் இருந்து, வணங்க வருவோர்க்குச் சமய உண்மைகளை அறிந்து செல்லுமாறு செய்தலும், தாமும் ஆராய்தலும் முதலிய துறைகளாற் சமயத் தொண்டியற்றுதல் மரபென்பது பெறப்படும். காலத்தீயிறை என்றது ஈண்டு வயிரவரை. நான்கு - நான்காம் ஆவரணம்.

கருக. அள் - கூர்மை. அராவணைமிசைத் துயில்வான் என இயையும். நாடகம் முயலும் வள்ளலார் - நடனம் செய்யும் இறைவன்.

அனைய தன்மையின் அறிதுயில் அமர்பவன் ஒருநாள்
கனைவி ளங்கொளி இதயமென் கவிழ்நனைக் கமலந்
தனைம லர்ந்துமேல் நோக்குறச் செய்தனன் தணவா
வினைஇ கந்துயர் யோகினால் வளிமிசை எழுப்பி. ௧௫௨

பகரும் உந்தியின் மேலிடத் தலரும்அப் பதுமத்
திகழ ருந்திறத் திலங்குநுண் குகையத னிடத்து
நுகரும் ஊண்பகுத் தமருநோன் தழல்அதன் தலையில்
திகழ மேவரும் நுணங்குபூஞ் சிகையதன் நடுவண். ௧௫௩

சாற்று மெய்ப்பரப் பிரமமாம் சதாசிவப் புத்தேள்
வீற்றி ருப்பது யோகத்திற் கண்டனன் விரைத்தேன்
ஊற்று பூந்துழாய்ப் பண்ணவன் உவகையின் வல்லே
போற்றி போற்றிஎன் றிறைஞ்சினன் அன்புமீப் பொங்க ௧௫௪

அன்பி னுக்கெளி யார்பெருங் கருணைகூர்ந் தருளி
இன்ப ஆனந்தத் திருநடம் ஆயிடை இயற்ற
வன்ப ழம்பகை மலஇருள் கடிந்தது காணூஉ
என்பு நெக்குநெக் குருகினான் முரனைஅன் றிறுத்தோன். ௧௫௫

புளகம் எங்கணும் போர்த்துமெய் பனித்துவாய் குழறி
இளகி இன்பநீர் விழியுகக் கம்பனம் எய்தித்
தளர்வில் ஆர்வத்தால் தனைமறந் தறிதுயில் மேவும்
அளவில் ஆங்கயல் இருந்தவர் அன்னது கண்டார். ௧௫௬

கண்டு நெஞ்சகம் பதைத்தனர் திகைத்தனர் கவலை
கொண்ட ழுங்கினர் அஞ்சினர் இரங்கினர் குறிப்பின்

---

௧௫௨. கனை ஒளி என இயைக்க. இதய கமலம், கவிழ் கமலம் எனத் தனித்தனி முடிக்க. கனை - நெருங்கிய. கவிழ் - கவிழ்ந்த, கீழ்முகமாகிய. வளி - பிராணவாயு.

௧௫௩. இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் தகரவித்தையை அறிவிப்பன; அதனை மேலே (பக். ௧௧௬.) காண்க.

௧௫௫. ஆயிடை - இதய கமலத்தில். காணூஉ - கண்டு. முரன் - ஓர் அசுரன்.

௧௫௬. கம்பனம் - நடுக்கம். அறிதுயில் - யோக நித்திரை. அயலிருந்தவரை முன்னர்க் காண்க.

வண்ட லர்த்திரு முதலியோர் மற்றிது நிகழ
அண்டர் நாயகற் கடுத்தவா றென்னெனத் தெரிவார். ௧௫௭

மென்ற ளிர்ச்செழுங் கோமளத் திருவடி வினையேன்
வன்ற னிக்கரம் வருடலான் வருந்தின கொல்லோ
அன்றி என்மடித் தலமிசை அசைந்துநொந் தனவோ
என்று தன்உளம் அயிர்த்தனள் இலங்கெழில் மலராள். ௧௫௮

மெல்ல னிச்சமும் குழைக்கும்எம் பிரான்திரு மேனி
கல்லெ னக்கடுந் திட்பமும் தட்பமும் கதுவும்
புல்லி யேனுடல் வைகலான் உளைந்தது போலும்
அல்லதொன்றறி யேன்என வெரீஇயினன் அனந்தன். ௧௫௯

எருத்த மீதுகொண் டுலகெலாம் கொட்புறும் என்னுன்
மருத்துழாய்முடி மாமறு மார்பினன் மேனி
வருத்த முற்றதே யாங்கொல்என் றெண்ணினன் வலியால்
உருத்த* மாற்றலர் முனைகெடப் பொருதிறல் உவணன். ௧௬0

இன்ன வாறிவர் யாவரும் வேறுவே றெண்ணிப்
பன்ன ரும்பெருங் கவலைகூர் வுழிவரை பயந்த
கன்னி பாகனார் திருநடக் கருணையில் திளைத்த
பின்னை நாயகன் யோகமாத் துயில்பிரிந் தெழுந்தான். ௧௬௧

கண்ட பேரின்ப அனுபவக் கருத்தினோ டெழுந்து
மண்டு வெள்ளநீர் அருவிகண் பொழியமன் றுடையார்
தொண்ட னேற்கெளி வந்தவா றெனக்களி துளும்பிக்
கொண்ட காதலால் அஞ்சலி சென்னிமேற் குவித்து. ௧௬௨

---

௧௫௭. வண்டு அலர் - வண்டுகள் வீழும் தாமரைமலர். திரு - இலக்குமி.

௧௫௯. கல்லென - கல்போல. சரீரம் விறைத்தலும், குளிர்தலும் இறுதிக்காலக் குறிகளாதலின் அஞ்சினனென்க. உளைந்தது - வருந்தியது. அனந்தன் - ஆதிசேடன்.

௧௬0. எருத்தம் - பிடர். மாமறு - சிவற்சமென்னும் மறு. உவணன் - கருடன். *'உருத்து' எனவும் பாடம்.

௧௬௧. பின்னை - பின் பிறந்தவள், இலக்குமி.

ஐய னேஅருள் புரிகஅ ழற்சிகை ஏந்தும்
கைய னேஅருள் புரிகபல் கதிரொளி பரப்பும்
மெய்ய னேஅருள் புரிகமெய்க் கூத்தினைக் காட்டும்
செய்ய னேஅருள் புரிகெனச் செப்பினன் பலநாள். ௧௱௩

அன்ன பெற்றிகண் டியாவரும் அதிசயம் எய்தி
என்னை என்னைமற் றிதுவெனக் குதுகுதுப் போடும்
பொன்ன டித்தலம் போற்றினர் விணைதனும் நெடியோன்
மன்னு றும்பெரு மகிழ்ச்சியான் அவர்க்கிது வழங்கும். ௧௱௪

செறியும் நான்மறைச் சிரமிசைப் பரம்பொருள் இந்நாள்
அறிஞர் காண்கிலா அற்புதத் திருநடம் எனக்குப்
பிறிவ ரும்பெருங் கருணையாற் காட்டிடப் பெற்றேன்
மறியும் இவ்வுடல் வருபயன் கிடைத்ததென் றனக்கே. ௧௱௫

அவ்வ ருட்டிருக் கூத்தினைக் கண்டஆர் வத்தால்
இவ்வு றுப்பெலாம் விதிர்விதிர்ப் பெய்தின கண்டீர்
செவ்வன் ஓர்மின்என் றியம்புசொற் செவித்துளை நிறைப்பக்
கொவ்வை வாய்த்திரு முதலியோர் ஆதரங் கொண்டார். ௧௱௬

கேட்ட அப்பொழு தேஎதிர் கண்டெனக் கிளர்ந்து
காட்டும் வேணவா மீமிசை எழக்கழல் வணங்கி
நாட்டும் அத்திருக் கூத்தினை நாங்களுங் காண
வேட்ட னங்கள்மற் றதுபெறு நெறிவிரைந் தருளாய். ௧௱௭

என்று பன்முறை வேண்டலும் ஈர்ந்தொடைத் துளவோன்
நன்று நுங்கருத் தெனமிக நகைமுக மலர்ந்து
குன்ற வில்லியார் சேவடி சிந்தையிற் கொண்டாற்
கன்று நம்பர்தம் அருளினால் அறிவுவந் துதிப்ப. ௧௱௮

மல்லல் தெண்டிரை மறிகடல் மணிகள்கொண் டொதுக்கும்
தில்லைக் கானுடைச் சிதம்பர வரைப்பில்எஞ் ஞான்றும்

---

௧௱௪. குது குதுப்பு - வியப்பு.

௧௱௫. மறியும் - இறக்கின்ற.

௧௱௭. வேட்டனங்கள் என்பதில் கள் விகுதிமேல் விகுதி.

௧௱௯. தில்லை - ஒரு செடி. கான் - காடு. அல்லி - அகவிதழ்.

செல்வத் தாண்டவம் நவிற்றும்எம் பிரானெனத் தெளிந்தான்
அல்லிப் பூமகள் முதலியோர்க் கன்னது செப்பி. ககூகூ

அங்கண் எய்திநாம் ஆளுடை நாயகன் திருமுன்
பொங்கு காதலான் அடைக்கலம் புகுந்துபோற் றிசைத்துத்
தங்கி மெய்த்தவம் இயற்றிடின் தண்ணருள் சுரந்து
நங்க ளுக்கெதிர் காட்டுவன் ஆனந்த நடனம். கஎ0

யோகி யோர்களும் எய்தருந் திருநடம் உரிமை
யாகும் அன்புடை அடியவர்க் கெளியது கண்டீர்
ஏகு வாம்இனி வம்மின்என் றவருடன் எழுந்து
மாக வாற்றினுல் வயங்கொளித் தில்லைவந் தடைந்தான். கஎக

வேறு

சேர்ந்துதிரு மூலட்டந் தொழுது போற்றிச் சிந்தைகளி
கூர்ந்துதிருப் பாப்பரசு கலுழன் முதலோர் உடன்குழும
நேர்ந்ததவ யோகத்தின் நெடுநாள் முயன்றான் அக்காலை
வார்ந்தசடைப் பிரானும் மகிழ்ந்து காட்சி கொடுத்தருளி. கஎஉ

ஒன்னார் உயிர்பருகி ஒளிருந் திகிரித் தனிப்படையோய்
என்னீமற் றிவரோடும் எம்பால் விழைந்த திபம்புகெனப்
பொன்னடை யுடைத்தோன்றல் புவிமின் வீழ்ந்து பணிந்தெழுந்து
நன்னமம் எடுத்தோதிப் புகழ்ந்து போற்றி நவில்கின்றான். கஎங

அண்ணலே ஆனந்தத் தெள்ளா ரமுதே அடியேங்கள்
புண்ணியநின் திருக்கூத்தின் அமுதம் பருகிப் பொலிவெய்த
உண்ணிறைந்த பெருங்காதல் உடையேம் கருணை செய்தருளாய்
எண்ணியார் எண்ணமெல்லாம் முடிக்க வல்ல எம்மானே. கஎச

குறளுருவாய் உலகளந்தான் இயம்புங் கூற்றுக் கேட்டருளி
அறவனார் எதிர்மொழிவார் ஆழிப் படையோய் எவ்வெவரும்

---

கஎக. மாக ஆறு - வான் வழி.

கஎஉ. திருப் பாப்பரசு என்பதில் திருவென்பதன் முன்னுள்ள பகரம் விரித்தல். பகரமின்றிப் பாடங்கொள்ளுதல் சிறக்கும். பாம்பு + அரசு = பாப்பரசு.

கஎரு. அற்ஆன் - தருமவிடை. பெட்டாயாகில் - விரும்பினையாயின்.

பெறலரிய நடங்காணப் பெட்டா யாகில் எம்இலிங்கம்
மறன்அணுகாத் திருக்காஞ்சி வரைப்பின் எய்தித் தாபித்து. ௧௭௫

விண்டு காஞ்சியில் விமலனை வழிபடல்

நறுமலர்கொண் டருச்சித்து வல்லை ஈண்டு நண்ணுதிநின்
உறுகருத்தை முடிக்கின்றேம் என்றுங் கருளும் உரைகேளா
மறுவிகந்த மனத்தன்பின் மாயோன் அங்கண் யாவரையும்
நிறுவிவள வயற்காஞ்சி நெடுநீர் நகரங் கடிதடைந்தான். ௧௭௬

ஏகம்பத் தொளிமணியை இன்பத் தொழும்பர் செய்தவங்கள்
ஏகம்பத் தெனக்கொள்ளும் இறையைக் குறளாய் மாவலிமுன்
ஏகம்பத் தாற்புரிசை ஒருமூன் றெரித்த தனிமுதலை
யேகம்பத் தொடும்புளகம் எய்த வணங்கித் தொழுதெழுந்து. ௧௭௭

அக்கம்பம் உடையார்க்குத் தென்பால் அங்கண் சிவலிங்கம்
மிக்கன்பு தழைத்தோங்க விண்டு வீசன் எனஇருவிப்
பொக்கங்கள் முழுதகலப் போற்றி வேண்டி அருள்பெற்றுத்
திக்கெங்கும் புகழ்பரப்புந் தில்லை வனத்தை மீண்டணைந்தான். ௧௭௮

விண்டு முதலியோர் திருக்கூத்துக் காணல்

ஆண்டணைந்த திருமாலுக் கருளா ரமிழ்த மனையாரும்
தூண்டரும்பே ரொளிப்பிழம்பாய்ச் சுடருந் திருச்சிற் றம்பலத்துள்
காண்டகைய ஆனந்த நிருத்தங் காட்டக் கழியன்பு
பூண்டதிருப் பாப்பரசு புள்ளேற் றண்ண லொடுங்கண்டான். ௧௭௯

கண்டளவில் பெருங்காதல் இன்ப வெள்ளங் கரைஇகப்பக்
கொண்டநிறை மகிழ்ச்சியினால் ஆடிப் பாடிக் கும்பிட்டுப்
பண்டைநிலை மறந்துமதுப் பருகுஞ் சுரும்பிற் பரவசனாய்
மண்டியபே ரார்வத்தால் வணங்கித் தொழுது களிசிறந்தான். ௧௮௦

---

௧௭௭. இது மடக்கு. ஏகம் பத்தென - ஒன்று பத்தாக. ஏகு அம்பு அத்தால் - சென்ற திருமாலாகிய அம்பினால். முதலையே - முதற்பொருளையே. கம்பத்தொடும் - நடுக்கத்தோடும்.

௧௭௮. இருவி - இருத்தி. பொக்கங்கள் - பொய்கள்.

௧௭௯. திருப்பாப்பரசு என்றதற்கு மேல் ௬௨௨ஆம் செய்யுளில் உரைத்தாங்குரைக்க.

இறைவனார் திருக்கூத்துக் கிசையக் கணங்கள் இயம்முழக்கும்
முறையுணர்ந்து பெருங்களிப்பால் தானும் படகம் முழக்குதலும்
மறைமுதல்வர் அதுநோக்கி மகிழ்ந்து படகப் பணிதனக்கே
நிறைவிருப்பின் அருள்செய்யப் பெற்று வாழ்ந்தான் நெடியோனே.

விதுவொன்றுஞ் சடைமுடியார் விண்டு வீசம் வந்தவா
றிதுகண்டீர் முனிவீர்காள் ஈண்டுத் தொழுது வழிபட்டுத்
துதிசெய்து கணநாதர் திருமாளிகைசூழ் தருமுன்றின்
மதுவிள்ளும் மலர்க்கூந்தல் மலைபான் மடந்தை எய்தினார். ௧௮௨

அகத்தியேச்சர வரலாறு

பண்ணிசைந்த வரிச்சுரும்பர் பாடல் பயிலும் மலர்இலஞ்சித்
தண்ணிசைந்த சிவகங்கைத் தழங்குந் திரைநீர் குடைந்தாடிப்
பெண்ணிசைந்த பெருவனப்பின் பிராட்டி ஆங்குப் பிறங்கொளியால்
கண்ணிசைந்த களிசிறப்ப அகத்தியேசங் கண்டணைந்தாள். ௧௮௩

ஷை வேறு

என்ற தூதனை மாதவர் யாவரும் ஏத்தியே
பன்றி காணருஞ் சேவடிப் பற்றிய சிந்தையோய்
துன்று சீர்மை அகத்தியே சத்திபல் சொல்கென
நன்றும் உள்ளம் மகிழ்ந்து விளங்க நவிற்றுவான். ௧௮௪

நாரதர் செயல்

கடவுள் மாமுனி நாரதன் முன்னொரு காலையின்
இடனுடைத்திருக் காஞ்சியின் ஏகம்ப நாதரைச்
சுடரும் மாடக யாழிசை யால்தொழு தேத்துவான்
தடவு வெள்ளிப் பருப்பத நின்றுந் தணந்தனன். ௧௮௫

---

௧௮௧. படகம் - பேரிகை, முரசு.

௧௮௨. முன்றில் - கோயிலின் முன். மூன்றில் எனப்பாடம் இருந்திருத்தல் வேண்டும்.

இவ்விண்டுவீச்சர வரலாறு, (௧) இறைவன், உள்ளக் கமலத்தில் இருக்கின்றான்' என்பதும், (௨) 'திருமால் இறைவன் அடியார்' என்பதும், (௩) முப்புராரி கோட்டப்படல உண்மையில் மூன்றாவதாகக் கூறப்பட்டது மாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

௧௮௫. மாடகம் - முறுக்காணி. தடவு - பெருமை.

அண்ண லார்தம் அடியிணை தைவரு சிந்தையான்
நண்ணு கின்ற நரப்புக் கருவித் தலைவனை
விண்ணின் நோக்குபு வெய்தென விந்த நெடுங்கிரி
எண்ணம் வாய்ப்ப இயங்கும் உருக்கொடு முன்னுற. ௧௮௬

அருக்கி யம்முத லாயின கொண்டு வழிபடூஉப்
பெருத்த காதலிற் பேணித் தொழுது வணங்கலும்
கருக்க டிந்துயர் காழறு மாதவன் ஓகையான்
மருத்த பூஞ்சுனை விந்த வரைக்கிது பேசுவான். ௧௮௭

மன்னும் மெய்த்தவர் பாற்புரி யும்வழி பாட்டினில்
நின்னை யொப்பவர் கண்டிலன் இத்தகு நின்னையும்
பொன்னி னாட்டவர் போத இகழ்ந்தனர் அன்னதை
உன்னி உன்னி வருந்திடு கின்றதென் உள்ளமே. ௧௮௮

என்ற தாபத வேந்தனை மீள இறைஞ்சிமுன்
நின்று தேவருள் யாவர் இகழ்ச்சி நிகழ்த்தினர்
என்ற னக்கிகழ் யாதுகொல் கூறினை யேல்அது
மன்ற மாற்றுவன் யானென விந்தம் வகுத்ததால். ௧௮௯

முனிவன் அவ்வுரை கேட்டு மொழிதரு மேன்மையிற்
புனித நின்னொடு பொன்வரை நேரெனும் நூலெலாம்
பனிம திச்சடைப் பண்ணவர் தேவர் குழாத்தொடு
நனிம கிழ்ந்தவண் வைகுவர் நாள்தொறும் ஆதலால். ௧௯௦

இயங்கு கோள்கள் உடுக்கள் இராசி எவற்றொடும்
வயங்கு சந்திர சூரியர் தாம்வட மேருவை
நயந்து சுற்றுவர் நாள்தொறும் அத்திறம் நோக்கியே
உயங்கு கின்றனன் யானெனப் பின்னரும் ஓதுவான். ௧௯௧

தனக்கு நேர்வரி யாய்பல சாற்றுவ தென்கொலோ
எனக்கு நீகனி நண்பினை ஆதலின் இத்திறம்

---

௧௮௬. வெய்தென, விரைவுக் குறிப்பு. இயங்கும் உரு - நடத்தற்குரிய வடிவம்.

௧௮௭. காழ் - மன வயிரம்.

௧௯௨. இன்னினி - இப்பொழுதே. ஒய்யென - விரைந்து. மனக்கு, மனத்துக் கென்பதன் விகாரம். நாரதர் இங்ஙனம் கூறின்மையால் விந்தமலை

உனக்கி யம்பினன் இன்னினி ஏருவல் ஒய்யென
மனக்கு வேண்டிய செய்கென மாதவன் நீங்கினன். ௧௯௨

விந்தம் ஓங்கி எழுதல்
எழுசீரடி யாசிரிய விருத்தம்

பத்தர் மெய்க்கிளை மகதி யாழ்பயில் படிம உண்டியன் நீங்கலும்
மெய்த்த வெஞ்சினம் மீக்கொள் மால்வரை வீயும் எல்லை விளக்கினைச்
செத்தி றப்ப வளர்ந்தெ ழுந்து விசும்பு சென்று நிவந்ததால்
மைத்த வல்லிருள் கீறி வாள்கள் வயங்கும் ஆறு தடுத்ததோ. ௧௯௩

துருவ மண்டல எல்லை கீழ்ப்பட மேக்கெ ழுஞ்சுடர் வெற்பினைத்
தருநி லத்தவர் நோக்கி முந்து தழற்ப டைக்குலி சக்கொடுங்
கருவி யிற்சிற கரிவ லாரி யுடன்செ ருச்செய் கருத்தினால்
வருவ தாங்கொல் எனத்தி கைத்து மருண்டு தம்முள்வெரீஇயினர்,

தங்கள் ஒப்புமை கொண்டு நண்ணு தருக்கு ணர்ந்து வெகுட்சி
யால், பொங்கி விம்மி மதர்த்தெ ழுந்தெதிர் போர்செ யப்புகு தன்
மையின், கொங்கை வம்பு சழங்க மார்பம் அலைத்து வீறு கொளக்
கதழ்ந், தங்கண் மங்கையர் வெற்பின் ஒக்கம்முன் நோக்க விண்மிசை
அண்மினர். ௧௯௫

சிட்டி நாள்முதல் ஒப்பி லாது தினம்பொ லக்கிரி சூழ்வர
வட்ட மிட்ட கறங்கின் ஓலை எனச்சு ழன்றல மந்துநைந்
திட்ட கோள்கள் இராசி நாள்களும் அன்று தன்னம் இளைப்பொழிந்
துட்ட தும்பு களிப்பின் வைகின ஒங்கு மால்வரை யாலரோ. ௧௯௬

---

அவரை வணங்கியபோது அதனிடத்து யாதோ ஒரு செருக்கினைக் கண்டிருத்தல் வேண்டும்.

௧௯௩. பத்தர் - யாழ்க்கோல் புகுத்தப்பட்டதோர் உறுப்பு. வீயும் எல்லை விளக்கினைச் செத்து - அவியும்போது எரியும் விளக்குப்போல. நிவந்தது - உயர்ந்தது. ஆறு - வழி.

௧௯௪. தருநிலத்தவர் - தேவர். குலிசம் - வச்சிரம். வலாரி - இந்திரன்.

௧௯௫. கொங்கை உணர்ந்து போர்செயப்புகுந் தன்மையில் வீறுகொள என்க. வம்பு - கச்சு. சழங்க - சரிய. கதழ்ந்து - விரைந்து. ஒக்கம் - உயர்வு.

௧௯௬. கறங்கு - காற்றூடி. தன்னம் - சிறிது.

ஷை வேறு

மாயி ருங்கனக மாமலைத்தலையின் மன்னி வன்குபவன் நேமியின்
ஞாயி றாதிகளை இடைய றாதுகடு கச்சு ழற்றிநனி தளர்வுகூர்
பாய சீர்த்திமிகு துருவ னுஞ்சிறிது பணியொ ழிந்துறை நலம்பெற
மீயு கந்தமணி அருவி தாழ்நெடிய விந்த வெற்புதவி செய்ததால்.

அருவி தாழ்சயிலம் ஒளிவ ழங்குநெறி தனைஅ டைத்துமிசை அணவலால், ஒருபு டைத்திமிரம் மொய்ப்ப மற்றையொரு புடையு றக்கதிர்கள் மொய்த்திடும், இருதி றத்தினொடு மருவு பெற்றிமை இசைந்த மன்னுலகம் அற்றைநாள், மருமலர்க்குழலி பாக மாகவளர் மறைமு தற்பொருள் நிகர்த்ததால். ௧௯௮

இகழ்ந்த நீர்இனி நடப்ப தெங்கண்என எள்ளி வாள்களை நகைப்பதூஉம், திகழ்ந்த மேருவொடு செருவி ளைப்பஅறை கூவி வீரநகை செய்வதூஉம், உகந்தெ ழுந்தனது சீர்த்தி பல்குவதும் ஒப்ப எங்கணும் அடித்தலம், அகழ்ந்து கல்லென இரைத்து வெள்ளென விளர்த்து வீங்குபுனல் அருவியே. ௧௯௯

இறவு ளர்க்குமிசை உலக வாழ்க்கையர் விருந்த ளித்துவகை எய்தினர், குறம டந்தையரும் அரம டந்தையரும் அளவ ளாய்உறவு கொண்டனர், முறைநி றுத்துசுர முனிவர் வெற்புறையும் முனிவர் நல்வர வெதிர்ந்தனர், மறைமு ழைப்பணிகள் வானு லாம்பணி புலம்பு தீர்ந்திட மணந்தன. ௨௦௦

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மிளைபடு சாரற் குன்றம் மேக்குற நிவத்த லோடும்
ஒளிவழங் காமைக் கால வேறுபா டொழிந்த வாற்றான்

---

௧௯௭. நேமி - சக்கரம். பணி - தொழில்.

௧௯௯. வாள் - சூரியன் முதலிய சுடர்கள். செரு - போர். அறைகூவுதல் - வலிதிற் போருக்கழைத்தல். ஒப்ப - நிகர்ப்பன. அருவி ஒப்ப என முடிக்க.

௨௦௦. இறவுளர் - குறவர். மிசையுலகம் - மேலுலகம். பணி - பாம்பு. புலம்பு - தனிமை. மணந்தன - கூடின.

௨௦௧. மிளைபடு - காவற்காடுகள் பொருந்திய. மேக்குற - மேலே பொருந்த. நிவத்தல் - உயர்தல். ஒளி - சூரிய சந்திரர் முதலிய சுடர்கள்.

வளமலி தவந்தா னங்கள் முதலிய மறுத்துப் பைங்கூழ்
விளைவுகள் அஃகி ஞாலம் வெறுவிய தாயிற் றன்றே. ௨0௬

தேவர்கள் துன்புறுதல்

அங்கது நோக்கி வல்லை புரந்தர னாதி விண்ணோர்
தங்குலக் குரவ னோடுஞ் சதுமுகன் இருக்கை சார்ந்தார்
பங்கயக் கிழவன் நோன்தாள் பணிந்தனர் பரசிப் போற்றி
எங்களை வெருவா வண்ணம் புரத்திஎன் றிதனைச் சொற்றார். ௨0௭

இருசுடர் வழங்கும் ஆற்றை இறும்புசூழ் சோலை விந்தப்
பருவரை தடுத்த வாற்றாற் பகல்இராத் தொடக்கம் இன்றித்
திருநெறி வேள்வி மாறித் தெருமந்த துலக மன்னோ
மருமலர்க் கமல வாழ்க்கை வயங்கெழு கடவு ளோயே. ௨0௮

---

வழங்காமை - செல்லாமல், மறுத்து - மாறி. பைங்கூழ் - பயிர், அஃகி - குறைந்து.

௨0௮. இறும்புசூழ் - குறுங்காடுகளோடு சூழ்ந்த. பகல் இராத் தொடக்கம் - பகல் இரா முதலிய காலவேறுபாடுகள். திருநெறிவேள்வி - சைவ வேள்வி. சைவத்திற்குத் திருநெறி என்பது பழம்பெயர். துறக்கம் முதலிய பயன்களை விரும்பிச் செய்யப்படும் அசுவமேத முதலிய ஊன்வேள்விகள் ஆரியவேதத்திற் கூறப்படும் வைதிகவேள்விகளாம். உலகிற்கு வான்வழக்கங் கருதியும், இறைவன் திருவருள்கருதியும் நெய்பால் முதலிய அவிகளைச் சொரிந்து தீயின்கண் இறைவனை வழிபடும் தூயவேள்வி தமிழ்மறைகளிற் கூறப்படும் திருநெறி வேள்வியாம். இத்திருநெறி வேள்வியினாலேயே மழைவளம் உண்டாமென்பதும், இவ்வேள்விக்குரிய நெய்பால் முதலிய அவிகளைத் தருவன ஆனினங்களாதலால் இவ்வேள்விக்குக் காரணம் பசுக்களே என்பதும், "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்" (திருமு. ௩. பதி ௫௪. ௧.) என்னும் திருஞானசம்பந்தர் திருமொழியாலும், 'வேள்வி நற்பயன் வீழ்புனலாவது," எனவும் "ஆனினங்கள் வாழ்க என்(றது) உலகம் இன்புற வேள்விகள் (ஆகிய) வழிபாடு மன்னவாம்" எனவும் (பெரிய-ஞா. அ௨௨, அ௨௩.) கூறிய சேக்கிழார் அருளுரையாலும் தெளிக. வைதிக வேள்வியும் வான்வழக்கத்தின் பொருட்டுச் செய்யப்படு மென்பது பிற்காலவழக்கு. இதனால், தமக்கும் உலகிற்கும் பயன்கருதிச் செய்வது திருநெறிவேள்வியும், தமக்குப் பயன் கருதிச்செய்வது வைதிகவேள்வியும் என்பது போதரலால், 'திருநெறி வேள்வி மாறித் தெருமந்த துலகம்' என்றார். இன்னும், வேள்வி என்பது விரும்பிச் செய்யப்படுவதென்னும் பொருட்டாய் வழிபாட்டைக் குறிப்பதாதலின், 'திருநெறி வேள்வி' என்றது சிவவழிபாடாம், அவ்வழிபாடு மாறினமையின்

இனிஎமக் குறுதி என்னே என்றலும் இளவண் டூதும்
பனிமலர்க் கதுப்பின் ஐம்பாற் பாரதி கொழுநன் கேளாத்
தனிமிடல் படைத்த விந்தத் தருக்கினைப் பௌவம் உண்ட
முனிவனே அடக்க வல்லும் என்றுள முன்னிச் சொல்வான். ௨0௪

நடலைஇன் றுயர்நோய் கேட்டி காசிமா நகரம் வைகுங்
குடமுனி தன்னை விண்ணோர் குழாத்தொடும் நணுகி விந்தத்
தடவரைத் தருக்கு நீப்பான் வேண்டுக தவத்தான் மிக்கோன்
கடலெலாங் குடங்கை ஏற்றுப் பருகினன் முன்னங் கண்டாய். ௨0௫

என்றிது வியாழப் புத்தேட் கியம்பினன் இயம்பிப் பின்னும்
தன்றிரு வுளத்தின் எண்ணிச் சயிலவீ றடக்க யானே
மன்றலம் பொழில்சூழ் காசி வரைப்பினைக் குறுகி அந்த
மின்றிகழ் சடையாற் கோதி விடுப்பல்என் றெழுந்து சென்றான்.

பொன்னவ னாதி தேவர் புடையுறப் போந்து செங்கால்
அன்னமுங் கருமென் கூந்தல் அன்னமும் மறலி ஆடும்
கன்னிவெண் டரங்கத் தெண்ணீர்க் கங்கையா றுடுத்த காசி
நன்னெடு நகரம் புக்கான் நகைமலர்க் கமலத் தோன்றல். ௨0௭

பிரமன் அகத்தியருக் குரைத்தல்

அவ்வயின் அகில நாதர் அடியிணை தொழுது போற்றித்
தெவ்வலி அடுபோ ராண்மைத்* தேவர்தங் குழாத்தி னோடும்

உலகம் வருந்துவதாயிற்று. பரார்த்தமாகச் செய்யப்படும் சிவாலயவழிபாடு முட்டுப்படுமாயின் உலகத்திற்குக் கேடுவரும் என்பது உண்மைநூல் துணிபு. இதனை, "முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடின் - மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும் - கன்னங் களவு மிகுத்திடுங் காசினி" (திருமந் - ருகஅ.) என்னும் திருமொழியாலுணர்க. உலகம் என்பதை இரட்டுற மொழிந்து, இவ்வாற்றான் உலகம் தெருமந்ததெனவும், இறைவனை வழிபடுதற் கின்மையால் மேலோர் தெருமந்தாரெனவும் உரைக்க.

௨0௪. ஐம்பால் கதுப்பென மாற்றி, ஐவகையாக முடிக்கப்படும் கூந்தல் என வுரைக்க. பௌவம் - கடல். கடலுண்ட முனிவர் - அகத்திய முனிவர்.

௨0௬. சயிலம் - மலை. வீறு - இறுமாப்பு.

௨0௭. பொன்னவன் - வியாழன். பின்னுள்ள அன்னம் பெண்கள். மறலி மாறுபட்டு. [*பேராண்மை எனவும் பாடம்]

எவ்வமில் கேள்வி சான்ற குறுமுனி இருக்கை நண்ணிப்
பௌவநீர் பருகி னானைக் கண்டிது பகர லுற்றான். ௨௦௮

முக்குறும் பெறிந்த காட்சி முனிவர்வ றனைபாய் சால
மிக்குயர் விந்த நாகந் தருக்குமீக் கொண்டு நாளும்
பொக்கமில் இரவி திங்கள் புகுநெறி தடைசெய் தன்றால்
அக்கிரி இறுமாப் பெல்லாம் அகற்றுவான் நீயே வல்லை. ௨௦௯

இன்னினி விரைக வல்லே தாழ்க்கலை என்று வேண்டும்
அன்னவ னுயர்த்த புத்தேட் கருந்தவக் கிழவன் கூறும்
என்னிது புகன்றாய் ஐயா எம்பிராற் கினிய காசி
தன்னைவிட் டகலேன் வீடு தருவதித் தலங்காண் என்ன. ௨௧௦

வண்டொடு ஞிமிறுந் தேனும் வரிச்சிறைச் சுரும்பும் ஆர்ப்பத்
தண்டுளி நறவம் ஊற்றுந் தடமலர்ப் பொகுட்டுத் தெய்வப்
புண்டரீ கத்தின் மேய புண்ணியன் கேட்டு முந்நீர்
உண்டுயர் முனிவர் கோமான் உளங்கொள உணர்த்து கின்றான். ௨௧௧

வெறுப்பொடு விருப்பொன் றில்லாய் விண்ணவர் இடுக்கண் தீர்க்கும்
திறத்தினை எவ்வாற் றானும் முடிப்பதே சீரி தன்றி
மறுப்பது தகாதால் மற்று வயங்கொளி உலகம் மூன்றும்
பெறத்தகு கருமம் என்றால் என்னினிப் பேசு மாறே. ௨௧௨

சீருடைத் ததீசி முன்னோர் தேவர்தம் பொருட்டுத் தங்கள்
ஆருயிர்க் கிறுதி நோக்கா துடம்பையும் அளித்தா ரன்றே
காரியம் இதுமற் றம்ம சிறிதெனக் கருதல் வேண்டா
ஓரின்வே றுன்னை ஒப்பார் உலகம்மூன் றிடத்தும் இல்லை. ௨௧௩

---

௨௦௮. அகில நாதர் - விசுவநாதர். தெவ் - பகை.

௨௦௯. நாகம் - மலை. பொக்கம் - பொய்.

௨௧௧. வண்டு, ஞிமிறு, தேன், சுரும்பென்பன வண்டுகளின் வகைகள்.

௨௧௨. தேவரீருக்கு எவ்விடமும் ஒன்றே என்பான், 'வெறுப்பொடு விருப்பொன் றில்லாய்' என்றான். தேவகாரியமேயன்றி உலக முழுவதும் உய்யச் செய்தலாகலின், 'என் இனிப் பேசுமாறு' என்றான்.

௨௧௩. ததீசி முன்னோர் - ததீசி முனிவர். ததீசி செய்ததுபோல இதுவும் பெருஞ்செயலே என்பான், 'சிறிதெனக் கருதல்வேண்டா' என்றான்.

வேசற வொழிதி வெள்ளை விடையவர்க் குவகை நல்கிக்
காசியின் மேன்மை சான்ற கடிநகர் அங்கண் உண்டால்
மூசிள* ஞிமிறு பாய முகைஉடைக் தொழுகுந் தேறல்
வாசமென் மலர்ப்பூம் பொய்கை வளவயற் காஞ்சி மூதூர். உகச

மதுமலர்ப் பொழில்சூழ் காசி இறந்திடின் வழங்கும் முத்தி
அதுவும்நம் பெருமா னார்தம் அருளுருப் பெறுவ தாகும்
முதுநகர்க் காஞ்சி தன்னை நினைப்பவே முத்தி நல்கும்
கதுவருஞ் சிவபி ரானார் திருவடி கலப்ப தாமால். உகரு

அத்தலப் பெருமை முற்றும் அழலவிர் சடைமேற் கங்கை
வைத்தவர் அறிவ தல்லால் மற்றெவர் அறியற் பாலார்
சித்திகள் அனைத்தும் நல்கும் ஆபிடைச் சென்று யாகில்
உத்தம குணத்தாய் மற்றும் பெருநலம் உனக்குண் டாமால். உகசு

சிமிழ்விடப் பாம்பு சுற்றித் திரைகடல்¶ கலக்கிப் பெற்ற
அமிழ்தினை இமையோர்க் கூட்டும் அரியெனக் கம்பம் மேய
குமிழ்மறி விழியாள் பாகர் அருளினாற் கொழிக்கும் இன்பத்
தமிழ்மொழிப் பாடை ஒன்று தரைமிசை விளங்கச் செய்வாய்.உகஎ

பாணித்தல் அமையும் இன்னே படர்கெனும் பவளச் செவ்வாய்
வாணிக்கு மணாளன் றன்னை விடைகொண்டு மகிழ்ச்சி கூர
ஆணிப்பொன் மாடக் கோயில் அகிலநா யகரை அன்பாற்
பேணித்தாழ்ந் தெழுந்து காசிப் பெரும்பதி தணந்து போந்தான்.

அகத்தியர் விந்தமலையை அடக்குதல்

கச்சிமா நகரங் காணும் ஆதரங் கைமிக் கூர்ப்ப
நச்சணி மிடற்றார் பாத நகைமலர் மனத்துட் கொண்டு

---

உகச. வேசறவு-துக்கம். மூசு-மொய்க்கின்ற. *'மூசின' எனவும் பாடம்.

உகரு. அது திருவடி கலப்பாம் என்க. காசியில் இறத்தலாகிய அருஞ் செயல் செய்து மூன்றாம் நிலையாகிய சாரூபத்தை அடையலாம்; காஞ்சியை நினைப்பதாகிய எளிமைச்செயல் செய்து அதனின் மேம்பட்ட நான்காம் நிலையாகிய சாயுச்சத்தை அடையலாகும் என்பதாம்.

உகஎ. சிமிழ் - அகப்படுத்துகின்ற. குமிழ், நாசியைக் குறிப்பது குமிழ் மேலெனக. மறி - (குழையை மோதி) மீள்கின்ற. ¶'திரைக்கடல்' எனவும் பாடம்.

உகஅ. பாணித்தல் - தாமதித்தல்.

பொச்சமில் மனையா ளோடும் வான்நெறிப் போது கின்ற
விச்சைதேர் முனிவன் றன்னைக் கண்டது விந்த நாகம். உகக

ஊற்றெழும் பரவைத் தெண்ணீர் உழுந்தள வாக்கி உண்ணும்
ஆற்றலின் நெடிய ளுகி அளவினிற் குறிய ளுய
நீற்றணி முனிவர் கோனைக் காண்டலும் நெஞ்சம் மாழ்கிப்
பாற்றரும் பயம்மீக் கொண்டு பதைபதைத் தொடுங்கிச் சோர்ந்து.

குறுகிமுன் குறுகித் தாழ்ந்து கோதறு விதியி னுற்றல்
நிறுவிய அருக்கி யாதி அருச்சனை நிரப்பல் நோக்கி
உறுவனும் மகிழ்ந்து பத்தி விளைவினை உயர்த்துக் கூற
மறுவலுந் தொழுது போற்றி மணிவரை இதனை வேண்டும். உஉக

ஐயனே அடியேன் மாட்டும் அருட்பெருங் கருணை வைத்த
செய்யனே அணங்கு லோபா முத்திரை திளைக்குந் தூய
மெய்யனே அலைகள் வீசும் விரிகடல் முழுதும் ஏற்ற
கையனே இனியான் செய்யக் கடவதென் அருளாய் என்ன. உஉஉ

பொன்னிலம் இருக்கை கொண்டோர் பொருட்டிவண் தென்பால்
தன்னையான் குறித்துப் போந்தேன் சயிலமே மீளுங் காறும் [ஆசை
இந்நிலை இருத்தி என்னக் கரத்தினுல் இருவிக் காஞ்சி
நன்னெடு நகரம் நோக்கி நடந்தனன் நிகரொன் றில்லான். உஉங

வேறு

செந்நெறி நோக்கி "அமைந்தாங் கொழுகான் அளவறி கில்லான்
தன்னை வியந்தான் விரைந்து கெடும்'' எனல் சத்தியங் கண்டாம்
மன்னிய மேரு வரையோ டிகலி வளர்ந்தெழு விந்தம்
முன்னுள தோற்றமும் வீறும் முழுதும் இழந்தது மன்னே. உஉச

---

உஉ0. மாழ்கி - வருந்தி. பாற்றரும் - போக்குதற்கரிய.

உஉக. குறுகிமுன் - குறுவடிவினராகிய அகத்திய முனிவர் முன்னே. மறுவலும் - மீண்டும்.

உஉங. ஆசை - திக்கு. இருவி - இருத்தி, அழுத்தி.

உஉச. வேற்றுப் பொருள் வைப்பு. எடுத்தோதியது, "அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை-வியந்தான் விரைந்து கெடும்'' என்னும் திருக்குறளை (சஎச) என்க. அதன்பொருள், 'தன்னின் மிக்காரோடு பொருந்தியொழுகாது, தன்னைமிக மதித்து அவரொடு பகைத்தவன் விரைவில் அழிவான்' என்பது. செந்நெறி - நன்னெறி.

சங்கர னார்எதிர் தோன்ற மறையுந் தடாதகை தன்னோர்
கொங்கை நிகர்த்தது செல்லுங் குறுமுனி நேருறு குன்றம்
அங்கது கண்ட இமையோர் அனைவரும் அத்திறங் கேட்ட
நங்கையை ஈன்றபொன் மாலை உவகையின் நாற்றி யடைந்தார். ௨௨௫

அகத்தியர் காஞ்சியை அடைதல்

குன்றிடை முட்டி மறுகுங் குரீஇயின் தடையுண் டழுங்கி
நின்ற அருக்கன் முதலோர் நெறிகொளச் செல்ல விடுத்துத்
தன்துணைப் பாவையி னோடுஞ் சார்தரு தாபத வேந்து
மன்றலம் பூம்பொழிற் காஞ்சி வளநகர் தன்னைமுன் கண்டான்.

கண்டு தொழுது வணங்கிக் கையிணை உச்சியிற் கூம்ப
மண்டிய காதலிற் புக்கு மரபுளிச் செய்கடன் ஆற்றி
அண்டர் பிரானார் தளிகள் அனைத்தும் முறையான் இறைஞ்சிப்
பண்டை மறைகள் முழங்கும் படரொளி ஏகம்பஞ் சேர்ந்தான்.

செல்வ மணித்திரு வாய்தல் சென்று பணிந்து புகுந்தாங்
கல்வளர் கின்ற மிடற்றார் ஆசரு ளென்ன நிறைந்த
சொல்வளர் சீர்ச்சிவ கங்கைத் தூநறு மென்புன லாடி
எல்வளர் கண்டிகை வெண்ணீ றெங்கும் வயங்க அணிந்தான். ௨௨௮

வாங்கு நுணங்கிடை பாகர் மாளிகை சூழ்மணி முன்றிற்
பாங்கு வலங்கொடு சென்று படரொளி ஆனந்த வெள்ளம்
தேங்குந் தனிமறைச் சூதத் தெய்வத் தருநிழல் மேய
வீங்குங் கருணைப் பிழம்பை விழிஎதி ரேகண்டு கொண்டான். ௨௨௯

இணங்கு முறைமையின் அங்கம் எட்டினும் ஐந்தினுஞ் சால
வணங்கி மகிழ்ந்து திளைத்து வார்புனல் கண்கள் சொரியக்
குணங்குறி இன்றி எழுந்த கோலத் திருஉருப் போற்றி
அணங்கரு மெய்யருள் பெற்று மீண்டனன் ஆர்கலி உண்டான். ௨௩௦

---

௨௨௫ தடாதகை - மீனாட்சியம்மையார். பொன்மாலை - காஞ்சன மாலை. நாற்றி - நான்மடங்கு. இவ்வரலாற்றைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க.

௨௨௬. குரீஇ - குருவி. துணைப்பாவை - மனைவி.

௨௨௮. அல் - இருள். சொல் - புகழ். எல் - ஒளி.

வன்பழ வல்வினை மாற்றுங் கம்பம் மகிழ்ந்தவர் தென்சார்த்
தன்பெய ராற்சிவ லிங்கம் தாபித் தருச்சனை யாற்றி
முன்பு வரம்பல பெற்று மீமிசை மூண்டெழும் அன்பான்
மின்புரி செஞ்சடை யாரை மீளப் பழிச்சுத லுற்றான். ௨௯௧

அகத்தியர் துதித்தல்
கொச்சகக் கலிப்பா

இந்நாள் எனக்குப் பயப்பட்ட திப்பிறவி
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தியான்செய் தவம்
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தென்னறிவும்
இந்நாள் உனைக்காணப் பெற்றமையின் எங்கோவே. ௨௯௨

எண்ணமெலாம் எய்தினேன் எண்ணமெலாம் எய்தினேன்
எண்ணமெலாம் எய்தினேன் எங்கள் பெருமானே
கண்ணனொடு நான்முகனுங் காணாத் துணையடிகள்
கண்ணெதிரே இற்றைநாள் யான்காணக் காட்டினையால். ௨௯௩

சங்கரா சம்புவே சங்கரா சம்புவே
சங்கரா சம்புவே சாம்ப சிவனேஎன்
அங்கணா என்றென்றும் ஓலிட் டழைத்தாற்றும்
இங்கெனக்கு வாழ்நாள்கள் இவ்வாறே போகியவே. ௨௯௪

குன்றாத அன்புனக்கே குன்றாத அன்புனக்கே
குன்றாத அன்புனக்கே மிக்கோங்கு கொள்கையது
என்றுமெனக் குண்டாக என்றுமெனக் குண்டாக
என்றுமெனக் குண்டாக என்றுமோர் பெற்றியனே. ௨௯௫

வையமிசைத் தோற்றம்முதல் சாங்காறும் மன்றஉனைத்
தெய்வமெனப் பேணாத் திருவிலிகள் என்குலத்தில்

---

௨௯௨. பயப்பட்டது - பயன் பட்டது.

௨௯௪. சாம்பசிவன் - உமையோடு கூடிய சிவன். இவ்வாறே - துதிக்கின்ற இம்முறையிலேயே. இவ்வொருநாள் துதித்தமையின் வாழ்நாள் முழுதும் துதித்ததாயிற்று.

௨௯௫. அடுக்கு, இரந்துகோடற் பொருட்டு.

௨௯௬. திருவாவது இறைவன் திருவருளேயாகலின், அதனை நாடாதவரைத் 'திருவிலிகள்' என்றார். "திருக்கோயி லில்லாத திருவி லூரும்" (திருமு

எய்திலொரு ஞான்றும் பிறவற்க எய்துறினும்
வெய்தெனமற் றங்கே விளிக்தொழிக எம்மானே. ௨௩௬

ஆனே றுயர்த்தருளி அன்றினர் ஊரெரித்த
கோனே எனக்குக் குலதெய்வ மாம்பேற்றால்
யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன்
யானே பெருஞ்செல்வன் எல்லா உலகினுமே. ௨௩எ

சிறந்துன்னைத் தெய்வமெனக் கொள்ளாத சித்தை
பிறந்த குலம்பிறவா நின்றகுலம் பீளின்
உறந்த குலத்தும் உமைஒருபால் மேயாய்
மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால். ௨௩அ

ஏழைக் குறும்பின் இமையோர் தமக்கிரங்கிப்
பீழைக் கொடுவிடத்தை உண்டளித்த பேராளா
ஆழிப் பெருங்கருணை ஆரமுதே வெற்பீன்ற
மாழைப்பூங் கண்ணி மணாளா அடிபோற்றி. ௨௩௯

அகத்தியர் வேண்டுகோள்

வேறு

என்றென்று பன்முறையுந் துதித்திறைஞ்சித் தாழ்ந்தெழுந்து
நின்றகரஞ் சிரமுகிழ்ப்ப நிறைந்தபெரு மகிழ்ச்சியுடன்
குன்றனைய பெருந்தவத்தோன் இதுவொன்று கூற்றுதைத்த
மின்றிகழுஞ் சேவடிக்கீழ் விண்ணப்பஞ் செய்கின்றான். ௨௪0

அடியனேன் வடகாசி நீத்தகன்று நினக்கினிய
கடிமதில்சூழ் கொடிமாடக் காஞ்சியினைத் தலைப்பட்டுப்
பொடியணிந்த திருமேனிப் புண்ணியமே இமயவரைப்
பிடிமணந்த மதகளிறே பெரும்பேறு பெற்றுய்ந்தேன். ௨௪௧

---

௨௩௬. (௯. ௬௫. ௫.) என்றருளியதுங் காண்க. வெய்தென - விரைந்து. விளிந்தொழிக - இறந்தொழிக.

௨௩எ. அடுக்கு, மகிழ்ச்சிப் பொருட்டு.

௨௩அ. சித்தை - கீழ்மகன். பீளின் உறந்த - கருப்பத்தில் தங்கிய.

௨௩௯. ஏழைக் குறும்பு - அறியாமையாற் செய்யும் தீமையினையுடைய, பீழை - துன்பம்.

இத்தகுபே றுடையேற்கு மற்றின்னும் ஒருகருத்து
மெய்த்தபெரு வேட்கையினால் ஒழியாது மேன்மேலுஞ்
சித்தமிசை மூண்டெழுமால் அதுநிரம்பச் சிறியேன்பால்
வைத்தபெருங் கருணையினால் வழங்குவாய் எனப்போற்றி. உசஉ

எவ்வினையும் ஓப்புதலால் திராவிடம்என் றியல்பாடை
எவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கிஅது
எவ்வருணத் துள்ளார்க்கும் எளிதாகப் புத்தேளிர்
எவ்வெவர்க்கும் சுவைஅமிழ்தின் இனிதாகச் செய்தருளாய். உசங

மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமாய் உனக்கினிதாய்த்
தோன்றிடும்அத் தமிழ்ப்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி
ஆன்றவரம் எல்லார்க்கும் இவ்வரைப்பின் அளித்தருளாய்
என்றெடுத்த மொழிகல்வி எவற்றினுக்கும் இறையோனே. உசச

அகத்தியர் தமிழாசிரிய ராதல்

மன்னியஇத் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செந்நெறியின் வழுவாஇத் திருக்காஞ்சி நகர்வரைப்பின்

---

உசங. திராவிடம் என்பது தமிழ்மொழிக்குப் பெயராய் வடமொழியில் வழங்குவது. 'த்ரு' என்னும் தாது ஓட்டுதலென்னும் பொருளுடைமையின் திராவிடமென்பது அதனடியாகப் பிறந்த பெயராய், எத்தகைய வினையையும் ஓட்டும்மொழி எனப்பொருள் தரும் என்பதாம். ஓப்புதல் - ஓட்டுதல். பாடை என்றது மொழியின் இலக்கணத்தை. வகுப்ப - வகைசெய்ய, செம்மைப்படுத்த.

உசச. சார்பெழுத்துக்கள் உளவேனும், "எழுத்தெனப்படுப" (தொல். எழுத்து. க.) என்றோதப்பட்டவை முதலெழுத்தாகிய முப்பதே ஆகலான், 'மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான்' எனவும், இறைவனைத் தூதிடை விடுக்கவும் வல்லதாகலான், தமிழை, 'உனக்கினிதாய்' எனவுங் கூறினார். 'கல்வி எவற்றினுக்கும் இறையோன்' என்றது, 'வித்தை பதினெட்டுக்கும் இறைவனே முதற்கருத்தா' என்னும் பொருளுடைய, "அஷ்டாதசாநாம் வித்யாநாமேதாஸாம் பின்னவர்த்மநாம் ஆதிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாச் சூலபாணி ரீதி ஸ்ருதி:" என்னும் புராண வசனத்தைக் கூறியதாம்.

உசரு. தமிழ்க்கிளவி மந்திரங்கள் - தமிழ்ச்சொல்லாலாய மந்திரங்கள். கணித்து - செபித்து. தமிழில் அரிய மந்திரங்கள் உள்ளன என்பதை, "மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்" (சொல். சசசு.) எனவும், "கிளைமொழி

உன்னனுக்க ளுகிஇனி துறைந்திடவும் பெறவேண்டும்
இன்னவரம் எனக்கருளாய் எம்பெருமான் என்றிரந்தான் ௨௪௫

கூம்பியகைத் தலமுடைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனர்
தாம்பரிந்து தமிழ்விளக்கும் ஆசிரியத் தலைமையொடு
மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கிவேட் டனபிறவும்
ஆம்பரிசின் அளித்தருளி அவ்விலிங்கத் திடைக்கரந்தார். ௨௪௬

இவ்வண்ணம் அருள்பெற்ற இருந்தவனும் அகலிடத்தின்
மெய்வண்ண ஒத்துமுறைத் தீந்தமிழை விளக்குவித்துச்
செவ்வண்ணத் திருமேனிப் பெருமானர் திருவடிகள்
அவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்காலம் அங்கிருந்தான். ௨௪௭

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரேனிற்
கடல்வரைப்பின் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்! ௨௪௮

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீஇயினர் என்றால்இவ்
இருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ! ௨௪௯

---

மாந்தர் ஆணையிற் கிளந்த - மறைமொழி தானே மந்திர மென்ப" (பொருள். ௪௯௦.) எனவும் வரும் தொல்காப்பியச் சூத்திரங்களானும், அவற்றிற்குச் சேனாவரையரும் பேராசிரியரும் உரைத்த உரைகளானும் உணர்க.

௨௪௭. ஒத்துமுறை - இயல்முறையால், விளக்குவித்து என முடிக்க. விளக்குவித்து என்றதனால் மேல் (செ. ௨௪௩.) பாடை என்றது மொழி மேலாகாது நூல்மேலாத லறிக.

௨௪௮. இதுவும் வருஞ்செய்யுளும் கவிகூற்று. பாணினி-ஒரு முனிவர். இவர் வடமொழி இலக்கணம் செய்தவர். அவ்விலக்கணம் பாணினீயம் எனப்படும். அதுவே வடமொழியில் இப்போதுள்ள இலக்கணம். குடமுனி - அகத்தியர்.

இதனுள், 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத் தென்மொழியைக் குடமுனிக்கு வலியுறுத்தார்' என்றதனால், வடமொழி முன்னும் தென்மொழி பின்னும் தோன்றின என்பது ஆசிரியர் கருத்துப்போலு

அகத்தியர் பொதிகை யடைந்த வரலாறு

கலி விருத்தம்

இத்தகு தமிழ்ஓதி ஆங்கினி துறைநாளில்
அத்தலை அரனார்தாம் ஆயிழை உமையாளைப்
புத்தணி திகழ்மன்றல் புரிநலம் உளதாக
எத்தலை உறைவோரும் ஈண்டினர் இமயத்தில். ௨௫௦

௨௫௦. மன்றல் - திருமணம். ஈண்டினர் - நெருங்கினர்.

மெனின், அற்றன்று; தெய்வத்தன்மையும், இயற்கைத் தோற்றமும், கால எல்லை அறியப்படாத தொன்மையும், அரும்பொருட் பொதிவும் உடைத்தாய், சான்றோர் பலரால் போற்றி வளர்க்கப்பெற்ற அரிய இனிய மொழியாகிய தமிழை, ஆரியத்தை நோக்கப் பெரிதுந் தாழ்ந்ததெனவும், ஆரியத்தினின்றுந் தோன்றியதெனவும், தனக்கெனக் கருத்தொன்றிலதெனவும், இழிசினர் மொழியெனவும் பலவாறு குறைகூறி இழித்துரைக்கும் கொடுஞ்செயல் தொல்காப்பியத்திற்குப் பன்னூறாண்டுகளுக்குப் பின் தமிழ்நாட்டில் தோன்றுவதாயிற்று. அக்கொடுமை நாளுக்குநாள் வளர, அதிற்பட்டு மயங்கிய மக்கள் தமிழின் உயர்வையும், அதன் இன்றியமையாமையும் அறியாது அதனை இகழ்வாராயினர். அவ்விகழ்ச்சியின் முதிர்ச்சிக் காலத்தே, தொல்காப்பியம் பண்டைத் தமிழ் இலக்கியம் முதலியவற்றை நன்கு ஆராய்ந்து, அதனது இயற்கை அருமை பெருமைகளையறிந்து அவ்வின்பத்தில் திளைத்த, திருவிளையாடற் புராணமுடையாராகிய பரஞ்சோதி முனிவரும், ஆசிரியரும் போன்ற பெரியார்கள் மக்களின் மடமைக்கு இரங்கி, அவர் மனங்கொள்ளும் வகையில் தமிழின் உயர்வை உரைத்து, அதன்கண் பற்றடையுமாறு செய்து வந்தனர். அங்ஙனம் செய்யுமிடத்தும் தாம்பிறிதொரு மொழியை இழித்துரைத்தல் தமது பெருமைக்கேலாமையானும், அத்தகைய காழ்ப்பு தமது தூய உள்ளத்தில் தோன்றாமையானும், மக்கள் மனநிலை தமிழின் முழுஉயர்வையுங் கூறுதற்கு ஏலாமையானும், ஆரியத்தோடு ஒப்பவைத்து உணருமாறே செய்து வந்தனர். அக்கருத்தானே இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் கூறப்பட்டன. ஆரியத்தை உயர்த்தித் தமிழை இழித்துரைத்தல் இற்றைக்குப் பலநாட்களுக்கு முன்பே இருந்ததென்பதற்கும், அதனால் தமிழ்ப் பெரியார்கள் உள்ளம் புழுங்கினர் என்பதற்கும்' "ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய - அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால் - செந்தமிழே தீர்க்க சுவா" என்று நக்கீரர் கூறியதாகப் பேராசியர் காட்டிய (தொல். பொருள், ௬௫௦.) உதாரணச் செய்யுளே சான்றாகும். நிற்க.

முனிவொடு வரைதாழ்த்த முனிவனும் அதுநோக்கிப்
பனிவரை நிலையுற்றான் பலபல உலகத்தின்
இனிதுறை உயிரெல்லாம் தொகுதலின் இருஞாலத்
தனிமகள் ஒருபக்கம் சாய்ந்தனள் பொறைஆற்றாள். ௨௫௧

---

௨௫௧. ஞாலமகள் - பூமிதேவி. பொறை - சுமை. ஆற்றாள் - பொறுக்க இயலாதவளாய்.

---

இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் ஏதுவும் பயனுமாய் ஒருபொருள் மேலன வென்க. எங்ஙனமெனில், மக்களை இருமொழியும் ஒப்பெனக் கொள்ளுவித்தலே ஆசிரியர் கருத்தாதலின், வருஞ்செய்யுளில், 'இருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ' என்பது மேற்கோள். ஏனைய மூன்றும் ஏதுக்கள். அவற்றுள் முதலிரண்டு ஏதுக்களில் 'இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்' என்றலும், 'இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர்' என்றலும் யாங்ஙனமென்றெழும் வினாவிற்கு விடை இச் செய்யுள். எனவே, ஏதுவும் மேற்கோளுமாகிய 'இருமொழியும்' என்னும் செய்யுள் கூறவந்தவர் அவ்வேதுவை விளக்குதற்கு இச்செய்யுளைக் கூறினாராயிற்று. ஆகவே, இச்செய்யுள் விரித்துரையும் வருஞ்செய்யுள் தாற்பரியமுமாதல் காண்க. இதனால், 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத் தென்மொழியைக் குடமுனிக்கு வலியுறுத்தார்' என்றது, இருமொழியும் முனிவர்களுக்கு உரைக்கப்பட்டன என்பது கூறுங் கருத்ததன்றி, முற்பிற்பாடுகூறுங் கருத்ததன்றென்க. இங்ஙனம் இஃதோர் நயம்பட இவ்வரலாறுகொண்டு, 'அவ்வளவின் அவன்மகிழ்க' என்னும் நியாயம் பற்றித் தமிழ்ச்சிறப்பை ஒருவாறு ஆசிரியர் கூறினாரெனக் கொள்க.

இங்ஙனங் கொள்ளாது முற்பிற்பாடு கூறுதலே அதன் கருத்தெனின், தமிழிற்கு அகத்தியம்போல ஆரியத்திற்குப் பாணினீயமே முதனூலெனக் கொள்ளுதல் ஆசிரியர் கருத்தாதல் வேண்டும். ஆசிரியர் தொல்காப்பியப் பாயிர விருத்தியுள், 'பாணினீயம் முதலிய வியாகரணங்களுமுளவாக ஐந்திர நிறைந்த தொல்காப்பியனென்றார்,...... அகத்தியனார்க்கு ஐந்திரமே உடன்பாடென்பது பெறப்படுதலின், அதுவே, தொல்காப்பியனார்க்கும் உடன்பாடென்பது பற்றிப்போலு மென்க' எனக்கூறியிருத்தலால், அகத்தியனார்க்கும் தொல்காப்பியனார்க்கும் ஐந்திரமே உடன்பாடென்பது ஆசிரியர் கருத்தாதல் தெளிப்படுதலின், அவ்வாசிரியர்கள் கருத்தோடு முரணிப் பாணினீயத்தை வடமொழிக்கு முதனூலெனக் கூறுதல் ஆசிரியர் கருத்தென்றல் சாலாது.

தென்புலி மிசைஒங்கித் திகழ்வட புவிதாழப்
பொன்பயில் உலகத்துப் புங்கவர் அதுகாணூஉத்
துன்பொடு பயமெய்தித் துணையடி தொழுதேத்தி
என்பணி வரைமார்பற் கின்னது புகல்கிற்பார். உ௫உ

தாழுறு புவிதன்னைச் சமன்நிலை பெறவைத்துக்
காழுறு தமியேமைக் காப்பது கடன்எந்தாய்
ஆழ்கடல் விடமுண்டோய் இல்லெனில் அடியேங்கள்
வாழலம் இதுபோதே அவல்விழு வதுதிண்ணம். உ௫௩

வெருவரு செயலோராய் விண்ணவர் இதுகூறத்
திருமுடி அசைவோடுஞ் சினவிடை யவர்சொல்வார்
தருமலர்த் தொடையீர்காள் சனமிக நிறைவுற்று
மருவிய பாரத்தால் தாழ்ந்தது வளர்ஞாலம். உ௫௪

ஆதலி னியாமாதல் எம்மொடு நிகராம்ஓர்
மாதவ முனியாதல் தென்றிசை வயின்இன்னே
போதரின் உலையாமே புவிநிலை பெறும்என்னக்
காதர முறுவிண்ணோர் கேட்டனர் கவலுற்றார். உ௫௫

---

உ௫உ. என்பு (எலும்பு) அணி மார்பன் - இறைவன்.

உ௫௩. காழ் - (துன்பக்) கடுமை. அவல் - பள்ளம்.

உ௫௪. வெருவரு செயலோராய் - அஞ்சுகின்ற செயலை உடையவர்களாய்.

உ௫௫. போதரின் - சென்றால். உலையாமே - அழியாமல். காதரம் - துன்பம்.

---

இதனால், இவ்விருசெய்யுட்களும் ஓர்நயம்பற்றிச் சமரசநிலையால் தமிழ்ச்சிறப்பைப் புலப்படுத்தியவாறுமென்க.

இனி, வடமொழிக்கண் பலஇலக்கணங்கள் தோன்றியழிந்தபின்னரே அணிமைக்காலத்தில் பாணினீயம் தோன்றிய தென்பதும், அது தொல்காப்பியத்திற்கும் பல்லாண்டுகள் பிற்பட்ட தென்பதும், உலகத்திலுள்ள எல்லா மொழிகட்கும் தமிழே முன்னர்த் தோன்றிய தென்பதும், முற்படச்செம்மை அடைந்ததென்பதும் ஆராய்ச்சியாற் போந்த உண்மைக ளாதலின், ஆரியத்திற்குப்பின் தமிழ்தோன்றிற்றெனல் ஒருவாற்றானும் பொருந்தாதென்க.

மணவினை நிகழ்காலை மதிமுடி யுடையான்அங்
கணைவது தகுமேயே வறவொடு நிகர்வார்யார்
இணையிலி முழுதிற்கும் இறைபவன் எவராலும்
உணர்வரு முதல்என்றே ஒலிடும் மறையெல்லாம். உருசு

என்றிவை பலஎண்ணி இணையடி தொழுதேத்தி
அன்றினர் புரம்மூன்றும் நீற்றிய அடிகேள்இம்
மன்றலின் நீசேறல் எவ்வணம் உனைநேரா
கின்றவர் உளரென்று கேட்டிலம் எங்கெங்கும். உருஎ

என்னலும் அனல்அங்கை ஏற்றவர் இமையீர்நீர்
சொன்னது* மெய்யேஇத் தொல்லுல கினில்எம்மை
அன்னவர் இலைகண்டீர் குறுமுனி அலதென்னுப்
பன்னரும் மொழிகேளாப் பண்ணவர் களிகூர்ந்து. உருஅ

மங்கல வினைசான்ற வதுவைசெய் அமையத்தின்
எங்களை உடையாய்நீ ஏகுவ தமையாதே
அங்கினி அணைகிற்பான் தமிழ்தெரி அறவோற்குச்
சங்கர விடைநல்கத் தகுமென உரைசெய்தார். உருகூ

கடல்விடம் அமுதாக்குங் கறைமிட றுடையாருங்
குடமுனி தனைஅங்கண் கூயினர் எதிர்நோக்கிப்
படரொளி இளமூரல் பனிமுக மலர்காட்டித்
தொடர்புடை விழிகாட்டுங் கருணையின் இதுசொல்வார். உசூ0

புத்தெழில் பெறுவிந்தம் புரிதரும் இடர்மாற்றி
முத்தமிழ் முனிவாமுன் முச்சக முழுதுய்ய
வைத்தனை இதுபோதுஞ் சந்தன வரைநண்ணி
இத்தரை சமமாகப் புரிமதி கடிதென்றார். உசூக

---

உருஅ. 'சொன்னவை' எனவும் பாடம்.

உருகூ. மங்கலவினைசான்ற - மங்கலச் சடங்குகள் நிறைந்த. வதுவை - திருமணம். அமையம் - சமையம். அணைகிற்பான் - செல்லும்படி.

உசூ0. நகைமுகங் காட்டியதும் மேல் இன்னுரை கூறுவதும், முனிவர் தம்மிடத்து அச்சமின்றித் தங்கருத்தைக் கூறவும், அதன் பின்பு அவர்க்கு ஏற்றன புகன்று இசைவிக்கவும் என்க.

இருள்பொதி மணிகண்டர் அடிதொழு திருமுந்நீர்
பருகிய முனிவேந்தன் பையுளின் உரைசெய்வான்
அருள்பெறும் அடியார்கட் கவரினும் இனியானே
கருணையின் நிறைவேயான் சழிவது முறையேயோ. ௨௯௨

மருவினர் பிரியொண்ணாய்* மற்றிவ ரெல்லாம்நின்
திருமண நிறைகோலங் காண்டகு திறல்பெற்றார்
பெருமண நடுவேநீ பிரிகென எனைநீப்ப
இருளுறு கொடியேன்இங் கெப்பிழை செய்தேனே.¶ ௨௯௩

துணைவிய ரொடுவானத் தொல்லுல குடையாரும்
பணமணி மணிநாகர் பாரிடர் முனிவோரும்
மணவணி தொழுதுய்வான் இன்னமும் வருகின்றார்
அணைவுறு தமியேனைத் தள்ளுவ தழகேயோ. ௨௯௪

விரைசெலல் முனிவோர்கள் விரைகெழு சுனைதோய்வார்
அரசிலை குசைமற்றும் அன்புடன் எதிர்உய்ப்பார்
கரகமும் இழைசூழ்வார் அவரொடு களியாமே
தெருமர அடியேனைத் தள்ளுதல் சீரேயோ. ௨௯௫

பாடுவர் சிலர்அன்பர் பரவுவர் சிலர்அன்பர்
ஆடுவர் சிலர்அன்பர் அழுகுவர் சிலர்அன்பர்
ஓடுவர் சிலர்அன்பர் உவரொடு மகிழாமே
வாடுற அடியேனைத் தள்ளுதல் மரபேயோ. ௨௯௬

---

௨௯௨. பையுள் - துன்பம். அடியார்கட்கு அவரினும் இனியன் என்பதைத் திருமுறைகளிற் காண்க.

௨௯௩. 'மருவினர் பிரியொண்ணாய்' என்பதை, "மேவினார் பிரியமாட்டா விமலனார்" (பெரிய - கண். ௧௭௪.) என்ற அருள்மொழியிற் காண்க. இருள் - அறியாமை. * 'பிரிவொண்ணாய்' எனவும் பாடம். ¶'செய்தேனே' எனவும் பாடம்.

௨௯௪. பணம்அணி மணி - படத்திற்கொண்ட மாணிக்கம். அணைவுறு - வந்துள்ள.

௨௯௫. விரைசெலல் - விரைந்து செல்லுதலையுடைய. குசை - தருப்பை. கரகம் - கலசம். இழைசூழ்வார் - நூல் சுற்றுவார்கள்.

௨௯௬. உவர் - அவர்கள்; சுட்டுப்பெயர்.

ஒளிமணி மழைதூர்ப்பார் ஒண்மலர் மழைதூர்ப்பார்
புளகமும் உடல்போர்ப்பார் புகழ்பல திசைபோர்ப்பார்
அளவறு மகிழ்கூர்ப்பார் அவரொடு கலவாமே
தளர்வுற அடியேனைத் தள்ளுவ தருளேயோ. உ௬எ

கண்டனம் மணஇன்பங் காழுறு வினையெல்லாம்
விண்டனம் உலவாத மேதகு சிவபோகம்
கொண்டனம் எனஆர்ப்பார் அவரொடு குலவாமே
தொண்டற அடியேனைத் தள்ளுதல் குழேயோ. உ௬அ

குழல்அவிழ் வதும்ஓரார் குழைவிழு வதும் ஓரார்
இழைசரி வதும்ஓரார் எதிர்எதிர் மடமாதர்
மொழியும்மங் கலஓதை இருசெவி முகவாமே
கழிவுற அடியேனைத் தள்ளுதல் கடனேயோ. உ௬௯

முனிவரர் கணநாதர் அயன்அரி முதலானோர்
பனிஅறு கணிகாலைப் பேரிசை படமுன்பின்
எனஎழு நிறைபூசல் கண்டினி துவவாமே
மனமடி வுறஎன்னைத் தள்ளுதல் மாண்பேயோ. உஎ0

மண்டில மணிவேதி குண்டமும் மலிவித்திங்
கெண்டிசை புகைவிம்ம எரியிடை இழுதூற்றித்
தண்டிரள் பொரிஅட்டுந் தகவது காணாமே
விண்டிட அடியேனைத் தள்ளுதல் விழைவேயோ. உஎக

ஒழுகொளி மணிவேய்ந்த கரகம துறுபால்மை
விழிமனை யவள்வார்ப்ப வெற்பிறை நினதாள்கள்
கழுவினன் மலர்தூவி வழிபடல் காணாமே
அழிவுற அடியேனைத் தள்ளுதல் அறனேயோ. உஎஉ

---

உஎ0. மணமக்கட்கு அறுகணிதல் என்பது வந்தார் ஒவ்வொரும் செய்யும் ஒரு மங்கலவினையாதலின் இம்மணத்தில் இறைவனுக்கு அறுகணியுங்கால் ஒவ்வொருவரும் நான்முன்னே நான்முன்னே என வருவராகலின், 'அறுகணி காலை...... முன்பின் எனஎழு நிறைபூசல்' என்றார். இசை - ஒலி பூசல் - போர். மடிவுற - அழிய.

உஎக. இழுது - நெய். அட்டும் - இடும்.

காரொடு நிகர்கூந்தற் கன்னியை மலைவேந்தன்
நீரொடு நின்கையில் உதவிடு நிறைகோலம்
ஆரொடு மதிவேய்ந்த அங்கண காணுமே
பேரிடர் உறஎன்னைத் தள்ளுதல் பெட்பேயோ. உஎஙு

ஒருவர்முன் அணிசாந்தம் ஒருவர்தம் முதுகப்ப
பருவிலை மணிஆரம் பட்டுடல் வடுவாக
நிரல்பட மிடைசுற்றார் தொழுநிலை காணுமே
பருவர அடியேனைத் தள்ளுதல் பண்பேயோ. உஎச

குடையொடு குடைதாக்கக் கொடியொடு கொடிதாக்கப்
படையொடு படைதாக்கப் பண்ணவர் குழுவோடும்
விடைமிசை வருகோலம் விழிஎதிர் காணுமே
கடைபட அடியேனைத் தள்ளுதல் கவினேயோ. உஎரு

வாரண நிரைசூழ வாம்பரி நிரைசூழத்
தோரணி நிரைசூழத் தேவர்கள் புடைசூழ
ஏரணி நகர்சூழும் நினதெழில் காணுமே
ஆரஞர் உறஎன்னைத் தள்ளுதல் அமைவேயோ. உஎசு

தொடிபல நிலம்வீழத் துணைமுலை நனிவிம்மக்
கடிபடு குழல்சோரக் கன்னியர் மயல்கூரும்
படிமறு கிடைநண்ணும் புத்தெழில் பாராமே
மிடியுற அடியேனைத் தள்ளுதல் விதியேயோ. உஎஎ

மரகத வடிவாளும் மழவிடை அனையாயும்
ஒருமணி யணையும்பர் இனிதுறை உயர்கோலம்

---

உஎங. ஆர் - ஆத்தி. அங்கண - இறைவனே.

உஎச. முன் என்றது மார்பினை. நெருக்கத்தால் ஒருவர் மார்பிலணிந்த சந்தனம் மற்றொருவர் முதுகில் அப்பவும், ஒருவர் அணிந்த மணிவடம் மற்றொருவர் உடலில் பட்டு அழுந்தவுமாயின. நிரல் - வரிசை. பருவர - வருந்த.

உஎசு. அஞர் - துன்பம். அமைவு - பொருத்தம்.

உஎஎ. தொடி - வளையல். கடி - வாசனை. மயல்கூரும்படி - மயக்கம் மிகும்படி. மறுகு - வீதி மிடி - வறுமை; ஈண்டு திருமணக் காட்சியின்பம் இன்மையைக் குறித்தது. விதி - முறை.

உஎஅ. மரகதவடிவாள் - இறைவி. அனையாய்-ஒத்தநீ. பரிவு- துன்பம்.

இருவிழி களிகூரப் பருகுவ தில்லாமே
பரிவுற அடியேனைத் தள்ளுதல் பாங்கேயோ. உஎஅ

வந்தனர் மணஞாட்பின் மலரடி தொழுவார்க்குத்
தந்திடும் அருள்நோக்கம் தமியனும் உடன்நின்று
சிந்தையின் மகிழ்வெய்தப் பெறுவது செய்யாமே
நைந்திட அடியேனைத் தள்ளுதல் நலமேயோ. உஎகூ

அன்றியும் உயர்காஞ்சிப் பதியினில் அடியேற்கு
மன்றநின் அணிமைக்கண் வைகிட வரம்ஈந்தாய்
இன்றது தனைமாற்றி எழில்வளர் பொதியத்திற்
சென்றினி துறைநீஎன் றருளிய செயல்என்னே. உஅ0

என்னையும் உடையாய்நின் திருவருள் இதுவோஎன்
றின்னன பலபன்னி இருவிழி புனல்வார
அந்நிலை நனிஏங்கி அழுதழு தயர்வெய்தும்
தன்னிகர் தமிழ்வாய்மைத் தலைவனை எதிர்நோக்கி. உஅக

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சுவலிற்றாழ் குதம்பைக் காதிற் சுந்தரர் அருளிச் செய்வார்
அவலித்தல் வேண்டா கேட்டி அருந்தவக் கிழவ ஞாலம்
செவிலித்தாய் என்ன ஓம்பும் தீம்புனற் கன்னி நாட்டில்
தவலிற்றீர் வேறு காஞ்சி சமைத்தும்உன் பொருட்டு மாதோ. உஅஉ

அத்தலைக் காஞ்சி யூரும் எமக்குமிக் கினிதாம் அங்கண்
இத்தகு சிறப்பு வாய்ப்ப யாம்புனை வதுவைக் கோலம்
உத்தமக் கிழத்தி யோடும் உனக்கெதிர் காட்டு கின்றாம்
மெய்த்தபே ருவகை பூப்ப விழியுறக் காண்டி மற்றும். உஅங

---

உஎகூ. ஞாட்பு - கூட்டம். வந்தனர், முற்றெச்சம். 'விரைசெலல் முனிவோர்கள்' என்னும் செய்யுள்முதல் இதுகாறும் திருமணத்தில் நிகழும் செயல்கள் முறையாகக் கூறப்பட்டமை காண்க.

உஅஉ. சுவல் - தோளின் மேலிடம். குதம்பை - ஓர் காதணி; இது கடிப்பெனவும்படும். அவலித்தல் - துன்புறுதல். தவல் - கெடுதல்.

உஅங. கிழத்தி என்றது உலோபா முத்திரையை; இறைவியை என்பாரும் உளர்.

கருதிநீ வரங்கள் பெற்ற வடநகர்க் காஞ்சி மாட்டும்
வருமுறை யாண்டு தோறும் பங்குனித் திருநாள் மல்கத்
திருவிழா முடிவின் மன்றற் செய்கையும் எமக்குண் டாக
அருள்புரிந் திடுதுங் கண்டாய் அறிவநீ மகிழு மாற்றால். உஅச

என்றிவை உலக மெல்லாம் உய்யுமா றியம்பி வேலை
வென்றவர் தழுவித் தேற்றி விடைகொடுத் தருளப் பெற்று
வன்றிறல் முனிவர் கோமான் மகிழ்ந்தடி வணங்கிப் போந்து
தன்றுணைக் கிழத்தி யோடுஞ் சையமால் வரையைச் சார்ந்தான்.

ஷ வேறு

சலம்ப டைத்தவா தாவியில் வலன்றனைச் சவட்டிய பெருநோன்பின்
வலம்ப டைத்தவன் அவ்வரை அணுகலும் மறிதிரைக் கடலாடை
நிலம்ப டைத்தது தொன்னிலை யாவரும் நிறைபெருங் களிகூர்ந்தார்
நலம்ப டைத்தசீர் உறுவனும் ஆயிடை வதிந்துதென் மலைநண்ணி.

தெனது காஞ்சியும் உத்தர காஞ்சியும் நித்தலும் சென்றேத் திப், பினாக பாணியார் திருமணங் கண்ணுறப் பெற்றுளங் களிப் பெய்திக், தனது பத்தியால் அணிபெறத் தொடுத்திடுஞ் செந்த மிழ்ப் பாமாலை, மனுதி யாலுணர் வரியவர் இணையடி மலர்மிசைப் பலசாத்தி. உஅஎ

தென்றற் பிள்ளையை வயிறுளைந் தீன்றுதீம் பொருநைநீர் குளிப்பாட்டி, மன்றற் சந்தனப் பொதும்பரின் தமிழொடு வளர்த்து மென் மெலஞால, முன்றிற் பால்விளை யாடவிட் டமர்முது மலய வெற்பினுஞ்சையச், குன்றத் தும்அகத் தீசத்தும் முறைமுறை குலவிவீற் றிருக்கின்றான். உஅஅ

---

உஅஉ. 'பங்குனித் திருநாள்' என்பதற்குப் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரமென் றுரைக்க. மன்றல் - திருமணம்.

உஅரு. சையமலை என்பது மேற்றிசையில் காவிரிக்கு முதலாயுள்ளது.

உஅசு. சலம் - வஞ்சம். அகத்தியர் வாதாவி வில்வலனையழித்த வரலாற்றைக் கந்தபுராணத்திற் காண்க. நிலம் தொன்னிலைபடைத்தது என்க தென்மலை - பொதிகைமலை.

உஅஎ. திருமணம் - இறைவன் காட்டிய திருமணம்.

உஅஅ. பொருநை - தாம்பிரவன்னி நதி. அகத்தியேச்சரம் திருவேகம் பத்தி லுள்ளது.

இன்ன தாம்அகத் தீச்சரம் வந்தவா றிவ்விடைப் பணிந் தேத்தி, அன்னம் அன்னவள் மண்டபம் மாளிகை அங்கணம் ஆங் காங்குத், துன்னும் வந்திகர் கணாதிபர் வாயில்காப் புடையவர் தொழப்போந்து, மன்னு மாமுதல் இடவயின் மத்தள மாதவேச் சரங்கண்டாள். ௨௮௯

என்றி யம்பிய சூதனைப் பழிச்சினர் இறும்புசூழ் வடமேருக்
குன்ற வார்சிலை வாங்கிய மதனுடைக் குழகனா ரடிப்போதில்
ஒன்று சிந்தையோய் மத்தள மாதவேச் சரத் தியல் உரையென்ன
வென்ற மாதவர் வினாதலும் ஆங்கவன் மேவர விரிக்கின்றான். ௨௯௦

மத்தள மாதவேச்சர வரலாறு

விரைப்ப சுந்துழாய் மணிமுடிப் புங்கவன் வீங்குநீர்க் கலிக் கச்சி, வரைப்பின் விண்டுவீச் சரக்குறி நிறீஇத்தொழும் பேற்றி னான் மறைநான்கும், இரைப்ப வார்பொழிற் புலிநகர்ப் பொதியி லில் எடுத்ததாண் டவங்காணூஉ, உரைப்ப ரும்பெறற் படகம்அங் கெழுப்பிடப் பெற்றபின் உவப்பாலே. ௨௯௧

அடிய ளந்தவன் கறைமிடற் றடிகளை ஆனந்தக் கூத்தாடல், முடிவில் ஏத்தெடுத் தடியனேன் மத்தளம் முழக்கவும் பெறவேண் டும், படியி லாப்பெருங் கருணையஞ் சலதியே பணித்தருள் எனப் போற்ற, வடிநெ டும்படைக் கழுக்கடை ஏந்திய வள்ளலார் அருள் செய்வார். ௨௯௨

இவ்வ ரைப்பிடை நித்தலும் படகம்நீ எழுப்பிட வரம்பெற் றாய், செவ்வி மத்தளம் முழக்கவும் விழைதியேல் செப்புதும் இது

---

௨௮௯. அங்கணம் - முற்றம். வந்திகர்-புகழ்வோர். மாமுதல் - மாவடி. இடவயின் - இடப்பக்கத்தில்.

இவ்வகத்தியேச்சர வரலாறு, (௧) 'செருக்குறுதல் தனக்கே அழிவைத் தரும்' என்பதும், (௨) 'தவத்தினால் எத்தகைய அரியசெயல்களையும் முடிக்க லாம்'என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். இதனுள் தமிழ்ச் சிறப்பும் கூறப்பட்டது. பிறவும் உளவேற்கொள்க.

௨௯௦. இறும்பு - குறுங்காடு. மதன் - வலி.

௨௯௧. புலிநகர் - சிதம்பரம். பொதியில் - சபை. இவ்வரலாறு இப் படலத்துள் மேலே கூறப்பட்டது.

௨௯௨. படி - ஒப்பு. கழுக்கடை - சூலம்.

கேட்டி, அவ்வியத்தொகை அறஎறிந் துயரிய ஆன்றவர்* குழுப் போற்றும், கௌவை யம்புனற் காஞ்சியை முன்புபோற் கதுமெனச் சென்றெய்தி. உ௬௩

அங்கண் மக்கள மாதவேச் சரனென அருட்குறி நிறீஇப் போற்றிப்
பொங்கும் அன்பினால் விதியுளி அருச்சனை புரிகுதி மற்றாங்கே
துங்கம் நீடிய பரவெளிப் பிலத்தயற் சூழலின் எஞ்ஞான்றும்
தங்கு காப்புடை நடமெனப் பெயரிய தாண்டவம் புரிகின்றேம்.

செல்வம் மல்கும்இத் தில்லைநீள் வனத்திடைத் திருச்சிற்றம் பலம்ஒன்றே, சொல்லி றந்தொளிர் பரவெளி எனப்படும் சுரிவளைக் குலம்ஆர்க்கும், மல்லல் நீர்த்தடம் புறம்பணை வேலிசூழ் வளம் பொழில் திருக்காஞ்சி, எல்லையுட்படு வரைப்பகம் முழுவதும் பர வெளி எனத்தேறாய். உ௬௫

ஆதி அந்தமும் இல்லதோர் மெய்யறி வானந்த நிறைவாகுஞ்
சோதி நந்தமைத் தம்மனக் குகையினுந் தொழுபவர் க்ருத்தீமை
காது காஞ்சியாம் பரவெளித் தலத்தினுங் காண்டகப் பெறுவோரே
ஓதி முற்றுணர் உறுவரும் பெறலரும் வீட்டினை உறுவாரால். உ௬௬

வன்னியிற்படு பொருள்கள்அக் கணத்தனில் வன்னியாம் அது போல, என்னராயினும் பரவெளிக் காஞ்சியின் எய்திஎம் இயல் பாவார், அன்ன தன்மையான் அத்தலத் திறந்தவர்க் கழற்கடன் கழிப்போரைத், துன்னு சூதகந் தொடக்குறா திழிஞரைத் தீண்டி னுந் தொடக்கில்லை. உ௬௭

பாப்புப் பாயலோய் இத்தகைச் சிறப்புடைப் பதிவயின் எமைப் போற்றின், காப்புத் தாண்டவம் ஆயிடைக் காட்டுதும் அந்நடந்

---

உ௬௩. *'வானவர்' எனவும் பாடம்.

உ௬௪. காப்பு நடனம் - உயிர்களைக் காப்பாற்றுந் திருக்கூத்து. இது வடமொழியில் 'சர்வரட்சா நடனம்' எனப்பட்டது.

உ௬௬. மெய் அறிவு ஆனந்தம் - சச்சிதானந்தம். காது - போக்குகின்ற. மனக்குகையில் இறைவனைக்கண்டவர்க்கும் காஞ்சியிற் காணுதல் இன்றியமை யாதது என்பதாம்.

உ௬௭. வன்னி - நெருப்பு. எம்மியல்பு - சிவமாந்தன்மை. அழற்கடன்-சமக்கடன்.

தனக்கேற்பக், கோப்புச் சிரமை மத்தளம் முழக்குவா யாகெனக் கொடும்பாச, நீப்புச் செய்தெமை ஆளுடை அண்ணலார் நிகழ்த் திய மொழிகேட்டு. உகூஅ

வண்டினம்புகுந் தழக்கிய பூந்துழாய் வானவன் பெரிதோகை, கொண்டு வல்விரைந் தணுகினன் காஞ்சியிற் கோழரைத் தனிமாக் கீழ், அண்டர் போற்றவாழ் அங்கணர்க் கணிமையின் ஆகம விதி யாற்றால், கண்டு மத்தள மாதவேச் சரன்றனைப் பூசனைக் கடன் பூண்டான். உகூகூ

இறைவன் காப்புநடனங் காட்டுதல்

கலிநிலைத் துறை

போக்க ருந்தவம் பற்பகல் புரிந்துபே ரன்பு
தேக்கு சிந்தையான் மீச்செலத் திருவருள் வழங்கி
வாக்கும் உள்ளமும் தொடர்வரு வள்ளலார் முழுதும்
காக்கு நாயகர் காட்டினர் காப்புநன் னடனம். ௩00

வீங்கி ருட்பிழம் பள்ளிவாய் மடுத்துவெங் கதிர்கான்
றோங்கு செங்கதிர் ஆயிரம் ஒருவழிக் குழுமி
யாங்கு வில்லுமிழ் அற்புதப் பொலஞ்சுடர்ப் பொதுவின்
பாங்கர் எங்கணும் படரொளி விரிகதிர் பரப்பி.* ௩0௧

அனைய மன்றினுக் கரும்பெறல் அணியெனக் கவின்று
புனையும் நீற்றொளி வயங்கிய திருவுருப் பொலிய
வினைஇ கந்தவர் விள்ளருஞ் சரண்மிசை வீக்குங்
கனைம ணிக்கழல் கலின்கலின் கலினெனக் கறங்க. ௩0௨

வார்ந்த செஞ்சடை மாதிரம் எட்டினுஞ் சுலவ
ஆர்ந்த தெய்வதக் கங்கையா றலம்பிநீர் துளிப்பக்

---

உகூகூ. கோழரை - செழித்தஅடி. கண்டு - தாபித்து.

௩00. மீ, மேலென்னும் பொருள்தரும் எழுனுருபு.

௩0௧. ஆங்கு, உவமஉருபு. வில் - ஒளி. * 'பரப்ப' எனவும் பாடம்.

௩0௨. வினை இகந்தவர் விள்ளருஞ்சரண் - ஞானிகள் நீங்குதற்கரிய திருவடி. கறங்க - ஒலிக்க.

௩0௩. மாதிரம் - திசை. சுலவ - சுழல ஆலம்பி - ஒலித்து. கூர்ந்து - மிகுந்து. உயிர்பருக என்றது, உயிர் வேறாகநில்லாது ஆனந்தத்தில் அழுந்திநிற்கச்செய்து என்றவாறு.

கூர்ந்த இன்னருட் குறுநகை இளநிலா முகிழ்க்குச்
சார்ந்து போற்றெடுத் திசைப்பவர் தம்உயிர் பருக. ௧0௩

கஞ்ச வாண்முகம் மலர்தரக் கட்கடை கருணைப்
பஞ்சி னேரடிப் பனிவரைப் பிராட்டிபால் நடப்ப
அஞ்சு பூதமும் படைத்தளித் தழிக்கவும் வல்ல
துஞ்ச ரும்புகழ்க் குறட்கணந் துணங்கையாட் டயர. ௧0௪

ஊன மில்பசுங் கொடியென ஒல்கிநின் றொருபால்
கான ளாங்குழல் மலைமகள் கண்டுகண் களிப்ப
வான நாட்டவர்* கற்பக மலர்மழை பொழியத்
தானம் எங்கணும் அரகர சயஒலி தழைப்ப. ௧0௫

கட்டு வார்முர சாதிய பெருங்கணப் பூதர்
எட்டு நாகமும் மாகமும் செவிடுற எழுப்ப
மட்டு வார்ந்தெனச் செவியெலாம் அண்ணிக்கும் மதுரம்
பட்ட தீங்கிளை நரப்பியாழ் கின்னரர் பயில. ௧0௬

வேதம் ஆயிரம் ஒருவயின் வெண்குடப் பணில
நாதம் ஆயிரம் ஒருவயின் நலங்கிளர் முழவப்
பேதம் ஆயிரம் ஒருவயிற் பெரும்புனற் பரவை
ஓதம் ஆயிரம் ஆர்த்தெனத் தழங்கொலி ஓங்க. ௧0௭

நடிக்கும் அற்புத நாடகங் காண்டலும் புளகம்
பொடிக்கும் மேனியன் புனல்பொழி விழியினன் துதிகள்

---

௧0௪. இறைவன் இறைவியை நோக்கிய திருக்குறிப்புடன் ஆடுதலால், 'கட்கடை........ பிராட்டிபால் நடப்ப' என்றார்.

௧0௫. கான் அளாம் - வாசனை பொருந்திய. பாலுண் குழவியின் பசுங் குடர் நோய்நீர் மருந்தைப் பொறாதென்று அதனைத் தாய் உண்ணுதல் போல, மலநோயைப்போக்கும் இறைவன் திருக்கூத்தின் ஆனந்தத்தை உயிர்களின் அறிவு பொறுக்கமாட்டா என அம்மையார் கண்டு களிக்கின்றனர் என்க. * 'நாடவர்' எனவும் பாடம்.

௧0௬. எட்டு நாகம் - அட்டமாநாகம். மாகம் - வானம். மட்டுவார்ந் தென - தேன் ஒழுகினாற்போல. அண்ணிக்கும் - தித்திக்கும்.

படிக்கும் நாவினன் அஞ்சலி பற்றிய கரத்தன்
கடிக்கு றுந்துழாய்க் கண்ணியான் படிமிசை வீழ்ந்தான். ௩௦அ

வீழ்ந்தெ ழுந்துளம் மகிழ்ந்துபே ரின்பவெள் ளத்தின்
ஆழ்ந்து பன்முறை பணிந்துபோற் றிசைப்புழி அவற்கு
வாழ்ந்த பேரருட் கருணையான் மத்தளம் முழக்கப்
போழ்ந்த வெண்மதிக் கண்ணியார் திருவருள் புரிந்தார். ௩௦௯

நீண்ட மேனியான் நிறைபெரு மகிழ்ச்சியில் திளைத்துத்
தாண்ட வந்தனக் கிசையமத் தளஇயம் முழக்கி
மாண்ட குந்திறல் மத்தள மாதவ னுறன்
வேண்டு மெய்வரம் அவன்பெற அளித்தனர் விமலர். ௩௧௦

அச்சு தன்பெறு வரத்தினுல் அன்றுதொட் டென்றும்
கச்சி வைப்பினின் மத்தளங் கறங்குபே ரோதை
முச்ச கத்தையும் நிறுத்திட முழுவதும் புரக்கும்
பச்சி ளங்கொடி பாகனர் திருநடம் பயில்வார். ௩௧௧

காப்பு நன்னடங் கண்ணுறப் பெற்றவர் கரும
யாப்பு வீழ்த்துயர் வீடுபே றெய்துவர் பிறவி
ஒப்பு மத்தள மாதவேச் சரம்இது உரைத்தாம்
வாய்ப்பு றுந்தவக் கொள்கையீர் மேல்இனி வகுப்பாம். ௩௧௨

அம்மையார் மண்டபத் தெழுந்தருளல்

எம்பி ராட்டிஅங் கிறைவரைத் தொழுதுபோற் றிசைத்து
நம்பு காதலின் தோழியர் குழாத்தொடு நடந்து
கம்ப நாயகர் திருவருட் பெருமையே கருதிச்
செம்பொன் வேய்ந்தொளி பிறங்குமா மண்டபஞ் சேர்ந்தாள்.

---

௩௧௨. கருமயாப்பு - வினைக்கட்டு. ஒப்பு - ஒட்டுகின்ற.

இம்மத்தளமாதவேச்சர வரலாறு, விண்டுவீச்சர வரலாற்றின் ௨,௩-வது உண்மைகளையும், (௩)' இறைவன் உயிர்களின் பொருட்டு நடனஞ்செய் தருளுவன்' என்னும் உண்மையையும் விளக்கும். பிறவும் உளவேற் கொள்க.

௩௧௩. நம்பு - விரும்புகின்ற. மாமண்டபம் - மகாமண்டபம்.

எண்ணில் பன்மணி யாங்கணும் இளவெயில் எறிப்ப
வண்ணம் மாண்டபொன் தூண்பல நிரைநிரை வயங்கக்
கண்ணி றைந்தபே ரழகினுக் கணியெனக் கவின்று
விண்ண ளாங்கொடி மிடையும்அம் மண்டப வரைப்பின். ௲கச

சுற்று நீடிய தோழியர் கவரிசாந் தாற்றி
பற்றி நின்றிரு பாங்கரும் பணிநனி புரியச்
சற்றி ருந்திளைப் பாறினள் எழுந்துமீத் தருக்கு
முற்றி லாமுலை அந்நலார்க் கின்னது மொழிவாள். ௲கரு

மன்னு யிர்த்தொகை முழுவதும் மாயையின் மறைப்புண்
டின்னல் செய்இரு வினைவலைப் படுங்கள்இவ் வினைதாம்
உன்னை எம்மைஎம் அடியரைப் பிணிப்பதொன் றில்லை
அன்ன தாயினும் அகிலமுந் தெளிக்துப்தற் பொருட்டு. ௲கசு

ஆட லான்விழி புதைத்தலின் ஆரிருட் படலம்
மூட *யாவையும் இடர்க்கடல் மூழ்கிய அதனால்
கூடும் வல்வினை கழுவுறக் காஞ்சியைக் குறுகி
நீட நீஎமை அருச்சனை இயற்றுதி நெறியால். ௲கஎ

என்று மந்தரப் பறம்புறை எம்பிரான் விடுப்ப
மன்ற இந்நகர்க் கெய்தினன் வளரிள முலையீர்
இன்று நான்புரி பூசனைக் கிசையஎன் பணியில்
நின்று வேண்டுவ தம்மின்என் றுணர்த்தினள் நிமலை. ௲கஅ

உரைத்த வாய்மொழி கேட்டலும் உளங்களி துளும்பி
விரைத்த கூந்தலார் மென்மல ரடிதொழு தெழுந்து
திரைத்த பாற்கடல் அமிழ்தனைய் செய்பணி வெவ்வே
றரத்த வாய்திறந் தெங்களுக் கருளென அருள்வாள். ௲ககூ

---

௲கரு. சாந்தாற்றி - விசிறி. நல்லார் - பெண்கள்.

௲கசு. மாயையானது மறைத்தற்குக் காரணம் ஆணவமலத் தொடர் பாகும். படுங்கள் என்புழிக் கள் விகுதிமேல் விகுதி. இதுவும் வருஞ் செய்யுளும் இறைவன் கூறிய கூற்று.

௲கஎ. * 'மூடி' எனவும் பாடம்.

௲கஅ. பறம்பு - மலை. தம்மின் - தாருங்கள்.

௲ககூ. அரத்தம் - சிவப்பு.

அம்மையார் தோழியர்களுக்குப் பணித்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சீலந் தாங்குவிண் ணவரும் விழைதகு தீம்புனற் கூவல்
காலந் தோறும்யான் ஆடிக் கருமம் இயற்றுதற் கொன்றும்
ஆலந் தாங்கிய கண்டத் தடிகளுந் காட்டுதற் கொன்றும்
ஏலந் தோய்ந்திருள் கூரும் ஈர்ங்குழ லவர்சிலர் அகழ்மின். ௯௨௦

அலைகள் வெண்மணி வீசி அதிர்புனல் நதிக்கரை அருகு
மலர்கள் பச்சிலை கனிகள் மல்கிய மயிலைவில் லந்தண்
பலவும் ஆதிய பலவும் பயில்வுறு நந்த வனங்கள்
இலைமு கப்பொலம் பூணின் எழுமுலை யவர்சிலர் புரிமின். ௯௨௧

நறிய சந்தன விழுது நாறிய மான்மதச் சாந்தம்
வெறிகு லாங்கருப் பூரம் விரைகெழு குங்குமம் பிறவும்
செறிவு கொண்டபூங் கதிரின் தெய்வத மணிஅணி விலையிட்
டறிவ ரும்பரி வட்ட மாதிய சிற்சிலர் கொணர்மின். ௯௨௨

ஆனின் ஐந்துடன் ஐவே றமுதமும் சிலர்சிலர் தம்மின்
தேன ளாந்திரு வமுது முதலிய சிலர்சிலர் தம்மின்
வான ளாவிய கோயில் மாளிகை எங்கணு மணிகள்
கான ளாமலர் பட்டிற் கவின்நலஞ் சிலர்சிலர் புனைமின். ௯௨௩

தோழிமார் தொண்டு

இன்ன வாறிம யத்தின் இளம்பிடி ஏவுத லோடும்
அன்ன தோழியர் பலரும் ஐயென அடியிணை தொழுது
முன்னர் யாம்செய்தும் என்றங் கொருவரின் ஒருவர்முன் முடுகித்
துன்னு காதலின் மூண்டு தொழில்தலை நின்றனர் மன்னோ. ௯௨௪

---

௯௨௦. கூவல் - கிணறு. ஏலம் - மயிர்ச்சாந்து.

௯௨௧. மயிலை - இருவாட்சி. வில்லம் - வில்வம். பலவு - பலா. இலைமுகம் - இலைபோன்ற முகப்பு.

௯௨௨. மான்மதம் - கத்தூரி. வெறி - வாசனை. பரிவட்டம் - இறைவனுக்குச் சாத்தும் ஆடை.

௯௨௩. ஆனின் ஐந்து - பஞ்சகௌவியம். ஐவேறு அமுதம் - பஞ்சாமிர்தம்.

௯௨௪. ஐயென, விரைவுக் குறிப்பு.

தெவ்வடு வேற்கண் உமாபத் திரையொடு கீர்த்தி மதியென்
றிவ்விரு மாதர் வடக்குந் தெற்கும் அகழ்ந்* திரு கூவல்
கௌவை நெடுந்திரைக் கங்கை காளிந்தி அங்கண் மடுத்தார்
அவ்விரு தீர்த்தங் குடைந்தோர் அல்லல் பவப்பிணி நீப்பார். ௯௨௫

வார்ந்த நெடுஞ்சடை மோலி ஏகம்ப வாணர் தமக்கு
நேர்ந்த திருவமு தாக்க நீடும் அனற்கிறை திக்கின்
ஈர்ந்தண் மணிப்புனற் கூவல் இடம்பெறத் தொட்டு வனப்பின்
ஆர்ந்த திருமடைப் பள்ளி அமைத்தன ரால்ஒரு சாரார். ௯௨௬

நிலவும் எருக்கும் அணிந்த நீள்முடி சாத்திய மேல்பாற்
குலவு நதிக்கரை ஞாங்கர்க் கோதறு தூய வரைப்பிற்
பலருந் தொழுத்தகு மேன்மை பயில்அம்பி காவனம் என்னு
மலர்நிறை நந்த வனங்கள் ஆக்கினர் ஆங்கொரு சாரார். ௯௨௭

நெட்டிலை வாழைக் குலங்கள் நெருப்புறழ் செம்பழப் பூக
மட்டு மதுக்கழை தூணத் தியாத்தவிர் காழ்வடம் நாற்றி
மட்டவிழ் பூந்தொடை தூக்கி வன்ன விதானம் விதானித்
திட்டு மணித்திருக் கோயிற் கெழில்புரிந் தார்ஒரு சாரார். ௯௨௮

வாசக் கொழும்புழு கப்பி வண்ண மலர்த்துகள் அட்டி
வீசிச் செழும்பனி நன்னீர் விரைகமழ் தீம்புகை யேற்றிக்
காசைத் தகர்த்துக் கரைத்துக் கவின்திரு மாளிகைச் சுற்றும்
ஆசைச் சுவர்த்தலம் முற்றுஞ் சித்திரித் தார்ஒரு சாரார். ௯௨௯

---

௯௨௫. உமாபத்திரை என்பாள் வடக்கில் அகழ்ந்து கங்கையை நிரப்பினள். இஃது இறைவி நீராடியது. கீர்த்திமதி தெற்கில் அகழ்ந்து யமுனையை நிரப்பினள். இஃது இறைவனுக்கு ஆட்டுதற்குரியது. இவ்விரு கிணறுகளும் அத்தோழியர் பெயரே பெயராக உடையன. *'மகிழ்ந்'தெனவும் பாடம்.

௯௨எ. சாத்திய - சாத்துதற்கு. நதி - வேகவதி.

௯௨௮. பூகம் - கமுகு. அட்டும்-ஊற்றுகிற. கழை - கரும்பு. யாத்து- கட்டி. காழ்வடம் - மணிவடம். நாற்றி - தொங்கவிட்டு. விதானித்திட்டு - மேலே விரித்து.

௯௨௯. புழுகு - புனுகு. மலர்த்துகள் - மகரந்தப்பொடி. அட்டி - சேர்த்து. காசைத்தகர்த்து - பொன்னையும் மணிகளையும் இடித்து. ஆசைச் சுவர் - நான்குதிக்கிலும் உள்ள சுவர்.

வீறும் விரைப்பாளி தங்கள் வெறுவிய வல்சிஅக் காரச்
சோறு புளிங்தயிர்ச் சொன்றி துப்புடை வனைப் புழுக்கல்
நாறு நறுங்குய்க் கருனை முதலிய நால்வகை உண்டி
ஆறு சுவைத்திறம் விம்ம அட்டன ரால்ஒரு சாரார். ௯௯0

ஒட்டொழி யாநறுந் தேறல் ஒண்மலர் குற்றனர்* கொண்டு
சூட்டொடு கண்ணிகள் இண்டை தொங்கல் முதற்பல ஆக்கி
ஈட்டு நறும்புகை ஏற்றி ஈர்ம்பனி நீர்தெளித் தம்பொற்
சேட்டொளி மூழி அமைத்துச் சேர்த்தன ரால்ஒரு சாரார். ௯௯௧

செம்பொன் இழைத்த தசும்பில் தெய்வத மந்திரம் ஓதி
அம்பொன் இழைத்துகில் வாய்ப்பெய் தலைஎறி தீர்த்தம் வடித்துக்
கொம்பின் ஒசிந்தனர் கொண்டு குளிர்மணிக் கோயிலி னுள்ளால்
பம்பு நிறைகள் நிறையப் பாய்த்தின ரால்ஒரு சாரார். ௯௯௨

சுடர்விடும் ஆடகச் செம்பொன் தூமணி வட்டகை யோடு
படலிகை யாதிகள் சுத்தி பண்ணி அமைத்து நறும்பூ
அடைதளிர் யாவையும் ஆய்ந்தங் கார்த்தி மணத்தஏ லாதிக்
கடிதிரு மஞ்சனம் அட்டிக் களிமிகுந் தார்ஒரு சாரார். ௯௯௩

தூங்கு பலாக்கனி தாற்றுத் தூத்திரள் வாழைப்ப ழங்கள்
மாங்கனிக் குப்பை நரந்தம் மாதுளை நாறெலு மிச்சை†
தேங்கமழ் தெங்கின் குடக்காய்‡ தீம்படு பூகப் பழுக்காய்
ஆங்கண் நிரப்பினர் கைக்கொண் டணுகின ரால்ஒரு சாரார். ௯௯௪

---

௯௯0. விரைப்பாளிதம் - வாசனையூட்டிய சோறு. வல்சி, சொன்றி, புழுக்கல்-சோறு. அக்காரம்-சருக்கரை. குய் - தாளிதம். கருனை - பொரிக்கறி

௯௯௧. குற்றனர்-பறித்து. சூட்டு, கண்ணி, இண்டை, தொங்கல் - மாலை வகைகள். மூழி - பெட்டி, குடலை. * 'குற்றன' எனவும் பாடம்.

௯௯௨. தசும்பு - குடம். பம்பு - பெரிய பாத்திரம்.

௯௯௩. வட்டகை - சிறுகிண்ணம். படலிகை - பூந்தட்டு. அடை - இலை, பத்திரம். ஏலாதி: ஏலம், வெட்டிவேர், பச்சைக்கருப்பூரம், குங்குமப்பூ முதலியன.

௯௯௪. தாறு - குலை. நரந்தம் - நாரத்தை. நாறு - மணம்வீசுகின்ற. குடக்காய் - குடம்போலுங்காய். †'நாறெலுமிச்சம்' எனவும் பாடம். ‡'குடங்காய்' எனவும் பாடம்.

ஆனுடைப் பாற்குடங் கோடி அருஞ்சுவை நெய்க்குடங் கோடி
தேனுடைப் பொற்குடங் கோடி செழுங்கரும் பட்டதண் சாறு
தானிறை பொற்குடங் கோடி தயிருடைப் பொற்குடங் கோடி
வானமிழ் தக்குடங் கோடி வல்லைஉய்த் தார்ஒரு சாரார். ௯௯௫

திருமலி ஓவியப் பட்டும் தீபத் தியன்றவெண் பட்டும்
குருமலி பாசிலைப் பட்டும் கோபம் நிகர்த்தசெம் பட்டும்
உருவுடை மாழையம் பட்டும் ஒளிர்தரு நீனிறப் பட்டும்
தருஉத வும்பல பட்டும் தந்தன ரால்ஒரு சாரார். ௯௯௬

விற்படு மோலி குதம்பை மின்உமிழ் பொன்அணி பட்டம்
அற்பகை விள்ள விளங்கும் அங்கதம் ஆழி கடகம்
பற்பல கண்டத் தணிகள் பாயொளி ஆரம் முதலாம்
கற்பகம் உய்த்தன கொண்டு கடுகின ரால்ஒரு சாரார். ௯௯௭

முழுதுல குங்கமழ் கிற்கும் முருகுடைச் சந்தனத் தேய்விற்
புழுகினை வாக்கி நுணங்கப் பொடித்திடு கப்புரம் அட்டிச்
செழுவிய குங்குமம் பெய்து செறிவுற மட்டித் தெடுத்த
விழுதமை பொற்குடம் ஏந்தி விரைந்தன ரால்ஒரு சாரார். ௯௯௮

கண்ணடி சாமரை வெண்கேழ்க் கவிகை வளிஎறி வட்டம்
புண்ணிய நீறு பளிதம் புகைமலி குங்குலி யங்கள்
வண்ண மணிக்குடம் தட்டோ டாரா தனைக்கு வருந்த
எண்ணில் உறுப்பிற் பிறவும் ஈட்டின ரால்ஒரு சாரார். ௯௯௯

நெய்விர வம்புய நாள நீளிழைத் தீபம் அனந்தம்
பைவிரி பாந்தள் உயிர்த்த பருஉமணித் தீபம் அனந்தம்

---

௯௯௫. கருப்பு அட்டசாறு-கரும்பின் வருத்திய(ஆலையில் ஆட்டிய) சாறு.

௯௯௬. ஓவியப்பட்டு - சித்திரப்பட்டு. தீபத்தியன்ற - பல தீவுகளில் செய்யப்பட்ட. பாசிலை-பச்சிலைபோன்ற. மாழை-பொன். தரு - கற்பகத்தரு.

௯௯௭. வில்படும் - ஒளிவீசுகின்ற. மோலி - மகுடம். குதம்பை - கடிப் பென்னும் காதணி. அற்பகை விள்ள - இருளாகிய பகைநீங்க. அங்கதம் - தோளணி. ஆழி - மோதிரம்.

௯௯௮. முருகு - வாசனை. நுணங்க - நுண்ணிதாக.

௯௯௯. வளிஎறிவட்டம் - ஆலவட்டம். பளிதம் - கருப்பூரம்.

தெய்வதத் தீபம் அனந்தம் தீம்புகை வர்க்கம் அனந்தம்
கைவகுத் தெங்கணும் மல்கக் கண்டன ரால்ஒரு சாரார். ௩௪௦

மாடக வச்சிரப் பத்தர் வார்நரப் பின்னிசை யாழும்
பாடுறு பாடலும் ஒன்றப் பண்ணின் அமைமின்கள் என்றும்
ஈடுறு பற்பல் இயங்கள் எழுப்புமின் என்றும் இணங்க
ஆடுமின் என்றும்விண் ணோரைப் பணித்தனர் ஆங்கொரு சாரார்.

அம்மையார் வழிபாடுசெய்ய எழுந்தருளல்

கலி விருத்தம்

இன்னணம் பணியெலாம் இகுளை மார்செய
மின்னவிர் மணிவடம் சுமந்த வெம்முலைக்
கன்னிமா மண்டப நின்றுங் காதலால்
கொன்உமா பத்திரக் கூவல் நண்ணினாள். ௩௪௨

நிறைபரஞ் சுடரடி நினைந்து கூவல்நீர்
மறைநெறி விதியுளி வழாமை ஆடியே
இறுநுசுப் பங்கலார் எடுத்து நீட்டிய
அறுவையின் ஒற்றிமெய் ஈரம் மாற்றினாள். ௩௪௩

தேசிகப் பட்டிரண் டுடுத்துத் தீவினை
ஆசிரித் தருளும்நீ றாக மெங்கணும்
பூசிமுப் புண்டரம் பொறித்துக் கண்டிகை
நேசமுற் றணிந்துசெய் நியமம் முற்றியே. ௩௪௪

காவலர் பூசனை புரியுங் காதலான்
மேவர வேண்டுவ கொண்டு மெல்லியல்
பாவையர் புடைவரப் படர்ந்தி ரண்டெனும்
ஆவா ணந்தனை அணுகி னாளரோ. ௩௪௫

---

௩௪௦. அம்புயநாள இழை - தாமரைத்தண்டின் நூல்.

௩௪௧. மாடகம் - முறுக்காணி. பத்தர் - யாழ்க்கோல் புகுத்தும் உறுப்பு.

௩௪௩. அறுவை - துணி, ஒற்றாடை.

௩௪௪. தேசிகம் - ஒளி. ஆசுஇரித்து - குற்றத்தைப் போக்கி. கண்டிகை - உருத்திராக்கம்.

௩௪௫. காவலர் - கணவர், இறைவனார்; துவாரபாலகர் என்பாரும் உளர்.

சங்கினம் வயிரொடு தாரை காகளம்
பொங்கொலிச் சின்னங்கள் வீணை பூங்குழல்
வங்கியம் பேரிவார் முரசம் திண்டிமம்
எங்கணும் கடலுடைந் தென்ன ஆர்ப்பவே. ௩௪௬

கின்னரர் கருடர்கிம் புருடர் பாண்செயக்
கன்னியர் எதிர்எதிர் கலவி ஆடிடத்
துன்னிய முனிவரர் துன்றும் வேதியர்
என்னரும் மறைமுழக் கெடுத்துச் சூழவே. ௩௪௭

ஐவகைப் பிரமமும் அங்கம் ஆறும்ஓர்
கைவளர் முகனுடைக் கடவுள் வேழமும்
கொய்விரைக் கடம்பணி கோவும் ஒகையான்
வைகும்அச் சூழலை வலங்கொண் டெய்துவாள். ௩௪௮

ஐங்கரப் பிள்ளையை நிருதி ஆசையில்
செங்கைவேல் இளவலை உலவைத் திக்கினும்
உங்குறு பூசையின் உவப்பச் செய்துபோய்
மங்கல நந்திவாழ் வாய்தல் நண்ணியே. ௩௪௯

வாயிலோர் பூசனை மரபின் ஆற்றினள்
மாயிரு மறைத்தனி மாவின் நீழல்வாழ்.
நாயனார் தமைவிழி நயப்பக் காண்டலும்
மீயுயர் காதலான் வீழ்ந்தெ ழுந்தனள். ௩௫௦

ஒருங்கிய மனத்தின்அஞ் செழுத்தும் ஓதியே
கருங்குழற் கற்றைமேற் குவித்த கையொடும்
பெருங்களி துளும்பிஉள் புகுந்து பிஞ்ஞகர்
மருங்குற முறைமுறை வணங்கி ஏத்தினள். ௩௫௧

---

௩௪௬. திண்டிமம்-தம்பட்டம். ஏனையவற்றை மேலே (பக் ௬௨௬, ௨௫.) காண்க.

௩௪௭. கலவி - கலந்து. வேதியர் என்னரும் - அந்தணர் எவரும்.

௩௪௮. ஐவகைப் பிரமம்-பஞ்சப்பிரம மந்திரம்; அங்கம் ஆறு - ஷடங்க மந்திரம்; இவைகள் பிரணவத்தில் அடங்குதலாலும், பிரணவமே விநாயகராது முகம் எனப்படுதலாலும், 'ஐவகைப் பிரமமும் அங்கம் ஆறும்ஓர் கைவளர் முகனுடைக் கடவுள்' என்றார்.

௩௪௯. ஆசை -திக்கு. உலவை - வாயு.

முருகலர் மாவடி முளைத்த தீஞ்சுவை
அருள்விளை அமுதினை ஆரக் கண்களால்
பருகினள் பன்முறை பழிச்சி அண்ணலார்
கருணையே நோக்கிவெங் களிப்பின் நீடினாள். ௩௫௨

விழிகள்ஆ னந்தநீர்த் தாரை மெய்யெலாம்
பொழியநெக் குருகினள் புளகம் போர்த்தனள்
மொழிதடு மாறினள் அறிவின் முற்றிய
தொழில்அமை பூசனை தொடங்கல் மேயினாள். ௩௫௩

அம்மையார் வழிபாடு செய்தல்
அறுசீரடி யாசிரிய விருத்தம்

வழுவறு தோற்ற மாதி வழுக்கிய பாவத் தீமை
கழுவநின் பூசை இந்நாள் கடைப்பிடித் தருளால் செய்வேன்
முழுதருள் வழங்கி ஊறு நீக்கிமுன் னின்று கோடி
செழுமதி முடியாய் என்று சங்கற்பம் செய்து கொண்டாள்.

பூமுதல் பூத சுத்தி புரிந்தகப் பூசை ஆற்றிக்
காமரு மலரும் வாச வருக்கமும் கலந்த தெண்ணீர்த்
தோமில்பாத் தியமே ஆச மனம்அருக் கியந்தூய் தாக்கி
மாமுரல் இதழித் தாரார் முடிமிசை மலரை மாற்றி. ௩௫௫

மாதர்வண் சத்தி யாதி சத்தியீ றிலக வாய்ந்த
ஆதன மதன்மேல் வைகும் சதாசிவ வடிவின் ஆன்ற
சோதியைத் திருவே கம்பச் சுடரினை நடுக்கீழ் பக்கம்
மீதற நிறைந்து விம்மும் ஆனந்த நிமல வாழ்வை. ௩௫௬

சித்திருள் அறுக்கும் நோக்கால் தெளிவுறக் கண்டு போற்றிப்
பாத்தியம் முதலாம் மூன்றும் பதம்முகம் முடியின் ஈத்து

௩௫௪. தோற்றம் - படைப்பு. வழுக்கிய - தவறிய. ஊறு - இடையூறு. கோடி - கொள்வாயாக.

௩௫௫. பூ - பிருதிவி. தோம் - குற்றம். பாத்தியம், ஆசமனம், அருக்கியமென்னும் மூன்றற்கும் மூன்று பாத்திரத்தில் தண்ணீர்வைத்து அத்தண்ணீரைச் சுத்திசெய்தல் முறை. மா - வண்டு.

௩௫௬. சத்தியாதி சத்தியீறான ஆதனமென்றதை மேலே ௫௬-ஆம் செய்யுளிற் காண்க.

நாத்திகழ் மனுவின் மாண்ட நறுமது பருக்கம் நல்கி
ஆத்தன்நூல் விதியி னூற்றுன் மறித்தும்ஆ சமனம் ஈந்தாள்.

இணங்கிய நெய்பால் பெய்த இன்னமு திசைய நல்கி
மணங்கமழ் எண்ணெய்க் காப்பும் மாநெல்லி மஞ்சட் காப்பும்
அணங்கருங் கபிலை ஐந்தைந் தமுதுபல் குடத்துத் தீம்பால்
குணங்கெழு தயிர்நெய் செந்தேன் குளிர்இள நீரும் ஆட்டி.

கருப்புமிழ் தேறல் ஆட்டிப் பல்கனி வருக்கம் ஆட்டி
அருத்திகூர் அன்பின் ஆன்ற சந்தனக் குழம்பும் ஆட்டி
மருக்கமழ்ந் தெடுத்த கீர்த்தி மதித்தடங் கூவல் தெண்ணீர்
உருத்திர மனுக்கள் ஓதி விதியுளி நிறைய ஆட்டி. ௩௫௯

நுழைபும்நூற் கலிங்கம் ஏந்தி நொய்தென மேனி ஒற்றி
விழைதகு நறும்பட் டாடை விளங்கெழில் முந்நூல் சாத்தித்
தழையும்மான் மதங்கர்ப் பூரம் சந்தனக் கலவை சாத்தி
இழைஅணி வருக்கம் ஏனை ஈர்ந்தொடை அலங்கல் சாத்தி. ௩௬௦

நறுவிரைத் தூபம் தீபம் காட்டிநால் வகைவே றுண்டி
அறுசுவைத் திறத்தின் மாண அமுதுசெய் வித்துச் சீதம்
உறுபுனல் உதவிக் கைவாய் பூசிஒண் பழுக்காய் வாசம்
பெறும்இலை முகவா சங்கள் மந்திரம் பேசி நல்கி. ௩௬௧

அகிற்புகை தீபம் எல்லாம் இனிதளித் தரக்கு நன்னீர் [ற்றி
மகிழ்ச்சியிற் சுழற்றிப் பல்கால் வலஞ்செய்து வணங்கிப் போ

---

௩௫௭. பாத்தியம் பாதத்திலும், ஆசமனம் முகத்திலும் (வாயிலும்), அருக்கியம் முடியிலும் கொடுக்கப்படும். மனுவின் என்றது இடைநிலைத் தீவகமாய் முன்னும் பின்னும் சென்றியையும். ஆத்தன்நூல் - இறைவன் நூல். மதுபருக்கம் - தயிர், நெய், பாலோடுகூடிய உணவு.

௩௫௮. மா - பிண்டி. காப்பென்பதனை மா நெல்லிகளோடுங்கூட்டுக. அணங்கரும் - வருந்துதலில்லாத. கபிலை ஐந்து - பஞ்சகௌவியம். ஐந்தமுது - பஞ்சாமிர்தம், இதுமுதல் அபிடேகமுறைபுங் காண்க.

௩௫௯. உருத்திரமனுக்கள் - சீருத்திர மந்திரங்கள்.

௩௬௦. கலிங்கம் - ஆடை. இழை அணி - இழைத்த அணி.

௩௬௧. முகவாசம் - ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

இகப்பில்அஞ் செழுத்தும் எண்ணி இன்னன பிறவும் ஆற்றி
முகிழ்த்தபே ரன்பின் ஆன்ற பூசனை முற்றச் செய்தாள். ஙகூஉ

முற்றுவித் தெழுந்து மீண்டும் மொய்யொளிப் பிலத்தின் பாங்கர்
அற்றமில் அறம்எண் ணான்கும் அருள்வழி வளர்ப்பா ளாகிப்
பற்றலார் புரம்செற் றாரை இம்முறை எண்ணில் பன்னாள்
சிற்றிடை எம்பி ராட்டி பூசனை செய்து வாழ்நாள். ஙகூங

அன்னணம் அளவில் காதல் அருச்சனைத் திறத்தின் ஓங்க
மன்னிய மறைநூல் வாய்மை ஆகம வழியிற் பேணும்
தன்னிகர் இமயம் ஈன்ற மதரரித் தடங்கண் செவ்வாய்
மின்னிடைக் கொருநாள் அங்கண் நிகழ்ந்தது விளம்ப லுற்றேன்.

பண்டுபோற் கம்பை யாற்று மணிப்புனல் படிந்து மெய்யிற்
கண்டிகை நீறு தாங்கிக் கடப்படு நியமம் ஆற்றித்
தொண்டினில் வழாது பூசைத் தொழில்தலை நின்று காதல்
மண்டவே கம்ப னாரை மஞ்சனம் ஆட்டுங் காலை. ஙகூரு

மருமலர்த் தனிமா நீழல் வள்ளலார் மேன்மேல் அன்பு
பெருகிய கருத்தி னாட்குப் பேரருட் கருணை கூர்ந்த
ஒருதிரு விளையாட் டாலே பத்தியின் உறுதி நோக்கித்
திருவருள் புரிவான் எண்ணி இதுதிரு வுள்ளஞ் செய்தார். ஙகூகூ

இறைவன் கம்பாநதி பெருக்கெடுத்துவரச் செய்தல்

விழுமிய அண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந் தீர்த்தம்
முழுவதும் ஒருங்கு நண்ண முன்னினர் முன்ன லோடும்
ஒழுகுநீர்க் கம்பை யாற்றி னுடன்விராய்க் கடைக்கால் வெள்ளம்
எழுவது கடுப்ப எல்லாப் புனலும்வந் திறுத்த வன்றே. ஙகூஎ

கலி விருத்தம்

மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர் காணூஉக்
கடைநாள்அனு கிற்றாலென வெருவிக்கலுழ் கண்ணீர்

---

ஙகூஉ. அரக்குநீர் - சிவப்புநீர்; ஆலத்திநீர்.

ஙகூச. மறைவழி, ஆகமவழியால் வழிபடும் இறைவிக்கு என்க.

ஙகூஎ. முன்னினர் - நினைத்தார். கடைக்கால் - ஊழிக்காலம்.

ஙகூஅ. இடையாறு - உபநதி.

இடையாறென விரவக்கொடு வேகத்தொடும் எவ்வெப்
புடைநீர்களும் உடனாகிய கம்பைப்புனல் வருமால். ௬௬அ

படலைக்கரு முகிலும்இடை இடையேபட ரொளிசேர்
தொடலைக்கதிர் உடுவுந்துவ ளுறுபாசடை விரவும்
இடையில்திகழ் மலரும்என இலகக்கக னமும்உட்
படமிக்கெழு பரவைப்புனல் பயமுற்றிட வருமால். ௬௬௯

அடிநேடிய திருமாலென இருமாநிலம் அகழும்
முடிநேடிய மலரோனென விண்மேற்செல முடுகும்
கடவாமுரண் இருவோரெதிர் கனலாயெழும் உருவம்
உடையானென விரைசெல்புனல் கீழ்மேலுற நிலையும். ௬எ0

வாழைக்கனி பலவின்கனி மாவின்கனி நெடிய
தாழைக்கனி அகில்குங்குமம் நிறைசந்தனம் மலர்தேன்
வேழத்துணி முதல்இன்னன கொடுமேவலின் உமையாள்
ஊழிற்புரி பூசைக்குரி யவைஉய்ப்பவர் உறழும். ௬எ௧

இருபாலினும் மணிதங்கிய இருகோடு படைத்து
வெருவார்களும் வெருவித்துயர் மேவத்தவ உரறி
மருவார்குழல் உமைஅச்சுற வரலான்உயர் கம்பை
பெருமான்எதிர் பண்டெய்திய பெருவேழமும் நிகரும். ௬எ௨

அம்மையார் இறைவனைத் தழுவிக்கொள்ளுதல்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

மலைபடு வளங்கள் வாரி மணிபல வரன்றிப் பொங்கி
அலைஎறிந் திரைத்து விம்மி விசும்பெலாம் அடைத்துப் பம்பித்

---

௬௬௯. தொடலை - வரிசை. பாசடை - பச்சிலை. வானத்தையும் உட்படுத்தினமையால் மேகம் பச்சிலை போலவும், நட்சத்திரங்கள் பூக்கள் போலவும் தோன்றுவவாயின. பயம் - அச்சம், (உயிர்கள் செய்த தவப்) பயன் என இருபொருள்கொண்டு உற்றிட, முற்றிட எனக்கொள்க.

௬எ௧. தாழை - தென்னை. வேழம் - கரும்பு. உய்ப்பவர் உறழும் - கொண்டுவருபவரை நிகர்க்கும்.

௬எ௨. இது யானைக்கும் நதிக்கும் சிலேடை. மணி - முத்து, நவமணிகள். கோடு - தந்தம், கரை. தவஉரறி - மிகவும் ஒலித்து.

தலைவரு வெள்ளந் தன்னைத் தடவரை பயந்த திங்கட்
கலைநிறை வதனத் தேவி காண்டலும் வெரூஉக்கொண் டாளால்.

புடையுறும் இருளை மாரும் பொள்ளென அச்சம் பூப்பத்
தடைபடா தனுகு நீக்கந் தனைஎதிர் நோக்கி நோக்கிக்
கடல்கிளர்ந் தனைய வெள்ளங் காரண மின்றி என்னே
விடையவன் பூசை நாப்பண் மேவிய வாறென் றெண்ணி. ௩௭௪

என்னுடைத் திங்கு தன்னாற் பூசனைக் கிடையூ றாகத்
துன்னிய திதுவாம் என்று சொல்லருங் கவலை கூர்ந்து
சென்னியின் மதியம் வைத்தார் திருவடி இதயத் தெண்ணும்
முன்னர்அப் பெருநீர் வெள்ளம் முடுகிவந் தடுத்த தாக. ௩௭௫

துன்புற நோக்கி நெஞ்சந் துண்ணெனத் துளங்கி ஆவா
உம்பர்வான் தடவிச் செல்லும் ஒப்பரும் பெருநீர் வெள்ளம்
எம்பிரான் மிசையே நண்ணும் இனிச்செய்வ தென்னே என்று
தம்பிரா னார்பால் அன்பு தழைந்தெழும் உள்ளத் தோடும். ௩௭௬

அட்டொளிப் பசும்பொன் மேனி வடிவெலாம் அதிர்ப்புக் காட்டப்
பொட்டணி நுதலின் பாங்கர்க் குறுவெயர்த் திவலை பூப்ப
மொட்டிள முலையில் தூங்கும் முத்தொளி வடங்கள் ஆட
இட்டிடை வருந்திச் சால இறுமெனத் துவண்டு வாட. ௩௭௭

கூந்தலின் நறவந் தோய்ந்த குருமலர்ச் சுரும்பர் ஆர்ப்ப
ஏந்தகல் அல்குல் சூழ்ந்த எரிமணிப் பருமம் ஆர்ப்பச்
சேந்தொளி பிலிற்றுஞ் செம்பொற் கிண்கிணி சிலம்போ டார்ப்பக்
காந்துபொற் கடகக் கையிற் கதிர்வளைக் குலங்கள் ஆர்ப்ப ௩௭௮

ஒருகொடி எழுந்து செம்பொன் உயர்வரைக் குவடு தன்னை
இருகொழுந் திருபாற் போக்கித் தழீஇயென எழுந்து வல்லை

---

௩௭௩. கலைநிறை திங்கள் வதனமென்க. வளங்கள் - திரவியங்கள்.

௩௭௬ துளங்கி - கலங்கி.

௩௭௭. அட்ட - சுடப்பட்ட. திவலை - துளி. மொட்டு - அரும்பு. இட்டிடை - சிறுகிய இடை.

௩௭௮. பருமம் - மேகலை. காந்து - ஒளிவீசுகின்ற.

௩௭௯. வேதி - இலிங்கத்தின் பீடம்.; கருமணிப்பாவை - நீலமணியாற் செய்த பாவை.

முருகலர் வேதி உம்பர்த் தன்வல முழந்தாள் ஊன்றிக்
கருமணிப் பாவை யன்னாள் கணவரைத் தழுவிக் கொண்டாள். ௯எ௯

இறைவன் தழுவக் குழைதல்

மணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையால் நெருக்கிப் புல்லித்
தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திணிஇருள் அறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்து காட்டி
அணிவளைத் தழும்பி னோடு முலைச்சுவ டணிந்தார் ஐயர். ௯அ௦

கலி விருத்தம்

வற்றிநின் றருந்தவம் முயன்று பன்மறை
கற்றவர் உணர்வையுங் கடந்த பேரொளி
சிற்றிடைத் திருந்திழைத் தேவி வால்வளைப்
பொற்றழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. ௯அக

உருஅரு அனுமலை உண்மை இன்மைமற்
றிருள்ஒளி யன்றிநின் றிலகு பேரொளி
மருமலர்க் கருங்குழல் மங்கை வால்வளைப்
பொருதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. ௯அ௨

பெருவிரல் அளவையின் உளத்திற் பேணிநின்
றுருஉயிர் முழுவதும் ஆட்டும் ஒள்ளொளி
அருள்பொழி குறுநகை அணங்கு வால்வளைப்
புரிதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே ௯அ௯

உயிர்ப்பினை ஒடுக்கியே விழித்து றங்குவோர்
அயர்ச்சியில் அகக்கணால் நோக்கும் ஆரொளி
குயிற்பெடைச் சின்மொழி இறைவி கோல்வளைப்
புயத்தழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. ௯அச

---

௯அக. வற்றிநின்று - உண்டிமறுத்து உடலிளைத்துநின்று. "கானின்று வற்றியும்" (திருவா. ௬ம், ௬.) என்றருளியது காண்க.

௯அ௯. இறைவன், உள்ளத்தில் அங்குட்ட அளவாகத் தியானிக்கப் படுதலால், "பெருவிர லளவையின் உளத்திற் பேணிய ஒளி" என்றார். உரு - உடல்முதலிய உலகம்.

௯அச. விழித்துறங்குவோர் - சாக்கிரத்தே அதீதத்தைப் புரிவோர். அயர்ச்சி - தற்போதங் கெடுதல்.

என்றும்ஓர் இயல்பினிற் பகல்இ ராஅற
நின்றவர் அன்பினுக் கணிய நீள்ஒளி
மென்றளிர்ச் சீறடி விமலை கைவளைக்
கொன்தழும் பொடுமுலைச் சுவடு கொண்டதே. ௩அ௫

மனத்திடைத் தனதடி நினைந்த மாத்திரை
வினைப்பெரும் பிறவிவேர் அகழும் மெய்யொளி
அனைத்துல கீன்றருள் அமலை பல்வளை
இனத்தழும் பொடுமுலைச் சுவடும் ஏற்றதே. ௩அ௬

வடவரை குழைத்ததோர் பவள மால்வரை
முடிவொடு முதலிலா மாவின் மூலத்து
மடநடை இளங்கொடி வளைக்க ரத்தொடு
குடமுலைக் கம்மவோ குழைந்து மெல்கிற்றே. ௩அ௭

வானவர் யாவரும் வந்து போற்றுதல்
கலிநிலைத் துறை

அம்பொன் வால்வளைத் தழும்பொடு முலைச்சுவ டணிந்து
கம்ப வைப்புடை வாழ்க்கையார் கருணைகூர்ந் தருளி
நம்பும் ஓகையிற் பெருங்களி சிறத்தலும் நலமார்ந்
தும்பர் இம்பரின் உயிரெலாம் உவகையிற் களித்த. ௩அ௮

திக்கும் வானமு மாசறத் திகழ்ந்தொளி படைத்த
தக்க பல்லியம் எண்ணில தழங்கின இளங்கால்
புக்கு மெல்லெனப் புதுமணங் கொண்டெழுந் தசைந்த
இக்க டற்பெரும் புவியெலாம் அடங்கின துகள்கள். ௩அ௯

மந்தி ரத்தழல் வலஞ்சுழித் தெழுந்தொளி திகழ்ந்த
சுந்த ரப்பொலம் பூமழை நிரந்தரஞ் சொரிந்த

---

௩அ௫. பகல் இரா அற நின்றவர் - சகல கேவலநிலை கழன்று சுத்தநிலையில் நிற்போர். கொன் - பெருமை.

௩அ௭. பவளமால்வரை என்றது இறைவனை.

௩அ௮. உயிர்க்குயிராகிய இறைவன் களித்தமையால் உயிர்கள் களித்தன.

௩௯௦. நிரந்தரம் - இடைவிடாமல். வையம் - உலகம்.

சந்த மாமறை தனித்தனி மகிழ்ந்தெழுந் தார்த்த
எந்த வையமும் மயலிடை இன்றிஓங் கினவால். ௫௯0

எங்கும் இன்னணம் நிகழ்வுழி இருமதக் கலுழித்
துங்க வெண்கரிக் கோமுதல் சுராசுரர் எல்லாம்
தங்க ளின்துணைக் கிழத்தியர் தம்மொடும் வல்லை
அங்க ணேந்தனர் அகம்நிறை உவகைமீக் கிளைப்ப. ௫௯௧

புண்ட ரீகமென் பொகுட்டணைக் கடவுளும் புதுப்பூந்
தண்டு ழாய்முடித் தனிப்பெருந் தலைவனும் இருகேழ்
முண்ட கத்துறை முதல்வியர் தமையுடன் கொண்டு
மண்டு பேரின்பங் கிடைத்ததின் றெமக்கென வந்தார். ௫௯௨

சோதி நாரதன் முதல்சுரர் முனிவரும் வசிட்ட
னாதி யாயபல் பிரமநன் முனிவரும் அளவில்
காதல் முந்துறு களிப்பொடுங் குழாங்கொடு கரத்தின்
மீது தண்டமும் வேணியும் விளங்கவந் தடைந்தார். ௫௯௩

சத்தி மார்திதி அதிதிமற் றுறுதக்கன் மக்கள்
ஒத்த யோகினிப் பகுதியர் அருந்ததி உலோபா
முத்தி ரைத்திருந் திழைஅன சூயையே முதலாம்
இத்தி றத்தவர் யாவரும் மகிழ்ந்துவந் திறுத்தார். ௫௯௪

சனக னாதியர் தமிழ்முனி தவத்துரு வாசன்*
முனிவர் சூழ்உப மன்னியன் முதுதிறற் பூதர்
நனிஉ ருத்திரர் கணாதிபர் நந்திஎம் பெருமான்
இனையர் யாவரும் ஆயிடை ஒருங்குவந் திறுத்தார். ௫௯௫

நண்ணி யாவரும் நாயகி தழுவிடக் குழைந்த
அண்ண லார்திருக் கோலம்நேர் கண்டுகண்† டார்த்தார்
விண்ணி றைந்தபே ரானந்த வெள்ளத்தில் நிறைந்தார்
கண்ணி னாற்பெறு பெரும்பயன் கைவரப் பெற்றார். ௫௯௬

---

௫௯௧. இருமை - பெருமை. வெண்கரிக்கோ - இந்திரன். அங்கு-திருவேகம்பத்தில்.

௫௯௫. * 'துருவாச' எனவும், 'துருவாசர்' எனவும் பழைய பதிப்புக்களில் உள்ளன. ௫௯௬. †'கண்டுகொண்' டெனவும் பாடம்.

அலர்ந்த வாள்விழி இன்பநீர் சொரியநின் றழுதார்
மலர்ந்த காதலின் வடிவெலாம் புளகங்கள் மலிந்தார்
கலந்த சிந்தையார் அருட்பெருங் கருணையே நோக்கிப்
புலந்த ழைத்திடச் சென்னிமேல் அஞ்சலி புனைந்தார். ௬௯௭

ஆயி ரங்கதிர் ஆழியங் கடவுளும் அயனும்
ஆயி ரம்விழி பெற்றிலேம் என்றழுங் கினர்கள்
ஆயி ரம்விழி யுடன்முழு தாளியும் அமையா
ஆயி ரங்கண்இவ் வற்புதம் காண்பதற் கென்றான். ௬௯௮

இன்ன தன்மையின் யாவரும் தொழுதெழுந் தாடி
மன்னும் ஏழ்கடல் முழக்கெனப் பழிச்சினர் வாழ்ந்தார்
அன்ன வர்க்கவண் நிகழ்ந்தபே ரானந்தம் இதழிச்
சென்னி யாரன்றி மற்றெவர் தெளிதரற் பாலார். ௬௯௯

திருவேகம்பர் காட்சிகொடுத்தல்

அந்த வேலையின் இறைவிதன் அணிவளைத் தழும்பு
சந்த மென்முலைச் சுவடுதோய் தனியுருப் பொலியச்
சுந்த ரந்திகழ் சுடரொளி இலிங்கத்தி னின்று
முந்து தோன்றினார் மூவருக் கறிவரு முதல்வர். ௭௦௦

தோன்றி வாள்நிலாக் குறுநகை தோற்றிமீக் கடுக
ஏன்ற வெள்ளநீர் சருவதீர்த் தப்பெயர் இசையான்
மான்று மேதக நிறுவினார் மாதினைத் தழீஇக்கொண்
டான்ற காதலால் செய்யவாய் முத்தம்உண் டளித்தார். ௭௦௧

தோகை மஞ்ஞைபஞ் சாயலாய் துளங்கிஉள் வெருவேல்
ஓகை யுற்றனம் காண்டிநீ என்றுரைத் தருள

௬௯௭. கலந்த சிந்தையார் - அம்மையப்பர். புலம் - ஞானம்.

௬௯௮. ஆயிரங்கதிர் ஆழி - சூரியன்போலும் சக்கரம்.

௭௦௦. தழும்பும் சுவடும் தோய்ந்த உருவென்க.

௭௦௧. மான்று மேதக நிறுவினார் - பெருமையடைந்து மேன்மையுற இருத்தினார்.

௭௦௨. வெள்ளங்கண்டு வெருவினராகலின், 'வெருவேல்' என்றார். அருள - (மணவாளக் கோலத்தைக்) காட்ட.

வாகை ஏற்றினர் தம்மண வாளநற் கோலம்
ஏக நாயகி நோக்கினள் இணைவிழி களிப்ப. ௪0௨

தழீஇய கைகளை விடுத்தெழுந் தவனியில் தாழ்ந்து
குழீஇய அன்பினல் அஞ்சலி சென்னிமேற் குவித்தாள்
கழீஇய செம்மணி வடிவினைக் காண்டொறும் உலவாக்
கெழீஇய காதலாற் கிளர்ந்தெழும் உவகையில் திளைத்தாள்.

அம்மையார் துதித்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

நெடியவன் பிரமன் காணு நின்மலக் கொழுந்தே போற்றி
அடியனேற் கபயம் நல்கும் அருட்பெருங் கடலே போற்றி
படிமுதல் ஆரு ருகி வேறுமாம் பரனே போற்றி
கடிமலர்த் தனிமா நீழற் கடவுளே போற்றி போற்றி. ௪0௪

பெறலரும் பெரும்பே றின்று பெற்றனன் அடியேன் போற்றி
முறைமுறை உலக மெல்லாம் முகிழ்த்தளித் தழிப்பாய் போற்றி
அறைகழல் கறங்க மன்றில் ஐந்தொழில் நடித்தாய் போற்றி
நிறைமலர்த் தனிமா நீழல் நித்தனே போற்றி போற்றி. ௪0௫

தரைபுனல் இரவி இந்து தழல்உயிர் வளிவான் என்று
உரைபெறு வடிவோர் எட்டும் உடையனே போற்றி போற்றி
வரையெழும் பரிதி செந்தீ மதிஅமை விழியாய் போற்றி
விரைமலர்த் தனிமா நீழல் வித்தகா போற்றி போற்றி. ௪0௬

கறைமணி மிடற்றாய் போற்றி கண்ணினுள் மணியே போற்றி
மறவியின் வழிபட் டோர்க்கும் வழங்குபே ரருளாய் போற்றி
நிறைபரஞ் சுடரே போற்றி நெஞ்சக விளக்கே போற்றி
மறைமுதல் தனிமா நீழல் வள்ளலே போற்றி போற்றி. ௪0௭

---

௪0௩. கழீஇய - சாணைபிடித்த. குழீஇய - திரண்ட. கெழீஇய - பொருந்திய.

௪0௪. படிமுதல் ஆறாறு - மண்முதலிய முப்பத்தாறு தத்துவம்.

௪0௫. முகிழ்த்து - தோற்றுவித்து. அளித்து - காத்து. ஐந்தொழில் - பஞ்சகிருத்திய நடனம்.

௪0௭. மறவி - மறதி.

முன்னுறு பொருள்கட் கெல்லாம் முற்படு பழையாய் போற்றி
பின்னுறு பொருள்கட் கெல்லாம் பிற்படு புதியாய் போற்றி
புன்மதி யாளர் தேறாப் பூரண முதலே போற்றி
சின்மயத் திருவே கம்ப சிவசிவ போற்றி போற்றி. ௪௦௮

### அம்மையாருக்கு இறைவன் திருவருள்செய்தல்

கலி விருத்தம்

என்றுளம் நெக்குருகி எல்லையில் அன்பினளாய்
மன்றல் மலர்த்தொடையல் வார்குழல் போற்றிசெயக்
கொன்றை முடிச்சடையார் பேரருள் கூர்ந்தருளித்
துன்றிய கேண்மையினான் மற்றிது சொல்லினரால். ௪௦௯

பொங்கி மணங்கமழப் பூசு நறுங்களப
மங்கல மென்முலையாய் காளி மகிழ்ந்திதுகேள்
அங்கனை நின்னொடுநாம் வேறலம் ஆமுதநத்
திங்களும் வெண்ணிலவும் போலு மெனத்திகழ்வேம். ௪௧௦

இலளிதை யாம்பெயரான் முன்இவண் எம்உருவிற்
பலர்தொழ வந்துலகம் பங்கய னாதியெலாம்
மலர்தர நல்கினைபின் மற்றொரு கற்பமதிற்
சலமறு மெய்ஞ்ஞான சத்தியின் நீங்கியதோ. ௪௧௧

அந்தண னுக்கருளி ஆக்கிய துப்புதவிக்
கந்த மலர்க்கடவுள் கான்முளை தன்மகளாய்
நிந்தனை செய்தவனை நீத்து வரைக்கிறைபால்
வந்து மறித்துமெமை அன்பின் மணந்தனையால். ௪௧௨

இத்தகு நீஉலகம் யாவையும் உய்புமுறை
அத்தனி மந்தரமேல் யாம்அரு ளாற்றின்நிலைஇப்

---

௪௦௮. "முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே - பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (திருவா. திருவெம். ௯.) என்ற ஆசிரியத் திருமொழி இங்குக் கருதத்தக்கது.

௪௧௦. காளி - கறுப்பி. திங்களும் நிலவும்போலும் குணகுணியாய் என்க.

௪௧௨. அந்தணன் - பிரமன். ஆக்கிய - படைத்தற்கு. துப்பு - வலி. மலர்க்கடவுள் கான்முளை - தக்கன்.

௪௧௩. அருள் ஆற்றின் நிலைஇ - அருளிய வழியில் நின்று.

பொய்த்திற னில்கழுவாய் இன்று புரிந்தனையாற்
கொத்தலர் மென்குழலாய் வேட்டது கூறுகென. ௪௯௩

வன்றனி மால்விடையாய் மந்நரம் வண்கயிலை
வென்ற வினைச்சிவலோ கத்திலும் மேதகவுற்
றென்றும் நமக்கினிதாம் இந்நகர் ஆதலின்இங்
கொன்றுநர் யாவர்களும் முத்தி யுறப்பணியாய். ௪௯௪

மறந்தும் அறம்பிறழாக் காஞ்சி வளம்பதியின்
அறிந்துசெய் தீவினையும் அன்றி எழுந்தனவும்
பிறிந்து தவப்பயன்ஒன் றெண்ணில வாய்ப்பெருகி
அறம்பொருள் இன்பமெலாம் ஆகவும் நீஅருளாய். ௪௯௫

இங்கிவை வேண்டும்எனக் கெம்பெரு மானெனமீப்
பொங்கு பெருங்கருணைப் பூரணி வேண்டுதலும்
சங்கணி வெண்குழையார் தந்திரு வுள்ளமகிழ்ந்
தங்கலுழ் மேனியினுய் கேள்இது வென்றருள்வார். ௪௯௬

எண்சீரடி யாசிரிய விருத்தம்

எய்சிலை நீள்புருவத் தேந்திள மென்முலையாய் எம்மிடை எம் அடியார் தம்மிடை எய்தலுறச், செய்பிழை யன்றிவருந் தீவினை எனையெலாம் சீர்வளர் காஞ்சியினில் தேய்ந்து தவம்பெருகி, மெய் திகழ் நாற்பயனும் மேவ நிறீஇயினமால் வேறும் உனக்கினிஎன் வேண்டுவ தென்றிடலும், மொய்யொளி மேனியினுள் முன்தொழு தேத்திஇள மூரல் முகத்தலரப் பேசுத லுற்றன ளால். ௪௯௭

அறுசீரடி யாசிரிய விருத்தம்

முதுகுடுமிப் பொலங்குவட்டு மந்தரத்தின் முன்னர்எனைக் காளி என்று, புதுமையுற விளித்தனையால் அதுகேட்ட துண்டிலை போல் இருந்தேன் அந்நாள், இதுபொழுதும் இவ்வாறே விளித்தரு

௪௯௬. அங்கலுழ் - அழகொழுகுகின்ற.

௪௯௭. இறைவனிடத்தும் அடியாரிடத்தும் பிழைசெய்தல் பெருங் குற்றமாம் என்பது இதனாலும் தெளியப்படும்.

௪௯௮. இவ்வரலாறு மேலே வீராட்டகாசப் படலத்தில் அவ்விடத்திற்கு ஏற்பச் சுருக்கிக் கூறப்பட்டது. கவுரநிறம் - பொன்னிறம்.

ளிச் செய்தாய்மற் றிதனை மாற்றி, விரவணியுஞ் சடையானே கவுர
நிறம் பெறவேண்டும் அருளாய் என்றாள். ௪௧௮

ஆண்டகையார் அதுகேளாக் குறுமூரல் முகந்ததும்ப அருளிச்
செய்வார், மாண்டவலித் தயித்தியரால் அலைப்புண்ட இவ்வுலகம்
வாழ்வான் எண்ணி, ஈண்டும்உனை அவ்வாறு விளித்தேம்இக் கருங்
கோசம் இன்னே மாற்றி, வேண்டியவா கவுரநிறம் பெறுதிநீ
விண்டிடும்அக் கோசந் தன்னில். ௪௧௯

கூற்றம்உறழ் சும்பனையும் நிசும்பனையுங் கொலைசெய்யக் குறு
கார் உட்கத், தோற்றுதிறற் கவுசிகியாந் துர்க்கைஇனித் தோன்றும்
இதோ காண்டி என்றார், கோற்றொடியும் அக்கணமே வரியரவின்
மூதுரிபோற் காளமேனி, மாற்றினாள் மணிக்கவுர உருப்பெற்றாள்
காதலரை வணங்கிச் சொல்வாள். ௪௨௦

நாதனே நின்னருளால் இப்பொழுதே நவைக்காள வடிவம்
மாற்றிக், காதல்புரி கவுரியென வயங்குற்றேன் ஆதலின்இக் காஞ்சி
மாடே, மாதரொடு வானவர்தங் குழாம்நெருங்கப் பனிவரையின்
நிகழ்ந்த வண்ணம், மேதகைய கடிமன்றல் எமக்கிந்நாள் உண்டாக
விழைகின் றேனால். ௪௨௧

உருத்திரர்கள் கணநாதர் பலவேறு கடவுளர்கள் உவண ஊர்தி,
மருத்தமல ரணைப்புத்தேள் ஐந்தவித்த மாதவர்மற் றுள்ளோர்
யாரும், கருத்துவகை யுறத்தத்தம் பன்னிகளோ டிங்கெம்மைக்
கண்ணிற் காணும், அருத்தியினால் ஒருங்கணைந்தார் அண்ணலே
அருளென்று பின்னும் வேண்டும். ௪௨௨

இவ்வதுவை கவுரிதிருக் கலியாணம் என்றுலகின் வழங்க
வேண்டும், செவ்வியுற ஐயாட்டைக் கன்னியென யான்ஈங்குச்
சிறந்தவாற்றாற், பௌவநீர் அகல்வரைப்பிற் பைப்பாந்தள் மணி

---

௪௧௯. தயித்தியர் - அசுரர். கோசம் - உடற்சட்டை.

௪௨௦. குறுகார் - பகைவர். உட்க - அஞ்ச. மூதுரி - பழைய தோல். மணி - அழகு.

௪௨௧. நவை - குற்றம். கடிமன்றல் - புதுமணம்.

௪௨௨. உவணஊர்தி - திருமால். மருத்த - வாசனை பொருந்திய. பன்னிகள் - பத்தினிமார்கள். அருத்தி - விருப்பம்.

அல்குற் பணைத்தோள் மாதர், எவ்வெவரும் ஐயாண்டிற் கன்னியர்கள் கவுரியரென் றுதல் வேண்டும். சஉங

ஏராளும் ஐயாண்டிற் கன்னியரைச் சைவநெறி மறையோர்க்கீயுஞ், சீராளர் குலமுதலோர் சிவலோகந் தனிற்சிவணப் பெறவும் வேண்டும், காராளும் மணிமிடற்றுப் எனத்தொழுது வணங்குதலும் காமற் காய்ந்த, பேராளர் திருவுள்ளஞ் செய்தருளிப் பெருங்கருணை கூர்ந்து சொல்வார். சஉச

திருத்தகுவண் காஞ்சிதனில் ஆண்டுதொறும் பங்குனிஉத்திரநாள் யார்க்கும், அருத்திபுரி திருவிழா நிகழ்ந்ததற்பின் வதுவை நமக் கமைவ தாகப், பொருத்தமுறக் காண்டியெனத் தமிழ்முனிக்கன் றருள்புரிந்தேம் அதனல் பாவக், கருத்துடைக்கும் பிலத்தயலே யாண்டுதொறுங் கடிநமக்கு நிகழ்வ தாக. சஉரு

கல்யாண மண்டபத்தின் உனக்குரிமைத் தொழில்மறையோர் கன்னி செய்ய, எல்லாரும் இதுகண்டு களிப்புறுக இன்னும்உனக் காண்டு தோறும், நல்வாய்மை அறம்வளர்க்கும் வித்தாநெல் இருநாழி தருகேம் அந்த, நெல்லாலே இகபரத்தும் உயிர்ப்பைங்கூழ், தழைக என நிறுவல் செய்தார். சஉசா

அவ்வண்ணம் பெறலரிய பெருவரங்கள் அளித்தருளி அகிலம் ஈன்ற, மைவண்ணக் கருங்கூந்தல் மனக்கருத்து முற்றநெடு மலய வாழ்க்கை, மெய்வண்ணக் குறுமுனிவன் தவப்பேறு நிரம்பவிய னுலகம் வாழச், செவ்வண்ணப் பெருமானுர் மணவினையில் திருவுள்ளம் பற்றி ஞரால். சஉஎ

ஆகத் திருவிருத்தம் - உசசசா.

---

சஉங. ஐயாட்டைக் கன்னி - ஐந்து வயது பெண். கவுரியரென்றுதல் வேண்டும் - கவுரியரெனப் பெயர்பெறுதல் வேண்டும்.

சஉச. ஏர்ஆளும் - அழகையாள்கின்ற. சிவண - கலக்க.

சஉரு. அருத்திபுரி திருவிழா - விருப்பத்தைச் செய்கின்ற திருவிழா. கரு துடைக்கும் - பிறப்பை நீக்குகின்ற.

சஉசா. மறைக்கன்னியோர் என மாறுக; பார்ப்பனக் கன்னியர் என்பது பொருள்.

சஉஎ. கருங்கூந்தல் - இறைவி; அன்மொழித்தொகை.

## படல உண்மை

இப்படலத்துட் கூறப்பட்ட வரலாறுகளில், அம்மையார் இறைவனை வழிபட்டு, வெள்ளங்கண்டு வெருவி ஓடி இறைவனைத் தழுவிக்கொள்ள, இறைவன் திருமேனி குழைந்து அம்மையார் முதலியோர்க்கு அருள்செய்த தாகிய முக்கிய வரலாறு, (க) 'உலகிற்கு முதல்வராகிய அம்மையப்பர் இருவரும், தாம் அறிவித்தாலன்றி அறியமாட்டாத உயிர்கள் அறிந்துய்தற் பொருட்டே எச்செயலையும் திருவிளையாட்டாகச் செய்வர்' என்பதும், (உ) 'அதுவேயன்றித் தமக்கு ஒரு குறையுண்டாக அதனை நீக்கிக் கோடற் பொருட்டு ஒரு செயலைச் செய்தலென்பது ஒருசிறிதும் இல்லை' என்பதும், (௩) எந்தகைய இடர்வரினும் இறைவனை விடாது உறுதியாகப் பற்று தலே உண்மை அன்பர்களது இயல்பு' என்பதும், (௪) 'அங்ஙனம் பற்றும் பற்றுடையார்க்கே இறைவன் குழைந்து அருள் புரிவன்' என்பதும், (௫) 'எத் தகைய பாவங்களையும் போக்குவதும், எல்லா நலங்களையும் தருவதும் இறைவன் வழிபாடொன்றே' என்பதுமாகிய உண்மைகளை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க. அம்மையார் அறம்வளர்த்த வரலாறு, (க) 'இறை வன் திருவருளே அறத்தை நிலைபெறச் செய்வது' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க. இடைஇடையே கூறப்பட்டுள்ள ஏனைய வரலாறுகளின் உண்மைகளும் ஆங்காங்குக் காட்டப்பட்டன; கண்டு கொள்க.

---

## உரை நடை

யானையை உரித்த பெருமான் திருவேகம்பத்தில் எழுந்தருளின வர லாற்றை ஒருசிறிது சொன்னோம்; இனி, கம்பாநதி பெருக்கெடுத்து வரு தலைக்கண்டு உமையம்மையார் தழுவிக்கொள்ள இறைவனார் வடிவங் குழைந்து காட்டிய கருணையைச் சொல்லுவோம்.

பிரமதேவன், தற்புருட கற்பத்தில் விடியலில் துயில்நீங்கி இறைவன் திருவடியைத் தொழுது எழுந்து, உலகமுற்றும் வெள்ளத்தில் ஆழ்ந்தது கண்டு, இனி எவ்வாறு உலகத்தைப் படைப்பதென்று கவலை கூர்ந்தான். அப்பொழுது இறைவன் 'கற்பந்தோறும் உன்னிடத்தில் குமார வடிவத் துடன் தோன்றி அருள்புரிவோம்' என்று முன்னே தனக்குக் கொடுத்திருந்த வாம் நினைவிற்கு வர, அவ்விறைவனை நோக்கிப் பன்னாள் தவம்புரிந்தனன். இறைவனார் உருத்திரகாயத்திரி தேவியுடன் குமாரவடிவாய்த் தோன்ற, பிரமன் கண்டு அவ் வுருத்திரகாயத்திரி மந்திரத்தை, 'தற்புருடனுக்குப் பொருந்தத் தியானிக்கின்றேம்; உருத்திரன் எமக்கு அருளுக' என்னும்

பொருள்படச் செபித்து வணங்கினன். இறைவன் உலகத்தைப் படைக்கும்படி அருள்செய்து செல்ல, பிரமன் படைக்கும்போது பெண்மை தோன்றாது ஆண்மையே தோன்றின. பின்னர்ப் பிரமன், 'தற்புருடனது திருவருளைத் தியானிக்கின்றோம் எமக்கு உருத்திரன் அருள்செய்க' என்னும் வேறு காயத்திரியைச் செபித்தான். அதனால், இறைவனார் பாதி பெண்ணுருவாகத் தோன்றி, 'நமது தேவி உனக்கு அருள்செய்வாள்' என்றருள, அப்பொழுதே இறைவியார் தமது கூற்றில் ஒரு சத்தியை உண்டாக்கி, 'இவளை நீ நாள்தோறும் வழிபட்டுப் பெண்களைப் படைப்பாயாக' என்றருளி, இறைவருடன் கைலையை அடைந்தனர்.

அச் சத்தியைப் பிரமன் வணங்கி, 'நீர் பெண்களைப் படைத்தருள்க; இல்லையேல் பெண்களைப் படைக்கும் ஆற்றலை எனக்கு அருள் செய்க; அன்றியும் அடியேன் மகனாகிய தக்கனுக்கு நீர் மகளாய் அவதரித்தல்வேண்டும்' என்று வேண்டினன். அதற்கு அவ்வம்மை, 'உலகமுழுதும் சத்திசிவ சொரூபமாதலால், உனது வடிவத்தையும் இடப்பாதி பெண்ணும் வலப்பாதி ஆணுமாகக் கண்டு சோகம் பாவனையால் சத்திசிவமாகப் பாவிக்கக்கடவாய்; அன்றுதொட்டு உலகம் ஆணும் பெண்ணுமாகத் தோன்றும்' என்றருளிச்செய்து, தக்கனிடத்தில் 'சதி' என்னும் மகளாய்த் தோன்றினள், அவளை இறைவருக்கு அளித்துப் பிரமன் அப்பாவனையில் விளங்க, உலகம் ஆணும் பெண்ணுமாகத் தோன்றி விளங்கின. இறைவனை மணந்த இறைவி தக்கன் இறைவனைப் பழித்தமையால் அவன் மகளாகிய மேனியைக் கழித்து, மலையரையனுக்கு மகளாக மேனையிடத்தில் தோன்றி, அவ்விடத்தில் இறைவனை நோக்கித் தவம்செய்துகொண் டிருந்தனள்.

அஃது அங்ஙனமாக, தாருகனென்னும் அசுரன் உலகத்தை வருத்திக்கொண்டிருக்க, இந்திரன் தனது குரு முதலிய கூட்டத்தோடு பிரமனை அடைந்து அவனை அழிக்குமாற்றை வினவினன். பிரமன், 'இறைவன் இறைவியை மணந்து முருகவேளை யளிக்கும்படி செய்தால், அவர் அவனையழிப்பார்' என்று கூற, இந்திரன் மன்மதனை அழைத்து இறைவனை மோகிப்பிக்குப்படி ஏவ, மன்மதன் சென்று இறைவன்மேல் புட்ப பாணங்களை ஏவ, இறைவனார் அவனை நெற்றிக்கண்ணால் நீறாக்கி, இரதியின் வேண்டுகோளால் அவனை உயிர்ப்பித்து உருவிலியாக்கித் தந்து, உமாதேவியாரை மணந்து முருகப்பிரானை அளிக்க, அவர் தாருகனை அழித்துத் தேவர்க்கருள் செய்தனர்.

அதன்பிறகு, இறைவனும் இறைவியும் மகிழ்ச்சியோ டிருக்குங்கால், ஒருநாள் அம்மையார் விளையாட்டாகச் சிவபெருமானது திருக்கண்களை மூடினர். அதனால், சூரிய சந்திரர் முதலிய சுடர்களுக்கு ஒளி நீங்கினமையால்,

உலகமுழுதும் இருள் மூடிக்கொண்டது. அதனால் படைப்புமின்றி, கடவுட் பூசை முதலிய அறங்களும் ஒழிந்தன. பின்னர் அம்மையார் கைகளை வாங்கிக் கொள்ள இறைவனார் விழிதிறப்ப, முன்போல் உலகம் ஒளிபெற்றுச் சிறந்தது. பிறகு, சிவபெருமான் உமையம்மையாரை நோக்கி, நீ நமது கண்களை மூடி வாங்கிய சிறுபொழுது உலகிற்குப் பல்லூழியாக உயிர்கள் வருந்தி அறங்கள் தடைப்பட்ட அப்பாவம் நீங்க நீ பிராயச்சித்தம் செய்தல்வேண்டும். எமக்கும் உனக்கும் அடியார்களுக்கும்பாவம் அணுகாதாயினும் நாம் இயற்றிய வழியையே உலகம் பின்பற்றி நடக்குமாதலால் நீ செய்தல்வேண்டும்' என் றருளினர்.

அதுகேட்டு அம்மையார் நடுக்குற்று வணங்கி, 'பிராயச்சித்தமாவது யாது? அது செய்தற்குரிய காலம் இடங்கள் எவை?' என்று கேட்க, இறைவனார் திருவாய்மலர்ந்தருளுகின்றார். 'ஏ உமையே, தரும சாத்திரங்களில் முனிவர் பல பிராயச் சித்தங்கள் விதித்துள்ளார்கள். அவற்றிலெல்லாம் பாவந்தீர்தலென்பது மிகச் சிறிதாகும். எப்படிப்பட்ட பெரிய பாவங்களையும் முழுதும் போக்கவல்ல சிறந்த பிராயச்சித்தமாவது எம்மைப் பூசித்தலும், தியானித்தலும், துதித்தலும், எம் அடியாரை வழிபடுதலுமேயாகும். அதற்குரிய காலம் வைகறை முதலிய ஆறு காலங்களே. இடம் நாம் எழுந்தருளி இருக்கும் தலங்களாம். ஆகையால் நாம் எழுந்தருளியிருக்குமிடத்திலாயினும், நம் அடியார் சிறப்புடன் வீற்றிருக்கும் இடத்திலாயினும் எம்மை வழிபடுவாயாக' என்று அருளிச்செய்தனர்.

பின்னர் அம்மையார் வணங்கி, பூசை செய்யும் வகையைக் கூறியருள வேண்டுமென்றனர். பெருமான் அருளுகின்றார்: பூசை நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்றுவகைப்படும். ஏனைய உலகத்துச் செய்யும் பூசைகள் நித்தியமொன்றேயாம்; கரும பூமியில் மூன்றுமாகும், கருமபூமியாவது இமயம், சேது, கீழ்க்கடல், மேற்கடல் என்னும் இவ்வெல்லைக்குட்பட்ட பாரதபூமியாகும் என்றனர். அம்மையார், 'அவ்விடத்தில் உமக்கு மிக இனிய உத்தமதலம் யாது?' என்று கேட்டனர்.

சிவபெருமான், 'உமையே, அவ்விடத்தில் நாம் மகிழ்ந்து வீற்றிருக்குந் தலங்கள் பலகோடியாகும். அவற்றில் ஆயிரத்தெட்டுச் சிறந்தன; அவற்றிலும் நூற்றெட்டுச் சிறந்தன. அவைகளிலும் அறுபத்தெட்டுச் சிறந்தன. அவைகளில் காசி, காஞ்சி என்னும் இரண்டு தலங்கள் உயர்ந்தன. அவையிரண்டிலும் நமக்கு மிகவும் இனியதலம் காஞ்சியேயாகும். இத்தகைய தலங்களை அமைத்தது எதற்கென்னில், சொல்லுகின்றோம் கேள். அநாதியே மலத்தாற் கட்டுண்ட உயிர்களை உய்விக்கவேண்டி ஐந்து சத்திகளை வகுத்து, ஐந்தொழில் நடத்தி, வினையை நுகர்வித்து, மலபாகம் வரச்செய்து, ஆசிரியனாய்த் தோன்றித் தீக்கை செய்வித்துச் சரியை, கிரியை, யோகங்களில்

நிற்பித்து, ஞானத்தை அடைவித்து, எம்மோடு உடனும் முத்தியை அடையச் செய்வோம். அத்தகைய வலிமை இல்லாதவர்கள் எளிதாக வீடுபேறடைதற் பொருட்டு இத்தகைய பல தலங்களை அமைத்துள்ளோம். அவற்றின்கண் வாழ்வோர் முயற்சியின்றி எளிதில் பேரின்பத்தை அடைவார்கள். சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சமென்னும் முத்திகளில் சாயுச்சமே முடிந்த முத்தியாகும். அதனைத் தரவல்லது காஞ்சியேயாகும். அதனை வகுத்துச்சொல்லுகின்றோம் கேட்பாயாக.

கேசாந்த முத்தியை அடைதற்குரிய உயிர் கபாலத்தைக் கீறிக்கொண்டு அக்கினி மண்டலத்தில் பூ: எனவும், வாயுமண்டலத்தில் புவ: எனவும், சூரிய மண்டலத்தில் சுவ: எனவும், இந்திரலோகத்தில் மக: எனவும் போய்ப் பிரமத்தில் ஒன்றாகும். க என்னும் பிரமனுக்கு ஈசனாகிய யாம் கேசன் எனப் படுவோம்; எம்மிடத்தில் அந்தத்தையடைதல் (முத்தியடைதல்) கேசாந்த முத்தி எனப்படும். இனி, கம் என்னும் சிரசில் சயனமுறுவது கேசம். கம் என்னும் சிரசில் அஞ்சித்தல் காஞ்சி. இதனால் கேசம், காஞ்சி என்பன ஒரு பொருட் சொற்களாம். ஆகவே, கேசாந்தம் காஞ்சியந்தமென்பன ஒன்றே. எல்லாத்தலங்கட்கும் சிரசாகிய காஞ்சி இவ்வகையில் கேசாந்தமெனப் படுதலால் அங்குள்ள அஞ்ஞானிகள், விலங்கு, மரம் முதலிய எல்லா உயிர் களும் உயிர்போகும்பொழுது தலையோட்டை உடைத்துக்கொண்டு செல்லும். அதனால் அந்த இறந்தவர்கள் உடல் வேகுங்கால் இன்றும் தலை வெடிப்ப தில்லை. அந்நகரின் பெருமையை யாவர் சொல்லவல்லவர்! இடபமும் முன்னே தனது குற்றந்தீர அங்குப்பூசித்தது என்றருளினர். உமையம்மையார் வணங்கி அவ்வரலாற்றைச் சொல்லவேண்டுமென, இறைவனார் சொல்லுகின்றார்.

## இடபேச்சரம்

முன் ஓர் ஊழிக்காலத்தில் உலகமெல்லாம் அழிந்தபோது தருமதேவதை இறப்பிற்கு அஞ்சி இடப வடிவங்கொண்டு எம்மிடத்தில் சரணமென்று வந்தது. யாம் அதனைநோக்கி அஞ்சாதே என்றுசொல்லி வாகனமாகக்கொண்டு நம்மிடத்தில் அன்புடையார் செய்யும் பாவமும் புண்ணியமாக அன்பில்லார் செய்யும் புண்ணியமும் பாவமாகச் செய்து, இவ்வுருவத்துடன் நமது சந்நிதியில் என்றும் இருக்க என்றருளினோம். அங்ஙனமே அஃது இருந்தது.

அது நிற்க, கருடன் திருமாலைச் சுமந்து கொண்டு எல்லா உலகமும் சுற்றி மீண்டு, 'என்னைப்போல உம்மைச்சுமந்துகொண்டு மூவுலகமும் சுற்றி விரைவில் மீளும் ஆற்றல் எனக்கன்றி யாவர்க்குண்டு' என்று செருக்குக் கொண்டு பேசிற்று. திருமால் அதன் செருக்கை அடக்க எண்ணி, நல்ல தென்று சொல்லி அதனுடன் கைலையை அடைந்து, கருடனை வாயிலில்

நிறுத்தித் தான் உள்ளேவந்து எம்மை வணங்கி நெடுநேரம் இருந்தனன். அங்கு கருடன் மிக்க செருக்கோடு நின்றிருப்பதை இடப ஏறு கண்டு அதனை அடக்கக் கருதி, தனது இடது தொடையில் தலைவைத்து உறங்குவது போலப் பெருமூச்செறிந்தது. கருடன் அம்மூச்சிலகப்பட்டு, அதன் நாசியின் நுனியை அடைதலும் நூறு யோசனை தூரம் பின்னே செல்வதுமாய்ப் பன்முறை மோதப்பட்டு, இறகுகளெல்லாம் ஒடிந்து வருந்தித் தப்ப முடியாமல் திருமாலை நினைத்துப் பேரோலமிட்டது. அவ்வோசையைக் கேட்டு யாம் திருமாலை இஃதென்னென்று வினவ, நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறினன். நாம் நந்தியை விடுத்து இடபத்தையும் கருடனையும் வருவித்து, இடபத்தை நோக்கி, நீ நமது ஆணையின்றி இவ்வாறு செய்தமையால் காஞ்சியில் எம்மைப் பூசிக்க என்று விடையளித்தோம். இடபம் அவ்வாறே அங்குச்சென்று சிவகங்கைக் கரையில் மேற்குமுகமாக, 'இடபேச்சுரர்' என்னும் பெயரால் இலிங்கம் தாபித்துப் பூசித்து, நாம் தோன்றி வரங்கொடுக்கப் பெற்று, பன்னூன் நெறி தவறாது உலகத்தை ஆண்டிருந்து முடிவில் இவ்விடத்தையடைந்து வீற்றிருந்தது.

ஆதலால், நீயும் அவ்விடத்தில் பூசைசெய்யச் செல்வாயாக என்றருளினார். உடனே அம்மையார் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு இறைவனார் கண்ணுக்குப் புலப்படும் வரையிலும் பின்னாகவே நடந்துசென்று, பின்பு முன்புறமாக நடந்து, பிறந்த கணங்கள் கொண்டுவந்த மிக்க ஒளியினையுடைய ஒரு விமானத்தின்மேல் ஏறித் தோழிமார் சூழச் செல்வாராயினர். இச்செய்தி கேட்டு, இலக்குமி, சரசுவதி, இந்திராணி, சத்தமாதர்கள், மற்றைய தேவமாதர்கள், இடாகினி, காளி, யோகினி, முனிவர் பத்தினியர்கள் முதலிய மாதர்கள் தங்களுடைய அநேக கோடி தோழிமார்களுடன் வந்து சேர்ந்தார்கள். உரகர் கந்தருவர் முதலிய எல்லாத் தேவவகையினரும் வந்து சேர்ந்தனர். யாவரும் சய சயவென்று ஆரவாரிக்க, பல வாத்தியங்களும் முழங்க, சின்னங்கள் ஒலிக்க, பலபேர் பலவகையான உபசாரங்களைச் செய்ய, இத்தகைய பல ஆடம்பரங்களுடன் மண்ணுலகத்தார் கண்டும் காணாது வியந்து, சின்னங் கேட்டு அறிந்து போற்ற, அம்மையார் காசியை அடைந்தனர். அங்கு விசுவநாதரைப் பூசித்து வேறோர் இலிங்கம் தாபித்து வழிபட்டுக் காஞ்சியை நோக்கிச் சென்று தொண்டைநாட்டையடைந்து, ஐப்பசி மாதத்து அமரபக்கம் ஏகாதசி திதி பூர நட்சத்திரத்தில் எல்லா உலகமும் பெருவாழ்வடையும்படி காஞ்சியம்பதியை யடைந்தனர்.

கங்கணேசர், கடகேசர்

அடைந்து காஞ்சியம்பதியைக் கண்ணுற்று மேன்மேல் மகிழ்ச்சி மிகுந்து, கைகுவித்து, ஆனந்தக் கண்ணீர் சொரிய, அங்கு ஓர் தடாகத்தில் முழுகி,

சங்கற்பஞ் செய்துகொண்டு, பொன்னாலாகிய காப்புநாண் அணிந்துகொண்டு ஆங்கு ஓர் இலிங்கம் அமைத்துப் பூசித்தார். அத்தீர்த்தம் காப்புத் தீர்த்தமெனவும், இலிங்கம் காப்புலிங்கமெனவும் பெயர்பெறும். அதற்கருகில் கடகேசுரரை அமைத்து வழிபட்டுக் கடகமணிந்து கொண்டார். அவ்விரண்டு இலிங்கங்களையுங் கண்டவர் முத்தி பெறுவார்கள்.

## பஞ்சதீர்த்தம் (உலகாணித்தீர்த்தம்)

அப்பால் அங்கு நின்றும் புறப்பட்டு அகநகரத்தைக் கண்டு மகிழ்ந்து, பிருதிவி முதலிய பஞ்சபூதங்கள் தம்பெயரால் செய்து முழுகித் தவம் செய்து திருவேகம்பர்பால் உலகத்திற்கு ஆதாரமாகும் வரத்தைப் பெற்றமையால் உலகமுழுதும் தன்வடிவமாய் ஓங்குகின்ற உலகாணி தீர்த்தத்தின் கரையில் பிலாகாசத்தை அடைந்தனர். அங்கு அம்மையார் தங்கி, அறச்சாலை செய்து, முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்துக் கம்பையாற்றின் கரையில் மாவடியில் எழுந்தருளி இருக்கும் பெருமானைக் காணும் விருப்பத்தால் திருவீதியிற் செல்வாராயினர்.

பார்வதி தேவியார் வீதியில் வந்தவுடனே, நகர மாந்தர்கள் வணங்கி, ஆனந்தத்தால் ஆடியும் பாடியும் வீதிகளெல்லாம் வாழை, கமுகு முதலியன நாட்டி, மகர தோரணங்கள் நிறையக்கட்டி, பனிநீர் தெளித்து, பூரணகும்பம் நிறைத்து, தீபங்கள் ஏற்றி அழகு செய்து, ஆடல் பாடல்களைச் செய்வாராயினர். அம்மையார் வீதிவலம்வரும்முறையால், ஐயனார் சத்தமாதர் முதலிய தேவர்களை ஆங்காங்கு நிறுவி, கீழ்த்திசை முதலாக உள்ள சிவதலங்களை முறையாக மலர்கொண்டு வழிபட்டுக் கடைசியில் திருவேகம்பத்தை அடைந்தார். அடைந்து மதிலின் உயர்வைக்கண்டு மகிழ்ந்து, ஆனந்தக் கண்ணீரொழுகக் கைகள் சிரமேற் குவியத் தேவர்கள் நிறைந்துள்ள கோபுர வாயிலை வணங்கி, உள்ளே சென்று, ஐந்தாம் ஆவரணத்திலிருக்கும் ஆதி சைவர் முதலிய சைவர்களுக்கு அருள்செய்து, அப்பால் சூரியன், வயிரவர், மால் அயன் இவர்கள் இருக்கும் நான்காம் ஆவரணத்தை அடைந்து, அங்குத் தெற்கிலிருக்கும் விண்டுவீச்சரத்தைக் கண்டனர்.

## விண்டுவீச்சரம்

என்று கூறிய சூதமகா முனிவரை ஏனைய முனிவர்கள் வணங்கி, அவ்விண்டுவீச்சர வரலாற்றைக் கூறவேண்டுமென்று கேட்கச் சூத முனிவர் கூறுகின்றார். திருப்பாற்கடலில் பள்ளிகொள்கின்ற திருமால், ஒருநாள் தமது இருதய கமலத்தை யோகத்தால் மேல்நோக்கி மலரச்செய்து அதில் உள்ள சிறு குகையின்கணுள்ள தீக்கொழுந்தின் நடுவில் இறைவன் வீற்றிருத்தலைக் கண்டுபோற்றினர். அதனால் இறைவன் அங்கு அவருக்கு ஆனந்த நடனத்தைச்

செய்தருள, திருமால் அத்தனைக்கண்டு ஆனந்தம்மேலிட்டு, நெக்கு நெக்குருகி, மயிர்க்கூச்செறிந்து, உடல் நடுங்கி வாய்குழறி, யோக நித்திரையிலிருந்தார். அருகிலிருந்த இலக்குமி கருடன், ஆதிசேடன் ஆகிய இவர்கள், அந்தோ! இஃது என்ன நமது தலைவருக்கு வந்ததென்று மனங்கலங்கினார்கள். பின்னர்த் திருமால் அந்நிலையினின்றும் விழித்தெழுந்து, அன்பு மேலீட்டால் கை குவித்து இறைவனைத் துதிக்க, இவர்கள் இஃது என்னை? எனக் கேட்டனர்.

திருமால், நிகழ்ந்த நிகழ்ச்சியை கூற, இலக்குமி முதலியோர் அந்நடனத்தைக் காண விரும்பித் திருமாலை வேண்டினர். திருமால் அவர்களை அழைத்துக்கொண்டு சிதம்பரத்தை யடைந்து இறைவனை நோக்கித் தவம்புரிய, இறைவனார் வெளிப்பட்டு, 'யாவர்க்கும் அரிய நடனத்தைக் காணவேண்டின், காஞ்சியில் சிவலிங்கந் தாபித்துப் பூசித்து இங்கு வந்தாற் காணலாம்' என்றருளினார். திருமால் உடனே காஞ்சியை அடைந்து, திருவேகம்பத்தை வணங்கி, அதற்குத் தென்பால், 'விண்டுவீசர்' என்னும் பெயரால் இலிங்கம் நிறுவிப் பூசித்துத் திருவருள் பெற்று மீண்டு தில்லையை அடைந்து, இறைவன் ஆனந்த நடனத்தைக்காட்ட, இலக்குமி முதலியவரோடுங் கண்டு, பரவசப்பட்டு, கணங்கள் வாத்தியம் முழக்கக்கண்டு தானும் அவர்களுடன் படகம் முழக்கி, அப்பணியை இறைவனார் தமக்கே அருளப்பெற்றார். முனிவர்களே, இது விண்டுவீச்சர வரலாறாகும். இதனை, அம்மையார் வழிபட்டுக் கணங்கள் சூழ்ந்துள்ள திருமுன்றிலை அடைந்து சிவகங்கையில் முழுகி அகத்தியேச்சரத்தைக் கண்டனர் என்று சூதமுனிவர் கூறினார். முனிவர்கள் அதன் வரலாற்றையுங் கூறவேண்டுமெனச் சூதமுனிவர் சொல்லுகின்றார்.

### அகத்தியேச்சரம்

முன்னொரு காலத்தில் நாரதமுனிவர் காஞ்சியில் திருவேகம்பப் பெருமானை வணங்கவேண்டி, கைலையினின்றும் வருங்கால், விந்தமலை இயங்குதற்கேற்ற உருவங்கொண்டு, அவரெதிரே சென்று அருக்கியம் பாத்தியம் முதலியவைகளால் உபசரிக்க, நாரதர் விந்தமலையை நோக்கி, 'ஏ விந்தமே, உன்போலப் பெரியவர்களை வழிபடுகின்றவரைக் கண்டிலேன்; ஆனால், மேருவரை சிறந்ததென்றும், நீ தாழ்வுடையை என்றும் தேவர்கள் உன்னை இகழ்கின்றனர். அதனால் நான் மிகவும் வருந்துகின்றேன். அதை நீக்கிக்கொள்ளும் சூழ்ச்சியை விரைவிற் செய்க' என்று கூறிப்போயினர். விந்தமலை உடனே ஆகாயத்தை அளாவ வளர்ந்து சூரியன், சந்திரன், மற்றைய கோள்கள், நட்சத்திரங்கள் முதலியயாவும் செல்லும் வழியைத் தடைப்படுத்திற்று. அதனால், பகல் இரவு முதலிய காலவேறுபாடின்றி உலகம் வருந்த தேவர்கள் பிரமன்பால் சென்று கூறினர்.

பிரமன் அவர்களோடு காசியை அடைந்து, அங்கு அகத்திய முனிவரைக் கண்டு விந்தகிரியை 'அடக்குமாறு வேண்டினன். அவர், 'பிரமனே, வீடு பேற்றைத்தருவது இத்தலமேயாதலால் இதனைவிட்டு நீங்கோம்' என்றனர். பிரமன், 'விருப்பு வெறுப்பற்ற முனிவரே, இது தேவகாரியமாத்திரமன்று; மூவுலகிற்கும் உபகாரமான செயலாகும்; அன்றியும் இக்காசியினும் சிறந்ததாகக் காஞ்சி என்னும் ஒரு உத்தமதலம் தென்னாட்டிலுள்ளது. இக்காசி இறந்தால் சிவசாரூபத்தைக் கொடுப்பது; அந்தக் காஞ்சியோ நினைத்தால் சிவசாயுச்சத்தைக் கொடுப்பதாகும். அதன்பெருமை இறைவனொருவனே அறியவல்லனன்றி மற்றியாவரறியவல்லார்! அன்றியும் திருமால் பாற்கடல் கடைந்து அமுதம் அளித்ததுபோலத் தமிழ்மொழியை விளங்கச்செய்வீர்; ஆதலால் விரைந்து செல்லவேண்டும்' என்று வேண்டினன். அகத்தியர் காஞ்சியைக் காணவேண்டித் தமது பத்தினியாகிய உலோபாமுத்திரையோடும் வான்வழியாகச் சென்றனர். அவரைக் கண்டதும் விந்தமலை நடுங்கி ஒடுங்கி அவரை அருச்சிக்க, அம்முனிவர் அதனைப் புகழ்ந்தனர். விந்தமலைமீட்டும் வணங்கி, 'அடியேன் செய்ய வேண்டிய பணியாது?' என்றுகேட்க, அகத்தியர், 'தேவகாரியத்தின் பொருட்டு யாம்தென்திசைக்குச் செல்லுகின்றோம். மீண்டுவரும் வரையில் இவ்வாறே இருக்க' என்று தமது கரத்தினால் அழுத்திப் பாதலத்தில் வீழ்த்திச் சென்றனர்.

சென்றவர் காஞ்சியை அணுகிக் கைகள் உச்சிமேற்குவிய, அங்குள்ள சிவ தலங்களை எல்லாம் வணங்கி, திருவேகம்பத்தை யடைந்து, சிவகங்கையில் முழுகி, திருவெண்ணீறும் கண்டிகையும் தரித்து, அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்து, ஆனந்தத்தில் திளைத்து, மூல இலிங்கத்திற்குத் தெற்கில் தமது பெயரால் இலிங்கம் தாபித்து வழிபட்டுப் பல வரங்களைப் பெற்று, மகிழ்ச்சிமேலீட்டால் அரிய பல தோத்திரங்களைச் செய்து, தேவரீரைத் தெய்வமென்று கொள்ளாதவர்கள் என் குலத்தில் பிறவாதிருக்கவும், பிறந்தாலும் அன்றே இறந்தொழியவும், யானும் அத்தகையோர் குலத்தில் பிறவாதிருக்கவும் வேண்டுமென்றுவேண்டி, அதற்குமேல் ஒன்றை விண்ணப்பம்செய்கின்றார். எமது பெருமானே, எல்லா வினைகளையும் ஒட்டுதலால் திராவிடம் எனப் பெயர்பெற்ற தமிழ்மொழியை எல்லா மக்கட்கும் பயன்படுமாறு புத்தமிழ்தமாக யான் தரவும், முப்பது எழுத்தால் ஆகித் தேவரீருக்கு மிகவும் இனிதாகிய அத்தமிழ்த்துதியைத் தேவரீர் ஏற்று யாவர்க்கும் வேண்டிய வரத்தைக் கொடுக்கவும், நிலைபெற்ற இத்தமிழ்மொழியிலுள்ள மந்திரங்களை அடியேன் செபித்து, இவ்விடத்தில் தேவரீருக்கு அணுக்கனாகி வாழவும் அருள்செய்தல் வேண்டுமென்று வேண்டினர். இறைவனார் அவ்வரங்களையெல்லாம் அவருக்கு வழங்கி, தென்திசைக்கு இறைமையையுங் கொடுத்து,

இலிங்கத்தில் மறைந்தருளினர். அகத்தியரும் தமிழ்மொழியை இலக்கண நூல் முறைபால் விளக்கி அங்கு வீற்றிருந்தருளினர்.

அகத்தியர் தமிழை வளர்த்துக் காஞ்சியிலிருக்குங்கால், இமயமலையில் இறைவனர் உமாதேவியாரை மணந்துகொள்ளும் திருமணம் நிகழ்வதாயிற்று. அதற்கு எல்லாத் தேவர்களும் முனிவர்களும் அங்கு அடைந்தமையால், பூமி வடபால் தாழ்ந்து தென்பால் 'உயர' தேவர்கள் வருந்தி இறைவனை வணங்கி வேண்ட, இறைவன் யாமாயினும் எம்மோடொத்தவராயினும் தென்பாற் செல்லின் பூமிசமமாமென்று சொல்லி, அகத்தியரை அழைத்துப் பணித்தனர். அகத்தியர் வணங்கி, 'எல்லாரும் காணும் தேவரீரது திருமணத்தில் அடியேனை விலக்குவது முறையோ! அன்றியும் அடியேனை என்றும் காஞ்சியிலிருக்குமாறு வரந்தந்தருளினீர்; இன்று பொதிய மலைக்குச் செல்லச் சொல்வது எவ்வாறே!' என்று வருத்தத்துடன் புகல, இறைவனர்,'நமது திருமணத்தை இங்குள்ளவாறே உனக்கு அங்குக் காட்டுவோம்; உன்பொருட்டாகப் பாண்டிய நாட்டில் ஒரு காஞ்சியை அமைக்கின்றோம். அதுவும் நமக்குக் காஞ்சிபோல இனிதாகும்; மேலும், நீ வரம்பெற்ற காஞ்சியில் ஆண்டுதோறும் பங்குனித் திருவிழாவின் இறுதியில் நீ மகிழும்படி நமக்குத் திருமணம் நடைபெறுவதாகுக' என்று திருவருள் செய்தனர். அகத்தியர் அதுகேட்டு வணங்கி விடைபெற்றுக்கொண்டு உலோபாமுத்திரையோடும் சையமலையை அடைந்தனர். அப்போதே பூமி சமமாயிற்று. அகத்தியர் அங்குச் சிலகாள் தங்கி இருந்து பின்பு பொதிகை மலையை அடைந்து, தென்காஞ்சி வடகாஞ்சி இரண்டையும் நாள்தோறும்சென்று வணங்கி, செந்தமிழ்ப் பாமாலைகள் பல இறைவனுக்குச் சாத்தி மகிழ்ந்து தமிழை உலகமெங்கும் பரப்பிப் பொதிகை மலையில் வீற்றிருந்தருளினர். இஃது அகத்தியேச்சர வரலாறுகும். இதனை அம்மையார் வணங்கிச் சென்று மாவடிக்கு இடப்பக்கத்திலுள்ள மத்தளமாதவேச்சரத்தைக் கண்டனர்.

### மந்தள மாதவேச்சரம்

இவ்வாறு கூறிய சூதமகா முனிவரை மற்ற முனிவர்கள் கேட்க, அவர் மத்தள மாதவேச்சர வரலாற்றைச் சொல்லுகின்றார். முன்னர்க் கூறியவாறு திருமால் திருத்தில்லையில் இறைவன் ஆனந்த நடனத்தைக் கண்டு படகம் முழக்கி, இறுதியில் இறைவனை வணங்கி, 'அடியேன் தேவரீரது நடனத்தில் மத்தளம் முழக்கவும் வேண்டும்' என்று வேண்ட, இறைவனர், 'அங்ஙனமாயின், நீ முன்புபோல் காஞ்சியை யடைந்து, மத்தள மாதவேச்சரனென்னும் பெயரால் இலிங்கம் நிறுவிப் பூசித்தால் அவ்விடத்தில் பிலாகாசத்தை அடுத்து யாம் காப்பு நடனத்தைச் செய்வோம்; இத்தில்லையில் திருச்சிற்றம்பலம் ஒன்றே பரவெளியாகும்; காஞ்சியில் அதன் எல்லையளவும் பரவெளி

யாகும். அதனிடத்தில் யாம் செய்யும் காப்பு நடனத்திற்கேற்ப நீ மத்தளம் முழக்குக' என்றருளினார். திருமால் அங்ஙனமே காஞ்சியை அடைந்து இலிங்கம் நிறுவிப் பூசித்து, இறைவனார் காட்டிய காப்பு நடனத்தைக்கண்டு மத்தளம் முழக்கப் பெற்று மத்தள மாதவர் ஆயினார். அன்று தொட்டு இறைவனார், திருமால் மத்தளம் முழக்கக் காஞ்சியில் நடனம்செய்தருளுவார். அக்காப்பு நடனத்தைக் கண்டவர்கள் வீடுபேறடைவர். இது மத்தள மாத வேச்சர வரலாறாகும்.

அப்பால் அம்மையார் மகாமண்டபத்தை யடைந்து தோழியர்கள் உப சாரம் செய்யச் சிறிது இளைப்பாறியிருந்து, தோழிமார்களைநோக்கி, இனி நான் இறைவனைப் பூசித்தற்கு வேண்டுவனவற்றைச் செய்வீர்களாக என்று கட்டளையிட, அத்தோழிமார்கள், 'நாங்கள் செய்யவேண்டிய பணி இன்ன இன்ன என்று பணித்தருளவேண்டும்' என்றனர். அம்மையார் யான் முழுகு தற்கு ஒரு கிணறும், இறைவனுக்கு ஆட்டுதற்கு ஒரு கிணறும் சிலர் அகழ்க. சிலர் நந்தவனம் வைக்க. சிலர் பஞ்சகௌவியங்கள் அமைக்க. சிலர் பஞ்சா மிர்தம் அமைக்க என்று இவ்வாறு பலவற்றையும் வகுத்துச் சொல்லியருளி னார். பிறகு உமாபத்திரை என்பவள் வடக்கில் ஒரு கிணறும், கீர்த்திமதி என்பவள் தெற்கில் ஒரு கிணறும் அகழ்ந்து முறையே கங்கை யமுனையை நிரப்பினர். சிலர் காஞ்சிக்கு மேற்கில், 'அம்பிகாவனம்' என்னும் ஒரு நந்த வனத்தை உண்டாக்கினர். மற்றும் பலரும் பல பணிகளையும் செய்தனர்.

பின்னர், பார்வதி தேவியார் மண்டபத்தினின்றும் எழுந்து சென்று உமாபத்திரைக் கூவலில் முறைப்படி முழுகி, இரண்டு பட்டாடை உடுத்து, நியமங்களை முடித்துக்கொண்டு, வாத்தியங்கள் ஒலிக்க, ஆடல் பாடல்கள் நிகழ, இரண்டாம் ஆவரணத்தை அடைந்து, விநாயகக் கடவுளைத் தென்மேற் கிலும், முருகக் கடவுளை வடமேற்கிலும் பூசித்து, துவாரபாலகரைப் பூசித்து, உள்ளே சென்று மாவடியில் வாழ்கின்ற பெருமானைக் கண்களாற் கண்டனர். கண்டதும் அடங்காத பேரன்போடும் விழுந்து வணங்கி, ஒரு மித்த மனத்தோடும் திருவைந்தெழுத்தைக் கணித்து, சிரமேற் குவித்த கைகளுடன் பன்முறை வணங்கித் துதித்தனர். கண்களினின்றும் நீர் தாரை தாரையாய் ஒழுக, உடல்புளகங்கொள்ள, மொழிகுழற நின்று பின்பு பூசிக்கத் தொடங்கினர்.

பூதசுத்திமுதலிய ஐவகைச் சுத்திகள் செய்து அகப்பூசையை முன்னே செய்து, பின்பு, புறத்தில் பாத்தியம், ஆசமனம், அருக்கியங்களைச் சுத்தி செய்தமைத்து, மண்ணுறு குடிலாந்தமாய் அமைந்த ஆசனத்தின்மேல் எழுந் தருளியுள்ள சதாசிவமூர்த்தியாகிய இறைவனைத்தமது அருட்கண்ணாற் கண்டு

துதித்துப் பாத்திய, ஆசமன, அருக்கியங்களையும், மதுபருக்கத்தையும் மந்திர பூர்வமாகக் கொடுத்து, மீண்டும் ஆசமனம் அளித்துப் பின்பு, நெய் பால் சேர்த்த திருவமுதைப் படைத்தனர். அதன்பிறகு; எண்ணெய்க் காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு, பஞ்சகௌவியம், கோடிகோடி குடங்களாக வைக்கப்பட்டுள்ள பால், தயிர், நெய், தேன், இளநீர், கருப்பஞ் சாறு, பழவருக்கங்கள், சந்தனம், சுத்தநீர் இவைகளைச் சீருத்திர மந்திரங்கள் சொல்லி நிரம்பநன்றாக அபிடேகித்து, திருவொற்றாடையால் திருமேனியை ஒற்றி, சிறந்த அழகிய பட்டாடை புனைந்து, முப்புரிநூல் அணிந்து, கத்தூரி பச்சைக் கருப்பூரங் கலந்த வாசனைமிக்க சந்தனத்தை அப்பி, ஆபரணங்களை யும் வகைவகையாகத் தொடுக்கப்பெற்ற பூமாலைகளையும் சாத்தி, நறுமணங் கமழும் தூபதீபங்காட்டி, அறுசுவையோடு கூடிய திருவமுதை நிவேதித்து, கைவாய் பூசுவித்து, தாம்பூலம் முகவாசங்கள் கொடுத்து, அகிற்புகைகாட்டி, தீபாராதனைகள் செய்து, ஆலத்திசுற்றி, வலம்வந்து, வணங்கி, தோத்திரங் கள்பாடி, பஞ்சாக்கரத்தைச் செபித்து இவைபோல்வன பிறவும் செய்து, பூசையைக் குறைவறச் செய்துமுடித்தனர்.

இவ்வாறு பூசையை முடித்துக்கொண்டு மீண்டும் பிலாகாச இடத்தை அடைந்து, முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்ப்பாராயினர். இங்ஙனமே நாள்தோறும் அம்மையார் இறைவனைப் பூசித்து வாழும் நாட்களில் ஒருநாள், அம்மையார் நியமங்களை முடித்துக்கொண்டு முன்புபோல இறைவனைப் பூசிக்கும்போது இறைவனார் அவரது பத்தியின் உறுதிப்பாட்டைக் கண்டு, ஒரு திருவிளையாட்டினால் இதனைச்செய்யக் கருதினார். கருதி இவ்வண்டத்தி னுள்ளும் புறம்பும் உள்ள தீர்த்தங்களை எல்லாம் ஒருங்கு திரண்டு வரும்படி திருவுளஞ்செய்தனர். அங்ஙனமே எல்லாத் தீர்த்தங்களும் திரண்டு கம்பை யாற்று நீரோடுகலந்து பிரளய காலத்து வெள்ளம்போல ஆகாயத்தை அளாவப் பெருகி ஆரவாரத்துடன் வருவனவாயின. தேவர்களும் அம்மையாரது தோழிமார்களும் அஞ்சி நடுங்கினர். அம்மையாரும் அச்சங் கொண்டு, இறைவன் திருவடியை மனத்தில் எண்ணு முன்னே அவ்வெள்ளம் விரைந்துவந்து நெருங்க, அம்மையார் திடுக்கிட்டு நெஞ்சம்பதைத்து, அந்தோ! இப்பெருவெள்ளம் எமது பெருமான் மீது செல்லுமே! இனியான் என்செய்வேன்! என்று இறைவனிடத்துப் பெருகிய அன்போடும், தமது திருமேனியில் அதிர்ச்சி உண்டாகவும், பொட்டணிந்த நெற்றியில் வேர்வை அரும்பவும் தனபாரத்தில் இடப்பட்ட முத்தாரங்கள் அசையவும், மேகலா பரணங்கள் சத்திக்கவும், காலில் அணிந்த சிலம்புகள் ஒலிக்கவும், கையி லணிந்த வளையல்கள் ஒலிக்கவும் எழுந்துசென்று ஒரு பச்சைக்கொடியானது சிவந்த பொன்மலையை இரண்டு கொழுந்துகளை இருபக்கத்திற் செல்லு

விட்டுத் தழுவினாற்போல, பீடத்தின்மேல் வலது முழந்தாளை ஊன்றிக் கொண்டு அம்மையார் இறைவனைத் தழுவிக்கொண்டார். அம்மையார் தனத்தினாலும் வளையலணிந்த கைகளாலும் நெருக்கித் தழுவிக்கொள்ளுதலும், இறைவனார் தமது திருமேனி குழைந்து, தனத்தழும்பும் வளைத்தழும்பும் அணிந்தனர். அம்மையார் தழுவிக்கொள்ள அப்பனார் தனத்தழும்பும் வளைத் தழும்பும் அணிந்துகொண்டமையால் உலகமெல்லாம் இன்பக்கடலில் ஆழ்ந்து மகிழ்ந்தன.

இந்திரன் முதலிய தேவர்களும், அயன் அரி என்னும் இருவர்களும் தங்கள் தங்கள் தேவிமார்களோடும் திருவேகம்பத்தை யடைந்தனர். நாரதர், வசிட்டர், அகத்தியர் முதலிய முனிவர்களும் அவண்வந்து சேர்ந்தனர். வந்து யாவரும் இறைவன் திருக்கோலத்தைக்கண்டு ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்து வணங்கித்துதித்தனர். அப்போது இறைவனார் தனத்தழும்பும் வளைத்தழும்பும் பொருந்திய உருவத்துடன் இலிங்கத்தினின்றும் தோன்றி, வந்த வெள்ளத்தைச் சருவதீர்த்தப் பெயரினால் கிறுத்தி, அம்மையாரைத் தழுவிக்கொண்டு, 'மயில்போலும் சாயலினையுடையாய், மனங்கலங்கற்க' என்று சொல்லித் தமது மணவாளத் திருக்கோலத்தைக் காட்டினர். அம்மையார் தழுவிய கைகளைவிடுத்துப் பூமியில் வணங்கி அவ்வடிவத்தைக் காணுந்தோறும் உவகை அடைந்து துதித்தனர். இறைவனார் தமது அன்பினால் கூறுகின்றார். 'காளி, நீயும் நாமும் வேறல்லோம்; சந்திரனும் நிலவும்போல விளங்குவோம்; ஆயினும், உலகம் உய்யும்படி இப்பிராயச் சித்தத்தை நீ செய்தாய்; இனிநீ விரும்பியதைக் கூறுக என்று வினவினர்.

அம்மையார், 'பெருமானே, கைலை மந்தரம் சிவலோகத்திலும் நமக்கு இனியது இக்காஞ்சியாதலின் இதன்கண் வாழ்வோர் யாவரும் முத்தியடை யவும், இந்நகரத்தில் அறிந்தும் அறியாமலும் செய்த பாவங்கள் நீங்கித் தவம் ஒன்று பலவாய்ப் பெருகி, அறம் பொருள் இன்பங்களுண்டாகவும் அருள் செய்யவேண்டும்' என்று வேண்டினர். சிவபெருமான், 'நம்மிடத்தும் நம் அடியாரிடத்தும் செய்யும் பிழையைத் தவிர வேறு எப்பிழையும் நீ வேண்டி யவாறே இந்தத் தீர்த்து, தவம் பெருகி நாற்பயனும் உண்டாகச் செய் தோம்; வேறு உனக்கு வேண்டுவதென்னை?' என்று வினவினர்.

அம்மையார் வணங்கி, 'தேவரீர், முன்னே மந்தர மலையில் காளி என்று அழைத்தருளினீர்; அதைக் கேளாததுபோல் இருந்தேன்; இன்றும் அவ்வாறு அழைத்தீர்; ஆகையால் இக்கரிய நிறத்தை மாற்றிக் கவுரநிறத்தை அருள வேண்டும்' என்றனர். இறைவனார், புன்னகை செய்து, பெண்ணே, அசுரர் களால் இவ்வுலகம் வருந்தியது; அவ்வருத்தம் நீங்குதற்காக உன்னை இவ்

வாறு அழைத்தோம்; இப்பொழுதே உனது கரிய சட்டையை நீக்கிக் கவுர நிறம் பெறுவாயாக. சும்பன் நிசும்பன் என்னும் அசுரர்களை அழித்தற் பொருட்டு அக்கரிய சட்டையில் கவுசி என்னும் துர்க்கை தோன்றுவள் காண்பாயாக என்றருளினர். அம்மையார் அங்ஙனமே பாம்பு தோலுரிப்பது போலக் கரிய சட்டையை மாற்றிக் கவுரநிறம் பெற்று இறைவரை வணங்கிச் சொல்லுகின்றார்.

எம்பெருமானே, உமது திருவருளால் காளநிறம் நீங்கிக் கவுரி என விளங்குகின்றேன். ஆகையால், இமய மலையில் முன் நிகழ்ந்ததுபோல இன்று இக்காஞ்சியிலும் நமக்குத் திருமணம் உண்டாக விரும்புகின்றேன். உருத்திரர் முதலிய யாவரும் நம்மைக் காண விரும்பி வந்திருக்கின்றனர். என்று கூறிப் பின்னும் சொல்லுகின்றார். இத்திருமணம் கவுரி திருக்கலியாணம் என்று வழங்குதல் வேண்டும். அன்றியும், யான் இப்போது ஐந்துவயது கன்னியாக இருத்தலால், ஐந்து வயதுடைய கன்னியர்கள் எவரும் கவுரியர் எனப்படுதல் வேண்டும். அவர்களைச் சிவப்பிராமணர்களுக்குக் கொடுத்தவர்கள் சிவலோகத்தை அடைதல் வேண்டும் என்று வேண்ட, இறைவனார் அருளுகின்றார்.

காஞ்சியம்பதியில் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத் திருவிழாவில் எமக்குத் திருமணம் நிகழக் காண்பாயாக என்று முன்னை அகத்தியனுக்கு வரந் தந்திருக்கின்றோம். அங்ஙனமே இங்கு நமக்கு ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தில் திருமணம் நிகழ்வதாக. அத்திருமணத்தில் உனக்குரிய தொழில்களைப் பார்ப்பனக் கன்னியர் செய்வார்களாக. அன்றியும் நீ முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தற்கு வித்தாக ஆண்டுதோறும் இருநாழி நெல் தருகின்றோம். அதனாலே உயிர்கள் இகபரங்களை அடைந்து தழைக என்று அருளிச் செய்து, அம்மையார் கருத்து முற்றவும், அகத்தியர் தவம் நிரம்பவும், உலகம் வாழவும் இறைவனார் திருமணத்தில் திருவுள்ளம் வைத்தனர்.

---

# திருமணப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

விண்டாழ் மாவின் முளைத்தெழுந்த விமலனார்தந் திருமேனி
தண்டா அன்பின் உமையம்மை தழுவக் குழைந்த வாறுரைத்தாம்
மண்டா ணவத்தின் தருக்கிரித்து மாறா இன்பப் பெருவாழ்வு
கண்டார் கதுவ அருள்கொழிக்குங் கவுரி மணத்தின் திறம்புகல்வாம்.

---

க. விண்தாழ் - ஆகாயம் கீழ்ப்பட மேலோங்கிய; விண்ணவர் வணங்குகின்ற எனவுமாம். தண்டா - நீங்காத. கதுவ - பற்ற, அடைய.

இறைவன் கட்டளைப்படி திருமால் பணிசெயல்

திருவே கம்பத் தமர்ந்தருளுந் தேவர் பிரானர் புடைநின்ற
மருவார் துளபத் தொடைமவுலி மாயோன் றன்னை எதிர்நோக்கிக்
கருவார் கூந்தல் தடங்காமக் கண்ணி தனக்கும் மற்றெமக்கும்
பெருவாய் மையினுற் கடிவிழாத் திருநாள் பிறங்கப் புரிகென்றுர். ௨

பல்லார் நிற்பத் தனைநோக்கிப் பணித்த கருணைத் திறம்போற்றிப்
புல்லார் வெருவுந் தனித்திகிரிப் புத்தேள் ஓகை தலைசிறப்பச்
சொல்லாற் றெழுகி மணஎழுச்சித் தொழிலின் மூண்டு வேண்டுவன
எல்லாப் பொருளுங் கடிதீங்குக் கொணர்கென் றிமையோர் தமை
[விடுத்தான். ௩

தொடியார் தழும்பிற் பெருந்தகைக்குந் தோகை தனக்குங் கலியாணம்
கடிமா நகரம் முழுதறியக் கறங்கு முரசம் அறைவித்துக்
கொடிநீள் மாட மாளிகைசூழ் கடிமண் டபமுன் கோடிப்ப [தார். ௪
நெடுமால் விசும்பின் யவனரைக்கூய்ப் பணித்தான் அவரும் நிருமித்

திருமண மண்டபப் புனைவு

கலி விருத்தம்

அகனிலம் பசும்பொனின் அமைத்தொ ராயிரப்
பகலொளி மழுங்குசெம் பவளத் தூண்நிறீஇ
உகும்ஒளி மரகதப் போதி உம்பர்வைத்
திகலற வயிரஉத் திரமும் வய்வித்தார். ௫

உருக்கிய செழும்பொனின் மணிகள் ஒன்பதும்
நெருக்குறப் பரப்பிஓ வியம்நி கழ்த்திய
திருக்கிளர் பலகைமேல் இணக்கித் தெள்ளொளி
பெருக்கும்வெண் பளிங்கினற் பித்தி யாக்கினர். ௬

---

௨. மற்று, அசைநிலை. கடி - திருமணம்.

௩. புல்லார் - பகைவர். ஓகை - மகிழ்ச்சி.

௪. தொடி ஆர் தழும்பு - வளையல் பொருந்தியதனுல் உண்டாகிய தழும்பு. கடி - காவல். கடிமண்டபம் - கலியாணமண்டபம். கோடிப்ப - அலங்கரிக்க. விசும்பின் யவனர் - தேவதச்சர்.

௫. உகும் - வீசுகின்ற. போதி - தூண்மிசை உறுப்பு.

௬. ஓவியம் - சித்திரம். பித்தி - சுவர்.

மேனிலை மாளிகை வேதி சூளிகை
ஏனவும் பலபல இயற்றி மேவரு
வானெழும் இருசுடர் மணிக ளாதியால்
ஊனமில் சிகரமும் உம்பர்ச் சூட்டினர். எ

காவியங் கண்ணியர் விழையுங் காமுகர்
ஆவியுஞ் சிந்தையும் அழிய ஏக்கற
ஓவியத் தொகையெலாம் உம்பர் மாதர்போற்
பாவியல் பாடலிற் பயிலச் செய்தனர். அ

வரையினின் றிழிதரு மாலை வெள்ளநீர்
அருவியென் றயிர்ப்புற அலங்கு நித்திலக்
குருமணி வடம்ஒளி கொழிக்குஞ் சுற்றெலாம்
நிரைநிரை யாத்துமண் நீவ நாற்றினர். ௯

மணிவடக் கிடையிடை மறுவில் கண்ணடி
தணிவற ஒளிவிடுந் தவளச் சாமரை
பிணிமலர்த் தொத்துவண் பிரசப் பல்கனி
அணிபெறு முறைமையின் அலங்கத் தூக்கினர். ௧0

கெட்டிலைக் கதலியும் நீலப் பூகமும்
மட்டுமிழ் கன்னலும் வானில் தாருவும்
விட்டொளி எரித்திருள் விழுங்கு தூண்தொறும்
கட்டினர் மலர்கனி காய்கள் ஈனவே. ௧௧

---

எ. வேதி - மேடை. சூளிகை - மாளிகைகளின் நெற்றி; இதனை இக்காலத்தார் எழுதகம் என்பர்.

அ. கண்ணியர் என்புழி இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது. பாடலிற் பயிலச் செய்தனர் எனவே, உயிருடையனபோல இயங்கச் செய்தனர் என்பதாம்.

௯. மாலை - மாலைபோலும். யாத்து - கட்டி. நீவ - தடவ. நாற்றினர் - தொங்கவிட்டனர்.

௧0. வடத்துக்கென்பது விகாரமாயிற்று. பிரசம் - தேன், இரசம். அலங்க - அசைய.

௧௧. நீலம் - நீலநிறம். மலர் முதலியவற்றை ஏற்றவற்றிற்குக் கொள்க. ஈன் என்பது நிகழ்காலத்ததாய் ஈன்றிருக்க வென்னும் பொருள் தந்தது.

கொடிகளுந் தாருவுங் கோணைப் பொய்கையும்
வடிவுடைக் கிளிபுறா மஞ்ஞை மற்றவும்
சுடர்பல நிறங்களுந் தொகுத்தி லேகித்த*
விடுகதிர்ப் பட்டினால் விதானஞ் செய்தனர். ௧௨

முத்தொளி மாலையும் மூரிப் பன்மணிச்
சித்திர மாலையும் செம்பொ னற்செயும்
தத்தொளி மாலையும் ததைந்து வண்டுலாம்
தொத்தலர் மாலையும் துவன்றத் தூக்கினர். ௧௩

நாப்பணின் எம்பிரான் நங்கை யோடுறை
பூப்பொலி மணியணை பொருத்திப் பாங்கெலாம்
மூப்புடை விண்ணவர் முனிவர் வைகிட
ஏற்புடை அணைகளும் இட்டு வைத்தனர். ௧௪

குண்டமும் வேதியும் கோல மார்தரு
மண்டில வகைமையும் மற்றும் ஏர்பெற
விண்டவர் புரம்அடும் விமலர் நூன்முறை
அண்டரும் முனிவரும் அயிர்ப்பச் செய்தனர். ௧௫

கொங்குயிர் சந்தனக் குறடு காழகில்
குங்குமம் கருப்புரம்‡ குரவம் மான்மதம்
வெங்கடி கமழ்தரப் புகைத்து மேதக
எங்கணும் ஐயவி சிதறி ஏர்செய்தார். ௧௬

பாங்கெலாம் பனிமலர்ப் பந்தர் கட்டொறி
வாங்கிய எழில்பெற வகுத்து மாமணம்

---

௧௨. கோணை - அழிவின்மை. இலேகித்த - எழுதிய, சித்திரித்த. *'தொகுத்துலேகித்த' எனவும் பாடம்.

௧௪. மூப்பு - உயர்வு.

௧௫. குண்டம் - குழி. வேதி - மேடை. மண்டிலம் - கோணம். 'மண்டல வகைமையும்' எனப்பாடங் கொள்ளுதல் சிறக்கும்.

௧௬. கொங்கு உயிர் - வாசனையைத் தருகிற. காழ் - வயிரம். குரவம் - கோட்டமென்னும் ஒருவகை வாசனைப் பண்டம். ஐயவி - வெண்கடுகு. ‡ 'கற்புரம்' எனவும் பாடம்.

௧௭. நானநீர் - பனிநீர். துவற்றி - தெளித்து. ஆங்க, அசை நிலை. வாலுகம் - வெண்மணல்.

வீங்கிய நானநீர் தூவற்றி நித்திலம்
ஆங்கவா லுகமென அகம்ப ரப்பினர். ௧௭

பந்தரின் புடையெலாம் பங்க யப்புனல்
அந்தரார் ஆட்டயர் அலங்கற் பொய்கையும்
சந்தனங் கற்பகந் தருக்கள் மல்கிய
சுந்தரப் பொழில்களுந் துவன்றச் செய்தனர். ௧௮

வேறு

யவனர் தந்தொழில் இத்திற மாகமற்
கவுரி மன்ற லெனக்கறங் கும்பணைச்
சிவம்ம லிந்த செழுங்குரல் கேட்டலும்
உவகை பூத்தனர் ஒள்நகர் மாக்களே. ௧௯

நகரணி நலம்

இயங்கு மாந்தர் நெருக்கினில் இற்றுவீழ்
தயங்கு காழ்களும் தாரும் புலவியின்
முயங்கு மாதர் உகுத்தவும் மொய்த்தொளி
வயங்கு வீதியிற் குப்பைகள் மாற்றுவார். ௨௦

சந்தம் மல்கு தமனியச் சுண்ணமுஞ்
சுந்த ரக்கருப் பூரத் துகள்களும்
கந்த நீரிற் கரைத்து மறுகெலாம்
பந்தின் ஊட்டிப் பனிப்பர்க ளென்பவே. ௨௧

வண்டு லாமலர் வார்மணிப் பந்தரும்
விண்டு ழாவு பதாகையும் வில்மணி*
கொண்ட தோரணக் கூட்டமும் யாணரிற்
பண்டை யுள்ளன பாற்றி இயற்றுவார். ௨௨

---

௧௯. மன், அசைநிலை. சிவம் - மங்கலம்,

௨௦. காழ் - மணிவடம். தார் - பூமாலை.

௨௧. தமனியச் சுண்ணம் - பொற்பொடி. பந்தின் - மட்டத்திருத்தியால். பனிப்பர் - குளிரச் செய்வர்.

௨௨. பதாகை - துகிற்கொடி. வில் - ஒளி. யாணரின் - புதுமையாக. பாற்றி - போக்கி. * 'விண்மணி' எனவும் பாடம்.

தாமம் நாற்றித் தமனிய வேதியிற்
பூமென் நீர்நிறை பூரண கும்பமும்
காமர் பாலிகை யுங்கதிர்த் தீபமும்
தூம முந்தொகுப் பார்இடந் தோறுமே. உங

நித்தி லத்தினை நீற்றுபு வேதியிற்
சித்தி ரித்துச் செழும்பொனின் மாளிகைப்
பித்தி ஓவியம் பெட்பப் புதுக்குவார்
பத்தி மாடம் பழுதொழித் தாக்குவார். உச

இருக வுள்துளை ஈர்ங்கலு ழிக்கடக்
கரிகள் பண்ணுவர் கால்விசைத் தோடுவாம்
பரிகள் பண்ணுவர் பார்குழி ஆழியின்
இரதம் பண்ணுவர் எங்கணும் எண்ணிலார். உரு

நீண்ட பொன்னிலைத் தேர்கள் நிறுத்துவார்
மாண்ட தூண்தொறும் வாருறை சேர்த்துவார்
ஈண்டு வார்கட் கிடம்பல ஆக்குவார்
வேண்டி யார்க்கும் விருந்து திருத்துவார். உசு

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சி மாநகர் முழுவதும் இன்னணங் கவின்பயில் சிறப்போங்க, முச்ச கத்தவர் குழாங்கொடு வயின்தொறும் நிறைந்திட முடிவானோர், இச்சை யாற்றினின் மணவினைக் குரியவை எங்கணுங் கொணர்ந்தீண்டப், பொச்ச மில்பெரு மங்கலத் துழனியிற் பொலிவுறும் அதுகாலை. உஎ

---

உங. தமனியவேதி - பொன்திண்ணை. பாலிகை - முளைப்பாலிகை.

உச. வேதி - திண்ணை. பித்தி - சுவர். முத்தினைச் சுட்ட சுண்ணும் பைத் திண்ணைகளில் தீற்றுவர் என்பதாம்.

உரு. கலுழி - பெருக்கு. ஆழி - சக்கரம்.

உசு. வார் உறை - நீண்ட மூடி; அழகிய ஆடை முதலியவற்றைத் தூண்களில் சுற்றுவர் என்பதாம்.

உஎ. முடிவானோர் - கிரீடத்தையுடைய தேவர்கள். துழனி - ஓசை.

### திருமால் திருவிழாவியற்றல்

கம்ப நாயகன் திருவருள் பெற்றுவெண் கதிர்வளைக் கரத் தோன்றல், அம்புயத்தவன் முனிவரர் தம்மொடும் அணிபெறு நன் னாளால், செம்பொன் மாமணிப் பாலிகை முளைவித்திச் சினவிடைக் கொடியேற்றி, எம்பி ரான்மலை மாதுடன் உலாத்தருந் திருவிழா எழுவித்தான். உஅ

ஒன்ப திற்றுநாள் விழாவணி நிகழ்ந்தபின் உற்றஈ ரைந்தாம் நாள், இன்பம் மீக்கொளப் பங்குனி உத்திரத் திமையவர் குழாத் தோடு, மன்ப தைத்திரள் மகிழ்ந்தெழுந் தார்ப்புற மணவினைக் கவின்கொள்வான், என்ப ணிப்பிரான் மஞ்சனச் சாலையின் இனி தெழுந் தருளுற்றான். உகூ

### இறைவன் மணக்கோலங் கோள்ளல்

வேறு

திருத்துயில் அகலப் புத்தேள் செய்தவப் பேறு வாய்த்து
மருத்தபூங் கடுக்கை வேணிப் பரஞ்சுடர் வடிவந் தீண்டிப்
பெருத்தபொற் குடத்துத் தெண்ணீர் மஞ்சனம் பிறவும் ஆட்டி
அருத்திகூர் அன்பின் நுண்ணூல் அறுவைஒற் றுடை சாத்தி. ஙO

கற்பகம் அளிப்ப வாய்ந்த கைபுனைந் தியற்றல் செல்லா
எற்படு நுழைநூற் பட்டின் இலங்கஉள் ளாடை சாத்தி
அற்பக இமைக்குஞ் செம்பொன் ஆடைமற் றதன்மேற் காமர்
விற்படு புருவ மாதர் விழியிணை கவரச் சாத்தி. ஙக

தனிவிரைப் பனிநீர் வாக்கித் தேய்த்தசந் தனப்பூஞ் சேறு
நனிமணம் பயில்கற் பூரங் குங்குமம் நறுங்கத் தூரி

---

உஅ. வளைக்கரத் தோன்றல் - திருமால். ஆலுருபு ஏழாம் வேற்றுமை யில் வந்தது. கொடி ஏற்றிப் பத்துநாள் திருவிழாத் தொடங்குவித்தான் என்பதாம்.

உகூ. மன்பதைத்திரள் - மக்கட் பரப்பின் கூட்டம்.

ஙO. திரு - இலக்குமி; தகரம் விரித்தல். அகலம் - மார்பு. நுண்ணூல் அறுவை - மென்மையான நூலானியன்ற ஆடையாகிய.

ஙக. எல்படு - ஒளி வீசுகின்ற. நுழை - மெல்லிய. அல்பக-இருள்நீங்க.

ஙஉ. பூ - அழகு. மட்டித்த - கூட்டிய.

இனியமான் மதமே மற்றும் மட்டித்த கலவை எண்டோள்
கனிமொழி பாகன் மேனி கமழ்தர மெழுகிக் கிறி. ௧௨

சுடர்த்திரு மேரு வெற்பிற் சூன்றனர் நுண்ணி தாகப்
பொடித்தபொற் சுண்ணந் தெய்வப் பூந்தரு மலரின் வாங்குங்
கடித்திரட் சுண்ணத் தாதிற் கலந்துமேல் அட்டி வாசம்
மடுத்தெழுந் தூமம் ஈரம் வறலுமா றன்பின் ஏற்றி. ௧௩

அரிக்குரற் சிலம்பு போற்றும் அடியவர் மலங்கள் மூன்றும்
இரிக்குஞ்செங் கமலப் பாதத் திணக்கிவல் விருளை யெல்லாம்
பொரிக்கும்விற் பிழம்பு காலும் பொலங்கழல் நரல வீக்கிப்
பரிக்கும்பட் டுடைமேல் ஒண்கல் பதித்தபொன் அரைநாண் சாத்தி

கதிர்உமிழ் பதும ராக உதரபந் தனங்கால் யாத்துப்
புதியசித் திலப்பூங் கோவை பொன்னரி மாலை தண்தார்
எதிரறு சன்ன வீரம் இலைமுகப் பைம்பூண் முந்நூல்
முதலிய மார்பின் வார்ந்து முதிரொளி எறிப்பச் சாத்தி. ௧௫

மணிவடங் கழுத்திற் சாத்தி வாள்கிடந் திமையா நிற்கும்
பணிஉமிழ் மணியிற் செய்த ஆழிபல் விரலுங் கோத்துத்
திணிவயி ரத்திற் செய்த கடகங்கூர்ப் பரத்துச் சேர்த்துத்
துணிகதிர் முத்திற் செய்த அங்கதந் தோளிற் பூட்டி. ௧௬

மாதர்வண் குழையுந் தோடும் வார்ந்திரு புயத்தும் நீவக்
காதிடை அணிந்து செம்பொற் கதிர்மணிப் பட்டம் நெற்றி
மீதுற விசித்துத் தெய்வ விற்குலா மணியின் மோலி
போதமல் வேணிச் சென்னி பொலிதரக் கவித்தான் மன்னே. ௧௭

---

௧௩. சூன்றனர் - பெயர்த்து. கடித்திரட் சுண்ணத்தாது - வாசனை யுடைய திரண்ட பொடியாகிய மகரந்தம். அட்டி - தூவி. வறலுமாறு - வற்றும்படி.

௧௪. அரிக்குரல் - உட்பரல் ஒலி. இணக்கி - பொருத்தி. நரல - ஒலிக்க.

௧௫. உதரபந்தனம் - கச்சு. சன்னவீரம் - கழுத்திலிடும் ஓர் ஆபரணம். இலைமுகப்பூண் - அரசிலைபோன்ற அணிகலம்.

௧௬. கூர்ப்பரம் - முழங்கை. அங்கதம் - தோளணி.

௧௭. மாதர்-அழகு. விசித்து-கட்டி. போது அமல்-பூக்கள் நெருங்கு கின்ற.

திருவணி அணிந்து போற்றிச் சிவபிரான் எழுந்து கும்பம்
இருகயல் கவரி தோட்டி இலங்குகண் ணடிப தாகை
முரசொளி விளக்கி னோடு முன்னிவின் மகளிர் போற்றப்
புரிமணி மண்ட பத்திற் புகுந்துபூந் தவிசின் ஏறி. ௩௮

உருத்திரர் முதலோர் தத்தம் ஒண்டவி சிருக்கு மாறு
திருத்தகு கடைக்கண் நோக்கஞ் செய்துவீற் றிருந்த பின்னர்
விருத்துவண் டமிழ்தப் பாடல் விளரியாழ் முரன்று சேக்கும்
மருத்துழாய்ப் படலைத் தண்தார் வயங்கிய மருமப் புத்தேள். ௩௯

அம்மையார் மணக்கோலங் கொள்ளல்

மனைக்குரி மரபின் வாச மலர்மகள் வதனம் நோக்கிக்
கனைக்கும்வண் டுழக்கும் மென்பூங் கருங்குழற் கவுரி மாதா*
தனைக்கலன் திருந்தப் பூட்டித் தம்மென உரைத்த லோடுஞ்
சுனைக்கரு நீலக்கண்ணாள் பெருங்களி துளும்பச் சென்றாள். ௪௰

உவளக வரைப்பின் எல்லா உபகர ணமுங்கொண் டுற்றுப்
பவளநீள் பலகை மீது பகிரண்டம் முழுதும் ஈன்றுந்
துவளிடைக் கன்னி யாகித் தூநலங் கனிந்த காம
ரவளைநன் கிருவிக் கூந்தல் அவிழ்த்துநெய் அள்ளிச் சாத்தி. ௪௧

நெல்லிநுண் விழுது மஞ்சள் விழுதுமெய் நிரம்பப் பூசி
மல்குபே ரன்பு கூர வாசமுந் துவரும் மற்றும்
நல்லவை நயப்பச் சேர்த்தி நறுவிரைத் தூநீ ராட்டி
எல்லுமிழ் குழையாள் மேனி ஈர்ம்புனல் வறல ஒற்றி. ௪௨

நனைமுறுக் கவிழ்பூங் கற்பம் நல்குபட் டாடை சாத்திப்
புனைமணித் தவிசின் ஏற்றிப் பொருந்தலர் வெருவச் சீறு
முனைமதக் களிநல் யானை மூரிவெண் கோட்டிற் செய்த
தனைநிகர் சீப்புக் கொண்டு தாழ்குழல் ஒழுக்க நீவி. ௪௩

---

௩௮. இதனுள் அட்டமங்கலங்களுங் காண்க.

௩௯. விருந்தென்பது வலித்து நின்றது. சேக்கும் - தங்குகின்ற. மருமம் - மார்பு.

௪௰. மாதா - தாய். தம் - அழைத்துவருக. * 'மாதர்' எனவும் பாடம்.

௪௧. உவளகம் - உள்ளிடம். இருவி - இருத்தி.

௪௩. முனை - வெறுக்கின்ற. நீவி - சீவி.

வம்பவிழ் நானம் பூசி மான்மதம் அகில்சந் தாதி
பம்புறப் புகைத்த தூமம் பரிமளங் கமழ ஊட்டி
அம்பொன்வாய் மகரந் தாழ மண்ணுறுத் தளிர்த பெண்ணைப்
பைம்பழ மென்ன முச்சி பசும்பொன்வார் நாணிற் சேர்த்தி. சச

நகுசுடர் முத்த மாலைக் கொத்துநான் றெருத்தின் நீவித்
திகழொளி விரிப்ப அங்கேழ் முச்சியிற் செருகி வாச
முகையவிழ் அலங்கல் சூழ்ந்து மொய்கதிர் ஈகை மாலை
தொகுமணி மாலை கூந்தற் பரப்பினிற் சுடரப் போக்கி. சரு

ஒழுகொளி பரப்புந் தெய்வ உத்தியும் மயிலும் மிக்க
அழகுற வணைந்து நாப்பண் ஐதுறு கீற்றின் வெய்யோன்
மழகதிர் கிடந்த தென்ன வயங்குகுங் குமத்தூள் அட்டிப்
பொழிகதிர் மாசைப் பட்டம் பொலியவா ணுதலில் வீக்கி. சகூ

சிந்துரஞ் சேறு செய்த திருந்தெழில் திலகம் இட்டுக்
கந்தமென் குவளை நோக்கின் அஞ்சனங் கவினத் தீட்டிக்
கொந்தொளி முகத்தின் நாசித் திருவணி கொளுவிக் காதின்
அந்தழல் மணியின் தோடும் அவிர்கதிர்க் குழையுஞ் சாத்தி. சஎ

விலகிவில் லுமிழுங் கட்டு வடத்தினை மிடற்றிற் சூழ்ந்து
நிலவுமிழ் மணியிற் செய்த அங்கதம் நெடுந்தோள் சாத்தி
இலகொளி வாய்ந்த முன்கைக் கடகமுந் தொடியும் ஏற்றி
அலர்கதிர் மோதி ரங்கள் வார்விரல் அமையக் கோத்து. சஅ

---

சச. பொன்வாய் - பொன்னலியன்ற. மகரம் - சுறாமீன் வடிவாகச் செய்த தலையிலணியும் ஆபரணம். தாழ - அசைய. மண்ணுறுத்து - அழகு பெற அணிந்து. பெண்ணை - பனை. முச்சி - கொண்டை. வார்நாணின் - நீண்ட கயிற்றால்.

சரு. நான்று - தொங்கி. எருத்தில் நீவி - பிடரில் தடவி. முச்சி - கொண்டை. சூழ்ந்து - சுற்றி. ஈகை - பொன்.

சகூ. உத்தி - சீதேவிபோற் செய்த தலைக்கணியும் அணி. மயில் - மயில்போன்ற ஆபரணம். ஐதுறு - அழகாகப் பொருந்திய. கீற்றின் - கீற்றாக. 'நுதலில் நாப்பண் வெய்யோன் கதிர் கிடந்ததென்ன ஐதுறு கீற்றின் குங்குமத்தூள் அட்டிப் பட்டம் வீக்கி' எனக்கூட்டுக. மாசை - பொன்.

சஅ. கட்டுவடம் - மணிகள் கோத்தமைத்த வடம்.

மிகக்கடி கமழ்ந்த சாந்தால் வெரிந்புறம் மெழுகிக் கையின்
நகத்தினால் எழுதிச் சால நறுவிரைக் களபச் சேறு
முலைத்தனம் புதையக் கொட்டி முருகுயிர் பூந்தா தப்பிப்
புகைத்துஞ்சாந் தாற்றி கொண்டு வீசியும் புலர்த்திப் பின்னர். சகூ

நித்தில மாலை துப்பு நிரைத்தபூந் தொடைமா ணிக்கக்
கொத்துறு தாமம் பச்சைக் கோப்பமை தெரியல் வேரித்
தொத்தலர்ப் பிணையல் செம்பொற் சுடர்விரி தொடலை ஏனைத்
தத்தொளி நீலக் கோதை தண்கதிர் எரிப்பச் சாத்தி. ருo

எரிச்சிகை எழுவ தென்ன இளங்கதிர் விரிக்கும் பைவாய்
அரிச்சிகை மணிக ளாதி அழகுறக் கோத்த காழின்
விரிச்சிகை கலாபங் காஞ்சி மேகலை பருமம் ஐந்துங்
கரிச்சிகை மத்த கத்துக் கடிதடம் புலம்பச் சாத்தி. ருக

அலம்புகிண் கிணியின் காலும் அவிர்பரி யாகஞ் செம்பொற்
சிலம்புபா டகம்என் றின்ன புறவடி திகழச் சாத்தி
நலம்புனை செய்ய பஞ்சின் நறுங்குழம் பலர்ந்த கஞ்சம்
இலம்படச் சிவந்த தாளின் ஊட்டினள் இறைஞ்சி நின்றாள். ருஉ

அம்மையார் இறைவன்பால் அமர்தல்

கலி விருத்தம்

தூக்குழல் உமைதிரு வடிவில் துன்னலான்
மாக்கவின் மிகும்அணி வனப்பு நோக்குதோ

---

சகூ. வெரிந்புறம் - முதுகு. சந்தனத்தைப் பூசி நகத்தினால் கீறுதல் இயல்பு.

ருo. பொருட்பின் வருநிலை; மாலை, தொடை, தாமம் முதலியன காண்க.

ருக. எரிச்சிகை - தீயின் கொழுந்து. அரிச்சிகை - பாம்பின் தலை. விரிசிகை என்பது விரிந்து நின்றது. விரிசிகை முதலிய ஐந்து: முப்பத்திரண்டு, பதினாறு, எட்டு, ஏழு, பதினெட்டுக் கோவைமணிகள். இவைகள் இடையில் அணியப்படுவன. கரிச்சிகை மத்தகத்து - யானைத்தலையாகிய மத்தகம்போன்ற.

ருஉ. பரியக மென்பது நீண்டு நின்றது; இஃது ஒருவகைக் காலணி. இலம்பட - பொலிவிழக்க.

ருந.- ஈக்கணம் - வண்டுக் கூட்டம். ஏழை - பெண்.

றீக்கணம் முரல்மலர் ஏழை ஈதியான்
ஆக்கிய அணிகொல்என் றயிர்ப்பு மேயினாள். ௫௩

விண்ணர மடந்தையர் பலரும் வேல்தடங்
கண்ணிணை கவர்பெரு வனப்புக் காண்டொறும்
எண்ணருங் களிப்பினர் எம்பி ராட்டியைப்
புண்ணியச் சோபனம் புகன்று வாழ்த்தினார். ௫௪

நங்கையும் நறைகமழ் நளினப் பாவைதன்
பங்கய மலர்க்கரம் பற்றி யாங்கெழுந்
தெங்கணும் மலர்மழை இறைப்ப வானவர்
மங்கல வாழ்த்தொலி மல்கப் போந்தனள். ௫௫

நிழல்உமிழ் மணிக்குடை நீண்ட கேதனந்
தழையொளிக் கவரிசாந் தாற்றி யாதிய
மழைமதர்க் கண்அர மகளிர் ஏந்தியே
விழைதகு தொழில்முறை விளைத்து டன்செல. ௫௬

பாவிய ஆடைமேல் நடந்து பைப்பய
மாவணி மணவினை மண்ட பத்திடைப்
பூவணை மிசைப்பொலி புனிதன் பாங்கரின்
ஓவியக் கொழுந்தென உற்று வைகினாள். ௫௭

### திருமணம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திருத்தகும் அணைமேல் அண்ணல் அணங்குடன் திகழ நோக்கி
உருத்திரர் முதலோர் யாருந் தொழுதெழுந் துவகை பூத்தார்
மருத்துழாய் அலங்கல் மார்பன் மலரடி விளக்கப் புக்கான்
பெருத்தபல் அண்டம் ஒன்றாய்ப் பிளந்தென இயங்கள் ஆர்த்த. ௫௮

பொலம்புனை கரகத் தீம்பால் பூமகள் வணங்கி வார்ப்ப
வலம்புரிக் கரத்தோன் ஐயன் மலரடி விளக்கிப் போற்றி
இலங்கொளிப் பட்டால் ஈரம் மெல்லெனப் புலர்த்தி ஏந்தும்
அலங்கொளிப் பாத தீர்த்தம் பருகினான் ஆர்வங் கூர. ௫௯

---

௫௬. கேதனம் - கொடி. சாந்தாற்றி - விசிறி.

௫௭. பாவிய ஆடை - பரப்பிய ஆடை.

கன்னல்நெய் கனிபால் இன்ன கமழ்மதுப் பருக்கம் நல்கி
என்னை ஆ ளுடைய கோமான் எடவிழ் கமலச் செங்கை
தன்மிசை உலகம் ஈன்ற தனிமுதற் பிராட்டி யான
கன்னி கை வைத்து நீர்பெய் தளித்தனன் கமலக் கண்ணன். கூ0

கலி விருத்தம்

ஆர்த்தன பணிலங்கள் ஆர்த்த துந்துமி
ஆர்த்தன பல்லியம் ஆர்த்த மங்கலம்
ஆர்த்தன நான்மறை ஆர்த்த ஆகமம்
ஆர்த்தன பல்கலை ஆர்த்த வாழ்த்தொலி. கூக

பொழிந்தனர் வானவர் கற்பப்* பூமழை
வழிந்தன பாடலின் மதுரத் தேமழை
இழிந்தன அடியவர் இணைக்க ணீர்மழை
அழிந்தன வினையெலாம் அனைய காலையின். கூஉ

பங்கயக் கிழவனைப் பகர்ந்த நூல்முறை
செங்கனல் வளர்ப்பஅங் கருளிச் சேவுடை
அங்கணன் மலைமகள் மிடற்றில் ஆரருள்
மங்கல நாணினை வயங்கச் சாத்தினன். கூங

முண்டகக் கடவுளும் முதல்வன் ஆணைஉட்
கொண்டுவே தாகமக் குறிவ ழாவகை
மண்டிய கொழுங்கனல் வளர்த்து வாசநெய்
மொண்டுதூய்க் கடிவினை முற்றச் செய்தனன். கூச

மாண்டசெந் தமிழ்முனி மனக்க ருத்தொடு
காண்டகு கவுரிதன் கருத்து முற்றின
வேண்டிய வேண்டியாங் களிக்கும் மெய்யருள்
ஆண்டகை விளக்கினன் போலும் அற்றைநாள். கூரு

கலிநிலைத் துறை

திரும ணத்திறங் கண்டவர் யாவருஞ் செழுந்தேன்
பருகு வண்டென ஆனந்த வெள்ளத்திற் படிந்தார்

---

கூ0. கன்னி கை - இறைவியின் திருக்கை.
கூஉ. * 'கற்பகப்பூ' எனவும் பாடம்.
கூங. சே - இடபம். வயங்க - விளங்க.

உருகி ஏத்தினர் கையிணை உச்சியிற் குவித்தார்
இருக ணீர்மழைத் தாரையின் மூழ்கினின் புற்றார். ௬௬

மலைக்கொ டிக்குறு கவுரமெய் வடிவும்வள் ளலுக்கு
முலைச்சு வட்டொடு வளைத்தழும் பணியும்முன் னோக்கிச்
சிலைத்த டம்பணி வரைமிசைத் திகழ்மணக் கோல
நிலைக்கு மற்றிது ஏற்றம்இங் கெனநெடி துவந்தார். ௬௭

அலகில் ஓகையில் திளைப்பஇப் பேறெமக் களித்த
மலைய மாமுனி வாழிய வாழிஎன் றுரைத்தார்
குலவு மங்கலம் பாடினர் ஆடினர் குழைந்தார்
தலைவி பாகனும் அவரவர் தமக்கருள் வழங்கி. ௬௮

இறைவன் திருவுலாப்போதல்

எட்டு மாதிரக் கரிகளும் உடல்பனிப் பெய்த
நெட்டு யிர்ப்பெறி மதுகைவெள் விடைமிசை நீல
மட்டு லாங்குழல் மடவர லொடுமகிழ்ந் தேறிச்
சிட்டர் போற்றிட மறுகிடைத் திருவுலாப் போந்தான். ௬௯

பிளிறு வெம்மத யானையின் வெரிந்தலை பிணித்த
குளிறு வார்மணி முரசொடு கொக்கரை முழவம்
ஒளிறு மாமுடி வானவர் இயங்களும் ஒருங்கே
களிறு தாங்கும்எண் டிசைகளுஞ் செவிடுறக் கறங்க. ௭௦

வாணி கோன்பணி பானுகம் பப்பெயர் வயவன்
வாணி லாவளை ஆயிரம் வாயில்வைத் தூத
வாணன் ஆயிரங் கரங்கொடு மணிமுழா முழக்க
மாண மத்தள மாதவன் மத்தளம் எழுப்ப. ௭௧

காம நோக்கியை மணம்புணர் காதலன் வந்தான்
பூமு லைச்சுவ டணிந்தருள் புண்ணியன் வந்தான்

௬௯. மாதிரம் - திசை. பனிப்பு - நடுக்கம். மட்டு - தேன். சிட்டர் - பெரியோர்.

௭௦. குளிறு - ஒலிக்கின்ற. ஒளிறு - ஒளி விடுகின்ற.

௭௧. வாணிகோன் - பிரமன். வாள்நிலாவளை - ஒளிவீசும் சங்கு.

௭௨. காமநோக்கி - காமாட்சி.

யாமெ லாம்உய்ய வந்தவன் வந்தனன் என்றுத்
தாம நித்திலச் சின்னமுங் காளமுந் தழங்க. எஉ

கீத வேய்ங்குழல் யாழிசை எங்கணுங் கிளர
வேத ஓசையும் ஆகம முழக்கமும் விம்ம
மாதர் நாடக நூல்முறை மடந்தையர் நடிப்பப்
போத விண்ணவர் பூமழை வியனிலம் போர்ப்ப. எங

வீதி வாய்த்திரு விழாவணி தொழுதிடப் போந்த
பேதில் பேரிளம் பெண்முடி வாயபல் பருவ
மாதர் யாவரும் நாணொடு வளைகலை தோற்றுக்
காதல் வேள்சிலைப் பூங்கணை மாரியிற் குளிப்ப. எச

புதிய சாமரை வெண்குடை பூங்கொடி மிடைய
எதிரில் கொள்கையின் நகர்வலங் கொண்டெழுந் தருளி
மதுர மென்மொழி மங்கல வாழ்த்தொலி மலியக்
கதியி லார்க்கெலாம் இன்னருட் காட்சிதந் தளித்து. எரு

இறைவன் தேவர்கட்கு வரமருளல்

மீண்டு கோயிலி னுள்ளெழுந் தருளிமெல் லணைமேல்
மாண்ட மெல்லியற் பனிவரை அணங்கொடும் வைகி
ஆண்டு நின்றமா லயன்முதல் யாரையும் நோக்கி
ஈண்டு நீர்வரம் வேண்டுவ கொண்மின்என் றிசைத்தான். எசு

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருமுது குரவர் பாதம் இமைபவர் வணங்கி இந்தத்
திருமணங் காண்டல் பெற்றேம் உய்ந்தனந் திரைநீர் வைப்பின்
மருவினர் வதுவை செய்யும் இடந்தொறும் மன்னி ஆங்காங்
கிருநலம் உதவல் வேண்டும் இவ்விரு வீரும் என்றார். எஎ

இவ்வரம் அளித்தேங் காஞ்சி இருநகர் காவல் பூண்டு
செவ்வன்இங் குறைமின் என்று சிவபிரான் பணித்த லோடும்
அவ்வருள் சென்னி மேற்கொண் டகமகிழ்ந் திமையோ ரெல்லாங்
கௌவைநீர் காஞ்சி மூதூர் காவல்கொண் டிருந்தார் அங்கண். எஅ

---

எச. பேதில் - மாறுபாடில்லாத. பேரிளம்பெண் என்னும்பருவம் நாற்பத்திரண்டு வயதளவிற்று.

அரந்தைதீர் கவுரி கூற்றில் தோன்றிய அணங்கும் என்னை
வரைந்துகொண் டருண்மோ என்று வணங்கிநின் றிரப்ப அந்நாள்
கரந்தைவார் சடையோன் மன்றல் முடித்துநீ கச்சி மூதூர்
புரந்திவண் உறைதி தூர்க்காய் என்றருள் புரியப் பெற்று. எகூ

கவுசிகீச்சரம்

கன்னிகாப் பெனும்பே ரெய்தக் கவுசிகி மடந்தை காஞ்சிப்
பொன்னகர் காவல் பூண்டு பொலிகொளிக் கவுசி கேசன்
தன்னைஅங் கிருவிப் பூசை தழைத்தபே ரன்பி னூற்றி
இன்னல்தீர்ந் துலகம் உய்ய இருந்தனள் இருக்கும் நாளில். அ0

சும்பனே நிசும்பன் என்பேர் உலகெலாந் துளக்க நோக்கி
அம்புயக் கடவுள் போந்தங் கண்ணனுக் கிரம்பி வேண்ட
எம்பிரான் அருளாற் கன்னி விந்தவெற் பெய்தி வைகி
வெம்புவா ளவுணர் தம்மைச் செகுத்துமீண் டினிது வாழ்ந்தாள் அக

பகர்பெரு வளஞ்சால் இந்த மன்றலைப் பண்பு கூர
அகனமர்ந் தேத்தி னோர்கள் கண்டவர் அதையக் கேட்டோர்
தகவுற நினைந்தோர் எல்லாந் தையலார் மன்றல் வாய்ந்து
புகலரும் பரமா னந்த மன்றலும் பொருந்தி வாழ்வார். அ2

ஆகத் திருவிருத்தம்-உருகக.

---

## படல உண்மை

இப்படலத்திற் கூறப்பட்ட வரலாறு, (க) 'உயிர்கள் போகநிலையை அடைதற்பொருட்டு இறைவனும் இறைவியும் திருமணம் நிகழ்த்திக்கொள்வர்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

விண்ணுலகத்திற்குமேல் வளர்ந்துள்ள மாவின் அடியில் எழுந்தருளியுள்ள இறைவன் திருமேனி அம்மையார் தழுவக் குழைந்த வரலாற்றைச் சொன்னோம். இனி, கண்டவர்கள் பேரின்பத்தை அடைய அருள்செய்யும் கவுரியின் திருமணத்தைக் கூறுவோம்.

---

அ0. கன்னிகாப்பென்னும் பெயர்க்காரணங் கூறியவாறு. இவ்வரலாறு மேலே குமரகோட்டப் படலத்திற் கூறப்பட்டது.

திருவேகம்பப் பெருமான் திருமாலை நோக்கித் 'திருமணத்திற்குரிய செயலைச் செய்க' என்று கட்டளையிட, அவர் மகிழ்ந்து, திருமணத்திற்கு வேண்டிய பொருள்களைக் கொண்டுவருமாறு தேவர்களை விடுத்து, நகரமெங்கும் முரசறைவித்து, தேவ கம்மியர்களை அழைத்து கலியாண மண்டபம் அமைக்கும்படி பணித்தார். அக்கம்மியர்கள், நிலத்தைப் பொன்னால் அமைத்து, பவளத்தினால் ஆயிரந்தூண்கள் நிறுத்தி, மரகதத்தால் போதிகை அமைத்து, வயிரத்தால் உத்திரம் இட்டு, நவரத்தினங்கள் அழுத்திச் சித்திரங்கள் எழுதிய பலகைகளை மேலே பரப்பி, பளிங்கினாற் சுவரெடுத்து, மற்றும் பலபலவகையாக அழகுபடச்செய்து, வாழை, கமுகு, கரும்பு, கற்பகத்தரு இவைகளை நாட்டி, குண்ட வேதிகாதிகளையும் செய்து கலியாண மண்டபத்தை அமைத்து, அதன் நடுவில் இறைவனும் இறைவியும் வீற்றிருத்தற்கு இரத்தினாசனம் இட்டுவைத்தார்கள்.

நகர மாந்தர்கள் முரசொலி கேட்டுப் பெருமகிழ்வுற்று, வீதிகளைப் புனிதமாக்கி, பனிநீர் தெளித்து, பூப்பந்தல்களும் நவமணிப் பந்தல்களும் ஆங்காங்கு இட்டு, மகர தோரணங்கள் கட்டி, பூரண கும்பங்களும் முளைப் பாலிகைகளும் தீபங்களும் இடந்தோறும் வைத்து, மற்றும் பலவகையாக நகரத்தை அலங்காரம் செய்தனர். தேவர்கள் தாங்கள் எல்லாப் பொருள்களையும் சேர்த்துத் திருமணத் தொழிலில் முற்பட்டார்கள். அப்பொழுது திருமால் இறைவன் திருவருள்பெற்று, நன்னாளில் பாலிகைகளில் முளைகளை வித்தி, இடபக்கொடி யேற்றித் திருவிழாவைத் தொடங்குவித்தார். ஒன்பது நாட்கள் திருவிழா நடந்தபின்பு பத்தாம்நாள் பங்குனி உத்திர நாளில் இறைவனார் திருமணங்கொள்ளுதற்பொருட்டுத் திருமஞ்சனச்சாலையை அடைந்தனர்.

திருமால் தமது தவப்பயனால் இறைவனார் திருமேனியைத் தீண்டிப் பொற்குடத்திலுள்ள நீர் முதலியவற்றால் திருமஞ்சனம் செய்வித்துத் திருஒற்றாடை சாத்திப் பொன்னாடை புனைவித்துச் சந்தனம் பூசி, சிலம்பு, அரைநாண், மோதிரம், பொன்னரிமாலை, வாகுவலயம், குழை முதலிய ஆபரணங்களைத் திருவடி முதலிய உறுப்புக்களில் அணிவித்து, சிரசில் நவரத்தினமயமாகிய மகுடத்தைக் கவித்து அழகுசெய்தனர். இங்ஙனம் மணக்கோலங் கொண்ட இறைவனார் எழுந்து பெண்கள் அட்டமங்கலங்கள் ஏந்திப் போற்றச் சென்று ஆசனத்தை அடைந்து, உருத்திரர் முதலியோரை அவரவர்கள் ஆசனத்திலிருக்குமாறு கடைக்கண்ணால் நோக்கி வீற்றிருந்தருளினார்.

பின்னர்த் திருமால் இலக்குமியை நோக்கி, 'அம்பிகையை அணிபெறுவித்து அழைத்து வருக' என்று கூற, இலக்குமி களிப்புமிகுந்து சென்று அம்மையாரை மஞ்சனச்சாலையில் புகுவித்து, அவரது கூந்தலை அவிழ்த்து

நெய்யை அள்ளிச்சாத்தி, நெல்லி விழுது, மஞ்சள் விழுது முதலிய நலங்குகளை இட்டுப் பனிநீராட்டி, திருமேனி ஈரத்தை ஒற்றாடையால் ஒற்றி, பட்டாடை புனைந்து, ஓர் ஆசனத்தில் இருத்தி, யானைத்தந்தத்தாலாகிய சீப்புக்கொண்டு கூந்தலைச்சீவி, அகில் சந்தனம் முதலிய நறுமணங்கமழும் புகை ஊட்டி, சீதேவி முதலிய தலைக்கணியும் ஆபரணங்களை அணிந்து, பூமாலை சூட்டி, நெற்றியில் பொற்பட்டம் அணிந்து, சிந்தூர திலகம் இட்டு, கண்களுக்கு மையெழுதி, தனத்தில் சந்தனத்தைப்பூசி, அதன்மேல் மகரந்தப்பொடியை அப்பி, விசிறிகொண்டு விசிறி, செவி, நாசி, கழுத்து, கை, தோள், விரல், இடை, பாதம் ஆகிய உறுப்புக்களில் சிறந்துவிளங்கும் தோடு மூக்கணி, கண்டசரம், கடகம், அங்கதம், மோதிரம், மேகலை, சிலம்பு முதலிய ஆபரணங்களை அணிந்து, காலில் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டி அழகுசெய்து வணங்கி நின்றனள். ஆபரணங்கள் அம்மையாரது திருமேனியில் பொருந்தினமையால் மிக அழகடைந்தமை கண்டு, இலக்குமி இவைகள் யான் அணிந்த அணிகளோ என ஐயுறுவாளாயினள்.

பின்பு, தேவமாதர்கள் மங்கலம் பாட, அம்மையார் இலக்குமியின் கரத்தைப் பற்றிக்கொண்டு, தேவர்கள் பூமழை பொழிய பூமியில் விரிக்கப்பட்ட ஆடையின்மேல் மெல்ல நடந்துசென்று, இறைவன் பக்கலில் அமர்ந்து வீற்றிருந்தனர். இறைவனும் இறைவியும் வீற்றிருத்தல்கண்டு யாவரும் மகிழ்ச்சியடைந்தனர். அப்போது திருமால் வாத்தியங்கள் ஒலிப்பச்சென்று, திருமகள் பாலை வார்க்க இறைவன் திருவடிகளை விளக்கி, அத்தீர்த்தத்தை அன்புடன் பருகினர். பின்பு, சருக்கரை, நெய், பால்கலந்த மதுபருக்கத்தை அளித்து, பெருமானது திருக்கையில் உலகமீன்ற பெருமாட்டியாகிய அம்மையாரது திருக்கைகளை வைத்துத் தாரை வார்த்துக்கொடுத்தனர். அப்பொழுது சங்குகள், தேவதுந்துபிகள் முதலிய வாத்தியங்கள் முழங்கின. வாழ்த்தொலி மிகுந்தன. கற்பகப் பூமழை சொரிந்தன. அக்காலையில் சிவபெருமான் பிரமதேவனை எரியோம்புமாறு பணித்து அம்மையாரது கழுத்தில் மங்கலநாண் சாத்தியருளினர். பிரமனும் வினைய சடங்குகளையெல்லாம் குறைவறச்செய்து முடித்தனன்.

திருமணத்தைக் கண்டவர்களெல்லாம் ஆனந்தவெள்ளத்தில் மூழ்கினர்கள். இமாசலத்தில் நடந்த திருமணத்தைக்காட்டிலும் இத்திருமணத்தில் அம்மையாருக்குக் கவுர நிறமும், அப்பனார்க்கு முலைத்தழும்பும் வளைத்தழும்பும் அதிகமாகும் என்று மிகவும் மகிழ்ச்சியுற்றார்கள். பிறகு இறைவனார் அம்மையாரோடும் விடைமீதேறி வீதியில் திருவுலாப்போந்தருளினர். பானுகம்பன் முதலியோர் வாச்சியங்களை முழக்க, திருச்சின்னங்கள் ஊத, தேவர் பூமழை பொழிய, பேதை முதலிய பருவங்களையுடைய பெண்களெல்லாம்

மையலுற இறைவனார் காட்சியளித்து, திருக்கோயிலினுள் சென்று, அம்மை யாரோடு பூவணைமேல் வீற்றிருந்து, மாலயன் முதலிய யாவரையும் நோக்கி, உங்கட்கு வேண்டும் வரம் யாது? என, யாவரும் வணங்கி, 'இருமுதுகுரவ ராகிய நீவிர் உலகத்தில் திருமணம் செய்யும் இடந்தோறும் இருந்து அருள் செய்ய வேண்டும்' என்று வேண்டினர். இறைவனார், 'இவ்வரத்தை அளித் தோம்; இனி, நீங்கள் இந்நகரத்தைக் காத்து இங்ஙனமே இருப்பீர்களாக' என, எல்லாத்தேவர்களும் அவ்வாறே காஞ்சியில் தங்கினர்.

அம்மையாரது கூற்றில் தோன்றிய கவுசிகி என்னும் துர்க்கையும் என்னை மணந்துகொள்ள வேண்டுமென்று வேண்ட, இறைவன் அவளையும் மணந்து, 'நீ கச்சியைக் காவல்புரிக' என்றருளினர். கவுசிகி அவ்வாறே காப்பாளாயினள். அதனால் காஞ்சி கன்னிகாப்பு எனப்படும். அன்றியும் கவுசிகி முன் சொல்லியவாறு கவுசிகீசரை வழிபட்டுத் திருவருள்பெற்றிருக் கும் நாளில், சும்பன், நிசும்பன் என்னும் இரண்டு அசுரர்கள் உலகத்தை வருத்துதல்கண்டு, பிரமன் வந்துவேண்ட, இறைவனார் கவுசிகியை விடுத் தனர். கவுசிகி விந்தமலையிற் சென்று தங்கி இருந்து அவ்வசுரர்களை அழித்து மீண்டுவந்து காஞ்சியில் வாழ்ந்தனள். இத்திருமணத்தைக் கண்டவர் களும், சொல்லக்கேட்டவர்களும், நினைத்தவர்களும் பெண்களை மணந்து, பேரின்பமும் அடைவார்கள்.

# விம்மிதப் படலம்

கலிநிலைத் துறை

சாம கண்டர்தம் ஆணையால் அகிலமுந் தழைப்பக்
காம நோக்கிஎண் ணான்கறங் கரிசற வளர்க்கும்
நாம நீர்வயற் கச்சிமா நகர்வயின் அளவில்
சேம விம்மிதம் உள்ளன சிலஎடுத் திசைப்பாம். ௧

தெள்ளொ ளிக்கதிர்ப் பன்மணித் திரளெலாஞ் செறியப்
பள்ள நீர்க்கடல் ஆகர மாகிய பரிசின்

---

௧. சாமகண்டர் - நீலகண்டர். காமநோக்கி - காமாட்சி. கரிசு - குற்றம். சேமம் - வைப்பு; இது காணுதற்கருமை குறித்துநின்றது. விம்மிதம் - அற்புதம்.

௨. ஆகரம் - இருப்பிடம். இப்படலத்தின் அகலம் உரைநடையிற் காண்க.

வெள்ள வேணியர் அருளினல் அற்புத விளேவென்
றுள்ள வைக்கெலாம் உறைவிட மாயது காஞ்சி. உ

அற்புத இலிங்கங்கள்

நீண்டில் யாவையுஞ் செய்யபொன் ஞக்குவ திறலின்
மாண்ட சித்தர்கள் எண்ணிலர் வழிபடப் படுவ
வேண்டில் என்னவும் அளிப்பன மெய்த்தவ முடையோர்
காண்ட கும்பல இலிங்கம்அக் கடிநகர் உளவால். ௩

ஒருத னிப்பொருள் இருதிற ஞகிஉவ் விரண்டும்
ஒருமை யுற்றிடும் வியப்பும்அங் குள்ளது விரிக்கில்
ஒருப ரம்பொருள் சிவனெடு சத்திஎன் றிரண்டாம்
ஒருமை யுற்றிடும் உமையவள் கம்பரைத் தழுவி. ௪

இருமை ஓர்பொருள் எண்ணில வாதலும் எண்ணில்
பொருள்கள் ஒன்றெனத் திகழ்தலும் உடைத்தது புகலின்
ஒருசி வச்சுடர் பற்பல வடிவுகொண் டுறையும்
மருவு பன்மறை ஒருதனி மாவென வயங்கும். ௫

பதிஞேரற்புதம்

மற்று மூன்றிடம் வேதிகை வயல்கள்நாற் றவிசு
பொற்ற ஐந்தருத் தடம்அறு புட்கள்எழ் பொதியில்
பற்றும் எண்பொய்கை ஒன்பது சிலேபொழில் பத்தாங்
கொற்ற மன்றுபத் தோடொரு கூவலுங் குலவும். ௬

மூன்று இடங்கள்

ஒன்று பல்பவத் தாதையர்க் காட்டிடும் ஒளிசேர்
ஒன்று பல்பவத் தாயரை வேண்டுறிற் காட்டும்
ஒன்று பல்பவக் கிளேஞரோ டுரைபயில் விக்கும்
என்று மூவகைத் தானம்அவ் விருநகர் உடைத்தால். ௭

---

௪. உமையவள் ஒருமையுற்றிடும் என முடிக்க.

௫. இருமை - (சத்திசிவ மென்னும்) இரண்டு தன்மை.

௬. வேதிகை - திண்ணே. தவிசு - ஆசனம். பொதியில் - பொது இடம். பொழில் - சோலே. மன்று - சபை. கூவல் - கிணறு.

௭. பவம் - பிறப்பு. இருநகர் - பெரியநகர்.

மூன்று தெற்றிகள்

ஊங்க ணைந்தவர்க் கமுதுநீர் உதவிடும் ஒன்று
பாங்கின் வேட்டன யாவையும் பயந்திடும் ஒன்று
மூங்கை பேசவும் பேசினேன் மூங்கைமை யுறவும்
ஆங்க ளிப்பதொன் றுகமுத் தெற்றியும் உளவால். அ

மூன்று வயல்கள்

மீள மீளநெல் அரிதொறும் விளைவதோர் பழனம்
நாளின் வித்தும்அன் றேபயன் நல்கும்ஓர் கழனி
தாளின் ஏருழ வின்றியே தரும்பயிர் விளைக்கும்
கோள தொன்றென வயல்கள்மூன் றுள்ளன குறிக்கில். கூ

நான்கு தவிசுகள்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

தன்பகுப்பின் மூவரொடு முனிவர் விண்ணோர் பழிச்சிடவாழ் சதுமுகனைக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூவர்திரு முதலோர் சூழுந் திருமாலைச் சார்ந்தோர்க்குக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூவரொடு கணங்கள் போற்றுந் தழற்கால ருத்திரனைக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூர்த்திகளோ டென்றாழ் காட்டுந் தவி சொன்று மடங்கலணை நான்கு மன்னும். க0

ஐந்து தருக்கள்

ஓவாமை அமிழ்தொழுக்கும் பொலம்பூச் சூதம் தன்னிழலைப் பிறர்க்குதவாக் காஞ்சி ஒன்று, பூவாது காயாது கனிகள் நல்கும் பூம் புளிபல் வகைப்போதுந் தரும தூகம், தாவாத செம்பொன்மலர் அத்தி யென்று சாற்றரிய தெய்வதமாத் தருக்கள் ஐந்துந், தேவாதி

அ. அமுதுநீர் - அமுது (சோறு)ம் நீரும். மூங்கை - ஊமை. தெற்றி - திண்ணை.

கூ. வித்தும் அன்றே - விதைத்த அந்நாளிலேயே. தாள் - முயற்சி. கோள் - கொள்கை, செயல். பழனம் - வயல்.

க0. பிரமன்வியூகர்கள்: விராட்டு, காலன், புருடன். திருமால்வியூகர்கள்: சங்கரிடணன், பிரத்யும்னன், அநிருத்தன். உருத்திரன் வியூகர்கள்: அரன், மிருடன், பவன். சூரியன் வியூகர்கள்: தண்டியாதிகள், தீப்திமுதலிய நவசத்திகள், அங்கமூர்த்திகளான நவக்கிரகாதிகள். இவ்வியூகர்கள் தம்முதல்வர்கள் ஆணைபெற்று முத்தொழில் செய்வர்.

கக. மதூகம் - இலுப்பை. என்று, எண்ணிடைச்சொல்.

தேவர்இனி தமருங் காஞ்சித் திருநகரின் இறும்பூது திகழ ஓங்கும். ௧௧

ஐந்து தடாகங்கள்

எல்லியிடைப் பங்கயமும் பகற்கா லத்தின் இருங்குமுதச் செழும்போதும் மலர்ந்து தீந்தேன், பில்குவதொன் றொருகாம்பின் முளரி மூன்று பிறங்குபுனல் தடம்ஒன்று குளித்தோர் எய்த, வல்லைவா னரத்துருவம் அளிப்பதொன்று மூழ்கினோர் மாற்றார்க்குக் கொடிய தீமை, நல்குவதொன் றுடினோர் உற்றார்க் கின்ப நலந் தருவ தொன்றெனலாந் தடாகம் ஐந்தே. ௧௨

ஆறு பறவைகள்

பெய்யாத காலத்தின் அகவிக் கொண்மூ வருவிக்கும் பெரு மஞ்ஞை மறைநூ லெல்லாம், எய்யாமை யின்றியுணர் கிள்ளை வனைக் கணிதநூல் எனைத்தும்எடுத் துரைக்கும் ஆந்தை, நையாது முழு துணர்ந்த கபோதம் பாடு நல்லிசைநூ லவைவல்ல நலஞ்சேர் பூவை, பொய்யாது வேட்டவெலாம் வழங்கு நேமிப் புள்ளுமென அறு பறவை பொருந்தும் ஆங்கண். ௧௩

ஏழு போதியில்கள்

வானுடர் வார்த்தைசெவிப் புலனும் ஒன்றின் மதகரியை முயல் ஊக்கித் தூக்கும் ஒன்றின், மேனாகர் உலகுவிழிப் புலனும் ஒன்றின் மேவினர்க்குத் திசைமயக்கம் எய்தும் ஒன்றில், கானார்நெய் யின்றி விளக் கெரியும் ஒன்றில், பாதலத்தோர் கழறுமொழி கேட்கும் ஒன்றில், ஆனாது துந்துமிகள் முழங்கும் ஒன்றில் ஆகஏழ் பொதுத் தானம் வயங்கு மாலோ. ௧௪

எட்டுப் பொய்கைகள்

மூழ்குநர்க்குப் பொன்னுருவம் அளிக்கும் ஒன்று முழுமணிவர் தரும்ஒன்று விண்ணோர் கோமான், வாழ்வளிக்கும் ஒன்றுமனக்

---

௧௩. அகவி - அழைத்து. கணிதநூல் என்றது சோதிடத்தை. கணித நூல் என்புழி முதலிய என்பது வருவிக்க. கபோதம் - புறா. எய்யாமை - அறியாமை. பூவை - நாகணவாய்ப்பறவை. நேமிப்புள் - சக்கரவாகப்புள்.

௧௪. கான்ஆர் - வாசனை பொருந்திய. ஊக்கித் தூக்கும் - செலுத்தி இட்டும்.

கினிய வெல்லாந் தரும்ஒன்று வேண்டியதை வழங்கும் ஒன்று, வீழ் தகைத்தா மெய்ஞ்ஞானம் அளிக்கும் ஒன்று விடுதவும் ஒன்றுவி னைப் பிணிநோய் முற்றும், பாழ்படுத்தும் ஒன்றென்ன மலங்கள் மாற்றும் பனிமலர்ப்பூம் பொய்கைஇரு நான்கு மேவும். ௧௫

ஒன்பது சிலைகள்

திண்டினரைத் தேவாக்கும் ஒருகல் பாம்பின் கடிவிடந்தீர்த் திடும்ஒருகல் சித்தி யெல்லாம், ஆண்டளிக்கும் ஒருகல்உயிர் உதவும் ஓர்கல் வழக்கனைத்தும் நடுவாய்நின் றறுக்கும் ஓர்கல், மூண்ட பிணித் தழும்புறுபுண் மாற்றும் ஓர்கல் மொய்யொளிமெய்த் துணி உறுப்பைப் பொருத்தும் ஓர்கல், ஈண்டியதீ வினைஇரிக்கும் ஓர்கல் ஞானந் தரும்ஒருகல் எனச்சிலைகள் ஒன்ப தோங்கும். ௧௬

ஒன்பது பொழில்கள்

ஒன்றினோர் பெறக்கனக மாரி ஒன்றில் இரசதமா மழைஒன்றில் முத்து மாரி, ஒன்றில்ஒளிர் குருவிந்த மாரி ஒன்றில் வயிரமழை ஒன்றில்வயி டூய மாரி, ஒன்றில்ஒளி விடும்புருட ராக மாரி ஒன் றில்அடற் புள்ளேற்றுப் பச்சை மாரி, ஒன்றினில்இந் திரநீல மாரி ஒன்றில் பொழியுமலர்ப் பொழில்இவைஒ ரொன்ப தோங்கும். ௧எ

பத்து மன்றங்கள்

சொல்லருமா பாவியுறின் மூங்கை யாக்குஞ் சோரர்களை மரு ளுறுத்துங் கல்வி தேற்றும், பல்வகைய வடிவுதவுஞ் சாவா மேன்மை பாலிக்கும் பாதலஞ்சேர் பிலத்தைக் காட்டும், வல்ல வர்க்குந் திசைமயக்கும் பொன்மா ணிக்க மழைபெய்யும் பகல் இரவு மாறுக் காட்டுஞ், செல்லுநரைப் பிறர்காணு வியப்புச் செய்யும் இவைமன்றம் ஒருபதெனத் திகழு மாலோ. ௧அ

---

௧௫. முழுமணி - மாணிக்கம். ஏர் - அழகு.

௧௬. மூண்ட பிணித்தழும்புறு புண் - பெருவியாதியின் தழும்பாகிய புண்.

௧எ. கனகம் - பொன். இரசதம் - வெள்ளி. குருவிந்தம் - பதும ராகம். புள்ளேற்றுப் பச்சை - கருடப் பச்சை.

பதினொரு கூவல்கள்

தயிர்க்கூவல் பாற்கூவல் நறுநெய்க் கூவல் மதுக்கூவல் செழுங் கருப்புச் சாற்றுக் கூவல், மயக்கமற முத்திநெறி துறக்க மார்க்கம் மற்றுலகின் கதிகாட்டும் மும்மைக் கூவல், வியப்பெய்த நிழல் பிணிக்குங் கூவல் பாரின் வித்தின்றி நாறுசெயும் விரிநீர்க் கூவல், அயர்ப்பின்றி அங்கணேந்தோர் மீளச் செய்யும் அருங்கூவ லொடுங் கூவல் பதினொன் றுமால். கக

சேக்கு - சிலை - சிலம்போலி

தன்னிடைஎள் ளிணைப்பெய்யின் மற்றோர் ஞாங்கர்த் தயிலம் எழச் செய்வதொரு செக்கும் உண்டு, மன்னுயிர்செய் வினைப்பய னைத் தாமே நல்குஞ் சிலையொன்று சிலைப்பாவை ஒன்று மன்னுங், கன்னிமதிற் காஞ்சிநகர் காவல் பேணுங் கருமேனி வயிரவமாக் கட வுள் பாத, நன்னடனச் சிலம்போசை இடைய றாது நானிலத்தோர் வியப்பெய்தக் கேட்கும் ஓர்பால். உ0

இன்னனவாம் அதிசயங்கள் மற்றுமுள்ள எல்லையில அவை முழுதும் அறிவார் யாரே, முன்னுகத்தின் எல்லார்க்குங் காட்சி எய்தும் மூண்டகொடுங் கலியுகத்திற் படிமை வாழ்க்கை, மன்னி னோர் சிலர்க்கன்றித் தோன்றா முத்தி மருவினர்க்கு மேலுலகின் வைத்த வண்ணம், அன்னமலி வயற்காஞ்சி வரைப்பின் வாழ்வார் அகங்களிப்பக் கண்ணுதலார் அமைத்த வாகும். உக

இங்குரைத்த மேன்மையெலாங் கண்டுங் கேட்டும் இந்நகரிற் கொடுந்தீமை இழைப்பா ராயின், அங்கவரே கயவரெனப் படுவர் அந்தோ அறிவின்றி அறியாதுஞ் செய்த பாவப், பங்கமெலாம் ஒழி வெய்தும் அறிந்து செய்யிற் பாற்றரிதாம் ஆதலின்நாற் பயனும் வேண்டி, உங்குறைவோர் தத்தமக்கு விதித்த வாற்றான் ஒழுகியே கம்பருட் குரிய ராவர். உஉ

ஆகத் திருவிருத்தம் - உருரு௭

---

கக. கூவல் - கிணறு. துறக்கம் - சுவர்க்கம். அயிர்ப்பு - மயக்கம்.

உக. படிமை வாழ்க்கை - தவநிலை. இவ்விம்மிதங்கள் ஒருவாறு பெரியபுராணத்துட் கூறப்படுகின்றன.

உஉ. இதனால், வருகின்ற படலத்திற்குத் தோற்றுவாய் செய்யப் பட்டது.

## படல உண்மை

இப்படலம், (க) 'இறைவன் திருவருள் மிக்கவழி உலகத்தின் இயற்கை ஆற்றல் மாறி அற்புதம் தோன்றும்' என்னும் உண்மையை விளக்கும். பிறவும் உளவேற்கொள்க.

---

## உரை நடை

நீலகண்டத்தையுடைய சிவபெருமான் கட்டளைப்படி காமாட்சி அம்மையார் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கும் காஞ்சிமாநகரத்தில் வைப்புப் பொருள்போல எண்ணிறந்த அற்புதங்கள் உள்ளன. அவற்றை எடுத்துச்சொல்வோம்.

கடலானது பலமணிகளுக்கும் உறைவிடமாய் இருப்பதுபோல, காஞ்சியம்பதி அற்புதங்களுக்கெல்லாம் உறைவிடமாயுள்ளது. மேலே பட்டால் எல்லாவற்றையும் பொன்னாக்குவனவும், அனேக சித்தர்களால் வழிபடப்படுவனவும், எவற்றை விரும்பினாலும் தருவனவும், தவத்தவர்களே காணத்தகுவனவுமாய்ப் பல இலிங்கங்கள் அவ்விடத்திலுள்ளன. ஒப்பற்ற ஒரு பொருள் இரண்டு கூறாகி அவ்விரண்டும் மீள ஒன்றாகும் அற்புதமும் அவ்விடத்திலுள்ளது. அதனை விளக்குமிடத்து ஒருபொருளெனப்படுவது பரம்பொருளும், இரண்டுகூறு எனப்படுவன சிவம் சத்தியும், மீள ஒன்றுதலென்பது அம்மையார் இறைவனைத் தழுவிக்கொண்டதுமாம். இரண்டு தன்மையுடைய ஒருபொருள் எண்ணில்லாதனவாதலும், எண்ணில்லாத பொருள் ஒன்றாதலும் ஆகிய அற்புதமும் உடையதாகும். அதனைச் சொல்லுமிடத்து ஒரு பொருளாகிய சிவபரஞ்சுடர் பல உருவுகொண்டு வீற்றிருத்தலும், பலவாகிய வேதம் ஒரு மாமரமாதலுமாம்.

அன்றியும்; மூன்று இடங்கள், மூன்று திண்ணைகள், மூன்று வயல்கள், நான்கு சிங்காதனங்கள், ஐந்து மரங்கள், ஆறு பறவைகள், ஏழு பொதுவிடங்கள், எட்டுப் பொய்கைகள், ஒன்பது கற்கள், ஒன்பது சோலைகள், பத்துச் சபைகள், பதினொரு கிணறுகள் உள்ளன. அவற்றுள் மூன்று இடங்களில், ஒன்று பல பிறப்புக்களில் நேர்ந்த தந்தைமாரையும், ஒன்று பல பிறப்புக்களில் நேர்ந்த தாய்மாரையும், ஒன்று பல பிறப்புக்களில் நேர்ந்த உறவினரையும் காட்டும். மூன்று திண்ணைகளில், ஒன்று தன்னை அடைந்தவர்களுக்குச் சோறும் நீரும் கொடுக்கும். ஒன்று விரும்பியவற்றையெல்லாம் கொடுக்கும். ஒன்று ஊமையைப் பேசவும் பேசுவோனை ஊமையாகவும் செய்யும். மூன்று வயல்களில், ஒன்று அரியுந்தோறும் அரியுந்தோறும் நெல் விளையும். ஒன்று விதைத்த அன்றே விளையும். ஒன்று உழவின்றி விளையும். நான்கு சிங்காதனங்

களில், ஒன்று பிரமதேவனையும், ஒன்று திருமாலையும், ஒன்று உருத்திரனை யும், ஒன்று சூரியனையும் தங்கள் வியூகர்களுடன் காட்டும்.

ஐந்து மாங்களில் நீங்காது அமுதத்தைச் சொரியும் மாமரம் ஒன்று. தனது நிழலைப் பிறர்க்குக் கொடாத காஞ்சிமரம் ஒன்று. பூக்காமலும் காய்க்காமலும் பழங்கள்தரும் புளியமரம் ஒன்று. பலவகையான பூக்களை யுக்தரும் இலுப்பைமரம் ஒன்று. பொன்னுகப் பூக்கும் அத்திமரம் ஒன்ருகும். ஐந்து தடாகங்களில், ஒன்று இரவில் தாமரையும் பகலில் ஆம்பலும் பூக்கும். ஒன்று ஒரு தண்டில் மூன்று தாமரைமலர் மலரும். ஒன்று தன்னிடத்தில் மூழுகினவரைக் குரங்காகச் செய்யும். ஒன்று தன்னில் முழுகினவருடைய பகைவர்களுக்குத் தீங்கு விளைக்கும், ஒன்று தன்னில் முழுகினவர்களுடைய உறவினருக்கு நன்மையைத் தரும். ஆறு பறவைகளில், மழை பெய்யாத காலத்தில் அகவி மேகத்தை வருவிக்கும் மயில் ஒன்று. வேதங்களை எல்லாம் நன்கறிந்த கிளி ஒன்று. சோதிட சாத்திர முதலிய அங்கங்களை எல்லாம் கூறும் ஆந்தை ஒன்று. எல்லாவற்றையும் உணர்ந்த புறு ஒன்று. இசைநூல் வல்ல நாகணவாய்ப்புள் ஒன்று. விரும்பியவற்றையெல்லாந் தரும் சக்கர வாகப்புள் ஒன்ருகும். ஏழு பொதுவிடங்களில், ஒன்றில் தேவர் பேசுதல் கேட்கும். ஒன்றில் யானையை முயல் துரத்தும், ஒன்றில் நாகலோகம் தோன்றும். ஒன்றில் அடைந்தவர்க்குத் திசைமயக்கமுண்டாகும். ஒன்றில் நெய்யில்லாமல் விளக்கெரியும். ஒன்றில் பாதலத்தோர் பேசுதல் கேட்கும். ஒன்றில் நீங்காது தேவதுந்துபிகள் முழங்கும்.

எட்டுப் பொய்கைகளில், தம்மில் மூழ்குவோர்க்கு ஒன்று பொன் னுருவத்தையும், ஒன்று மாணிக்க நிறத்தையும், ஒன்று இந்திரன் வாழ்வை யும், ஒன்று மனத்துக்கு இன்பமானவற்றையும், ஒன்று வேண்டிய பொருளை யும், ஒன்று ஞானத்தையும், ஒன்று வீடுபேற்றையும் கொடுக்கும். ஒன்று நோய் களைப் போக்கும்.

ஒன்பது கூபங்களில், ஒன்று தீண்டினவர்களைத் தேவராக்கும். ஒன்று பாம்பின் விடத்தைப் போக்கும். ஒன்று சித்திகளை எல்லாம் கொடுக்கும். ஒன்று இறந்தவர்களுக்கு உயிர் கொடுக்கும். ஒன்று நடுநிலையாய் நின்று வழக்கைத் தீர்க்கும். ஒன்று குட்டநோயை நீக்கும். ஒன்று துண்டுபட்ட உறுப்பைப் பொருத்தும். ஒன்று பாவத்தைப்போக்கும். ஒன்று ஞானத்தைத் தரும். ஒன்பது சோலைகளில், அடைந்தவர்கள் பெற ஒன்றில் பொன் மழையும், ஒன்றில் வெள்ளி மழையும், ஒன்றில் முத்து மழையும், ஒன்றில் பதுமராக மழையும், ஒன்றில் வயிர மழையும், ஒன்றில் வைடூரிய மழையும், ஒன்றில் புட்பராக மழையும், ஒன்றில் கருடப்பச்சை மழையும், ஒன்றில் இந்திரநீல மழையும் பொழியும்.

பந்துர் சபைகளில், ஒன்று மகாபாதகன் வந்தால் ஊமையாக்கும். ஒன்று திருடர்களை மயக்கும். ஒன்று கல்விகளை எல்லாம் தெளியச்செய்யும், ஒன்று பலவகையான உருவத்தைக் கொடுக்கும். ஒன்று இறவாதபடி செய்யும். ஒன்று பாதல உலகத்திற்குச் செல்லும் பிலத்துவாரத்தைக் காட்டும். ஒன்று வல்லவர்களுக்கும் திசைமயக்கத்தைத் தரும். ஒன்று பொன்னும் மாணிக்கமுமாகிய மழையைப் பெய்யும். ஒன்று பகலை இரவாகவும் இரவைப் பகலாகவும் காட்டும். ஒன்று தன்னிடத்து வந்தவர்களைப் பிறர் காணாதபடி செய்யும்.

பதினெரு கிணறுகளில், ஒன்று தயிரும், ஒன்று பாலும், ஒன்று நெய்யும், ஒன்று தேனும், ஒன்று கருப்பஞ்சாறும் உடையனவாம். ஒன்று முத்தி நெறியையும், ஒன்று சுவர்க்கத்தையும், ஒன்று ஏனைய உலகங்களையும் காட்டும். ஒன்று நிழலைப்பிணிக்கும். ஒன்று வித்தில்லாமல் நிலத்தில் முளையை உண்டாக்கும், ஒன்று வந்தவர்களை மீண்டுபோகச் செய்யும். இவையன்றியும் தன்னிடத்தில் எள்ளை இட்டால் வேறோரிடத்தில் எண்ணெய் எழச்செய்யும் செக்கும், உயிர்கள் செய்யும் வினைப்பயனைத் தாமே கொடுக்கும் கல்லொன்றும் கல்லாலாகிய பாவை ஒன்றும் உள்ளன. காஞ்சியைக் காவல் செய்யும் வயிரவக்கடவுளின் நடனத்தினால் அவரது பாதச் சிலம்பொலி இடையறாது ஒருபால் கேட்கும்.

இவைபோன்ற அதிசயங்கள் அளவிறந்துள்ளன. அவற்றை எல்லாம் முழுதும் அறிகின்றவர் யாவர்! அவைகள் முன்னை யுகங்களில் எல்லார்க்கும் புலனாயிருந்தன. இக்கலியுகத்தில் தவத்தோர் சிலர்க்கே தோன்றும். இவ்வற்புதங்கள் முத்தியடைந்தோர் பொருட்டுச் சிவலோகத்தில் அமைத்திருப்பது போல ஈண்டும் சிவபெருமான் அமைத்தனவாகும். இத்தகைய பெருமைகளையெல்லாங் கேட்டும் இந்நகரிற் பாவம் செய்வோர் கயவராவர். அறியாது செய்த பாவம் நீங்குவதன்றி அறிந்துசெய்த பாவம் நீங்காது. ஆதலால் தத்தமக்குரிய ஒழுக்கத்தில் நின்றே இறைவன் திருவருளுக்குரியவ ராவார்கள்.

---

## ஒழுக்கப் படலம்*

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மாதரை யெல்லாம் வீழும் மடவனும் ஈன்ற தாயைக்
காதலன் ஆகான் அச்சீர்க் கடியனுஞ் சிவன்வாழ் வைப்பிற்

---

*ஒழுக்கம் உலகியலாகிய பொதுவொழுக்கமும், சமய நெறியாகிய சிறப்பொழுக்கமும் என இருவகைப்படும். அவற்றுள் உலகியலாகிய பொது

பாதகம் புரியல் காஞ்சிப் பதியிடைச் சிறிதுஞ் செய்யல்
ஓதிய விதியி னூறே ஒழுகுதல் முறைமைத் தாமால். க

செந்துவர் படரும் ஆழித் தினகரன் எழுமுன் கன்னல்
ஐந்தென எழுந்து வெண்ணீ றணிந்துயர் மாவின் மூலத்
தெந்தையைக் காம நோக்கின் இறைவியை நினைந்து போற்றிப்
புந்தியின் உறத்தான் செய்யும் பொருள்அறம் சிந்தை செய்து. உ

காகமுந் தண்டும் மற்றுங் கரந்தழீஇக் காமர் ஊர்க்கு
நிருதியிற் படர்ந்து காதில் நீண்டமுப் புரிநூல் ஏற்றித்
தரணியில் திருணம் இட்டுச் சந்திகள் பகல்வ டக்கும்
இரவுதென் பாலும் நோக்கி இருந்திரண் டியக்கம் நீத்து. ந

குறிஇடக் கரத்துப் பற்றிக் குறுகிநீர் முகந்திட் டோர்கால்
வெறிகமழ் புனலான் மண்ணாற் குறியினை விழுமி தாக்கி

---

வொழுக்கத்தினின்றார்க்கே சமய நெறியாகிய சிறப்பொழுக்கம் கைகூடு மாகலான் ஈண்டு முதற்கண் பொதுவொழுக்கம் கூறுகின்றார். இனி, ஒழுக்கங்கள் காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்க வேறுபடுதல் உண்டு. அவ்வாற்றான் அமைந்த மிருதியொழுக்கத்தையும் ஆசிரியர் உலகியல் பற்றித் தழுவுவராகலின், ஈண்டு அதனைச் சிறுபான்மை சைவ ஒழுக்கத்தையும் உடன் கலந்து கூறுகின்றார்.

க. வீழும் - விரும்புகின்ற. மடவன் - அறிவில்லாதவன். காதலன் - காதல் செய்பவன், விரும்புபவன். தாயை என்புழியுள்ள இரண்டனுருபு காதலன் என்னும் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. அச்சீர் என்றது அது போல என்னும் பொருட்டாய் நின்றது. கடியனும் என்புழி உம்மை எச்சத்தோடு இழிவு சிறப்பு. வைப்பு - தலம். புரியல், செய்யலென்பன எதிர்மறை வியங்கோள். பெருந்தூர்த்தனும் தாயை விரும்பான்; அதுபோல, கொடியவனும் சிவதலங்களில் பாவம் செய்யாதிருக்கக்கடவன்; அவற்றிலும் காஞ்சியில் சிறிதும் பாவம் செய்யாதொழிக. விதித்த நெறியில் ஒழுகுதலே முறைமையுடைத்தென்பதாம்.

உ. துவர்படரும் ஆழி - பவளக்கொடி படர்கின்ற கடலில். கன்னல் - நாழிகை. "வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யும் நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து" (ஆசார. ரு.) என்றதுங் காண்க.

ந. படர்ந்து - சென்று. திருணம் - துரும்பு. சந்திகள் - சந்தியா காலங்கள்; அவை காலை, மாலை. இரண்டு இயக்கம் நீத்து - மலசலங்களைக் கழித்து.

நிறையமண் முக்கால் இட்டுக் குதங்கழீஇக் கழுவு நீள்கைக்
கிறுதியின் ஈரைங் காலும் இருகைசேர்த் தேழு காலும். ௪

அடிஎழு காலும் பூசி அறலினாற் சுத்தி செய்க
இடனுடை இல்லோர்க் கிதாம் இரட்டிமும் மடக்கு நாற்றி
கடனறி பிரம சாரி காட்டகத் துறைவோன் மற்றைக்
கெடலருந் துறவி இன்னோர் கெழுதக இயற்றல் வேண்டும். ௫

கொணர்வுறு நீர்வாய்ப் பெய்து கொப்புளித் திருகால் தூய்மை
அணையநீர் குடித்துப் பின்னர் அணிவிரல் உறுப்புத் தீண்டல்
இணைவிழைச் சுணவு மாற்றீ ரியக்கமுற் றிடில்நா லெண்கால்
இணையிலீ ரெண்கா லெண்காற் கொப்புளித் திடுதல் வேண்டும். ௬

சலமலம் விடுக்கும் போதுந் தையலார் கலவிப் போதும்
குலவெரி வளர்க்கும் போதும் வெண்பல்கோல் தின்னும் போதும்
உலவுநீர் குடையும் போதும் உணவினும் பேசல் செய்யார்
மலவலி தூக்கும் எங்கோன் வகுத்தநூல் முறையின் நிற்போர். ௭

விதித்தகோல் தின்று தூய மென்புனல் படிந்து மேனி
கதிர்ப்பநீ றணிந்து சந்திக் கடன்புரிந் துறுபே ரன்பின்
முதிர்ச்சியின் இலிங்க பூசை நாள்தொறும் முட்டா தாற்றித்
துதித்தனர் காலந் தோறும் ஏகம்பந் தொழுது போற்றல். ௮

---

௪. நீர் முகந்திட்டு எனவே நீரின்கண் செல்லுதல் கூடாதென்பது பெறப்பட்டது. விழுமிதாக்கி - தூய்மை செய்து.

௫. அறல் - நீர். நாற்றி - நான்மடங்கு; இரட்டி, மும்மடங்கு, நாற்றி என்பவற்றைப் பிரமசாரி, காட்டகத்துறைவோன், துறவிகளுக்கு முறையே கொள்க. காட்டகத்துறைவோன் - வானப் பிரத்தன். துறவி - சந்நியாசி. கெழுதக - பொருந்த.

௬. நீர் குடித்தென்றது - ஆசமனஞ்செய்தென்றவாறு. அணிவிரல் உறுப்புத் தீண்டல் - ஆழிவிரலால் விதிக்கப்பட்ட இடங்களைத் தொடுதலாகிய நியாசத்தைச் செய்க. இணைவிழைச்சு - புணர்ச்சி. உணவு - உண்ணுதல். மாற்று ஈரியக்கம் - போக்குதற்குரிய மலசலங்களின் நீக்கம். உற்றிடில் - சேர்ந்தால். நாலெண்கால் முதலிய மூன்றையும் முறை நிரனிறையாகக்கொள்க.

௭. பல்கோல் - பல்லுக் கொம்பு. உலவு - அசைகின்ற.

௮. கோல் - பல்லுக் கொம்பு. கதிர்ப்ப-ஒளிவீச. போற்றல்-போற்றுக.

இம்முறை ஒழுக்கின் மாறா தியங்குறும் பிரம சாரி
செம்மணி வடிவிற் கம்பர் திருவருள் கிடைத்தல் வேண்டி
மம்மரில் குரவன் மாடே மறையெலாம் முறையின் ஓதல்
மும்மறை இரண்டொன் றேனும் முற்றுறப் பயிறல் வேண்டும். ௯

மடங்கலிற் கன்னி தன்னின் மதிநிறைந் துறுநாள் ஓதத்
தொடங்குக மகரத் தந்நாள் துகளற முடிக்க மீண்டு
மடங்கரும் வெண்கேழ்ப் பக்கத் தோதுக அங்க மாதி
உடங்குதேய்ப் பக்கத் தோதல் விலக்குநாள் ஓதல் வேண்டா. ௧௦

செவ்விதாண் உடையே தண்டந் திகழ்முந் நூல் உத்த ரீயம்
அவ்வவர் தமக்கு வெவ்வே றருமறை விதித்த வாற்றால்
எவ்வமில் மறையோ ராதி மூவரும் இயல்பிற் கொள்க
செவ்வழல் விதியின் ஓம்பி அணிகஅத் திருவெண் ணீறே. ௧௧

முன்னிடை கடையின் ஒன்றப் பவதிச்சொல் மொழிந்து பார்ப்பார்
மன்னவர் வணிசர் பிச்சை ஏற்பது மரபாம் ஆயுள்
முன்னுறும் இளையர் தம்மின் மூத்தவர்ப் பணிக தாழ்ந்த
பின்னவர் தமக்கு மூத்தோர் வாழ்த்துரை பேசல் வேண்டும். ௧௨

ஓதிய பிரம சாரி ஒழுக்கினில் வழாது நின்று
மூதரு மறைநூல் கற்றோர் முனிவர்தங் கடனில் தீர்ந்து

---

௯. வடிவின் - உருவத்தையுடைய. மம்மர் - மயக்கம். மூன்று வேதங்களில் இரண்டொன்றாயினும் என்க.

௧௦. மடங்கல் - சிங்கம், ஆவணிமாதம். கன்னி - புரட்டாசி மாதம். மதிநிறைந் துறு நாள் - பௌர்ணிமை. மகரத்து அந்நாள் - தை மாதத்தில் பௌர்ணிமையில். மீண்டு என்பது அடுத்த என்றவாறு. வெண்கேழ்ப் பக்கம் - சுக்கிலபட்சம். அங்கம்-வியாகரணம் முதலிய ஆறு அங்கங்கள். ஆதி என்றதனால் உபாங்கங்கள் முதலியன கொள்க. ஆவணிப் பௌர்ணிமையே சிராவணமெனப்படும். அத்தினமே வேதியரால் ஆவணி அவிட்டமெனக் கொண்டாடப்படும். அன்றே பூணூல் அணிந்து காயத்திரிசெபம் செய்து வேதம் ஓதத்தொடங்குவர்.

௧௨. முன் - முதல். முன் இடை கடை என்பவற்றைப் பார்ப்பார் முதலியோர்க்கு முறையே கொள்க. ஆயுள் முன்னுறும் - ஆயுள் வளா விரும்புகின்ற.

வேதமா மூலத் தெங்கோன் திருவருள் மேவப் பெற்றுப்
பேதமில் பெருவீட் டின்பப் பேற்றினுக் குரிய ராவார். ௧௩

ஷை வேறு

பின்னவர்கள் பற்றிகந்து பத்தியினல் திருக்காஞ்சிப் பேரூர் வாழ்க்கை, மன்னுதல்வேட் டனராயின் ஏகம்பன் றனக்கணித்தாம் இருக்கை வைகிப், பன்னருஞ்சீர்க் கண்டிகைநீ றுடல்வயங்கச் செய் பணிகள் பலவும் ஆற்றித், துன்னியமாந் தருமூலச் சுடரொளியை முட்டாது தொழுது வாழ்வார். ௧௪

கலி விருத்தம்

வற்றரு மறைஅவ்வா ரேறுநி வாழ்க்கையிற்
பற்றில னுபிடிற் குரவன் பால்என்றும்
உற்றினி துறைகபற் றுடைய னேயெனில்
பெற்றியின் அருட்குரு இசைவு பெற்றரோ. ௧௫

கடவுளர் பிதிரர்தங் கடன்கள் நீக்குவான்
வடுவறும் இலக்கணம் மாண்ட கற்பினின்
மிடலுடைக் கிழத்தியை விதியின் வேட்டுப்பின்
நெடுமனை வாழ்க்கையின் ஒழுகல் நீதியே. ௧௬

கருதுமுப் பதிற்றிரு கவள மென்பதம்
இருபொழு துண்டலும் எச்சம் ஐவகை
புரிதலும் விதித்தநாள் மனைவி பூண்முலை
மருவலும் இனையவும் இவர்க்கு மாணுமே. ௧௭

ஓதேரி சமிதையின் ஓம்பல் தேய்வமாம்
ஏதமில் பிதிரருக் கீதல் அன்னதாம்

---

௧௪. பின்னவர்கள் - சூத்திரர். முட்டாது - தவறாது.

௧௫. என்றும் பிரமசாரியாகவே இருப்போன் நைட்டிக பிரமசாரி எனப்படுவன்.

௧௬. முனிவர் முதலிய மூவர் கடன்கள் திருமாற்றை மேலும் (பக். ௪௭௦.) உரைத்தாம். கிழத்தி - மனைவி. வேட்டு - மணந்து.

௧௭. பதம்- சோறு. ஐவகை வேள்வியை வருஞ்செய்யுட்களில் காண்க.

௧௮. அன்னது, பிதிர்யாகம். ஓதனம் - சோறு. வீசல் - இடுதல்.

பூதருக் கிடுபலி பூத எச்சமே
வேதியர்க் கோதனம் வீசல் மானிடம். கஅ

பெருமறை ஓதுதல் பிரம எச்சம்இவ்
விருமகம் ஐந்தனுட் பிரம எச்சந்தான்
திருமிகச் சிறத்தலில் தெய்வ வேதியர்
ஒருதலை யாகஈ தோம்பல் வேண்டுமால். கசு

வைகறை எழுந்துசெய் வினைகள் மாண்டகச்
செய்துமா நகர்ப்புறத் தொழுகுந் தெய்வநீர்
எய்தினர் குடைந்துவெண் டுகில்இ ரண்டுடுத்
தைதுறு கண்டிகை நீற ணிந்துபின். உ0

வண்புதல் தருப்பைமேல் வைகி மும்முறை
ஒண்புனல் வேதங்கள் உவப்ப ஆசமித்
தெண்பெற வாய்துடைத் தியல்பில் தீண்டியே
பண்பயில் மறைகளைப் படித்தல் வேண்டுமால். உக

மாதவப் பேற்றினன் மறைகள் அண்ணலைச்
சூதமாய் நிழற்றலின் தொல்லை ஏகம்ப
நாதனுக் கினியதிப் பிரம நன்மகம்
மேதகும் அறங்களுள் மிக்க தாகுமால். உஉ

ஆற்றலுக் கியையஎவ் வளவைத் தாயினும்
போற்றரு மறையினைப் போற்றி மேதகச்
சாற்றுகா யத்திரி சதவு ருத்திரம்
ஏற்றஐந் தெழுத்திவை விதியின் எண்ணியே. உங

அனைத்தினும் நிறைந்துறை அடிகள் பூசனை
தனக்குறு திருப்பள்ளித் தாமங் கொய்துபோய்
மனைத்தலை வைத்துமேல் வாழ்க்கைக் கேய்ந்தன
எனைத்துள கருமமும் இயல்பின் நாடியே. உச

---

கசு. இருமகம் - பெருவேள்வி. ஒருதலை - நிச்சயம்.

உக. வைதிக முறையில் ஆசமனம் மூன்று வேதங்களைக் குறித்துச் செய்யப்படும்; அதனால் மூன்று வேதங்களும் மகிழுமென்பர்.

உச. திருப்பள்ளித்தாமம் - இறைவனுக்குச் சாத்தும் மாலை; ஈண்டு அதற்குரிய பூக்களைக் குறித்தது.

கதிரவன் உச்சியி னணுகுங் காலையின்
முதுசிவ கங்கைநீர் முறையின் மூழ்குபு
மதியுறு நியதிகள் முடித்து மாநிழல்
அதிபனை முறைபுளி அணைந்து போற்றியே. உரு

மீண்டுதன் மனைவயின் மேவித் தற்பொருட்
டீண்டிய அருட்குறி இறைவன் அர்ச்சனை
பூண்டபே ரன்பினிற் புரிந்து பூசனைக்
காண்டுறப் பெனப்படும் அழலும் ஓம்பியே. உசு

அறமுதல் இழிஞர்ஈ றான வற்றினுக்
குறுபலி உதவிஊங் கெச்சம் ஐவகை
முறைபுளி யாற்றிஅவ் வேலை முன்னிய
பெறலரு விருந்தினர்ப் பேணி ஊட்டியே. உஎ

நீத்தவர்க் கையமும் நேர்ந்து நோயினர்
வாய்த்தவெஞ் சூல்முதிர் மகளிர் பிள்ளைகள்
மூத்துறு கிழவரை முந்த ஊட்டிப்பின்
வத்துறு கிளைஞரோ டுண்டல் வயுமால். உஅ

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கங்கைவார் சடிலக் கடவுளை நினைந்து கறிதயிர் நெய்யுடன் ஆவி, அங்கியை எழுப்பி ஆகுதிச் செய்கை யாகமுப் பதிற்றிரு கவளம், பங்கமில் விதியா லுண்டுகை பூசிப் பாகடை தின்றதன் பின்னர்ப், பொங்குபே ரன்பின் ஒக்கலோ டமர்ந்திப் புராணமே கேட்டிடல் வேண்டும். உகூ

நான்மறைப் பொருளாய்க் கதைக்கெலாம் இடனாப் நாற்பயன் உதவும்வ கம்பன், மேன்மையுங் காம கோக்குடை இறைவி மேன்மையும் விளக்குவ திதுவே, நான்முறை வருண நிலைகளின் ஒழுக்

உசு. தற்பொருட்டு ஈண்டிய அருட்குறி - ஆன்மார்த்தமாகப் பொருந்திய இலிங்கம்.

உஎ. அறம் - காக்கை என்ப.

உஅ. சூல் - கருப்பம். வயும் - பொருந்தும்.

உகூ. பாகடை - தாம்பூலம், ஒக்கல் - சுற்றம். இப்புராணம், காஞ்சிப் புராணம்.

கம் நண்ணிதின் தெரிப்பதும் இதுவாம், பான்மையாற் காஞ்சிப் புராணமே நாளும் பயில்வுறக் கேட்பது மரபால். ௩௦

அலர்கதிர் என்றாழ் மறைந்திடுங் காலும் ஆன்றவர் படித்திடக் கேட்டுக், குலவுசீர் அந்தி செய்கடன் முற்றிக் கோயிலைக் குறுகி ஏகம்பத், தலைவனைத் தொழுது மனைவயி னணுகிச் சமிதையின் அங்கிவேட் டமர்ந்து, பலருடன் அருந்தி மனைவியோ டிரவிற் பள்ளியின் மேவுதல் விதியே. ௩௧

தருக்குறு வனப்பிற் பிறர்க்குரி யவரைத் தவ்வையில் தங்கையிற் காண்க, உருத்திர கணிகை மகளிரைத் தாயின் உன்னுக வயிணவ மடவார், அருப்பிளங் கொங்கைத் தாதிகள் மாட்டும் அன்னதே யாகவிற் புணர்ச்சி, விருப்பினை அவர்பால் மறப்பினும் எண்ணல் ஓம்புக நன்னெறி விழைவார். ௩௨

இருட்சுரி கருமென் மலர்க்குழல் மனையாள் இளமுலைப் போகமும் மகவின், பொருட்டெனக் கொண்டே விலக்குநாள் ஒழித்துப் புணர்ந்தபின் நீங்கிவேம் பாந்தள், அரைக்கசைத் தருளும் அடிகளீ ரடியும் அகந்தழீஇத் துயிலுக மற்றீங், குரைத்தவா றென்றும் ஒழுகுநர் எங்கோன் திருவருட் குரியவ ராவார். ௩௩

கச்சிமா நகரிற் கம்பநா யகன்முன் கரிசறுத் தான்றவர் முகப்ப அச்சுவம் ஆடை ஊண்முதல் தானம் ஆதரித் தியைந்தவை அளித்தல், பொச்சமில் அவ்வக் கொடைப்பெரும் பயன்ஒன் றனந்தமாய்ப் பொலியும்அவ் வரைப்பின், நச்சிமெய் யுணர்வு கொளுத்துவோன் வீடு நணுகும்மேம் பட்டதித் தானம். ௩௪

ஓதல்வேள் வினை ஓதுவித் திடல்வேட் பித்தல்வற் றனுமுறும் மறையோர்க், காதிபின் மூன்றே டளித்திடல் ஊர்தி

௩௨. பிறர்க்குரியவர் - பிறர்மனைவியர். தவ்வை - தமக்கை. உருத்திர கணிகை மகளிர் - சிவாலய கணிகையர். வைணவ மடவார் - விட்டுணு கோயில் கணிகையர். தாதிகள் - வீட்டுப் பணிப்பெண்கள்.

௩௩. மனையாளுடன் துயிலுதல் கூடாதென்பதை முன்னரும் கூறுப.

௩௪. அச்சுவம் - குதிரை. ஆதரித்து - விரும்பி. அளித்தல் - கொடுக்க.

௩௫. அவ்வவரொன்றது மேற்கூறிய மூவரையும். விருத்தி - பிழைப்பு.

படைத்தொழில் அரசருக் குரிய, ஆதியின் மூன்றும் அல்லவை முறையே அவ்வவர் விருத்திகட் காமால். ௩௫

இருதமோ டமிர்த விருத்தியும் ஆன்றோர்க் கிசைவன மிருத மும் ஆகும், தருபிர மிருதஞ் சத்திபா நிருதம் தழுவலும் ஒன்று நாய் விருத்தி, ஒருவலே வேண்டும் உஞ்சால் விருத்தி இருதமாம் ஒன்றிர வாமல், வருவதே அமிர்தம் இரந்துறல் மிருதம் உழவின் வந் துறல்பிர மிருதம். ௩௬

சத்தியா நிருதம் வாணிக விருத்தி தாழ்வுறுஞ் சேவகஞ் செய் யல், வைத்தநாய் விருத்தி ஆதலின் அதனை மாற்றியே இருபிறப் பாளர் ஒத்ததோர் தூய விருத்தியால் தம்மை ஓம்பிமெய்ந் நூல்பல பயின்று, தத்தமக் குரிய நியதியின் ஒழுகித் தங்குதல் மரபெனப் படுமால். ௩௭

கைசெவி சென்னி கழுத்தினெப் போதுங் கண்டிகை அணி தல்வெண் ணீறு, மெய்யெலாம் பூசி ஐந்துமூ விடத்தும் விலங்கு முப் புண்டரம் பொறித்தல், வைதிக நிலையோர் மரபென மறைநூல் வகுத்திடும் ஆதலின் இவற்றைக், கைவிடா தென்றுங் கடைப் பிடித் திடுக இகழ்ந்திடிற் கடையரே யாவார். ௩௮

வைதிக சைவ நெறிகளைப் பற்று மாண்பிலாச் சூத்திரர் முத லோர்க், கைதுமீப் போய புண்டர மாதி அணிபலாம் எனையர்க்

௩௬. இருதம், அமிர்தம், மிருதம், பிரமிருதம், சத்தியாநிருதம், நாய் விருத்தி என விருத்தி ஆறுவகைப்படும். அவைகளில் அந்தணர் முதலிய மூவர்க்கு முதலிரண்டு உத்தமம். மூன்றுவதுள்ளது மத்திமம். நான்கு ஐந்து அதமம். ஆறுவது அதமாதமம்; அது கூடாது. இருதமாவது உஞ்ச விருத்தி. (உஞ்ச விருத்தியாவது, அறுக்கப்பட்ட வயல்களில் சிந்திக்கிடப்ப வற்றைச் சேர்த்துப் பிழைத்தல்.) அமிர்தமாவது, இரவாமல் வருவது. மிருத மாவது இரத்தலால் வருவது. பிரமிருதமாவது உழவினால்வருவது என்பதாம்.

௩௭. இரு பிறப்பாளர் - முதல் மூன்று வருணத்தார். சத்தியாநிருத மாவது வாணிகத்தால் வருவது. நாய்விருத்தியாவது ஒருவரிடத்தில் சேவகம் செய்வதால் வருவது என்பதாம். (௩௮. விலங்கு - துலங்குகின்ற.)

௩௯. மாண்பென்றது புண்ணியத்தை. எனவே, அப்புண்ணியத்தால் மனம் பற்றுதலுடைய சூத்திரர்க்குத் திருநீறு கண்டிகைகளே ஆமென்றவாறு. ஆசரித்து, ஆச்ரயித்து என்பதன் திரிபு; கைக்கொண்டு என்பது பொருள்.

காகா, மெய்திகழ் மறைகள் ஆகமம் விதித்த கருமம்மற் றினையன பிறவும், உய்தியை வேட்டோர் ஆசரித்* தொழுகி விலக்கின ஒழி வது முறையே. ௩௯

தவத்தினாற் செருக்கல் கண்டது விளம்பல் பொய்யுரை சாற்று தல் ஐந்தும், அவித்தஅந் தணரை இகழுதல் யாதும் அளித்தது புகழ்ந்தெடுத் துரைத்தல், எவற்றினை யானுங் கொலைசெயல் பிறர் பால் இடுக்கணை யுறுத்துதல் குறளை, செவிப்புகப் புகறல் பூப்புடை மனையைத் தீண்டலும் வழுவெனப் படுமால். ௪௦

மனைவியோ டுண்டல் அவளுடன் துயிறல் மனைவிஆ வித்துழிப் பசிப்பில், வினைஇகந் தியல்பான் இருப்புழி உண்ணும் வேலையும் ஆங்கவட் பார்த்தல், கனைகதிர்த் தேவைக் கிழக்கெழுங் காலை மேல் கடற் பால்விழுங் காலைப், பனிவிசும் புச்சி யுற்றிடுங் காலைப் பார்த் தலும் பழுதெனப் படுமால். ௪௧

உடையொழிந் திருநீ ராடுதல் ஆடை ஒன்றுடுத் துண்டல்ஊ ரியக்கம், நடைவழிச் சாம்பர் ஆனிலை நீநீர் நள்ளுற விடுதல்ஆங் குமிழ்தல், உடையிலா மாதை நோக்குதல் இருகால் ஒளிர்ந்தசெங் கனலிடைக் காய்ச்சல், இடையுறும் அந்தி வேலையின் அருந்தல் இவைகளும் விலக்கெனப் படுமால். ௪௨

இந்திர திருவில் விசும்பிடை நோக்கி ஏனையர்க் கறிவுறக் காட்டல், நிந்தையின் வாளா பேரிகல் விளைத்தல் கையிணை குவித் துநீ ரருந்தல், செந்தழற் கடவுள் வான்பசு பார்ப்பார் தேவர்கள் ஞாயிறு குரவர், இந்துவின் முன்னர் இச்சையா றிருத்தல் இன்னவுந் தீங்கெனப் படுமால். ௪௩

கேழுகிர் உரோமந் துணித்திடல் உகிராற் பல்லினைக் கிளைத் திடல் தனியே, பாழ்மனைத் துயிறல் கண்படை எழுப்பல் முடிவட

---

௪௦. இடுக்கண் - துன்பம், குறளை - கோள்.

௪௧. ஆவித்தல் - கொட்டாவி விடுதல், வினை இகந்து - வேலையின்றி.

௪௨. ஆனிலை - பசுநிற்குமிடம். நள்ளுற - நடுவிற் பொருந்த.

௪௩. இச்சையாறிருத்தல் - அடக்கமின்றி மனம்போனபடி இருப்பது.

௪௪. உகிர் - நகம், கிளைத்திடல் - குத்துதல், கண்படை - உறக்கம். காழகம் - உடை. [* 'ஆசிரித்'தெனவும் பாடம்.]

பாவின்வைத் துறங்கல், ஆழ்துரும் பொடித்தல் ஒட்டினை அடித் தல் தனிவழிச் செலல்பிறர் அணிந்த, காழகஞ் செருப்பு முதலிய அணிதல் இனையவுங் கடிந்திடப் படுமால். ௪௪

அறக்கடை மிகும்ஊர் பெரும்பிணி யுறும்ஊர் அமர்இழி குலத்தவர் பதிதர், மறக்கொடுந் தொழிலோர் துவன்றும்ஊர் வைகல் வரையிடை நெடும்பொழு துறைதல் இறப்பரும் இசும்பின் ஏறுதல் இழிதல் இளவெயிற் காய்தல்நீ ராடா, துறப்பெருஞ் சிவலிங் கார்ச்சனை புரியா துண்டலும் வழுவெனப் படுமே. ௪௫

பூத்தவள் பதிதன் இழிஞனை அழுந்தைப் புத்தரைத் திகிரி மேற் பொறித்த, மூர்த்தியைத் தீண்டல் காண்டலும் விலக்கே இலங்குமுப் புண்டரம் இன்றி, மீத்திகழ் வடிவம் முதலிய பொறித்த வேதியர் முகத்தினை மறந்தும், பார்த்துளோர் கம்பத் தலைவனைப் படர்ந்து கண்ணுறின் நண்ணுவர் தூய்மை. ௪௬

மறையுடன் வனை நூல்களை எச்சந் தன்னுடன் மற்றைநல் வினையைக், கறையறும் பார்ப்பா ரோடுஞ்சூத் திரரைக் காஞ்சியி னெடும்பிற நகரைப், பிறைமுடிக் கடவு ளோடரி யயனை ஒப்பெனப் பேசற்க பேசிற், குறைவரு நிரயக்* குழியில்நீ டூழி குளிப்பதற் கையமொன் றிலையே. ௪எ

இன்னன பிறவும் மறைமுதல் நூல்கள் விலக்கிடும் இவற்றினை யொழிக, பன்னரு மறையின் புறத்துநூ லனைத்துங் கெடுதியே பயக்குமா தலினால், அன்னவை விடுத்து மறைநெறி வழுவா தொழுகிநீள் அலர்பொழிற் காஞ்சி, தன்னில்ஏ கம்ப நாயகன் அடி யார் தம்மொடுங் குலாவுதல் முறையே. ௪௮

---

௪௫. அறக்கடை - பாவம். பதிதர் - சண்டாளர். துவன்றும் - நெருங்குகின்ற. வைகல் - தங்குதல். வரை - மலை. இறப்பரும் - கடத்தற் கரிய. இசும்பு - வழுக்குடையவை.

௪௬. பூத்தவள் - மாதவிடாயானவள். பதிதன் - சண்டாளன். அழும்பிணம். திகிரிமேற் பொறித்த மூர்த்தி - அருகனுதல் வேண்டும். மீத்திகழ் வடிவம் - ஊர்த்துவ புண்டரம்.

௪எ. இவ்வொழுக்கம் மிருதிவழக்குப் பற்றியதென்பது இச்செய்யு ளாலும் அறிக. *'நிரயக்குழியில்' எனவும் பாடம்.

இருமுது குரவர் இறந்திடு மதிநாள் ஆண்டுதோ றெய்துழி யுகாதி, வருமனு வாதி உவாமுதல் தினத்தின் வயங்குதென் புலத் தவர்க் குறித்துத் திருமறை யவர்க்கு முறையின்ஊட் டிடுக வனை மாத் தலங்களிற் செய்யும், பெருநலம் அனைத்துங் காஞ்சியின் ஊட்டும் பேற்றினைச் சிறிதும்ஒவ் வாவால். சகூ

தென்புலத் தவர்தாம் அயன்தரு மரீசி முதலியோர் சிறுவர்அங் கவருள், இன்புறு மரீசி விராட்டுவை முதலோர் ஈன்றவர் சுராசுரர் முதலோர்க், கன்புடைப் பிதிராகுவர் கவியோ டங்கிரா புலத்தியன் வசிட்டன், என்பவர்க் குதித்தோர் மறையவர் அரசர் வணிகர்வே ளாளருக் கியைவர். ருo

முனிவரிற் பிறந்தார் தென்புலத் தவர்அம் முதல்வரிற் சுரா சுரர் பிறந்தார், புனிதவிண் ணவரிற் சராசரம் அனைத்தும் புகாறத் தோன்றின முறையால், இனையசீர்ப் பிதிரர் தமைக்குறித் தீசன் இணையடிக் கன்புடை மறையோர், நனியுளங் களிப்ப உறுதியாற் காஞ்சி நகர்வயின் ஊட்டுதல் கடனே. ருக

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இம்முறை இல்லின் வைகி இடைப்படுங் காற்கூ றாயுள்
செம்மையிற் கழிப்பிப் பின்னர்ச் செறிமயிர் நரைப்புக் காணும்
மம்மரின் அறிவு மிக்கார் மனைவியை மகன்பால் வைத்து
வம்மென உடன்கொண் டேனும் வனத்திடைச் சேறல் வேண்டும்.

விழைதரு காஞ்சி மூதூர்ப் புறனில வரைப்பின் மேவித்
தழைபொதி சாலை வைகி வேனில்ஐந் தழலின் நாப்பண்
மழையினிற் பனியில் நீருள் வதிந்துமா தவங்க ளாற்றிக்
குழைவுறு மனத்தான் உஞ்ச விருத்திகொண் டுறைக மாதோ. ருங

கண்டிகை நீறு தாங்கிக் கம்பனைக் காம நோக்கின்
ஒண்டொடிப் பிராட்டி தன்னை உன்னிஅஞ் செழுத்தும் எண்ணி

---

சகூ. மதிநாள் - மாதத் திதி. ஆரியவழக்காதலின் நாள் என்பதற்குத் திதி எனப்பொருள் உரைத்தாம்.

ருஉ. கழிப்பி - கழித்து. மம்மரின் - மயக்க காலத்து. ஏனுமென்பதை வைத்தென்பதனோடுங் கூட்டுக.

ருங. உஞ்ச விருத்தியை மேலே (பக். எஅரு.) காண்க.

அண்டர்கோன் பூசை யாற்றி அன்னணம் வதிந்த பின்னர்
மிண்டரும்* வனத்தின் வாழ்க்கை மெய்த்தவ முதிர்ச்சி யாலே. ௫௪

அற்றமில் அறிவில் தூய ராகிஇவ் வுலக வாழ்வும்
பொற்றபூங் கமல வாழ்க்கைப் புண்ணியன் முதலோர் வாழ்வும்
பற்றற வெறுத்து வீட்டின் அவாவுறும் பான்மை பெற்றுன்
முற்றுறத் துறவின் எய்தி மறைமுடி புணர்தல் வேண்டும். ௫௫

ஐந்தவித் துயர்ந்த ஆசான் றன்புடை அருள்நூல் கேட்டுச்
சிந்தனை செய்து மாணத் தெளிந்துபின் நிட்டை மேவும்
இந்தவா றடைவின் எய்தும் இயல்பினைத் தலைநின் றேறார்
அந்தணன் இருதாள் என்றும் அகந்தழீஇ ஒழுகல் ஆறே. ௫௬

அடற்கொடும் பாசம் மாற்றிப் பசுக்களை அருள்வீட் டுய்ப்பப்
படைத்தளித் தழித்து நோக்கும் பரம்பொருள் சிவனே என்றல்
உடற்றுநர்க் கரிய வேத உள்ளுறை யாவ தென்னத்
தொடக்கம்ஈ றெழுவா யான இலிங்கத்தால் துணிதல் கேள்வி. ௫எ

உவமையின் ஏதுத் தன்னுற் கேட்டதை உள்ளங் கொள்ள
அவமறச் சிந்தை செய்தல் சிந்தனை அதனைப் பல்காற்
சிவணுறப் பயிற்சி செய்கை தெளிதலாம் விளங்கக் காண்டல்
தவலறு நிட்டை யென்று சாற்றுவர் புலமை சான்றோர். ௫அ

இத்திறம் பயின்று வைகி இருவகைப் பற்றும் நீத்த
உத்தமத் துறவின் மேலோர் ஊர்வயின் பிச்சை யேற்றுச்
சுத்தநீர் அலம்பி முக்கட் சுடரினுக் கூட்டிப் பின்னர்
அத்தகு விதியின் ஓர்போ தெண்பிடி அருந்தல் வேண்டும். ௫௯

---

௫௪. அன்னணம், அன்னவண்ண மென்பதன் மரூஉ. மிண்டரும் - பொருந்துதற்கரிய. * 'மிண்டறும்' எனவும் பாடம்.

௫௬. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்னும் நான்கன் இயல்புகளையும் வருகின்ற இருசெய்யுட்களா லுணர்க.

௫எ. நோக்கும் - உயிர்களின் பரிபாகத்தைப் பார்க்கின்ற. உடற்றுநர்க்கு - குதர்க்கம் பேசுவார்க்கு. தொடக்கம் ஈறு எழுவாயான இலிங்கம் - உபக்கிரம உபசங்கார முதலாகிய இலிங்கங்கள். அவை மேலே (பக். ௧எ௧.) காட்டப்பட்டன.

அல்லவை முழுதும் நீக்கல் ஆன்றவர் கழித்த தூசு
கல்லசும் பெற்றிக் கோடல் காழ்மரத் தடியின் மேவல்
பல்லவும் ஒப்பக் காண்டல் தமியனைப் படர்தல் வேற்றுப்
புல்லியர் இணக்கந் தீர்தல் பொறிவழி மனஞ்செல் லாமை. சூ0

அடித்துணை நிலத்தில் நோக்கி மிதித்திடல் அறுவை தன்னில்
வடித்தநீர் பருகல் நெஞ்சில் தூயது மாணக் கோடல்
படிற்றுரை யின்றிக் கூறல் நன்மையே பயப்பப் பேசல்
எடுத்துரை பிறவும் முந்தன் இலக்கணம் என்ப மன்னே. சூக

உறையுளோ டங்கி பேணல் கல்வியின் உடலை ஓம்பல்
சிறையுடற் பொருட்டுச் சீற்றஞ் செய்திடல் சாலப் பேசல்
புறனுரை இகழ்ச்சி பிச்சைப் பொருட்டல தூர்க்குட் சேறல்
மிறையுறத் திடும்பை செய்வோர் தம்மையும் வெகுள லாகா. சூஉ

சினவிடைக் கடவுள் பூசை கண்டிகை திருவெண் ணீறு
கனவினும் இகழா தோம்பல் கதிரொளி உலோகம் அல்லாப்
புனிதபா சனத்தின் நீரால் தூய்மைகள் பொருந்தக் கோடல்
வினைஇகந் தவர்க்காம் என்ப வேள்வியிற் சமசம் போலும். சூங

என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோய் எவற்றி னுக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
வன்புலை உடம்பே ஆவி வருத்திடும் பிணிவே றில்லை. சூச

பெரும்பிணி இதனைத் தீர்க்கும் மருத்துவன் பிறவி யில்லாப்
பரம்பொரு ளான முக்கட் பரமனே என்று தேறி
முரண்பயில் விடையோன் தென்பால் முகத்தினைச் சரணம் எய்தி
விரும்பிவீ டுறுதற் பாலார் பிறப்பினை வெருவப் பெற்றார். சூரு

சூ0. அல்லவை - பாவம். ஆன்றவர் கழித்த தூசு கல் அசும்பு எற்றிக் கோடல் - பெரியோர்கள் கழித்த சிலையைக் காவிக்கல் துவைத்து உடுத்திக் கொள்ளுதல்.

சூக. அறுவை - துணி. தூயது - நல்லெண்ணம்.

சூங. சமசம் - வேள்வியிற் கொள்ளப்படும் ஒருவகை மரப்பாத்திரம்.

சூச. வழும்பு - நிணம். மெத்தி - அப்பி. அசும்பு - பொசிவு.

சூரு. தென்பால் முகத்தினை - (பாவத்தை நீக்கும்) அகோர முகத்தை.

கலிநிலைத் துறை

மற்றைத் தெய்வங்கள் எவற்றையும் விடுத்துமா நீழற்
கற்றைச் செஞ்சடைப் பிரான்சரண் சரணெனுங் கருத்தே
பற்றிச் சாவினும் வாழ்வினுங் களிப்பிகல் படாமை
எற்றைப் போதும்ஒத் தொழுகலே துறந்தவர்க் கியல்பாம் ௬௬

பொறுமை கல்விமெய் தூய்மைஐம் பொறிசெறல் அடக்கம்
உறுதி நாண்வெகு ளாமைகள் ளாமைஒண் பூதி
மறுவில் சாதனஞ் சிவார்ச்சனை தியானம்வண் பதினொன்
கறமும் நல்லறம் புரிபவர்க் கிலக்கண மாமால். ௬௭

சொன்ன நால்வகை நிலைகளில் துரிசற ஒழுகிக்
கன்னி மாநிழற் கண்ணுதல் அகத்தொழும் பாற்றி
மன்னி நீடிய காஞ்சிமா நகர்வயின் வதிவோர்
துன்னு மும்மலந் தூகள்அறுத் தின்பவீ டுறுவார். ௬௮

ஆகத் திருவிருத்தம் - ௨௬௨௧.

---

## உரை நடை

எல்லாப் பெண்களையும் விரும்புகின்ற அறிவீனனும் பெற்றெடுத்த தாயை இச்சியான். அதுபோல, கொடிய பாதகனும், சிவதலங்களிற் பாவம் செய்யாதிருக்கக் கடவன். அவற்றிலும் காஞ்சியில் சிறிதும் பாவச்செயல் செய்யற்க. விதித்த விதியின்படி ஒழுகுதலே முறைமையாகும். அங்ஙனம் ஒழுகுமாறு:

சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்குமுன் துயிலெழுந்து, (இயன்ற மட்டில் தூய்மையாய்,) திருவெண்ணீறணிந்து, திருவேகம்பப் பெருமானையும் காமாட்சியம்மையாரையும் தியானித்து வணங்கி, அன்று தான் செய்ய வேண்டிய பொருளையும் அறங்களையும் சிந்தித்து, தண்டு கமண்டலங்களைக் கையில் கொண்டு ஊருக்குத் தென்மேற்கில் சென்று, பூணூலைக் காதில் சுற்றிக்கொண்டு, பூமியில் துரும்பைப் போட்டு, வடக்கு நோக்கி இருந்து மலசல மோசனம் செய்க. காலை மாலை உச்சிக் காலங்களில் வடக்கு நோக்கியும் இரவில் தெற்கு நோக்கியும் இருந்து மலசல மோசனம் செய்தல

---

௬௬. களிப்பு இகல்படாமை - விருப்பு வெறுப்புக் கொள்ளாமல்.

௬௭. கள்ளாமை - பிறர்பொருளை வெளவக் கருதாமை. சாதனம் - சிவசின்னம்.

முறையாகும். பின்பு, நீரை முகந்துகொண்டு தண்ணீரும் மண்ணுங் கொண்டு குறியை ஒருமுறையும், குதத்தை மூன்றுமுறையும் கழுவி, இடக் கையைப் பத்துமுறையும், இரண்டுகையும் சேர்த்து ஏழுமுறையும், கால்களை ஏழு முறையும் கழுவுதல் வேண்டும். இது கிருகத்தர்களுக்காம். பிரமசாரி இரண்டுமடங்கும், வானப்பிரத்தன் மூன்றுமடங்கும், சந்நியாசி நான்கு மடங்கும் செய்தல்வேண்டும். இவ்வாறு சௌசம் முடிந்தபின்பு, கொண்டு வந்த தண்ணீரால் வாயைக் கொப்புளித்து இரண்டுமுறை ஆசமனம் செய்து, மோதிர விரலால் அங்கபரிசம் செய்தல்வேண்டும். மனைவியோடு கூடில் முப்பத்திரண்டுதரமும், உணவுஅருந்தின் பதினாறுதரமும் மலசல மோசனம் செய்யின் எட்டுத்தரமும் வாய்கொப்புளித்தல்வேண்டும். மலசல மோசனம் செய்யும்பொழுதும், பெண்களோடு கூடும்பொழுதும், எரி யோம்பும்பொழுதும், பல்விளக்கும் பொழுதும், நீராடும்பொழுதும், உணவு அருந்தும்பொழுதும் பேசலாகாது. ஆல், வேல், பூல், வேம்பு, நாயுருவி முதலாக விதிக்கப்பட்ட பல்லுக் கொம்புகளால் பல்விளக்கி, குளிர்ந்த நீரில் முழுகி, திருவெண்ணீறணிந்து, சந்தியாவந்தனம் செய்து, மெய்யன் போடு சிவலிங்க பூசையை முட்டின்றி நாள்தோறும் செய்து, காலந்தோறும் திருவேகம்பத்தைத் தொழுது துதிக்க.

### பிரமசரிய ஒழுக்கம்

இவ்வாறுன ஒழுக்கத்தில் நிற்கும் பிரமசாரி திருவேகம்பர் திருவருள் பெற வேண்டி ஆசிரியனை அடுத்து, அவன்மாட்டு மூன்று வேதங்களில் இரண்டாயினும் ஒன்றாயினும் குறைவறக்கற்றல் வேண்டும். ஆவணி புரட் டாசி மாதங்களில் பௌர்ணிமையில் தொடங்கி தைமாதப் பௌர்ணிமையில் வேதத்தை முடித்தல் வேண்டும். அடுத்த வளர்பிறையில் வேதாங்கம் முதலிய ஓதத்தொடங்குதல் வேண்டும். தேய்பிறையிலும் விலக்கப்பட்ட நாள்களிலும் ஓதலாகாது. அரைநாண், உடை, தண்டம், முந்நூல், உத்த ரீயம் இவைகளெல்லாம் பிராமணர் முதலிய மூன்று வருணத்தார்கள் தத் தமக்கு விதிக்கப்பட்டவாறு கொள்க. விதிப்படி வளர்த்த ஓமாக்கினியி லுண்டான திருவெண்ணீற்றைபணிக. பிராமணர் 'பவதி பிட்சாந்தேகி' என்றும், சத்திரியர் 'பிட்சாம்பவதி தேகி' என்றும், வைசியர் 'பிட்சாந்தேகி பவதி' என்றும் பிட்சை ஏற்பது முறையாகும். இளையவர் மூத்தவரை வணங்குதலும், மூத்தோர் இளையவர்க்கு வாழ்த்துக் கூறுதலும் வேண்டும்.

இத்தகைய பிரமசரிய ஒழுக்கத்தில் தவறாது நின்று வேதத்தைக் கற் றோர் முனிவர் கடன்நீங்கித் திருவேகம்பர் திருவருள்பெற்று, வீடுபேற்றிற் குரியராவார். சூத்திரர்கள் பற்றுநீங்கிக் காஞ்சியில் வாழவிரும்பினுல் திருவே

கம்பர் திருக்கோயிலுக்கு அருகில் இருந்து, விபூதி உருத்திராக்கங்களை யணிந்து, பலதிருப்பணிகள் செய்து, திருவேகம்பரைத் தவறாது வணங்கி வாழ்வார்கள்.

கிருகத்த ஒழுக்கம்

இவ்வாறு வேதங்களை ஓதிப் பற்றிலனாயின் ஆசிரியனிடத்திலேயே இருக்கக்கடவன். பற்றுடையனாயின் ஆசிரியன் அனுமதிபெற்று, தேவர் கடன் பிதிரர்கடன்களை நீக்குதற் பொருட்டு, குற்றமற்ற இலக்கணம் பொருந்திய மனைவியை மணந்து இல்லறத்தில் ஒழுகுதல் நீதியாகும்.

வேளைக்கு முப்பத்திரண்டு கவளமாக இரண்டுவேளை புசித்தலும், ஐவகை யாகம் செய்தலும், விதித்த நாட்களில் மனைவியோடு சேர்தலும் இவர்க்குரிய ஒழுக்கமாகும். ஐவகையாகமாவன: தேவயாகம், பிதிர்யாகம், பூதயாகம், மானுடயாகம், பிரமயாகம் என்பன. அவை முறையே எரியோம்பலும், தருப்பணம் செய்தலும், பலியளித்தலும், பிராமணர்க்கு அன்ன மிடுதலும் வேதம் ஓதுதலுமாம். பிரமயாகமாகிய வேதம்ஓதுதலே சிறந்ததாகலின் பிராமணர்கள் தவறாது இதனைச் செய்தல்வேண்டும்.

விடியற்காலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, நகர்ப்புறத்தில் ஓடும் நதிமுதலிய தீர்த்தங்களில் முழுகி வெண்மையான இரண்டு வேட்டிகளை உடுத்து, விபூதி உருத்திராக்கங்களை அணிந்து, தருப்பாசனத்தின்மேல் இருந்து ஆசமனம் செய்து, வேதங்களை ஓதுதல் வேண்டும். வேதங்கள் மாமரமாக இருந்து நிழல்செய்தலால் திருவேகம்பப் பெருமானுக்கு இப்பிரமயாகம் இனியதாகும். ஆதலால், சிறந்த அறமுமாகும். இயன்ற அளவு வேதத்தை ஓதி, காயத்திரி, சதவுருத்திரம், பஞ்சாட்சரம் இவைகளைச்செபித்து,சிவபூசைக்குத் திருப்பள்ளித் தாமத்திற்குரிய பூக்களைக் கொண்டுபோய் வீட்டில் வைத்து, பின்பு வாழ்க்கைக்கு வேண்டும் செயல்களைச்செய்து, சூரியன் உச்சியில் வருங்கால் சிவகங்கையில் முழுகி நியதிகளை முடித்துக்கொண்டு, திருவேகம்பப் பெருமானை வணங்கி, மீண்டுவந்து வீட்டில் ஆன்மார்த்தமாகிய சிவலிங்க பூசையைச் செய்து, அதற்கு அங்கமாகிய அக்கினிகாரியமும் செய்து, காக்கைமுதல் இழிஞர் ஈறாக உள்ளவர்களுக்குப் பலியிட்டு, ஐவகை யாகத்தையும் செய்து, விருந்தினரை உண்பித்து, துறவிகளுக்குப் பிச்சையளித்து, நோயாளிகள், கருப்பமுடைய பெண்கள், இளம்பிள்ளைகள், கிழவர்கள் இவர்களை முன்னே உண்பித்துப் பின்பு சுற்றத்தாருடன் இருந்து உண்ணுதல் வேண்டும். உண்ணுங்கால் இறைவனை நினைந்து உள்ளே அக்கினியை எழுப்பி, ஆகுதியாகப் பாவித்து கறி தயிர் நெய்களோடு கூடிய உணவை முப்பத்திரண்டு கவளம் உண்டு

கைபூசித் தாம்பூலம் தரித்தபின்னர் சுற்றத்தாரோடு கூடியிருந்து இக் காஞ்சிப் புராணத்தையே கேட்டல் வேண்டும்.

நான்கு மறைகளின் பொருளாயும், அறம் முதலிய நான்கு உறுதிப் பொருள்களையும் தருவதாயும், எல்லாக் கதைகளுக்கும் இடமாயும், திருவேகம்பர் காமாட்சியம்மையாருடைய பெருமைகளை விளக்குவதாயும், வருணாச்சிரம ஒழுக்கங்களை நுட்பமாக வகுத்துக் கூறுவதாயும் உள்ளது இதுவே யாதலால், இதனையே கேட்டல் முறையாகும். சூரியன் மறையுங்காறும் பெரியோர் படிக்கக் கேட்டு, பின்பு சந்தியா வந்தனத்தை முடித்துக்கொண்டு திருவேகம்பப் பெருமானை வணங்கி, வீட்டை அடைந்து எரியோம்பி, பலருடன் உண்டு, மனைவியுடன் சயனத்தை அடைதல் விதியாகும். பிறர் மனைவியரை உடன் பிறந்தவர்களாகவும், உருத்திர கணிகையர், வைணவப் பெண்கள், தாதிகள் இவர்களைத் தாயாகவும் கருதுதல் வேண்டுமாகலின் அவர்கள்மாட்டுப் புணர்ச்சி விருப்பத்தை மறந்துகொள்ளார் நன்னெறியில் ஒழுகுவார். மனையாளைப் புணர்தலும் மக்கட்பேற்றின் பொருட்டே யெனக் கொண்டு, விலக்கிய நாட்களில் நீங்கி, விதித்த நாட்களில் புணர்ச்சிக்குப்பின் நீங்கி, இறைவனை நினைந்து வேறோரிடத்தில் நித்திரை செய்க.

திருவேகம்பர் திருமுன்பில் யாதாயினும் ஒருதானம் அளித்தால் அதன் பயன் ஒன்று அனந்தமாகும். அவ்விடத்தில் ஞானத்தைத் தருகின்ற ஆசிரியன் மோட்சத்தைப்பெறுவான்.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழில் பிராமணர்க்குரியன. ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், ஊர்தி பயிறல், படைக்கலம் பயிறல் என்னும் அறுதொழிலும் அரசர்க்குரியன. ஓதல், வேட்டல், ஈதல், வாணிகம் செய்தல், பசுக்காத்தல், ஏருழுதல் என்னும் அறுதொழிலும் வைசியர்க்குரியன. அவைகளில் இறுதியிலுள்ள மூன்றும் அவரவர்களுடைய பிழைப்புக்காகும். இருதம், அமிருதம், மிருதம், பிரமிருதம், சத்தியாநிருதம், நாய்விருத்தி என விருத்தி அறுவகைப்படும். அவற்றுள் முதலிரண்டும் உத்தமம், மிருதம் மத்திமம், பிரமிருதம் சத்தியாநிருதம் இரண்டும் அதமம்; நாய்விருத்தி அதமாதமம். ஆதலால், முதல் மூன்று வருணத்தார்கள் நாய்விருத்தியைக் கொள்ளுதலே கூடாது. தூய விருத்தியால் உடலை யோம்பி மெய்ந்நூல்களைப் பயின்று, தமக்குரிய ஒழுக்கத்தில் நிற்றல் முறையாகும். இனி, இருதம் அறுத்த நிலத்தில் உதிர்ந்து கிடக்கும் நெல்லைப் பொறுக்குதல்போலப் பிறருக்கு உரிமையாகாது கிடக்கும் பொருள்களைக் கொள்ளுதலாகிய உஞ்சவிருத்தியும், மிருதம் இரப்பதும், பிரமிருதம் ஏருழுதலும், சத்தியாநிருதம் வியாபாரம் செய்தலும், நாய் விருத்தி ஒருவரைச் சேவித்தலுமாம்.

கைகள், காதுகள், கழுத்து இவ்விடங்களில் எப்போதும் உருத்திராக்கம் அணிதலும், திருவெண்ணீற்றை உடம்பு முழுவதும்பூசிப் பதினைந்திடங்களில் திரிபுண்டரமாக அணிதலும் வைதிக நிலையோர் முறையாகும். ஆதலால், இவற்றைக் கைவிடுவோர் கடையாராவர். வைதிகநெறி சைவநெறிகளைப் பற்றுதற்குரியரல்லாத சூத்திரர் முதலாயினர் ஊர்த்துவ புண்டர முதலியவற்றை அணியலாம். ஏனையோர்க்கு அவை ஆகா. வேதாகமங்களினால் விதித்தவற்றைச் செய்து விலக்கியவற்றை ஒழிதல் முறையாகும்.

விலக்குக்கள்

தவத்தினால் செருக்கடைதல், பார்த்தவற்றைச் சொல்லுதல், பொய் கூறல், ஐம்புலன் அடக்கிய அந்தணரை இகழ்தல், தான் பிறர்க்குக் கொடுத்ததைப் புகழ்ந்து கூறல், பிறிதோருயிரைக் கொல்லுதல், பிறருக்கு இடுக்கண் வரச் செய்தல், கோள்சொல்லுதல், மாதவிடாயான மனைவியைத் தீண்டுதல், மனைவியோடு உண்ணுதல், அவளுடன் துயிலுதல், மனைவி கொட்டாவி விடும்பொழுதும் பசித்திருக்கும்பொழுதும் வேலையில்லாதிருக்கும்பொழுதும் உண்ணும்பொழுதும் அவளைப் பார்த்தல், சூரியனை உதயமாகும்பொழுதும் அத்தமிக்கும்பொழுதும் உச்சியிலிருக்கும்பொழுதும் பார்த்தல், உடையில்லாமல் நீராடுதல், ஓர் உடை உடுத்து உண்ணுதல், வழியிலும், சாம்பருள்ள இடத்திலும், பசு நிற்கும் இடத்திலும், நெருப்பிலும், நீரிலும் மலசலங் கழித்தல், அவ்விடங்களில் எச்சில் உமிழ்தல், உடையணியாத பெண்ணைப் பார்த்தல்.

நெருப்பில் காலைக் காய்ச்சுதல், மாலைக்காலத்தில் உண்ணுதல், வானவில்லைப் பார்த்துப் பிறருக்குக் காட்டல், காரணமின்றிச் சண்டையிடுதல், கையினால் நீர் குடித்தல், அக்கினி, பசு, பார்ப்பார், தேவர், சூரியன், தாய், தந்தை, ஆசிரியன், சந்திரன் இவர்கள்முன் மனம்போனபடி இருத்தல், மயிரையும் நகங்களையும் துண்டித்தல், நகத்தால் பல்லைக் குத்துதல், பாழ்வீட்டில் தனியே உறங்கல், உறங்குவோரை எழுப்பல், வடக்கே தலை வைத்து உறங்குதல், துரும்பு கிள்ளுதல், ஓட்டினை அடித்தல், தனிவழிச் செல்லுதல், பிறருடைய ஆடை செருப்பு முதலியவற்றை அணிதல், பாவமும் நோயும் இழி குலத்தவரும் ஒழுக்கம் வழுவினவரும் கொடுந்தொழிலோரும் மிகுந்துள்ள ஊரில் தங்குதல், மலையில் நீண்டநேரம் இருத்தல், வழுக்கும் உயரத்தில் ஏறுதல், இளவெய்யில் காய்தல், நீராடாமலும் சிவபூசை செய்யாமலும் உண்ணுதல், பூப்படைந்தவளையும், ஒழுக்கந் தவறினவனையும், இழிஞனையும், பிணத்தையும், புத்தரையும், அருகனையும் தீண்டல், அவர்களைக் காணுதல், திரிபுண்டரமின்றி ஊர்த்துவபுண்டரம் முதலியவற்றை அணிந்த பிராமணர்களைக் கண்டால் திருவேகம்பரைச்

சென்று தரிசியாதிருத்தல், வேதத்துடன் பிற நூல்களையும், யாகத்துடன் மற்றைப் புண்ணியங்களையும், பிராமணருடன் சூத்திரர்களையும், காஞ்சியுடன் பிற தலங்களையும், சிவபெருமானுடன் மாலயனையும் ஒப்பென்று கூறுதல், இவைபோல்வன பிறவும் ஆகாவாம். ஆகலின் இவற்றைச் செய்யா தொழிக. செய்தால் நரகில் விழுதற்கு ஐயமில்லை.

வேதத்திற்குப் புறம்பாகிய நூலெல்லாம் கெடுதியே பயக்குமாதலின், அவற்றை விடுத்து, வேத நெறியில் வழுவாதொழுகி, சிவனடியாரோடும் அளவளாவியிருத்தல் முறையாகும். தாய் தந்தையர் இறந்தமாதமுந் திதியும் வருடந்தோறும் வரும் நாள்களிலும், யுகாதி, மனுவாதி, அமாவாசை, பௌர்ணிமை முதலிய தினங்களிலும், பிதிரர்களைக் குறித்துப் பிராமணர்களை உண்பிக்க. ஏனைய தலங்களிற் செய்யும் பெரிய அறங்களெல்லாம் காஞ்சியில் அன்னமிடும் பயனுக்குச் சிறிதும் ஒவ்வாவாம். பிதிராவார் பிரமன் புதல்வர்களாகிய மரீசி முதலியோரது புதல்வர்களாவர். அவர்களுள் மரீசி விராட்டு முதலியோர் புதல்வர்கள் தேவாசுரர் முதலானவர்களுக்கும், சுக்கிரன் புதல்வர் பிராமணர்களுக்கும், அங்கிராவின் புதல்வர் சத்திரியர்களுக்கும், புலத்தியன் புதல்வர் வைசியர்களுக்கும், வசிட்டன் புதல்வர் வேளாளர்களுக்கும் பிதிராவர். முனிவர்பால் பிதிரர்களும், பிதிரர்பால் சுராசுரர்களும், தேவர்கள்பால் சராசரங்களும் பிறந்தனவாகலான், அப்பிதிரர்களை நினைந்து, சிவபெருமான்பால் அன்புடைய பிராமணர்களைக் காஞ்சியில் ஊட்டுதல் இல்வாழ்வார்க்குக் கடனாகும்.

### வானப்பிரத்த ஒழுக்கம்

இவ்வாறு கிருகத்த நிலையில் ஒழுகி இடையிலுள்ள காற்கூறு ஆயுளைக் கழித்துப் பின்பு, மனைவியை மகனிடத்து வைத்தாயினும் உடனழைத்துக் கொண்டாயினும் வனத்தில் செல்லுதல் வேண்டும். சென்று, காஞ்சியம்பதிக்குப் புறத்துள்ள இடத்தில் தழைகளால் ஆகிய பன்னசாலையில் தங்கி, வெய்யிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலும், மழை பனிக்காலங்களில் நீரிலும் இருந்து தவங்கள்செய்து உஞ்சவிருத்திகொண்டு வாழ்க. விபூதி உருத்திராக்கம் அணிந்து, ஏகம்பநாதரையும் காமாட்சியம்மையாரையும் நினைந்து பஞ்சாட்சரத்தைச் செபித்து, சிவபூசை செய்து இருக்க.

### சந்நியாச ஒழுக்கம்

அதன் பின்னர் தவமுதிர்ச்சியால் அறிவு தூயராய், மண் விண்ணுலக வாழ்வுகளை வெறுத்து, வீட்டின்கண் அவாவுண்டாயின் சந்நியாச நிலையை அடைந்து, வேதாந்தங்களை ஞானாசிரியன்பால் கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து நிட்டை கூடுதல் வேண்டும். இவ்வாறு முறையின் ஒழுகும் ஒழுக்கத்தைச் சிவபெருமான் திருவடியை மனத்துட்கொண்டு ஒழுகுதல் வேண்டும். கேள்வி

யாவது முத்தொழில் செய்து பசுக்களைப் பாசத்தினீக்கி வீடடையச்செய்யும் பதிப்பொருள் சிவபெருமானே என உபக்கிரம உபசங்கார முதலிய இலிங் கங்களால் துணிதலும், சிந்தித்தலாவது ஏது திட்டாந்தங்களால் அதனை மனத்துட் கொள்ளுதலும், தெளிதலாவது அதனைப் பலகாலும் பயிறலும், நிட்டையாவது அதனை விளங்கக்காண்டலுமாம். இந்நெறியில் நிற்கும் துறவி கள் ஊரிற் பிச்சையேற்று, அதனை நல்ல நீரிற் கழுவி, முன்னர்ச் சிவபெரு மானுக்கு ஊட்டிப் பின்னர் எட்டுப்பிடி ஒரேவேளை உண்ணுதல் வேண்டும். பாவச் செயல்கள் முழுதும் நீக்கலும், பெரியோர்கள் கழித்த ஆடையைக் காவிக்கல் ஏற்றி உடுத்தலும், மரத்தடியில் தங்குதலும், எல்லாவற்றையும் ஒப்பப் பார்த்தலும், தனியாகச் சஞ்சரித்தலும், அற்பர்களோடு கூடாதிருத் தலும், ஐம்பொறிகளில் மனம் செல்லாமையும், பூமியையே நோக்கி அடி யெடுத்து வைத்தலும், துணியால் வடித்த நீரை உண்ணலும், தூய்மையான சிந்தையும், வஞ்சனையற்ற சொல்லும், நன்மையே உண்டாகப் பேசுதலும் பிறவும் துறவிக்குரிய இலக்கணங்களாம்.

ஓர் இருப்பிடத்தை ஏற்படுத்திக்கொள்ளுதலும், எரியோம்பலும், கல்வியால் சீவித்தலும், உடலின் பொருட்டுக் கோபங்கொள்ளுதலும், மிகுதி யாகப் பேசலும், புறங்கூறலும், பிறரை இகழ்தலும், பிச்சை நிமித்தமாக வன்றி ஊருக்குட்செல்லுதலும் தன்னை வருத்துவோராயினும் அவரை வெகு ளுதலும் துறவிக்கு ஆகாவாம்.

சிவபூசை, விபூதி, உருத்திராக்கங்களைக் கனவிலும் இகழாதுகொள்ளு தலும், உலோகமல்லாத பாத்திரங்களையே கொள்ளுதலும் வேணடும்.

சத்த தாதுக்களால்ஆகி, நோய்களுக்கெல்லாம் இடமாயுள்ள உடம்பை யன்றி உயிரைவருத்தும் பிணிவேறில்லை. இதனைத்தீர்க்கும் மருத்துவன் பிறவியில்லாத சிவபெருமானே என்று தெளிந்து, அப்பெருமானது அகோர முகத்தையே சரணடைந்து வீடு பெறுவர் பிறப்பிற்கு அஞ்சுவோர். மற்றைத் தெய்வங்களை எல்லாம் விட்டு மாவடியில் எழுந்தருளியுள்ள இறைவன் திரு வடியே சரணமென்னுங்கருத்தே கொண்டு சாவினும் வாழ்வினும் ஒரு தன்மையராய் ஒழுகுதலே சந்நியாசிகளுக்கு இயல்பாகும். பொறுமை, கல்வி, உண்மை, தூய்மை, ஐம்பொறியடக்கல், அடக்கம், உறுதி, நாணம், வெகு ளாமை, கள்ளாமை, விபூதி, சிவசின்னம், சிவபூசை, தியானம் ஆகிய பதினான் கும் அறம் செய்வோர்க்கு இலக்கணமாகும்.

இவ்வாறு சொல்லப்பட்ட நான்குவகையான அறங்களில் குற்றமறநின்று திருவேகம்பர் திருத்தொண்டு செய்து, காஞ்சியம் பதியில் வாழ்வோர் மும் மலங்களினீங்கி வீடு பெறுவார்கள்.

# சிவபுண்ணியப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சிநகர் அமர்ந்துறையும் நியதியராய் ஏகம்பக் கடவுள் பாதச், செச்சைமலர் வழிபடுவோர் மேம்பாடு நானேயோ தெரிக்க வல்லேன், முச்சகமும் புகழ்ந்தேத்தும் பன்னிரண்டு பெயர்படைத்த மூதூர் வைப்பிற், பொச்சமறச் செய்தக்க சிவதருமத் திறனும் இனிப் புகலக் கேண்மின். க

எவ்வறமுந் திருக்காஞ்சிக் கடிநகரிற் புரிகிற்பின் ஏற்றம் எய்தும், அவ்வறத்துட் சிவதன்மம் அதிகம்அவை சிவலிங்கப் பதிட்டை ஏனைச், செவ்வியுடைத் திருமேனி திருக்கோயிற் பணி பூசைச் சிறப்பு மற்றும், ஒளவியந்தீர் மெய்யடியார் திருத்தொண்டு முதற்பலவாம் அவற்றுள் மாதோ. உ

சிவலிங்கப் பதிட்டைப் பயன்

கயக்கமுறும் அறக்கடையின் சிமிழ்ப்பறுத்துப் பிரமாண்டக் கனத்தை நூறி, மயக்கமிகும் வினைப்பகையும் பெரும்பிறவிப் பழம்பகையும் மறுக மாட்டி, வயக்கமுறு சிவபதத்தின் உய்க்கும் இலங் கயில்வாளாய் மாறு வாழ்வு, பயக்கும்நுதல் விழிக்கடவுள் நயக்கும்அருட் சிவலிங்கப் பதிட்டை யம்மா. ௩

விரைமலரோன் மணிவண்ணன் முகில்ஊர்தி முனிவர்சித்தர் விண்ணோர் யாரும், வரைகளினும் வனங்களினும் வார்ந்தநதிப்

---

இனி, முறையானே சமயநெறி எனப்படும் சிறப்பொழுக்கமாகிய சிவ புண்ணியத்தை, எடுத்துக்கொண்ட நூலுக்கேற்ப ஒருவாறு கூறுகின்றார்.

க. நியதியர்-உறுதிப்பாடுடையவர். செச்சை மலர்-வெட்சிமலர். காஞ்சியின் பன்னிரண்டு பெயர்களை மேலே (பக்.௬௨௬) காண்க. பொச்சம்-பொய்.

உ. ஏனைத்திருமேனி என்றது சிவமூர்த்தங்களை. அவற்றை முன்னர்க் காண்க. பதிட்டை என்பதைத் திருமேனிக்குங் கூட்டுக.

௩. கயக்கம் - கலக்கம். அறக்கடை - பாவம். சிமிழ்ப்பு - கட்டு. வயக்கம் - விளக்கம். அயில் - கூர்மை. அம்மா, வியப்பிடைச்சொல். 'சிவலிங்கப் பதிட்டை, அறுத்து நூறி மாட்டி உய்க்கும் வாளாய் மாறுவாழ்வு பயக்கும்' என முடிக்க.

௪. இதனால் ஏனைய திருமேனிகளிலும் சிவலிங்கப் பதிட்டையே சிறந்ததென்பது பெறப்படுமென்பதாம்.

புடைகளினும் மணிநீர் வேலைக், கரைகளினும் எங்கெங்குங் கண்ணுதலோன் சிவலிங்கப் பதிட்டை ஒன்றே, உரைவிளங்கச் செய்தமைத்தா ரன்றிவே றெவன்செய்தார் உணர்வான் மிக்கீர். ச

மேதகைய தவம்தீர்த்தங் கொடைவேள்வி துறவுநிலை விரதம் யாவும், ஒருசிவக் குறிநிறுவும் பயன்கோடி படுங்கூற்றின் ஒன்றுக் கொவ்வா, ஆதலின்இச் சிவலிங்கம் வேதிகையி னெடுஞ்சிலையான் அமைப்போர் யாரும், ஏதம்அறுத் தவ்வுடம்பின் வீடெய்தப் பெறுவர்இதற் கையு றேன்மின். ரு

இம்முறையில் தாபித்த சிவலிங்கம் இறைஞ்சுநரும் விமான மேல்கொண், டம்மலர்ப்பூங் குழற்பணைத்தோள் அரம்பையர்சா மரையிரட்ட அமரர் போற்ற, எம்மருங்கும் இசைமுழங்கப் பெருந் தேவர் அழுக்கறுப்ப இனிதின் ஏகிச், செம்மல்அருட் சிவலோகத் தானந்தந் திளைத்துறைவார் பிறவுங் கேண்மோ. சு

சோமாஸ்கந்தர்

வேறு

அடலிற் கொதிக்கும் படைஆழி அண்ணல் முதலோர் ஏத்தெடுப்பத்
தடவுச் சீயப் பிடர்த்தலையிற் கவினும் மணிப்பூந் தவிசும்பர்க்
கடவுட் பிராட்டி உடங்கிருப்பக் கதிர்வேற் காளை நள்ளிருப்ப
நடலைப்பிறவி மருந்தாகி வைகும் நாதன் திருவுருவம். எ

ஏகபாதர்

அடுப்பார்க் கருளும் ஒருதாளும் அம்பொற் கமல விழிமூன்றும்
படப்பாம் பணிந்த புயம்நான்கும் சூலப் படையும் எழில் வயங்க
இடப்பால் அரியை வலத்தயனை எழுநாற் கோடி உருத்திரரை
நடுப்பால் தோற்றி ஐயைந்து வடிவும் உடனும் நலம்பிறக்கி. அ

---

ரு. வேதிகை - பீடம். உடம்பென்றது பிறப்பை.

எ. ஏனைய திருவுருவங்களின் பதிட்டைப் பயன் கூறுவார் இதுமுதல் உரு சிவமூர்த்தங்களும் கூறுகின்றார். சீயப்பிடர்த்தலையில் - சிங்கத்தின் பிடரியினிடத்தில். உடங்கு - சேர. நள் - நடு. நடலை - துன்பம்.

அ. ஐயைந்து வடிவு - இருபத்தைந்து சிவமூர்த்தங்கள். உடனும் நலம் - ஒன்றாகப் பொருந்தும் நன்மை. பிறக்கி - விளங்கச் செய்து.

புகன்ற இடப்பாற் பகுதியினைப் புந்தித் தலத்திற் புந்தியினை
அகங்கா ரத்தின் உறுதன்மாத் திரையிற் பொறியின் அவ்வவற்றைத்
தகுந்தாள் குய்யம் உந்திகளம் தலையிற் பார்நீர் அனல்வளிவான்
மிகுஞ்சீர் விழியி னிடத்திரவி வெண்கேழ் மதியைப் படைத்தருளி.

அடியின் அடங்குங் கீழுலக மனைத்தும் அடியின் உறத்
தோற்றி, முடியின் அடங்கும் மேலுலக முழுதும் முடிப்பால்
அளித்தருளிப், படியில் கருணைப் பிழம்பாகிப் பரசும் அடியார் அக
விளக்காய்க் கொடிய மலநோய் அரட்டொதுக்குங் கோணைப் பெரு
மான் திருவுருவம். க0

எச்சேச்சுரர்

ஓவா இன்பப் பெருங்கருணை ஒன்றும் வதனம் ஓர்இரண்டும்
பூவார் கமலப் பதம்மூன்றும் போகு கூர்ங்கோ டொருநான்குங்
காவாய் என்பார் மலம்ஐந்தும் அறுமா றளிக்குங் கரம்ஏழுந்
தாவா அருளும் படைத்துடைய எச்சத் தலைவன் திருவுருவம். கக

இடபாருடர்

இகலி எதிர்ந்தோர் குடர்குழம்ப இடியின் முழங்கி ஏற்றெதிர்ந்து
தொகுவெம் படைகள் முழுதழக்குந் தோலா மதுகைச் சூர்த்தவி
புகரில் காட்சி வெள்ளிவரை நடந்தா லனைய போர்விடைமேல் [ழிப்
திகழ மலைமா துடனுறையுந் தேவ தேவன் திருவுருவம். கஉ

சந்திரசேகரர்

உடையாள் ஒருபால் வீற்றிருக்குஞ் செவ்வி நோக்கி உள்புக்கு
மிடையா நின்ற பெருந்தேவர் விலகப் புடைக்கும் வேத்திரத்திண்
படையார் குடங்கைத் திருநந்தி பகவன் றனக்கு வரமுதவிப்
புடையார் கணங்கள் போற்றிசைப்ப வைகும் புராணன் திருவுருவம்.

---

க0. அரட்டு - தீமை. கோணை - அழிவின்மை. உலகங்களை இவ்வாறு இறைவன் தனது உறுப்புக்களினின்றும் தோற்றுவித்தலை வாதுளாகமம் கூறும்.

கக. இஃது எண்ணலங்காரம். போகு - நீண்ட.

கஉ. தோலாமதுகை - தோல்வியடையாத வீரம். சூர்த்த - அச்சந் தருதலுடைய.

கந. செவ்வி - சமயம். புராணன் - பழையோன்.

நடராசர்

சிலம்பின் ஒலிகேட் டருகணையுஞ் செங்கால் அன்னப் பெடைமானப்
புலம்பு மணிப்பூண் முலைஉமையாள் மகிழ்ந்து நோக்கிப் புடைநிற்ப
உலம்பி மறைகள் ஒலமிட உம்பர் பழிச்ச முடிக்கங்கை
அலம்ப அழகார் பெருந்திருக்கூத் தாடும் பெருமான் திருஉருவம்.

உக்கிரர்

வடாது மலையிற் புயநான்கும் மலர்க்கண் மூன்றும் உருத்திரமும்
தடாய படப்பாப் பரைநாணுங் கபாலக் கரமுந் தழலன்றிக்
கடாது சிவந்த சுரிபங்கி கவின்ற முடியும் வெண்ணிறமும்
கெடாத வனப்பிற் பெருங்கோலங் கெழீஇய பெருமான் திருஉருவம்.

புரசைக் களிறட் டுரிபோர்த்த கோலப் போலிவும் புகைவடிவும்
அரசச் சிய உரிகொண்ட உத்த ரியத் தனியழகும்
பிரசக் கமல மெனச்சிவந்த விழிகள் மூன்றும் பிறங்குலகம்
பரசத் தகுவெண் டலைதண்டம் பரித்த கரமுங் கூரெயிறும். கசு

மருவிற் பொலிந்த மலர்க்கிழவன் வகுத்த அண்டம் அனைத்தினையும், பொரியிற் கொறித்துக் கொறித்துமிழும் பூட்கைக் குரண்டப் பெயரானைச், செருவிற் படுத்த வெள்ளிறகு திங்கட் குழவிக் கதிர்கிளைத்திட், டுருவுற் றெழுந்தா லெனமாடே ஒளிரச் செருகுந் திருமுடியும். கஎ

திருமால் பணிலக் கோவைநிரை வயங்கும் புயமுந் தெரித்தருளிப்
பெருநீர் அளக்கர் வாய்மடுத்தும் உங்கா ரப்பே ரொலிவிளைத்தும்
வெருவா வீரம் படநகைத்தும் பூதகணங்கள் மிடைந்தேத்த
அருளா னந்த நடங்குயிற்றும் அண்டர் பெருமான் திருவுருவம். கஅ

---

கச. உலம்பி - ஒலித்து. அலம்ப - ஒலிக்க.

கரு. வடாது மலையின் - மேருமலைபோல. உருத்திரம் - உக்கிரம். தடாய - அகன்ற. தழலன்றிக் கடாது - நெருப்பல்லது பிறிதொன்று ஒப்பாகாதவாறு. பங்கி - சிகை.

கசு. புரசை - யானைக் கழுத்திடு கயிறு. அரசச்சியம் என்றது நாசிங்கத்தை.

கஎ. பூட்கை-உறுதியான உள்ளம்.குரண்டப் பெயரான்-குரண்டாசுரன்.

கஅ. தெரித்தருளி நடங்குயிற்றும் பெருமான் என்க.

அர்த்தநாரிஸ்வரர்

உமையுந் தானும் வேறன்மை உருவி னிடத்துந் தெளிப்பான்போல்
இமைய மயிலை ஒருபாதி வடிவின் இருவி னாற்கரத்தும்
அமைய வனசந் திரிசூலம்* அபய வரதம் இவைதாங்கி
நமையும் உய்யக் கொண்டருளும் நாரி பாகன் திருவுருவம். கசு

இலகுளீசர்

அடுத்தங் குடனும் பரம்பொருளை அன்றே விரவ வொட்டாமல்
தடுத்து முக்கூற் றுயிருணர்வைத் தகையும் அவிச்சை முழுதிரிய
மடுத்த கருணைத் திருநோக்கின் மாணுக் கருக்குப் பொருளுரைப்ப
எடுத்த கரத்தான் வீற்றிருக்கும் இலகுளீசன் திருவுருவம். உ0

நீலகண்டர்

நவில்''ஓம் நீல கண்டாய நம'' என் றியம்பும் எட்டெழுத்தும்
நுவல்வார் மீள மலக்கூட்டின் நுழையா வாறு† பெறஇமையோர்
கவலா திரங்கி ஆலாலங் கதிர்ப்பூங் கரத்தின் ஏந்திஅரிச்
சுவலார் அணையின் வீற்றிருக்குஞ் சோதிச் சுடரோன் திருவுருவம்.

சலந்தராரி

இருகூ றுகச் சலந்தரனை இறுத்து மாட்டி அவ்வடிவம்
அருகே தோன்றச் சுதரிசனம் அங்கைத் தலத்தின் மிசைவந்தி [கத்
முருகார் கடுக்கைத் தண்ணறும்பூந் தொடையல் வாகை முடிவிளங்
திருவார் காட்சி அளித்தருளுந் தேவர் கோமான் திருவுருவம். உஉ

சக்கர தானர்

வழிதிஞ் சுவைக்கள் வாய்மடுத்து மழலைச் சுரும்பர் இசைமிழற்றுஞ்
செழிபூங் கமலம் ஒன்றினுக்குத் திருந்து காதல் மெய்யன்பின்

---

கசு. *'திருச்சூலம்' எனவும் பாடம்.

உ0. முக்கூற்றுஉயிரை மேலே (பக். ௬௬௩) கூறினும். தகையும்-தடுக்கும். அவிச்சை - ஆணவமலம் கரத்தான் என்புழி ஆனுருபு ஒடு உருபின் பொருளில் வந்தது.

உக. 'ஓம் நீலகண்டாய நம:' என்பது சிவ அட்டாக்கர மென்பர். அரி - சிங்கம். சுவல் - பிடர். †'உளையாவாறு' எனவும் பாடம்.

உஉ. அவ்வடிவம், சலந்தரன் உருவம். சுதரிசனம் என்பது சலந்தரனை அழித்தற்கு உண்டாக்கப்பட்ட சக்கரத்தின் பெயர். இதுவே திருமாலுக்குக் கொடுக்கப்பட்டது.

உ௩. கள் - தேன். சூன்று - பெயர்த்து.

விழிசூன் றடியின் அருச்சித்த விறல்மா யனுக்குச் சுதரிசனங்
கழிபே ரருளால் ஈந்தருளுங் கடவுட் பெருமான் திருவுருவம். ௨௩

அந்தகாரி

வெருவா நிகும்பன் மிசைஒருதாள் ஊன்றி நின்று வெஞ்சூலத் [ப்பி
தொருகூர்ப் பரம்மைத் தொருகரத்தால் உமையைத் தழுவிக் கைகூ
அருகே நிற்கும் அந்தகனை நோக்கி அரவச் சிலம்பணிந்து [வுருவம்
திருமால் முதலோர் தொழுதேத்தச் சிறக்கும் இறையோன் திரு

திரிபுராரி

பொருப்புச் சிலையில் வாசுகிநாண் பூட்டி அரிகோல் வளிஈர்க்கு
நெருப்புக் கூராம் படைதொடுத்துப் பிரம வலவன் நெடுமறைமா
விருப்பிற் செலுத்து நிலத்தேர்மேல் நின்று தெவ்வூர் வெந்தவிய
அருப்புக் குறுவெண் ணகைமுகிழ்த்த அந்த ணாளன் திருவுருவம்.

கங்காதரர்

விசும்பி னின்றும் வெகுண்டார்த்து முழங்கிக் கொதித்து வீழ்தந்த
அசும்பு திரைநீர் வான்யாற்றை அங்கோர் வேணி மயிர்நுதியிற்
பசும்புல் அறுகிற் பனிஉறைபோல் தாங்கி வைகிப் பாவவினை
இசும்பு கடக்கும் பகீரதன்நின் றிரப்ப மகிழ்வான் திருவுருவம். ௨௬

ஆபத் சகாயர்

கணங்கள் கலுழி மதக்கடவுள் கதிர்வேற் குரிசில் எழுமாதர்
நிணங்கொள் திகிரிப் படைஏந்தல் நிலவெண் டோட்டு மலர்ப்புத்தேள்
அணங்கு நவக்கோள் முனிவரர்சூழ்ந் தனுக்க ராகப் பொலந்தவிசின்
இணங்கும் ஆவற் சகாயனெனும் இறைமைப்பெருமான் திருவுருவம்.

---

௨௪. நிகும்பன், ஓர் அசுரன். கூர்ப்பரம் - முழங்கை. அந்தகன் - அந்தகாசுரன். அரவச் சிலம்பு - பாம்பாகிய சிலம்பு.

௨௫. அரி - திருமால். கோல் - அம்பு. ஈர்க்கு - அலகு. வலவன் - தேர்ப்பாகன். மறைமா - வேதக்குதிரை. தெவ்வூர் - பகைவர் ஊர், திரிபுரம்.

௨௬. வீழ்தந்த - விழுந்த. அசும்பு - கசிவு. வான்யாறு - ஆகாய கங்கை. நுதி - நுனி. உறை - துளி. இசும்பு - வழுக்குநிலம்.

௨௭. கலுழிமதக் கடவுள் - விநாயகர். நிலாவென்பதிலுள்ள குறிற்கீழ் ஆகாரம் குறுகி நில என நின்றது. ஈண்டுப் பிரமனுக்கு வெண்டாமரை கூறப்பட்டது; செந்தாமரை கூறுதலும் உண்டு.

சோதிலிங்கேச்சுரர்

கடைக்கால் வெள்ளப் பெரும்புணரி காப்பட் கதிர்த்த சுடர் இலிங்கத், திடைப்பால் மதியம் முடிவயங்கத் தோன்றி விசும்பின் எகினமுங்கீழ்த், தொடைப்பூந் துளபச் சூகரமுங் துலங்க முடிமேற் கரங்குவித்துப், படைப்பான் முகுந்தன் வலம்இடமும் பரவத் திகழ் வோன் திருவுருவம். உஅ

மச்ச சங்காரர்

வானம் பழிச்ச வலைமாக்கள் வடிவு தாங்கி வலம்புரிக்கை
மீனம் படுத்து விழிசூன்று விரல்மோ திரத்தின் எவ்வுயிர்க்கும்
ஞானம் பயப்பக் குருவிந்த நலங்கேழ் மணிபோற் பதித்தணிந்த[ம்.
கானம் படிச்துச் சுரும்புளருங் கடுக்கைத் தொடையோன் திருவுருவ

கூர்ம சங்காரர்

மகரந் திளைக்குங் கடல்ஏழும் மலங்கக் கலக்கும் பசுந்துளவ
முகைவிண் டலர்தார் ஆமைதனைப் பற்றித் தகர்த்த முதுகோடு
நகுவெண் டலைமா லிகையணிக்கு நடுகா யகமாக் கோத்தணிந்து [ம்.
புகரின் றுயர்ந்தோர் தொழப்பொலிந்த புத்தேள் செல்வத் திருவுருவ

வராக சங்காரர்

சுழிக்கும் புனல்ஏழ் கடல்சுவற்றி மலைகள் ஏழுந் துகள்படத்தீ
விழிக்குங் கடவுட் பன்றியினை விறல்வே டுருக்கொண் டெழுந்தருளி
அழித்தங் கொருவெண் கோடுபறித் தணிந்து மற்றை இடக்கோடு
பழிச்சுந் துதிகேட் டுளம்இரங்கி விடுத்த பகவன் திருவுருவம். ௩௧

நரசிங்க சங்காரர்

நன்னு லிரண்டு திருவடியும் நனிநீள் வாலும் முகம்இரண்டும் [றிச்
சொன்னர் சிறகும் உருத்திரமும் கொடும்பே ரார்ப்பும் எதிர்தோற்

உஅ. கதிர்த்த சுடர் இலிங்கம் - முளைத்த சோதி லிங்கம். இடை, ஏழனுருபு. பால் மதியம் - பால்போலும் வெள்ளிய சந்திரன். எகினம் - அன்னம். சூகரம் - பன்றி. படைப்பான் - பிரமன்.

உகூ. வலம்புரிக்கை மீனம் - திருமாலாகிய மச்சம். படுத்து - அழித்து. விழியைச் சூன்று அணிந்த என இயைக்க. சூன்று-பெயர்த்து. மோதிரத்தின்- மோதிரமாக. குருவிந்தம் - பதுமராகம். கானம்படித்து - இசைபாடி.

௩0. மகரம் - சுறாமீன். துளவத்தார் ஆமை - திருமாலாகிய ஆமை.

௩௧. தீவிழிக்கும் - நெருப்புண்டாகப் பார்க்கின்ற. கடவுட் பன்றி - திருமால் அவதாரமாகிய பன்றி. வேடுரு - வேடவடிவம்.

செங்கீர் பருகிச் செருக்குநர மடங்கல் ஆவி செகுத்துரிகொண்,டொன்
ஞர் குலங்கள் முழுதழிக்கும் உடையான் சரபத் திருவுருவம். ௩௨

கங்காளர்

குறளாய் அணைந்து மூவடிமண் கொண்டு நெடுகி மூவுலகுந்
திறலான் அளந்து மாவலியைச் சிறையிற் படுத்து வியந்தானை
இறவே சவட்டி வெரிக்எலும்பை எழிற்கங் காளப் படையென்ன
அறவோர் வழுத்தக் கைக்கொண்ட அங்க ளுளன் திருவுருவம் ௩௩

காலபைரவர்

பொலங்கொள் பங்கி முகரோமம் பொலிய உமையோ டம்புயம்போல்
அலர்ந்த விழிகள் இரண்டும்அது முகிழ்த்தா லனைய நுதல்விழியும்
இலங்க இரவி நடுவிளங்கி இருவர் இகல்போ தயன்சிரங்கொய்
தலங்கும் உகிரான் மருங்கமர அமர்ந்த பெருமான் திருவுருவம்.

பிட்சாடனர்

அடியில் தொடுத்த பாதுகையும் அசைந்த நடையும் இசைமிடறும்
வடிவிற் சிறப்ப நடந்தருளி மூழை ஏந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோள் முனிமகளிர் சுரமங் கையரை மபல்பூட்டிப்
படியிட் டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் திருவுருவம். ௩௫

பதிட்டைப் பயன்

என்று மறைஆ கமம்வகுக்கும் இன்னோ ரன்ன திருவுருவுள்
ஒன்று காஞ்சித் திருநகரில் உடைய பெருமான் ஏகம்ப
மன்றல் கமழும் மலர்வாவி மதில்சூழ் கோயில் அகவரைப்பின்
நன்று மகிழ்ந்து விதியாற்றாற் பதிட்டை புரிந்த நலமுடையோர்.

---

௩௨. நாலிரண்டு - எட்டு. கொன் - அச்சம். உருத்திரம் - உக்கிரம். செங்கீர் - (இரணியன்) உதிரம். செருக்கு - அகங்கரித்த. மடங்கல் - சிங்கம்.

௩௩. குறளாய் - வாமன வடிவமாய். நெடுகி - நீண்டு. வியந்தானை - அகங்கரித்த திருமாலை. இற - அழிய. சவட்டி - அழித்து. வெரிக் - முதுகு.

௩௪. பங்கி - மயிர். அம்புயம் - தாமரை. இருவர் - மால் அயன். இகல் போது - போர் செய்யுங்கால். அலங்கும் - ஒளி விடுகின்ற. உகிரால்கொய்து என்க.

௩௫. மூழை - சோறு, பிச்சை. படி - பிரதி.

எண்ணில் கோடி இளம்பரிதி குழீஇக்கொண் டெழுந்தா லெனவயங்கி, விண்ணை விழுங்கும் வளரொளிசூழ் விமான மேல்கொண் டிருமருங்கும், வண்ண மணிச்சா மரைஇரட்ட வானோர் முடிகள் அடிவருடத், தண்ணென் நறும்பூ மழைபொழியத் தனி வெண் கவிகை மிசைநிழற்ற. ௩௭

மிதுனம் பயிலுங் கின்னரங்கள் மெய்சோர்ந் தணுகிப் புடைவீழப், பொதுளுந் தருக்கள் கனிந்துருகிப் புதுப்பூங் கொம்பர் தலைகுரங்க, மதுரங் கனிந்த மென்கிளவி மடவார் பாடும் மிடற்றிசையும், முதிருஞ் சுவைத்தீங் குழல்இசையும் முதல்யா ழிசையுந் தலைமயங்க. ௩௮

பண்ணின் மழலைத் தேன்துளிப்பப் பனிப்பூங் கதுப்பில் தேன்துளிப்பக், கண்ணும் விரலும் புடைபெயரக் கண்டோர் மனமும் புடைபெயர, வண்ண மணிமே கலைஇரங்க மறுகும் இடைக்கு வேள்இரங்க, விண்ணின் வாழ்க்கை மெல்லியலார் மின்னுக் கொடி போல் எதிர்நடிப்ப. ௩௯

சென்று சேர்ந்து பன்னெடுநாட் சிவலோ கத்திற் பரபோகம்
நன்று நுகர்ந்து பின்நெடுமால் நளினக் கிழவன் வாசவன்சீர்
ஒன்றும் ஏனைப் பெருந்தேவர் உலகம் அனைத்தும் அணைந்தணைந்து
மன்ற நெடுநாள் ஆங்காங்குப் போகம் நுகர்ந்து வைகியபின். ௪௦

முந்நீர் வரைப்பின் அவதரித்து ஞால முழுதும் ஒருகுடைக்கீழ்ப்
பன்னாள் ஆண்டு மறுவலுஞ்சீர் பரவுங் காஞ்சித் திருநகரிற்
பொன்னார் வேணி ஏகம்பப் புத்தேள் அடிக்கீழ் வழிபட்டு
மின்னேர் பாகன் திருவருளான் மீளா வீட்டின் நிலைபெறுவார். ௪௧

மற்றைய பதிட்டைப் பயன்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

ஓங்குயர் விழுச்சீர்க் கம்பனூர் கோயி லுள்ளுறை நந்திஎம் பிரானை, ஆங்கவர் திருமுன் வெள்ளியங் கயிலை அமர்ந்தெனத்

---

௩௮. மிதுனம் பயிலும் கின்னரங்கள் - யாழ் இசையிற் பழகுகின்ற கின்னரமென்னும் பறவைகள். பொதுளும் - நெருங்கிய. குரங்க - வளைய.

௩௯. மழலைப் பண்ணின் என மாறுக. கதுப்பு - கூந்தல்.

௪௨. வாயில் காப்பாளர் - துவாரபாலகர், திருநலம் - சுத்தபோகம்,

தருமவெள் விடையை, வாங்குவில் வரையார் வாய்தலின் இருபால் வாயில்காப் பாளரை அமைப்போர், தேங்கிய செல்வச் சிவபுரி அணுகித் திருநலந் திளைத்துவீ டடைவார். சஉ

அங்குச பாசம் வரதமோ டபயம் நாற்கரத் தமைவரக் கலை மான், பங்கயக் கிழத்தி பாங்கியர் சூழப் பத்திர பீடமேல் வைகும், எங்கள்நா யகிதன் திருவுருப் பிறவும் இயற்றிவண் காஞ்சி யின் அமைப்போர், தங்கிளை குளிர்ப்ப நெடிதுநாள் வாழ்ந்து கடை முறை தாளிணை சேர்வார். சங

ஐங்கரப் பெருமான் அறுமுகக் குரிசில் அறிவிலான் வேள்வி பாழ் படுத்த, வன்கழல் வீரன் கேத்திர பால வயிரவர் தம்மை ஆங் கமைப்போர், செங்கதிர் துர்க்கை மாயனை அயனைத் திருத்தக நிறுவினர் தாமும், புங்கவர் வழுத்தும் அவ்வவர் உலகம் புகூஉப் பெரும் பயன் நுகர்ந் தமர்வார். சச

அறநெறி ஒழுகிச் சிவாகமம் மறைநூல் அஞ்செழுத் துண்மை தேர்ந் துணர்ந்து, முறையுளி வழாது கண்டிகை பூண்டு முழுதுநீ றணிந்துவெள் விடையூர், இறையவன் அடிக்கீழ்ப் பொதுவறு சிறப்பின் எண்வகை உழுவல்அன் புடையார், மறையவர் வேந்தர் வணிகர்வே ளாளர் மற்றையர் யாவரே யாக. சரு

மன்னிய பிரம சரியம்இல் வாழ்க்கை வனம்புரி நிலையின ராக, அன்னவர் தமக்கு மனைநிலை ஈகை யாதிய அளித்துவண் காஞ்சித், தொன்னகர் வரைப்பிற் கவலையின் றிருத்துந் தூயவர் கறைமிடற் றிறைவன், தன்னருள் வடிவம் பதிட்டைசெய் தவர்க்குச் சாற் றிய பயன்முழு தடைவார். சசு

பற்றெலாம் ஈசன் திருவடித் தலத்தே பதித்துடற் சார்பற நீத்த, அற்றமில் காட்சிப் பெருந்தற வுடையார் அடியிணை தொழுதுபோற் றிசைத்துச், சுற்றுபூம் பொதும்பர்த் தடம்புனற்

சங. பத்திர பீடம் - யோக நூலுட் கூறப்படும் ஆசனங்களுள் ஒன்றாகிய பத்திராசனம். குளிர்ப்ப - இன்பமுற.

சரு. உழுவலன்பு - இடையறாது தொடர்ந்து வந்த அன்பு; எண்வகை யென்றமையால் அதனை எட்டுவகைப் படுத்துரைக்கும் மரபு உளதாகல் வேண்டும்.

சஎ. பயிக்கம் - பிச்சை. பெரும்பணித் தலைவன் - ஆதிசேடன்.

காஞ்சிச் சூழலுட் பயிக்கம்நன் குதவப், பெற்றவர் பெறும்பே
றிற்றெனக் கிளத்தல் பெரும்பணித் தலைவர்க்கும் அரிதே. சஎ

பொருள்நிலைக் கேற்ப ஓவியத் தலத்திற் புகாறு படாந்தனில்
அனைய, திருவடி வங்கள் எழுதிவைப் பவருந் தீவினை துணித்துவீ
டடைவார், அருமறை மிருதி சிவாகம புராணம் அனைத்தினும்
புகன்றவா புகன்றும், மருள்நிலை கழித்த மாசறு தவத்தீர் மற்றுள
தருமமும் புகல்வாம். சஅ

சிவாலயம் எடுத்தற் பயன்

கலிநிலைத் துறை

வளங்கொள் கச்சிமா நகர்மறு கிடைவிளை யாடும்
இளஞ்சி றார்களும் புழுதியிற் சிவாலயம் இயற்றிக்
கிளர்ந்து போற்றினுஞ் சிவபுரங் கெழுமுவ ரென்றால்
விளங்கு காஞ்சியிற் சிவாலயம் எடுப்பதே வேண்டும். சகூ

ஈட்டு கின்றதம் பொருள்வரு வாயினுக் கிசைய
ஊட்ட ருஞ்சுடர் மணிகளிற் கனகத்தின் ஒட்பங்
காட்டு தாதுவில் வெள்ளியிற் சுதையினிற் கனலின்
வாட்டு செங்கலின் மரத்தினின் மண்ணினு னுதல். ருo

கந்த மாதனம் பனிவரை நீலம்வான் கயிலை
மந்த ரந்திகழ் ஏமகூ டம்வளர் நிடதம்
முந்து பொன்வரை முதற்குல வரைப்பெய ரொன்றாற்
சந்த மேனிலைக் கோபுரம் மண்டபந் தயங்க. ருக

விளங்கு நாகரந் திராவிடம் வேசரம் மற்றுங்
கிளந்த வற்றுளோர் பெற்றியிற் கெழுவுபே ரன்பால்
துளங்கு வெண்டிரைக் கருங்கடற் சுடுவிடம் பருகிக்
களங்க றுத்தவன் ஆலயங் காண்டக எடுப்போர். ருஉ

---

சஅ. ஓவியத்தலம் - சித்திரச் சுவர். படாம் - சீலை. இதுகாறும் திருவுருவப்பதிட்டைப் பயன் கூறப்பட்டது.

சகூ. கெழுமுவர் - சேர்வார்கள். எடுப்பது - உண்டாக்குவது.

ருo. ஊட்டருஞ்சுடர் - சேர்த்தலில்லாத இயற்கையாகிய ஒளி. கனகம்- பொன். தாது - உலோகம், ஈண்டுச் செம்பு. சுதை - சுண்ணாம்பு.

ருஉ. நாகரம் - வடமொழி. திராவிடம் - தமிழ். வேசரம் - தெலுங்கு. பெற்றி - விதி.

மேவும் அவ்வமால் வரைநிகர் விமானமேல் கொண்டு
தேவர் மாலயன் முனிவரர் சித்தர்வத் தெடுப்பக்
காவி நேர்மிடற் றெம்பிரான் கயிலையை நண்ணி
ஓவ ரும்பெரும் போகம்உண் டுறைந்துவீ டடைவார். ௫௩

புதுக்குதற் பயன்

மூரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய
நெரிந்த வாகிய கோபுரம் நெடுமதில் பிறவுந்
தெரிந்து முன்னையிற் சீர்பெறப் புதுக்குவோர் பண்டு
புரிந்து ளோர்பெறும் புண்ணியம் நான்மடங் குறுவார். ௫௪

மெய்யன் ஆலயப் பணிஉடல் விருத்தியைக் குறித்துச்
செய்து ளோர்பெறும் பயனும்ஒண் மகமெலாஞ் செய்தார்
எய்து மாறரி தென்றிடில் உறுதியோ டியற்றும்
உய்தி யாளருக் குரைத்திட வேண்டுவ தெவனோ. ௫௫

எட்டுச் செங்கலி னாயினும் ஈர்ம்புனல் வேணி
வட்டச் சென்னியான் ஆலயத் திருப்பணி வகுத்தல்
ஒட்டிப் பெற்றஇவ் வுடற்பய னவதென் றுணர்வீர்
அட்டுத் தீவினை ஐந்தவித் தொழுகும்அந் தணர்காள். ௫௬

ஏற்றின் மேலவன் ஆலயத் திருப்பணி இயற்றும்
ஆற்றல் இல்லருங் கோயிலின் அகம்புறம் எங்கும்
போற்றி நுண்ணுயிர் மெல்லெனு அலகிடல் புரிதல்
நூற்று நூறுசாந் திராயண கிரிச்சரம்* நோக்கும். ௫௭

அறுசீரடி யாசிரிய விருத்தம்

குடம்புரை செருத்தல் தீம்பால் கொழித்திடுங் கபிலை ஆப்பி
இடம்படும் விசும்பின் ஏந்தி வடித்தநீர் வாக்கி என்றும்

௫௬. எட்டுச் செங்கல்லினாலாயினும் என்றதற்குச் சிறுவர்கள் விளையாடு தற்குச் செங்கற்கள் சிலவற்றை எடுத்துக் கோயில்போல இணக்கி வைத்தல் போலவாயினும் என்பது கருத்துப்போலும்.

௫௭. நூற்று நூறு - பதினாயிரம். சாந்திராயணம் என்பதும், கிரிச்சரம் என்பதும் ஒவ்வொரு விரதங்கள். நோக்குமென்றது ஒக்குமென்றபடி.
* 'கிரிச்சிரம்' எனவும் பாடம்.

அடம்பணி சடிலத் தெங்கோன் ஆலயம் மெழுகு வோர்க்குப்
படும்பயன் அதனின் நூறு மடங்கெனப் பகரும் நூல்கள். ருஅ

ஒலிமலர்த் தொடரி பெம்மான் ஒள்நிலாக் குழவி வேய்ந்த
அலர்முடிச் சடையிற் சாத்தல் நூற்றுநூ றதிக மாகும்
மலர்தொறும் உவகை பூத்து வானவர் வதிவார் அந்த
நலமிகு மலர்கொண் டேத்தல் நாதனுக் கினிதென் றோர்வீர். ருகூ

மலர்களில் வாழும் கடவுளர்கள்

கன்னிகா ரத்தில் வாணி அலரியிற் கமலப் புத்தேள்
வன்னியில் வன்னி நந்தி நந்தியா வட்டப் பூவிற்
புன்னையில் வளிந மேருப் பூவினிற் கணங்கள் ஏடு
துன்னிய எருக்கின் அங்கித் தோன்றல்செண் பகத்துச் செவ்வேள்.

திருமகள் வில்லந் தன்னிற் சிறந்தகொக் கிறகின் மாயோன்
வருணன்வா ருணமென் போதில் வகுளத்திற் சுயசை மற்று
நிருதிமென் சிரீடப் பூவிற் சாதியில் நிகழ்ஈ சானன்
பரிதிசெங் கழுநீர்ப் பூவிற் குமுதத்திற் பனிவெண் டிங்கள். கூக

இந்திரன் மந்தா ரத்தின் இயக்கர்கோன் பொலம்பூ மத்தத்
தந்தகன் பாமார்க் கத்தின் ஆரருள் கூர்ந்து வாழ்வார்
கந்தமென் கமலப் போதிற் கண்ணுதல் இறையே வைகும்
பைந்துகள் நீலப் பூவிற் பனிவரைப் பிராட்டி மேவும். கூஉ

மேதகு வாசத் தெல்லாம் மலைமகள் விரும்பி வைகும்
ஆதலால் இனைய பூக்கள் அமைந்தவை கொண்டு செய்யும்

---

ருஅ. செருத்தல் - மடி. கபிலை - காராம் பசு. ஆப்பி - சாணம். விசும்பின் எந்தி - பூமியில் விழுமுன் தாங்கி.

ருகூ. தொடரி - தொடர்ந்திருப்பது, மாலை. ஒவ்வொரு மலருக்குரிய தேவர்களை வருஞ்செய்யுள் முதலாகக் காண்க.

கூ௦. கன்னிகாரம் - கோங்கு. நமேரு - புன்னையில் ஒருவகை.

கூக. கொக்கிறகு - கொக்கிறகு மந்தாரை. வாருணம் - ஒரு வகை நீர்ப் பூவாதல் வேண்டும். வகுளம் - மகிழ். சுயசை - நந்திதேவர் பத்தினி. சிரீடம் - வாகை. சாதி - சிறுசண்பகம். குமுதம் - ஆம்பல்.

கூஉ. இயக்கர்கோன் - குபேரன். மத்தம் - ஊமத்தம். அபாமார்க்கம் - நாயுருவி. துகள் - மகரந்தம். நீலம் - நீலோற்பலம்.

பாதபூ சனைக்கே கம்பப் பரம்பொருள் கருணை கூரும்
போதணி புயத்தின் மேலாம் பூந்தொடை தொடுத்துச் சாத்தல். ௬௩

அவற்றினும் அதிக மாகும் அலர்ந்தபுண் டரிக மாலை
எவற்றினுஞ் சிறந்த மேன்மை எழிற்கருங் குவளைப் போது
நிவப்புறு நூற்றுப் பத்தால் நெடுந்தொடை மாலை சாத்திற்
பவத்தொகை இரிய நூறி முத்தியே பயக்கும் அம்மா. ௬௪

ஓங்குயர் திருவே கம்பம் உடையவன் திருமுன் வாசம்
வீங்குநெய் விளக்குத் தூபம் விளைத்திடின் முருகு நாறிப்
பாங்கொளி பரப்பு மேனி படைத்துவெண் கபிலை நண்ணித்
தேங்கருட் பரமானந்த வேலையுள் திளைத்து வாழ்வார். ௬௫

மட்டவிழ் பொழில்சூழ் கம்ப வரைப்பிடை மதிதேய் பக்கத்
தட்டமி பதினான் கான தினங்களின் அன்பு கூர்ந்து
கட்டெழிற் கபிலை ஆன்நெய் கலந்தகுங் கிலியத் தூபம்
இட்டவர் செய்த குற்றம் ஆயிரம் பொறுப்பன் எங்கோன். ௬௬

வடித்தநீர் வாசம் பெய்து வள்ளலுக் காட்டல் செய்யிற்
படித்தலைப் பத்து நூறு பரிமேதஞ் செய்த பேறும்
கடிச்செழுந் தயிலம் ஆன்நெய் கமழும்ஐந் தமிர்தம் எம்மான்
அடித்துணைக் குறும்ஆ னைந்தும் ஒன்றின்ஒன் றதிக மாமால். ௬௭

மண்டுபே ரன்பின் ஆன்பால் மணிமுடிக் காட்டு வோர்பால்
அண்டர்தம் பெருமான் மேன்மேல் அளவிலா மகிழ்ச்சி கூரும்
வெண்டயிர் கருப்பஞ் சாறு விளைமதுப் பிறவும் ஆட்டின்
எண்டபும் வேள்வி யெல்லாம் இயற்றிய பெரும்பே றெய்தும். ௬௮

மந்திரத் திருஒற் றுடை சாத்திமான் மதங்கர்ப் பூரஞ்
சந்தனக் கலவை சாத்திச் சாந்தாற்றிப் பணிசெய் கிற்போர்
தந்திரு மாயிற் கோடி தமர்களை நரகின் நீக்கி
இந்துவாழ் சடிலத் தெந்தை இணையடி நீழல் வாழ்வார். ௬௯

---

௬௫. முருகு - வாசனை. ஒளிபரப்பு மேனி, திவ்வியதேகம் எனப்படும்

௬௬. பதினான்கான தினம் - சதுர்த்தசி; இது சிவராத்திரி எனப்படும்.

௬௯. மான்மதம் - கத்தூரி, சாந்தாற்றி - விசிறி.

நுழையும்நூற் கலிங்கம் வெண்கேழ் நுரைபுரை நறும்பூம் பட்டு
விழைதகு தீவில் தந்த விசித்திரப் படங்கள் அன்பான்
மழைமிடற் றிறைக்குச் சாத்தின் மழுவலான் உலகின் ஓரோர்
இழையினுக் கியம்புங் கற்பம் ஆயிரம் இனிது வாழ்வார். எ0

நால்விரல் அளவை கொண்ட நல்லிழை தொண்ணூற் றாறிற்
சால்புற மும்மூன் றாக்கி மூன்றுறச் சமைத்த பூணூல்
சீலமோ டென்றுஞ் சாத்துந் திருமறை யவரைக் காண்டால்
மாலுடைப் புலையர் தாமும் மறுமையின் மறையோ ராவார். எக

இம்மியி னளவு செம்பொன் எம்பிரான் முடியிற் சாத்தின்
அம்மஆங் கவர்பெ றும்பே றனந்தற் றும் அளத்தல் செல்லா
விம்மிய செல்வர் கோடி வீசலும் வறியோர் தன்னம்
உண்மையின் அளித்தற் கொவ்வா உறுதிஅன் புடைமை பெற்றால்.

வெறிமலர் இண்டை மாலை விரைகமழ் தூப தீபம்
அறுசுவை அடிசில் ஆன்ற வெள்ளிலை பழுக்காய் மற்றும்
உறுகுடை கவரி யாதி பூசனைக் குரிய வெல்லாம்
முறுகுபே ரன்பின் எந்தைக் காக்குவோர் முத்த ராவார். எங

நித்தியத் திருநாள் பக்க விழாநிகழ் திங்கட் சாறும்
புத்தலர் இளவே னிற்கட் பொருவரும் வசந்தங் கோடை
மெத்திய முதுவே னிற்கண் மிதவைநீ ராட்டு மாரி
மொய்த்தகார்ப் பருவந் தன்னிற் பவித்திர முதுவி ழாவும். எச

அன்புறு கூதிர்க் காலை ஐப்பசிப் பூரச் சாறு
முன்பனிப் பருவந் தன்னில் வைகறை முகிழ்த்த பூசை

---

எ0. நுழையும் - நுணுகிய, மெல்லிய. படங்கள் - ஆடைகள்.

எக. நான்கு விரலைப்பிடித்துத் தொண்ணூற்றாறு முறை சுற்றி மூன்று புரியாக முறுக்கிய நூல் மூன்றாலாகிய பூணூலென்க. "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்" (திருமுரு கஅங.) என்றதுங் காண்க.

எஉ. வீசல் - கொடுத்தல். தன்னம் - சிறிது.

எச. பக்கம் - பட்சம். திங்கட்சாறு - மாதவிழா. மிதவை - தெப்பம். நீராட்டு - தீர்த்தவிழா. ஈற்றிலுள்ள விழாவை வசந்த முதலியவற்றோடுங் கூட்டுக. இளவேனில், சித்திரையும் வைகாசியும். முதுவேனில், ஆனியும் ஆடியும். கார் - ஆவணியும் புரட்டாசியும்.

பின்பனிப் பருவந் தன்னிற் பிறங்குபொன் னூச லாட்டும்
என்பன சிறப்பு மாண இயற்றுவோர் வீடு சேர்வார். ௭௫

பொங்கரி பரந்த உண்கட் பூவையோ டொருமா நீழல்
தங்கிய பெருமா னுர்க்குச் சார்தரும் ஆண்டு தோறும்
பங்குனித் திருநாட் செய்கை பழுதறு சிறப்பின் மல்க
மங்கல விதிபி னுற்றல் விடைக்கொடி வயங்க வேற்றி. ௭௬

கலி விருத்தம்

முழவந் திண்டிமம் பேரி முரசுசீர்
ஒழுகு காகள மாதி உலம்புவ*
கழிபெ ருங்கடல் காட்ட அதனிடைக்
குழுமு பேனமொத் தொண்குடை பம்பிட. ௭௭

அன்ன மாக்கடல் தோன்றிய ஆரமிழ்
தென்ன மாதர் மிடற்றிசைப் பாடலும்
நன்னர் மங்கல நாதமும் வேதமும்
மன்னும் அன்பர்கள் பாட்டும் மலிந்தெழ. ௭௮

இமய மாதிய ஈகையங் குன்றெலாந்
தமதி ருங்குடித் தையல்நல் லாளொடும்
விமலர் கொள்ளும் விழாவணி காணவந்
தமைவு கொண்டெனத் தேர்கள் அலங்குற. ௭௯
பொன்னங் கிண்கிணி பூஞ்சிலம் பின்னொலி
மின்னு மேகலை ஆர்ப்பொலி மிக்குற

---

௭௫. கூதிர்க்காலம், ஐப்பசியும் கார்த்திகையும். சாறு - விழா. முன்பனி, மார்கழியும் தையும். இக்காலத்தில் விடியற்காலையில் சிறப்பாகப் பூசை செய்தல் வேண்டும். தனுர்மாத பூசை என்னும் வழக்கமுங் காண்க. பின்பனி - மாசியும் பங்குனியும்.

௭௬. இதுமுதல் ஆண்டு விழாவாகிய பிரமோற்சவங் கூறுகின்றார். பிரமோற்சவம் - பெரிய உற்சவம்.

௭௭. முழவம் - மத்தளம். திண்டிமம் - தம்பட்டம். பேனம் - நுரை. *'புலம்புவ' எனவும் பாடம்.

௭௯. ஈகை - பொன். அலங்குற - விளங்க.

அன்ன மன்ன அணங்கனை யார்குழாந்
துன்னி எங்கணும் ஆடல் தொடங்கிட. ௮௦

சிகர மாளிகைத் தெற்றி தொறும்பயில்
மகர தோரணப் பன்னிற மாமணி
துகளில் பேரொளி துன்றிய வீதியும்
புகரில் சித்திரந் தீட்டிய போலுற. ௮௧

பூக மும்பசும் பொற்குலை வாழையும்
மாக முந்திட நாட்டி வயக்கிய
போகு பந்தரும் பூரண கும்பமும்
ஏகும் அவ்விடந் தோறும் இலகிட. ௮௨

வளிஉ லாமதர் மாளிகை சூளிகை
குளிர்கொள் மண்டபங் கோபுர மீதெலாம்
நளிம லைத்தலை நன்கொடி பூத்தெனக்
களிம டக்கொடி யார்கஞு லித்தொழ. ௮௩

குங்கு மக்குழம் புங்குளிர் சாந்தமும்
பொங்கு வாசப் புதுப்பனி நீரொடு
வெங்கண் மங்கையர் பந்தினில் வீசுவ
எங்கும் மல்கி அடிகள் இழுக்குற. ௮௪

முடிகள் தம்மின் அராவி முழுமணி
படியில் உக்கன பாறினங் கொண்மின்என்
றுடைய மாந்தர்க் கறிவுறுத் தாங்கவர்
அடிகள் பைதுறத் *தங்கங் கவிர்தர. ௮௫

---

௮௧. தோரணங்களிலுள்ள மணிகளின் பல நிறங்களாகிய ஒளிகள் தம்மிடத்தில் விழுந்து கிடத்தலால் வீதிகளும் சித்திரம் தீட்டப்பெற்றிருத்தல் போலக் காணப்படுகின்றன என்பதாம்.

௮௩. மதர் - பெருத்த. பூத்தென - பூவோடுகூடித் தோன்றினாற்போல. கஞுலி - நெருங்கி.

௮௪. பந்து - நீர்வீசுங் கருவி. வெங்கண் - கொடிய பார்வை.

௮௫. அராவி - அராவுதலால். உக்கன - உதிர்ந்து. பாறினம் - நிலைகுலைந்தோம். ஆங்கு, உவமவுருபு. பைதுறுத்து - வருத்தி. 'அறிவுறுத்தாங்கு பைதுறுத்து' எனஇயைக்க. *'பேதுறுத்' தெனவும் பாடம்.

இளிந்த பூகத் திருங்கனி வெள்ளிலை
ஒளிர்ந்த பொன்மணி ஒண்பொரி பன்மலர்
அளிந்த பல்பழ மாதி இறைப்பன
குளிர்ந்து வீதி குழீஇத்திடர் செய்திட. அசு

கவள யானைக் கடாம்மழைத் தாரையும்
இவுளி வாயின் இழிந்த விலாழியும்
உவரி யாகி உயர்ந்தஅத் திட்டையைத்
திவள மோதிப் படர்ந்தன செல்லவே. அஎ

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கல்வரைப் பிராட்டி செவ்வேள் ஐங்கரன் கணங்கள் சூழப்
பல்வகை ஊர்தி உம்பர்ப் படரொளி அரச வீதி
எல்லையில் உயிர்கட் கெல்லாம் எண்ணருங் கருணை பூத்துப்
புல்லொளித் திருவே கம்பன் திருஉலாப் போதச் செய்வோர். அஅ

மேதகு தவந்தா னங்கள் வேள்விகள் அனைத்துஞ் செய்தோர்க்
கோதிய பயத்திற் கோடி யுடைராய்க் கோடி கோடி
ஏதமில் குலத்தி னோடும் எம்பிரா னுலகின் வாழ்ந்து
சாதலும் பிறப்பும் இல்லாத் தத்துவந் தலைப்பட் டுய்வார். அகூ

இத்தகு கடவுட் சாறு நோக்கிஅங் கிறைஞ்சு வோரும்
அத்தகு விழவின் ஈற்றில் தீர்த்தநீர் ஆடு வோரும்
பைத்தபாம் பல்குற் செவ்வாய்ப் பனிமொழி ஒருபால் மேய
வித்தகன் கயிலை நண்ணி விறற்கண நாத ராவார். கூ0

ஏழுபர்ந் தேழு மண்தோய்ந் திலக்கணம் நிரம்பும் வேழங்
காழ்மணி யணிகள் பூட்டிக் கவின்பெற விருத்தி யோடுங்

---

அசு. இளிந்த - உதிர்ந்த. அளிந்த - நன்றாகப் பழுத்த.

அஎ. கடாம் - மதம். இவுளி - குதிரை. விலாழி - யானை குதிரைகளின் வாய்நீர். உவரி - கடல். திவள - சரிய.

அஅ. ஊர்தியின்மேல் வீதியில் உலாப்போதச் செய்வோர் என்க.

அகூ. தத்துவம் - உண்மை ஞானம்.

கூக. ஏழு இரண்டனுள் முன்னையது முழுத்தையும், பின்னையது உறுப்புக்களையும் குறித்து நின்றன. ஏழு உறுப்புக்களைமேலே (பக் ருகூரு) காண்க. விருத்தி - ஓம்புதற்குவேண்டும் பொருள்.

கோழரைத் தனிமா நீழற் குழகனுக் குதவப் பெற்ரோர்
பாழ்வினைச் சிமிழ்ப்பின் நீர்ந்து திருவருள் பற்று வாரால். கூக

நலமிகும் பரிமா ஆக்கள் நாடகக் கணிகை நல்லார்
நிலம்நகர் நாடு மற்றும் நெடுமறை மாவின் மூலத்
தலைவனுக் கினிது நல்குந் தவத்தினோர் கயிலை நண்ணி
அலகில்பல் லூழி வாழ்ந்தக் கரும்பெறல் வீடு சேர்வார். கூஉ

மாயிரு மறைகள் மற்றும் புத்தகத் தெழுதிக் கம்பக் [றற்
கோயிலின் அமைப்போர் வெள்ளிக் குன்றிடை எழுத்தொவ் வொன்
காயிரங் கற்பம் வாழ்வார் சிவாகமம் அமைக்கும் பேறு
மேயினோர் எய்தும் பேற்றை யாவரே விளம்ப வல்லார். கூ௩

வண்டுளர் தனிமா நீழல் வள்ளலுக் கன்பு கூர்ந்து
பண்டுளோர் ஆக்கும் இன்ன அறங்களைப் பாது காப்போர்
ஒண்டிறல் அன்னோர் பேற்றிற் பதின்மடங் குறுவர் மையல்
கொண்டிவை காவா வேந்தர் நிரயமே குளிப்பர் உண்மை. கூச

அனந்தரால் அவற்றென் றேனுங் கவருநர் ஐய மின்றி
இனம்பயில் கடும்பி னோடுங் கெடுவரால் இனைய நீரால்
தனங்களுங் கிளையுந் துன்றத் தங்குதல் விழையும் வேந்தர்
கனம்பயில் பொழில்சூழ் காஞ்சி உறுதியின் வழாது காத்தல். கூரு

கச்சியின் வாவி கூவல் கடிபொழில் வகுத்துப் பேணிப்
பொச்சமில் சிவநே சர்க்குப் பொருள்நிலம் வதுவை ஈவோர்
நிச்சலும் அன்ன தானம் நிகழ்த்துவோர் எய்தும் பேறு
பச்சிளங் கொடியின் ஓர்பாற் பகவனே அறியும் மன்னே. கூசு

சொல்லும்இத் தரும வாய்மைத் தொகுதியுள் யாதொன் றானும்
வல்லுநர் வல்லா ராக மதிபொதி வேணி யார்க்கு
நல்லரசிருக்கை யாய காஞ்சிமா நகரின் ஓர்நாள்
அல்லதோர் கணமே யானும் அமர்ந்திடிற் பிறப்பு நீப்பார். கூஎ

---

கூரு. அனந்தர் - மதிமயக்கம். கடும்பு - சுற்றம்.

கூசு. வது - பெண். நிச்சலும் - நாள்தோறும்.

கூஎ. ஆகவென்பதை வல்லுநர் என்பதனோடுங் கூட்டுக. வல்லார் - மாட்டாதவர். 'வல்லுநர் வல்லாராகுக; மாட்டாதார் அமர்ந்திடிற் பிறப்பு நீப்பார்' என்றுரைப்பாருமுளர்.

கண்டிகை நீறு தாங்கிக் காலையும் மாலைப் போதும்
அண்டர்கோன் அடிகள் போற்றி அடியவர் பூசை யாற்றித்
தொண்டினால் அங்கண் வைகுந் தூயவர் தமக்கே கம்பத்
தொண்டொடி பாகன் எங்கோன் கருணைகூர்ந் துதவும் முத்தி. ௯௮

பற்பல பேசி என்னை பருவரு நிரயத் துன்புந்
துற்றபல் யோனி தோறுஞ் சுழன்றுழல் பிறவி நோயும்
உற்றிடும் ஆண்டாண் டெய்தும் உறுதுயர் பலவும் நோக்கி
மற்றிவை யொழிதல் வேட்டோர் காஞ்சியின் வதிதல் வேண்டும்.

காஞ்சியே கலியில்வசித்தற் கிடமெனல்

கலி விருத்தம்

காமருஞ் சிவிகைகள் காவி யாயினுந்
தோமுறு பிறர்சுமை* சுமந்திட் டாயினுஞ்
சாமிஎன் றிழிஞர்தம் பணிசெய் தாயினும்
மாமதிற் காஞ்சியின் வதிதல் வேண்டுமால். ௧௦௦

கழுதைமேய்த் தாயினும் மற்றுங் காழ்படும்
இழிதொழில் இயற்றியும் இரந்துண் டாயினும்
ஒழிவறு பத்தியின் உறுதி யாளராய்
வழுவறு காஞ்சியின் வதிதல் வேண்டுமால். ௧௦௧

பாதக மிகுதியோர் பதிதர் மூர்க்கர்கள்
போதமில் கயவர்கள் புலைய ராயினும்
மாதர்வண் காஞ்சியின் வதிவ ராயிடின்
கோதறு கலியினின் முத்தி கூடுவார். ௧௦௨

ஔவியங் கொலைகள வாதி மிக்குடைக்
கௌவைகூர் கொடுந்திறற் கலியு கத்திடைத்

---

௯௯. ஆண்டாண்டு - ஆங்காங்கு.

௧௦௦. காவி - சுமந்து. தோம் - குற்றம். சாமி - தலைவனே; விளி.
* 'பிறர் தமை' எனவும் பாடம்.

௧௦௧. காழ்படும் - கீழ்ப்பட்ட.

௧௦௨. பதிதர் - ஒழுக்கமற்றவர்கள். கலி - கலியுகம்.

௧௦௩. ஔவியம் - பொறாமை. கௌவை - துன்பம்.

தெய்வதக் காஞ்சியந் தேயத் தன்றிமற்
றெவ்விடத் தெய்தினும் முத்தி இல்லையே. ௧௦௩

இல்லைவை திகநெறி இல்லை நல்லறம்
இல்லைநால் வருணம்ஆச் சிரமம் இல்லையாம்
இல்லைமா ணாக்கர்கள் இல்லை ஆரியர்
இல்லைநல் லொழுக்கமுங் கலியின் என்பவே. ௧௦௪

வைதிக சைவநூல் மானக் கோள்இலை
பொய்யில்ஐந் தெழுத்திற்கண் மணிபிற் பூதியில்
ஐமுகப் பிரானிடத் தன்பும் இவ்வுகத்
தெய்திடும் இருபிறப் பாளர்க் கில்லையே. ௧௦௫

தாபதப் பிருகுமெய்த் ததீசி கௌதமன்
சாபமன் றியுங்கலி தோடத் தான்மிகத்
தேய்பொருட் பாஞ்சராத் திரம்ப வுத்தமாம்
பாபநூல் உறுதியே பனவர்க் குண்டரோ. ௧௦௬

யாதுகொல் கலிபதன் இயல்பும் அங்கதற்
கேதமும் அதன்மிறை காஞ்சிக் கின்மையும்
ஓதுதி விரித்தெமக் கெனஉ ரைத்தலுஞ்
சூதமா முனிமுனி வரர்க்குச் சொல்லினன். ௧௦௭

### யுகங்கள் வரம்பெறல்

*கலிநிலைத் துறை*

சகமெ லாம்மலை மாதொடுந் தன்னகத் தொடுக்கிப்
பகல்இ ராஉள திலதெனும் பகுப்பில்அக் காலைப்
புகழ்ப டைத்ததான் ஒருவனே வைகிமுன் போல
அகில லோகமும் படைத்திடக் கருணைசெய் தருளி. ௧௦௮

---

௧௦௫. மானக்கோள் - பெருமையுடைய கொள்கை. இச்செய்யுளால் சைவாசாரத்தை இறித்துரைக்கும் பிராமணர் செயல் கூறப்பட்டமை காண்க.

௧௦௬. ததீசி கௌதம சாபங்களை மேலே (பக். ௩௦௪, ௪௩௬-௨௦) காண்க. பாஞ்சராத்திரம் - வைணவம். பௌத்தமென்றது, அதனை ஒட்டியுள்ள மாயாவாத மதத்தை; இராமாநுசரும் அதனைப் "பிரச்சின்ன பௌத்தம்" என்று கூறியுள்ளார். பனவர் - பிராமணர்.

௧௦௮. மலைமாதொடும் ஒடுக்கி என்றது, இறைவன் தனது சத்தி வியாபாரங்களை ஒழித்து நிற்றலைக் குறிக்கும்.

அறிவும் இச்சையும் செய்கையும் அடைவுறத் தோற்றி
வெறிம லர்த்தவி சிருக்கைவே தியனைமுன் படைத்து
மறைகள் ஈந்துபின் மாயனை உம்பரை உலகை
முறையின் ஈன்றளித் தருளினன் முக்கண்எம் பெருமான்.

மன்னு நான்மறை வேதியர் மன்னவர் வணிகர்
பின்னு ளோருடன் வீடறம் பெரும்பொருள் காமம்
என்னு நான்கினை இசைவுறத் தோற்றிஇந் நான்கிற்
பன்னு சீர்உகப் பெயரிய நான்கையும் படைத்தான். ககo

கனிந்த காதலால் அன்னவை காஞ்சியைக் குறுகி
அனந்த பற்பநா பேச்சரந் தனக்கயல் வடபால்
மனந்த ழைத்திடச் சிவக்குறி நிறுவிநாண் மலர்கள்
புனைந்து போற்றிநின் றருந்தவம் ஆற்றிடும் பொழுது. ககக

கம்ப நாயகர் விடைமிசைக் காட்சிதந் தருளி
இம்பர் வேட்டது விளம்புமின் தருதும்என் றருள
வம்பு லாமலர் தூய்த்தொழு திறைஞ்சிவாழ்த் தெடுத்துத்
தம்பி ரான்எதிர் உகங்கள்மற் றின்னது சாற்றும். ககஉ

நரகும் வானமும் நல்கிடும் பனிவரைத் தென்பாற்
கரும பூமியை யாம்பகுத் தாள்கருத் துடையேம்
பெரும நீபகுத் தெங்களுக் கருளெனப் பேசித்
திருவ டித்துணை பழிச்சனுஞ் சேவுடைக் கொடியோன். ககங

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கருமநிகழ் பாரதமாம் வருடமிசைக் காலப்பே றிறைமை நம்பால், இருவினேம் ஆண்டளவை ஒன்றொழிந்த பதினொருநான் கிலக்க மேலால், இருபதினா யிரமுறுக இங்கிவற்றை நால்வீர்க்கும் ஈயு மாற்றால், வருமுறையிற் கூறுபடுத் துதவுதும்என் றருள் செய்து வகுக்க லுற்றான். ககச

---

கoகூ. அறிவு முதலியமூன்றும் ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி எனப்படும்.

ககo. இந்நான்கின் - இந்நான்கைக் கொடுக்கும்; கொடுக்குமென்றது மிகுதி பற்றி.

ககச. இருவினேம் - வைத்தோம். ஆண்டு - வருடம். ஒன்றொழிந்த பதினொருநான்கு - நாற்பத்துமூன்று. இங்குக் கூறப்பட்ட தொகை நாற்பத்துமூன்று லட்சத்து இருபதினாயிரம்.

அருள்பயக்கும் வீடுதவுங் கான்முளையாங் கிருதயுக மூத்தோய் ஆதி, தெருள்பயக்கும் அறம்பயக்குந் திரேதாநீ இளையோய் காண் செப்புங் காலைப், பொருள்பயக்குந் துவாபரநீ இவர்க்கிளையாய் பொலிவுபெறு காமம் ஈன்ற, மருள்பயக்குங் கலியுகநீ மூவருக்கும் இளையோயாய் வயங்கு வாயால். ககடு

வேதியனே கிருதயுகம் வேல்வேந்தன் திரேதாமெய் வணிகன் றானே, ஓதுதுவா பரம்ஏனோன் கலியாகும் இம்முறையான் உமக்கு வைத்த, ஏதமில்இந் நாற்பத்து மூன்றிலக்கத் திருபதினாயிரமாம் ஆண்டும், பேதமுறும் ஈரைந்து கூறுகப் பகுத்தந்தப் பிரிவின் மன்னோ. ககசூ

கிருதமோர் நாற்கூறு முக்கூறு திரேதாவுங் கிளந்து கூறும்
இருகூறு துவாபரமும் ஒருகூறு கலியுகமும் எய்து வீரால் [கட்கு
பெருவாய்மை மறையாக நாற்குலத்து மனைவியர்பாற் பெறுஞ்சேய்
வருகூறும் இவ்வாறே நான்குமூன் றிரண்டொன்று வழக்கமாமால்.

இவ்விடையேற் றறக்கடவுள் முறையானே எழிற்கிருத முதலீர் நும்மை, எவ்வமறு நாற்பாதம் முப்பாதம் இருபாதம் ஒருபா தத்தால், கௌவையற நடத்திடநீர் காசினியை நடாத்திடுமின் முதல்மூவிர்க்கும், ஔவியமில் அம்புயத்தோன் இரவிமால் இவர்முறையே இறைவ ராவார். ககஅ

தீமையே மிகப்படைத்த கலிஇவராற் காப்பரிய திறத்தால் இந்த
நாமநெடுங் கலிநாளின் மன்பதைகள் புரப்பதற்கு நாமே உள்ளேம்
காமருசீர் உகங்காள்மற் றின்னும்ஒரு மொழிகேண்மின் காதல்கூர்ந்தி
யாமினிது மகிழ்ந்துறையுங் காஞ்சியிடை நும்அவத்தை எய்தா தாக.

வெய்யகொடுங் கலித்தீமை சிறிதும்இவண் உறல்வேண்டா இவ்வா றென்றும், மையகல நம்மாணை வழிஒழுகி உய்மின்என

ககஎ. இம்முறையால் வகுப்பின், கிருதயுகம் முதலிய நான்கு யுகங்கட்கும் முறையே, க௭௨அ000, க௨௯௬000, அ௬௪000, ௪௩௨000 வருடங்களாதல் காண்க. பெருமறை வாய்மையாக எனமாறுக.

ககஅ. பிரமன் முதலியோர் நான்கு யுகங்கட்குத் தலைவரென்பது மேலே இட்டசித்தீசப் படலம் கசஎஆம் செய்யுளிலும் கூறப்பட்டது, 'எய்தாவாக' எனப் பாடங்கொள்ளுதல் சிறக்கும்.

வரங்கள் ஈந்து, கையொளிரும் மழுப்படையோன் அருள்செய்தான் ஆதலின்இக் கலிநாள் முத்தி, எய்தியிடும் விழைவுடையோர் திருக் காஞ்சி இடம்பிரியா திருத்தல் வேண்டும். ௧௨௦

நந்திபிரான் அருள்பெற்றுச் சனற்குமரன் நவின்றபடி வியாத மேலோன், இந்துவாழ் சடைப்பெருமான் திருவடிகாண் பதற்கேது இதுவே யென்ன, அந்நிலெனக் குரைசெய்த அரும்பொருள்இங் குமக்குரைத்தேன் அறிவின் ஆன்ற, சிந்தையீர் தெளிமின்எனச் சூதமுனி முனிவரர்க்குத் தெருட்டி னனால். ௧௨௧

ஆகத் திருவிருத்தம் - ௨௭௪௨.

---

## உரை நடை

முனிபுங்கவர்களே, காஞ்சியம்பதியில் வாழ்கின்ற நியதியாளர்களாய் திருவேகம்பப் பெருமானது திருவடிகளை வழிபடும் இயல்புடையோரது மேன்மையை நானே தெரிந்துரைக்கவல்லேன்! இனி, காஞ்சியம்பதியில் செய்யத்தக்க சிவபுண்ணியத்தையும் சொல்லக் கேளுங்கள்.

எப்படிப்பட்ட புண்ணியங்களும் காஞ்சியிற் செய்தால் வளர்ச்சி யடையும். அப்புண்ணியங்களுள் சிவபுண்ணியம் சிறந்ததாகும். அச்சிவ புண்ணியம் சிவலிங்கப்பதிட்டை, ஏனைய சோமாஸ்கந்த வடிவமுதலிய வடிவப்பதிட்டை, திருக்கோயில் திருப்பணி, திருக்கோயிற்பூசை, திருவிழா

---

௧௨௧. அரன்திருவடி காண்டற்கு ஏது எங்களுக்கருளுதி, (புராணவ- ௨௫.) எனக்கேட்ட நைமிசாரணிய முனிவர்களுக்கு, 'சிவனைக் காண்பதற் கேது இதுவேகொண்மின்' (தலவி. ௨௮.) என விடைகூறிய சூதமுனிவர், 'அத்தலமேன்மை அனைத்தும் விரித்தருள்' (திருநெறி. ௧.) எனக்கேட்ட முனிவர்களுக்கு இதுகாறும் காஞ்சித்தலத்தின் பெருமையை விரித்துரைத்து, 'இக் கலிநாள்முத்தி எய்தியிடும் விழைவுடையோர் திருக்காஞ்சி யிடம் பிரியா திருத்தல் வேண்டும், வியாத மேலோன் பெருமான் திருவடி காண்பதற்கேது இதுவே என்ன உரைசெய்த அரும்பொருள் இங்கு உமக் குரைத்தேன் தெளிமின்' என்று மறித்துணர்வு நிகழக்கூறித் தெருட்டினு ரெனக்கூறி, 'இத்திருக் காஞ்சி வைப்பிற் பலதளி யிடத்தும் மேவி கம்ப வாணர் அவரவர்க் கருளிச்செய்த காதையெல்லாம் சூதன்அன் றுரைத்தவாறே உரைப்பேன்' (திருநகர. ௧௨௬.) எனப்புகுந்த ஆசிரியர், தாம் எடுத்துக் கொண்ட நூலை இனிது முடித்தனரென்க. அந்நில், அசைநிலை,

சிவனடியார்பணி முதலாகப் பலவகைப்படும். அவற்றுள், சிவலிங்கப் பதிட்டை, எல்லாப் பாவங்களையும் போக்கி, பிரமாண்டத்தையும் பிளந்து, வினைப்பகையையும் பிறவிப்பகையையும் நீக்கி, விளங்குகின்ற சிவலோகத்தில் சேர்க்கின்ற கூரியவாளாய் மீளாமுத்தியை யளிக்கும். திருமால், பிரமன், இந்திரன், முனிவர், சித்தர்முதலிய யாவரும், மலை, வனம், நதிக்கரை முதலிய எவ்விடங்களிலும் சிவலிங்கப்பதிட்டை ஒன்றையே செய்தார்களன்றி வேறு எதைச் செய்தார்கள்? தவம், தீர்த்தயாத்திரை, வேள்வி, துறவுநிலை, விரதம் முதலிய யாவும் சிவலிங்கப்பதிட்டையின் கோடியில் ஒருகூறுக்கும் ஒப்பாகா. ஆதலின், இத்தகைய சிவலிங்கத்தைப் பீடத்தோடும் சிலையினால் அமைப்பவர் எவரும் அப்பிறப்பிலேயே முத்தியை அடைவார்கள். இதற்குச் சிறிதும் ஐயமில்லை. இவ்வாறு பதிட்டிக்கப்பட்ட சிவலிங்கத்தை வணங்குவோர்களும் விமானத்தின்மேலேறிச் சிவலோகத்தை அடைவார்கள்.

இனி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடராசர், அர்த்தநாரீசர், வைரவர், பிட்சாடனர் முதலிய இருபத்தைந்து சிவமூர்த்தங்களைப் பதிட்டை செய்தவர்களும் சிவலோகத்தில் பலநாள் சிவபோகமுற்று, மாலயன் முதலியோர்களது பதஇன்பங்களையும் நுகர்ந்து, பூமியில் ஏகசக்கராதிபதிகளாய் வாழ்ந்து, பின்னர் மீளாமுத்தியை அடைவார்கள்.

சிவசந்நிதானத்தில் நந்திதேவர், இடபம், துவாரபாலகர்களை அமைப்போர் சிவலோகத்தில் வாழ்ந்து முத்தியை அடைவார்கள். அங்குசம், பாசம், வரதம், அபயம் பொருந்திய நான்குகரங்கள் அமைந்து, இலக்குமியும் சரசுவதியும் சூழ்ந்திருக்கப் பத்திராசனத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவியின் திருவுருவத்தைக் காஞ்சியில் அமைத்தவர்கள் சுற்றத்தார் மகிழ நீடுவாழ்ந்திருந்து கடைசியில் இறைவன் திருவடிநீழலை அடைவார்கள். விநாயகர், முருகர், வீரபத்திரர், க்ஷேத்திரபால வைரவர், திருமால், பிரமன் முதலியோர் வடிவத்தையும் இறைவன் சந்நிதியில் அமைப்போர் அவரவர் உலகங்களை அடைவார்கள். சிவாகமங்களை ஆராய்ந்து, திருவைந்தெழுத்தை நன்குணர்ந்து விபூதி உருத்திராக்கங்களை அணிந்து, சிவபெருமான்பால் பொதுநீக்கிச் சிறந்த அன்புசெலுத்தும் அடியவர்கள் எவ்வருணத்தவராயினும், எவ்வாச்சிரமத்தவராயினும் அவர்களுக்கு மனை, பொன்முதலியவற்றைக் கொடுத்தோர்கள் இறைவன் வடிவத்தைப் பதிட்டை செய்தோர்கள் அடையும் பயனை அடைவார்கள். அத்தகைய துறவுடையவர்களுக்குக் காஞ்சியில் பிச்சையிடப்பெற்றவர் பெறும்பேறு இத்தன்மைத்தென்று சொல்ல ஆதிசேடனாலும் இயலாது. மேற்கூறிய மூர்த்தங்களைப் பதிட்டைசெய்ய இயலாதவர்கள்

தம்பொருள் நிலைமைக்கு எற்க, சுவரிலாயினும் சிலைகளிலாயினும் எழுதி வைப்பினும் பதிட்டைசெய்த பயனை அடைவார்கள்.

காஞ்சியம்பதியில் விளையாடும் பிள்ளைகள் தெருக்களில் மண்ணில் சிவாலயம் இயற்றிவணங்கினும் சிவலோகத்தை அடைவரென்றால் யாவரும் காஞ்சியிற் சிவாலயம் இயற்றுதலே வேண்டும். அங்ஙனம் இரத்தினங்கள், பொன், செம்பு, சுண்ணாம்பு, செங்கல் என்பவற்றில் தம் பொருள்நிலைக்கேற்ப வற்றால் சிவாலயம் அமைத்தோர் கைலையை அடைந்து வாழ்ந்து முத்தியடை வார்கள். பழைய சிவாலயங்களைப் பழுதுபார்க்கின்றவர்களும் புதுக்குகின்ற வர்களும் முன்னே அவற்றைச் செய்தவர்கள்பெற்ற புண்ணியம்போல நான்குமடங்கு புண்ணியத்தை அடைவார்கள். பிழைப்பின் பெருட்டுச் சிவாலயப்பணிசெய்தோர் பெறும்பயனை எல்லா வேள்வியும் செய்தோரும் பெறுதல் அரிது என்றால் அன்போடு செய்வோர்களுக்குச் சொல்லவேண்டுவ தென்ன? சிறிதாயினும் சிவாலயப்பணி செய்தலே மனிதப் பிறவியின் பயனாகும்.

இறைவன் திருக்கோயிலைத் திருவலகிடுதல் பதினாயிரஞ் சாந்திராயண விரதம் கிரிச்சா விரதங்களை நிகர்க்கும். விதிப்படி மெழுகுதல் அதனினும் நூறுமடங்கு அதிகமாகும். பூமாலை கட்டிச் சாத்தல் அதனினும் பதினாயிர மடங்கு அதிகமாகும். எல்லாமாலைகளிலும் சிறந்தது தாமரைப் பூமாலை. கருங்குவளை மலர் ஆயிரத்தால் தொடுத்த மாலை சாத்தினால் முத்தியே கிடைக் கும். திருவேகம்பர் திருமுன்பில் நெய்விளக்கு, தூபம் இடுவோர்கள் திவ் விய தேகம் பெற்றுக் கைலையை அடைவார்கள். அமர பக்கத்து அட்டமி சதுர்த்தசி தினங்களில் திருவேகம்பத்தில் கபிலைப் பசுவின் நெய்கலந்த குங்கிலியத் தூபத்தை இட்டவர்கள் செய்த ஆயிரம் பிழைகளை இறைவன் பொறுத்தருளுவன். வடித்தெடுத்த வாசனை கலந்த நீரால் இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்வித்தால் ஆயிரம் அசுவமேதயாகம் செய்த பயனாகும். எண்ணெய், பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியங்களால் ஆட்டுதல் ஒன்றினொன்று சிறந்தனவாகும். ஆன்பால் ஆட்டுதல், இறைவனுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருவதாகும். கருப்பஞ்சாறு தேன் முதலியவற்றை ஆட்டின் வேள்வியெல் லாம் செய்த பயனாகும்.

திருவொற்றாடை, வாசங்கலந்த சந்தனம் சாத்தி விசிறியால் அசைப் போர் கோடி சுற்றத்தவரை நரகினின்றும் நீக்கி இறைவன் திருவடி நீழலை அடைவார்கள். நூலாடை, பட்டாடைகளைச் சாத்துவோர் இழைக்கு ஆயிரங் கற்பமாகச் சிவலோகத்தில் வாழ்வார்கள். பூணூல் சாத்தினோரைக் கண்டவர் களும் மறுபிறப்பில் உயர்ந்த பிறப்பை அடைவார்கள். ஓர் இம்மியளவு பொன் இறைவன் திருமுடியில் சாத்தினோர் பெறும்பேற்றை ஆதிசேட

னும் அளந்து சொல்லஇயலாது. செல்வர் கோடி கொடுத்தலும், வறியோர் அன்போடு சிறிது கொடுத்தற்கு நிகராகாது. தூபம், தீபம், நிவேதனம், குடை, சாமரை முதலிய பூசைக்குரிய உபகரணங்களைக் கொடுத்தோர் முத்திக்குரியராவர்.

நித்தியவிழா, பட்சவிழா, மாதவிழா, வசந்தவிழா, கோடைவிழா, தெப்பவிழா, பவித்திரவிழா, ஐப்பசிப் பூரவிழா முதலிய திருவிழாக்களும் தனுர்மாத முதலிய காலங்களில் விடியற்கால பூசையும் செய்விப்போர் முத்தியை அடைவார்கள். திருவேகம்ப நாதருக்கு ஆண்டுதோறும் பங்குனித் திருநாளாகிய பிரமோற்சவத்தைக் கொடியேற்றிச் சிறப்பாகச் செய்வோர் தவம், தானம், வேள்வி எல்லாவற்றையும் செய்தவர்கள் அடையும் பயன் கோடி மடங்கு அடைந்து, குலத்திலுள்ளவர்கள் கோடிகோடி பேர்களோடும் சிவலோகத்தில் வாழ்ந்து பிறப்பிறப்பில்லாத உண்மை வீட்டை அடைவார்கள். இத்தகைய திருவிழாக்களைக் காண்பவரும், தீர்த்தவாரியினன்று தீர்த்தமாடுவோரும் கைலையில் கணநாதராவார்கள்.

இலக்கணம் வாய்ந்த யானையை அதன் வளர்ப்புக்குரிய பொருளோடு திருவேகம்பருக்குக் கொடுத்தவர்கள் பாசத்தளையினின்று நீங்கித் திருவருள் பெறுவார்கள். குதிரை, பசுக்கள், கணிகையர், நிலம், நகரம், நாடு, மற்றும் இவைபோல்வனவற்றைத் திருவேகம்பருக்குக் கொடுத்தவர்கள் கைலையில் பல்லூழி காலம் வாழ்ந்து அரிய முத்தியை அடைவார்கள். வேதம் முதலிய கலைகளை எல்லாம் புத்தகத்தில் எழுதித் திருவேகம்பத் திருக்கோயிலில் வைத்தவர்கள் எழுத்தொன்றுக்கு ஆயிரங் கற்பம் கைலாயத்தில் வாழ்வார்கள். அவ்வாறு சிவாகமங்களை அமைக்கும் பேற்றை யாவர் சொல்ல வல்லவர்? திருவேகம்பருக்கு அமைத்த இத்தகைய தருமங்களைப் பாதுகாப்பவர் அவற்றை அமைத்தவர்கள் அடையும் பயன் பத்துப்பங்கு அடைவார்கள். மதி மயக்கத்தால் இத்தருமங்களைக் காவாத அரசர்கள் நரகமே புகுவர்; இது சத்தியம் ! மயக்கத்தால் அப்பொருள்களுள் ஒன்றையேனும் கவர்ந்தவர்கள் சுற்றத்தாரோடும் அழிவர்; இதிற் சந்தேகமில்லை. ஆதலால், சுற்றத்தாரோடும் வாழ விரும்பும் அரசர்கள் காஞ்சியில் அமைந்துள்ள தருமங்களைத் தவறாது காப்பாற்றுவார்களாக.

காஞ்சியில் பொய்கை, கிணறு, சோலைகள் அமைத்து, சிவபத்தியுடையவர்களுக்குப் பொன், நிலம், பெண்களைத் தானம் செய்வோரும், நாள்தோறும் அன்னதானம் செய்வோரும் அடையும் பயனை இறைவனே அறிவான். இத்தகைய தருமங்களைச் செய்யவல்லவராயினும், செய்ய இயலாதவர்களாயினும் காஞ்சிமாநகரில் ஒருநாளாயினும், அல்லது ஒருநொடிநேரமாயினும்

தங்கினால் பிறப்பைக் கடப்பார்கள். விபூதி உருத்திராக்கங்களை அணிந்து காலையும் மாலையும் திருவேகம்பரை வணங்கி, சிவனடியார் பூசையைச் செய்து அங்குவாழுந் தூயவர்களுக்கு மாதொரு பாகராகிய இறைவனார் திருவருள் சுரந்து முத்தியை அளித்தருளுவர்.

பலபல வார்த்தைகள் பேசி என்ன? நரக வேதனையும், பிறவித்துன்பமும், ஆங்காங்கு வரும் துன்பங்கள் பலவும் நீங்க வேண்டினோர் காஞ்சியில் வாழ்தல் வேண்டும். பல்லக்குச் சுமந்தாயினும், பிறர்க்குச் சுமைசுமந்தாயினும், இழிஞர்பால் ஏவல் செய்தாயினும், கழுதை மேய்த்தாயினும், மற்றும் இழிதொழில் செய்தாயினும், பிச்சையெடுத்தாயினும் உறுதியான பத்தியுடையவராய்க் காஞ்சியில் வாழ்தல் வேண்டும். பெரும்பாதகர்கள், ஒழுக்கமில்லாதவர்கள், கீழ்மக்கள், நீசர்களாயினும், காஞ்சியில் வாழ்வார்களாயின் கலியுகத்தில் முத்தியை அடைவார்கள். கொடுமை மிகுந்த இக்கலியுகத்தில் காஞ்சியைத் தவிர வேறுஇடங்களில் முத்தி இல்லை.

இக் கலியுகத்தில் வைதிக சைவ நெறிகளில்லை. வருணாச்சிரம தருமங்களில்லை. ஆசாரிய சிஷ்ய பத்ததி இல்லை. நல்லொழுக்கமில்லை. வைதிக சைவநூல்களின் கொள்கைகள் இல்லை. பஞ்சாட்சரத்திலும், விபூதிருத்ராட்சங்களிலும், சிவபெருமானிடத்திலும் பிராமணர்களுக்குப் பற்றில்லை. ததீசி கௌதம முனிவர்கள் சாபமன்றியும் கலிதோடத்தால் பாஞ்சராத்திரம் மாயாவாதம் முதலிய பாபநூற்பற்றே பிராமணர்களுக்கு உளதாகும் எனச் சூதமுனிவர் கூறினர்.

அது கேட்டு முனிவர்கள், 'கலி என்பது யாது? அதன் இயல்பும், அதன் துன்பம் காஞ்சிக்கில்லாமையும் விரித்துக் கூறவேண்டும்' என்று கேட்கச் சூதமுனிவர் சொல்லுகின்றார்.

உலகமெல்லாவற்றையும் ஒடுக்கிய சிவபெருமான் அவற்றை மீள உண்டாக்கி, அறம், பொருள், இன்பம், வீடென்னும் நாற்பொருள்களைப் படைத்து, அவற்றைத்தரும் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபர யுகம் கலியுகமென்னும் நான்கு யுகங்களையும் படைத்தருளினர். அவ்யுகங்கள், காஞ்சியை அடைந்து, அனந்த பற்பநாபேசத்திற்கு வடக்கில் இலிங்கந் தாபித்துப் பூசித்துத் தவஞ்செய்ய, அவைகட்கு இறைவன் வெளிப்பட்டு, 'நீவிர் விரும்பியதென்னை?', என்று கேட்டலும் யுகங்கள், 'சுவர்க்க நரகங்களைத் தருகின்ற கரும பூமியாகிய பாரதவருடத்தை யாங்கள் பகுத்து ஆளுங் கருத்துடையேம். அதனைத் தேவரீர் பங்கிட்டுக் கொடுத்தல் வேண்டும்' என்று வேண்டின. சிவபெருமான், 'பாரத வருடத்தின் காலத்தலைமையை உங்கள்பால் வைத்தோம். அக்

காலம் நாற்பத்துமூன்று லட்சத்து இருபதினாயிரம் வருடமாகுக. நீவிர் நால்விரும் முறையே அறம் முதலிய நான்கையும் கொடுத்தற்கும், பிராமணம் முதலிய வருணத்திற்கும் உரிமையுடையீர்களாகவும், ஒருவருக்கு ஒருவர் இளைய சகோதரர்களாகவும் இருக்கின்றீர்கள். ஆகையால், மேல் குறிக்கப்பட்ட வருடங்களைப் பத்துப்பங்காக்கி, முறையே நான்கு, மூன்று, இரண்டு, ஒருபங்குகளாக அடைவீர்களாக. உலகத்தில் சகோதர பாகமும் இவ்வாறேயாகுக. இவ்விடையாகிய தரும தேவதையானது உங்களை முறையே நான்கு, மூன்று, இரண்டு, ஒரு பாதங்களால் நடத்துக. உங்களில் முதல்மூவிர்க்கும் பிரமன், சூரியன், திருமால் தலைவர்களாகுக. தீமை நிறைந்த கலியுகத்தை நடத்துதல் இவர்களுக்கு அரிதாகலின் அதில் நாமே காப்பாற்றுவோம். உமது நிலைவேறுபாடுகளெல்லாம் யாம் மகிழ்ந்துறையும் இக்காஞ்சியில் புகாவாகுக. கலித்தீமை இதனுள் சிறிதும் பொருந்தல் வேண்டா. என்றும் இவ்வாறு நமதாணைப்படி ஒழுகிப் பிழையுங்கள்' என்று வரங்கொடுத்தமையால் இக்கலியுகத்தில் முத்தியடைய விரும்புவோர் காஞ்சியைவிட்டு நீங்காதிருத்தல் வேண்டும்.

நந்தி தேவர்பால் கேட்டுச் சனற்குமார முனிவர் சொல்லியபடி, வியாச முனிவர் இறைவன் திருவடியைக் காணுதற்கு ஏது இதுவே என்று எனக்கு உரைத்த அரியபொருளை இன்று உமக்கு உரைத்தேன். அறிவிற்சிறந்த முனிவர்களே, இதனைத் தெளிவீர்களாக என்று சூதமாமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குத் தெளியச் சொல்லினர்.

---

சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த

காஞ்சிப் புராணம் முற்றிற்று.

திருவேகம்ப முடையார் திருவடி போற்றி.

சிவஞான மாதவன் சேவடி வாழ்க.





முரச பந்தம்

[௩௨௨-ஆம் பக்கத்திலுள்ளது.]

## கோமூத்திரி

[௩௩௩-ஆம் பக்கத்திலுள்ளது.]






[௩௩௬-௩௭ஆம் பக்கங்களிலுள்ளன.]



## சுழிகுளம்

[௱௱எஆம் பக்கத்திலுள்ளது.]



[௲௲அ - ஆம் பக்கத்திலுள்ளது.]

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வீ | யா | வா | மா | மா | வா | யா | வீ |
| யா | வா | யா | ரா | ரா | யா | வா | யா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| யா | வா | யா | ரா | ரா | யா | வா | யா |
| வீ | யா | வா | மா | மா | வா | யா | வீ |

# அரும்பொருள் அட்டவணை

உ

# பாட்டு முதற்குறிப்பு அட்டவணை

அ

| பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் | பாட்டு | பக்கம் |
|---|---|---|---|---|---|
| அகனிலம்பசும் | ௭௫௨ | அங்கவரை எதிர் | ௨௫௦ | அடியனேன்பல | ௫௧௮ |
| அகனுறப்பரசி | ௧௩௮ | அங்கவரைக்காண | ௪௪௧ | அடியனேன்பிழை | ௪௭௯ |
| அகிலகாமமும் | ௬௨௩ | அங்கவர் ஆடல் | ௬௩௯ | அடியனேன்மடமை | ௬௦௦ |
| அகிலநாயகன் | ௨௬௪ | அங்கவர்தர்கன் | ௪௧௫ | அடியனேன்வட | ௭௦௧ |
| அகிலமுந் | ௫௫௦ | அங்கவர்தம | ௨௧௫ | அடியிணைதொ | ௪௨௮ |
| அகிலம்ஈன் | ௪௦௦ | அங்கவற்றில் | ௬௬௫ | அடியில்தொடுத்த | ௮௦௫ |
| அகிற்புகை | ௭௨௬ | அங்கவற்றின் | ௩௬௮ | அடியின் அடக்கும் | ௮௦௦ |
| அக்கம்பம் | ௬௮௯ | அங்கவனைக் | ௪௦௮ | அடுங்காலம் | ௨௫௫ |
| அக்காஞ்சி | ௧௮௧ | அங்கவன்செய் | ௬௦௨ | அடுத்தங் | ௮௦௨ |
| அங்கங்கிலிங்கம் | ௫௬௨ | அங்கவன்முகம் | ௩௭௦ | அடுத்தடு | ௧௨ |
| அங்கங்கெய்தி | ௨௮௬ | அங்கவைவழங்க | ௨௯௯ | அடுப்பார்க் | ௭௯௯ |
| அங்கடைந்து | ௪௦௮ | அங்கியங்கடவுள் | ௧௩௫ | அடைக்கலம் | ௨௦௦ |
| அங்கட்சக | ௬௮௪ | அங்குசபாசம் | ௮௦௭ | அடைவுறுபஞ்ச | ௧௫௭ |
| அங்கட்பல | ௫௬௨ | அங்குகந்தி | ௨௨௧ | அட்டழல் | ௪௯௯ |
| அங்கட்போற்றி | ௫௩௫ | அங்கையான் | ௨௧௭ | அட்டிலில் | ௧௦௫ |
| அங்கணன் | ௪ | அங்கொருநா | ௪௬௧ | அட்டொளி | ௭௨௯ |
| அங்கணைந்திறை | ௩௭௧ | அசித்துப்புர | ௨௭௮ | அணங்கனார்நகை | ௯௯ |
| அங்கண் அங்கண் | ௬௭௮ | அச்சதருத்திர | ௩௬௪ | அணங்கனார் பரப்பி | ௯௪ |
| அங்கண் இலிங் | ௨௩௫ | அச்சமுற | ௨௪௬ | அணங்கொரு | ௨௮௦ |
| அங்கண்எய்தி | ௬௮௮ | அச்சம்நீத் | ௩௨௧ | அணிமலர் | ௮௭ |
| அங்கண்எய்ப்பு | ௫௮௩ | அச்சுதன் | ௭௧௭ | அணிவகு | ௧௬ |
| அங்கண்நின்று | ௫௭௪ | அச்சோஎன | ௩௫௫ | அணுகித்தரும் | ௩௫௫ |
| அங்கண்மத்தள | ௭௧௪ | அஞ்சலீரென | ௫௬௫ | அண்டங்காத் | ௩௬௧ |
| அங்கண்முப்புரம் | ௩௮௬ | அஞ்சலீர்என் | ௪௪௭ | அண்டபகி | ௨௦௮ |
| அங்கண்மெய் | ௨௫௯ | அஞ்சுபூதங் | ௪௮௮ | அண்டம் ஓர் | ௬௦௪ |
| அங்கண்மேவிய | ௬௫௧ | அடங்கருந் | ௫௦௪ | அண்டரெலாம் | ௨௦௨ |
| அங்கண்வாழ் | ௧௫௫ | அடலிற்கொதி | ௭௯௯ | அண்டர் நாயகன் | ௧௫௧ |
| அங்கண்வீதி | ௯௬ | அடற்கொடும் | ௭௮௯ | அண்டர் மாலயன் | ௨௫௧ |
| அங்கண்வைகிய | ௨௮௯ | அடிஎழுகாலும் | ௭௭௯ | அண்ணலந்தலை | ௬௭௯ |
| அங்கதனிற் | ௧௮௩ | அடிகள்நோவ | ௪௭௭ | அண்ணலார் அருட் | ௬௫௦ |
| அங்கதுநோக்கி | ௬௯௪ | அடித்துணை | ௭௯௦ | அண்ணலார் ஆ | ௧௩௮ |
| அங்கதுமுகுந்தன் | ௨௯௭ | அடிநேடிய | ௭௨௮ | அண்ணலார் உ | ௫௧௯ |
| அங்கப்பொழுதி | ௨௨௪ | அடியவர் இழை | ௨௩௬ | அண்ணலார் தம் | ௬௯௧ |
| அங்கப்பொழுதே | ௨௦௬ | அடியார்தவன் | ௭௧௩ | அண்ணலே மலர் | ௫௦௩ |
| அங்கமும்மறையும் | ௯௪௭ | அடியனேன்உன் | ௨௯௮ | அண்ணலே அடி | ௩௮௩ |
| | | அடியனேன்தன் | ௨௩௨ | அண்ணலே ஆனந் | ௬௮௮ |

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# பாட்டு முதற்குறிப்பு

# அ௯௪ பாட்டு முதற்குறிப்பு அட்டவணை





பக்கம் கச. கங-ஆம் செய்யுள் உரையின் இறுதியில், 'தேன்னீர்வழிந்த எனவும், பால் வெள்ளம் எனவும் இயைக்க' என்பதைச் சேர்த்துக்கொள்க.

பக்கம் நரு. சூரு-ஆம் செய்யுளுரையில் முதல் வாக்கியத்தை, 'பொருட்களுள்ள தேற்றேகாரத்தை உவமைக்கண்ணுங் கூட்டுக.' எனத் திருத்திக் கொள்க.

பக்கம் நசூ. சூரு-ஆம் செய்யுளுரையில் 'இரண்டாம் அதிகாணத்துரையில் சுத்த தத்துவங் கூறுமிடத்திலும்' என்பதற்குப் பிறகு, 'நான்காம் அதிகாணத்துறையில் ஒரு பொருளே இருதிறப்பட்டுப் பொதுமையினிற்றலை விளக்குமிடத்திலும்' என்பதைச் சேர்த்துக்கொள்க.

பக்கம் அஎ, நஎ-ஆம் செய்யுளுரையில் 'மூன்.........உளர்' என்பவற்றை, 'உட்கோடுமை - உள்ளேஇருக்கும் கோடுமை.' எனத்திருத்திக் கொள்க.

பக்கம் ருசo, கக-ஆம் செய்யுளுரையில் 'மருட்கை-மயக்கம்' என்பதை 'மருட்கை-வியப்பு.' 'மால்-மயக்கம்' எனத் திருத்திக்கொள்க.

பக்கம் உசஉ. ந-ஆம் செய்யுளுரை ந-ஆவதுவரியில் 'என்க' என்பதற்குப்பிறகு, 'விராட்டு, காலன், புருடன் என்னும் மூவர்பிரமன்வியூகர்களாவர்' என்பதைச்சேர்த்துக்கொள்க.

பக்கம் ருருரு. சo-ஆம் செய்யுளுரையில் உஆவது வரியை, மற்றேவற்றினுக்கும் என்றது ஏனைய சத்திபீடங்கள் அறுபத்துமூன்றற்கும் என்றவாறு' எனத் திருத்திக்கொள்க.

பக்கம் ருகூங. உரை ஆரம்பத்தில், 'கரு. நுடங்கி-துவண்டு. வேள்-மன்மதன். இடைந்து-வருந்தி.' என்பவற்றைச் சேர்த்துக்கொள்க.

பக்கம் கூஉக. நசூ-ஆம் செய்யுளுரையில் 'சிரசெனவும்' என்பதற்குப் பிறகு, 'இன்பமெனவும்' என்பதைச் சேர்த்துக்கொள்க. நஎ-ஆம் செய்யுளுரையில், 'யாவராலும் போர்புரிந்து' என்பதில் யாவராலும் என்பதை நீக்கிவிடுக.

பக்கம் கூஉசூ. ருஉ-ஆம் செய்யுளுரையில், 'உண்பவராகிய அமரர்' என்பதை, 'அமிழ்துண்பவர் அமராதவர்' எனத் திருத்திக்கொள்க.

பக்கம் கூஉஎ. ருஅ-ஆம் செய்யுளுரையில் இரண்டாவது வாக்கியத்தை நீக்கி அவ்விடத்தில் 'முதற்பீடமாய சிறப்பால் ஆதிபீடம்' என்பதை அமைத்து, 'அம்பிகை' என்பதைத் 'துர்க்கை' எனத்திருத்திக்கொள்க.

பக்கம் கூஅஅ. கஎரு-ஆம் செய்யுளுரையில் 'அறஆன் - தரும விடை' என்பதை, 'அறவனூர் - தரும வடிவினரான இறைவர்.' எனத் திருத்திக் கொள்க.

---

38பக். மேற்கோள் அட்டவணையில் பத்தி உல் க-க்குமேல் சத-சதகம். ச-க்குக்கீழ் செத் - செத்திலாப்பத்து. கடைசியில் - மதுரைக்கல - மதுரைக்கலம்பகம் என்பவைகளைச் சேர்த்துக்கொள்க.

# பிழை திருத்தம்

| பக்கம். | பாட்டு உரை பத்தி | வரி. | | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| 29 | பத்தி | ச | உ | திருப்போரூர் | திருப்பேரூர் |
| கக | உரை | | ரு | என்பார். | எனபார், |
| கங | ,, | கூ | உ | நீங்கி | நீக்கி |
| கச | ,, | கஉ | ரு | ரூ. கூ. | ரூ. கூ. |
| சரு | பா | கக | ங | காலாள் | காலாண் |
| கஎ | உரை | உக | க | புறம். கூ. | புறம். கூ. |
| ,, | ,, | உஉ | ங | (பொருந்திய) | (பொருந்திய). |
| கஅ | ,, | உச | ச | கெடுத்து | கெடுத்துத் |
| சகூ | ,, | உஎ | ங | பொருவார்- | பொருவார் |
| உங | ,, | ஙஅ | சகூ | உரிப்பொள்சளும் | உரிப்பொருள்சளும் |
| உஎ | ,, | சகூ | எ | மாக்கருப்பொருள்க | மரக்சருப்பொருள்க |
| ஙO | தலைப்பு | | ... | காசிசிப்புராணம் [ள் | காஞ்சிப்புராணம் [ள் |
| ,, | உரை | ருஉ | ங | நடுநிகர்த்தாய் | நடுநிகர்த்ததாய் |
| ஙச | தலைப்பு | | ... | காசிசிப்புராணம் | காஞ்சிப்புராணம் |
| ஙஎ | உரை | சுஎ | உ | முலைபாலால் | முலைப்பாலால் |
| சO | பா. | எச | க | அசைச்சிற் | அமைச்சிற் |
| சரு | உரை | கூக | க | செறும் | செறு |
| ,, | ,, | கூஉ | உ | கூர்தல் | கூர்ந்த |
| சஎ | ,, | கூஎ | க | நிறுத்தி | நிறுத்தி, |
| ருஎ | பத்தி | ங | உ | நிகர்த்ததுமாகியு | நிகர்த்ததுமாகிய |
| ,, | உ. | கஉஅ | உ | வாய் இதழ் | வாய்-இதழ். |
| கூஉ | உ. | கசக | கO | குறிஞ்சி | முல்லை |
| சுஎ | பத்தி | ங | உ | உலகிலுள்ளவர்க்கும் | உலகிலுள்ளவர்க்குத் |
| எக | ,, | | கங | முதண்ணுமை | தண்ணுமை |

| பக்கம். | பாட்டு உரை பத்தி. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| எரு | ,, உ | ரு | கண்ணுல் | கண்ணில் |
| எகூ | ,, க | ரு | வினைப்பயன் எங்கு | வினைப்பயன் எங்குச் |
| எஅ | பாட்டு கூ | உ | முகிற்கு | முகிற் |
| எகூ | உரை கூ | ரு | முழுகின்ற | முழுகுகின்ற |
| அக | ,, கஅ | க | காணப்படும். முது | காணப்படும் முதுகு. |
| அச | ,, உஅ | க | சாற்றரும் | [கு சாற்றரும்- |
| அஎ | ,, ஙஎ | ச | நீங்குதல் | நீங்குதல். |
| கூச | பாட்டு கூங | க | புவனைசக்கரமென | புவனசக்கரமென |
| ,, | உரை க0 | உ | மாலையிடைலையில் | மாலையிடையில் |
| கூரு | பாட்டு கச | ங | வெளியுமாய்த் | வெளியுமாய்ச் |
| க0அ | உரை ங0கூ | ச0 | இடுகுறியாச்ச் | இடுகுறியாகச் |
| ககஉ | ,, ககக | ச | அழுத்துகிஉற | அழுத்துகின்ற |
| ,, | பத்தி ங | ரு,கூ | அருள்மொழிலுணர்க | அருள்மொழியாலு |
| ககங | ,, ங | கூ | அக்னிமிளே | அக்னிமீளே [ணர்க |
| கஉ0 | பத்தி க | கக,கஉ | தங்களை தாங்க | தங்களைத்தாங்களே |
| கஉஉ | ,, உ | உ | குரும்பைக் [ளே | குரும்பையைக் |
| கஙரு | பாட்டு கூ | ௰ | மாண்டுகன்னி | மாண்டகன்னி |
| ,, | உரை க0 | ௰ | சுரசரீசம் | சுரகரேசம் |
| கஙஎ | ,, கஅ | க | இனைப்பு | இளைப்பு |
| கஙகூ | பாட்டுஉஅ | உ | மாதவீச்சரம் | மாதவேச்சரம் |
| கசக | பத்தி உ | ச0 | மாண்டுகன்னி | மாண்டகன்னி |
| ,, | ,, ,, | கச | பெறறதும் | பெற்றதும் |
| ,, | ,, ,, | சரு | சுரகரீசத்தை | சுரகரேசத்தை |
| கசங | ,, க | கஅ | மாதவீச்சரங்களை | மாதவேச்சரங்களை |
| கருச | பாட்டு க | ச, ரு | மூவுலகம் | மூவுலகும் |
| ககூங | உரை உங | எ | கூறப்பதல் | கூறப்படுதல் |
| ககூரு | ,, ங0 | உ | கச்சபேசபடலத்திற் | கச்சபேசப்படலத்திற் |
| கஎக | ,, ருக | கூ | உபபத்தி | உபபத்தி, அருத்த |
| கஎங | பத்தி உ | உக | பத்து | பது [வாதம் |
| ககூங | பாட்டுஉச | ங | படுபவன | படுவன |

# பிழை திருத்தம்

| பக்கம். | பாட்டு உரை பத்தி. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கஅஎ | பாட்டு ங | உ | சத்தியவிரதிசர் | சத்தியவிரதேசர் |

(இப்படலம் முழுதும் சத்தியவிரதேசர் என்றே திருத்திக்கொள்க)

| | | | | |
|---|---|---|---|---|
| கசுகூ | ,, ஙசு | க | தொள்ளொளி | தெள்ளொளி |
| ககூஎ | பாட்டுத் தலைப்பு | ,, | வாலாறு | வரலாறு |
| உ0க | பத்தி க | க | பயன்படுதல் | கைகூடுதல் |
| உக0 | பாட்டு உஉ | க | பன்னியரங் | பன்னிஇரங் |
| உகக | ,, உஎ | ங | வாதா | வரதா |
| உகஉ | ,, ஙக | ச | கன்னலஞ்சிளை | கன்னலஞ்சிலை |
| உகங | பத்தி உ | கூ | தன்னையே | தம்மையே |
| உகச | பத்தி ச | க | இறைவன் | இறைவனார் |
| உகஅ | பாட்டு சரு | க | தானவர் | தானவர்க் |
| ,, | உரை கங | க | மடங்கல்-ஆதனம், | மடங்கல் ஆதனம்- |
| உஉங | ,, ஙச | ங | கைகழுவு | முடிக்குத்தரும் |
| ,, | ,, ஙஎ | ரு | பூசசு | பூச்சு |
| உஉஎ | பத்தி ங | ௬ | தும்பிக்கையால் | தும்பிக்கையில் |
| உஙக | பாட்டு ககூ | ௬ | மிடை | மிசை |
| உஙங | தலைப்பு | ,, | நாரணன்ந்தி | நாரணன்நதி |
| உருச | பாட்டு கங | க | மணிகண்தேசர் | மணிகண்டேசர் |
| உகூஉ | ,, கச | ௬ | நெடியாமல் | நெடியமால் |
| உகூங | பத்தி உ | கக | என்றார் எனவும் | எனவும் |
| உஎங | ,, உ | கங | இறைவன் | இறைவனார் |
| உகூஉ | ,, உ | எ | வேணட | வேண்ட |
| ங0க | ,, க | க | இறைவன் | இறைவனார் |
| ஙகஎ | ,, உ | உ | வராவதேசத்தை | ஐராவதேசத்தை |
| ஙஙஅ | ,, ங | கூ | பொருந்தர் | பொருந்தா |
| ஙருகூ | ,, ச | ரு | இறைவனை | இறைவரை |

# பிழை திருத்தம்



| பக்கம். | பாட்டு உரை பத்தி. | | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| ,, | ,, | ,, | ,, | இறைவன் | இறைவனுர் |
| நகூ0 | ,, | க | க | ,, | ,, |
| நகூக | உரை | ந | க | நூற்றுவரார் | நூற்றுவராவார் |
| நகூந | ,, | க0 | உ | பதி............ | பதி கூஉ. அ. |
| நகூச | ,, | க | உ | பதி............ | பதி. க0. |
| நஅகூ | பத்தி | ரு | ச | திக்கைப்பெற்று | திக்கைபெற்று |
| நகூஅ | உரை | கரு | ச | பகுதியென்பது. | பகுதியென்பது, |
| ச0ரு | பத்தி | ச | கூ | இறைவன் | இறைவனுர் |
| சநச | பத்தி | உ | கக | ச்சிவபெருமான் கைலைக்கு | கைலைக்கு |
| சருரு | ,, | க | உ | நான்காவது | மூன்ருவது |
| சருகூ | உரை | கஉ | உ | மிடறு. | மிடறு- |
| சுகூ0 | உரை | ருக | கக | ஏழாம் | ஐந்தாம் |
| சஎகூ | பாட்டு | கூச | க | சத்தி | சத்தி |
| சஎஅ | ,, | க0 | க | தலைப் வாணனும் | வாணனும் |
| சஅகூ | பத்தி | | கக, உ | வாலாற்றை | வாலாற்றை |
| சகூக | ,, | ச | ந | சுடுகாட் | சுடுகாட்டுச் |
| சகூகூ | ,, | ச | ந | இல்லாமைல் | இல்லாமையால் |
| சகூஎ | பாட்டு | க | ரு | செல்வாம் | சொல்வாம் |
| ,, | ,, | உ | உ | தவம | தவம் |
| சகூகூ | உரை | அ | க | சுவல்- | சுவல்மிசை- |
| ரு0உ | ,, | உந | க | அதுக்கினன் | அதுக்கினன்- |
| ரு0ச | பாட்டு | நகூ | உ | புசும்பதல் | பசும்புதல் |
| ருஉ0 | பத்தி | க | கூ | இறைவனுக்குச் | இறைவனுக்குரிய |
| ருகஉ | ,, | உ | ந | இறைவனுக்கு | இறைவருக்கு |
| ருகந | பாட்டு | க | ந | நதிக்கரை | நதிக்கரைப் |

| பக்கம். | பாட்டு உரை பத்தி. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௫௨௪ | பத்தி ௨ | ௧ | இரேணுகேச்சரவா | இரேணுகேச்சரவர |
| ௫௨௯ | பாட்டு ௮ | தலைப் | தீர்ச்தேச்சரம் | தீர்த்தேச்சரம் |
| ௫௩0 | ,, ௩ | ௯ | இறைவன் | இறைவனார் |
| ௫௩௨ | உரை ௫ | ௨ | வெண்கதிர் | வெண்கதிரோன் |
| ௫௩௩ | பத்தி ௫ | ௫ | எழுகிரகங்களும் | எழுவர்களும் |
| ௫௪௨ | பாட்டு ௧௫ | ௪ | ஊழிதோ | ஊழிதொ |
| ௫௪௫ | உரை ௧ | ௪ | விண்ணவோ | உண்ணவோ |
| ௫௪௯ | உரை ௧௫ | ௨ | உண்மைஅடியவர் | ௧௯. உண்மைஅடியவர் |
| ௫௫௨ | பாட்டு ௩௧ | ௪ | மூலத்திரு | மூலத்திருவுரு |
| ௫௬0 | பத்தி ௨ | ௯ | இறைவனை | இறைவரை |
| ,, | ,, | ,, ௧0 | வெளிபட்டருளி | வெளிப்பட்டருளி |
| ௫௬௩ | உரை ௭ | ௨ | தவர்கள் | பிறந்தவர்கள் |
| ௫௬௫ | ,, ௨ | ௧௨ | இறைவன் | இறைவனார் |
| ௫௭௪ | ,, ௪ | ௧ | நீர்மைத்தது | நீர்மைத்து |
| ௫௭௫ | ,, ௯ | ௧ | மிக்ாய் | மிக்காய் |
| ,, | ,, ,, | ௩ | முதலால் | முதலாதலால் |
| ௫௭௭ | ,, ௧௱ | ௯ | என | என் |
| ௫௮௫ | பத்தி ௨ | ௧ | கவுசிகேசம் | கவுசிகீசம் |
| ௫௯௮ | ,, ௪ | ௫ | இறைவன் | இறைவனார் |
| ௬௧0 | ,, ௧ | ௧௧ | செய்வோருமாக | செய்வோனுமாக |
| ௬௨0 | பாட்டு ௩௫ | ௨ | பனைத்தோள் | பணைத்தோள் |
| ௬௨௩ | உரை ௪௨ | ௫ | வேறுபாடில்லை | மாவிற்கும் வேறுபாடில்லை |
| ௬௨௫ | ,, ௪௭ | ௧ | எக்சமாக | எச்சமாக |
| ௬௪௧ | உரை ௧௧௯ | ௧ | மகளிர் | மகளிரும் |
| ௬௪௩ | பத்தி ௨ | ௫ | கூறுவராயினர் | கூறுவாராயினர் |

| பக்கம். | பாட்டு உரை பத்தி. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கூசங | பத்தி ச | கூ | சிரசு, பிரமன் | சிரசு, இன்பம், பிரமன் |
| கூசச | ,, ங | எ | கம்என்பது | பாஎன்பது |
| கூசஎ | உரை உ | ங | எழுந்தமைப்பற்றி | எழுந்தமைபற்றி |
| கூசஅ | ,, கூ | எ | எப்பொருள்களிலும் | எப்பொருள்களும் |
| கூருO | ,, கஉ | க | சோகம்பாவனை; | சோகம்பாவனை |
| கூருச | ,, உகூ | உ | மிகுதியால். | மிகுதியால், |
| கூருரு | ,, ஙரு | க | தீர்வு | தீர்வு- |
| கூகூகூ | பாட் அஉ | ச | அற்புதம் | வற்புதம் |
| கூஎஉ | ,, கூஎ | ச | செல்வான் | சொல்வான் |
| கூஎரு | உரை ககO | க | போலும். | போலும் |
| கூகூச | ,, உOங | க | குறுங்காடுகளோடு | குறுங்காடுகள் |
| கூகூரு | ,, உOஎ | உ | மறலி | மறலி - |
| கூகூஎ | ,, உகரு | க | குறிப்பது | குறிப்பது. |
| எOஎ | பா.உருஅ | ச | பன்ாழுய | பன்னிய |
| எOகூ | உரைஉஎO | க | ஒவ்வொரும் | ஒவ்வொருவரும் |
| எகஉ | ,, உஅச | க | உஅஉ | உஅச |
| எகரு | ,, ஙOங | க,உ | கூர்ந்து - மிகுந்து | கூர்ந்த - மிகுந்த |
| எஉO | பா. ஙஉஎ | ங | தொழுந்தகு | தொழத்தகு |
| எசரு | பத்தி உ | க | நிகழ்சியை கூற | நிகழ்ச்சியைக்கூற |
| ,, | ,, ங | கக | பிரமன் | பிரமன் |
| எசகூ | பத்தி உ | ரு | வழிபட்ப் | வழிபட்டுப் |
| எருக | ,, க | ங | கவுசி | கவுசிகி |
| எகூகூ | பத்தி உ | உ | வேன்டுமென்று | வேண்டுமென்று |
| எஅஎ | பாட் சச | ங | அணிதல | அணிதல் |
| எஅகூ | உரை ருச | க | மருஉ | மரூஉ |

